# போரும் சமாதானமும்

## விடுதலைப் புலிகளின் போராட்ட வரலாறு

அன்ரன் பாலசிங்கம்





# பதிப்பு விபரம்


| | |
|---|---|
| தலைப்பு | : போரும் சமாதானமும் |
| பதிப்பு | : செப்டம்பர் 2005 |
| பதிப்புரிமை | : அன்ரன் பாலசிங்கம் |
| வெளியீடு | : பெயர்மக்ஸ் பதிப்பகம் |
| அச்சுப்பதிப்பு | : வாசன் அச்சகம் |
| கணினி வடிவமைப்பு | : ரஞ்சித் |

| | |
|---|---|
| Title | : War and Peace |
| Author | : Anton Balasingham |
| Publishers | : Fairmax Publishing Ltd.<br>PO Box 2454<br>Mitcham<br>CR4 1WB<br>England |
| Printed by | : The Print<br>45A Crusoe Road<br>Mitcham<br>Surrey CR4 3LJ<br>England |
| ISBN No | : 1-90 36 79-06-0 |

தமிழீழ மக்களின் விடிவுக்காகத்
தமது இன்னுயிரை ஈகம் செய்த
எம்முயிர்ப் போராளிகளுக்கு
இந் நூலை அர்ப்பணிக்கிறேன்.

# உள்ளடக்கம்

# நன்றியுரை

தமிழீழ விடுதலைப் போராட்ட வரலாற்றைச் சர்வதேச உலகிற்கு அறிமுகம் செய்து வைக்கும் நோக்குடன் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட War and Peace என்ற எனது நூல், பரந்துபட்ட தமிழ் மக்களும் படித்தறிந்து பயன்பெற வேண்டும் என வற்புறுத்தி, அதனைத் தமிழாக்கம் செய்து வெளியிடுமாறு என்னை ஊக்கப்படுத்தியவர் எனது மனைவி அடேல் பாலசிங்கம். முதற்கண் அவருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

ஆங்கில நூலின் பிரதிகளை முதன்முதலாக நான் வன்னிக்கு எடுத்துச் சென்று, தலைவர் பிரபாகரனிடமும் ஏனைய மூத்த தலைவர்கள், தளபதிகளிடம் கையளித்த போது அவர்கள் விடுத்த கேள்வி என்னவென்றால், “எப்பொழுது இந்நூல் தமிழில் வெளிவரப் போகின்றது” என்பதுதான். எனவே, இயக்கத் தலைமையின் விருப்பையும் நிறைவு செய்யும் நோக்குடன் இந்நூலைத் தமிழாக்கம் செய்தேன். தமிழ்ப் பதிப்பில் சில பகுதிகளை, குறிப்பாக வரலாற்று முக்கியத்துவம் பெற்ற சமர்களையும் தாக்குதல் நடவடிக்கைகளையும் சிறிய அளவில் விரிவுபடுத்தி விளக்கியிருக்கிறேன். சில முக்கிய சமர்கள் பற்றியும் தாக்குதல் நடவடிக்கைகள் பற்றியும் மேலதிக தகவல்கள், வரைபடங்கள் தந்துதவிய மூத்த தளபதிகளுக்கு எனது நன்றி.

இந்த நீண்ட நூலை கணினியில் அச்சடித்துத் தந்ததுடன், பக்கங்கள் அனைத்தையும் சிறப்பான முறையில் வடிவமைத்தவர் எனது பாசத்திற்குரிய தம்பி ரஞ்சித் (சி. ஐஸ்வர்யரஜித்). தனது நாளாந்த வேலைப் பளுவுடன், நீண்ட நேரத்தை ஒதுக்கி, மிகவும் கவனமாக, பொறுமையாக, நேர்த்தியாக அவர் ஆற்றிய நற்பணிக்கு எனது மனமார்ந்த பாராட்டுகள். விடுதலைப்

புலிகளின் வீர வரலாறு எழுத்தில் பதியப்பட வேண்டும் என்பதிற் பேரார்வம் கொண்டவர் எமது இயக்கத்தின் நிதிப் பொறுப்பாளர் திரு. செ. வ. தமிழேந்தி அவர்கள். அத்துடன் அவர் தமிழ்மொழி வளர்ச்சியிலும் ஆழமான பற்றுள்ளவர். தனது பொறுப்புள்ள வேலைச் சுமையுடனும் இந்நூலைப் பக்கம் பக்கமாகப் பார்த்து எழுத்துப் பிழைகளைத் திருத்தித் தந்தமைக்காக அவருக்கு எனது நன்றிகளைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

இந்த நூலின் முன் அட்டையை வடிவமைத்ததுடன் வரைபடங்களையும் செழுமைப்படுத்தித் தந்த T. கண்ணன் அவர்களுக்கும், இந் நூலின் உருவாக்கத்திற்கு உழைத்த வாசன் அச்சக உரிமையாளர் திரு. வாசன் அவர்களுக்கும் அச்சகப் பணியாளர்களுக்கும் எனது நன்றியும் பாராட்டுகளும்.

# முன்னுரை

விடுதலைப் புலிகள் அமைப்பானது தமிழீழ மக்களின் சுதந்திர இயக்கம். தமிழரது சுயநிர்ணயப் போராட்டத்திற்கு உயிர் மூச்சாகவும் உந்து சக்தியாகவும் அது செயற்பட்டு வருகிறது. ஒரு தேச விடுதலை இயக்கம் என்ற ரீதியில், ஒரு அரசியல் சக்தியாகவும் அதேவேளை ஒரு வலுமிக்க போரியல் சக்தியாகவும் புலிகள் இயக்கம் விடுதலைப் போரை முன்னெடுத்து வருகிறது. ஒரு உறுதியான, கட்டுப்பாடு மிக்க தலைமை, ஒரு தெளிவான, நீதியான அரசியல் இலட்சியம், நீண்ட கால வளர்ச்சியில் முதிர்ச்சி பெற்ற போராட்ட வரலாற்று அனுபவம், பரந்துபட்ட பொதுசனத்தின் பலம் மிக்க ஆதரவு - இத்தனை பண்புகளையும் உடைய எமது விடுதலை இயக்கம், தமிழர் தாயகத்தின் பெரும் பகுதியைத் தனது கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருந்து அங்கு ஒரு நிழல் அரசாங்கத்தை நிர்வகித்து வருகிறது.

விடுதலைப் புலிகளின் போராட்ட வரலாறு நீண்டது; தனித்துவமானது; புரட்சிகரமானது. முப்பத்து மூன்று ஆண்டுகளுக்கு மேலாக நீட்சிபெற்ற படிநிலை வளர்ச்சியைக் கொண்டது. எழுபதுகளின் ஆரம்பத்தில் தலைவர் பிரபாகரன் அவர்களால், ஒரு தலைமறைவுக் கெரில்லா அணியாக ஆரம்பிக்கப்பட்ட விடுதலைப் புலிகள் இயக்கம், காலப் போக்கில் படிப்படியாக வளர்ச்சி பெற்று, வலுவடைந்து விரிவடைந்து, தமிழ் மக்களின் நல்லாதரவு பெற்று, ஒரு தேசிய விடுதலை இயக்கமாக உருவாக்கம் எடுத்தது. இந்த நீண்ட பரிணாம வளர்ச்சிப் போக்கில், விடுதலைப் புலிகள் பல்வேறு நெருக்கடிகளையும் சவால்களையும் எதிர்கொண்டனர். தமிழின அழிப்பை நோக்காகக் கொண்ட எதிரியை ஒரு புறத்திலும், தமிழரின் சுதந்திர எழுச்சியை நசுக்கிவிட முனைந்த

வல்லாதிக்க சக்திகளை மறுபுறத்திலும், தமிழினத்தின் விடுதலைப் போருக்கு வஞ்சகம் புரிந்த துரோகிகளை இன்னொரு புறத்திலுமாக, எமது இயக்கம் பல முனைகளில் பல சக்திகளுக்கு எதிராகப் போராட நிர்ப்பந்திக்கப்பட்டது. இப் போராட்டங்கள் பெரும் சமர்களாகவும் வெடித்தன. வன்முறைப் புயல்களாக எழுந்து ரண களங்களை ஏற்படுத்தின. இந்த நெருப்பு நதிகளை எல்லாம் எமது இயக்கம் நெஞ்சுறுதியுடன் நீந்திக் கடந்தது.

நீண்டதும் நெருக்கடிகள் நிறைந்ததுமான இக் கொந்தளிப்பான வரலாற்றுப் பாதையில் தொடர்ச்சியாகக் கொடும் போரை நாம் எதிர்கொண்ட போதும், காலத்திற்குக் காலம், பல்வேறு வரலாற்றுச் சூழ்நிலைகளில் அரங்கேறிய சமாதானச் சமரச முயற்சிகளிலும் எமது இயக்கம் பங்குகொள்ளத் தவறவில்லை. ஒட்டுமொத்தத்தில் எமது போராட்ட வரலாறானது யுத்த முன்னெடுப்புகளாகவும் சமாதான முயற்சிகளாகவும் இரு பரிமாண அம்சங்களைக் கொண்டதாக அமையப் பெற்றிருக்கிறது. போர் அரங்குகளில், எமது இயக்கம் பிரமிப்பூட்டும் சாதனைகளைப் படைத்தது. உலகின் தலைசிறந்த ஒரு இராணுவக் கட்டமைப்பு என்ற சர்வதேசப் புகழையும் ஈட்டியது. தாயக மண்ணின் விடுதலைக்காக வரலாறு காணாத ஒப்பற்ற தியாகங்களைப் புரிந்தது. அதேவேளை, எமது விடுதலை இயக்கம் சமாதான அரங்கிலும் பங்குகொண்டு, நீதியான, நியாயமான அரசியல் தீர்வு காண முயன்றது. ஆனால் சிங்கள அதிகார வர்க்கம் எமது மக்களுக்கு நீதி வழங்க மறுத்து, நேர்மையற்று நடந்து கொண்டதால் அமைதி வழியில் இணக்கப்பாடு காண்பது முடியாத காரியமாகியது.

போர் அரங்கில் நாம் ஈட்டிய வெற்றிகள் போலச் சமாதான அரங்கில் எம்மால் சாதனைகள் புரிய முடியவில்லை. சிங்கள அரசியல் தலைமைகளின் விட்டுக் கொடாத கடும்போக்குக் காரணமாக, பேச்சுக்கள் சிக்கலடைந்து முன்னேற்றம் காணாது முடங்கிப் போயின. திம்புப் பேச்சுக்களிலிருந்து, சமீபத்தில் நோர்வேயின் அனுசரணையின் கீழ் நடைபெற்ற பேச்சுக்கள் வரை, சகல சமாதான முயற்சிகளிலும் நாம் பங்கு கொண்டு, ஒரு அரசியல் தீர்வைக் காண்பதற்கு நேர்மையாக முயன்றோம். ஆனால் இப் பேச்சுக்கள் எவையுமே வெற்றியளிக்கவில்லை. இப் பேச்சுக்கள் தோல்வியில் முடிந்தமைக்கு பிரதான காரண கர்த்தாவாக விடுதலைப் புலிகள் மீது குற்றம் சுமத்திய

கொழும்பு ஊடகங்கள், எமது இயக்கத்தைச் சமாதானத்தின் விரோதியாகச் சித்தரித்தன. சிங்கள மேலாண்மைவாத அரசுகளின் தூண்டுதலுடன், எமது இயக்கத்தை சர்வதேச உலகில் களங்கப்படுத்த மேற்கொள்ளப்பட்ட இந்த விசமப் பிரச்சாரத்தில் இந்தியாவிலுள்ள சில சக்திகளும் துணை போயின. பொய்களால் உண்மைக்குச் சமாதி கட்டி, விடுதலைப் புலிகளுக்கு இகழ்ச்சி ஏற்படுத்த, திட்டமிட்டு முடுக்கிவிடப்பட்ட பரப்புரைகளை முறியடிக்கும் நோக்குடனேயே நான் இந்த நூலை எழுதினேன். பயங்கரவாதிகள் என்றும், சமாதானத்தின் விரோதிகள் என்றும், வன்முறைக் கலாச்சாரத்தின் வழிகாட்டிகள் என்றும், மனிதத்துவத்தை மதிக்காதவர்கள் என்றும் பொய்யான கருத்துகளை விதைத்து, ஈழத் தமிழரின் சுதந்திர இயக்கத்தை பேயுருவமாக வரைந்து காட்ட எத்தனையோ சக்திகள் முனைப்புடன் செயற்பட்டு வருகின்றன. இப் பொய்யான, தீங்கான, கெடு நோக்குடைய கருத்தியலை மறுத்துரைத்து, விடுதலைப் புலிகள் இயக்கத்தின் மெய்யான, உண்மையான கதையை, வரலாற்று நிகழ்வுகளாகக் கால வரிசையில் பதிவு செய்து ஒரு நீண்ட அரசியல் - வரலாற்று நூலாக உங்கள் முன்பு சமர்ப்பிக்கிறேன்.

**'போரும் சமாதானமும்'** என்ற தலைப்பைத் தாங்கி வரும் இந் நூல், விடுதலைப் புலிகளின் வீரம் செறிந்த போரியல் வரலாற்றையும், சமாதான வழிமுறையில் நேர்மைத் திறனுடன் அவர்கள் மேற்கொண்ட சமரச முயற்சிகளையும் உண்மை வழுவாது, விபரித்துக் கூறுகிறது. விடுதலைப் புலிகள் இயக்கத்தின் சகல போர் நடவடிக்கைகளையும் உள்ளடக்கியதாக, முழுமையான போராட்ட வரலாற்றையும் பதிவு செய்வதானால் அது ஒரு பெரிய, கனதியான போரியற் களஞ்சியமாக, பல்வேறு காலப் பிரிவுகளாக வகுக்கப்பட்ட, பல பாகங்களைக் (Volumes) கொண்டதாகத் தொகுக்கப்படுதல் வேண்டும். இந்நூலில் அதனைச் சாதிக்க முடியாது. விடுதலைப் புலிகளின் நீண்ட வரலாற்றில் நிகழ்ந்த முக்கியமான போர் நடவடிக்கைகளையும், அரசியல், இராஜதந்திர நிகழ்வுகளையும் சுருக்கமாகப் பதிவு செய்யும் இந் நூல் எழுநூறு பக்கங்களைத் தாண்டிக் கனதி பெற்றுவிட்டது. எனினும், எமது போராட்ட காலகட்டத்தில் கட்டவிழ்ந்த முக்கிய நிகழ்வுகளையும் நிகழ்ச்சிப் போக்குகளையும் சுயானுபவ தரிசனத்துடன் பதிவு செய்துள்ளதால் இதுவொரு பயனுள்ள அரசியல் - வரலாற்றுப்

படைப்பாக நிலைத்து நிற்கும் என்பது எனது நம்பிக்கை.

தமிழீழ விடுதலைப் புலிகளின் அரசியல் ஆலோசகராகவும், தத்துவாசிரியராகவும், தமிழ்ப் புலிகளுடனும் தலைவர் பிரபாகரனுடனும் கடந்த இருபத்தேழு வருடங்களாக நெருங்கிப் பழகி, பணியாற்றி வந்திருக்கிறேன். எமது இயக்கம் பங்கு கொண்ட பல்வேறு பேச்சுவார்த்தைகளில் நான் பங்கு கொண்டிருக்கிறேன். அனேகமானவற்றில் இயக்கத்தின் பேச்சுக் குழுத் தலைவராகப் பொறுப்பேற்றுள்ளேன். இந்தியத் தலையீடு நிகழ்ந்த கால கட்டத்தில், இந்தியத் தலைவர்களுடனும் இந்திய உயர் அதிகாரிகளுடனும் நிகழ்ந்த முக்கியமான சந்திப்புகளின் போது தலைவர் பிரபாகரனோடு உடனிருந்தேன். இவ்விதம் விடுதலைப் புலிகளுடனும் புலிகளின் தலைமையுடனும் நெருக்கமான உறவு வைத்து அவர்களது போராட்ட வாழ்விலும் அவர்கள் எதிர்கொண்ட நெருக்கடிகளிலும் பங்கு கொண்டு, அவர்களுடன் சேர்ந்து பயணித்த அனுபவத்தின் அடிப்படையில் இந்த வரலாற்று நூலை எழுதியுள்ளேன்.

இந்த நூல் ஐந்து அத்தியாயங்களாக வகுக்கப்பட்டுள்ளது. முதலாவது அத்தியாயம், தமிழீழ மக்களின் தேசிய இனப் பிரச்சினையின் மூல வரலாற்றையும், அவர்களது போராட்ட வடிவங்களையும் ஆய்வு செய்கிறது. இலங்கைக்குச் 'சுதந்திரம்' வழங்கப்பட்டதை அடுத்து தொடுக்கப்பட்ட சாத்வீக வழி அரசியல் போராட்டங்களையும், அதன் பின்னர் விடுதலைப் புலிகளின் தலைமையின் கீழ் முன்னெடுக்கப்பட்ட ஆயுதம் தரித்த எதிர்ப்பு இயக்கத்தையும் (Armed Resistance Movement) இப் பகுதியில் விபரமாக விபரிக்கிறோம்.

சுயநிர்ணயத்திற்கான தமிழரின் அரசியற் போராட்ட வரலாறு 55 ஆண்டுகளுக்கு மேலாக நீண்டு செல்கிறது. இப் படிநிலை வரலாற்றில், வெவ்வேறு கால கட்டங்களில், வெவ்வேறு வடிவங்களாக எமது போராட்டம் வளர்ச்சியும் முதிர்ச்சியும் கண்டு வந்திருக்கிறது. ஆரம்பத்தில், ஆயிரத்துத் தொளாயிரத்து ஐம்பதுகளிலும் அறுபதுகளிலும், எமது அரசியல் போராட்டம் அமைதியாக, மென்முறை வடிவில், சனநாயகப் பாராளுமன்ற வழிமுறைகளில் நடத்தப்பட்டது. பழைய தலைமுறையைச் சேர்ந்த தமிழ்த் தலைவர்கள் எல்லோருமே காந்தியவாதிகள். மகாத்மா காந்தியின் கொள்கைகளையும், தத்துவத்தையும், ஆன்மீக தரிசனத்தையும் அவர்கள் வழிபட்டனர். காந்தியின் சாத்வீகத் தத்துவத்தின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட

அமைதி வழிப் போராட்டங்கள் தமிழ் மக்களிடையே தேசிய உணர்வைத் தூண்டி விட்டு, அவர்களை ஒன்றுபட்ட மக்களாக, ஒரே தேசமாக எழுச்சி கொள்ளச் செய்தது. சாதியத்தால் பிளவு கண்டு, முரண்பட்டு நின்ற சமூகம், தேசியப் பற்றுணர்வால் ஒன்றிணைந்து, ஒரே சக்தியாக அணிதிரண்டு, தமது வரலாற்றுத் தாயகத்தில் தம்மைத் தாமே ஆளும் சுயாட்சி உரிமை வேண்டிப் போராட்டத்தில் குதித்தது.

அரசியல் உரிமை கோரி, தமிழ் மக்கள் தொடுத்த அமைதி வழிப் போராட்டங்களைச் சிங்கள இனவாத அரசு ஆயுத வன்முறை வாயிலாக மிருகத்தனமாக ஒடுக்க முனைந்தது. ஈற்றில் அமைதிப் போராட்ட வடிவங்கள் ஆயுத முனையில் அடக்கப்பட்டன. தமிழரின் எழுச்சிப் போராட்டங்கள் இராணுவ பலத்தால் நசுக்கப்பட்டதும், அரச ஒடுக்குமுறை தீவிரம் அடைந்தது. பல முனைகளில் ஏவிவிடப்பட்ட இந்த அடக்குமுறையானது, தமிழரின் சமூக, பொருளாதார, கலாச்சார வாழ்வில் ஆழமான பாதிப்புகளை ஏற்படுத்தியது. மொழியுரிமை, உயர்கல்வியுரிமை, வேலை வாயப்புரிமை ஆகிய அத்தியாவசிய உரிமைகள் மறுக்கப்பட்டு, விரக்திக்குத் தள்ளப்பட்ட புரட்சிகரத் தமிழ் இளம் சமூகம், அரசியல் வன்முறையில் குதித்தது. இதனால் கிளர்ச்சி செய்த தமிழ் இளைஞர்களுக்கு எதிராக, அரச ஒடுக்குமுறை தீவிரம் பெற்றது. அரச ஒடுக்குமுறையும் அதற்கு முகம் கொடுத்த எதிர்ப்பு முறையாகவும் தமிழர் தாயகத்தில் வன்முறைப் புயல் வீசியது. அரச ஒடுக்குமுறை கட்டுக்கு அடங்காமல் உக்கிரம் அடைந்தபோது தமிழ் இளைஞரின் வன்முறை எழுச்சி, ஒழுங்கமைக்கப்பட்ட ஆயுதப் போராட்ட வடிவமாகத் தோற்றம் எடுத்தது. எழுபதுகளின் ஆரம்பத்தில், இந்த ஆயுதப் போராட்டத்தை ஆரம்பித்து வைத்த விடுதலைப் புலிகள் இயக்கம், படிப்படியாக வளர்ச்சி பெற்றுப் போராற்றல் மிகுந்த கெரில்லா இயக்கமாகப் பரிணமித்தது. பல் பரிமாண அரச ஒடுக்குமுறையினதும், அதற்குச் சவாலாகக் கிளர்ந்த ஆயுதம் தரித்த எதிர்ப்பு இயக்கத்தினதும் வரலாற்றுப் பின்னணி முதலாவது அத்தியாயத்தில் விபரமாகத் தரப்படுகிறது.

இலங்கை விவகாரத்தில் இந்தியா தலையிட்ட மிகக் கொந்தளிப்பான வரலாற்றுக் கால கட்டத்தை இரண்டாவது அத்தியாயம் விபரிக்கிறது. 1983ஆம் ஆண்டு ஜூலையில் தமிழருக்கு எதிராக ஏவிவிடப்பட்ட இனக் கலவரங்களுடன் ஆரம்பமாகிய இந்தியத் தலையீடு, 1990ஆம் ஆண்டு மார்ச்

மாதத்தில், இந்திய அமைதி காக்கும் படைகளின் வெளியேற்றத்துடன் முடிவுக்கு வந்தது. அரசியல், இராணுவ, கேந்திரப் பரிமாணங்களைக் கொண்ட இந்தியத் தலையீடானது, இந்திய - இலங்கை உறவுகளில் மிகவும் சர்ச்சைக்குரிய, நெருக்கடியான கால கட்டத்தைக் குறித்துக் காட்டுகிறது. வெளிப்படையான இராஜரீகத் தலையீடாகவும், மறைமுகமான இராணுவ நெருக்குவாரமாகவும் இரு பரிமாணங்களில் இந்தியாவின் நடவடிக்கை அமையப் பெற்றது. மேற்குலகின் சிலந்தி வலைக்குள் சிறைபட்டிருந்த ஜெயவர்த்தனா அரசை இந்திய ஆதிக்க வியூகத்திற்குள் கொண்டு வருவதே இந்தியத் தலையீட்டின் மூலோபாயக் குறிக்கோளாகும். இத் தலையீடானது காலப் போக்கில் ஒரு நீண்ட இராஜரீக மத்தியஸ்துவ முயற்சியாக வடிவம் எடுத்தது. 1985ஆம் ஆண்டு திம்புப் பேச்சுக்களோடு தொடங்கிய இந்திய மத்தியஸ்துவம், 1987, ஜுலை மாதத்தில் கைச்சாத்தாகிய இந்திய - இலங்கை ஒப்பந்தத்துடன் முடிவடைந்தது. இந்த ஒப்பந்தம் கைச்சாத்தாகியதை அடுத்து நிகழ்ந்த துன்பியல் சம்பவங்களின் விளைவாக, இந்திய - புலிகள் உறவில் முரண்பாடுகள் தோன்றி, அவை பகையுணர்வாகப் பரிணமித்து ஈற்றில் போராக வெடித்தது. இந்தக் கொடும் போர் இரண்டு ஆண்டுகள் வரை நீடித்தது.

தலைமறைவு நடவடிக்கையாக இந்திய அரசு ஒழுங்கு செய்த இராணுவப் பயிற்சித் திட்டத்திலும், பின்பு நிகழ்ந்த இராஜரீக மத்தியஸ்துவ சமரச முயற்சிகளிலும் விடுதலைப் புலிகள் இயக்கம் முக்கிய பங்கை வகித்தது. இறுதியாக, இந்தியாவுடன் நிகழ்ந்த யுத்தத்திலும் விடுதலைப் புலிகள் இயக்கமே பிரதான பாத்திரத்தில் செயற்பட்டது. இவ்விதம், மிகவும் சிக்கலான, நெருக்கடி நிறைந்த இந்தியத் தலையீட்டில், வெவ்வேறு கால கட்டங்களில் வெவ்வேறு காத்திரமான பாத்திரங்களை வகித்த விடுதலைப் புலிகளின் சுவாரஸ்சியமான வரலாற்றை இந்த அத்தியாயத்தில் விபரமாகப் பதிவு செய்துள்ளேன். ஏழு ஆண்டுகள் வரை நீடித்த இத் தலையீட்டு நடவடிக்கையில், அரசியல் இராஜதந்திர, இராணுவ ரீதியாக, இந்தியா அவமானத்திற்குரிய பின்னடைவுகளைச் சந்தித்தது. இப் பின்னடைவுகளுக்கு விடுதலைப் புலிகளையே காரணமாகக் கற்பித்து, இந்திய பத்திரிகையாளர்களும், ஆய்வாளர்களும், இராஜதந்திரிகளும் எமது இயக்கத்தை வன்மையாகக்

கண்டித்தனர். இந்தக் கண்டன விமர்சனங்கள் ஒருதலைப் பட்சமானவை என்றும் உண்மைக்கு முரணானவை என்றும் வாதாடும் நான், இந்தக் கொந்தளிப்பான கால கட்டத்தில் எமது விடுதலை இயக்கம் எதிர்கொண்ட சவால்கள், சோதனைகள், அழுத்தங்கள் பற்றிய உண்மை வரலாற்றை, சுய அனுபவச் சம்பவங்களாகத் தொகுத்து இந்த அத்தியாயத்தில் தெளிவாக விளக்கியிருக்கிறேன். இந்த அத்தியாயத்தில் கூறப்படும் விபரங்கள், இலங்கை அரசியல் அவதானிகளுக்கும் வரலாற்று மாணவர்களுக்கும் பயனாக அமையும். ஏனென்றால், இதுவே முதற் தடவையாக தமிழர் தரப்பிலிருந்து இந்தியத் தலையீடு பற்றி நிதர்சனமான புறநிலை ஆய்வு (Objective Analysis) முன்வைக்கப்படுகிறது.

இந்த நூலின் மூன்றாவது அத்தியாயம், விடுதலைப் புலிகள் அமைப்புக்கும் பிரேமதாசா அரசிற்கும் மத்தியில் நிகழ்ந்த சமாதானப் பேச்சுக்களை ஆய்வு செய்கிறது. எனது மனைவி அடேல் பாலசிங்கத்தினால் எழுதப்பட்ட இந்த ஆய்வு, **சுதந்திர வேட்கை** என்ற அவரது நூலிலிருந்து, அவரது அனுமதியுடன் பெறப்பட்டது. பிரேமதாசா - விடுதலைப் புலிகள் பேச்சுக் குறித்து, தமிழர் தரப்பாக எழுதப்பட்ட விபரமான புறநிலை ஆய்வு என்பதால் இதனை இந் நூலில் சேர்த்துக் கொள்ள விரும்பினேன். கொழும்பில் நிகழ்ந்த இப் பேச்சுக்களில் விடுதலைப் புலிகளின் தூதுக் குழுவுக்கு அதிகாரபூர்வமான செயலராகப் பணி புரிந்த அடேல், பேச்சுக் குழுத் தலைவர் என்ற ரீதியில் எனக்கும் உதவியாகச் செயற்பட்டார். விடுதலைப் புலிகள் இயக்கம் பங்குபற்றிய சகல பேச்சுக்களின் ஆய்வுகளையும் ஒரே நூலில் தொகுப்பது அரசியல் ஆய்வாளருக்கும் வரலாற்று மாணவர்களுக்கும் பயனுடையதாக அமையும் என்பதாலும், எனது நூலுக்கும் அது புலமை சேர்க்கும் என்பதாலும் அடேலின் ஆய்வுக் கட்டுரையை மூன்றாவது அத்தியாயமாக இணைத்துள்ளேன். இரண்டாவது அத்தியாயத்தில் நான் விபரமாக ஆய்வு செய்த இந்தியத் தலையீட்டு விவகாரத்துடன் சம்பந்தப்பட்டதாக பிரேமதாசா - விடுதலைப் புலிகள் பேச்சுகள் அமைந்தன. தமிழர் தாயகத்தை ஆக்கிரமித்து நின்ற இந்திய இராணுவத்தினரை விலகச் செய்யும் நோக்குடனேயே விடுதலைப் புலிகள் பிரேமதாசா அரசுடன் பேசுவதற்கு இணங்கினர். இந்தக் குறிக்கோளில் பிரேமதாசாவுக்கும் பிரபாகரனுக்கும் ஒத்திசைவான

இணக்கப்பாடு இருந்ததால் இந்த அரசியல் - இராஜதந்திர முயற்சி இறுதியில் வெற்றியளித்தது.

தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்புக்கும் சந்திரிகா குமாரதுங்கா அரசுக்கும் மத்தியில், 1994 - 95 ஆண்டு காலத்தில் யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற பேச்சுக்களை ஆய்வு செய்கிறது நான்காவது அத்தியாயம். சந்திரிகா அரசின் இன்றைய சமாதான நகர்வுகளை ஆழமாகப் புரிந்து கொள்வதாயின், பத்து ஆண்டுகளுக்கு முன்னர் அன்று என்ன நடந்தது என்பதனைப் படித்தறிவது அவசியமாகிறது. Politics of Duplicity என்ற தலைப்பில், பல ஆண்டுகளுக்கு முன்பு நான் எழுதிய ஆங்கில நூலில் தரப்பட்ட விடயங்கள் இந்த அத்தியாயத்தில் மீளாய்வு செய்யப்பட்டு திருத்தி எழுதப்பட்டிருக்கின்றன. அத்துடன் தலைவர் பிரபாகரனுக்கும் ஜனாதிபதி சந்திரிகாவுக்கும் மத்தியில் பரிமாறப்பட்ட சகல கடிதப் பரிமாற்றங்களும் இந் நூலில் அடங்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது. யாழ்ப்பாணத்தில் அரங்கேற்றப்பட்ட இந்தச் சமாதான முயற்சியானது, விடுதலைப் புலிகளைத் திசை திருப்பி, தமிழ் மக்களை ஏமாற்றுவதற்காக மேற்கொள்ளப்பட்ட ஒரு நயவஞ்சக முயற்சியாகும். பொருளாதாரத் தடைகளை நீக்கி, தமிழ் மக்களின் அன்றாட, அவசர வாழ்க்கைப் பிரச்சினைகளையோ அல்லது இனப் பிரச்சினையையோ தீர்த்து வைக்கும் நேர்மையான குறிக்கோளுடன் இப் பேச்சுக்கள் முன்னெடுக்கப் படவில்லை. சமாதானப் பேச்சுக்கள் என்ற சாக்கில் யாழ்ப்பாணக் குடாநாடு மீது ஒரு பாரிய படையெடுப்புக்கான ஆயத்தங்களைச் செய்தது சந்திரிகா அரசு. விடுதலைப் புலிகளுக்குப் பொய்யாக வாக்குறுதிகளைக் கொடுத்து, பேச்சுக்களை வேண்டுமென்று இழுத்தடித்து, இறுதியில் பேச்சுக்கள் முறிந்தபோது, சமாதானத்தின் விரோதிகளாகப் புலிகள் மீது பழிசுமத்தி, எவ்வாறு யாழ்ப்பாண ஆக்கிரமிப்புக்கு வழிகோலப்பட்டது என்ற முழு விபரங்களும் இந்த அத்தியாயத்தில் ஆய்வு செய்யப்படுகிறது.

கடைசி அத்தியாயத்தில், விடுதலைப் புலிகள் இயக்கத்தின் பிரமிப்பூட்டும் போரியல் வளர்ச்சியும், நோர்வே அரசின் அனுசரணையில் நடைபெற்ற சமாதான முயற்சியும் விரிவான முறையில் பரிசீலனை செய்யப்படுகிறது. யாழ்ப்பாணக் குடாநாடு சிங்கள இராணுவத்திடம் வீழ்ச்சியடைந்ததைத் தொடர்ந்து, தந்திரோபாயப் பின்வாங்கலாகத் தனது படையணிகளை வன்னி

மாநிலத்திற்கு நகர்த்திய தலைவர் பிரபாகரன், பிரமாண்டமான அளவில் படைத் துறையை மீளமைத்து, புதிய அணிகளை உருவாக்கி, ஒரு தேசிய விடுதலை இராணுவத்தைக் கட்டி எழுப்பினார். யாழ்ப்பாணச் சமருடன் புலிகள் இயக்கம் சிதைந்து விட்டதாக சிங்கள அரசு எண்ணிக் கொண்டிருந்த வேளை, வன்னிக் காடுகளில், மரபு வழிப் போர் முறையில் பயிற்சி அளிக்கப்பட்டு நவீன மயப்படுத்தப்பட்ட தரைப் படை அணிகளையும் கடற் படையையும் விரிவுபடுத்தி, வலுப்படுத்தினார் பிரபாகரன். இதனையடுத்து, 'ஓயாத அலைகள்' என்ற குறியீட்டுப் பெயருடன், தொடர்ச்சியாக நிகழ்ந்த பெரும் சமர்களும், அவை மூலம் வன்னி மாநிலம் முழுமையாக மீட்கப்பட்டு, ஆனையிறவுப் படைத் தளமும் கைப்பற்றப்பட்ட மகத்தான போரியல் சாதனைகளும் இந்த அத்தியாயத்தில் தரப்படுகின்றன. உலகத்தையே வியப்பூட்டிய இராணுவ வெற்றிகள் மூலம் சிங்கள ஆயுதப் படைகளின் முதுகெலும்பை முறித்து, படை வலுச் சம நிலையை எமது இயக்கம் நிலைநாட்டியது. அந்தப் பலமான அத்திவாரத்தில் நிலையெடுத்து நின்றவாறு, அமைதி வழியில் பிரச்சினையைத் தீர்க்க எமது இயக்கம் முயற்சி எடுத்தது. சிங்கள மக்களிடம் சமாதானத்திற்கான ஆணையைப் பெற்று, 2001ஆம் ஆண்டு இறுதியில், பாராளுமன்ற ஆட்சியைக் கைப்பற்றிய ரணில் விக்கிரமசிங்காவின் அரசு, நோர்வேயின் அனுசரணையின் கீழ் விடுதலைப் புலிகளுடன் சமாதானப் பேச்சுக்களை நடத்த முன்வந்தது.

நோர்வே அரசாங்கத்தின் அனுசரணையுடன் நிகழ்ந்த ஆறு கட்டச் சுற்றுப் பேச்சுக்கள் பற்றியும் இந்த அத்தியாயத்தில் விபரமாக விளக்கியிருக்கிறேன். 2002, செப்டம்பர் 16ஆம் நாள், தாய்லாந்திலுள்ள சற்றாகீப் கடற்படைத் தளத்தில் ஆரம்பமான பேச்சுக்கள் ஆறு மாதங்கள் வரை நீடித்து, இறுதியில் ஜப்பானிலுள்ள ஹக்கோனில் 2003 மார்ச் 21ஆம் திகதியுடன் முடிவுபெற்றன. சமாதானப் பேச்சுக்களை கட்டம் கட்டமாக முன்னகர்த்திச் செல்வதென்றும் முதற் கட்டப் பேச்சுக்களில் தமிழ் மக்களின் அவசர மனிதாபிமானப் பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டு, போர் நெருக்கடியைத் தணித்து இயல்பு நிலையைத் தோற்றுவிப்பதென்றும் நாம் முன்வைத்த பேச்சுக்களுக்கான தந்திரோபாய அணுகுமுறையை அரச தரப்பு ஏற்றுக் கொண்டது. இதன் அடிப்படையில் நடந்த பேச்சுக்களின்

போது இரு முக்கிய உப - குழுக்கள் நிறுவப்பட்டன. அவசர மனிதாபிமான, புனர்வாழ்வுத் தேவைகளுக்கான உப - குழு (சிரான்), நெருக்கடியைத் தணித்து, இயல்பு நிலையை தோற்றுவிப்பதற்கான உப - குழு, ஆகிய இந்த இரண்டு உப - குழுக்களும், இராணுவத்தின் கடும் போக்கினாலும், அரசாங்கத்தின் அதிகார வறுமையினாலும், செயலிழந்து முடங்கிப் போயின. போர் நிறுத்தக் கடப்பாடுகளுக்கு அமைய பொதுமக்களின் குடியிருப்புகளிலிருந்து விலக இராணுவம் மறுத்தது. 'உயர் பாதுகாப்பு வலயம்' எனப் பெயர் சூட்டப்பட்ட பிரதேசங்களில் எமது மக்கள் மீள் குடியேற்றும் செய்வதையும் கடுமையாக எதிர்த்தது. 'உயர் பாதுகாப்பு வலயங்களிலிருந்து' இராணுவம் விலகுவதானால் விடுதலைப் புலிகள் இயக்கம் தமது ஆயுதங்களை சரணடைய வேண்டும் என்ற ஏற்றுக் கொள்ள முடியாத நிபந்தனையை விதித்தது. இதனைக் கடுமையாக ஆட்சேபித்து, நெருக்கடியைத் தணிக்கும் உப - குழுவிலிருந்து புலிகள் விலகினர். இதனால் அக் குழு செயலிழந்தது. நிதியின்றி, அதிகாரமின்றி, நிர்வாகத் திறமையின்றிச் செயற்படாது முடங்கியது சிரான் உப - குழு. தமிழரின் பிரச்சினைகளுக்கு இடைக்காலத் தீர்வையோ நிரந்தரத் தீர்வையோ வழங்குவதற்கான அரசியல் அதிகாரம் விக்கிரமசிங்காவின் அரசிடம் இருக்கவில்லை. முழு நிறைவேற்று அதிகாரங்களும் ஜனாதிபதி சந்திரிகாவிடம் குவிக்கப்பட்டிருந்தன. சர்வ அதிகாரமும் படைத்த சந்திரிகாவுடன் விக்கிரமசிங்கா முரண்பட்டு நின்றார். இந்தப் பகையுறவு காரணமாக, ரணிலின் ஆட்சிப் பீடத்தால் எதுவுமே உருப்படியாகச் செய்ய முடியவில்லை. ஜனாதிபதியைப் பிரதம தளகர்த்தாவாகக் கொண்ட சிறீலங்காவின் ஆயுதப் படைகளும் விக்கிரமசிங்காவுக்குக் கட்டுப்பட மறுத்ததுடன் புலிகளுடன் மோதி, முரண்பட்டன. இதனால் சமாதான முயற்சிக்குப் பெரும் அச்சுறுத்தல் ஏற்பட்டது.

சிறீலங்காவின் அரசியல் யாப்பும் சமாதான முயற்சிக்கு முட்டுக் கட்டையாக விளங்கியது. நெகிழ்வற்ற விதிகளால் மிக இறுக்கமாகக் கட்டப்பட்ட அரசியலமைப்பின் எல்லைக் கோடுகளை மீறுவதற்கு ஐக்கிய தேசியக் கட்சித் தலைவர்கள் அஞ்சினர். உருப்படியான அதிகாரங்களுடன் தமிழ் மக்களுக்கு ஒரு இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பை வழங்குவதற்கும் அரசியலமைப்பில் இடைவெளி இல்லையென ரணிலின்

அரசாங்கம் கைவிரித்தது. பகையுணர்வுடைய ஜனாதிபதி ஒருபுறமும், கடும்போக்கான இராணுவம் மறுபுறமும், இறுக்கமான அரசியல் யாப்பு இன்னொரு புறமுமாக முக்கோண நெருக்குவாரத்தில் சிக்குப்பட்டுத் திணறிய ரணிலின் நிர்வாகத்தால் சமாதானப் பேச்சுக்களை முன்னெடுக்க முடியவில்லை.

இதற்கிடையில், சர்வதேசப் பாதுகாப்பு வலைப் பின்னல் என்ற ஒரு நாசகாரத் திட்டத்தைச் செயற்படுத்தும் நோக்குடன், உலக நாடுகளின் உதவியை நாடினார் விக்கிரமசிங்கா. அமெரிக்காவின் ஆதிக்க வியூகத்திற்குள் இயங்கிய நாடுகளை, உதவி வழங்கும் மாநாடு என்ற போர்வையில் அணிதிரட்டி, புலிகளுக்கு அழுத்தம் செலுத்திக் கட்டுப் போடும் சர்வதேசச் சதி முயற்சியில் அவர் முனைப்போடு செயற்பட்டார். ஆயினும் விடுதலைப் புலிகள் விழிப்புடன் இருந்ததால் இம் முயற்சியிலும் அவர் வெற்றிக்காண முடியவில்லை. வாஷிங்டனில், 2003 ஏப்ரலில் நிகழ்ந்த உதவி வழங்கும் நாடுகளின் சர்வதேச மாநாட்டில் பங்குபற்ற அழைக்கப்படாது விடுதலைப் புலிகள் புறந்தள்ளப்பட்டனர். சமத்துவப் பங்காளிகள் என்ற தகைமையுடன் பேச்சுக்களிலும், பேச்சுச் சம்பந்தமான மாநாடுகளிலும் பங்குபற்றுவதென இணக்கம் கண்ட பின்னர், வாஷிங்டனில் நிகழ்ந்த முக்கிய மாநாட்டில் எமது இயக்கம் ஓரம் கட்டப்பட்டதை ஆட்சேபித்தும், பேச்சுக்கள் முன்னேற்றம் காணாது முடங்கிப் போன காரணத்தைக் காட்டியும், பேச்சுக்களில் பங்குபற்றுவதை இடைநிறுத்த எமது இயக்கம் முடிவெடுத்தது. பேச்சுக்கள் இடைநிறுத்தி வைக்கப்பட்ட போதும், ஒரு உருப்படியான இடைக்கால நிர்வாகக் கட்டமைப்புக்கான யோசனைத் திட்டத்தை முன்வைக்குமாறு ரணிலின் அரசாங்கத்திடம் நாம் கோரிக்கை விடுத்திருந்தோம். சிறீலங்காவின் அரசியலமைப்புச் சுவர்களுக்குள் முடங்கிக் கிடந்த ஐக்கிய தேசியக் கட்சித் தலைவர்களால் உருப்படியான ஒரு திட்டத்தை முன்வைக்க முடியவில்லை. இறுதியில், ‘இடைக்கால தன்னாட்சி அதிகார சபை’ என்ற ஒரு புதுமையான யோசனைத் திட்டத்தை எமது இயக்கம் அரசாங்கத்திடம் சமர்ப்பித்தது. இத் திட்டம் சமர்ப்பிக்கப்பட்ட நான்காவது நாள், எமது புதிய யோசனைகளை அரசாங்கம் பரிசீலனை செய்து கொண்டிருந்த வேளையில், சந்திரிகா அம்மையார் இவ் விவகாரத்தில் தலையிட்டு, மூன்று முக்கிய அமைச்சுகளைப் பறித்தெடுத்தார். இதனால்

விக்கிரமசிங்காவின் அரசாங்கம் செயற்படாது முடங்கியது. இதனையடுத்து ஒரு சில மாதங்களில் பாராளுமன்றம் கலைக்கப்பட்டதுடன் ஐக்கிய தேசியக் கட்சியின் ஆட்சிக் காலம் முடிவுக்கு வந்தது. அதிகாரப் போட்டியால் எழுந்த அரசியல் நெருக்கடி பற்றியும், நோர்வேயின் அனுசரணையுடன் நிகழ்ந்த பேச்சுக்களின் குறைபாடுகள் பற்றியும் இந்த அத்தியாயத்தின் இறுதிப் பகுதியில் விரிவாக ஆராயப்படுகிறது.

தமிழ்த் தேசியம் எழுச்சி கொண்டு, வளர்ச்சி பெற்று, சுயநிர்ணயத்திற்கான ஆயுதப் போராட்டமாக வடிவம் எடுத்த தமிழ் மக்களின் புரட்சிகரமான அரசியற் போராட்ட வரலாற்றை இந் நூல் விளக்கிக் கூற முனைகிறது. விடுதலைப் புலிகள் இயக்கத்தின் ஆரம்ப கால ஆயுதப் போராட்ட வரலாற்றுடன் எமது இயக்கம் பங்குகொண்ட சகல சமாதானப் பேச்சுக்களையும் இந் நூலில் செம்மையாக விபரித்துக் கூறுகிறோம். இதுவரை காலமும் வெளிவராத புதிய, சுவையான தகவல்களுடன் தமிழீழ மக்களின் தேசிய விடுதலைப் போராட்டத்தை, அதன் ஆழத்திலும் அகலத்திலும் விபரிக்கும் இந் நூல், எமது அரசியல் வரலாற்றிலும் விடுதலைப் போரிலும் ஆர்வமும் பற்றுமுள்ள அனைவருக்கும் பயனுடையதாக அமையும்.

# அத்தியாயம் I

# தமிழ்த் தேசிய எழுச்சியும் ஆயுதப் போராட்டமும்

## இனப் பிரச்சினையின் வரலாற்றுப் பின்னணி

இலங்கைத் தீவானது, தொன்மைவாய்ந்த இரு நாகரீகங்களின் வரலாற்றுத் தாயகமாகும். வேறுபட்ட மொழிகள், பாரம்பரியங்கள், பண்பாடுகள், வேறுபட்ட நிலப்பரப்புகள், வெவ்வேறான வரலாறுகளைக் கொண்ட இரு தனித்துவமான தேசிய இனங்களாக அது விளங்குகின்றது. இத் தீவில் வதியும் தமிழ் மக்களது வரலாறானது பண்டைய யுகம்வரை வேரோடிச் செல்கிறது. சிங்கள மக்களின் மூதாதையர், கி.மு. ஆறாம் நூற்றாண்டில் வங்காளத்திலிருந்து தமது இளவரசன் விஜயனுடன் இத் தீவை வந்தடைந்தபோது தொன்மை வாய்ந்த திராவிட (தமிழ்) குடியிருப்புகள் இங்கிருக்கக் கண்டார்கள். இலங்கைத் தீவில் சிங்களக் குடியேற்றம் நிகழ்வதற்கு முந்திய காலத்தில், நாகர் இயக்கர் என்ற திராவிடத் தமிழ் இராச்சியங்கள் நிலைபெற்றிருந்ததாக சிங்கள வரலாற்றுப் பதிவேடுகளான தீபவம்சமும் மகாவம்சமும் எடுத்தியம்புகின்றன. இந்த வரலாற்றுப் பதிவேடுகளை எழுதிய பௌத்த பிக்குகள் இலங்கையின் பூர்வீக குடிகளது வரலாற்றைத் திரித்துக்கூற முற்பட்டனர். புராதனத் தமிழர்களை மானிடரல்லாதோர் என்றும், அமானுஷ்ய சக்தி வாய்ந்த அரக்கர்கள் என்றும் வர்ணித்திருக்கிறார்கள். இலங்கைத் தீவின் பூர்வீகக் குடிகளது உண்மை வரலாறானது புராணங்கள் கட்டுக்கதைகளால் மூடிமறைக்கப்பட்டபோதும், காலத்தால் முந்திய ஆதிவாசிகள் தமிழர்களே என்று தற்கால ஆய்வாளர்கள் கருதுகிறார்கள். புவியமைப்பின்படி, இத்தீவானது தென்னிந்தியாவை அண்டியதாக அமையப்பெற்றிருப்பதை நோக்குமிடத்து, வட இந்தியப்

பிரதேசமான வங்காளத்திலிருந்து விஜயனும் அவனது தோழர்களும் கடல்மார்க்கமாக வந்து இங்கு தரையிறங்குமுன்னர் இத் தீவின் பூர்வீகக் குடிகளாகத் திராவிடத் தமிழர்களே இருந்திருக்க வேண்டும் என்பது தெளிபு.

கி.மு. ஆறாம் நூற்றாண்டிலிருந்து இத் தீவில் நிகழ்ந்த கொந்தளிப்பான அரசியல் வரலாற்றை பௌத்த வரலாற்றுப் பதிவேடுகள் பொறித்திருக்கின்றன. தமிழ், சிங்கள மன்னர்களிடையே நிகழ்ந்த கொடும் போர்கள் பற்றியும், தென்னிந்திய தமிழ் சாம்ராஜ்யங்களின் படையெடுப்புகள் பற்றியும், மேலாண்மையை நிறுவுவதற்காக தமிழ் சிங்கள இராச்சியங்கள் மத்தியில் வெடித்த கோரமான யுத்தங்கள் பற்றியும் இவ் வரலாற்று ஏடுகள் விபரிக்கின்றன. வரலாற்று ரீதியாக, இலங்கைத் தீவானது வெவ்வேறு காலகட்டங்களில் சிங்கள மன்னர்களாலும் தமிழ் மன்னர்களாலும் ஆட்சி செய்யப்பட்டது. இடையிடையே, காலத்திற்குக் காலம் நிகழ்ந்த போர்கள் காரணமாக தமது தலைநகர்களை தெற்கு நோக்கி நகர்த்த சிங்கள அரசர்கள் நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். பதின்மூன்றாம் நூற்றாண்டிலிருந்து, இலங்கையில் அந்நிய குடியேற்ற ஆதிக்கம் தலையிடுவதற்கு இடைப்பட்ட காலத்தில், தமிழ் மக்கள் தமது சொந்த இராச்சியத்தில், வடகிழக்கு மாகாணங்கள் அடங்கியதான தமது சொந்தப் பாரம்பரிய நிலத்தில், ஒரு நிலைபெற்ற தேசிய இனக் கட்டமைப்பாக தமது சொந்த அரசர்களால் ஆளப்பட்டு வந்தனர்.

பிரபல கடல் யாத்திரீகனான மார்க்கோ போலோ இலங்கைத் தீவை இப் பூமியின் சுவர்க்கம் என வர்ணித்திருக்கிறார். 'இந்துமாகடலின் முத்து' எனப் புகழ்ந்துரைத்தனர் ஆங்கில குடியேற்ற ஆட்சியாளர். இந்தியாவின் தென்கரையிலிருந்து இருபத்தொரு மைல் நீர் இடைவெளியால் பிரிக்கப்பட்டிருக்கும் இலங்கைத் தீவு 25,332 சதுர மைல் பரப்புடையது. அந்நிய குடியேற்றம் ஊடுருவுவதற்கு முன்னர் பல நூற்றாண்டுகளாக தன்னிறைவுகொண்ட பொருளாதார வளம்பெற்றதாக இத் தீவு விளங்கியது. அத்தோடு, கீழைத் தேயக் களஞ்சியமாகவும் புகழீட்டியிருந்தது. அந்நிய குடியேற்ற ஆட்சிக்கு முற்பட்ட காலத்தில் இத் தீவின் பொருளாதார உற்பத்தி வடிவம் நிலமானிய சமூக அமைப்பைக் கொண்டதாக அமையப் பெற்றிருந்தது. தமிழர் தேசத்தின் பொருளாதார வடிவமானது நிலமானிய சமூகத்தன்மையைக் கொண்டிருந்தபோதும், தனக்கே

உரித்தான தனிப் பண்புகளுடைய உற்பத்தி உறவுகளில் கட்டப்பட்டிருந்தது. பல்வேறு சமூகப் பணிகளின் அடிப்படையில், பல படிநிலைகளாக வகுக்கப்பட்ட சாதியக் கட்டமைப்பை அடித்தளமாகக் கொண்டு இப் பொருளாதார உற்பத்தி வடிவம் இயங்கியது. பெரும் குளங்களையும் கால்வாய்களையும் பரவலாகக் கொண்டமைந்த நீர்ப்பாசன விவசாய முறைமைக்காகவே மத்திய கால இலங்கை புகழ்பெற்று விளங்கியது. ஆயினும், காலப்போக்கில், வடக்கிலும் வட மத்திய மாநிலத்திலும் அமையப்பெற்றிருந்த இந் நீர்ப்பாசன உற்பத்தி வடிவம் பராமரிப்பற்று, பழுதடைந்து, படிப்படியாகச் சீரழிந்து அடர்ந்த காட்டினுள் அமுங்கியது. இக் காலகட்டத்தில், சிங்கள நிலமானிய பிரபுக்கள் மத்திய மலைப்பிரதேசங்களை நோக்கி நகர்ந்து, கண்டியை தலைநகராக வரித்துக் கொண்டனர்.

போர்த்துக்கேயர் 16ம் நூற்றாண்டின் தொடக்கத்திலே இந்தத் தீவில் முதல் காலடி வைத்தபோது, இரண்டு புராதன அரசுகள் இங்கே அரசோச்சக் கண்டார்கள். வடக்குக் கிழக்குப் பிராந்தியத்தில் தமிழ் மக்களும் தெற்கே சிங்கள மக்களும் வாழ்ந்து கொண்டிருப்பதைக் கண்டனர். வெவ்வேறான பண்பாடுகளோடு, முற்றிலும் வேறுபட்ட இரண்டு சமூகங்களாக அவர்கள் இயங்குவதையும், தனித்தனி இனங்களாகத் தத்தமக்கென்ற தனியான அரசாட்சி அமைப்போடு பிரிந்து வாழ்வதையும் அவர்கள் கண்ணுற்றனர். முதலில் ஒப்பந்தங்களிலும் பின்னர் போர்களிலும் ஈடுபட்ட போர்த்துக்கேயர், 1619ல் இறுதிப் போர் நடத்தி, தமிழ் இராச்சியத்தைத் தோற்கடித்து, தமிழ் மன்னன் சங்கிலி குமாரனைத் தூக்கிலிட்டார்கள். ஆயினும் போர்த்துக்கேயரும் சரி, அவர்களுக்குப் பின் வந்த ஒல்லாந்தரும் சரி, தமிழர் தேசத்தை தனி இராச்சியமாக ஆண்டு, தமிழர் தாயகத்தினது பிரதேச ஒருமைப்பாட்டையும், தமிழ் மக்களின் இன அடையாளத்தையும் அங்கீகரித்தார்கள். 1799ல் ஆங்கிலக் குடியேற்ற சாம்ராச்சியம், தீவின் ஆட்சிக் கட்டுப்பாட்டை ஒல்லாந்தரிடமிருந்து பற்றிக் கொண்டது. இரண்டு இனங்களுக்கும் இடையில் வேறுபாடுகள் இருந்தபோதிலும் அவற்றைப் பொருட்படுத்தாத பிரித்தானியர், 1833ல் இரண்டு தேசங்களையும் ஒன்றாக்கி ஒற்றையாட்சி அமைப்பைத் திணித்தனர். இவ்வாறு அந்நிய குடியேற்றவாதம், இன்றைய தேசியப் போராட்டத்துக்கு அடித்தளமிட்டது. நிர்வாக நோக்கங்களுக்காக ஒற்றையாட்சி

அரசைப் பிரித்தானியர் உருவாக்கியபோதும், இத் தீவு, வேறுபட்ட இரு இனங்களின் தாயகமாக விளங்கியது என்பதை அவர்கள் அங்கீகரித்தார்கள். குடியேற்ற ஆட்சியின் முதல் செயலதிபராக 1799ல் பதவியேற்ற சேர் கிளகோண் அவர்கள், தமது "கிளகோண் அறிக்கை" என்ற மிகப் பிரசித்தி பெற்ற குறிப்பேட்டில் பின்வருமாறு கூறுகிறார்: "இரு வேறுபட்ட தேசிய இனங்கள், மிகப் புராதன காலத்திலிருந்தே தீவின் வளங்களைத் தம்மிடையே பிரித்து வைத்திருக்கிறார்கள்: வளவை நதியிலிருந்து சிலாபம் நதி வரை, அதன் தெற்கிலும், மேற்கிலுமுள்ள உள்நாட்டுப் பகுதிகளைச் சிங்களவர் கொண்டிருக்க, மலபார்கள் (தமிழர்) வடக்குக் கிழக்கு மாவட்டங்களைத் தமதாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இந்த இரு தேசிய இனங்களும் தங்கள் சமயம், மொழி, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றில் முற்றாக வேறுபட்டவர்களாகக் காணப்படுகின்றனர்."

சிங்கள மக்களும் தமிழ் மக்களும் கிறிஸ்துவுக்கு முந்திய காலம்வரை தொடர்ந்து செல்லும் தொன்மைமிக்க ஆழமான வரலாற்று வேரோடல்களைக் கொண்டுள்ளனர். தனித்தனி தேசிய இனங்களாகக் கணிக்கப்படும் தன்மைகளையும் கொண்டுள்ளனர். எனினும், வரலாற்று ஓட்டத்திலே இலங்கைத் தீவு, வேறு பல்லின பண்பாட்டு வடிவங்களையும் உருவாக்கிக் கொண்டது. இத் தீவில் வேறு இனக் குழுக்களும் வாழ்கின்றன. அவற்றுள் முஸ்லிம்களும் மலையகத் தமிழரும் தமக்கெனத் தனித்தனியான பண்பாட்டு வாழ்வுடையவர்களாக விளங்குகின்றனர்.

இலங்கை முஸ்லிம்களின் மூலத்தை, பத்தாம் நூற்றாண்டில் அரேபியாவிலிருந்து வர்த்தகர்களாக இத் தீவுக்கு வந்தவர்களுடன் பொருத்திப் பார்க்கலாம். தமிழைத் தம் தாய் மொழியாக வரித்துக் கொண்ட இந்த முஸ்லிம்கள், தீவின் கிழக்கேயும் தெற்கேயும் பெருமளவாகக் குடியமர்ந்தார்கள். தமிழைத் தாய் மொழியாகத் தழுவி, கிழக்கிலே தமிழ் மக்களோடு கூடிக் குடியமர்ந்து, விவசாயிகளாக வாழுகின்ற இவர்கள், தாம் ஒரு தனித்துவமான இனக் குழுவினர் என்ற கூட்டுப் பண்பாட்டு உணர்வைத் தமது மதமான இஸ்லாமிடமிருந்து பெற்றுக் கொள்கிறார்கள்.

## பிரித்தானிய குடியேற்ற ஆட்சியும் தமிழ் மக்களும்

பிரித்தானிய குடியேற்ற ஆதிக்கத்தால் ஏற்பட்ட ஆழமான தாக்கங்களுடன் ஒப்புநோக்குகையில் போர்த்துக்கேய, ஒல்லாந்த குடியேற்ற ஆட்சிகளால் இலங்கையின் பொருளாதார கட்டமைப்பில் விளைந்த தாக்கம் குறைவானவை என்று சொல்லலாம். பிரித்தானிய குடியேற்ற ஆட்சியின் முக்கிய நிகழ்வாக, மக்களைச் சுரண்டும் பெருந்தோட்டப் பொருளாதாரத்தை ஆங்கிலேயர் இலங்கையில் திணித்தனர்.

பிரித்தானியரால் கண்டி இராச்சியம் தோற்கடிக்கப்பட்ட 1815இல் பெருந்தோட்டத் தமிழ்த் தொழிலாளரின் துயர வரலாறும் வித்தூன்றுகிறது. அந்த நாட்களிலேயே பெருந்தோட்டப் பொருளாதாரத்தை நாட்டிலே நடைமுறைப்படுத்த பிரித்தானிய குடியேற்ற ஆட்சியாளர் தீர்மானித்தனர். உயர்ந்த மலைகளிற் செழித்து வளரும் கோப்பிச் செடி, 1820ஐ அடுத்து வந்த ஆண்டுகளில் பெருந்தோட்டங்களாகப் பயிரிடப்பட்டது. முதலீட்டாளர்களும் தொழில் உரிமையாளர்களும் இங்கிலாந்திலிருந்து, இலங்கையில் புதிதாகக் கைப்பற்றப்பட்ட மலைப் பகுதிகளுக்கு விரைந்து வந்தனர். கண்டி விவசாயிகளிடமிருந்து பெருமளவு நிலங்களை ஏமாற்றி அபகரித்தனர். காலாகாலமாகத் தமக்கு வாழ்வளித்த தங்கள் நிலபுலன்களைக் கைநெகிழ்ந்து, புதிய முதலாளித்துவ பெருந்தோட்டங்களில் கூலிக்கு வேலை செய்யக் கண்டிய விவசாயிகள் மறுத்தனர். சுதேச சிங்கள விவசாயிகள் மத்தியிலிருந்து தமக்கு வேண்டிய தொழிலாளர் அணியைப் பெறக் குடியேற்ற ஆட்சியாளர் மேற்கொண்ட நெருக்குவார முயற்சி வெற்றியளிக்கவில்லை. எனவே, இந்தியாவிலே குவிந்து கிடந்த கூலித் தொழிலாளர் வர்க்கத்தைப் பயன்படுத்த பிரித்தானிய குடியேற்ற ஆட்சியாளர் நிர்ப்பந்திக்கப்பட்டனர். மிகவும் மலிவான கூலியாட்கள் அடங்கிய பெரும் பட்டாளம் ஒன்று தென்னிந்தியாவில் பணிக்கமர்த்தப்பட்டது. ஒருபுறம் தாங்கொணா வறுமையும், மறுபுறம் ஆட்சியாளரின் மிரட்டலுமாக இந்த ஏழைத் தொழிலாள மக்களைப் பணியவைத்தன. சுவர்க்க பூமியென ஆசைகாட்டி இத் தீவுக்கு கொண்டுவரப்பட்ட இம் மக்கள் மிகக் கொடூரமான அடிமை வாழ்விற்குள் நிரந்தரமாகத் தள்ளப்பட்டார்கள். அநீதியான, அறநெறிகளுக்கு விரோதமான தொழிலாளர் ஒப்பந்தம் ஒன்று செய்து கொள்ளப்பட்டது. இது

பல்லாயிரக்கணக்கான தமிழகத் தொழிலாளர்களை இலங்கையின் பெருந்தோட்டங்களுக்கு இடம்பெயர நிர்ப்பந்தித்தது. 1840ஆம் ஆண்டிலிருந்து 1850 வரையிலான பத்து வருடங்களில் பத்து லட்சம் தமிழ்ப் பாட்டாளிகள் இலங்கையில் 'இறக்குமதி' செய்யப்பட்டார்கள். தமிழ் நாட்டின் திருநெல்வேலி, மதுரை, தஞ்சாவூர் ஆகிய மாவட்டங்களில் வறுமையால் வாடிய தாழ்த்தப்பட்ட சமூகத்தினரே முதலில் வேலைக்கு அமர்த்தப்பட்டார்கள். இவர்கள் தத்தம் கிராமங்களிலிருந்து பல நூற்றுக்கணக்கான மைல்கள் தூரம் கால் நடையாக நடந்து ராமேஸ்வரம் சென்றடைந்தனர். பின்னர் சிறு மீன்பிடி வள்ளங்களில் மன்னார் கரையோரமாக இறக்கப்பட்டனர். அங்கிருந்த அடர்ந்த காடுகளூடாக நடந்துசென்று மலையகப் பகுதிகளையடைந்தனர். பரிதாபத்துக்குரிய இந்த ஏழைப் பாட்டாளி மக்களிற் பல்லாயிரம் பேர், இந்தக் கொடூரமான நீண்ட பயணத்தின்போது, நோயினாலும், களைப்பினாலும் மன விரக்தியாலும் வழி வழியே மடிந்து போனார்கள். இந்த நீண்ட மரண யாத்திரையில் தாக்குப் பிடித்தவர்கள் சோர்ந்து, களைத்து, மிகவும் பலவீனம் அடைந்திருந்தார்கள். இவர்களில் பல்லாயிரக்கணக்கானோர், தோட்டப்பயிர்ச் செய்கைக்காகக் காடுகளை அழித்து, நிலத்தைப் பதப்படுத்தும் ஆரம்ப கால முயற்சியின்போது அங்கு நிலவிய பயங்கரமான சுகாதாரச் சீர்கேட்டு நிலைகளுக்குத் தாக்குப் பிடிக்க முடியாது இறந்து போயினர்.

பெருந்தோட்டக் கோப்பிப் பொருளாதாரம் 1840களில் வீழ்ச்சி அடைந்தது. கோப்பிச் செடியை இலை நோய்க் குருக்கனடித்ததே இந்த முறிவுக்கு காரணமாயிற்று. ஆயினும், கோப்பியினிடமாகத் தேயிலைப் பயிர் அறிமுகப்படுத்தப்பட்டதால், பொருளாதார அமைப்பு, பங்கமின்றித் தப்பிப் பிழைத்தது. தேயிலை, 1880களிலே மிகப் பரவலாகப் பயிரிடப்பட்டது. தேயிலைப் பெருந்தோட்டப் பொருளாதாரமும் விரிவடைந்தது. பிரித்தானிய தொழிற்துறை முதலீடுகளும் வெளிநாட்டுச் சந்தையும் உறுதியாக வடிவமைக்கப்பட்ட வர்த்தக நிறுவனங்களும் விரிவடைந்தன. இவை, உற்பத்தி அமைப்பையே மாற்றி அமைத்தன. இதனால், முன்னைய நிலமானிய சமுதாயத்தின் அடித்தளங்கள் நிலையான மாற்றம் பெற்று, முதலாளித்துவ பொருளாதாரக் கட்டமைப்பு உருவாவதற்கு அடித்தளம் நிறுவப்படலாயிற்று.

பெருந்தோட்டப் பொருளாதாரமானது உற்பத்தி வடிவத்தில் அடிப்படையான மாற்றத்தைக் கொண்டுவந்தபோதும், ஆண், பெண், சிறுவர்கள் அடங்கிய தமிழ்த் தோட்டத் தொழிலாள வர்க்கமானது வெள்ளை எஜமான்களுக்கும் உள்ளூர் முதலாளிகளுக்கும் உழைத்து மாளும் நிரந்தர அடிமை வாழ்வுக்குத் தள்ளப்பட்டது. இந்தியத் தமிழ்த் தொழிலாளர்களை மலையகத்திற்கு கொண்டுவந்த ஆங்கிலேய தோட்டத்துரைமார் வேண்டுமென்றே அவர்களை தோட்டங்களில் பிரித்து ஒதுக்கி வேறுபடுத்தி வரிசை அறைகளாகக் கட்டப்பட்ட குடியிருப்புக்களில் குடியமர்த்தினார்கள். மனிதர்களை வேறுபடுத்திப் பிரித்து ஒதுக்கும் இந்த அநீதியான நடைமுறையானது தமிழ் மக்களை நிரந்தரமாகவே குச்சறைக்குள் முடக்கி, இழிநிலையான வாழ்நிலைக்குள் தள்ளியது. சுதேசிய மக்களோடு கூடிவாழ முடியாது பிரித்தொதுக்கியது. சொந்தமாக நிலம் வாங்கவோ, தமக்கென வீடு கட்டவோ, சுதந்திரமான சமூக வாழ்வு வாழவோ இடமளிக்காது தடைசெய்தது. மலையகத் தமிழ்ச் சமூகத்தைக் கண்டிச் சிங்கள சமூகத்தின் மையப் பகுதிக்குள் தங்க வைத்த பிரித்தானிய குடியேற்ற ஆட்சியாளர், தங்கள் பிரித்தாளும் சூழ்ச்சிக் கொள்கைக்கு அமைவாக, இரண்டு சமூகங்களிடையேயும் பகைமை உணர்வு நிலவ வழி வகுத்தார்கள். குடியேற்ற ஆட்சி நிறுவிய அடிமை நிலையால் சிறுமைப்படுத்தப்பட்ட தமிழ்த் தோட்டத் தொழிலாளர் சொல்லொணாத் துயரை அனுபவித்தார்கள். அவர்களுடைய வியர்வையும் இரத்தமும் மிகக் கொடிய சுரண்டல் பொருளாதாரத்திற்கு முண்டு கொடுக்க, அதிலிருந்து சுவறிய பயனை வெள்ளைத்துரைமாரும் சிங்கள நிலவுடைமை வகுப்பினரும் சுகித்தார்கள்.

பிரித்தானிய குடியேற்ற ஆதிக்கத்தின் தாக்கமானது வடகிழக்கு மாநிலங்களில் வாழும் சுதேசியத் தமிழர்கள் மீது பாரதூரமான விளைவுகளைச் சுமத்தியது. அரசியல் மட்டத்தில், பிரித்தானிய ஆட்சியானது ஒன்றிணைக்கப்பட்ட அரச நிர்வாகத்தையும் மையப்படுத்தப்பட்ட நிறுவகங்களையும் ஒற்றையாட்சி வடிவமைப்புக் கட்டுமாணத்தையும் பளுவேற்றியது. இதனால், இரண்டு வேறுபட்ட இராச்சியங்கள் வல்வந்தமாக ஒன்றிணைக்கப்பட்டன. இரண்டு தேசிய இனங்களின் கடந்த கால வரலாற்று வாழ்நிலை, அவர்களுடைய சமூகப் பொருளாதாரத்

தனித் தன்மைகள், அவர்களிடையே நிலவிய இன அடிப்படையிலான வேறுபாடுகள் ஆகியவை ஊதாசீனப்படுத்தப்பட்டன. இவையே, தமிழ் - சிங்கள இனப் பகைமையின் மூல வேர்களாக அமைந்தன.

தமிழ்ச் சமூக வடிவமைப்பானது, தனக்கே உரித்தான தனித்துவம் கொண்ட சமூகப் பொருளாதாரக் கட்டமைப்பைக் கொண்டதாக விளங்கிற்று. நிலமானிய சமுதாயக் கூறுகளும் சாதிய முறைமையும் ஒன்றோடொன்று இறுகப் பிணைக்கப்பட்டு, பல்முகத் தன்மைகொண்ட ஒரு சிக்கலான சமுதாய வடிவமாக அது இயங்கியது. சாதியப் பகுப்புமுறை என்ற அநீதியான அடக்குமுறை உயர்சாதித் தமிழர்களுக்கு பிறப்பின் அடிப்படையில் சலுகைகளையும் தகைமைகளையும் வழங்கியது. தாழ்த்தப்பட்ட சாதியினராகக் கொள்ளப்பட்ட மக்கள், சமூகத்தில் வெகுவாக ஒடுக்கப்பட்டு, நசுக்கப்பட்டு, சுரண்டப்பட்டனர். அடிமை நிலையிலிருந்த இம் மக்கள் அன்றாட சீவியத்திற்கே திண்டாடும் இழிநிலை வாழ்க்கையை வாழ்ந்தார்கள். சாதிய அமைப்பு வழங்கிய சலுகையாலும், வெளிநாட்டுச் சமய நிறுவனங்கள் நடத்திய கல்வி வசதிகளாலும் பயன்பெற்ற உயர்சாதித் தமிழரில் ஒரு பிரிவினர் ஆங்கிலக் கல்விமுறையைத் தழுவினர். இதனால் தொழிலறிஞர்களும் பணிமனை அலுவலர்களும் உருவாகி, அரச சேவையின் நிர்வாக அமைப்பைக் கொண்டு நடத்தும் ஆங்கிலக் கல்வி கற்ற ஒரு புதிய வர்க்கம் தோற்றம் பெற்றது. தமிழ் மக்களை இதில் ஈடுபடுமாறு ஊக்கப்படுத்திய ஆங்கிலேய குடியேற்ற ஆட்சியாளர்கள், தம்முடைய பிரித்தாளும் சூழ்ச்சியின் சூட்சுமத்தோடு அரச நிர்வாகத்திலும் கணிசமான பங்கைத் தமிழருக்கு அளித்தனர். இதன் காரணமாக பின்னைய நாளில், சிங்களப் பேரினவாதம் வீறுடன் கிளர்ந்தெழ வழிகோலினார்கள்.

அரச நிர்வாகக் கட்டமைப்பிலும் பெருந்தோட்டப் பொருளாதாரத் துறையிலும் தமிழரின் மேலாதிக்கம், ஆங்கிலக் கல்வி கற்ற வகுப்பினர் சுகித்த சலுகைகள், கிறிஸ்தவ மதப் பரம்பல் ஆகியவையே சிங்களத் தேசியவாதம் தோற்றம்பெறக் காலாயின. தொடக்க நிலையில், பௌத்த மறுமலர்ச்சியின் வடிவமாகவே சிங்கள தேசியவாதப்போக்கு காணப்பட்டது. இது பின்னர் படிப்படியாக வளர்ந்து அரசியலில் வலுமிக்க சக்தியாக ஆதிக்கம் பெற்றது. பௌத்த மத மறுமலர்ச்சி என்ற சுலோகத்தின் கீழ் ஒரு தேசிய மேலாண்மைக் கருத்தியல்

எழுந்தது. அது தமிழர் மீதான காழ்ப்புணர்வைப் பலமாக வெளிப்படுத்தியது. பௌத்த தேசியத் தலைமை, தமிழரையும் ஐரோப்பிய குடியேற்றவாதிகளையும் கடுமையாகச் சாடியது. சிங்கள ஆரிய இனப் பெருமையைப் புகழ்ந்துரைத்தது.

அநாகாரிக்க தர்மபாலா என்ற பௌத்த சிந்தனையார் சிங்கள-பௌத்த தேசியவாதத்தின் பிதாவாகக் கருதப்பட்டார். 'ஒரு பண்டைய நாகரீகத்தின் வரலாறு' என்ற பிரபல்யம்பெற்ற அவரது நூலில் சிங்கள இனத்தவர் பற்றி அவர் குறிப்பிடுவதாவது:

> "மனித இனப் பகுப்பியல் ஆய்வின்படி சிங்களவர் ஒரு தனித்துவம் வாய்ந்த இனத்தவர். வேறு இனக் கலப்பில்லாதவர். அடிமைகளின் இரத்தம் அவர்களிடம் கலபடவில்லை என்பதையிட்டு அவர்கள் பெருமை கொள்ளலாம். மூன்று நூற்றாண்டுகளாக எமது தாயக மண்ணை சீரழித்து, தொன்மைவாய்ந்த எமது தேவாலயங்களை இடித்தழித்து, வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த எமது இனத்தை பூண்டோடு அழிக்க முற்படும் காண்டுமிராண்டித் தமிழராலோ ஐரோப்பிய காடையராலோ என்றும் வெற்றிகொள்ள முடியாதவர்கள் என்பதையிட்டு சிங்கள மக்கள் பெருமைகொள்ளலாம். நாகரீகமற்ற காடையரால் சீரழிக்கப்படுமுன்னர், ஒளிமயமான இந்த அழகிய தீவு ஆரிய சிங்களவர்களால் ஒரு சுவர்க்க பூமியாக உருவாக்கப்பட்டிருந்தது."

பௌத்த மத மறுமலர்ச்சியிலிருந்து தோற்றம் கொண்ட சிங்களப் பேரினவாதமானது அரச நிர்வாகக் கட்டமைப்பிலும், பெருந்தோட்டப் பொருளாதாரத்திலும் தமிழர்கள் ஆதிக்கம் பெற்றிருப்பதை 'தேசிய அபிவிருத்திக்கு' ஏற்பட்ட அச்சுறுத்தலாகக் கருதியது. 1948ல் இலங்கை சுதந்திரமடைந்தபோது அரச அதிகாரம் சிங்கள ஆளும்வர்க்கத்திடம் கைமாறியதை அடுத்து அதுகாலவரை கருத்துநிலையில் நிலவிய தமிழர் விரோத காழ்ப்புணர்வு திண்ணியமான சமூக, அரசியல், பொருளாதார ஒடுக்குமுறையாக வடிவமெடுத்தது.

## தமிழருக்கு எதிரான அரச ஒடுக்குமுறை

சிங்களப் பெரும்பான்மையினரிடம் அரசியல் அதிகாரம் கைமாறியதை அடுத்து சிங்களப் பேரினவாதம் மேலாண்மை பெற்றது. இதனால் தமிழர்களுக்கு எதிரான அரச அடக்குமுறை குரூரமான வன்முறை வடிவம் எடுத்தது. இந்த அரச அடக்குமுறையானது அரை நூற்றாண்டு காலத்திற்கு மேலான நீண்ட வரலாற்றைக் கொண்டது. இலங்கை சுதந்திரமடைந்ததை அடுத்து மாறி மாறி ஆட்சி பீடம் ஏறிய சகல சிங்கள அரசுகளும் இந்த ஒடுக்குமுறைக் கொள்கையையே கடைப்பிடித்தன. இந்த ஒடுக்குமுறைக் கொள்கையில் தமிழின ஒழிப்புத் திட்டமும் அடங்கியுள்ளது. அதாவது, தமிழரின் தேசிய வாழ்விற்கு ஆதாரமான அத்தியாவசிய அடித்தளங்களை படிப்படியாகத் தகர்த்துவிடும் நாசகாரத் திட்டமாகவும் இந்த ஒடுக்குமுறை அமையப்பெற்றது. ஒன்றுபட்ட ஒரு தேசிய இனக் கட்டமைப்பாக தமிழ் மக்கள் தழைத்து நிற்பதற்கு என்னென்ன அவசியமோ அவற்றை எல்லாம் பல்வேறு மட்டங்களில் தாக்கியழிப்பதை இவ்வொடுக்குமுறை இலக்காகக் கொண்டது. எனவே, இந்த இனவழிப்பு அடக்குமுறை பல்முனைத் தாக்குதலாக வடிவெடுத்தது. தமிழரின் இருப்புக்கே ஆதாரமான மொழி உரிமை முதலில் பறித்தெடுக்கப்பட்டது. அதனையடுத்து கல்வி உரிமைக்கும், வேலைவாய்ப்பு உரிமைக்கும் ஆப்பு வைக்கப்பட்டது. அவர்களுடைய பாரம்பரிய நிலங்கள் மீதான சொத்துரிமையையும் இழக்கச்செய்தது. அவர்களது சமய, பண்பாட்டு வாழ்விற்கும் ஊறு விளைத்தது. இறுதியாக தமிழர்களது உயிர்வாழும் உரிமைக்கே பங்கம் ஏற்படுத்தும் வகையில் ஒடுக்குமுறையை ஏவிவிட்டது. தமிழ் மக்கள் ஓர் இனமாக ஒருங்கிணைந்து வாழ்வதற்கும், ஓர் இனமாகத் தம்மை அடையாளப்படுத்துவதற்கும் அவசியமான அடித்தளத்தையே அரச ஒடுக்குமுறை தாக்கியது. இத் தமிழின ஒழிப்புத் திட்டத்தின் முக்கிய அங்கமாக சிங்கள அரசால் திட்டமிட்டு செயல்படுத்தப்பட்ட இனக் கலவரங்கள் காலத்திற்குக் காலம் தலைதூக்கின. இதன் விளைவாகப் பெருந்தொகையான தமிழ் மக்கள் கொன்றொழிக்கப்பட்டார்கள். பெருந்தொகைத் தமிழ்ச் சொத்துக்கள் நிர்மூலமாக்கப்பட்டன. நாட்டுக்குச் சுதந்திரம் கிடைத்தவுடன் சிறீலங்கா நாடாளுமன்றம் பெரும்பான்மைக் கொடுங்கோன்மையின் கருவியாகியது. அங்கு இனவாதம்

அரசோச்சியது. சிறுபான்மை இனங்களுக்கு எதிரான அடக்குமுறைச் சட்டங்கள் அங்கு யாக்கப்பட்டன. கொடிய சிங்கள இனவாதத் தாக்குதலில் மலையகத் தோட்டத் தொழிலாளர்களே முதல் பலியாகி வீழ்ந்தார்கள். இந்தத் தீவின் சுபீட்சத்துக்காக ஒரு நூற்றாண்டுக்கு மேலாகப் பாடுபட்ட பத்து லட்சம் தமிழ் மக்களின் வாக்குரிமை பறிக்கப்பட்டது. இலங்கை அரசியல் வரலாற்றில் மிகவும் அநீதியாகக் கருதப்படும் குடியுரிமைச் சட்டம் அந்தக் கொடுமையைப் புரிந்தது. இதன் மூலம், மலையகத் தமிழ் மக்களது அடிப்படை மனித உரிமை பறிக்கப்பட்டது. நாடற்றோர் என்ற இழி நிலைக்கு இவர்கள் தரம் இறக்கப்பட்டார்கள். அரசியலில் பங்கெடுக்கும் உரிமை பறிக்கப்பட்ட நிலையில், பெருந்தொகைத் தமிழ்த் தொழிலாளர்களுக்கு அரச நாடாளுமன்றக் கதவுகள் மூடப்பட்டன. குடியுரிமைச் சட்டம் நிறைவேற்றப்படுமுன், பெருந்தோட்டத் தமிழ்த் தொழிலாளரைப் பிரதிநிதித்துவப்படுத்த ஏழு உறுப்பினர்கள் நாடாளுமன்றத்தில் இருந்தார்கள். அடுத்து வந்த பொதுத் தேர்தல் 1952இல் நடந்தபோது இந்தக் குடியுரிமைச் சட்டத்தின் விளைவாக ஒரு நாடாளுமன்ற உறுப்பினரைக்கூட இந்த மக்களால் தெரிவு செய்ய இயலவில்லை.

குடியுரிமைச் சட்டம் 1948இலும் இந்திய-பாக்கிஸ்தானிச் சட்டம் 1949இலும் நிறைவேற்றப்பட்டன. வழித்தோன்றல்களும் குறித்த காலம் வசித்தவர்களும் பெறக்கூடிய குடியுரிமை தொடர்பாக, மிகக் கடுமையான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. பத்து லட்சத்திற்கு கூடுதலானோரிடையேயிருந்து ஏறத்தாழ 130,000 மக்கள் மட்டுமே குடியுரிமை பெறத்தக்க வகையில் இந்தச் சட்டங்கள் கடுமையாக நடைமுறைப்படுத்தப்பட்டன. கேடுகெட்ட இச் சட்டங்களின் மொத்த விளைவுகள் மிகப் பாதகமானவையாக அமைந்தன. அவை இத் தொழிலாள மக்களின் வாழ்க்கை நிலைமைகளை மோசமாக்கின. நாடற்ற நிலைக்குத் தள்ளப்பட்ட ஏறத்தாழ பத்து லட்சம் மக்கள், உள்ளூராட்சித் தேர்தலிலோ, தேசியத் தேர்தலிலோ பங்கெடுக்க முடியவில்லை. அரசுத் துறைகளிலும் தனியார் துறையிலும் இவர்களுக்கு வேலைவாய்ப்பு மறுக்கப்பட்டது. நிலம் வாங்கும் உரிமை மறுக்கப்பட்டது. எவ்வகை வர்த்தகத்தில் ஈடுபடும் உரிமையும் மறுக்கப்பட்டது. இத்தகைய நாடற்ற நிலை இந்தத் தொழிலாளர் சமுதாயத்தை, அதுவும் நாட்டின் முதன்மையான

பாட்டாளி வர்க்கமாகத் திகழ்ந்த ஒரு சமுதாயத்தை, உரிமை பறிக்கப்பட்ட, மனிதம் சாகடிக்கப்பட்ட மக்களாக ஆக்கியது. இதனால் இம் மக்கள் இழிவுபடுத்தப்பட்டவர்களாக விரக்தியடைந்து, நம்பிக்கையிழந்து, தங்கள் பெருந்தோட்ட இருட்டறைக்குள் முடங்கிவாழ நிர்ப்பந்திக்கப்பட்டார்கள்.

தமிழ் மக்களின் இன அடையாளத்தை அழித்து ஒழிப்பதற்கு திட்டமிடப்பட்ட ஒடுக்குமுறையின் மிகக் கொடூர வடிவமாக, அரச உதவியோடு தீவிரமாக நடத்தப்பட்ட சிங்களக் குடியேற்றங்களைக் குறிப்பிடலாம். சுதந்திரம் வழங்கப்பட்டவுடன் தொடக்கப்பட்ட இந்த முயற்சி, தமிழ்ப் பிரதேசத்தில் ஏறத்தாழ மூவாயிரம் சதுர மைல் பரப்பை ஏற்கனவே விழுங்கிவிட்டது. நிலமற்ற பெருந்தொகைத் தமிழ் விவசாயிகள், தாம் பயிரிடுவதற்கென ஒரு துண்டு காணிக்காக ஏங்கி நிற்கும் அதே தமிழ்ப் பிரதேச நிலப் பகுதிகளில், அரசின் உதவியோடும் ஏவுதலோடும் ஆயிரமாயிரம் சிங்கள மக்கள் அடாத்தாகக் குடியமர்ந்தார்கள். தமிழ் மக்களை, அவர்களுடைய பாரம்பரிய நிலத்திலேயே சிறுபான்மையினராக்கி, சனத்தொகை விகிதாசாரத்தைச் சிதைப்பதாகவே இந்தக் குடியேற்ற முயற்சி அமைந்தது. மிக மோசமாகப் பாதிக்கப்பட்ட பகுதிகள் கிழக்கு மாநிலத்திலேயே உள்ளன. கல் ஓயா, மதுறு ஓயா என்ற நதிகள் தொடர்பான பாரிய திட்டங்கள், மட்டக்களப்பு மாவட்ட முஸ்லிம் மக்களின் பெருந்தொகைக் காணிகளைப் பிடுங்கிக் கொண்டன. அல்லை, கந்தளாய் சிங்களக் குடியேற்றத் திட்டங்களும் யன் ஓயா நதித் திட்டமும் திருகோணமலைப் பகுதியை விழுங்கின. தமிழ்ப் பாரம்பரிய நிலத்தை வல்வந்தமாகப் பறித்தெடுக்கும் இந்தத் தொடர்ச்சியான நடவடிக்கை, சிங்கள ஆளும் வர்க்கத்தினருடைய இனவெறிக் கொள்கையின் குரூரத் தன்மையை அம்பலப்படுத்துகிறது.

அரச ஒடுக்குமுறையானது, மொழி, கல்வி, வேலைவாய்ப்பு ஆகிய துறைகளுக்குள்ளும் ஊடுருவியது. பண்டாரநாயக்கா அவர்கள் தலைமை தாங்கிய "சிங்களம் மட்டும்" இயக்கம், 1956இல் அவரை அரசியல் அதிகாரத்துக்குக் கொண்டு வந்தது. நாடாளுமன்றத்தில் அவர் நிறைவேற்றிய முதல் சட்டம், தமிழ் மொழிக்கு இருந்த உத்தியோக தகைமையையும் சம அந்தஸ்து நிலையையும் முடிவுக்கு கொண்டுவந்து, நாட்டின் ஒரேயொரு உத்தியோக மொழியாகச் சிங்களத்தை நிலைப்படுத்தியது. அரச நிர்வாக சேவையில் பணிபுரிபவர்கள் சிங்களத்தில் தகைமை

பெற்றிருக்க வேண்டும் என்று "சிங்களம் மட்டும் சட்டம்" நிர்ப்பந்தித்தது. தமிழ் அரச ஊழியர்களுக்கு ஊதிய உயர்வும் பதவி உயர்வும் மறுக்கப்பட்டு, சிங்கள மொழி கற்காவிட்டால் பதவியிலிருந்து விலக வேண்டும் என்பது விதியாயிற்று. அரச சேவை வேலைவாய்ப்பு வசதிகளுக்கான கதவுகள், தமிழரைப் பொறுத்தவரையில் அடைத்து மூடப்பட்டன.

அரச ஒடுக்குமுறை மிக ஆழமாகத் தாக்கியது கல்வித்துறையையே ஆகும். இளம் தமிழ்ச் சமுதாயத்தில் பெரும்பாலானோருக்கு உயர் கல்வி, வேலை வாய்ப்பு ஆகியவற்றுக்கான கதவுகள் அடைக்கப்பட்டன. தனியாகப் பிரித்து ஒதுக்கும் கொடிய "தரப்படுத்தல்" முறை 1970இல் அறிமுகப்படுத்தப்பட்டது. பல்கலைக்கழக அனுமதியைப் பெறுவதற்குச் சிங்கள மாணவரை விடத் தமிழ் மாணவர் கூடுதலான புள்ளிகளைப் பெறவேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளாக்கப்பட்டனர். குறைவான தேர்வுத் தரங்களோடு சிங்கள மாணவர் எளிதாகப் பல்கலைக் கழகம் புகுந்தனர். இந்தப் பிரித்தொதுக்கும் முறை, பல்கலைக்கழகங்களுக்குச் செல்லும் தமிழ் மாணவர்களின் எண்ணிக்கையைப் பாரதூரமாகக் குறைத்தது. அவர்களுடைய உயர்கல்வி வாய்ப்புக்களையும் தடைப்படுத்தியது.

அரச ஒடுக்குமுறையின் இன்னொரு குரூரப் பரிமாணத்தைப் பொருளாதாரத் துறையில் காணலாம். தமிழ் மக்களின் பொருளாதார வளர்ச்சி குரல்வளையிலேயே நெரிக்கப்பட்டது. சுதந்திரத்தை உடனடுத்த காலங்களில் கட்டப்பட்ட அரசுக்குச் சொந்தமான சில தொழிற்சாலைகளைத் தவிர, ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளாக தேசிய அபிவிருத்தித் திட்டங்களில் தமிழ்ப் பகுதிகள் முற்றாகப் புறக்கணிக்கப்பட்டன. பாரிய அபிவிருத்தித் திட்டங்களோடு சிங்கள தேசம் செழித்துக் கொழிக்க, "வேண்டா நிலமாக" தமிழ்த் தேசம் நிராகரிக்கப்பட்டு, பொருளாதாரப் புறக்கணிப்பால் வரண்டு கிடந்தது.

நாட்டிலே அவ்வப்போது தமிழ் மக்களுக்கு எதிராக வெடித்த இனக் கலவரங்களை, இரண்டு இனங்களுக்கும் இடையே நிலவிய இனப் பகைமை உணர்வால் தாமாகக் கிளர்ந்த வன்செயல்களாகக் கருதக்கூடாது. தமிழ் மக்களுக்கு எதிரான வன்செயல் தாக்குதல்களில் மிகக் கொடிய வெறியாட்டங்கள் அனைத்துமே சிங்கள ஆட்சியாளர்களால் இன அழிப்பு இலக்கின் அங்கமாகத் திட்டம் தீட்டப்பட்டு ஏவப்பட்டவையாகும்.

இலங்கையிலே தமிழ் மக்களுக்கு எதிரான வன்முறைக் கலவரங்கள் 1956, 1958, 1961, 1974, 1979, 1981 ஆகிய ஆண்டுகளிலும் 1983 ஜுலையிலும் நடத்தப்பட்டன. இவ் இனவெறித் தாண்டவங்களில் பெண்கள், பிள்ளைகள் அடங்கலாக ஆயிரமாயிரம் தமிழ் மக்கள் இரக்கமின்றி, மிகக் குரூரமான முறையில் படுகொலை செய்யப்பட்டார்கள். அவர்களுடைய பல கோடி பெறுமதியான சொத்துக்கள் அழித்தொழிக்கப்பட்டன. ஆயிரமாயிரம் மக்கள் அகதிகள் ஆக்கப்பட்டார்கள். தீயிடல், பாலியல் வன்தாக்குதல், கும்பல் கும்பலாக மக்களைப் படுகொலை செய்தல் போன்ற வன்முறை அடாவடி வெறியாட்டங்களில் ஈடுபட்ட காடையருடனும் பாதகருடனும் அரச ஆயுதப் படையினரும் ஒன்றுசேர்ந்து கொடுமை புரிந்தனர்.

இந்தப் பல்பரிமாண அரச ஒடுக்குமுறையின் ஒட்டுமொத்தப் பாதிப்பு பாரதூரமான விளைவுகளை ஏற்படுத்தியது. இது தமிழ் மக்களின் உயிர்வாழ்விற்கே அச்சுறுத்தலாக அமைந்தது. இன முரண்பாட்டை மேலும் கூர்மைப்படுத்தியது. இரு தேசங்கள் மத்தியில் நல்லிணக்கமும், சமரச சகவாழ்வும் ஏற்படுவதை சாத்தியமற்றதாக ஆக்கியது. தமிழ் மக்களிடையே தீவிரப் போக்கையும் போராட்ட உணர்வையும் வலுப்படுத்தியது. தமிழரின் ஆயுதம் தரித்த எதிர்ப்பு இயக்கம் தோற்றம் கொள்வதெற்கான புறநிலையையும் உருவாக்கியது. ஒட்டுமொத்தத்தில் அரச ஒடுக்குமுறையானது பிரிந்து சென்று தனியரசு அமைக்கும் தமிழரின் சுயநிர்ணய உரிமைப் போராட்டத்திற்கு வழி சமைத்தது.

## தமிழ்த் தேசிய இயக்கமும் சமஷ்டிக் கட்சியும்

சிங்களப் பேரினவாத அரச ஒடுக்குமுறையின் வரலாற்றுப் பெறுபேறாக பிறப்பெடுத்த தமிழ்த் தேசியமானது ஒருபுறம் கருத்தியலாகவும் மறுபுறம் திண்ணியமான அரசியல் இயக்கமாகவும் இரு பரிமாணங்களைக் கொண்டதாக விளங்கிற்று. ஒடுக்கப்பட்ட தமிழ் மக்களின் ஒன்றுபட்ட கூட்டுணர்வாகவும் அவர்களது தேசிய விழிப்புணர்வின் எழுச்சிக் கோலமாகவும் பிரவாகமெடுத்த தமிழ்த் தேசியமானது தன்னகத்தே முற்போக்கான புரட்சிகரமான இயல்புகளையும்

கொண்டிருந்தது. ஒடுக்கப்பட்ட தமிழினமானது சுதந்திரம், தர்மம், கௌரவம் போன்ற ஆழமான அரசியல் அபிலாசைகளை வேண்டிநின்றதால் அது முற்போக்குத் தன்மைவாய்ந்தது எனலாம். தமிழ்த் தேசியமானது தமிழ் மக்களது சகல வகுப்பாரையும் ஒன்று திரளச்செய்து, தேச விடுதலை என்ற ஒரே இலட்சியத்தில் ஒருமுகப்படுத்தியதால் அது புரட்சிகரத் தன்மைவாய்ந்தது எனக் கருதலாம்.

தமிழர்களின் அரசியல் வரலாற்றுப் படிமுறை வளர்ச்சியின் ஆரம்ப கட்டத்தில், தமிழ்த் தேசிய உணர்வானது சமஷ்டிக் கட்சி வாயிலாகவே நிறுவன வடிவம் எடுத்தது (சமஷ்டிக் கட்சியானது தமிழில் இலங்கைத் தமிழரசுக் கட்சி என்று அழைக்கப்பட்டது. காலம் சென்ற எஸ்.ஜே.வீ செல்வநாயகம் 1949, டிசெம்பரில் அதை நிறுவினார்). பொதுத் தேர்தல் 1956இல் நடைபெற்றபோது, தமிழ்த் தேர்தல் தொகுதிகளில் சமஷ்டிக் கட்சி பெருவெற்றி பெற்றது. தமிழ்த் தேசிய இயக்கத்தை முன்னெடுத்துச் செல்ல வல்ல, பலம் மிக்க அரசியல் சக்தியாகவும் அது முகிழ்த்தது. தமிழினத்தின் அபிலாஷையைப் பிரதிபலிக்கும் தேசிய இயக்கமாக வடிவெடுத்த இக் கட்சி, முற்போக்குப் பண்புகளையும் மக்களாட்சிப் பண்புகளையும் தன்னகத்தே கொண்டிருந்தது. அத்துடன், வெவ்வேறு வர்க்கங்களையும் சாதிகளையும் ஒரு மாபெரும் மக்கள் சக்தியாக ஒன்றிணைத்து, வழிநடத்தக் கூடியதாகவும் அது வடிவெடுத்தது.

இடதுசாரி இயக்கம் தமிழ் மக்களிடையே ஒரு பலமான அடித்தளத்தை அமைக்கத் தவறிவிட்டது. தேசிய ஒடுக்குமுறையின் குரூர நிலைமைகளைப் புரிந்துகொண்டு, அவற்றைத் தங்கள் அடிநாதமாகக் கொள்ள வேண்டுமென்பதை உணர்ந்து கொள்ளும் அரசியல் தூரநோக்கு அவர்களிடம் இல்லாது போனதே அதன் தோல்விக்குக் காரணம் எனலாம். ஒடுக்கப்பட்ட ஓர் இனத்தின் தேசியப் போராட்டத்துக்கு மேலானதாக வர்க்கப் போராட்டத்திற்கு அவர்கள் முன்னுரிமை கொடுத்தார்கள். தமிழ் மக்களின் தேசப்பற்றுணர்வை தவறாக எடைபோட்டு, அதை வெறும் இனவாதத் தேசியத்தின் பிற்போக்கு வடிவமாக முலாம் பூசினார்கள். அந்தப் போராட்டத்தின் உட்கிடையாக அமைந்த முற்போக்குப் பண்புகளையும் புரட்சிகரத் தன்மையையும் அவர்களால் இனம் காண முடியவில்லை. இரண்டு இனங்களிடையே முக்கிய

முரண்பாடாகத் தேசிய ஒடுக்குமுறை நிலவும்போது, தொழிலாள வர்க்க ஒன்றுபடுதல் நடைமுறையில் சாத்தியமற்றது என்ற அரசியல் உண்மையை உணராது அனைத்துலக தொழிலாள வர்க்க ஒருமைப்பாடு பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். ஒடுக்கப்பட்ட ஓர் இனத்தின் தேசியப் போராட்டத்தின் புரட்சிகர உட்கிடைகளை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. இதற்கு மாறாக, சமஷ்டிக் கட்சி மக்களின் பேராதரவைப் பெற்று வெற்றி கண்டதற்குக் காரணம், தமிழ் இனத்தின் மீது சிங்கள அரசு தொடுத்த ஒடுக்குமுறைத் தாக்குதலின் உக்கிரத்தை அந்தக் கட்சி உணர்ந்து கொண்டதேயாகும். பன்முக ஒடுக்குமுறையின் வேகத்தில், தமிழ்த் தேசியத்தின் வடிவமும் அடையாளமும் பாதிக்கப்பட்டுவிடும் என்பதை அந்தத் தலைமை புரிந்து கொண்டது. இந்த ஆபத்தின் அச்சுறுத்தலை அவர்கள் மக்களிடம் தெரிவித்தார்கள். பல்வேறு மட்டங்களில் உள்ள தமிழ் மக்களின் தேசிய உணர்வைத் தட்டி எழுப்பினார்கள். தனித் தனி உதிரிகளாக வேறுபட்டு முரண்பட்டு நின்ற வர்க்கத்தினரையும் சாதியினரையும் அணிதிரட்டி, தொடர்ச்சியான வெகுசனப் போராட்டத்தில் களமிறங்கிய சமஷ்டிக் கட்சி ஒரு வலுவான தேசிய இயக்கமாக வடிவெடுத்தது.

இனவாத 'சிங்களம் மட்டும்' சட்டத்தை நடைமுறைப்படுத்த பண்டாரநாயக்கா அரசாங்கம் தீர்மானித்தபோது, சமஷ்டிக் கட்சிக்கு இந்த நடவடிக்கை ஒரு முக்கிய சவாலாக அமைந்தது. பொது மக்களைக் கவரக்கூடிய சத்தியாக்கிரகம் என்ற எதிர்ப்பு நடவடிக்கையை அது கைக்கொண்டது (வன்செயலற்ற, அமைதியான, அற வயப்பட்ட காந்திய வழி நிற்பதுமான குந்து மறியல் போராட்டங்களில் அது ஈடுபட்டது). சிங்களம் மட்டும் சட்டத்தை விவாதிப்பதற்காக 1956 ஜுன் 5 காலை நாடாளுமன்றம் கூடியபோது, சமஷ்டிக் கட்சியின் நாடாளுமன்ற உறுப்பினர்களும், கட்சி உறுப்பினர்களும், ஆதரவாளர்களும் கொழும்பு நாடாளுமன்றத்துக்கு எதிரே, காலி முகத்திடலில் நூற்றுக்கணக்கில் கூடி, சத்தியாக்கிரகம் புரிந்தார்கள். ஒரு சில மணிநேரத்தில், அங்கு குழுமிய சிங்களக் காடையர், அமைதிப் போராட்டத்தில் ஈடுபட்டவர்களைக் கல்லால் அடித்தார்கள். நேரடியாகத் தாக்கினார்கள். நிலைமை மோசமாகி, ஆபத்துக் கட்டத்தை எட்டியதும் சமஷ்டிக் கட்சித் தலைவர்கள் தங்களது மறுப்புப் போராட்டத்தைக் கைவிட்டார்கள். சத்தியாக்கிரகிகளைத் துன்புறுத்தித் தாக்கிய கலகக்காரர், இரத்த வெறி கொண்ட

வன்முறையில் இறங்கி, தலைநகரான கொழும்பில் தமிழ் மக்களைத் தாக்கி, அவர்களது சொத்துக்களைச் சூறையாடினார்கள். கலகம் நாட்டின் வேறு பாகங்களுக்குப் பரவ, கொலை, கொள்ளை, தீ வைப்பு, பாலியல் வன்தாக்குதல் ஆகிய வன்செயல்கள் பெருகின. அம்பாறையில் நூற்றுக்கும் அதிகமான தமிழர் படுகொலை செய்யப்பட்டார்கள். இனக் கலவரம் பரவுவதையும், தமிழ் மக்கள் எதிர்ப்புத் தெரிவிப்பதையும் பொருட்படுத்தாது சிங்களம் மட்டும் சட்டம் நிறைவேற்றப்பட்டது. தமிழ்மொழி தனது உத்தியோகத் தகைமையை பறிகொடுத்தது.

சிங்களம் மட்டும் சட்டம் நடைமுறைப் படுத்தப்பட்டதை அடுத்து, சமஷ்டிக் கட்சி, தமிழ் இனம் தன்னாட்சியுடன் இயங்கக் கூடிய சமஷ்டி ஆட்சி வடிவம் கோரி, வெகுசனப் போராட்டங்களைப் பரவலாக ஏற்பாடு செய்தது. பொதுத் தேர்தல் 1956இல் நடந்தபோது, அதில் சமஷ்டிக் கட்சிக்கு ஏகோபித்த வெற்றி கிடைத்தது. தமிழ் மக்களின் தன்னாட்சி சமஷ்டி வடிவத்துக்கான தெளிவான வாக்களிப்பாக அது காணப்பட்டது. தனது கோரிக்கைகளைச் சாதிக்கும் நோக்கத்தோடு சமஷ்டிக் கட்சி தனது சத்தியாக்கிரகப் போராட்டத்தைத் தீவிரப்படுத்தத் தீர்மானித்தது. தமிழினத்தின் அரசியல் தன்னாட்சிக்கான கோரிக்கையும், தமிழ்த் தேசிய எழுச்சி உணர்வலையும் சிங்கள ஆட்சி பீடத்தை அதிர்ச்சிக்கு உள்ளாக்கின. வேகம் பெறும் வெகுசனப் போராட்டத்திற்கு அரண் கட்ட வேண்டும் என்ற தவிப்போடு தமிழருக்குச் சலுகைகளை வழங்க பண்டாரநாயக்கா இணங்கினார். அவருக்கும் சமஷ்டிக் கட்சித் தலைவர் எஸ்.ஜே.வீ செல்வநாயகம் அவர்களுக்கும் இடையே உடன்படிக்கை ஒன்று கைச்சாத்தாகியது. பிரதேச மன்றங்கள் ஊடாக ஓரளவு தன்னாட்சி அதிகாரம் வழங்கப்பட்டது. தமிழ்ப் பகுதிகளில் சிங்களக் குடியேற்றங்களை நிறுத்தவும் உறுதி அளிக்கப்பட்டது. உடன்படிக்கை, சிங்கள இனவாத சக்திகள் மத்தியில் சந்தேகத்துக்கும் எதிர்ப்புக்கும் தூபமிட்டது. இந்த நிலைமையைத் தமக்கு வாய்ப்பாக அந்தத் தருணத்தில் பயன்படுத்தியவர் ஜே.ஆர். ஜெயவர்த்தனா ஆவார். உடன்படிக்கை கைவிடப்பட வேண்டும் என்ற எதிர்ப்புக் கோரிக்கையை முன்வைத்து, பௌத்த பிக்குகளின் ஆதரவுடன் கண்டியை நோக்கிக் கால்நடை ஊர்வலம் ஒன்றுக்கு அவர் ஏற்பாடு செய்தார். இதனால் தூண்டப்பெற்ற சிங்களப் பேரினவாத அலை, அரச அமைச்சரவை உறுப்பினர் சிலருக்கும் உருவேற்ற,

அவர்களும் உடன்படிக்கைக்கு எதிரான ஊர்வலம் ஒன்றை ஏற்பாடு செய்தார்கள். இவர்கள் தலைமையில் பெருந்திரளான பிக்குகளும் அவர்களுடைய இனவெறி ஆதரவாளர்களும் பண்டாரநாயக்காவின் உத்தியோக இல்லத்தை நோக்கி ஒப்பந்தப் பிரதி தாங்கிய சவப்பெட்டி ஊர்வலம் ஒன்றை நடத்தினார்கள். தலைமை அமைச்சரது இல்லத்தின் முன் தேங்கிய இந்த ஊர்வலம் சவப்பெட்டித் தகனத்தை உணர்ச்சி ஆரவாரத்துடன் நிறைவேற்றியது. இந்த இனவாதப் பித்தலாட்டத்திற்கு அடிபணிந்த பண்டாரநாயக்கா, ஆர்ப்பாட்டக்காரர் முன்பாகவே ஒப்பந்தத்தைக் கைவிடுவதாக பகிரங்கப் பிரகடனம் செய்தார்.

சிங்கள அரசியல் தலைமைபுரிந்த இந்த மாபெரும் நம்பிக்கைத் துரோகமானது இன ஒருமைப்பாட்டிற்கான நம்பிக்கைகள் அனைத்தையும் தகர்த்தெறிந்ததுடன் இரு தேசங்கள் மத்தியிலான உறவிலும் பகைமையைத் தீவிரப்படுத்தியது. இந்த பகைமை உணர்வு படிப்படியாகக் கூர்மையடைந்து 1958இல் தமிழர்களுக்கு எதிரான இனத்துவேசக் கலவரமாக வெடித்தது. சிங்கள தேசம் பூராகவும் தலைவிரித்தாடிய இனக் கலவரக் கொடூரம் இலங்கை வரலாற்றின் பக்கங்களை இரத்தத்தால் கறைபடுத்தியது. அப்பாவிகளான தமிழ் மக்களுக்கு எதிராகக் கட்டவிழ்த்து விடப்பட்ட கொடுமையும் குரூரமும் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாதவை. பல நூற்றுக்கணக்கானோர் கண்டதுண்டமாக வெட்டிக் கொல்லப்பட்டார்கள். கர்ப்பிணித் தாய்மார் பாலியல் வன்தாக்குதலுக்கு உள்ளாக்கப்பட்டு படுகொலை செய்யப்பட்டார்கள். தமிழ்ப் பாலர்கள் வெட்டிக் கொல்லப்பட்டார்கள். பாணந்துறையில் இந்துக் குருக்கள் ஒருவர் உயிரோடு எரிக்கப்பட்டார். மகா ஓயா என்ற ஊரிலே, கிணறு ஒன்றில் இருந்து காயம் பட்ட வடுக்களோடு சடலங்கள் பல மீட்கப்பட்டன. களுத்துறையில், கிணற்றுக்குள் இறங்கிப் பதுங்க முயன்ற ஒரு தமிழ்க் குடும்பம் மீது இனவெறிக் காடையர்கள் பெற்றோல் ஊற்றி உயிருக்காகக் கெஞ்சிய அவர்கள் மீது நெருப்பு வைத்தார்கள். தீச் சுவாலைகளால் உயிரோடு பொசுங்கி அவர்கள் துடி துடித்துக் கதறி ஓலமிட்டபோது, இனவெறிக் காடையர் கெக்கொலி கொட்டி, நடனமாடி மகிழ்ந்தார்கள். ஆயிரமாயிரம் பேர் தங்கள் வீடு வாசல்களை இழந்தார்கள். பல கோடி பெறுமதி வாய்ந்த தமிழ்ச் சொத்துக்கள் ஒன்றில்

சூறையாடப்பட்டன அல்லது தீயிட்டுச் சாம்பலாக்கப்பட்டன. பயங்கர இனவெறி நாடு பூராவும் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருக்கும்போது, இந்தப் பயங்கர வெறியாட்டத்தை பண்டாரநாயக்கா வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். தமிழ் மக்கள், 'பட்டுப் பழகட்டும்' என்று தாம் விட்டுக் கொண்டிருந்ததாக, அவரை மேற்கோள்காட்டி பின்னர் எடுத்தாளப்பட்டது. வேண்டுமென்றே இருபத்து நான்கு மணிநேரம் தாமதித்த பின்னர், அவசரகால நிலைமை பிரகடனப்படுத்தப்பட்டது. நிலைமை கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரப்பட்டபோது, பத்தாயிரம் தமிழ் மக்கள் அகதிகள் என்ற நிலைக்கு ஆளானார்கள். இவர்களில் பலர், அரச ஊழியர். பலர் உயர்தொழில் வல்லுநர். மேலும் பலர், கொழும்பு வர்த்தகர்கள். பாதுகாப்புக் கருதி இவர்கள் வடக்குக்கும் கிழக்குக்கும் கப்பலில் ஏற்றி அனுப்பப்பட்டார்கள்.

## சத்தியாக்கிரகப் போராட்டம்

1958ல் நிகழ்ந்த இனக் கலவர வெறியாட்டம் தமிழ் சிங்கள தேசிய இனங்கள் மத்தியிலான உறவில் ஆழமான பிளவை ஏற்படுத்தியது. தமிழ்த் தேசிய உணர்வு எழுச்சிப் பிரவாகம் எடுத்தது. தமிழ் அரசியல் களத்தில் மாபெரும் வெகுசனப் போராட்டங்களாக அது வடிவெடுத்தது. வடக்கு கிழக்கு மாகாணங்களிலுள்ள அரசாங்கச் செயலகங்கள் முன்பாக சத்தியாக்கிரகப் போராட்டங்களை நிகழ்த்தி நேரடி நடவடிக்கையில் குதிக்க 1961 முற்பகுதியில் சமஷ்டிக் கட்சி தீர்மானித்தது. தமிழரின் தாயக மண்ணில் அரச நிர்வாகத்தை நிலைகுலையச் செய்து, ஆட்சியைச் சீர்குலைத்துத் தமிழ் மக்களின் சமஷ்டித் தன்னாட்சிக்கான கோரிக்கையை அரசு ஏற்கும்படி செய்வதே இவ்வெகுசனப் போராட்டத்தின் குறிக்கோளாக இருந்தது.

1961ஆம் ஆண்டு நடைபெற்ற சத்தியாக்கிரகப் போராட்டமானது தமிழரின் தேசியப் போராட்ட வரலாற்றில் ஒரு மகத்தான நிகழ்வு என்றே கூறவேண்டும். மாபெரும் வெகுசனப் பொங்குணர்வாகவும், அரச ஒடுக்குமுறைக் கொள்கைக்கு எதிரான தேசியப் பேரெழுச்சியாகவும் இப் போராட்டம் அமையப்பெற்றது. 1961 பெப்ரவரி 20 ஆரம்பித்து வைக்கப்பட்ட

ஒத்துழையாமை இயக்கம் ஏறத்தாழ மூன்று மாத காலம் வரை நீடித்தது. அடக்குமுறை அரசுக்கு எதிராக தமது ஆத்திரத்தை வெளிக்காட்டும் வகையில் பல்லாயிரம் தமிழ் மக்கள் வீதிகளில் இறங்கி ஆர்ப்பாட்டங்களில் பங்குகொண்டனர். வடக்கு கிழக்கு மாநிலத்தில் இயங்கிய அரச நிர்வாக இயந்திரம் இரண்டு வாரங்களுக்குச் செயலிழந்து முடங்கியது. தமிழர் தாயகத்தின் சகல பகுதிகளிலும் மத்திய அரசின் ஆணை ஆற்றலிழந்தது. வரலாறு கண்டிராத இம் மகத்தான போராட்ட நிகழ்வு தமிழ் மக்களிடையே மிக வேகமாக வளர்ந்து வரும் தேசிய ஒருமைப்பாட்டை வெளிப்படுத்தியது. தமிழ் மக்கள் தமது அரசியல் உரிமைகளை வென்றெடுப்பதற்கு ஒன்றிணைந்து போராட உறுதிபூண்டுள்ளார்கள் என்பதற்கும் இது கட்டியம் கூறியது.

யாழ்ப்பாணத்தில் உள்ள அரசாங்கப் பிரதான நிர்வாகப் பணிமனையின் முன், பெருந்திரளான மக்களின் குந்து மறியல் போராட்டம் முதலில் தொடங்கியது. விரைவில் வவுனியா, முல்லைத்தீவு, மன்னார், திருகோணமலை, மட்டக்களப்பு ஆகிய களங்களுக்கும் வேறு நகரங்களுக்கும் போராட்டம் வேகமாகப் பரவியது. தமிழ் பேசும் மக்களில் அனைத்துப் பிரிவினரும், சாதி சமய வேறுபாடின்றி இந்த அமைதிப் பொதுப் போராட்டத்தில் உற்சாகத்தோடு கலந்து கொண்டார்கள். மலையகத் தோட்டத் தொழிலாளரும், ஆயிரமாயிரம் பேர் தங்கள் உரிமைப் போராட்ட ஒற்றுமை உணர்வை வெளிப்படுத்த வடக்கிலும் கிழக்கிலும் ஒன்று கூடினார்கள். இந்த மாபெரும் தேசிய எழுச்சி ஊட்டிய உற்சாகத்தில் 1961 ஏப்ரல் 14இல், அஞ்சல் சேவை ஒன்றை சமஷ்டிக் கட்சி தொடக்கியது. தமிழ்த் தேசிய அஞ்சல் தலைகள் ஆயிரமாயிரம் வெளியிடப்பட்டன. அரச அதிகாரத்தை மீறுவதாக இந்தச் செயல் அமைந்தது.

தமிழ்த் தேசிய வளர்ச்சியின் வேக அலையும் சட்ட மறுப்புப் போராட்டமும் அரசை ஆட்டம் காணச் செய்தது. அரசின் ஒடுக்குமுறை யந்திரம் துரிதமாக முடுக்கிவிடப்பட்டது. அடக்குமுறை நடவடிக்கையில் இராணும் ஈடுபடுத்தப்பட்டது. அவசர கால அதிகாரங்களுக்கு அமைவான 'சிறப்புப் பணிப்புரைகளோடு' பெரும் படையணிகளாக ஆயுதப் படைகள் தமிழ்ப் பகுதிகளுக்கு அனுப்பி வைக்கப்பட்டன. யாழ்ப்பாணச் சத்தியாக்கிரகிகள் மீது 1961 ஏப்ரல் 18 வைகறைப் பொழுதில் அரச படையினர் திடீரெனப் பாய்ந்தனர். துப்பாக்கி முனையாலும்

குண்டாந் தடியாலும் குரூரமாகத் தாக்கினர். மண்டைகள் உடைந்தன. அவயங்கள் முறிந்தன. சாத்வீகப் போராளிகள் மீது கட்டவிழ்த்து விடப்பட்ட அரச இராணுவக் காடைத்தனத்தின் விளைவாக நூற்றுக்கணக்கானோருக்குக் கடுங்காயம் ஏற்பட்டது. அவசர காலச்சட்டம், ஊரடங்கு என்ற போர்வையில் தமிழர் தாயகம் முழுவதிலும் இராணுவ பயங்கரவாதம் ஏவப்பட்டது. கடுமையான வன்முறையால் அமைதிப் போராட்டம் அடக்கப்பட்டது. தமிழ்த் தலைவர்கள் கைது செய்யப்பட்டார்கள். சமஷ்டிக் கட்சிப் பணிமனைகள் அடித்து நொருக்கப்பட்டன. அரசின் பார்வையில் 'நிலைமை கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரப்பட்டது'. இவ்வாறு ஒடுக்குமுறையாளரின் வன்முறை ஒடுக்கப்பட்டவரின் சாத்வீகத்தை அடக்கி ஒடுக்கியது. சிங்களப் பேரினவாதத்தின் ஆயுத பலம் நீதி வேண்டிய தமிழ் மக்களின் 'அகிம்சையை' நொருக்கியது. இந்த வரலாற்று நிகழ்வு தமிழ்த் தேசியப் போராட்டத்தின் அரசியல் அனுபவத்துக்கு ஒரு தோற்றுவாயாகப் படிந்தது. மனிதநேயப் பண்புகளினதும் நாகரிக நடைமுறைகளினதும் ஒழுக்க சீலங்கள் அனைத்தையும் நிராகரித்து, இனக் காழ்ப்புணர்வில் ஊறிப் போயிருக்கும் கொடிய ஒடுக்குமுறையாளரின் இராணுவ அதிகாரத்தின் முன்னே, தமிழ் மக்கள் வெறுமே சாத்வீக அணுகுமுறையின் தார்மீக பலத்தோடு எதிர்த்து நிற்க முடியாது என்ற பாடத்தைக் கற்பித்தது. ஒடுக்குமுறையாளரைப் பொறுத்த வரையிலே இந்த நிகழ்வு அவர்களுக்கு நம்பிக்கையை ஊட்டியது. தமிழரின் அரசியல் போராட்டத்துக்கு இராணுவ பயங்கரவாதமே ஒற்றைப் பதிலாகும் என்று அவர்கள் கருதினார்கள். துப்பாக்கி முனையின் முன்னே, தமிழ் மக்களுடைய அரசியல் போராட்டத்தின் சாத்வீக அடித்தளம் பலமற்றது என்று ஆட்சியாளர்கள் முடிவு செய்தார்கள்.

ஐக்கிய தேசியக் கட்சி (ஐ.தே.க) 1965இல் ஆட்சிக்கு வந்தது. பெயரளவில் 'தேசிய அரசு' என்று பெயர் சூட்டப்பட்ட இந்த அரசுடன் கூட்டுச்சேர சமஷ்டிக் கட்சி தீர்மானித்தது. சில சலுகைகளைத் தமிழ் மக்களுக்காகப் பெற்று எடுக்க முடியும் என்று அது எதிர்பார்த்தது. தமிழ் மக்களின் பிரச்சினைக்கு பேச்சுவார்த்தை மூலம் இணக்கம் காண இந்தக் கூட்டுச் சேரல் வழிகோலும் என்று தமிழ்த் தலைமை வீணாக நம்பியது. தமிழ்த் தேசியவாதிகளைக் குளிர்மைப்படுத்தற் பொருட்டு சமஷ்டிக் கட்சயின் மூத்த உறுப்பினர் ஒருவரை அமைச்சரவையில்

கபடத்தனமாக நியமித்த ஐ.தே.க, அடுத்த ஆண்டில் குறித்த சில அரச அலுவல்களில் தமிழ் மொழியைப் பயன்படுத்தும் சில ஒழுங்குப் பிரமாணங்களை நிறைவேற்றியது. மாவட்ட மன்றங்களை நிறுவும் ஏற்பாடுகள் தொடர்பாக சமஷ்டிக் கட்சித் தலைவர் எஸ்.ஜே.வீ செல்வநாயகம் அவர்களுக்கும் ஐ.தே.க. தலைவர் டட்லி சேனநாயக்க அவர்களுக்கும் இடையே ஓர் இரகசிய ஒப்பந்தமும் செய்யப்பட்டது.

தமிழ்மொழி அமுலாக்கத்திற்கான ஒழுங்குப் பிரமாணங்களோ, பிரதேச மன்றங்களுக்கான அரசியலதிகாரப் பரவலாக்கமோ நிறைவுசெய்யப்படவில்லை. பேச்சுவார்த்தை மூலம் இணக்கப்பாடு காணும் வழிமுறைக்கு சிங்கள அரசியல் தலைவர்களின் இனவெறிப் போக்குடைய அரசியல் அணுகுமுறை இடமளிக்கவில்லை. சிங்கள தேசத்தின் இனவாத அரசியல் அணுகுமுறையில் மாறி மாறி நிகழும் ஒரு வரலாற்றுப் பாங்காக, மாற்றமுடியாத ஒரு நடைமுறையாக ஒரு உண்மையைக் கண்டுகொள்ளலாம். அதாவது, ஆட்சிபீடம் ஏறும் கட்சி, தமிழர் பிரச்சினைக்கு பேச்சுவார்த்தை மூலம் தீர்வுகாண முற்படும்பொழுது, எதிர்க்கட்சியாக விளங்கும் கட்சி அம்முயற்சியை முறியடிக்கும் வகையில் தமிழ் விரோத உணர்வைத் தூண்டிவிடும். இதன்படி, சிங்கள தேசப்பற்றாளர்களாக தம்மை இனம்காட்டி, எதிராளிக் கட்சிக்காரரைக் காட்டிலும் தாம் கெட்டிக்காரர் என உயர்த்திக் காட்டி அரசியல் லாபம் தேடும் ஒரு கீழ்த்தரமான அரசியல் நடைமுறையை சிங்கள அரசியல் கட்சிகள் மாறி மாறி கடைப்பிடிப்பது ஒரு வரலாற்று நியதியாகிவிட்டது. இத்தகைய அரசியல் பம்மாத்தில் சிக்குண்ட ஐக்கிய தேசியக் கட்சி எதிர்க்கட்சியின் அழுத்தங்களுக்கு வளைந்துகொடுத்து உடன்படிக்கையைக் கைவிட்டது. ஒத்துழைத்து உரிமை பெறலாம் என்ற சமஷ்டிக் கட்சியின் முயற்சி மீண்டும் ஏமாற்றுப் படலத்தைச் சந்தித்தது. தலைகுனிவோடு சமஷ்டிக் கட்சி, அரசுக்கு வழங்கிய ஆதரவை 1968இல் நிறுத்திக்கொண்டது.

## ஜே.வி.பியினரின் ஆயுதக் கிளர்ச்சி

இலங்கை அரசியல் வரலாற்றிலேயே பாரதூரமான விளைவுகளை ஏற்படுத்திய முக்கிய நிகழ்வுகள் 1970-77 க்கும்

இடைப்பட்ட காலத்தில் அரங்கேறின எனலாம். 'சனநாயக சோசலிசம்' என்ற சுலோகத்துடன் இடதுசாரி அரசியல்வாதிகளைக் கொண்ட கூட்டணி அரசு இந்த வரலாற்றுக் காலகட்டத்தில் ஆட்சிபீடம் ஏறி, நாடு முழுவதற்கும் பேரிடரையும் சீர்குலைவையும் கொண்டு வந்தது. இந்தக் காலகட்டத்திலேயே தெற்கில் புரட்சிவாத இளைஞரின் ஆயுதக் கிளர்ச்சியும் வடக்கில் தீவிரமடைந்த அரசியல் வன்முறையும் தலைதூக்கின. அடக்குமுறை அரசுக்கு எதிரான இளைஞர் சமூகத்தின் விரக்தியினதும் ஆவேசத்தினதும் வெளிப்பாடாகவே இவ் வன்முறைச் செயற்பாடுகள் நிகழ்ந்தன. இக் காலகட்டத்திலேயே தமிழ் சிங்கள இனங்கள் மத்தியிலான தேசிய முரண்பாடு கூர்மையடைந்தது. சிங்கள-பௌத்த மேலாண்மைக்கு சட்ட அதிகாரம் வழங்கிய புதிய குடியரசுக்கான அரசியல் யாப்பு நடைமுறைக்கு வந்ததையடுத்தே தமிழ்-சிங்கள தேசிய முரண்பாடு முற்றியது. இந்த வரலாற்றுக் கால கட்டத்திலேயே விடுதலைப் புலிகள் இயக்கம் பிறப்பெடுத்து, தமிழரின் ஆயுதம் தரித்த எதிர்ப்புப் போராட்டம் வலுப்பெற்றது. இக்கால கட்டத்திலேயே தமிழரின் தேசிய இயக்கமானது சுயநிர்ணய உரிமையைப் பிரகடனம் செய்து அரசியல் சுதந்திரத்திற்கான புரட்சிப் பாதையில் செல்வதற்கு முடிவெடுத்தது.

சிறீலங்கா சுதந்திரக் கட்சி, லங்கா சம சமாஜக் கட்சி, இலங்கை கொம்யூனிஸ்ட் கட்சி ஆகிய கட்சிகள் இணைந்து உருவான அரசியல் கூட்டு 1971இல் "மக்கள் முன்னணி அரசு" என்ற பெயரில் ஆட்சிக்கு வந்தது. புதிய அரசு ஆட்சிக்கு வந்த மறுகணமே சிங்கள இளைஞரின் ஆயுதக் கிளர்ச்சிக்கு அது முகம்கொடுக்க நேர்ந்தது. நன்கு திட்டமிடப்படாது, அசட்டுத் துணிச்சலுடன் நடத்தப்பட்ட இந்த முயற்சி அரசிடமிருந்து ஆட்சியைப் பலவந்தமாக பறித்து எடுப்பதையே நோக்கமாகக் கொண்டிருந்தது. புதிதாக உருவாக்கப்பட்ட ஜனதா விமுக்தி பெரமுன (ஜே.வி.பி) என்ற மாக்சிய தீவிரவாத அமைப்பே, தெற்கில் கிளர்ச்சியைத் தொடக்கியது. இந்தக் கிளர்ச்சியை ஜே.வி.பி செவ்வையாகத் திட்டமிடவில்லை. அதனிடம் ஒரு ஆணைப்பீடத் தலைமையோ, நெறிப்படுத்தும் நிர்வாகமோ, தெளிவான கொள்கையோ, தந்திரோபாயமோ இருக்கவில்லை. புரட்சியின் தலைமை வெகுவாகச் சீர்குலைந்திருந்தது. ஆயுதப் புரட்சிப் போராட்டத்தை ஜே.வி.பி புரிந்து கொள்ளவில்லை. அது

தொடர்பான நடைமுறைப் பட்டறிவுகூட அதனிடம் இருக்கவில்லை. ஆயுதப் போராட்டத்தைப் பொறுத்த வரையில், ஜே.வி.பி தலைவர் றோகண விஜயவீரா புரட்சிப் போரில் தேர்ச்சி பெற்றவரல்ல. ஆனாலும் ரஷ்ய ஒக்ரோபர் புரட்சி, மாவோ சே துங்கின் இராணுவச் சிந்தனைகள், சே குவேராவின் கெரில்லாப் போர் முறைக் குறிப்புகள் ஆகிய 'புத்தகப் படிப்பால்' பெற்ற அரைகுறை அறிவோடு பெரிதொரு புரட்சிக்கு அடிகோலும் பேரவா அவரிடம் இருந்தது. ஒரு புரட்சிச் சூழலுக்கான இலக்கையோ நடைமுறைச் சாத்தியக் கூறுகளையோ கருத்துக்கு எடுக்காது, வேலை வாய்ப்பு இழந்து விரக்தியடைந்த இளைஞர் சமுதாயத்தையும் காணி நிலம் இல்லாத விவசாயிகளின் ஒரு பிரிவினரையும் இந்த இயக்கம் ஒன்று திரட்டி கிளர்ச்சி செய்யத் தூண்டியது. இந்த ஆயுதக் கிளர்ச்சி 1971 ஏப்ரல் 5இல் திடீரென ஆரம்பமாகி உள்ளூர்க் காவல் நிலையங்கள் மீது தாக்குதல் தொடுக்கப்பட்டது. சில நாட்களுக்குள் தொண்ணூற்று மூன்று காவல்நிலையங்களை ஜே.வி.பியினர் தாக்கி அழித்தனர். தெற்கிலுள்ள பல நிர்வாக மாவட்டங்களும் இவர்கள் வசமாகின. இந்தத் திடீர் ஆயுத எழுச்சி அரசைத் திகைக்க வைத்தாலும் அரசு தன்னைச் சுதாரித்துக் கொண்டு துரிதமான கிளர்ச்சி முறியடிப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டது. அவசர காலநிலையும் ஊரடங்குகளும் பிறப்பிக்கப்பட்டன. வெளிநாட்டு இராணுவ உதவிகோரி, அரசு வேண்டுகோள் விடுத்தது. இந்தியா, பாகிஸ்தான், சீனா, பிரித்தானியா ஆகிய நாடுகள் இராணுவ தளவாடங்களுடன் உதவிக்கு விரைந்தன. தலைநகர் கொழும்புக்கு பாதுகாப்பு வழங்க அவசர நிலை அதிரடிப் படையணி ஒன்றை இந்தியா வழங்கியது. வெளிநாட்டு இராணுவ உதவியால் கிடைத்த நிறைவான ஆயுதங்களும் மிகக் கொடிய அவசரகாலச் சட்டமும் துணைவர, சிறீலங்கா அரச படையினர், வயதில் இளைய, அனுபவமற்ற புரட்சியாளர்கள் மீது குரூரமான பதில் தாக்குதலை மேற்கொண்டனர். இலங்கை வரலாற்றில் மிகக் கொடூரமான இராணுவ அடக்குமுறையாக இது அமைந்தது. நிலைமையைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதற்காக பத்தாயிரத்துக்கும் அதிகமான சிங்கள இளைஞர்கள் இரக்கமின்றி கொல்லப்பட்டார்கள். மேலும் பதினையாயிரம் பேர் சிறையில் அடைக்கப்பட்டார்கள். புரட்சிகர சிங்கள இளைஞர் பரம்பரை ஒன்றை இந்த எதிர்த்தாக்குதல்

பூண்டோடு அழித்தொழித்தது. வேலை இல்லாத் திண்டாட்டத்தால் துயருறும் விரக்தியடைந்த இவ் இளைஞர்கள், புரட்சிகர கிளர்ச்சி மூலம் தமக்கு மீட்சி கிடைக்கும் என்று மனப்பூர்வமாக நம்பினர். இந்த அப்பாவி இளைஞர்களின் உடல்களில் இருந்து வழிந்து ஓடிய இரத்த ஆறு, காருண்யம் மிக்க பௌத்தத்தின் புனித பூமியாகப் பூசிக்கப்படும் சிங்கள தேசத்தின் மண்ணை கறைப்படுத்தியது. இந்த மாபெரும் இளைஞர் படுகொலையை திட்டமிட்டு நடத்தி தமது அதிகாரத்தை தக்கவைத்துக் கொள்ள தமது சொந்தப் பிள்ளைகளை பல்லாயிரக்கணக்கில் துவம்சம் செய்தவர்கள் மீது வரலாற்றின் பழி படிந்தது. ஒடுக்கப்பட்ட தரப்பினரிடமிருந்து மேலும் கிளர்ச்சிகள் தோன்றினால் அவற்றை மிருகத்தனமாக நசுக்கிவிடும் நோக்குடன் சிங்கள ஆளும் வர்க்கமானது அவசரகாலச் சட்டங்களையும் வேறு அடக்குமுறைச் சட்டங்களையும் உருவாக்கி அரச அதிகாரம் மீதான தனது இரும்புப் பிடியை மேலும் இறுக்கியது.

சிங்கள தீவிரவாத இளைஞர்களை அரச பயங்கரவாதம் வாயிலாக நசுக்கிய பின்னர், புதிய அரசு தனது அடக்குமுறை நடவடிக்கைகளை தமிழ் மக்கள் மீது திருப்பியது. முதலில், அரச ஒடுக்குமுறைக்கு சட்டரீதியான ஒப்புதலும் நியாயப்பாடும் கொடுப்பதற்கான முயற்சிகளை எடுத்தது. இதன் முக்கிய நடவடிக்கையாக புதிய குடியரசு யாப்பு நிறைவேற்றப்பட்டது. இப் புதிய அரசியல் யாப்பு சிங்களத்திற்கு அரச மொழி என்ற ஏகத்தகைமையையும் பௌத்த மதத்திற்கு முதன்மையான சிறப்புரிமையையும் வழங்கியது. முன்னர் வழக்கில் இருந்த சோல்பரி அரசியல் யாப்பின் இருபத்தொன்பதாவது விதியின் அடிப்படையில் சிறுபான்மையினருக்கு வழங்கப்பட்டிருந்த அடிப்படை உரிமைகள், சலுகைகள் ஆகியவற்றைப் புதிய அரசியல் யாப்பு இல்லாதொழித்தது. அத்தோடு மொழி, மதம் ஆகியவை தொடர்பாக பண்டாரநாயக்கா வகுத்த இனவாதச் சட்டங்களை நாட்டின் அதியுயர் சட்டங்களாகப் பிரகடனம் செய்தது. தமிழ் பேசும் மக்கள் சார்பாக முன்வைக்கப்பட்ட அனைத்துத் திருத்தங்களையும் தீர்மானங்களையும் யாப்பமைப்பு மன்றம் திட்டவட்டமாக நிராகரித்தது. பொருத்தமான கூட்டாட்சித் திட்டத்தை சமஷ்டிக் கட்சி முன்வைத்தது. விவாதத்துக்கு எடுக்கப்படாமலேயே அது நிராகரிக்கப்பட்டது. புதிய அரசியல் யாப்பில், தமிழ் மொழி உபயோகத்துக்காக மேற்கொள்ளப்பட்ட

அனைத்து முயற்சிகளும் தோல்வி கண்டன. மன்றத்தின் நடவடிக்கைகளில் சிங்கள தேசிய மேலாண்மைவாதம் மமதையோடு அரசோச்சியது. இதனால் பெரும்பாலான தமிழ் உறுப்பினர்கள் நம்பிக்கை இழந்து விரக்தியோடு வெளிநடப்புச் செய்தார்கள். இகழ்ச்சிக்குரிய இந்த அரசியல் யாப்பு 1972 மே 22இல் நிறைவேற்றப்பட்டது. இதன் விளைவாக, அரச அதிகாரத்தை பகிர்ந்து கொள்வதற்கான வாய்ப்புக்கள் அனைத்துமே தமிழருக்கு மறுக்கப்பட்டது. தேசிய இனப் பண்புகளைக் கொண்ட ஒரு மக்கள் சமுதாயம் அரசியல் வாழ்விலிருந்து முற்றாக அந்நியப்படுத்தப்பட்டது.

சிங்கள தேசத்தை பிரதிநிதித்துவம் செய்த பிரதான அரசியல் கட்சிகளான ஐக்கிய தேசியக் கட்சியும் சிறீலங்கா சுதந்திரக் கட்சியும் தமிழ் மக்களின் அடிப்படை அரசியல் உரிமைகளை வேண்டுமென்றே தொடர்ச்சியாக மறுத்து வந்தன. இடதுசாரிகளான சமசமாசக் கட்சியும் கம்யூனிஸ்ட் கட்சியும் ஐம்பதுகளிலே தமிழரின் உரிமைகளுக்காக ஆதரவுக் குரல் கொடுத்து வந்தன. ஆனால் அறுபதுகளின் தொடக்கத்திலேயே அரசியல் சந்தர்ப்பவாதத்திற்கு வளைந்து கொடுத்து சிங்கள-பௌத்த பேரினவாத அரசியலை அரவணைத்துக் கொண்டன. தமிழ் மக்களின் உரிமைகளை மறுப்பதில் அனைத்து முக்கிய சிங்கள அரசியல் கட்சிகளும் முரட்டுப் பிடிவாதத்தோடும் உறுதியோடும் தொடர்ந்து நிற்பதைக் கண்டு இன நல்லிணக்கத்துக்காகப் பாடுபடுவதில் அர்த்தமில்லை என்ற உண்மையை தமிழ் மக்கள் கசப்போடு உணர்ந்து கொண்டார்கள். சிங்கள தேசிய அரசியல் சக்திகள், தமிழருடன் ஒத்து வாழ்வதைக் காட்டிலும், எதிர்த்து நிற்பதற்காகவே தமக்குள் உடன்பாடு கண்டன. இதைக் கண்ணுற்ற தமிழ் மக்கள் தங்கள் சொந்த அரசியல் தலைவிதியை தாமே தீர்மானிக்க நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். ஒரு பொது இலட்சியத்திற்காகப் போராடும் ஒன்றுபட்ட தேசிய இயக்கமாகத் தமிழ் அரசியல் சக்திகள் ஒன்றுதிரள, இந்த யதார்த்த புறநிலை காரணமாக அமைந்தது. இந்த இலக்கை நோக்கிய முக்கிய நிகழ்வாக அனைத்துக் கட்சி மாநாடு ஒன்று திருகோணமலையில் 1972 மே 14இல் கூட்டப்பட்டது. இங்கு, சமஷ்டிக் கட்சி, தமிழ்க் காங்கிரஸ் கட்சி, இலங்கை தொழிலாளர் காங்கிரஸ் ஆகியவை ஒன்றிணைந்து தமிழர் ஐக்கிய முன்னணியாக வடிவெடுத்தன. இதற்கு முன்

இடம்பெற்றிராத ஓர் இணைப்பு இது. தமிழ் மக்கள் தங்கள் தேசிய அடையாளத்தையும் அரசியல் சுதந்திரத்தையும் காப்பாற்றத் தாம் ஒன்றிணைந்து போராட வேண்டும் என்ற அவர்களது இலட்சிய உறுதியையும் இது எடுத்துக் காட்டியது.

## தமிழ் இளைஞரின் அரசியல் வன்முறை

நடைமுறைச் சாத்தியமான ஒரு வேலைத்திட்டத்தின் அடிப்படையில் ஒன்றுபட்டுச் செயற்படவேண்டிய அவசியத்தை தமிழர் ஐக்கிய முன்னணியின் தலைமைப்பீடம் உணர்ந்திருந்தது. ஆனால் தலைவர்களிடையே நிலவிய கருத்து பேதம், நடைமுறைச் செயற்திட்டம் ஒன்றை உருவாக்குவதற்கு தடையாக நின்றது. தமிழினத்தின் சார்பாக யாப்பமைப்பு மன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்ட விதப்புரைகள் எடுத்த எடுப்பிலேயே தூக்கி வீசப்பட்டமை, தமிழ்த் தலைவர்கள் மத்தியில் ஆழமான ஏமாற்றத்தை தோற்றுவித்தது. அரச ஆட்சியில் தமிழ் மக்கள் அர்த்தபூர்வமாகப் பங்கெடுப்பதற்கு முற்றுமுழுதான தடை ஒன்று உருவாகி இருப்பதை இது அவர்களுக்கு தெளிவாக எடுத்துக் காட்டியது. அரசியலில் தமிழர் முற்று முழுதாக ஓரம் கட்டப்படுவதையும் அது முகத்தில் அறைந்தாற் போல் உணர்த்தியது. எனவே தமிழினத்தின் அரசியல் எதிர்காலம் பேராபத்துக்கு உள்ளாகி இருப்பதைத் தமிழ்த் தலைவர்கள் உணரவே செய்தார்கள். ஆனால் தமிழ் மக்களின் அரசியல் உரிமைகளைப் பாதுகாப்பதற்கான போராட்டத்தை முன்னெடுத்துச் செல்ல வல்ல நடைமுறைச் செயற்திட்டம் ஒன்றை வகுக்க அவர்களால் இயலவில்லை. திருகோணமலை மாநாட்டிலே ஆறு அம்சத் திட்டம் ஒன்றை அவர்கள் வகுத்தார்கள். ஆனால் தமிழர் ஐக்கிய முன்னணி தலைமைப் பீடத்தினரிடம் அரசியல் தூரநோக்கு வரண்டுபோய் விட்டதையே அந்த ஆறு அம்சத் திட்டம் அம்பலப்படுத்தியது:

1) தமிழ் மொழிக்கு உரிய திட்டவட்டமான இடம்
2) சிறீலங்கா ஒரு மதசார்பற்ற அரசாக இருத்தல்
3) சிறுபான்மை இனத்தவரின் அடிப்படை உரிமைகள் அரசியல் யாப்பில் உள்ளடக்கப்படுவதோடு, சட்ட மூலம் செயற்படுத்தப்படுவதற்கான உறுதிப்பாடு.

4) மனுப் பண்ணும் அனைவருக்கும் குடியுரிமை

5) நிர்வாகப் பரவலாக்கம்

6) சாதி முறை ஒழிப்பு

ஒரு புறம் சிங்கள அரசியல் கட்சிகள் தமது கொள்கை வேறுபாடுகளை மறந்து, ஒரே அணியில் ஒன்றிணைந்து ஒரு கட்டிறுக்கமான சிங்கள-பௌத்த ஏதேச்சாதிகார அரச வடிவமைப்பை உருவாக்கிக் கொண்டிருக்க, மறுபுறம் தமிழ்த் தலைவர்கள், தமது ஆரம்ப கால அரசியல் இலட்சியத்தைக் கைவிட்டு, தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகளைப் பிரதிபலிக்காத, அர்த்தமற்ற பூடகமான கோரிக்கைகளை முன்வைக்க முனைந்து கொண்டிருந்தனர்.

தெளிவான அரசியல் தரிசனமும் உருப்படியான செயற்திட்டமும் இல்லாத காரணத்தினால் தமிழ்த் தலைவர்கள் மீது தீவிரவாதத் தமிழ் இளம் சமுதாயம் நம்பிக்கை இழந்தது. எவ்வித பயனுமின்றி, முப்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ்த் தலைவர்கள் கடைப்பிடித்து வந்த சாத்வீக அரசியல் அணுகுமுறை மீது, அரசியல் விழிப்புணர்வு பெற்ற இளைஞர் சமூகத்திற்கு நம்பிக்கை இடிந்தது. தமிழரின் தேசிய இனப் பிரச்சினைக்கு விரைவான தீர்வு காணும் வகையில் நடைமுறைச் செயற்திட்டங்களைக் கொண்ட புரட்சிகரமான அரசியல் அணுகுமுறையையே இளைய தலைமுறை விரும்பியது. ஒருபுறம் ஆயுதப் படைகளின் அடக்குமுறையும் மறுபுறம் அரச இனவாத ஒடுக்குமுறையுமாக ஒரு புரட்சிகரமான புறநிலையை எதிர்கொண்டு நின்ற இளைஞர் சமூகம், காந்திய தத்துவத்தில் நெறிக்கப்பட்ட சாத்வீக அரசியல் வழிமுறையை கைவிட நிர்ப்பந்திக்கப்பட்டது. தாம் எதிர்கொண்டு நிற்கும் யதார்த்த சூழ்நிலைக்கு சாத்வீகம் நடைமுறைச் சாத்தியமற்றது என்பதோடு புரட்சிகரமான அரசியல் அணுகுமுறைக்கு ஏற்றதாக அமையாது என்பதையும் இளைஞர்கள் உணர்ந்து கொண்டார்கள். எழுபதுகளின் முற்பகுதியில் தமிழ் அரசியல் அரங்கில் வெடித்த தமிழ் இளைஞர்களின் அரசியல் வன்முறை, பின்பு காலப்போக்கில் ஒழுங்கமைவான எதிர்ப்பு இயக்கமாக வடிவெடுத்தது. தீவிரவாத இளைஞரின் இந்த அரசியல் வன்முறையானது பழமைபேண் தமிழ்த் தலைமைக்கும் சரி, சிங்கள ஒடுக்குமுறை ஆட்சியாளருக்கும் சரி சிம்ம சொப்பன

அரசியல் யதார்த்தமாக தோற்றம் எடுத்தது.

மாறி மாறி ஆட்சிபீடம் அமர்ந்த சிங்கள அரசுகளின் ஒடுக்குமுறைக் கொள்கைகளுக்கு நேரடியாகப் பலிக்கடாவாக ஆக்கப்பட்ட காரணத்தாலேயே தமிழ் இளைஞர்களிடையே தீவிரவாதக் கடும் போக்கும், வளைந்து கொடாத எதிர்ப்புணர்வும், வன்முறையும் தலைதூக்கின. படித்த தமிழ் இளைஞர்களிடையே நிலவிய வேலையில்லாத் திண்டாட்டம் காரணமாக நிரந்தரமான விரக்தியையும் சூன்யமான எதிர்காலத்தையும் அவர்கள் எதிர்கொண்டு நின்றார்கள். அரசாங்கம் வகுத்த பாகுபாடான 'தரப்படுத்தல்' திட்டமும் தனிச் சிங்களச் சட்டமும் தமிழ் இளைஞர்களுக்கு வேலைவாய்ப்பையும் உயர்கல்விக்கான வாயில்களையும் நிரந்தரமாகவே மூடிவிட்டன.

ஒருபுறம் வேலைவாய்ப்பின்மையால் ஏற்பட்ட விரக்தி, மறுபுறம் உயர்கல்வி வாய்ப்பின்மையால் ஏற்பட்ட அங்கலாய்ப்பு, இன்னொரு புறம் அந்நிய மொழித் திணிப்பால் ஏற்பட்ட ஆத்திரம் ஆகியன தமிழ் இளம் சமூகத்திற்கு ஒரு புதிய விழிப்புணர்வை ஏற்படுத்தியது. இந்தப் பாழான நிலையிலிருந்து மீட்சி பெறுவதானால் தமது வாழ்க்கையை முற்றாக மாற்றியமைக்கக் கூடிய ஒரு புரட்சிகரமான அரசியல் நடைமுறையை தாம் தழுவ வேண்டுமென அவர்கள் உணர்ந்து கொண்டார்கள். அரச ஒடுக்குமுறை தீவிரமடைந்து வந்த அந்நெருக்கடியான காலகட்டத்தில் ஆயுதப் போராட்டம் வாயிலாக தமிழ்த் தேசத்தின் சுதந்திரத்தை வென்றெடுப்பதே தமிழ் மக்களுக்கு எஞ்சியிருந்த ஒரே வழியென அவர்கள் புரிந்து கொண்டார்கள். எனவே, சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில் தமிழர் தாயகம் பிரிந்து சென்று தனியரசை நிறுவவேண்டும் என்ற கோரிக்கையை தமிழர் ஐக்கிய முன்னணித் தலைவர்கள் முன்வைக்க வேண்டுமென அவர்களுக்கு நெருக்குவாரம் கொடுத்த புரட்சிகரத் தமிழ் இளைஞர்கள், தமது தீவிரவாதப் போராட்ட உணர்வை வெளிப்படுத்தும் வகையில் அரசியல் வன்முறையில் குதித்தார்கள். எழுபதுகளின் முற்பகுதியில் வெளிப்பாடு கண்ட தமிழ் இளைஞரின் அரசியல் வன்முறையை அரச ஒடுக்குமுறைப் பயங்கரவாதத்திற்கு எதிரான தீவிரவாதக் கிளர்ச்சியாகவும், தமிழரின் அரசியல் போராட்ட வடிவங்களில் ஒன்றாகவும் பார்க்க வேண்டும். தமிழ் இளம் சமூகத்தினரிடையே வளர்ச்சி கண்ட தீவிரவாதமும், பொறுமையிழந்த ஆவேசமும், கிளர்ச்சிப் போக்குமே தமிழர் விடுதலை முன்னணியின் அரசியல் சுதந்திரம்

என்ற இலட்சியப் பயணத்தை துரிதப்படுத்தியது எனலாம்.

தமிழ் அரசியல் வானில் தலைதூக்கிய இளைஞர் வன்முறையின் வரலாற்று மூலத்தை பதிவுசெய்யும் போது போராட்ட உணர்வுடைய பெரும்பாலான தீவிரவாத இளைஞர்களை ஊக்குவித்து வளர்த்து, தமிழரின் ஆயுத எதிர்ப்பு இயக்கம் தோன்றுவதற்கான புறநிலையை உருவாக்கிக் கொடுத்த ஒரு அமைப்பைப் பாராட்டியாக வேண்டும். தமிழ் மாணவர் பேரவையே இந்த அமைப்பாகும். மிகவும் உறுதிப்பாடும் அர்ப்பணிப்புமுடைய புரட்சிவாத இளைஞர்களை அது உருவாக்கியது. தேச விடுதலை என்ற இலட்சியத்தில் இந்த இளைஞர்கள் கொண்டிருந்த உருக்கையொத்த உறுதிப்பாடு ஏனையோருக்கும் ஊக்கத்தைக் கொடுத்து முன்மாதிரியாக அமைந்தது. இந்தப் புரட்சிகரமான மரபிலே தோன்றி, ஒப்பற்ற விடுதலை வீரனாக திகழ்ந்து, இறுதியில் தனது உயிரையே தியாகம் செய்த இளைஞர் சிவகுமாரன் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவர். சிங்கள அரசின் அதிகாரத்திற்கு அடிபணிய மறுத்து, அரச அடக்குமுறையின் இயந்திரமாகச் செயற்பட்ட காவற்துறையை துணிச்சலோடு எதிர்த்துப் போராடிய இந்த இளைஞன் ஒரு வீரகாவியத்தைப் படைத்தான். புரட்சிகர வன்முறை மூலம் சிவகுமாரன் ஏற்றிவைத்த சுதந்திர தீபம் தமிழீழம் எங்கும் அணையாத தீயாகப் பரவியது.

குண்டு வீச்சு, துப்பாக்கிச் சூடு, வங்கிக் கொள்ளை, அரசுச் சொத்துடமை மீது தாக்குதல் போன்ற அரசியல் வன்முறைகள் தமிழ்ப் பகுதிகளில் பரவின. வடக்கே வருகை புரிந்த சிங்கள அமைச்சர் ஒருவரின் வாகனம் மீது குண்டு வீசப்பட்டது. குடியரசு அரசியல் யாப்புக்கு ஆதரவு வழங்கி, தமிழ் மக்களின் அபிலாசைக்கு விரோதமாகச் செயற்பட்ட தமிழ் நாடாளுமன்ற உறுப்பினரான ஆர்.தியாகராஜா மீது படுகொலை முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அரசுக்கு பேராதரவு வழங்கிக் கொண்டிருந்த குமாரகுலசிங்கம் சுட்டுக் கொல்லப்பட்டார். புதிய அரசியல் யாப்பு நிறைவேற்றப்பட்ட அன்று, தமிழீழம் எங்கும் வன்செயல் சம்பவங்கள் வெடித்தன. பேருந்துகள் தீக்கிரையாக்கப்பட்டன. அரச கட்டடங்கள் மீது குண்டுகள் வீசப்பட்டன. சிங்கள தேசியக் கொடிகள் எரிக்கப்பட்டன.

அடக்குமுறைக்கு எதிரான கிளர்ச்சியாக எழுந்த வன்முறை அலைகளை நசுக்கிவிட முனைந்த அரசாங்கம் காவற்துறையினருக்கு மேலதிக அதிகாரங்களை வழங்கி

பயங்கரவாத ஒடுக்குமுறையை கட்டவிழ்த்து விட்டது. சட்டம் வழங்கிய அதிகாரத்தாலும் அரசு வழங்கிய உற்சாகத்தாலும் வீறு கொண்ட காவல்துறையினர், அப்பாவிகளான பொதுமக்கள் மீதும், குறிப்பாக தமிழ் இளைஞர் மீதும் கொடூரமான வன்செயலைக் கட்டவிழ்த்து விட்டனர். சித்திரவதை, சிறை, படுகொலை ஆகிய பயங்கரங்களில் காவல்துறைக் கொடுங்கோன்மை தாண்டவமாடியது. யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற நான்காவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டின் இறுதி நாளன்று (1974 ஜனவரி 10 அன்று) இரவு, காவல்துறையினர் நடத்திய மிருகத்தனமான தாக்குதலே மிகவும் அருவருப்பான ஆத்திரமூட்டும் செயல் எனக் குறிப்பிடலாம். இந்த மாபெரும் கலாச்சார நிகழ்வின்போது, தென்னிந்தியாவிலிருந்து வருகை புரிந்த பெருங்கல்விமான் பேராசிரியர் நைனா முகம்மது அவர்களுடைய பேருரையை ஏறத்தாழ ஒரு லட்சம் தமிழ் மக்கள் வாய் பிளந்து கேட்டிருக்கும் தருணத்தில், இந்தக் கொடுமை நிகழ்த்தப்பட்டது. நன்கு ஆயுதம் தரித்த நூற்றுக்கணக்கான சிங்கள காவல்துறையினர், நன்கு வகுக்கப்பட்ட தாக்குதல் திட்டத்தோடு, கண்ணீர்ப் புகைக் குண்டு, குண்டாந்தடி, துப்பாக்கிக் கூர்முனை ஆகியவை சகிதம், பார்வையாளர் மீது திடீர் தாக்குதல் நடத்தினார்கள். சிதறியோடிய மக்களிடையே ஏற்பட்ட குழப்பத்தில், எட்டு உயிர்கள் பலியாகின. பெண்கள், பிள்ளைகள் அடங்குவதாக, நூற்றுக்கணக்கானோர் கடும் காயமடைந்தனர். இந் நிகழ்வு தமிழ் இனத்தின் இதயத்தில் ஆழமான வடுவை ஏற்படுத்தியது. மக்களின் தேசியப் பெருமைக்குப் பெரும் தலைகுனிவை உண்டுபண்ணியது. காவல்துறையின் இழிமையான பண்பை இந்த நிகழ்ச்சி வெளிப்படுத்தியது. அரச ஒடுக்குமுறையின் பயங்கரவாதக் கருவியாகவே காவல்துறையினர் தமிழ் மக்களின் கண்ணில் படிந்தனர்.

சிங்கள இனவாத அரசின் இந்தப் பயங்கரவாத வன்முறைக்கு எதிராக தமிழ் இளைஞரின் வன்முறைச் செயற்பாடுகள் விடுதலைப் புலிகள் இயக்கத்தின் தோற்றம் வளர்ச்சியுடன் ஒழுங்கமைவான ஆயுத எதிர்ப்பு இயக்கமாக பரிமாணம் பெற்றது.

## விடுதலைப் புலிகளின் தோற்றமும் வளர்ச்சியும்

எழுபதுகளின் ஆரம்ப காலத்தில், சிங்கள இனவாத அடக்குமுறை அரசுக்கு எதிராகத் தமிழ்த் தீவிரவாத இளைஞர்கள் முன்னெடுத்த வன்முறையானது செம்மையாகத் திட்டமிடப்படாத, ஒன்றோடொன்று தொடர்பற்ற, ஒழுங்கமைவற்ற வன்செயல்களாக அங்குமிங்கும் வெடித்தன. இத்தகைய வன்முறைப் போராட்டத்தில் அதிருப்தியடைந்த இளைஞர்கள், புரட்சிகரமான அரசியல் கோட்பாட்டையும் செயற்பாட்டையும் ஆதாரமாகக் கொண்ட ஒரு விடுதலை அமைப்பைத் தேடி அலைந்தார்கள். போராட்ட உணர்வால் குமுறி நிற்கும் தீவிரவாதத் தமிழ் இளைஞர்களின் அரசியல் அபிலாசைகளுக்கு வெளிப்பாடு காணும் வகையில் உருப்படியான, புரட்சிகரமான திட்டம் எதுவும் தமிழர் ஐக்கிய முன்னணியிடமோ அன்றி இடதுசாரி இயக்கங்களிடமோ இருக்கவில்லை.

தமிழர் ஐக்கிய முன்னணியைப் பொறுத்தவரையிலே, அதன் அரசியல் கட்டமைப்பு, பழமைவாதக் கருத்தியலைத் தளமாகக் கொண்டது. எனவே, புரட்சிகர அரசியல் செயற்படுவதற்கான தளத்தை வழங்க அதனால் இயலவில்லை. தமிழ் தேசியத் தலைவர்கள் தமிழரின் இலட்சியத்திற்காக பாடுபடுவதாக உரத்துக் குரல் எழுப்பிக் கொண்டிருந்த போதிலும், ஒடுக்கப்படும் தமிழினம் விடுதலை பெறுவதற்காக உருப்படியான அரசியல் திட்டம் எதையும் வகுக்கத் தவறிவிட்டார்கள். இந்த உண்மையை தமிழ் மக்கள், குறிப்பாக போராட்ட உணர்வுடைய தீவிரவாத தமிழ் இளைஞர் ஐயந்திரிபறக் கண்டுகொண்டனர். முடிவடைந்த மூன்று தசாப்தங்களாக, தமிழ் அரசியல்வாதிகள் தாம் அறிந்த அனைத்து வெகுசனப் போராட்ட வடிவங்களை நடத்திப் பார்த்து சலித்துப் போனார்கள். சிங்கள அரச அதிகாரக் கட்டமைப்பிலிருந்தும் அவர்கள் ஒதுக்கப்பட்டிருந்தனர். அப்படியிருந்தும் அவர்கள் நாடாளுமன்ற நாற்காலிகளில் ஒட்டிக் கொண்டிருந்து அவ்வப்போது தமது குமைச்சலை வெளிப்படுத்திக் கொண்டிருந்தனர். பாலைவனத்தில் ஒலித்த சப்தமாக அவர்களது குரலுக்கு எவரும் செவிமடுக்கவில்லை. வெற்றுச் சுவருக்கு வேதாந்தம் ஓதும் நிலையில் அவர்கள் இருந்தார்கள்.

பாரம்பரிய இடதுசாரிக் கட்சிகளைப் பொறுத்தவரை அவர்கள் தங்கள் அரசியல் இலட்சியங்களையும்

அணுகுமுறைகளையும் தலைகீழாக மாற்றிக் கொண்டார்கள். அவர்களது அரசியல் சிந்தனை ஆளும் வர்க்கத்தின் கருத்தியலால், அதாவது சிங்கள-பௌத்த பேரினவாதத்தால் மழுங்கடிக்கப்பட்டிருந்தது. கூட்டுச் சேர்ந்து விட்டுக் கொடுக்கும் சந்தர்ப்பவாத அரசியலைத் தழுவிக் கொண்ட இடதுசாரிகள், தமிழர்களுக்கு எதிராக அரச ஒடுக்குமுறை தீவிரமடைந்தபோது அக் கொடுமையான மெய்நிலையை கண்டும் காணாதது போல பார்த்துக் கொண்டிருந்தார்கள். தமிழ்த் தேசியப் போராட்டத்தினது புரட்சிகரமான வரலாற்றுப் புறநிலையை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. தமிழ்த் தீவிரவாத இளைஞர்களது அரசியல் அபிலாசைகளின் தார்ப்பரியத்தையும் அவர்களால் உணர்ந்து கொள்ள முடியவில்லை.

தமிழ் மாணவர் பேரவை, 1970இல் உருவாகியது. புரட்சிகர அரசியலை அது பரிந்துரைத்தது. மாணவத் தலைவர்கள் போராட்ட வழியைக் கடைப்பிடிக்க வேண்டும் என விதந்துரைத்தது. அரசின், 'தரப்படுத்தல்' என்ற பிரித்து ஒதுக்கும் கல்விக் கொள்கைக்கு எதிராக, மாணவ எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களை பிரமாண்டமான அளவில் ஏற்பாடு செய்தது. கருத்தரங்குகள், மாநாடுகளை ஒழுங்கு செய்து, எதிர்ப்புக் குரல்களுக்கான மேடைகளை வழங்கியது. அரச ஒடுக்குமுறைக்கு எதிராக, நடைமுறைச் சாத்தியமானதும் புரட்சிகரமானதுமான ஆயுத எதிர்ப்புப் போராட்ட வடிவத்தையே மாணவர் பேரவைத் தலைவர்கள் மறைமுகமாகத் தூண்டினார்கள். தாயக விடுதலை உணர்வால் உந்தப்பட்ட இளைஞர்கள் மாணவர் பேரவையின் வழிகாட்டலையும் தலைமையையும் நாடினார்கள்.

மாணவ பேரவையின் தலைவர்கள் வெறும் வார்த்தை வழிகாட்டலுக்கே லாயக்கானவர்களாக இருந்தார்கள். காரிய சாத்தியமான செயற்திட்டம் ஒன்றை செயலளவில் நடைமுறைப் படுத்துவதற்கான தலைமையையோ வழிகாட்டலையோ வழங்க அவர்கள் தயாராக இல்லை. அடக்குமுறை அரசுக்கு எதிராக ஆயுதப் போராட்டம் ஒன்றை ஒழுங்குபடுத்தி வழி நடத்துவதற்கு வேண்டிய அறிவோ துணிச்சலோ அவர்களிடம் இருக்கவில்லை. மாணவர் பேரவைத் தலைமைப் பீடத்தின் கையாலாகாத் தன்மையால் ஏமாற்றமடைந்த தீவிரவாத இளைஞர்கள் வன்முறைப் போராட்டங்களைத் தனித்தும் குழுக்களாகவும் தாமே தொடுக்கத் தீர்மானம் பூண்டார்கள். இதன் விளைவாக,

அங்கிங்கென, தாறுமாறான வன்தாக்குதல்கள் இடம்பெற்றன. அரசியல் படுகொலைகள், குண்டு வீச்சு, துப்பாக்கிச் சூடு, அரச சொத்துடமைகளுக்கு தீ வைத்தல், அரச வங்கிக் கொள்ளை போன்ற சம்பவங்கள் நிகழ்ந்தன. அரச ஆயுதப் படையினர், குறிப்பாக காவல்துறையினர் பதிலடியாக தமிழ் இளைஞர்கள் மீது எல்லையற்ற வன்முறையைப் பிரயோகித்தார்கள். பெரும் அளவில் கைது, வழக்கின்றிச் சிறை, சித்திரவதை, கொலை ஆகியவை நாள் தோறும் நடந்தேறின. தீவிரவாத இளைஞர்களுக்கு உற்சாகமும் தார்மீக அதரவும் வழங்கியவர்கள் தமிழ் மாணவர் பேரவையினர் என்பது தெரிந்ததும், பேரவைப் பணிமனை மீது காவல்துறையினர் சோதனை நடத்தி, அதன் தலைவர் சத்தியசீலன் உட்பட ஏனைய தலைவர்களையும் கைது செய்தனர். தாங்கவொணாச் சித்திரவதைக்கு உள்ளான பேரவைத் தலைவர்கள், அரசியல் வன்முறையில் ஈடுபட்டிருக்கும் இளைஞர்களில் முதன்மையானவர்களின் பெயர்களை ஒப்புவித்திருக்கிறார்கள். காவல்துறையினரின் வேட்டைக்கு தாம் ஆளாகலாம் என்பது கண்டு, முதல்நிலைத் தீவிரவாதிகளில் முக்கியமானவர்கள் தலைமறைவானார்கள்.

அன்று தலைமறைவாகிய இளம் தீவிரவாதப் போராளிகளில் ஒரு அற்புதமான இளைஞரும் இருந்தார். இவர், தமிழ் மக்களின் விடுதலைக்காக தன்னை முழுமையாக அர்ப்பணித்திருந்த ஒரு இளம் மாவீரன். காவல் துறையினரின் தீவிர வேட்டைக்கு இலக்காகியிருந்த அந்த இளம் புரட்சிவாதிக்கு அப்பொழுது வயது பதினாறு. அன்றைய காலத்து விடுதலைப் போராளிகளின் வரிசையில் இவரே வயதில் மிக இளையவராவார். இவரே வேலுப்பிள்ளை பிரபாகரன். தமிழரின் தேச சுதந்திர இயக்கமாக தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்பைக் கட்டியெழுப்பி, ஒப்பற்ற ஆயுதப் போரியல் பாதைக்கு அத்திவாரமிட்ட வரலாற்று நாயகன்.

யாழ்ப்பாண தீபகற்பத்தின் வடகடலோரப் பட்டினமாகிய வல்வெட்டித்துறையில் 1954 நவம்பர் 26ஆம் நாள் பிரபாகரன் பிறந்தார். வரலாற்றின்படி பார்த்தால், தீரமிகு கப்பலோட்டிகளும், துணிச்சல் மிகுந்த கடத்தல் வேட்டைக்காரரும் வாழ்ந்த இடமாக வல்வெட்டித்துறை கருதப்படுகிறது. சிங்கள இனவாத அடக்குமுறை அரசுக்கு எதிராக தீவிரவாத எதிர்ப்புணர்வை காட்டுவதிலும் வல்வெட்டித்துறை புகழ்பெற்றது. தாயகப் பற்றும், தேசிய விடுதலை உணர்வும் மிக்க நிகரற்ற சுதந்திரப்

போராளிகளை பெற்றெடுத்த புனித மண்ணாக இது விளங்குகிறது.

திருவேங்கடம் வேலுப்பிள்ளை, வல்லிபுரம் பார்வதி தம்பதியாரின் கடைசிப் பிள்ளை பிரபாகரன். இவருக்கு இரண்டு சகோதரிகள். ஒரு சகோதரன். அப்பா ஓர் அரசாங்க ஊழியர். மாவட்ட காணி அதிகாரி. அப்பழுக்கற்ற நடத்தை. இனிமையான சுபாவம். மென்மையான போக்கு. அவதிப்பட்டோருக்கு ஓடிச் சென்று உதவும் பாங்கு. ஊரிலும் உலகிலும் பிரபாகரனின் அப்பாவுக்கு நல்ல மதிப்பு.

இளம்பிராயத்தில் மிகுந்த நுண்ணறிவும் விழிப்புணர்வும் கொண்டிருந்த பிரபாகரன், தனது மக்கள் வாழ்ந்த அடக்குமுறையான சூழ்நிலையையும் அவர்கள் அனுபவித்து வந்த ஆழமான துன்ப துயரங்களையும் உணர்ந்து கொண்டார். இன ஒடுக்குமுறையின் கோரமான தன்மையையும் தமிழ் மக்கள் எதிர்கொண்ட மிருகத்தனமான அட்டூழியங்களையும் சிறுபிராயத்திலிருந்தே, பல வழிகளில் - தனது குடும்பத்தினர், நண்பர்கள், பாடசாலை ஆசிரியர்கள், கிராமத்து முதியவர்கள் - ஆகியோரிடமிருந்து அறிந்து கொண்டார். அப்பாவித் தமிழ் மக்களுக்கு இழைக்கப்பட்ட வதைகளையும் கொடுமைகளையும் கேட்டறிந்தபோது இளம் பிரபாகரனின் இதயத்தில் வெஞ்சினம் பொங்கியது. ஒடுக்கப்பட்ட தனது மக்கள் வாய்மூடி மௌனிகளாக தொடர்ந்தும் இக் கொடுமைகளை அனுபவிக்காது, அடக்குமுறை ஆட்சியாளருக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்து போராடவேண்டுமென்று பிரபாகரன் எண்ணினார். மனிதர்கள் தமது விருப்புகள், அபிலாசைகளுக்கு அமைவாக சுயாதீனமாக வாழும் உரிமைதான் சுதந்திரமென அவர் கருதினார். வெளி அழுத்தங்களிலிருந்தும் அடிமைத்தனத்திலிருந்தும் விடுதலை பெறும்பொழுதுதான் உண்மையான சுதந்திரத்தை மனிதர்கள் சுகிக்க முடியும் என்றும் பிரபாகரன் நம்பினார். சுதந்திரம் என்ற இந்த உன்னதமான வாழ்வியல் விழுமியத்தை அடைவதற்கு, சில சூழ்நிலைகளில் பெரும் தியாகங்கள் புரிந்து, அர்ப்பணிப்புகள் செய்து போராடுவது அவசியம் என்றும் அவர் சிந்தித்தார். இளம் புரட்சிவாதியான பிரபாகரனுக்கு சுதந்திரம் என்பது இதய பாசமாயிற்று. சுதந்திரத்திற்காகப் போராடுவது என்பது தணியாத தாகமாயிற்று. பள்ளிப் படிப்பு பிரபாகரனை வெகுவாகக் கவரவில்லை. மானிட சுதந்திரம் பற்றியும், சுந்திரத்தை அடைய மனிதர்கள் தொடுத்த போராட்ட வரலாறு

பற்றியும் நிறையக் கற்றறியவேண்டும் என்பதே இளம் பிரபாகரனின் வேட்கையாக இருந்தது.

இந்திய சுதந்திரப் போராட்டத்தின் கொந்தளிப்பான வரலாறு பிரபாகரனை வெகுவாகக் கவர்ந்தது. அக்காலத் தமிழ் அரசியல்வாதிகள் மகாத்மா காந்தியை வழிபட்டனர். காந்திஜியின் அகிம்சைத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட சாத்வீகப் போராட்ட முறையைத் தழுவினர். பிரித்தானிய குடியேற்ற ஆட்சிக்கு எதிராக வன்முறைப் போர்தொடுத்த சுபாஷ் சந்திரபோஸ், பகத் சிங் ஆகிய கிளர்ச்சியாளரே பிரபாகரனை வெகுவாகக் கவர்ந்தனர். ஆங்கில ஆட்சியாளருக்கு எதிராகத் தலைமறைவுத் தாக்குதல்களை நடத்திவந்த சீக்கிய இளம் புரட்சிவாதியான பகத் சிங்கை விட சுபாஸின் விடுதலைப் போராட்ட வரலாறே பிரபாகரனை வெகுவாக ஈர்த்தது. பிரித்தானியருக்கு எதிராக இந்திய தேசிய விடுதலையை வென்றெடுக்க ஆயுதப் போராட்டமே உகந்த வழியெனக் கருதி, ஒரு தேசிய விடுதலை இராணுவத்தைக் கட்டியெழுப்பிய சுபாஸின் துணிச்சலை பெரிதும் மதித்த இளம் பிரபாகரன், அந்த இந்திய சுதந்திர வீரனின் வாழ்க்கை பற்றியும் சிந்தனை பற்றியும் நிறைய வாசித்தார். சுபாஸின் பிரசித்தி பெற்ற உரைகள் இவருக்கு ஊக்கத்தையும் புத்துணர்ச்சியையும் அளித்தன. மகாத்மா காந்தியின் சிந்தனைகளையும் பிரபாகரன் படிக்கத் தவறவில்லை. காந்திஜியின் அகிம்சைத் தத்துவத்தின் அடிநாதமாக விளங்கிய ஆன்மீக அறநெறிப் பண்புகளுக்கு அவர் மதிப்பளித்தபோதும், அவை தமிழரின் தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு பொருத்தமாக அமையுமா என்பதில் பிரபாகரனுக்கு ஆழமான ஐயப்பாடு இருந்தது. சிங்கள இனவாத அரசின் ஈவிரக்கமற்ற அடக்குமுறைப் போக்கு அகிம்சைவாத அறநெறிப் பண்புகளுக்கு மதிப்பளிக்கப் போவதில்லை என்பதை தமிழரின் அரசியல் வரலாற்றிலிருந்து பிரபாகரன் ஏற்கனவே அறிந்து கொண்டார். இந்தியக் காவியமான மகாபாரதம் இளம் புரட்சிவாதியான பிரபாகரனை மிகவும் கவர்ந்தது. மகாபாரதத்தை தீய சக்திகளுக்கு எதிரான ஒரு தர்ம யுத்தமாகக் கண்ட பிரபாகரன், ஈற்றில் தர்மமும் சத்தியமுமே வெற்றிகொள்ளும் என்ற மெய்யுண்மையை இக்காவியம் வாயிலாகத் தெளிந்து கொண்டார். வரலாறு படைத்த தமிழ்ப் பேரரசுகள் பற்றியும், தமிழ்ச் சக்கரவர்த்திகளின் வீரம்செறிந்த வரலாறுகள், படையெடுப்புகள், போர்கள் பற்றியும் பிரபாகரன் நிறைய

வாசித்தார். தமிழரின் பெருமை மிக்க வரலாறுகள் அவருக்குப் புத்துணர்வை அளித்தன.

அந்நிய குடியேற்ற ஆட்சிக்கு எதிராக துணிச்சலுடன் ஆயுத வன்முறைப் போரில் குதித்த இந்திய விடுதலை வீரர்களது வாழ்வும் புரட்சிகர சிந்தனையும் இளம் பிரபாகரனை ஆழமாகப் பாதித்தது. பண்டைத் தமிழ் இனத்தின் பழம்பெரும் நாகரீகமும், வீரம்செறிந்த வரலாறும் அவருக்குப் பெருமிதம் அளித்தன. இளம்வயதிலேயே இவற்றையெல்லாம் படித்தறிந்த பிரபாகரன், ஒடுக்கப்பட்டு வாழும் தனது மக்களின் விடுதலைக்காக தனது வாழ்வை முழுமையாக அர்ப்பணித்துப் போராட உறுதிபூண்டார். கொடூரமான ஒரு அடக்குமுறை ஆட்சிக்கு எதிராகப் போர்தொடுக்கும் ஒரு புரட்சிவாதி எதிர்கொள்ளவேண்டிய பேராபத்துகள் பற்றி பிரபாகரன் உணர்ந்து கொள்ளத் தவறவில்லை. ஆயினும் தேச விடுதலை என்ற பொதுவான தர்மத்திற்காகச் சாவைத் தழுவவும் அவர் தயாராக இருந்தார்.

பதினாறு வயதிலேயே அரசினால் தேடப்பட்டு, தப்பி ஓடித் திரியும் தலைமறைவு வாழ்வை வரித்துக் கொள்ளவேண்டிய அவல நிலை பிரபாகரனுக்கு ஏற்பட்டது. அதுவும், இரகசிய காவல்துறையினரின் கண்துஞ்சாக் கண்காணிப்பு இவரது சொந்தக் கிராமம் மீது திருப்பப்பட்டு, நள்ளிரவுகளில் இவரது வீடு சுற்றிவளைப்புகளுக்கு இலக்காகியதைத் தொடர்ந்து, தலைமறைவு வாழ்வும் நெருக்கடியானதாக மாறியது. கைதுசெய்யப்படுவதைத் தடுக்க குடும்பத்திலிருந்து பிரிந்து தனித்து வாழவேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்பட்டது. தங்குவதற்கு வதிவிடமின்றி, நாளுக்கு நாள் அங்குமிங்குமாக அலைந்து திரிவதும், பகலில் பதுங்கி ஒளிந்திருந்து இரவில் மட்டும் நடமாடுவதுமான ஒரு நாடோடி வாழ்க்கை. நிம்மதியாகத் தூங்குவதற்கு வாய்ப்புமில்லை வழியுமில்லை. இந்துக் கோவிலுள்ள மடங்கள், தேர்கள், கூரைகள், அனாதரவாக விடப்பட்ட பாழடைந்த வீடுகள், காய்கறித் தோட்டங்கள் - இப்படியாக அந்தந்த வேளைக்கு கிட்டும் இடங்களில், அதுவும் சில மணிநேரம் மட்டும் தூங்குவதற்கு வாய்ப்புக் கிடைக்கும் என்று என்னிடம் ஒருதடவை தனது நாடோடி வாழ்க்கைபற்றி விபரிக்கும்போது பிரபாகரன் சொன்னார்.

பசிவதை அவரை சதா உறுத்தியது. சில சமயங்களில், முழு நாளாகப் பட்டினி கிடந்து துன்புற வேண்டியிருந்தது. பசி தாங்க முடியாமல், சில இரவுகளில், காய்கறித்

தோட்டங்களுக்குள் நுழைந்து மரவள்ளிச் செடியைப் பிடுங்கி, கிழங்குகளை தோண்டியெடுத்து, பச்சையாகப் பச்சை மிளகாயுடன் சேர்த்து உண்ணும்போது அமிர்தமாக இருக்குமென என்னிடம் சொன்னார். இளம் போராளியாக விடுதலைப் பாதையில் காலடி வைத்த காலத்திலிருந்தே பசியின் உபாதைக்குப் பழகிக் கொண்டார் பிரபாகரன். தணியாத இலட்சியப் பசி பிரபாகரனின் வயிற்றுப் பசிக்கு தீனி போட்டது. இளம்பிராயத்தில் அனுபவித்த இடர்கள், துன்பங்கள், அவர் எதிர்கொண்ட சோதனைகள், சவால்கள், ஆபத்துக்கள் எல்லாமே அவரது இலட்சிய உறுதிக்கு உரமூட்டின.

தனி மனிதனாக நின்று, தலைமறைவு வாழ்க்கையை வரித்துக் கொண்டு பிரமாண்டமான அரச அடக்குமுறை யந்திரத்தை எதிர்த்து நின்ற இளம் புரட்சிவாதியான பிரபாகரனுக்கு, செம்மையாகத் திட்டமிடப்படாது தனித் தனிச் சம்பவங்களாக அங்கொன்றும் இங்கொன்றுமாக நிகழ்ந்து வந்த அரசியல் வன்முறைச் செயல்கள் அர்த்தமற்றவையாகப் புலப்பட்டது. இவை, தமிழரின் அரசியல் போராட்டத்தை முன்நகர்த்தப் போவதில்லை என்பதையும் உணர்ந்து கொண்டார். இவரோடு சமகாலத்தில் அரசியலில் ஈடுபட்டவர்கள் ஒருவர்பின் ஒருவராக காவல்துறையினரால் கைதாகி சிறையில் வாடிக் கொண்டிருந்தார்கள். தனி நபர்களால் ஏற்கனவே மேற்கொள்ளப்பட்ட வன்முறை நடவடிக்கைகளும் செம்மையாக ஒழுங்கமைக்கப்படாமல் தேர்ச்சியின்றிக் கையாளப்பட்டதால் அவை பிசுபிசுத்துப் போனதையும் இவர் கண்டறிந்து கொண்டார். தீவிரவாத இளைஞரின் அரசியல் வன்முறைப் போராட்ட நடவடிக்கைகளை ஆழமாகப் பார்த்தபோது, அவை ஏற்படுத்திய எதிர்மறையான அரசியல் விளைவுகளையும், அதனால் தீவிரப்படுத்தப்பட்ட அரச ஒடுக்குமுறையின் பாதிப்புகளையும் அவர் உணர்ந்து கொண்டார். இவற்றிலிருந்து பிரபாகரனுக்கு ஒரு உண்மை தெட்டத் தெளிவாகப் புரிந்தது. ஒழுங்கமைவான ஆயுதப் போராட்ட வழிமுறை வாயிலாக, தேசிய விடுதலையை முன்னெடுத்துச் செல்வதற்கு ஒரு புரட்சிகர அரசியல் அமைப்பு அவசியமானதும் வரலாற்றுத் தேவையானதும் என்பதை அவர் புரிந்து கொண்டார். ஆயுதப் போராட்டத்திற்கு அத்தியாவசியமான ஒரு தலைமை, வழிகாட்டல், ஒழுங்கமைவான கட்டமைப்பு ஆகியவற்றை மாணவர் பேரவைத் தலைவர்கள் வழங்குவார்கள் என்று பிரபாகரன் நம்பியிருந்தார். ஆனால் இப் புரட்சிகரப்

பணியை மேற்கொள்வதில் இந்தத் தலைவர்கள் ஈடுபாடு காட்டாததால் இவருடைய எதிர்பார்ப்பு தவிடுபொடியாயிற்று. பேரவைத் தலைவர்கள் கைதாகிச் சிறைப்படுத்தப்பட, பேரவையும் செயலிழந்து செத்துப் போனது. இதனால் உருவாகிய அரசியல் வெற்றிடத்தையும் அதேவேளை தீவிரமாகிச் செல்லும் அரச ஒடுக்குமுறைச் சூழலையும் எதிர்கொள்வதற்கு, புரட்சிகர அமைப்பு ஒன்றை நிறுவ வேண்டிய அவசியத் தேவை நிலவியது. இங்கே ஒரு முக்கிய தீர்மானத்துக்கு வரவேண்டிய நிர்ப்பந்தம் பிரபாகரனுக்கு ஏற்பட்டது. தனது தலைமையின் கீழ் ஆயுதம் தரித்த அமைப்பு ஒன்றை நிறுவுவதென, இறுதியில் அவர் தீர்மானித்தார். இத்தகைய வரலாற்றுச் சூழலிலேயே 1972இல் தமிழ்ப் புலிகள் இயக்கம் வரலாற்று ரீதியாக பிறப்பு எடுத்தது. இதன் ஆரம்பத்தின்போது புதிய தமிழ்ப் புலிகள் என்று அவ்வமைப்பு தன்னை அழைத்துக் கொண்டது. பின்னர், 1976 மே 5 அன்று, அதன் உறுப்பினர்கள் தம் அமைப்பின் பெயரை தமிழீழ விடுதலைப் புலிகள் என்று மீளப் பெயர் சூட்டிக்கொண்டார்கள்.

ஆரம்பத்தில் புலிகள் இயக்கம், ஒரு நகரப்புற கெரில்லா அலகாக தனது கட்டமைப்பை நிறுவிக் கொண்டது. மிக உயர்ந்த அர்ப்பணிப்பும், இலட்சிய உறுதிப்பாடும் கொண்ட இளம் போராளிகளை பிரபாகரன் தனது அணியில் அரவணைத்துக் கொண்டார். தலைமைக்கு விசுவாசமானவர்களாகவும், தமிழ் மக்களின் விடுதலைக்காக தமது உயிரையே ஈகம் செய்யத் தயாரானவர்களாகவும் புலி உறுப்பினர்கள் விளங்கினர். தேச விடுதலை என்ற அரசியல் இலட்சியத்திற்கு விசுவாசமாக சத்தியப் பிரமாணம் செய்து, மிகக் கண்டிப்பான ஒழுக்கக் கட்டுப்பாட்டுக் கோவையைக் கடைப்பிடித்த விடுதலைப் புலிகள் ஆரம்ப காலத்தில் ஒரு தலைமறைவு அமைப்பாகவே விளங்கினர்.

தொடக்கத்தில், கெரில்லாப் போரியல் முறையிலான ஆயுதப் போராட்ட வடிவத்தையே பிரபாகரன் தேர்ந்தெடுத்தார். தமிழீழ மண்ணின் களநிலை யதார்த்த சூழலுக்கு கெரில்லாப் போராட்ட முறையே சாலச் சிறந்த ஆயுதப் போர்வடிவம் என்பது அவரது கணிப்பு. ஆபிரிக்காவிலும் லத்தீன் அமெரிக்காவிலும் குடியேற்ற வல்லரசுகளின் அடக்குமுறைக்கு எதிராக நிகழ்த்தப்பெற்ற ஆயுதப் போராட்ட வரலாற்று அனுபவங்களிலிருந்து கற்றுத்தேறியவற்றை ஆதாரமாகக்

கொண்டே கெரில்லாப் போரியல் வடிவத்தை தேர்ந்தெடுத்தார் பிரபாகரன். ஒரு நவீன அரசின் ஒழுங்கமைவான இராணுவ பலத்தை, பலம்குறைந்த ஒரு சிறிய ஒடுக்கப்படும் இனம் எதிர்கொண்டு போராடுவதாயின் கெரில்லா வடிவப் போரியல் முறையே மிகப் பொருத்தமானது என அவர் முடிவு செய்தார்.

தென்னிலங்கையில் ஜே.வி.பி இயக்கத்தின் ஆயுதக் கிளர்ச்சி சந்தித்த படுதோல்வியானது புரட்சிக் கலை சம்பந்தமாக ஒப்பற்ற பாடங்களை பிரபாகரனுக்குப் புகட்டியிருந்தது. உலகத்தின் வேறு பகுதிகளில் வெற்றியீட்டிய விடுதலைப் போராட்டங்களையும் அவற்றின் போரனுபவத்திலிருந்து வகுக்கப்பட்ட போரியல் கோட்பாடுகளையும் உத்திகளையும் கண்மூடித்தனமாக இலங்கையின் புறநிலைகளுக்கு நடைமுறைப்படுத்த முடியாதென்பதை அவர் நன்கு அறிந்திருந்தார். எமது சூழ்நிலையில் நிலவும் உள்ளூர் கள யதார்த்தம் மற்றும் அரசியல் வரலாற்றுப் புறநிலைகள் கவனத்திற்கு கொள்ளப்பட வேண்டும். ஆயுதங்களைக் கையாள்வதற்கான பயிற்சியும் மற்றும் போரியல் முறைகளும் தெரிந்திருப்பதன் அவசியத்தையும் அவர் உணர்ந்திருந்தார். எழுபதுகளின் ஆரம்பத்தில் புலிகள் இயக்கம் உருவாக்கப்பட்டபோதும் தமது போராளிகளுக்கு தகுந்த பயிற்சி அளிப்பதிலும் தமிழ்ப் பகுதிகளில் தலைமறைவு அலகுகளை அமைப்பதிலும் பிரபாகரன் நீண்ட காலத்தை ஒதுக்கினார். வெளிநாடுகளில் ஆயுதப் பயிற்சி பெறுவதை அவர் விரும்பவில்லை. லெபனானில் பாலஸ்தீன விடுதலை அமைப்பின் ஆதரவின் கீழ் ஆயுதப் பயிற்சிக்கான சந்தர்ப்பம் வழங்கப்பட்டபோது அதனைப் பிரபாகரன் நிராகரித்து விட்டார். உள்ளூர் களத்திலேயே போராட்டத்திற்கு முகம்கொடுக்க வேண்டும் என்பதால் அக் களத்திலேயே பயிற்சியை அளிப்பது சாலச்சிறந்தது என அவர் கருதினார். பொருத்தமான உத்திகளையும் நன்கு சிந்தித்து, செம்மையாகத் திட்டமிடப்பட்ட தந்திரோபாயப் போர் நடவடிக்கைகளையே பிரபாகரன் வலியுறுத்துவார். உணர்ச்சிவசப்பட்டு, முரட்டுத் துணிச்சலோடு சாதனை புரிந்து காட்ட வேண்டுமென அவசரப்பட்டுச் செயற்படுவதை அவர் அறவே விரும்பவில்லை. புலிகள் இயக்கம் தோன்றிய ஆரம்ப காலத்திலிருந்தே போராளிகளதும் அமைப்பினதும் பாதுகாப்பில் அவர் மிகவும் அக்கறை கொண்டிருந்தார். அரச காவல்துறையினர், உளவாளிகள்,

காட்டிக் கொடுக்கும் துரோகிகள் ஆகியோருக்கு எதிராக ஆரம்பத்திலிருந்தே ஆயுத வன்முறைத் தாக்குதல்களை நடத்தியபோதும் இயக்கத்தின் இருப்பை பல வருடங்களாக இரகசியமாகவே வைத்திருந்தார் பிரபாகரன். தொடர்ச்சியாக மேற்கொள்ளப்பட்ட சில ஆயுத வன்முறை நடவடிக்கைகளுக்கு 1978 ஏப்ரல் 25 அன்றே விடுதலைப் புலிகள் இயக்கம் உரிமை கோரியது.

விடுதலைப் புலிகளது கெரில்லா முறையிலான ஆயுதப் போராட்டத்தின் தோற்றமானது, தமிழரது தேசியப் போராட்டத்தில் ஒரு புதிய வரலாற்றுத் திருப்பத்தை ஏற்படுத்தியது. மக்கள் ஆதரவுபெற்ற ஆயுதப் போராட்டமாக அதன் பரிமாணம் விரிவடைந்தது. அரசியல் இராணுவக் கட்டமைப்புகளைக் கொண்ட விடுதலை இயக்கமாக விரைவில் புலிகள் இயக்கம் உருவகம் பெற்றது. சாத்வீக அரசியல் போராட்டங்களில் நம்பிக்கை தளர்ந்து, ஆயுதப் போராட்டம் வாயிலாக அரச அடக்குமுறையை எதிர்க்க வேண்டுமென விரும்பிய தமிழ் இளம் புரட்சிவாதிகளின் அபிலாசைகளுக்கு புத்துயிரூட்டும் வகையில் புலிகள் இயக்கத்தின் கட்டமைப்பும் செயற்பாடும் அமையப் பெற்றன. மிகவும் நுட்பமான முறையில் போர்த் திட்டங்களையும் தந்திரோபாயங்களையும் வகுத்து, எதிரியை வியக்கச் செய்யும் வகையில் அவற்றை நடைமுறைப்படுத்திய பிரபாகரன், விரைவிலே தமிழரின் ஆயுதம் தரித்த விடுதலைப் போரின் நம்பிக்கை நட்சத்திரமாக மாறினார். அவர் கட்டியெழுப்பிய விடுதலைப் புலிகள் அமைப்பும் தமிழரின் தேச சுதந்திரப் போராட்டத்தை முன்னெடுத்துச் செல்லும் புரட்சி இயக்கமாக முகிழ்ந்தது.

## தனியரசு நிறுவ தமிழ் மக்கள் கொடுத்த ஆணை

விடுதலைப் புலிகள் இயக்கம் தமது அரசியல் இராணுவக் கட்டமைப்பை நிறுவி, அவற்றை வலுப்படுத்தி விரிவாக்கம் செய்வதில் ஒருபுறம் ஈடுபட்டிருக்க மறுபுறம் தமிழ் அரசியல் அரங்கில் முன்னெப்பொழுதும் நிகழாத மாபெரும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்வுகள் இடம்பெற்றன.

தமிழர்களுக்கு எதிராக ஒடுக்குமுறை தாங்கொணா அளவிற்கு உக்கிரமடைந்த காலகட்டம் அது. தமிழ் சிங்கள

தேசங்கள் மத்தியில் முரண்பாடு முற்றி, இன இணக்கப்பாடும் சகவாழ்வும் சாத்தியமற்றது என்ற நிலைமை உருவாகியிருந்தது. இக் காலகட்டத்தில்தான் தமிழீழ விடுதலைப் புலிகள் வலுமிக்க இயக்கமாக உருவாகி, உருப்படியான செயற் திட்டத்தை முன்வைக்குமாறு தமிழ் அரசியல் கட்சிகள் மீது அழுத்தம் செலுத்தியது. இப்படியான வரலாற்றுச் சூழ்நிலையில், 1976 மே மாதம் தமிழர் ஐக்கிய முன்னணி யாழ்ப்பாணம் வட்டுக்கோட்டையில் தேசிய மாநாடு ஒன்றைக் கூட்டியது. அம் மாநாட்டில் தமிழினத்திற்கு தேசிய விடுதலை கோரும் வரலாற்றுத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இந்த முக்கிய கூட்ட அமர்விற்கு, எஸ்.ஜே.வி செல்வநாயகம் தலைமை தாங்கினார். தமிழர் ஐக்கிய முன்னணி என்ற பெயரை மாற்றி தமிழர் ஐக்கிய விடுதலைக் கூட்டணி என்று அழைக்கும் தீர்மானமும் இம்மாநாட்டில் நிறைவேறியது. தமிழீழத் தனியரசை நிறுவும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தீர்மானமும் இங்கு நிறைவேறியது. அந்தத் தீர்மானம் வருமாறு:

> "தமிழர் விடுதலை முன்னணியின் முதலாவது தேசிய மாநாடு, வட்டுக்கோட்டை தொகுதியிலுள்ள பண்ணாகத்தில் 1976 மே 14ஆம் நாள் நடைபெற்ற போது கீழ்கண்ட பிரகடனம் செய்யப்பட்டது. இலங்கைத் தமிழ் மக்கள், ஐரோப்பிய ஆக்கிரமிப்பாளர்களின் ஆயுத பலத்தால் வெற்றி கொள்ளப்படும் வரை, சிறப்பு வாய்ந்த பழம்பெரும் மொழி, மதங்கள், தனித்துவமான பண்பாடு, பாரம்பரியம் ஆகியனவற்றைக் கொண்டிருந்ததோடு, பல நூற்றாண்டுகளாக ஒரு தனித்துவமான பிரதேசத்தில் தனியரசை அமைத்து சுதந்திரமாக வாழ்ந்த வரலாறும் உடையவர்கள். இவற்றிற்கு மேலாக, தங்களது சொந்த மண்ணில் தனி இனமாக தங்களைத் தாங்களே ஆட்சிபுரிந்து வாழவேண்டும் என்ற உறுதிப்பாடும் உடையவர்கள். இத்தகைய பண்புகளைப் பெற்றவர்கள் என்பதால் தமிழர்கள் சிங்களவர்களிடமிருந்து வேறுபட்ட தனித்துவமான தேச அமைப்பைக் கொண்டவர்கள். இலங்கையின் 1972ஆம் ஆண்டின் குடியரசுக்கான அரசியல் யாப்பு, புதிய குடியேற்ற எஜமான்களாகிய சிங்களவர்களின் ஆட்சியின் கீழ் தமிழர்களை ஓர் அடிமை இனமாக மாற்றியுள்ளது.

தவறான வழியில் பெற்றெடுத்த ஆட்சியதிகாரத்தைக் கொண்டு சிங்களவர்கள் தமிழ் மக்களின் நிலவுரிமை, மொழியுரிமை, குடியுரிமை, பொருளாதார வாழ்வுரிமை, கல்வியுரிமை, வேலைவாய்ப்புரிமை ஆகியனவற்றை மறுத்து, அவர்களது தேசியக் கட்டமைப்பின் அடிப்படைகளையே அழித்துள்ளனர். ஆகவே, தமிழீழத் தனியரசு நிறுவுவது குறித்து வடகிழக்கிற்கு வெளியே வாழும் பெருந்தோட்டத் தொழிற் சங்கமாகிய இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ் தெரிவித்த தயக்கத்தை கருத்தில் எடுக்கும் அதேவேளை, தமிழர் தேசத்தின் பாதுகாப்பை உறுதிப்படுத்தும் பொருட்டு, ஒவ்வொரு தேசத்திற்கும் உரித்தான சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில், சுதந்திரமான இறையாண்மையுடைய, மத சார்பற்ற, சோஷலிச தமிழீழ அரசு மீளப்பட்டு மீள்நிர்மாணம் செய்யப்படவேண்டுமென இம்மாநாடு தீர்மானிக்கிறது.''

தமிழர் ஐக்கிய விடுதலைக் கூட்டணியினர் முன்வைத்த தனியரசுக் கோரிக்கையின் பரீட்சார்த்த களமாக 1977 ஜுலை பொதுத் தேர்தல் அமைந்தது. அரசியல் சுதந்திரம் கோரி தேசியப் போராட்டம் ஒன்றைத் தொடுப்பதற்கு தெளிவான மனு ஒன்றைத் தமிழ் மக்களிடம் கேட்டு கூட்டணியினர் தேர்தலில் போட்டியிட்டனர். அதற்கேற்ப அவர்களது தேர்தல் விஞ்ஞாபனமும் பின்வருமாறு அமைந்தது.

"தமிழ் இனம் சுயநிர்ணய அடிப்படையில் தனது தாயக பூமியில் இறையாண்மையை நிறுவத் தீர்மானம் எடுத்தாக வேண்டும். சிங்கள அரசுக்கும் உலகத்துக்கும் இந்தத் தீர்மானத்தைப் பிரகடனம் செய்வதற்கு ஒரே வழி, தமிழர் ஐக்கிய விடுதலைக் கூட்டணிக்கு வாக்களிப்பதேயாகும். இவ் வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்படும் தமிழ் பேசும் பிரதிநிதிகள், இலங்கைத் தேசிய அரச மன்ற உறுப்பினர்களாக இயங்கும் அதேவேளை, தமிழீழத் தேசிய மன்றமாகவும் தம்மை வரித்துக் கொண்டு தமிழீழ அரசுக்கான அரசியல் யாப்பு ஒன்றை வரைந்து, அந்த யாப்பை அமைதி வழிகளாலோ, நேரடி நடவடிக்கையாலோ,

போராட்டத்தாலோ நடைமுறைக்குக் கொண்டுவந்து தமிழீழத்தின் சுதந்திரத்தை நிறுவவேண்டும்.''

தமிழரின் தேசிய இனப்பிரச்சினையைப் பொறுத்தவரையில் இப் பொதுத் தேர்தலின் தீர்ப்பு மிகவும் முக்கியமானதாக அமைந்தது. சுதந்திரமான தமிழ் அரசை நிறுவுவதற்கான மக்கள் ஆணை கோரியே இத் தேர்தல் நடைபெற்றது. கூட்டணியினர் கோரிய மனுவுக்கு அமோக ஆதரவு தெரிவித்து தமிழ் மக்கள் வாக்களித்தனர். இத் தேர்தல் வாயிலாக வடகிழக்கில் கூட்டணியினர் 17 ஆசனங்களில் வெற்றி பெற்றனர். உருப்படியான நடவடிக்கைகளை மேற்கொண்டு தனித் தமிழ் அரசை நிறுவும் பெரும் பொறுப்பு, இத் தேர்தலின் தீர்ப்பு மூலம் கூட்டணித் தலைமையிடம் ஒப்படைக்கப்பட்டது. ஆனால் தாம் எதற்காகத் தெரிவு செய்யப்பட்டார்களோ அந்த இலட்சியத்தை அடைவதற்கான அரசியல் தூர நோக்கோ, நடைமுறைச் சாத்தியமான செயற்திட்டமோ தமிழ் நாடாளுமன்றத் தலைவர்களிடம் இருக்கவில்லை. அரசியல் சுதந்திரம் நோக்கிய பாதையில் உருப்படியான நடவடிக்கைகள் எதையுமே எடுக்கத் தவறிய அவர்கள் பாராளுமன்ற இருக்கைகளில் ஒட்டிக் கொண்டிருந்தார்கள்.

ஜே.ஆர்.ஜெயவர்த்தனா தலைமையில் இயங்கிய வலதுசாரி ஐக்கிய தேசியக் கட்சி, 1977 பொதுத் தேர்தலில் மிகப் பெரும் வெற்றியீட்டி 85 விழுக்காடு இருக்கைகளை நாடாளுமன்றத்தில் கைப்பற்றியது. பாரம்பரிய இடதுசாரிக் கட்சிகள், ஓர் இருக்கையையேனும் பெறாது முற்றாக தோற்கடிக்கப்பட்டன. வரலாற்றில் முதல் தடவையாக நாடாளுமன்றத்தின் முதல்நிலை எதிர்க்கட்சியாக தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி இடம்வகித்தது. இறையாண்மையுடைய தனித் தமிழ் அரசாக திகழ்வதற்கான கோரிக்கையோடு தமிழர் ஒரு புறமும், சுதந்திரமாக வாழ விரும்பும் தமிழினத்தை அடிமைப்படுத்தி, மேலாண்மை செலுத்துவதற்கு முற்றுமுழுதான அரசதிகாரம் கொண்ட சிங்களக் கட்சி மறுபுறமுமாக பாராளுமன்றம் மோதலுக்கான களமாகியது. தேர்தல் முடிந்த கையோடு, இன முரண்பாடு கூர்மை அடைந்தது. தமிழருக்கு எதிராகத் தொடுக்கப்பட்ட இனக் கலவரம் முன்பைவிட குரூரம் மிகுந்ததாக தோற்றம் எடுத்தது.

நாடெங்கும் பரவிய இனவெறிக் கலவரத்தில்

நூற்றுக்கணக்கான தமிழர் படுகொலை செய்யப்பட்டனர். ஆயிரக்கணக்கானோர் அகதிகளாயினர். பல கோடி பெறுமதியான தமிழர் சொத்துக்கள் அழிக்கப்பட்டன. அரச காவல்துறையினரும், ஆயுதப் படையினரும் பகிரங்கமாக காடையருடன் இணைந்து தீ வைத்தல், கொள்ளையடித்தல், பாலியல் வல்லுறவாடல், கொலை புரிதல் ஆகியவற்றில் ஈடுபட்டனர். நாடு முழுவதையும் உலுப்பிக் கொண்டிருந்த இனவெறி வன்செயல்களைக் கட்டுப்படுத்துவதற்குப் பதிலாக, அரசாங்கத் தலைவர்கள் இனவெறியை மேலும் தூண்டும் அறிக்கைகளை வெளியிட்டுக் கொண்டிருந்தனர்.

இந்த இனவெறிக் கலவரம் தமிழ் அரசியல் களத்தில் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தியது. தனியரசை நிறுவும் தேசிய சுதந்திரத்திற்காகப் போராட வேண்டும் என்ற தீவிரவாத இளைஞரின் உறுதிப்பாட்டிற்கு இந் நிகழ்வானது மேலும் உரமேற்றியது. தமிழ்ப் பாராளுமன்றத் தலைமையின் கையாலாகாத்தனத்தையும் இது அம்பலப்படுத்தியது. தமிழ் மக்களுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றத் தவறிய தமிழ் அரசியல் தலைவர்கள், தங்களது அரசியல் வாழ்வை நியாயப்படுத்த அரசுடன் இணைந்து போகவும் வழி தேடினார்கள். அரச அதிபர் ஜே.ஆர்.ஜெயவர்த்தனா தனக்கேயுரிய சாணக்கிய தந்திரத்தோடு செயற்பட்டார். சுதந்திரத் தனித் தமிழ் அரசை நிறுவும் கொள்கையில் தமிழ்த் தலைவர்கள் உறுதியாக இருக்கவில்லை என்பதையும் மாற்று அரசியற் தீர்வுக்கு வழிதேடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் ஜெயவர்த்தனா அறிந்து கொண்டார். ஆகவே, சிங்கள அரசுக்கு உண்மையான அச்சுறுத்தல், போராளி இளைஞரின் புரட்சிகர அரசியலே என்று அவர் உணர்ந்து கொண்டார். எனவே, விடுதலைக்கான போரொலி எந்தத் தளத்திலிருந்து வருகிறதோ, அந்தப் புரட்சிகர இளைஞர் தளத்தை நசுக்குவதற்கு அனைத்து அடக்குமுறை வழிகளையும் புதிய அரசு கையாண்டது. ஈவிரக்கமற்ற ஒடுக்குமுறையைக் கைகொண்ட சிங்கள அரசு, தமிழ் இளைஞர்களை ஒடுக்குவதற்கு மேலதிக அதிகாரங்களை காவல்துறைக்கும் இராணுவத்தினருக்கும் வழங்கியது. அரச அடக்குமுறை ஒரு புறமும் அதற்கு சவாலாக ஆயுத எதிர்ப்புமுறை மறுபுறமுமாக, ஆயுதப் போராட்டம் அனல் கக்கும் உக்கிரத்தில் தமிழர் தாயகம் எங்கும் பரவியது.

## விடுதலைப் புலிகளின் போராட்ட களம்

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் புரட்சிகர ஆயுதப் போராட்டத்தின் அரசியல் இராணுவ முக்கியத்துவத்தை புரிந்து கொள்ள வேண்டுமாயின், பல்வேறு கால கட்டங்களில் அது பெற்ற வரலாற்று ரீதியான வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் புரிந்து கொள்வது அவசியம். தமிழரின் விடுதலைப் போராட்டத்தை நசுக்கி அழிக்கும் நோக்கத்தோடு மிகவும் நுட்பமான கட்டமைப்பைக் கொண்ட அரச புலனாய்வுத்துறை இயங்கி வந்தது. அதில் தமிழ் இரகசியக் காவல்துறை அதிகாரிகள் முக்கிய பங்கை வகித்தார்கள். பணத்திற்காக காட்டிக் கொடுக்கின்ற குடிமக்கள் சிலரும் உளவாளிகளாகச் செயற்பட்டனர். இந்தப் புலனாய்வுக் கட்டமைப்பானது தமிழரின் தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு, குறிப்பாக புதிதாகத் தோற்றமெடுத்து வளர்ந்து வரும் விடுதலை அமைப்பான புலிகள் இயக்கத்திற்கும் பெரும் அச்சுறுத்தலாக விளங்கியது. சிங்கள அரசின் கிளர்ச்சி முறியடிப்பு இயக்கத்தை முன்னின்று நடத்தி வந்த புலனாய்வுத் துறையினர் நூற்றுக்கணக்கான தீவிரவாதத் தமிழ் இளைஞர்களையும் அரசியற் செயற்பாட்டில் ஈடுபட்ட மாணவர்களையும் வேட்டையாடிச் சிறைபிடித்து தாங்கொணாச் சித்திரவதைக்கு ஆளாக்கி வந்தனர். இதனால் புதிதாக ஆயுதமேந்திப் போர்க் களத்தில் புகுந்த புலி வீரர்களுக்கு அரச புலனாய்வுப் பிரிவு ஒரு ஆபத்தான சவாலாக அமைந்தது. ஆகவே, இந்தச் சவாலை எதிர்கொண்டு போராட நிர்ப்பந்திக்கப்பட்ட விடுதலைப் புலிகள் புலனாய்வுத் துறையின் கட்டமைப்புக்கு எதிராக தமது ஆயுதப் போரை முடுக்கிவிட்டனர். வெற்றிகரமாகப் புலிகள் நிகழ்த்திய தாக்குதல்கள் காரணமாக அரச புலனாய்வுத் துறையின் கட்டமைப்பும் செயற்பாடும் தமிழர் தாயகத்தில் செயலிழந்து சிதைவுற்றது.

விடுதலைப் புலிகளின் ஆரம்பகால கெரில்லாத் தாக்குதல்களின் விளைவாக பல காவல்துறைப் புலனாய்வு அதிகாரிகளும், உளவாளிகளும், காட்டிக் கொடுக்கும் துரோகிகளும் கொன்றழிக்கப்பட்டனர். ஆயினும், ஒரு குறிப்பிட்ட அதிரடித் தாக்குதலே சிங்கள ஆட்சிபீடத்தை அதிர்ச்சிக்கு ஆளாக்கியது. இச் சம்பவம் 1978 ஏப்ரல் 7 அன்று நிகழ்ந்தது.

வன்னியில், முருங்கனுக்கு அருகாமையிலுள்ள அடர்ந்த காட்டினுள் விடுதலைப் புலிகளின் ஒரு சிறிய பயிற்சிப் பாசறை

இருந்தது. இங்கு சில போராளிகள் ஆயுதப் பயிற்சி எடுத்து வந்தனர். இந்தப் பயிற்சிப் பாசறை அமைந்துள்ள தளம் பற்றிய தகவல், ஒரு உளவாளி வாயிலாக புலனாய்வுத் துறையினருக்குத் தெரிய வந்தது. அதனைச் சுற்றி வளைத்து தாக்கியழிக்கும் நோக்குடன் காவல்துறை அதிகாரி பஸ்தியாம்பிள்ளை தலைமையிலான அணி ஒன்று முருங்கன் காட்டினுள் புலிகளின் தளம் நோக்கி நகர்ந்தது. ஒரு சில போராளிகளே, அவ்வேளை அம் முகாமில் தரித்திருந்தனர். துப்பாக்கி முனையில் காவல்துறையினரால் திடீரென சுற்றி வளைக்கப்பட்ட பொழுது எமது போராளிகள் பதட்டமடையாது அமைதியாக இருந்தனர். அவ்வேளை புலிகளின் தாக்குதல் தளபதிகளில் ஒருவரான லெப்.செல்லக்கிளி அம்மான் மிக லாவகமாக காவல்துறை அதிகாரி ஒருவர் மீது பாய்ந்து, அவருடைய சிறிய யந்திரத் துப்பாக்கியைப் பறித்தெடுத்து, கண்மூடித் திறப்பதற்குள் சுற்றிவளைத்த காவல்துறைக் குழுவினரை சுட்டு வீழ்த்தினார். இந்தச் சம்பவத்தில் காவல்துறைப் புலனாய்வு அதிகாரிகளான பஸ்தியாம்பிள்ளை, பேரம்பலம், பாலசிங்கம் ஆகியோரும், வண்டிச் சாரதியான சிறிவர்த்தனாவும் அந்த இடத்திலேயே கொல்லப்பட்டனர்.

காவல்துறை அதிகாரி பஸ்தியாம்பிள்ளை சிங்கள ஆட்சியாளரின் கையாள். மிகக் கொடுமையான மனிதர். தமிழ் இளைஞரின் புரட்சி அரசியலை பூண்டோடு அழிக்கச் சபதமெடுத்தவர். ஈவிரக்கமற்ற சித்திரவதைக்கு புகழ்போனவர். தீவிரவாத இளைஞருக்கு அவர் சிம்ம சொப்பனம். புலிகள் இயக்கப் போராளிகளால் இவர் கொன்றழிக்கப்பட்டது தமிழ் இளம் சமூகம் மத்தியில் ஒரு புத்துணர்வை ஏற்படுத்தியது. ஆயுதப் போராட்டத்தின் ஆரம்ப காலத்தில் அரச புலனாய்வுத் துறையினருக்கு விழுந்த பலத்த அடியாக இந் நிகழ்வைக் கொள்ளலாம். இதனால் அரசாங்கம் கலங்கிப் போயிருந்தது.

பஸ்தியாம்பிள்ளையின் காவல்துறை அணி அழிக்கப்பட்டதற்கும், அதற்கு முன்னராக பல புலனாய்வுக் காவல்துறை அதிகாரிகள், காட்டிக் கொடுத்த துரோகிகள் கொன்று ஒழிக்கப்பட்டதற்கும், முதற்தடவையாக அதிகார பூர்வமாக உரிமைகோரி, 1978 ஏப்ரல் 25 அன்று விடுதலைப் புலிகள் இயக்கம் அறிக்கை வெளியிட்டது. விடுதலைப் புலிகளின் அறிக்கையை ஊடகங்கள் முக்கியத்துவம் கொடுத்துப் பிரசுரித்தன. ஆயுதப் போராட்டம் மூலமாக தமிழரின்

தேசிய விடுதலையை வென்றெடுக்கும் புரட்சிகரப் பாதையில் இறங்கியுள்ளதை விடுதலைப் புலிகள் இயக்கம் இந்த உரிமைகோரும் அறிக்கை வெளியிட்டு உலக அரங்கில் தன்னைப் பகிரங்கப்படுத்தியது. உரிமை கோரும் புலிகளின் பட்டியலில், யாழ்ப்பாண நகர முதல்வரும் சிறீலங்கா சுதந்திரக் கட்சியின் வடபிராந்திய ஏற்பாட்டாளருமான அல்பிரட் துரையப்பா, பொத்துவில் நாடாளுமன்ற உறுப்பினர் சி.கனகரெத்தினம் வேறும் பல பிரபல்யம் பெற்ற காவல்துறை, புலனாய்வு அதிகாரிகளும் அடங்கியிருந்தனர்.

தமிழர்களின் ஆயுதம் தரித்த எதிர்ப்பியக்கம் ஒன்று தலைமறைவாக இயங்கி வருவதை அறிந்து அதிர்வடைந்த சிங்கள அரசு, உடனடியாகவே, 1978 மே மாதத்தில் பாராளுமன்றச் சட்டமூலமாக புலிகள் இயக்கத்தை தடைசெய்தது. தமிழீழ விடுதலைப் புலிகள் மீதான இத் தடைச் சட்டம் தமிழரின் ஆயுதக் கிளர்ச்சியை முற்றாக நசுக்கிவிடும் நோக்குடன் அரச ஆயுதப் படைகளுக்கு சர்வ அதிகாரங்களை வழங்கியது. எவரையும் கைது செய்தல், நீதிமன்ற விசாரணையின்றி நீண்ட காலம் சிறை வைத்தல், சித்திரவதை செய்தல், சட்ட விரோதமாக கொலை செய்தல் போன்ற கொடும் செயல்கள் புரிய இச் சட்டம் படையினருக்கு அதிகாரமளித்தது. இக் கொடிய தடைச் சட்டத்தை நிறைவேற்றியதை அடுத்து, பெருமளவிலான படை அணிகளை புலி வேட்டையில் இறக்கி தமிழர் தாயகத்தை முழுமையான இராணுவ ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்தது சிங்கள அரசு.

தமிழ்ப் பகுதிகளில் சிங்கள இராணுவ அடக்குமுறையை தீவிரப்படுத்தியதை அடுத்து, 1978 செப்டெம்பர் 7 அன்று, புதிய அரசியல் யாப்பு ஒன்றை ஜெயவர்த்தனா நடைமுறைப்படுத்தினார். இந்தப் புதிய யாப்பு ஜெயவர்த்தனாவுக்கு முழுமையான சர்வாதிகார அதிகாரங்களை வழங்கியது. அத்துடன் சிங்கள மொழிக்கும் பௌத்த மதத்திற்கும் சிறப்புரிமைகளையும் உயர் தகமைகளையும் வழங்கியதோடு, தமிழ் மொழியை இரண்டாந்தர நிலைக்கு தரம் இறக்கியது. புதிய யாப்பானது ஜனாதிபதியை 'அரச அதிபராகவும், நிறைவேற்று அதிகாரமுடைய அரசாங்கத் தலைவராகவும், முப்படைகளதும் பிரதம தளபதியாகவும்' பதவி ஏற்றியது. அமைச்சரவை உறுப்பினர்களை நியமிக்கவும், பதவி நீக்கவும், நாடாளுமன்றத்தைக் கலைக்கவும் அவருக்கு அதிகாரம் பொறுப்பித்தது. சிங்கள அரசின் ஒற்றையாட்சித்

தன்மையை உறுதிப்படுத்திய புதிய யாப்பிலே திருத்தம் கொண்டு வருவதானால், அல்லது அதைக் கைவிடுவதானால் நாடாளுமன்றத்தில் மூன்றில் இரண்டு பங்கு அதிகப் பெரும்பான்மை வாக்குகளும், வாக்காளர்களின் கருத்துக் கணிப்பு ஆதரவும் பெற்றாக வேண்டும் என்று விதித்தது. தமிழ்ப் பிரதிநிதிகள் 1978இன் புதிய யாப்பை அல்லது அதற்கு முந்திய 1972ஆம் ஆண்டு யாப்பைத் தயாரிப்பதிலோ பிரகடனப்படுத்துவதிலோ பங்குபற்றவில்லை. புதிய யாப்புக்கு எதிராக தமிழ் நாடாளுமன்றக் கட்சி, தமிழ் மக்களை அணி திரட்டி பெரும் எதிர்ப்பைத் தெரிவிக்கத் தவறிவிட்டது. ஆனால், தமிழ் மக்களின் அதிருப்தியை அனைத்துலக சமுதாயத்தின் கவனத்திற்கு கொண்டுவர விரும்பிய விடுதலைப் புலிகள், புதிய அரசியல் யாப்பு நாடாளுமன்றத்தில் அறிமுகப்படுத்தப்பட்ட அன்று, இலங்கை பயணி விமானத்துறைக்குச் சொந்தமாக ஒரேயொரு ‘அவ்ரோ’ விமானத்தை குண்டு வைத்துத் தகர்த்தது.

விரிவாக்கம் கண்டுவரும் ஆயுதப் போராட்டத்தைப் பூண்டோடு அழிப்பதற்காக அடக்குமுறை வழிகளை அரசு கைக்கொண்டது. விடுதலைப் புலிகள் மீதான தடைச் சட்டத்தை 1979 ஜூலை 20 அன்று நீக்கிவிட்டு, அதனிடமாகப் பயங்கரவாதத் தடைச்சட்டத்தை அரசு அமுலாக்கியது. இதில் அடங்கிய விதிகள், சட்ட ஆட்சியின் நீதி நியமங்களை உதாசீனப்படுத்துவனவாக அமைந்தன. பதினெட்டு மாத காலம் எவரையும் தடுப்புக் காவலில் வைக்க இடமளித்தது. சித்திரவதை மூலம் பெறப்படும் ஒப்புதல்களை வழக்கில் வாக்குமூலமாக ஏற்க அனுமதித்தது. இந்தச் சட்டம் நிறைவேறியதும் வடபுல தலைநகரான யாழ்ப்பாணத்தில் அவசர காலச் சட்டத்தை அரசு நடைமுறைப்படுத்தியது. பிரிகேடியர் வீரத்துங்கவின் தலைமையில் கூடுதலான இராணுவப் படையணிகளைத் தமிழ்ப் பகுதிகளுக்கு அனுப்பியது. ஆறு மாதத்தில் ‘பயங்கரவாதத்தை’ வேரோடு சாய்க்க வேண்டும் என்றும் அவருக்குக் காலக்கெடு விதித்தது. சட்டம் தந்த அதிகாரமும் அரசு கொடுத்த உற்சாகமும் கூடி வர, வன்முறையின் உச்ச கட்டமாக இராணுவ பயங்கரவாதத்தைத் தமிழ் மக்கள் மீது பிரிகேடியர் வீரதுங்க ஏவி விட்டார். நூற்றுக்கணக்கான இளைஞர்கள் கைது செய்யப்பட்டு மிருகத்தனமான சித்திரவதைக்கு ஆளானார்கள். பலர் சுட்டுக் கொல்லப்பட்டார்கள். அவர்களுடைய உடலங்கள் வீதியோரம்

வீசப்பட்டன. இந்த ஒடுக்குமுறை நடவடிக்கைகள் உலகெங்கும் வாழும் தமிழ் மக்கள் இதயங்களில் பலத்த குமுறலைத் தோற்றுவித்தது. அனைத்துலகச் சட்ட வல்லுநர் ஆணைக் குழுவும் அனைத்துலக மன்னிப்பு சபையும் பயங்கரவாதச் சட்டம் தொடர்பாக பலத்த கண்டனங்களைத் தெரிவித்தன. பிரிகேடியர் வீரத்துங்கவுக்கு வழங்கப்பட்ட ஆறுமாத காலக் கெடு முடிவடைந்த போது, அரச பயங்கரவாதத்தின் பெறுபேறாக விடுதலைப் புலிகளின் படைபலம் வெகுவாகப் பெருகியது. கொதிப்படைந்த தமிழ் மக்களின் தேசிய விடுதலை உணர்வும் வெகுவாகப் பொங்கி எழுந்தது.

தமிழ்த் தாயக மண்ணிலே சிறீலங்கா அரசு தனது இராணுவ மேலாண்மையையும் ஒடுக்குமுறையையும் தீவிரப்படுத்திக் கொண்டிருக்க, விடுதலைப் புலிகளின் தலைமை, தனது இயக்கத்தை விரிவுபடுத்திப் பலப்படுத்தும் நடவடிக்கைத் திட்டத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தது. கிளர்ச்சியை நசுக்கும் அரசின் திட்டத்தை முறியடிப்பதற்கு, மாற்று நடவடிக்கையாக தமது கெரில்லாப் படைக் கட்டமைப்பைப் பலப்படுத்தவும் தமது அரசியல் பிரிவை விரிவுபடுத்தவும் புலிகள் இயக்க தலைமை தீர்மானித்தது. ஆகவே, அரசுக்கு எதிரான ஆயுதம் தரித்த இராணுவ நடவடிக்கைகள் அனைத்தையும் 1979-1980 காலப் பகுதியில் தவிர்த்துக் கொண்டு, விடுதலை அமைப்பைப் பலப்படுத்துவதில் முழுமையாகக் கவனம் செலுத்தியது. இந்தக் கால கட்டத்திலேயே சாதாரண மக்களுக்கு அரசியல் அறிவையும் தேசிய விழிப்புணர்வையும் ஊட்டி வளர்த்து, அவர்களை இயக்க அமைப்புடன் அணிசேர்த்து ஒழுங்கமைத்து, தேச விடுதலைப் போராட்டத்தை வெகுசன அரங்கில் முன்னெடுக்கும் நோக்குடன் ஒரு செயற்திட்டம் வகுத்து நடைமுறைப்படுத்தப்பட்டது. இக் கால கட்டத்தில்தான் புலம்பெயர்ந்து ஈழத் தமிழ் மக்கள் வாழும் வெளிநாடுகளில் கிளை அமைப்புக்களை நிறுவி, அனைத்துலகக் கட்டமைப்பை விரிவுபடுத்திப் பலப்படுத்தவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. எழுபதுகளின் இறுதிக் கட்டத்தில்தான் லண்டனிலிருந்து இயக்க அரசியல் பரப்புரை வேலைகளில் பங்களிக்க எனக்கும் வாய்ப்புக் கிட்டியது.

1978இன் ஆரம்பத்தில், லண்டனில் கலாநிதி பட்டப் படிப்புக்கான ஆய்வில் நான் ஈடுபட்டிருந்த காலகட்டத்தில், முதன் முதலாக விடுதலைப் புலிகள் இயக்கத்துடன் எனக்குத் தொடர்பு

ஏற்பட்டது. அவ்வேளை விடுதலைப் புலிகளின் லண்டன் கிளைப் பிரதிநிதிகளுடன் சேர்ந்து பரப்புரைப் பணிகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தேன். இயக்கத்தின் அரசியல் வேலைத் திட்டத்திற்கு அமைவாக, கொள்கை பரப்புரை எழுத்துகளாக பிரசுரங்களையும் சிறு நூல்களையும் எழுதினேன். '**அரச பயங்கரவாதமும் ஆயுதப் புரட்சியும்**', '**சோசலிச தத்துவமும் கெரில்லா யுத்தமும்**', '**சோசலிசத் தமிழீழம் நோக்கி**', '**தமிழர் தேசிய இனப்பிரச்சினை**' (ஆங்கிலம்), ஆகிய சிறு நூல்களும் இவற்றில் அடங்கும். தலைவர் பிரபாகரனின் வேண்டுகோளுக்கு அமைய, சே குவாரா, மாசே துங், ஆகியோரது போரியல் அனுபவப் படைப்புகளில் இருந்து முக்கிய பகுதிகளை தமிழில் மொழிபெயர்த்து அனுப்பி வைத்தேன். 1979இல் முதன்முதலாக பிரபாகரனை சென்னையில் சந்தித்தது, இயக்கப் போராளிகளுக்கு அரசியல் வகுப்புகளை நடத்தியது போன்ற எமது ஆரம்ப கால இயக்க ஈடுபாடுகளை எனது மனைவி திருமதி. அடேல் பாலசிங்கம் '**சுதந்திர வேட்கை**' என்ற தனது நூலில் விபரமாக விளக்கியிருக்கிறார்.

1981ஆம் ஆண்டிலிருந்து தமிழீழ தாயகத்தில் சிங்கள இராணுவத்தினதும் காவல்துறையினதும் அடக்குமுறை தீவிரமாகியது. அதற்கு எதிர்விளைவாக விடுதலைப் புலிகளது கெரில்லாத் தாக்குதல்களும் முனைப்புற்றன.

1981 மே 31 அன்று நள்ளிரவில் சிங்களக் காவல்துறையினர் வெறியாட்டமாடி யாழ்ப்பாண நகரை தீ வைத்துக் கொழுத்தினர். தீ வைத்தல், கொள்ளையடித்தல், கொலைபுரிதலாக அரச பயங்கரவாதம் யாழ்ப்பாணத்தில் தலை விரித்தாடியது. நூற்றுக்கணக்கான கடைகள் தீப்பற்றி எரிந்து சாம்பலாகின. யாழ்ப்பாணச் சந்தைச் சதுக்கம் தீயிடப்பட்டது. தமிழ்ப் பத்திரிகைப் பணிமனை ஒன்றும், யாழ்ப்பாணப் பாராளுமன்ற உறுப்பினரது வீடும் தீக்கிரையாக்கப்பட்டன. இந்த இனவாத வன்செயல் வெறியாட்டத்தில் என்றுமே மன்னிக்க முடியாத படுபாதக நிகழ்வொன்றும் இடம்பெற்றது. தமிழினத்திற்கு எதிரான கொடூரப் பண்பாட்டுப் படுகொலையாக யாழ்ப்பாணப் பொதுநூல் நிலையம் தீமூட்டி அழிக்கப்பட்டது. 90,000 க்கும் அதிகமான, விலை மதிக்க முடியாத இலக்கிய, வரலாற்றுப் பதிவேடுகள் தீயில் எரிந்து நாசமாகின. இந்தக் கொடூரமான நிகழ்வானது உலகத் தமிழ் மக்களின் இதயங்களைக் கொதிப்புறச் செய்தது. ஜெயவர்த்தனாவின்

ஆட்சிபீடத்திலிருந்த இரு அமைச்சர்களான, சிறில் மத்தியூவும், காமினி திசநாயக்காவும் அவ்வேளை யாழ்ப்பாணத்தில் தங்கியிருந்து சிங்களக் காவல்துறைக் காடையரின் இப் பயங்கரவாதச் செயல்களை நெறிப்படுத்தி வழிநடத்திக் கொண்டிருந்தார்கள்.

யாழ்ப்பாணம் தீயிடப்பட்டதை அடுத்து, மூன்று மாதங்களில், நாடளாவிய இனவெறிக் கலவரம் மீண்டும் தலைவிரித்து ஆடியது. அரசின் முன்னணி உறுப்பினர்கள் திட்டமிட, ஆயுத படைகள் உதவி புரிய, சிங்களக் காடையரும் அடாவடிக்காரரும் கலவரத்தில் ஈடுபட்டனர். இக் கொடிய சிங்கள இனவெறிக் காட்டு மிராண்டித்தனத்துக்கு தமிழ் மக்கள் மீண்டும் பலிக்கடா ஆனார்கள். இக் கலவரத்தில் நூற்றுக்கணக்கான தமிழர்கள் கொலை செய்யப்பட்டார்கள். ஆயிரமாயிரம் பேர் வீடு வாசல்களை இழந்தார்கள். பல கோடி பெறுமதியான சொத்துக்களை அழிவிலே பறி கொடுத்தார்கள். திட்டமிட்ட வன்செயல் மீண்டும் மீண்டும் தலை தூக்குவதும், தமிழ் மக்களின் உயிருக்கும் உடமைக்கும் அழிவு இழைக்கப்படுவதும், ஒரு திட்டமிட்ட இனப் படுகொலையின் குரூர முகத்தையே அது புலப்படுத்திக் காட்டியது.

தமிழ் மக்களுக்கு எதிரான அரச பயங்கரவாதம் தீவிரம் அடைந்து செல்ல விடுதலைப் புலிகளின் கெரில்லாத் தாக்குதல்களும் முனைப்படைந்து தமிழ்ப் பிரதேசத்து அரச நிர்வாகக் கட்டமைப்பை நிலைகுலையச் செய்தன. அரச காவல்துறையின் நிர்வாகத்தை சீர்குலைப்பதே அக்கால கட்டத்தில் விடுதலைப் புலிகளின் போர்த் தந்திரோபாயமாக அமைந்திருந்தது. காவல்துறை நிலையங்கள் மீதும் சுற்றுக் காவல் அணிகள் மீதும் நுட்பமாகத் திட்டமிடப்பட்டு விடுதலைப் புலிகள் நிகழ்த்திய வெற்றிகரமான தாக்குதல்களின் விளைவாக அரச பயங்கரவாதத்தின் சக்திவாய்ந்த கருவியாகச் செயற்பட்ட சட்ட ஒழுங்கு அமைப்பானது படிப்படியாகச் சீர்குலைந்து சிதைவுற்றது.

1982 ஜூலை 2 அன்று யாழ்ப்பாண நகரிலிருந்து 16 மைல் தொலைவிலுள்ள நெல்லியடி பட்டினத்தில் காவல் துறையினரின் சுற்றுக் காவல் அணி ஒன்றின் மீது விடுதலைப் புலிப் போராளிகள் அதிரடித் தாக்குதலை நடத்தினார்கள். இந்த மின்னல் வேகத் தாக்குதலில் நான்கு காவல்துறை அதிகாரிகள் தலத்திலேயே கொல்லப்பட்டனர். மூன்று பேர் கடும்

காயமடைந்தார்கள். காவல்துறையினரின் ஆயுதங்கள் அனைத்தையும் கைப்பற்றிய புலி வீரர்கள் காயம் எதுவுமின்றித் தப்பிச் சென்றனர். வெற்றிகரமாக நிகழ்ந்த இவ்வதிரடித் தாக்குதலுக்கு தலைமை வகித்த போராளி லெப்ரினன்ட் சத்தியநாதன் (சங்கர்) ஆவார்.

1982 அக்டோபர் 27 அன்று சாவகச்சேரி காவல் நிலையம் விடுதலைப் புலிகளின் கெரில்லாத் தாக்குதலுக்கு இலக்காகியது. அரண்காப்புகளால் வலுப்படுத்தப்பட்டிருந்த இம் முக்கிய காவல் நிலையம் வெற்றிகரமாகத் தாக்கி அழிக்கப்பட்டு அங்கிருந்த பெரும் தொகையான ஆயுதங்கள் புலி வீரர்களால் கைப்பற்றப்பட்டமை ஜெயவர்த்தனா ஆட்சி பீடத்திற்கு கிலியைக் கொடுத்தது.

அன்றைய தினம் அதிகாலை விடுதலைப் புலிகளின் கெரில்லா அணி, கடத்தப்பட்ட பேரூந்து வண்டி ஒன்றில் காவல் நிலையத்திற்கு அருகாமையில் வந்தடைந்தது. அதிலிருந்து இறங்கிய புலிப் போராளிகள் சிலர், பொதுமக்களின் பாதுகாப்புக்காகக் கண்டி - யாழ்ப்பாணம் வீதியில் போக்குவரத்தைத் தடைசெய்து, நிலையெடுத்தனர்.

இதனையடுத்து, நன்கு ஆயுதம் தரித்த தாக்குதல் அணியொன்று மிகவும் கவனமாகவும் நிதானமாகவும் காவல் நிலைய வளாகத்திற்குள் நுழைந்து, தாக்கும் நிலை எடுத்தது. காப்பரணில் கடமையிலிருந்த காவல்துறையினர் தமது நகர்வை கண்ணுற்றனர் எனத் தெரிந்து கொண்ட மறுகணமே, புலிப் படையினரின் இயந்திரத் துப்பாக்கிகள் அனல் கக்கத் தொடங்கியது. காப்பரணில் பதுங்கியிருந்த ஒருவர் அதிலேயே இறந்து விழ, ஏனையோர் காயங்களுடன் தப்பியோடினர். இதனையடுத்து, புலிகளின் அதிரடிப் படை வீரர்கள் சரமாரியாகச் சுட்டப்படியே பிரதான கட்டடத்துக்குள் புயலென நுழைந்தனர். முதலில் ஆயுத தளபாடங்கள் வைக்கப்பட்டிருந்த அறை தாக்குதலுக்கு இலக்காகியது. அங்கே, பணியிலிருந்த இரு காவல்துறை அதிகாரிகள் சுட்டுக் கொல்லப்பட்டனர். ஆயுதக் களஞ்சியம் உடைத்து திறக்கப்பட்டது. அங்கிருந்து 28 துப்பாக்கிகள், 2 உப-இயந்திரத் துப்பாக்கிகள், 1 ரிவோல்வர் ஏராளமான ரவைகள் புலி வீரர்களிடம் சிக்கியது. ஒரு கெரில்லா அணி கீழ்மாடியிலிருந்த ஆயுத அறையை சூறையாடிய வேளை, இன்னொரு அணி துப்பாக்கிக் குண்டுகளைப் பொழிந்தவாறு மேல் மாடிக்குள் பாய்ந்து சென்றது. அங்கு நிகழ்ந்த துப்பாக்கிச்

சண்டையில் இரு காவல்துறை அதிகாரிகள் கொல்லப்பட ஒருவர் மாடியிலிருந்து குதித்து தப்பியோடினார்.

சாவகச்சேரி காவல் நிலையம் மீதான தாக்குதலை தலைமை வகித்து நடத்தியவர் லெப்டினன்ட் சார்ள்ஸ் அன்ரனி (ஆசிர், சீலன்). இவர் ஆயுதப் போராட்டத்தின் ஆரம்ப காலத்தில் ஒரு தலை சிறந்த தாக்குதல் தளபதியாக விளங்கியவர். துணிச்சலும் நிகரற்ற திறமையுமுடைய இவர் பிரபாகரனது நெருங்கிய நண்பர். இத் தாக்குதலின் போது, சீலன், புலேந்திரன், ரகு ஆகியோர் காயமடைந்தனர். இவர்கள் மூவரும் தமிழகம் அனுப்பப்பட்டு, அங்கு சிகிச்சை பெற்று தேறினார்கள்.

சாவகச்சேரி காவல்நிலையத் தாக்கி அழிப்பில் சங்கர் (சத்தியநாதன்) முக்கிய பங்குவகித்தார். சண்டையில் தனது துணிச்சலையும் திறனாற்றலையும் காண்பித்தது மட்டுமன்றி, காயமடைந்த போராளிகளையும் கைப்பற்றப்பட்ட ஆயுத தளபாடங்களையும் பாதுகாப்பாக குறிப்பிட்ட இடத்திற்கு கொண்டு சேர்த்தவர் சங்கர். காயமடைந்த புலிவீரர்கள் மூவரையும் சிங்கள ஆயுதப் படையினரின் கெடுபிடிகள் சோதனைகளுக்கும் மத்தியில், தமிழகத்திற்கு சிகிச்சைக்காக அனுப்பி வைத்தவனும் அவனே.

ஆயுதமேந்திய எதிர்ப்பு இயக்கத்தின் ஆரம்ப கால வளர்ச்சிக் கட்டத்தில் தலைசிறந்த தாக்குதற் தளபதியாக விளங்கிய சங்கர் சிங்கள ஆயுதப் படையினரின் தீவிர வேட்டைக்கு இலக்காகியிருந்தான். விடுதலைப் புலிகளின் தங்குமிடம் பற்றி கிடைத்த தகவலை அடுத்து, 1982 நவம்பர் 20 அன்று, யாழ்ப்பாணம் நாவலர் வீதியிலுள்ள வீடொன்றை இராணுவத்தினர் சுற்றி வளைத்தனர். அவ்வேளை அங்கிருந்த சங்கர், முற்றுகையிட்ட இராணுவத்தினரை தனது கைத்துப்பாக்கியால் சுட்டவாறு தப்பியோட முயற்சிக்கிறான். வீட்டு மதிலை தாண்டிக் குதிக்க முயற்சித்த பொழுது, இராணுவத்தினர் அவன் மீது சரமாரியாக வேட்டுக்களைத் தீர்த்தனர். வயிற்றில் குண்டு பாய்ந்து காயமடைந்தபோதும், சுற்றிவளைப்பை உடைத்துக் கொண்டு அவன் தப்பி ஓடினான். காயமடைந்த சங்கரை சிகிச்சைக்காக தமிழகம் அனுப்ப ஏற்பாடுகள் செய்யப்பட்ட போதும் இராணுவ சோதனைகள் தீவிரமாகியிருந்ததால் தாமதம் ஏற்படுகிறது. இறுதியாக, 5 நாட்களின் பின்பு, கடல் மார்க்கமாக அவன் வேதாரணியம் கொண்டு செல்லப்பட்டு, பின்பு அங்கிருந்து மதுரை சென்றடைய

சங்கரின் உடல்நிலை மோசமடைகிறது. தனியார் மருத்துவமனை ஒன்றில் சிகிச்சை அளிக்கப்பட்டபோதும் ஆபத்தான கட்டத்தை அடைந்தான். அப்பொழுது தலைவரை சந்திக்க வேண்டும் என்ற தனது இறுதி ஆசையை வெளியிட்டான். அதிர்ஷ்டவசமாக, அவ்வேளை பிரபாகரன் மதுரையில் இருந்தார். பாண்டி பஜார் துப்பாக்கி மோதல் சம்பவத்தை அடுத்து, நிபந்தனைப் பிணையில் தங்கியிருந்த பிரபாகரன் சங்கர் சிகிச்சை பெற்ற மருத்துவமனைக்கு விரைந்தார். உயிர் பிரிகின்ற இறுதி நேரம். தலைவனின் மடியில் தலைசாய்ந்தவாறு சாவைத் தழுவிக் கொள்கின்றான் சங்கர். 1982 நவம்பர் 27 அன்று, விடுதலைப் புலிகள் இயக்கத்தின் முதலாவது மாவீரன் என்ற வரலாற்று முக்கியத்துவம் பெற்று அவன் மரணித்தான். சங்கர் வீரச்சாவடைந்த அன்றைய நாள், மாவீரர் நாளாக, தமிழரின் தேசிய எழுச்சி நாளாக, ஒரு புனித நாளாகக் கொண்டாடப்படுகிறது.

தமிழ் மக்களுக்கு எதிரான அரச ஒடுக்குமுறை 1982 பிற்பகுதியில் ஒரு குரூர வடிவம் பெற்றது. பயங்கரவாதத் தடைச்சட்டத்தை தமிழ் அறிவு ஜீவிகளுக்கும், மத குருமாருக்கும் எதிராக அரசு திருப்பியது. விடுதலைப் புலிகளின் ஆயுதப் போராட்டத்தை ஆதரித்தார்கள் என்ற குற்றச்சாட்டோடு, பல்கலைக்கழக விரிவுரையாளர்கள், மருத்துவர்கள், பெயர் பெற்ற கத்தோலிக்க குருமார் போன்றோர் கைது செய்யப்பட்டார்கள். திரு. மு. நித்தியானந்தன், அவர் மனைவி நிர்மலா ஆகிய இருவரும் பல்கலைக்கழக விரிவுரையாளர்கள். இவர்களோடு கலாநிதி ஜெயக்குலராஜா, அவர் சகோதாரர் அருட்திரு ஜெயதிலகராஜா ஆகியோரும் அவர்களுடன் மதிப்புப் பெற்ற இரண்டு கத்தோலிக்க குருமாரான பி.சின்னராஜா, ஏ.சிங்கராயர் ஆகியோரும் கைது செய்யப்பட்டு வெலிக்கடை சிறையில் அடைக்கப்பட்டார்கள். இந்தச் சம்பவத்தை ஆட்சேபித்து விடுதலைப் புலிகள் உலக அரங்கில் ஒரு, பரப்புரைப் போராட்டம் நடத்தினர். இந்த மனச்சாட்சிக் கைதிகளை விடுவிக்கும்படி உலக முன்றலில் கோரிக்கை விடுக்குமாறு தங்கள் அனைத்துலகக் கிளைகளைப் பணித்தனர்.

அணிசாரா நாடுகளின் ஏழாவது உச்சி மாநாடு புதுடில்லியில் 1983 மார்ச் 7-15 தேதிகளில் நடைபெற்ற வேளை, விடுதலைப் புலிகள் இயக்கம் மகஜர் ஒன்றை இம்மாநாட்டில் சமர்ப்பித்தது. தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தை முன்னின்று நடத்தும்

இயக்கமாக விடுதலைப் புலிகள் முதற் தடவையாக அனைத்துலக அரங்கில் தம்மைக் காத்திரமாக அடையாளப்படுத்தினர். 'தேசிய விடுதலைக்கான தமிழரின் போராட்டம்' என்ற தலைப்பில் இந்த அறிக்கை வரையப்பட்டிருந்தது. ஆயுதப் போர் தோற்றம்பெற்றதன் வரலாற்றுப் பின்னணியை விடுதலைப் புலிகளின் இந்த அறிக்கை, பின்வரும் கருத்தோட்டத்தில் விளக்கியது.

"எழுபதுகளின் முற்பகுதியில் தமிழீழ மக்களின் ஆயுதம் தரித்த எதிர்ப்புப் போராட்டம் வரலாற்றுப் பிறப்பை எடுத்தது. சனநாயக வழிதழுவிய வெகுசனப் போராட்ட வடிவமாக மேற்கொள்ளப்பட்ட தேசிய விடுதலை இயக்கம் தோல்விகளைச் சந்தித்ததோடு, சமாதான வழியில் மக்களை அணிதிரட்டும் தார்மீக வலுவையும் இழந்து போனது. இந் நிலையே, ஆயுதப் போராட்டத்திற்கு வழிகோலியது. அரச பயங்கரவாதத்தின் மிருகத்தனமான ஒடுக்குமுறைக்கு எதிராக, தமிழ் மக்கள் தம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்கு வேறுவழி இல்லாததால் புரட்சிகர ஆயுதப் போர் வடிவத்தை தேர்ந்தெடுக்க அவர்கள் நிர்ப்பந்திக்கப்பட்டனர். ஆகவே, தமிழரின் ஆயுதப் போராட்டமானது, தாங்கொணா அரச ஒடுக்குமுறையின் வரலாற்றுக் குழந்தையாகப் பிறப்பெடுத்தது. ஒடுக்கப்பட்டு வரும் எமது மக்களின் அரசியற் போராட்டத்தினது தொடர்ச்சியாகவும், நீட்சியாகவும், முன்னெடுப்பாகவுமே ஆயுதப் போராட்டத்தைப் பார்க்க வேண்டும். தமிழீழத்தில் புரட்சிகர ஆயுதப் போரை முன்னெடுத்து வரும் எமது விடுதலை அமைப்பானது, எமது தேசியப் போராட்டத்தின் முன்னணிப் படையாக இயங்குகின்றது. எமது போராட்டத்தின் யதார்த்த புறநிலையை மிகக் கவனமாகக் கணிப்பிட்டு, தேச சுதந்திரத்தை முன்னெடுப்பதற்கு தீவிரமாகப் போராடுவதைத் தவிர வேறு வழியில்லை என்ற வரலாற்று உண்மையை உணர்ந்த பின்னரே ஆயுதப் போராட்ட வடிவத்தை வகுத்தோம். எமது விடுதலை இயக்கத்தின் ஆயுதப் போராட்டத்திற்கு தமிழ் மக்களின் பரந்துபட்ட ஆதரவுண்டு. சிங்கள அரசின் ஏதேச்சாதிகார ஆதிக்கத்தையும் அடக்குமுறையையும்

எதிர்த்து நின்று அரசியல் சுதந்திரத்தை வென்றெடுக்க வேண்டும் என்ற எமது மக்களின் ஆழமான அபிலாசையை எமது போராட்ட இலட்சியம் வெளிப்படுத்தி நிற்பதால் மக்கள் சக்தி எமது இயக்கத்தின் பின்னால் அணிதிரண்டு நிற்கிறது."

சிறீலங்கா அரசின் இன அழிப்பு ஒடுக்குமுறைக் கொள்கையைக் கண்டித்து, தமிழீழ மக்களின் தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு ஆதரவு வழங்க வேண்டும் என்று விடுதலைப் புலிகள் இயக்கம், தனது மகஜரில், இந்திய அரசையும் அணி சாரா நாடுகளின் தலைவர்களையும் வேண்டிக் கொண்டது.

## வன்முறைப் புயல் வீசிய 'கறுப்பு ஜூலை'

கொந்தளிப்பு மிக்க இனப் போராட்ட வரலாற்றிலே 1983ஆம் ஆண்டானது வன்முறைப் புயல் தாண்டவமாடிய ஒரு கால கட்டம் எனலாம். ஒருபுறம் அரச அடக்குமுறை தீவிரமடைய, மறுபுறம் போராளிகளின் எதிர்த் தாக்குதல்களும் உக்கிரமடைந்தன. வன்முறையும் அதற்கு எதிரான வன்முறையுமாக வன்செயல்கள் சுழல் வேகம் பெற்று ஈற்றில் பிரளயம் போன்ற இனக் கலவரம் வெடித்தது. இந்தக் கொடு நிகழ்வை 'கறுப்பு ஜூலை' என வரலாற்று ஆசிரியர்கள் வர்ணிக்கிறார்கள். பல ஆயிரம் தமிழர்கள் ஈவிரக்கமின்றி கொன்றொழிக்கப்பட்ட கொடிய மாதம் இது.

1983ஆம் ஆண்டின் முற்பகுதியில் சிங்கள அரசை அச்சுறுத்தும் சவாலாக தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் தனது இராணுவ அரசியல் நடவடிக்கைகளை முடுக்கி விட்டது. வடக்கில் தரித்திருந்த சிங்கள காவல்துறையினர் மீதும் ஆயுதப் படையினர் மீதும் தொடர்ச்சியான பல கெரில்லாத் தாக்குதல்கள் ஏவிவிடப்பட்டன. பெப்ரவரி 18ஆம் நாள், காவல்துறை ரோந்து அணி ஒன்று மீது பருத்தித்துறையில் நிகழ்ந்த பதுங்குத் தாக்குதலில் காவல்துறை அதிகாரி விஜேவர்த்தனாவும் அவரது வாகனச் சாரதியான ராஜபக்ஷவும் கொல்லப்பட்டனர். பரந்தன் உமையாள்புரத்தில், மார்ச் 4 அன்று இராணுவத் தொடர் வண்டிகள் மீது விடுதலைப் புலிப் போராளிகள் நடத்திய

கெரில்லாத் தாக்குதலில் கவசப் பீரங்கி வண்டி ஒன்று சிதைத்து அழிக்கப்பட்டது. இத் தாக்குதலில் இராணுவத்தினர் ஐந்து பேர் படுகாயமடைந்தனர்.

இதே சமயம் அரசியல் அரங்கில் விடுதலைப் புலிகள் ஒரு சிறப்பான பரப்புரை முயற்சியை முடுக்கி விட்டனர். அரசின் ஒடுக்குமுறைக் கொள்கைகளுக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் வகையில், மே 18 அன்று நடைபெறவிருந்த உள்ளூராட்சித் தேர்தலைத் தமிழ் மக்கள் புறக்கணிக்கவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தனர். புலிகளின் தலைவர் பிரபாகரனும் அறிக்கை ஒன்றை வெளியிட்டார். சிறீலங்கா அரசின் நிர்வாகத்தைத் தமிழ் மக்கள் நிராகரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். தேசிய விடுதலைக்காகத் தமிழ்ப் புலிகள் நடத்தும் ஆயுதப் போராட்டத்தை மக்கள் ஆதரிக்க வேண்டும் என்றும் வேண்டி நின்றார். விடுதலைப் புலிகள் மேற்கொண்ட பரப்புரைக்கு இசைந்து வடக்கிலுள்ள பெரும்பாலான தமிழ் மக்கள் தேர்தலைப் புறக்கணித்தார்கள். தமிழ் மக்களின் அரசியல் வரலாற்றில் இதுவரை இடம்பெறாத தேர்தல் புறக்கணிப்பாக இது அமைந்தது. விடுதலைப் புலிகளுக்கு இது மிகப் பெரும் அரசியல் வெற்றியை ஈட்டிக் கொடுத்தது. விடுதலைப் புலிகளின் வேண்டுகோளைப் புறக்கணித்து தேர்தலில் நின்ற தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி அவமானத்தை சந்தித்தது. 95 விழுக்காடு வாக்காளர்கள் தேர்தலைப் புறக்கணித்ததால் கட்சியின் நம்பகத்தன்மை வெகுவாகப் பாதிக்கப்பட்டது.

தேர்தல் நாளன்று, வாக்களிப்பு முடிய ஒரு மணிநேரம் இருக்கும்போது, யாழ்ப்பாணம் நல்லூரில் தேர்தல் வாக்களிப்பு நிலையம் ஒன்றைக் காவல் புரிந்த இராணுவத்தினர், காவல்துறையினர் மீது விடுதலைப் புலிப் போராளிகள் தாக்குதலை நடத்தினார்கள். அங்கு நடந்த துப்பாக்கிச் சமரில் சிங்களப் படையினர் ஒருவர் கொல்லப்பட்டார். இன்னொருவருக்குக் கடுங் காயம் ஏற்பட்டது. வேறு இரண்டு காவல்துறையினர் கடும்காயம் அடைந்தார்கள். அன்று, தேர்தல் தொடர்பாகவும் புலிகள் வெற்றியீட்டினர். வாக்களிப்பு நிலையம் மீதும் வெற்றிகரத் தாக்குதல் நடத்தினர். இதனால் சீற்றமடைந்த அரசு புதிய அவசரகால ஒழுங்குப் பிரமாணங்களை நடைமுறைப்படுத்தியது. தமிழ்ப் போராளிகளுக்கு எதிராக மேலும் நடவடிக்கைகளை மேற்கொள்ள ஆயுதப் படைகளின்

கரங்களைப் புதிய சட்டங்கள் வலுப்படுத்தின. அன்றிரவு யாழ்ப்பாண நகர எல்லைக்குள் பணியில் இருந்த 600 இராணுவத்தினர், வன்முறை வெறியாட்டத்தில் இறங்கினர். கடைகள், வீடுகள், எரிபொருள் நிலையங்கள், வாகனங்கள் ஆகியவை தீயில் எரிக்கப்பட்டன. பொதுச் சொத்துக்கள் சூறையாடப்பட்டன. பொது மக்கள் கடுமையாகத் தாக்கப்பட்டார்கள். இரண்டு ஆண்டுக்குள் இரண்டாவது தடவையாக, தமிழ் மக்களுக்கு எதிரான அரச பயங்கரவாதத்துக்கு இலக்கான யாழ்ப்பாண நகரம் தீப்பற்றி எரிந்தது.

அரச பயங்கரவாத வன்முறை உச்சத்தை தொட்ட காலப்பகுதியாக 1983 ஜுன் மாதப் பகுதியைக் குறிப்பிடலாம். அவசர காலச் சட்டங்கள் வழங்கிய அதிகாரத்தோடு சிங்கள ஆயுதப் படையினர், வவுனியா, திருகோணமலை நகரங்களில் கண்மூடித்தனமான வன்முறை வெறியாட்டங்களில் ஈடுபட்டனர். தமிழ்ப் பொதுமக்களைச் சுட்டுக் கொன்றதுடன், கடைகள், வீடுகள், பள்ளிகள், கோவில்கள் ஆகியவற்றுக்குத் தீ வைத்தனர். திருகோணமலையில் ஆயுதப் படையினருடன் சிங்களக் காடையரும் கூட்டுச் சேர்ந்து புரிந்த கலவரத்தில் 19 தமிழர் வெட்டிச் சரிக்கப்பட்டார்கள். அங்கு 200 வீடுகள், 24 கடைகள், 8 இந்துக் கோவில்கள் எரித்துச் சாம்பல் ஆக்கப்பட்டன. யாழ்ப்பாணத்தில் பல இளைஞர்கள் இராணுவத்தினரால் சுற்றி வளைக்கப்பட்டுச் சுட்டுக் கொல்லப்பட்டார்கள். அரசின் உந்துதலோடு, தமிழ் மக்கள் மீதான திட்டமிட்ட இனப் படுகொலை ஆரம்பமானது. அரசுத் தலைவர் ஜெயவர்த்தனா வெளியிட்டிருந்த அறிக்கை ஒன்று, அதை உறுதிப்படுத்தியது.

“யாழ்ப்பாண மக்களின் கருத்து என்ன என்பது பற்றி எனக்கு அக்கறை இல்லை. அவர்களைப் பற்றி நாம் இப்போது சிந்திக்க முடியாது. அவர்களுடைய உயிர்களைப் பற்றியோ அவர்கள் எம்மைப் பற்றி எத்தகைய கருத்து வைத்திருக்கிறார்கள் என்பது பற்றியோ சிந்திக்க முடியாது.” என்று ஜெயவர்த்தனா பிரித்தானிய நாளிதழான ‘டெய்லி டெலிகிராப்’ பத்திரிகைக்கு 1983 ஜுலை 11ஆம் நாள் அன்று பேட்டி அளித்திருந்தார். சிங்கள ஆயுதப் படைகள் திட்டமிட்டுத் தமிழ் மக்களை அழித்தொழிப்பதற்கு சிறீலங்கா அரசு ஆதரவு வழங்கிக் கொண்டிருக்கிறது என்பதை ஜெயவர்த்தனாவின்

கூற்று, ஜயந்திரிபற உறுதிப்படுத்தியது.

இது இவ்வாறிருக்க, ஜுலை மாதம் நடுப்பகுதியில் நிகழ்ந்த சோக சம்பவம் ஒன்று விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு பேரிடியாக அமைந்தது. 1983 ஜுலை 15 அன்று மாலை, யாழ்ப்பாண நகரிலிருந்து 15 மைல் தொலைவிலுள்ள மீசாலைக் கிராமத்தில் இந்தத் துன்பியல் சம்பவம் நிகழ்ந்தது.

ஒரு மினி பஸ், இரண்டு ஜீப் வண்டிகள் ஒரு இராணுவ ட்ரக் ஆகியனவற்றில் மீசாலை கிராமத்திற்குள் நுழைந்த நூற்றுக்கும் மேற்பட்ட இராணுவத்தினர் அங்கிருந்த விடுதலைப் புலிப் போராளிகளின் இருப்பிடத்தை நோக்கி விரைந்தனர். இராணுவத்தினரின் இந்த சுற்றிவளைப்பில் விடுதலைப் புலிகளின் தாக்குதற் தளபதியான சார்ள்ஸ் அன்ரனி (சீலன்) மற்றும் மூன்று போராளிகளும் மாட்டிக் கொள்கின்றனர். சுற்றி வளைத்த படையினருடன் புலி வீரர்கள் துப்பாக்கிச் சமரில் குதிக்கின்றனர். இராணுவத்தினர் பனைமரங்கள் சூழந்த பாதுகாப்பான இடங்களில் நிலையெடுத்து நின்று சரமாரியாகச் சுட, பொட்டல் வெளியில் மாட்டிக் கொண்ட போராளிகள் திருப்பித் தாக்குகின்றனர். இராணுவத்தினரின் துப்பாக்கி ரவைகள் மார்பைத் துளைக்க, இரத்தம் சிந்தியவாறு நிலத்தில் சரிகிறான் சீலன். தப்ப முடியாத நிலை. எனினும் உயிருடன் எதிரியிடம் சிக்கக் கூடாது என்ற உறுதிப்பாடு உந்த தன்னைச் சுட்டுக் கொன்றுவிடுமாறு சக போராளியிடம் பணிக்கிறான் சீலன். தனது தளபதியை சுடத் தயங்குகிறான் தோழன். அப்பொழுது கண்டிப்பான கட்டளையிடுகிறான் சீலன். வேறு வழி தெரியாது கதறி அழுதபடி சீலனின் கட்டளையை நிறைவேற்றுகிறான் அந்தப் போராளி. அவ்வேளை ஆனந் என்ற மற்றொரு போராளியும் எதிரியின் சூட்டுக்கு இலக்காகி படுகாயங்களுடன் சாய்கிறான். தன்னையும் சுட்டுக் கொன்றுவிடும்படி மன்றாடுகிறான் ஆனந். அவனது வேண்டுகோளும் நிறைவேற்றப்படுகிறது. உயிருக்கும் மேலாக நேசித்த சக போராளிகளை உயிருடன் எதிரியிடம் விட்டுவிடாது செய்து, அவர்களது ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு, முற்றுகையிலிருந்து தப்பிச் சென்றனர் மற்றும் இரு போராளிகள்.

மாவீரன் சீலனின் சாவு எமது விடுதலை இயக்கத்திற்கு ஒரு பேரிழப்பாக அமைந்தது. அபாரமான துணிவும், தமிழீழ இலட்சியப் பற்றுறுதியும் மிக்க சீலன் பல களங்களைக் கண்ட வீரன். ஆற்றல் படைத்த கட்டளைத் தளபதி, தலைவர்

பிரபாகரனின் மிகவும் நெருங்கிய தோழன். அந்த மாவீரனின் மறைவு பிரபாகரனின் ஆன்மாவை உலுப்பியது. ஒருபுறம் கடும் துயரும், மறுபுறம் கடும் சீற்றமும் அடைந்த பிரபாகரன் சிங்களப் படையினருக்கு தகுந்த பதிலடி கொடுக்கத் தீர்மானித்தார். அதற்கான தாக்குதல் திட்டத்தையும் அவரே வகுத்தார். விடுதலைப் புலிகள் மீதும் பொதுமக்கள் மீதும் அரச பயங்கரவாத வன்செயல்களை ஏவிவிடும் ஆயுதப் படையினர் நிச்சயமாகத் தண்டிக்கப்படுவர் என்பதை எதிரிக்கு உணர்த்த வேண்டும் எனவும் பிரபாகரன் எண்ணினார். யாழ்ப்பாண நகரப் பகுதிக்குள் இராணுவ வண்டித் தொடர்கள் இரவிலே கிரமமாக நடமாடும் வழித் தடங்கள் பற்றிய விபரங்களைப் புலனாய்வு மூலம் திரட்டி, பிரசித்தி பெற்ற திருநெல்வேலிக் கெரில்லாத் தாக்குதலைப் புலிகளின் தலைவர் திட்டமிட்டார். இந்தத் தாக்குதலுக்குச் செல்லக்கிளி அம்மான் பொறுப்பாக நியமிக்கப்பட்டார். ஆனாலும் தாக்குதல் நடவடிக்கை முழுவதையும் பிரபாகரனே நெறிப்படுத்தினார்.

ஜூலை மாதம் 23ஆம் நாள், நள்ளிரவு. தலைவர் பிரபாகரனுடன் அன்றைய மூத்த தாக்குதற் தளபதிகளான செல்லக்கிளி, கிட்டு, புலேந்திரன், விக்டர், சந்தோசம் ஆகியோருடன் பதினான்கு விடுதலைப் புலி அதிரடி வீரர்கள், ஆயுத பாணிகளாக இயக்கச் சீருடை அணிந்து, யாழ்ப்பாண நகரிலிருந்து இரண்டு மைல் தொலைவிலுள்ள திருநெல்வேலியில் பலாலி - யாழ்ப்பாணம் வீதியோரமாக தாக்குதலுக்கு தயாராகிக் கொண்டிருக்கிறார்கள். பொது வாகனங்களும் பாதசாரிகளும் வீதியில் செல்லாதபடி தடை ஒழுங்குகள் செய்து கேந்திர நிலைகளில் கண்ணி வெடிகளை புதைத்துவிட்டு, புலி வீரர்கள் நிலையெடுத்துக் காத்து நிற்கின்றனர்.

மாதகல் இராணுவ முகாமிலிருந்து சிறீலங்காவின் முதலாவது காலாட் படைப் பிரிவைச் சேர்ந்த பதினைந்து பேர்கொண்ட அணி ஒன்று இராணுவ வண்டித் தொடராக திருநெல்வேலி நோக்கி வந்து கொண்டிருந்தது. முதலில் ஒரு ஜீப் வண்டி, அதற்குப் பின்னால் ஒரு இராணுவ ட்றக் வண்டியாக, படையினர் பதுங்கி நிற்கும் புலி வீரர்களின் நிலையை அண்மிக்கின்றனர். புலிகளின் பதுங்கு காவல் நிலையை இராணுவ வாகனங்கள் கடந்தபோது, நிலக் கண்ணித் தகர்ப்பி அமுக்கப்படுகிறது. திருநெல்வேலியை அதிரவைத்த பயங்கர

வெடியோசை. இராணுவ ஜீப் வண்டி காற்றில் உயர எகிறி, துண்டம் துண்டமாகச் சிதறி தரையிலே விழுகிறது. பின்னே வந்த ட்றக் வண்டி திடீரென நிற்கிறது. பீதியடைந்த படையினர் அச்சத்தோடு வெளியே பாய, புலிகளின் துப்பாக்கிச் சல்லடை அவர்களைப் பதம் பார்க்கிறது. ட்றக் வண்டியால் அவர்கள் வெளியே வர வர, அச்செட்டாகச் சுடுவதில் பெயர் பெற்ற பிரபாகரனின் துப்பாக்கி அவர்களிற் பலரை அடுத்தடுத்து வீழ்த்துகிறது. சில இராணுவத்தினர் வாகனத்துக்குக் கீழே தவழ்ந்து சென்று படுத்திருந்தபடி சிலாவிச் சுடுகிறார்கள். ஆனால் புலிகளின் எறிகுண்டுகள், அவர்களைச் செயலிழக்கச் செய்கின்றன.

துல்லியமான, இசையும் பிசகாத புலிகளின் போரியல் தேர்ச்சியை இத் தாக்குதல் பறைசாற்றியது. பதின்மூன்று சிங்களப் படையினர் அதே இடத்தில் கொல்லப்பட்டார்கள். இரண்டு பேருக்குப் படுகாயம். அந்த நாட்களில், சிங்கள இராணுவத்துக்கு இது ஒரு பெரும் உயிரிழப்பாக அமைந்தது. விடுதலைப் புலிகளின் தரப்பில் லெப்டினன்ட் செல்லக்கிளி இத் தாக்குதலில் வீரச்சாவைத் தழுவிக் கொண்டார்.

செல்லக்கிளி அம்மான் (செல்வநாயகம்) அஞ்சா நெஞ்சம் படைத்த ஒரு வீரன். தலைசிறந்த தாக்குதற் தளபதி. தலைவர் பிரபாகரனின் இயம்பராயத் தோழன். ஆரம்ப காலப் போராட்ட வரலாற்றில் பல சாதனைகளைப் படைத்தவன். அந் நாளில் சிங்கள தேசத்தையே கிலிகொள்ளச் செய்த ஒரு வெற்றிகரமான கெரில்லாத் தாக்குதலுக்கு தலைமை தாங்கி, அத் தாக்குதலிலேயே களப் பலியாகிய அந்த வீரனின் மறைவு எமது இயக்கத்திற்கு ஒரு பேரிழப்பாகியது.

தமிழரின் இனப் பிரச்சினைக்கு இராணுவத் தீர்வே ஒரே வழி என்று உறுதியாக நம்பியிருந்த ஆட்சியாளருக்குத் தமிழ்ப் புலிகளின் கெரில்லா படையினரால் பதின்மூன்று சிங்கள இராணுவத்தினர் கொல்லப்பட்டமை, ஒரு பலத்த அடியாகப் பட்டது. ஜனாதிபதி ஜெயவர்த்தனா ஒரு கொடுங்கோலர். இரும்புப் பிடியோடு நாட்டை ஆண்டு கொண்டிருந்தார். அவருடைய மூத்த அமைச்சர்களான லலித் அத்துலத் முதலி, பிலிப் குணவர்த்தனா, சிறில் மத்தியூ, காமினி திஸநாயக்கா ஆகியோர், பெயர் பெற்ற இனவாதிகளாவர். தமிழர் போராட்டத்தை இராணுவ அடக்குமுறையால் நசுக்க வேண்டும் என்ற கொடிய கொள்கையைப் பலமாகப் பற்றிக்

கொண்டிருந்தவர்கள். இத்தகைய தலைமையைக் கொண்டிருந்த ஆட்சி பீடத்துக்கு, தமிழருடைய ஆயுதக் கிளர்ச்சி வளர்ந்து சிங்களப் படையினரின் உயிர்களைப் பறிப்பது தாங்க முடியாத அவமானமாகப் பட்டது. இராணுவத்திடம் இருந்து கடுமையான பழிவாங்கல் நடவடிக்கை மின்னல் வேகத்தில் வரலாம் என்ற பதற்ற அங்கலாய்ப்போடு யாழ்ப்பாண மக்கள் எதிர்பார்த்து நின்றார்கள். எதிர்பார்த்தபடியே, மறுநாள், திருநெல்வேலியிலும் கந்தர்மடத்திலும் சீற்றச் சன்னதம் ஆடிய அரச படையினரால் 60 தமிழ்ப் பொதுமக்கள் ஈவிரக்கம் இன்றிப் படுகொலை செய்யப்பட்டார்கள். ஆனால் தலைநகர் கொழும்பில் இடம்பெற்ற இனக் கலவரத் தாக்குதல்களோடு ஒப்பிடும்போது, யாழ்ப்பாணத்தில் இடம்பெற்ற இராணுவ வெறியாட்டம் சிறு அளவிலானது என்றே கூறலாம். தலைநகரில் தொடங்கிய இனக்கலவரத் தாக்குதல்கள் நாடு முழுவதும் பரவி, இதுகாறும் நடைபெறாத அளவுக்குத் தமிழ் உயிர்களையும் உடமைகளையும் அழித்து ஒழித்தன.

கடந்த காலங்களிற்கூட, இனக்கலவர வன்முறைத் தாக்குதல்களுக்குத் தமிழ் மக்கள் அவ்வப்போது முகம் கொடுத்திருக்கிறார்கள். ஆனால், 83 ஜுலையில் இடம்பெற்ற இன அழிவு முன்பு நிகழ்ந்த எதனுடனும் ஒப்பிட முடியாத அளவுக்கு கொடுமையானதாக, குரூரமானதாக, மிகப் பெரியதாக அமைந்தது. விடுதலைப் புலிகளால் சிங்களப் படையினர் கொல்லப்பட்டதை ஒட்டி, திடீரென எழுந்த பழிவாங்கும் உணர்ச்சியாக இந்த இனக் கலவரம் காணப்படவில்லை. மாறாக, இனக்கொலை என்று வர்ணிக்கும் அளவுக்கு, அரசினால் ஏற்கனவே திட்டம் வகுக்கப்பட்டு, தருணம் பார்த்து நடத்தப்பட்ட கொடுந் தாக்குதலாக 83 ஜுலை வெறியாட்டம் காணப்பட்டது.

திருநெல்வேலித் தாக்குதலுக்குப் பின்பு உருவான பதற்ற நிலையை அரசு முடிச்சுப் போட்டுக் கையாண்ட விதம், அதன் விஷமப் போக்கை கோடிட்டுக் காட்டியது. இன வெறியைத் தூண்டும் செய்தி அறிக்கைகள் மறுநாள் பத்திரிகைகளில் தலைப்புச் செய்திகளாக தடித்த எழுத்தில் வெளிவந்தன. இவை சிங்கள மக்களிடையே கொதிப்புணர்வைக் கிளறி விட்டன. 'வீழ்ந்த வீரர்கள்' பதின்மூன்று பேரும், கொழும்பு பிரதான மயானமான கனத்தையில் பூரண இராணுவ மரியாதையுடன் அடக்கம் செய்யப்படுவர் என்று அரசு அறிவித்தது. எண்ணுக்கணக்கற்ற சிங்களவர், தலைநகருக்குத் திரண்டு வர

இது வழிவகுத்தது. ஆனாலும், அறிவித்தபடி மரணச் சடங்குகள் நடக்கவில்லை. இறந்த இராணுவத்தினரின் உடலங்கள் மயானத்துக்கு வந்துசேர்வது தாமதம் ஆயிற்று. இதன் பின், சம்பந்தப்பட்ட படையினரின் உடலங்களை உறவினர்களிடம் ஒப்படைக்கப் போவதாக அரசு அறிவித்தது. அடக்கத்துக்கு வந்து சேர்ந்த மக்களிடையே இது மனக் குழப்பத்தையும் பொறுமையின்மையையும் தோற்றுவித்தது. நேரம் செல்லச் செல்ல, பொறுமை எல்லை மீறத் தொடங்கியது. மாலையில் இருளத் தொடங்கியதும் சனக் கும்பல் கொதித்தெழுந்து வன்செயலில் இறங்கியது. கலவரம் இரத்தப் பிரளயமாக வளர்ந்தது. தமிழர்களைப் படுகொலை செய்வதும், சொத்துக்களை நிர்மூலமாக்குவதுமாக கொடும் செயல்கள் தொடர்ந்தன. இன வெறியாட்டம் தட்டிக் கேட்பாரின்றி நாள் கணக்கில் இழுபட்டது. தலைநகரில் தொடங்கிய இந்தக் குரூர வெறியாட்டம் அதே வடிவங்களில் தென்னிலங்கை மாவட்ட நகரங்களுக்கும் அலையாகப் பரவியது. தமிழர் மரணமும் தமிழர் சொத்துடமை அழிப்பும் எங்கும் தலைவிரித்தாடியது. பாதுகாப்பு எதுவுமற்ற நிலையில் மூவாயிரம் தமிழ் மக்கள் காட்டுமிராண்டித் தனமாகப் படுகொலை செய்யப்பட்டார்கள். பெரும்பாலான தமிழர்கள் சிங்களக் காடையர் கும்பல்களினால் கண்டதுண்டமாக வெட்டிக் கொல்லப்பட்டார்கள். அல்லது அடித்துக் கொல்லப்பட்டார்கள். பல தமிழ்க் குடும்பங்கள் உயிரோடு எரிக்கப்பட்டன. தமிழருக்குச் சொந்தமாயிருந்த ஆயிரக்கணக்கான வீடுகள், கடைகள், கட்டிடங்கள், கைத்தொழில் வளாகங்கள், சினிமாக்கள், எரிபொருள் நிலையங்கள் - எரித்து தரைமட்டம் ஆக்கப்பட்டன. கொழும்பு நகரில் 150,000 தமிழர்கள் இரவோடிரவாக வீடு வாசல் இழந்து அகதிகள் ஆனார்கள்.

கலகக்காரர்கள், கண்மூடித்தனமாகவோ தறிகெட்டோ தாக்கவில்லை. அவர்களது தாக்குதல்கள் நன்கு திட்டமிடப்பட்டு, நெறிப்படுத்தப்பட்டவையாக அமையப் பெற்றிருந்ததாக பார்வையாளர்கள் தெரிவித்தனர். கலவரக் கும்பல்களுக்குத் தமிழரின் வதிவிடங்கள், சொத்துக்கள், உடமைகள் தொடர்பான அச்செட்டான விபரங்கள் வழங்கப்பட்டிருந்தன. இந்த இனக் கலவரத்தில் அரச அதிகாரிகளின் கறைபட்ட கை கலந்திருந்தது என்பது தெட்டத் தெளிவாகியது. தலைநகரில் மட்டும் நூற்றுக்கும் அதிகமான தமிழரின் தொழிற்சாலைகளும் வர்த்தக

நிலையங்களும் சாம்பல் மேடாக்கப்பட்டிருந்தன.

கொழும்பில் இனவெறிக் கலவரத்தை நேரில் கண்காணித்த, பிரித்தானிய 'பைனான்சியல் டைம்ஸ்' பத்திரிகையாளர் நிலைமையைப் பின்வருமாறு வர்ணித்தார்.

> "வன்செயல், கொடியதாகவும் இரத்தக் களரியாகவும் தோற்றமளித்தது. ஏனைய ஆசிய நாடுகளின் கலவரங்களில் இருந்து இந்தக் கலவரத்தில் காணப்பட்ட தெளிவான வேறுபாடு என்னவென்றால், குறித்த வர்த்தகத் தலங்களை, கலகக் கும்பல்கள் அச்செட்டாகக் கண்டு பிடித்தமையே. கொழும்பிலே வீதிக்கு வீதி சென்ற கலகக் கும்பல்கள், தமிழருக்குச் சொந்தமான தொழிற்சாலைகளையும் வீடுகளையும் மட்டுமே தாக்கியமையாகும். அவர்கள் கவனமாக தேடித் தேடித் திரிந்தது ஏனென்றும் இப்போது புரிகிறது. ஒவ்வொரு வீதியிலும் குறித்த வர்த்தக வளாகம் தீ மூட்டப்பட்டிருக்கும். அடுத்து அமைந்திருக்கும் வளாகம் எந்தப் பாதிப்பும் இன்றி அப்படியே பத்திரமாக இருக்கும். அரச படைகளும் காவல்துறையினரும் ஒன்றில் கலகக்காரருடன் சேர்ந்து கொண்டார்கள். அல்லது பராக்குப் பார்த்த வண்ணம் வாளா நின்றார்கள்." (பைனான்சியல் டைம்ஸ், 1983 ஆகஸ்ட் 12).

கொழும்புத் தலைநகரில் தமிழர்களது பொருளாதார அடித்தளத்தை நாசம் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் திட்டமிட்டு மேற்கொள்ளப்பட்ட செயற்பாடாகவே இந்த இனக் கலவரம் அமைந்தது எனலாம். இக் கலவரம் தமிழின அழிப்பையும் இலக்காகக் கொண்டிருந்தது. ஏனென்றால், தமிழர் என்ற தேசிய இன அடையாளத்தைக் குறிவைத்தே தமிழர்களின் உயிர், உடமைகள் அவர்களது பொருளாதார வாழ்வு ஆகியன அழிக்கப்பட்டன.

நாடு அடங்கிலும் தலைவிரித்தாடிய இனக் கலவர வன்செயல்கள் ஆறு நாட்கள் வரை தொடர்ச்சியாக நீடித்தன. ஊரடங்குச் சட்டம் பிறப்பிக்கப்பட்ட போதும் அதனைச் செயற்படுத்த சிங்கள ஆயுதப் படைகள் மறுப்புத் தெரிவித்தன.

தமிழர் வரலாற்றின் இந்த இருள் படிந்த காலத்தில், மிகவும்

அருவருக்கத் தக்க சம்பவம் ஒன்று ஜூலை 25 அன்று வெலிக்கடைச் சிறையில் இடம்பெற்றது. சிங்களக் கைதிகள் சிறை அதிகாரிகளுடனும், சிறைக் காவலருடனும் கூட்டுச் சேர்ந்து, சிறைக் கூண்டுகளைத் தாக்கி உடைத்து 35 தமிழ்க் கைதிகளைக் கண்டதுண்டமாக வெட்டிக் கொன்றனர். சிங்களச் சிறைக் குற்றவாளிகளால் குத்திக் கிழிக்கப்பட்டு, அடித்து நொருக்கப்பட்டு மிருகத்தனமாக கொலை செய்யப்பட்ட தமிழ் அரசியல் கைதிகளில் நால்வர் முக்கியமானவர்கள். தங்கத்துரை, குட்டிமணி, ஜெகன் ஆகியோர் ஒப்பற்ற விடுதலைப் போராளிகள். மாவீரர்கள். தமிழீழ விடுதலை அமைப்பின் (ரெலோ) மூல பிதாக்கள். இன்னொருவர் கலாநிதி ராஜசுந்தரம். காந்தியம் அமைப்பை உருவாக்கியவர் இவர்.

இனக் கலவரம் ஒருவாறு ஓய்ந்து அடங்கியது. பாரிய குண்டுவீச்சினால் சிதைந்து போய், தீயினால் எரிந்து கருகிய நகரமாகக் கொழும்பு கோரக் காட்சியளித்தது. எலும்புக்கூடு போல கருகிய கட்டிடங்களின் மீதங்களில் இருந்து புகை மண்டலம் எழுந்து கொண்டிருந்தது. கலவர காலத்தில் வாய்மூடி மௌனிகளாக இருந்த சிங்கள அரசியல்வாதிகள் வாய் திறக்கத் தொடங்கியபோது, பாதிக்கப்பட்ட அப்பாவித் தமிழர்களுக்காக அனுதாபமான ஒரு வார்த்தை கூடத் தெரிவிக்கவில்லை. நேர்மாறாக, அரச் அதிபர் ஜெயவர்த்தனா சிங்கள தேசத்திற்கு விடுத்த செய்தியில், திருநெல்வேலியில் வீழ்த்தப்பட்ட சிங்கள வீரர்களுக்காகக் கொடுக்கப்பட்ட நியாயபூர்வமான நஷ்ட ஈடாக தமிழருக்கு எதிரான கலவரக் கொடுமையை நியாயப்படுத்த முனைந்தார். தமிழ்த் தேசிய ஆன்மாவில் ஆழமான வடுவை ஏற்படுத்திய மாபெரும் துன்பியல் நிகழ்வாக இனக் கலவரம் முடிவுற்றது. என்றுமே சீர்செய்ய முடியாத அளவுக்கு இரு இனங்கள் மத்தியிலான உறவை, இக் கலவரம் நிரந்தரமாகப் பாதித்தது.

சிங்கள இனவாத அரசு அனைத்துலக சமூகத்தின் கண்டனத்திற்கு இலக்காகியது. காருண்ய மகான் புத்தரின் புண்ணிய பூமியில் மனிதத்துவமற்ற மிருகத்தனமான கொடுமைகள் எவ்வாறு சாத்தியமாயிற்று என உலகத்தின் மனச்சாட்சி திகைத்து நின்றது. இந்திய அரசு கடும் சினம் கொண்டது. இந்திரா காந்தி அம்மையார் தனது ஆழ்ந்த அங்கலாய்ப்பைத் தெரிவித்ததுடன், புதுடில்லி அரசின் ஆழ்ந்த அதிருப்தியை நேரில் எடுத்துக் கூறும் பொருட்டு வெளிவிவகார

அமைச்சர் நரசிம்ம ராவோ அவர்களையும் கொழும்புக்கு அனுப்பி வைத்தார். தமிழ்நாடு உணர்ச்சி வசப்பட்டு கொதித்து வெடித்தது. சென்னையிலும் தமிழ் நாட்டின் ஏனைய நகரங்களிலும் பல்லாயிரக்கணக்கான தமிழ் மக்கள் எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களில் குதித்தனர். இலங்கையிலுள்ள தங்களது தமிழ்ச் சகோதரர்களைக் காப்பாற்ற மத்திய அரசு இந்தியப் படைகளை அங்கு அனுப்ப வேண்டும் என தமிழ் நாட்டுத் தலைவர்கள் கோரிக்கை விடுத்தார்கள்.

1983 ஜூலை மாத இனக் கலவரப் பேரழிவானது, மடைவாயை உடைத்தோடிய பெருவெள்ளம் போல, தமிழ் தேசிய உணர்வை எங்கும் பிரவாகம் எடுக்கச் செய்தது. நாடுகள், கண்டங்களின் எல்லைகள் கடந்து இன உணர்வு ஈழத் தமிழர்கள் அனைவரையும் பற்றிக் கொண்டது. தமிழர்களுக்கு இழைக்கப்பட்ட தாங்கொணாக் கொடுமைகளை அறிந்து இரத்தம் கொதித்த தமிழ் இளம் சமூகம், ஆயுதம் தரித்த விடுதலைப் போரில் இணைந்து கொள்ள பல்லாயிரக்கணக்கில் அணி திரண்டனர். விடுதலைப் புலிகளின் படையணியில் நூற்றுக்கணக்கில் இளைஞர்கள் இணைந்தனர். புலிகளின் தலைமையின் கீழ் ஆயுதப் போராட்டத்தில் பங்குபற்ற பல்லாயிரம் பேர் துடித்தார்கள். பிரபாகரன் இந்த நிலைமையை மிகச் சாதுரியமாகக் கையாண்டார். தமது அமைப்பின் நிதி வளத்தின் வரம்புக்கு அப்பால் தனது கெரில்லாப் படையின் எண்ணிக்கையைப் பெருப்பிக்கக்கூடாது என்பதில் கவனமாக இருந்தார். அதேவேளை, தமிழ் நாட்டில் தலைமறைவாக செயலிழந்து ஒதுங்கியிருந்த போராளி அமைப்புகள், தங்கள் அணிக்கு ஆள் சேர்ப்பதற்கு இதை ஒரு பொன்னான வாய்ப்பாகக் கண்டன. செயற்படாதிருந்த இந்த அமைப்புகள் வெளிநாடுகளில் புலம்பெயர்ந்து வாழ்ந்த ஈழத் தமிழ் மக்களிடமிருந்து பெற்ற நிதி உதவியுடனும் புதிதாகச் சேர்ந்த உறுப்பினரோடும், திடீரெனப் புனர்வாழ்வு பெற்று செயற்பட ஆரம்பித்தன.

கறுப்பு ஜூலை இனக் கலவரத்தை கட்டவிழ்த்து விட்டதன் மூலம் சிங்கள இனவாத சக்திகள், தமிழ்த் தேசிய மறுமலர்ச்சியைத் தோற்றுவித்ததுடன், தனியரசுப் போராட்டத்திற்கான அக - புற சூழ்நிலையையும் உருவாக்கிக் கொடுத்தன. இந்த இனக் கலவரம் தமிழீழ மக்களது அரசியல் வரலாற்றுப் பாதையை மாற்றி அமைத்தது மட்டுமன்றி, இந்தியத் தலையீட்டுக்கு வழி சமைக்கும் புறநிலையையும் ஏற்படுத்தியது.

## உசாத்துணை

Arasaratnam. S. 'Ceylon: The Modern Nation in Historical Perspective,' New Jersey, 1964.

Basham. AL. 'Prince Vijaya: Ariyanisation of Ceylon', Ceylon Historical Journal Vol. No.3. January 1952.

De Silva. KM 'A History of Sri Lanka', Delhi 1981.

Dharmapala, A. 'History of an Ancient Civilization'. Colombo, 1902.

Mendis. GC. 'The Early History of Ceylon'. Colombo 1946.

Pathmanathan. S. 'The Kingdom of Jaffna'. Colombo 1978.

Ponnambalam. S. ' Sri Lanka: National Question and the Tamil Liberation Struggle'. Zed Books, London 1983.

Thambiah. HW. 'Sinhala Laws and Customs', Colombo 1946.

## அத்தியாயம் II

# இலங்கையில் இந்தியத் தலையீடு

கறுப்பு ஜூலை கலவரமானது, இலங்கையில் இந்திய அரசு தலையீடு செய்வதற்குத் தேவையான இடைவெளியையும் பொருத்தமான புறநிலையையும், தகுந்த நியாயப்பாட்டையும் உருவாக்கிக் கொடுத்தது எனலாம். 1983 ஜூலை இனக் கலவரத்தோடு ஆரம்பமாகிய இந்தியத் தலையீடு, 1990 மார்ச் மாத இறுதியில், இந்திய அமைதி காக்கும் படையின் விலகலுடன் முடிவுக்கு வந்தது. இத் தலையீடு, இந்திய-இலங்கை உறவில் மிகவும் நெருக்கடியான சர்ச்சைக்குரிய காலகட்டமாக அமைகிறது. ஏழு ஆண்டு கால நீட்சியைக் கொண்ட இந்தியத் தலையீடானது, வெவ்வேறு கால கட்டங்களில் வெவ்வேறு வடிவங்களை எடுத்து, அரசியல், இராணுவ, கேந்திரப் பரிமாணங்களைக் கொண்ட மிகவும் சிக்கலான விவகாரமாக மாறியது.

அரசியல் மட்டத்தில் பார்க்கப் போனால், பாதுகாப்பற்ற அப்பாவித் தமிழ் சமூகத்தின் மீது கட்டவிழ்த்து விடப்பட்ட இன அழிப்பு வன்முறையைத் தடைசெய்யும் நோக்குடன் மேற்கொள்ளப்பட்ட மனிதாபிமானத் தலையீடாக இது அமைந்தது. இந்த அரசியல்-இராஜதந்திர முயற்சியானது, நான்கு ஆண்டு காலமாக நீடித்த ஒரு மத்தியஸ்த விவகாரமாக மாறி, ஈற்றில் இந்திய-இலங்கை உடன்படிக்கையாக முடிவுற்றது. தமிழரின் இனப் பிரச்சினைக்குத் தீர்வாக அதிகாரப் பரவலாக்கத் திட்டம் ஒன்றையும் இந்த உடன்படிக்கை கொண்டிருந்தது.

இராணுவ மட்டத்தில் நோக்குமிடத்து, சிங்கள அரசுக்கு எதிரான தமிழரின் ஆயுதப் போராட்ட இயக்கத்தைக் கட்டி எழுப்புவதற்கு இரகசியமாக உதவி புரிந்தமையும் இந்தியத் தலையீட்டின் ஒரு அம்சமாக அமைந்தது. தமிழரின் தேசிய

இனப் பிரச்சினைக்குச் சமாதானப் பேச்சுக்கள் வாயிலாக தீர்வுகாண வழிவகை செய்யுமாறு ஜெயவர்த்தனா அரசுக்கு அழுத்தம் கொடுக்கும் நோக்குடனேயே தமிழ்ப் போராளி அமைப்புகளுக்கு இந்திய அரசு இராணுவப் பயிற்சியையும் ஆயுத தளபாடங்களையும் வழங்கியது. பின்னைய காலகட்டத்தில், விடுதலைப் புலிகளிடமிருந்து ஆயுதங்களைக் களையவும், இந்திய-இலங்கை ஒப்பந்த விதிகளை நிறைவு செய்யவும் இந்திய அமைதிப் படைகள் அனுப்பப்பட்டதைத் தொடர்ந்து இந்தியத் தலையீடு நேரடியான இராணுவ மோதலாக வடிவம் எடுத்தது.

புவியியல்-கேந்திர மட்டத்தில் பார்த்தால், இந்தியத் தேசிய பாதுகாப்புக்கு அச்சுறுத்தல் ஏற்படுத்தும் வகையில் அந்நிய நாசகாரச் சக்திகள், அவ்வேளை இலங்கையில் ஊடுருவி நின்றதாக இந்திய அரசு அஞ்சியது. இந்தியாவின் புவியியல்-கேந்திர உறுதிநிலைக் பங்கம் விளைவிக்கக் கூடிய இந்த அந்நியச் சக்திகளை இலங்கையிலிருந்து வெளியேற்ற வேண்டும் என்பதும் இந்தியத் தலையீட்டின் ஒரு முக்கிய நோக்கமாக இருந்தது. இந்திய-இலங்கை உடன்பாட்டுடன் இணைந்ததான கடிதப் பரிமாற்றத்தில் இலங்கை அரசைக் கட்டுப்படுத்தும் விதிகளை உள்ளடக்கியதன் மூலமாக இந்தியா தனது பாதுகாப்பை உறுதிப்படுத்தியது.

பல்வேறு பரிமாணங்களைக் கொண்டதாக பெரிய எடுப்பில் மேற்கொள்ளப்பட்ட இத் தலையீடானது இறுதியில் இந்திய வெளிவிவகாரக் கொள்கைக்கும், இராஜதந்திர முயற்சிக்கும் ஏற்பட்ட பெரியதொரு தோல்வியாகவே முடிந்தது. இந்திய-இலங்கை உடன்பாடும் சரி, இந்திய அமைதிப் படைகளின் செயற்பாடும் சரி, தமிழரின் இனப் பிரச்சினையைத் தீர்த்து வைக்கவில்லை. வெவ்வேறு காரணங்களின் நிமித்தம், இந்திய-இலங்கை உடன்பாட்டையும், தமிழர் தாயகத்தில் இந்தியப் படைகளின் இருத்தலையும் தமிழர்களும் சிங்களவர்களும் விரும்பவில்லை. இந்திய இராணுவம் விடுதலைப் புலிகளின் ஆயுதங்களைக் களைவதற்கு எடுத்த முயற்சி ஒரு கெரில்லாப் போராக வெடித்தது. இந்தியப் படைகள் செய்த அட்டூழியங்கள் காரணமாக பெருந்தொகையான அப்பாவிப் பொதுமக்கள் கொல்லப்பட்டனர். தமிழரின் சொத்துக்கள் பெருமளவு அழிக்கப்பட்டன. இந்திய அமைதிப் படைகள் ஆக்கிரமிப்பு இராணுவமாக மாறி, கொடிய போர்க்

குற்றங்களைத் தமிழர் மீது இழைத்தது. இந்தியாவைத் தமது இரட்சகராகவும் பாதுகாவலராகவும் பூசித்து வந்த தமிழீழ மக்களுக்கு இந்திய இராணுவம் இழைத்த கொடுமைகள் ஆழ்ந்த அதிர்ச்சியையும் ஆத்திரத்தையும் கொடுத்தது.

இந்திய-இலங்கை உடன்பாடு செய்யப்பட்டதையும் தமிழர் தாயகத்தில் இந்தியப் படைகள் தரித்து நின்றதையும் எதிர்த்துத் தென்னிலங்கையில் ஒரு கொந்தளிப்பான நிலைமை உருவானது. இலங்கை மண்ணில் இந்தியப் படைகள் ஆக்கிரமித்து நின்றதை எதிர்த்துத் தீவிரவாதக் கம்யூனிஸ்ட் இயக்கமான ஜனதா விமுக்தி பெரமுனை (ஜே.வி.பி) சிங்கள அரசுக்கு எதிராக ஆயுதக் கிளர்ச்சியில் குதித்தது. 1988இல் ஜனாதிபதி பிரேமதாசா ஆட்சிப்பீடம் ஏறியதை அடுத்து, அவர் விடுதலைப் புலிகளுடன் சமாதானப் பேச்சுவார்த்தைகளை ஆரம்பித்து இந்தியப் படைகளை நாட்டை விட்டு வெளியேறுமாறு வேண்டினார். இதனால் இந்திய-இலங்கை உறவில் பகைமையும் முறிவும் ஏற்படும் சூழ்நிலை உருவாகியது. இறுதியில், திரு. வி.பி.சிங் அவர்கள் இந்தியப் பிரதமராகிய வேளையில் இந்தியப் படைகளை திருப்பி அழைக்க இந்திய அரசு முடிவெடுத்தது. 1990 மார்ச் மாதம் இந்திய இராணுவத்தின் கடைசிப் படையணிகள் இலங்கை மண்ணைவிட்டு வெளியேறின. அத்துடன் மிகவும் சர்ச்சைக்கு ஆளாகியிருந்த இந்தியத் தலையீட்டுச் சம்பவம் முடிவுக்கு வந்தது. இந்தக் கசப்பான, அவமானத்திற்குரிய வரலாற்று அனுபவம் காரணமாக இலங்கையின் இனப் பிரச்சினையில் நீண்ட காலமாகவே ஒரு தலையிடாக் கொள்கையை இந்திய அரசு கடைப்பிடித்து வருகிறது.

இலங்கையில் இந்தியத் தலையீடு குறித்து, பல்வேறு வட்டாரங்களிலிருந்து பல்வேறு வகையான கண்டன ஆய்வுகள் முன்வைக்கப்பட்டன. இந்தியாவில் இருந்தே மிகவும் மோசமான கண்டனக் குரல்கள் எழுந்தன. அயல்நாட்டினது உள்நாட்டு விவகாரத்தில் அவசியமின்றித் தலையிட்டு, உலக அரங்கில் இந்தியாவுக்கு அவப்பெயரை பெற்றுக் கொடுத்ததாகவும், இதனால் பாரத நாட்டின் அணிசேராக் கொள்கைக்கு பாரதூரமான பங்கம் ஏற்பட்டதாகவும் பல இந்திய அரசியல் ஆய்வாளர்களும், கல்விமான்களும் ஊடகவியலாளரும் கண்டன விமர்சனங்களை முன்வைத்தனர். இன அழிப்பை நோக்காகக் கொண்ட கலவரத்தை மனிதாபிமானத்தின் அடிப்படையில் தடுத்து நிறுத்த

வேண்டும் என்பதால் இந்தியத் தலையீடு தவிர்க்க முடியாதது எனச் சிலர் வாதிட்டனர். எனினும் இத் தலையீடு அரசியல், இராஜதந்திர மட்டத்தில் அமைந்திருக்க வேண்டும் என்பது இவர்களது கருத்து. அமைதி காக்கும் பணி என்ற சாக்கில் இந்திய இராணுவம் இலங்கைக்கு அனுப்பப்பட்டதை இவர்கள் வன்மையாகக் கண்டித்தனர். இந்திய மத்தியஸ்துவ முயற்சி தோல்வியில் முடிந்தமைக்கு விடுதலைப் புலிகளின் விட்டுக்கொடாத கடும்போக்கையும் பிரேமதாசா அரசின் நன்றிகெட்ட துரோகத்தையும் மூலகாரணமாகச் சுட்டிக் காட்டின இந்தியப் பத்திரிகைகள். நட்புறவுடைய ஒரு மக்கள் சமூகத்துடன் நல்லுறவு பேணி, அமைதி காக்க வேண்டிய இந்தியப் படைகள் எதற்காக ஒரு போரை நடத்தி தமது தரப்பில் பெரும் உயிரிழப்பைத் தேடிக் கொண்டார்கள் எனத் தமது ஆய்வுகளில் சுயவிசாரணை செய்தார்கள் இந்தியத் தளபதிகள். சிங்கள தேசத்திலிருந்தும் பல கண்டன விமர்சனங்கள் வெளிவந்தன. பெரும்பாலும் சிங்களப் பத்திரிகையாளர்களால் எழுதப்பட்ட இந்த ஆய்வுக் கட்டுரைகள் தமிழரின் தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு எதிரானவையாக அமைந்ததுடன் விடுதலைப் புலிகளை ஒழித்துக் கட்டத் தவறியதற்காக இந்திய இராணுவத்தைக் கடிந்து கொண்டன. 'இலங்கையில் இந்தியத் தலையீடு' என்ற தலைப்பில் றோகன் குணரத்தினா எழுதிய புத்தகத்தை ஒரு கனமான வரலாற்று ஆய்வு நூலாகக் கொள்ள முடியாது. இந்தியப் புலனாய்வுத் துறையினர் இலங்கை அரசுக்கு எதிராக நிகழ்த்திய நிழல் யுத்தம் பற்றியே அவரது நூல் விபரிக்கிறது.[1]

தமிழர் தரப்பில் வெளியாகிய விடுதலைப் புலிகளின் விமர்சன எழுத்துக்கள் இரு அம்சங்களைக் கண்டித்தன. இவை இரண்டும் தமிழீழ மக்களின் வாழ்வையும் அவர்களது அரசியல் எதிர்காலத்தையும் வெகுவாகப் பாதித்த விடயங்களாகும். ஒன்று, தமிழ் மக்களுக்கு எதிராக இந்திய இராணுவம் புரிந்த கொடுமைகளைக் கண்டித்தது. இரண்டாவது, தமிழரின் தேசிய இனப் பிரச்சினையின் தீர்வாக இந்திய-இலங்கை உடன்பாட்டில் முன்வைக்கப்பட்ட யோசனைத் திட்டம். இந்த இரண்டு விவகாரங்கள் குறித்தும் விடுதலைப் புலிகள் இயக்கம் பல ரகமான விமர்சன எழுத்துக்களை வெளியிட்டது. 'சாத்தானின் படைகள்' என்ற தலைப்பில், தமிழர் தாயகத்தில் இந்திய இராணுவம் புரிந்த அட்டூழியங்களை விபரித்து எமது அமைப்பு

நூல் ஒன்றை வெளியிட்டது. ஐநூறுக்கும் மேற்பட்ட பக்கங்களையுடைய இப் பெரிய நூலில், இந்தியத் தலையீட்டை கண்டிக்கும் ஆய்வுக் கட்டுரைகள், இந்தியப் படைகள் புரிந்த கொடுமைகள், அந்தக் கொடுமைகளை நேரில் கண்டவர்களின் சாட்சி விபரணைகள், பாலியல் வன்முறைக்கும் சித்திரவதைகளுக்கும் ஆளானோரின் வாக்குமூலங்கள், பாதிக்கப்பட்டோரின் உறுதி ஆணைப் பத்திரங்கள், கொடுமைகளைச் சித்தரிக்கும் புகைப்படங்கள் ஆகியன அடங்கிய இந்த நூலுக்கு நான் நீண்டதொரு முன்னுரை எழுதினேன். இந்திய அமைதிப் படையினரின் கொடிய போர்க் குற்றங்களையும், பாரதூரமான மனித உரிமை மீறல்களையும் இந்தத் தகவல் களஞ்சிய நூல் அம்பலப்படுத்தியது. இந்திய-இலங்கை உடன்பாட்டில் முன்வைக்கப்பட்ட தீர்வுத் திட்டத்தையும் திறனாய்வு செய்து, அத் திட்டத்திலுள்ள குறைபாடுகளையும் சுட்டிக்காட்டி, விடுதலைப் புலிகள் அமைப்பு கட்டுரைகளையும் பிரசுரங்களையும் வெளியிட்டது. இந்திய அமைதிப் படைகளின் அட்டூழியங்களை தகுந்த சான்றுகளுடன் எமது இயக்கம் அம்பலப்படுத்தியபோதும், இந்தியத் தரப்பு அதனை நிராகரித்தது. 'சாத்தானின் படைகள்' என்ற நூலை விமர்சித்த ஒரு இந்திய இராஜதந்திரி, அதனை இந்திய இராணுவத்திற்கு எதிரான விடுதலைப் புலிகளின் விசமப் பிரச்சாரம்' என்று வர்ணித்திருக்கிறார்.[2]

புதிர்கள் நிறைந்த சிக்கலான வரலாற்றைக் கொண்ட இந்திய தலையீட்டில் விடுதலைப் புலிகளின் பங்கு முக்கியமானதாகும். திருநெல்வேலியில் சிங்களப் படையினர் மீது கெரில்லாத் தாக்குதல் நடத்தியதன் விளைவாகவே இனக் கலவரம் வெடித்ததென்றும் அக் கலவரத்தைச் சாக்காக வைத்து இந்தியா இலங்கையில் தலையிட்டது என்றும் கூறி முழுப் பழியையும் விடுதலைப் புலிகள் மீது சுமத்த சிறீலங்கா அரசு முனைந்தது. இது முற்றிலும் தவறான கண்ணோட்டம். பேரழிவாக வெளிப்பாடு கண்ட ஒரு இனப் படுகொலைக் கலவரத்தை விடுதலைப் புலிகளின் ஒரு கெரில்லாத் தாக்குதலுக்குள் மூடிமறைத்துவிட முனைவது தறவான மதிப்பீடாகும்.

இந்தியாவின் தலையீடு சம்பந்தப்பட்ட விவகாரத்தில் விடுதலைப் புலிகள் எத்தகைய பங்கு வகித்தார்கள் என்பதைப் பார்ப்போம். கறுப்பு ஜூலை இனக்கலவரத்தை அடுத்து இந்திய அரசு ஏற்பாடு செய்த இரகசிய இராணுவப் பயிற்சித் திட்டத்தில்

விடுதலைப் புலிகள் இயக்கமும் பங்குபற்றியது. இதைத் தொடர்ந்து இந்தியா அரங்கேற்றிய அரசியல் - இராஜதந்திர சதுர ஆட்டத்தில் எமது விடுதலை அமைப்பும் பங்குகொள்ள நிர்ப்பந்திக்கப்பட்டது. ஈழத் தமிழரின் இனப் பிரச்சினைக்குத் தீர்வுகாணும் நோக்கில் இந்திய அரசு மேற்கொண்ட மத்தியஸ்த முயற்சிகள் அனைத்திலும் விடுதலைப் புலிகள் அமைப்பு பங்குகொண்டது. இந்தியத் தலையீட்டின் இறுதிக் கட்டத்தில் இந்தியா எமது விடுதலை அமைப்பு மீது யுத்தப் பிரகடனம் செய்து ஆயுதங்களைக் களைய முற்பட்டபோது இந்திய இராணுவத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் போர் வெடித்தது. இந்தப் போர் தீவிரமடைந்து நீடித்துச் சென்றவேளை எமது அமைப்பு சிறீலங்கா அரசுடன் சமாதானப் பேச்சுக்களை நடத்தி இந்தியப் படைகளை தமிழர் தாயகத்திலிருந்து வெளியேற்ற வழி சமைத்தது. இப்படியாக எமது விடுதலை இயக்கம், இந்தியத் தலையீடு நிகழ்ந்த கால விரிப்பில், பல்வேறு சிக்கலான பங்குகளை வகித்தது. எனினும், எமது இயக்கம் எத்தனையோ சவால்களுக்கும் ஆபத்துக்களுக்கும் முகம்கொடுத்து வெற்றிப் பாதையில் முன்னேறியது. அரசியல், இராஜதந்திர, இராணுவப் பரிமாணங்களைக் கொண்ட இந்தியத் தலையீடு இறுதியில் படுதோல்வியைத் தழுவிக் கொண்டாலும், இதில் விடுதலைப் புலிகள் இயக்கம் மையமான பங்கு வகித்திருப்பதாலும், இத் தலையீடு பற்றிய இந்திய தரப்பு ஆய்வுகள் எமது அமைப்பு மீது கண்டன விமர்சனங்களை முன்வைத்ததில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. இக் கண்டன ஆய்வுகளில் பெரும்பாலானவை நேர்மையற்றவை; பக்க சார்புடையவை. எமது விடுதலை அமைப்பின் அரசியற் குறிக்கோளையும் இலட்சிய உறுதியையும் சரிவரப் புரிந்து கொள்ளாமல் எழுதப்பட்ட விமர்சனங்கள் இவை. நெருக்கடிகள் மிகுந்த அந்த வரலாற்றுச் சூழலில், எமது இயக்கம் உறுதி தளராது எமது மக்களின் நலன்களுக்கும் அரசியல் அபிலாசைகளுக்குமே முக்கியத்துவம் கொடுத்தது. பல சந்தர்ப்பங்களில் பேரழிவை எதிர்கொண்டபோதும் எமது இயக்கம் தனது இலட்சியப் பாதையிலிருந்து விலகவில்லை.

இலங்கையில் இந்தியத் தலையீடு நிகழ்ந்த மிகக் கொந்தளிப்பான வரலாற்றுக் காலகட்டத்தில் விடுதலைப் புலிகள் எதிர்கொண்ட சம்பவங்களையும், முகம்கொடுத்த சவால்களையும், மேற்கொண்ட தீர்மானங்களையும் இப் பகுதியில் விபரித்துக் கூற

விரும்புகிறேன். எமது இயக்கத்தின் பிரதிநிதியாகவும், ஆலோசகராகவும் முக்கிய நிகழ்வுகளில் நேரடியாகப் பங்குகொண்ட அனுபவத்தின் அடிப்படையில் விடுதலைப் புலிகளுக்கு எதிராக முன்வைக்கப்பட்ட பொய்க் குற்றச்சாட்டுகளை மறுத்துரைத்து, உண்மை நிலையை எடுத்து விளக்குவதே எனது குறிக்கோள். இந்திய-புலிகள் உறவு பற்றிய உண்மைச் சம்பவங்களை கால வரிசையில் தொகுத்து, செம்மையான முறையில் வரலாற்றுப் பதிவு செய்வது அவசியமெனக் கருதுகிறேன்.

## இலங்கையில் அந்நிய ஊடுருவல்

ஆயிரத்து தொள்ளாயிரத்து எண்பதுகளின் ஆரம்ப காலம். பழைய உலக ஒழுங்கில் நிலவிய பனிப்போர் முடிவுக்கு வரும் இறுதிக் கட்டம். இரு உலக வல்லரசுகள் மத்தியில் பகைமை கூர்மையடைந்திருந்த கொந்தளிப்பான கால கட்டம். ஆப்கானிஸ்தான் மீது சோவியத் யூனியன் இராணுவ ஆக்கிரமிப்பை மேற்கொண்டதால் அமெரிக்காவில் ரேகனின் நிர்வாக ஆட்சி ஆத்திரமும் அச்சமும் அடைந்திருந்தது. மத்திய ஆசிய பிராந்தியத்தில் சோவியத் யூனியனின் வல்லாதிக்க ஊடுருவல்களைக் கட்டுப்படுத்தும் நோக்கில் அமெரிக்க வல்லரசு பாகிஸ்தானுடன் இராணுவக் கூட்டுறவு உடன்பாடு ஒன்றைச் செய்து கொண்டது. அமெரிக்காவின் நல்லுறவும் இராணுவ பக்க பலமும் பெற்றுக் கொண்ட பாகிஸ்தான், தனது வரலாற்று எதிரியான இந்தியாவை எதிர்கொள்ளும் வகையில் தனது இராணுவ கேந்திர வலுவைக் கட்டி எழுப்பியது. இதே சமயம், சோவியத் யூனியனின் வல்லாதிக்க விரிவாக்கத்திற்கு அஞ்சிய சீனா, பாகிஸ்தானுக்கு இராணுவ, தொழில்நுட்ப உதவிகளை வழங்கி, ஆப்கானிஸ்தானில் ரஷ்யர்களுக்கு எதிராக பாகிஸ்தானியர்கள் நிகழ்த்தி வந்த இரகசிய நிழல் யுத்தத்திற்கு உதவியது. இந்த வளர்ச்சிப் போக்குகள் இந்தியாவுக்கு கலக்கத்தைக் கொடுத்தன. சீனப் படையெடுப்பைத் தொடர்ந்து சோவியத் யூனியனுடன் ஒரு பாதுகாப்பு ஒப்பந்தத்தை செய்து கொண்ட இந்தியா தன்னை ஒரு அணிசேரா வல்லரசு என உரிமைகோர முடியவில்லை. அத்தோடு, ஆப்கானிஸ்தான் பிரச்சினை வல்லரசுகள் மத்தியிலான போட்டியை

கூர்மைப்படுத்தி, அமெரிக்காவுக்கும் பாகிஸ்தானுக்கும் மத்தியில் நெருங்கிய இராணுவ உறவை உருவாக்கியமை இந்தியாவுக்கு மேலும் அச்சத்தைக் கொடுத்தது. இப்படியான வரலாற்றுப் புறநிலையில்தான், சிறீலங்கா அரசானது, இந்திய நலன்களுக்கு விரோதமான அந்நியச் சக்திகளை இலங்கையில் ஊடுருவி நிலைகொள்ள அனுமதித்தது. இந்திய அரசின் வல்லாதிக்க உள்நோக்குகளுக்கு அஞ்சிய ஜெயவர்த்தனாவின் ஆட்சிப்பீடம், அந்நியச் சக்திகளின் உதவியை நாடியது. தமிழரின் ஆயுதக் கிளர்ச்சியை நசுக்கிவிடுவதற்கு அமெரிக்கா, பாகிஸ்தான், இஸ்ரேல், தென்னாபிரிக்கா, சீனா போன்ற நாடுகளிடமிருந்து ஆயுத உதவியையும் இராணுவப் பயிற்சியையும் வேண்டியது.

இஸ்ரேல் அரசுடன் கூட்டுச் சேர்ந்து, யூத நாட்டின் வாயிலாகவே அமெரிக்க வல்லரசு சிறீலங்காவுக்கு, இராணுவத் தொழில்நுட்ப உதவிகளை வழங்கியது. கொழும்பிலுள்ள அமெரிக்கத் தூதரகத்தில் 'இஸ்ரேலிய நலன்புரிப் பிரிவு' ஒன்று திறக்கப்பட்டது. இதனையடுத்து, இலங்கையில் இஸ்ரேலியர்களின் படைத்துறைச் செயற்பாடுகள் விஸ்தரிக்கப்பட்டன. இஸ்ரேலின் உதவியுடன் சிறீலங்காவின் கடற்படை நவீனமயமாக்கப்பட்டு கட்டியெழுப்பப்பட்டது. இஸ்ரேலின் உள்நாட்டுப் புலனாய்வுப் பிரிவு (சின்பெற்) நிபுணர்கள் இலங்கைக்கு வருகை தந்து எதிர்ப்புரட்சி போரியல் நுட்பங்கள் பற்றிச் சிங்கள ஆயுதப் படையினருக்கு, குறிப்பாக விசேட அதிரடிப் படையினருக்கு, பயிற்சிகளை அளித்தார்கள். இது இவ்வாறிருக்க, அமெரிக்கா கொழும்புக்கு வடக்கேயுள்ள சிலாபத்தில், மின்னியக்கத் தகவல் பரிமாற்ற வசதிகளுடன் 'அமெரிக்காவின் குரல்' வானொலிச் சேவையை விரிவாக்கம் செய்தது. அத்துடன் சிங்கப்பூரிலுள்ள தனது வர்த்தக நிறுவனம் ஒன்றினூடாக, திருகோணமலையிலுள்ள எண்ணெய்க் குதங்களையும் ஒப்பந்த அடிப்படையில் பெற்றுக் கொள்ளவும் முயற்சித்தது. இதற்கிடையில், 1983 அக்டோபரில் அமெரிக்கப் பாதுகாப்பு, புலனாய்வுத் துறைகளைச் சார்ந்த உயர் அதிகாரியான ஜெனரல் வேர்னன் வால்டரும், அவரைத் தொடர்ந்து அமெரிக்கப் பாதுகாப்பு அமைச்சரான காஸ்பர் வின்பேகரும் கொழும்புக்கு விஜயம் செய்து, சிங்கள ஆட்சியாளர்களுடன் மந்திராலோசனை நடத்தினார்கள். இரு உயர்தர அமெரிக்க அதிகாரிகளின் கொழும்பு விஜயம் இந்திய அரசுக்கு சந்தேகத்தையும் அச்சத்தையும் ஏற்படுத்தியது.

இலங்கையில் அமெரிக்காவின் தலையீடு அதிகரித்து வருவதாகக் கருதிய டெல்லி ஆட்சியாளர், அமெரிக்காவுக்கும் சிறீலங்காவுக்கும் மத்தியில் ஒரு இரகசிய இராணுவ ஒப்பந்தம் ஏற்படும் சாத்தியம் பற்றியும் அச்சம் கொண்டனர்.

ஜூலை கலவரத்தை அடுத்து, பிரித்தானியாவிலுள்ள சனல் தீவிலிருந்து இயங்கிய 'கினி மினி சேவை' என்ற அமைப்பின் கூலிப் படை நிபுணர்களை இலங்கைக்கு அழைத்தார் ஜெயவர்த்தனா. ஆயுதப் புரட்சிக்கு எதிரான போரியல் தந்திரங்களில் நிபுணத்துவம் பெற்ற இந்த ஆங்கிலக் கூலிப் படையினர் இலங்கையில் தங்கியிருந்து சிங்களக் காவல்துறையின் அதிரடிப் படையினருக்கு விசேட பயிற்சிகளை அளித்தனர். இதேவேளை, சிறீலங்கா அரசு பாகிஸ்தானிடமிருந்து இராணுவப் பயிற்சிக்கான உதவிகளை நாடியது. ஜூலை கலவரத்தின் பின்னர் பாகிஸ்தானிய இராணுவப் பயிற்சி நிபுணர்களைக் கொண்ட விசேட பிரிவு ஒன்று இலங்கைக்கு வருகை தந்து, சிங்களப் படையினருக்குப் பயிற்சி அளிக்கத் தொடங்கியது. இவர்களது பயிற்சியில் உருவாக்கப்பட்டதே, 'கரும் சிறுத்தைகள்' எனப்படும் அதிரடிப் படைப் பிரிவு. கறுப்புச் சீருடை அணிந்த இப் படையினரை 'கரும் பிசாசுகள்' என்று தமிழ் மக்கள் அழைப்பதுண்டு. கிழக்கில், குறிப்பாகத் திருகோணமலைப் பிரதேசத்தில் தமிழர்களைக் கொன்றொழிக்கும் கொடும் செயல்களில் இக் 'கரும் பிசாசுகள்' ஈடுபட்டனர்.

இலங்கையில் அமெரிக்கா, இஸ்ரேல், பாகிஸ்தான் ஆகிய நாடுகளின் தலையீடு அதிகரித்து வந்ததுடன் அந்நியப் புலனாய்வுத் துறை அதிகாரிகளும் எதிர்ப் புரட்சிப் போரியல் நிபுணர்களும் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த அயல் நாடான இலங்கையில் நிலைகொண்டு சிங்கள ஆயுதப் படைகளுக்குப் பயிற்சியளித்தமை இந்தியாவுக்கு ஒரு புறம் சினத்தையும், மறுபுறம் அச்சத்தையும் ஏற்படுத்தியது. அத்தோடு சீனாவும் சிறீலங்கா அரசுக்குப் பெருந்தொகையில் நவீன ஆயுதங்களை வழங்கியது. இப்படியாக, இந்திய நலன்களுக்கு விரோதமான அந்நியச் சக்திகளின் ஊடுருவல் இலங்கையில் அதிகரித்து வருவது தனது தேசியப் பாதுகாப்புக்கும், புவியியல்-கேந்திர சூழலுக்கும் அச்சுறுத்தலை விளைவிப்பதாக இந்தியா கருதியது. இந்தியாவை ஒரேயடியாக ஓரம் கட்டிவிட்டு, இராணுவப் பயிற்சிக்கும் ஆயுத உதவிக்கும் சிறீலங்கா அரசு அந்நிய

நாடுகளை நாடி நிற்பது, அவ்வேளை இந்தியாவின் ஆட்சிப்பீடத்தில் அமர்ந்திருந்த இந்திரா காந்தி அம்மையாருக்கு கடும் சினத்தை ஏற்படுத்தியது. இந்தியாவின் தேசியப் பாதுகாப்பு உணர்வுகளை உதாசீனம் செய்து, இந்திய நலன்களுக்கு விரோதமான அந்நிய சக்திகளை இலங்கைக்குள் ஊடுருவ அனுமதித்தது குறித்து ஜெயவர்த்தனா மீது டில்லி அரசு சினமுற்றது.

ஈழத் தமிழர்கள் மீது இந்திரா காந்தி அம்மையாருக்கு இரக்கமும் அனுதாபமும் இருந்தது. தமிழர்களது பரிதாப நிலை குறித்து ஆழமான புரிந்துணர்வும் இருந்தது. ஈழத் தமிழ் மக்கள் எத்தகைய கொடூரமான அரச ஒடுக்குமுறைக்கு முகம்கொடுத்து நிற்கின்றார்கள் என்பது பற்றி எண்பதுகளின் ஆரம்ப காலம் தொட்டே இந்திரா காந்தி அம்மையாருக்கு விளக்கம் அளிக்கப்பட்டு வந்தது. இந்திய இராஜதந்திர, புலனாய்வுத்துறை வட்டாரங்களில் இருந்து மட்டுமன்றி, தமிழீழ, தமிழக அரசியல் தலைவர்கள் ஊடாகவும் இலங்கை வாழ் தமிழ் மக்களின் அவல நிலைபற்றி அவர் அறிந்திருந்தார். இந்திரா காந்தி அம்மையார் தேர்ச்சியும் முதிர்ச்சியும் பெற்ற பழுத்த அரசியல்வாதி என்பதால் ஜெயவர்த்தனாவின் சூத்திரதார குணவியல்பு பற்றியும், அவரது இனவாதக் கொள்கை பற்றியும் நன்கு அறிந்திருந்தார். தமிழரின் இனப் பிரச்சினை காரணமாக இரு நாடுகளது தலைவர்களின் உறவில் வெறுப்பும் பகைமையும் நிலவியது. ஈழத் தமிழரின் அவல நிலை குறித்துத் தமிழ் நாட்டுத் தமிழ் மக்கள் எத்தகைய ஆழமான உணர்வலைகளைக் கொண்டிருந்தனர் என்பதையும் இந்திரா காந்தி அம்மையார் நன்கறிவார். இன உணர்வாலும், பண்பாட்டு உறவாலும், வரலாற்று வேர்களாலும் பின்னப்பட்டிருந்த தமிழீழ மக்கள் மீது தமிழ் நாட்டுத் தமிழர்களும் அவர்களது தலைவர்களும் ஆழமான அனுதாபம் கொண்டிருந்ததுடன் ஈழத் தமிழரின் தேசிய விடுதலைப் போராட்டத்தையும் முழு மனதோடு ஆதரித்தார்கள்.

தமிழர்களுக்கு எதிராக ஏவிவிடப்பட்ட ஜூலை இனக் கலவரப் பேரழிவானது தமிழ் நாட்டில் தேசிய எழுச்சியைக் கிளறிவிட்டு தமிழகத் தமிழர்களை உணர்வு பொங்கச் செய்தது. ஈழத் தமிழர்களுக்கு ஆதரவாகப் பல ஆயிரம் மக்களை அணிதிரட்டி மாபெரும் ஆர்ப்பாட்டங்களையும் மறியல் போராட்டங்களையும் நடத்துவதில் திராவிட அரசியல் கட்சிகள் மத்தியில் கடும் போட்டி நிலவியது. இந்திரா காந்தி

அம்மையாரின் அரசுடன் அணிசேர்ந்து நின்ற தமிழக முதல்வர் திரு. எம்.ஜி. இராமச்சந்திரன், இலங்கைத் தமிழர் பிரச்சினையில் இந்தியா அவசரமாகத் தலையிடவேண்டும் என வற்புறுத்தினார். ஈழத் தமிழரின் இனப் படுகொலையைத் தவிர்ப்பதற்கு அமைதி காக்கும் படைகளை அனுப்புமாறு இந்திய அரசு ஐக்கிய நாடுகள் சபையிடம் அவசர வேண்டுகோள் விடுக்க வேண்டும் எனவும் அவர் கோரினார். தமிழ் நாட்டில் தமிழ்த் தேசியம் எழுச்சிப் பிரவாகமெடுத்து பிரிவினைவாதமாகப் பரிணாமம் பெற்றுவிடுமோ என டில்லி ஆட்சிப்பீடம் அச்சம் கொண்டது. ஜுலை இனக் கலவரத்தின் விளைவாக, பெருந்தொகையில் ஈழத் தமிழ் மக்கள் அகதிகளாகத் தமிழ் நாட்டில் தஞ்சம் புகுந்தனர். இந்திரா காந்தி அம்மையாரை இலங்கை விவகாரத்தில் தலையிடத் தூண்டியதற்கு இதுவும் ஒரு காரணமாக அமைந்தது. இனக் கலவரத்தின் விளைவாகப் புலம் பெயர்ந்த ஐந்து லட்சம் மக்களில் இரண்டு லட்சம் பேர் இந்தியாவிலும் மிகுதியானோர் மேற்கு ஐரோப்பா, கனடா, அவுஸ்திரேலியா ஆகிய நாடுகளிலும் அகதிகளாகத் தஞ்சம் புகுந்தனர். ஆகவே, இனக் கலவரத்தால் எழுந்த பாரதூரமான விளைவுகளின் நிமித்தம் தமிழ் நாட்டில் உருவாகிய கொந்தளிப்பான நிலைமை காரணமாகவே ஈழத் தமிழர் பிரச்சினையில் நடவடிக்கை எடுப்பதற்கு இந்தியா நிர்ப்பந்திக்கப்பட்டது. உள்நாட்டு அரசியல் நிர்ப்பந்தங்கள் ஒருபுறமிருக்க, தனது தென்பிராந்திய அயல்நாடான இலங்கைத் தீவில் அந்நியப் பகைமை சக்திகள் காலூன்றி வருவதும் தேசிய பாதுகாப்புக்கு அச்சுறுத்தலாக இந்தியா கருதியது. இத்தகைய சூழ்நிலையானது, இலங்கையில் இந்தியா தலையிடுவதைத் தவிர்க்க முடியாத வரலாற்றுத் தேவையாக மாற்றியது.

இலங்கையின் முன்னாள் இந்தியத் தூதுவர் திரு.ஜே.என்.டிக்சிட், **'கொழும்பில் ஆற்றிய பணி'** என்ற தனது நூலில், இந்தியத் தலையீடு சம்பந்தமாகக் கீழ்க் கண்ட கருத்தை வெளியிட்டார்.

> "தனது தமிழ்க் குடிமக்களுக்கு எதிராகக் கொழும்பு அரசு கடைப்பிடித்த பாரபட்சமான ஒடுக்குமுறைக் கொள்கைகளால் ஏற்பட்ட விபரீத விளைவுகள் ஒருபுறமும், அமெரிக்கா, பாகிஸ்தான், இஸ்ரேல் ஆகிய நாடுகளுடன் இலங்கை கொண்டிருந்த உறவுகளால் ஏற்பட்ட தேசியப் பாதுகாப்பு அச்சுறுத்தல்கள் மறுபுறமுமாக, சிறீலங்காவில் இந்தியா, தலையிடுவது

தவிர்க்க முடியாத விடயமாகச் செய்தது."[3]

அந்தக் கால கட்டத்தில், இந்திய வெளிவிவகாரக் கொள்கையை நெறிப்படுத்தும் பொறுப்பிலிருந்த இந்திரா காந்தி அம்மையார் இலங்கையில் தலையிடுவதென்ற வரலாற்று முக்கியம் வாய்ந்த தீர்மானத்தை எடுத்தார். இரண்டு குறிக்கோள்களை அடையும் நோக்கில் இருமுனைச் செயற்திட்டத்தை அவரது ஆலோசகர்கள் வகுத்துக் கொடுத்தனர். ஒன்று வெளிப்படையானது; மற்றது மறைமுகமானது. வெளிப்படையாக, சிறீலங்கா அரசுடன் இராஜதந்திர மத்தியஸ்துவ முயற்சிகளை மேற்கொள்வது. மறைமுகமாக, தமிழரின் ஆயுதம் தரித்த எதிர்ப்பு இயக்கத்திற்கு உதவிசெய்து அதனைக் கட்டி எழுப்புவது. ஒன்றுக்கொன்று முரண்பாடு கொண்டதாக இத் திட்டம் அமையப் பெற்றபோதும், வஞ்சகக் குணமுடைய கிழட்டு நரி ஜெயவர்த்தனாவை வழிக்கு கொண்டு வருவதற்கு இதுவே சிறந்த வழியென இந்திய அரசு கருதியது. இந்திய நலன்களுக்கு விரோதமான அந்நியச் சக்திகளை வெளியேற்றி, இலங்கையை இந்தியாவின் ஆதிக்க வியூகத்திற்குள் கொண்டுவருவது முதலாவது குறிக்கோள். சிறீலங்கா மீது தமிழ்ப் புரட்சி இயக்கங்களின் இராணுவ அழுத்தத்தை அதிகரித்து அதன் வாயிலாக தமிழரின் இனப் பிரச்சினைக்குப் பேச்சுக்கள் மூலம் தீர்வு காணுமாறு ஜெயவர்த்தனா அரசை நெருக்குவது இரண்டாவது குறிக்கோள்.

1983 ஜூலை 24ஆம் நாள், தமிழருக்கு எதிரான இனக் கலவரம் தலைதூக்கிய அன்றே திருமதி. காந்தியின் அரசியல்-இராஜதந்திர முயற்சிகள் ஆரம்பமாகின. தமிழர்களுக்கு எதிராக ஏவிவிடப்பட்ட வன்முறையின் கோரத் தாண்டவம் இந்திரா அம்மையாரை ஆழமாகப் பாதித்தது. நிலைமையை அறிந்ததும் உடனடியாகவே ஜெயவர்த்தனாவுடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டு தனது அதிருப்தியைத் தெரிவித்துக் கொண்டார். அவரது அறிவுறுத்தலின் பேரில் இந்திய வெளிவிவகார அமைச்சு ஒரு கண்டன அறிக்கையை வெளியிட்டது. 'தனது கொல்லைப் புறத்தில் இத்தகைய கொடுமைகள் நீடித்தால் இந்தியாவால் சும்மா பார்த்துக் கொண்டிருக்க முடியாது' என அந்த அறிக்கையில் ஒரு எச்சரிக்கையும் விடப்பட்டது. ஜூலை 26 அன்று இனக் கலவரம் மூன்றாவது நாளாகத் தொடர்ந்த போது, இந்திரா அம்மையார்

இந்திய வெளிவிவகார அமைச்சர் திரு. நரசிம்மராவ் அவர்களை தனது விசேட தூதுவராகக் கொழும்புக்கு அனுப்பி வைத்தார். இந்திய அமைச்சரை வெகு மரியாதையுடன் வரவேற்ற ஜெயவர்த்தனா, தனது இனவாதப் பார்வையில் நிலைமையை திரிவுபடுத்தி விளங்கப்படுத்தினார். இந்த இனக் கலவரத்தை எவ்வாறு சிங்கள அரசு முன்னின்று நடத்தியது என்ற உண்மையை அவர் மூடி மறைத்தார். எனினும் இந்திய அரசின் அதிருப்தியையும் அங்கலாய்ப்பையும் திரு. நரசிம்மராவ் தெரிவிக்கத் தவறவில்லை. தமிழரின் இனப் பிரச்சினை சமாதானப் பேச்சுவார்த்தை மூலம் தீர்க்கப்பட வேண்டும் என்பதை வலியுறுத்திய இந்திய அமைச்சர், இவ் விவகாரத்தில் இந்தியா மத்தியஸ்துவம் வகிப்பதைத் திருமதி. காந்தி விரும்புவதாகவும் கூறினார். இந்திய அரசுடன் பகைத்துக் கொள்வதை விரும்பாத ஜெயவர்த்தனா இந்திய மத்தியஸ்துவத்திற்கு இணங்கினார். திரு. நரசிம்மராவின் விஜயத்தை அடுத்து, இந்தியாவின் மத்தியஸ்துவராக திரு. கோபாலசாமி பார்த்தசாரதி அவர்கள் திருமதி. காந்தியால் நியமிக்கப்பட்டார்.

திரு.ஜி.பார்த்தசாரதி ஒரு தமிழ்ப் பிராமணர். நேரு குடும்பத்துடன் நெருக்கமானவர். இந்திய வெளியுறவுக் கொள்கையை வகுப்பதில் திருமதி. காந்திக்கு மூத்த ஆலோசகராக விளங்கியவர். சாணக்கியம் மிக்க தலைசிறந்த இராஜதந்திரி. இந்தியக் கொள்கைத் திட்டமிடும் கவுன்சிலின் அதிபராகப் பணிபுரிந்த திரு. பார்த்தசாரதி அமைச்சரவை அந்தஸ்தையும் பெற்றவர். புதுடெல்லி, தமிழ்நாட்டு அரசியல் வட்டாரங்களில் பிரபல்யம் பெற்றவர். திரு. பார்த்தசாரதியிடம் பரந்த உலகப் பார்வையும், தெளிந்த அரசியல் ஞானமும் இருந்தது. ஈழத் தமிழரின் நலனிலும் அரசியல் அபிலாசையிலும் அவர் அக்கறை கொண்டவர். இப்படியான சிறந்த பண்புகளுடைய ஒரு மனிதரை இந்தியாவின் மத்தியஸ்தராக நியமித்ததன் மூலம் தமிழீழத்திலும், தமிழ் நாட்டிலும் குமுறிக் கொண்டிருந்த தமிழ் மக்களை ஓரளவுக்கேனும் திருப்திப்படுத்தலாம் என இந்திரா காந்தி அம்மையார் எண்ணினார். 1983 ஆகஸ்ட் மாதம் 25 அன்று இலங்கைக்கு விஜயம் செய்த திரு. பார்த்தசாரதி, தனது கடினமான மத்தியஸ்துவ முயற்சியை ஆரம்பித்தார். எனினும், ஒரு தமிழ்ப் பிராமணர் இந்தியாவின் மத்தியஸ்தராக நியமிக்கப்பட்டதைச்

சிங்கள பௌத்த பேரினவாத சக்திகள் விரும்பவில்லை. சினம்கொண்ட பௌத்த பிக்குகள் பார்த்தசாரதியின் சமரச முயற்சிகளுக்கு முட்டுக்கட்டை போட முனைந்தனர். இருப்பினும் தனது மத்தியஸ்த முயற்சியில் சளைக்காத பார்த்தசாரதி சிங்கள - தமிழ் அரசியல்வாதிகளைச் சந்தித்து, நீண்ட கலந்துரையாடல்களை நிகழ்த்தி, அவர்களது கருத்துக்களைக் கேட்டறிந்தார். அத்தோடு, தமிழரின் இனப் பிரச்சினையின் அடிப்படைகளை ஆழமாகப் படித்தறிந்தார். இறுதியாக, மாகாண அடிப்படையில் பிரதேச வாரியான நிர்வாக கட்டமைப்புகளுக்கு அதிகாரப் பரவலாக்கம் வழங்கும் 'Annexure C' என்ற தீர்வுத் திட்டத்தை உருவாக்கினார்.

அரச அதிபர் ஜெயவர்த்தனாவும் அவரது மூத்த அமைச்சர்களும் பார்த்தசாரதியின் தீர்வுத் திட்டத்தை எதிர்த்தனர். ஆயினும் இந்திய அரசின் அழுத்தம் காரணமாக சகல கட்சி மாநாட்டைக் கூட்டுவித்து தீர்வு யோசனைகளை விவாதிப்பதற்கு இணங்கினார்கள். இது ஒரு அர்த்தமற்ற அரசியல் நாடகமாகவே முடியும் எனத் தெரிந்தும் தமிழ் அரசியல் தலைவர்கள் சகல கட்சி மாநாட்டில் பங்குபற்றத் தயக்கத்துடன் இணங்கினர். 1984 ஜனவரி 10 அன்று ஆரம்பமாகிய அனைத்துக் கட்சிகளின் மகாநாடு, 37 அமர்வுகளை நடத்தி, கிட்டத்தட்ட ஒரு ஆண்டுவரை நீடித்தது. இக் கூட்டத் தொடர்களின்போது, கட்சியோடு கட்சி மோதவிட்டு, தீவிரவாத புத்த பிக்குகளைத் தூண்டிவிட்டு இம் மாநாட்டை குழப்பிவிட ஜெயவர்த்தனா சதி முயற்சிகளில் ஈடுபட்டார். ஒரு கட்டத்தில், தமிழருக்கு அதிகாரப் பரவலாக்கம் வழங்குவதற்கு எதிர்ப்புத் தெரிவித்து சிறீலங்கா சுதந்திரக் கட்சி மாநாட்டிலிருந்து வெளிநடப்புச் செய்தது. இதைச் சாக்காக வைத்து, அரசியற் கட்சிகளிடையே இணக்கப்பாடு தோன்றவில்லை எனக் கூறி சமரச முயற்சியிலிருந்து சறுக்க முனைந்தார் ஜெயவர்த்தனா. 1984 டிசம்பர் மாதம் 26ஆம் நாள் பார்த்தசாரதியின் தீர்வுத் திட்டத்தைக் கைவிடுவதென அமைச்சரவை முடிவெடுத்தது. அத்துடன் தமிழரின் இனப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு இந்திரா காந்தி அம்மையார் எடுத்த இராஜதந்திர மத்தியஸ்துவ முயற்சி தோல்வியில் முடிந்தது.

மத்தியஸ்த முயற்சி மூலமாக தமிழ் மக்களுக்கு ஒரு நியாயமான தீர்வைப் பெற்றுக் கொடுப்பது சாத்தியமா என்பதில் ஆரம்பத்திலிருந்தே திருமதி. காந்திக்கு சந்தேகம் இருந்தது.

ஜெயவர்த்தனா ஒரு கடும்போக்காளர் என்பதும், தமிழரின் உரிமைப் போராட்டத்திற்கு அவர் அனுதாபம் காட்டவில்லை என்பதும் திருமதி. காந்திக்குத் தெரியும். தமிழரின் இனப் பிரச்சினைக்கு இராணுவ ரீதியான தீர்வைத்தான் ஜெயவர்த்தனா விரும்புகிறார் என்பதும் அவருக்கு நன்கு புரியும்.

ஜெயவர்த்தனாவில் தமக்குள்ள நம்பிக்கையீனம் பற்றி இந்திரா காந்தி அம்மையார் திரு. பார்த்தசாரதிக்கு ஏற்கனவே விளக்கமாகக் கூறியிருந்தார். ஜெயவர்த்தனா தமிழ் மக்களுக்கு நீதி வழங்கப் போவதில்லை என்றும் ஆகவே, சமாதான மத்தியஸ்துவ முயற்சி தோல்வியில் முடியலாமென்றும் அவர் ஆரம்பத்திலிருந்தே பார்த்தசாரதிக்கு தெளிவுபடுத்தியிருந்தார்.[4] இப்படியான தூர நோக்குடனேயே இரு முனைச் செயற்திட்டத்தை வகுத்துத் தமிழ் விடுதலை அமைப்புகளின் ஆயுதப் போராட்ட பலத்தை வலுப்படுத்த தீர்மானித்தார். ஜெயவர்த்தனாவின் இராணுவ அணுகுமுறைப் போக்கை உடைத்தெறியவே தமிழரின் ஆயுதப் போராட்டத்திற்கு உதவ எண்ணினார்.

தமிழ் விடுதலை அமைப்புகளுக்கு இராணுவ உதவி வழங்கும் இரகசியத் திட்டத்திற்கு மூவர் அடங்கிய குழு ஒன்றே பொறுப்பாகச் செயற்பட்டது. இவர்கள் மூவரும் திருமதி. காந்தியின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள். இந்திய பாதுகாப்பு, புலனாய்வு நிறுவனங்களில் உயர் பதவிகள் வகிப்பவர்கள். இந்த இரகசியத் திட்டத்தின் மூல பிதாவாகக் கருதப்படுபவர் இந்திய தேசிய பாதுகாப்பு ஆலோசகரான திரு. ஆர்.என்.ராவ். இத் திட்டத்தை நடைமுறைப்படுத்தும் பொறுப்பு திரு. கிரிஷ் சக்சேனாவிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. இவர் இந்திய வெளியகப் புலனாய்வுத் துறையின் (றோவின்) தலைவராகப் பணிபுரிந்தவர். மூன்றாவது முக்கிய நபர் திரு. சங்கரன் நாயர் ஆவார். இவர் பிரதம மந்திரியின் செயலகத்தின் ஆணையாளராகப் பணி புரிந்தவர். திருமதி காந்தியின் கீழ் செயற்பட்ட இம் மூவர் அடங்கிய குழுவை 'மூன்றாவது ஏஜென்சி' எனவும் அழைப்பதுண்டு. இந்தியத் தேசியப் பாதுகாப்பு சம்பந்தப்பட்ட விடயங்களில் இந்தக் குழுவே முக்கிய முடிவுகளை எடுத்தது.

ஒருபுறம் திரு. பார்த்தசாரதியை பகிரங்கமான மத்தியஸ்துவ இராஜதந்திரப் பணியில் இறக்கிவிட்ட அதே சமயம், மூன்றாவது ஏஜென்சி மூலமாக இரகசியமான இராணுவப் பயிற்சித்

திட்டத்தையும் முடுக்கிவிட்டார் இந்திரா அம்மையார். தமிழ் விடுதலை அமைப்புகளுக்கு இராணுவப் பயிற்சியும் ஆயுதங்களும் வழங்கும் மிகவும் சர்ச்சைக்குரிய பணியில் இந்தியப் புலனாய்வுத் துறையான 'றோ' இறங்கியது.

## விடுதலைப் புலிகளுக்கு இந்திய இராணுவப் பயிற்சி

1983 ஆகஸ்ட் மாதம் நடுப் பகுதி. வன்னிக் கெரில்லாப் பயிற்சிப் பாசறையிலிருந்து தலைவர் பிரபாகரன் லண்டனில் அவ்வேளை விரிவுரையாளராகப் பணியாற்றிக் கொண்டிருந்த எனக்கு அவசர செய்தி ஒன்றை அனுப்பியிருந்தார். என்னையும் எனது மனைவி அடேலையும், உடனடியாகச் சென்னைக்கு வருமாறு பணித்திருந்தார். தமிழ்ப் போராளிகளுக்கென இராணுவப் பயிற்சித் திட்டம் ஒன்றை இந்திய மத்திய அரசு செயற்படுத்தப் போவதாகத் தமிழீழத்தில் வதந்திகள் அடிபடுவதாகவும் தமிழீழ விடுதலை இயக்கம் (ரெலோ) ஏராளமான இளைஞர்களை அணிசேர்த்துக் கடல் மார்க்கமாகத் தமிழ் நாட்டுக்கு அனுப்பிக் கொண்டிருப்பதாகவும், உடனடியாகத் தமிழ் நாடு சென்று நிலைமையை அறிந்து தன்னுடன் தொடர்பு கொள்ளுமாறும் பிரபாகரன் வேண்டுகோள் விடுத்திருந்தார். தமிழரின் இனப் பிரச்சினையில் இந்திய மத்திய அரசு பெரும் எடுப்பில் தலையிட முடிவு செய்திருப்பதால் விடுதலைப் போராட்டம் புதிய வரலாற்றுத் திருப்பத்தை அடையப் போவதாகக் குறிப்பிட்ட பிரபாகரன், இம்முறை தமிழ் நாட்டில் நாம் நிரந்தரமாக நீண்ட காலம் தங்கியிருந்து பணிபுரிய நேரிடும் என்றும் சூசகமாகச் சுட்டிக் காட்டியிருந்தார்.

நானும் எனது மனைவி அடேலும் 1979இலும் பின்பு 1981இலும் தமிழ்நாடு வந்து தலைவர் பிரபாகரனுடனும் மற்றும் விடுதலைப் புலிகளின் மூத்த தலைவர்கள் போராளிகளுடனும் இரு தடவைகளும் பல மாதங்கள் வரை தங்கியிருந்து பணிபுரிந்தோம். போராளிகளுடன் சேர்ந்து சமைப்பது தொடங்கி அவர்களுக்கு அரசியல் வகுப்புகள் நடத்துவது வரை இக் காலகட்டத்தில் நிகழ்ந்த பல்வேறு சுவாரஸ்யமான நிகழ்வுகளை **'சுதந்திர வேட்கை'** என்ற தனது சுயசரித நூலில் எனது மனைவி விபரமாக எழுதியிருக்கிறார். 1983 ஆகஸ்ட் மாதத்திலிருந்து நாம் தமிழ்நாட்டில் தங்கியிருந்த காலகட்டத்தில்

நிகழ்ந்த முக்கிய சம்பவங்களும் அவரது நூலில் தரப்படுகிறது. எனவே, ஏற்கனவே சொல்லப்பட்ட விடயங்களை மீண்டும் சொல்வதைத் தவிர்த்து, இந்தியத் தலையீட்டால் எழுந்த பிரச்சினைகளையும், குறிப்பாக இந்திய அரசுக்கும் விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் மத்தியிலான உறவுகள் பற்றியுமே இப் பகுதியில் நான் எடுத்துக் கூற விரும்புகிறேன்.

1983 ஆகஸ்ட் நடுப் பகுதியில், சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் நாம் வந்திறங்கியபோது விடுதலைப் புலிகளின் மூத்த தலைவர்களில் ஒருவரான பேபி சுப்ரமணியம் (இளங்குமரன்) எம்மை வரவேற்றார். சென்னை நகரில் 'வூட்லண்ட்ஸ்' எனப்படும் நடுத்தரமான சைவ விடுதியில் நாம் தங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. நேசன் (ரவி பரமநாதன்) மற்றும் சில மூத்த உறுப்பினர்கள் அந்த விடுதியில் எம்மைச் சந்தித்தனர். அவ்வேளையில் சென்னையில் எமது இயக்கத்திற்கென செயலகமோ அல்லது இரகசிய வீடுகளோ இருக்கவில்லை. எமது அறைக்குப் பக்கமாக இன்னொரு அறையும் எடுத்து அவ்விரு அறைகளையும் அரசியற் செயலகமாக மாற்றிச் சிறிது காலமாக அவ்விடுதியிலிருந்தே செயற்பட்டோம். பேபி சுப்ரமணியத்தின் நண்பரும் அ.தி.மு.க ஆட்சியில் மூத்த அமைச்சருமான திரு. காளிமுத்து, நாம் ஒரு செயலகம் அமைக்கும்வரை விடுதியின் செலவினங்கள் அனைத்தையும் பொறுப்பெடுத்தார். அந்த விடுதியில் இருந்தபடியே இந்திய இராணுவப் பயிற்சித் திட்டம் பற்றித் தகவல் அறிய முனைந்தோம். தமிழ்நாட்டு அரசியல்வாதிகளுக்கு விபரம் எதுவும் தெரியவில்லை. அவ்வேளை எனக்கு முன்பு அறிமுகமான தமிழ் நாட்டுப் பத்திரிகையாளர் ஒருவரை சந்தித்தபோது அவரிடம் இந்தியப் பயிற்சித் திட்டம் பற்றிக் கேட்டேன். இந்தியப் புலனாய்வுத் துறையினரே (றோ) இப் பயிற்சித் திட்டத்தை பொறுப்பேற்று நடத்துவதாகக் கூறிய அந்தப் பத்திரிகையாளர், என்னை றோ அதிகாரிகளுடன் தொடர்பு கொள்ளுமாறு ஆலோசனை கூறினார். அவ்வேளை, சென்னையில் றோ அதிகாரிகளின் செயற்பாடுகள் மிகவும் இரகசியமானதாக இருந்ததால் அவர்களுடன் தொடர்புகளை ஏற்படுத்துவது சிரமமாக இருந்தது. அந்தச் சூழ்நிலையில்தான் எனக்கு முன்பு அறிமுகமான கலாநிதி ராஜேந்திரனைச் சந்தித்தேன். வல்வெட்டித்துறையைப் பிறப்பிடமாகக் கொண்ட ராஜேந்திரன் எமது இயக்கத்தின் ஆதரவாளர். சிங்கப்பூர்

பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணிபுரிந்தவர். இந்திய இராணுவப் பயிற்சித் திட்டத்தின் முழு விபரங்களுடனும் வூட்லண்ட்ஸ் விடுதிக்கு வந்து என்னைச் சந்தித்தார்.

தமிழீழ விடுதலை இயக்கம் (ரெலோ), ஈழ மக்கள் புரட்சிகர விடுதலை முன்னணி (ஈ.பி.ஆர்.எல்.எப்), ஈழப் புரட்சி இயக்கம் (ஈரோஸ்) ஆகிய மூன்று அமைப்புகளுக்கும் இந்திய இராணுவப் பயிற்சித் திட்டத்தில் அனுமதி கிடைத்திருப்பதாகத் தெரிவித்த ராஜேந்திரன், இந்த அமைப்புகளைச் சேர்ந்த போராளிகள் ஏற்கனவே வட இந்தியாவிலுள்ள இராணுவப் பயிற்சி முகாமுக்கு சென்று கொண்டிருப்பதாகச் சொன்னார். இந்தியப் புலனாய்வுத் துறையினரே (றோ) இந்தப் பயிற்சித் திட்டத்திற்குப் பொறுப்பானவர்கள் என்றும் கூறினார். காலம் சென்ற திரு. எஸ்.ஜே.வி. செல்வநாயகம் அவர்களின் மகனான திரு.சி.சந்திரகாசனே இப் பயிற்சித் திட்டத்திற்கு இணைப்பாளராக முக்கிய பங்கு வகிக்கிறார் என்றும் அவர் கூறினார்.

தமிழீழ மக்களின் தேசிய விடுதலைப் போராட்டத்தில் திரு. சந்திரகாசனுக்கு முக்கிய தலைமைப்பீடப் பொறுப்பை பெற்றுக் கொடுப்பதே இந்திய புலனாய்வுத் துறையினரது இரகசியத் திட்டம் என்பதையும் திரு. ராஜேந்திரன் வெளியிட்டார். இந்திய இராணுவப் பயிற்சித் திட்டத்திற்கு விடுதலைப் புலிகள் இயக்கத்தையும் சிபாரிசு செய்யச் சந்திரகாசன் தயாராக இருக்கிறார் எனக் கூறிய ராஜேந்திரன், அதற்கு ஒரு முக்கிய நிபந்தனை உண்டு என்றார். அந்த நிபந்தனை என்னவென்று கேட்டேன். அதற்கு அவர் கூறிய பதில் எனக்கு ஒருபுறம் ஆச்சரியத்தையும் மறுபுறம் ஆத்திரத்தையும் ஏற்படுத்தியது. அதாவது, தமிழீழத் தேசிய விடுதலை இயக்கத்தின் அரசியல் தலைவராகச் சந்திரகாசனை திரு. பிரபாகரன் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதே அந்த நிபந்தனை. இந்திய இராணுவப் பயிற்சி முடிவு பெற்றதும் எல்லாத் தமிழ்ப் போராளி அமைப்புகளும் 'தமிழ்த் தேசிய இராணுவம்' ஆக மாற்றப்படுமென்றும், அந்தத் தமிழ் இராணுவம் ஆயுதப் போராட்டத்தில் ஈடுபடும்வேளை, தமிழர் தேசத்தின் அரசியல் போராட்டத்தை சந்திரகாசன் தலைமை தாங்கி நடத்துவார் என்றும் ராஜேந்திரன் விளக்கினார்.

எமது கலந்துரையாடலை மிகவும் உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்த எனது மனைவி அடேல், சந்திரகாசனின்

நிபந்தனையை அறிந்ததும் பொறுமையிழந்து ராஜேந்திரன் மீது சீறி விழுந்தார்.

"எந்தக் காலத்திலும் எந்த சூழ்நிலையிலும் பிரபாகரனோ அல்லது எமது போராளிகளோ சந்திரகாசனைத் தலைவராக ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. இதுதான் நிபந்தனை என்றால் எமது இயக்கத்திற்கு இந்திய இராணுவப் பயிற்சி அவசியமில்லை" என்று கடிந்து கொண்டார் அடேல். இதனைத் தொடர்ந்து ராஜேந்திரனுக்கும் எமக்கும் மத்தியில் சூடான விவாதம் எழுந்தது. அடேலின் கருத்தை ஆதரித்து நான் வாதிட்டேன். சந்திரகாசனின் ஆசியைப் பெறாமல் 'றோ' அதிகாரிகளை நெருங்க முடியாது என்றும் 'றோ' அதிகாரிகளின் சிபார்சு இன்றி விடுதலைப் புலிகளுக்கு இந்திய இராணுவப் பயிற்சி கிடைக்கப் போவதில்லை என்றும் இந்தப் பயிற்சி கிடையாது போனால் புலிகள் இயக்கம் பின்னடைவை எதிர்நோக்க ஏனைய அமைப்புகள் வளர்ந்து முன்னேற்றம் அடையும் என்றும் ராஜேந்திரன் பூச்சாண்டி காட்டினார். சந்திரகாசனின் உதவியின்றி இந்தியப் பயிற்சியை நாம் எப்படியோ பெற்றே தீருவோம் என நான் எதிர்த்து வாதாட, தனது முயற்சி பலிக்கப் போவதில்லை என்பதை உணர்ந்து கொண்ட ராஜேந்திரன் ஆத்திரத்துடன் எமது அறையிலிருந்து வெளிநடப்புச் செய்தார். அதற்கப்புறம் நான் அவரைக் கண்டதேயில்லை.

ராஜேந்திரனுடன் நிகழ்ந்த சந்திப்புப் பற்றியும் இந்திய இராணுவப் பயிற்சியை ஒழுங்கு செய்வதில் சந்திரகாசன் வகிக்கும் பங்கு பற்றியும், பயிற்சித் திட்டத்தில் இடம்பெற அவர் விதிக்கும் நிபந்தனை பற்றியும் சகல விபரங்களையும் நான் உடனடியாகப் பிரபாகரனுக்குத் தெரியப்படுத்தினேன். எந்தக் காரணத்தைக் கொண்டும் சந்திரகாசனின் உதவியை நாடவேண்டாம் எனத் தெரிவித்த பிரபாகரன், எப்படியாவது முயன்று இந்தியப் புலனாய்வுத் துறையினருடன் என்னை நேரடித் தொடர்புகளை ஏற்படுத்துமாறு கேட்டுக் கொண்டார். இது எனக்கு ஒரு சிக்கலான சவாலாக அமைந்தது. சந்திரகாசனை வெட்டியோடி, தலைமறைவாக இயங்கும் றோ அதிகாரிகளுடன் தொடர்பை ஏற்படுத்துவது எங்ஙனம்? இப்படியாக நான் இடர்பட்டுக் கொண்டிருந்த வேளையில்தான் எனக்குத் தமிழக உள்நாட்டுப் புலனாய்வுத் துறையினரது தொடர்பு கிடைத்தது. அப்பொழுது நாம் சென்னை நகரப் புறத்திலுள்ள சன்தோம்

என்னுமிடத்தில் வீடு ஒன்றை வாடகைக்கு அமர்த்தி இருந்தோம். நாங்கள் விடுதலைப் புலிகள் அமைப்பைச் சார்ந்தவர்கள் என அறிந்ததும் தமிழகப் புலனாய்வுத் துறை (கியூ பிரிவு) உதவிப் பொலிஸ் மா அதிபர் திரு. அலெக்ஸ்சாந்தர் என்னைத் தனது அலுவலகத்திற்கு அழைத்து ஈழத் தமிழர் பிரச்சினை பற்றியும் விடுதலைப் புலிகளின் போராட்டம் பற்றியும் விசாரித்தார். மாறி மாறி நிகழ்ந்த சந்திப்புகள் நட்புறவாகப் பரிணமித்தன. அன்பும் பண்பும் ஆழமான அரசியற் தெளிவும் கொண்டவராக விளங்கினார் திரு. அலெக்ஸ்சாந்தர். இலங்கை அரசியல் பற்றியும் தமிழரின் விடுதலைப் போராட்டம் பற்றியும் நிறைய அறிந்து வைத்திருந்தார். இந்திய இராணுவ பயிற்சித் திட்டம் பற்றியும் றோ அதிகாரிகளுக்கும் சந்திரகாசனுக்கும் இடையிலான இரகசிய உறவு பற்றியும் எந்தெந்த அமைப்புகளுக்கு எங்கெல்லாம் பயிற்சிகள் வழங்கப்படுகிறது பற்றியும் சகல விபரங்களையும் நான் அலெக்ஸ்சாந்தர் வாயிலாக அறிந்து கொண்டேன்.

சென்னை மாநகரில், பிரபல்யமான Blue Diamond விடுதியில், ஒரு மாடிக் கட்டிடத்தை வாடகைக்கு அமர்த்தி, அதனைத் தனது தலைமைச் செயலகமாகக் கொண்டு, றோ அதிகாரிகளுடன் இணைந்து சந்திரகாசன் செயற்பட்டு வருகிறார் என்ற தகவலையும் அலெக்ஸ்சாந்தர் எனக்குத் தெரிவித்தார். அந்த விடுதியில், சந்திரகாசனின் மாடியில் தனது புலனாய்வு உளவாளி ஒருவர் உணவு பரிமாறுபவராகப் பணிபுரிகிறார் என்றும் ஒட்டுக் கேட்கும் கருவிகள் பொருத்தி அங்கு நடைபெறும் திருவிளையாடல்களை எல்லாம் தான் நன்கு அறிந்து வைத்திருப்பதாகவும் தெரிவித்தார். சந்திரகாசனுடன் இணைந்து செயற்படும் றோ அதிகாரிகளில் சிலர் ஊழல் பேர்வழிகள் என்றும் அவர்களுடன் தொடர்பு கொள்வதைத் தவிர்ப்பதே நன்று என்றும் அலெக்ஸ்சாந்தர் அறிவுரை சொன்னார். அலெக்ஸ்சாந்தர் சொன்னதில் உண்மை இருக்கத்தான் செய்தது. ஏனென்றால் சந்திரகாசன் அப்பொழுது நெருங்கிய தொடர்பு வைத்திருந்த உன்னிக்கிருஷ்ணன் எனப்படும் றோ அதிகாரி பின்னர் கைது செய்யப்பட்டு, இந்திய இராணுவ பயிற்சி சம்பந்தப்பட்ட இரகசியத் தகவல்களை அமெரிக்க புலனாய்வு நிறுவனமான சி.ஐ.ஏக்கு கையளித்தார் என்று குற்றம் சுமத்தப்பட்டு நீண்ட காலக் கடுழியச் சிறையில் தள்ளப்பட்டார்.

விடுதலைப் புலிகள் இயக்கமும் இந்திய இராணுவப் பயிற்சியையும் ஆயுத தளபாடங்களையும் பெற்றுக் கொள்வதன் அவசியத்தை அலெக்ஸ்சாந்தருக்கு எடுத்து விளக்கிய நான், அதற்கான வழிமுறை பற்றியும் கேட்டேன். தமிழீழ மக்களின் நல்லாதரவு பெற்ற விடுதலை அமைப்பாக நீண்ட கால ஆயுதப் போராட்ட அனுபவத்துடன் விடுதலைப் புலிகள் இயக்கமே களத்தில் நின்று இயங்கி வருகிறது என்ற உண்மையை திருமதி. இந்திரா காந்தி அம்மையாருக்கு விபரமாக எழுதி, இந்தியாவின் இராணுவப் பயிற்சித் திட்டத்தில் புலிகளுக்கும் இடமளிக்குமாறு வேண்டுகோள் விடுக்கும்படியும் அலெக்ஸ்சாந்தர் ஆலோசனை வழங்கினார். திருமதி. காந்திக்கு எழுதிய கடிதத்தின் பிரதி ஒன்றை றோ புலனாய்வு அமைப்பின் அதிபர் திரு. சக்சேனாவுக்கும் அனுப்பி வைக்குமாறும் அவர் சொன்னார்.

அவர் கூறியபடியே திருமதி காந்திக்கு நான் ஒரு விபரமான கடிதம் எழுதினேன். அதில் விடுதலைப் புலிகள் இயக்கத்தின் கொள்கை, கருத்தியல், போராட்ட வரலாறு என்ற ரீதியில் விளக்கத்தைக் கொடுத்து, இந்திய இராணுவப் பயிற்சித் திட்டத்தில் எமது இயக்கத்தை இணைத்துக் கொள்ளும் அவசியத்தையும் வலியுறுத்தினேன். அத்தோடு அக் கடிதத்தின் பிரதி ஒன்றை றோ அதிபர் திரு. சக்சேனாவுக்கும் அனுப்பி வைத்தேன். புது டில்லியிலிருந்து பதில்வர நீண்ட காலம் பிடிக்கவில்லை.

பாரதப் பிரதமருக்கு வேண்டுகோள் விடுத்து இரண்டு வாரத்திற்குள் புது டில்லியிலுள்ள றோ புலனாய்வுத்துறைத் தலைமைச் செயலகத்திலிருந்து ஒரு உயர் அதிகாரி என்னைச் சந்திப்பதற்காக சென்னை வந்தார். எஸ். சந்திரசேகரன் என்ற பெயருடைய அவர் மதுரையைப் பிறப்பிடமாகக் கொண்ட தமிழர். சென்னை நகரப் புறத்திலுள்ள விடுதி ஒன்றில் மிகவும் இரகசியமான முறையில் சந்திப்பு இடம்பெற்றது. விடுதலைப் புலிகள் இயக்கத்துடன் சகல தொடர்புகளுக்கும் பொறுப்பதிகாரியாக தான் நியமிக்கப்பட்டு இருப்பதாகச் சொன்னார் அவர். முதற் சந்திப்பின்போதே விடுதலைப் புலிகள் இயக்கம் பற்றி துருவி ஆராய்ந்து என்னைக் குடைந்து எடுத்தார். புலிகள் இயக்கத்தின் கட்டமைப்பு, ஒழுக்க விதிகள், தலைமைப்பீடம், அரசியல் கொள்கை, ஆயுதப் போராட்ட வரலாறு போன்ற பல்வேறு விடயங்களைப் பற்றி அவர் விடுத்த கேள்விக் கணைகளின் நுட்பத்திலிருந்து திரு. சந்திரசேகரன்

ஒரு ஆழமான ஆளுமையுடைய மனிதர் என்பதை உணர்ந்து கொண்டேன். ஆயுதப் போரியல் வடிவங்கள் பற்றியும் நிறைய அறிந்து வைத்திருந்தார். விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன் பற்றி மிகவும் ஆர்வமாக விசாரித்தார். பிரபாகரனின் ஆளுமை, அரசியல் நோக்கு, போராட்ட அனுபவமும் என அவர் எழுப்பிய கேள்விகளுக்கு விபரமான பதில் அளித்தேன். விடுதலைப் புலிப் போராளிகளுக்கு இந்திய இராணுவப் பயிற்சி அளிப்பதற்கான ஒழுங்குகளைச் செய்வதற்காக பிரபாகரனை தான் நேரில் சந்திக்க வேண்டும் என வலியுறுத்தினார். இந்தியாவில் பிரபாகரனின் பாதுகாப்புப் பிரச்சினை பற்றி நான் கேட்டபோது, அதற்கு தான் உத்தரவாதம் அளிப்பதாகச் சொன்னார். திருமதி. காந்தியின் விசேட பணிப்பின் பேரில் இப் பயிற்சி திட்டம் ஒழுங்கு செய்யப்படுவதால் பிரபாகரனின் பாதுகாப்புக் குறித்து அச்சம் கொள்ளத் தேவையில்லை என்றார். இறுதியாக, நாயர் என்ற பெயருடைய அதிகாரி ஒருவரை அறிமுகம் செய்து அவர்மூலம் தன்னுடன் தொடர்புகளை வைத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். சந்திரகாசனுக்கும் ஏனைய தமிழ் அமைப்புகளுக்கும் தெரியாதவாறு எமது போராளிகளுக்குப் பயிற்சி வழங்கப்படுமெனக் கூறிய சந்திரசேகரன், விடுதலைப் புலிகள் இயக்கத்தை ஓரம் கட்டியது குறித்து சந்திரகாசன் மீது புதுடில்லி அதிருப்தி கொண்டிருப்பதாகவும் தெரிவித்தார்.

சந்திரசேகரனுடன் நிகழ்ந்த சந்திப்பின் விபரங்களை உடனடியாகவே பிரபாகரனுக்குத் தெரியப்படுத்தியதுடன் எமது போராளிகளுக்கு இந்தியாவில் இராணுவப் பயிற்சி அளிப்பதற்கான ஒழுங்குகளைச் செய்வதற்காக உடனடியாக தமிழ் நாட்டுக்கு வருகை தருமாறும் அவரைக் கேட்டுக் கொண்டேன். இந்தியா வருவதில் எழக்கூடிய பாதுகாப்புப் பிரச்சினைகள் குறித்து அறிந்து கொள்வதற்காக இரு மூத்த உறுப்பினர்களான மாத்தையாவையும் ரகுவையும் தமிழ் நாட்டுக்கு அனுப்பி வைத்தார் பிரபாகரன். மதுரையில் ஒரு விடுதியில் மாத்தையாவும் ரகுவும் என்னைச் சந்தித்தனர். பிரபாகரன் தமிழ் நாட்டுக்கு வந்தால் அவர் கைது செய்யப்படலாம் என்பது மாத்தையாவின் கருத்து. பாண்டிபஜார் துப்பாக்கிச் சூட்டுச் சம்பவத்தில் நிபந்தனைப் பிணையிலிருந்து தமிழீழத்திற்கு தப்பிச் சென்றவர் என்பதால் இந்தியச் சட்டத்தை மீறிய குற்றத்திற்காக பிரபாகரனை இந்திய காவல்துறையினர்

கைது செய்து சிறையில் தள்ளலாம் என்பது அவரது வாதம்.[5] திருமதி. இந்திரா காந்தியின் ஆசியுடன் இந்திய அரசுதான் பிரபாகரனுக்கு அழைப்பு விடுத்திருக்கிறது என்று கூறியும் அவர்களை நம்பச்செய்ய முடியவில்லை. விடுதலைப் புலிகளுக்கு இராணுவப் பயிற்சி என்ற பொறிவைத்து புலிகளின் தலைவரை மடக்கிப் பிடிப்பதுதான் இந்திய புலனாய்வுத் துறையினரின் கபட நோக்கம் என்பது அவர்களது வாதம். இவர்களுடன் வாதிடுவதில் அர்த்தமில்லை என உணர்ந்த நான், இந்திய நிலைமையை விரிவாக விளக்கி, இந்தியப் பயிற்சி பெறுவதாயின் கட்டாயமாக இந்தியாவுக்கு வந்தாக வேண்டுமென்றும், பாதுகாப்புப் பிரச்சினை எதுவும் எழப்போவதில்லை என்றும் உறுதிகூறிப் பிரபாகரனுக்குக் கடிதம் எழுதி அவர்களிடம் கொடுத்தேன். இந்தியாவில் பிரபாகரனுக்கு ஏதாவது பிரச்சினை எழுந்தால் அதற்கான பொறுப்பையும் 'இயக்க நடவடிக்கையையும்' நான்தான் ஏற்கவேண்டிவரும் என மிரட்டிவிட்டுச் சென்றார் மாத்தையா. மறுநாள், எனது கடிதம் பிரபாகரன் கையில் கிடைத்ததும் தான் விரைவில் இந்தியாவுக்கு வரவிருப்பதாகப் பதில் அனுப்பியிருந்தார். எனது விளக்கத்திலும் உறுதிமொழியிலும் பிரபாகரன் நம்பிக்கை வைத்திருந்தார் என்பதை அறிந்து எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி.

1983 அக்டோபர் மாதம் பிரபாகரனும் அவரோடு சில மூத்த தளபதிகளும் இந்தியா வந்தனர். பாண்டிச்சேரியில் ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்தி அங்கு தங்கியிருந்தனர். திரு. சந்திரசேகரனும் மற்றும் சில றோ புலனாய்வுத் துறை உயர் அதிகாரிகளும் பிரபாகரனைப் பாண்டிச்சேரியில் சந்திப்பதற்கான ஒழுங்குகளைச் செய்தேன். சந்திப்பு நிகழும் நாளன்று நானும், அடேலும், இரு போராளிகளுமாக சென்னையிலிருந்து பாண்டிச்சேரிக்குப் பயணமாகினோம். பாண்டிச்சேரியில் பிரபாகரனைச் சந்தித்து சென்னையில் நாம் வந்திறங்கியதிலிருந்து நடைபெற்ற சம்பவங்களை அவரிடம் விபரமாகக் கூறினேன். அன்று நள்ளிரவு திரு. சந்திரசேகரனும் மற்றும் சில இந்தியப் புலனாய்வு அதிகாரிகளும் பாண்டிச்சேரியிலுள்ள எமது வீட்டுக்கு வந்தார்கள். பிரபாகரனும் நானும் சந்திரசேகரனும் தனி அறை ஒன்றில் மந்திராலோசனை நடத்தினோம். முதற் சந்திப்பின்போதே சந்திரசேகரனுக்கு பிரபாகரனை நன்கு பிடித்துக் கொண்டது.

இருநூறு விடுதலைப் புலிப் போராளிகளுக்கு இராணுவப்

பயிற்சி அளிப்பதற்கு உடனடியாக ஏற்பாடுகளைச் செய்வதாக சந்திரசேகரன் உறுதியளித்தார். நூறு பேர் கொண்ட இரு அணிகளாகப் பயிற்சி நடைபெறும் என்றும், முதல் அணியின் பயிற்சி நவம்பர் மாதத் தொடக்கத்தில் ஆரம்பமாகும் என்றும் சொன்னார். புலிப் போராளிகள் சென்னையிலிருந்து டில்லி வரை புகையிரத வண்டியில் பயணம் செய்து, பின்பு டில்லியிலிருந்து இராணுவ டிரக் வண்டிகளில் உத்திரப் பிரதேச மலைப் பிராந்தியத்திலுள்ள டெக்ரா டன் என்னுமிடத்தில் அமைந்திருக்கும் இந்திய இராணுவப் பயிற்சிப் பாசறைக்கு கொண்டு செல்லப்படுவர் என்றும் சந்திரசேகரன் விளக்கினார். முதல் அணியில் பயிற்சி பெறுவோரின் பெயர் விபரப் பட்டியலை தமக்குச் சீக்கிரமாக அனுப்பி வைக்கும்படியும் அவர் பிரபாகரனிடம் கேட்டுக் கொண்டார். தமது போராளிகளுக்கு எத்தகைய போரியற் பயிற்சி வழங்கப்படுமென்றும் எத்தகைய ஆயுதங்களைக் கையாளுவதற்கான பயிற்சி கொடுபடும் என்றும் பிரபாகரன் வினவினார். சகலவிதமான நவீன போரியல் உத்திகள், தந்திரோபாயங்கள் பற்றிய தேர்ச்சியும் அனுபவமும் பெற்ற இந்திய இராணுவ அதிகாரிகள் பயிற்சி வழங்குவார்கள் என்றும், சிறுரக ஆயுதங்களிலிருந்து கனரக ஆயுதங்கள் வரை பலவிதமான ஆயுதங்களைக் கையாளுவது பற்றியும் பயிற்சி கொடுக்கப்படுமென்றும் சந்திரசேகரன் விளக்கினார். நிலப் படங்கள் வரைதல், கண்ணி வெடிகளைப் புதைத்தல், வெடிபொருட்களைப் பாவித்தல், டாங்கி எதிர்ப்பு, விமான எதிர்ப்பு ஆயுதங்களைக் கையாளுதல் போன்றவற்றிலும் பயிற்சி வழங்கப்படும் என்றார். ஆயுத உதவி சம்பந்தமாக சந்திரசேகரன் எந்த உறுதிமொழியையும் அளிக்கவில்லை. இவ் விவகாரம் குறித்துப் பின்பு பேசலாம் என்று மட்டும் சொன்னார். உத்திரப் பிரதேசத்திலுள்ள டெக்ரா டன் இராணுவப் பயிற்சித் தளத்திற்கு வருகை தந்து விடுதலைப் புலிப் போராளிகளுக்கு அளிக்கப்படும் பயிற்சியை நேரடியாக மேற்பார்வை செய்யுமாறு அவர் பிரபாகரனுக்கு அழைப்பு விடுத்தார்.

## இந்தியத் தலைமீட்டின் உள்நோக்கம்

திரு. சந்திரசேகரனுடன் நிகழ்ந்த சந்திப்பு பிரபாகரனுக்குத் திருப்தியைக் கொடுத்தது. எத்தகைய குறிக்கோளுடன் இராணுவப் பயிற்சித் திட்டத்தை இந்தியா வழங்குகிறது என்ற

சர்ச்சைக்குரிய கேள்வியை நாம் சந்திரசேகரனிடம் எழுப்பவில்லை. றோ புலனாய்வு அதிகார பீடத்துடன் நல்லுறவு பேணுவதையே நாம் விரும்பினோம். தமிழீழத் தாயகக் களத்தில் விடுதலைப் புலிகள் இயக்கமே ஆயுதப் போராட்டத்தை தீவிரமாக முன்னெடுத்து வருகிறது என்பதை உணர்ந்து கொண்ட சந்திரசேகரன், பிரபாகரன் ஊடாகக் கள யதார்த்த நிலைமையை கேட்டறிந்து கொண்டார். சீக்கிரமே தமது போராளிகள் பயிற்சிக்குத் தயாராகி விடுவார்கள் என உறுதியளித்த பிரபாகரன், டெக்ரா டன் பயிற்சிப் பாசறைக்குத் தானும் வர விரும்புவதாகவும் கூறினார். நவம்பர் தொடக்கத்தில் முதலாவது பயிற்சி அணிப் போராளிகள் டெக்ரா டன்னுக்குப் பயணமாயினர். 1984ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் அவர்களின் பயிற்சி முடியும்போது பிரபாகரன் டெக்ரா டன்னுக்குச் சென்றார்.

இப்படியாக இந்தியாவின் இராஜதந்திர சதுரங்க ஆட்டத்தில் விடுதலைப் புலிகள் இயக்கமும் ஒரு பங்காளியாக மாறியது. இது நாமாகவே சிந்தித்து எடுத்த முடிவு. எவராலுமே தவிர்த்துவிட முடியாத வரலாற்று நீரோட்டத்தில் நாமும் இறங்கி நீந்துவதைத் தவிர எமக்கு வேறு வழி இருக்கவில்லை. இலங்கையில் இந்தியத் தலையீடானது தவிர்க்க முடியாததொன்று. ஈவிரக்கமற்ற சிங்கள இனவாத அரசு நாசகார நோக்குடைய அந்நியச் சக்திகளுடன் கைகோர்த்து நின்று சிறுபான்மைத் தேசிய இனமான தமிழ் மக்களை பூண்டோடு அழிக்க முனைந்த வேளையில் அதைத் தடுத்து நிறுத்துவது இந்தியாவின் தார்மீக அறநெறிக் கடப்பாடாகியது. இந்தியத் தலையீட்டின் உள்நோக்கம் என்னவென்பது எமக்கு ஆரம்பத்திலிருந்தே தெரிந்த விடயம். இராஜதந்திர-இராணுவ பரிமாணங்களைக் கொண்ட இந்திய தலையீட்டுத் திட்டத்தில் தமிழ்ப் போராளி அமைப்புக்களின் பங்கு மிகவும் குறுகியது, மட்டுப்படுத்தப்பட்டது, போரியல் ரீதியானது. ஜெயவர்த்தனா அரசுக்கு இராணுவ அழுத்தம் கொடுத்து, அதனை ஆட்டம் காணச் செய்து, சமாதானப் பேச்சுக்கள் வாயிலாகத் தமிழர் பிரச்சினைக்கு சமரசத் தீர்வு காண வைப்பதே இந்தியத் தலையீட்டின் உள்நோக்கமாகும். வங்காள தேசத்தில் தலையிட்டது போன்று இலங்கையிலும் தலையிட்டு, தமிழர்களுக்கு ஒரு தனியரசை உருவாக்கிக் கொடுக்கும் நோக்கம் இந்திரா காந்தி அம்மையாருக்கு இருக்கவில்லை என்பதை இந்தியத் தலையீடு தொடங்கிய காலத்திலிருந்தே

விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடம் அறிந்திருந்தது. இந்தியப் படையெடுப்புக்கான புறநிலையை உருவாக்கிக் கொடுத்த கிழக்கு வங்காளப் புரட்சிவாதிகளான 'முக்தி பகானிகள்' வகித்த பங்கு தமிழ்ப் போராளிகளுக்கு வழங்கப்படவில்லை.[6] ஜனாதிபதி ஜெயவர்த்தனா தனது இராணுவ அணுகுமுறைக் கடும்போக்கைக் கைவிட்டு சமரச வழியை நாடும் வரை ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு, ஒரு குறிப்பிட்ட மட்டத்திற்கு சிங்கள ஆயுதப் படைகளுக்கு அழுத்தம் கொடுப்பதே தமிழ்க் கெரில்லா வீரர்களுக்கு வகுக்கப்பட்ட பணியாகும். தீவின் இறையாட்சிக்கும் பிரதேச ஒருமைப்பாட்டிற்கும் பங்கம் ஏற்படாதவாறு ஒன்றுபட்ட இலங்கைக்குள் ஒரு நியாயமான அரசியல் தீர்வைப் பெற்றுக் கொடுப்பதே திருமதி. இந்திரா காந்தியின் தந்திரோபாயமாக இருந்தது. இந்தியப் பிரதமரின் இந்தத் தந்திரோபாயத்தைப் புரிந்து கொள்ளத் தவறிய தமிழ்நாட்டு, தமிழீழ அரசியல் தலைவர்கள் சிலர் இந்திய அரசு இலங்கை மீது படையெடுப்பை நடத்த ஆயத்தமாகிறது எனக் கருதினார்கள். ஆனால் விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன் இத்தகைய கற்பனாவாதத்தைக் கொண்டிருக்கவில்லை. மட்டுப்படுத்தப்பட்ட ஒரு அரசியல் குறிக்கோளை அடைவதற்குத் தமிழ்ப் போராளிகளைக் கூலிப் படைகளாகப் பாவிப்பதே இந்திய இராணுவப் பயிற்சித் திட்டத்தின் நோக்கம் என்பதைப் பிரபாகரன் நன்கு அறிவார். ஆயினும் எதற்கும் விட்டுக்கொடுக்காத கடும் போக்கை ஜெயவர்த்தனா ஆட்சிப்பீடம் கடைப்பிடிக்கும் என்பதால், இந்தியாவின் தந்திரோபாயம் இறுதியில் தோல்வி காணும் என்பதையும் பிரபாகரன் உணர்ந்திருந்தார். இந்தியத் தலையீட்டு முயற்சி ஈற்றில் தோல்வியைத் தழுவும் என்பதையும் அதில் எமது பங்கு மட்டுப்படுத்தப்பட்டது என்பதையும், நாம் உணர்ந்து கொண்ட போதும், எமது படை வலுவைக் கட்டி எழுப்பும் நோக்குடன் நாம் அந்த முயற்சியில் தீவிர பங்காளி ஆனோம். இந்தியாவின் திட்டத்தில் நாம் பங்குபற்றாது போனால் அரசியல், இராணுவ ரீதியாக எமது இயக்கம் ஓரம் கட்டப்படுவதுடன் ஏனைய அமைப்புகளின் எழுச்சிக்கும் வளர்ச்சிக்கும் நாம் வழி சமைத்துக் கொடுப்பதாக முடியும்.

இந்தியத் தலையீட்டின் ஆக்கபூர்வமான அம்சம் என்னவென்றால், அது தமிழரின் தேசியப் போராட்டத்திற்கு ஒரு தார்மீக வலுவைக் கொடுத்ததேயாகும். கொழும்பு அரசுடன்

இந்தியா இராஜதந்திர ரீதியில் தலையிட்டமை தமிழரின் இனப்பிரச்சினையைச் சர்வதேசமயப்படுத்தியது. அத்துடன் தமிழ்ப் போராளிகளுக்கு இராணுவப் பயிற்சி வழங்க இந்திய அரசு முன்வந்தமை பல்லாயிரக்கணக்கான தமிழ் இளைஞர்களை ஆயுதப் போராட்டத்தில் கவர்ந்து இழுத்ததுடன் தமிழீழத் தாயகத்தில் தேசிய எழுச்சியையும் விடுதலைப் போராட்டத்தில் நம்பிக்கையையும் பிறக்கச் செய்தது. விடுதலைப் புலிகள் இயக்கம் ஒழுக்கமும் கட்டுப்பாடுமுடைய அமைப்பு என்பதாலும் பல போராட்டச் சாதனைகளைப் புரிந்து தமிழ் மக்கள் மத்தியில் பிரபல்யம் பெற்றிருந்ததாலும் எமது இயக்கத்தில் இணைந்து கொள்ளவே பெரும்பாலான இளைஞர்கள் விரும்பினார்கள். இணைந்து கொள்ள விரும்பிய எல்லா இளைஞர்களையும் அரவணைத்து, அளவிற்கு மீறியதாக இயக்கத்தை வீங்கச்செய்ய பிரபாகரன் விரும்பவில்லை. 1983 ஜூலை கலவரத்தை அடுத்து பல நூற்றுக்கணக்கில் இளைஞர்களை எமது அமைப்பு உள்வாங்கியிருந்தது. பிரபாகரன் ஒரு யதார்த்தவாதி. நுட்பமாகச் சிந்தித்து செயல்படுபவர். ஒரு விடுதலை அமைப்புக்கு விரிவாக்கத்தை விட ஒழுக்கமும் கட்டுப்பாடும்தான் முக்கியம் என அவர் கருதினார். ஒரு அமைப்பின் கட்டுக்கோப்பு, முக்கியமாக படைத்துறைக் கட்டுக்கோப்புப் படிப்படியாகப் பரிணாம வளர்ச்சி காணவேண்டும் என்பதில் நம்பிக்கை கொண்டவர். ஒரு அமைப்பானது அசாதாரணமான முறையில் பெருவளர்ச்சி கண்டால் ஒழுக்க நெறி குலைந்து அது சீரழிந்து போகலாம் என அவர் கருதினார். பிரபாகரன் கருதியது போலவே சில போராளி அமைப்புகள் திடீரென வீங்கி விரிவாக்கம் கண்டு, காலப் போக்கில் கட்டுப்பாடு குலைந்து சீரழிந்து சிதைந்து போயின. விடுதலைப் புலிகள் இயக்கத்தில் இணைவதற்கு இறுக்கமான ஒழுக்க நெறிகளைப் பிரபாகரன் விதித்திருந்தார். இதன் காரணமாகவும் பெரும் தொகையான இளைஞர்கள் ஏனைய அமைப்புகளில் இணைந்து கொண்டனர். இப்படியாக இந்தியத் தலையீடும், இந்திய இராணுவப் பயிற்சித் திட்டமும் உருவாக்கிய புதிய சூழ்நிலை காரணமாகத் தமிழ்நாட்டில் செயலிழந்து செத்துக் கிடந்த பல அமைப்புகள் மீண்டும் உயிர்பெற்று எழுந்தன. இதனால் தமிழீழ தாயகக் களத்தில் தொடர்ச்சியான போராட்டத்தை முன்னெடுத்து, ஒரு கட்டுப்பாடான கெரில்லா இயக்கமாகப் பரிணமித்து வந்த விடுதலைப் புலிகள் இயக்கத்திற்குப் பங்கம் ஏற்படும் வகையில் இராணுவச் சமவலு

பாதிக்கப்பட்டது. பல ஆயிரக்கணக்கானோரைக் கொண்ட ஆட்பலத்துடன் திடீரென சில தமிழ் அமைப்புகள் விரிவாக்கம் கண்டன. இந்த வளர்ச்சிப் போக்கு விடுதலைப் புலிகள் அமைப்புக்கு ஒரு சவாலாக அமைந்தபோதும் பிரபாகரன் இதுபற்றிப் பெரிதாக அலட்டிக் கொள்ளவில்லை. தனது விடுதலை இயக்கத்தைப் படிப்படியாகக் கட்டியெழுப்பிப் பலப்படுத்தும் திட்டம் ஒன்று அவரிடம் இருந்தது. இத் திட்டத்தை செயற்படுத்தும் வாய்ப்பு 1984ஆம் ஆண்டு அவருக்குக் கிட்டியது. இக் கால கட்டத்தில்தான் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் ஒரு தலைமறைவுக் கெரில்லா அமைப்பிலிருந்து அடிப்படை மாற்றம்பெற்று செம்மையாக ஒழுங்கமைக்கப்பட்ட ஒரு தேசிய விடுதலை இராணுவமாக உருவாக்கம் பெற்றது.

இந்தியாவின் இராணுவப் பயிற்சியானது ஏற்கனவே போர் அனுபவம்பெற்ற புலி வீரர்களுக்கு மேலும் திறனாற்றலைக் கொடுத்து அவர்களது போர்த் திறனை மேம்படுத்தியது. நவீன போரியல் கலையில் அதுவரை பெற்றிராத புதிய நுட்பங்களை இந்திய இராணுவப் பயிற்சியாளரிடமிருந்து புலிப் போராளிகள் பெற்றுக் கொண்டனர். ஆயினும் இருநூறு போராளிகளுக்கு மட்டுமாக இந்திய இராணுவப் பயிற்சி வரையறுக்கப்பட்டிருந்தது. அத்தோடு, இந்திய அரசினால் வழங்கப்பட்ட ஆயுதங்களின் தொகையும் மிகச் சொற்பமானதாக இருந்தது. அவையும் மிகத் தரம் குறைந்தவையாகவே இருந்தன. வழங்கப்பட்ட ஆயுதத் தளபாடங்களும் அவற்றின் தரம்குறைந்த தன்மையும் பிரபாகரனுக்கு பெரும் ஏமாற்றத்தைக் கொடுத்தது. பெரும்பாலான தானியங்கித் துப்பாக்கிகளும், யந்திரத் துப்பாக்கிகளும், மோட்டார்களும் (60 எம்.எம்) பழமை வாய்ந்தவையாகவும் பாவிக்க முடியாதவையாகவும் இருந்தன என்று பிரபாகரன் என்னிடம் சொன்னார். நவீன, நுட்பமான ஆயுதங்களை எமக்கு வழங்க இந்திய அரசு விரும்பவில்லை என்பதை நாம் பின்பு அறிந்து கொண்டோம். ஒரு குறிப்பிட்ட அளவான வளர்ச்சிக்கு மேல் தமிழ்ப் போராளி அமைப்புகளை வளர்த்துவிடக் கூடாது என்ற ஒரு திட்டமிட்ட கொள்கையின் அடிப்படையில்தான் இந்திய இராணுவ உதவி அமையப் பெற்றிருந்தது. நவீன ரக ஆயுதத் தளபாடங்களுடன் சிறப்புப் படையமைப்பாக ஒரு தேசிய இராணுவத்தைக் கட்டியெழுப்ப வேண்டுமெனக் கனவுகண்ட பிரபாகரனுக்கு இந்திய ஆயுத உதவி பெரும் ஏமாற்றத்தையே கொடுத்தது. எனினும் இந்திய

இராணுவப் பயிற்சி பயனுள்ளது என்றே அவர் கருதினார். தனது இராணுவக் கட்டமைப்பை நவீனமயப்படுத்தி விரிவாக்குவதற்குப் பிரபாகரனுக்கு இடையூறாக இருந்தது நிதிப் பற்றாக்குறையாகும். அக் காலகட்டத்தில் பணப் பற்றாக்குறை எமது இயக்கத்திற்குப் பெரும் பிரச்சினையாக இருந்தது. இந்திய அரசிடமிருந்து எமக்கு எந்தவிதமான நிதி உதவியும் கிடைக்கவில்லை. டெலோ, ஈ.பி.ஆர்.எல்.எவ், ஈரோஸ் போன்ற அமைப்புகளுக்கு றோ புலனாய்வுத் துறையினரிடமிருந்து பெற்ற நிதி மூலமாகச் சந்திரகாசன் பண உதவி புரிந்து வந்தார். புதிதாகப் போராளிகளை நாம் எமது அமைப்பில் இணைத்துக் கொண்டபொழுது எமது நிதி நெருக்கடி மேலும் மோசமாகியது. அவர்களைப் பராமரிப்பதே பெரும் சிரமமாக இருந்தது. வெளிநாடுகளில் புலம்பெயர்ந்து வாழ்ந்து வந்த நண்பர்கள் ஆதரவாளர்களிடமிருந்து பெற்ற சிறிய தொகைப் பணத்துடன் இயக்கத்தை இயக்குவதென்பது அவ்வேளை பெரும் போராட்டமாக அமைந்தது. அக் காலகட்டத்தில், எமது விடுதலைப் போராட்டத்திற்குப் பின்பலமாகப் புலம்பெயர்ந்த அனைத்துலக தமிழர்களை நாம் அணிதிரட்டி, ஒழுங்கமைக்க முடியவில்லை. உலகத் தமிழரை அணிதிரட்டுவதில் ஏனைய அமைப்புகளும் எமது இயக்கத்திற்கு எதிராகப் பரப்புரை செய்து ஆதிக்கப் போட்டியில் குதித்து இருந்ததால், அது எமக்குப் பெரும் சவாலாக அமைந்தது. எமது விடுதலை அமைப்பை வளர்த்து, பலப்படுத்தி, விரிவாக்கம் செய்ய நிதிவளம் அத்தியாவசியத் தேவையாக எழுந்தது. இந்த நெருக்கடியான சூழ்நிலையில்தான் நாம் சற்றும் எதிர்பாராத அதிசயம் நிகழ்ந்தது. அவ்வேளைதான் தமிழக முதல்வர் திரு. எம்.ஜி. இராமச்சந்திரன் (எம்.ஜி.ஆர்) அவர்கள் அதிர்ஷ்ட தேவதையாக எமக்குக் கைகொடுத்து உதவினார்.

1984 ஏப்ரல் மாதத்தில் எம்.ஜி.ஆர் அவர்களை நான் முதன் முதலாக சந்தித்த வரலாற்றுப் பின்னணி, வெற்றிகரமாக முடிந்த முதற் சந்திப்பின்போதே இரண்டு கோடி ரூபாவை ஆயுதப் போராட்டத்திற்கு தானம் செய்ய அவர் முன்வந்தமை, அவரது பாதாளப் பண அறை இரகசியங்கள், தலைவர் பிரபாகரனுக்கும் அவருக்கும் மத்தியில் ஏற்பட்ட நெருக்கமான நட்புறவு, அதன் பின்னர் எமது விடுதலைப் போராட்டத்திற்கு எந்தெந்த வழிகளில் எப்படியாக உதவிகளைச் செய்தார், ஆபத்தான எதிர்விளைவுகளையும் பொருட்படுத்தாது எப்படியெல்லாம்

துணிந்து செயற்பட்டார், சிக்கலான அரசியற் சூழ்நிலைகளில் எமது அமைப்பு சிக்குப்பட்ட போதெல்லாம் எவ்வாறு எமக்கு கைகொடுத்து உதவினார் என்ற பல்வேறு சுவாரஸ்யமான விடயங்களையும் சம்பவங்களையும் **'விடுதலை'** என்ற எனது நூலில், ***'எம்.ஜி.ஆரும் விடுதலைப் புலிகளும்'*** என்ற அத்தியாயத்தில் நான் விபரமாக விளக்கியிருக்கிறேன். இங்கு சுருக்கமாகச் சொல்வதானால் தமிழீழ மக்களின் தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு எம்.ஜி.ஆர் அவர்கள் காட்டிய உறுதியான ஆதரவும், கோடிக் கணக்கில், அவர் வழங்கிய நிதியுதவியுமே எமது விடுதலை அமைப்பின் அபார வளர்ச்சிக்கும் எழுச்சிக்கும் அத்திவாரமாக அமைந்தது எனலாம்.

## விடுதலைப் போரின் விரிவாக்கம்

தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்புக்கு உறுதியான ஆதரவு தெரிவித்து ஈழத் தமிழரின் தேசியப் போராட்ட அரங்கில் எம்.ஜி.ஆர் அவர்கள் பிரவேசித்தமை ஒரு வரலாற்றுத் திருப்புமுனையாக அமைந்தது. தமிழக முதல்வரின் ஆசியுடனும் நிதி உதவியுடனும் பிரபாகரனது இலட்சியக் கனவுகள் நிஜமாக மாறின. 1984இல் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் துரிதமான வளர்ச்சியும் விரிவாக்கமும் கண்டு செம்மையாக ஒழுங்கமைக்கப்பட்ட ஒரு விடுதலை சக்தியாக உருவாக்கம் பெற்றது. தமிழ் நாட்டிலுள்ள அடர்ந்த காட்டுப் பகுதிகளில் புதிதாகப் பயிற்சிப் பாசறைகள் நிறுவப்பட்டன. பெரும் தொகையில் புதிய போராளிகள் இயக்கத்தில் இணைக்கப்பட்டு தமிழகத்திற்குப் பயிற்சிக்கு அனுப்பப்பட்டனர். இந்தியப் பயிற்சிபெற்ற மூத்த தளபதிகள் பயிற்சியாளராகப் பொறுப்பேற்றுச் செயற்பட்டனர். இந்த மூத்த தளபதிகளில் முக்கியமானவர் பொன்னம்மான் என்று அன்பாக அனைவராலும் அழைக்கப்பட்ட லெப்.கேணல் அற்புதன். இவரது இயற்பெயர் யோகரெத்தினம் குகன். இவர் யோகரெத்தினம் யோகியின் சகோதரர். தலைவர் பிரபாகரனுக்கு மிகவும் நெருங்கிய தோழர். விடுதலைப் புலிகளின் ஆயுதப் போராட்டத்தில் பல களங்களைக் கண்ட வீரர். தமிழக இராணுவப் பயிற்சி முகாம்களுக்கு பிரதம பயிற்சியாளராகப் பணிபுரிந்த பொன்னம்மான் புலிப்

போராளிகளின் அன்பையும் மதிப்பையும் பெற்றவர். 1987ஆம் ஆண்டு பெப்ரவரி 14ஆம் திகதி யாழ்ப்பாணத்திலுள்ள நாவற்குழியில் சிங்கள இராணுவ முகாம் ஒன்றைத் தாக்கி அழிக்க தயாராகிக் கொண்டிருந்த வேளையில் எதிர்பாராத விதமாக ஏற்பட்ட வெடிவிபத்தில் சிக்கி பொன்னம்மான் அவர்கள் வீரச்சாவைத் தழுவிக் கொண்டார்.

இராணுவக் கட்டமைப்பைக் கட்டிவளர்த்து விரிவாக்கம் செய்த அதேவேளை, பெரும் தொகையில் நிதி ஒதுக்கி அரசியல் பிரிவையும் விரிவுபடுத்தினார் பிரபாகரன். சென்னை அடையாறில் அரசியல் தலைமைச் செயலகம் நிறுவப்பட்டது. அரசியல் பிரிவுக்கெனத் தெரிவு செய்யப்பட்ட போராளிகளுக்கு அரசியல், சித்தாந்த வகுப்புகளை நடத்தும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. இயக்கத்தின் அதிகாரபூர்வ கொள்கை பரப்பு ஏடாக **'விடுதலைப் புலிகள்'** மாதாந்த பத்திரிகையையும் 'Voice of Tigers' என்ற ஆங்கில இதழையும் வெளியிட்டோம். Liberation Tigers and Tamil Eelam Freedom Struggle, Towards Liberation, Diary of Combat என்ற ஆங்கிலப் பிரசுரங்களையும் அக் காலப் பகுதியில் எழுதி வெளியிட்டேன்.

தமிழகத்தில் எமது பயிற்சிப் பாசறைகளில் பயிற்சியை முடித்துக் கொண்டு புலிப் படை வீரர்கள் தமிழீழத் தாயகம் திரும்பியதைத் தொடர்ந்து சிங்கள ஆயுதப் படையினருக்கு எதிரான கெரில்லாப் போர் தீவிரமடைந்தது. 1984ஆம் ஆண்டு ஆரம்ப காலத்திலிருந்து யாழ்ப்பாணக் குடாநாட்டிலும், வன்னி மாநிலத்திலும், எமது போராளிகள் நன்கு திட்டமிடப்பட்ட கெரில்லாத் தாக்குதல்களை வெற்றிகரமாக நடத்தி முடித்தனர். அவ் வரலாற்றுக் கால கட்டத்தில், யாழ் குடாநாட்டில் மேற்கொள்ளப்பட்ட விடுதலைப் புலிகளின் துணிகரத் தாக்குதல் நடவடிக்கைகளுக்குத் தலைமை தாங்கியவர் எமது முதுபெரும் தளபதி கேணல் கிருஷ்ணகுமார் கிட்டுவாகும். இந்திய இராணுவப் பயிற்சியை முடித்துக் கொண்டு தமிழீழம் திரும்பிய கேணல் கிட்டு சிங்கள இராணுவத்திற்கு அதிர்ச்சி வைத்தியம் அளிக்கும் வகையில் திகைப்பூட்டும் தாக்குதல்களைத் திட்டமிட்டு நடத்தினார். 1984 பெப்ரவரி 24ஆம் திகதி, கேணல் கிட்டுவின் தலைமையில் சென்ற புலிகளின் கெரில்லா அணி, யாழ்ப்பாணத்தில் இராணுவத்தினரின் கோட்டையாக விளங்கிய குருநகர் இராணுவ முகாமிற்குள் ஊடுருவி, வெடிகுண்டுகள் வைத்து முகாமைத் தகர்த்தது. இக் குண்டுவெடிப்பால்

இராணுவக் கட்டிடங்கள் அனைத்தும் இடிந்து விழுந்து தரைமட்டமாகின. புதிய கட்டிடங்களை நிறுவி இம் முகாமை மேலும் பலப்படுத்தி விஸ்தரிக்க சிங்கள இராணுவத் தலைமை திட்டமிட்டிருந்த வேளையில் இப் படை முகாமின் கட்டுமாணம் நாசமாக்கப்பட்டது சிங்கள அரசுக்குத் திகிலை ஏற்படுத்தியது. இதனையடுத்து இவ்வாண்டு காலத்தில் நிகழ்ந்த பல்வேறு தாக்குதல் நடவடிக்கைகளில் பங்குகொண்ட கிட்டு தனது அபாரமான திறமையினாலும் துணிவாலும் சிங்கள இராணுவத்திற்கு சிம்ம சொப்பனமாக விளங்கினான். 1984 ஏப்ரல் மாதம் 9ஆம் நாள், பிற்பகல் 2 மணி அளவில், யாழ்ப்பாணம் ஆஸ்பத்திரி வீதியில் வைத்து சிங்கள இராணுவ அணிமீது விடுதலைப் புலிகள் அதிரடித் தாக்குதலை நிகழ்த்தினர். இத் தாக்குதலில் ஒரு இராணுவ ட்ரக் வண்டி முற்றாக சிதைக்கப்பட்டு பதினைந்து அரச படையினர் தலத்திலேயே கொல்லப்பட்டதுடன் இருபது பேர் வரை படுகாயமடைந்தனர். வீதியோரம், சக்திவாய்ந்த வெடிகுண்டுகளுடன் வான் ஒன்றை நிறுத்தி வைத்து இராணுவ வாகனங்கள் அதனைக் கடந்து செல்லும் போது வெடிக்க வைத்து இத் தாக்குதல் மேற்கொள்ளப்பட்டது. 1984 ஆகஸ்ட், செப்டெம்பர் மாத காலத்தில் ஆயுதப் போராட்டம் உக்கிரமடைந்து நூறுக்கும் மேற்பட்ட இராணுவத்தினரும் சிங்களக் காவற்துறையினரும் கொல்லப்பட்டனர். கவச வண்டிகள் உட்பட பல இராணுவ வாகனங்கள் நாசமாக்கப்பட்டன. இக் காலப் பகுதியில், நன்கு பலப்படுத்தப்பட்டிருந்த காவல் நிலையங்கள் புலிப் போராளிகளின் தாக்குதல்களுக்கு இலக்காகின. தமிழர் தாயகத்தின் பல்வேறு பகுதிகளில் தொடர்ச்சியாக நிகழ்ந்த புலிகளின் கெரில்லாத் தாக்குதல்கள் காரணமாக சிங்கள ஆயுதப் படைகள் மத்தியில் திகிலும் குழப்பமும் மனமுறிவும் ஏற்படத் தொடங்கியது. 1984ஆம் ஆண்டு ஆகஸ்ட், செப்டெம்பர் மாதக் காலப் பகுதியில் விடுதலைப் புலிகள் மேற்கொண்ட கெரில்லாத் தாக்குதல்கள் சிலவற்றை காலவரிசையின்படி இங்கு பதிவு செய்கிறேன்.[7]

**1984 ஆகஸ்ட் 4ஆம் நாள்**, யாழ்ப்பாணக் குடாநாட்டில் பருத்தித்துறைக்கு அண்மையிலுள்ள பொலிகண்டி எனப்படும் கரையோரக் கிராமத்தில் சுற்றுக்காவலில் சென்ற கடற்படை அணிக்கும் விடுதலைப் புலிப் போராளிகளுக்கும் மத்தியில் நிகழ்ந்த துப்பாக்கிச் சமரில் ஆறு கடற்படையினர்

கொல்லப்பட்டதுடன் மூவர் படுகாயம் அடைந்தனர்.

**ஆகஸ்ட் 5ஆம் நாள்,** வல்வெட்டித்துறைக்கு அண்மையிலுள்ள நெடியகாடு என்னும் கிராமத்தில் சிங்களக் காவல்துறை அதிரடிப் படையினரின் தொடர் வாகன அணி விடுதலைப் புலிகளின் கெரில்லாத் தாக்குதலுக்கு இலக்கானது. மூன்று கவச வாகனங்கள், ஒரு டிரக், ஒரு ஜீப் ஆகிய வாகன அணி விடுதலைப் புலிகளின் கண்ணிவெடிக்குள் சிக்கின. கண்ணிவெடியின் முழுத் தாக்கத்திற்கும் இலக்கான ஜீப் வண்டி சுக்கு நூறாகச் சிதறியது. இந்தத் தாக்குதலில் காவல்துறை உயர் அதிகாரி (ஏ.எஸ்.பி) ஜெயரத்தினா உட்பட ஒன்பது அதிரடிப் படையினர் கொல்லப்பட்டனர். பலர் படுகாயம் அடைந்தனர்.

**ஆகஸ்ட் 5ஆம் நாள்,** வன்னியில், ஒட்டுசுட்டான் எனப்படும் சிறு பட்டினத்தில் அமையப்பெற்றிருந்த காவல் நிலையம் விடுதலைப் புலிகளின் அதிரடித் தாக்குதலுக்கு இலக்காகியது. இத் தாக்குதலில் எட்டு சிங்களக் காவல்துறையினர் கொல்லப்பட ஏனையோர் சிதறியோடித் தப்பித்துக் கொண்டனர்.

**ஆகஸ்ட் 11ஆம் நாள்,** மன்னார் மாவட்டத்தில் வெள்ளாம் குளத்திற்கு அண்மையில், மன்னார் - பூநகரி வீதியில் இராணுவ சுற்று அணி ஒன்று விடுதலைப் புலிகளின் கெரில்லாத் தாக்குதலுக்கு ஆளானது. இத் தாக்குதலில் பதின்மூன்று இராணுவத்தினர் கொல்லப்பட்டனர்.

**ஆகஸ்ட் 14ஆம் நாள்,** வல்வெட்டித்துறை காவல் நிலையம் மீது விடுதலைப் புலிக் கெரில்லாப் போராளிகள் துணிச்சலான திடீர் தாக்குதலை நிகழ்த்தினர். ஒரு மணி நேரம் வரை நடைபெற்ற துப்பாக்கிச் சமரில் பல காவல்துறையினரும் இராணுவத்தினரும் படுகாயமடைந்தனர்.

**ஆகஸ்ட் 24ஆம் நாள்,** வடமராட்சியில் கரவெட்டி என்னுமிடத்தில், விடுதலைப் புலிப் போராளிகள் பதுங்கியிருந்து நிகழ்த்திய தாக்குதலில் இராணுவ வாகனம் ஒன்று சிதறி எட்டு இராணுவத்தினர் கொல்லப்பட்டனர். அதே நாளன்று அச்சுவேலியில் புலிகள் மேற்கொண்ட கண்ணி வெடித் தாக்குதலில் மூன்று இராணுவத்தினர் பலியாகினர்.

**செப்டெம்பர் 1ஆம் நாள்,** வடமராட்சிக் கரையோரக் கிராமமாகிய திக்கத்தில், காவல்துறை சுற்றுக் காவல் அணிமீது விடுதலைப் புலிக் கெரில்லா வீரர்கள் பதுங்கியிருந்து நிகழ்த்திய

தாக்குதலில் இருபது அதிரடிப் படையினர் தலத்திலேயே கொல்லப்பட்டனர்.

**செப்டெம்பர் 10ஆம் நாள்,** முல்லைத்தீவுப் பட்டினத்திற்கு சமீபமாகவுள்ள செம்மலை என்னுமிடத்தில் ஒரு வாகனத் தொடர் அணிமீது புலி வீரர்கள் மேற்கொண்ட துணிகர கெரில்லாத் தாக்குதலில் பதினைந்து இராணுவத்தினர் உயிரிழந்தனர்.

ஒருபுறம் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் தனது கெரில்லாத் தாக்குதல்களைத் தீவிரப்படுத்தி சிங்கள ஆயுதப் படைகள் மீது உயிரிழப்புகளை ஏற்படுத்தி வந்த அதேவேளை, மறுபுறம் ஏனைய தமிழ் அமைப்புகளும் 1984 இறுதிப் பகுதியில் தாக்குதல்களை முடுக்கிவிட்டதால் தமிழரின் புரட்சிப் போர் உக்கிரமும் விரிவாக்கமும் கண்டது. 1984 அக்டோபர் 21ஆம் நாள் கொழும்பில் தொடர்ச்சியாகப் பல குண்டுவெடிப்புச் சம்பவங்கள் நிகழ்ந்ததால் தலைநகர் அல்லோல கல்லோலப்பட்டது. தலைநகரில், முக்கிய அரச நிறுவனங்களுக்கு அருகாமையில், பத்துக் குண்டுவெடிப்புகள் பல்வேறு பகுதிகளில் நிகழ்ந்தன. இதனால் மூன்று பேர் கொல்லப்பட்டதுடன் பெருந்தொகையானோர் படுகாயம் அடைந்தனர். இந்தக் குண்டுவெடிப்புகளுக்கு ஈரோஸ் இயக்கம் உரிமை கோரியது. இதற்கிடையில், **1984 நவம்பர் 19ஆம் நாள்,** யாழ்ப்பாணத்திலுள்ள தெல்லிப்பளையில் விடுதலைப் புலிகள் நடத்திய கெரில்லா அதிரடித் தாக்குதலில் சிறீலங்கா இராணுவத்தின் வட பிராந்தியத் தளபதி பிரிகேடியர் ஏ.ஆரியப்பெருமாவும், எட்டு இராணுவத்தினரும் கொல்லப்பட்டனர். கட்டுவன்-தெல்லிப்பளை வீதியில் கண்ணிவெடிகளைப் புதைத்து எமது வீரர்கள் தயாரெடுத்துக் காத்து நின்ற வேளையில், ஒரு ஜீப் வண்டி, இரண்டு கவச வண்டிகள் சகிதம் இராணுவ வாகன அணி அங்கு வந்தபோது நிலக் கண்ணிவெடிகள் வெடிக்க வைக்கப்பட்டன. அக் குண்டுவெடிப்பில் பிரிகேடியர் ஆரியப்பெருமா பயணித்த ஜீப் வண்டி சிதறி நொருங்கியதால் அவர் தலத்திலேயே கொல்லப்பட்டார். இதனைத் தொடர்ந்து நடைபெற்ற துப்பாக்கிச் சண்டையில் 8 இராணுவத்தினர் கொல்லப்பட்டனர். இது இவ்வாறிருக்க, 1984 நவம்பர் 20ஆம் நாள், சாவகச்சேரி காவல் நிலையம் மீது ரெலோ அமைப்பைச் சார்ந்த போராளிகள் துணிகரத் தாக்குதல் ஒன்றை நிகழ்த்தினர். இதில் இருபத்து நான்கு காவல்துறையினர் பலியாகினர். காவல்நிலையக் கட்டிடம் குண்டுவைத்துத் தகர்த்து

அழிக்கப்பட்டது. தமிழ்ப் போராளி அமைப்புகளின் தாக்குதல்கள் தீவிரம் அடைந்தாலும், தலைநகர் வரையும் தாக்குதல்கள் விரிவாக்கம் பெற்றதாலும் சிங்கள அரசு பீதியும் பதட்டமும் அடைந்தது.

இந்திய அரசின் தீவிர ஆதரவுடன் தமிழ்ப் போராளி அமைப்புகள் தமது கெரில்லாப் போராட்டத்தை விரிவுபடுத்தி வருவதைக் கண்ட ஜெயவர்த்தனா அதிர்ச்சியும் ஆத்திரமும் அடைந்தார். எனினும் அவர் தனது விட்டுக்கொடாத கடும்போக்கிலிருந்து தளரவில்லை. இராணுவ நெருக்குவாரம் தீவிரமடைந்தபோதும் அவர் நெகிழ்ந்து கொடுக்கவில்லை. தமிழர்களுக்கு எந்தவிதமான சலுகைகளையும் வழங்க அவர் தயாராக இல்லை. சிங்கள அரசியற் தலைமையின் கடும்போக்குக் காரணமாக பார்த்தசாரதியின் தீர்வுத் திட்டத்தை விவாதித்து வந்த சர்வகட்சி மாநாடு மாதக் கணக்கில் இழுபட்டு, முடிவெதுவுமின்றி முடங்கிப் போனது. சிங்கள இனவாத ஆட்சியாளரைச் சமாதான வழியில் சமரசத் தீர்வு காண நிர்ப்பந்திக்கும் நோக்கத்துடன் இந்திரா காந்தி அம்மையாரால் முன்னெடுக்கப்பட்ட இருமுனைத் தந்திரோபாயமும், ஜெயவர்த்தனாவின் சூழ்ச்சிகர அரசியலால் தோல்வியைத் தழுவியது. இந்தச் சிக்கலான சூழ்நிலையின்தான் எவருமே எதிர்பாராத அதிர்ச்சி தரும் வரலாற்றுச் சோக நிகழ்வு இடம்பெற்றது. இந்த நிகழ்வானது இந்திய-இலங்கை உறவிலும், தமிழரின் தேசிய விடுதலைப் போராட்டத்திலும் அடிப்படையான மாற்றத்தை ஏற்படுத்தியது. 1984 அக்டோபர் 31ஆம் நாள் திருமதி. இந்திரா காந்தி தனது சீக்கிய மெய்ப்பாதுகாவலரால் சுடப்பட்டுக் கொல்லப்பட்டார்.

திருமதி. காந்தியின் திடீர் மரணம் ஈழத் தமிழினத்தை ஆழமான சோகத்தில் ஆழ்த்தியது. தமிழரின் அரசியல் அபிலாசையும் நம்பிக்கையும் இடிந்து நொறுங்கின. கடைகள், பாடசாலைகளை மூடி, வீடுகள் எங்கும் கறுப்புக் கொடிகளைப் பறக்கவிட்டு தமிழீழ மக்கள் துக்கம் கடைப்பிடித்தபோது, தமிழ்ப் பகுதிகளை ஆக்கிரமித்து நின்ற சிங்களப் படையினர் வீதிகளில் நடனமாடி மகிழ்ச்சி ஆரவாரம் தெரிவித்தனர். தமிழரின் ஆயுதப் போராட்ட இயக்கத்தைப் பொறுத்தவரை திருமதி காந்தியின் திடீர் மறைவானது ஈடுசெய்ய முடியாத பெரியதொரு இழப்பாகியது. ஒரு மாபெரும் தார்மீக சக்தியைத் தமிழரின் சுதந்திர இயக்கம் இழந்து தவித்தது. இந்திரா காந்தி

அம்மையார் ஆழமான ஆளுமையும் மதிநுட்பமும் மிகுந்தவர். இலங்கை அரசியலின் சிக்கலான பரிமாணங்களை நன்கு அறிந்தவர். தமிழ் மக்களின் அரசியற் பிரச்சினையில் ஆழமான அக்கறையும் அனுதாபமும் கொண்டவர். தமிழரின் உரிமைகளையும் அரசியல் அபிலாசைகளையும் வென்று கொடுக்க வேண்டும் என்பதில் உறுதி பூண்டிருந்தவர். சிங்கள அரசியல் தலைவர்களின் மனவியல்புகளையும் அவர் நன்கு புரிந்து வைத்திருந்ததால் அவர்களை அச்சமூட்டிப் பணியவைக்கும் தந்திரங்களையும் கையாண்டு வந்தார். வங்காளதேசம் தனியரசாக உருப்பெற்றமைக்கு இந்திரா காந்தியின் பங்களிப்புக் காரணமாக இருந்த வரலாற்றை ஜெயவர்த்தனா நன்கு அறிந்திருந்தார். தமிழரின் இனப் பிரச்சினையிலும் திருமதி. காந்தி தலையிட்டுத் தமிழருக்குத் தனியரசை உருவாக்கிக் கொடுக்கலாமென ஜெயவர்த்தனாவுக்கு அச்சம் இருந்து வந்தது. ஜெயவர்த்தனாவின் இந்த அச்சம் பற்றி திரு. டிக்சிட் குறிப்பிடுகையில், "திருமதி காந்தி உயிரோடு இருந்திருப்பாராயின் 1985ஆம் ஆண்டிலேயே இலங்கையை இரு நாடுகளாகப் பிளவுபடுத்தியிருப்பார் என்று ஜெயவர்த்தனா என்னிடம் அச்சம் தெரிவித்தார்."[8] எனத் தெரிவித்திருக்கிறார்.

திருமதி. காந்தியின் திடீர் மரணத்தை அடுத்து டில்லியில் நிகழ்ந்த ஆட்சி மாற்றம் தமிழரின் தேசிய விடுதலைப் போராட்டத்திற்குப் பாதகமாகவே அமைந்தது. திருமதி. காந்தி வகித்த உயர் பதவியில் அவரது புத்திரரான திரு. ரஜீவ் காந்தி அமர்த்தப்பட்டார். ஆழமான தரிசனமும் அரசியல் முதிர்ச்சியுமற்ற இளைஞரான ரஜீவ் காந்தி புதிய இந்தியப் பிரதமராகப் பதவியேற்றதை அடுத்து இந்திய-இலங்கை உறவில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நிகழ்ந்தன. இந்த மாற்றங்கள் தமிழீழ மக்களின் நலன்களை ஆழமாகப் பாதித்தன.

## டில்லியில் புதிய நிர்வாக ஆட்சி

உலகத்தின் மிகப் பெரிய சனநாயக நாடும் தென்னாசியாவின் வல்லரசுமாகிய இந்தியாவின் அதியுயர் அதிகார பீடத்தில் அமர்த்தப்பட்ட ரஜீவ் காந்தி, தனது புதிய ஆலோசகர்கள், நண்பர்களின் கருத்துகளுக்கு வசப்பட்டு இந்திய வெளியுறவுக் கொள்கையில் அடிப்படையான மாற்றத்தைக்

கொண்டுவர விரும்பினார். தனது தாயாரான இந்திரா காந்தி அம்மையார் இந்தியாவின் அயல்நாடுகளுடன் மேலாண்மைவாதக் கொள்கையை கடைப்பிடித்து வந்தார் என்பது ரஜீவின் கருத்து. இந்திரா காந்தியுடன் நெருங்கிய உறவை வைத்திருந்து அவரது வெளியுறவுக் கொள்கையை வகுத்துக் கொடுத்த மூத்த அரசியல்வாதிகள், இராஜதந்திரிகளையும், ரஜீவ் வெறுத்தார். மிகவும் நிதானமாக, மதிநுட்பமாகக் காய்நகர்த்தும் பார்த்தசாரதியின் இராஜதந்திர அணுகுமுறையும் ரஜீவுக்கு பிடிக்கவில்லை. இளைஞர் என்பதால் பொறுமையிழந்து அவசரப்படும் குணவியல்பு அவரிடமிருந்தது. உடனடியான பெறுபேறுகள் கிட்டும் அவசர முடிவுகள் எடுக்கும் உணர்ச்சிப் பாங்கு உள்ளவராகவும் அவர் விளங்கினார். ஒன்றுக்கு ஒன்று முரண்பட்ட ஆளுமையும் அணுகுமுறையும் கொண்டு விளங்கியதால் பார்த்தசாரதிக்கும் ரஜீவ் காந்திக்கும் மத்தியிலான உறவில் முறிவு ஏற்பட்டது. 1985ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் இலங்கை விவகாரத்தைக் கையாளும் பொறுப்பை, தனக்கு மிகவும் நெருங்கியவரான ரொமேஸ் பண்டாரியிடம் பிரதமர் ரஜீவ் கையளித்தார். இலங்கை விவகாரத்தில் ஒரு அடிப்படையான கொள்கை மாற்றத்தையே ரஜீவ் விரும்பினார்.

இந்திரா காந்தியின் ஈமச் சடங்கின்போது இலங்கை அதிபர் ஜெயவர்த்தனாவைச் சந்தித்து சிறிது நேரம் உரையாடும் வாய்ப்பு ரஜீவுக்கு கிட்டியது. அந்த முதற் சந்திப்பின்போது பரிமாறப்பட்ட கருத்துக்களின் அடிப்படையில் ஜெயவர்த்தனா மீது ரஜீவுக்கு மதிப்பும் கவர்ச்சியும் ஏற்பட்டது. முதற் சந்திப்பின்போது தனது சாதுரியமான சாணக்கியத்தைப் பயன்படுத்திய ஜெயவர்த்தனா அன்பும், பண்பும் ஆழமான அரசியல் ஞானமும் கொண்ட ஒரு உண்மையான பௌத்தராகத் தன்னை இனம்காட்டிக் கொண்டார். இந்திய சுதந்திரப் போராட்ட காலத்திலிருந்தே ரஜீவின் தந்தையான திரு. நேருவுடனும் மகாத்மா காந்தியுடனும் நட்புறவு வைத்திருந்ததாகத் தன்னை ரஜீவுக்கு அறிமுகம் செய்துகொண்ட இலங்கை அதிபர், இந்தியாவுடன் ஒத்திசைவான நட்புறவை வளர்த்துக் கொள்வதே தனது அரசியல் இலட்சியம் என எடுத்துரைத்தார். ஒரு முதிர்ந்த அரசியல் மெய்ஞ்ஞானி என்ற பாத்திரத்தில் தன்னை நிறுத்தி, ரஜீவுக்கு ஆலோசனை வழங்கவும் அவர் தயங்கவில்லை. ஒரு பழம்பெரும் நாட்டின் இளம் பெரும் தலைவராக விளங்கும் ரஜீவ்

காந்தி, தனது அயல்நாடுகளுடன் நல்லுறவை வளர்த்து, தென்னாசியப் பிராந்தியத்தில் அமைதியையும் உறுதி நிலையையும் நிலைநாட்டும் பெரும்பொறுப்பைச் சுமந்து நிற்பதாகவும் சுட்டிக் காட்டினார். ஜெயவர்த்தனாவின் புத்திசாலித்தனமான கருத்தாடலால் கவரப்பட்ட ரஜீவ் காந்தி, இலங்கையுடனான தனது ஆட்சிப்பீடத்தின் அணுகுமுறையானது தனது தாயாரது ஒருதலைப்பட்சமான கொள்கையைவிட வேறுபட்டதாக அமையுமென உறுதியளித்தார். தனது ஆட்சிப்பீடத்தினது மத்தியஸ்துவ முயற்சி நேர்மையானதாகவும் பாரபட்சமற்றதாவும் அமையப் பெறும் என்றும் ரஜீவ் எடுத்துரைத்தார். இலங்கையின் இறையாண்மை, பிரதேச ஒருமைப்பாடு, ஐக்கியம் ஆகியனவற்றிற்குப் பங்கம் ஏற்படாத வகையில் தனது மத்தியஸ்துவ அணுகுமுறை அமையுமென ரஜீவ் உறுதியளித்ததை அடுத்து, இதுவரை காலமும் இந்திய வல்லாதிக்கம் குறித்து ஜெயவர்த்தனா கொண்டிருந்த அச்சம் முழுமையாக நீங்கியது. இப்படியாக இந்த முதற் சந்திப்பின்போது, இந்திய இலங்கை உறவில் ஒரு புதிய அணுகுமுறைக்கான அத்திவாரம் இடப்பட்டது. அத்தோடு தமிழ் மக்களுக்கு ஆதரவாக இந்திரா காந்தி அம்மையார் கடைப்பிடித்து வந்த நட்புறவுக் கொள்கைக்கும் முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது.

1985 ஜனவரி முதற்பகுதியில் நான் திரு. பார்த்தசாரதியைப் புதுடில்லியிலுள்ள அவரது இல்லத்தில் சந்தித்தேன். அவர் விரக்தியுடன் இடிந்துபோய்க் காணப்பட்டார். திருமதி. காந்தியின் திடீர் மறைவும், ரஜீவ் காந்தியின் புறக்கணிப்பும் அவரை ஆழமாகப் பாதித்திருந்தன. ரஜீவ் காந்தியின் ஆட்சிப்பீடம் எத்தகைய புதிய வெளிவிவகாரக் கொள்கையைக் கடைப்பிடிக்கப் போகின்றது என்பது குறித்து அவர் எனக்கு ஒரு விளக்கம் கொடுத்தார். அழுத்தம் கொடுக்கும் கடும்போக்கை விடுத்து மென்மையான, நட்புறவான இராஜதந்திர அணுகுமுறையையே புதிய ரஜீவ் அரசு கடைப்பிடிக்கும் என்றார் பார்த்தசாரதி. ஜெயவர்த்தனா நல்லெண்ணம் கொண்டவர் எனத் தவறாகப் புரிந்திருக்கும் ரஜீவ் காந்தி, ஈழத் தமிழரின் பிரச்சினையைச் சமாதானப் பேச்சுக்கள் மூலமாகத் தீர்த்து வைக்கலாம் என நம்புகிறார் என்றார். தமிழ் விடுதலை அமைப்புகள் பங்குபற்றும் சமாதானப் பேச்சுக்கள் விரைவில் ஆரம்பமாகலாம் எனத் தெரிவித்த அவர் இலங்கையின்

ஒற்றையாட்சி அமைப்பிற்குள் தமிழரின் இனப் பிரச்சினைக்குத் தீர்வு காணும் முயற்சிகள் எடுக்கப்படும் எனவும் விளக்கினார். திருமதி. இந்திரா காந்தியின் இரகசிய இராணுவ உதவித் திட்டம் கைவிடப்படலாம் எனச் சூசகமாகத் தெரிவித்த அவர் பேச்சுக்கள் ஆரம்பமாவதற்கு முன்னராக போர்நிறுத்த ஒப்பந்தம் ஒன்றும் செய்து கொள்ளப்படலாம் எனவும் கூறினார். ஜெயவர்த்தனாவின் ஏமாற்றுகிற, சூழ்ச்சி மிக்க வஞ்சகக் குணவியல்பு பற்றி எவ்வளவோ சொல்லியும் ரஜீவ் காந்தியை தம்மால் நம்ப வைக்க முடியவில்லை என்றார் பார்த்தசாரதி. ஒரு பொதுவான கொள்கைத் திட்டத்தின் அடிப்படையில் தமிழ்ப் போராளி அமைப்புகள் அனைத்தும் ஓரணியில் இணையவேண்டும் என்றும் சிறீலங்கா அரசுடன் மிகவும் கடினமான சிக்கலான பேச்சுக்களில் பங்குகொள்ள தமிழர் தரப்பு தயாராக வேண்டும் என்றும் அவர் ஆலோசனை கூறினார். ரஜீவ் காந்தியின் புதிய நிர்வாகம் கடைப்பிடிக்கவிருக்கும் கொள்கை பற்றியும், அணுகுமுறை பற்றியும் இந்தியப் புலனாய்வுத் துறையினர் விரைவில் எமக்கு எடுத்து விளக்குவார்கள் என்றும் திரு. பார்த்தசாரதி சொன்னார்.

சென்னை திரும்பியதும் திரு. பார்த்தசாரதி கூறிய விடயங்களை பிரபாகரனுக்கு விளக்கமாக எடுத்துரைத்தேன். திருமதி காந்தியின் மறைவை அடுத்து ஆட்சிப்பீடம் ஏறிய ரஜீவ் காந்தி புதிய வெளிவிவகாரக் கொள்கையைக் கடைப்பிடிக்கலாம் என எதிர்பார்த்திருந்த பிரபாகரனுக்குப் பார்த்தசாரதி தெரிவித்த விடயங்கள் ஆச்சரியத்தையோ ஏமாற்றத்தையோ கொடுக்கவில்லை. ஆயினும் கெரில்லாப் போராட்டத் தாக்குதல்களைத் தீவிரப்படுத்தி, சிங்கள ஆயுதப் படைகளைப் பலவீனப்படுத்த திட்டமிட்டுக் கொண்டிருந்த பிரபாகரனுக்கு, அச் சூழ்நிலையில் போர்நிறுத்தம் செய்வது உகந்த தந்திரோபாயமாகத் தெரியவில்லை.

1985 ஆண்டு தொடக்கத்திலிருந்தே தமிழீழத்தில் வன்முறைச் சூறாவளி தீவிரம் பெறத் தொடங்கியது. அவ்வாண்டு ஜனவரி 9ஆம் நாள், யாழ்ப்பாணம் அச்சுவேலியில் நிகழ்ந்த சுற்றிவளைப்புச் சண்டையில் எமது இயக்கத்தின் முக்கிய தளபதிகளில் ஒருவரான கப்டன் ரவீந்திரன் (பண்டிதர்) வீரச் சாவைத் தழுவிக் கொண்டார்.

ஒரு உளவாளி கொடுத்த தகவலின் பேரில் ஐநூறுக்கும் மேற்பட்ட இராணுவத்தினர் அச்சுவேலியில் அமையப் பெற்றிருந்த

எமது கெரில்லாப் படைத் தளம் ஒன்றைத் திடீரெனச் சுற்றிவளைத்தனர். முற்றுகைக்கு ஆளான தளத்திலிருந்த 15 புலிப் படை வீரர்களுக்கும் இராணுவத்தினருக்கும் மத்தியில் உக்கிரமான சண்டை மூண்டது. பெருந்தொகையான இராணுவத்தினரை எதிர்த்து எமது போராளிகள் வீரமுடன் களமாடினர். இச் சண்டையில் கப்டன் ரவீந்திரனும் நான்கு இளம்புலி வீரர்களும் வீரச்சாவைத் தழுவிக் கொண்டனர். பத்துப் புலி வீரர்கள் வீரமுடன் போராடி சிங்கள இராணுவத்தின் முற்றுகை அரணை உடைத்தெறிந்து தப்பிச் சென்றனர். பெரியதொரு இராணுவ முற்றுகையைச் சிறிய குழுவாக முகம்கொடுத்து, பல மணிநேரம் போராடி ஈற்றில் பெரும்பாலானோர் முற்றுகையை உடைத்துத் தப்பியதே பெரும் இராணுவச் சாதனை எனலாம்.

அக் கால கட்டத்தில் கப்டன் ரவீந்திரனின் சாவு எமது இயக்கத்திற்கு ஒரு பேரிழப்பாக அமைந்தது. பண்டிதர் என அனைவராலும் அன்பாக அழைக்கப்படும் ரவீந்திரன் விடுதலைப் புலிகள் இயக்கத்தின் மத்திய குழு உறுப்பினராவார். அத்துடன் புலிகள் இயக்கத்தின் நிதிக்கும் ஆயுதப் பராமரிப்புக்கும் பொறுப்பாக இருந்தவர். அரசியற் பரப்புரைப் பணிகளிலும் தீவிரமாகச் செயற்பட்டு வந்தவர். வல்வெட்டித்துறைக்கு அருகாமையிலுள்ள கம்பர் மலையைப் பிறப்பிடமாகக் கொண்ட பண்டிதர், எமது இயக்கத்தின் ஆரம்ப கால வளர்ச்சிக்கு அயராது உழைத்தவர். ஆஸ்மா நோயினால் அவலப்பட்ட போதும் கடமை உணர்வுடன், இலட்சியப் பற்றுடன், கடுமையாக உழைத்து சக போராளிகளின் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரமாக விளங்கினார். பல்வேறு நிர்வாகப் பொறுப்புகளைச் சுமந்தபோதும் களத்தில் இறங்கிப் போராடவும் அவர் தயங்கவில்லை. தலைவர் பிரபாகரனால் பெரிதும் மதிக்கப்பட்டவர். மிகவும் நெருங்கிய தோழனாகவும் நம்பிக்கைக்கு உரியவராகவும் செயற்பட்டவர். அவரது சாவு எல்லோரது இதயங்களையும் கலக்கிய ஒரு சோக நிகழ்வு.

1985ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் சிங்கள ஆயுதப் படைகளுக்கு எதிராக ரெலோ அமைப்பும் விடுதலைப் புலிகள் இயக்கமும் இரு பெரும் தாக்குதல்களை நடத்தின. 1985 ஜனவரி 19ஆம் நாள், வன்னியிலுள்ள முறிகண்டியில் கொழும்பு சென்றுகொண்டிருந்த யாழ்தேவிப் புகையிரதத்தை ரெலோ அமைப்பைச் சேர்ந்த போராளிகள் வெடிகுண்டு வைத்துத்

தகர்த்தனர். அந்தப் புகையிரத்தில் சிங்கள இராணுவப் படையணி ஒன்று பயணம் செய்து கொண்டிருந்தது. வெடிகுண்டில் சிக்கி பல வண்டிகள் சிதறின. இந்த வெடிகுண்டுத் தாக்குதலில் 22 இராணுவத்தினரும் 10 பொதுமக்களும் கொல்லப்பட்டதுடன் ஏராளமான படையினர் படுகாயமடைந்தனர். சம்பவத்தை அடுத்து உதவிக்கு சென்ற இராணுவத்தினருடனும் ரெலோ போராளிகள் துப்பாக்கிச் சமரில் ஈடுபட்டனர்.

1985 பெப்ரவரி 13ஆம் நாள், முல்லைத்தீவு மாவட்டத்திலுள்ள கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த கரையோரப் பட்டினமாகிய கொக்கிளாயில் அமைந்துள்ள இராணுவ முகாம் மீது விடுதலைப் புலிப் போராளிகள் துணிகரத் தாக்குதல் ஒன்றை நிகழ்த்தினர். இந்தத் தாக்குதல் ஐந்து மணிநேரம் வரை நீடித்தது. மிகவும் உக்கிரமாக நிகழ்ந்த இச் சண்டையில் நூற்று ஆறு இராணுவத்தினர் கொல்லப்பட்டனர். அக்கால கட்டத்தில் சிங்கள இராணுவம் சந்தித்த மிகப் பெரிய உயிரிழப்பு இதுவாகும். எமது தரப்பில் பதினாறு போராளிகள் வீரச்சாவைத் தழுவிக்கொண்டனர். சிங்களப் படைத்துறைக்கு மிகவும் அவமானமான பின்னடைவாக இத் தாக்குதல் அமைந்தது. இதனால் ஆவேசமடைந்த படையினர் முல்லைத்தீவுப் பட்டினத்திற்கு அண்மையிலிருந்த அகதிமுகாம் மீது மிருகத்தனமான தாக்குதலை நிகழ்த்தி ஐம்பத்து இரண்டு அப்பாவிப் பொதுமக்களைக் கொன்று குவித்தனர். இந்தியா தலையிட்டு இந்த இனக்கொலையைத் தடுத்து நிறுத்த வேண்டுமெனத் தமிழர் விடுதலைக் கூட்டணித் தலைவர்கள் குரல் எழுப்பினர். ஆயினும் இந் நிகழ்வு குறித்து இந்திய அரசு மௌனம் கடைப்பிடித்தது. இந்திய அரசின் இப் பாராமுகப் போக்கு ஒரு உண்மையைப் புலப்படுத்தியது. ரஜீவ் காந்தியின் புதிய நிர்வாகம் இலங்கை சம்பந்தப்பட்ட மட்டில் ஒரு மென்மையான புதிய அணுகுமுறையைக் கடைப்பிடிக்கத் தீர்மானித்திருக்கிறது என்ற உண்மையை இது எடுத்துக் காட்டியது. 1985 மார்ச் மாதம், இந்தியாவின் வெளிவிவகார, உள்விவகாரப் புலனாய்வுத் துறைகளின் அதிபர்கள் விடுதலைப் புலிகளையும் ஏனைய தமிழ்ப் போராளி அமைப்புகளையும் தனித்தனியே சந்தித்து, இலங்கை விவகாரத்தில் ரஜீவ் அரசு கடைப்பிடிக்கவிருக்கும் புதிய நடுநிலையான அணுகுமுறை பற்றி விரிவான விளக்கம் கொடுத்தனர்.

'றோ' புலனாய்வுத் துறையின் அதிபர் திரு.கிரிஷ் சக்சேனா[9]

தலைவர் பிரபாகரனையும் என்னையும் சென்னையில் ஒரு இரகசியமான இடத்தில் சந்தித்தார். 'றோ' அதிகாரிகள் இந்த இரகசியச் சந்திப்பை ஒழுங்கு செய்தனர். உயர்ந்த கம்பீரமான தோற்றம்; கனத்த குரல்; ஒளிர்விடும் கண்கள். ஆங்கிலத்தில் ஆணித்தரமாகப் பேசினார் சக்சேனா. கலந்துரையாடல் நிகழவில்லை. அன்றும் இன்றுமான இந்திய வெளியுறவுக் கொள்கை பற்றி எமக்கு ஒரு விரிவுரை நிகழ்த்தினார் அவர். அவரது சொற்பொழிவின் சுருக்கம் இதுதான்:

அன்று, திருமதி. இந்திரா காந்தியின் ஆட்சிக் காலத்தில் இந்தியா ஒரு நெருக்கடியான சூழ்நிலைக்கு முகம்கொடுக்க வேண்டி இருந்தது. தமிழரின் உரிமைப் போராட்டத்தை நசுக்கிவிடும் நோக்கத்துடன் இந்திய நலன்களுக்கு விரோதமான அந்நிய சக்திகளை இலங்கையில் ஊடுருவ அனுமதித்தார் ஜெயவர்த்தனா. இது இந்தியாவின் பாதுகாப்புக்கு அச்சுறுத்தலாக அமைந்ததென இந்திரா காந்தி கருதினார். இவ் வேளை 1983 ஜுலை இனக் கலவரம் தமிழினப் படுகொலையாகக் கோரம் எடுத்தது. இதன் விளைவாகப் பல ஆயிரக்கணக்கான ஈழத் தமிழர்கள் இந்தியாவில் தஞ்சம் புகுந்தனர். தமிழர்களுக்கு எதிராக இனக்கொலைப் பரிமாணத்தில் தலைவிரித்தாடிய கலவரம் தமிழ்நாட்டில் தேசியவாத உணர்வுத் தீயைப் பற்றியெரியச் செய்தது. இத்தகைய சூழ்நிலை இந்தியாவின் ஒருமைப்பாட்டுக்கும் தேசிய பாதுகாப்புக்கும் அச்சுறுத்தலை ஏற்படுத்தியது. எதிர்மறையான இந்தப் போக்குகள் காரணமாகவே இலங்கையில் இந்தியாவைத் தலையிட நிர்ப்பந்தித்தன. இலங்கையில் தமிழ்க் குடிமக்களுக்கு எதிரான அரச வன்முறைக்கு முற்றுப் புள்ளிவைத்து, இனநெருக்கடிக்கு சமாதான வழியில் தீர்வுகண்டு, இலங்கையிலும் தென்னாசியப் பிராந்தியத்திலும் அமைதியையும் உறுதி நிலையையும் ஏற்படுத்துவதே இந்தியத் தலையீட்டின் பிரதான நோக்கமாக இருந்தது. சிங்கள இராணுவ அட்டூழியங்களுக்கு முடிவுகட்டி தமிழ் மக்களைப் பாதுகாக்கும் நோக்குடனேயே தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் ஏனைய போராளி அமைப்புகளுக்கும் ஆயுத உதவி வழங்கப்பட்டது.

இவ்விதமாக ஒரு விளக்கத்தை அளித்த திரு. சக்சேனா, இலங்கையின் பிரதேச ஒருமைப்பாட்டிற்கும் இறையாண்மைக்கும் பங்கம் ஏற்படுத்தும் நோக்கம் எதுவும் திருமதி. காந்திக்கு இருக்கவில்லை என்றார். இராணுவ அணுகுமுறையை

ஜெயவர்த்தனா கைவிட வேண்டும் என்பதும், ஒன்றுபட்ட இலங்கையின் அடிப்படையில் இனப் பிரச்சினைக்கு அரசியல் தீர்வு ஏற்படவேண்டும் என்பதுமே திருமதி. காந்தியின் குறிக்கோளாக இருந்தது என்றார். தமிழீழத் தனியரசு என்ற தமிழர்களின் அபிலாசைக்கு இந்தியா ஒருபொழுதும் ஆதரவு வழங்கப் போவதில்லை என்று உறுதிபடக் கூறிய அவர், பிரிவினைவாதக் கோரிக்கையை முன்வைத்துப் போராடும் இயக்கங்களை உள்நாட்டில் சமாளிக்க வேண்டியிருப்பதால் பிரிவினைக்கு இந்தியா ஆதரவு அளிப்பது பாரதூரமான விளைவுகளை ஏற்படுத்தும் என விளக்கினார். 'இந்தியாவின் நிலைப்பாட்டை நீங்கள் சரிவரப் புரிந்து கொள்வீர்கள் என நினைக்கிறேன்' என்று கனத்த தொனியில் கூறிக் கொண்டே பிரபாகரனை உறுத்துப் பார்த்தார் சக்சேனா.

இன்று, ஆட்சிப்பீடம் ஏறியிருக்கும் ரஜீவ் காந்தி சிறீலங்கா அரசுடன் நட்புறவில் கட்டப்பட்ட நல்லுறவைப் பேண விரும்புகிறார் எனக் கூறிய சக்சேனா, தமிழ்ப் போராட்ட அமைப்புகளை உள்ளடக்கிய சமாதானப் பேச்சுவார்த்தையை முன்னெடுக்கும் நோக்குடன் ஒரு புதிய, முற்போக்கான மத்தியஸ்துவ முயற்சியை ஆரம்பிக்கவுள்ளார் எனத் தெரிவித்தார். தமிழ்ப் போராளி அமைப்புகள் தமது ஆயுதப் போராட்டத்திற்கு ஓய்வு கொடுத்து, அமைதிபேணி சமாதானப் பேச்சுக்குத் தங்களைத் தயார்படுத்தும் காலம் அண்மித்து வருகிறது என்று கூறித் தனது உரையை முடித்தார். தனது உரையை முடித்ததும், எமது அபிப்பிராயம், கருத்துகள் எதையுமே கேட்காது அங்கிருந்து அவசரமாகப் புறப்பட்டுச் சென்றார். ஏனைய தமிழ் அமைப்புகளுடன் இன்னொரு கூட்டம் இருப்பதால் அவர் அவசரமாகச் செல்ல வேண்டியிருந்ததாக றோ அதிகாரிகள் எமக்கு விளக்கம் தந்தார்கள்.

இலங்கை விவகாரத்தில், இந்தியாவின் அன்றைய வெளியுறவுக் கொள்கை பற்றி திரு. சக்சேனா அளித்த விளக்கம் பிரபாகரனுக்கும் எனக்கும் ஆச்சரியத்தையோ அல்லது ஏமாற்றத்தையோ தரவில்லை. விரைவில் ஒரு போர்நிறுத்தம் செய்யப்படும் என சக்சேனா தெரிவித்த கருத்தை பிரபாகரனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. ஆயுதப் போராட்டம் அப்பொழுதுதான் சூடுபிடித்து வந்தது. சிங்களப் படைத்துறைக்கு மேலும் பின்னடைவுகளை ஏற்படுத்தி, அதனைப் பலவீனப்படுத்துவதற்கு முன்னராக போர்நிறுத்தம் செய்தால்

ஜெயவர்த்தனா அரசை வழிக்குக் கொண்டு வருவது சிரமம் என்பது பிரபாகரன் கருத்து. ஆகவே, ரஜீவ் காந்தியின் புதிய இராஜதந்திர மத்தியஸ்துவ அணுமுறை மூலமாக தமிழரின் இனப் பிரச்சினைக்கு நியாயமான, நிரந்தரமான திர்வு கிட்டப் போவதில்லை என எண்ணினார் பிரபாகரன். அத்துடன் ஜெயவர்த்தனாவின் வஞ்சகமான உள்நோக்கத்தை ரஜீவ் காந்தி சரியாக எடைபோடத் தவறிவிட்டார் என்பதும் பிரபாகரனின் கருத்து.

திரு. சக்சேனாவைச் சந்தித்ததை அடுத்து ஒரு சில நாட்களில், இந்தியாவின் உள்நாட்டுப் புலனாய்வுத் துறையின் அதிபரான திரு. எம்.கே.நாராயணனை பிரபாகரனும் நானும் சந்தித்தோம். இந்தச் சந்திப்பு சென்னைக்கு வெளியே திருப்பதியிலுள்ள ஒரு இரகசிய இடத்தில் நிகழ்ந்தது. சக்சேனாவுக்கு முற்றிலும் முரணான வித்தியாசமான ஆளுமையைக் கொண்டவர் நாராயணன். அன்பும், பண்பும், மனம் திறந்து பழகும் நல்லியல்பும் கொண்ட உத்தமமான மனிதர். எமது கருத்துக்களைக் கேட்டறிந்து கொள்வதில் மிகவும் ஆர்வம் காட்டினார். ஒளிவுமறைவின்றி வெளிப்படையாகப் பேசுமாறும் எம்மை வேண்டினார். முதலில் அவரது கருத்துக்களைக் கேட்டறிய நாம் விரும்பினோம். அயல் நாடுகளுடன் நல்லுறவை வளர்த்துக் கொள்ளும் நோக்குடன் ரஜீவ் காந்தியின் நிர்வாக பீடம் புதிய உபாயங்களையும் வித்தியாசமான அணுகுமுறைகளையும் கையாள விரும்புகிறது என்றார் நாராயணன். தேசிய இன முரண்பாடுகளையும் நெருக்கடிகளையும் தீர்த்து வைப்பதிலும் புதிய நடைமுறைகளை ரஜீவ் அரசு செயற்படுத்தத் திட்டமிட்டுள்ளது என்றார். தென்னாசியாவை அரசியல் உறுதிவாய்ந்த, ஒரு சமாதானப் பிரதேசமாக உருவாக்குவதே புதிய இந்திய வெளியுறவுக் கொள்கையின் பிரதான நோக்கம் எனக் கூறிய அவர், இப் பிராந்தியத்திலிருந்து இந்தியாவுக்கு விரோதமான அந்நிய நாசகாரச் சக்திகள் அகற்றப்படுதல் அவசியம் என்றார். தென்னாசியாவின் பிராந்திய வல்லரசு என்ற ரீதியில் அயல்நாடுகளுடன் நல்லுறவை வளர்த்து, உறுதி நிலையும் அமைதியும் நிலவும் ஒரு புதிய அரசியல் ஒழுங்கைக் கட்டி எழுப்புவது இந்தியாவின் பெரும் பொறுப்பாகியுள்ளது. எனவே, இந்தத் தரிசனத்தின் அடிப்படையில், இலங்கையின் இனப் பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காணும் நோக்குடன் ஒரு

சமாதான வழிமுறையைத் தொடங்கி வைக்க ரஜீவ் அரசு விரும்புகிறது. தமிழ் மக்களின் உண்மையான அரசியல் அபிலாசைகளை நிறைவு செய்யும் ஒரு தீர்வை எட்டும் நோக்கில் இந்திய அரசு முன்னெடுக்கவிருக்கும் மத்தியஸ்த்துவ முயற்சிகளுக்கு தமிழ் அரசியல் சக்திகள், குறிப்பாக தமிழ் விடுதலை அமைப்புகள் ஒத்துழைப்பு வழங்க வேண்டும் என்றார் திரு. நாராயணன். இதனையடுத்து, இந்திய அரசின் புதிய அணுகுமுறை குறித்து எமது கருத்துக்களை அறிய விரும்பினார் அவர்.

தமிழீழ மக்கள் எதிர்கொண்ட அரச ஒடுக்குமுறையின் வரலாறு பற்றியும் அதன் நேரடி விளைவாகத் தோற்றமெடுத்த ஆயுதப் போராட்டத்தின் பின்னணி பற்றியும் பிரபாகரனும் நானும் திரு. நாராயணனுக்கு விரிவாக எடுத்துரைத்தோம். மகாத்மா காந்தியின் அகிம்சை வழிதழுவி, பல தசாப்தங்களாக மென்முறைப் போராட்டங்களை நிகழ்த்திய பின்னரே தமிழ் மக்கள், இன அழிவிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ள அரச வன்முறைக்கு எதிராக ஆயுதம் ஏந்தினர் என்ற போராட்ட வரலாற்றையும் நாம் எடுத்து விளக்கினோம். வன்முறைப் போராட்டத்தை தமிழ்ப் புலிகள் வழிபடவில்லை எனக் கூறிய பிரபாகரன், தமிழ் இனத்தையும் தமிழ் இனத்தின் அடையாளத்தையும் பேணிப் பாதுகாக்கும் இறுதி நடவடிக்கையாகவே ஆயுதப் போராட்ட வடிவத்தை நாம் தழுவிக் கொள்ள நேர்ந்தது என்றார். சமாதான வழிமூலமாக இந்திய அரசு ஒரு நியாயமான தீர்வைப் பெற்றுக்கொடுத்தால் தமிழ் மக்கள் என்றும் இந்தியாவுக்கு நன்றியுடையவர்களாக இருப்பார்கள் என்று கூறிய பிரபாகரன், மேலாண்மைவாதக் கருத்தியலில் மூழ்கிப் போய் கிடக்கும் சிங்கள அரசியற் தலைமை தமிழர்களுக்கு நீதி வழங்கப் போவதில்லை என்றார். ஜெயவர்த்தனாவின் கபட நோக்கத்தை பிரதமர் ரஜீவ் சரியாக எடைபோடத் தவறிவிட்டார் என்பதை நாம் எடுத்துக் கூறினோம். முதிர்ச்சியற்ற இளைஞரான ரஜீவ் காந்தியை நரிக்குணம் படைத்த ஜெயவர்த்தனா ஏமாற்றிவிடுவார் என்றும் இதனால் தமிழ் மக்களே பாரதூரமான விளைவுகளைச் சந்திக்க நேரிடும் என்றும் நாம் எச்சரித்தோம்.

நாம் கூறிய கருத்துக்களை எல்லாம் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்தார் திரு. நாராயணன். எமது சந்தேகங்களையும் அச்சங்களையும் தன்னால் புரிந்து கொள்ள

முடிகிறது எனக் கூறிய அவர், இறுதியில் சமாதானப் பேச்சுக்கு வழிகோலும் இந்தியாவின் சமரச முயற்சிக்கு எம்மை ஒத்துழைக்குமாறு வேண்டிக்கொண்டார்.

## ஈழத் தேசிய விடுதலை முன்னணி

இந்திய புலனாய்வுத் துறைகளின் தலைவர்கள், மற்றும் திரு. பார்த்தசாரதி ஆகியோர் ரஜீவ் அரசின் புதிய வெளியுறவுக் கொள்கை சம்பந்தமாக அளித்த விளக்கங்களிலிருந்து எமக்கு ஒரு உண்மை புலனாகியது. புதிய இந்திய நிர்வாகம் வெகு விரைவில் ஒரு போர் நிறுத்தத்திற்கும் பேச்சுவார்த்தைக்கும் ஒழுங்குகளைச் செய்யப் போகின்றது என்பது தெளிவாகியது. ஜெயவர்த்தனா நிச்சயமாகப் போர்நிறுத்தத்திற்கு இணங்குவார் என்பது எமக்குத் தெளிவாகத் தெரிந்தது. முதலாவதாக போர்நிறுத்தம் செய்து கொள்வது ஜெயவர்த்தனா அரசுக்குச் சாதகமானதாகவே அமையும். ஏனென்றால் தீவிரம் பெற்றுவந்த தமிழ்ப் போராளி அமைப்புகளின் கெரில்லாத் தாக்குதல்கள் நிறுத்தப்பட்டால் அரச ஆயுதப் படைகள் மீதான இராணுவ அழுத்தம் நீக்கப்படும். இரண்டாவதாக பேச்சுவார்த்தையின்போது சிங்கள அரசாங்கம் கடும்போக்கைக் கடைப்பிடித்து தமிழர்களுக்கு ஒரு நியாயமான தீர்வை வழங்க மறுக்கலாம். ஆகவே, ரஜீவ் காந்தியின் புதிய இராஜதந்திர அணுகுமுறை ஜெயவர்த்தனாவின் சூழ்ச்சிகரத் திட்டத்திற்குச் சாதகமாகவும் தமிழர்களின் அரசியல் நலன்களுக்குப் பாதகமாகவும் அமையப்பெறுமென நாம் கருதினோம். ரஜீவ் ஆட்சிப்பீடத்தின் புதிய இலங்கைக் கொள்கையானது, எதிர்காலத்தில், இந்திய அரசின் நலனுக்கும் ஈழத் தமிழரது சுதந்திர இயக்கத்தின் அபிலாசைக்கும் மத்தியில் ஒரு பகை முரண்பாட்டை ஏற்படுத்தலாமென நாம் அஞ்சினோம்.

இந்திய வெளியுறவுக் கொள்கை மாற்றத்தால் எழுந்த புதிய அரசியல் வளர்ச்சிப் போக்கு எமது விடுதலை இயக்கத்திற்கு ஒரு புதிய சவாலாக அமைந்தது. இந்தச் சவாலையும் அதிலிருந்து எழக்கூடிய அரசியல் ஆபத்துக்களையும் நாம் தனி அமைப்பாக, தனித்து நின்று எதிர்கொள்வது சாத்தியமற்றது என எனக்குத் தோன்றியது. தமிழ்ப் போராளி அமைப்புகள் ஒன்றிணைந்து, ஒன்றுபட்ட கூட்டுச் சக்தியாக இப் புதிய சவாலை

எதிர்கொள்ள வேண்டிய காலம் கனிந்து விட்டதாகவே நான் கருதினேன். தமிழ் விடுதலை அமைப்புகள் இணைந்த கூட்டு முன்னணி அமைக்கப்பட வேண்டிய ஒரு வரலாற்றுத் தேவை அப்பொழுது எழுந்தது. 1984ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில், ஈழத் தேசிய விடுதலை முன்னணி என்ற கட்டமைப்பில் ஏற்கனவே ரெலோ, ஈ.பி.ஆர்.எல்.எப், ஈரோஸ் போன்ற இயக்கங்கள் ஒன்றுசேர்ந்து இயங்கி வந்தன. இந்த ஈழத் தேசிய விடுதலை முன்னணியுடன் விடுதலைப் புலிகள் ஒன்றிணைந்து இயங்க வேண்டுமென நான் கருதினேன். இதற்குத் தலைவர் பிரபாகரனை இணங்க வைப்பது என்பது எனக்குப் பெரிய சவாலாக அமைந்தது.

ஜெயவர்த்தனா அரசின் சூழ்ச்சிகரமான கபட நோக்கங்களைப் புரிந்து கொள்ளாமல் சமாதானம், போர்நிறுத்தம், பேச்சுவார்த்தை என்ற ரீதியில் ரஜீவ் காந்தியின் புதிய ஆட்சிப்பீடம் அவசரப்பட்டு மேற்கொள்ளவிருக்கும் புதிய இராஜதந்திர அணுகுமுறை எமது விடுதலை அமைப்புக்குப் பல சிக்கல்களை உருவாக்கலாமெனப் பிரபாகரனுக்கு எடுத்து விளக்கினேன். தனி இயக்கமாகத் தனித்து நின்று செயற்பட்டால், புதிய சவால்களுக்கு முகம்கொடுக்க முடியாது ஓரம்கட்டப்படும் ஆபத்து எமது இயக்கத்திற்கு ஏற்படலாம் என்பதையும் அவருக்குச் சுட்டிக் காட்டினேன். ஒரு பொதுவான அரசியல்-இராணுவ இலட்சியத்தின் அடிப்படையில் தமிழ் விடுதலை அமைப்புகள் ஒன்று சேர்ந்து நின்றால் இந்தியக் கொள்கை மாற்றத்தால் எழக்கூடிய புதிய சவால்களைச் சமாளிப்பது இலகுவாக இருக்கும் என்பதையும் விளங்கப்படுத்தினேன். ஈழத் தேசிய விடுதலை முன்னணியுடன் நாம் கூட்டுச் சேர்ந்தால் தமிழரின் சுதந்திர இயக்கம் பலப்பட்டு, பாரிய சக்தியாக உருவகம்பெற்று, இந்திய இராஜதந்திர நெருக்குவாரங்களுக்கு முகம் கொடுக்க வல்ல கூட்டரணாக இயங்க முடியும் என்றும் விளக்கினேன். பல கலந்துரையாடல்களின் பின்னர் இறுதியாகப் பிரபாகரன் எனது யோசனைக்கு இணக்கம் தெரிவித்தார். பிரபாகரனின் அனுமதியைப் பெற்றுக் கொண்டதும் ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைவர்களைத் தனித் தனியே சந்தித்து எமது இயக்கத்தின் விருப்பத்தை அவர்களுக்குத் தெரியப்படுத்தினேன்.

ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைவர்களான திரு. பாலகுமார் (ஈரோஸ்), திரு. சிறீ சபாரெத்தினம் (ரெலோ),

திரு.பத்மநாபா (ஈ.பி.ஆர்.எல்.எவ்) ஆகியோரை எனக்கு ஏற்கனவே நன்கு தெரியும். அவர்களைத் தனித் தனியே சந்தித்து, ரஜீவ் அரசின் புதிய சமரச அணுகுமுறை பற்றியும், இந்திய-இலங்கை அரசுகளின் கூட்டிணைந்த அழுத்தங்களுக்கு முகம் கொடுப்பதாயின் ஒரு பொதுப்படையான கொள்கைத் திட்டத்தின் கீழ் தமிழ்ப் போராளி அமைப்புகள் ஒன்றிணைவதன் அவசியத்தையும் அவர்களுக்கு எடுத்து விளக்கினேன். ஈழத் தேசிய விடுதலை முன்னணியுடன் இணைந்து செயலாற்ற விடுதலைப் புலிகளின் தலைமை இணங்கியிருப்பதை அவர்களுக்குத் தெரியப்படுத்தியதுடன் சந்திரகாசனின் ஆதிக்கத்திலிருந்து அவர்கள் முற்றாக விடுபடவேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்தினேன். விடுதலைப் புலிகள் இயக்கத்துடன் இணைந்து செயற்படும் வாய்ப்புக் கிட்டியதை அறிந்து ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைவர்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார்கள். ஒரு பொதுவான கொள்கைத் திட்டத்தை வகுப்பது குறித்து விரிவான பேச்சுக்களை நடத்துவதற்கும் 'ஒற்றுமைப் பிரகடனத்தில்' கைச்சாத்திடுவதற்குமாகப் புலிகளின் தலைவர் பிரபாகரனைச் சந்தித்துக் கலந்துரையாட அவர்கள் விருப்பம் தெரிவித்தார்கள்.

1985ஆம் ஆண்டு ஏப்ரல் 10ஆம் நாள் சென்னை நகரிலுள்ள விடுதி ஒன்றில் ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைவர்களுக்கும் பிரபாகரனுக்கும் மத்தியிலான சந்திப்பு நிகழ்ந்தது. இச் சந்திப்பில் நான் பிரபாகரனுடன் கலந்து கொண்டேன். மாணவர் பேரவைப் போராட்ட காலத்திலிருந்தே ரெலோ தலைவர் சிறீ சபாரெத்தினத்தை பிரபாகரன் நன்கறிவார். ஈரோஸ் தலைவர் பாலகுமாரையும் பிரபாகரனுக்கு நன்கு தெரியும். சென்னை இந்திரா நகரில் அமைந்திருந்த விடுதலைப் புலிகளின் அரசியல் தலைமைச் செயலகத்திற்கு பல தடவைகள் வருகை தந்த பாலகுமார், பிரபாகரனையும் என்னையும் சந்தித்துப் பேசியிருக்கிறார். ஈ.பி.ஆர்.எல்.எவ் தலைவர் பத்மநாபாவை அன்றுதான் முதற்தடவையாகப் பிரபாகரன் சந்தித்தார்.

கூட்டத்தில் பரஸ்பர நல்லுறவும் நல்லெண்ணமும் நிலவியது. கூட்டான செயற்பாட்டுத் திட்டம் ஒன்றை வகுப்பதன் அவசியம் குறித்து நான்கு தலைவர்கள் மத்தியிலும் கருத்தொற்றுமை நிலவியது. தமிழீழ மக்களின் சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில், தமிழர் தாயகத்தின்

சுதந்திரத்திற்காகப் போராடுவது என்ற பொது அரசியல் இலட்சியத்தை நான்கு அமைப்புகளும் வரித்துக் கொண்டன. கூட்டு இராணுவத் திட்டமானது, கூட்டுறவான நடவடிக்கையின் அடிப்படையில் படிப்படியாகக் காலப் போக்கில் பரிணாமம் பெறவேண்டும் எனப் பிரபாகரன் விளக்கிக் கூறினார். அதுவரை காலமும் தனிப்பட்ட முறையில் ஒவ்வொரு அமைப்பும் சிங்கள ஆயுதப் படைகளுக்கு எதிராகத் தாக்குதல்களை நிகழ்த்த வேண்டும் எனவும் முடிவாகியது. சமாதானப் பேச்சுவார்த்தை முயற்சியை நோக்கி இந்திய இராஜதந்திர நகர்வுகள் மேற்கொள்ளப்படவிருப்பதால், நான்கு அமைப்புகளின் தலைவர்களும் அடிக்கடி சந்தித்து அரசியல் சூழ்நிலை வளர்ச்சிப் போக்குக் குறித்து கலந்துரையாடுவதெனவும் தீர்மானிக்கப்பட்டது. இறுதியாக, தமிழர் தேசத்தின் அரசியல் சுதந்திரத்திற்காக ஒன்றிணைந்து போராடுவதென உறுதிப் பிரமாணம் செய்து கூட்டு மகஜர் ஒன்றில் நான்கு தலைவர்களும் கைச்சாத்திட்டனர்.

ஈழத் தேசிய விடுதலை முன்னணியுடன் இணைந்து செயற்பட தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் முடிவு எடுத்த அதே நாளிலிருந்து தமிழீழ தேசத்தில் வன்முறைத் தாக்குதல்கள் காட்டுத் தீ போலப் பரவின. 1985, ஏப்ரல் 10ஆம் நாள் இரவு 10 மணியளவில் யாழ்ப்பாணக் கோட்டை இராணுவ முகாமிற்குச் சமீபமாக அமைந்திருந்த காவல்துறைத் தலைமைச் செயலகம் விடுதலைப் புலிக் கெரில்லா வீரர்களின் பாரிய தாக்குதலுக்கு இலக்காகியது. அவ்வேளை யாழ்ப்பாண மாவட்டத் தளபதியாகப் பொறுப்பேற்றிருந்த கேணல் கிட்டு, இத் தாக்குதலுக்குத் தலைமை தாங்கினார். காவல்நிலையம் முன்பாக கேந்திர முனைகளில் வியூகம் அமைத்து, நிலையெடுத்த புலி வீரர்கள் மோட்டார்கள் ரொக்கட் ஏவுகணைகளால் காவல்துறைக் கட்டிடம் மீது உக்கிரமான தாக்குதல்களை நிகழ்த்தினார்கள். புலிகளின் குண்டு மழைக்கு நின்றுபிடிக்க முடியாத காவல்துறையினர், இறந்தவர்களையும் காயமடைந்தவர்களையும் விட்டுவிட்டு அருகாமையிலுள்ள கோட்டை இராணுவ முகாமுக்கு ஓடிச் சென்று அங்கு தஞ்சம் புகுந்தனர். கோட்டை முகாமிலிருந்து சண்டை நிகழ்ந்த இடத்திற்கு விரைந்து வந்த இராணுவப் படையணி மீது புலி வீரர்கள் தாக்குதலைத் தொடுத்தனர். புலிகளின் உக்கிர தாக்குதலைச் சமாளிக்க முடியாத இராணுவத்தினரும் சிதறியோடிக் கோட்டைக்குள்

பதுங்கினர். காவல்துறைத் தலைமைச் செயலகம், உதவிப் பொலிஸ் மாஅதிபரின் காரியாலயம் உட்பட பல்கூட்டுக் காவல்துறைக் கட்டிடங்கள் முற்றாகத் தகர்க்கப்பட்டன. பெருந்தொகையான ஆயுத தளபாடங்களைக் கைப்பற்றிய பின்பு மறுநாட் காலை விடிவதற்குள் புலி வீரர்கள் அங்கிருந்து மறைந்தனர்.

யாழ்ப்பாணக் காவல்துறைத் தலைமைச் செயலகம் தாக்கி அழிக்கப்பட்டதைத் தொடர்ந்து ஈழத் தேசிய விடுதலை முன்னணியில் அங்கம் வகித்த விடுதலைப் புலிகள் இயக்கமும் ஏனைய அமைப்புகளும் தனித் தனியாக இராணுவ நிலைகள், காவல் நிலையங்கள், இராணுவ தொடர் வண்டிகள் போன்றன மீது கெரில்லாத் தாக்குதல்களை நிகழ்த்தி, சிங்கள ஆயுதப் படைகள் மீது பாரிய உயிர்ச்சேதத்தை விளைவித்தன. 1985 ஏப்ரல், மே காலப் பகுதியில் தமிழ்ப் போராளி அமைப்புகளின் வன்முறைத் தாக்குதல்கள் உச்ச கட்டத்தை அடைந்தன எனலாம். இக் கால கட்டத்தில் தலைவிரித்தாடிய வன்முறைத் தாக்குதல்களை ஒரு இந்திய எழுத்தாளர் கீழ்க் கண்டவாறு விபரித்திருக்கிறார்:

> "தமிழ்ப் பகுதிகளில் சுழற்சியாக, மாறி மாறிக் கட்டவிழ்ந்த வன்முறைச் சம்பவங்கள் திகலூட்டுவதாக இருந்தது. காற்றில் நடுங்கும் காட்டரசம் இலைபோல இலங்கை அதிர்ந்தது. ஈழத் தேசிய விடுதலை முன்னணியில் விடுதலைப் புலிகள் இயக்கம் இணைந்து கொண்டதை அடுத்து, கூட்டணிக்கு வெளியே நின்ற புளொட் உட்பட சகல தீவிரவாதப் போராளி அமைப்புகளும் புதிய உத்வேகம் பெற்றுச் செயற்படத் தொடங்கின. கொழும்பு அரசைப் பணியவைக்கும் செயற்திட்டம் ஒன்றை நடைமுறைப்படுத்துவது போன்று வடகிழக்கின் மூலைமுடுக்குகள் எங்கும் இவ்வமைப்புகள் சிறீலங்கா படைகளுக்கு எதிராகத் தாக்குதல்களைத் தீவிரப்படுத்தின."[10]

தமிழ் விடுதலை அமைப்புகளின் கெரில்லாப் போராட்டம் உக்கிரமடைந்து சிங்கள ஆயுத படைகளுக்கு பேரழிவை ஏற்படுத்தி வந்த அதேவேளை, இந்திய வெளியுறவுச் செயலர் திரு. ரொமேஸ் பண்டாரி கொழும்புக்கு அடிக்கடி வருகை தந்து

போர் நிறுத்தம், பேச்சுவார்த்தை பற்றி ஜெயவர்த்தனா அரசுடன் கலந்துரையாடல்களை நிகழ்த்தினார். தமிழர் தரப்பிலிருந்து அதிகரித்து வந்த இராணுவ நெருக்கத்திற்கு முகம் கொடுக்க முடியாது அங்கலாய்த்த ஜெயவர்த்தனா இந்தியாவின் யோசனைக்கு இணங்கினார். தமிழ்ப் போராளி அமைப்புகளுடன் பேசுவதற்கு இணங்கிய ஜெயவர்த்தனா அதற்கு ஒரு நிபந்தனையையும் விதித்தார். அதாவது, தமிழ் விடுதலைப் போராளி அமைப்புகளுக்கு வழங்கி வந்த சகல இராணுவ உதவிகளையும் இந்திய அரசு நிரந்தரமாக நிறுத்திவிட வேண்டும் என்றும், தமிழீழத் தனியரசுக் கோரிக்கையை கைவிடுமாறு தமிழ் அமைப்புகளை நிர்ப்பந்திக்க வேண்டும் என்றும் ஒரு கண்டிப்பான நிபந்தனையை விதித்தார். இந்த நிபந்தனையை நிறைவுசெய்வதாக இந்திய அரசு உறுதியளித்ததை அடுத்து போர்நிறுத்தம் செய்வதற்கு ஜெயவர்த்தனா இணங்கினார். போருக்கு ஓய்வு கொடுப்பதும் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்குமான நாட்களும் நிர்ணயிக்கப்பட்டன. தமிழ் விடுதலை இயக்கங்களுக்கும் சிறீலங்கா அரசுக்கும் மத்தியில் 1985 ஜுன் நடுப்பகுதியில் போர் நிறுத்தத்தைச் செயற்படுத்துவது என்றும் இந்திய அரசின் மத்தியஸ்துவத்தின் கீழ் மூன்றாம் நாடான இமாலய இராச்சியமான பூட்டானில் ஜுலை நடுப்பகுதியில் பேச்சுக்களைத் தொடங்குவது எனவும் முடிவு எடுக்கப்பட்டது.

ஜெயவர்த்தனாவின் கபட நோக்கம் குறித்து ஆழமான சந்தேகம் கொண்டிருந்த பிரபாகரனுக்கும் ஏனைய போராளி அமைப்புகளின் தலைவர்களுக்கும் திடீரெனப் போர்நிறுத்தம் செய்து கொள்வது சரியான அணுகுமுறையாகத் தென்படவில்லை. சிங்கள ஆயுதப் படைகள் மீதான இராணுவ அழுத்தத்தைத் திடீரென நிறுத்திக் கொள்வது அரச படைகளுக்கே அனுகூலமானதாக அமையுமெனப் பிரபாகரன் கருதினார். படிப்படியாகத் தீவிரமடைந்து விரிவாக்கம் கண்டுவந்த கெரில்லாப் போரை, அதன் கேந்திர நோக்கை அடைவதற்கு முன்பாக, அதாவது சிங்கள இராணுவ இயந்திரத்தை வலுவிழக்கச் செய்வதற்கு முன்னராக, போருக்கு ஓய்வு கொடுப்பது என்பது போரியல் ரீதியாகவும், அரசியல் ரீதியாகவும் சிங்கள அரசுக்கே சாதகமானதாக முடியுமெனப் பிரபாகரன் எண்ணினார். தமிழ்ப் போராளி அமைப்புகளின், குறிப்பாகப் பிரமாதமான போரியல் சாதனைகளைப் படைத்து வந்த

விடுதலைப் புலிகள் இயக்கத்தின் போராட்ட இலட்சியத்திற்கு இது பங்கம் விளைவிப்பதாக அமையுமெனவும் அவர் கருதினார். ஜூன் மாதம் ஆரம்பத்தில், றோ புலனாய்வுத்துறை உயர் அதிகாரியான திரு. சந்திரசேகரனை பிரபாகரனும் ஏனைய ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைவர்களும் சந்தித்தபோது அவர்கள் தமது அதிருப்தியையும் ஏமாற்றத்தையும் மனம் திறந்து வெளிப்படையாகத் தெரிவித்தனர். திடீரெனப் போருக்கு ஓய்வு கொடுத்தால், சிங்கள ஆயுதப் படைகள் தம்மைப் பலப்படுத்தி, தமது போரியல் சக்தியை வலுப்படுத்த வழிசமைத்துக் கொடுப்பதாக அமையுமெனவும், அதேவேளை, தமிழ் கெரில்லாப் படையணிகள் செயற்பாடின்றி ஊக்கமிழந்து மனத் தளர்வுக்கு ஆளாவார்கள் எனவும் சந்திரசேகரனுக்கு பிரபாகரன் எடுத்து விளக்கினார்.

பிரபாகரனதும் ஏனைய போராளித் தலைவர்களதும் கருத்துக்களை ஏற்றுக் கொள்ளும் மனநிலையில் சந்திரசேகரன் இருக்கவில்லை. சிங்கள ஆயுதப் படைகளுக்கு போதுமான உயிர்ச்சேதமும் பின்னடைவும் ஏற்பட்டுள்ளது என வாதித்த சந்திரசேகரன், மேற்கொண்டும் போர் அழிவுகள் ஏற்பட்டால் அரசு ஆட்டம் கண்டு தகர்ந்து விடும் என்றும் அத்தகைய நெருக்கடியான சூழ்நிலையை உருவாக்க இந்திய அரசு விரும்பவில்லை என்றும் விளக்கினார். போர்நிறுத்தத்திற்கும் பேச்சுக்கும் ஜெயவர்த்தனாவை இணங்க வைப்பதற்கு ரஜீவ் காந்தியும், ரொமேஸ் பண்டாரியும் மிகச் சிரமமான இராஜதந்திர முயற்சிகளை எடுக்க வேண்டியிருந்தது என்றும் சொன்னார். தமிழ் விடுதலைப் போராளி அமைப்புகளுடன் பேச்சுக்களை நடாத்த ஜெயவர்த்தனா இணங்கியமையானது தமிழ்ப் புரட்சிவாதிகளுக்கு கிட்டிய சட்டரீதியான அங்கீகாரம் என விளக்கிய சந்திரசேகரன், ஆயுதம் தரித்த விடுதலை இயக்கங்களைத் தமிழ் மக்களின் உண்மையான பிரதிநிதிகளாக ஏற்றுக் கொண்டே சிங்கள அரசு பேச வருகிறது எனக் குறிப்பிட்டார். பேச்சுக்கள் இடைநடுவே முறிந்து போனாலும் தமிழ் போராளி அமைப்புக்களை இந்திய அரசு கைவிடாது என உறுதியளித்த அவர், இந்தியாவின் வழிநடத்தலுக்கு அமையப் போர்நிறுத்தம் செய்து, பேச்சுக்களில் பங்குபற்றுமாறு வேண்டுகோள் விடுத்தார். இறுதியாக, மிகத் தயக்கத்துடன் பிரபாகரனும் ஏனைய அமைப்புகளின் தலைவர்களும் போர்நிறுத்தத்திற்கு இணங்கினர். சிறீலங்கா அரசாங்கத்திற்கும்

தமிழ் விடுதலை அமைப்புகளுக்கும் மத்தியிலான அதிகாரபூர்வமான போர்நிறுத்தம் 1985 ஜுன் மாதம் 18ஆம் நாள் அறிவிக்கப்பட்டது.

குறிப்பிட்ட கால அட்டவணையைக் கொண்ட நான்கு கட்டங்களாகப் போர்நிறுத்தம் அமையப் பெற்றது. ஒவ்வொரு கட்டத்திலும் சில நடைமுறைகளை இரு தரப்பினரும் பேண வேண்டும். இறுதிக் கட்டத்தில், போர் நெருக்கடி தணிந்து முழுமையான போர்நிறுத்தம் செயலுக்கு வரும். இந்த நான்கு கட்டப் போர்நிறுத்த உடன்பாட்டு விதிகள் குறித்துப் பிரபாகரன் திருப்தி கொள்ளவில்லை. சிங்கள ஆயுதப் படைகளினதும், ஆயுதம் தரித்த சிங்களக் குடியேற்றவாசிகளதும் வன்முறையிலிருந்து தமிழ்ப் பொதுமக்களுக்குப் போர்நிறுத்த உடன்பாட்டில் பாதுகாப்பு உத்தரவாதங்கள் அளிக்கப்படவில்லை. இது பிரபாகரனுக்கு அதிருப்தியை ஏற்படுத்தியது. தமிழரின் இனப் பிரச்சினை குறித்து, ஒரு உருப்படியான தீர்வுத் திட்டத்தை முன்வைக்குமாறு இலங்கை அரசை எமது இயக்கம் வற்புறுத்தவேண்டுமெனப் பிரபாகரன் விரும்பினார். ஈழத் தேசிய விடுதலை முன்னணியின் கூட்டுத் தலைமைவாயிலாக எமது கருத்துக்களை வெளியிடுவதே சாலச் சிறந்தது என நான் பிரபாகரனுக்கு ஆலோசனை வழங்கினேன். இதன்படி, போர்நிறுத்தம் நடைமுறைக்கு வந்த அன்றைய நாள் ஈழத் தேசிய விடுதலை முன்னணியின் அவசர கூட்டம் ஒன்றை ஒழுங்கு செய்தோம். இக் கூட்டத்தில், போர் நிறுத்தம், தீர்வுத் திட்டம் பற்றிய எமது இயக்கத்தின் கருத்துக்களை ஏனைய அமைப்புகளின் தலைவர்களுக்குத் தெரியப்படுத்தினோம். போர் நிறுத்த உடன்பாட்டில் பல குறைபாடுகள் உள்ளன என்பதை எல்லோரும் ஏற்றுக் கொண்டனர். பேச்சுக்களுக்கு அடிப்படையாக ஒரு உருப்படியான தீர்வுத் திட்டத்தை இலங்கை அரசு முன்வைக்க வேண்டுமென இந்தியா மூலம் கோருவது என்ற பிரபாகரனின் யோசனையை முன்னணித் தலைவர்கள் கருத்தொற்றுமையுடன் ஏற்றுக் கொண்டனர். இந்திய அரசுக்குக் கையளிக்கும் ஈழத் தேசிய விடுதலை முன்னணியின் மகஜரைத் தயாரிக்கும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. அந்த மகஜர் எழுதி முடிந்ததும் பிரபாகரனும் ஏனைய முன்னணித் தலைவர்களும் அதில் கைச்சாத்திட்டனர். பின்னர் அந்தக் கூட்டறிக்கை றோ புலனாய்வு அதிகாரிகள் மூலமாக புதுடில்லிக்கு அனுப்பி வைக்கப்பட்டது. இக் கூட்டறிக்கையில்

சில முக்கிய பந்திகள் வருமாறு:

"எமது விடுதலை அமைப்புகளைச் சேர்ந்த சுதந்திரப் போராளிகளுக்கும் சிறீலங்கா ஆயுதப் படைகளுக்கும் மத்தியில் பகை நடவடிக்கைகளை நிறுத்தும் நோக்குடன் இந்திய அரசினால் சமர்ப்பிக்கப்பட்ட யோசனைத் திட்டத்தை நாம் மிகவும் கவனமாகப் பரிசீலனை செய்தோம். இந்திய அரசின் மத்தியஸ்துவத்தையும் நல்லெண்ண சமரச முயற்சிகளையும் மனமார வரவேற்று, எமக்கு அளிக்கப்பட்ட உறுதிப்பாடுகளையும் உத்தரவாதங்களையும் ஏற்றுக் கொண்டு, ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு போர் நிறுத்தம் செய்வதென இம் மகஜரில் கைச்சாத்திட்ட நாம் கூட்டாக முடிவெடுத்துள்ளோம். எமது முடிவு ஒரு நல்லெண்ண சூழ்நிலையையும் இயல்பு நிலையையும் உருவாக்கிக் கொடுக்கும் என நம்புகிறோம். இந்தச் சமரசப் புறநிலையை ஏதுவாகக் கொண்டு சிறீலங்கா அரசாங்கம் ஒரு உருப்படியான தீர்வுத் திட்டத்தை முன்வைக்குமென எதிர்பார்க்கின்றோம். இத் தீர்வுத் திட்டம் எமக்கு ஏற்றுக் கொள்ளக்கூடியதாக அமைந்திருந்தால் தமிழர் தேசிய இனப் பிரச்சினைக்கு நிரந்தரமான அரசியற் தீர்வு காண்பது குறித்து பேச்சுக்களை ஆரம்பிக்கலாம்.

ஒரு குறிப்பிட்ட கால கட்டத்திற்கு போர்நிறுத்தம் செய்ய நாம் இணங்கியபோதும், போர்நிறுத்த உடன்பாட்டில் விதிக்கப்பட்ட கடப்பாடுகளும் நிபந்தனைகளும் எமக்கு அனுகூலமற்றவையாகவே உள்ளன. இவை குறித்து எமது கருத்துக்களையும் மாற்று யோசனைகளையும் இங்கு தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றோம்.

போர் நிறுத்தம் பிரகடனம் செய்யப்பட்டதை அடுத்து, அரசியற் தீர்வு குறித்து ஒரு விபரமான உருப்படியான திட்டத்தை சிறீலங்கா அரசாங்கம் முன்வைக்க வேண்டும் என்பதே எமது நிலைப்பாடாகும். இந்த அரசியல் தீர்வுத் திட்டம் எம்மால் ஏற்றுக்கொள்ள கூடியதாக அமைந்தால் மட்டுமே பேச்சுக்கள் ஆரம்பிக்கப்பட வேண்டும் என்பதை

திட்டவட்டமாக நாம் எடுத்துக் கூற விரும்புகின்றோம். தமிழரின் இனப் பிரச்சினைக்கு ஒரு நியாயமான தீர்வை வழங்க மறுத்து, காலம் காலமாக மாறி மாறி ஆட்சிப்பீடம் ஏறிய சிங்கள அரசுகள், தமிழ் மக்களை ஏமாற்றி இழைத்த நம்பிக்கைத் துரோகத்தின் கசப்பான வரலாற்று அனுபவத்தின் அடிப்படையிலேயே நாம் இந்த நிலைப்பாட்டை எடுத்துள்ளோம். அத்துடன் சிங்கள அரசுகள் தமிழ்த் தலைவர்களோடு செய்துகொண்ட உடன்பாடுகள் ஒப்பந்தங்களை நிறைவுசெய்யாது முறித்துக் கொண்டமையும் உலகறிந்த உண்மை. அது மட்டுமன்றி, தமிழர் பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காண்பதைத் தட்டிக் கழித்து இழுத்தடிக்கும் ஒரு மோசமான நடைமுறையையும் சிங்கள அரசு கடைப்பிடித்து வருகிறது என்பதையும் நாம் இங்கு சுட்டிக்காட்ட விரும்புகின்றோம். ஆகவே, இந்த ஏமாற்று அரசியல் வித்தையில் நாம் பலிக்கடாவாக விரும்பவில்லை. அதனால்தான், பேச்சுக்களில் பங்குகொள்வது பற்றி நாம் தீர்மானிப்பதற்கு முன்பாக ஒரு உருப்படியான தீர்வுத் திட்டத்தை சிங்கள அரசு முதலில் எமது பரிசீலனைக்கு சமர்ப்பிக்க வேண்டுமென நாம் கோருகின்றோம்."[11]

ஈழத் தேசிய விடுதலை முன்னணியால் சமர்ப்பிக்கப்பட்ட மகஜர் புதுடில்லியில் சாதகமான வரவேற்பைப் பெறவில்லை. டில்லியிருந்து என்னுடன் தொலைபேசியில் தொடர்புகொண்ட திரு. சந்திரசேகரன் எமது நிலைப்பாட்டில் இந்திய அரசு அதிருப்தி கொண்டிருப்பதாகத் தெரிவித்தார். பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு சிறீலங்கா அரசு மீது ஈழத் தேசிய விடுதலை முன்னணி ஏற்றுக் கொள்ள முடியாத நிபந்தனையை விதித்துள்ளதாக இந்திய வெளியுறவு அமைச்சு கருதுவதாக அவர் விளக்கினார். எமது மகஜர் குறித்து இந்திய அரசு கொண்டுள்ள நிலைப்பாட்டை நான் பிரபாகரனிடம் எடுத்துக் கூறினேன். இப் பிரச்சினை குறித்து முன்னணித் தலைவர்கள் அவசர சந்திப்பு ஒன்றை நிகழ்த்திக் கலந்துரையாடினர். பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு முன்னராக இலங்கை அரசு ஒரு உருப்படியான தீர்வுத் திட்டத்தை முன்வைக்க வேண்டும் என்ற

எமது நிலைப்பாட்டில் நாம் உறுதி பூண்டு நிற்கவேண்டும் என பிரபாகரனும் ஏனைய கூட்டணித் தலைவர்களும் ஏகமனதாக முடிவெடுத்தனர். முன்னணித் தலைவர்களின் முடிவை திரு. சந்திரசேகரன் மூலமாக நான் டில்லிக்குத் தெரியப்படுத்தினேன். எமது விடாப்பிடியான நிலைப்பாடு குறித்து ஆத்திரமடைந்த சந்திரசேகரன், பிரபாகரனையும் ஏனைய கூட்டணித் தலைவர்களையும் விரைவில் இந்திய அரசு டில்லிக்கு அழைத்துத் தனது அதிருப்தியை நேரில் தெரியப்படுத்தும் என எச்சரித்தார். ரஜீவ் அரசுக்கும் தமிழ் விடுதலை அமைப்புகளுக்கும் மத்தியில் நேரடியான முரண்பாடும் மோதலும் ஏற்படுவது தவிர்க்க முடியாதது போல எனக்குத் தென்பட்டது.

1985ம் ஆண்டு ஜுலை மாதம் 3ஆம் நாள், பிரபாகரனும் நானும், ஏனைய கூட்டணி அமைப்புகளின் தலைவர்களும் அவர்களது அரசியல் உதவியாளர்களும் இந்திய இராணுவ விமானம் மூலம் புது டில்லிக்கு அழைத்துச் செல்லப்பட்டு, தலைநகரின் மையத்திலுள்ள ஐந்து நட்சத்திர விடுதி ஒன்றில் தங்க வைக்கப்பட்டோம். நாம் அங்கு சென்றதும் றோ புலனாய்வு அதிகாரிகளும் இந்திய வெளியுறவு அமைச்சைச் சேர்ந்த உயரதிகாரிகளும் மாறி மாறி எம்மைச் சந்தித்து இலங்கையின் இனப் பிரச்சினை பற்றி இந்தியாவின் நிலைப்பாடு குறித்து விளக்கவுரைகள் அளித்தார்கள். தமிழ்ப் புரட்சி அமைப்புகளுடன் பேச்சுக்களை நடத்துவதற்கு ஜெயவர்த்தனாவை இணங்க வைப்பதற்கு ரொமேஸ் பண்டாரி மேற்கொண்ட இராஜதந்திர சாணக்கியத்தைப் பாராட்டினார்கள். இந்தியாவுக்கு இது ஒரு இராஜதந்திர வெற்றி எனக் குறிப்பிட்ட அவர்கள், இதன் மூலம் தமிழரின் ஆயுத எதிர்ப்பு இயக்கத்திற்கு சர்வதேச அங்கீகாரமும் கிடைக்கப்பெற்றுள்ளதாக கூறினார்கள். ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைவர்கள் சிறீலங்கா அரசுடன் பேச்சுக்களை நடத்துவதற்கு எவ்வித நிபந்தனையும் விதிக்கக்கூடாது என்பதே இந்த விளக்கவுரைகளின் அடிநாதமான வேண்டுகோளாக அமைந்தது. இந்திய அரச அதிகாரிகளின் அறிவுரைகளும் அழுத்தங்களுக்கும் பிரபாகரனும் சரி, ஏனைய அமைப்புகளின் தலைவர்களும் சரி, பணிந்து இணங்கிப் போகவில்லை. எல்லோருமே ஒருமித்த கருத்துடன் தமது நிலைப்பாட்டில் உறுதிபூண்டு நின்றனர். முடிவின்றி இழுபட்டுக் கொண்டிருந்த இப் பிரச்சினை இறுதியாக றோ புலனாய்வுத்துறை அதிபர் திரு. சக்சேனாவிடம் கையளிக்கப்பட்டது.

புதுடில்லியிலுள்ள தனது தலைமைச் செயலகத்திற்கு எங்கள் அனைவரையும் அழைத்தார் திரு. சக்சேனா. பல மாடிகளைக் கொண்ட வானளாவிய பிரமாண்டமான கட்டிடம். கட்டிட வாசலிலே ஆயுதம் தரித்த கரும்பூனை அதிரடிப் படை வீரர்கள் எம்மைச் சூழ்ந்து கொண்டு, உயர்மாடியிலுள்ள சக்சேனாவின் அறைக்கு அழைத்துச் சென்றார்கள். கடுமையான முகத்துடன் முறைப்பான பார்வையுடன் எமக்காகக் காத்திருந்தார் றோ அதிபர். அவரது அகன்ற மேசைக்கு முன்னால் இருந்த நாற்காலிகளில் பிரபாகரனும் நானும் மற்றும் ரெலோ தலைவர் சிறீ சபாரெத்தினம், ஈரோஸ் தலைவர் பாலகுமார், ஈ.பி.ஆர்.எல்.எவ் தலைவர் பத்மநாபா ஆகியோர் அமர்ந்து கொண்டோம். முதலில், தனது உரையை ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்துவிட்டு தனது வழக்கமான பாணியில், கனத்த குரலில் நேரடியாகவே விடயத்திற்கு வந்தார். தமிழரின் இனப் பிரச்சினையைத் தீர்க்க இந்திய அரசு மேற்கொண்டு வரும் நேர்மையான முயற்சிக்குத் தமிழ்த் தீவிரவாதத் தலைவர்கள் கட்டாயமாக ஒத்துழைப்பு வழங்க வேண்டும் என வலியுறுத்திக் கூறிய திரு. சக்சேனா, ஒத்துழைக்க மறுக்கும் பட்சத்தில் பாரதூரமான விளைவுகளைச் சந்திக்க நேரிடும் என எச்சரித்தார். "உங்களது விட்டுக் கொடாத கடும்போக்கைப் புதிய இந்திய அரசு பொறுத்துக் கொள்ளாது. உங்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் பாதுகாப்பான புகலிடச் சலுகைகளை மறுக்கவும் தயங்காது" என மிரட்டினார் சக்சேனா. "பூட்டான் தலைநகரமான திம்புவில், இன்னும் இரு வாரங்களில் பேச்சுக்கள் ஆரம்பமாக உள்ளன. இப் பேச்சுக்கள் நிபந்தனையற்ற முறையில் நடைபெறும். பேச்சுக்களில் பங்குபற்ற நீங்கள் மறுத்தால், இந்திய மண்ணிலும் இந்திய கடற்பரப்பிலும் நீங்கள் செயற்பட முடியாது போகும்." என்று கண்டிப்பான குரலில் கத்தினார். நான் வசனத்திற்கு வசனம் தமிழில் மொழிபெயர்த்துக் கொண்டிருந்தேன். ஆத்திரத்தை விழுங்கியபடி துயரம் தோய்ந்த முகங்களுடன் சக்சேனாவை முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள் போராளி அமைப்புகளின் தலைவர்கள். ஏதோ சொல்வதற்காக வாயசைத்தார் பத்மநாபா. ஆனால் சப்தம் வெளிவராது தொண்டைக்குள் மடிந்துபோயிற்று. மௌனம் சாதித்தபடி ஆழமான சிந்தனையில் ஆழ்ந்து போயிருந்தார் பிரபாகரன். கெரில்லாத் தலைவர்களின் கொதிப்புணர்வைப்

புரிந்து கொண்ட சக்சேனா, "நான் கூறியவற்றை நீங்கள் ஆழமாகப் பரிசீலனை செய்து, ஆக்கபூர்வமான பதிலை நாளைய தினம் கூறினால் போதும்" என்றார். அத்துடன் கூட்டம் முடிவுக்கு வந்தது.

நாம் அனைவரும் விடுதிக்கு திரும்பிய உடனேயே ஒரு அவசரக் கலந்தரையாடலை நிகழ்த்தினோம். தனது கருத்தை ஒளிவுமறைவின்றி வெளிப்படையாகத் தெரிவித்தார் பிரபாகரன். "பேச்சுக்களில் பங்குகொள்ள மறுத்து வீணாக இந்திய அரசைப் பகைத்துக் கொள்வதில் அர்த்தமில்லை. பேச்சுக்களில் பங்குகொண்டு, எமது போராட்ட இலட்சியத்தைக் கைவிடாது எமது அரசியல் கொள்கையை எதிரியிடம் எடுத்துச் சொல்வதில் என்ன தவறு இருக்கிறது. என்னைப் பொறுத்தவரை இந்திய அரசைப் பகைக்காமல் ஈழத் தேசிய விடுதலை முன்னணி பேச்சுக்களில் கலந்து கொள்வதுதான் சிறந்த வழி" என்றார் பிரபாகரன். அவரது நிலைப்பாட்டையே நானும் ஆதரித்தேன். ஏனைய அமைப்புகளின் தலைவர்களும் புலிகளின் தலைவரது கருத்தை ஏகமனதாக ஆதரித்தனர். நிபந்தனையற்ற முறையில் சமாதானப் பேச்சுக்களில் பங்குபற்றுவது என்ற ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைமையின் முடிவு மறுநாள் இந்திய அரசுக்கு தெரியப்படுத்தப்பட்டது.

## திம்புப் பேச்சுக்கள்

பூட்டான் தலைநகரான திம்புவில் நிகழ்ந்த சமாதானப் பேச்சுக்கள் இரண்டு சுற்றுகளாக அமைந்தன. முதலாவது சுற்றுப் பேச்சு 1985 ஜுலை 8ஆம் நாள் தொடங்கி ஆறு நாட்களாக நடைபெற்று ஜுலை 13இல் முடிவுற்றது. சிறீலங்கா அரசாங்கத்தின் பிரதிநிதிகள் குழுவிற்கு அரச அதிபர் ஜெயவர்த்தனாவின் சகோதரரும் வழக்கறிஞருமான திரு. எச்.டபிள்யூ ஜெயவர்த்தனா தலைமை வகித்தார். ஏனைய பிரதிநிதிகள் சட்டத்தரணிகளாகவும் அரச நிர்வாகிகளாகவும் அமையப் பெற்றனர்.

சிறீலங்கா அரசின் பேச்சுக் குழுவில் அமைச்சர் மட்டத்திலான அரசியல்வாதிகள் அங்கம் வகிக்கவில்லை என்பதால், விடுதலைப் புலிகள் இயக்கமும் ஈழத் தேசிய விடுதலை முன்னணியின் ஏனைய அமைப்புகளும் தமது மூத்த

உறுப்பினர்களை மட்டும் திம்புப் பேச்சுக்களுக்கு அனுப்பி வைத்தனர். இதன்படி முதலாவது சுற்றுப் பேச்சில் விடுதலைப் புலிகள் சார்பில் லோரன்ஸ் திலகரும், சிவகுமாரனும் (அன்ரன்), பின்னர் நிகழ்ந்த இரண்டாவது சுற்றுப் பேச்சில் யோகரெத்தினம் யோகியும் அவர்களுடன் கலந்து கொண்டார். ஈ.பி.ஆர்.எல்.எவ் அமைப்பின் சார்பில் வரதராஜப் பெருமாளும், கேதீஸ்வரன் லோகநாதனும் கலந்து கொண்டனர். ரெலோ அமைப்பின் சார்பில் முதற் சுற்றுப்பேச்சில் சார்ள்சும், பொபியும் கலந்து கொண்டனர். இரண்டாவது சுற்றுப் பேச்சில் இவர்களுடன் நடேசன் சத்தியேந்திரா பங்குபற்றினார். ஈரோஸ் அமைப்பின் சார்பில் மூத்த நிறுவன உறுப்பினர்களான இளையதம்பி இரத்தினசபாபதியும், சங்கர் ராஜியும் பங்குபற்றினார்கள். சித்தார்த்தனும், வாசுதேவாவும் புளொட் அமைப்பைப் பிரதிநிதப்படுத்தினர். எல்லோரிலிருந்தும் மாறுபட்டதாக தமிழர் ஐக்கிய விடுதலைக் கூட்டணியை அதன் மூத்த தலைவர்களான அமிர்தலிங்கம், சிவசிதம்பரம், சம்பந்தன் ஆகியோர் பிரதிநிதப்படுத்தினர்.

திம்பு பேச்சுக்களின் நிகழ்ச்சி நிரலைத் தயாரித்தல், விவாதத்தை முன்னெடுத்தல், தீர்மானங்களை எடுத்தல் போன்ற விடயங்களில் தமிழ் விடுதலை அமைப்புகளின் முக்கிய கூட்டணியாக ஈழத் தேசிய விடுதலை முன்னணி முக்கிய பாத்திரத்தை வகித்தது. ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைவர்களும், பேச்சுக்களில் கலந்துகொள்ளும் அவர்களது பிரதிநிதிகளும் தொடர்புகொண்டு கலந்துரையாடுவதற்கு வாய்ப்பு அளிக்கும் வகையில் திம்புக்கும் சென்னைக்குமான ஒரு நேரடி தொலைத் தொடர்பு வசதியை (Hot Line) சென்னையிலுள்ள கோடம்பாக்கத்தில் இந்திய அரசு ஏற்படுத்திக் கொடுத்தது. விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளுடன் தொடர்புகொண்டு பேச்சு விவகாரத்தில் அவர்களுக்கு ஆலோசனை வழங்கி அவர்களை வழிநடத்தும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்து விட்டு, சேலத்திலுள்ள எமது இராணுவப் பயிற்சி முகாமிற்குச் சென்றுவிட்டார் பிரபாகரன். ஜெயவர்த்தனா ஆட்சிபீடத்தின் இனவாதப் போக்கை செம்மையாக எடைபோட்டிருந்த பிரபாகரனுக்கு பேச்சுமூலம் உருப்படியான பலாபலன் ஏதும் கிட்டுமென நம்பிக்கை இருக்கவில்லை. இந்திய அரசைப் பகைக்காமல், இந்தியா அரங்கேற்றும் அரசியல் நாடகத்தில் நடித்தால் போதும் என்று அவர் கருதினார். ஆயினும் என்மீது

சுமத்தப்பட்ட பொறுப்பைச் சரியான முறையில் செயற்படுத்த வேண்டும் என்ற நோக்கில், பேச்சுக்கள் ஆரம்பமாகி முடிவுபெறும் காலம்வரை, நாள் தோறும் கோடம்பாக்கத்திலுள்ள தொலைபேசி மையத்திற்கு நான் சென்று வந்தேன். ஏனைய ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைவர்களும் தினம்தோறும் அங்கு வருவார்கள். திம்புவில் நடைபெற்ற அரசியல் நாடகத்தின் சகல அம்சங்களையும் எமது பிரதிநிதிகள் மூலமாக அறிந்து அவர்களை வழிநடத்தினோம்.

பூட்டான் அரசாங்கத்தின் ஆதரவில் பேச்சுக்கள் நடைபெற்றன. பூட்டான் வெளியுறவு அமைச்சர் லியன்போ சேரிங் அதிகாரபூர்வமாகப் பேச்சுக்களை ஆரம்பித்து வைத்தார். இந்தியா மத்தியஸ்துவம் வகித்தது. திரு. சந்திரசேகரன் உட்பட இந்திய உயர் அதிகாரிகள் நடுவர்களாகப் பணிபுரிந்தனர். ஆனால் அவர்கள் பேச்சுக்களில் பங்குபற்றவில்லை. சமாதானப் பேச்சு ஆரம்பமாகிய சொற்ப நேரத்திற்குள் அது ஒரு சொற் போராக வடிவம் எடுத்தது. தமிழ்ப் போராளி அமைப்புகளின் சட்டரீதியான தகைமையை கேள்விக் குறிக்கு ஆளாக்கினார்கள் அரச பிரதிநிதிகள். இந்த அமைப்புகளின் உறுப்பினர்களை தமிழ் மக்களின் பிரதிநிதிகளாக ஏற்றுக் கொள்ள முடியாது என வாதிட்டார்கள். இதனையடுத்து விவாதம் சூடு பிடித்தது. இரு தரப்பிலிருந்தும் கசப்பான, காரசாரமாக வார்த்தைகள் பரிமாறப்பட்டன. அரச தரப்பின் பண்பற்ற அநாகரீகப் போக்கினால் ஆத்திரமடைந்த தமிழ்ப் பிரதிநிதிகள் ஒரு முடிவு எடுத்தனர். அதாவது, தமிழர் தரப்பிலிருந்து சமர்ப்பிக்கப்படும் ஆவணங்களிலும் அறிக்கைகளிலும் 'தமிழ் மக்களின் பிரதிநிதிகள்' என்றே சகல தமிழ் அமைப்புகளும் கைச்சாத்திடுவதெனக் கூட்டாக தீர்மானம் எடுத்தனர். அரச பிரதிநிதிகள் வெளிப்படுத்திய பகையுணர்வு தமிழ்ப் பிரதிநிதிகள் மத்தியில் நல்லுறவையும் ஒருமைப்பாட்டையும் ஏற்படுத்தியது. திம்பு பேச்சுக்கள் மூலம் ஏற்பட்ட ஒரு ஆக்கபூர்வமான விளைவு என்றால் அது தமிழர் தரப்பு ஒருமைப்பாடுதான்.

சிங்கள அரச பேச்சுக் குழுவின் தலைவர் ஹெக்டர் ஜெயவர்த்தனா ஒரு தீர்வுத் திட்ட யோசனையை முன்வைத்தார். சகல கட்சி மாநாட்டின்போது தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியால் ஏற்கனவே நிராகரிக்கப்பட்ட பழைய, செயலிழந்து செத்துப் போன மாவட்ட அபிவிருத்திச் சபைத் திட்டத்தை அவர் சமர்ப்பித்தார். இதிலிருந்து ஒரு உண்மை தெளிவாகியது.

சமாதானப் பேச்சு மூலம் தமிழரின் இனப் பிரச்சினைக்கு ஒரு நியாயமான தீர்வுகாணும் நோக்கம் எதுவும் ஜெயவர்த்தனா அரசுக்கு இருக்கவில்லை என்பது தெட்டத் தெளிவாகியது. தமிழ்ப் பிரதிநிதிகள் எடுத்த எடுப்பில் அரச தரப்பு யோசனையை நிராகரித்தது மட்டுமல்லாது அதுபற்றி விவாதிக்கவும் மறுத்துவிட்டனர். முந்திய உடன்பாடுகளையும் ஒப்பந்தங்களையும் முறித்துக் கொண்ட நம்பிக்கைத் துரோக வரலாற்றை எடுத்துக் காட்டிய தமிழ்ப் பிரதிநிதிகள், இம் முறையாவது தமிழர்கள் கருத்தில் எடுக்கக்கூடிய, உருப்படியான, நியாயமான தீர்வுத் திட்டம் ஒன்றை முன்வைப்பது சிங்கள அரசின் தட்டிக் கழிக்க முடியாத கடப்பாடு என வாதிட்டனர். தமிழரின் தேசிய இனப் பிரச்சினையின் அடிப்படையான மூலக் கோட்பாடுகளை மட்டும் விதந்துரைப்பதாகச் சுட்டிக் காட்டிய தமிழ்ப் பிரதிநிதிகள், இக் கோட்பாடுகளை அடிப்படையாக வைத்து அரசாங்கம் ஒரு விரிவான உருப்படியான தீர்வுத் திட்டத்தை வகுத்துத் தரவேண்டும் என வாதாடினார்கள். தமிழர் தரப்பால் ஏகமனதாக முன்வைக்கப்பட்ட நான்கு அடிப்படைக் கோட்பாடுகள் வருமாறு.

1) தமிழ் மக்கள் ஒரு தனித்துவமான தேசிய இனக்கட்டமைப்பைக் கொண்டவர்கள்.

2) தமிழ் மக்களுக்கு இனம் காணக்கூடிய தனித்துவமான தாயகம் உண்டு என்பதை ஏற்றுக் கொள்ளுதல்.

3) தமிழர் தேசத்திற்கு எவராலும் பறித்தெடுக்க முடியாத சுயநிர்ணய உரிமை உண்டு என்பதை ஏற்றுக் கொள்ளுதல்.

4) சகல தமிழ் மக்களுக்கும் முழுமையான குடியுரிமையும் மற்றும் அடிப்படையான உரிமைகளும் உண்டு என்பதை ஏற்றுக் கொள்ளுதல்.

முதற் சுற்றுப் பேச்சு முடிவடைந்த நாள் அன்று (ஜூலை 13) தமிழ்ப் பிரதிநிதிகள் கூட்டாக விடுத்த திம்புப் பிரகடனத்தில் தெரிவிக்கப்பட்டிருப்பதாவது:

“இந்த மூலக் கோட்பாடுகளைப் பேணிப் பாதுகாப்பதற்காக வெவ்வேறு நாடுகள் வெவ்வேறான

அரசாட்சி முறைமைகளை வடிவமைத்துள்ளன. எமது மக்களின் அடிப்படை உரிமைகள் மறுக்கப்பட்டதால் நாம் சுதந்திரமான தமிழரசுக் கோரிக்கையை முன்வைத்து, அதற்காகப் போராடி வந்துள்ளோம். தமிழரின் பிரச்சினைக்கு தீர்வாக சிறீலங்கா அரச பிரதிநிதிகளால் முன்வைக்கப்பட்ட யோசனைகள் முற்றாக ஏற்றுக் கொள்ள முடியாதவை. ஆதலால் நாம் அவற்றை நிராகரித்துள்ளோம்... எனினும் சமாதானத்தில் நாம் பற்றுறுதி கொண்டவர்கள் என்பதால் நாம் முன்மொழிந்த மூலக் கோட்பாடுகளின் அடிப்படையில் ஒரு தீர்வுத் திட்டத்தை சிறீலங்கா அரசாங்கம் முன்வைக்குமானால் அதனைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள நாம் தயாராக இருக்கிறோம்.''

1985 ஆகஸ்ட் 12ஆம் நாள் இரண்டாவது சுற்றுப் பேச்சு திம்புவில் ஆரம்பமானது. அரச பேச்சுக் குழுவின் தலைவர் ஹெக்டர் ஜெயவர்த்தனா தான் ஏற்கனவே தயாரித்துக் கொண்டு வந்த அறிக்கையை வாசித்தார். குடியுரிமைக் கோரிக்கையை தவிர்ந்த முதல் மூன்று திம்புக் கோட்பாடுகளை ஏற்றுக் கொள்ள முடியாதவை என நிராகரித்தார். குடியுரிமை சம்பந்தப்பட்ட கோட்பாட்டை அரசாங்கம் பரிசீலனைக்கு எடுக்கும் என்றார். தமிழர் தாயகக் கோட்பாட்டை நிராகரித்த அவர், தமிழ் மக்கள் சிறீலங்கா அடங்கிலும் வாழ்ந்து வருவதால் சிறீலங்காவே தமிழர், சிங்களவர் மற்றும் ஏனைய சமூகத்தவர்களதும் தாயகம் என வற்புறுத்தினார். தமிழ்த் தேசியக் கோட்பாட்டையும் அவர் ஏற்றுக் கொள்ள மறுத்தார். தமிழ் மக்களை ஒரு தேசிய இனமாகக் கொள்ள முடியாது என்றும் தமிழர்கள் ஒரு சிறுபான்மை இனக் குழுமம் என்றும் வாதிட்டார். அந்நிய குடியேற்ற ஆட்சியின் கீழுள்ள தேசங்களுக்கு மட்டுமே சுயநிர்ணய உரிமை உரித்தாகும் என விளக்கம் அளித்த அவர், ஒரு சுதந்திரமான இறையாண்மையுடைய அரச ஆட்சியின் கீழுள்ள சிறுபான்மைச் சமூகங்கள் சுயநிர்ணய உரிமை கோரமுடியாது என வலியுறுத்தினார். தனது விளக்க உரையின் முடிவில் ஹெக்டர் ஜெயவர்த்தனா குறிப்பிட்டதாவது:

''திம்பு பிரகடனத்தின் முதல் மூன்று கோட்பாடுகளையும், அவற்றிற்கு வழங்கப்பட்ட

சட்டரீதியான அர்த்தத்துடன் மேலெழுந்த வாரியாகப் பார்த்தால், அரசாங்கத்தால் அவற்றை முற்றாக ஏற்றுக் கொள்ளமுடியாது. சிறீலங்காவின் இறையாண்மைக்கும் பிரதேச ஒருமைப்பாட்டிற்கும் தீமை விளைவிக்கும் என்பதாலும், ஒன்றுபட்ட சிறீலங்காவுக்குப் பங்கம் ஏற்படுத்துவதுடன் இந் நாட்டில் வாழ்ந்து வரும் ஏனைய சமூகத்தவர்களின் நலன்களுக்கும் விரோதமாக அமையும் என்ற காரணத்தினால் இக் கோட்பாடுகள் நிராகரிக்கப்பட வேண்டியவையாகும்."

அரசாங்கப் பேச்சுக் குழுவின் விட்டுக்கொடாத கடும்போக்கைத் தமிழ்ப் பிரதிநிதிகள் வலுவாகக் கண்டித்தனர். திம்புக் கோட்பாடுகளை ஆதரித்து, தர்க்கரீதியான வாதங்களை முன்வைத்துப் பேசிய அவர்கள், தமிழ் மக்கள் தேசிய இனக் கட்டமைப்பைக் கொண்டவர்கள் என்பதையும், அவர்களுக்கு இனம் காணக்கூடிய, வரலாற்று ரீதியான தாயகப் பிரதேசம் உண்டு என்பதையும், எல்லாவற்றிலும் முக்கியமாக, தமிழ் மக்கள் சுயநிர்ணய உரிமைக்கு உரித்தானவர்கள் என்பதையும் வலியுறுத்தினார்கள். அவர்களது விளக்கவுரையிலிருந்து சில பகுதிகளை இங்கு தருகிறேன்:

"எமது மக்களின் உறுதியான அரசியற் போராட்டங்களிலிருந்து வரலாற்று ரீதியான படிநிலை வளர்ச்சி பெற்று வடிவம் எடுத்ததுதான் எமது சுயநிர்ணய உரிமைக்கான கோரிக்கை. ஒரு பொதுவான பாரம்பரியமும், பண்பாடும், ஒரு தனித்துவமான மொழியும், தாயக நிலமும் உடையவர்கள் என்பதால், ஈழத் தமிழர்கள் அல்லது தமிழீழ மக்கள் ஒரு தேசிய இன அமைப்பைக் கொண்டவர்களாக விளங்குகின்றனர். அத்தோடு, அவர்கள் அடிமைப்பட்ட மக்கள் என்பதால், அந்நிய ஆதிக்கத்திலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளும் உரிமை அவர்களுக்கு உண்டு. இதன் அடிப்படையில்தான் சர்வதேசச் சட்டத்தின் முக்கிய நியமமாக சுயநிர்ணய உரிமை இன்று அங்கீகாரம் பெற்றுள்ளது. இந்த சுயநிர்ணய உரிமையை ஆதாரமாகக் கொண்டுதான் எமது அரசியற் தகைமையை நாமே நிர்ணயிக்கும் உரிமை எமக்குண்டு. அதாவது

சிறீலங்கா அரசுடன் ஒன்று சேர்ந்து இணைந்து வாழ்வதா அல்லது பிரிந்து சென்று சுதந்திரமான தனியரசை நிறுவிக் கொள்வதா என்ற உரிமை எமக்குண்டு. இந்த நான்கு கோட்பாடுகளையும் பகிரங்கமாகப் பிரகடனம் செய்ததிலிருந்து, இக் கோட்பாடுகளின் அடிப்படையில் நாம் பேச்சுக்களை நடத்த விரும்பவில்லை எனக் கருதிவிடக் கூடாது...

நாம் பிரகடனம் செய்த மூலக் கோட்பாடுகளின் அடிப்படையில் எம்முடன் பேச்சுக்களை நடத்துவதற்கு சிறீலங்கா அரச பிரதிநிதிகள் தவறிவிட்டனர். பரஸ்பரம் ஆக்கபூர்வமான கருத்துக்களைப் பகிர்ந்து கொள்வோம் என சிறீலங்கா அரச பிரதிநிதிகள் ஆகஸ்ட் 12இல் விடுத்த அறிக்கையில் உறுதியளித்தபோதும் அவர்கள் அதைக் கடைப்பிடிக்கவில்லை. அதற்குப் பதிலாக 1985 ஆகஸ்ட் 16ஆம் நாள் அரச பிரதிநிதிகள் 'புதிய யோசனைகள்' என்ற பெயரில் ஒரு திட்டத்தைச் சமர்ப்பித்தனர். மாவட்ட சபைகளுக்கு முன்பு வழங்கப்பட்ட செயற்பாட்டு உரிமைகளை மாகாண சபைகளுக்கு மாற்றிப் பழைய யோசனைகளுக்கு புதிய முலாம் பூசப்பட்டதாக இப் 'புதிய திட்டம்' அமைந்தது. தமிழ் மக்கள் ஒரு தனித்துவமான தேசிய இனம் என்பதை இப் 'புதிய யோசனைகள்' ஏற்றுக் கொள்ளவில்லை. தமிழ் பேசும் மக்கள் தமது தாயக நிலத்திற்கு உரிமையானவர்கள் என்பதை இப் 'புதிய யோசனைகள்' ஏற்றுக்கொள்ளவில்லை. தமிழ் மக்கள் சுயநிர்ணய உரிமை உடையவர்கள் என்பதையும் இந்தப் 'புதிய யோசனைகள்' ஏற்றுக் கொள்ளவில்லை. இறுதியாக இந்தப் 'புதிய யோசனைகள்' தமிழ் மக்களின் அடிப்படை உரிமைகளுக்கும் உத்தரவாதம் தரவில்லை... ஒட்டுமொத்தத்தில் இந்தப் 'புதிய யோசனைகள்' தமிழ் மக்களின் நியாயபூர்வமான அரசியல் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யத் தவறிவிட்டன....

சிறீலங்கா அரசுடன் பேச்சுக்களை நடத்துவதற்கு அடிப்படையாக நாம் திம்புவில் முன்வைத்த நான்கு மூலக் கோட்பாடுகளும் வெறும் அறிவியற் கருத்தாக்கம் அல்ல. அடிப்படையான மூல உரிமைகள்

கோரி, தமிழ் மக்கள் நிகழ்த்திய போராட்டத்தினது யதார்த்த மெய்யுண்மையின் வெளிப்பாடாகவே அவை அமைந்தன. ஆரம்பத்தில், 1950களில் சமஷ்டி ஆட்சிமுறை கோரி நடைபெற்ற போராட்டமானது காலப் போக்கில் அரச ஒடுக்குமுறை தீவிரமடைந்ததைத் தொடர்ந்து சுதந்திரத் தமிழீழ தனியரசு கோரும் போராட்டமாக வடிவம் எடுத்தது... இப் பேச்சுக்களில் நாம் பிரகடனம் செய்த மூலக் கோட்பாடுகளின் அடிப்படையில் நியாயபூர்வமான பேச்சுக்களை நடத்துவதற்கு தயாரா என்பதை தெட்டத்தெளிவாகக் கூறுமாறு நாம் சிறீலங்கா அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறோம்."[12]

இரு தரப்புப் பேச்சுக் குழுக்களும் தங்களது நிலைப்பாட்டில் விட்டுக்கொடுக்காத கடும்போக்கைக் கடைப்பிடித்ததன் காரணமாக பேச்சுக்கள் முன்னேற்றம் காணாது முடங்கிப் போயின. அத்தோடு போர்நிறுத்த மீறல்கள் நிகழ்ந்துள்ளதாக இரு தரப்பும் பரஸ்பரம் முன்வைத்த குற்றச்சாட்டுகளும் நிலைமையை மேலும் மோசமாக்கின. பேச்சுக்கள் முறிந்து விடும் கட்டத்தை எட்டியபோது இந்திய வெளியுறவுச் செயலர் ரொமேஸ் பண்டாரி, நிலைமையை சமாளிக்கும் நோக்குடன் தலையிட்டார். இன நெருக்கடியின் வரலாறு பற்றியோ அதன் சிக்கலான பரிமாணங்கள் பற்றியோ தெளிந்த பார்வை எதுவுமற்ற திரு. பண்டாரி, பேச்சுகள் முடங்கியமைக்கு தமிழர் தரப்பின் விட்டுக்கொடா கடும்போக்கே காரணமெனக் குற்றம் சுமத்தினார். மத்தியஸ்துவ ராஜதந்திரத்தின் சாணக்கியம் எதுவுமற்ற அவர் தமிழர் தரப்பு மீதே முழுப் பழியையும் சுமத்தினார். தமிழ்ப் பிரதிநிதிகள் முன்வைத்த கோட்பாடுகளை 'பூடகமான கருத்துருவங்கள்' என வர்ணித்த பண்டாரி, தமிழர் தரப்பு மாற்று யோசனைகளை முன்வைக்க வேண்டும் என வற்புறுத்தினார். நியாயமற்ற, ஒருதலைப்பட்சமான பண்டாரியின் தலையீடு தமிழர் தரப்பில் கொதிப்புணர்வை ஏற்படுத்தியது. தமிழர் தரப்பு பிரதிநிதிகளில் ஒருவரான நடேசன் சத்தியேந்திரா சினத்துடன் பண்டாரி மீது சீறினார். மிகக் காரசாரமான வார்த்தைகளை பிரயோகித்து பண்டாரியை அவமானப்படுத்தி அடக்கி வைத்தார்.

திம்புவில் சமாதானப் பேச்சுக்கள் கொந்தளிப்பான நிலையை எட்டிக் கொண்டிருந்த வேளையில், சென்னையிலிருந்த

எமக்கு, கள நிலைமை சம்பந்தமாக பாரதூரமான தகவல்கள் கிடைத்தன. தமிழர் தாயகத்தில் சிங்கள ஆயுதக் படைகள் போர்நிறுத்தத்தை மீறி, தமிழ்ப் பொதுமக்களை பெருமளவில் கொன்று குவித்திருப்பதாக அறிந்தோம். அதிர்ச்சியூட்டும் பாரதூரமான சம்பவங்கள் வவுனியாவிலும் திருகோணமலையிலும் நிகழ்ந்தன. 1985 ஆகஸ்ட் 16இல் வவுனியா நகரில் சிங்கள ஆயுதப் படைகள் நிகழ்த்திய வெறியாட்டத்தில் பெருந்தொகையில் அப்பாவிப் பொதுமக்கள் கொல்லப்பட்டதுடன் தமிழரின் கடைகள், சொத்துக்கள் தீ மூட்டி அழிக்கப்பட்டன. மறுநாள் ஆகஸ்ட் 17இல் திருகோணமலை மாவட்டத்திலுள்ள ஒரு தமிழ்க் கிராமம் மீது இராணுவத்தினரும் ஆயுதம் தரித்த சிங்களக் காடையரும் சேர்ந்து தாக்குதலை நிகழ்த்தி, கிராமியவாசிகளைப் பெருந்தொகையில் கொன்று குவித்தனர்.

இந்தக் கொடூரமான படுகொலைச் சம்பவங்கள் பிரபாகரனைக் கொதிப்புறச் செய்தன. பிரபாகரன் எதிர்பார்த்தது போலவே சிங்கள ஆயுதப் படைகள் அப்பட்டமாகப் போர்நிறுத்தத்தை மீறி தமிழருக்கு எதிராகப் படுபாதகச் செயல்களில் ஈடுபட்டன. ஈழத் தேசிய விடுதலை முன்னணி அவசரக் கூட்டம் ஒன்றைக் கூட்டியது. திம்பு சமாதானப் பேச்சு என்ற ஒரு போலித் திரைக்குப் பின்னால் தமிழினப் படுகொலையை ஜெயவர்த்தனா அரசு நடத்திக்கொண்டிருப்பதாக அக் கூட்டத்தில் குற்றம் சுமத்தினார் பிரபாகரன். சிங்கள ஆயுதப் படைகளின் வெறியாட்டத்திற்கு எமது ஆழமான அதிருப்தியைத் தெரிவிக்கும் முகமாகத் திம்புப் பேச்சுக்களை உடனடியாகப் பகிஸ்கரிக்க வேண்டும் எனவும் அவர் கேட்டுக் கொண்டார். விடுதலைப் புலிகளின் தலைவரது யோசனையை ஏனைய அமைப்புகளின் தலைவர்களும் ஏகமனதாக ஏற்றுக் கொண்டனர். ஈழத் தேசிய விடுதலை முன்னணி தலைமைப்பீடத்தின் முடிவை திம்புப் பேச்சுக்களில் பங்குகொள்ளும் பிரதிநிதிகளுக்கு அறிவித்து, அவர்களைப் பேச்சுக்களிலிருந்து வெளிநடப்புச் செய்யுமாறு என்னிடம் பணிக்கப்பட்டது. நான் உடனடியாகவே கோடம்பாக்கத்திலுள்ள தொலைபேசி மையத்திற்கு சென்று திம்புவிலுள்ள எமது பிரதிநிதிகளுடன் தொடர்பு கொண்டு ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைமையின் தீர்மானத்தை அறிவித்தேன். எல்லாத் தமிழ் அமைப்புகளும் கூட்டாகச் சேர்ந்து பேச்சு மேசையிலிருந்து வெளிநடப்புச் செய்வதே சாலச் சிறந்ததெனவும் ஆலோசனை வழங்கினேன். திம்புவில் எமது

பிரதிநிதிகளுடன் பேசி முடித்த சில நிமிடங்களுக்குள் றோ அதிகாரியான திரு. உன்னிக் கிருஷ்ணன் தொலைபேசி மையக் கட்டிடத்திற்குள் பிரவேசித்து என்மீது சீறி விழுந்தார். தமிழ்ப் பிரதிநிதிகள் பேச்சுக்களிலிருந்து வெளிநடப்புச் செய்து, திம்பு சமாதானப் பேச்சு முறிவடைந்தால் அதற்கு நான்தான் பொறுப்பேற்கவேண்டும் என்றும் அதனால் இந்திய அரசின் சீற்றத்திற்கும் ஆளாக வேண்டும் என்றும் மிரட்டினார். ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைவர்களின் ஏகோபித்த முடிவையே நான் திம்புவில் எமது பிரதிநிதிகளுக்கு அறிவித்தேன் என நான் விளக்கம் கொடுத்தும் அவர் அதனை ஏற்க மறுத்து, என்னைத் திட்டித் தீர்த்தார். இதிலிருந்து ஒரு உண்மை புலனாகியது. அதாவது, சென்னை கோடம்பாக்கத்திலிருந்து திம்புவில் எமது பிரதிநிதிகளுடன் பேசியவற்றை எல்லாம் றோ புலனாய்வுத் துறையினர் ஒட்டுக் கேட்டு வந்தனர் என்பது தெளிவாகியது.

நான் கொடுத்த தகவலை அடுத்து, திம்புப் பேச்சுக்களில் கலந்துகொண்ட சகல அமைப்புகளின் பிரதிநிதிகளும் கீழ்க் கண்ட அறிக்கையை வெளியிட்ட பின்பு கூட்டாக வெளிநடப்புச் செய்தனர்:

> “நாம் இங்கு பேச்சுக்களை நடத்திக்கொண்டிருக்கும் வேளையில், எமது தாயக மண்ணில் அப்பாவித் தமிழ் மக்கள் படுகொலை செய்யப்பட்டு வந்துள்ளனர். இது சிறீலங்கா அரசின் இனக்கொலைத் திட்டத்தினது ஒரு வெளிப்பாடு என்றே நாம் கருதுகிறோம். கடந்த சில நாட்களாக, வவுனியாவிலும் ஏனைய தமிழ்ப் பகுதிகளிலும் சிங்கள ஆயுதப் படைகளின் வெறியாட்டத்திற்கு ஏதுமறியாத சிறார்கள் உட்பட இருநூறுக்கும் அதிகமான அப்பாவிக் குடிமக்கள் கொடூரமாகக் கொலை செய்யப்பட்டிருக்கிறார்கள். தமிழர் தாயகத்தில் தமிழ் மக்களுக்கு அமைதியும் பாதுகாப்பும் இல்லாத சூழ்நிலையில் திம்புவில் நாம் சமாதானப் பேச்சுக்களை தொடர்ந்து நடத்துவது கேலிக்கூத்தானது. திம்புப் பேச்சுக்களை முறித்துக் கொள்வது எமது நோக்கமல்ல. ஆயினும் திம்புப் பேச்சுகளுக்கு ஆதாரமாக அமைந்துள்ள போர்நிறுத்த உடன்பாட்டினை மீறுவதாகச் சிறீலங்கா அரசின் நடவடிக்கைகள் இருப்பதால் இப் பேச்சுக்களில் நாம்

பங்குகொள்வது முற்றிலும் பொருத்தமற்ற முடியாத காரியமாகிவிட்டது."[13]

திம்பு பேச்சுக்கள் முறிவடைந்துபோனது இந்திய மத்தியஸ்துவ இராஜதந்திரத்திற்கு ஏற்பட்ட பாரிய பின்னடைவாகும். இந்தத் தோல்விக்குப் பல காரணங்களை சுட்டிக் காட்டலாம். மிகவும் நுட்பமாகக் கையாள வேண்டிய ஒரு சிக்கலான இராஜதந்திர முயற்சியை முன்னெடுக்கும் சாதுரியமும் சாணக்கியமும் இந்தியாவின் மத்தியஸ்துவராகச் செயற்பட்ட ரொமேஸ் பண்டாரியிடம் இருக்கவில்லை. இவரது முன்னோடியான திரு. பார்த்தசாரதியிடம் காணப்பட்ட மதிநுட்பமும் அரசியல் ஞானமும் பண்டாரியிடம் சிறிதளவேனும் இருக்கவில்லை. தமிழரது தேசிய இனப் பிரச்சினையின் அடிப்படைகளைக் கூட இவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. தமிழ் சிங்கள தேசிய இனங்கள் மத்தியில் நிலவிய முரண்பாடுகளையும், மாறுபட்ட பார்வைகளையும் கிரகித்துக் கொள்ளும் ஆற்றலும் இருக்கவில்லை. மிகவும் சிக்கலான, கடினமான பிரச்சினைகளுக்கு உடனடியான, இலகுவான தீர்வுகாண அவர் எதிர்பார்த்தமை அவரது அவசர புத்தியை வெளிக்காட்டியது. பண்டாரியின் மனப்பாங்கு பற்றி விளக்கிய ஒரு இந்திய இராஜதந்திரி குறிப்பிட்டதாவது: "தமிழர்களுக்கும் சிங்களவர்களுக்கும் மத்தியில் நிலவிய அபிப்பிராய பேதங்களின் சிக்கலான பரிமாணங்கள் பற்றி அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. தமிழர்கள் தமது அபிலாசைகளையும் கோரிக்கைகளையும் வலியுறுத்தியதை அவரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை... இந்தப் பொறுமையீனம் காரணமாகவே, திம்புவில் தமிழ்ப் பேச்சுக் குழு தலைவர்களுடன் கசப்பான சொற்போரில் ஈடுபட்டார்."[14] துரதிர்ஷ்டவசமாக, டில்லி ஆட்சியாளர்கள் பண்டாரியின் தவறான மதிப்பீடுகளை அடிப்படையாகக் கொண்டே தமது கொள்கைகளை வகுத்தார்கள். தமிழ்ப் பிரதிநிதிகள் ஆணவம் பிடித்தவர்கள் என்றும் விட்டுக்கொடாக் கடும்போக்காளர்கள் என்றும் ஒரு தவறான மதிப்பீட்டையே அவர் இந்திய அரசுக்கு வழங்கியிருந்தார்.

இந்திய மத்தியஸ்துவ இராஜதந்திரத்தின் தோல்விக்கு இரண்டாவது காரணம் ஒரு கசப்பான விவகாரமே. உலக புலனாய்வுத் துறையினரின் தந்திரோபாய அணுகுமுறைகளைப்

பார்க்கும்போது இதுவொரு புதுமையான விவகாரம் அல்ல. போராளி அமைப்புகளின் அரசியல் உணர்வுகளுக்கு சற்றேனும் மதிப்பளிக்காத றோ புலனாய்வு அதிகாரிகளின் நெருக்குவார மிரட்டல் அணுகுமுறையும் திம்புப் பேச்சுக்களின் முறிவுக்குக் காரணமாக அமைந்தது. எஜமான்-அடிமை என்ற மனப்பான்மையுடனேயே றோ அதிகாரிகள் தமிழ் விடுதலை அமைப்புகளைக் கையாள முயன்றனர். தமிழ் அமைப்புகளுக்கு இராணுவப் பயிற்சியும், ஆயுத உதவியும், இருப்பிடத் தஞ்சமும் வழங்கியதால் அவர்களைப் பொம்மைகளைப் போலக் கட்டுப்படுத்தி தாம் நினைத்தது போல வழி நடத்தலாம் என இந்திய புலனாய்வுத் துறையினர் கருதினர். தமிழ்ப் போராளி அமைப்புகள் தமக்கென்ற அரசியற் கொள்கைகளையும் இலட்சியங்களையும் கொண்டிருந்தனர் என்பதும் இந்திய அழுத்தங்களுக்கு அவர்கள் விட்டுக்கொடுக்கத் தயாராக இல்லை என்பதும் திம்புப் பேச்சுக்களிலிருந்து தெளிவாகியது. சிங்கள இனவாத அடக்குமுறை அரசை எதிர்த்துப் போராடுவதற்கும், தமிழ் மக்களின் நியாயமான உரிமைகளை வென்றெடுக்கவும் இந்தியாவின் அரசியல், இராணுவ, இராஜதந்திர ஆதரவு அவசியமென்பதை போராளி அமைப்புகள் முழுமையாக உணர்ந்திருந்தன. அதற்கு மேலாக, இந்தியாவைப் பகைத்துக் கொள்ளவோ இந்திய நலன்களுக்கு விரோதமாகச் செயற்படவோ அவர்கள் விரும்பவில்லை. தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தையும் ஈழத் தேசிய விடுதலை முன்னணியின் ஏனைய அமைப்புகளையும் பொறுத்தவரை, அவை அனைத்துமே ஒடுக்கப்பட்ட தமிழீழ மக்களின் நலனையும் அரசியல் அபிலாசையையும் முதன்மைப்படுத்தி நின்றதால் அவர்கள் தமது இலட்சிய உறுதிப்பாட்டிலிருந்து தளர்ந்து கொடுக்கவில்லை.

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் இணைந்து கொள்வதற்கு முன்பாக ஈழத் தேசிய விடுதலை முன்னணி சந்திரகாசனின் செல்வாக்கின் கீழ் செயற்பட்டது. அவ்வேளை முன்னணியின் தலைமை மீது இந்திய அரசின் ஆதிக்கம் இருந்தது. ரெலோ இயக்கத் தலைவர் சிறீ சபாரெத்தினம் இந்தியாவின் விருப்பத்திற்குரியவராக இருந்தார். ஈ.பி.ஆர்.எல்.எவ், ஈரோஸ் போன்ற அமைப்புகள் மார்க்சீய தரிசனத்தை தமது கருத்தியலாக தழுவி நின்றன. எந்தவொரு கருத்தியல் சார்புமற்று நின்றதால் ரெலோ அமைப்பு மீது இந்திய அரசு கூடுதலான ஆதரவு காட்டியது. தமிழ்த் தேசிய பற்றுறுதிமிக்க

விடுதலைப் புலிகள், ஈழத் தேசிய விடுதலை முன்னணியுடன் இணைந்து கொண்டதை அடுத்து, முன்னணித் தலைமையானது இந்தியாவின் ஆதிக்கத்திற்கு அடிபணியாது, சுதந்திரமாகச் சிந்தித்துச் செயற்படும் மாபெரும் அரசியல்-இராணுவ சக்தியாக வளர்ந்துள்ளது என றோ புலனாய்வுத் துறையினர் கணிப்பிட்டனர். விடுதலைப் புலிகளுக்கும் எம்.ஜி.ஆருக்கும் மத்தியிலான நெருங்கிய உறவு, தமிழ் நாட்டிலும் தமிழ் ஈழத்திலும் புலிகளுக்கிருந்த பேராதரவு ஆகியன முன்னணியின் தனித்துவத்திற்கு வலுச் சேர்த்தன. இந்தியாவின் ஆதரவிலும் அனுதாபத்திலும் பெருமளவு தங்கியிருந்த போதும், தமிழ் அமைப்புகள், தம்மை விடுதலைப் போராளிகளாகக் கருதிப் பெருமைப்பட்டார்களே தவிர, இந்தியாவின் சதுரங்க ஆட்டத்திற்கு அசைந்து கொடுக்கும் பகடைக் காய்களாகச் செயற்பட விரும்பவில்லை.

சிறீலங்கா அரசின் பேச்சுக் குழுத் தலைவராகப் பணிபுரிந்த ஹெக்டர் ஜெயவர்த்தனாவின் நெகிழ்வற்ற, கடும்போக்கும் பேச்சுக்களின் முறிவுக்கு மூன்றாவது முக்கிய காரணமாக அமைந்தது. தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைக்கு மதிப்பளித்து, தமிழரின் தேசிய இனப் பிரச்சினைக்கு சமரச வழியில் ஒரு நியாயபூர்வமான தீர்வை வழங்கும் நேர்மையான நோக்கம் எதுவுமற்ற ஒரு இனவாத அரசையே ஹெக்டர் பிரதிபலித்தார். அரசியலமைப்புச் சட்டநிபுணர் என்ற ரீதியில், அவர் சிறீலங்காவின் அரசியல் யாப்பு எல்லைக்குள் நின்றே விவாதங்களை நடத்தினார். இலங்கையின் ஒற்றையாட்சி முறைமையை வலியுறுத்திய அவர், வறண்ட இறுக்கமான கடும்போக்கைக் கடைப்பிடித்தாரே தவிர, தமிழரின் நியாயமான கோரிக்கைகள் மீது எவ்வித அனுதாபமும் காட்டவில்லை. புதிதாகப் புதுமையாகச் சிந்தித்து பிரச்சினைகளை அணுகும் ஆற்றல் அவரிடம் இருக்கவில்லை. அவரது அணுகுமுறை பற்றி திரு.டிக்சிட் குறிப்பிடுகையில், "எச்.டபிள்யூ.ஜெயவர்த்தனாவின் பேச்சுக்கான அணுகுமுறையானது உயிரோட்டமற்றது. இயந்திரமாகச் சட்ட நியமங்களுக்குள் மட்டும் இயங்கியது. தமிழரின் கோரிக்கைகளுக்குப் பதிலளிக்கும் போதெல்லாம் அவை சிறீலங்காவின் யாப்பையும் ஒற்றையாட்சி முறைமையையும் மீறுவதாக அமைந்திருப்பதாகத் தொடர்ச்சியாக அவர் வலியுறுத்தினார். இதனால் திம்புப் பேச்சுகள் செவிடர்களின் கருத்தாடலாக மாறியது."[13] என்றார்.

தமிழ் அமைப்புகளின் வெளிநடப்பை அடுத்து திம்புப் பேச்சுகள் முறிவடைந்து போனதினால் இந்திய அரசு சினம்கொண்டது. ஏதோ ஒரு வடிவில் இந்திய அரசு தண்டிக்கும் நடவடிக்கை எடுக்குமென நாம் சரியாகவே எடைபோட்டோம். சென்னைக்கும் திம்புவுக்கும் மத்தியில் எமது தொலைபேசி உரையாடல்களை ஒட்டுக் கேட்ட றோ அதிகாரிகள், எனது அறவுறுத்தலின் பேரிலேயே தமிழ்ப் பிரதிநிதிகள் பேச்சு மேசையிலிருந்து வெளிநடப்புச் செய்தார்கள் எனக் கருதி, திம்புப் பேச்சுக்களின் தோல்விக்கு நானே சூத்திரதாரி எனத் தவறாக எடைபோட்டிருந்தனர். இது குறித்து இந்திய அரசு என்மீது அதிருப்தி அடைந்திருப்பதாக றோ அதிகாரியான உன்னிக்கிருஷ்ணன் எனக்கு ஏற்கனவே எச்சரித்திருந்தார். எதிர்பார்த்தது போல, இந்திய அரசின் தண்டனை நாடு கடத்தல் உத்தரவாக என்மீது பிறப்பிக்கப்பட்டது.

1985 ஆகஸ்ட் 23ஆம் நாள், சென்னை பெசன்ட் நகரிலிருந்த எனது இல்லத்தைச் சுற்றிவளைத்த தமிழ்நாடு காவல்துறையினர் என்னைக் கைதுசெய்து, ஒரு இரகசிய இடத்தில் தடுத்து வைத்தனர். மறுநாள், 'ஏயர் இந்தியா' விமானம் மூலம் நான் லண்டனுக்கு அனுப்பி வைக்கப்பட்டேன்.[16] நான் கைது செய்யப்பட்டு நாடு கடத்தப்பட்ட சம்பவத்தின் முழு விபரங்களும் திருமதி. அடேல் பாலசிங்கத்தின் **'சுதந்திர வேட்கை'** என்ற நூலில் விபரமாகத் தரப்படுகிறது. நடேசன் சத்தியேந்திராவுக்கும் சந்திரகாசனுக்கும் நாடுகடத்தல் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. நாடுகடத்தல் உத்தரவு கிடைப்பதற்கு முன்னராகவே சத்தியேந்திரா லண்டன் பயணமாகிவிட்டார். சத்தியேந்திரா மீது நாடுகடத்தல் உத்தரவு பிறப்பிக்கப்பட்டமை ரொமேஸ் பண்டாரியின் திருவிளையாடல் என்பது பின்பு தெரியவந்தது. சந்திரகாசனுக்கும் அமெரிக்க உளவு நிறுவனமான சி.ஐ.ஏ.க்கும் தொடர்புண்டு என்ற சந்தேகத்தின் பேரிலேயே அவர் நாடு கடத்தப்பட்டாரென பின்பு ஒரு தடவை றோ உயர் அதிகாரி ஒருவர் என்னிடம் கூறினார். இந்திய அரசின் இந்த நாடு கடத்தல் நடவடிக்கை தமிழ் விடுதலை அமைப்புகளுக்கு ஒரு உண்மையைப் புலப்படுத்தியது. அதாவது, இந்தியாவின் விருப்பத்திற்கு மாறாகச் செயற்பட்டால், இந்திய நல்லாதரவு தொடர்ந்து இருக்கப் போவதில்லை என்பதை உறுதிப்படுத்தியது.

தமிழர் தரப்புக்கு எதிராக இந்திய அரசின்

ஒருதலைப்பட்சமான ஒழுங்கு நடவடிக்கையை இந்திய ஊடகங்கள் வன்மையாகக் கண்டித்தன. 'அவசரப்பட்டு எடுக்கப்பட்ட முட்டாள்தனமான நடவடிக்கை' என ஒரு இந்திய ஆங்கல நாளிதழ் கண்டித்தது. தமிழ்ப் பிரதிநிதிகள் நாடு கடத்தப்பட்டமைக்கு எதிராக தமிழ்நாடு அரசியற் தலைவர்களும் ஆவேசமாகக் குரலெழுப்பினர். 'இந்திய அரசு தமிழர்களின் உணர்வை மதிக்கத் தவறிவிட்டது' எனக் கண்டித்து தமிழகத் தலைவர்கள் பிரமாண்டமான ஆர்ப்பாட்ட ஊர்வலங்களை நிகழ்த்தி தமது எதிர்ப்பைத் தெரிவித்தனர். என்மீது பிறப்பிக்கப்பட்ட நாடு கடத்தல் உத்தரவு மீளப் பெறப்பட்டு, நான் மீண்டும் இந்தியாவுக்கு அழைக்கப்பட வேண்டுமென்றும், நான் திரும்பும்வரை சமாதானப் பேச்சுக்களில் பங்குகொள்ளப் போவதில்லை என்றும் பிரபாகரனும் ஏனைய ஈழத் தேசிய முன்னணித் தலைவர்களும் உறுதியான நிலைப்பாட்டை எடுத்தனர். இப்படியான நிலைமைகளை எதிர்கொண்ட ரஜீவ் அரசாங்கம் என்மீது பிறப்பிக்கப்பட்ட நாடுகடத்தல் உத்தரவை மீளப்பெற நிர்ப்பந்திக்கப்பட்டது. ஆறு வாரங்களுக்குப் பின்னர் நான் லண்டனிலிருந்து இந்தியா திரும்பினேன்.

## பங்களூர் பேச்சுக்கள்

தமிழரின் இனப்பிரச்சினைக்கு தீர்வு காணும் மத்தியஸ்துவ முயற்சியில் தோல்வி கண்டதால் விரக்தியடைந்த இராஜதந்திரியாக 1986 மார்ச்சில் ரொமேஸ் பண்டாரி ஓய்வு பெற்றார். அவரது பொறுப்பில் இந்திய வெளியுறவுச் செயலராக திரு. ஏ.பி.வெங்கடேஸ்வரன் நியமிக்கப்பட்டார். திரு. வெங்கடேஸ்வரன் ரஜீவ் காந்தியின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவரல்ல. அத்தோடு இருவருக்கும் மத்தியில் ஒத்திசைவான நல்லுறவும் நிலவவில்லை. ஏற்கனவே தோல்வியைச் சந்தித்தபோதும் இந்தியாவின் மத்தியஸ்துவ முயற்சியை கைவிடுவதற்கு ரஜீவ் காந்தி தயாராக இல்லை. ஜெயவர்த்தனாவுடன் தொடர்ந்து சமரச முயற்சிகளை முன்னெடுக்கும் நோக்கத்துடன் தனது நம்பிக்கைக்குப் பாத்திரமான திரு. பி.சிதம்பரம், திரு. நட்வார் சிங் ஆகிய இரு அமைச்சர்களை இந்திய அரசின் விசேட பிரதிநிதிகளாக ரஜீவ் காந்தி நியமித்தார்.

1986 நவம்பர் நடுப் பகுதியில் தென்னாசிய நாடுகளின் பிராந்தியக் கூட்டுறவு (சார்க்) மாநாடு பங்களூரில் நடைபெறவிருந்தது. இம் மாநாட்டின்போது இந்திய இலங்கை அரச தலைவர்களது சந்திப்பு இடம்பெறவிருந்தது. இது ஒரு முக்கிய அரசியல் நிகழ்வு என்பதால், இலங்கையின் இனப்பிரச்சினைக்கு ஒரு தீர்வு கண்டு அதனை ஒரு மகத்தான இராஜதந்திர சாதனையாக இம் மாநாட்டில் அறிவித்து புகழீட்ட விரும்பினார் ரஜீவ் காந்தி. தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் ஒரு தீர்வுத் திட்டத்தை வகுக்குமாறு, உள்நாட்டுப் பாதுகாப்பு இராஜாங்க அமைச்சர் திரு. சிதம்பரத்திடமும், வெளிவிவகார இராஜாங்க அமைச்சர் திரு. நட்வார் சிங்கிடமும் பிரதமர் ரஜீவ் கேட்டுக் கொண்டார்.

1986 ஏப்ரல் கடைசியில் திரு. சிதம்பரமும் திரு. நட்வார் சிங்கும் கொழும்புக்கு வருகை தந்து, தலைநகரில் நான்கு நாட்கள் தங்கி நின்றனர். அக் காலகட்டத்தில் அதிபர் ஜெயவர்த்தனாவையும், அவரது மூத்த அமைச்சர்களான லலித் அத்துலத்முதலி (தேசிய பாதுகாப்பு அமைச்சர்), காமினி திசநாயக்கா (மகாவலி அபிவிருத்தி அமைச்சர்), ஏ.சி.எஸ்.ஹமீது (வெளியுறவு அமைச்சர்) ஆகியோரையும் சந்தித்துக் கலந்துரையாடினர். சிங்கள அரசியற் தலைவர்களுடன் நிகழ்த்திய நீண்ட கருத்துப் பரிமாற்றத்தின் விளைவாக இந்திய மத்தியஸ்தர்களுக்கு ஒரு உண்மை புலனாகத் தொடங்கியது. தமிழர்களின் அடிப்படை அபிலாசைகள் சம்பந்தப்பட்ட மட்டில், குறிப்பாகத் தமிழ்த் தாயகக் கோரிக்கை குறித்து சிங்களத் தலைமை இறுக்கமான கடும் போக்கை கடைப்பிடித்து வருகிறது என்பதை அவர்கள் உணர்ந்து கொள்ள முடிந்தது. வடகிழக்கு மாகாணங்களை ஒரு தனித்துவமான தொடர் பிரதேசமாக மாற்றுவதற்கும் கடும் எதிர்ப்பு இருந்ததையும் அவர்கள் கண்டு கொண்டார்கள்.

1986 ஜுன் மாதக் கடைசியில், இந்திய அமைச்சர்களின் விஜயத்தை அடுத்து, இனப் பிரச்சினை பற்றி விவாதிக்கும் நோக்குடன் அரசியற் கட்சிகளின் மாநாடு ஒன்றைக் கூட்டினார் ஜெயவர்த்தனா. தமிழர் தரப்பில் தமிழ் ஐக்கிய விடுதலை முன்னணி இம் மாநாட்டில் கலந்து கொண்டது. பிரதான எதிர்க் கட்சியான சிறீலங்கா சுதந்திரக் கட்சி இம் மாநாட்டை பகிஸ்கரித்தது. இம் மாநாடு நான்கு மாதங்களாக நடைபெற்றுத்

தமிழ் மாகாணங்களுக்கு மிகக் குறைந்த அளவில் அதிகாரப் பரவலாக்கம் வழங்கும் ஒரு தீர்வுத் திட்டத்தை வகுத்ததுடன் முடிவுற்றது. வருமான அதிகாரங்கள் மறுக்கப்பட்ட, நிலவுரிமையற்ற, சட்ட ஒழுங்கு நிர்வாக அதிகாரம் இல்லாத வெறும் கண்துடைப்பான தீர்வுத் திட்டமாக அது அமைந்தது. தமிழ் மக்களின் மையமான கோரிக்கைகள் அனைத்தும் நிராகரிக்கப்பட்டன. வடகிழக்கு மாகாணங்கள் இணைக்கப்பட்டு, தமிழ் பேசும் மக்களுக்கு மொழிவாரியான ஒரு தனித்துவமான மாநிலம் உருவாக்கப்பட்டு, தமிழர் தாயகக் கோரிக்கைக்கு அங்கீகாரம் வழங்கப்பட வேண்டுமென்ற அடிப்படைக் கோரிக்கையை மாநாட்டில் பங்குகொண்ட சகல சிங்கள அரசியற் கட்சிகளும் நிராகரித்தன. அனைத்துக் கட்சிகள் மாநாடு போன்றே அரசியற் கட்சிகள் மாநாடும் தோல்வியில் முடிந்தது.

போரும் சமாதானமும் என்ற இருமுனைத் தந்திரோபாய அணுகுமுறையைக் கடைப்பிடித்தார் ஜெயவர்த்தனா. தமிழ் மக்களின் இனப் பிரச்சினைக்கு தீர்வுகாண நேர்மையான முறையில் தான் முயற்சிப்பதாக இந்தியாவுக்கும் உலகிற்கும் ஏமாற்று வித்தை காட்டுவதற்காக, மாறி மாறி அரசியற் கட்சிகளின் மாநாடுகளைக் கூட்டி இனப் பிரச்சினையை இழுத்தடித்து வந்தார். அதே சமயம், பாகிஸ்தானுடனும் இஸ்ரேலுடனும் ஒப்பந்தங்கள் செய்து, பெரும்தொகையான ஆயுத உதவிகளைப் பெற்று, சிங்கள இராணுவ இயந்திரத்தை வலுப்படுத்தி வந்தார். அத்துடன் இந்தியாவுக்கு மத்தியஸ்துவ பாத்திரத்தை வழங்கி, தமிழ் விடுதலை அமைப்புகளுக்கு இந்திய அரசு வழங்கி வந்த அரசியல் ஆதரவையும் இராணுவ உதவிகளையும் நிறுத்துவதில் வெற்றியும் கண்டார். சமாதானப் பேச்சுக்களில் தமிழ் அமைப்புகள் விட்டுக்கொடாத கடும்போக்கைக் கடைப்பிடிப்பதாக புது டில்லியை நம்பவைத்து, ரஜீவ் ஆட்சிப்பீடத்திற்கும் தமிழர்களுக்கும் மத்தியில் ஒரு பெரும் பிளவையும் ஏற்படுத்தினார். பேச்சுக்களை சூத்திரக் கருவியாகப் பாவித்து, இந்திய அரசுக்கும் தமிழர்களுக்கும் மத்தியில், ஒருபுறம் முரண்பாட்டையும் பகைமையையும் வளர்த்துக் கொண்டு மறுபுறம், தமிழரின் சுதந்திர இயக்கத்தை இராணுவ பலம் மூலம் நசுக்கிவிடும் நோக்கத்துடன் சிங்கள ஆயுதப் படைகளை நவீனமயப்படுத்தி விரிவாக்கம் செய்தார். ஜெயவர்த்தனாவின் நயவஞ்சக அரசியலைப் புரிந்து கொள்ளத்

தவறிய ரஜீவ் காந்தி, அந்தக் கிழட்டு நரியின் சூத்திரதாரப் பொறிக்குள் சிக்கிக் கொண்டார்.

1986 நவம்பர் மாதம் 17, 18ஆம் நாட்களில் பங்களூரில் சார்க் உச்சி மாநாடு நடைபெறவிருந்தது. இந்த மாநாட்டில் தமிழரின் இனப் பிரச்சினைக்குத் தீர்வுத் திட்டம் ஒன்றை முன்வைக்குமாறு ஜெயவர்த்தனா நிர்ப்பந்திக்கப்பட்டார். இதன்படி, கிழக்கு மாகாணத்தை மூன்று கூறுகளாகப் பிரிக்கும் திட்டம் ஒன்றை அவர் தயாரித்தார். வடகிழக்கைத் தனி மாநிலமாகக் கொண்ட தமிழர் தாயகக் கோரிக்கைக்கு சாவுமணி அடிக்கும் நோக்குடன், இனத்துவ, மத வேறுபாட்டின் அடிப்படையில் கிழக்கு மாகாணத்தை மூன்று கூறுகளாகப் பிரிக்கும் இந்த நாசகாரத் திட்டத்தை ஜெயவர்த்தனாவின் ஆட்சிப்பீடம் மிகவும் சூழ்ச்சித் திறனுடன் தயாரித்திருந்தது. இத் திட்டத்தின்படி, தமிழர்கள், சிங்களவர், முஸ்லிம்கள் என்ற மூன்று இனத்தவர்களுக்குமாக, திருகோணமலை, மட்டக்களப்பு, அம்பாறை மாவட்டங்களின் எல்லைகள் மூன்று பிரதேசக் கூறுகளாக மாற்றியமைக்கப்படவிருந்தன. இத் திட்டத்தில் அம்பாறை மாவட்டத்தில் சிங்களவர்கள் வாழும் பகுதிகள் கிழக்கிலிருந்து துண்டாடப்பட்டு ஊவா மாகாணத்துடன் இணைக்கப்படும். திருகோணமலை நகரமும், துறைமுகமும், திருகோணமலை மாவட்டத்தில் சிங்களவர்கள் வாழும் பகுதிகளும் ஒன்றாக இணைக்கப்பட்டு சிங்கள மாநிலமாக மாற்றப்படும். இச் சிங்கள மாநிலம் சிங்கள அரச நிர்வாகத்தின் கீழ்ச் செயற்படும். மட்டக்களப்பு மாவட்டத்தின் சில பகுதிகளும், அம்பாறை மாவட்டத்தில் முஸ்லிம்கள் வாழும் பகுதிகளும் இணைந்ததாக முஸ்லிம் பிரதேசம் உருவாக்கப்படும். திருகோணமலையில் தமிழர்கள் வாழும் பகுதிகளும் (திருகோணமலை நகரம், துறைமுகம், சிங்களக் குடியிருப்புகள் தவிர்ந்த பகுதிகள்) மட்டக்களப்பு மாவட்டத்தில் சில பகுதிகளும் இணைந்ததாக தமிழர் மாகாணம் உருவாக்கப்படும். மிக நுட்பமாகத் தயாரிக்கப்பட்ட இந்த எல்லைவரையறைத் திட்டம் சிங்களவர்களுக்கே சாதகமாக அமையப் பெற்றது. கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த திருகோணமலைத் துறைமுகமும், நகரமும் அடங்கியதாகக் கிழக்கில் பெரியளவு பிரதேசங்களைக் கொண்ட நிலப்பரப்பை சிங்களவருக்கு தாரைவார்த்துக் கொடுக்க இத் திட்டம் வழிசெய்தது. கிழக்கில் தமிழருக்காக ஒதுக்கப்பட்ட குறுகிய நிலப்பரப்பை வடக்கு மாநிலத்துடன் இணைத்து,

தமிழரின் தாயகக் கோரிக்கையை நிறைவு செய்யலாம் எனவும் ஜெயவர்த்தனா சிந்தித்தார். மூன்று கூறுகளைக் கொண்ட தனது எல்லை வரையறைத் திட்டத்தின் விபரங்களை இந்தியத் தூதுவர் டிக்சிட்டுக்கு விளக்கிய ஜெயவர்த்தனா, கிழக்கு மாகாணத்தில் வதியும் முஸ்லிம்கள், சிங்களவரின் நலன்கள் பாதுகாக்கப்பட வேண்டும் என இந்திய அமைச்சர்களான சிதம்பரமும் நட்வார் சிங்கும் ஆலோசனை கூறியதன் அடிப்படையிலேயே இப் 'புதிய யோசனைகள்' வகுக்கப்பட்டதாகக் கூறினார். பங்களூரில் நடைபெறப் போகும் 'சார்க்' உச்சி மாநாட்டின்போது இப் 'புதிய திட்டத்தை' இந்தியப் பிரதமர் ரஜீவிடம் கையளிக்கப் போவதாகவும் அவர் கூறினார். டிக்சிட்டுக்கு இத் திட்டம் திருப்தியை அளிக்கவில்லை. இது பற்றி தனது கருத்தை ஜெயவர்த்தனாவிடம் தெரிவிக்கையில்: "வடக்கு கிழக்கு மாகாணங்களை ஒன்றிணைத்து, அதனை ஒன்றுபட்ட தமிழ்த் தாயகமாக அங்கீகரிக்க வேண்டும் என்ற தமிழரின் கோரிக்கையை தட்டிக் கழித்து ஓரம்கட்டும் நோக்கத்துடன் இத் திட்டம் உருவாக்கப்பட்டதாகவே தமிழ் மக்களும் இந்திய அரசும் கருதக்கூடுமென நான் அவரிடம் வெளிப்படையாகவே கூறினேன். திட்டமிடப்பட்ட ஒரு ஏமாற்று நடவடிக்கையாகவே இந்த யோசனையை தமிழர் தரப்பு எண்ணலாம் என்றும் நான் அச்சம் தெரிவித்தேன்."[17] எனக் குறிப்பிட்டார்.

வடக்கு கிழக்கு மாகாணங்கள் இணைந்த தமிழ்த் தாயகக் கோரிக்கையை ஜெயவர்த்தனாவும் அவரது மூத்த அமைச்சர்களும் வன்மையாக எதிர்த்தனர். கிழக்கு மாகாணத்தைக் கூறுபோட்டு, தமிழ் மாநிலத்தின் பிரதேசத் தொடர்ச்சியையும் ஒருமைப்பாட்டையும் சீர்குலைத்து, சிங்களக் குடியேற்றங்களால் தமிழரின் தாயக நிலத்தை கபளீகரம் செய்வதே சிங்கள அரசின் நோக்கமாகும். எனவே, கிழக்கு மாகாணத்தை மூன்று பிரதேசங்களாகக் கூறுபோடும் எல்லைவரையறுப்புத் திட்டத்தை தமிழர்கள் ஒருபொழுதும் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை என திரு. டிக்சிட் சரியாக எடைபோட்டார். ஆயினும் ஜெயவர்த்தனா தனது நிலைப்பாட்டை விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. தமிழரின் தாயகக் கோரிக்கைக்கு ஏற்ப தனது யோசனைத் திட்டத்தை மாற்றியமைக்கவும் அவர் மறுத்துவிட்டார். ஒரு இடைக்காலத் தீர்வாக இந்த எல்லைவரையறுப்புத் திட்டத்தை இந்தியாவிடம்

சமர்ப்பிக்க முடிவெடுத்தார். ரஜீவ் ஆட்சிபீடம் ஜெயவர்த்தனாவின் இத் திட்டத்தை ஏற்றுக் கொண்டதோடு, அதனை அடிப்படையாக வைத்து பங்களூரில் 1986 நவம்பரில் பேச்சுக்களை நடத்தும்படி விடுதலைப் புலிகளை நிர்ப்பந்திக்கவும் தீர்மானித்தது.

திம்புப் பேச்சுக்கள் தோல்வியடைந்து நான் இந்தியாவிலிருந்து நாடுகடத்தப்பட்டதிலிருந்து பங்களூர் சார்க் உச்சி மாநாடு வரையிலான கால இடைவெளியில் தமிழரின் தேசியப் போராட்ட அரங்கில் பாரதூரமான நிகழ்வுகள் நடந்தேறின. எல்லாவற்றிற்கும் முக்கியமாக, தமிழ் விடுதலை அமைப்புகளின் ஒன்றுபட்ட கூட்டணியாகச் செயற்பட்ட ஈழத் தேசிய விடுதலை முன்னணி பிளவுபட்டுச் சீர்குலைந்தது. முன்னணியில் அங்கத்துவம் வகித்த முக்கிய இரு அமைப்புகளான விடுதலைப் புலிகளுக்கும், ரெலோ இயக்கத்திற்கும் மத்தியில் 1986 ஏப்ரல்-மே காலப் பகுதியில் ஆயுத மோதல் வெடித்தது. ரெலோ தலைவர் சிறீ சபாரெத்தினமும், பெருந்தொகையான அவரது போராளிகளும் இச் சண்டையில் கொல்லப்பட்டனர். இதனைத் தொடர்ந்து ஈ.பி.ஆர்.எல்.எவ் அமைப்பிற்கும் விடுதலைப் புலிகளுக்கும் பகை மூண்டது. தமிழீழத்தில் இயங்கிய ஈ.பி.ஆர்.எல்.எவ் போராளிகள் விடுதலைப் புலிகளால் நிராயுதபாணிகளாக ஆக்கப்பட்டனர். விடுதலைப் புலிகளின் அழுத்தத்திற்குப் பணிந்த புளொட் அமைப்பு, தமிழர் தாயகத்தில் தனது இராணுவ நடவடிக்கைகள் அனைத்தையும் நிறுத்திக் கொள்வதாக அறிவித்தது. ஈரோஸ் அமைப்பின் தலைவர் திரு. பாலகுமார் விடுதலைப் புலிகளின் தலைமையுடன் நட்புறவைப் பேணி நல்லுறவை வளர்த்ததால் இரு அமைப்புகளுக்கும் மத்தியில் தொடர்ந்து நல்லெண்ணம் நிலவியது. ரெலோ, ஈ.பீ.ஆர்.எல்.எவ் அமைப்புகளுக்கு எதிரான விடுதலைப் புலிகளின் தாக்குதல் நடவடிக்கைகளுக்குத் தலைமை தாங்கி அவற்றை வெற்றிகரமாக நடத்தி முடித்தவர் தளபதி கிட்டுவாகும். மக்கள் விரோதச் செயல்களில் ஈடுபட்டு, விடுதலைப் போராட்டத்திற்கே அவப் பெயரை ஏற்படுத்திய ஆயுதக் குழுக்களை நிராயுதபாணிகளாக்கி, யாழ்ப்பாண சமூகத்தில் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் நிறுவிய பெருமை தளபதி கிட்டுவையே சாரும். ஒரு புறம் மாற்று அமைப்புகளின் அட்டகாசத்தை அடக்கியதுடன், தொடர்ச்சியாக சிங்கள ஆயுதப் படைகள் மீது துணிகரத் தாக்குதல்களை நடத்தி, படையினரை

முகாம்களுக்குள் முடங்க வைத்து யாழ்ப்பாணத்தை விடுதலைப் புலிகளின் முழுக் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்து மகத்தான வரலாற்று சாதனையைப் படைத்ததும் தளபதி கிட்டுவாகும். இத்தகைய திருப்பங்கள் காரணமாக 1986 நவம்பரில் சார்க் உச்சி மாநாடு கூடுவதற்கு முந்திய கால கட்டத்தில் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கமே ஈழத் தமிழரின் தேச சுதந்திரப் போராட்டத்தை நிர்ணயிக்கும் மிகப் பலம்பொருந்திய அரசியல் சக்தியாக விளங்கிற்று.

ஈழத் தேசிய விடுதலை முன்னணியைப் பிளவுபடுத்தி, அம் முன்னணியில் அங்கம் வகித்த விடுதலை அமைப்புகளை ஒன்றோடு ஒன்று மோதவிட்டு, விடுதலைப் புலிகள் இயக்கத்தைப் பலவீனப்படுத்த றோ புலனாய்வுத் துறையினர் தீட்டிய சதித் திட்டம் படுதோல்வியில் முடிந்தது. முன்பைவிடப் பல மடங்கு பலம்பெற்ற சக்தியாக புலிகள் இயக்கம் பூதாகர வளர்ச்சிபெற்றமை ரஜீவ் அரசுக்கு ஏமாற்றத்தையும் கடுப்பையும் ஏற்படுத்தியது. அதுமட்டுமன்றி, இலங்கையின் இனப் பிரச்சினையில் விடுதலைப் புலிகளின் தலைமையை அனுசரித்துப் போகவேண்டிய கட்டாயமும் இந்திய அரசுக்கு ஏற்பட்டது. ஆனால் விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன் ஒரு வித்தியாசமான ஆளுமையுடைய மனிதர். கொள்கையில் உருக்கை ஒத்த உறுதி உடையவர். நெருக்குவாரத்திற்கு நெகிழ்ந்து கொடுக்கமாட்டார். அதிகாரக் கெடுபிடிகளுக்கு அடிபணியமாட்டார். இப்படியான போக்குடைய ஒரு தலைவனை எப்படியாவது தனது வழிக்கு கொண்டுவரவேண்டும் என இந்திய அரசு கருதியது. 1986 நவம்பர் நடுப்பகுதியில் நிகழவிருக்கும் பங்களூர் பேச்சுகளுக்கு முன்னராகப் பிரபாகரனைப் படிமானப்படுத்த இந்திய அதிகாரப்பீடம் எண்ணியது. அதற்கான ஒரு சந்தர்ப்பத்தையும் அது எதிர்பார்த்துக் காத்திருந்தது. அந்த சந்தர்ப்ப சூழ்நிலை 1986 நவம்பர் தொடக்கத்தில் உருவாகியது.

1986 நவம்பர் 1ஆம் நாள். அன்று தீபாவளி பண்டிகை. சென்னை நகரத்தின் மையத்திலுள்ள சூளைமேடு என்னுமிடத்தில் ஒரு கோரமான இரத்தவெறிச் சம்பவம் நிகழ்கிறது. இத் துன்பியல் நாடகத்தின் கதாநாயகன் டக்ளஸ் தேவானந்தா. இன்று ஈ.பி.டி.பியின் தலைவராகவும் இந்து மத அமைச்சருமாகவும் பதவி வகிக்கும் தேவானந்தா அன்று ஈ.பி.ஆர்.எல்.எவ் இன் இராணுவ பிரிவில் பணிபுரிந்தார். தீபாவளி தினமாகிய அன்று நண்பகல் சூளைமேட்டிலுள்ள ஈ.பி.ஆர்.எல்.எவ்

இன் தலைமைச் செயலகத்திற்கு முன்பாக ஒரு ஓட்டோவில் வந்திறங்கிய தேவானந்தாவுக்கும் ஓட்டோ சாரதிக்கும் மத்தியில் சிறு தகராறு. ஓட்டோ கூலிக்கு பேரம் பேசியதில் ஏற்பட்ட வாக்குவாதம் கோபாவேசம் மிக்க சொற் சண்டையாக வெடித்தது. உணர்ச்சி வசப்பட்ட தேவானந்தா தனது செயலகத்தினுள் பாய்தோடிச் சென்று ஒரு தானியங்கித் துப்பாக்கியுடன் திரும்பி வந்தார். துப்பாக்கியை கண்டதுமே பயந்து நடுங்கிய ஓட்டோ சாரதி ஓட்டோவை விட்டு ஓட்டம் பிடித்தான். அவன் ஓடிய திசையை நோக்கி, தேவானந்தா துப்பாக்கியால் சிலாவிச் சுட, துப்பாக்கிச் சன்னங்கள் வீதியில் நடமாடிய அப்பாவிப் பொதுமக்களைப் பதம் பார்த்தன. பத்துப் பேர்வரை படுகாயத்துடன் வீதியில் சாய்ந்தனர். ஒரு இளம் வழக்கறிஞர் தலத்திலேயே கொல்லப்பட்டார். சூளைமேடு அல்லோல கல்லோலப்பட்டது. தமிழ்நாடு எங்கும் கண்டனக் குரல்கள் எழுந்தன.

தமிழ் நாட்டில் இயங்கும் ஈழ விடுதலை அமைப்புகள் மீது கடும் நடவடிக்கை எடுக்குமாறு இந்திய ஊடகங்கள் வற்புறுத்தின. கர்நாடகத்தின் தலைநகரான பங்களூரில் விரைவில் சார்க் உச்சி மாநாடு நடைபெறவிருப்பதால் தமிழ் அமைப்புகள் மீது கடுமையான ஒழுங்கு நடவடிக்கை எடுத்து, தமிழ் நாட்டில் சட்டம் ஒழுங்கைப் பலப்படுத்துமாறு பிரதமர் ரஜீவ் காந்தி தமிழக முதல்வர் திரு. எம்.ஜி.இராமச்சந்திரனைக் கேட்டுக் கொண்டார். இந்தப் பொறுப்பை தமிழக முதல்வர் பிரதிப் பொலிஸ் மாஅதிபர் திரு. மோகனதாஸிடம் ஒப்படைத்தார். இதனையடுத்து, தமிழீழ விடுதலை அமைப்புகளை நிராயுதபாணிகளாக்கும் 'புலி நடவடிக்கையை' (Operation Tiger) திரு.மோகனதாஸ் முடுக்கி விட்டார். 1986 நவம்பர் 8ஆம் நாள் அதிகாலை தமிழ்நாடு காவல்துறையின் அதிரடிப் படையினர் விடுதலைப் புலிகளதும் ஏனைய தமிழ் அமைப்புகளதும் இரகசியத் தங்குமிடங்கள், வீடுகள், முகாம்கள், பயிற்சிப் பாசறைகள் ஆகியவற்றைச் சூறையாடி ஆயுத தளபாடங்களைக் கைப்பற்றியதுடன், அமைப்புகளின் தலைவர்களையும் கைதுசெய்தனர்.

பிரபாகரனும் நானும் அன்றைய நாள் அதிகாலை எமது வீடுகளில் வைத்து கைது செய்யப்பட்டு வெவ்வேறு காவல்நிலையங்களுக்கு கொண்டு சொல்லப்பட்டோம். அங்கு பல மணிநேரம் தடுத்துவைக்கப்பட்டு குற்றவாளிகள் போல

விசாரணைக்கு உட்படுத்தப்பட்டோம். எங்கள் இருவரையும் பல கோணத்தில் நிறுத்தி படம் எடுத்தார்கள். கைரேகையைப் பதிவு செய்தார்கள். பண்பற்ற வார்த்தைகளால் அவமானப்படுத்தினார்கள். இவை எல்லாம் திட்டமிட்டு நடத்தப்பட்ட இம்சைபோலத் தோன்றியது. இழிவுபடுத்தி, சிறுமைப்படுத்தி பணியவைக்கலாம் என்ற கபட நோக்கத்துடன் மேற்கொள்ளப்பட்ட இந் நடவடிக்கையானது பிரபாகரனைப் பொறுத்தவரை எதிர்மாறான விளைவையே ஏற்படுத்தியது. பிரபாகரன் கொதிப்படைந்தார். ஒரு குற்றவாளிபோல இழிவுபடுத்தப்பட்டதை அவரால் ஜீரணிக்க முடியவில்லை. தனது சுய-கௌரவத்திற்கு மட்டுமன்றி தமிழீழ சுதந்திர இயக்கத்திற்கு ஏற்பட்ட அவமதிப்பாகவும் அந் நிகழ்வை அவர் கருதினார். எந்த வகையிலும் இந்திய அழுத்தத்திற்கு நெகிழ்ந்து கொடுப்பதில்லை என உறுதிபூண்டார். இந்தப் 'புலி நடவடிக்கை'யானது, சூளைமேட்டு துப்பாக்கிச் சூட்டுச் சம்பவத்திற்கு எதிரான ஒழுங்கு நடவடிக்கையாக நாம் கருதவில்லை. ஏனென்றால் சூளைமேட்டுச் சம்பவத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் எவ்வித சம்பந்தமும் இருக்கவில்லை. விடுதலைப் புலிகளின் தலைமையை மிரட்டிப் பணியவைத்து இந்திய சமரச முயற்சிக்கு விட்டுக்கொடுத்து இணங்க வைக்கும் தந்திரோபாயத்துடன் மத்திய, மாநில அரசுகளால் கூட்டாகத் திட்டமிடப்பட்ட சதியின் அடிப்படையிலேயே இப் 'புலி நடவடிக்கை' எடுக்கப்பட்டது என்பது எமக்கு நன்கு புலனாகியது. ஒன்பது நாட்கள் எமது வீடுகளில் தடுப்புக் காவலில் வைக்கப்பட்ட பின்பு, பிரபாகரனும் நானும் பேச்சுக்களுக்காகப் பங்களூர் அழைத்துச் செல்லப்பட்டபோதே இந்தியாவின் சூத்திரதார நோக்கு எமக்குப் புலப்பட்டது.

1986 நவம்பர் 17ஆம் நாள், சென்னை நகரப் புறத்திலுள்ள தாம்பரம் விமானத் தளத்திலிருந்து இந்திய வான்படை விமானம் மூலம் பிரபாகரனும் நானும் பங்களூர் கொண்டு செல்லப்பட்டோம். அங்கு ராஜ்பவன் விடுதியில் எம்மைத் தங்க வைத்தார்கள். அந்த விடுதிக்குச் சென்றடைய இரவு 10 மணி ஆகிவிட்டது. ஒருபுறம் பசி வயிற்றைப் பிடுங்க, களைத்துச் சோர்ந்து போய் விடுதிக்கு சென்ற எம்முடன் இரவிரவாகப் பேச்சுக்களை நடத்தும் நோக்குடன் இந்திய அரச பிரதிநிதிகள் குழு ஒன்று அங்கு காத்து நின்றது. இந்திய வெளிவிவகார இராஜாங்க அமைச்சர் திரு. நட்வார் சிங், இந்திய வெளியுறவுச் செயலர்

திரு. வெங்கடேஸ்வரன், வெளியுறவு அமைச்சின் இணைச் செயலர் குல்திப் சதேவ், இலங்கைக்கான இந்திய தூதுவர் திரு. டிக்சிட் ஆகியோர் எமக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டனர். கிழக்கு மாகாணத்தை மூன்று கூறுகளாகப் பிரிக்கும் ஜெயவர்த்தனாவின் எல்லை வரையறைத் திட்டத்தை உடனடியாகவே இந்தியப் பிரதிநிதிகள் எமக்கு எடுத்து விளக்கினார்கள். இந்தியப் பிரதம மந்திரியும் சிறீலங்கா ஜனாதிபதியும் ஏற்கனவே பங்களூருக்கு வருகை தந்து, வின்சர் மனோர் விடுதியில் தங்கி நிற்பதாகவும் எமக்குத் தகவல் தெரிவித்த இந்தியப் பிரதிநிதிகள், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு இடைக்காலத் தீர்வாக இந்த எல்லை வரையறுப்பு யோசனையை நாம் ஏற்றுக் கொண்டால் ஜெயவர்த்தனா எம்மிடம் பேசுவதற்குத் தயாராக இருப்பதாகவும் எமக்குத் தெரிவிக்கப்பட்டது.

கிழக்கு மாகாணத்தின் விபரமான வரைபடம் ஒன்றை எமக்கு முன்பாக விரித்து, கிழக்கு மாகாணத்தை முக்கூறுபோடும் ஜெயவர்த்தனாவின் 'புதிய திட்டம்' பற்றி எமக்கு விபரமாக விளக்கிக் கொண்டிருந்தார் திரு. டிக்சிட். இத் திட்டமானது வடக்கிலும் கிழக்கிலும் வாழும் தமிழர்களை இறுதியாக ஒன்றிணைக்க வழிவகுக்கும் என்று கூறிய அவர் இதுவொரு தற்காலிக ஒழுங்கு என்றும் இத் திட்டம் பற்றித் தொடர்ந்து பேச்சுக்களை நடத்தி முன்னேற்றம் காணலாம் என்றும் நம்பிக்கை தெரிவித்தார். நள்ளிரவு பூராகவும் ஜெயவர்த்தனாவின் திட்டத்தை அக்குவேறு ஆணிவேறாக விளங்கப்படுத்தி, எமது பொறுமையைக் கொலை செய்துவிட்டு, களைத்துப் போய்க் கடுப்புடனிருந்த பிரபாகரனைப் பார்த்து அத் திட்டம் பற்றி அவரது கருத்தைக் கேட்டார் டிக்சிட். நான் எதிர்பார்த்தது போலவே வெடுக்கென்று, சுருக்கமாகப் பதிலளித்தார் பிரபாகரன். அவரது தொனியில் ஆத்திரம் தெறித்தது. "தமிழர் தாயகம் என்பது ஒன்றுதான். அதனைப் பிரிக்க முடியாது. ஜெயவர்த்தனா அதைப் பிரித்துக் கூறுபோட நாம் அனுமதிக்கப் போவதில்லை." என்று உறுதிபடச் சொன்னார். பிரபாகரனின் அந்த வசனத்தை நான் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கூறியபொழுது டிக்சிட்டின் முகம் சுருங்கியது. ஜெயவர்த்தனாவின் திட்டத்திலுள்ள குறைபாடுகளையும் ஆபத்துகளையும் நான் டிக்சிட்டுக்கு விளக்கிக் கூறினேன். விடுதலைப் புலிகளின் தலைமையோ அன்றித் தமிழீழ மக்களோ இத் திட்டத்தை ஒருபொழுதும் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை

என்பதைத் தெட்டத் தெளிவாக அவரிடம் எடுத்துரைத்தேன். தனது நிலைப்பாட்டிலிருந்து பிரபாகரன் சிறிதளவும் விட்டுக் கொடுக்க மாட்டார் என்பதை நன்குணர்ந்த இந்திய தூதுவர் தனது முயற்சியைக் கைவிட்டு, வெளியுறவுச் செயலர் வெங்கடேஸ்வரனை எம்முடன் பேசுமாறு அழைத்தார்.

நாம் மிகவும் சோர்ந்துபோய் சினத்துடன் இருப்பதை அவதானித்த வெங்கடேஸ்வரன் எம்முடன் மிகவும் அன்பாகப் பண்பாகத் தமிழில் பேசினார். ஜெயவர்த்தனாவின் திட்டம் தொடர்பாக நாம் கொண்டுள்ள நிலைப்பாட்டினை திரு. டிக்சிட் தமக்கு எடுத்துக் கூறியதாகச் சொன்னார். அந்தத் திட்டத்தை திரும்பவும் விபரித்து விளக்க அவர் முனையவில்லை. தமிழ் மக்கள் எதிர்கொண்டுள்ள நெருக்கடி நிலைபற்றி ரஜீவ் காந்தி ஆழமான கவலை கொண்டிருப்பதாகத் தனது உரையாடலை ஆரம்பித்த வெங்கடேஸ்வரன், இனப் பிரச்சினைக்கு நியாயமான ஒரு தீர்வைக் காண்பதில் இந்தியப் பிரதமர் நேர்மையாக அக்கறை கொண்டிருக்கிறார் எனத் தெரிவித்தார். தமிழ் மக்களின் அபிலாசைகளை நிறைவேற்றுவதற்கு ஜெயவர்த்தனாவை இணங்க வைக்க முடியுமென ரஜீவ் காந்தி நம்பிக்கை கொண்டிருப்பதாகவும் தெரிவித்தார். ஜெயவர்த்தனா அரசு முன்வைத்துள்ள திட்டம் தமிழ்மொழி வாரியான தாயகப் பிரதேசக் கோரிக்கையை ஒரு மட்டத்திற்கு நிறைவுசெய்ய முனைவதாகக் கூறிய வெங்கடேஸ்வரன், இதனை ஒரு இடைக்காலத் தீர்வாக நாம் கருதவேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். இந்த இடைக்காலத் தீர்வை நாம் ஏற்றுக் கொண்டால், ரஜீவ் காந்திக்கு அது பெரும் இராஜதந்திரச் சாதனையாக அமையும் என்றும் சொன்னார். இந்த சார்க் உச்சி மாநாடு இந்தியப் பிரதமருக்கு ஒரு வெற்றிகரமான அரங்காக மாறுவதற்கு நாம் ஒத்துழைக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். முடிவில், நாம் எமது நிலைப்பாட்டை மறுபரிசீலனை செய்து ஆக்கபூர்வமான முடிவை எடுக்கும்படியும் வேண்டினார். பிரபாகரனால் சினத்தை அடக்க முடியவில்லை. அது சொற்களாகச் சீறியது. "ரஜீவ் காந்தியைத் திருப்திப்படுத்தி அவரது புகழை ஓங்கச் செய்வதற்காக எமது மக்களின் அரசியல் இலட்சியத்தை கைவிடச் சொல்கிறீர்களா?" பிரபாகரனின் சீற்றத்தால் வெங்கடேஸ்வரன் ஆடிப்போனார். எமது உணர்ச்சியைத் தம்மால் புரிந்து கொள்ள முடிகிறது எனச் சமாதானம் கூறிச் சமாளித்தார். அங்கிருந்து வெங்கடேஸ்வரன்

நழுவிச் சென்றதை அடுத்து, நட்வர் சிங் எம்மை அணுகினார். அவர் பேச்சைத் தொடங்குவதற்கு முன்னரே நான் குறுக்கிட்டு, சிறீலங்கா அரசின் திட்டத்திலுள்ள குறைபாடுகளை எடுத்து விளக்கி, அந்த யோசனையை எமது இயக்கமும் எமது மக்களும் ஒருபொழுதும் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை என உறுதிபடக் கூறினேன். நட்வார் சிங் ஒரு வித்தியாசமான மனிதர். மற்றவர்களின் கருத்துக்களுக்கு மதிப்பளிப்பவர். நான் கூறியதை அவர் பொறுமையாகக் கேட்டார். எமது நிலைப்பாட்டின் நியாயப்பாட்டினைத் தன்னால் புரிந்துகொள்ள முடிகிறது என்றார். ஜெயவர்த்தனாவின் யோசனையை ஏற்றுக் கொள்ளுமாறு அவர் கேட்டுக் கொள்ளவில்லை. மூளைக்கு வதையாக அமைந்த இந்த நீண்ட பேச்சுக்கள் ஒருவாறு முடிவுக்கு வர அதிகாலை நான்கு மணி ஆகிவிட்டது. அதன்பின்னர் எமது அறைகளுக்குச் சென்று ஓய்வு எடுக்க அனுமதி கிடைத்தது.

ஜெயவர்த்தனாவின் யோசனையை நாம் மிகவும் வன்மையாக எதிர்த்து நின்றபோதும் ரஜீவ் காந்தி இலகுவில் விட்டுக் கொடுப்பது போலத் தெரியவில்லை. அத் திட்டத்தை எப்படியாவது எம்மீது திணித்துவிட வேண்டும் என்பதில் விடாப் பிடியாக நின்றார். எம்மை இணங்க வைக்கும் இறுதி ஆயுதமாகத் தமிழக முதல்வர் திரு. எம்.ஜி.இராமச்சந்திரன் பங்களூருக்கு அழைக்கப்பட்டார். எம்.ஜி.ஆருக்கும் பிரபாகரனுக்கும் மத்தியிலான நெருங்கிய நட்புறவைப் பயன்படுத்திப் புலிகளின் தலைவரைப் பணிய வைக்கலாம் என ரஜீவ் காந்தி எண்ணினார் போலும்.

மறுநாள் மாலை பங்களூரிலுள்ள ராஜ் பவான் மாளிகையில் தமிழக முதல்வரை நாம் சந்தித்தோம். முதல்வருக்கு உதவியாக, தமிழ்நாடு உணவு அமைச்சர் திரு. பண்டுருட்டி இராமச்சந்திரனும் அங்கிருந்தார். சிங்கள அரசு முன்வைத்துள்ள யோசனைத் திட்டத்தில் அடங்கியுள்ள பாரதூரமான எதிர்மறை அம்சங்களை நாம் எம்.ஜி.ஆருக்குத் தெளிவாக எடுத்து விளக்கினோம். தமிழ்மொழி வாரியான தமிழ்த் தாயகமாக வடக்கு கிழக்கு மாகாணங்கள் ஒன்றாக இணைக்கப்பட வேண்டும் என்பதே தமிழ் மக்களின் நீண்ட காலக் கோரிக்கை. இந்தக் கோரிக்கைக்கு முற்றிலும் மாறாக, கிழக்கு மாகாணத்தை இனரீதியாகவும், மதரீதியாகவும் முக்கூறுபோடும் நாசகாரத் திட்டமொன்றை ஜெயவர்த்தனா முன்வைத்திருக்கிறார். இத் திட்டத்தை ஏற்றுக் கொள்ளுமாறு ரஜீவ் அரசு எமக்கு அழுத்தம்

போடுகிறது. இத் திட்டம் ஏற்றுக் கொள்ளப்பட்டால் தமிழ்த் தாயக நிலம் பிளவடைந்து சிதைந்து போகும். அத்துடன் தமிழ், முஸ்லிம் மக்களுக்குச் சொந்தமான பெருநிலப் பரப்புகள் சிங்களவர்களுக்கு உரித்தாகிவிடும். இதனாலேயே இந்த எல்லை வரையறுப்புத் திட்டத்தை நாம் வன்மையாக எதிர்க்கிறோம் எனத் தமிழகத் தலைவர்களுக்கு விரிவாகத் தெளிவாக எடுத்து விளக்கினோம்.

எம்.ஜி.ஆரின் மதிநுட்பமான மூளை, ஜெயவர்த்தனாவின் சதித் திட்டத்தை உடனடியாகவே கிரகித்துக் கொண்டது. அந்தத் திட்டத்திலுள்ள எதிர்மறை அம்சங்களை இந்திய மத்திய அரசும், குறிப்பாக ரஜீவ் காந்தியும் புரிந்து கொள்ளாததையிட்டு அவர் ஆச்சரியப்பட்டார். எமது நிலைப்பாடு நியாயமானது, யதார்த்தமானது எனக் கூறிய எம்.ஜி.ஆர், இவ் விவகாரத்தில் எமது விருப்புக்கு மாறாகத் தான் தலையிடப் போவதில்லை என உறுதியளித்தார். அத்துடன் பங்களூர் பேச்சுக்கள் முடிவுக்கு வந்தன.

தமிழரின் நலனிலும், அரசியல் இலட்சியத்திலும் பற்றுறுதிகொண்ட புலிகளின் தலைவனை எந்த வழியிலும் மடக்கிவிட முடியாது என உணர்ந்து கொண்ட இந்திய ஆட்சியாளர்கள் இறுதியில் எம்மை சென்னைக்குத் திரும்ப அனுமதித்தார்கள். ஆயினும், புலிகளின் தலைமை மீது இந்திய அரசுக்கு ஆத்திரமும் அதிருப்தியும் ஏற்படவே செய்தது. பங்களூர் சார்க் மாநாட்டில், இலங்கைப் பிரச்சினை தொடர்பாக ஒரு ராஜதந்திர சாதனையைப் பறைசாற்றலாம் எனக் கனவு கண்ட ரஜீவ் காந்திக்கு மீண்டும் இந்திய மத்தியஸ்துவ முயற்சி பின்னடைவு கண்டது பெரும் ஏமாற்றத்தையும் கொடுத்தது. அத்தோடு சார்க் உச்சி மாநாட்டில் இந்திய அரசை வன்மையாகக் கண்டித்து ஜெயவர்த்தனா ஆற்றிய உரை ரஜீவை மேலும் சினத்திற்கு ஆளாக்கியது. சமாதான சக வாழ்வு, அயல்நாடுகளில் தலையிடாக் கொள்கை போன்ற சார்க் நாடுகளின் இலட்சியங்களை மீறி 'தமிழ்ப் பயங்கரவாதத்திற்கு' இரகசிய உதவிகளை வழங்கி வருவதாக இந்தியா மீது ஜெயவர்த்தனா குற்றம் சுமத்தினார். உலக அரங்கில் பகிரங்கமாகப் பழிசுமத்தப்பட்டது இந்திய அரசுக்கு அவமானத்தை ஏற்படுத்தியது. இதற்காக இந்திய அரசு ஜெயவர்த்தனாவைப் பகைத்துக் கொள்ளவில்லை. இந்த அவமானமும் அவமதிப்பும் ஆத்திரமாக வடிவெடுத்து விடுதலைப்

புலிகள் மீது திரும்பியது. இந்தியாவின் நல்லாதரவு தொடர்ந்தும் நீடிக்காது என்பதை உணர்த்தி, பிரபாகரனுக்கு தனது ஆழ்ந்த அதிருப்தியைத் தெரிவிக்க ரஜீவ் அரசு முடிவெடுத்தது. நாங்கள் பங்களூரிலிருந்து சென்னைக்குத் திரும்பிய ஒரு சில நாட்களில் ஆத்திரமூட்டும் அச் சம்பவம் நிகழ்ந்தது.

உதவிப் பொலீஸ் மாஅதிபர் மோகனதாஸின் கீழ் இயங்கும் தமிழ் நாட்டு இரகசிய பொலீஸார் விடுதலைப் புலிகளின் இரகசியத் தங்குமிடங்கள், செயலகங்கள், பயிற்சி முகாம்கள் ஆகியனவற்றில் திடீர்ச் சோதனை நடத்தி, நவீன தொலைத் தொடர்புக் கருவிகள் அனைத்தையுமே பறிமுதல் செய்தனர். இதன் விளைவாக பிரபாகரனுக்கும் தமிழீழத்திலும், தமிழகத்திலும் செயற்பட்ட விடுதலைப் புலிகளின் படை முகாம்களுக்கும் பயிற்சி முகாம்களுக்கும் மத்தியிலான தொடர்பு திடீரெனத் துண்டிக்கப்பட்டது. சென்னை நகரிலிருந்து தனது கட்டளைக் கட்டுப்பாட்டுக் கட்டமைப்பை இயக்கி வந்த பிரபாகரன் தகவல் தொடர்புகள் அனைத்தும் துண்டிக்கப்பட்டதால் செயலிழந்து முடங்கினார். இந்திய மத்திய, மாநில அரசுகள் கூட்டாக இணைந்து மேற்கொண்ட இந்த நடவடிக்கை பிரபாகரனைக் கொதிப்படையச் செய்தது. தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர் அவர்களை தொடர்புகொள்ள நான் மேற்கொண்ட முயற்சிகள் எதுவும் பலனளிக்கவில்லை. அவர் சேலத்தில் தங்கியிருப்பதாகவும் அவருடன் தொடர்பு கொள்வது சாத்தியமில்லை எனவும் எமக்குத் தெரிவிக்கப்பட்டது.

கோபாவேசத்துடன் எனது இருப்பிடத்திற்கு வந்த பிரபாகரன் "நரம்பு மையத்தில் கை வைத்து விட்டார்கள். இதனை அனுமதிக்க முடியாது. எப்படியாவது இந்தக் கருவிகளை திருப்பிப் பெறவேண்டும்" என்றார். எம்.ஜி.ஆர் மீதும் அவருக்கு ஆத்திரம். மோகனதாஸ் எம்.ஜி.ஆரின் கையாள். ஆகவே, முதல்வருக்குத் தெரியாமல் இந்தக் காரியம் நடந்திராது என்பது பிரபாகரனது வாதம். மத்திய, மாநில அரசுகளை இனிமேல் நம்ப முடியாது என்றும் தொடர்ந்தும் தமிழ் நாட்டில் தங்கியிருப்பது தனது உயிருக்கே ஆபத்தாக முடியும் என்றும் சொன்னார். தொலைத் தொடர்புக் கருவிகளைத் திருப்பிப் பெறுவது எப்படி என நான் மூளையைப் பிய்த்துக் கொண்டிருந்தபோது, 'அதற்கு ஒரே வழிதான் உண்டு' என்றார் பிரபாகரன். அப்பொழுதுதான் அந்த வியப்பூட்டும் தீர்மானத்தை அறிவித்தார். தொலைத்தொடர்புக் கருவிகளை திருப்பிக் கொடுக்குமாறு கோரி

தான் சாகும்வரை உண்ணாவிரதம் கடைப்பிடிக்கப் போவதாகச் சொன்னார். உடனடியாகவே, அந்தக் கணத்திலிருந்தே எனது வீட்டில் உண்ணாவிரதத்தை ஆரம்பிக்கப் போவதாகக் கூறினார். நான் சிறிது தடுமாறிப் போனேன். என்ன சொல்லியும் அவர் கேட்டபாடில்லை. தனது தீர்மானத்தில் பிரபாகரன் மிகவும் உறுதியாக நின்றார். என்னவாக முடியுமோ என்ற அச்சம் எனது ஆன்மாவின் ஆழத்தில் படர்ந்தது. பிரபாகரன் நம்பிக்கையுடன் உண்ணாவிரதத்தைத் தொடங்கினார். தனது முயற்சி நிச்சயமாக வெற்றிபெறும் என அவரது உள்ளுணர்வுக்குத் தெரிந்தது போலும். உணவையும் நீரையும் துறந்த கடும் விரதமாக, சென்னை இந்திரா நகரிலுள்ள எனது வீட்டில் தனது சாகும்வரையிலான சாத்வீகப் போராட்டத்தை ஆரம்பித்தார் பிரபாகரன்.

உண்ணாவிரதம் ஆரம்பமாகியதை அடுத்து உடனடியாகவே நான் ஒரு பத்திரிகையாளர் மாநாட்டைக் கூட்டி, பிரபாகரனின் உண்ணாவிரதப் போராட்டத்திற்கான காரணத்தை உலகிற்கு தெரியப்படுத்தினேன். மறுநாள் காலை விடுதலைப் புலிகளின் தலைவரது சாகும் வரை உண்ணாவிரதப் போராட்டத்திற்கு முக்கியத்துவம் கொடுத்துத் தமிழக ஊடகங்கள் செய்தியைப் பிரசுரித்தன. அந்தச் செய்தி தமிழ் நாட்டில் பரபரப்பை ஏற்படுத்தியது. உடனடியாகவே தமிழக அரசியல்வாதிகள், விடுதலைப் புலிகளின் ஆதரவாளர்கள், ஊடகவியலாளர், தமிழீழ விடுதலை விரும்பிகள் என்ற ரீதியில் ஏராளமானோர் எனது இல்லத்திற்கு வருகை தந்து புலிகளின் தலைவருக்குத் தமது நல்லாதரவைத் தெரிவித்தார்கள். ஆர்வம்கொண்ட தமிழ்நாட்டுப் பொதுமக்களும் எனது வீட்டுக்கு முன்பாகப் பெரும்தொகையில் அணிதிரண்டு உண்ணாவிரதத்திற்கு ஆதரவாகக் குரல் எழுப்பினார்கள். பல்வேறு அரசியற் கட்சிகளும், சமூக அமைப்புகளும், பத்திரிகைகளும் மத்திய, மாநில அரசுகளைக் கண்டித்து அறிக்கைகளை வெளியிட்டன. பிரபாகரனின் சாகும்வரை உண்ணாவிரதப் போராட்டம் தமிழ்நாட்டில் ஒரு அரசியல் சூறாவளியைக் கிளப்பிவிட்டது. தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர். கதி கலங்கிப் போனார். பிரபாகரனின் உண்ணாவிரதப் போராட்டம் தமிழ் நாட்டில் ஒரு அரசியல் கொந்தளிப்பை ஏற்படுத்துமென அவர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. விடுதலைப் புலிகளின் தொலைத்தொடர்புக் கருவிகள் பறிமுதல் செய்யப்பட்ட விவகாரம் தனக்குத்

தெரியாது என அறிக்கை வெளியிட்டார். மாநில அரசு மத்திய அரசு மேல் பழி சுமத்த, மத்திய அரசு மாநில அரசு மீது குற்றம் சுமத்தியது. இறுதியில் மத்திய மாநில அரசுகள் ஒன்று சேர்ந்து தமிழகக் காவல்துறை மீது பழியைச் சுமத்தின. ஈழ விடுதலைப் போராட்டமும், விடுதலைப் புலிகள் இயக்கமும் தமிழ் நாட்டில் மிகப் பிரபல்யம் பெற்றிருந்த கால கட்டம் அது. புலிகளின் வீரம்செறிந்த ஆயுதப் போராட்டமும் அவர்களது அற்புதமான தியாகங்களும் தமிழ்நாட்டுத் தமிழர்களைப் பெருமிதம் கொள்ளச் செய்தன. தலைவர் பிரபாகரன் மாவீரனாகவும் ஒரு வரலாற்று நாயகனாகவும் போற்றப்பட்டு மதிக்கப்பட்டார். அத்தகைய ஒரு சுதந்திர வீரனை இம்சைப்படுத்தி, ஈழத் தமிழரின் சுதந்திரப் போராட்டத்திற்கு பங்கம் விளைவிக்கும் வகையில் மத்திய, மாநில அரசுகள் செயற்பட்டமை தமிழக மக்களுக்கு சினத்தைக் கொடுத்தது. சிங்கள இனவாத ஆட்சியாளரை திருப்திப்படுத்தும் நோக்கத்துடன் தமிழகத்தில் தஞ்சம் புகுந்திருந்த புலிகள் இயக்கத் தலைமைமீது காவல்துறையினர் பழிவாங்கும் நடவடிக்கையை எடுக்க அனுமதி வழங்கியதையிட்டு எம்.ஜி.ஆரின் நிர்வாகம் மீதும் கண்டனக் குரல் எழுப்பப்பட்டது. சாகும்வரை உண்ணாவிரதம் தொடர்ந்து, விடுதலைப் புலிகளின் தலைவருக்கு உயிராபத்து நிகழ்ந்தால் அதனால் ஏற்படக்கூடிய அரசியல் விளைவுகள் பாரதூரமாக அமையுமென எம்.ஜி.ஆர் அச்சம் கொண்டார்.

பிரபாகரன் உண்ணாவிரதம் ஆரம்பித்து இரண்டாவது நாள் தமிழக முதல்வர் என்னுடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டார். தொலைத்தொடர்பு சாதனங்களை திருப்பி ஒப்படைக்குமாறு தான் தமிழக காவல்துறையினருக்கு உத்தரவு பிறப்பிப்பதாகவும் உடனடியாக உண்ணாவிரதத்தைக் கைவிடுமாறு பிரபாகரனிடம் ஆலோசனை கூறுமாறும் எம்.ஜி.ஆர் என்னிடம் கேட்டுக் கொண்டார். எம்.ஜி.ஆரின் வேண்டுகோளுக்கு பிரபாகரன் இணங்கவில்லை. தொலைத்தொடர்புக் கருவிகளை திருப்பிப் பெறும் வரைக்கும் தான் உண்ணாவிரதத்தைக் கைவிடப் போவதில்லை என அவர் உறுதிபட நின்றார். பிரபாகரனின் பிடிவாதமான நிலைப்பாட்டை தமிழக முதல்வருக்கு நான் தெளிவாக எடுத்துக் கூறினேன். "பிரபாகரன் ஆழமாக வேதனை அடைந்திருக்கிறார். தொலைதொடர்புக் கருவிகளைப் பறித்து, தமிழீழக் களங்களிலுள்ள போராளிகளுடன் தொடர்பைத் துண்டித்தது பாரதூரமான ஒரு பழிவாங்கும் நடவடிக்கையாக

அவர் கருதுகிறார். தொலைத்தொடர்புச் சாதனங்கள் திருப்பி அவரிடம் ஒப்படைக்கப்பட்டாலன்றி அவர் உண்ணாவிரதத்தைக் கைவிடப் போவதில்லை" என்று அவரிடம் கூறினேன். எம்.ஜி.ஆர் சிறிது நேரம் சிந்தித்தார். தமிழகக் காவல்துறை உயர்பீடத்துடன் கலந்தாலோசித்து சீக்கிரமாக ஒரு முடிவு எடுப்பதாகச் சொன்னார். விடுதலைப் புலிகளின் தொலைத்தொடர்புக் கருவிகளை பறிமுதல் செய்த விவகாரம் தமிழ்நாட்டில் அரசியல் கொந்தளிப்பை ஏற்படுத்துமென எம்.ஜி.ஆர் எதிர்பார்க்கவில்லை.

பிரபாகரனின் உண்ணாவிரதப் போராட்டத்திற்கு இந்திய ஊடக உலகம் கொடுத்த முக்கியத்துவமும், ஈழத் தமிழரின் உரிமைப் போராட்டத்திற்கு மத்திய, மாநில அரசுகள் அநீதி இழைத்துள்ளதாக எதிர்க்கட்சிகள் மேற்கொண்ட தீவிரப் பிரச்சாரமும் தமிழக முதல்வரை ஒரு சங்கடமான நிலைக்குத் தள்ளியது. ஈழத் தமிழரது விடுதலைப் போராட்டத்தின் காவல்தெய்வம் என அவருக்கு இருந்த புகழ்ச்சியையும் இழந்து, புலிகளின் தலைமையுடன் கொண்டிருந்த நெருங்கிய நட்புறவையும் துறந்துவிட எம்.ஜி.ஆர் விரும்பவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, பிரபாகரனுக்கு உண்ணாவிரதத்தால் ஏதாவது, தீங்கு நேருமோ என அவர் அச்சம் கொண்டார். புலிகளின் தலைவருக்கு உயிராபத்து நிகழ்ந்தால் அதன் அரசியல் விளைவுகள் படுபாதகமாக இருக்கும் என்பதும் அவருக்கு நன்கு தெரியும். இது இவ்வாறிருக்க, விடுதலைப் புலிகளின் தொலைத்தொடர்புக் கருவிகள் பறிக்கப்பட்ட விவகாரத்திற்கும் மத்திய அரசுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை என இந்திய மத்திய அமைச்சரான திரு. சிதம்பரம் அறிக்கை ஒன்றை வெளியிட்டார். இந்த அறிக்கை தமிழக அரசு மீது முழுப் பழியையும் சுமத்தியதால் எம்.ஜி.ஆருக்கு அது அவமானத்தையும் ஆத்திரத்தையும் ஏற்படுத்தியது. இப்படியான நிலைமைகளினால் சினமடைந்த எம்.ஜி.ஆர், விடுதலைப் புலிகளின் தொலைத்தொடர்புக் கருவிகளை உடனடியாகத் திருப்பி ஒப்படைக்குமாறு தமிழகக் காவல்துறையினருக்கு உத்தரவு பிறப்பித்தார். பறிமுதலான கருவிகள் அனைத்தும் திருப்பி ஒப்படைக்கப்பட்டன. தமிழக காவல்துறை அதிகாரிகள் அவற்றை எடுத்து வந்து பிரபாகரன் முன்பாக வைத்தார்கள். தனது சாத்வீகப் போராட்டம் வெற்றியடைந்த மகிழ்ச்சியில் பிரபாகரன் உண்ணாவிரதத்தைக் கைவிட்டார். நாற்பத்து எட்டு மணிநேர உண்ணாநோன்பு முடிவுக்கு வந்தது.

உண்ணாவிரதம் கைவிடப்பட்டு சில நாட்களுக்குப் பின்பு, பிரபாகரனையும் என்னையும் தனது இல்லத்திற்கு அழைத்தார் எம்.ஜி.ஆர். நீண்ட நேரமாக மனம்திறந்து பேசினோம். ஜெயவர்த்தனாவின் சூத்திரதாரச் சதிவலைக்குள் ரஜீவ் அரசு சிக்கி வருகிறதென்பதை எடுத்து விளக்கிய நாம், இந்தப் போக்கு ஈழ விடுதலைப் போராட்டத்தை ஆழமாகப் பாதிக்கும் எனவும் கூறினோம். தமிழகக் காவல்துறையினரது அடாவடி நடவடிக்கைகளுக்கு மோகனதாஸ் மீது முழுப் பழியையும் சுமத்திய முதலமைச்சர், எமது விடுதலைப் போராட்டத்திற்கு தம்மாலான சகல உதவிகளையும் செய்யத் தயாராக இருப்பதாக சொன்னார். நல்லதொரு நல்லெண்ண சூழ்நிலையை நழுவவிடக்கூடாது என்பதற்கு அமைய, அன்றைய சந்திப்பில் நாம் எம்.ஜி.ஆரிடம் சில சலுகைகளைக் கேட்டோம். எமது இயக்கத்திடமிருந்து பறிமுதல் செய்த ஆயுதங்களையும் ஏனைய அமைப்புகளிடமிருந்தும் கைப்பற்றிய ஆயுதங்களையும் எமக்குத் திருப்பி ஒப்படைக்குமாறு அவரிடம் வேண்டுகோள் விடுத்தோம். எவ்வித தயக்கமுமின்றி அதற்கு இணங்கினார் எம்.ஜி.ஆர். மோகனதாஸ் மூலமாகவே பறிமுதலாகிய ஆயுதங்கள் அனைத்தையும் விரைவில் எங்கள் வசம் ஒப்படைக்கப் போவதாக உறுதியளித்தார். அவர் உறுதியளித்தது போலவே பெருந் தொகையான ஆயுத தளபாடங்கள் எமது அமைப்பிடம் கையளிக்கப்பட்டன. ஆயுத பறிமுதல் ஈற்றில் எமது ஆயுத பலத்தை பல மடங்கு அதிகரிக்கச் செய்தது. விடுதலைப் புலிகளைப் பலப்படுத்தும் நோக்குடனேயே எம்.ஜி.ஆர் ஆயுதப் பறிமுதல் என்ற நாடகத்தை மேடையேற்றினார் என்றும் எழுதியிருக்கிறார் ஒரு சிங்கள அரசியல் ஆய்வாளர்.

> "தீவிரவாத அமைப்புகளிடம் ஆயுதங்கள் திருப்பி ஒப்படைக்கப்பட்டதாக மோகனதாஸ் கூறியிருப்பது தவறாகும். விடுதலைப் புலிகளிடம் மட்டுமே ஆயுதங்கள் திருப்பி ஒப்படைக்கப்பட்டன. புலிகளின் ஆயுதங்கள் மட்டுமன்றி ஏனைய அமைப்புகளிடமிருந்து பறிமுதலான ஆயுதங்களும் புலிகளிடமே கொடுக்கப்பட்டன. இதிலிருந்து ஒரு விடயம் தெளிவாகிறது. அதாவது, ஏனைய அமைப்புகளைப் பலவீனப்படுத்தி, விடுதலைப் புலிகளைப் பலப்படுத்தும் நோக்குடனேயே முதலமைச்சர் இந்த ஆயுதப் பறிமுதல் நடவடிக்கையை எடுத்திருந்தார்."[18]

எம்.ஜி.ஆர் அவர்களின் அன்பும், மனித பண்பும், அவரது தாராள மனப்பான்மையும், ஈழத் தமிழரின் அவல வாழ்க்கை பற்றி அவருக்கிருந்த ஆழமான புரிந்துணர்வும், ஆயுதப் போராட்டத்திற்கு அவர் வழங்கிய பேராதரவும் - இப்படியாக, தனிச் சிறப்பு வாய்ந்த அவரது குணாம்சங்கள் பிரபாகரனை வெகுவாகக் கவர்ந்தது. முதலமைச்சரின் அன்பும் ஆதரவும் இருந்தபோதும், தமிழ் நாட்டில் தொடர்ந்தும் தங்கியிருந்து ரஜீவ் நிர்வாக பீடத்தின் அழுத்தங்களுக்கும் நெருக்குவார ராஜதந்திரத்திற்கும் ஆளாவதைப் பிரபாகரன் விரும்பவில்லை. குறிப்பாக, தமிழ்நாட்டுக் காவல்துறையினரால் கைது செய்யப்பட்டு அவமானத்திற்கு ஆளான சம்பவமும் உண்ணாவிரத அனுபவமும் அவரை வெகுவாகப் பாதித்திருந்தது. இந்தியாவின் தயவில் தங்கியிருக்க முடியாது என்பதை இந்த அனுபவங்கள் அவருக்கு உணர்த்தியது. இந்திய அரசின் ஆதிக்கப் பிடியிலிருந்து முற்றாக விடுபட்டு, தமிழீழத்தில் சுதந்திரமாகச் செயற்பட்டு விடுதலைப் போராட்டத்தை முன்னெடுப்பதையே பிரபாகரன் விரும்பினார். இதன்படி அவர் தமிழ்நாட்டிலிருந்து வெளியேற ஒழுங்குகள் செய்தார். 1987 ஜனவரி மாதம் முற்பகுதியில், இரகசியமாகப் பாக்கு நீரிணையைக் கடந்து யாழ்ப்பாணம் சென்றடைந்தார் பிரபாகரன். அவரது பணிப்பின் பேரில் நானும் எனது மனைவியும் மற்றும் சில மூத்த உறுப்பினர்களும் தமிழ் நாட்டில் தங்கியிருந்து அரசியல் பணியாற்றினோம்.

## யாழ்ப்பாணம் மீதான படையெடுப்பு

வன்முறைச் சூறாவளி வீசும் இலங்கைத் தீவின் அரசியல் வரலாற்றிலே 1987ஆம் ஆண்டு மிகவும் கொந்தளிப்பான காலமாக அமைந்தது. வழமைக்கு மாறான நிகழ்வுகளும், பயங்கரமான வன்முறைச் சம்பவங்களும் இக் கால கட்டத்தில் இடம்பெற்றன. இவ்வாண்டின் முதல் ஆறு மாதங்களில் நிகழ்ந்த அரச ஆயுதப் படைகளின் வன்முறையும் அதற்குப் பதிலடியாக இடம்பெற்ற விடுதலைப் புலிகளின் கெரில்லாத் தாக்குதல்களும் இன நெருக்கடியை மேலும் உக்கிரமடையச் செய்தன. புலிகளின் கெரில்லாப் போர் நடவடிக்கைகள் தீவிரமடைந்ததால் அரச படைகளுக்குப் பாரிய உயிர்ச் சேதம் ஏற்பட்டது. இதனால்

திகிலடைந்த ஜெயவர்த்தனா தமிழரின் ஆயுத இயக்கத்திற்கு எதிராக பெரியதொரு யுத்தத்தை ஏவிவிடும் நோக்குடன் சிங்கள இராணுவ இயந்திரத்தைப் பலப்படுத்த முயற்சிகளை எடுத்தார். இந்திய மத்தியஸ்துவ முயற்சியின் நேர்மையில் அவருக்கு நம்பிக்கை இருக்கவில்லை. இந்திய மத்தியஸ்துவமானது விடுதலைப் புலிகளை சாந்தப்படுத்தி வழிக்குக் கொண்டுவரத் தவறிவிட்டது என்பதே அவரது கணிப்பீடு. அதி தீவிரமாக வளர்ந்து வந்த தமிழ்ப் புலிகளின் இராணுவ வலுவும் போரியல் ஆற்றலும் ஜெயவர்த்தனாவைப் பிரமிக்க வைத்தது. இந்திய மத்திய அரசும், தமிழ்நாட்டு மாநில அரசும் இராணுவ, நிதி உதவிகள் வழங்கி வருவது காரணமாகவே புலிகள் இயக்கம் போரியல் ரீதியாகப் பெருவளர்ச்சி கண்டுள்ளதாக அவர் சந்தேகித்தார். இந்திய மத்தியஸ்துவ முயற்சிக்கு ஆதரவு வழங்குவது போல நடித்து, ரஜீவ் காந்தியை ஒரு புறம் ஏமாற்றிக் கொண்டு, மறுபுறத்தில் பாகிஸ்தான், இஸ்ரேல், அமெரிக்கா, சீனா போன்ற நாடுகளிடம் ஆயுத உதவிகளையும் இராணுவப் பயிற்சியையும் பெற்று, படை பலத்தை வலுப்படுத்தி, யாழ்ப்பாணக் குடாநாடு மீதான பெரியதொரு படையெடுப்புக்கு ஆயத்தங்களைச் செய்தார் ஜெயவர்த்தனா. அதே சமயம், வடக்கு மாகாணம் மீது ஒரு இறுக்கமான பொருளாதாரத் தடையையும் சிங்கள அரசு திணித்தது. விடுதலைப் புலிகளின் ஆயுதப் போராட்டத்திற்கு நல்லாதரவை வழங்கிய தமிழ் மக்களுக்கு ஒரு கூட்டுத் தண்டனையாகவே இப் பொருளாதாரத் தடை விதிக்கப்பட்டது. இவை ஒருபுறமிருக்க, காவல்துறையினரின் விசேட அதிரடிப் படையை ஒரு சிறப்புப் படையணியாக விரிவாக்கம் செய்து நவீனமயப்படுத்திய ஜெயவர்த்தனா, அதன் மூத்த அதிகாரிகளை விசேட பயிற்சிக்காக இஸ்ரேலுக்கும் பாகிஸ்தானுக்கும் அனுப்பி வைத்தார். 1987இன் ஆரம்ப மாதங்களில் பசுபிக் கட்டளைப் பீடத்தைச் சேர்ந்த அமெரிக்க இராணுவ உயர் அதிகாரிகள் குழுவொன்று கொழும்புக்கு வருகை தந்து, எதிர்ப் புரட்சித் தந்திரோபாயங்கள் குறித்துச் சிங்கள இராணுவ உயர்பீடத்திற்கு ஆலோசனை வழங்கியது. இவ்வாறு யாழ்ப்பாணம் மீதான படையெடுப்புக்கு மிகவும் கவனமாகவும், படிப்படியாகவும் ஆயுதப் படைகளைப் பலப்படுத்தி, தயார் நிலைப்படுத்தினார் ஜெயவர்த்தனா.

எதிர்பார்த்தது போல, யாழ்ப்பாணம் மீதான படையெடுப்பு

1987 மே மாதம் 26ஆம் நாள் அதிகாலை தொடங்கியது. 'விடுதலை நடவடிக்கை' (Operation Liberation) என்ற குறியீட்டுப் பெயருடன், விமான, கடற்படைத் தாக்குதலின் உதவியுடன் பத்தாயிரம் துருப்புக்களைக் கொண்ட படையணிகள் கனரகப் பீரங்கிகள், டாங்கிகள் சகிதம் குடாநாடு மீது பெரும் படையெடுப்பைத் தொடங்கின. 'புலிகளின் இதயபூமி' எனக் கருதப்பட்ட வடமராட்சிப் பிரதேசத்தை சிங்கள இராணுவத்தின் முழுக் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வருவதே இப் படை நடவடிக்கையின் முதற்கட்டத் தந்திரோபாய நோக்காக அமைந்தது. வடமராட்சிக் கடலோரப் பட்டினங்கள், கிராமங்கள் மீது விமானங்களும் கடற்படைப் போர்க் கப்பல்களும் குண்டுமழை பொழிந்து பேரழிவை ஏற்படுத்திய வேளை தரைப் படையணிகள் கடலோரமாக முன்னேறின. சிங்கள ஆயுதப் படைகளின் வியூகப் பொறிக்குள் சிக்குவதைத் தவிர்க்கும் நோக்கில் விடுதலைப் புலிகளின் கெரில்லா அணிகள் வடமராட்சியிலிருந்து, தந்திரோபாயமாகப் பின்வாங்கின. சிங்களப் படையணிகள் வடமராட்சி உட்பகுதிக்குள் நுழைந்து தம்மை நிலைப்படுத்திய பின்னர் அவர்கள் மீது கெரில்லாத் தாக்குதல்களை நடத்துவதெனப் புலிகளின் தலைமைப் பீடம் திட்டமிட்டிருந்தது. புலிப் படைகளின் எதிர்ப்பு இல்லாத சூழ்நிலையில், ஆகாய கடற்படைத் தாக்குதலின் உதவியுடன் முன்னேறிய சிங்கள இராணுவத்தினர் அப்பாவிப் பொதுமக்கள் மீது படுபாதகமான கொடும் செயல்களைப் புரிந்தனர். நிராயுதபாணிகளாக, நிர்க்கதியாக நின்ற எமது மக்கள் பெரும் தொகையில் கொன்று குவிக்கப்பட்டனர். வீடுகள், பாடசாலைகள், கோவில்கள், பொதுக் கட்டிடங்கள் தகர்க்கப்பட்டு தரைமட்டமாக்கப்பட்டன. வடமராட்சிக் கரையோரமாக அமையப் பெற்றிருந்த வரலாற்றுப் புகழ்பெற்ற தமிழர்களது புராதன பட்டினங்கள் சிதைத்து அழிக்கப்பட்டன. ஒரு வாரத்திற்குள் வடமராட்சிப் பிரதேசம் சிங்கள இராணுவத்தின் இரும்புப் பிடிக்குள் சிக்கியது. இந்தப் படை நடவடிக்கையில் பல நூற்றுக்கணக்கான பொதுமக்கள் கொன்றொழிக்கப்பட்டனர். பல ஆயிரக்கணக்கான இளைஞர்கள் சுற்றி வளைக்கப்பட்டுக் கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்ட இளைஞர்களில் நூற்றுக்கணக்கானோர் சுட்டுக் கொல்லப்பட்டனர். ஏனையோர் தென்னிலங்கையிலுள்ள பல்வேறு சிறைச்சாலைகளில் அடைத்து வைக்கப்பட்டனர். தமிழரின் உயிருக்கும் உடமைக்கும் பாரிய

அழிவை ஏற்படுத்தி, தமிழ் மக்கள் மத்தியில் திகிலையும் பீதியையும் உண்டு பண்ணுவதே இந்த படை நடவடிக்கையின் மூலோபாயமாக இருந்தது. வடமராட்சிப் படையெடுப்பை அடுத்து, ஒரு வங்கித் திறப்பு விழாவில் உரையாற்றியபொழுது ஜெயவர்த்தனா கூறிய வார்த்தைகள் அவரது நயவஞ்சக உள்நோக்கத்தை வெளிப்படுத்தின. "இந்தச் சண்டைதான் எல்லாவற்றிற்கும் முடிவு கட்டும் இறுதிச் சண்டையாக இருக்கும்" என அவர் பிரகடனம் செய்தார்.

வடமராட்சிப் பிரதேசம் வீழ்ச்சி அடைந்ததைத் தொடர்ந்து, வலிகாமம் மீது பெரும் படையெடுப்பை நிகழ்த்துவதற்கு சிங்கள ஆயுதப் படைகள் தயாராகின. வலிகாமம் பிரதேசம் மீதான படையெடுப்பின் போது தமிழீழ மக்களின் கலாச்சாரத் தலைநகரான யாழ்ப்பாணம் மீதும் பெரும் தாக்குதலை நடத்த திட்டமிடப்பட்டது. "யாழ்ப்பாணத்தை எரித்து தரைமட்டம் ஆக்க வேண்டும். பின்னர் மீண்டும் கட்டி எழுப்பலாம்"[19] என்று ஜெயவர்த்தனா தனது இராணுவத் தளபதிகளுக்குக் கட்டளையிட்டார். தனது நூல் ஒன்றில் திரு. டிக்சிட் இத் தகவலைத் தருகிறார். பொதுமக்கள் மிகச் செறிவாக வசிக்கும் யாழ்ப்பாண நகரிலும், வலிகாமப் பகுதியிலும் பெரும் படையெடுப்பு நடத்தப்பட்டால் குறைந்தது பத்தாயிரம் தமிழ்க் குடிமக்கள் கொல்லப்படலாமெனச் சிங்கள இராணுவத் தலைமை ஜெயவர்த்தனாவுக்கு அறிவித்திருந்தது. அப்படியிருந்தும் படை நடவடிக்கையை முடுக்கிவிட அவர் உறுதிபூண்டு நின்றார். சிறீலங்கா அரசாங்கத்தின் ஈவிரக்கமற்ற, கொடூரமான படை நடவடிக்கைகள் டில்லி ஆட்சியாளரை அதிர்ச்சிக்கு உள்ளாக்கியது. தமிழ்ப் பொதுமக்கள் மீது பாரிய உயிர்ச் சேதத்தை விளைவித்த சிங்கள இராணுவத்தினரின் மிருகத்தனமான போக்கு ரஜீவ் காந்தியைத் திகைக்க வைத்தது. இராஜதந்திர வழிமூலம் தெரிவிக்கப்பட்ட எச்சரிக்கைகளையும் உதாசீனம் செய்து, மனிதாபிமானமற்ற கடும் போக்கைக் கடைப்பிடித்த ஜெயவர்த்தனா மீது இந்தியப் பிரதமருக்கு ஏமாற்றமும் வெறுப்பும் ஏற்பட்டது. இலங்கையில் அப்பாவித் தமிழ் மக்கள் மீது ஏவிவிடப்பட்ட இனக்கொலைத் தாக்குதலும், அதைத் தடுத்து நிறுத்த முடியாத இந்திய அரசின் கையாலாகாத்தனமும் தமிழ் நாட்டு மக்களிடையே கொதிப்புணர்வை ஏற்படுத்தியது. பொருளாதாரத் தடைகளை விதித்து, யாழ்ப்பாணத் தமிழர்களை பட்டினி போட்டு வதைக்கும்

சிங்கள அரசு மீது சீற்றம் கொண்ட தமிழ்நாட்டு அரசியல்வாதிகள், இந்திய மத்திய அரசு தலையிட்டு ஈழத் தமிழர்களை பட்டினிச் சாவிலிருந்து காப்பாற்ற வேண்டுமென கேட்டுக் கொண்டனர். இந்தச் சூழ்நிலையில்தான் யாழ்ப்பாண மக்களுக்கு அவசரமாகத் தேவைப்படும் நிவாரண உதவிகளை கடல்மார்க்கமாக அனுப்பி வைக்க இந்திய அரசு முடிவெடுத்தது.

1987 ஜூலை 3ஆம் நாள், 40 தொன் உணவுப் பண்டங்களுடன் 19 இழுவைப் படகுகளைக் கொண்ட கப்பல் அணி ஒன்று இராமேஸ்வரத்திலிருந்து யாழ்ப்பாணம் நோக்கிப் புறப்பட்டது. இந்திய அரசின் இத் தலையீடு ஜெயவர்த்தனாவை கொதிப்படையச் செய்தது. தமிழர்களுக்கு நிவாரணப் பொருட்களைக் கொண்டு வரும் இந்தியப் படகுகளைத் தடுத்து நிறுத்துமாறு கடற்படைக்கு உத்தரவிட்டார் ஜெயவர்த்தனா. சிறீலங்காவின் போர்க் கப்பல்கள் இந்தியப் படகுகளை தடுத்து நிறுத்தின. நடுக்கடலில் ஆறுமணி நேரம்வரை நிகழ்ந்த இழுபறியின் பின்பு இந்தியப் படகுகள் திருப்பி அனுப்பப்பட்டன. 'யாழ்ப்பாணப் பொதுமக்களின் சகல தேவைகளையும் சிறீலங்கா அரசாங்கம் நிறைவுசெய்ய முடியும் என்பதால் வெளிநாட்டிலிருந்து உதவிகள் அவசியமில்லை' என ஜெயவர்த்தனாவின் ஆட்சிப்பீடம் அறிக்கை ஒன்றையும் வெளியிட்டது.

இந்தியாவின் மனிதாபிமான நடவடிக்கைக்கு எதிராக ஜெயவர்த்தனா அரசு கடைப்பிடித்த இறுமாப்பான கடும்போக்கு டில்லி ஆட்சியாளருக்குச் சினமூட்டியது. தமிழ் மக்களை இனக்கொலையிலிருந்து காப்பாற்றுவதற்குத் தேவை ஏற்படின் இராணுவ ரீதியாகவும் தலையிடுவதற்கு இந்தியா தயங்காது என்பதை ஜெயவர்த்தனாவுக்கு உணர்த்த வேண்டுமென ரஜீவ் காந்தி விரும்பினார். இந்தச் செய்தியை சிறீலங்கா அரசுக்குப் புரிய வைக்கும் நோக்குடன், இந்திய விமானப் படையின் உதவியுடன் ஆகாய மார்க்கமாக யாழ்ப்பாண மக்களுக்கு நிவாரண உணவுப் பொருட்களை விநியோகிக்க இந்திய அரசு முடிவெடுத்தது. 1987 ஜூலை 4ஆம் நாள், மிராஜ் போர் விமானங்கள் வழித் துணை வழங்க, ஐந்து ஏ.என்.32 ரக இந்திய போக்குவரத்து விமானங்கள் 25 தொன் எடையுள்ள உணவுப் பொட்டலங்களை ஆகாயத்திலிருந்து யாழ்ப்பாண மண் மீது கொட்டின. இந்த ஆகாய மார்க்கமான நிவாரண விநியோகத்தில் தலையிட்டால் பாரதூரமான விளைவுகளைச் சந்திக்க

வேண்டிவருமென சிறீலங்கா அரசுக்கு இந்தியா கடும் எச்சரிக்கையையும் விடுத்திருந்தது.

இந்திய அரசின் இந்த மனிதாபிமானத் தலையீடு கொழும்பு அரசியல் வட்டாரங்களில் பெரும் கொந்தளிப்பை ஏற்படுத்தியது. இந்தியாவின் நடவடிக்கையானது சிறீலங்காவின் இறையாண்மையை மீறிய பாரதூரமான விவகாரம் என்று வெளிவிவகார அமைச்சு கடும் ஆட்சேபம் தெரிவித்தது. இலங்கையின் உள்விவகாரத்தில் அத்துமீறித் தலையிட்டதாகவும் இந்தியா மீது குற்றம் சுமத்தப்பட்டது. தமிழர்கள் மீது தாக்குதல்கள் தொடர்ந்தால் இராணுவ ரீதியாக இந்தியா தலையிடலாம் என்ற ஒரு கசப்பான செய்தியை எடுத்துக் கூறவும் இந்திய நடவடிக்கை தவறவில்லை. இந்திய அரசை ஆத்திரமூட்டுவதற்கு அஞ்சிய ஜெயவர்த்தனா யாழ்ப்பாணக் குடாநாடு மீது படை நடவடிக்கைகளை உடனடியாக நிறுத்தி வைத்தார். யாழ்ப்பாண மக்களுக்கு அவசர மனிதாபிமான நிவாரண உதவிகளை வழங்குவதற்கு இந்திய விநியோகக் கப்பல்களை காங்கேசன்துறை துறைமுகம் வாயிலாக அனுமதிக்கவும் சிறீலங்கா அரசு இணங்கியது.

இது இவ்வாறிருக்க, யாழ் குடாநாட்டில் சிங்கள இராணுவம் கைப்பற்றிய பிரதேசத்தினுள் ஊடுருவிய விடுதலைப் புலிக் கெரில்லா அணிகள், எதிர்த் தாக்குதல்களைத் தீவிரப்படுத்தின. வடமராட்சிப் பகுதியில் நிலைகொண்ட சிங்கள ஆயுதப் படைகளின் சுற்றுக் காவல் அணிகள் மீது தொடர்ச்சியான கெரில்லாத் தாக்குதல்கள் மேற்கொள்ளப்பட்டு இராணுவத் தரப்பில் பெரிய அளவில் உயிச்சேதம் விளைவிக்கப்பட்டது. இத் தாக்குதல்கள் அனைத்திற்கும் சிகரம் வைத்தால் போன்று 1987 ஜூலை 5ஆம் நாள் நள்ளிரவு சிங்கள இராணுவத்தினர் மீது பாரிய தாக்குதல் நிகழ்த்தப்பட்டது. அன்றைய நாளில், முதற் தடவையாக விடுதலைப் புலிகள் இயக்கத்தின் கரும்புலித் தற்கொடை அணி போர்க் களத்தில் குதித்தது. அன்றுதான் எமது இயக்கத்தின் முதலாவது கரும்புலி வீரன் கப்டன் மில்லர் ஒரு மாபெரும் போரியல் சாதனையை நிலைநாட்டிக் களப் பலியானான். வெடிமருந்து நிரப்பப்பட்ட பார ஊர்தியை ஓட்டிச் சென்று இராணுவத்தின் தலைமைச் செயலகமாக இயங்கி வந்த நெல்லியடி மத்திய மகாவித்தியாலயத்தினுள் உட்புகுந்து, அதனை வெடிக்க வைத்தான் மில்லர். நெல்லியடிப் பிரதேசத்தையே அதிரவைத்த அந்த வெடி, மகா வித்தியாலயக்

கட்டிடங்களைத் தரைமட்டமாக்கியது. வெடி அதிர்விலும் இடிபாடுகளிலும் சிக்கி நூற்றுக்கணக்கான இராணுவத்தினர் கொல்லப்பட்டனர். இத் தாக்குதல் ஜெயவர்த்தனாவையும் சிங்கள இராணுவத் தலைமையையும் கலங்க வைத்தது. இராணுவத்தினரது உயிர்ச் சேத உண்மை விபரங்களைத் தெரியப்படுத்தினால் படைதரப்பில் மனமுறிவு ஏற்படலாமென அச்சம் கொண்ட அரசு உயிர்ச் சேதத்தை இருட்டடிப்புச் செய்தது. எனினும் இந்திய அரசுக்கு உயிர்ச் சேத உண்மை விபரங்கள் தெரிய வந்தன. சிங்கள இராணுவத்திற்கு ஏற்பட்டிருக்கும் பாரிய உயிர்ச்சேதம் காரணமாக ஜெயவர்த்தனா அரசு பணிந்து வந்து சமாதானப் பேச்சுக்கு விரைவில் இணக்கம் தெரிவிக்குமென இந்தியப் புலனாய்வுத் துறை அதிகாரி ஒருவர் சென்னையில் எனக்குத் தெரிவித்தார்.

## இந்திய-இலங்கை ஒப்பந்தம்

இலங்கையின் ஆகாய வெளியை அத்துமீறிய இந்தியாவின் கண்டிப்பான போக்கும், நெல்லியடியில் விடுதலைப் புலிகள் நிகழ்த்திய கோரமான தாக்குதலும் ஜெயவர்த்தனாவையும் அவரது இனவெறிகொண்ட அமைச்சர்களையும் பணிய வைத்தது. இந்திய மத்தியஸ்துவ முயற்சிக்கு சிறீலங்கா அரசு இணக்கம் தெரிவித்தது. இதனைத் தொடர்ந்து புது டில்லிக்கும் கொழும்புக்கும் இடையில் சுறுசுறுப்பான இராஜதந்திர நகர்வுகள் இடம்பெற்றன. தமிழரின் இனப் பிரச்சினைக்குத் தீர்வாக ஒரு அதிகாரப் பரவலாக்கத் திட்டம் உட்பட இரு நாடுகளின் உறவுகளை வலுப்படுத்தும் வகையில் ஒப்பந்தம் ஒன்றை வரையவும் தீவிர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இந்திய-இலங்கை ஒப்பந்தம் உருவாக்கப்பட்ட பின்னணி நிகழ்வுகளைத் திரு. டிக்சிட், '**கொழும்பில் எனது பணி**' என்ற தனது நூலில் நாற்பது பக்கங்களைக் கொண்ட ஒரு அத்தியாயத்தில் விபரமாக விளக்கினார்.

ஒப்பந்தம் உருப்பெற்றதன் மூலக் கதையை விபரித்துச் சொல்லும் டிக்சிட் விடுதலைப் புலிகள் சம்பந்தமான ஒரு விசித்திர நிகழ்வையும் சொல்கிறார். சிங்கப்பூரைத் தளமாகக் கொண்டு செயற்பட்ட புலிகளின் பிரதிநிதி ஒருவர், இனப் பிரச்சினைக்கு ஒரு தீர்வுத் திட்டத்தைத் தயாரித்து அதனை

'இந்து' பத்திரிகை ஆசிரியரான ராம் அவர்களுக்குத் தெரியப்படுத்தினாராம். இத் தீர்வுத் திட்டம் ஆறு அம்சங்களைக் கொண்டதாக டிக்சிட் எழுதுகிறார். (1) சிறீலங்கா இராணுவம் தனது படை நடவடிக்கைகளை முற்றாக நிறுத்திக் கொள்ள வேண்டும். (2) தமிழ்த் தாயகமாக வடக்கு கிழக்கு மாகாணங்கள் இணைக்கப்பட வேண்டும். (3) 1983-86 கால இடைவெளிக்குள் பேசப்பட்ட தீர்வு யோசனைகளின் அடிப்படையில் அதிகாரப் பரவலாக்கம் செய்யப்பட வெண்டும். (4) தமிழ் மொழி தேசிய மொழியாகவும், உத்தியோக மொழியாகவும் ஏற்கப்பட வேண்டும். (5) இறுதித் தீர்வுக்கு முன்னராக ஒரு இடைக்காலத் தீர்வு செயற்படுத்தப்பட வேண்டும். (6) இன விகிதாச்சாரத்தின் அடிப்படையில் சிறீலங்கா இராணுவக் கட்டமைப்பில் தமிழர்களுக்கு இடமளிக்கப்பட வேண்டும். இந்த ஆறம்ச யோசனைகளும் ஏற்றுக் கொள்ளப்பட்டால் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் போருக்கு நிரந்தர ஓய்வுகொடுத்துத் தமிழீழத் தனியரசுக் கோரிக்கையையும் கைவிடும் என திரு.ராமுக்கு தகவல் தெரிவிக்கப்பட்டதாம். இந்த யோசனைகள் உள்ளடங்கியதாகத் தயாரிக்கப்படும் ஒப்பந்தத்தில் தமிழர்கள் சார்பாக இந்திய இலங்கை அரசுகள் கைச்சாத்திட வேண்டும் எனவும் புலிகளின் சிங்கப்பூர் பிரதிநிதி ராமுக்குத் தெரிவித்தாராம்.[20] சீனாவுக்கு விஜயம் செய்த பின்பு சிங்கப்பூரில் தங்கி நிற்கும் பொழுது, தொலைபேசி மூலமாக ராமுக்கு இத் தகவல் தெரிவிக்கப்பட்டதாக டிக்சிட் எழுதுகிறார். புலிகளின் பிரதிநிதி மூலம் தனக்குக் கிடைத்த செய்தியை, காணி, மகாவலி அபிவிருத்தி அமைச்சரும் தனது நண்பருமான திரு.காமினி திசநாயக்கா வாயிலாகச் சிறீலங்கா அரசுக்கு தெரியப்படுத்தினாராம் இந்துப் பத்திரிகையாசிரியர். இப்படியான ஒரு விசித்திரமான கட்டுக்கதை டிக்சிட்டின் நூலில் தரப்படுகிறது.

விடுதலைப் புலிகளின் சிங்கப்பூர் பிரதிநிதியால் திரு. ராமுக்கு தெரிவிக்கப்பட்ட யோசனைகளின் அடிப்படையிலே இந்திய-இலங்கை ஒப்பந்தத்திற்கான வரைவு தயாரிக்கப்பட்டதாக எழுதுகிறார் டிக்சிட். இதில் சர்ச்சைக்குரிய கேள்வி என்னவென்றால், விடுதலைப் புலிகள் இயக்கம் இப்படியான யோசனைகளை அல்லது கோரிக்கைகளை இந்துப் பத்திரிகை ஆசிரியர் மூலம் இலங்கை அரசாங்கத்திடம் சமர்ப்பித்ததா என்பதுதான். அதுவும் பெயர் குறிப்பிடப்படாத மர்மமான நபர் ஒருவர், புலிகளின் சிங்கப்பூர் பிரதிநிதி என உரிமைகோரி,

அரசியல் தீர்வு யோசனைகளைத் தொலைபேசியில் தெரிவித்தார் என்ற இந்தக் கட்டுக்கதைக்கு எவ்வித ஆதாரமும் இல்லை. விடுதலைப் புலிகள் இயக்கத்தின் அரசியல் இலட்சியத்தையும், ஒட்டுமொத்தத்தில் தமிழீழ மக்களின் சுதந்திரப் போராட்டத்தையும் கொச்சைப்படுத்தும் இந்தப் புனைகதையை யார் புனைந்தார்களோ தெரியவில்லை. எனினும் இந்திய-இலங்கை ஒப்பந்தத்தின் உருவாக்கத்திற்கு விடுதலைப் புலிகளையும் சம்பந்தப்படுத்தி, நியாயப்படுத்தும் நோக்குடன் இந்த விபரீதமான சம்பவம் சோடிக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சம்பவத்தில் எவ்விதமான உண்மையும் இல்லை என்பதையும், இத் தகவல் பரிமாற்றத்திற்கும் விடுதலைப் புலிகளின் தலைமைக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை என்பதையும் நான் உறுதிபடக் கூறுவேன். 'இந்து' ஆசிரியர் திரு. ராம், இந்திய தூதுவர் திரு. டிக்சிட், சிங்கள அமைச்சர் திரு. காமினி ஆகியோரும் 'றோ' புலனாய்வுத் துறையினரும் சேர்ந்து திரித்த கட்டுக் கதை என்றே இதை நான் கருதுகிறேன். இந்திய-இலங்கை ஒப்பந்தத்திற்கு விடுதலைப் புலிகளின் இந்த யோசனைகளே அடிப்படையாக அமைந்திருந்ததால் பிரபாகரனும் நானும் இந்தியப் பிரதமர் ரஜீவ் காந்தியைச் சந்தித்தபொழுது இவ்விடயம் பற்றி அவர் எதுவுமே பேசவில்லையே? திரு. ராமும் திரு. டிக்சிட்டும் அனுபவ முதிர்ச்சிபெற்ற புத்திஜீவிகள் என்பதால், விடுதலைப் புலிகளின் சிங்கப்பூர் பிரதிநிதி என உரிமைகோரி யாரோ இனம்தெரியாத நபர் இனப் பிரச்சினைக்கு ஒரு யோசனைத் திட்டத்தை தொலைபேசியில் தெரிவித்தபோது, அதன் நம்பகத்தன்மை பற்றி புலிகளின் தலைவர்களுடன் அவர்கள் கலந்தாலோசிக்க தவறியது ஏன்? அடுத்த முக்கியமான விடயம் என்னவென்றால் விடுதலைப் புலிகளின் அரசியல் இலட்சியத்திற்கும் கொள்கைக்கும் மாறுபட்டதாக இந்த யோசனைகள் அமையப் பெற்று இருப்பதை எவரும் இலகுவில் கண்டு கொள்ளலாம். குறிப்பாக, புலிகளால் பிரகடனப்படுத்தப்பட்ட தமிழர் தாயகம், தமிழர் தேசியம், தமிழரின் சுயநிர்ணய உரிமை போன்ற அடிப்படைக் கோரிக்கைகள் எதுவுமே இந்த யோசனைத் திட்டத்தில் அடங்கவில்லை. இவற்றிலிருந்து ஒரு உண்மை புலனாகும். அதாவது, இந்த சிங்கப்பூர் நாடகம் ஒரு கட்டுக்கதையன்றி வேறொன்றும் அல்ல என்பதுதான்.[21]

இந்திய இலங்கை அரசுகளின் கூட்டு முயற்சியாகவே

இந்திய-இலங்கை ஒப்பந்தம் உருவாக்கப்பட்டது. ரஜீவ் அரசினதும் ஜெயவர்த்தனாவின் ஆட்சிபீடத்தினதும் பிரதிநிதிகள் கூடிக் கலந்தாலோசித்து இவ்வொப்பந்தத்தைத் தயாரித்தனர். இந்த ஒப்பந்தத்தின் உருவாக்கத்தில் தமிழ் மக்களோ அன்றிச் சிங்கள மக்களோ சம்பந்தப்படவில்லை. இந்தியப் பாராளுமன்றத்திலோ அன்றி இலங்கை பாராளுமன்றத்திலோ இவ்விடயம் விவாதிக்கப்படவில்லை. தமிழ் மக்களின் அரசியல் தலைவிதியைப் பாதித்த இவ்வொப்பந்தம் எவ்வாறு விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு அறிமுகம் செய்யப்பட்டது என்பது ஒரு விசித்திரமான கதை.

1987 ஜுலை 19ஆம் நாள், கொழும்பிலுள்ள இந்திய தூதரகத்தில் முதற் செயலராகப் (அரசியல்) பணி ஆற்றிய திரு. ஹர்தீப் பூரி, யாழ்ப்பாணத்திற்கு வருகை தந்து விடுதலைப் புலிகளின் தலைவரை அவசரமாக சந்திக்கவேண்டுமென வற்புறுத்தினார். தனக்கு உதவியாக யோகரெத்தினம் யோகியை அழைத்துச் சென்ற பிரபாகரன் இந்தியத் தூதரக அதிகாரியைச் சந்தித்தார். இந்திய இலங்கை அரசுகள் இணைந்து, தமிழரின் தேசியப் பிரச்சினைக்கு ஒரு தீர்வுத் திட்டம் தயாரித்துள்ளதாகத் தெரிவித்த திரு. பூரி, இத் திட்டத்தைத் தெளிவாக விளக்குவதற்காக இந்தியப் பிரதமர் ரஜீவ் காந்தி புதுடில்லியில் தலைவர் பிரபாகரனை சந்திக்க விரும்புவதாகவும் கூறினார். இத் தீர்வுத் திட்டம் பற்றி விரிவாகக் கூறுமாறு பிரபாகரனும் யோகியும் கேட்டுக் கொண்டபோது, அதுபற்றி விரிவாகக் கூற மறுத்த இந்திய இராஜதந்திரி, புது டில்லியில் அதன் உள்ளடக்கம் விரிவாக விளக்கப்படும் என்றார். தமிழீழ மக்களின் அரசியல் வாழ்வைப் பாதிக்கும் ஒரு முக்கியமான தீர்வுத் திட்டத்தை இரு அரசுகளும் இணைந்து தயாரித்துள்ளதால் அதனை உதாசீனம் செய்ய முடியாது என பிரபாகரன் கருதினார். அத்துடன் இந்தியாவின் பிரதம மந்திரி அதிகாரபூர்வமாக அழைப்பு விடும்பொழுது அதனை தட்டிக் கழிக்கவும் அவரால் முடியவில்லை. ஆகவே, புதுடில்லி செல்வதற்குப் பிரபாகரன் இணங்கினார். அவ்வேளை சென்னையில் தங்கியிருந்த என்னையும் தன்னுடன் புதுடில்லிக்கு அழைத்துச் செல்ல வேண்டுமெனவும் பிரபாகரன் வலியுறுத்தினார்.

1987 ஜுலை 23ஆம் நாள், யாழ்ப்பாணம் சுதுமலை அம்மன் கோவில் வளாகத்தில் தரையிறங்கிய இரு இந்திய விமானப் படையின் உலங்குவானூர்திகள், பிரபாகரன், யோகரெத்தினம்

யோகி, திலீபன் ஆகியோர் அடங்கிய விடுதலைப் புலிகளின் தூதுக் குழுவை ஏற்றிக் கொண்டு சென்னை, மீனம்பாக்கம் விமான நிலையத்தை நோக்கிப் புறப்பட்டன. அவ்வேளை சென்னையில் என்னைச் சந்தித்த தமிழ்நாட்டுக் காவல்துறை அதிகாரிகள் பிரபாகரனது வருகையையும் அவரது வேண்டுகோளையும் எனக்குத் தெரிவித்தனர். நான் உடனடியாகவே மீனம்பாக்கம் விமான நிலையத்திற்கு புறப்பட்டுச் சென்றேன். அங்கு பிரபாகரனைச் சந்தித்தபொழுது, இந்தியப் பிரதமரின் அழைப்பின் பேரில் புதுடில்லி செல்வதாகச் சொன்னார். இந்திய இலங்கை அரசுகள் கூட்டாகச் சேர்ந்து தமிழர் பிரச்சினை குறித்து ஒரு தீர்வுத் திட்டம் வரைந்திருப்பதாகவும் அதன் விபரங்கள் எதுவுமே தனக்குத் தெரியாது என்றும் அவர் சொன்னார். விமான நிலையத்தில் வைத்து பூரியைச் சந்தித்த நான் அவரிடம் அத் தீர்வுத் திட்டத்தின் உள்ளடக்கம் பற்றி விசாரித்தேன். அதுபற்றி எதுவுமே கூற அவர் மறுத்துவிட்டார். புதுடில்லியில் இந்தியத் தூதுவர் திரு. டிக்சிட் எம்மை சந்தித்து விபரமாக எல்லாவற்றையும் எமக்கு விளக்குவார் என அவர் உறுதியளித்தார். பூரியின் முகபாவத்திலிருந்தும், மனம் திறந்து கதைப்பதற்கு அவர் தயங்குவதிலிருந்தும் எனக்கு உள்ளூர ஒரு சந்தேகம். எதையோ ஒளித்து மறைத்து எம்மை ஏமாற்றி புதுடில்லிக்கு அழைத்துச் செல்கிறார்கள் என்பது மட்டும் புலனாகியது. சிறிது நேரத்தில் இந்திய வான்படையின் விமானம் மூலம் புதுடில்லி வந்தடைந்தோம்.

புதுடில்லி விமான நிலையத்திலிருந்து தலைநகரின் மையத்தில் அமைந்திருக்கும் அசோக் விடுதிக்கு நாம் அழைத்துச் செல்லப்பட்டோம். புதுடில்லியில் பிரபல்யமான இந்த விடுதியின் வளாகத்தினுள் எமது வாகனங்கள் நுழைந்தபோது, பெருந்தொகையான 'கரும்பூனைகள்' என்றழைக்கப்படும் இந்திய அதிரடிப் படையினர் விடுதியைச் சூழ நிலையெடுத்து நிற்பதை நாம் அவதானித்தோம். எமது முகங்களில் வியப்பும் சந்தேகமும் எழுவதைக் கண்ணுற்ற பூரி, எமக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காகவே விடுதிக்கு பலத்த பாதுகாப்பு போடப்பட்டுள்ளதாகத் தெரிவித்தார். பிரபாகரனின் ஏளனப் புன்னகையிலிருந்து அவர் பூரியின் கூற்றை நம்பவில்லை என்பது எனக்குப் புலனாகியது. பல மாடிக் கட்டிடங்களைக் கொண்ட அந்த விடுதியின் உயர்மாடியும் விசாலமான சந்திப்பு அறையும்

எமக்கு ஒதுக்கப்பட்டிருந்தது. எமது அறைகளுக்கு முன்பாக 'கரும்பூனைகள்' ஆயுதபாணிகளாக நிலையெடுத்து நின்றனர். நாம் உயர்மாடிக்கு அழித்துச் செல்லப்பட்ட பொழுது அங்கு ஒரு றோ புலனாய்வு அதிகாரி எம்மைச் சந்தித்தார். நாம் பாதுகாப்பான தடுப்புக் காவலில் வைக்கப்பட்டிருக்கிறோம் என்றும், விடுதி மாடியிலிருந்து நாம் வெளியே செல்ல முடியாது என்றும், வெளியிலிருந்தும் எம்மைச் சந்திக்க எவரும் அனுமதிக்கப்படமாட்டார்கள் என்றும் சொன்னார். எமது மாடியிலுள்ள தொலைபேசிகள் அனைத்தும் துண்டிக்கப்பட்டுள்ளன என்றும் அவர் தெரிவித்தார். 'பாதுகாப்பான தடுப்புக் காவல்' என்ற பெயரில், வெளியுலகத்துடன் தொடர்புகள் முற்றாகத் துண்டிக்கப்பட்ட நிலையில் நாம் அந்த விடுதி மாடியில் சிறை வைக்கப்பட்டிருக்கிறோம் என்ற கசப்பான உண்மை எமக்குப் புலனாகியது. "பாலா அண்ணா, நான் மீண்டும் பொறியில் மாட்டிக் கொண்டேன்," என ஆதங்கத்துடன் சொன்னார் பிரபாகரன்.

நாம் அந்த விடுதிக்கு வந்து சேர்ந்த சிறிது நேரத்தில் திரு. டிக்சிட் அங்கு வருகை தந்தார். ஏதோ பாரதூரமான விடயத்தைச் சொல்லப் போவது போன்று அவரது முகபாவம் கடுகடுப்பாகத் தோற்றமளித்தது. அந்த விசாலமான சந்திப்பு அறையில், ஒரு சோபாவில் அமர்ந்து கொண்டு, தனது சுங்கானை எடுத்துப் பற்ற வைத்து இரு தடவைகள் புகையை உள்வாங்கி ஊதினார். அவருக்கு முன்பாக அமைதியுடன் ஆழ்ந்த கவனத்துடன் நாம் அமர்ந்திருந்தோம். எம்மை உன்னிப்பாகப் பார்த்தபடியே தனது மௌனத்தை முறித்தார் டிக்சிட். "இந்திய இலங்கை அரசுகளுக்கு மத்தியில் இருதலைப்பட்சமான ஒப்பந்தம் ஒன்று செய்யப்பட்டுள்ளது. இந்தியப் பிரதமர் திரு. ரஜீவ் காந்தி விரைவில் கொழும்புக்கு விஜயம் செய்து அந்த உடன்பாட்டில் கைச்சாத்திடுவார். தமிழரின் இனப் பிரச்சினைக்கு ஒரு நீதியான, தீர்வும் இந்த ஒப்பந்தத்தில் உள்ளடக்கி இருக்கிறது. இந்த ஒப்பந்தத்தை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்றார் டிக்சிட். தனது அங்கிக்குள் கைவிட்டு, ஒரு ஆவணத்தை வெளியே எடுத்து என்னிடம் கையளித்தார். "தயவு செய்து இதனை மொழிபெயர்த்து, இதன் உள்ளடக்கத்தைத் திரு. பிரபாகரனுக்கு விளங்கப்படுத்துங்கள், இரண்டு மணிநேரம் கழித்த பின் நான்

திரும்பி வருவேன். அப்பொழுது நீங்கள் நல்லதொரு முடிவுடன் இருப்பீர்கள் என நம்புகிறேன்'' என்று கூறிவிட்டு, திடீரென எழுந்து அந்த அறையிலிருந்து வெளியேறினார் திரு. டிக்சிட்.

நான் அந்த ஆவணத்தை மொழிபெயர்த்துக் கூறியதுடன் அந்தத் தீர்வு யோசனைகளிலுள்ள சிக்கலான பரிமாணங்களையும் பிரபாகரனுக்கு விளக்கினேன். ஒப்பந்தத்தில் அடங்கியிருந்த தீர்வுத் திட்டம் எமக்குத் திருப்தியை அளிக்கவில்லை. மிகவும் வரையறுக்கப்பட்ட அதிகாரப் பரவலாக்கத்தைக் கொண்ட இந்த யோசனைகள் தமிழரின் அடிப்படைப் பிரச்சினைகளுக்கு தீர்வாக அமையவில்லை. 'சிறீலங்கா மக்கள் சமூகம் பல்லினக் கட்டமைப்பைக்' கொண்டதாகச் சித்தரிக்கும் இத் திட்டம், இந் நாட்டில் மொழி, பண்பாட்டு ரீதியான பல இனக் குழுமங்கள் வாழ்ந்து வருவதாகக் கூறுகிறது. இப்படியான சமூகப் பார்வை தேசம், தேசிய இனம் என்ற அடிப்படைக் கோட்பாடுகளை நிராகரித்துள்ளது. இலங்கைத் தீவின் இறையாண்மை, ஐக்கியம், பிரதேச ஒருமைப்பாடு ஆகியவற்றை வலியுறுத்திய இந்த உடன்பாடு, நாட்டின் ஒற்றையாட்சி அரசியலமைப்பின் அடிப்படையில் தமிழரின் இனச் சிக்கலுக்குத் தீர்வு காணப்பட வேண்டும் எனப் பரிந்துரைத்தது. 'வடக்கு கிழக்கு மாகாணங்கள் தமிழ் பேசும் மக்களின் வரலாற்று ரீதியான வதிவிடம்' என ஒரு பந்தியில் குறிப்பிடப்பட்டுள்ளமையை மட்டும் ஒரு ஆக்கபூர்வமான அம்சமாகச் சொல்லலாம். ஒரு தனித்துவமான நிர்வாக அலகாக வடக்கு கிழக்கு மாகாணங்கள் இணைக்கப்பட வேண்டும் என்பது இத் தீர்வுத் திட்டத்தின் மிக முக்கிய அம்சமாகக் கொள்ளலாம். ஆயினும் இந்த இணைப்பு தற்காலிகமானதாக உள்ளது. கிழக்கு மாகாணத்தில் வதியும் எல்லா இன மக்களதும் கருத்து வாக்களிப்பு அங்கீகாரத்துடனேயே கிழக்கு மாகாணம் வடக்குடன் நிரந்தரமாக இணைக்கப்படலாம் என்ற ஒரு விதியும் இந்த ஒப்பந்தத்தில் உண்டு. ஒரு தற்காலிக வடகிழக்கு மாகாண சபையை உருவாக்குவதற்கும் இது வழிவகுக்கிறது. ஒரு ஆளுநர், முதலமைச்சர், அமைச்சரவை ஆகியோரடங்க நிர்வாக அமைப்பையும் இது சிபாரிசு செய்கிறது. ஆயினும் நிர்வாகக் கட்டமைப்பின் அதிகாரங்கள், செயற்பாடுகள் பற்றி தெளிவாக வரையறுக்கப்படவில்லை. 1986 மே 4ஆம் நாளிலிருந்து 1986 டிசம்பர் 19ஆம் நாள் வரை இந்திய இலங்கை அரச பிரதிநிதிகளுக்கும் தமிழர் விடுதலைக் கூட்டணித்

தலைவர்களுக்கும் மத்தியில் கலந்துரையாடப்பட்ட யோசனைகளின் அடிப்படையில் இறுதித் தீர்வு வகுக்கப்படலாமெனவும் இந்த ஒப்பந்தத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஒட்டுமொத்தத்தில் பார்க்கப் போனால், தமிழீழ மக்களது தேசிய இனப் பிரச்சினையின் அடிப்படைகள் எதற்குமே தீர்வாக இத் திட்ட யோசனைகள் அமையவில்லை. இத் திட்டத்தில் ஆயுதக் களைவு பற்றி வலியுறுத்தப்பட்டமையே எமக்குப் பாரதூரமான விடயமாகத் தோன்றியது. இந்த உடன்பாடு கைச்சாத்தாகி 72 மணி நேரத்திற்குள் தமிழ் விடுதலை அமைப்புகள் அனைத்தும் ஆயுதங்களை ஒப்படைக்க வேண்டும் எனக் கண்டிப்பாக விதிக்கப்பட்டிருந்தது. இந்த விதியை நான் மொழிபெயர்த்துக் கூறியபொழுது பிரபாகரனின் முகம் கோபத்தால் சிவந்தது. இந்த உடன்பாட்டில் தெரிவிக்கப்பட்ட யோசனைகள் பரிசீலனை செய்வதற்கு எமக்கு வழங்கப்பட்ட இரு மணி நேர கால அவகாசத்தினுள் பிரபாகரன் ஒரு தீர்க்கமான உறுதியான முடிவை எடுத்தார். எப்படியான சூழ்நிலையிலும் இந்திய இலங்கை ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்வதில்லை என அவர் உறுதிபடத் தீர்மானித்தார்.

இரண்டு மணி நேரத்தின் பின்னர் திரு. டிக்சிட் எம்மைச் சந்தித்தார். இந்திய - இலங்கை உடன்பாடு சம்பந்தமாக எமது முடிவு என்னவென விசாரித்தார். இந்த உடன்பாட்டை எம்மால் ஏற்றுக் கொள்ள முடியாது என நாம் திட்டவட்டமாக எடுத்துக் கூறினோம். எமது தீர்மானத்திற்கு விளக்கம் கேட்டார் டிக்சிட். உடன்பாட்டில் அடங்கியுள்ள தீர்வுத் திட்டத்திலுள்ள குறைபாடுகளை விளக்கிக் கூறிய நான், இத் தீர்வு யோசனைகள் தமிழ் மக்களின் அடிப்படை அபிலாசைகள் எதனையுமே நிறைவுசெய்யவில்லை என்றேன். ஆகவே, இத் தீர்வு யோசனைகளை எமது விடுதலை இயக்கம் ஏற்றுக் கொள்ள முடியாது என்றேன். எமது மக்களின் பாதுகாப்புக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டு, நிரந்தரமான ஒரு அரசியல் தீர்வு ஏற்படுவதற்கு முன்னராக, தமிழரின் சுதந்திர இயக்கத்தை நிராயுதபாணியாக்க இந்திய அரசு வற்புறுத்துவது அநீதியானது, நியாயமற்றது என வாதாடினார் பிரபாகரன். “கடந்த பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாக எத்தனையோ தியாகங்களைப் புரிந்து, இரத்தம் சிந்திப் போராடி, எதிரிப் படைகளிடமிருந்து பறித்தெடுத்த ஆயுதங்களை எழுபத்திரெண்டு மணிநேரத்தில் சரணடையச் செய்யுமாறு இந்திய அரசு எவ்வாறு கோரலாம்” என்று கேள்வி எழுப்பினார்

பிரபாகரன். அவரது கனத்த தொனியில் ஆத்திரம் நிறைந்திருந்தது. எமது கண்டன விமர்சனங்களை செல்லுபடியாகாதவை என தூக்கியெறிந்து விவாதித்த டிக்சிட், தமிழ் மக்கள் எதிர்பார்ப்பதைவிடக் கூடுதலான அதிகாரங்கள் மாகாண சபைத் திட்டத்தில் இருப்பதாகத் தெரிவித்தார். ஒரு நிரந்தரமான போர்நிறுத்தம் நடைமுறைக்கு வர இருப்பதாலும், இந்திய அமைதி காக்கும் படைகள் சமாதானத்தைப் பேண இருப்பதாலும் தமிழர்களுக்கு ஆயுதங்கள் அவசியமில்லை எனக் கூறினார் டிக்சிட். இந்திய அரசு மீது நம்பிக்கை வைக்குமாறு எம்மைக் கேட்டுக் கொண்ட அவர், எமது முடிவை மறுபரிசீலனை செய்யுமாறு வேண்டினார். நாம் எமது நிலைப்பாட்டில் உறுதியாக நின்றோம். ஜெயவர்த்தனா அரசுமீதும், அரச ஆயுதப் படைகள் மீதும் எமக்கு அறவே நம்பிக்கையில்லை என்பதை இடித்துச் சொன்னோம்.

எமது நிலைப்பாட்டிலிருந்து சற்றேனும் விட்டுக் கொடுக்காது நாம் உறுதிகொண்டு நின்றதால் டிக்சிட் பொறுமையிழந்து ஆத்திரமடைந்தார். கனிவாகப் பணிவாக மன்றாடியவர் குரலை உயர்த்திக் கடுமையாக்கி மிரட்டத் தொடங்கினார். "நீங்கள் ஏற்றுக் கொண்டாலும் ஏற்றுக் கொள்ளாது போனாலும் இந்த ஒப்பந்தம் நிச்சயமாகக் கைச்சாத்திடப்படும். இது இறையாண்மையுடைய இரு நாடுகளுக்கு மத்தியிலான உடன்பாடு. இதனை நீங்கள் எதிர்த்தால் பாரதூரமான விளைவுகளைச் சந்திக்க நேரிடும்" என மிரட்டினார் டிக்சிட். யோகரெத்தினம் யோகிக்கு இந்த மிரட்டல் இராஜதந்திரம் பிடிக்கவில்லை. "எவ்வகையான பாரதூரமான விளைவுகளை நாம் சந்திக்க நேரிடும்" என்று நக்கலாகக் கேட்டார் யோகி.

"இந்த ஒப்பந்தத்தை நீங்கள் ஏற்றுக் கொள்ளும் வரை உங்களை இங்கு தடுப்புக் காவலில் நாம் வைத்திருப்போம்" என்றார் டிக்சிட்.

"நீங்கள் எங்களை வருடக்கணக்காகத் தடுப்புக் காவலில் வைத்தாலும் நாங்கள் இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ளப் போவதுமில்லை. ஆயுதங்களைக் கையளிக்கப் போவதுமில்லை." என்று சீறினார் பிரபாகரன்.

ஆவேசமடைந்த டிக்சிட் பிரபாகரனை வெறித்துப் பார்த்தபடி குரலை உயர்த்திக் கத்தினார். "நீங்கள் ஆயுதங்களைக் கையளிக்க மறுத்தால் இந்திய இராணுவத்தின் உதவியுடன் நாம் வலுவந்தமாக அவற்றைப் பறித்தெடுப்போம். சக்தி வாய்ந்த

இந்திய இராணுவத்தின் முன்பாக உங்களது போராளிகள் வெறும் தூசு'', என்றார் டிக்சிட். பின்பு தனது சுங்கானை எடுத்து பிரபாகரனுக்கு காண்பித்தவாறு ''இந்தச் சுங்கானை நான் பற்றவைத்து புகைத்து முடிப்பதற்குள் இந்திய இராணுவம் உங்களது போராளிகளை துவம்சம் செய்து விடும்'' என்று குமுறினார்.

பிரபாகரன் ஆத்திரப்படவில்லை. ஒரு ஏளனச் சிரிப்பை உதிர்த்தார். ''உங்களால் எதைச் செய்யமுடியுமோ அதைச் செய்து பாருங்கள். ஆனால் எந்தச் சூழ்நிலையிலும் நாங்கள் இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ளப் போவதில்லை.'' என்று உறுதியாகச் சொன்னார் பிரபாகரன்.

கொதிப்படைந்தார் டிக்சிட். ஆத்திரத்தில் அவரது உதடுகள் நடுங்கின. ''மிஸ்டர் பிரபாகரன், இத்துடன் நான்காவது தடவையாக நீங்கள் இந்தியாவை ஏமாற்றியுள்ளீர்கள்.'' என்றார் அவர்.

''அப்படியானால் நான்கு தடவைகள் இந்தியாவிடமிருந்து நான் எனது மக்களைக் காப்பாற்றி இருக்கிறேன். அதற்காக நான் பெருமைப்படுகிறேன்'' என்றார் பிரபாகரன்.

இயல்பாகவே உணர்ச்சிவயப்படும் டிக்சிட் ஆத்திரத்தின் சிகரத்தை அடைந்தார். அந்நிலையில் அவரால் பேச முடியவில்லை. திடீரென எழுந்து அங்கிருந்து வேகமாக வெளியேறினார்.

மிரட்டி அழுத்தம் கொடுக்கும் இராஜதந்திர அணுகுமுறை மூலம், பிரபாகரனின் உறுதியான நிலைப்பாட்டை தளர்த்த முடியாது என உணர்ந்து கொண்ட இந்திய அதிகாரிகள், மென்மையான முறையைக் கையாண்டு அவரை இணங்க வைக்க முயன்றனர். இந்திய உள்ளகப் புலனாய்வுத் துறையின் அதிபர் திரு. எம்.கே.நாராயணன், வெளிவிவகார அமைச்சின் கூட்டுச் செயலர் திரு. சகாதேவ், வெளிவிவகார அமைச்சைச் சேர்ந்த திரு. நிகில் சேத், கொழும்பிலுள்ள இந்திய தூதரகத்தைச் சேர்ந்த திரு. ஹர்தீப் பூரி ஆகியோர் மாறி, மாறி ஒவ்வொருவராக எம்மைச் சந்தித்து, இந்திய-இலங்கை ஒப்பந்தத்தின் உள்ளடக்கம் பற்றியும் அதன் முக்கியத்துவம் பற்றியும் எடுத்து விளக்கினார்கள். ஒப்பந்தத்திலுள்ள குறைபாடுகளை எடுத்துக் கூறி, அவை மூலம் தமிழ் மக்களின் நலன்கள் வெகுவாகப் பாதிக்கப்படும் என நாம் அவர்களுக்கு எடுத்துக் கூறியும் அவர்கள் தமது முயற்சியை கைவிடுவதாகத் தெரியவில்லை.

ஒப்பந்தத்திலுள்ள குறைபாடுகள் பற்றி பின்னர் பேச்சுக்களை நடத்தி, தீர்வுத் திட்டத்தை திருத்தியமைத்து, தமிழர்களது அபிலாசைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் முழுமைப்படுத்தலாம் என வாதாடிய அவர்கள், ரஜீவ் காந்தி ஒப்பந்தத்தில் கைச்சாத்திடுவதற்கு முன்பாக விடுதலைப் புலிகளின் இணக்கப்பாடு அவசியம் என்பதை வலியுறுத்தினார்கள். மென்மையான இராஜதந்திர அழுத்தத்திற்கும் பிரபாகரன் அசைந்து கொடுக்கவில்லை. தனது நிலைப்பாட்டில் உருக்குப் போன்ற உறுதியுடன் நின்றார் அவர். எப்படியாவது ஒப்பந்தத்தை எம் மீது திணித்துவிட வேண்டும் என்ற முயற்சியும் சளைக்காது தொடர்ந்தது. புதுடில்லி அசோக் விடுதியில் இந்தத் திரைமறைவு இராஜதந்திர நாடகம் சில நாட்களாகத் தொடர்ந்தது. மணிக்கணக்கில், நாட்கணக்கில், தொடர்ந்து உரையாடி சலிப்படையச் செய்து, உறுதியைத் தளர்த்தும் இராஜதந்திர நுட்பம் பிரபாகரனிடம் பலிக்கவில்லை. இறுதியாக, தமது முயற்சியைக் கைவிட்ட இந்திய அதிகாரிகள், விடுதலைப் புலிகள் தமது நிலைப்பாட்டில் பிடிவாதமாக இருக்கிறார்கள் என ரஜீவ் காந்தியிடம் தெரிவித்தனர். விடுதலைப் புலிகளை இணங்கச் செய்வதற்கு ஒரு வழிமுறையாக தமிழக முதல்வர் எம்.ஜி.இராமச்சந்திரன் அவர்களை பயன்படுத்தலாம் என இந்தியப் பிரதமருக்கு ஆலோசனை வழங்கப்பட்டது. ரஜீவ் காந்திக்கு அதுவொரு நல்ல யோசனையாகத் தெரிந்தது. ஜுலை 26ஆம் நாள், இந்தியப் பிரதமரின் விசேட விமானத்தில் எம்.ஜி.ஆர் அவர்கள் புதுடில்லிக்கு அழைத்து வரப்பட்டார்.

அன்றிரவே புதுடில்லியிலுள்ள தமிழ்நாடு இல்லத்தில் முதலமைச்சரை சந்திப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. தலைவர் பிரபாகரனும், நானும், யோகரெத்தினம் யோகியும் எம்.ஜி.ஆரிடம் அழைத்துச் செல்லப்பட்டோம். முதல்வருடன் தமிழக உணவு மந்திரி திரு. பண்டுருட்டி இராமச்சந்திரனும், திரு. டிக்சிட்டும் இருந்தனர். சிரித்த முகத்துடன் எம்.ஜி.ஆர் எம்மை வரவேற்றார். நாங்கள் அங்கு சென்று அமர்ந்து கொண்டதையும் அலட்சியம் செய்தவாறு இந்தியத் தூதுவர் எம்.ஜி.ஆர். உடன் உரையாடிக் கொண்டிருந்தார். இந்திய - இலங்கை ஒப்பந்தம் பற்றியும் அதில் அடங்கியுள்ள மாகாண சபைத் திட்டம் பற்றியும், இத் தீர்வு யோசனைகள் ஈழத் தமிழரின் நலன்களையும் அரசியல் அபிலாசைகளையும் முழுமையாக நிறைவு செய்துள்ளதாகவும்

விளக்கிக் கொண்டிருந்தார் டிக்சிட். உள்ளங்கையில் நாடியை ஊன்றியவாறு பொறுமையுடன் செவிமடுத்துக் கொண்டிருந்தார் எம்.ஜி.ஆர். ஒன்றுபட்ட தாயகமாக, தமிழ்மொழி வாரியான மாநிலமாக, வடக்கு கிழக்கு மாகாணங்கள் இணைக்கப்பட்டிருக்கும் இத் தீர்வுத் திட்டத்தை சிங்களத் தீவிரவாத அரசியல்வாதிகள் மீது அழுத்தம் போட்டு இணங்க வைத்து ஒரு இராஜதந்திர சாதனையை இந்தியா நிலைநாட்டியுள்ளதாகப் புகழ் பாடிக் கொண்டிருந்தார் டிக்சிட். இப்படியான பிரமாதமான தீர்வுத் திட்டத்தைப் பெற்றுக் கொள்வதற்காக ஈழத் தமிழர் மட்டுமன்றி உலகத் தமிழர் அனைவருமே இந்தியாவுக்கு என்றும் கடமைப்பட்டவராக இருக்க வேண்டும் என்று பெருமிதப்பட்டார்.

“தமிழர் விடுதலைக் கூட்டணியும் ஏனைய அரசியற் கட்சிகளும் போராளி அமைப்புகளும் இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை முழுமையாக ஆதரிக்கின்றன” என்று கூறிய டிக்சிட், எம்மைச் சுட்டிக் காட்டி, “இந்தப் பிரமுகர்கள் மட்டும் இந்த உடன்பாட்டை எதிர்க்கிறார்கள். தமிழீழத் தனியரசைத் தவிர இவர்கள் எதையுமே ஏற்கமாட்டார்கள். ஆனால் இந்திய அரசு தனியரசு அமைக்கப்படுவதை ஒருபொழுதும் அனுமதிக்கப் போவதில்லை. இந்த ஒப்பந்தத்தை எதிர்த்து இந்தியாவை பகைத்துக் கொண்டால் பாரதூரமான விளைவுகளை இவர்கள் சந்திக்க நேரிடும்.” என்று மிரட்டினார் டிக்சிட்.

யோகரெத்தினம் யோகிக்கு இனியும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. “இந்த மாகாண சபைத் திட்டத்தில் உருப்படியான அதிகாரப் பகிர்வு எதுவுமே இல்லை. தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகள் எதையுமே இத் தீர்வுத் திட்டம் நிறைவு செய்யத் தவறிவிட்டது. வடக்கு கிழக்கு மாகாணங்களின் இணைப்பும் தற்காலிகமானது. கிழக்கு மாகாணத்தின் பொதுசன வாக்களிப்பு என்ற நிபந்தனைக்கு உட்படுத்தப்பட்டது. அப்படியான வாக்களிப்பு நடத்தப்பட்டு பெரும்பான்மையான சிங்களவர்களும் முஸ்லிம்களும் இணைப்புக்கு எதிராக வாக்களித்தால் தமிழ்த் தாயகம் நிரந்தரமாகவே பிளவுபட்டுப் போகும். இப்படியான குறைபாடுகளைக் கொண்ட இந்த ஒப்பந்தத்தை நாம் ஏற்றுக்கொள்ள முடியாது” என்றார் யோகரெத்தினம் யோகி. இதனைத் தொடர்ந்து யோகிக்கும் டிக்சிட்டுக்கும் மத்தியில் கடும் வாக்குவாதம் மூண்டது.

"சென்ற வாரம் யாழ்ப்பாணத்திற்கு வருகை தந்த திரு. பூரி இந்த ஒப்பந்தம் பற்றியும் அதிலுள்ள மாகாண சபைத் திட்டம் பற்றியும் உமக்கு விபரமாக விளக்கினாராம். அப்பொழுது ஒப்பந்தத்திற்கு ஆதரவு தெரிவித்த நீங்கள் இப்பொழுது எதிர்ப்புப் தெரிவிக்கிறீர்கள். என்னால் உங்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை" என்று ஒரு குண்டைப் போட்டார் டிக்சிட். யோகியும் விட்டுக் கொடுக்கவில்லை. "யாழ்ப்பாணத்தில் இந்த ஒப்பந்தம் பற்றி எதுவுமே பேசப்படவில்லை" என மறுத்துரைத்தார் யோகி.

"அப்பொழுது என்னை ஒரு பொய்யன் என்று சொல்கின்றீர்களா" என்று ஆத்திரத்துடன் சிறீனார் டிக்சிட். "நீங்கள் உண்மையைப் பேசவில்லை" என்றார் யோகி. பொறி பறந்து வாக்குவாதம் சூடுபிடித்தது. கோபாவேசத்தில் கண்கள் பிதுங்க, முதலமைச்சரைப் பார்த்து, "பாருங்க சார், என்னைப் பொய்யன் என்று சொல்கிறார்" என்று கதறினார் டிக்சிட்.

ஒரு ஏளனப் புன்னகையுடன் மௌனம் சாதித்தார் பிரபாகரன். இந்த சுவாரஸ்யமான விவாதத்தில் குறுக்கிட்டுக் குழப்ப நான் விரும்பவில்லை. எம்.ஜி.ஆருக்கு நிலைமை சங்கடமாகியது. விவாதம் காழ்ப்புணர்வைச் சீண்டி வருவதையும், இந்திய தூதுவர் நிதானமிழந்து உணர்ச்சிவசப்படுகிறார் என்பதையும் உணர்ந்து கொண்டார் முதல்வர்.

"நான் அவர்களுடன் தனியே பேச விரும்புகிறேன். தயவு செய்து, நீங்கள் சிறிது நேரம் வெளியே இருக்கிறீர்களா?" எனப் பண்பாக டிக்சிட்டை வேண்டிக் கொண்டார் எம்.ஜி.ஆர். தயக்கத்துடன் அங்கிருந்து வெளியேறினார் இந்தியத் தூதுவர்.

இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை நாம் ஏற்றுக் கொள்ள மறுப்பதன் காரணத்தை வினவினார் எம்.ஜி.ஆர். ஒப்பந்தத்திலுள்ள அடிப்படையான குறைபாடுகளை தமிழகத் தலைவர்களுக்கு நாம் விரிவாக எடுத்து விளக்கினோம். மிகவும் மட்டுப்படுத்தப்பட்ட அதிகாரங்களைக் கொண்ட மாகாண சபைத் திட்டம் தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகள் எதனையும் நிறைவு செய்யவில்லை என்பதையும் சுட்டிக் காட்டினோம். பொதுசனக் கருத்து வாக்கெடுப்பின் அடிப்படையில் தமிழ் மாநிலத்தை தற்காலிகமாக இணைப்பதிலுள்ள ஆபத்தையும் தெளிவுபடுத்தினோம். ஈழத்து அரசியற் கட்சிகளும், ஏனைய விடுதலை அமைப்புகளும் இந்திய அரசின் அழுத்தத்திற்கும் மிரட்டலுக்கும் பணிந்து ஒப்பந்தத்தை ஆதரிக்கிறார்கள் என்றும்,

எமது மக்களின் அரசியல் இலட்சியத்தை விட்டுக் கொடுக்க நாம் தயாராக இல்லை என்பதையும் உறுதிபடக் கூறினோம். தமிழ் மக்களின் தேசிய இனப் பிரச்சினைக்கு ஒரு நிரந்தரத் தீர்வு காணாத நிலையில், தமிழரின் தாயக மண்ணை சிங்கள ஆயுதப் படைகள் ஆக்கிரமித்து நிற்கும் சூழ்நிலையில் எமது ஆயுதங்கள் அனைத்தையும் கையளித்து, எமது போராளிகளை சரணடையுமாறு கேட்பது நியாயமற்றது. அநீதியானது என்பதையும் எம்.ஜி.ஆரிடம் எடுத்துக் கூறினோம்.

மிகவும் பொறுமையுடன் எமது விளக்கத்தை கேட்டறிந்து கொண்டார் முதலமைச்சர். எமது நிலைப்பாட்டிலுள்ள நியாயப்பாட்டை அவரால் புரிந்து கொள்ள முடிந்தது. இந்திய இலங்கை ஒப்பந்தமானது இந்தியாவின் கேந்திர - புவியியல் நலனைப் பேணும் நோக்கத்திற்காகவே செய்து கொள்ளப்பட்டது என்பதையும் அவர் உணர்ந்து கொண்டார். இனப் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு கிட்டாத சூழ்நிலையில் ஆயுதங்கள் கையளிக்கப்படுவதையும் அவர் விரும்பவில்லை. அத்துடன் விடுதலைப் புலிகள் வசமிருந்து ஆயுதங்களில் கணிசமான தொகை தனது அன்பளிப்பு நிதியில் பெறப்பட்டது என்பதும் அவருக்குத் தெரியும். சிங்கள இராணுவ ஆக்கிரமிப்பு நீங்காத சூழ்நிலையில் தமிழரின் பாதுகாப்புக் கவசமாக விளங்கும் ஆயுதங்களைக் கைவிடுவது ஆபத்தானது என்பதை அவர் ஏற்றுக் கொண்டார். பிரபாகரனின் உறுதி தளரா நிலைப்பாட்டைப் பாராட்டிய எம்.ஜி.ஆர், ஒப்பந்த விவகாரத்தில் புலிகளின் தலைமை எத்தகைய முடிவை எடுக்கின்றதோ அதற்குத் தனது முழு ஆதரவும் இருக்கும் என்றார். முதலமைச்சருக்கு எமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துவிட்டு அங்கிருந்து வெளியேறினோம்.

முதலமைச்சரின் சந்திப்பு அறைக்கு வெளியே ஒரு இந்திய அதிகாரியுடன் கதைத்துக் கொண்டிருந்த திரு.டிக்சிட் எம்மை வழிமறித்தார். “ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ளும்படி முதலமைச்சர் வற்புறுத்தினார் அல்லவா?” என்று கேட்டார். நாம் சொல்வதறியாது தடுமாறி மௌனமாக நின்றோம். “முதலமைச்சர் சொன்னபடியே செய்யுங்கள்” என்றார் டிக்சிட். “அப்படியே செய்கிறோம்” என்று சொல்லிவிட்டு அங்கிருந்து புறப்பட்டோம். நாம் உற்சாகத்துடன் அளித்த பதிலுக்குப் பின்னணியிலுள்ள புதிரை அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை.

இந்திய - இலங்கை ஒப்பந்தத்திற்கு பிரபாகரனின்

அங்கீகாரத்தைப் பெறுவதில் தமிழக முதல்வரின் முயற்சி வெற்றிபெறவில்லை என இந்தியப் பிரதமருக்குத் தெரிய வந்தது. இதனால் ரஜீவ் காந்தி பெரிதும் ஏமாற்றம் அடைந்தார். எனினும் தனது முயற்சியைக் கைவிட அவர் தயாராக இல்லை. கொழும்பு சென்று ஒப்பந்தத்தில் கைச்சாத்து இடுவதற்கு முன்பாக விடுதலைப் புலிகளின் தலைவரது அங்கீகாரத்தைப் பெற்றுவிட வேண்டும் என்பதில் ரஜீவ் காந்தி உறுதிபூண்டிருந்தார். எம்முடன் பேசி, எமது கருத்துக்களை கேட்டறிந்து, எமது இணக்கத்தைப் பெறுவதற்கு முயன்று பார்க்க அவர் முடிவெடுத்தார்.

1987 ஜுலை 28ஆம் நாள் நள்ளிரவு. அசோக் விடுதியில் ஆழ்ந்த தூக்கத்திலிருந்த பிரபாகரனையும் என்னையும் அவசர அவசரமாக எழுப்பிய இந்தியப் புலனாய்வு அதிகாரிகள், பிரதமர் ரஜீவ் காந்தி எம்மை அவசரமாக சந்திக்க விரும்புவதாகக் கூறினார்கள். உடனடியாகப் புறப்படுமாறு பணித்தார்கள். ஆயுதம் தரித்த கரும்பூனை அதிரடிப் படையினரின் வாகன அணி பின்தொடர பிரதம மந்திரியின் இருப்பிடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டோம். வீட்டு வாசலில், வெள்ளை நிறத் தேசிய அங்கி அணிந்தவாறு எமக்காகக் காத்து நின்றார் பிரதமர். ரஜீவ் காந்தியுடன் இந்திய உள்ளகப் புலனாய்வுத் துறை அதிபர் திரு. நாராயணனும் தமிழக மந்திரி திரு. பண்டுருட்டி இராமச்சந்திரனும் நின்று கொண்டிருந்தனர். கவர்ச்சியூட்டும் புன்முறுவல் பூத்தபடி எம்மை அன்புடன் வரவேற்றார் பிரதமர். பிரபாகரனின் கரத்தைப் பற்றிக் குலுக்கியவாறு, "உங்களைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். உங்களை நேரில் சந்திப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன்" என்றார் ரஜீவ் காந்தி. "இவர்களை நான் அறிமுகம் செய்து வைப்பது அவசியமில்லை. இவர்கள் உங்களுக்கு ஏற்கனவே நன்கு அறிமுகமானவர்கள்" என்று திரு. இராமச்சந்திரனையும், திரு. நாராயணனையும் சுட்டியபடி சொன்னார் ரஜீவ் காந்தி. பிரதமரின் சந்திப்பு அறையில் கலந்துரையாடல் உடனே ஆரம்பித்தது. "இந்திய - இலங்கை உடன்பாட்டை நீங்கள் ஏற்றுக் கொள்ள மறுப்பதாக அறிந்தேன். ஒப்பந்தத்திலுள்ள குறைபாடுகள் பற்றி விபரமாகக் கூறுவீர்களா?" என்று கேட்டார் ரஜீவ். எமது நிலைப்பாட்டை விபரமாக விளக்கும்படி பிரபாகரன் என்னைப் பணித்தார். ஒப்பந்தத்திலுள்ள குறைபாடுகளை நான் ஒவ்வொன்றாக எடுத்து விளக்கினேன்.

முதலில், இலங்கையின் ஒற்றையாட்சி அரசியலமைப்புப்

பற்றி மிகச் சுருக்கமான கண்டன ஆய்வை முன்வைத்தேன். மிகவும் இறுக்கமான, நெகிழ்த்த முடியாத விதிகளைக் கொண்ட அரசியல் யாப்பு பெரும்பான்மையினரின் நலன்களைப் பேணும் வகையில் வரையப்பட்டிருக்கிறது. இந்த அரசியல் யாப்பின் கீழ், மத்திய அரசுக்கும் மாநிலங்களுக்கும் மத்தியில் அர்த்தபூர்வமான முறையில் அதிகாரப் பகிர்வு செய்வது இயலாத காரியம் என விளக்கினேன்.

பரந்த நிறைவேற்று அதிகாரங்களையுமுடைய ஜனாதிபதியை அரச அதிபராகக் கொண்ட ஒரு இறுக்கமான ஒற்றையாட்சி அரசை சிறீலங்காவின் அரசியல் யாப்பு உருவாக்கம் செய்துள்ளது. இந்த ஆட்சியமைப்பில் அரச நிர்வாக அதிகாரங்கள் அனைத்துமே மத்தியில் குவிக்கப்பட்டிருக்கின்றன. இப்படியான ஒற்றையாட்சி யாப்பை இந்திய - இலங்கை ஒப்பந்தம் நிபந்தனையின்றி முழுமையாகக் கொண்டுள்ளது. இதன் காரணமாக, நியாயபூர்வமாக அதிகாரப் பகிர்வு செய்யும் வகையில் அரசியல் கட்டமைப்பில் அடிப்படை மாற்றம் செய்வது சாத்தியமற்றது எனச் சுட்டிக் காட்டினேன்.

இந்திய - இலங்கை ஒப்பந்தத்தில் பரிந்துரைக்கப்பட்ட மாகாண சபையின் அதிகாரங்களும் செயற்பாடுகளும் நிர்வாகத் துறைகளும் தெளிவான முறையில் வரையறுக்கப்படவில்லை. 'டிசம்பர் 19' தீர்வு யோசனைகளின் அடிப்படையில் இந்த மாகாண சபை மேலும் திருத்தியமைத்து மேம்பாடு செய்யலாமென ஒப்பந்தத்தில் சொல்லப்படுகிறது. ஆனால் இந்த 'டிசம்பர் 19' தீர்வு யோசனைகளில் பல குறைபாடுகள் உள்ளதெனச் சுட்டிக்காட்டி எமது இயக்கம் ஏற்கனவே அதனை நிராகரித்துள்ளது என்பதையும் பாரதப் பிரதமருக்கு எடுத்துரைத்தேன்.

தமிழீழ மக்களின் தேசிய இனப் பிரச்சினையைப் பொறுத்த மட்டில் தமிழரின் நில உரிமை மிகவும் முக்கியமானது. இலங்கை தீவின் வடக்கு கிழக்கு மாகாணங்களைக் கொண்ட தொடர்ச்சியான பெருநிலப்பரப்பில் பெரும்பான்மையான தமிழ் மக்களும், தமிழ் பேசும் முஸ்லிம் மக்களும் வரலாற்று ரீதியாக வாழ்ந்து வருகிறார்கள். இந்த நிலம் அவர்களது சொந்த நிலம், அவர்களது பாரம்பரிய தாயக நிலம். இந்தத் தாயக நிலத்தைப் பிரிக்கும் எந்தத் திட்டத்தையும் தமிழ் மக்கள் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை என்பதையும் ரஜீவ் காந்தியிடம் எடுத்துரைத்தேன். வடகிழக்கு மாகாணங்கள் தனித்தவொரு நிர்வாகப் பிரதேசமாக

இந்திய - இலங்கை ஒப்பந்தத்தில் இணைக்கப்பட்டிருப்பது ஒரு ஆக்கபூர்வமான சாதனை. ஆயினும் இந்த இணைப்பு தற்காலிகமானது. இதன் நிரந்தர இணைப்பு பொதுசனக் கருத்து வாக்கெடுப்புக்கு விடப்பட்டிருப்பதை தமிழ் மக்கள் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. ஏனென்றால், வாக்கெடுப்பில் சிங்கள முஸ்லிம் மக்கள் பெரும்பான்மையாக இணைப்பை எதிர்த்து வாக்களித்தால் வடகிழக்கு நிரந்தரமாகப் பிளவுபடுவதுடன், தமிழ்த் தாயகம் காலப் போக்கில் சிதைந்து விடும் என விளக்கினேன். பொறுமையுடன் மௌனமாக எனது கருத்துக்களைக் கேட்டுக் கொண்டிருந்த பிரதமர், அவ்வப்போது குறிப்புகளை எடுத்தார்.

மாகாண சபைக்கு வழங்கப்பட்டிருக்கும் அதிகாரப் பரவலாக்கம் மிகவும் வரையறுக்கப்பட்டது என்றும் அது தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யவில்லை என்றும் விளக்கினேன். “வடகிழக்கு மாகாண சபையைக் கலைத்துவிடும் அதிகாரம் இலங்கையின் அரச அதிபர் ஜெயவர்த்தனாவுக்கு வழங்கப்பட்டுள்ளது. இவர் ஒரு சிங்கள இனவெறியர். தமிழ் மக்களுக்கு விரோதமானவர். இவர் தமிழ் மக்களுக்கு நீதி வழங்குவார் என நாம் நம்பவில்லை” என்று கூறினார் பிரபாகரன்.

இறுதியாக, விடுதலைப் புலிப் போராளிகளிடமிருந்து ஆயுதங்களைக் களையும் விவகாரத்தை எடுத்துக் கொண்டோம். “இலங்கை - இந்திய ஒப்பந்தம் கைச்சாத்தாகிய 72 மணி நேரத்திற்குள் எமது விடுதலை இயக்கம் சகல ஆயுதங்களையும் ஒப்படைக்கவேண்டுமென விதிப்பது அநீதியானது. எத்தனையோ ஆண்டுகளாக இரத்தம் சிந்திப் போராடி, உயிர்களைத் தியாகம் செய்து பெறப்பட்ட ஆயுதங்களை நான்கு நாட்களுக்குள் சரணடையுமாறு ஒப்பந்தம் வற்புறுத்துகிறது. தமிழரின் தேசிய இனப் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு காண்பதற்கு முன்பாக, தமிழ் மக்களின் பாதுகாப்புக்கு தகுந்த உத்தரவாதங்கள் பெறுவதற்கு முன்னராக, எமது மக்களின் பாதுகாப்புக் கவசமாக விளங்கும் ஆயுதங்களைக் கையளிக்குமாறு வற்புறுத்துவது எவ் வகையிலும் நியாயமாகாது.” என்றார் பிரபாகரன்.

நாம் உரையாடி முடிக்கும்வரை, குறுக்கிட்டுப் பேசாது, பொறுமையுடன் எமது கருத்துகளை மிகக் கவனத்துடன் கேட்டறிந்தார் இந்தியப் பிரதமர். சர்ச்சைக்குரிய விடயங்களை குறிப்பேட்டில் எழுதிக் கொண்டார். நாம் முடித்ததும், “உங்களது

பிரச்சினைகளை என்னால் நன்கு புரிந்து கொள்ள முடிகிறது,'' என்றார் ரஜீவ் காந்தி.

இந்த ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்ட மாகாண சபைத் திட்டம் ஒரு தற்காலிக ஒழுங்குதான் எனக் கூறிய அவர், அதிலுள்ள குறைபாடுகளை பின்னராக ஜெயவர்த்தனா அரசுடன் பேசி நிவர்த்தி செய்ய முயற்சிப்பதாக உறுதியளித்தார். "கட்டம் கட்டமாகவே தமிழரின் பிரச்சினையை அணுகித் தீர்வுகாண முடியும். ஒரே தடவையில் எல்லாப் பிரச்சினைகளுக்கும் தீர்வு கண்டுவிட முடியாது. கடுமையான முயற்சியின் பின்பு இணைக்கப்பட்ட மாகாணத்தில் தமிழ் மக்களுக்கு பிரதேச சுயாட்சியைப் பெற்றுள்ளோம். இதுவொரு பெரிய முன்னேற்றம்'' என்றார் ரஜீவ்.

இந்த ஒப்பந்தத்தில், நாம் சுட்டிக் காட்டியது போல நிறையக் குறைபாடுகள் இருக்கின்றன என்பதை ஏற்றுக் கொண்ட இந்தியப் பிரதமர், வடகிழக்கின் நிரந்தர இணைப்பை கருத்து வாக்கெடுப்புக்கு விடுவதிலுள்ள சிக்கலைப் புரிந்துள்ளதாகக் கூறினார். "இது பற்றி நான் ஜெயவர்த்தனாவுடன் பேசுவேன். கருத்து வாக்கெடுப்பு நடத்தாமல் அதனை ஒத்திவைக்குமாறு கேட்டுக் கொள்வேன். எதற்கும் நீங்கள் இந்திய அரசை நம்ப வேண்டும். தமிழ் மக்களின் நலனை மேம்பாடு செய்வதில்தான் நாம் அக்கறையுடன் செயற்பட்டு வருகிறோம். எனவே, உங்களது அமைப்பின் ஒத்துழைப்பும் ஆதரவும் எமக்குத் தேவை. தமிழ் மக்களின் உரிமையை வென்றெடுத்து, அவர்களது பாதுகாப்பை இந்த ஒப்பந்தம் உறுதிப்படுத்தும். இந்த ஒப்பந்தத்தை நீங்கள் ஆதரித்தால் அது எமது கைகளைப் பலப்படுத்துவது மட்டுமன்றி ஒப்பந்தத்தை நடைமுறைப்படுத்தவும் ஏதுவாக அமையும்'' என விளக்கினார் ரஜீவ் காந்தி. இந்தக் கட்டத்தில் குறுக்கிட்டார் அமைச்சர் பண்டுருட்டி இராமச்சந்திரன். ரஜீவ் காந்தி கூறியவற்றை தமிழில் மொழிபெயர்த்து ஒரு விரிவான விளக்கம் அளித்தார் அவர். ரஜீவின் கூற்றுகளும், பண்டுருட்டி அளித்த விளக்கங்களும் பிரபாகரனுக்கு திருப்தி அளிக்கவில்லை.

"இந்த ஒப்பந்தம் தமிழ் மக்களின் நலனைப் பேணவில்லை. மாறாக, தமிழ் மக்களின் நலனைப் பாதிக்கிறது. ஆகவே, இந்த உடன்படிக்கையை நாம் ஏற்றுக்கொள்ள முடியாது,'' என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னார் பிரபாகரன். புலிகளின் தலைவரது கூற்றை, சொல்லுக்குச் சொல் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கூறினார் அமைச்சர் இராமச்சந்திரன். தனது

நிலைப்பாட்டில் பிரபாகரன் உறுதியாக, இறுக்கமாக நிற்கிறார் என்பதைப் புரிந்து கொண்டார் ரஜீவ். விடுதலைப் புலிகளுடன் முரண்பட்டு, தனது முயற்சியை முறித்துக் கொள்ள விரும்பாத பிரதமர், திடீரென தனது அணுகுமறையை மாற்றிக் கொண்டார்.

"உங்களது நிலைப்பாடு எனக்கு நன்றாகப் புரிகிறது. நீங்கள் எடுத்த முடிவையோ, கொள்கையையோ மாற்றச் சொல்லி நான் கேட்கவில்லை. நீங்கள் இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ளத் தேவையில். ஆனால் இந்த ஒப்பந்தத்திற்கு எதிர்ப்புத் தெரிவிக்காமல் இருந்தால் போதும்." என்றார் ரஜீவ் காந்தி. அவ்வேளை தலையிட்டுப் பேசிய பண்டுருட்டி இராமச்சந்திரன் ரஜீவ் காந்தியின் கூற்றுக்கு மெருகூட்டி ஒரு விளக்கம் கொடுத்தார். "இது ஒரு அற்புதமான திருப்பம் அல்லவா? பிரதம மந்திரியே உங்களது நிலைப்பாட்டை ஏற்றுக் கொள்கிறார். நீங்கள் ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ளத் தேவையில்லை. ஆனால் அதற்கு எதிர்ப்பு தெரிவிக்க வேண்டாம். இந்தச் சிறிய சலுகையையாவது இந்திய அரசுக்கு நீங்கள் செய்யக் கூடாதா?" என்று கேட்டார் தமிழக அமைச்சர்.

ரஜீவின் கூற்றும் அதற்கு திரு. இராமச்சந்திரன் அளித்த விளக்கமும் பிரபாகரனுக்கும் எனக்கும் திருப்தி அளிக்கவில்லை. "ஒரு விடயத்தை நாம் ஏற்றுக் கொள்ளவில்லை என்றால், அதை நாம் எதிர்க்கிறோம் என்பதுதானே அர்த்தம். ஒரு விடயத்தை ஏற்றுக் கொள்ளாமலும் அதேவேளை எதிர்க்காமலும் இருப்பது எப்படி? இதுவொரு விந்தையான வாதம்" என்று எனது காதுக்குள் குசுகுசுத்தார் பிரபாகரன். தனது கூற்றிலுள்ள புதிரை நாம் புரிந்து கொண்டோம் என்பதை உணர்ந்த பிரதமர், பிரச்சினையை வேறு பரிமாணத்திற்கு எடுத்துச் சென்றார்.

"உங்களது இயக்கத்திற்கும், உங்களது மக்களுக்கும் ஜனாதிபதி ஜெயவர்த்தனா மீது நம்பிக்கையில்லை என்பது எமக்கு நன்கு தெரியும். எனக்கும் அவர் மீது நம்பிக்கையில்லைதான். என்றாலும் அவர் மீது கடுமையான அழுத்தம் பிரயோகித்து, முக்கியமான சலுகைகளைப் பெற்று இந்த ஒப்பந்தத்தை செய்திருக்கிறோம். மாகாண சபைத் திட்டத்தில் குறைகள் இருக்கலாம். எனினும் நாம் தொடர்ந்து பேச்சுக்களை நடத்தி, பிரதேச சுயாட்சி அதிகாரத்தைக் கூட்டலாம். இந்த மாகாண சபைத் திட்டத்தை உடனடியாக நடைமுறைப்படுத்துவது சாத்தியமற்றது என்பதை நீங்கள் அறிவீர்கள். அதற்கு நீண்ட காலம் பிடிக்கலாம். ஆதலால்

அந்தக் கால இடைவெளியில், வடகிழக்கில் ஒரு இடைக்கால அரசை நிறுவ முடியும். அந்த இடைக்கால அரசில் உங்களது அமைப்பு பிரதான பங்கை வகிக்கலாம். தமிழர் மாநிலத்தில் ஒரு இடைக்கால அரசு நிறுவுவது பற்றி நான் உங்களுடன் ஒரு இரகசிய உடன்பாடு செய்து கொள்ளவும் ஆயத்தமாக இருக்கிறேன்'' என்றார் ரஜீவ் காந்தி.

பாரதப் பிரதமரின் யோசனை பண்டுருட்டி இராமச்சந்திரனை பரவசத்தில் ஆழ்த்தியது. உற்சாகம் மேலிட உணர்ச்சிவசப்பட்ட அவர், "இந்த அற்புதமான சந்தர்ப்பத்தை நழுவவிடவேண்டாம். தமிழ்த் தாயகத்தில் விடுதலைப் புலிகளின் நிர்வாக ஆட்சியை நிறுவும் அருமையான வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. இந்திய - இலங்கை ஒப்பந்தம் பற்றி பெரிதாக அலட்டிக் கொள்ளவேண்டாம். அதற்கு முன்னராக ரஜீவ் - பிரபா ஒப்பந்தம் வரப்போகிறது. இதனைப் பகிரங்கப்படுத்தத் தேவையில்லை. இரகசியமாகவே வைத்துக் கொள்ளலாம்.'' என்று கூறினார்.

ஆழமான சிந்தனையில் ஆழ்ந்துபோயிருந்தார் பிரபாகரன். இந்த இரகசிய ஒப்பந்தங்கள், உடன்பாடுகள், உறுதிமொழிகளில் அவருக்கு நம்பிக்கையில்லை. எதிலுமே ஆர்வம் காட்டாது தனக்குள்ளே தியானத்தில் ஒடுங்கிப் போயிருந்தார் அவர். ஆனால் பண்டுருட்டி இராமச்சந்திரன் மிகவும் ஆர்வத்துடன் ரஜீவ் - பிரபா ஒப்பந்தத்திற்கு ஒரு பிரமாதமான வடிவம் கொடுக்க முயன்று கொண்டிருந்தார்.

மாகாண சபை உருவாக்கப்படுவதற்கு முன்னர், வடகிழக்கில் ஒரு இடைக்கால நிர்வாக ஆட்சி நிறுவப்பட்டு, அதில் விடுதலைப் புலிகளுக்கு பெரும்பான்மைப் பிரதிநிதித்துவம் வழங்குவதென முடிவெடுக்கப்பட்டது. சகல தமிழ்ப் போராளி அமைப்புகளுக்கும் இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பில் பிரதிநிதித்துவம் வழங்க வேண்டுமென ரஜீவ் காந்தி கேட்டுக் கொண்டார். அதற்குப் பிரபாகரன் இணங்கவில்லை. இறுதியில், தமிழர் விடுதலைக் கூட்டணிக்கும் ஈரோஸ் அமைப்புக்கும் மட்டும் குறைந்த அளவில் பிரதிநிதித்துவம் வழங்குவதென இணக்கம் காணப்பட்டது. வடகிழக்கு இடைக்கால ஆட்சியின் கட்டமைப்பு, அதிகாரம், செயற்பாடு போன்ற விடயங்களை அரச அதிபர், ஜெயவர்த்தனாவுடன் பேசி முடிவு எடுப்பதாக ரஜீவ் காந்தி உறுதியளித்தார்.

தமிழரின் பாரம்பரிய நிலத்தில் சிங்களக் குடியேற்றம்

நிறுத்தப்பட வேண்டுமென்றும், தமிழ்ப் பகுதிகளில் சிங்கள அரசாங்கம் காவல்துறை நிலையங்களைத் திறக்கக் கூடாது என்றும் பிரபாகரன் கேட்டுக் கொண்டார். அதற்கு ரஜீவ் காந்தி இணக்கம் தெரிவித்தார்.

யாழ்ப்பாணத்தில் பொதுமக்களிடமிருந்து விடுதலைப் புலிகள் அமைப்பு வரி வசூலித்து வருவதாகச் சிறீலங்கா அரசு குற்றம் சுமத்துவதாகத் தெரிவித்த பிரதமர், இந்த வரி வசூலிப்பை நிறுத்த முடியாதா என வினவினார். மக்களிடமிருந்து பெறப்படும் வரிப் பணம் எமது அமைப்பின் நிர்வாகச் செலவுக்கே பயன்படுத்தப்படுவதாகக் கூறிய பிரபாகரன், அந்தத் தொகையை இந்திய அரசு எமக்குத் தர இணங்கினால் வரி அறவிடுவதை கைவிடலாம் என்றார். விடுதலைப் புலிகளின் நிர்வாகச் செலவுக்காக மாதாந்தம் ஐம்பது லட்சம் ரூபா (இந்திய நாணயமாக) வழங்குவதற்கு இணங்கினார் ரஜீவ். வரி வசூலிப்பை நிறுத்துவதாக வாக்களித்தார் பிரபாகரன்.

அடுத்ததாக, விடுதலைப் புலிப் போராளிகளை நிராயுதபாணிகள் ஆக்கும் சர்ச்சைக்குரிய விவகாரம் பற்றிப் பேசப்பட்டது. “உங்கள் அமைப்பிடமுள்ள எல்லா ஆயுதங்களையும் கையளிக்குமாறு நாம் கேட்கவில்லை. அத்துடன் உங்களது கெரில்லாப் படையணிகளையும் கலைத்துவிடுமாறும் நாம் சொல்லவில்லை. நல்லெண்ண சமிக்கையாகச் சிறுதொகை ஆயுதங்களைக் கையளித்தால் போதும். இந்திய - இலங்கை ஒப்பந்த விதிகளுக்கு அமைவாக விடுதலைப் புலிகள் செயற்படுகிறார்கள் என சிறீலங்கா அரசையும் அனைத்துலக சமூகத்தையும் நம்பவைக்கும் வகையில் இந்த ஆயுதக் கையளிப்பு நடைபெறுவது முக்கியம். தமிழ் மக்களுக்கும் போராளிகளுக்கும் பாதுகாப்பு அளிக்கும் வகையில் இந்திய அமைதிப் படை வடகிழக்கில் செயற்படும். அத்துடன் சிங்கள ஆயுதப் படைகள் போர்நிறுத்தம் பேணியவாறு முகாம்களுக்குள் முடங்கியிருக்கும். இந்தச் சூழ்நிலையில் உங்களுக்குப் போராயுதங்கள் தேவைப்படாது அல்லவா?” என்று கூறினார் ரஜீவ் காந்தி.

பிரபாகரன் பதிலளிக்கவில்லை. ஆழமாகச் சிந்தித்தபடி இருந்தார். இந்தச் சந்தர்ப்பத்தில் குறுக்கிட்டார் பண்டுருட்டி. “எதற்காகக் கடுமையாக யோசிக்க வேண்டும். இந்தியாவிடமிருந்து பெற்றுக்கொண்ட ஆயுதங்களில் பழுதடைந்த, பாவிக்கமுடியாத, துருப்பிடித்த ஆயுதங்கள்

சிலவற்றைக் கையளித்தால் போச்சு'' என்றார் இராமச்சந்திரன்.

''இந்தியாவிடமிருந்து பெற்றுக்கொண்டவை எல்லாமே பழுதடைந்த, பாவிக்க முடியாத, துருப்பிடித்த ஆயுதங்கள்தான்'' என்று கிண்டலாகப் பதிலளித்தார் பிரபாகரன்.

''பரவாயில்லையே, அந்தப் பழுதடைந்த ஆயுதங்களில் சிலவற்றைக் கொடுத்து விடுங்கள். பின்பு தேவை ஏற்படும்பொழுது இந்திய அரசிடமிருந்து புதிய ஆயுதங்களைக் கேட்டு வாங்கலாம்.'' என்றார் அமைச்சர்.

தமிழ் மொழியில் நிகழ்ந்த இந்த சுவையான உரையாடலின் அர்த்தத்தை அறிய விரும்பினார் ரஜீவ். அதனை அப்படியே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கூறினார் பண்டுருட்டி. அதை ஆமோதித்தபடி புன்முறுவலுடன் தலையசைத்தார் பிரதம மந்திரி.

அப்பொழுது அதிகாலை இரண்டு மணி இருக்கும். விடுதலைப் புலிகளின் தலைவருடன் ஏதோவொரு சுமுகமான இணக்கப்பாட்டிற்கு வந்ததுபோல மகிழ்ச்சியுடனும் உற்சாகத்துடனும் காணப்பட்டார் ரஜீவ் காந்தி. அன்று காலை ஒன்பது மணியளவில் அவர் புதுடில்லியிலிருந்து கொழும்பு புறப்பட ஏற்பாடாகியிருந்தது. பிற்பகல் மூன்று மணிக்கு இந்திய-இலங்கை ஒப்பந்தத்தில் அவர் கைச்சாத்திட வேண்டும். இந்தியப் பிரதமரிடம் எந்தவிதமான சோர்வோ, களைப்போ தென்படவில்லை. ஏதோவொரு சாதனை ஈட்டியது போல தெம்பாகக் காணப்பட்டார். பண்டுருட்டி இராமச்சந்திரனுக்குப் பரம திருப்தி. ஏதோ சிந்தனையில் மூழ்கிப் போயிருந்தார் பிரபாகரன். அவரது கண்களில் ஏமாற்றமும் சோகமும் தெரிந்தது. சந்திப்பு முடிவடையும் கட்டத்திற்கு வந்துவிட்டது. அப்பொழுது நான் அமைச்சர் பண்டுருட்டியிடம் கேட்டேன். ''ரஜீவ் - பிரபா இரகசிய ஒப்பந்தம் எனப் பல முக்கிய விடயங்கள் இங்கு பேசப்பட்டன. பிரதம மந்திரி அவர்களும் பல வாக்குறுதிகளைத் தந்திருக்கிறார். இவற்றை எல்லாம் எழுத்தில் வரைந்து இரு தலைவர்களிடமிருந்தும் கைச்சாத்துப் பெற்றால் என்ன? அது இந்த இரகசிய உடன்பாட்டுக்கு வலுச்சேர்க்கும் அல்லவா?'' என்றேன்.

எனது யோசனை பண்டுருட்டி இராமச்சந்திரனை ஆட்டம் காண வைத்தது. ஒரு கணத்தில் அவரது முகத்திலிருந்த மகிழ்ச்சி எல்லாம் மறைந்து போனது. சிறிது நேரம் யோசித்தார். ''மிகவும் சர்ச்சைக்குரிய விடயங்களில் நாம் இணக்கப்பாடு கண்டோம். கறுப்புப் பணமாக மாதாந்தம் உங்களுக்கு கப்பம்

வழங்குவதிலிருந்து ஆயுதக் கையளிப்பிலும் ஒளிவு மறைவாக உடன்பாடு செய்திருக்கிறோம். இந்த விடயங்கள் அம்பலமானால் அது இந்தியாவிலும் இலங்கையிலும் பெரியதொரு அரசியற் சூறாவளியை உண்டுபண்ணும் அல்லவா? எமது பிரதமரில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? இது ஒரு Gentlemen Agreement. இரு உத்தமமான மனிதர்களின் எழுத்தப்படாத ஒப்பந்தமாக இருக்கட்டுமே?" என்றார் அமைச்சர் பண்டுருட்டி. தான் கூறியதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து ரஜீவ் காந்திக்கும் விளக்கினார்.

"நீங்கள் எதற்கும் கவலை கொள்ளத் தேவையில்லை. கொடுத்த வாக்குறுதிகளை நான் நிச்சயமாக நிறைவேற்றி வைப்பேன். அமைச்சர் சொல்வது போன்று இது ஒரு எழுதப்படாத Gentlemen Agreement ஆக இருக்கட்டும்" என்றார் ரஜீவ் காந்தி. இந்த விடயத்தில் நாம் பிரதம மந்திரியுடன் முரண்பட விரும்பவில்லை. அத்தோடு இந்த இரகசிய ஒப்பந்தத்தில் பிரபாகரனும் எவ்வித அக்கறை காட்டுவது போலவும் தெரியவில்லை. முடிவாக எமது தடுப்புக் காவல்பற்றி பிரதமரிடம் முறையிட்டோம். பிரபாகரன் மீதான தடுப்புக் காவலை அகற்றி, அவரை யாழ்ப்பாணம் அனுப்புவதற்கு உடன் ஒழுங்கு செய்வதாக உறுதியளித்தார் ரஜீவ்.

ரஜீவ் காந்தியின் இல்லத்திலிருந்து அசோக் விடுதிக்கு நாம் போய்ச்சேர அதிகாலை மூன்று மணி ஆகிவிட்டது. "அண்ணா, இருந்து பாருங்கோ, இந்த இரகசிய ஒப்பந்தமும் வாக்குறுதிகளும் ஒன்றுமே நிறைவேறப் போவதில்லை. இதெல்லாம் ஒரு அரசியல் ஏமாற்று வித்தை" என்று விரக்தியுடன் கூறிவிட்டு தனது அறைக்குள் சென்றார் பிரபாகரன்.

சோர்ந்து களைத்து எனது அறைக்குள் சென்றபோது விழித்தபடி காத்திருந்த திலீபன் விடியும் வரை என்னைத் தூங்கவிடவில்லை. இந்தியப் பிரதமருடன் நடந்த கலந்துரையாடல் பற்றியும், ரஜீவ் - பிரபா இரகசிய ஒப்பந்தம் பற்றியும், திலீபனிடம் விபரமாகக் கூறினேன். எல்லாவற்றையும் மிகவும் ஆர்வமாகக் கேட்டுக் கொண்டிருந்த அவன், "அண்ணா என்ன சொல்கிறார்" எனக் கேட்டான். "பிரபாகரனுக்கு திருப்தியில்லை. வாக்குறுதிகள் நிறைவேற்றப்படும் என்பதிலும் அவருக்கு நம்பிக்கை இல்லை" என்றேன். சிறிது நேரம் சிந்தித்துவிட்டு, "அண்ணன் நினைப்பதுதான் நடக்கும்" என்றான் திலீபன். உண்மையில் அப்படித்தான் நடந்தது. ரஜீவ் - பிரபா

ஒப்பந்தம் நிறைவேற்றப்படவில்லை. இடைக்கால நிர்வாக அரசும் நிறுவப்படவில்லை.

மறுநாள் காலை இந்தியப் பிரதமர் கொழும்புக்குப் புறப்பட்டுச் சென்றார். பிற்பகல் நடைபெற்ற ஆடம்பர வைபவத்தின் போது ரஜீவ் காந்தியும், ஜெயவர்த்தனாவும் இந்திய-இலங்கை ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்டனர். எம் மீதான தடுப்புக் காவல் அகற்றப்பட்டதால் நாம் சென்னைக்குப் புறப்பட்டுச் சென்றோம். 1987 ஆகஸ்ட் 2ஆம் நாள், பிரபாகரனும், யோகரெத்தினம் யோகியும், திலீபனும் இந்திய இராணுவ விமானம் மூலம் யாழ்ப்பாணம் சென்றடைந்தனர்.

## பிரபாகரனின் சுதுமலைப் பிரகடனம்

இந்திய - இலங்கை ஒப்பந்தம் கைச்சாத்தாகியதை அடுத்து, பல்லாயிரக்கணக்கான இந்தியத் துருப்புகள் பலாலி விமானத் தளம் ஊடாக யாழ்ப்பாணத்திற்குள் பிரவேசித்தன. அமைதி காக்கும் படை என்ற பெயரில் தமிழர் தாயகத்தினுள் நுழைந்த இந்தியப் படையணிகள், டாங்கிகள், பீரங்கிகள், மோட்டார்கள், இயந்திரத் துப்பாக்கிகள் என்ற ரீதியில் கனரக ஆயுதங்களைத் தாங்கி வந்தன. இந்திய - இலங்கை ஒப்பந்த விதிகளுக்கு அமைய, சிங்கள ஆயுதப் படைகள் முகாம்களுக்குள் முடங்கிக் கொள்ள, தமிழ் பேசும் சென்னைப் படையணி உட்பட, இந்திய இராணுவ வீரர்கள் யாழ்ப்பாண வீதிகளூடாக அணிவகுத்துச் சென்றனர். வரலாற்று ரீதியாகப் பாரத தேசத்தை நண்பனாகவும் பாதுகாவலனாகவும் வழிபட்ட தமிழ் மக்கள், இந்திய இராணுவத்தினரை மகிழ்ச்சி ஆரவாரத்துடன் மாலையிட்டு வரவேற்றனர். நிரந்தரமான அமைதி பிறந்துவிட்டது போன்ற உணர்வுடன் ஆனந்தம் அடைந்தனர்.

தமிழ் மக்கள் மத்தியில் மகிழ்ச்சியும் நம்பிக்கையும் நிலவிய அதேவேளை, தென்னிலங்கையில் சிங்கள மக்கள் மத்தியில் இந்தியாவுக்கு எதிரான பகையுணர்வு தாண்டவமாடியது. ஆர்ப்பாட்டங்கள், கண்டன ஊர்வலங்கள் நடத்தி சிங்கள மக்கள் இந்தியாவுக்கு எதிராகக் குரலெழுப்பினர். மாக்சிய தீவிரவாத அமைப்பான ஜனதா விமுக்தி பெரமுனை (ஜே.வி.பி) இந்திய எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களுக்கு தலைமை தாங்கியது. இலங்கையின் உள்விவகாரத்தில் அத்துமீறித்

தலையிட்டுள்ளதாக இந்திய அரசு மீது ஜே.வி.பி. குற்றம் சுமத்தியது.

இந்திய - இலங்கை ஒப்பந்தம் கைச்சாத்தாகியதன் விளைவாக தென்னிலங்கையில் கொந்தளிப்பான அரசியல் சூழ்நிலை எழுந்தது. சிங்கள தேசத்தில் இந்திய எதிர்ப்புணர்ச்சி வலுப்பெற்று வந்த வேளையில், தமிழர் தாயகத்தில் விடுதலைப் போராட்டத்தின் எதிர்காலம் குறித்து ஒரு குழப்ப நிலை எழுந்தது. விடுதலைப் புலிகளின் அரசியற் திட்டம் பற்றியும் இந்திய அரசுடனான உறவு பற்றியும், இந்திய - இலங்கை ஒப்பந்தம் குறித்து எமது அமைப்பின் நிலைப்பாடு பற்றியும் எமது போராளிகளுக்கு மட்டுமன்றி, எமது மக்களுக்கும் ஒரு தெளிவான விளக்கம் கொடுக்க நாம் நிர்ப்பந்திக்கப்பட்டோம். பொதுமக்கள் போராளிகள் மத்தியில் ஒரு கொள்கை விளக்க உரையை நிகழ்த்த தலைவர் பிரபாகரன் முடிவெடுத்தார். இந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பொதுக் கூட்ட நிகழ்வு 1987 ஆகஸ்ட் 4ஆம் நாள் நிகழ்ந்தது. தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தின் எதிர்காலம் பற்றித் தலைவர் பிரபாகரன் என்ன சொல்லப் போகின்றார் என்பதைக் கேட்டறியும் ஆர்வத்துடன் ஒரு லட்சம் மக்களைக் கொண்ட பெரும் அளவிலான சனத் திரள் யாழ்ப்பாணம் சுதுமலை அம்மன் கோவில் மைதானத்தில் அணிதிரண்டது. பிரபாகரன் தனது உரையை ஆரம்பித்தார்.

"எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே!

இன்று எமது விடுதலைப் போராட்ட வரலாற்றில் ஒரு மாபெரும் திருப்பம் ஏற்பட்டிருக்கிறது. திடீரென எமக்கு அதிர்ச்சியூட்டுவது போல, எமது சக்திக்கு அப்பாற்பட்டது போல, இந்தத் திருப்பம் ஏற்பட்டிருக்கிறது. இதன் விளைவுகள் எமக்கு சாதகமாக அமையுமா? என்பதை நாம் பொறுத்திருந்துதான் பார்க்கவேண்டும்.

திடீரென மிகவும் அவசரமாக, எமது மக்களையோ, எமது மக்களின் பிரதிநிதிகளாகிய எம்மையோ கலந்தாலோசிக்காமல், இந்தியாவும் இலங்கையும் செய்து கொண்ட ஒப்பந்தம் இப்பொழுது அவசர அவசரமாக அமுலாக்கப்பட்டு வருகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். நான் டெல்லி செல்லும்வரை இந்த ஒப்பந்தம் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. பாரதப்

பிரதமர் என்னைச் சந்திக்க விரும்புவதாகச் சொல்லி என்னை டெல்லிக்கு அவசரமாக அழைத்துச் சென்றார்கள். அங்கு சென்றதும் இந்த ஒப்பந்தம் எமக்கும் காண்பிக்கப்பட்டது. இந்த ஒப்பந்தத்தில் பல சிக்கல்கள் இருந்தன. பல கேள்விக்குறிகள் இருந்தன. இந்த ஒப்பந்தத்தால் எமது மக்களின் பிரச்சினைக்கு ஒரு நிரந்தத் தீர்வு ஏற்படுமா என்பது பற்றி எமக்குச் சந்தேகம் எழுந்தது. ஆகவே இந்த ஒப்பந்தத்தை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது என்பதை இந்திய அரசுக்குத் தெட்டத் தெளிவாக விளக்கினோம்.

ஆனால் நாம் ஏற்றுக்கொண்டாலும், ஏற்றுக் கொள்ளாது போனாலும் இந்த ஒப்பந்தத்தை அமுலாக்கியே தீருவோமென இந்திய அரசு கங்கணம் கட்டி நின்றது. இந்திய அரசின் நிலைப்பாடு குறித்து நாம் ஆச்சரியப்படவில்லை. இந்த ஒப்பந்தம் தமிழர் பிரச்சினையை மட்டும் தொட்டு நிற்கவில்லை. இது பிரதானமாக இந்திய - இலங்கை உறவு பற்றியது. இந்திய வல்லாதிக்க வியூகத்தின் கீழ் இலங்கையைக் கட்டுப்படுத்தும் விதிகளும் இதில் அடங்கியிருக்கின்றன. இலங்கையில் அந்நிய நாசகார சக்திகள் காலூன்றாமல் தடுக்கவும் இது வழிவகுக்கிறது. ஆகவேதான் இந்திய அரசு இந்த ஒப்பந்தத்தைச் செய்துகொள்வதில் அதிக அக்கறை காட்டியது. ஆனால், அதே சமயம், ஈழத் தமிழரின் அரசியல் தலைவிதியை நிர்ணயிப்பதாகவும் இந்த ஒப்பந்தம் அமைகிறது. ஆகவேதான், எமது மக்களைக் கலந்தாலோசிக்காது, எமது கருத்துக்களைக் கேளாது இந்த ஒப்பந்தம் செய்யப்பட்டதை நாம் கடுமையாக ஆட்சேபித்தோம். ஆனால் நாம் ஆட்சேபித்ததில் அர்த்தமில்லை. எமது அரசியல் தலைவிதியை எமது வல்லமைக்கு அப்பாற்பட்ட ஒரு மாபெரும் வல்லரசு நிச்சயிக்க முடிவு செய்திருக்கும் பொழுது நாம் என்ன செய்வது?

இந்த ஒப்பந்தம் எமது இயக்கத்தைப் பாதிக்கிறது; எமது அரசியல் இலட்சியத்தைப் பாதிக்கிறது; எமது போராட்ட வடிவத்தைப் பாதிக்கிறது; எமது ஆயுதப் போராட்டத்திற்கு ஆப்பு வைப்பதாகவும் அமைகிறது.

பதினைந்து வருடங்களாக, இரத்தம் சிந்தி, தியாகம் புரிந்து, சாதனைகள் ஈட்டி எத்தனையோ உயிர்ப்பலி கொடுத்துக் கட்டி எழுப்பப்பட்ட ஒரு போராட்ட வடிவம் ஒரு சில தினங்களில் கலைக்கப்படுவதென்றால் அதை நாம் ஜீரணிக்க முடியாமல் இருக்கிறது. திடீரென கால அவகாசமின்றி எமது போராளிகளின் ஒப்புதலின்றி, எமது மக்களின் பாதுகாப்பிற்கு உத்தரவாதம் இன்றி இந்த ஒப்பந்தம் எம்மை நிராயுதபாணிகளாக்குகிறது. ஆகவே, நாம் ஆயுதங்களை ஒப்படைக்க மறுத்தோம். இந்தச் சூழ்நிலையில் பாரதப் பிரதமர் ரஜீவ் காந்தி அவர்கள் என்னை அழைத்துப் பேசினார். அவரிடம் எமது பிரச்சினைகளை மனம் திறந்து பேசினேன். சிங்கள இனவாத அரசில் எமக்கு துளிகூட நம்பிக்கை இல்லையென்பதையும் இந்த ஒப்பந்தத்தை அவர்கள் நிறைவேற்றப் போவதில்லை என்பதையும் இந்தியப் பிரதமரிடம் எடுத்துரைத்தேன். எமது மக்களின் பாதுகாப்புப் பிரச்சினை பற்றியும் அதற்கான உத்தரவாதங்கள் பற்றியும் அவரிடம் பேசினேன். பாரதப் பிரதமர் எமக்கு சில வாக்குறுதிகளை அளித்தார். எமது மக்களின் பாதுகாப்பிற்கு உத்தரவாதம் அளித்தார். பாரதப் பிரதமரின் நேர்மையில் எமக்கு நம்பிக்கை இருக்கிறது. அவரது உறுதிமொழிகளில் நம்பிக்கை இருக்கிறது. சிங்கள இனவாத அரசு மீண்டும் தமிழர் இன அழிப்பு நடவடிக்கையில் இறங்க இந்தியா அனுமதிக்காது என நாம் நம்புகிறோம். இந்த நம்பிக்கையில்தான் நாம் இந்திய சமாதானப் படையிடம் ஆயுதங்களை ஒப்படைக்க முடிவு செய்தோம்.

நாம் எமது மக்களின் பாதுகாப்பிற்காக எத்தனை அளப்பரிய தியாகங்களைப் புரிந்தோம் என்பதை நான் இங்கு விளக்கிக் கூறத் தேவையில்லை. எமது இலட்சியப் பற்றும், தியாக உணர்வும் எத்தன்மை வாய்ந்தது என்பதை எமது மக்களாகிய நீங்கள் நன்கு அறிவீர்கள். உங்களது பாதுகாப்பிற்காக, உங்களது விடுதலைக்காக, உங்களது விமோசனத்திற்காக நாங்கள் ஏந்திய ஆயுதங்களை இந்திய அரசிடம் ஒப்படைக்கிறோம். நாம் இந்த ஆயுதங்களை

ஒப்படைக்கும் கணத்திலிருந்து, எமது மக்களாகிய உங்களின் பாதுகாப்புப் பொறுப்பையும் இந்தியாவிடம் ஒப்படைக்கிறோம். ஈழத் தமிழரின் ஒரே பாதுகாப்பு சாதனமாக இருந்து வந்த இந்த ஆயுதங்களை இந்திய அரசு எம்மிடத்திலிருந்து பெற்றுக் கொள்வதிலிருந்து மக்களின் பாதுகாப்பு என்ற பெரும் பொறுப்பையும் ஏற்றுக் கொள்கிறது. ஆயுதக் கையளிப்பு என்பது இந்தப் பொறுப்பு மாற்றத்தைத்தான் குறிக்கிறது.

நாம் ஆயுதங்களைக் கையளிக்காது போனால் இந்திய இராணுவத்துடன் மோதும் துர்ப்பாக்கிய சூழ்நிலை ஏற்படும். இதை நாம் விரும்பவில்லை. இந்தியாவை நாம் நேசிக்கிறோம். இந்திய மக்களை நாம் நேசிக்கிறோம். இந்திய வீரனுக்கு எதிராக நாம் ஆயுதங்களை நீட்டத் தயாராக இல்லை. எமது எதிரியிடமிருந்து எம்மைப் பாதுகாக்கும் பொறுப்பை இந்திய இராணுவ வீரர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள். நாம் ஆயுதங்களை அவர்களிடம் கையளிப்பதிலிருந்து ஈழத் தமிழன் ஒவ்வொருவனதும் உயிருக்கும் பாதுகாப்பிற்கும் இந்திய அரசுதான் பொறுப்பாக இருக்க வேண்டும் என்பதை நான் இங்கு இடித்துக் கூற விரும்புகின்றேன். இந்தியாவின் இந்த முயற்சிக்கு நாம் ஒத்துழைப்பதைத் தவிர எமக்கு வேறு வழியில்லை. இந்தச் சந்தர்ப்பத்தை நாம் அவர்களுக்கு வழங்குவோம். ஆனால் இந்த ஒப்பந்தத்தால் தமிழரின் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு ஏற்படுமென நான் நினைக்கவில்லை; சிங்கள இனவாதப் பூதம் இந்த ஒப்பந்தத்தை விழுங்கி விடும் காலம் வெகுதூரத்தில் இல்லை.

தமிழீழத் தனியரசே தமிழீழ மக்களின் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வை அளிக்கும் என்பதில் எனக்கு அசையாத நம்பிக்கையுண்டு. தமிழீழ இலட்சியத்திற்காகவே நான் தொடர்ந்து போராடுவேன் என்பதையும் நான் இங்கு திட்டவட்டமாக உங்களுக்கு எடுத்துக் கூற விரும்புகிறேன். போராட்ட வடிவங்கள் மாறலாம். ஆனால் எமது போராட்ட இலட்சியம் மாறப்போவதில்லை. எமது இலட்சியம் வெற்றி பெறுவதானால் எமது மக்களாகிய உங்களின்

ஏகோபித்த ஆதரவு என்றும் எமக்கு இருக்க வேண்டும்.

தமிழீழ மக்களின் நலன்கருதி இடைக்கால அரசில் பங்குபற்ற அல்லது தேர்தலில் போட்டியிட வேண்டிய சூழ்நிலை எமது இயக்கத்திற்கு ஏற்படலாம். ஆனால் நான் எந்தக் காலகட்டத்திலும் தேர்தலில் பங்குபற்றப் போவதில்லை. முதலமைச்சர் பதவியையும் ஏற்கப் போவதில்லை. இதை நான் மிகவும் உறுதியாகச் சொல்ல விரும்புகிறேன்.'' என்று தனது உரையை முடித்தார் பிரபாகரன்.

"நாம் இந்தியாவை நேசிக்கிறோம்'' என்ற தலைப்புடன் புகழ்ட்டிய பிரபாகரனின் சுதுமலைச் சொற்பொழிவு இலங்கையிலும் இந்தியாவிலும் மட்டுமன்றி உலக ஊடகங்களிலும் முக்கியம் கொடுத்துப் பிரசுரமாகியது. மிகவும் கவனமாகவும் நுட்பமாகவும் செதுக்கப்பட்ட உரையென பிரபாகரனின் சுதுமலைப் பிரகடனத்தை சில இந்தியப் பத்திரிகைகள் பாராட்டின. இந்தியாவின் புவியியல் - கேந்திர நலனுக்கும், தேச சுதந்திரம் வேண்டும் ஈழத் தமிழரின் அபிலாசைக்கும் மத்தியில் எழுந்துள்ள முரண்பாட்டினை மதிநுட்பமாக சமநிலைப்படுத்தும் வகையில் இந்த உரை அமைந்திருப்பதாக இப் பத்திரிகைகள் கருத்து தெரிவித்தன. ஒருபுறம் இந்தியா மீதும் இந்திய மக்கள் மீதும் நேசமும், மறுபுறம் சிங்கள இனவாத அரசு மீது வெறுப்புமாக இரு முரண்பட்ட உணர்வலைக்குள் சிக்குண்டு அங்கலாய்க்கும் புலிகளின் தலைவரது மனநிலையை இந்த உரை சித்தரித்துக் காட்டுவதாக ஒரு இந்திய நாளிதழ் எழுதியது.

சுதுமலைப் பிரகடனத்தில் பிரபாகரன் வாக்களித்ததுபோல, மறுநாள் ஆகஸ்ட் 5ஆம் நாள், கணிசமான தொகை ஆயுத தளபாடங்களை விடுதலைப் புலிகள் இயக்கம் இந்திய அமைதிப் படையிடம் கையளித்தது. இந்த ஆயுதக் கையளிப்பு வைபவம் ஒரு ஆடம்பரமான சடங்காகப் பலாலி விமானத் தளத்தில் இடம்பெற்றது. விடுதலைப் புலி கெரில்லா வீரர்களிடமிருந்து ஆயுதக் களைவு நடைபெறும் வைபவத்திற்கு பரந்த அளவில் விளம்பரம் கொடுக்கும் நோக்கத்துடன் நூறு பேருக்கும் மேற்பட்ட இலங்கை, இந்திய, வெளிநாட்டு ஊடகவியலாளர் அழைக்கப்பட்டிருந்தனர். இந்த வைபவத்தில் சிறீலங்கா அரச அதிபரின் பிரதிநிதியாக பாதுகாப்புச் செயலர் ஜெனரல் சேபால

அட்டிகலை கலந்து கொண்டார். இந்திய அரசாங்கத்தின் சார்பில் இந்திய அமைதிப் படையின் உயரதிகாரிகளான ஜெனரல் திபேந்தர் சிங், ஜெனரல் ஹாக்கிரட் சிங் ஆகியோர் பங்குகொண்டனர். இந்திய அமைதிப் படையையும், சிறீலங்கா ஆயுதப் படைகளையும் சேர்ந்த அதிகாரிகளும் வைபவத்தைச் சிறப்பிக்க வந்திருந்தனர். விடுதலைப் புலிகள் இயக்கத்தின் அதிகாரபூர்வமான பிரதிநிதியாக திரு. யோகரெத்தினம் யோகி இவ் வைபவத்தில் கலந்து கொண்டார்.

இந்த வைபவத்தின்போது, ஆயுதச் சரணடைவின் குறியீடாக, ஒரு ஜேர்மானிய மௌசர் கைத்துப்பாக்கியை யோகரெத்தினம் யோகி ஜெனரல் அட்டிகலையிடம் கையளிக்க ஏற்பாடாகியிருந்தது. விடுதலைப் புலிகளின் தன்மானமுடைய ஒரு இளம் அரசியல் பொறுப்பாளர் என்ற ரீதியில் இந்த ஆயுதச் சரணடைவுப் பாத்திரத்தை அவர் ஆழமாக வெறுத்தார். பலத்த அழுத்தத்தின் பேரில் மிகவும் தயக்கத்துடனேயே இந்த வைபவத்திற்கு அவர் சமூகமளித்தார். வைபவத்தின்போது அவர் யாருடனும் பேசவில்லை. மிகவும் இறுக்கமான மௌனம் சாதித்தார். முகத்தையும் கடுகடுப்பாக வைத்துக் கொண்டார். வைபவம் ஆரம்பமாகி, சரணடைவு நிகழ்வு வந்தபோது, எல்லோரையுமே வியப்பில் ஆழ்த்தும் வகையில் திடீரென எழுந்த யோகரெத்தினம் யோகி, மேசைமீது கைத்துப்பாக்கியை வைத்துவிட்டுத் தனது ஆசனத்தில் அமர்ந்து கொண்டார். குறியீடான ஆயுதச் சரணடைவு நிகழ்வைப் படமெடுக்கக் காத்திருந்த ஊடகவியலாளர் அனைவருமே ஏமாற்றம் அடைந்தனர். யோகியின் இந்தச் செயற்திறனை தலைவர் பிரபாகரன் பின்பு பாராட்டவும் தவறவில்லை. யோகியின் சாதுரியத்தால் ஏமாற்றமும் சங்கடமும் அடைந்த ஜெனரல் அட்டிகலை மேசை மீதிருந்த கைத் துப்பாக்கி மீது உள்ளங்கையை ஊன்றியவாறு, மிகச் சுருக்கமான தனது அறிக்கையை வாசித்தார். "எமது சனநாயகச் சமுதாயத்தை பரந்த அளவில் பாதித்த வன்முறைக்கும் இரத்தக் களரிக்கும் முடிவுகட்டும் ஒரு குறியீடாக இந்த ஆயுதக் கையளிப்பு அமைகிறது." என்றார். உண்மையில் விடுதலைப் புலிகள் இயக்கம் தன்வசமுள்ள ஆயுதங்கள் அனைத்தையும் கையளிக்கவில்லை. வடகிழக்கில் இடைக்கால நிர்வாக ஆட்சி அமைக்கப்பட்டு, அது விடுதலைப் புலிகளிடம் ஒப்படைக்கப்பட்ட பின்னரே மிகுதியான ஆயுதங்கள் கையளிக்கப்படுமென இந்திய

அமைதிப் படைத் தலைமைக்கு அறிவிக்கப்பட்டிருந்தது. "இந்திய அரசு வழங்கிய ஆயுத தளபாடங்களில் ஒரு தொகுதியை, அதுவும் பழுதடைந்த, பயன்படுத்த முடியாத, பழைய ஆயுதங்களை இரண்டு வாகனங்களில் ஏற்றி வந்து கையளித்தனர் விடுதலைப் புலிகள்" என்று இவ் வைபவம் பற்றி ஒரு இந்திய பத்திரிகையாளர் எழுதினார்.

## ஒப்பந்தம் தோல்வியுற்றதன் காரணங்கள்

பிரதமர் ரஜீவ் காந்தி கேட்டுக்கொண்டது போல, எமது நல்லெண்ணத்தின் குறியீட்டுச் சமிக்கையாக எமது ஆயுதங்களின் ஒரு தொகுதியை இந்திய இராணுவத்திடம் கையளித்த பின்னர், இடைக்கால நிர்வாக அரசை நிறுவுவதற்கு எத்தகைய நடவடிக்கைகளை இந்திய அரசு எடுக்கப் போகிறது என்பதை விடுதலைப் புலிகளின் தலைமைபீடம் எதிர்பார்த்துக் காத்திருக்கிறது. ஆயினும் இவ் விடயத்தில் இந்திய அரசு எவ்வித முன்முயற்சிகளையும் எடுப்பதாகத் தெரியவில்லை. ஆனால் அதேவேளை, தமிழர் தாயகத்தில் அரச நிர்வாக இயந்திரத்தை மேலும் வலுப்படுத்தும் நோக்கில் சிறீலங்கா அரசு பல புதிய காவல்துறை நிலையங்களைத் திறந்து வைத்தது. அத்துடன் அரசாங்கத்தின் ஆதரவோடு தமிழ்ப் பகுதிகளில் சிங்களக் குடியேற்றத் திட்டங்களும் நிறுவப்பட்டன. புதிய குடியேற்றத் திட்டங்களுக்குச் சிங்கள இராணுவ முகாம்கள் பாதுகாப்பு அரண்களாக அமைந்தன. விடுதலைப் புலிகளின் நிர்வாகச் செலவினங்களாக இந்தியப் பிரதமர் உறுதியளித்த நிதியுதவி ஒரு மாதக் கொடுப்பனவுடன் நிறுத்தப்பட்டது. இவை எல்லாவற்றையும் விட, ஒரு விவகாரம் மட்டும் விடுதலைப் புலிகள் அமைப்பை ஆழமாகப் பாதித்தது. எமது அமைப்புக்கு விரோதமாகச் செயற்பட்ட ஈ.பி.ஆர்.எல்.எவ், புளொட், ரெலோ போன்ற இயக்கங்களைச் சேர்ந்த ஆயுதம் தரித்த அங்கத்தவர்கள் பெருந்தொகையில் இந்தியாவிலிருந்து தமிழீழம் வந்தடைந்தனர். விடுதலைப் புலிப் போராளிகளால் கைது செய்யப்பட்ட இந்த ஆயுததாரிகள் சிலரின் வாக்குமூலப்படி தமிழீழம் வந்திறங்கிய அனைவரும் றோ புலனாய்வுத் துறையினரால் புதிதாகப் பயிற்றப்பட்டு ஆயுதம் தரிக்கப்பட்டவர்கள் ஆவர். ஈ.பி.ஆர்.எல்.எவ். புளொட் ஆகிய

அமைப்புகளைச் சேர்ந்த உறுப்பினர்கள் இரவுவேளையில் இரகசியமான முறையில் கிழக்கு மாகாணக் கரையோரப் பகுதிகளில் இறக்கப்பட்டனர். அதேவேளை, ரெலோ உறுப்பினர்கள் மன்னார் மாவட்ட கரையோரக் கிராமங்களை வந்தடைந்தனர். இவ் விரோதச் சக்திகளின் திடீர் வருகையால், விடுதலைப் புலிகள் அமைப்பின் பாதுகாப்புக்கு பெரும் அச்சுறுத்தல் ஏற்பட்டது. அங்குமிங்குமாக நிகழ்ந்த ஆயுத மோதல்களில் புலிகள் தரப்பில் உயிர்ச் சேதமும் ஏற்பட்டது. இந்திய அமைதி காக்கும் படையினரிடம் இவ் விவகாரம் குறித்து முறைப்பாடு செய்தபோதும் அவர்கள் எவ்வித நடவடிக்கையும் எடுக்க மறுத்துவிட்டனர். இதனால் பிரபாகரன் விரக்தியும் கோபமும் அடைந்தார்.

ரஜீவ் - பிரபா இரகசிய ஒப்பந்தம் எனக் கூறி, வாக்குறுதிகளை அளித்த இந்தியப் பிரதமர், அவற்றை நிறைவுசெய்யத் தவறியமை குறித்து ஆழ்ந்த வேதனை அடைந்தான் திலீபன். யாழ்ப்பாணத்தில் மக்கள் மத்தியில் மிகவும் பிரபல்யமான அரசியல் போராளியாக விளங்கிய திலீபன், இந்திய அரசின் நம்பிக்கைத் துரோகத்தை உலகிற்கு அம்பலப்படுத்த விரும்பினான். எம்முடன் டில்லிக்கு வந்து ரஜீவ் காந்தியுடன் செய்து கொள்ளப்பட்ட Gentlemen Agreement பற்றிய முழு விபரங்களும் என்னிடமிருந்து அறிந்து வைத்திருந்த திலீபன், அந்தக் கைச்சாத்திடப்படாத ஒப்பந்தத்தில் வழங்கப்பட்ட வாக்குறுதிகளை நிறைவேற்றுமாறு கோரி சாகும் வரை உண்ணாவிரதம் கடைப்பிடிக்க முடிவெடுத்தான். '**சுதந்திர வேட்கை**' என்ற தனது நூலில் எனது மனைவி அடேல் பாலசிங்கம் திலீபனின் உண்ணாவிரதம் பற்றியும் அவனது அற்புதமான உயிர்த் தியாகம் பற்றியும் விபரமாக விளக்கியிருக்கிறார். எனவே, இந் நிகழ்வை இந் நூலில் மீண்டும் விபரிப்பது அவசியமில்லை. திலீபனின் தியாகம் ஒரு மகத்தான வரலாற்று நிகழ்வு. தனிமனிதனாகத் துணிந்து நின்று ஆசிய வல்லரசுக்கு எதிராக அறப்போர் நிகழ்த்தினான் அந்த மாவீரன். ஈடிணையற்ற அவனது அர்ப்பணிப்பால் தமிழர் தேசம் ஒன்றுபட்ட சக்தியாக எழுச்சி கொண்டு, இந்திய வல்லாதிக்கம் பற்றிப் புதிய விழிப்புணர்வு பெற்றது.

திலீபனது சாகும் வரை நோன்பின் இறுதி நாட்களில், அவன் மரணத்தின் வாயிலை அண்மித்த வேளையில் பலாலி விமானத் தளத்தில், இந்திய அமைதி காக்கும் படையின் தலைமைச்

செயலகத்தில் பிரபாகரனும் நானும் இந்தியத் தூதுவர் திரு. டிக்சிட்டைச் சந்தித்தோம். சாவுடன் போராடிக் கொண்டிருக்கும் திலீபனது அறப் போராட்டத்திற்கு பின்னால் அனைத்து தமிழ் மக்களும் அணிதிரண்டு நிற்பதாக டிக்சிட்டுக்கு நிலைமையை எடுத்து விளக்கிய நாம், திலீபனை வந்து சந்தித்து ஆறுதல் மொழி கூறுமாறு வேண்டினோம். கொடுத்த வாக்குறுதிகளை இந்திய அரசு நிறைவேற்றி வைக்கும் என இந்தியத் தூதுவர் அவனுக்கு உறுதியளித்தால் அவன் நிச்சயமாகத் தனது உண்ணாவிரதத்தைக் கைவிடுவான் என டிக்சிட்டிடம் மன்றாட்டமாகக் கேட்டோம். ஆனால் அந்த மனிதர் அதற்கு மறுத்துவிட்டார். எமது அமைப்புக்குப் பின்னணியில் ஒரு சூழ்ச்சிகரமான சதி இருக்கலாமென அவர் கருதினார். இந்த விடயம் பற்றி அவர் தனது நூலில் கீழ்க் கண்டவாறு எழுதியிருக்கிறார்.

> "இந்த அழைப்புக்குப் பின்னால் ஒரு சதித் திட்டம் இருப்பதாக, இந்திய அமைதிப் படையினரும் எமது புலனாய்வுத் துறையினரும் எனக்கு அறிவித்தனர். இத் திட்டத்தின்படி திலீபன் உண்ணாவிரதமிருந்த நல்லூர் கந்தசாமி கோவிலுக்கு என்னை அழைத்துச் சென்று, அங்கு இந்தியாவுக்கும் இந்திய - இலங்கை ஒப்பந்தத்திற்கும் எதிராகப் பெரிய அளவில் ஆர்ப்பாட்டங்களை நிகழ்த்தி, அங்கு பகிரங்கமாக எனது வேண்டுகோளை நிராகரித்து, இந்திய தூதரின் முயற்சி தோல்வியில் முடிந்ததாக விளம்பரம் செய்வதுதான் நோக்கம். இந்திய அரசாங்கத்தை இப்படியாக அவமானப்படுத்துவதற்கு இடமளிக்க கூடாதென நான் உறுதியாக முடிவெடுத்தேன்."[22]

இந்தியத் தூதுவர் டிக்சிட் எண்ணியதுபோல இந்திய அரசை அவமானப்படுத்தும் சதித் திட்டம் எதுவும் விடுதலைப் புலிகளிடம் இருக்கவில்லை. திரு. டிக்சிட் உருவகித்த சதி திட்டம் அவரது கற்பனாவுலகில்தான் உதித்திருக்க வேண்டும். நல்லதொரு நல்லெண்ணச் சந்தர்ப்பத்தை நழுவவிட்ட இந்தியத் தூதுவர் தனது தவறை நியாயப்படுத்த புனைந்த கட்டுக்கதைதான் இந்தச் சதித் திட்டம். எமது வேண்டுகோளுக்கு அமைய, திலீபனை சந்தித்து திரு. டிக்சிட் உறுதிமொழி அளித்திருந்தால் அவனது சாவை நிறுத்தி, அந்த மாபெரும்

துன்பியல் நிகழ்வைத் தவிர்த்திருக்கலாம். அத்துடன் முக்கியமாக இந்திய - புலிகள் முரண்பாட்டையும் பகையுணர்வையும் நீக்கி நல்லுறவை வளர்த்திருக்கலாம்.

திலீபனின் வீரச் சாவும், அதனால் இந்திய அரசு மீது தமிழ் மக்களுக்கு ஏற்பட்ட கொதிப்புணர்வும் புதுடில்லி ஆட்சிப் பீடத்திற்குச் சங்கடத்தைக் கொடுத்தது. அது ரஜீவ் காந்தியின் மனச்சாட்சியையும் உறுத்தியிருக்க வேண்டும். விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு முக்கிய பங்கு அளித்து, வடகிழக்கிற்கென ஒரு இடைக்கால நிர்வாக அரசை நிறுவும்படி அரச அதிபர் ஜெயவர்த்தனாவுக்கு அழுத்தம் கொடுக்குமாறு டில்லி அரசு டிக்சிட்டைப் பணித்தது. இந்தப் பணிப்பை அடுத்து, பலாலியிலுள்ள இந்திய அமைதிப் படையின் தலைமைச் செயலகத்தில் இடைக்கால நிர்வாக அரசு பற்றி திரு. டிக்சிட் விடுதலைப் புலிகளுடன் பேச்சுகளை நடத்தினார். தலைவர் பிரபாகரனுடன் நானும் இந்தப் பேச்சுக்களில் பங்குபற்றினேன். திரு. டிக்சிட்டுடன் கொழும்பிலுள்ள இந்திய தூதரக அதிகாரிகளும் பேச்சுக்களில் கலந்து கொண்டனர். விரிவான பேச்சுக்கள் பல நாட்களாகத் தொடர்ந்தன. ஒரு இடைக்கால நிர்வாக சபைக்கான அதிகாரம், செயற்பாடு, கட்டமைப்பு போன்ற விடயங்களில் இறுதியாக இணக்கப்பாடு ஏற்பட்டது. ஆரம்பப் பேச்சுக்களின்போது சட்டம் ஒழுங்கு, வரிவசூலிப்பு போன்ற விடயங்களில் இடைக்கால நிர்வாக சபைக்கு போதிய நிர்வாக அதிகாரங்களை வழங்க ஜெயவர்த்தனா தயங்கினார். நீண்ட இழுபறியின் பின்னர், சட்டம் ஒழுங்கைப் பேணும் விடயத்தில் மட்டுப்படுத்தப்பட்ட அதிகாரத்தை வழங்குவதற்கு அவர் இணக்கம் தெரிவித்தார். ஆயினும், நாட்டின் அரச அதிபர் என்ற ரீதியில், இடைக்கால நிர்வாக சபையின் பிரதம நிர்வாக அதிகாரியை தாமே நியமிக்கவேண்டும் என வற்புறுத்தினார். விடுதலைப் புலிகளின் தலைமை மூன்று பெயர்களைப் பரிந்துரைக்க வேண்டும் என்றும் அதில் ஒருவரைத் தான் தெரிவு செய்வதாகவும் அவர் கேட்டுக் கொண்டார். ஜெயவர்த்தனாவின் நிபந்தனையில் எமக்கு சந்தேகம் எழுந்தது. ஏதோ ஏமாற்றுவித்தை காட்டி இடைக்கால நிர்வாக சபை நிறுவுவதைக் குழப்பியடிக்கத் திட்டமிடுகிறார் என நாம் எண்ணினோம். மட்டக்களப்பின் முன்னாள் உதவி அரசாங்க அதிபர் திரு. என்.பத்மநாதனை பிரதம நிர்வாகியாக நியமிக்க பிரபாகரன் ஏற்கனவே முடிவு செய்திருந்தார். கிழக்கு மாகாணத்தைச்

சேர்ந்த ஒருவரை இப் பதவிக்கு நியமிப்பதே பொருத்தமானது என அவர் கருதினார். ஆயினும் மூவரது பெயர்களை சிபாரிசு செய்யுமாறு அரச அதிபர் நிபந்தனை விதித்திருப்பதால், எமது தெரிவு வரிசையில் முதல்வராக திரு. பத்மநாதனையும் ஏனைய இருவரது பெயர்களையும் பரிந்துரைத்தோம். பிரதம அதிகாரியின் தெரிவில், ஜெயவர்த்தனா தனது சூத்திரதாரித்தனத்தைக் காண்பிக்கத் தவறவில்லை. எமது பெயர்ப் பட்டியலில் முதல்வராக நாம் பரிந்துரைத்த பத்மநாதனுக்குப் பதிலாக இரண்டாவது நபரான யாழ்ப்பாண நகரசபை ஆணையாளர் திரு. சி.வி.கே.சிவஞானத்தை தெரிவு செய்தார் ஜெயவர்த்தனா.

ஜெயவர்த்தனாவின் தெரிவு பிரபாகரனுக்குச் சினத்தை மூட்டியது. வேண்டுமென்றே ஒரு பிரச்சினையை உருவாக்கி, புலிகளின் ஆட்சியின் கீழ் இடைக்கால நிர்வாக சபை நிறுவப்படுவதைத் தடுக்கும் நோக்கில் அரச அதிபர் குளறுபடி செய்கிறார் என அவர் கருதினார். பிரதம நிர்வாக அதிகாரியின் பதவிக்கு திரு. பத்மநாதனை மட்டுமே நியமிக்குமாறு திரு. டிக்சிட்டிடம் அறிவிக்கும்படி பிரபாகரன் என்னைப் பணித்தார். கொழும்பிலுள்ள இந்தியத் தூதுவருடன் தொலைபேசியில் தொடர்பு கொள்வதானால் பலாலியிலுள்ள இந்திய அமைதிப் படையின் செயலகத்திற்கு செல்ல வேண்டும். அன்று பூராவும் யாழ்ப்பாணத்தில் அமைந்திருந்த பிரபாகரனின் இல்லத்திற்கும் பலாலிக்குமாக மாறி மாறி அலைந்து களைத்துப் போனேன். ஜெயவர்த்தனா தனது நிலைப்பாட்டில் அமுங்குப் பிடியாக நிற்பதாக டிக்சிட் தொலைபேசியில் என்னிடம் சொன்னார். பிரபாகரனும் தனது நிலைப்பாட்டைத் தளர்த்திக் கொள்ளத் தயாராக இல்லை என்று நான் டிக்சிட்டிடம் கூறினேன். ஜெயவர்த்தனாவுடன் கலந்தாலோசனை நடத்தி விட்டு மீண்டும் என்னுடன் தொடர்பு கொண்டார் இந்தியத் தூதுவர். திரு. பத்மநாதன் சிறீலங்கா அரசாங்கத்திற்கு விசுவாசமானவர் அல்லர் என்றும் விடுதலைப் புலிகளின் தலைமைக்கே விசுவாசமானவர் என்றும் ஜனாதிபதி கருதுகிறார் என்று சொன்னார் டிக்சிட். விடுதலைப் புலிகளால் நடத்தப்பட்ட மட்டக்களப்புச் சிறை உடைப்புச் சம்பவத்திற்கு பத்மநாதன் உதவி புரிந்ததால் அரசாங்கத்திற்கு விசுவாசம் தெரிவிக்கும் சத்தியப் பிரமாணத்தை அவர் மீறிவிட்டார் என்றும் ஜெயவர்த்தனா கூறியதாக டிக்சிட் மேலும் தெரிவித்தார்.

இந்தியத் தூதரிடம் ஆத்திரத்தோடு ஜெயவர்த்தனா கூறினாராம். "நான்தான் இப்பொழுது இந்த நாட்டின் ஜனாதிபதி. எனது நாட்டின் ஒரு பகுதியை நான் எவ்வாறு நிர்வகிக்க வேண்டும் என்பதை ஒரு பிரிவினைவாதத் தீவிரவாதக் குழு எனக்கு ஆணையிட முடியாது"[23] இப்படியாக ஜெயவர்த்தனாவின் விட்டுக் கொடாக் கடும்போக்கும், இந்திய அரசின் கையாலாகாத் தனமும் இடைக்கால நிர்வாக அதிகார சபைக்குச் சாவு மணி அடித்தன. விடுதலைப் புலிகளின் தலைவருக்கு இந்தியப் பிரதமர் அளித்த வாக்குறுதி வரலாற்றின் குப்பைத் தொட்டிக்குள் வீசியெறியப்பட்டது.

தமிழீழ அரசியல் போராட்ட வரலாற்றில் ஒரு இருள் படர்ந்த காலப் பகுதியாகக் கட்டவிழ்ந்தது 1987 அக்டோபர் மாதம். அக்டோபர் 2ஆம் நாள், பருத்தித்துறைக் கடற்பரப்பில் நிகழ்ந்த ஒரு சிறிய சம்பவம் இந்திய அரசின் கையாலாகாத் தனத்தாலும், சிங்கள அரசின் இனவெறிப் போக்கினாலும் பேரவலமாக மாறியது. விடுதலைப் புலிகள் இயக்கத்தின் மூத்த தளபதிகளான குமரப்பா, புலேந்திரன் ஆகியோருடன் பதினைந்து உயர்மட்டப் புலி வீரர்கள் சிறீலங்கா கடற்படையினரால் கைது செய்யப்பட்டு பலாலி விமானத் தளத்தில் தடுத்து வைக்கப்பட்டனர்.

இந்த நெருக்கடியான சூழ்நிலையில், இந்திய அமைதிப் படைத் தலைமையுடனும் இந்தியத் தூதுவருடனும் பேச்சு நடத்தி, கைதாகிக் காவலில் வைக்கப்பட்டிருந்த எமது தளபதிகளையும் மூத்த உறுப்பினர்களையும் மீட்டெடுக்கும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. இந்தியத் தூதுவர் திரு. டிக்சிட் அவ்வேளை புது டில்லியில் இருந்தார். நிலைமை பாரதூரமானது என அறிவிக்கப்பட்டதும் அவர் தனது விடுமுறையை ரத்துச் செய்துவிட்டு அவசர அவசரமாக கொழும்பு வந்து சேர்ந்தார். பலாலியிலுள்ள இந்திய இராணுவ தலைமையகத்திலிருந்து திரு. டிக்சிட்டுடன் தொலைபேசியில் கதைத்த போது அவர் என்னைப் பதட்டப்பட வேண்டாம் என ஆறுதல் கூறினார். இந்தப் பிரச்சினையை உடனே தீர்த்து வைக்கலாம் என்றும் கைதாகித் தடுத்து வைக்கப்பட்ட தளபதிகளும் போராளிகளும் விரைவில் விடுதலை செய்யப்படுவர் என்றும் அவர் உறுதியளித்தார். நிலைமை மோசமடையுமென நான் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. அந்த நேரத்தில் போர் நிறுத்தம் நடைமுறையில் இருந்தது. சிங்கள

ஆயுதப் படைகள் முகாம்களுக்குள் முடங்கியிருந்தன. தமிழர் தாயகத்தில் சட்டம் ஒழுங்கை நிலைநாட்டும் பொறுப்பு இந்திய அமைதிப் படைகளிடம் கையளிக்கப்பட்டிருந்தது. அத்துடன் விடுதலைப் புலிகளின் மாவட்டத் தளபதிகள் என்ற ரீதியில் குமரப்பாவும் புலேந்திரனும் இந்திய இராணுவ அதிகாரிகளுக்கு பழக்கமானவர்கள். எல்லாவற்றிற்கும் மேலாக, இந்திய-இலங்கை ஒப்பந்த விதிகளுக்கு அமைய தமிழ்ப் போராளிகளுக்கு அரச அதிபரால் பொது மன்னிப்பு வழங்கப்பட்டிருந்தது. இந்த அமைதிச் சூழ்நிலையில் எதுவித குற்றமும் புரியாத, போர்நிறுத்த விதிகளையும் மீறாத எமது போராளிகளை கைது செய்து, தடுத்து வைப்பது நியாயமற்றது. இதன் அடிப்படையில்தான் எமது போராளிகளுக்கு எவ்வித ஆபத்தும் நேர்ந்துவிடாது எனக் கருதினேன்.

பலாலி விமானத் தளத்தில் இந்தியத் தூதரின் தொலைபேசிப் பதிலுக்காக காத்து நின்றபோது இந்திய அமைதிப் படைகளின் தளபதி ஜெனரல் ஹக்கிரட் சிங் என்னை தனது செயலகத்திற்கு அழைத்தார். அவர் எனக்கு ஏற்கனவே நன்கு பழக்கமானவர். எமது தளபதிகளையும் போராளிகளையும் சிறைவைத்திருப்பது அநீதியானது, அவர்களுக்கு ஏதாவது அச்சுறுத்தல் ஏற்பட்டால் அதற்கு இந்திய அமைதிப் படைத் தலைமைப்பீடமே பொறுப்பு ஏற்கவேண்டும் என்று இந்தியத் தளபதியுடன் வாதாடிய நான், எம்மவரை உடன் விடுவிக்குமாறு அவரிடம் மன்றாட்டமாகக் கேட்டேன்.

வழமையாக கலகலப்பாகவிருக்கும் ஹக்கிரட் சிங் அன்று முகத்தைத் தொங்கப் போட்டபடி இருந்தார். அவரது பார்வையில் ஒரு இனம்தெரியாத சோகமும் கவலையும் தொனித்தது. எமது போராளிகளின் நிலைகுறித்துத் தனது தனிப்பட்ட வேதனையை தெரிவித்த அவர், இவ் விடயத்தில் ஜெயவர்த்தனா கடும்போக்கை எடுப்பதாகவும், ஒரு சிறிய பிரச்சினையை பெரும் அரசியல் நெருக்கடியாக அவர் மாற்ற முனைவதாகவும் அரச அதிபர் மீது பழி சுமத்தினார் ஹக்கிரட் சிங். எமது போராளிகளைக் கைது செய்த சிங்களக் கடற்படை, அவர்களை பலாலித் தளத்திலுள்ள சிங்கள இராணுவப் படையணியிடம் ஒப்படைத்திருப்பதாகவும், அப்படையணி தேசியப் பாதுகாப்பு அமைச்சின் உத்தரவின்றி அவர்களை விடுதலை செய்ய மறுப்பதாகவும் சொன்னார். ஹக்கிரட் சிங் கூறிய இன்னொரு விடயம் எனக்கு ஏக்கத்தைக் கொடுத்தது. எமது போராளிகளை

விசாரணைக்காக கொழும்புக்கு விமானத்தில் கொண்டு செல்லும் இரகசியத் திட்டம் ஒன்று இருப்பதாக சிறீலங்கா இராணுவ உயர் அதிகாரி தன்னிடம் கூறியதாகவும் அவர் சொன்னபோது எனக்கு இதயம் கனத்தது. எனது முகம் திடீரென இருண்டு போனதை அவதானித்த இந்திய இராணுவத் தளபதி, எல்லாமே ஜெயவர்த்தனாவினதும் இந்தியத் தூதுவரதும் கைகளில் தங்கியிருப்பதாகக் கூறினார்.

இந்திய அமைதிப் படைத் தளபதியின் அனுமதியுடன் இந்திய இராணுவ அதிகாரியான கேணல் பெர்னாண்டஸ், எமது போராளிகளைத் தடுத்து வைத்திருக்கும் இடத்திற்கு என்னை அழைத்துச் சென்றார். சிறீலங்கா இராணுவத்தின், பலத்த பாதுகாப்புடன் அமையப்பெற்ற பகுதி அது. அங்குள்ள கட்டிடம் ஒன்றில் எமது போராளிகள் தடுத்து வைக்கப்பட்டிருந்தனர். தரையில் அவர்கள் அமர்ந்திருக்க அவர்களைச் சூழ, ஆயுதபாணிகளாக, துப்பாக்கி முனைகளை அவர்மீது திருப்பிய வண்ணம் நின்று கொண்டிருந்தார்கள் சிங்கள இராணுவத்தினர். அவர்களது முகங்களில் கடுப்பும் வெறுப்பும் தெரிந்தது. அங்கு நின்ற சிங்கள இராணுவ அதிகாரியிடம் கேணல் பெர்னான்டஸ் கதைத்ததை அடுத்து, போராளிகளைச் சந்திக்க எனக்கு அனுமதி கிடைத்தது.

குமரப்பா, புலேந்திரன் மற்றும் எமது போராளிகள் சிரித்த முகத்துடன் என்னை வரவேற்றனர். எந்த விதமான அச்சமோ, அங்கலாய்ப்போ அவர்களிடம் காணப்படவில்லை. தங்களுக்கு வெகு சீக்கிரமாக விடுதலை கிட்டிவிடும் என்ற நம்பிக்கையோடு இருந்தார்கள். புதிதாகத் திருமணமாகிய தமது மனைவிமாருக்கு ஆறுதல் கூறும்படி குமரப்பாவும், புலேந்திரனும் என்னைக் கேட்டுக் கொண்டார்கள். இம்மூத்த தளபதிகள் இருவருடனும் எனக்கு நீண்ட கால நட்பு இருந்ததாலும் இவர்களது காதல் திருமணத்தை நடத்தி வைத்ததில் நான் முக்கிய பங்கு வகித்ததாலும், அவர்களது குடும்பங்களுடன் எனக்கு நெருங்கிய உறவு இருந்தது. அன்றிரவே அவர்களது மனைவிமாரைச் சந்தித்து ஆறுதல் கூறுவதாகச் சொன்னேன். அவர்களது நம்பிக்கைக்கும் எதிர்பார்ப்புக்கும் மாறாக எதையுமே கூறி அவர்களது மனநிலையைக் குழப்பிவிட நான் விரும்பவில்லை. அவர்களது விடுதலையைப் பெற்றெடுக்க இந்தியத் தூதுவர் டிக்சிட் கடும் முயற்சி எடுத்து வருவதாகச் சொன்னேன். நாளை காலை மீண்டும் பலாலிக்கு வந்து, டிக்சிட்டுடன் தொலைபேசியில்

கதைத்தபின்பு அவர்களுக்குத் தகவல் தெரிவிப்பதாகக் கூறினேன். ஒரு மணி நேரம்வரை அவர்களுடன் உரையாடிவிட்டு, அவர்களைப் பிரிந்து சென்றுபோது விபரிக்க முடியாத துயரமும் ஏக்கமும் என் நெஞ்சத்தை அழுத்தின.

மறு நாள் காலை (ஆகஸ்ட் 4ஆம் நாள்) நான் பலாலிக்கு வருகை தந்து திரு. டிக்சிட்டை தொலைபேசியில் தொடர்பு கொண்டபோது அவரது தொனியில் மாற்றம் தெரிந்தது. நம்பிக்கை இடிந்து போன குரலில் பேசினார். ஜெயவர்த்தனாவும் அவரது அமைச்சர்களும் தீவிரப் போக்கைக் கடைப்பிடிப்பதாகச் சொன்னார். கைதாகித் தடுத்து வைக்கப்பட்டிருக்கும் விடுதலைப் புலித் தளபதிகளையும் போராளிகளையும் கொழும்புக்கு கொண்டு சென்று விசாரணைக்கு உட்படுத்த வேண்டும் என தேசியப் பாதுகாப்பு அமைச்சர் லலித் அத்துலத்முதலி[24] அடாப்பிடியாக நிற்பதாகவும் தனது அமைச்சர்களின் நிலைப்பாட்டுக்கு மாறாக செயற்பட முடியாதென அரச அதிபர் கூறுவதாகவும் இந்தியத் தூதுவர் சொன்னார். "ஜெயவர்த்தனாவும் அவரது அமைச்சர்களும் ஒரு இனவாதக் கும்பல். விடுதலைப் புலிகளை அழிப்பதுதான் அவர்களது குறிக்கோள். எமது மாவட்டத் தளபதிகளையும் மூத்த உறுப்பினர்களையும் கொழும்புக்குக் கொண்டு சென்று விசாரணை என்ற பெயரில் அவர்கள் சித்திரவதைக்கு ஆளாக்கப்படுவதை நாம் அனுமதிக்க முடியாது. ஆயுதக் கையளிப்பை அடுத்து எமது போராளிகள் அனைவருக்கும் பொதுமன்னிப்பு வழங்கியிருப்பதாக ஏற்கனவே அரச அதிபர் பிரகடனம் செய்துள்ளார். அதன் பின்னர், எமது போராளிகளை கைது செய்து விசாரணைக்கு உட்படுத்த முனைவது இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை அத்துமீறும் பாரதூரமான நடவடிக்கையாகும்." என்று டிக்சிட்டிடம் விளக்கினேன். எமது போராளிகளுக்கு ஏதாவது தீங்கு நிகழ்ந்தால் பாரதூரமான விளைவுகள் நேரிடும் என்றும் இந்திய தூதருக்கு எச்சரிக்கை விடுத்தேன். எமது போராளிகளுக்குத் தீங்கு எதுவும் நேரிடாமல் அவர்களை மீட்டெடுத்துத் தருவது இந்திய அரசின் பொறுப்பு என்றும் அவருக்குச் சுட்டிக் காட்டினேன். பலாலி விமானத் தளம் இந்திய அமைதிப் படைகளின் தலைமைச் செயலகமாக மாற்றப்பட்டு, இந்திய இராணுவத்தின் முழுக் கட்டுப்பாட்டில் இருப்பதால், அங்கு சிறை வைக்கப்பட்டிருக்கும் போராளிகளை விடுவிப்பது இந்தியாவின் தவிர்க்க முடியாத கடமை என்றும்

வலியுறுத்தினேன். விடுதலைப் புலிப் போராளிகளை விடுதலை செய்ய ஜெயவர்த்தனா அரசு மறுத்தால், அவர்களை விடுவிக்குமாறு இந்திய அமைதிப் படைத் தளபதி ஹக்கிரட் சிங்கை தான் கேட்டுக் கொள்ளப் போவதாக டிக்சிட் எனக்கு உறுதியளித்தார்.

இந்தியத் தூதுவர் எவ்வளவோ முயற்சித்தும் ஜெயவர்த்தனாவும் அத்துலத்முதலியும் தமது நிலைப்பாட்டில் இறுக்கமாக நின்றனர். இதற்கிடையில் காலம் ஓடிக் கொண்டிருந்தது. தடுத்து வைக்கப்பட்ட போராளிகளை கொழும்புக்கு கொண்டு செல்வதற்காக சில ஒழுங்குகளை அத்துலத் முதலி செய்து வருவதாகவும் டிக்சிட்டுக்குத் தகவல் கிடைத்தது. நிலைமை மோசமாகி வருவதை அறிந்த அவர் இந்திய அமைதிப் படைத் தளபதி ஜெனரல் ஹக்கிரட் சிங்குடன் தொடர்பு கொண்டார். பலாலி விமானத் தளத்தை இந்திய இராணுவத்தின் முழுக் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்து, விடுதலைப் புலிகளின் தளபதிகளையும் போராளிகளையும் சிறீலங்கா இராணுவம் கொழும்புக்கு கொண்டு செல்வதைத் தடுத்து நிறுத்தி, பிரச்சினை தீர்க்கப்படும் வரை அவர்களுக்குப் பாதுகாப்பு வழங்குமாறு இந்தியத் தூதுவர் ஜெனரல் ஹக்கிரட் சிங்கை கேட்டுக் கொண்டார். நான் ஏற்கனவே இந்திய அமைதிப் படைத் தளபதியுடன் உறவாடியதிலிருந்து அவருக்கும் இந்தியத் தூதுவருக்கும் மத்தியில் நல்லுறவு நிலவவில்லை என்பதை அறிந்து கொண்டேன். ஏதோ காரணத்தினால் இருவருக்கு மத்தியில் பகையுறவு நிலவியது. ஆகவே, திரு. டிக்சிட்டின் வேண்டுகோளை இந்தியத் தளபதி நிராகரித்துவிட்டார். தான் ஒரு இராணுவக் கட்டமைப்பில் பணிபுரிவதால் இந்திய இராணுவ உயர் பீடத்திலிருந்தே தனக்குக் கட்டளைகள் வழங்கப்பட வேண்டும் என்பது ஹக்கிரட் சிங்கின் வாதம். அன்று நான் அமைதிப் படைத் தளபதியைச் சந்தித்தபோது அவர் கோபாவேசத்துடன் காணப்பட்டார். "எனக்கு உத்தரவிடுவதற்கு யார் இவர்? இவர் எனக்கு மேலுள்ள உயர் அதிகாரியுமில்லை. இவரது உத்தரவை செயற்படுத்த நான் நடவடிக்கை எடுத்தால் பாரதூரமான விளைவுகள் ஏற்படும். விடுதலைப் புலிப் போராளிகளைத் தடுத்து வைத்திருக்கும் சிறீலங்கா இராணுவத்தினருக்கும் எனது படையினருக்கும் மத்தியில் நிச்சயமாக மோதல் வெடிக்கும்." என்று கதறினார் ஜெனரல் ஹக்கிரட் சிங். இந்த அமைதிச் சூழ்நிலையில் விடுதலைப்

புலிகளின் தளபதிகளும் மூத்த போராளிகளும் கைது செய்யப்பட்டு தடுத்து வைக்கப்பட்ட சம்பவத்தையிட்டு தான் ஆழ்ந்த கவலை கொண்டிருப்பதாகத் தெரிவித்த அவர், இதுவொரு அரசியல் விவகாரம் என்றும் இது கொழும்புக்கும் டில்லிக்குமிடையே மிக உயர்டமட்டத்தில் தீர்க்கப்பட வேண்டியது என்றும் என்னிடம் கூறினார்.

அன்று குமரப்பா, புலேந்திரன் மற்றும் எமது போராளிகளைச் சந்தித்தபோது நான் அவர்களிடம் உண்மை நிலவரத்தை எடுத்துச் சொன்னேன். கைதாகிய புலிப் போராளிகள் அனைவரையும் கொழும்புக்குக் கொண்டு சென்று விசாரணைக்கு உட்படுத்த வேண்டுமென தேசியப் பாதுகாப்பு அமைச்சர் லலித் அத்துலத்முதலி கங்கணம் கட்டி நிற்பதால் நிலைமை மோசமாகி ஆபத்தான திருப்பத்தை எடுத்திருப்பதாக விளக்கினேன். இவ் விவகாரத்தில் ஜெயவர்த்தனா அரசு பிடிவாதமான கடும்போக்கை கடைப்பிடிப்பதால் இந்தியத் தூதுவரது முயற்சிகள் வெற்றியளிப்பது சாத்தியமில்லை என்றும், போதாக் குறைக்கு இந்திய அமைதிப் படைத் தளபதிக்கும் டிக்சிட்டுக்கும் மத்தியில் கருத்து முரண்பாடும் காழ்ப்புணர்வும் நிலவுவதாகவும் முழு விபரத்தையும் அவர்களுக்கு எடுத்துக் கூறினேன்.

உண்மை நிலவரத்தை புரிந்து கொண்டதும் போராளிகள் அனைவரும் இடிந்து போனார்கள். நம்பிக்கை தளர்ந்து போனதால் அவர்களது முகங்களில் ஏக்கக் குறிகள் படர்ந்தன. சிங்கள இனவாத அரசின் அகராதியில் 'விசாரணை' என்ற சொல்லுக்குச் சித்திரவதை என்பதுதான் அர்த்தம். அதுவும் விடுதலைப் புலிகளுக்கான 'விசாரணை' என்றால் அது மிகவும் கொடூரமான சித்திரவதையையும் சாவையும் குறிக்கும். அதற்கு மேலாக, அத்துலத்முதலி விசாரணையில் அக்கறை காட்டுகிறார் என்றால் அதன் அர்த்தம் என்னவென்பது எமது போராளிகளுக்கு நன்கு புரியும். மிகக் கொடூரமான சித்திரவதையையும், அவலமான சாவையும் தாம் எதிர்கொண்டு நிற்பதாக அவர்கள் உணர்ந்து கொண்டார்கள். மட்டக்களப்பு, திருகோணமலைக் களமுனைகளில் அத்துலத்முதலியின் இராணுவத்தினர் பலரைக் கொன்று குவித்து, சாதனைகள் படைத்த தாக்குதற் தளபதிகள் இருவர், இப்பொழுது சிங்கள இராணுவத்தின் கைகளில் சிக்குப்பட்டிருப்பது பழி தீர்க்கும் வெறியுடன் காத்திருந்த தேசியப் பாதுகாப்பு அமைச்சருக்கு நல்லதொரு வாய்ப்பாக அமைந்து போனது. பலாலியில் தடுத்து வைக்கப்பட்டிருக்கும்

போராளிகளை விடுதலை செய்தால் தனது அமைச்சர் பதவியை துறந்து விடுவேன் என்று ஜெயவர்த்தனாவை மிரட்டிப் பணியவைத்துத் தனது திட்டத்திற்கு இணங்க வைத்தார் அத்துலத்முதலி. தனது அமைச்சர்களின் அழுத்தத்திற்கு எதிராக தான் செயற்பட முடியாது எனப் பொய்ச் சாக்குச் சொல்லி இவ் விவகாரத்தில் தலையிட மறுத்திருக்கிறார் அரச அதிபர். இந்திய அரசுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் பகை முரண்பாட்டையும் மோதலையும் உண்டுபண்ணச் செய்வதுதான் ஜெயவர்த்தனாவின் கபட நோக்கம்.

எதிரியால் கொடூரமாக வதைபட்டுச் சாவதை எமது போராளிகள் விரும்பவில்லை. இனி என்ன செய்வது என்பது பற்றி அவர்கள் கலந்தாலோசனை நடத்தினார்கள். இறுதியில், எல்லோரும் ஏகமனதாக ஒரு தீர்க்கமான முடிவு எடுத்தார்கள். அந்தத் தீர்மானத்தை எழுத்தில் வரைந்து, அதில் எல்லோரும் கையொப்பமிட்டு, அந்தக் கடிதத்தைத் தலைவர் பிரபாகரனிடம் சேர்க்குமாறு என்னிடம் ஒப்படைத்தார்கள். எதிரியால் கொடூரச் சித்திரவதைக்கு ஆளாகி, அவமானப்பட்டு உயிர் நீப்பதைவிட, இயக்கத்தின் வீரப் போரியல் மரபுக்கு அமைவாக, தமது உயிரைத் தாமே அழித்து, கௌரவமாக சாவைத் தழுவிக் கொள்ள தாம் உறுதிபூண்டுள்ளதாக அவர்கள் தலைவருக்கு எழுதியிருக்கிறார்கள். தமது உயிர்த் தியாக இலட்சியத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக, சைனைட் விசக் குப்பிகளைத் தமக்கு அனுப்பி வைக்குமாறு, கடித முடிவில் உருக்கமாகத் தலைவரைக் கேட்டிருந்தார்கள்.

அன்றிரவு நான் பிரபாகரனை சந்தித்தபோது பலாலியில் நிகழ்ந்த சம்பவங்கள், உரையாடல்களை விபரமாக எடுத்துக் கூறினேன். ஜெயவர்த்தனாவின் கடும்போக்கு, அத்துலத் முதலியின் வஞ்சகம், டிக்சிட்டின் கையாலாகாத்தனம், அமைதிப் படைத் தளபதியின் அகம்பாவம், எமது போராளிகளின் அவல நிலை ஆகியவைகளை விளக்கினேன். இறுதியாக, எம்மவர்கள் எழுதிக் கூட்டாகக் கைச்சாத்திட்ட கடிதத்தையும் கையளித்தேன். அந்தக் கடிதத்தை வாசித்தபொழுது பிரபாகரனின் கண்கள் கலங்கின. உதடுகளைக் கடித்தவாறு சிறிது நேரம் யோசித்தார். "எமது போராளிகளை மீட்டெடுப்பது இந்திய அரசின் பொறுப்பு. ரஜீவ் காந்தியின் வாக்குறுதிகளை நம்பி, இந்தியாவுக்கு ஒத்துழைத்த காரணத்தினால்தான் இந்த இக்கட்டான நிலைக்கு நாம் தள்ளப்பட்டிருக்கிறோம் என்றார் பிரபாகரன்

கோபாவேசத்துடன். எமது போராளிகளுக்கு ஏதாவது தீங்கு நேர்ந்தால் பாரதூரமான விளைவுகள் ஏற்படுமென்றும் அதற்கு இந்திய அரசே பொறுப்பேற்க வேண்டுமென்றும், நாளை காலை இந்தியத் தூதுவரிடம் கூறி, போராளிகள் விவகாரத்தில் இறுதியான முடிவை தனக்கு அறிவிக்குமாறு என்னைப் பணித்தார் பிரபாகரன்.

மறுநாட் காலை (1983 அக்டோபர், 5ஆம் நாள்) பலாலி விமானத் தளத்திற்கு விரைந்து சென்று இந்தியத் தூதுவருடன் தொடர்பு கொண்டு பிரபாகரன் விடுத்த எச்சரிக்கையை அவருக்குத் தெரிவித்தேன். டிக்சிட் பதட்டமடைந்தார். போராளிகளுக்குத் தீங்கு நேர்ந்தால் பாரதூரமான எதிர்விளைவுகள் நிகழ்ந்தே தீரும் என்பது அவருக்கு நன்கு தெரியும். இறுதித் தடவையாக முயன்று பார்க்கிறேன் என்றார். தளர்ந்துபோன அவரது தொனியிலிருந்து அவர் மேற்கொள்ள இருக்கும் இறுதி முயற்சி வெற்றி பெறுமென நான் நம்பவில்லை. சரியாக ஒரு மணி நேரத்தின் பின்பு மீண்டும் என்னுடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டார். தன்னால் ஒன்றுமே செய்யமுடியாத அளவுக்கு நிலைமை ஆபத்தான திருப்பத்தை அடைந்து விட்டதாகச் சொன்னார் டிக்சிட். எமது போராளிகளைக் கொழும்புக்குக் கொண்டு செல்வதற்காக, தேசியப் பாதுகாப்பு அமைச்சர் என்ற ரீதியில் தனது சொந்த அதிகாரத்தைப் பாவித்து, அத்துலத்முதலி ஒரு விசேட இராணுவ விமானத்தை பலாலிக்கு அனுப்பி வைத்துள்ளார் என்றும் அன்று மாலை ஐந்து மணிக்கு எமது போராளிகள் வலுவந்தமாக விமானத்தில் ஏற்றப்படுவார்கள் என்றும் டிக்சிட் என்னிடம் கூறினார். நான் உடனடியாகவே பிரபாகரனிடம் விரைந்து சென்று தகவலைத் தெரிவித்தேன். பிரபாகரன் சிறிது நேரம் ஆழமாகச் சிந்தித்தார். துயரமும் கவலையும் கோபமும் விரக்தியுமாக பல்வேறு உணர்வலைகள் கலந்ததால் அவரது முகம் விகாரமாக மாறியது. தனது மெய்ப் பாதுகாவலர்களான புலி வீரர்களை அழைத்து, அவர்களது கழுத்தில் தொங்கிய சைனைட் விசக் குப்பிகளை சேர்த்தெடுத்து எனதும் மாத்தையாவினதும் கழுத்தில் மாலைகளாக அணிவித்தார். எப்படியாவது இந்தக் குப்பிகளை எமது போராளிகளிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்ற உத்தரவும் பிறப்பிக்கப்பட்டது. அன்று மதியம் உணவுப் பொதிகளுடன் பலாலித் தளம் சென்று, எமது போராளிகளுடன் நிகழ்த்திய இறுதிச் சந்திப்பின்போது தலைவரின்

வேண்டுகோளை நாம் நிறைவு செய்தோம். விடுதலைப் புலிகள் இயக்கத்தின் போராட்ட இலட்சியத்திற்காக நான் ஆற்றிய செயற்பாடுகளில் இதுவே எனது ஆன்மாவை உலுப்பிய மிக வேதனையான பணியாகும்.

எமது போராட்ட வரலாற்றிலேயே இருண்ட நாளான அன்று மாலை அளவில் பலாலி சிறீலங்கா விமானத் தளத் தளபதி பிரிகேடியர் ஜெயரெத்தினா, எமது போராளிகளை வலுவந்தமான விமானத்தில் ஏற்றத் தனது படையணிகளுக்கு உத்தரவு பிறப்பித்தார். சிங்கள இராணுவத்தினர் எமது போராளிகளை நெருங்கியபோது அவர்கள் அனைவரும் சைனைட் குப்பிகளை விழுங்கிக் கொண்டனர். சிங்கள இராணுவம் இதனைச் சற்றுமே எதிர்பார்க்கவில்லை. இந்தக் கூட்டுத் தற்கொலையைத் தடுத்துவிடும் நோக்குடன் எமது போராளிகள் மீது துப்பாக்கிப் பிடிகளால் தாக்கி, அவர்களது தொண்டைகளைத் திருகி சிங்கள இராணுவத்தினர் வெறியாட்டம் ஆடியபோதும் இந்த துன்பியல் நிகழ்வை அவர்களால் தவிர்க்க முடியவில்லை. மூத்த தளபதிகளான குமரப்பா, புலேந்திரன் உட்பட பன்னிரெண்டு போராளிகள் அவ்விடத்திலேயே வீரச்சாவைத் தழுவிக் கொண்டனர். மிகுதியான ஐந்து போராளிகளும் ஆபத்தான நிலையில் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர்.

விடுதலைப் புலிகளின் தளபதிகளும் மூத்த போராளிகளும் கூட்டாகத் தற்கொலை செய்துள்ளார்கள் என்ற செய்தி காட்டுத் தீ போல தமிழ்த் தாயகம் எங்கும் பரவியதால் மக்கள் கோபாவேசம் கொண்டு கொதித்தெழுந்தனர். இந்திய அமைதிப் படையின் தலைமையகத்தில் இக் கொடுமை நிகழ்ந்ததால் இந்திய இராணுவத்தினர் மீது மக்களின் ஆவேசம் திரும்பியது. இந்திய இராணுவத்திற்கு எதிராகக் கோஷம் எழுப்பினார்கள், காவல் சாவடிகள் மீது கல் வீசினார்கள், இராணுவ வாகனங்கள் முன்பாக வீதிமறியல் செய்தார்கள். தமிழ்ப் பிரதேசங்களில் வன்முறை கோரத் தாண்டவமாடியது. சிங்களப் பொதுமக்களும் தாக்கப்பட்டனர். கிழக்கு மாகாணத்தில் வன்முறை தீவிரமடைந்து தமிழ் சிங்கள இனக் கலவரங்கள் வெடித்தன. கலவரங்களில் சிங்கள மக்கள் தாக்கப்படுவதை அறிந்து ஜெயவர்த்தனா ஆவேசமடைந்தார். விடுதலைப் புலிப் போராளிகளுக்கு வழங்கப்பட்ட பொதுமன்னிப்பை ரத்துச் செய்வதாக அறிவித்த அவர், தமிழ்ப் பகுதிகளில் சட்டம் ஒழுங்கை நிலைநாட்ட அவசர நடவடிக்கை எடுக்குமாறு இந்திய அரசுக்கு வேண்டுகோள்

விடுத்தார்.

1987 அக்டோபர் 7ஆம் நாள் அன்று, இந்திய பாதுகாப்பு அமைச்சர் திரு. கே.சி.பாண்ட், இந்திய இராணுவத் தளபதி ஜெனரல் சுந்தர்ஜி ஆகியோர் கொழும்புக்கு வருகை தந்து அரச அதிபர் ஜெயவர்த்தனாவுடன் மந்திராலோசனை நடத்தினர். அவ்வேளை டில்லி ஆட்சிப்பீடத்தின் அதிமுக்கிய தீர்மானம் பற்றி ஜெயவர்த்தனாவுக்கு தெரிவிக்கப்பட்டது. அதாவது, இராணுவ பலத்தைப் பிரயோகித்து விடுதலைப் புலிகளின் ஆயுதங்களை வலுவந்தமாக களைவு செய்வதென இந்திய அரசு முடிவு செய்துள்ளதாக அவருக்கு அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டது. ஜெயவர்த்தனாவுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. இந்திய அரசை விடுதலைப் புலிகளுக்கு எதிராகத் திருப்பிவிட வேண்டுமென்ற தனது தந்திரோபாயம் இறுதியில் பலித்து விட்டது என்பதில் அவருக்கு அலாதியான திருப்தி. யாழ்ப்பாணக் குடாநாடு மீது படையெடுத்து, அப் பிரதேசத்தை இந்திய இராணுவத்தின் முழுக் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்து, புலிப் போராளிகளை நிராயுதபாணிகளாக்கும் 'பவான்' படை நடவடிக்கையை (Operation Pawan) அக்டோபர் 10ஆம் நாள் ஆரம்பிப்பதென முடிவெடுக்கப்பட்டது.

இலங்கையிலிருந்த இந்தியப் படையணிகள் அனைத்துக்கும் பொறுப்பதிகாரியான ஜெனரல் திபேந்தர் சிங், யாழ்ப்பாணக் குடாநாட்டிலிருந்து அமைதிப் படைகளின் தளபதி ஜெனரல் ஹக்கிரட் சிங் ஆகியோர் விடுதலைப் புலிகளுடன் இந்திய அமைதிப் படைகள் இராணுவ ரீதியாக மோதுவதை விரும்பவில்லை. அப்படியான மோதல் நீண்ட காலப் போராக முடிவின்றி இழுபடும் என்பது இவர்களது மதிப்பீடு. இந்திய - இலங்கை ஒப்பந்தத்தின் கடப்பாடுகளுக்கு அமையத் தமிழ் மக்களுக்குப் பாதுகாப்பு வழங்கி, தமிழர் தாயகத்தில் அமைதியைப் பேணும் பெரும் பொறுப்பைச் சுமந்து நிற்கும் இந்திய இராணுவம், அந்த மக்களுக்கு எதிராக ஒரு யுத்தத்தை நடத்துவது அதர்மமானது என்பது இந்தியத் தளபதிகளின் கருத்தாகும். ஆகவே, அவர்கள் இந்தப் போரை அறவே விரும்பவில்லை. அக்டோபர் 6ஆம் நாளன்று, ஜெனரல் சுந்தர்ஜி பலாலியிலுள்ள இந்திய அமைதிப் படைகளது தலைமையகத்திற்கு விஜயம் செய்து விடுதலைப் புலிகளுக்கு எதிரான போர்த் தந்திரோபாயங்கள் பற்றி ஏனைய தளபதிகளுடன் மந்திராலோசனை நடத்தினர். அப்பொழுது,

திபேந்தர் சிங், இந்த இராணுவ நடவடிக்கைக்கு எதிரான தனது கருத்தைப் பகிரங்கமாக வெளிப்படுத்தினார்.

1992ஆம் ஆண்டு தான் எழுதி வெளியிட்ட **'சிறீலங்காவில் இந்திய அமைதிப் படை'** (The IPKF in Sri Lanka) என்ற நூலில் இந்தியப் போர் நடவடிக்கையின் தோல்விக்கான காரணங்களை விளக்கினார் ஜெனரல் திபேந்தர் சிங். அந் நூலில் விடுதலைப் புலிகளுக்கு எதிரான போர் நடவடிக்கையின் தந்திரோபாயம் பற்றி இந்திய இராணுவத் தளகர்த்தா ஜெனரல் சுந்தர்ஜியுடன் நடத்திய உரையாடலின் போது வெளியிட்ட கருத்துப்பற்றி ஜெனரல் திபேந்தர் சிங் பின்வருமாறு எழுதுகிறார்:

> "விடுதலைப் புலிகள் அமைப்புக்கு எதிராகப் படை பலத்தைப் பிரயோகிக்க வேண்டும் என்ற அரசியல் தீர்மானம் ஏற்கனவே எடுக்கப்பட்டுள்ளது என்பது தெளிவாக இருந்தது. நாம் கடும்போக்கான முடிவை எடுக்கக் கூடாது என்று ஜெனரல் சுந்தர்ஜிக்கு நான் ஆலோசனை வழங்கினேன். நாம் அப்படி முடிவு எடுத்தால் அடுத்த இருபது ஆண்டு காலம் வரை ஒரு எதிர்க் கிளர்ச்சிச் சூழ்நிலைக்கு நாம் முகம்கொடுத்தாக வேண்டும் எனக் கூறினேன். எனது நிலைப்பாடு தோல்வி மனப்பான்மையை பிரதிபலிப்பதாக என்னைக் கண்டித்தார்கள். நான் யதார்த்தத்தைக் கூறுவதாகச் சொன்னேன். அதற்கப்புறம் ஜெனரல் சுந்தர்ஜி கொழும்புக்குப் புறப்பட்டுச் சென்றார். விடுதலைப் புலிகளுக்கு எதிராக இராணுவ பலத்தைப் பிரயோகிக்குமாறு மறுநாள் அவரிடமிருந்து நேரடி உத்தரவு இந்திய அமைதிப் படைச் செயலகத்திற்கு வந்தது."[25]

விடுதலைப் புலிகளுக்கு எதிராக இராணுவ நடவடிக்கையைத் தவிர்ப்பதற்கு ஜெனரல் திபேந்தர் சிங் கடும் முயற்சிகளை எடுத்தார். தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர் அவர்களையும் தொடர்பு கொள்ள முயற்சித்தார். துரதிர்ஷ்டவசமாக அவ்வேளை தமிழக முதல்வர் கடும் சுகவீனமுற்று அமெரிக்காவில் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தார். எம்.ஜி.ஆருக்குப் பதிலாக சென்னையில் பண்டுருட்டி இராமச்சந்திரனைச் சந்தித்த ஜெனரல் திபேந்தர் சிங், இந்திய அமைதிப் படைகளுக்கும் விடுதலைப் புலி

கெரில்லா வீரர்களுக்கும் மத்தியில் போர் வெடித்தால் பாரதூரமான விளைவுகள் ஏற்படும் என்பதைத் தமிழக அமைச்சருக்கு அவர் தெளிவுபடுத்தினார். இந்தியப் பிரதமர் ரஜீவ் காந்தியுடன் பேசி, போர் நடவடிக்கையை மறுபரிசீலனை செய்யுமாறு அவரிடம் கேட்டுக் கொள்ளும்படி சொன்னார். அமைச்சர் பண்டுருட்டியின் முயற்சி பயனளிக்கவில்லை. விடுதலைப் புலிகளுக்கு நல்லதொரு பாடம் புகட்டப்பட வேண்டும் என்ற கடும்போக்கு டில்லியில் நிலவுவதாக திரு. இராமச்சந்திரன் திபேந்தர் சிங்கிடம் தெரிவத்தார்.[26]

தனது ஆலோசனைக்கும் ஆட்சேபனைக்கும் மாறாக தமிழ்ப் புலிகளுக்கு எதிராக இராணுவ நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என்ற முடிவு அரசியல் உயர் மட்டத்திலேயே மேற்கொள்ளப்பட்டது என்கிறார் ஜெனரல் திபேந்தர் சிங். இது பற்றி அவர் தனது நூலில் குறிப்பிடுவதாவது:

> "கடும்போக்கைக் கடைப்பிடிப்பது பற்றிய எனது கருத்து வேறுபாட்டையும் மற்றும் துருப்புப் பற்றாக்குறைப் பிரச்சினையையும் எனது இராணுவ உயரதிகாரி (ஜெனரல் சுந்தர்ஜி) பாதுகாப்பு அமைச்சரிடமும் பிரதம மந்திரியிடமும் தெரிவித்திருப்பார் என்பதில் எனக்கு எவ்வித சந்தேகமுமில்லை. அப்படியான ஆலோசனை தெரிவிக்கப்பட்ட பொழுதும் இராணுவ நடவடிக்கையை நிறைவேற்றுவதெனத் தீர்மானிக்கப்பட்டது. இதிலிருந்து இதனையொரு அரசியல் முடிவு என்றே கருத வேண்டும்."[27]

இந்திய - இலங்கை ஒப்பந்த விதிகளை நிறைவு செய்வது என்ற சாக்கில் இராணுவ பலத்தைப் பிரயோகித்து வலுவந்தமாக விடுதலைப் புலிப் போராளிகளை நிராயுதபாணிகள் ஆக்குவதென இந்தியப் பிரதமர் ரஜீவ் காந்தி ஒரு தீர்க்கமான முடிவு எடுத்திருந்தார். இந்த இராணுவ நடவடிக்கை பற்றி இந்திய இராணுவத் தளகர்த்தா ஜெனரல் சுந்தர்ஜியுடன் இந்தியப் புலனாய்வுத்துறை உயரதிகாரிகளுடன் அவர் கலந்துரையாடிய பொழுது அதன் விளைவுகள் பற்றியும் விசாரித்திருக்கிறார். புது டில்லியில் நிகழ்ந்த இந்த இரகசிய மந்திராலோசனைக் கூட்டம் ஒன்றுபற்றி திரு. டிக்சிட் தனது நூலில் குறிப்பிடுகிறார். அக் கட்டத்தில், விடுதலைப் புலிகளுடன் போர் தொடுப்பதால்

எழக்கூடிய விளைவுகள் குறித்து ஜெனரல் சுந்தர்ஜியிடம் ரஜீவ் காந்தி வினவியபோது, "இந்திய ஆயுதப் படைகள் அவர்களை (விடுதலைப் புலிகளை) இரண்டு வாரத்திற்குள் செயலிழக்கச் செய்து விடுவார்கள்."[28] என்றார் இந்தியத் தளபதி. இத்தகைய மதிப்பீடு வழங்கப்பட்ட காரணத்தால் இராணுவ நடவடிக்கையின் எதிர்விளைவுகள் பற்றி ரஜீவ் காந்தி பெரிதாகக் கவலைப்படவில்லை.

1987 அக்டோபர் 10ஆம் நாள், இந்திய அமைதி காக்கும் படைகள் போரில் குதித்தன. விடுதலைப் புலிகளுக்கு ஆதரவான ஊடக நிறுவனங்களே முதலில் இந்தப் போருக்குக் களப் பலியாகின. அன்றைய நாள் அதிகாலை, **'ஈழமுரசு'**, **'முரசொலி'** ஆகிய நாளிதழ்களின் செயலகங்களுக்குள் புகுந்து சூறையாடிய இந்திய இராணுவத்தினர், பத்திரிகைக் கட்டிடங்களைக் குண்டு வைத்துத் தகர்த்ததுடன் பத்திரிகையாளர்களையும் கைது செய்தனர். விடுதலைப் புலிகளின் தொலைக்காட்சி நிறுவனமான **நிதர்சனம்** காரியாலயமும் தீ வைத்துக் கொழுத்தப்பட்டது. அன்று காலை யாழ்ப்பாணக் கோட்டைப் படைமுகாமிலிருந்து கவச வாகனங்கள் சகிதம் வெளியேற முயற்சித்த இந்தியத் துருப்புக்கள் மீது விடுதலைப் புலி வீரர்கள் மோட்டார்கள் இயந்திரத் துப்பாக்கிகளால் தாக்கியதைத் தொடர்ந்து இந்தியப் படைகள் கோட்டைக்குள் பின்வாங்கின. தெல்லிப்பளைச் சந்தியில் அமையப்பெற்றிருந்த இந்திய இராணுவத்தின் படைநிலைமீதும் விடுதலைப் புலிப் போராளிகள் மோட்டார் குண்டுகளைப் பொழிந்து தாக்கினர். இப்படியாக, முழு அளவிலான இந்திய-புலிகள் யுத்தம் அன்று ஆரம்பமாகியது. இந்தப் போர் வெடித்ததைத் தொடர்ந்து விடுதலைப் புலிகளின் அரசியற் பிரிவு வெளியிட்ட அறிக்கையில் குறிப்பிட்டதாவது:

> "அகால மரணத்தை எய்திய மாவீரர்களுக்கு அஞ்சலி செலுத்தித் தமிழீழ மக்கள் ஆழ்ந்த துயரத்தில் மூழ்கிப் போய் இருக்கும் இந்த சோகமான சூழ்நிலையில், இந்திய அரசானது தனது அமைதி காக்கும் படைகளை அணிதிரட்டி, தமிழர்களுக்கு எதிராக ஒரு கொடிய யுத்தத்தை ஏவிவிட்டிருக்கிறது. இந்தியாவுடன் ஒரு போர் நிகழும் எனத் தமிழ் மக்களோ அன்றி எமது போராளிகளோ கனவில் கூட கற்பனை செய்திருக்கமாட்டார்கள். இந்தியாவையே

தமது பாதுகாவலராகவும் இரட்சகராகவும் எமது மக்கள் பூசித்தனர். அன்பையும் அமைதியையும் நிலைநாட்டும் கருவிகளாகவே இந்தியப் படைகளை அவர்கள் கருதினார்கள். இந்தியாவை ஒரு நட்பு சக்தியாகவும் தமக்கு ஆயுத உதவியும் புகலிடமும் தந்து, தமிழீழ விடுதலைப் போரில் முக்கிய பங்கினையும், அரசியல் முக்கியத்துவத்தையும் வழங்கிய ஒரு நேசநாடாகவுமே விடுதலைப் புலிகள் இயக்கம் கருதியது. ஆகவேதான், விடுதலைப் புலிகள் அமைப்புக்கு எதிராகப் போர்தொடுக்க இந்தியா முடிவெடுத்தது தமிழர் தேசத்தை அதிர்ச்சியிலும் ஆழ்ந்த கவலையிலும் ஆழ்த்தியது."[29]

இந்திய - புலிகள் யுத்தம் இரண்டு வருடங்களும் ஏழு மாதங்களுமாக நீடித்தது. இந்திய தேசம் எதிர்கொண்ட மிக நீண்ட யுத்தம் இதுவாகும். இந்தப் போரில் இந்திய இராணுவம் பலத்த உயிர்ச் சேதத்தைச் சந்தித்தது. ஆயிரத்து ஐநூறு இந்தியப் படையினர் உயிரிழந்தனர். ஐயாயிரத்திற்கும் மேற்பட்டோர் காயமடைந்தனர். இவர்களில் பலர் ஊனமடைந்தனர்.[30] இந்தப் போர் பற்றி ஒரு இந்தியப் பத்திரிகையாளர் கீழ்க் கண்டவாறு குறிப்பிட்டார்.

"இரண்டு ஆண்டுகளுக்கு மேலாக இந்தப் பயனற்ற யுத்தத்தில் அமைதி காக்கும் படைகளைச் சிக்குப்பட வைத்தமை ஒரு மாபெரும் தவறாகும். 1990 மார்ச் மாதம் கடைசி இந்தியப் படையணிகள் தமது தாய்நாட்டுக்குத் திருப்பிப் பெறப்பட்ட வேளையில், இந்தப் போரை மதிப்பிடும்பொழுது, 1962ஆம் ஆண்டின் சீன யுத்தத்தின் பின்னர் இந்தியா சந்தித்த மிகப்பெரிய இராஜதந்திர - புலனாய்வுப் பின்னடைவு இதுதான்".[31]

இந்திய - புலிகள் யுத்தம் பற்றி ஒரு சிங்கள ஆய்வாளர் எழுதும் பொழுது அதனை 'இந்தியாவின் வியட்னாம்' என வர்ணித்திருக்கிறார். ஒரு மாபெரும் வல்லரசுக்கும் ஒரு சிறிய பலவீனமான எதிரிக்கும் மத்தியில் நிகழ்ந்த போராக இருப்பினும் அந்த எதிரியானவர்கள் இரும்பை ஒத்த உறுதி கொண்டவர்களாகவும் 'மக்களின் வீர நாயகர்கள்' என்ற வெகுசன ஆதரவு பெற்றவர்களாகவும் விளங்கினர் என அவர்

எழுதுகிறார். அவர் குறிப்பிட்டதாவது:

"இருபதாம் நூற்றாண்டு வரலாற்றினை எதிர்கால வரலாற்று ஆசிரியர்கள் பதிவு செய்யும்பொழுது நான்கு பின்னடைவு கண்ட யுத்தங்களை இணையொத்து மதிப்பிடுவர். வியட்னாமில் அமெரிக்கப் படைகள், கம்போடியாவில் சீனப் படைகள், ஆப்கானிஸ்தானில் சோவியத் படைகள், இலங்கையில் இந்தியப் படைகள் ஆகியனவே இப் பின்னடைவு கண்ட போர்களாகும். இப் போர்களில் நான்கு பெரும் வல்லரசுகள், தொகையில் மிகச் சிறிய, பலத்தில் மிகக் குறைந்த, பயிற்சியில் மிகப் பின்தங்கிய எதிரிகளுக்கு முகம் கொடுத்தனர். ஆனால் அந்த எதிராளிகளோ இரும்பை ஒத்த உறுதி கொண்டவர்கள், தந்திரோபாயத்தில் சாணக்கியர்கள், பகைவர் மீது ஈவிரக்கமற்றவர்கள்... இந்தியாவின் 'எதிரிகள்' எல்லா நேரத்திலும், எல்லா இடங்களிலும் இருக்கவே செய்தார்கள். அவர்கள் மக்களிடமிருந்து வந்தார்கள்; மக்களின் வீர நாயகர்களாகப் போற்றப்பட்டார்கள்; உள்ளூர் மக்களால் பேணப்பட்டு, பாதுகாக்கப்பட்டு, அவர்களது நல்லாதரவைப் பெற்றவர்களாக விளங்கினார்கள்."[32]

## ரஜீவ் காந்திக்கு பிரபா எழுதிய கடிதங்கள்

இந்தியப் - புலிகள் யுத்தம் மிகவும் கொடூரமானதாக, மூர்க்கத்தனம் மிக்கதாக அமைந்தது. இப் போரில் இந்திய இராணுவமும் விடுதலைப் புலிகளின் கெரில்லா அணிகளும் பலத்த உயிரிழப்பைச் சந்தித்தனர். ஆயினும் களமாடிய இரு தரப்பினரையும்விட, தமிழ்ப் பொதுமக்களே பேரிழப்புகளுக்கு முகம் கொடுத்தனர். அப்பாவிப் பொதுமக்கள் மீது இந்திய இராணுவம் பல அட்டூழியங்களை இழைத்தது. பயங்கரமான படுகொலைகளை நிகழ்த்தியது.

1987 அக்டோபர் 11ஆம் நாள், யாழ்ப்பாணம் மீது இந்திய இராணுவம் படையெடுப்பை நிகழ்த்திய அன்று, யாழ். பல்கலைக்கழகத்திற்கு அண்மித்த பிரம்படியில் நாற்பது பொதுமக்கள் மிருகத்தனமாக கொன்று குவிக்கப்பட்டனர். தலைவர் பிரபாகரனும் மூத்த தளபதிகளும் பிரம்படியில்

வசிப்பதாகத் தகவல் அறிந்த இந்தியப் படையணிகள் அவர்களைக் கொன்றொழிக்கும் நோக்கத்துடன், டாங்கிகள், கவச வாகனங்கள், சிறு பீரங்கிகள் சகிதம் அப் பகுதிக்குள் பிரவேசித்தன. ஆயினும் பிரபாகரனும் அவரது தளபதிகளும் அங்கு காணப்படவில்லை என்பதால் விரக்தியும் கோபமும் அடைந்த இந்தியத் துருப்புக்கள் தமது வெறித்தனத்தை அப்பாவிப் பொதுமக்கள் மீது கட்டவிழ்த்துவிட்டனர்.

1987 அக்டோபர் 21ஆம் நாளன்று, இந்திய அதிரடிப் படைகள் யாழ்ப்பாணப் பொது மருத்துவமனையில் நிகழ்த்திய மிருகத்தனமான கொலைக்களரி மன்னிக்க முடியாத கோரச் சம்பவமாகும். யாழ்ப்பாண மருத்துவமனைக்குள் மூர்க்கமாகப் பாய்ந்து சென்ற இந்தியப் படையினர் கண்மூடித்தனமாகத் துப்பாக்கிகளால் சிலாவிச் சுட்டும், கைக் குண்டுகளை அங்குமிங்குமாக வீசி எறிந்தும், வைத்தியபீடத்தைக் கொலைக் களமாக மாற்றினர். இந்தப் பயங்கரமான வெறியாட்டத்தில் மருத்துவர்கள், தாதிமார், நோயாளிகள் அடங்க நூற்றுக்கும் அதிகமானோர் ஈரவிரக்கமின்றிப் படுகொலை செய்யப்பட்டனர்.

யாழ்ப்பாண நகரில் இக் கோரம் நிகழ்ந்து ஒரு வாரத்திற்குள், அக்டோபர் 27ஆம் நாளன்று சாவகச்சேரிப் பட்டினத்தில் இன்னுமொரு கொலைவெறிச் சம்பவம் நிகழ்ந்தது. அன்றைய நாள் சாவகச்சேரி சந்தைச் சதுக்கத்தில் சனத்திரள் குவிந்திருந்த மதிய வேளையில், ஒரு இந்திய இராணுவ உலங்குவானூர்தி அங்கு விரைந்து வந்து ஏவுகணைகளாலும், இயந்திரத் துப்பாக்கியாலும் அப்பாவி மக்கள் மீது கண்மூடித்தனமான தாக்குதலை நிகழ்த்தியது. இக் கொடூரத் தாக்குதலில் முப்பது பொதுமக்கள் கொல்லப்பட்டனர்; 75 பேர் படுகாயமடைந்தனர்.

இந்திய இராணுவத்தினர் தொடர்ச்சியாக நிகழ்த்திய படுகொலைகளையும் மற்றும் அட்டூழியங்களையும் விபரித்துக் கூறிவது இந் நூலின் நோக்கமல்ல. தமிழர் தாயகத்தை இந்திய இராணுவம் ஆக்கிரமித்து நின்ற கால கட்டத்தில் நாலாயிரத்திற்கும் அதிகமான பொதுமக்கள் கொல்லப்பட்டனர். இத் தொகையை நிரூபிக்க ஆவணப்படுத்தப்பட்ட ஆதாரங்கள் உள்ளன. இப் படுகொலைக் கொடூரங்களுடன் பல நூற்றுக்கணக்கான தமிழ்ப் பெண்கள் இந்திய இராணுவத்தினரால் பாலியல் வல்லுறவுக்கு ஆளாக்கப்பட்டனர். வீடுகளுக்குள் புகுந்து மக்களின் சொத்துகளைச் சூறையாடல்,

மக்களை அடித்துத் துன்புறுத்துதல், கொழுத்தும் வெய்யிலில் தார் வீதிகளில் மக்களை முழங்காலில் நிற்க வைத்தல் போன்ற பல ரகமான அட்டூழியங்களை இந்தியப் படைகள் புரிந்தன.

(இந்திய-புலிகள் யுத்தத்தின் ஆரம்ப காலகட்டத்தில் நானும் எனது மனைவியும் யாழ்ப்பாணம் வடமராட்சியில் இருந்தோம். இந்திய இராணுவத்தினால் வேட்டையாடப்பட்டு நாம் அனுபவித்த அவலங்களையும், தமிழ் மக்களுக்கு எதிராக இந்தியப் படைகள் புரிந்த அட்டூழியங்களையும் எனது மனைவி, **சுதந்திர வேட்கை** என்ற தனது நூலில் விபரித்து எழுதியிருக்கிறார்.)

விடுதலைப் புலிகள் மீது இந்தியா போர்ப் பிரகடனம் செய்தபோது, மிகவும் கசப்பான விரும்பத்தகாத இரு முடிவுகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க இயக்கத் தலைமை நிர்ப்பந்திக்கப்பட்டது. ஒன்று சரணடையவேண்டும். மற்றது எதிர்த்துப் போராட வேண்டும். சரணடைவதென்றால் சாவைத் தழுவிக் கொள்வதுதான். அதுவும் வதைபட்டு, அவமானப்பட்டு, குற்றவாளிகள் போலத் தண்டிக்கப்பட்டு, இறுதியில் மடிந்து போவதுதான். அடுத்த வழி, இந்திய இராணுவத்தை எதிர்த்துப் போராடுவது. இந்தத் தேர்வில் சாவு நிச்சயமானதுதான். ஆனாலும் அதேவேளை, சாவிலிருந்து தப்பவும் ஒரு வாய்ப்பு இருக்கவே செய்தது. அபூர்வமாக, சில சமயங்களில் வெற்றி வாய்ப்பும் இருக்கலாம். அதாவது, சாவுக்கு அஞ்சாத துணிவுடன், உறுதி தளராது, நம்பிக்கை தளராது, மதிநுட்பத்துடன் போரிட்டால் வெற்றி பெறுவதும் சாத்தியமாகலாம். எல்லாவற்றிற்கும் மேலாக இரண்டாவது தேர்வில் மகத்துவமான ஒரு பண்பியல்பு இருந்தது. அதாவது, ஒரு உன்னத இலட்சியத்திற்காகக் களமாடிச் சாவதில் மதிப்பும் கௌரவமும், வீரப் பண்பும் இருந்தது. இதன் காரணமாகவே இரண்டாவது மார்க்கத்தை தான் தேர்ந்தெடுத்ததாகப் பிரபாகரன் என்னிடம் கூறினார். தென்னாசியாவின் மிகப் பெரிய இராணுவத்தை எதிர்த்துப் போராட்ட பிரபாகரன் முடிவெடுத்த பொழுது, தளபதிகளிலிருந்து போராளிகள் வரை புலிப் படை வீரர்கள் அவரது தீர்மானத்தை ஆதரித்தார்கள். இந்திய இராணுவத்துடன் மோதுவது அழிவில் முடியும் என ஆரம்பத்தில் தமிழ்ப் பொதுமக்கள் எண்ணிப் பயந்தார்கள். ஆயினும் காலப் போக்கில், இந்திய இராணுவத்தின் கொடுமைகளால் ஆத்திரமடைந்த மக்கள் புலி வீரர்களுக்கு முழு ஆதரவாக நின்றார்கள்.

வரலாற்றுப் புறநிலைகள் காரணமாக ஒரு தற்காப்பு யுத்த மூலோபாயத்தை கடைபிடிக்க நிர்ப்பந்தக்கப்பட்ட பொழுதும், இந்தியாவுடன் சமரச இணக்கப்பாடு காண விடுதலை புலிகள் இயக்கம் கடும் முயற்சிகளை எடுத்தது. இந்தியாவுடன் போர் தொடங்கி மூன்று மாத காலத்தில் இந்தியப் பிரதமர் ரஜீவ் காந்திக்கு மூன்று கடிதங்களை எழுதினார் பிரபாகரன். போர் நிறுத்தம் செய்து, பேச்சுக்களை நடத்தி சமரச உடன்பாட்டுக்கு வருமாறு இக் கடிதங்களில் வேண்டுகோள் விடுத்தார் புலிகளின் தலைவர். ஆனால் பதில் எழுதாது, இறுக்கமான மௌனம் சாதித்தது இந்திய ஆட்சிபீடம்.

விடுதலைப் புலிகள் மீது இந்தியா யுத்தப் பிரகடனம் செய்த மூன்றாவது நாள் (12 அக்டோபர் 1987) பாரதப் பிரதமருக்கு அனுப்பப்பட்ட முதலாவது கடிதம் வருமாறு:

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
12-10-1987

கனம் ராஜீவ் காந்தி அவர்கள்
இந்தியப் பிரதம மந்திரி
புதுடில்லி

கனம் பிரதம மந்திரி அவர்களே,

யாழ்ப்பாணத்தில் உருவாகியுள்ள மிகவும் ஆபத்தான, பாரதூரமான நிலைமையை உங்கள் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன்.

இந்திய அமைதிகாக்கும் படைகள் விடுதலைப் புலிகள் இயக்கம் மீது போர்ப்பிரகடனம் செய்து இராணுவ நடவடிக்கைகளை ஆரம்பித்துள்ளன. தற்பாதுகாப்பிற்காக, எமது போராளிகளையும் பொதுமக்களையும் அழிவிலிருந்து காப்பதற்காக, நாம் இந்திய-சிறீலங்கா இராணுவங்களை எதிர்த்துப் போராட நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளோம்.

மக்கள் ஆதரவுபெற்ற விடுதலை இயக்கமான புலிகள் இயக்கம் மீது இந்திய அரசு யுத்தம் தொடுத்துள்ளதால் எமது மக்கள் அதிர்ச்சியும் ஆழ்ந்த கவலையும் அடைந்துள்ளனர். விடுதலைப் புலிகள்

இயக்கம் மீது பிரகடனப்படுத்தப்பட்டுள்ள இந்தப் போரானது இந்திய - இலங்கை ஒப்பந்தத்தின் அடிப்படைகளையே மீறுவதாக அமைந்துள்ளது. எமது மக்களின் கருத்தும் அதுவாகும்.

இந்தியப் படைகளும் சிறீலங்கா இராணுவமும் கூட்டாகச் சேர்ந்து மேற்கொண்டுள்ள இந்த இராணுவ நடவடிக்கை மூலம் பொது மக்களுக்கு பெருமளவு உயிர்ச்சேதம் ஏற்படும் பேராபத்து உருவாகியுள்ளது. இதனால் எழும் பாரதூரமான விளைவுகளுக்கு இந்திய அரசே பொறுப்பேற்க வேண்டும்.

இந்திய மக்கள் மீது எமக்குள்ள நல்லுறவின் அடிப்படையிலும், சமாதானமும் நல்லெண்ணமும் பேணப்படும் அவசியத்தை முன்னிட்டும், இராணுவ நடவடிக்கைகளை உடன் கைவிடும்படி இந்திய அமைதிப்படைக்குப் பணிக்குமாறு நான் உங்களை தாழ்மையுடன் வேண்டிக் கொள்கிறேன்.

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

மீண்டும் இரு தினங்களுக்குப் பின்பு 1987 அக்டோபர் 14ஆம் நாள், விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன் இந்தியப் பிரதமருக்கு எழுதிய கடிதத்தை இங்கு பிரசுரிக்கிறோம். இக் கடிதத்தில் இந்தியப் படைகள் புரிந்துள்ள அட்டூழியங்களை எடுத்துக் கூறும் பிரபாகரன், போரை நிறுத்தி, பேச்சுக்களை ஆரம்பிக்குமாறு வேண்டுகோள் விடுத்தார்.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
14-10-1987

கனம் ராஜீவ் காந்தி அவர்கள்
இந்தியப் பிரதம மந்திரி
புதுடில்லி

கனம் பிரதம மந்திரி அவர்களே,

தமிழ்ப் பகுதிகளில் சாவும் அழிவுமாக நிலைமை

நாளுக்கு நாள் படுமோசமடைந்து வருவதால் நான் மீண்டும் உங்களுடன் தொடர்பு கொள்ள விரும்புகின்றேன்.

இந்திய அமைதிகாக்கும் படையினர் மேற்கொண்டு வரும் இராணுவ நடவடிக்கைகளால் நெருக்கடி நிலை தீவிரமடைந்து வருவதுடன் யாழ்ப்பாணக் குடாநாட்டில் பொதுசன உயிரிழப்பும் பெருந்தொகையில் அதிகரித்துள்ளது. கண்மூடித்தனமான பீரங்கித் தாக்குதல், மோட்டார் எறிகணை வீச்சு, விமானக் குண்டு வீச்சு காரணமாக இதுவரை 150 அப்பாவிப் பொதுமக்கள் அநியாயமாகக் கொல்லப்பட்டதுடன் 500 பேர்வரை காயமடைந்துள்ளனர். அத்துடன் விடுதலைப் புலிகள் இயக்கப் போராளிகள் பலரும் கொல்லப்பட்டுள்ளனர். போர்க் கைதிகளாக 18 அமைதிப் படைச் சிப்பாய்கள் எமது பாதுகாப்பில் உள்ளனர்.

போர் மிகவும் உக்கிரமாக தீவிரமடைவதால் பல்லாயிரக்கணக்கான தமிழ் மக்கள் அகதிகளாக இடம்பெயர்ந்துள்ளனர். காலவரையறையற்ற ஊரடங்குச் சட்டம் அமுலில் இருந்து வருவதால் அத்தியாவசிய உணவுப் பொருட்களுக்கு பெரும் தட்டுப்பாடு எழுந்துள்ளது. இதனால் எமது மக்கள் தாங்கொணாத் துன்பத்திற்கு இலக்காகியுள்ளனர்.

எமது மக்களின் பாதுகாப்பைப் பேணி, சமாதானத்தையும் இயல்பு நிலையையும் நிலைநாட்டுவதற்காக எமது தாயகம் வந்த இந்திய அமைதி காக்கும் படையினர் ஒரு முழு அளவிலான யுத்தத்தை ஆரம்பித்து எமது மக்கள் மீது மனிதாபிமானமற்ற கொடுமைகளை புரிவது மிகவும் வேதனைக்குரிய துன்பியல் நிகழ்வாகும்.

11ஆம் நாள், காலை இந்திய அதிரடிப் படையினர் யாழ்ப்பாண நகருக்கு சமீபமாகவுள்ள பிரம்படியில், பல்கலைக்கழக மாணவர்கள், பெண்கள், குழந்தைகளாக 40 அப்பாவிப் பொதுமக்களை படுகொலை செய்துள்ளனர். மக்களுக்கு சேவைபுரியும் பொது நிறுவனங்கள் மீதும் இந்திய அமைதிப் படைகள் தாக்குதல் நடத்தியமை எமக்கு

அதிர்ச்சியைத் தந்திருக்கிறது. ஈழமுரசு, முரசொலி ஆகிய இரு தினசரி தமிழ்ப் பத்திரிகைகளின் காரியாலயத்தினுள் புகுந்த அமைதிப் படைச் சிப்பாய்கள் வெடிகுண்டுகளை வைத்து, அச்சியந்திரங்களை தகர்த்துள்ளனர். 12ஆம் நாளன்று வடமாகாணத்தின் ஒரேயொரு வைத்திய நிறுவனமான யாழ்ப்பாண மருத்துவமனை மீது கோட்டையிலுள்ள இந்தியப் படையினர் பீரங்கித் தாக்குதலை நடத்தி பெரும் சேதம் விளைவித்துள்ளனர். நேற்று, விமானக் குண்டுவீச்சு காரணமாக யாழ்ப்பாண பல்கலைக்கழகக் கட்டிடங்கள் பலத்த சேதத்திற்கு உள்ளாகி இருக்கின்றன.

இந்தப் போரில் கனரக ஆயுதங்களையோ, விமானங்களையோ பாவிக்கவில்லை என இந்திய அரசாங்கம் பரப்புரை செய்துவருகிறது. ஆனால், அதேவேளை இந்திய - இலங்கை விமானங்களும், உலங்குவானூர்திகளும் குடியிருப்புப் பகுதிகள் மீது கண்மூடித்தனமான தாக்குதல்களை நடத்தி வருகின்றன. இந்தியாவின் இந்நடவடிக்கைகள் எமது மக்களுக்கு அதிர்ச்சியையும் ஆழ்ந்த கவலையையும் ஏற்படுத்தியுள்ளது.

இந்திய - இலங்கை ஒப்பந்த விதிகளின் பிரகாரம் அமைதிப் படையினர் அமைதியைப் பேணவேண்டும்; பொதுமக்களுக்குப் பாதுகாப்பு வழங்க வேண்டும். இதுவே அவர்களுக்கு வழங்கப்பட்ட ஆணையாகும். மக்கள் ஆதரவுபெற்ற ஒரு அரசியல் இயக்கத்திற்கு எதிராக ஒரு முழு அளவிலான யுத்தத்தைத் தொடுப்பதற்கு அமைதிப் படைக்கு சட்டரீதியான அதிகாரம் எதுவுமில்லை. அமைதிப் படையின் அட்டூழியங்கள் பற்றி நாம் முன்வைக்கும் குற்றச்சாட்டுகளை விசாரித்து அறிவதற்கும், உண்மையை உலகிற்கு எடுத்துச் சொல்வதற்கும் வழிசெய்யும் வகையில் சர்வதேச பத்திரிகையாளர்கள், மனித உரிமை நிறுவனப் பிரதிநிதிகள், இந்திய எதிர்க் கட்சிப் பிரமுகர்கள் ஆகியோரைக் கொண்ட ஒரு பார்வையாளர் குழு யாழ்ப்பாணம் வருகைதர அனுமதிக்குமாறு உங்களை வேண்டிக்கொள்கிறேன்.



வட-கிழக்கு மாகாணத்தில் ஒரு இடைக்கால அரசை அமைக்குமாறு இந்திய, சிறீலங்கா அரசுகள் எமது இயக்கத்தை கேட்டுக்கொண்டன என்பதை நீங்கள் அறிவீர்கள். தமிழ் மாநிலத்தில் விடுதலைப் புலிகள் இயக்கமே மக்கள் ஆதரவுபெற்ற முதன்மையான அரசியல் அமைப்பு என்பதை இரு அரசுகளும் அங்கீகாரம் வழங்கியமைக்கு இது ஒப்பாகும். இடைக்கால அரசு அமைக்கப்பெற்றதும் எம்மிடம் எஞ்சியுள்ள ஆயுதங்களைக் கையளித்து விடுவதாக நாம் வாக்குறுதி அளித்திருந்தோம். ஆனால் கிழக்கு மாகாணத்தில் தலைதூக்கிய வன்முறைச் சம்பவங்களைச் சாக்காகக் காட்டி இந்திய அரசாங்கம் எம்மீது ஒரு யுத்தத்தை கட்டவிழ்த்துவிடத் தீர்மானித்துள்ளது. இது மிகவும் துரதிர்ஷ்ட வசமானதாகும். கிழக்கு மாகாணத்தில் தலைதூக்கிய வன்முறைச் சம்பவங்களுக்கும் எமக்கும் எவ்வித தொடர்புமில்லை. இதனை நாம் திட்டமிட்டு செயற்படுத்தியதாகக் கூறுவதும் தவறானதாகும். எமது இயக்கத்தின் திருக்கோணமலைத் தளபதி புலேந்திரன், முன்னாள் மட்டக்களப்பு தளபதி குமரப்பா ஆகியோரின் மரணத்தின் விளைவாகவே தன்னிச்சையான இவ்வன்முறைச் சம்பவங்கள் தலைதூக்கின. எமது தளபதிகளின் மரணத்தால் பாரதூரமான எதிர்விளைவுகள் ஏற்படலாமென நாம் ஏற்கனவே இந்தியத் தூதர் திரு. டிக்சிட்டிடம் கூறியிருந்தோம். இந்த விளைவுகள் பற்றி திரு.டிக்சிட்டும், ஜனாதிபதி ஜெயவர்த்தனாவுக்கு எச்சரிக்கை விடுத்திருந்தார்.

எமது மக்களுக்கு தமது அரசியல் தலைவிதியை தாமே நிர்ணயித்துக் கொள்ளும் சனநாயக உரிமை இருக்கிறது. இந்த உரிமையை மீறும் வகையில், இந்தியா போன்ற ஒரு சனநாயக நாடு தனது சொந்த அபிலாசைகளை ஆயுதமுனையில் எமது மக்கள் மீது திணித்துவிட முயல்வது நியாயம் ஆகாது. இந்த ஒப்பந்தம்பற்றி எமக்கு தனித்த ஒரு நிலைப்பாடு இருந்தபோதும், எமது மக்களின் நலன் பேணப்படுமானால் அதனை அமுல்படுத்துவதில் இந்தியாவுக்கு ஒத்துழைப்பு வழங்க நாம்

முன்வந்தோம். அப்படியிருந்தும், தமிழ் மக்களின் உண்மையான பிரதிநிதிகளான எம்மை பூண்டோடு அழித்துவிடுவதற்கு நீங்கள் மேற்கொண்டுள்ள இராணுவ நடவடிக்கை நியாயமற்றது, அநீதியானது, சட்டத்திற்கு மாறானது. ஆகவே, இந்த இராணுவ நடவடிக்கைகளை நிறுத்தி சமாதானத்தையும் இயல்பு நிலையையும், இன ஐக்கியத்தையும் உருவாக்க வழிகோலும் வகையில் விடுதலைப் புலிகள் இயக்கத்துடன் பேச்சுவார்த்தைகளை நடத்துமாறு நான் உங்களைப் பணிவுடன் வேண்டிக்கொள்கிறேன்.

வே.பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

இந்திய இராணுவத்தின் அட்டூழியங்கள் காரணமாக தமிழீழ மக்கள் தாங்கொணாத் துன்பங்களை அனுபவித்து வருவதாகச் சுட்டிக்காட்டி, அமைதி பேணி ஆக்கபூர்வமான சமரச முயற்சிகளை மேற்கொள்ளுமாறு வேண்டுகோள் விடுத்துத் தலைவர் பிரபாகரன் பாரதப் பிரதமர் ரஜீவ் காந்திக்கு எழுதிய மூன்றாவது கடிதத்தை இங்கு தருகிறோம். 1983 ஜனவரி 13ஆம் நாள் இக் கடிதம் எழுதப்பட்டது.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
13.01.1988

கனம் ராஜீவ் காந்தி
இந்திய பிரதம மந்திரி
புதுடில்லி

கனம் பிரதம மந்திரி அவர்களே,

தமிழ்ப் பகுதிகளில் தொடர்ந்தும் சமாதானம் சீர்குலைந்து வன்முறை தாண்டவமாடுவதாலும், எமது மக்கள் தாங்கொணாத் துன்பத்திற்கு இலக்காகி இன்னல்படுவதாலும் இராணுவ நடவடிக்கைகளைக் கைவிட்டு, சமாதானமும் இயல்பு நிலையும் திரும்பும்

வகையில் சமரச முயற்சிகளை மேற்கொள்ளுமாறு நான் மீண்டும் உங்களை அன்புடன் வேண்டிக் கொள்கிறேன்.

போர்நிறுத்தம் செய்து கொள்ளப்பட்டு, யுத்தம் ஆரம்பமாவதற்கு முந்திய நிலைகளுக்கு இந்திய சமாதானப் படையினர் திரும்புவதே சமாதானத்திற்கும், இயல்புநிலைக்கும் வழிகோலுமென நாம் கருதுகிறோம். தமிழீழ மக்களும் இந்தக் கருத்தையே கொண்டுள்ளனர். சமாதான முயற்சியின் ஆரம்ப நடவடிக்கையாகத் தமிழீழ விடுதலைப் புலிகளுக்கு பொதுமன்னிப்பு வழங்கும்படி இலங்கை அரசைக் கேட்டுக் கொள்ளுமாறு நான் உங்களை வேண்டிக் கொள்கிறேன். அத்துடன் இந்திய சமாதானப் படையினரால் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டிருக்கும் எமது இயக்க உறுப்பினர்களையும், ஆதரவாளர்களையும் விடுதலை செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

விடுதலைப் புலிகளுக்கும் இந்திய அரசுக்கும் மத்தியில் புதுடில்லியில் ஏற்கனவே இணக்கம் காணப்பட்ட உடன்பாட்டின் பிரகாரம், விடுதலைப் புலிகளைப் பெரும்பான்மையாகக் கொண்ட இடைக்கால நிர்வாக அரசு அமையப் பெற்றதும் நாம் எமது ஆயுதங்களை ஒப்படைப்போமென உறுதி தருகிறோம்.

நாம் உங்களுக்கு மீண்டும் மீண்டும் வலியுறுத்திக் கூறியது போல தமிழ் மக்களின் உயிருக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டு, தமிழ் மக்களின் நலன்கள் பேணப்படுமாயின் இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை செயல்படுத்துவதற்கு எமது இயக்கம் ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறது என்பதையும் உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறோம். இந்த ஒப்பந்தம் பரிந்துரைக்கும் மாகாணசபைத் திட்டமானது தமிழ் மக்களின் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யவில்லை என்பதே எமது நிலைப்பாடாகும். ஆகவே, தமிழ் மக்களின் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யும் அதிகாரம் கொண்டதான தமிழ்ப் பிரதேச மாநில ஆட்சியமைப்பை உருவாக்கும் எதிர்காலப்

பேச்சுக்களில் விடுதலைப் புலிகளுக்கு முக்கிய பங்களிக்கப்பட வேண்டும் என்பதையும் நாம் இங்கு வலியுறுத்த விரும்புகிறோம்.

எமது யோசனைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து, சீரிய முறையில் பரிசீலனை செய்து, தமிழீழத்தில் சமாதானம் நிலவவும், எமது மக்களின் துயரைத் துடைக்கவும் போர்நிறுத்தம் செய்து பேச்சுக்களைத் தொடங்க உடன் நடவடிக்கைகளை எடுப்பீர்களென நான் மனதார நம்புகிறேன்.

வே.பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

தலைவர் பிரபாகரனது கடிதங்களுக்கு இந்தியப் பிரதமர் ரஜீவ் காந்தியிடமிருந்து பதில் எதுவம் வரவில்லை. விடுதலைப் புலிகள் இயக்கம் பின்னடைவுகளைச் சந்தித்து, சிதைந்து வருவது காரணமாகவே தலைவர் பிரபாகரன் போர் நிறுத்தமும் சமரச இணக்கப்பாடும் கோரிப் பாரதப் பிரதமருக்கு கடிதங்களை எழுதி வருகிறார் என்ற ஒரு தவறான கண்ணோட்டம் புதுடில்லியில் நிலவியது. இப்படியான ஒரு மதிப்பாய்வையே இந்தியப் புலனாய்வுத் துறையினர் பிரதமரின் தலைமைச் செயலகத்திற்கு வழங்கி வந்தனர். விடுதலைப் புலிகள் இயக்கம் வெகு விரைவில் சிதைந்து அழிந்து போகும் என்பதே அவர்களது கணிப்பீடாக இருந்தது. எனவே, எமது இயக்கம் அமைதியும் இயல்புநிலையும் கோரிச் சமரச இணக்கப்பாட்டிற்கு கோரிக்கை விடுத்தபொழுது எல்லாம் இராணுவ நடவடிக்கைகள் தீவிரமான முறையில் முடுக்கிவிடப்பட்டன. விடுதலைப் புலிகள் இயக்கத்தை அரசியல் ரீதியாக ஒதுக்கி, ஓரம்கட்டி, இராணுவ ரீதியாகப் பூண்டோடு ஒழித்துக் கட்டுவதே இந்திய அரசின் உறுதியான கொள்கையாக இருந்தது. இப்படியான இறுக்கமான, கடும்போக்கான நிலைப்பாட்டைக் கொண்டிருந்ததால், எவ்வித நெகிழ்ச்சிப் போக்கையும் கடைப்பிடிக்க ரஜீவ் அரசு தயாராக இல்லை.

இந்திய அரசுடன் சமாதானப் பேச்சுக்களை நடத்துவதற்கு நாம் தயாராக இருப்பதாக ஒரு தடவை எமது அமைப்பு இந்திய அமைதிப் படைகளின் தளபதி ஜெனரல் தீபேந்தர் சிங்கிற்குத்

தகவல் அனுப்பியது. இத் தகவலை திபேந்தர் சிங் புதுடில்லிக்கு அனுப்பி வைத்தார். ஆயினும் புதுடில்லியிலிருந்து பதில் எதுவும் வரவில்லை. இவ் விடயம் பற்றி அவர் தனது நூலில் கீழ்க்கண்டவாறு எழுதினார்.

> "கவலைக்குரிய விடயம் என்னவென்றால், விடுதலைப் புலிகளிடமிருந்து இப்படியான வேண்டுகோள்கள் வரும்பொழுதெல்லாம் அவர்களது கதை முடிவுக்கு வருகிறது என்றுதான் டில்லியில் கருதப்பட்டது. அதனால் பேசுவதை விடுத்து இராணுவ அழுத்தத்தை மேலும் முறுக்கிவிட வேண்டும் என்பதுதான் நிலைப்பாடாக இருந்தது. கொழும்பிலுள்ள இந்தியத் தூதுவர் ஒரு தடவை டில்லிக்கு அனுப்பி வைத்த அவசரச் செய்தியில் விடுதலைப் புலிகள் இயக்கத்தின் வீழ்ச்சி நெருங்கிக் கொண்டிருப்பதாகத் தெரிவித்தார். இவ்விடயம் குறித்து இந்திய இராணுவ தலைமைச் செயலகத்திற்கு நான் அனுப்பிவைத்த செய்தியில் விடுதலைப் புலிகள் இயக்கம் அப்படியான ஒரு கட்டத்திற்கு வரவில்லை என்பதுதான் யதார்த்த நிலை எனத் தெரிவித்திருந்தேன்."[33]

இலங்கையில் இந்திய அமைதிப் படையின் பங்குபற்றித் தனது நூலில் ஆய்வு செய்திருக்கும் ஜெனரல் திபேந்தர் சிங், டில்லி ஆட்சிப்பீடத்தில் இராணுவ தரப்பின் கருத்துக்கு மதிப்பு அளிக்கப்படவில்லை எனக் கவலை தெரிவித்தார். பிரதம மந்திரி ரஜீவ் காந்திக்கும் இராணுவத் தளகர்த்தா ஜெனரல் சுந்தர்ஜிக்கும் மத்தியில் புரிந்துணர்வும் நல்லுறவும் நிலவவில்லை என்றும் இதனால் இராணுவத் தரப்பிற்கும் அரசியல் உயர் மட்டத்திற்கும் இடையே முரண்பாடு இருந்ததாகவும் திபேந்தர் சிங் எழுதுகிறார்.

1988 ஏப்ரல் மாதம். யாழ்ப்பாணத்தில் இந்திய இராணுவத்தின் தேடி அழிப்பு வேட்டையிலிருந்து தப்பி, பங்களூரில் தலைமறைவாக வாழ்ந்து கொண்டிருந்த வேளையில், தமிழக முதல்வர் கலைஞர் கருணாநிதி அவர்களிடமிருந்து எனக்கு ஒரு அவசரத் தகவல் கிடைத்தது. உடனடியாகத் தன்னை சந்திக்குமாறு கேட்டிருந்தார். அப்பொழுது தமிழ் நாட்டில் தலைமறைவாக இயங்கி வந்த எமது போராளிகள் மூலமாக ஒரு சந்திப்பு ஒழுங்கு செய்யப்பட்டது. சேலத்தில் ஒரு

விடுதியில் நள்ளிரவில் மிகவும் இரகசியமாக நிகழ்ந்த இச் சந்திப்பில் தி.மு.க தலைவருடன், அவரது மருமகன் முரசொலி மாறனும் கூடவே இருந்தார்.

தமிழீழத்தில் போர் நிலைமை படுமோசமாகி வருவதாகவும், விடுதலைப் புலிகளின் தலைமை எந்நேரத்திலும் அழிக்கப்படும் ஆபத்துத் தோன்றியிருப்பதாகவும், இதனால் தனக்கு கவலையும் ஆழ்ந்த வேதனையும் ஏற்பட்டிருப்பதாகவும் கூறித் தனது உரையாடலை ஆரம்பித்தார் கலைஞர் கருணாநிதி. மிகப் பிரமாண்டமான, எதிர்த்து நிற்க முடியாத இந்திய இராணுவத்துடன் மோதி அழிந்து போவதைவிட ஆயுதங்களை ஒப்படைத்துவிட்டுச் சரணடைவது புத்திசாலித்தனம் அல்லவா என்று கேட்டார் கலைஞர். இந்த சந்திப்பின் அந்தரங்க நோக்கம் என்னவென்பது எனக்கு நன்கு புரிந்துவிட்டது.

விடுதலைப் புலிகளின் வீரம் செறிந்த போரியல் மரபில் சரணாகதிக்கு இடமே இல்லை என்று சூடாகக் கலைஞருக்குச் சுட்டிக் காட்டினேன். தலைவர் பிரபாகரனும் அவரது புலிப்படை வீரர்களும் ஒரு உன்னத இலட்சியத்திற்காக உயிரைத் துறக்கவும் தயாராக இருப்பார்களேயன்றி, எந்தச் சூழ்நிலையிலும் சரணடைந்து அவமானத்தை தேடிக் கொள்ளமாட்டார்கள் என்று விளக்கினேன். தமிழீழ சுதந்திரப் போராளிகள் அஞ்சா நெஞ்சம் படைத்த வீரர்கள், இலட்சிய உறுதிகொண்டவர்கள், எத்தகைய துன்பங்களையும் சுமந்து நின்று போராடும் திராணி படைத்தவர்கள். இந்திய இராணுவத்திற்கு எதிராக நீண்டகால, கெரில்லாப் போரை நடத்துவதற்கு அவர்கள் உறுதிபூண்டு நிற்கிறார்கள் என்று கூறினேன். போர்நிறுத்தம் செய்து, பேச்சுக்களை நடத்தி, இந்திய அரசுடன் ஒரு சமரச இணக்கப்பாட்டிற்கு வருவதற்கு எமது விடுதலை இயக்கம் தயாராக இருக்கிறது எனத் தமிழகத் தலைவர்களிடம் தெரிவித்தேன். இந்தியப் பிரதமர் ரஜீவ் காந்தி[34] டில்லியில் தலைவர் பிரபாகரனுக்கு அளித்த வாக்குறுதிக்கு அமைய, வடகிழக்கில் ஒரு இடைக்கால நிர்வாக அரசு நிறுவப்பட்டால் நாம் எமது ஆயுதங்களை ஒப்படைத்து இந்தியாவுடன் ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறோம் என்றும் அவர்களுக்குக் கூறினேன்.

எமது நிலைப்பாட்டை இந்தியப் பிரதமர் ரஜீவ் காந்திக்கு தெரிவிப்பதாக கலைஞர் கருணாநிதியும் முரசொலி மாறனும் எனக்கு உறுதியளித்தார்கள். இந்தச் சந்திப்பால் திருப்பம்

எதுவும் ஏற்படப்போவதில்லை என நினைத்தேன். நான் எண்ணியது சரியாகவே முடிந்தது. சேலத்தில் நிகழ்ந்த இரகசியச் சந்திப்பை அடுத்து முரசொலி மாறன் டில்லிக்கு சென்று பிரதமர் ரஜீவ் காந்தியை சந்தித்தார். போருக்கு ஓய்வு கொடுத்து, இந்தியாவுடன் ஒரு இணக்கப்பாட்டிற்கு வருவதற்கு விடுதலைப் புலிகள் தயாராக இருப்பதாக எமது நிலைப்பாட்டை அவர் இந்தியப் பிரதமருக்கு விளக்கியிருக்கிறார். ஆனால் ரஜீவ் காந்தி தனது கடும் போக்கிலிருந்து சிறிதேனும் தளர்ந்து கொடுக்கவில்லை. விடுதலைப் புலிகளின் தலைமை இந்திய இராணுவத்திடம் மண்டியிடவேண்டும் என்பதே அவரது நிலைப்பாடாக இருந்ததாக, பிறிதொரு தடவை என்னைச் சந்தித்த முரசொலி மாறன் தெரிவித்தார். விடுதலைப் புலிகள் ஆயுதங்களை ஒப்படைத்துவிட்டு சரணடையவேண்டும் அல்லாது போனால் இந்திய இராணுவத்தின் மூர்க்கமான தாக்குதலுக்கு பலியாக வேண்டிவரும் எனக் கடுமையாக எச்சரித்தாராம்.

இப்படியாக, இந்திய அரசுடன் ஒரு சமரச இணக்கப்பாட்டிற்கு வருவதற்கு நாம் எடுத்த முயற்சிகள் அனைத்தும் தோல்வியில் முடிந்தன. இராணுவ ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் எமது அமைப்பை ஒழித்துக் கட்டுவதிலேயே இந்திய அரசு முழுக் கவனத்தையும் செலுத்தியது. ஒருபுறம், இராணுவ நடவடிக்கைகளை தீவிரப்படுத்தி எமக்குக் கடும் நெருக்குவாரத்தைக் கொடுத்த அதேவேளை, அரசியல் விவகாரங்களில் இருந்து விடுதலைப் புலிகள் அமைப்பை ஓரம்கட்டி, ஒதுக்கி வைப்பதற்கும் முயற்சிகள் எடுக்கப்பட்டன. விடுதலைப் புலிகளுக்கு விரோதமான அரசியல் குழுக்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து, அவற்றை அரசியல் அரங்கில் மேடையேற்றவும் இந்தியா முனைந்தது. இந்தத் தந்திரோபாயத்தின்படி, தமிழீழ மக்களால் வெறுத்து ஒதுக்கப்பட்ட மாக்சீய அமைப்பான ஈழ மக்கள் புரட்சிகர விடுதலை முன்னணியை (ஈ.பி.ஆர்.எல்.எவ்) பேணி, வளர்த்து, முக்கியத்துவம் அளிப்பதென டில்லி ஆட்சியாளர் முடிவெடுத்தனர்.

மாகாண சபை என்ற பெயரில், வடகிழக்கில் ஒரு அதிகார வலுவற்ற பொம்மை ஆட்சியை அமைத்து, அதன் நிர்வாக ஆசனத்தில் ஈ.பீ.ஆர்.எல்.எவ் குழுவினரை அமர்த்தும் இந்தியாவின் திட்டத்திற்கு முழு ஆதரவும் நல்க அரச அதிபர் ஜெயவர்த்தனா இணக்கம் தெரிவித்தார். இந்திய - இலங்கை

ஒப்பந்தத்தில் பரிந்துரைக்கப்பட்ட யோசனைகளுக்கு அரசியல் யாப்பு வடிவம் கொடுக்கும் நோக்கத்துடன் 13ஆவது அரசியலமைப்புத் திருத்தம், மாகாண சபை மசோதா என்ற இரு சட்டப் பிரேரணைகள் அவசர அவசரமாக பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டன. ஈ.பி.ஆர்.எல்.எவ், மற்றும் சில ஆயுதக் குழுக்களின் அங்கத்தவர்களைக் கொண்ட Citizens Volunteer Force எனப்படும் ஒரு இராணுவக் கட்டமைப்பும் உருவாக்கப்பட்டது. இந்தியாவின் நிதியில் உருவாக்கப்பட்ட இப் படையணி 'தமிழ்த் தேசிய இராணுவம்' என்ற பெயரையும் கொண்டிருந்தது. பாடசாலைகளிலும், வீதிகளிலும், வீடுகளிலுமாக வலுவந்தமாகப் பிடித்துச் செல்லப்பட்ட இளைஞர்களுக்கு, தமிழ்த் தேசிய இராணுவம் என்ற பெயரில் இந்திய அமைதி காக்கும் படைகள் பயிற்சியை வழங்கின.

1988 நவம்பர் மாதம் வடகிழக்கு மாகாண சபைகளுக்கான தேர்தல் நடைபெற்றது. இந்தியப் படைகளால் ஒழுங்கு செய்யப்பட்டு, அவர்களது 'கண்காணிப்புடன்' ஏமாற்று மோசடியாக நடைபெற்ற இத் தேர்தலில் ஈ.பி.ஆர்.எல்.எவ் குழுவினர் பெரும்பான்மை ஆசனங்களைப் பெற்றுக் கொண்டனர். இக் குழுவின் தலைவர்களில் ஒருவரான வரதராஜப் பெருமாள் முதலமைச்சராகத் தெரிவு செய்யப்பட்டார்.

வடகிழக்கு மாகாண சபை நிர்வாகச் செயலகத்தைத் திருகோணமலையில் நிறுவிச் செயற்படுவதற்கு ஈ.பி.ஆர்.எல்.எவ் தலைமை விரும்பியது. திருகோணமலையைத் தலைநகராகக் கொண்டு தமிழரின் மாகாண நிர்வாகம் செயற்படுவதை ஜெயவர்த்தனாவும் அவரது இனவாத அமைச்சர்களும் அறவே விரும்பவில்லை. இப்படியான முரண்பாடு காரணமாக, வடகிழக்கு மாகாண நிர்வாகம் செயற்பட முடியாத சிக்கலுக்குள் சிக்கியது. ஜெயவர்த்தனா தனது வழமையான அரசியல் ஏமாற்று வித்தையைக் காண்பிக்க ஆரம்பித்தார். திருகோணமலை நகரில் மாகாண நிர்வாகத்திற்கான செயலக கட்டிடம் எதனையும் வழங்க மறுத்த அரசு, குறைந்த பட்ச நிர்வாக அதிகாரங்களைக் கொடுப்பதிலும் இழுத்தடிப்புச் செய்தது. அரசியல் அதிகாரமின்றி, நிதியின்றி, நிர்வாக செயலக வசதிகளின்றி ஒரு சூன்யத்திற்குள் தள்ளப்பட்ட வரதராஜப் பெருமாள் கொழும்புக்கும் திருகோணமலைக்கும் மாறி மாறிக் காவடி எடுத்தும் பலனெதுவும் கிடைக்கவில்லை. தமிழ் மாநிலத்திற்கு அதிகாரப் பரவலாக்கம் செய்ய ஜெயவர்த்தனா தயாராக இல்லை. இந்தியப்

பிரதமர் ரஜீவ் காந்தியோ, இந்தியத் தூதுவர் டிக்சிட்டோ அல்லது இந்திய அமைதிப் படைத் தளபதிகளோ எவராலும் ஜெயவர்த்தனாவின் விட்டுக் கொடா கடும்போக்கை நெகிழ்த்த முடியவில்லை.

வடகிழக்கு மாகாண நிர்வாகம் செயலிழந்து செத்துப் போனது. இதன் விளைவாக மிக நீண்டதும் சிக்கலானதுமான இந்தியாவின் மத்தியஸ்துவ இராஜதந்திர முயற்சி பாதை தெரியாது தடுமாறி முட்டுச் சந்துக்குள் முடங்கியது. இந்திய அரசின் அடிவருடியாகச் செயற்பட்ட ஈழ மக்கள் புரட்சிகர விடுதலை முன்னணி அரசியல் பாலைவனத்தில் அந்நியப்பட்டது. ஜெயவர்த்தனாவின் சூழ்ச்சிகர அரசியல் தந்திரத்தால் ரஜீவ் காந்தி ஏமாற்றப்பட்டார். இந்தியப் பிரதமரை தவறான பாதையில் வழிநடத்திச் சென்று ஏமாற்றியது மட்டுமன்றி, தமிழரின் சுதந்திர இயக்கத்திற்கு எதிராக இந்திய இராணுவத்தை மோதவிட்டுத் தமிழரின் உரிமைப் போராட்டத்தை பெரும் பின்னடைவுக்குள் தள்ளிவிட்டார் ஜெயவர்த்தனா. இப்படியாக இந்தியாவையும் ஈழத் தமிழரையும் ஏமாற்றி, இனப் பிரச்சினைக்குத் தீர்வு காணாது இழுத்தடித்து, தமிழர் தாயகத்தில் ஒரு கொடிய யுத்தச் சூழ்நிலையையும் சிங்கள தேசத்தில் இளைஞரின் புரட்சிகரக் கிளர்ச்சியையும் தோற்றுவித்து, இலங்கைத் தீவை ஒரு பாரிய நெருக்கடிக்குள் தள்ளிவிட்டு 1988 இறுதியில், அரச அதிபர் ஜெயவர்த்தனா அரசியலிலிருந்து ஓய்வு பெற்றார்.

1988 டிசம்பர் மாதம் புதிய ஜனாதிபதியாக திரு. ரணசிங்க பிரேமதாசா ஆட்சி பீடம் ஏறினார். இந்திய - இலங்கை உறவில் அடிப்படையான மாற்றத்தை ஏற்படுத்தும் புதிய வெளியுறவுக் கொள்கையை முன்னெடுக்க பிரேமதாசாவின் ஆட்சிபீடம் முடிவெடுத்தது. தென்னிலங்கையில் ஜே.வி.பி அமைப்பின் ஆயுதக் கிளர்ச்சியையும் வடகிழக்கில் விடுதலைப் புலிகள் முன்னெடுத்த கொரில்லாப் போரையும் எதிர்கொண்ட பிரேமதாசாவின் ஆட்சிபீடம் ஒரு புதிய அணுகுமுறையைக் கடைப்பிடிக்க விரும்பியது. அதாவது, புதிய இளம் பரம்பரையின் அபிலாசைகளைப் பிரதிபலித்து நின்ற தமிழ், சிங்கள புரட்சிகர இயக்கங்களின் தலைமைகளுடன் சமரசப் பேச்சுக்களை நடத்தி இணக்கப்பாடு காண முயற்சித்தது. புதிய அரச அதிபரின் சமரச அணுகுமுறையை நாம் சாதகமாகப் பரிசீலனை செய்தோம்.

ஜனாதிபதி பிரேமதாசா ஒரு வித்தியாசமான மனிதர். அடிப்படையில், அவர் ஒரு சிங்களத் தேசியவாதி. இலங்கை மீது

அந்நிய ஆதிக்கத்தை வெறுப்பவர். குறிப்பாக, இந்திய வல்லாதிக்கத் தலையீட்டை அவர் அறவே விரும்பவில்லை. இந்திய-இலங்கை ஒப்பந்தத்தை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. இலங்கையின் இறையாண்மைக்கு அது தீங்கு விளைவிப்பதாகவே பிரேமதாசா கருதினார். அமைதி காக்கும் படைகள் என்ற போர்வையில் இந்திய இராணுவம் இலங்கையின் ஒரு பகுதியை ஆக்கிரமித்து நிற்கிறது என்பதே அவரது நிலைப்பாடு. இந்திய இராணுவத் தலையீட்டின் எதிர் விளைவாகவே வடகிழக்கிலும், தென்னிலங்கையிலும் வன்முறை தாண்டவமாடுகிறது எனக் கருதிய அவர், இந்தியப் படைகளை இலங்கையிலிருந்து வெளியேற்ற விரும்பினார். இவ் விடயம் தொடர்பாகவே அவர் ஜே.வி.பி கிளர்ச்சிக்காரருடனும் விடுதலைப் புலிகளுடனும் பேச்சுக்களை நடத்த விரும்பினார்.

இந்திய இராணுவத்தை தமிழர் தாயகத்திலிருந்து வெளியேற்ற வேண்டும் என்பதில் எமது விடுதலை அமைப்புக்கும் பிரேமதாசா ஆட்சிப்பீடத்திற்கும் கொள்கையளவில் ஒருமைப்பாடு நிலவியதால் பிரேமதாசா அரசாங்கத்துடன் பேச்சுக்களை நடத்துவதற்கு நாம் இணங்கினோம். எமது விடுதலை அமைப்பின் இந்த முடிவானது இந்திய அயலுறவு இராஜதந்திரத்திற்கு விழுந்த பலத்த அடியாகும். விடுதலைப் புலிகளை அரசியல் ரீதியாக ஓரம்கட்டி ஒதுக்கி, ராணுவ ரீதியாக அவர்களை துவம்சம் செய்து, தனது அடிவருடிகளை அதிகாரத்தில் அமர்த்தும் இந்தியாவின் கொள்கை படுதோல்வியைச் சந்தித்தது. கொழும்பு நகரில் பேச்சுக்கள் தொடங்கியபொழுது, தமிழீழ மக்களின் அரசியல் நலன்களையும் அபிலாசைகளையும் பிரதிநிதப்படுத்தும் பலம்பொருந்திய தேசிய. இயக்கமாக விடுதலைப் புலிகள் இயக்கம் தலைதூக்கியது. விடுதலைப் புலிகளை அரசியல் விவகாரத்திலிருந்து ஒதுக்கி, தமிழ் மக்களிடமிருந்து அந்நியப்படுத்துவது என்ற இந்தியாவின் கொள்கை படுதோல்வி அடைந்தது என்பதை திரு. டிக்சிட், '**கொழும்பில் எனது பணி**' என்ற நூலில் ஒப்புக் கொள்கிறார். இவ் விடயம் பற்றி அவர் கீழ்க் கண்டவாறு எழுதுகிறார்.

> "பேச்சுக்கள் வாயிலாகப் பெறக்கூடிய ஒரு தீர்வுத் திட்டத்தில் விடுதலைப் புலிகள் பங்குகொள்ளப் போவதில்லை என நான் நம்பினேன். அதனால் விடுதலைப் புலிகளை ஒதுக்கி, ஓரம்கட்டிவிட்டு ஏனைய குழுக்களுடன் இந்தியா உறவை வைத்துக் கொள்ள

பிரதமர் ரஜீவ் காந்தியோ, இந்தியத் தூதுவர் டிக்சிட்டோ அல்லது இந்திய அமைதிப் படைத் தளபதிகளோ எவராலும் ஜெயவர்த்தனாவின் விட்டுக் கொடா கடும்போக்கை நெகிழ்த்த முடியவில்லை.

வடகிழக்கு மாகாண நிர்வாகம் செயலிழந்து செத்துப் போனது. இதன் விளைவாக மிக நீண்டதும் சிக்கலானதுமான இந்தியாவின் மத்தியஸ்துவ இராஜதந்திர முயற்சி பாதை தெரியாது தடுமாறி முட்டுச் சந்துக்குள் முடங்கியது. இந்திய அரசின் அடிவருடியாகச் செயற்பட்ட ஈழ மக்கள் புரட்சிகர விடுதலை முன்னணி அரசியல் பாலைவனத்தில் அந்நியப்பட்டது. ஜெயவர்த்தனாவின் சூழ்ச்சிகர அரசியல் தந்திரத்தால் ரஜீவ் காந்தி ஏமாற்றப்பட்டார். இந்தியப் பிரதமரை தவறான பாதையில் வழிநடத்திச் சென்று ஏமாற்றியது மட்டுமன்றி, தமிழரின் சுதந்திர இயக்கத்திற்கு எதிராக இந்திய இராணுவத்தை மோதவிட்டுத் தமிழரின் உரிமைப் போராட்டத்தை பெரும் பின்னடைவுக்குள் தள்ளிவிட்டார் ஜெயவர்த்தனா. இப்படியாக இந்தியாவையும் ஈழத் தமிழரையும் ஏமாற்றி, இனப் பிரச்சினைக்குத் தீர்வு காணாது இழுத்தடித்து, தமிழர் தாயகத்தில் ஒரு கொடிய யுத்தச் சூழ்நிலையையும் சிங்கள தேசத்தில் இளைஞரின் புரட்சிகரக் கிளர்ச்சியையும் தோற்றுவித்து, இலங்கைத் தீவை ஒரு பாரிய நெருக்கடிக்குள் தள்ளிவிட்டு 1988 இறுதியில், அரச அதிபர் ஜெயவர்த்தனா அரசியலிலிருந்து ஓய்வு பெற்றார்.

1988 டிசம்பர் மாதம் புதிய ஜனாதிபதியாக திரு. ரணசிங்க பிரேமதாசா ஆட்சி பீடம் ஏறினார். இந்திய - இலங்கை உறவில் அடிப்படையான மாற்றத்தை ஏற்படுத்தும் புதிய வெளியுறவுக் கொள்கையை முன்னெடுக்க பிரேமதாசாவின் ஆட்சிபீடம் முடிவெடுத்தது. தென்னிலங்கையில் ஜே.வி.பி அமைப்பின் ஆயுதக் கிளர்ச்சியையும் வடகிழக்கில் விடுதலைப் புலிகள் முன்னெடுத்த கொரில்லாப் போரையும் எதிர்கொண்ட பிரேமதாசாவின் ஆட்சிபீடம் ஒரு புதிய அணுகுமுறையைக் கடைப்பிடிக்க விரும்பியது. அதாவது, புதிய இளம் பரம்பரையின் அபிலாசைகளைப் பிரதிபலித்து நின்ற தமிழ், சிங்கள புரட்சிகர இயக்கங்களின் தலைமைகளுடன் சமரசப் பேச்சுக்களை நடத்தி இணக்கப்பாடு காண முயற்சித்தது. புதிய அரச அதிபரின் சமரச அணுகுமுறையை நாம் சாதகமாகப் பரிசீலனை செய்தோம்.

ஜனாதிபதி பிரேமதாசா ஒரு வித்தியாசமான மனிதர். அடிப்படையில், அவர் ஒரு சிங்களத் தேசியவாதி. இலங்கை மீது

அந்நிய ஆதிக்கத்தை வெறுப்பவர். குறிப்பாக, இந்திய வல்லாதிக்கத் தலையீட்டை அவர் அறவே விரும்பவில்லை. இந்திய-இலங்கை ஒப்பந்தத்தை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. இலங்கையின் இறையாண்மைக்கு அது தீங்கு விளைவிப்பதாகவே பிரேமதாசா கருதினார். அமைதி காக்கும் படைகள் என்ற போர்வையில் இந்திய இராணுவம் இலங்கையின் ஒரு பகுதியை ஆக்கிரமித்து நிற்கிறது என்பதே அவரது நிலைப்பாடு. இந்திய இராணுவத் தலையீட்டின் எதிர் விளைவாகவே வடகிழக்கிலும், தென்னிலங்கையிலும் வன்முறை தாண்டவமாடுகிறது எனக் கருதிய அவர், இந்தியப் படைகளை இலங்கையிலிருந்து வெளியேற்ற விரும்பினார். இவ் விடயம் தொடர்பாகவே அவர் ஜே.வி.பி கிளர்ச்சிக்காரருடனும் விடுதலைப் புலிகளுடனும் பேச்சுக்களை நடத்த விரும்பினார்.

இந்திய இராணுவத்தை தமிழர் தாயகத்திலிருந்து வெளியேற்ற வேண்டும் என்பதில் எமது விடுதலை அமைப்புக்கும் பிரேமதாசா ஆட்சிப்பீடத்திற்கும் கொள்கையளவில் ஒருமைப்பாடு நிலவியதால் பிரேமதாசா அரசாங்கத்துடன் பேச்சுக்களை நடத்துவதற்கு நாம் இணங்கினோம். எமது விடுதலை அமைப்பின் இந்த முடிவானது இந்திய அயலுறவு இராஜதந்திரத்திற்கு விழுந்த பலத்த அடியாகும். விடுதலைப் புலிகளை அரசியல் ரீதியாக ஓரம்கட்டி ஒதுக்கி, ராணுவ ரீதியாக அவர்களை துவம்சம் செய்து, தனது அடிவருடிகளை அதிகாரத்தில் அமர்த்தும் இந்தியாவின் கொள்கை படுதோல்வியைச் சந்தித்தது. கொழும்பு நகரில் பேச்சுக்கள் தொடங்கியபொழுது, தமிழீழ மக்களின் அரசியல் நலன்களையும் அபிலாசைகளையும் பிரதிநிதப்படுத்தும் பலம்பொருந்திய தேசிய இயக்கமாக விடுதலைப் புலிகள் இயக்கம் தலைதூக்கியது. விடுதலைப் புலிகளை அரசியல் விவகாரத்திலிருந்து ஒதுக்கி, தமிழ் மக்களிடமிருந்து அந்நியப்படுத்துவது என்ற இந்தியாவின் கொள்கை படுதோல்வி அடைந்தது என்பதை திரு. டிக்சிட், **'கொழும்பில் எனது பணி'** என்ற நூலில் ஒப்புக் கொள்கிறார். இவ் விடயம் பற்றி அவர் கீழ்க் கண்டவாறு எழுதுகிறார்.

> "பேச்சுக்கள் வாயிலாகப் பெறக்கூடிய ஒரு தீர்வுத் திட்டத்தில் விடுதலைப் புலிகள் பங்குகொள்ளப் போவதில்லை என நான் நம்பினேன். அதனால் விடுதலைப் புலிகளை ஒதுக்கி, ஓரம்கட்டிவிட்டு ஏனைய குழுக்களுடன் இந்தியா உறவை வைத்துக் கொள்ள

விழுந்தார். ரஜீவ் காந்தியின் நிர்வாகப் பீடத்துடன் ஒரு வித்தியாசமான இராஜதந்திர அணுகுமுறையைக் கையாண்டார் ஜெயவர்த்தனா. ரஜீவ் அரசுடன் தனது சுயரூபத்தை வெளிக்காட்டி, முரண்பட்டு மோதுவதை அவர் தவிர்த்துக் கொண்டார். தமிழரின் இனப் பிரச்சினையைத் தீர்ப்பதிலும், இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை செயற்படுத்துவதிலும் தனக்கு உண்மையான, நேர்மையான அக்கறையும் உறுதிப்பாடும் உண்டு என நயவஞ்சகமாக நடித்து இந்தியத் தலைவர்களை நம்ப வைத்தார் ஜெயவர்த்தனா. இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை உருவாக்கம் செய்வதிலும் மற்றும் முக்கிய விவகாரங்களிலும் ஜெயவர்த்தனாவுடன் நெருங்கிப் பழகி உறவாடிய திரு. டிக்சிட், அவரைப் பற்றி குறிப்பிடுகையில், "இந்திய அரசாங்கத்தின் உதவியோடு தமிழருடன் ஒரு நியாயமான இணக்கப்பாடு காண்பதில் ஜெயவர்த்தனாவிடம் நேர்மையும் அரசியல் உறுதிப்பாடும் இருக்கிறது என நான் மிகையாக மதிப்பீடு செய்துள்ளேன்."[36] என்கிறார். தமிழரின் இனப் பிரச்சினைக்கு தீர்வு காணும் விடயத்தில் ஜெயவர்த்தனா மீது மிகையாக நம்பிக்கை வைத்து இந்திய அரசு செயற்பட்ட பொழுதும், ஜெயவர்த்தனா பொறுத்த கட்டத்தில் தனது ஏமாற்று வித்தையைக் காண்பிக்கத் தவறவில்லை. வடகிழக்கு மாகாண சபைக்கு அரசியல் அதிகாரம் வழங்க மறுத்து, இந்திய - இலங்கை ஒப்பந்தக் கடப்பாடுகளை அப்பட்டமாக மீறினார் அவர். ஜெயவர்த்தனாவின் இந்த நம்பிக்கைத் துரோகத்தினால் இந்திய இராஜதந்திரம் மாபெரும் பின்னடைவைச் சந்தித்தது.

தமிழரின் இனப் பிரச்சினையை செம்மையாகக் கையாளத் தவறியதும் இலங்கையில் இந்தியத் தலையீட்டின் தோல்விக்கு ஒரு முக்கிய காரணமாகும். தமிழர் பிரச்சினையைப் பொறுத்தவரை இந்திய அரசு விடுதலைப் புலிகள் இயக்கத்தையும், அதன் தலைவர் பிரபாகரனையும் சரிவர எடைபோடத் தவறியது. எத்தகைய துன்பங்கள், இடர்பாடுகள் மத்தியிலும் தனது மக்களின் அரசியல் இலட்சியத்தை முன்னெடுத்துச் செல்லும் அபாரமான துணிச்சலும் உறுதிப்பாடும் பிரபாகரனுக்கு உண்டென்பதை இந்திய அரசியல் தலைமை உணர்ந்து கொள்ளவில்லை. பிரபாகரனின் அபூர்வமான ஆளுமையை இந்தியா மிகக் குறைவாக மதிப்பீடு செய்திருந்தது. இத் தவறான மதிப்பீடு காரணமாகவே தமிழ் நாட்டில் அவர் வாழ்ந்தபோது அவர் மீது அழுத்தங்களைப் பிரயோகித்துக்

கெடுபிடிகளைச் செய்தது. தமிழீழத்திலும் அவரைக் கொன்றொழிக்கப் பகீரத முயற்சிகளை எடுத்தது. ஆயினும் இந்த சவால்களுக்கும் நெருக்கடிகளுக்கும் முகம்கொடுத்து வெற்றி கண்டார் பிரபாகரன். இந்திய - இலங்கை ஒப்பந்த காலத்தில் பிரபாகரனை மிகவும் கண்டித்து மதிப்பாய்வு செய்த இந்திய தூதுவர் டிக்சிட், பின்னர் பிரபாகரனின் இலட்சிய உறுதிப்பாட்டை பாராட்டத் தவறவில்லை. புலிகளின் தலைவர் பற்றி திரு.டிக்சிட் கீழ்க் கண்டவாறு எழுதுகிறார்:

> "கொழும்பில் நான் பணியாற்றிய நான்கு ஆண்டு காலத்தில் தமிழ்த் தீவிரவாதக் குழுக்களின் தலைவர்கள் அனைவரையும் நான் சந்தித்திருக்கிறேன். இயல்பாகவே இவர்கள் அனைவரையும் விட பிரபாகரன் மேன்மையானவராக, வித்தியாசமானவராகவே தென்பட்டார். இந்த இளைஞர் மீது நான் குறைபாடுகள் கண்டு தப்பபிப்பிராயம் கொண்டு இருந்தபோதும், இவரது ஆழமான இலட்சியப் பற்றையும் அரசியல், இராணுவத் திறனாற்றல்களையும் நான் ஏற்றுக் கொள்ள வேண்டும். இவர், நிறைவான அரசியல் சாணக்கியமும், போரியல் மதிநுட்பமும் படைத்தவர் என்பதை பல்லாண்டு காலமான நிகழ்வுகள் நிரூபித்துக் காட்டுகின்றன. நீடித்து நின்று, உறுதி தளராது போராடும் ஆற்றல் இவரது சிறப்பான பண்பியல்புகளுக்கு மேலும் வலுச் சேர்க்கின்றது. இந்திய அமைதிப் படைகளின் போருக்குத் தாக்குப் பிடித்து தொடர்ந்தும் போராட்டத்தை முன்னெடுத்து வருவதனால் இவர் மக்களின் வீர நாயகனாக மதிப்பைப் பெற்றார்."[37]

இந்திய - இலங்கை ஒப்பந்தம் கைச்சாத்தாகி பத்து ஆண்டுகளுக்குப் பின்னர், இலங்கையில் இந்தியத் தலையீடு பற்றி எழுதிய வரலாற்று ஆய்வு நூலில், ஜெயவர்த்தனாவைத் தான் மிகைப்படுத்தி மதிப்பீடு செய்துள்ளதை ஒப்புக் கொள்கிறார் டிக்சிட். ஜெயவர்த்தனா மீது அபார நம்பிக்கை வைத்திருந்த இந்தியத் தலைவர்கள் பிரபாகரனை மிகவும் குறைவாகவே மதிப்பிட்டனர். இது பற்றி திரு. டிக்சிட் தனது நூலில் எழுதும் பொழுது, "தமிழீழ இலட்சியத்தில் பிரபாகரனிடமிருந்த தணியாத வேட்கை, தீராத வெறி, அவரது போர்த் தந்திரோபாய மதிநுட்பம்,

பேரிடர்களைத் தாங்கும் அவரது மனவுறுதி ஆகியன பற்றிக் குறைவாக மதிப்பீடு செய்தமையே இந்தியா செய்த மாபெரும் தப்புக்கணக்காகும்"[38] எனக் குறிப்பிட்டார்.

தனது புவியியல்-கேந்திர நலன்களைப் பேணிப் பாதுகாக்கும் நோக்கில் இந்திய அரசு, தமிழரின் தேசிய சுதந்திரப் போராட்டத்தைத் தவறான முறையில் கையாண்டது. இது ஈழத் தமிழினத்திற்கு இழைக்கப்பட்ட மாபெரும் வரலாற்றுத் தவறாகும்.

ஒரு குறிப்பிட்ட வரலாற்றுக் காலகட்டத்தில் தனது தேசிய பாதுகாப்புக்கும், புவியியல் நலன்களுக்கும் அச்சுறுத்தல் ஏற்பட்டதாக இந்தியா கருதியது. தனது நலன்களுக்கு விரோதமான அந்நியச் சக்திகள் இலங்கையில் ஊடுருவல் செய்திருப்பதால் தனது பாதுகாப்புச் சூழலுக்குப் பங்கம் ஏற்படலாமென இந்தியா அஞ்சியது. இலங்கையைத் தனது ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்து, அங்கு ஊடுருவி நின்ற அந்நியச் சக்திகளை வெளியேற்றி, தனது தேசியப் பாதுகாப்பை உறுதிப்படுத்தும் நோக்குடனேயே இந்தியா இலங்கையில் தலையிட்டது. இனக் கொலைப் பரிமாணத்தில் மோசமடைந்த தமிழரின் இனப் பிரச்சினை இந்தியத் தலையீட்டுக்கு வழி சமைத்துக் கொடுத்தது. உலகத்தின் மனச் சாட்சியை உறுத்திய ஈழத் தமிழரின் அவல நிலை இந்தியத் தலையீட்டுக்கான தார்மீக நியாயப்பாடாகவும் அமைந்தது. தமிழரின் பிரச்சினையை முதன்மைப்படுத்தி, இலங்கை விவகாரத்தில் குறுக்கீடு செய்த இந்தியா, தமிழரின் உரிமைப் போராட்டத்தை பயன்படுத்தித் தனது தந்திரோபாய நோக்கை அடைந்தது. இந்திய - இலங்கை ஒப்பந்தம் இந்தியத் தேசிய, புவியியல் நலன்களைப் பேணுவதாக அமைந்தது. ஆனால் இந்த ஒப்பந்தம் தமிழரின் இனப் பிரச்சினைக்குத் தீர்வாக அமையவில்லை. மாறாக, அது தீங்கு விளைவிப்பதாக அமைந்தது. இந்திய - இலங்கை ஒப்பந்தமானது இலங்கையின் ஐக்கியத்திற்கும் பிரதேச ஒருமைப்பாட்டிற்கும் முன்னுரிமை கொடுப்பதுடன் அவற்றிற்கு பாதுகாப்பு உத்தரவாதமும் அளிக்கிறது. இந்த ஒப்பந்தம் சிறீலங்காவின் இறுக்கமான, நெகிழ்வற்ற ஒற்றையாட்சி அரசியலமைப்புக்கு மேலும் வலுச்சேர்ப்பதாக அமைகிறது. இதனால் தமிழீழ மக்கள் தமது வரலாற்றுத் தாயகத்தில் முழுமையான அதிகாரமுடைய சுயாட்சி அரசை நிறுவக்கூடிய இடைவெளியையும் இது மூடிவிட்டது.

நீதி வேண்டி, அரசியல் உரிமைகள் வேண்டி, அடிப்படை மனித சுதந்திரங்கள் வேண்டி, இரத்தம் சிந்தி நிகழ்த்தப்பட்ட தமிழரின் தேசியப் போராட்டத்தினது ஆழமான அறநெறிப் பண்பியல்புகளை இந்தியத் தலையீடு முற்றாகப் புறக்கணித்தது. ஒடுக்கப்பட்ட ஒரு மக்கள் இனத்தின் உணர்வலைகளை, தணியாத தீயாகச் சுடர்விடும் அம் மக்களின் சுதந்திர வேட்கையை இந்தியா அலட்சியம் செய்தது. மனிதாபிமானக் குறிக்கோளுடன் எமது பிரச்சினையில் தலையிட்டதாகக் கூறிய பாரத தேசம், எமது மக்களுக்கு நியாயமும் நீதியும் வழங்க வேண்டிய தார்மீக கடப்பாட்டிலிருந்து வழுவியது.

இலங்கையில் இந்தியத் தலையீட்டின் அத்தியாயம் முடிவுற்று பதினைந்து ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. ஆயினும் தமிழீழ மக்களின் தேசியப் போராட்டம் தொடர்கிறது. புதிய நெருக்கடிகளையும், புதிய சவால்களையும், புதிய திருப்பங்களையும் சந்தித்தவாறு தமிழரின் விடுதலைப் போராட்டம் தொடர்கிறது.

(இந்தியத் தலையீட்டின் இறுதிக் கட்டங்களில் தமிழ்த் தாயக மண்ணிலிருந்து இந்தியப் படைகளை வெளியேற்றும் விடுதலைப் புலிகளின் இராஜதந்திர முயற்சியாக ஜனாதிபதி பிரேமதாசாவின் ஆட்சிப் பீடத்துடன் நாம் பேச்சுக்களை நடத்தினோம். இந்தப் பேச்சுக்களின் முழு விபரமும் எனது மனைவி அடேல் பாலசிங்கம் எழுதிய '**சுதந்திர வேட்கை**' என்னும் நூலில் '***பிரேமதாசா - விடுதலைப் புலிகள் பேச்சு***' என்ற அத்தியாயத்தில் தரப்படுகிறது. இந்தியத் தலையீட்டு வரலாற்றின் ஒரு முக்கிய கட்டத்தை இப்பேச்சுக்கள் குறிப்பதாலும் வரலாற்று மாணவரின் ஆர்வத்தைத் திருப்திப்படுத்தும் நோக்கிலும், அடேல் பாலசிங்கத்தின் அனுமதியுடன் அவரது நூலில் தரப்பட்ட அத்தியாயத்தை இங்கு மறுபிரசுரம் செய்கிறோம்.)



இளம் கெரில்லாப் போராளியாக தலைவர் பிரபாகரன்.



லெப்டினனட் சத்தியநாதன்
(சங்கர்)



லெப்டினனட் சாள்ஸ் அன்ரனி
(சீலன்)



லெப்டினனட் செல்வநாயகம்
( செல்லக்கிளி)



கப்டன் ரவீந்திரன்
(பண்டிதர்)



1986 தொடக்கத்தில், சென்னை, இந்திரா நகரில் இயங்கிய விடுதலைப் புலிகளின் அரசியல் செயலகத்தில் சந்திரிக்காவும் அவரது கணவரும் புலிகளின் பிரதிநிதிகளைச் சந்தித்தனர். இடமிருந்து வலமாக, ஒஸ்சி அபயசேகர, சந்திரிகா, திரு குமாரதுங்க, லோரன்ஸ் திலகர், நடேசன், நான்.



1987 ஜூலை 28ஆம் நாள், புதுடில்லியில் முன்னாள் இந்திய பிரதமர் ரஜீவ் காந்தியுடன் நிகழ்ந்த சந்திப்பு.
இடமிருந்து வலமாக, திரு காந்தி, திரு பண்டுருட்டி இராமச்சந்திரன், நான், தலைவர் பிரபாகரன்.



1989 கொழும்பில் ஜனாதிபதி பிரேமதாசாவுடன் நிகழ்ந்த சந்திப்பு.
இடமிருந்து வலமாக, திலகர், திருமதி அடேல் பாலசிங்கம், நான், திரு பிரேமதாசா, யோகரத்தினம் யோகி, பரமமூர்த்தி, லோரன்ஸ், சஜித் பிரேமதாசா.



முதுபெரும் தளபதி கேணல் கிட்டு (கிருஷ்ணகுமார்)



1994 அக்டோபர் 13ஆம் நாள், யாழ்ப்பாண பல்கலைக் கழக வளாகத்தில், நானும் தமிழ்ச்செல்வனும் சிறீலங்கா அரச பிரதிநிதிகளை வரவேற்றபோது எடுத் படம். இடமிருந்து வலமாக திரு.லயனல் பெர்னாண்டோ, திரு.ஆசீர்வாதம், திரு.பலப்பெத்தபெண்டி, திரு.என்.எல்.குணரெத்தினா.



1994 அக்டோபரில், யாழ்ப்பாணம் சுண்டுக்குளியிலிருந்த விடுதலைப் புலிகளின் அரசியல் செயலகத்தில் அரச–புலிகள் பிரதிநிதிகள் மத்தியில் நிகழ்ந்த பேச்சுக்களின் போது எடுத்த படம்.



1998, அக்டோபர் 29 ஆம் நாள், மாலதி படையணியின் சிறப்புத் தளபதியான கேணல் விதுசா, கிளிநொச்சியில் தமிழீழத் தேசியக் கொடியை ஏற்றிவைக்கிறார்.




2000, ஏப்ரல் 23 ஆம் நாள், காலை 9 மணியளவில்
ஆனையிறவுச் சமரின் ஒருங்கிணைப்பு கட்டளைத் தளபதி
கேணல் பானு, ஆனையிறவில் தமிழீழத் தேசியக் கொடியை
ஏற்றிவைத்தபொழுது எடுத்தபடம்.



2000, அக்டோபர் 31ஆம் நாள், வன்னி, மல்லாவியிலுள்ள விடுதலைப் புலிகளின் அரசியல் செயலகத்தில், நோர்வே அரசின் விசேட சமாதானத் தூதுவர் திரு.எரிக் சுல்கைம் அவர்களை தலைவர் பிரபாகரன் சந்தித்த போது எடுத்த படம். வீரச் சாவடைந்த கேணல் சங்கர் வலதுபுறம் காட்சிதருகிறார்.



2002, பெப்ரவரி 22ஆம் நாள், போர்நிறுத்த உடன்பாட்டில் தலைவர் பிரபாகரன் கைச்சாத்திடுகிறார்.




2002, மார்ச் 25ஆம் நாள், கடல் விமானம் மூலமாக நானும் எனது மனைவி அடேலும் கிளிநொச்சியிலுள்ள இரணைமடுக்குளத்தில் வந்திறங்கியபொது எடுத்த படம். கடற்புலிகளின் விசேட தளபதி சூசையும், அரசியல் துறைப்பொறுப்பாளர் திரு.தமிழ்ச்செல்வனும் எம்மை அழைத்துச் செல்ல படகில் வந்துகொண்டிருக்கிறார்கள்.



2002, ஏப்ரல் 10ஆம் நாள், கிளிநொச்சியில் தலைவர் பிரபாகரன் பங்குகொண்ட சர்வதேச ஊடகவியலாளர் மாநாட்டில் நானும் தமிழ்ச்செல்வனும்.



2002, ஜூலையில் ஒஸ்லோ நகரிலுள்ள நோர்வே வெளிவிவகார அமைச்சில் நிகழ்ந்த சந்திப்பு.
இடமிருந்து வலமாக, திரு.விடார் ஹெல்கிசன், திரு.ஜான் பீட்டர்சன், திரு.எரிக் சுல்கைம்,
திரு.ஜோன் வெஸ்ட்போர்க், நான், அடேல்.



தாய்லாந்து பேச்சுக்களை அடுத்து நடைபெற்ற பத்திரிகையாளர் மாநாட்டில் எடுத்த படம்.



2002, நவம்பர் 2ம் நாள், தாய்லாந்திலுள்ள ரோஸ் கார்டின் விடுதி வளாகத்தில் நானும், பேராசிரியர் பீரிஸும், திரு.விடார் ஹெல்கிசனும் 'சமாதான மரத்தை' நட்ட பொழுது எடுத்த படம்.



2002, நவம்பர் 25ஆம் நாள், ஒஸ்லோவில் நிகழ்ந்த உதவிவழங்கும் நாடுகளின் மாநாட்டின் போது சிறிலங்காவின் முன்னாள் பிரதமர் ரணில் விக்கிரமசிங்காவை நான் சந்தித்தபோது எடுத்தபடம். திரு.விடார் ஹெல்கிசனும் திரு.எரிக் சுல்கைமும் இச்சந்திப்பில் கலந்துகொண்டனர்



2003, மார்ச் மாதம் ஜப்பான், ஹக்கோன் நகரில் நடைபெற்ற பேச்சின்போது ஜப்பானிய விசேட தூதுவர் அகாசியுடன் எடுத்தபடம். திருமதி பாலசிங்கம், தமிழ்செல்வன் ஆகியோரை பின்னணியில் காணலாம்.



'ஓயாத அலைகள்' 3 தாக்குதல் திட்டத்தை தளபதிகளுக்கு
விளக்குகிறார் தலைவர் பிரபாகரன்.
இடமிருந்து வலமாக கேணல் தீபன், கேணல் பானு,
கேணல் ராயு, கேணல் பால்ராஜ்,
அரசியல் துறைப் பொறுப்பாளர் திரு.தமிழ்ச்செல்வன்.




ஆனையிறவு தரையிறக்கத்திற்கான வியூகத்தை கடற்புலி தளபதிகளுக்கு விளக்குகிறார் தலைவர் பிரபாகரன்.
கடற்புலிகளின் விசேட தளபதி கேணல் சூசை தலைவரின் பக்கத்தில் காணப்படுகிறார்.



வன்னிமீட்புச் சமரில் தாக்குதல் திட்டத்தை விளக்குகிறார் கேணல் சொர்ணம்.

'ஓயாத அலைகள்' 3 நடவடிக்கையின் போர்முனைக்கான தாக்குதல் திட்டத்தை விளக்குகிறார் கேணல் பானு. இடதுபுறமாக கேணல் பால்ராஜையும், வலதுபுறமாக கேணல் ஜெயத்தையும் காணலாம்.



ஒட்டுசுட்டான் படைத் தளத்தை கைப்பற்றி கரிப்பட்டமுறிப்பை நோக்கி முன்னேறிய பெண்புலிகள் தாக்குதல் திட்ட வரைபடத்தை பரிசீலிக்கின்றனர்.



ஆனையிறவு முற்றுகைச் சமர் போர்த் திட்டத்தை விளக்கும் கேணல் தீபன்.



ஆனையிறவு முற்றுகைச் சமருக்காக கொம்படிஊரியன் பாதை ஊடாக நகர்ந்துசெல்லும் புலிகளின் அணிகள்.



இத்தாவில் சமரில் பெண் புலிகளால் கைப்பற்றி அழிக்கப்பட்ட இராணுவ டாங்கி.



ஆனையிறவில் கைப்பற்றப்பட்ட 152 மி.மீ. பீரங்கியை பார்வையிடுகிறார் தலைவர் பிரபாகரன். அருகில் நிற்பவர் கேணல் ராயு.



விடுதலைப் புலிகளின் விசேட அதிரடிப்படை வீரர்கள், வன்னிப் போர் முனையில் முன்னேறும்போது எடுத்த படம்.



வன்னிக் களம் நோக்கி நகருகின்ற புலிகளின் கனரக ஆயுதக் குழுவொன்று.



கடற் புலிகளின் தாக்குதல் படகு ஒன்றில் பெண் கடற் புலிகள்.



கவச வாகன அழிப்பு அணியைச் சேர்ந்த பெண் போராளிகள் களமுனை நோக்கி அணிவகுத்துச் செல்கின்றனர்.



ஐரேப்பிய ஒன்றியத்தின் வெளியுறவுத்துறை ஆணையர் கிறிஸ் பற்றன் அவர்களை
தலைவர் பிரபாகரன் சந்தித்தபோது எடுத்த படம்.



2004, மே மாதம் 11ஆம் நாள், கிளிநொச்சியிலுள்ள அரசியல் செயலகத்தில் தலைவர் பிரபாகரனும் நானும் நோர்வே வெளிவிவகார அமைச்சர் திரு ஜான் பீட்டர்சன் அவர்களை சந்தித்தபோது எடுத்தபடம்.

## உசாத்துணை

1. Gunaratna. R. 'Indian Intervention in Sri Lanka: The Role of India's Intelligence Agencies.' Colombo 1993.
2. Dixit. JN. 'Assignment Colombo.' Konark Publishers, Delhi 1998.
3. Ibid, page 327.
4. Mr G Parthasarathy told me about Mrs Gandhi's reservations concerning Jayawardane during private conversations I had with him at his residence in Delhi in the period 1984-85.
5. Mr Pirapaharan had been released on bail following a shooting incident between Uma Maheswaran and himself at Pandy Bazaar in Chennai. He was living with Pala Nedumaran at his residence in Madurai from where he left for Jaffna.
6. Mrs Gandhi took a bold step to create Bangladesh by invading East Pakistan in 1971, not purely for altruistic reasons of liberating the oppressed East Bengali nation, but for the geo-strategic objective of weakening an aggressive hostile neighbour.
7. These operations were recorded in the Diary of Combat (1975 - 1984) compiled by me as an official publication in December 1984.
8. Dixit. JN 'Assignment Colombo', page 306. Konark Publishers, Delhi, 1998.
9. Mr Saxena was appointed as the National Security Advisor to Rajiv Gandhi and later assumed the position Governor of Jammu and Kashmir.
10. Narayan Swamy. MR . 'Tigers of Lanka. From Boys to Guerrillas', page 147. 3rd Edition, Vijitha Yapa Publications. Colombo 2002
11. Joint Memorandum by the ENLF to the Authorised Representative of the Government of Indian, 18.06.1985.
12. Joint Response of the Tamil Delegation on the concluding day of phase 11 of the Thimpu talks on 17 August 1985.
13. Joint statement of the 17 August 1985 made by the Tamil delega tion immediately prior to walking out of the Thimpu Talks.
14. Dixit. JN. 'Assignment Colombo'. Page 41-42. Konark Publishers, Delhi.
15. Ibid. page 43-44.

16. The details of my arrest and deportation have been extensively treated in the book 'The Will to Freedom' by Adele Balasingham.
17. Dixit. JN. 'Assignment Colombo'. Page 57.
18. Gunaratne. R 'Indian Intervention in Sri Lanka'. Page 167.
19. This information was conveyed to Mr Dixit from the Sri Lanka government sources. See page 96 in his book 'Assignment Colombo'.
20. Dixit. JN 'Assignment Colombo'. Page 118.
21. The LTTE did not have an official representative in Singapore at that time. We suspect that the anonymous person who claimed to be the representative of the LTTE and conveyed the telephone mes sage must have been a RAW operative.
22. Dixit. JN 'Assignment Colombo'. Page 202.
23. Ibid. page 207.
24. Athulathmuthali wanted to avenge the massacres of Sinhala civil ians in the Trincomalee and Batticoloa districts, allegedly by Pulendran and Kumarappa, according to Dixit's accounts.
25. Singh. Lt General Depinder. 'The IPKF in Sri Lanka'. Trishul Publishers, New Delhi 1992.
26. Ibid. page 86.
27. Ibid. page 87.
28. Dixit. JN 'Assignment Colombo'. Page 156.
29. see LTTE document 'You Too India' by LTTE Political Committee, 1987.
30. Singh. D 'The IPKF in Sri Lanka'. Page 201.
31. Narayan Swamy. MR 'Tigers of Lanka. From Boys to Guerrillas'. Page 269.
32. Gunaratna. R. 'Indian Intervention in Sri Lanka: The Role of India's Intelligence Agencies.' Colombo 1993.
33. Singh. D. 'The IPKF in Sri Lanka' page 128.
34. Ibid. page 128
35. Dixit. JN. 'Assignment Colombo'. Page 344
36. Ibid. Page 344.
37. Ibid. Page 320
38. Ibid. Page 43

# அத்தியாயம் III

# பிரேமதாசா - விடுதலைப் புலிகள் பேச்சு

**- அடேல் பாலசிங்கம்**

போர்க்கால சூழலில்தான் எதிரும் புதிருமான விசித்திர நிகழ்வுகள் இடம்பெறுவதுண்டு. வரலாற்றிலே கூட உருட்டுப் புரட்டுகள் நிகழ்வது இயல்பு. எனவே இலங்கைத் தீவில் இருந்து தப்பியோடிய நாம், இலங்கைக்கே இப்போது திரும்பி இருந்தோம் என்பதும், இந்தத் தடவை முற்றிலும் மாறான சூழ்நிலையில் நாம் திரும்பியிருந்தோம் என்பதும், எவருக்கும் ஆச்சரியம் தருவதாக இருக்கக் கூடாது. இப்போது எமது தளம் தமிழீழம் அல்ல. சிங்களத் தெற்கு ஆகும். ஒழுங்கைகளிலும் நெல்வயல்களிலும் நாம் வேட்டையாடப்படவில்லை. மாறாகக் கொழும்பில், ஐந்து நட்சத்திர உல்லாசப் பயணிகள் விடுதியின் சௌகரியங்களைச் சுகித்துக் கொண்டிருந்தோம். நண்பனாக இருந்து பகைவனாக மாறிய ஒருவருடனல்ல, பகைவனாக இருந்து நண்பனாக மாறிய ஒருவருடன் அலுவலில் ஈடுபட்டிருந்தோம். மேலும், போர் நோக்கத்துடனல்லாது, சமாதான நோக்கத்துடனேயே வந்திருந்தோம்.

கொழும்பிலே நடைபெற இருந்த அமைதிப் பேச்சுவார்த்தையில் பங்கெடுக்க இருந்த விடுதலைப் புலிப் பிரதிநிதிகளை வான் வழியாகக் கொழும்பிற்கு கொண்டு வருதற் பொருட்டுச் சீறிலங்கா விமானப் படை பெல் உலங்கு வானூர்தியில் 1989 மே 3ஆம் திகதி வன்னிக்குப் பறந்து கொண்டிருந்தபோது, இத்தகைய சிந்தனைகளே என் மனதில் நிழலாடிக் கொண்டிருந்தன. இந்திய ஆக்கிரமிப்புக்கு உள்ளாகியிருந்த தமிழீழத்தின் வான் எல்லைக்குள் கொழும்பிலிருந்து பறந்து கொண்டிருந்தோம். இன்னொரு உலங்குவானூர்தியில், தெரிவு செய்யப்பட்ட கொழும்பு ஊடகவியலாளர் அணி ஒன்று எம்மோடு கூட வந்து

கொண்டிருந்தது.

இந்திய விமானப் படைக்குச் சொந்தமான இரண்டு இராட்சத MI-24 உலங்குவானூர்திப் போர்க்கலங்கள் எமது கலத்தை இடைமறித்து, பின்னர் ஓரளவு தூரத்தில் எம்மைப் பின்தொடர்ந்து வந்துகொண்டிருந்தன. இந்த முயற்சிக்காகச் சிறீலங்கா விமானப் படை இந்தியாவின் அனுமதியைக் கேட்கவில்லை என்பது எமக்குத் தெரியும். எனவே எமது பயணத்தின்போது வேண்டுமென்று அங்கு வந்து நேரடியாக அவமதிப்பதே இந்தியர்களின் எண்ணமாக இருந்தது. சிறீலங்கா விமானப் படையைப் பொறுத்த வரையிலே, தமது பிரதேசத்தின் மீது பறப்பது தமது இறைமை உரிமை என்று கருதியதால் அதன் தளபதிகள், தமிழீழ வான் எல்லைக்குள் தாம் செல்வதற்கு இந்தியரின் அனுமதியைப் பெறத் தேவையில்லை என்று முடிவெடுத்தனர். எனவே, கடுமையான ஆயுதம் தரித்த இந்திய உலங்குவானூர்திகளின் எதிர்பாராத திடீர் அச்சுறுத்தல் கிடைத்ததும், சிறீலங்கா அதிகாரிகள், திகைத்துப் போனார்கள். ஆனால், இந்த மிரட்டல் ஊடுருவலைப் பொருட்படுத்தாது சிங்கள விமானிகள் அமைதியாகத் தமது பயணத்தைத் தொடர்ந்தார்கள். வன்னி வரைபடத்தை நுணுக்கமாக உசாவிய வண்ணம் தங்கள் இலக்கை நோக்கி அவர்கள் பறந்து கொண்டிருந்தார்கள்.

எமது பார்வையில் எமது வான் பயணத்தோடு இந்தியர்கள் வந்து சொருகப் பார்த்தமை ஒரு பகைமையான செயலாகவே பட்டது. புலிகளுக்கும் பிரேமதாசாவுக்கும் இடையிலான இந்தத் தொடக்க நிலை உறவை இந்தியர்கள் அதிருப்தியோடும் ஐயுறவோடும் நோக்குவதை உணர்த்துவது போலவும் இருந்தது. பிரேமதாசாவுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையே அரும்ப முற்படும் இந்தப் பேச்சுவார்த்தையைத் தான் வரவேற்பது போலப் பகிரங்கமாகக் காட்டிக்கொண்டாலும், இலங்கையின் குழப்பமான அரசியலில் தனக்குப் பெரும்பங்கு இருக்கும் என்பதையும், தான் ஒரு பிரதேச வல்லரசு என்ற நிலையை வலியுறுத்தும் என்பதையும் இரு தரப்பினருக்கும் தனிப்பட்ட முறையில் இந்தியா செய்தியனுப்புவது போல இந்தச் செயல் அமைந்தது.

இந்திய உலங்குவானூர்திகள் தங்கள் உள் நோக்கத்தைத் தெளிவாக உணர்த்திய பின், நீல வான வெப்ப மங்கலுக்குள் சென்று மறைந்தன. எமது பயணம் தொடர்ந்தது. வெய்யிலில் உலர்ந்த நெல் வயல்களைக் கடந்தும், வேயப்பட்ட மண் குடிசைகள் கொண்ட சிற்றூர்களைக் கடந்தும், நெடுங்கேணிக்

காட்டில் உள்ள எம் இலக்கை நோக்கித் தொடர்ந்து பறந்தோம். வானத்தில் இருந்து பார்க்கும்போது, கீழே அடர்த்தியான பசுமைக்காடு, ஆங்காங்கே ஏரிகள், சதுப்பு நிலங்கள், திறந்த வெளிகள், இப்படிப் பலதும் சேர்ந்த ஒரு படுக்கை விரிப்பாகத் தரை காட்சியளித்தது. இந்த அடர்த்தியான பச்சைக் குடை விரிப்பின் கீழ், தங்கள் பதுங்கு குழிகளில் இருந்தபடி, நூற்றுக்கணக்கான எமது கெரில்லாப் போராளிகள் எமது உலங்குவானூர்திகள் மேலே வட்டம் அடிப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். எம்மவர்களை ஏற்ற வேண்டிய பகுதிக்குள் வந்துவிட்டோம்.

கொழும்பிலிருந்து நாம் புறப்படுமுன், சிறீலங்கா இராணுவ அமைப்புடன் செய்து கொண்ட ஏற்பாட்டின்படி, காட்டுக்குள் ஒரு வெட்ட வெளியில், எமது போராளிகள் ஒரு பெரிய வெள்ளைச் சிலுவை அடையாளம் தரையில் வரைய வேண்டும் என்றும், உலங்குவானூர்தி ஓட்டிகளுக்கு, பாதுகாப்பான இறங்கு தளத்தை அது சுட்டிக்காட்டும் என்றும் ஏற்பாடாகியிருந்தது. உலங்குவானூர்திகள் மீண்டும் சுற்றிச் சுற்றி வந்தன. ஆனால் வெள்ளைச் சிலுவை அடையாளம் மட்டும் தெரியவில்லை. ஒரு பகுதியிலிருந்து அடுத்த பகுதிக்குச் சென்று, இறங்கு தளத்துக்கான அடையாளத்தைக் கீழேயுள்ள காட்டில் தேடிக் கொண்டிருக்கும் போது, எரிபொருள் செலவாகிக் கொண்டிருந்தது. தேடல் தொடரத் தொடர போராளிகளைச் சந்திக்கப்போகிறோம் என்ற எமது துடிப்பு, வரவர மங்கத் தொடங்கியது. பரந்திருக்கும் காட்டுப் பரப்பைத் தேடிக் கொண்டே இந்ததால், எரிபொருள் தீர்ந்துவிடப் போகிறதே என்ற ஆதங்கம்! விமானிகள் தங்கள் இலக்கைத் தவற விட்டுவிட்டார்களா? எமது போராளிகள் தவறு இழைத்து விட்டார்களா? எதுவாக இருந்தாலும் பரவாயில்லை. எரிபொருள் இருக்கும்போது தரையிறங்கும் தளத்தைக் கண்டுபிடித்து விடவேண்டும் என்று தவித்தோம். முயற்சியை இனிக் கைவிட வேண்டும் என்று விமானி யோசிக்கும்போது, எட்டத்தில் ஒரு சிவப்புப் புள்ளியைக் கண்டோம். பெல் உலங்குவானூர்தி அதை நோக்கிச் செல்லும்போது, எமது கவனத்தை ஈர்க்க அதீத பிரயத்தனத்தோடு செங்கொடி ஒன்றை ஆட்டிக் கொண்டிருக்கும் ஓர் இளைஞராக அந்தச் செம்புள்ளி விரிந்தது. விரைவில், பச்சை மரங்களூடாக வெள்ளைச் சிலுவைக் குறியும் தெரிந்தது. குறுகிய எல்லைக்குள் செயற்படும் வாக்கி - ரோக்கியை பாலா எடுத்து

எண்களை அழுத்தினார். “ஹலோ, பாலா அண்ணா, நீங்கள் பேசுவது கேட்கிறது” என்று குரல் அதில் கேட்டதும் பாலாவின் முகம் மலர்ந்தது.

உலங்குவானூர்திகள் இரண்டும் மெதுவாகக் கீழே இறங்கத் தொடங்க, திறந்த இறங்கு தளத்தைச் சூழவுள்ள மரங்கள் பற்றைகளுக்குப் பின்னே நிற்கும் எமது போராளிகளின் முகங்கள் தெளிவாகத் தெரியத் தொடங்கின. அந்தப் பகுதியை மேலோட்டமாகச் சுற்றிப் பார்த்ததும், இன்னமும் நாம் இந்தியாவுடனும் சிறீலங்காவுடனும் போராடிக் கொண்டிருப்பது நினைவுக்கு வந்தது. திடீர் இராணுவ நடவடிக்கையில் இந்தியப் படைகள் ஈடுபடலாம் என்ற எதிர்பார்ப்பில், அந்தப் பகுதியைப் பாதுகாப்பதற்காக நூற்றுக்கணக்கான பலத்த ஆயுதம் தரித்த போராளிகள் நிலைப்படுத்தப் பட்டிருந்தார்கள். உலங்கு வானூர்திகளில் வந்திறங்குபவர்கள், தாம் எதிர்பார்த்த உண்மையான பயணிகளே என்று கவனமாக உறுதி செய்துகொண்ட எம் போராளிகள், காட்டு மறைவிலிருந்து, தட்டுகளில் கேக், பிஸ்கற், ஆகியவை ஏந்திக் கொண்டு வரவேற்க ஓடிவந்தார்கள். தூரக் காட்டின் நடுவிலும், தமிழ் மக்களின் காலாகால விருந்தோம்பல் பண்போடு, ஊடகவியலாளருக்கும் விமானிகளுக்கும் சிற்றுண்டிகளும் குளிர்பானமும் இளநீரும் பரிமாறினார்கள். அதே சமயம், புதிதாக வந்தவர்களைப் பற்றி அறிய ஆர்வம் உடையவர்களாகவும் இருந்தார்கள். என்ன இருந்தாலும் பதினெட்டு மாதங்களாக, காட்டு மறைவிடங்களில் இருந்த பின், முதல் தடவையாக நட்புறவோடு வருபவர்களை இவர்கள் சந்திக்கிறார்கள். சிறீலங்கா உலங்குவானூர்திகளையும் விமானிகளையும் பார்ப்பதிலும் அவர்கள் ஆர்வமாக இருந்தார்கள். தமிழ்ப் பிரதேசத்துக்கு மேலாக நட்புறவான நோக்கத்தோடு இந்த வான் கலம் வருவதும் அவர்களுக்கு விசித்திரமாகவே பட்டது. இந்த பெல் உலங்குவானூர்திகள் பயங்கரத்தையும், மரணத்தையும் தமிழ் மக்களிடையே தோற்றுவிப்பன. எனவே அதன் மட்டில் போராளிகள் கவனமாகவே இருக்க வேண்டும். இந்த உலங்குவானூர்தியில் பொருத்தப்பட்டிருந்த ஐம்பது கலிபர் யந்திரத் துப்பாக்கிகளும் றொக்கெற் ஏவிகளும் பெருந்தொகையில் தமிழ் மக்களை வானிலிருந்து கொன்றும், ஊனமடையச் செய்தும் இருக்கின்றன. நூற்றுக்கணக்கான கட்டிடங்களை வெறும் கற்குவியல் ஆக்கியிருக்கின்றன.

இன்னொரு விசித்திரம் என்ன என்றால், சிங்கள விமானிகளும் விடுதலைப் புலிப் போராளிகளும் தம்மிடையே நடந்ததை மறந்து ஒருவரை ஒருவர் குசலம் விசாரித்தமையாகும். இதற்கு நேர்மாறாக, அண்மையிலே கூட ஒருவரை ஒருவர் கொல்லும் பொருட்டு, துப்பாக்கி வேட்டுப் பரிமாற்றம் நடத்திய சம்வங்களே இடம்பெற்றன.

கொழும்புப் பேச்சுவார்த்தைகளில் பாலாவுக்கு உதவியாக நியமிக்கப்பட்ட விடுதலைப் புலிகளின் அரசியற் பிரிவைச் சேர்ந்த மூத்த உறுப்பினர்களான திரு. யோகரெத்தினம் யோகி, திரு. பரம மூர்த்தி ஆகியோரும் அவர்களது மெய்ப் பாதுகாவலரும் தொலைத்தொடர்புக்குப் பொறுப்பாக திரு. ஜுட்டும் வரிப் புலிச் சீருடைகளுடன் காட்டு மறைவிடங்களில் இருந்து வெளியே வந்தனர். இவர்களை அழைத்துச் செல்லவே இந்த உலங்குவானூர்திப் பயணம் மேற்கொள்ளப்பட்டது.

வணக்கமும், வாழ்த்தும் மாறி மாறிப் பரிமாறிக் கொள்ளப்பட்டன. நிழற்படங்கள் பிடிக்கப்பட்டன. ஆனால், எரிபொருள் தீர்ந்து போவதற்கு முன்னர், உலங்குவானூர்திகளை தமது பகுதிக்குள் கொண்டு போய்விட வேண்டும் என விமானிகள் பதறியபடியே இருந்தார்கள். எனவே நெடுங்கேணிக் காட்டில் இறங்கிய அரைமணி நேரத்தில், மீண்டும் பறந்த உலங்குவானூர்தியில் யோகியும், மூர்த்தியும் ஏனைய போராளிகளும் எம்மோடு சேர்ந்து சிங்களத்தின் தலைநகரான கொழும்பு நோக்கிப் பறந்து கொண்டிருந்தார்கள். விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள, அரசுக்கும் இடையே நடைபெற்ற கொடிய யுத்த வரலாற்றில் பிரமிக்கத் தக்க புதியதொரு அத்தியாயம் திறந்தது. இரண்டு மணி நேரம் கழித்து, தலைநகரின் நடுவில், கொழும்பு விமானப் படைத் தலைமைப் பணிமனை மைதானத்தில் உலங்குவானூர்தி தரை இறங்கியது. விமானப் படை மைதானத்தில் ஊடகவியலாளருடன் உரையாடிய பின், சிறப்பு அதிரடிப் படையினரின் கடும் பாதுகாப்பு ஏற்பாட்டோடு, ஏற்கனவே ஒழுங்கு செய்யப்பட்ட கொழும்பு ஹில்டன் உல்லாசப் பயணிகள் விடுதிக்கு நாம் கொண்டு செல்லப்பட்டோம். அங்கிருந்து, விடுதலைப் புலிகளுக்கும், பிரேமதாசா அரசுக்கும் இடையே வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த முதல் பேச்சுவார்த்தைக்கு ஆயத்தம் செய்வதே திட்டமாக இருந்தது.

## வடக்கிலும் தெற்கிலும் கொந்தளிப்பு

அதிசயிக்கத்தக்க வகையில், யாழ்ப்பாணத்தில் இருந்து நாம் தப்பி, மேற்குலகம் திரும்பியபின், பாலாவும் நானும் பல நாடுகளுக்குப் பயணம் புரிந்திருந்தோம். அங்கெல்லாம், புலம்பெயர்ந்த தமிழ் மக்களையும், வெவ்வேறு அரசுகளின் அதிகாரிகளையும் அரச சார்பற்ற அமைப்புக்களின் அதிகாரிகளையும் சந்தித்து, இந்தியத் தலையீட்டால் ஏற்பட்ட பிரச்சினைகளையும், அதனால் விளைந்த கொடிய சம்பவங்களையும், இவை அனைத்தும் விடுதலைப் புலிகளுக்கும், இந்திய 'அமைதி காக்கும் படைக்கும்' இடையே எதிர்பாராத வகையில் பகைமைப் போராக மாறியதையும், எல்லோருக்கும் விளக்கிக் கூறினோம். வெளிநாடுகளில் இந்தப் பரப்புரைச் சுற்றுலாவை நாம் புரிந்து கொண்டிருக்கும் காலத்திலே இலங்கையிலே நிலைமை சீரழிந்தது. நீடித்துச் செல்லும் வன்செயல், மற்றும் அரசியல் உறுதியின்மை என்ற சகதியில், நாடு கீழே கீழே புதைந்து கொண்டிருந்தது. இலங்கை இனப் பிரச்சினைக்குள் இந்தியா தனது மூக்கை நுழைத்திருந்தது. தமிழர் தாயகத்தை இந்தியப் படைகள் ஆக்கிரமித்து நின்றன. இவை காரணமாக வடக்குக் கிழக்கில் தமிழ் மக்களின் ஆயுத எதிர்ப்புப் போராட்டம் தீவிரமாகியது. தெற்கில், இந்தியத் தலையீட்டுக்கு எதிராக கடுப்படைந்த சிங்கள இளைஞர்கள் வெளிப்படையாகக் கிளர்ச்சி செய்தார்கள். ரஜீவ் காந்தியின் நிர்வாகம், இந்த நாட்டின் இரண்டு இனங்களினதும் தேசிய உணர்வின் ஆழத்தையும், அரசியல் விழிப்புணர்வையும் முற்றாகக் குறைத்து எடை போட்டிருந்தது, இந்திய-இலங்கை ஒப்பந்த நிபந்தனைகளுக்கு அமைவாக இந்திய இராணுவத்தை 'அமைதி காக்கும் படை' என்ற பெயரில் புகுத்தியமை, ரஜீவ் நிர்வாகத்தின் மிக மோசமான அரசியல், இராஜதந்திரக் குளறுபடி என்று கூறலாம். துரதிர்ஷ்டவசமாக, இந்தியப் படையின் வருகையால் வடக்கிலும் தெற்கிலும் கொடிய வன்செயல்கள் தாண்டவமாடின. அத்துடன் இந்திய இராணுவம், அமைதிப்படை என்ற தனது தகைமையை இழந்து அடக்குமுறைப் படையாகவும் வன்முறைப் பூதமாகவும் உருவெடுத்தது. தமிழரதும், சிங்களவரதும் உள்நாட்டு விவகாரங்களில் இந்தியா தலையிட்டுள்ளதால், வடக்கிலும் தெற்கிலும், இரு முனைகளிலும் இந்தியாவுக்கு எதிராக எதிர்ப்பியக்கம்

கிளர்ந்தது.

தமிழ் மக்களின் அபிலாசைகளைப் புறக்கணித்த நிலையில், சிங்கள அரசாங்கமானது இந்திய இராணுவப் படைகளோடு கூட்டுச் சேர்ந்து, இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை நடைமுறைப்படுத்த முற்பட்டது; வடகிழக்கின் குடியியல் நிர்வாகத்துக்கான மாகாண சபையை நிறுவவும் முற்பட்டது. மாகாண சபைத் தேர்தல்கள் 1988, நவம்பர் 19ஆம் திகதியன்று, இந்திய இராணுவ நிர்வாகத்தின் ஏவலிலும் மேற்பார்வையிலும் நிகழ்ந்தன. போரும் பீதியும், மிரட்டலும் தாண்டவமாடிய சூழலில் நடத்தப்பட்ட இந்தத் தேர்தல், ஜனநாயக நடை முறையையே நையாண்டி செய்தது. வாக்கு மோசடி, வாக்குப் பெட்டித் திணிப்பு, ஆகியவையோடு வேறும் தில்லுமுல்லுகளோடும் இந்திய ஆதரவில் செயற்பட்ட ஈழ மக்கள் புரட்சிகர விடுதலை முன்னணி (ஈ.பீ.ஆர்.எல்.எ்.ப்) தேர்தலில் வெற்றி பெற்று ஆட்சியில் அமர்ந்தது. வடக்குக் கிழக்கு மாகாண சபையிலே இந்தியச் சார்புடைய அரசியல் கட்சி ஒன்று ஆட்சியில் அமர்த்தப்பட்டு, அதன் தலைவராக கைப்பொம்மை அரசியல்வாதி ஒருவர் பொறுப்பேற்றார். அது சந்தேகத்தைத் தீர்த்து, திருப்தியை உண்டுபண்ணுவதற்கு பதிலாக, தமிழ் மக்களிடையே இந்தியா மட்டில், கோபத்தையும், கண்டனத்தையும் தோற்றுவித்தது. தமிழர் தாயகத்தில் இந்திய இராணுவ ஆக்கிரமிப்பின் ஒரு அரசியல் விரிவாக்கமாகவே ஈ.பீ.ஆர்.எல்.எ்.ப் இன் மாகாண நிர்வாகம் செயற்பட்டது. இந்திய நலன்களுக்கே அது முதலில் சேவகம் புரிந்தது. அமைதிப் படையின் இராணுவ ஒடுக்குமுறையையும் சித்திரவதையையும் மறைக்கும் மூடு திரையாக அது செயற்பட்டது. இன்று பரிகசிப்புக்கு உள்ளாகியிருக்கும் இந்திய - இலங்கை ஒப்பந்தத்துக்கு சட்ட அங்கீகாரம் வழங்கும் முறையிலும் அந்த ஆட்சி செயற்பட்டது. ஆயுதம் தரித்த ஈ.பீ.ஆர்.எல்.எ்.ப் அணியினர் இந்திய இராணுவத்தின் கூலிப் படையாகவும் விடுதலைப் புலிகளை நசுக்கும் முயற்சியில் இந்தியரின் கூட்டாளிகளாகவும், தமது ஆட்சியைக் கண்டிப்பவர்களைக் கொன்றொழிப்பவர்களாகவும் செயற்பட்டனர். ஈ.பீ.ஆர்.எல்.எ்.ப் இன் துரோக அரசியலையொட்டி மக்கள் அவர்கள் மீது வெறுப்பும் ஆத்திரமும் அடைந்தார்கள். இறுதியாக இந்திய ஆக்கிரமிப்பு இராணுவத்தின் கொலையாளிக் குழுவாகவும், ஈ.பீ.ஆர்.எல்.எ்.ப் தொழில் புரிந்தது. அவர்களைக்

கண்டித்தவர்களும், கருத்து வேறுபட்டவர்களும் திடீரென்று காணாமற் போனார்கள். அவர்களைப் பற்றிப் பின்னர் என்றுமே விபரம் வெளியாகவில்லை. விடுதலைப் புலி ஆதரவாளர்கள் என்று பெயர் பெற்றவர்கள், தங்கள் வீடுகளிலோ, வீதிகளிலோ கொலையுண்டு காணப்பட்டார்கள். இந்தப் பயங்கர ஆட்சியின் விளைவாக, விடுதலைப் புலிகளுக்கான மக்கள் ஆதரவு பெருகியது. இந்திய இராணுவ ஆக்கிரமிப்புக்கும், அதன் கைப் பொம்மைகளான ஆட்சியாளருக்கும் எதிராகப் புலிகள் நடத்திய போராட்டத்துக்கு மக்கள் ஆதரவு திரண்டது. தமிழ் மக்களால் புறக்கணிக்கப்பட்டவர்களாக, சிங்கள அரசினால் கைவிடப்பட்டவர்களாக, வரதராஜப்பெருமாளின் வடக்கு கிழக்கு மாகாண நிர்வாகம் மக்களிடையே தாக்குப் பிடிக்க முடியவில்லை. மாறாக, திருகோணமலை நகர எல்லைக்குள் ஒரு சதுர மைல் பரப்பில், இந்திய ஆக்கிரமிப்பு இராணுவத்தின் பாதுகாப்புக் கவிகையில், அந்த நிர்வாகம் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டது.

முன்னெப்போதும் நிலவாத சமூக அரசியல் சீரழிவு, இந்தக் காலப் பகுதியில் இலங்கையைச் சின்னாபின்னப்படுத்தியது. பன்னிரண்டு ஆண்டுகள் ஐக்கிய தேசியக் கட்சி (யூ.என்.பி) ஆட்சியை வழிநடத்திய ஜே.ஆர் ஜெயவர்த்தனா, தமது வாரிசாகப் பதவியில் அமர்த்திய ரணசிங்க பிரேமதாசா அவர்களிடம் இந்தச் சீரழிவையே அரசியல் முதிசமாகக் கையளித்தார். சிறீலங்காவின் இரண்டாவது நிறைவேற்று அதிகார அரசுத் தலைவராக 1988 டிசம்பர் 20இல் பிரேமதாசா தேர்ந்தெடுக்கப்பட்டபோது, மட்டு மீறிய நெருக்கடி நிலையை அவர் முகம் கொடுத்தார். நாடு பூராகவும் குழப்பம். அமைதியின்மை, என்றுமே, நிலவாத அத்துணை வன்செயல்கள் ஆகியவை அவரை எதிர்கொண்டன. வடக்குக் கிழக்கில், இந்தியாவுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையில் போர் தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. ஒரு இலட்சத்துக்கும் அதிகமான இந்திய அமைதிப் படை, பொதுமக்கள் ஆதரவுடனும் அர்ப்பணிப்போடும் செயற்பட்டுக் கொண்டிருந்த விடுதலைப் புலிகளை அடக்க முடியாது திணறிக் கொண்டிருந்தது. தென்னிலங்கையில் அரசுக்கு எதிராக மக்கள் விடுதலை முன்னணியின் (ஜனதா விமுக்தி பெரமுன) ஆயுதம் தரித்த வன்முறைக் கிளர்ச்சி வேகம் பெற்றிருந்தது. சிறீமாவோ பண்டாரநாயக்கா அம்மையாரின் 1971ஆம் ஆண்டு ஆட்சியின்

போது, புரட்சி செய்து நசுக்கப்பட்ட மார்க்சிய போராளி அமைப்பான ஜே.வி.பி மீள முளைவிட்டு வளர்ந்து பல சிங்கள மாவட்டங்களில் குழப்பத்தையும் கிளர்ச்சியையும் ஏற்படுத்தி வந்தது. படுகொலைகள், வன்செயல்கள், ஆகியவை மூலம் பொதுமக்கள் மீது பயங்கரவாதத்தைக் கட்டவிழ்த்துவிட்ட இந்த மார்க்சியப் புரட்சியாளர்கள், தெற்கில், பல மாவட்டங்களை விடுதலை செய்திருந்ததோடு, அரசின் நிர்வாக அமைப்பினைச் செயலிழக்கச் செய்திருந்தனர். இரத்தச் சகதி நிறைந்த அவர்களது வன்செயலில் ஆயிரமாயிரம் பேர் உயிரிழந்தார்கள். அரசியற் படுகொலைகள், விளக்குக் கம்பக் கொலைகள், பொதுப் புதைகுழிகள், சித்திரவதைக்கும், உறுப்புச் சிதைப்புக்கும் உள்ளாகி நதிகளில் மிதந்த பிணங்கள், எரியும் ரயர்களால் வீதிகளில் சிதை மூட்டப்பட்டு இறைந்து கிடக்கும் மனிதக் கருகல்கள், காணாமற் போதல்கள் ஆகிய இவையெல்லாம் ஜே.வி.பியின் கிளர்ச்சி வன்செயலினதும், அரச பாதுகாப்புப் படைகளினது முறியடிப்புக் குரூரத்தினதும் பிரதிபலிப்புகளாக வடிமெடுத்தன. இவற்றின் சிகரமாக, கிளர்ச்சியாளர்கள் ஹர்த்தாலுக்கு ஆணையிட்டார்கள். அதன் விளைவாகச் சாதாரண மக்கள் சமுதாயம் முடங்கியது. பொது நிர்வாகம் கடும் பாதிப்புக்கு உள்ளாகியது. சமுதாயமே ஸ்தம்பிதம் அடைந்தது. கிளர்ச்சியாளரின் ஆணைக்கு அமையாவிட்டால் தண்டனை கடுமையாகியது. அதன் குரூரம் மக்கள் மனதில் பேரச்சத்தைத் தோற்றுவித்தது. ஜே.வி.பியின் வன்செயல் பரவ, காவல்துறை நிலையங்கள் தாக்கப்பட்டன. பல்கலைக் கழகங்களும், கல்லூரிகளும் மூடப்பட்டன. பொதுப் போக்குவரத்து திடீரென நின்றது. தலைநகர் கொழும்பு தவிர்ந்த பெரும்பாலான மாவட்ட மையங்கள், ஜே.வி.பியின் கிளர்ச்சியால் வெகுவாகப் பாதிக்கப்பட்டன. கிராமப்புறங்களைக் கைப்பற்றிய பின், நகரத்தைச் சுற்றி வளைக்கும் மாவோவின் கெரில்லா முறையின் சீரிய வடிவத்தைக் கடைப்பிடித்து, புதிதாகப் பதவியேற்றிருந்த, பிரேமதாசா அரசுக்கு உடனடி அச்சுறுத்தலாக ஜே.வி.பி கிளர்ந்தது. 1971இல் கடைப்பிடித்த வழியை ஜே.வி.பியினர் இம்முறை தேர்ந்தெடுக்கவில்லை. வர்க்க முரண்பாட்டுப் பிரச்சினையையோ, பாட்டாளிப் புரட்சியையோ, முதலாளித்துவ அரசுக்கு எதிரான தமது கிளர்ச்சிப் போராட்டத்தின் மையக் கருத்தாக அவர்கள் இந்தத் தடவை முன்வைக்கவில்லை. சிறீலங்காவின் வடக்குக் கிழக்கில் இந்திய

இராணுவ ஆக்கிரமிப்பே அடிநாதப் பிரச்சினையாக முன்வைக்கப்பட்டது. சிங்கள இனத்தின் பரிசுத்த பூமியை இந்திய ஏகாதிபத்தியவாதிகள் ஆக்கிரமிக்க யூ.என்.பி ஆளும் வர்க்கத்தினர் இடமளித்திருப்பதாகவே ஜே.வி.பியினர் குற்றம் சுமத்தினர். இந்தியாவின் கேந்திர அபிலாசைகள் பற்றிக் காலாகாலமாகவே சந்தேகப்படும் சிங்களப் பொதுமக்கள், இந்த அதிதீவிர தேசியவாதப் பரப்புரையால் ஈர்க்கப்பட்டார்கள். ஓர் அந்நிய வல்லரசுக்குச் சிறீலங்காவின் இறைமையைத் தாரை வார்த்துக் கொடுத்த அடிமைச் சாசனமாகவே இந்திய-இலங்கை ஒப்பந்தத்தை, ஜே.வி.பி தலைமை கண்டித்தது. பிரேமதாசா அரசுத் தலைவராகப் பதவி ஏற்கும் வேளை, தலைநகரைத் தாக்க ஜே.வி.பியின் 'செம்படை' உண்மையில் தயாராக நின்றது.

பிரேமதாசா அவர்கள் தந்திரமும் அனுபவமும் கொண்ட அரசியல்வாதியாவார். வடக்கிலே விடுதலைப் புலிகளின் போருக்கான அடிப்படைக் காரணத்தையும், தெற்கிலே ஜே.வி.பியின் கிளர்ச்சிக்கான காரணத்தையும் அவர் புரிந்து கொண்டார். கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த திருகோணமலை உள்ளடங்கலாக வடக்குக் கிழக்கு மாநிலங்களில் அனைத்து எட்டு மாவட்டங்களையும் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொண்ட இந்திய அமைதிப் படையின் பிரசன்னமே, வடக்கிலும் சரி, தெற்கிலும் சரி, வன்செயலுக்கான இயக்கத்தைத் தூண்டிவிட்டிருந்தது என்ற சரியான முடிவுக்கு அவர் வந்தார். இந்தியப் படைகளைக் களைப்புறச் செய்து, வலுவிழக்கச் செய்யும் நோக்குடனேயே விடுதலைப் புலிகளின் கெரில்லாப் போர் வடிவெடுத்தது. இப்போர் தீவிரம் குறைந்து இழுபட்டுச் செல்லும் போராட்டமாக மாறிவிட்டிருந்ததால், இந்தியப் படைகள் கால வரையறையின்றி இலங்கை மண்ணிலே தரித்து விடக்கூடும் என்றும் பிரேமதாசா அஞ்சினார். இந்திய - இலங்கை ஒப்பந்தமோ, இந்திய இராணுவத்தின் பிரசன்னமோ இனப் பிரச்சினையைத் தீர்த்து வைக்க மாட்டாதென்றும், அவர் கருதினார். வெளிநாட்டு இராணுவத் தலையீட்டுக்கும் ஆக்கிரமிப்புக்கும், காரணம் சிங்கள அரசியல் தலைமையிடம் தூரநோக்கோ மன உறுதியோ இல்லாமையே என்றும் அவர் நினைத்தார். இந்தியப் படைகளை நாட்டிலிருந்து வெளியேற்றி விட்டு வடக்கிலும் தெற்கிலும் உள்ள போராளிகளை அமைதிப் பேச்சுவார்த்தைக்கும் நல்லிணக்கத்துக்கும் வருமாறு அழைக்க வேண்டும் என்பதே அவருடைய உடனடி நோக்கமாக இருந்தது.

பிரேமதாசாவின் பூர்வீகத்தைப் பார்க்கும் போது, அவரை ஒரு 'சாதாரண மனிதராகக்' கணிப்பிடலாம். இருப்பினும் பிரேமதாசாவில் இருந்த அந்தச் சாதாரண மனிதம் ஆழமான சிங்கள பௌத்த உணர்வுகளைக் கொண்டிருந்தது. அவருடைய பதவிப் பிரமாண வைபவம் 1989 ஜனவரி 2இல் இடம்பெற்றது. சிங்கள பௌத்தத்தின் இதய பூமியான கண்டியில், பற்கோவிலான தலதா மாளிகையில் தமது பதவிப் பிரமாண வைபவத்தை நடத்த அவர் ஒழுங்கு செய்ததில் இருந்தே அவருடைய பௌத்த உணர்வுகள் தெளிவாகத் தெரிந்தன. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இந்தத் தலம் தேர்ந்தெடுக்கப்பட்டமை, அவருடைய அரசியல் இலக்குகளின் விசாலத்தை உணர்த்தின எனலாம். புனிதப் பற்கோவிலைத் தமது தனிப்பட்ட வாழ்வின் முக்கிய நாளன்று தேர்ந்தெடுத்தமை பௌத்தம் மட்டில் அவருடைய ஆழ்ந்த பற்றையும், அரச அலுவல்களை விட மதத்துக்கு முதன்மை அளிக்கும் பௌத்த மரபை அவர் முக்கியத்துவப்படுத்துவதையும் காணலாம். வரலாற்று பூர்வமாக ஆழப் பதிந்துள்ள சிங்களத் தேசிய உணர்வுகளை வெளிப்படையாக இது முன்னிலைப் படுத்துவதாகும். வடக்குக் கிழக்கை இந்திய இராணுவம் ஆக்கிரமித்திருப்பது தொடர்பாக நாடு பூராவும் வெளிப்படுத்தப்பட்ட எதிர்ப்பு உணர்வையே பிரேமதாசாவும் கொண்டிருந்தார் என்று கூறலாம். வெளிநாட்டு ஆக்கிரமிப்பாளர்களுக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் வரலாறு படைத்த கண்டியை, பிரேமதாசா தெரிவு செய்ததன் மூலம் இந்தியப் படைகளின் ஆக்கரமிப்பைத் தாமும் எதிர்ப்பதையும் நாட்டிலிருந்து அந்தப் படைகளை வெளியேற்றத் தாம் எண்ணியிருந்தார் என்பதையும் பிரேமதாசா தெளிவாக எடுத்துணர்த்தினார். இந்திய - இலங்கை ஒப்பந்தத்துக்கும், நாட்டில் இந்தியத் தலையீட்டை ஆழமாக்கும் எந்த அரசியல் ஏற்பாட்டுக்கும் பிரேமதாசா தொடர்ச்சியாக எதிர்ப்பைத் தெரிவித்து வந்தார் என்பது கொழும்பு அரசியல் வட்டாரங்களில் பிரசித்தமானது.

## பேச்சுவார்த்தைக்கு அழைப்பு

அரசுத் தலைவர் பிரேமதாசா 1989 ஜனவரி 2இல் தலதா மாளிகையில் இருந்து நாட்டுக்கு விடுத்த செய்தியில்,

பேச்சுவார்த்தைக்கு வருமாறு விடுதலைப் புலிகளுக்கும், ஜே.வி.பிக்கும் அழைப்பு விடுத்தார். இனப் பிரச்சினையானது ஒரு உள்நாட்டுப் பிரச்சினை என்றும் வெளிநாட்டுச் சக்திகளின் தலையீடு இன்றி அது தீர்க்கப்பட வேண்டியது என்றும் கூறியது இந்தியாவின் முகத்தில் அறைந்தது போல அமைந்தது. சிறீலங்காவின் ஓர் அங்குலத்தையும் அந்நியருக்கு விட்டுக் கொடுக்க மாட்டார் என்றும் அவர் சபதம் உரைத்தார். விடுதலைப் புலித் தலைமையைப் பொறுத்த வரையிலே, செய்தி தெளிவாக இருந்தது, புதிய அரசுத் தலைவர் இந்தியாவை எதிர்க்கும் கொள்கையோடு நின்றார். விடுதலைப் புலிகள் அப்போது இருந்த நிலையில், பிரேமதாசாவின் நிலைப்பாட்டைப் பற்றிக் கருத்தில் எடுப்பது நல்லது எனப்பட்டது. அந்தத் தருணத்தில், லண்டனில் இருந்த பாலா, பிரபாகரன் அவர்களுடன் தொலைத்தொடர்பு பேணி வந்தார். பிரேமதாசா ஆட்சியினருடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு பாலா ஆதரவாக இருந்தார் என்பதும் எனக்குத் தெரியும். புதிய அரசுத் தலைவருடன் விடுதலைப் புலிகள் கூட்டுச் சேர்ந்து, அமைதிப் படையைத் தமிழர் தாயகத்தில் இருந்து வெளியேற்றக் கூடுமாக இருந்தால், அது குறிப்பிடத்தக்க சாதனையாக இருக்கும் என்று பாலா என்னிடம் குறிப்பிட்டார். பதில் கொடுக்கும் முன் கொழும்பில் வேறு என்ன வளர்ச்சிகள் ஏற்படுகின்றன என்று அவதானித்தோம். அவசர கால நிலையைப் பிரேமதாசா அகற்றினார். நல்லிணக்கச் சமிக்கையாக ஜே.வி.பியின் முழு நிலைப் போராளிகள் 1800 பேரை விடுதலை செய்தார். இதனால், ஜே.வி.பியினரும் தமது பயங்கர நடவடிக்கைகளை இரண்டு மாதம் கைவிட்டார்கள். ஆனால், விடுதலையான இளைஞர்களையும் சேர்த்து, தங்கள் அணிகளுக்குப் புத்துயிர் அளித்து, முழுமூச்சுடன் திரும்பவும் தம் கிளர்ச்சிப் போராட்டத்தை பிரேமதாசா ஆட்சிக்கு எதிராகத் தொடக்கினர். ஜே.வி.பி மட்டில் தமது நல்லெண்ண முயற்சி வெற்றியளிக்காது என்பதைப் பிரேமதாசா உணர்ந்தார். இராணுவ ரீதியாக அவர்களை ஒடுக்குவதைத் தவிர அவருக்கு வேறு வழியிருக்கவில்லை. தமது ஆட்சிக்குப் பெருஞ்சவாலாக அமைந்துவிட்ட ஜே.வி.பி கிளர்ச்சியைத் தெற்கில் அடக்குவதானால் அதற்கு முன், இந்திய அமைதிப் படையை வெளியேறச் செய்ய வேண்டும் என்று உணர்ந்தார். இதற்கு விடுதலைப் புலிகளின் ஆதரவு அவருக்குத் தேவையாக

இருந்தது.

விடுதலைப் புலிகளின் மன உறுதி, அர்ப்பணிப்பு, துணிச்சல், தியாகம் ஆகியவற்றுக்காக, பிரேமதாசா அவர்களை மதித்தார். இதை அவருடன் உரையாடும்போது நேரிலேயே கேட்டறிந்தேன். விடுதலைப் புலிகளின் ஆயுதப் போராட்டத்தைத் தூண்டியது சிங்கள அரசின் ஒடுக்குமுறை நடவடிக்கைகளே என்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார். காரிய சாத்தியமான பேச்சுவார்த்தை ஒன்றிலே ஈடுபட்டு, கலந்துரையாடல், சமரசம், கருத்து ஒருமைப்பாடு ஆகியவற்றின் வழியாக முரண்பாட்டைத் தம்மால் தீர்க்க முடியும் என்றும் பிரேமதாசா நம்பினார். பேச்சுவார்த்தைக்கு வருமாறு விடுதலைப் புலிகளுக்குப் பகிரங்க அழைப்பு விடுத்ததோடு, நேரடியாகவும் புலிகளோடு தொடர்பு கொள்ள அவர் பெரும் பிரயத்தனம் செய்தார். அதை எப்படிச் செய்வது என்று அவர், ஈரோஸ் தலைவர்களான பாலகுமாரிடமும், பரராஜசிங்கம் அவர்களிடமும் உசாவிய போது, அவர்கள் பாலா லண்டனில் இருக்கிறார் என்றும், இலங்கைக்கு வெளியே வாழும் ஒரேயொரு மூத்த விடுதலைப் புலித் தலைவர் பாலாவே என்றும், வன்னியில் உள்ள தலைமையுடன் பாலா இன்னமும் தொடர்பு வைத்திருக்கிறார் என்றும் அவர்கள் பிரேமதாசாவிடம் தெரிவித்திருக்கிறார்கள். எப்படியோ, எமது தொலைபேசி எண்ணைப் பிரேமதாசா பெற்று பாலாவுடன் கிரமமாகத் தொடர்பு கொண்டு நட்புறவை ஏற்படுத்திக்கொண்டார். அமைதிப் பேச்சுவார்த்தைக்கான பிரேமதாசாவின் அழைப்பை வன்னியில் உள்ள தலைமை கருத்தில் எடுத்திருப்பதாகவும், உரிய வேளையில் பொருத்தமான ஒரு தீர்மானம் மேற்கொள்ளப்படும் என்றும் பிரேமதாசாவிடம் பாலா கூறினார். அதே சமயம், தமிழர் தாயகத்தில் இருந்து இந்தியப் படைகளை வெளியேற்றுவது தமது எண்ணம் என்பதைப் பிரேமதாசா பகிரங்கமாக அறிவித்தால் அது பயன் தரும் என்றும் பாலா தெரிவித்தார். அதன் பின்னர், பிரேமதாசாவின் அடுத்த செயற்பாட்டுக்காக விடுதலைப் புலிகள் காத்திருந்தார்கள். தமிழ் சிங்கள புத்தாண்டு விழாக் கொண்டாட்டங்களையொட்டி, சிறீலங்கா அரச படைகளுக்கும் விடுதலைப் புலிகளுக்குமிடையே ஒரு பக்கப் போர் நிறுத்தத்தை 1989 ஏப்பிரல் 12ஆம் திகதி அன்று அறிவித்த பிரேமதாசா அவர்கள், அமைதியைக் கடைப்பிடிக்குமாறு இந்திய அமைதிப் படையையும் கேட்டுக்கொண்டார். பிரேமதாசாவின் பகிரங்க அறிவித்தலுக்குப்

பதிலாக, விடுதலைப் புலிகள் அரசுத் தலைவருக்கென வெளியிட்ட காரமான பகிரங்கக் கடிதம் ஒன்றிலே, "ஒடுக்குமுறையில் ஈடுபட்டிருக்கும் இந்திய இராணுவம் எமது மண்ணை விட்டு அகலும் வரை, போர் நிறுத்தம் என்ற பேச்சுக்கே இடமில்லை" என்று கூறி சிறீலங்கா அரசுத் தலைவரின் போர் நிறுத்த அழைப்பையும் நிராகரித்தார்கள். இந்திய இராணுவம் திருப்பி அழைக்கப்படுவதற்கான ஏற்பாடுகளைத் தாம் செய்வார் என்று தேர்தல் வாக்குறுதியாக வழங்கியதைப் பிரேமதாசா அவர்கள் கைவிட்டு விட்டதற்காக அவரை மிகக் காரமாகவும் புலிகள் தங்கள் பகிரங்கக் கடிதத்தில் கண்டித்திருந்தார்கள். அதன் உட்கருத்தையும் புலிகளின் கடுப்பையும் பிரேமதாசா புரிந்து கொண்டார். இந்திய ஆக்கரமிப்பு இராணுவத்துக்கு எதிராக விடுதலைப் புலிகள் நடத்திக் கொண்டிருந்த தற்காப்பு போராட்டம் மட்டில், பிரேமதாசாவின் தேசியப் பற்றும், இந்திய எதிர்ப்பு உணர்வும் அனுதாபம் உடையவையாக இருந்தன. விடுதலைப் புலிகளைச் சாந்தப்படுத்தவும் தமது நிர்வாகத்தில் அவர்கள் நம்பிக்கை வைக்கச் செய்ய வேண்டுமென்றால், இந்தியப் படை வெளியேற்றம் பற்றித் தாம் ஒரு பகிரங்க அறிவித்தல் கொடுக்க வேண்டும் என்பதை அவர் உணர்ந்திருந்தார். இதற்கு அமைவாக 1989 ஏப்பிரல் 13 அன்று கொழும்பு புறநகர்ப் பகுதிப் பௌத்த வைபவம் ஒன்றில் கலந்து கொண்டு உரையாற்றும்போது, இந்திய அமைதிப் படைகளை மூன்று மாதத்துக்குள் இந்திய அரசு முற்றாகத் திருப்பி அழைத்துவிட வேண்டும் என்று பகிரங்கமாக அறிவித்தல் கொடுத்தார். அதே நாளில், சிறீலங்காவின் வெளியுறவு அமைச்சர் ரஞ்சன் விஜயரத்தினா அவர்கள் அமைதிப் பேச்சுவார்த்தைக்கு வருமாறு விடுதலைப் புலிகளுக்கு அழைப்பு விடுத்தார். சம்பவத் திருப்பங்களால் திருப்தியடைந்த விடுதலைப் புலித் தலைமை, லண்டனில் உள்ள தனது தலைமைப் பணிமனையில் இருந்து சிறீலங்கா அரசுத் தலைவருக்குக் கடிதம் ஒன்று அனுப்பியது. பேச்சுவார்த்தைக்கான அழைப்பைத் தாம் ஏற்பதாகவும், அது நடைபெறுவதற்கான ஏற்பாடுகளை அரசு செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டது. அந்தக் கடிதத்தை உடனடுத்து, அதிகாரம் பெற்ற பிரதிநிதியாகவும் முக்கிய பேச்சாளராகவும் பாலாவை விடுதலைப் புலிகளின் தலைமை நியமித்தது. இந்தச் சம்பவங்களை அடுத்து, அமைதி முயற்சிக்காகச்

சிறீலங்காவுக்குப் பயணம் புரிவதற்கான ஏற்பாடுகளில் பாலாவும் நானும் ஈடுபட்டோம்.

நாம் 1989 ஏப்ரல் 26ஆம் திகதியன்று கொழும்பு சென்றடைந்தோம். கொழும்பு ஹில்டன் உல்லாசப் பயணிகள் விடுதியில் நாம் தங்க வைக்கப்பட்டோம். அன்று மாலை அரச அணி ஒன்று மரியாதைச் சந்திப்பிற்காக வந்தது. அதில் அரசுத் தலைவரின் செயலர் கே.எச்.விஜயதாசா, பாதுகாப்பு செயலர் ஜெனரல் சேப்பால ஆட்டிகல, வெளியுறவு அமைச்சின் மூத்த அதிகாரி பீலிக்ஸ் டயஸ் அபேசிங்கா, ஆகியோர் இருந்தனர். அந்தச் சிறிய சந்திப்பில், பேச்சுவார்த்தைக்கு புலிகள் சம்மதித்ததை ஒட்டி அரசுத் தலைவர் மகிழ்ச்சி அடைந்திருப்பதாக விஜயதாசா கூறினார். ஏனைய போராளிகள் கொழும்புக்கு கொண்டுவரப்பட்ட பின், அரசுத் தலைவர் புலிகளின் அணியைச் சந்திப்பார் என்றும் கூறப்பட்டது. மறுநாள், சேப்பால ஆட்டிக்கல அவர்களும், தளபதி ரணதுங்காவும் விடுதிக்கு வந்தார்கள். வடபகுதிக் காடுகளில் இருந்து புலிப் பிரதிநிதிகளைக் கொண்டு வருவதற்கான வழிமுறைகளையும், எப்போது பேச்சுவார்த்தை நடத்துவது என்பது பற்றிய விபரங்களையும் ஆராய்ந்தோம். வன்னிப் பயணம் தொடர்பாகப் பரப்புரை நடத்தவும், தேர்ந்தெடுத்த ஊடகவியலாளர்களை உலங்குவானூர்தியில் ஏற்றிச் செல்வது என்றும் தீர்மானிக்கப்பட்டது. பயணம் 1989 மே 3இல் நடைபெறும் என்றும் முடிவாகியது.

## பிரேமதாசாவுடன் சந்திப்பு

வன்னியிலிருந்து நாம் விடுதியை அடைந்ததும், அரசுத் தலைவர் பிரேமதாசா அவர்களை, மறுநாள் மே 4ஆம் திகதி 5 மணிக்கு சந்திக்க ஏற்பாடு செய்திருப்பதாக தெரிவிக்கப்பட்டது. இரு தரப்பு நலன்களோடு சம்பந்தப்பட்ட விடயங்களைப் பற்றியே பேசுவது என்றும், இந்தச் சந்திப்புக்கு ஒரு நல்லெண்ண அணுகுமுறையோடு செல்ல வேண்டும் என்றும், தீர்மானித்தோம். அப்படிச் சென்றால், பேச்சுவார்த்தையும் பயனுள்ளதாக அமையும் என்றும், விளைவும் நல்லதாகவே இருக்கும் என்றும் கருதினோம். பேச்சுவார்த்தை தொடங்கும் முதற்கட்டத்தில் அரசியல் முரண்பாடுகள் எழுவதற்கு இடமளிக்கக்கூடாது என்பதில்

உறுதியாக இருந்தோம். பேச்சுவார்த்தைகள் வெற்றி பெற வேண்டும் என்பதில் இரண்டு பக்கத்துக்கும் நிறையத் தேவை இருந்தது. எமது நோக்கை வென்றடையப் பிரேமதாசா அவர்களுடன் நல்லுறவு ஏற்படுத்துவது அவசியமாக இருந்தது. பிரேசமதாசாவைப் பற்றியும், அவர் எப்படியான மனிதர், அவருடைய சொந்த வரலாறு என்ன, அவருடைய அரசியல் சித்தாந்தம் என்ன என்பது பற்றிய முழுமையான விபரங்களை பாலா எமக்கு எடுத்துரைத்தார். கொழும்பிலே ஓர் இளம் ஊடகவியலாளராக பாலா இருந்த காலத்தில், பிரேமதாசாவைத் தனிப்பட்ட முறையிலே அறிந்திருந்தார். தாழ்த்தப்பட்ட சமூகத்தில், எளிமையான நிலையிலே பிறந்த பிரேமதாசா, நாட்டின் ஆக உயர்ந்த நிலைக்கு, கடும் உழைப்பினாலும், விடா முயற்சியாலும், சுயகட்டுப்பாட்டாலும் உயர்ந்திருந்தார். அவர் ஒரு கவிஞரும், நாவலாசிரியருமாவார். இளைஞராக இருந்தபோது, வலதுசாரி முதலாளித்துவக் கட்சி ஒன்றிலே சேர்ந்திருந்த போதிலும், ஒரு சோஷலிச அரசியல் சித்தாந்தத்தை அவர் தழுவியதோடு, வறிய மக்களின் சமூக - பொருளாதார மேம்பாட்டுக்காக அர்ப்பணிப்போடு பணிபுரிந்தார். உள்ளூராட்சி அமைச்சராகவும், பின்னர் பிரதம மந்திரியாகவும், பதவி வகித்த காலத்தில், பொருளாதார சமத்துவத்தையும், நீதியையும் நிலைநாட்டுவதற்காகச் சமுதாய நலன்புரி இயக்கங்களை நாடுபூராகவும் அறிமுகம் செய்தார். அவருடைய 'லட்ச வீட்டுத் திட்டம்' மக்கள் தலைவராக அவரை உயர்த்தியது. முற்போக்கான அரசியலை அவர் சாதகம் செய்தார். ஆனால் அவருடைய பணியும் செல்வாக்கும் நாட்டின் தெற்கில் உள்ள சிங்கள குடிமக்கள் மத்தியிலும், தொழிலாளர் மத்தியிலுமே கவனம் செலுத்தியது. நீண்ட கால, பலதரப்பட்ட அரசியல் அனுபவம் பெற்றவராக பிரேமதாசா இருந்தபோதிலும், தமிழ் மக்களின் விடுதலைப் போராட்டத்தின் பின்னணியிலுள்ள அசைவியக்கத்தை அவரால் முழுமையாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. தமிழ் மக்களுக்குப் பிராந்தியத் தன்னாட்சியோ, சுயாட்சியோ வழங்கப்படுவதை அவர் எதிர்த்தார். அவர் எப்பொழுதுமே ஒரே மக்கள், ஒரே தேசிய இனம், ஒரே தாயகம் என்ற கொள்கையுடன் வாழ்ந்தவராதலால், தமிழர் தாயகம், பிரிவினை, என்ற எண்ணக் கருக்களை தீண்டத்தகாத பழியுரைகள் என்றே நிராகரித்தார். பிரேமதாசா ஒரு உள்ளார்ந்த சிங்கள பௌத்தத் தேசியவாதி. தமது மேலாண்மைவாத

முலாமை ஒற்றை ஆட்சி அரசியல் என்ற போர்வையால் மறைத்துக் கொண்டார். அவருடைய நீண்ட அரசியல் வரலாற்றில், தமிழர் பிரச்சினையைத் தீர்ப்பதில் அவர் என்றுமே தீவிர ஈடுபாடு காட்டியதில்லை. மாறாக, யூ.என்.பி ஆட்சியின் அடக்குமுறை என்ற இருண்ட வரலாற்றில் மௌனமாக அரசுடன் ஒத்துழைத்த நிலையையே அவர் கடைப்பிடித்திருப்பதைக் காணலாம். அவருடைய அதிதீவிர தேசிய உணர்வுகள், இந்தியா மட்டில் அவரை அச்சமும் சந்தேகமும் கொள்ளச் செய்தன. இந்தியாவின் அதிகார முனைப்பு, சிறீலங்காவுக்கு அச்சுறுத்தலாக அமைவதாக அவர் கருதினார். இந்திய-இலங்கை ஒப்பந்தத்தையும், இந்திய அமைதிப் படையையும் அவர் கடுமையாக எதிர்த்தார். இந்தியப் படைகளை நாட்டிலிருந்து வெளியே தள்ள வேண்டும் என்று உறுதி பூண்டிருந்தார். இவையெல்லாம் இந்திய மேலாண்மை தொடர்பாக அவர் உள்ளூரக் கொண்டிருந்த அச்சத்தின் வெளிப்பாடே என்று கூறலாம். இந்த வகையில் எமது போராட்டத்துக்குப் பெரும் அச்சுறுத்தலாகி விட்ட இந்திய ஆக்கிரமிப்பு இராணுவத்தை வெளியேற்றும் விடயத்தில், புலிகளுடைய நாட்டமும் பிரேமதாசா அவர்களுடைய நாட்டமும் ஒன்றிணைந்தன என்பதில் ஐயமில்லை. இந்தப் பொதுநலனின் அடிப்படையில் பிரேமதாசாவுடன் பேசலாம் என்று நாம் கருதினோம். அரசுத் தலைவர் பிரேமதாசாவின் பிரத்தியேக வதிவிடமான சுக்சித்ராவுக்கு பாலா, நான், யோகரெத்தினம் யோகி, பரம மூர்த்தி ஆகியோர் சிறப்பு அதிரடிப் படைத் தொடரணி முன்னும் பின்னுமாக வர அழைத்துச் செல்லப்பட்டோம். சிறீலங்கா கொடி ஒரு பக்கம், அரசுத் தலைவர் இலச்சினை சுவரில்; அனைத்துலக முக்கியஸ்தர்கள் பிரேமதாசா அவர்களுடன் சந்தித்திருப்பதைக் காட்டும் சில நிழற்படங்கள் அதுவே அந்த வரவேற்பறை! எம்மைச் சந்திக்க அரசுத் தலைவர் முன்னே வந்தார்.

நான் நிழற்படங்களில் பார்த்த அதே பிரேமதாசா அவர்கள். சுத்தமான தோற்றம். கேசம் சிறிதும் கலையாது மினுமினுக்கும் கறுத்த முடி. பளிச்சென்ற வெள்ளைத் தேசிய ஆடை. அவருடைய தோற்றம் அவரைப் பற்றிய பொதுக் கருத்தைப் பிரதிபலித்தது. பிரேமதாசா அவர்கள் ஒவ்வொன்றையும் வரிசைக் கிரமமாக செய்யும் மனிதர்; தனிப்பட்ட நடத்தையிலும் கடும் ஒழுங்கைக் கடைப்பிடிப்பவர்; தம்மைச் சூழ உள்ளவர்களிடம் அதையே எதிர்பார்ப்பவர்.

அவருடைய அலுவலகத்துக்குள் நாம் நுழைந்தபோது, என்னோடு கைகுலுக்க அவர் முனையவில்லை. ஆசிய மரபுப்படி கைகூப்பினார். தமிழ், சிங்கள மரபுகளில் ஆண்களும் பெண்களும் கைகுலுக்குவதில்லை. கை கூப்பி, தலை சாய்த்து வணக்கம் தெரிவிப்பர். வணக்கம் தெரிவிக்கும் போது எனக்குள்ளே ஒரு குற்ற உணர்வோ, ஆசாடபூதித்தனமோ ஒரு கணம் ஓடி மறைந்தது. ஏனென்றால் தமிழ் மக்களுக்கு எதிரான ஒடுக்குமுறையை ஏவிவிட்ட முக்கியமானவர்களில் ஒருவர் என்று நான் கண்டித்த ஒருவருடன் வணக்கம் பரிமாறிக் கொண்டிருந்தேன். எனது 'பகைவர்' எனப்பட்டவர், கலகலப்பும் விருந்தோம்பலும் உடையவராகக் காணப்பட்டார். ஆனால் வெறும் இனிய சமூக ஊடாட்டப் பண்புகளால் மட்டும் ஒருவர் அரசுத் தலைவராக வந்து விடுவதில்லை. அப்பழுக்கற்ற தோற்றமுடைய இந்த மனிதரின் பின்னே வேறு என்ன இருக்கிறது என்பதை அறிவதில் ஆர்வமாக இருந்தேன். பேச்சுவார்த்தைக்கான தமது அழைப்பை விடுதலைப் புலிகள் சாதக நிலையில் ஏற்றது தமக்கு மகிழ்ச்சி தருவதாக இராஜதந்திர நல்லுறவுக்கு அமைவாக அவர் முதலில் கூறினார். பேச்சுவார்த்தைக்கு எந்த முன் நிபந்தனையும் விதிக்காது விட்டமைக்காக, பாலா தமது பாராட்டைத் தெரிவித்தார்.

தொடக்கத்தில், தாம் தமிழ் மக்களின் நண்பர் என்றும், அவர்களுடைய இடர்பாடு நிலையையும் அவர்களுடைய அரசியல் போராட்டத்தையும் தாம் புரிந்து கொண்டிருப்பதாகவும் கூறினார். அதை விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள் நம்ப வேண்டும் என்பதிலும் பிரேமதாசா அக்கறை காட்டினார். அவரைப் பொறுத்த வரையில் இனப்பிரச்சினை என்பது வெகு சாதாரண பிரச்சனை; அண்ணனுக்கும் தம்பிக்கும் இடையே உள்ள உள்வீட்டு உறவுப் பிரச்சினை. சம்பந்தப்பட்டவர்கள் தம்மிடையே தீர்க்க வேண்டிய பிரச்சினை. சிறீலங்காவின் உள்நாட்டு விவகாரத்தில் இந்தியா ஈடுபடக்கூடியதாக அரசியற் களத்தை உருவாக்கிய முன்னாள் அரசுத் தலைவர் ஜூனியஸ் ஜெயவர்த்தனா மீது அவர் குற்றஞ்சுமத்தினார். இதனாலேயே நாடு பூராவும் வன்செயல் இடம்பெற்று, இரத்த ஆறும் கிளர்ச்சியும் ஏற்பட்டதாக அவர் கூறினார். தாம் முன்வைக்கும் முக் கோட்பாடுகளை - அதாவது கலந்துரையாடல், சமரசம், கருத்தொற்றுமை - ஆகியவற்றைக் கடைப்பிடித்து, 'தீவுப் பிரதேசத்தில்' வாழும் அனைத்து இனங்களும் திருப்தி அடையும்

வகையில் இனப்பிரச்சினையைத் தீர்த்து விடலாம் என்று அவர் வலியுறுத்தினார். ஒற்றையாட்சி அரசியல் யாப்புக்கு அமைவாகத் தீர்வு காணமுடியும் என்று அவர் எப்போதும் கூறிவந்த கருத்தை எம்முன்னும் வலியுறுத்தினார். முக்கிய பேச்சுவார்த்தையாளர் என்ற நிலையில், முரண்பாடுகளைத் தோற்றுவிக்கும் பிரச்சினைகளைத் தவிர்க்க வேண்டும் என்பதில் பாலா குறியாக இருந்தார். ஆகவே, பேச்சை உடனடி அவசியமான பிரச்சினையின் பக்கம் அதாவது இந்திய இராணுவ ஆக்கிரமிப்பு, தற்காப்புப் போர், தமிழ்ப் பொதுமக்கள் படும் இன்னல்கள் ஆகியவற்றின் பக்கம் திசை திருப்பினார். ஏனென்றால், இவையே விடுதலைப் புலிகளுக்கும் தமிழ் மக்களுக்கும் அங்கலாய்ப்பைத் தோற்றுவித்து இருந்தன. ஏற்கனவே தயாரித்த மெய் நிகழ்வுகளையும் புள்ளி விபரங்களையும் பாலா முன் வைத்ததோடு, வடக்குக் கிழக்கின் உண்மையான நிலை பற்றியும், இந்திய இராணுவ ஆக்கிரமிப்புக்கும் சித்திரவதைக்கும் உட்பட்டிருக்கும் தமிழ்ப் பொதுமக்கள் படும் இன்னல்கள் பற்றியும் அவர்கள் வாழும் நிலைபற்றியும் கச்சிதமான பகுப்பாய்வு ஒன்றை வழங்கினார். இந்தியத் தலையீடு தமிழ் மக்களின் பிரச்சினையைத் தீர்ப்பதற்குப் பதிலாக, அதை ஆபத்து மட்டத்துக்கு நிலைகுலைத்திருந்தது. தமிழ் மக்கள் சொல்லொணாத் துயரை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆயிரமாயிம் மக்கள் அழிந்தும் போனார்கள். இந்திய அமைதிப் படை வடக்குக் கிழக்கு மீது இரும்புத்திரையைப் போர்த்திவிட்டு, வெளி உலகுக்குச் செய்தி எதுவும் கசியாது பார்த்துக் கொண்டது. இவற்றையெல்லாம் பாலா விளக்க, அரசுத் தலைவர் திகைத்துப் போய்க் கேட்டுக் கொண்டிருந்தார். இனி, இந்திய இராணுவ ஆக்கிரமிப்புக்கு எதிராக, தெற்கிலே பரந்த அடிப்படையில் மறுப்புக்களும், எதிர்ப்பும், கலகங்களும் நடந்தாலும், ஆக்கிரமித்து நிற்கும் இந்தியப் படையினருக்கு எதிரான ஆயுதப் போராட்டத்தில் நேரடியாக ஈடுபட்டிருப்பவர்கள் விடுதலைப் புலிகளே என்பதால், உண்மையான நாட்டுப்பற்றுக்காக பாராட்டப்பட வேண்டியவர்கள் புலிகளே என்றும் அரசுத் தலைவர் முன்னிலையில் பாலா எடுத்துரைத்தார். பிரேமதாசா அவர்களுக்குள் இருக்கும் தேசியவாதி உடனே விழித்திருக்க வேண்டும். உடனேயே அவர் பிரபாகரன் அவர்களையும் அவருடைய கெரில்லாப் படையினரையும் அவர்களுடைய துணிச்சலுக்காகவும் அர்ப்பணிப்புக்காகவும்

நாட்டுப்பற்றுக்காகவும் பாராட்டினார். ஜே.வி.பி போராளிகள் கோழைகள் என்றும், சூதுவாதற்ற பொதுமக்களைக் கொல்லும் அவர்கள் ஆக்கிரமிக்கும் இந்திய இராணுவத்தை எதிர்த்து ஒரு கல்லைக் கூட வீசவில்லை என்றும் அவர் பரிகசித்தார்.

தமிழ் மாணவர்களை வலுக்கட்டாயமாகக் குடிமக்கள் தொண்டர் படையில் சேர்த்து அதனைத் தமிழ்த் தேசிய இராணுவம் என்ற பெயரில் தனியார் படையாக மாற்றி அதன் மூலம் வடக்குக் கிழக்கு மாகாண சபையில் ஈ.பீ.ஆர்.எல.எ்.ப் இன் ஈடுபாட்டைப் பலப்படுத்த இந்தியர்கள் முயல்வதாகவும், இதை விடுதலைப் புலிகள் மும்முரமாக எதிர்ப்பதாகவும் பாலா விளக்கினார். வடக்கு கிழக்கு மாகாண சபை, தில்லுமுல்லு வழிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட சபை என்றும் தமிழ் மக்கள் அதை வெறுக்கிறார்கள் என்றும் பிரேமதாசா அவர்களுக்கு விபரமாகத் தெரிவிக்கப்பட்டது.

பேச்சுவார்த்தை தொடங்கப்படுவதற்கு முன்னதாக, பேச்சுவார்த்தைக்கான ஒரு நிகழ்ச்சி நிரல் முதலில் வரையப்பட வேண்டும் என்று பாலா கேட்டுக் கொண்டார். இந்திய - இலங்கை ஒப்பந்தத்தின் விதிகளுக்கு அமையப் பேச்சுவார்த்தை நடத்தினால் அதில் விடுதலைப் புலிகள் ஈடுபாடு காட்ட மாட்டார்கள் என்றும் அரசுத் தலைவரிடம் பாலா வலியுறுத்திக் கூறினார். ஒப்பந்தத்தை விடுதலைப் புலிகள் எடுத்த எடுப்பிலேயே நிராகரித்து விட்டார்கள்; ஆகவே, பின் வாயிலால் அதைக் கொண்டுவர அவர்கள் இடமளிக்கமாட்டார்கள் என்றும் முன் எச்சரிக்கையாக பாலா கூறிவைத்தார். இந்த நிலைப்பாடு பிரேமதாசா அவர்களுக்கும் ஏற்புடையதாகவே காணப்பட்டது. இந்திய-இலங்கை ஒப்பந்த நிபந்தனைகளின் அடிப்படையிலேயே பேச்சுவார்த்தை அமைய வேண்டும் என்று, இந்திய வெளியுறவுச் செயலர் சிங் அவர்கள் தம்மிடம் வேண்டுகோள் விடுத்த போதிலும் தாம் அதை நிராகரித்து விட்டதாக அரசுத் தலைவர் அப்போது கூறினார். பயனுள்ள இரண்டு மணிநேரக் கலந்துரையாடல் அத்துடன் நிறைவு பெற்றது. இந்தத் தொடக்கச் சந்திப்பை ஒட்டி இரண்டு தரப்பினரும் மகிழ்வடைந்தனர். இறுதியில் அமைதி முயற்சியை வசதிப்படுத்துவதற்காக, விடுதலைப் புலிப் பிரதிநிதிகளைத் தாம் கிரமமாகச் சந்திப்பார் என்று பிரேமதாசா உறுதிமொழியளித்தார். பேச்சுவார்த்தைகளின் போது ஏதாவது இடர்பாடு நேர்ந்தால் நேரடியாகத் தொலைபேசியில் தம்மோடு

தொடர்பு கொள்ளுமாறும் அவர் பாலாவிடம் தெரிவித்தார்.

## ஆக்கிரமிப்பு இராணுவம்

மறுநாள் - மே 5ஆம் திகதி அந்தத் தூதுக் குழுவிற்கும், விடுதலைப் புலிகளுக்கும் இடையே முதல் சுற்றுப் பேச்சுவார்த்தை ஹில்டன் விடுதியில் நடந்தது. அரசின் பிரதிநிதிகளாக அரசுத் தலைவரின் செயலர் கே.எச்.ஜே.விஜயதாசா, வெளியுறவுச் செயலர் பேணாட் திலகரட்ண, அரசுத் தலைவரின் அனைத்துலக விவகார மதியுரைஞர் பிரட்மன் வீரக்கூன், பாதுகாப்பு அமைச்சரின் செயலர் தளபதி சிறில் ரணதுங்க, பாதுகாப்புச் செயலர் சேப்பால ஆட்டிக்கல, அமைச்சரவைத் துணைக்குழுச் செயலர் டபிள்யூ. ரீ.ஜயசிங்கா, தேர்தல் ஆணையாளர் பீலிக்ஸ் டயஸ் அபேசிங்க ஆகியோர் கலந்து கொண்டார்கள். உயர் நிலை அதிகாரிகள் அடங்கிய இரண்டாவது மட்ட அணியே அரச குழுவாக ஒன்றிணைக்கப்பட்டிருந்தது. இவர்கள் பிரேமதாசா அவர்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாகவும் இருந்தார்கள். தொடர்ந்து நடக்க இருந்த பேச்சுவார்த்தைகளுக்கு வழிமுறைகளையும் நிகழ்ச்சி நிரலையும், வகுப்பதே இந்தச் சந்திப்பின் நோக்கமாக இருந்தது. கலந்துரையாடல் இரண்டு மணி நேரத்துக்குக் கூடுதலாக நடைபெற்றது. இந்திய அமைதிப் படையின் கொடுமைகளையும், மனித உரிமை மீறல்களையும் விடுதலைப் புலிகள் அணி விரிவாக எடுத்துரைத்ததோடு, பேச்சுவார்த்தையின் மையப் பொருளாக இந்தியப் படையின் வெளியேற்றம் அமைய வேண்டும் என்றும் வாதிட்டது. உடனடி நடவடிக்கைக்குத் தேவையானதாக, மாகாண நிர்வாகத்தின் பங்கு, தமிழ்ப் பகுதிகளில் சிங்களக் குடியேற்றம் தோற்றுவிக்கும் பிரச்சினைகள், தமிழ் அகதிகளின் பிரச்சினை, வடக்குக் கிழக்கில் மீளக் குடியேற்றம், மீள நிர்மாணம் செய்தல், ஆகியவையும் நிகழ்ச்சி நிரலில் சேர்க்கப்பட்டன. நிகழ்ச்சி திட்டம் ஏற்கப்பட்டதும் அடுத்த சந்திப்பு மே 11ஆம் திகதிக்கு ஒத்தி வைக்கப்பட்டது.

பேச்சுவார்த்தை தொடங்குவதற்கு ஒரு மணி நேரம் முன்னதாக, மே 11ஆம் திகதியன்று அரசுத் தலைவருடன் ஒரு சுருக்கமான சந்திப்பு நடந்தது. பேச்சுவார்த்தை எப்படித்

தொடர்ந்து நடைபெற வேண்டும் என்பதை, பிரேமதாசா தெளிவாகக் குறிப்பிட்டார். அவர் ஒரு யதார்த்தவாதி. தந்திரம் மிக்க திட்டமிடலாளர். விடுதலைப் புலிகளுடனான பேச்சு எவ்வாறு இடம்பெறவேண்டும் என்று தமது சொந்தத் திட்டத்தை அவர் மிகக் கவனமாக வகுத்திருந்தார். அந்தத் திட்டத்தின் படி, அரசுப் பேச்சுவார்த்தை அணி, படிப்படியாக உயர் நிலைக்கு விரிவாக்கம் செய்யப்பட இருந்தது. மூத்த அமைச்சர்களை உள்ளடக்கும் அரசியல் மட்டத்துக்கு உயர்த்தப்பட இருந்தது. தொடக்கத்தில், வடக்குக் கிழக்கு மக்களின் உயிர்வாழ்வுக்கான பிரச்சினைகளை அணுகி அடுத்த கட்டங்களில் இனப்பிரச்சினையைத் தீர்ப்பது தொடர்பான அரசியல் விவாதங்களாக வளர்தெடுக்க அவர் எண்ணியிருந்தார். அது தவிர, பேச்சுவார்த்தைச் சுற்றுக்களின் இடையே, ஓய்வுக்கும் அவர் இடமளிக்க விரும்பினார். அந்த ஓய்வுக் காலத்தில் விடுதலைப் புலிப் பேச்சுவார்த்தை அணியினர், வடபகுதிக் காடுகளுக்குச் சென்று, பிரபாகரன் அவர்களுடன் கலந்தாலோசிக்க வசதி செய்து தருவதாக அவர் தெரிவித்தார். தமது அரச தூதுக்குழுவை அமைச்சர்கள் அடங்கிய உயர் நிலை அணியாகத் தாம் உயர்த்தியிருப்பதாகவும் அவர் எமக்குத் தெரிவித்தார். ஆயினும், முதல் அணியின் உயர் அதிகாரிகள், பேச்சுவார்த்தையின்போது, அமைச்சர்களுக்கு உதவுவார்கள் என்றும் கூறினார். அன்றைய அமர்விலும் அதன் பின்னரும், பங்குபற்றப் போகும் நான்கு அமைச்சர்களை அவர் அறிமுகம் செய்து வைத்தார். அதன் பின்னர் விவாதிக்கப்படும் விடயங்களுக்குப் பொருத்தமாக, வேறு அமைச்சர்களும், புதிதாகச் சேர்ந்து கொள்வார்கள் என்றும் கூறினார். அரச அணியை வழி நடத்தும் பிரதான பேச்சுவார்த்தையாளராக, அப்போது உயர்கல்வி, அறிவியல், தொழில்நுட்பம் ஆகியவற்றுக்கு அமைச்சராக இருந்த ஏ.சீ.எஸ்.ஹமீது அவர்களை, அரசுத் தலைவர் நியமித்தார். ஹமீது அவர்கள், முன்னாளில் ஜெயவர்த்தனா அரசின் வெளியுறவு அமைச்சராகத் திகழ்ந்தவர். அரச அணியில் நியமிக்கப்பட்ட ஏனைய அமைச்சர்களில், வெளியுறவு அமைச்சர் ரஞ்சன் விஜேரத்னா, கைத்தொழில் அமைச்சர் ரணில் விக்ரமசிங்கா, வீடமைப்பு நிர்மாண அமைச்சர் சிறீசேன கூரே, ஆகியோரும் சேர்க்கப்பட்டனர். இரண்டு அணிகளும் மனம் திறந்து கலந்துரையாட வேண்டும் என்று அறிவுரை கூறிய பிரேமதாசா

அவர்கள், விவாதத்தைத் தவிர்த்துக் கொண்டு சரியான பேச்சுவார்த்தை நடத்துமாறும் ஆலோசனை வழங்கினார். கலந்தாலோசித்தல், சமரசம், கருத்தொருமிப்பு, என்ற தமது முத்தத்துவத்தை விளக்கிய பின், ஹில்டன் விடுதிக்குச் சென்று கலந்துரையாடலைத் தொடர இரண்டு அணிகளையும் அவர் அனுப்பினார். அமைச்சர்கள் அணியுடனும், அரசுத் தலைவருடன் தனியாகவும் பலசுற்றுப் பேச்சுவார்த்தைகளை நடத்தினோம். எல்லாமாக ஒன்பது அமர்வுகள் 1989 மே 4இல் இருந்து மே 30 வரை நடைபெற்றன. அமைச்சரணியுடன் நாம் நடத்திய அமர்வுகளின்போது, தமிழர் தாயகம் மீது இந்திய இராணுவத்தின் ஆக்கிரமிப்புப் பற்றியும் தமிழ் மக்கள் மீது நடத்தப்படும் அட்டூழியங்கள் பற்றியும் குறிப்பாகக் கவனம் செலுத்தினோம். புலிகளுக்கும் தமிழ் மக்களுக்கும் இவை முக்கியமான வாழ்வா சாவா என்ற பிரச்சினைகளாகும். இந்திய அமைதிப் படையினரின் ஒட்டுமொத்த மனித உரிமை மீறல்களை அம்பலப்படுத்தி, இந்திய இராணுவத் தலையீட்டை அனைத்துலகக் கவனத்துக்கு கொண்டுவர நாம் திட்டமிட்டோம். நெருக்கடி நிறைந்த இலங்கைத் தீவில் அமைதி பேணும் அற்புதமான பணியை இந்தியப் படைகள் புரிந்து கொண்டிருப்பதாக அனைத்துலகச் சமுதாயம் நம்பும் வகையில் ஒரு மாயை உருவாக்கப்பட்டிருந்தது, இந்திய அரசின் பலம் வாய்ந்த பரப்புரைப் பொறிமுறையையும் உலகம் பூராவும் அதற்கிருந்த இராஜதந்திர வலைப்பின்னலையும் தாக்கும் வல்லமை எம்மிடம் முன்னர் இருக்கவில்லை. இப்பொழுது அமைதிப் பேச்சுவார்த்தை கொழும்பிலே தொடக்கப்பட்டு, எமது உணர்வுகளைப் பகிர்ந்து கொண்ட பிரேமதாசா அவர்களுடைய புதிய நிர்வாகத்தின் ஆதரவும் எமக்குக் கிடைத்த நிலையில், எமது கருத்தை வெளிப்படையாகக் கூறவும் உண்மையைப் புட்டுக்காட்டவும் எமக்கு இப்பொழுதுதான் ஒரு தளம் கிடைத்தது. சிறீலங்கா அமைச்சரணியுடன் முதற் சுற்றுப் பேச்சு அமர்வுகள் நடைபெறும்போது, விடுதலைப் புலி அணியின் தலைவர் என்ற நிலையில், பாலா வடக்குக் கிழக்கில் நடைபெறும் இந்திய இராணுவ ஆட்சி தொடர்பாகத் தமிழ் மக்களின் கருத்து விதானத்தை வெளியிட்டார்.

இலங்கை வடக்குக் கிழக்கில் உள்ள தமிழர் தாயகத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் இந்தியப் படையை அமைதி காக்கும் படை என்று வகைப்படுத்தக் கூடாது என்றும்

ஆக்கிரமிப்பு இராணுவமாகக் கணிக்க வேண்டும் என்றும் அவர் தமது வாதத்தில் முதன்மைப்படுத்தியிருந்தார். இந்தச் சந்திப்புக்களின்போது நான் எடுத்த குறிப்புக்களில் இருந்து பாலா முன்வைத்த வாதங்களைப் பின்வருமாறு தொகுப்பேன்.

"அமைதி காக்கும் நடவடிக்கை என்ன என்பது தொடர்பாகத் தெளிவான ஐ.நா கருத்துருவாக்கம் ஒன்று உள்ளது. முரண்பாட்டு மோதல்களைக் கட்டுப்படுத்துவது தொடர்பாகவும், அமைதியை முன்னெடுப்பது தொடர்பாகவும், அனைத்துலக மட்டத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட நியமங்களும் தரங்களும் உள்ளன. அமைதி காக்கும் ஒரு இராணுவமானது, முரண்பாட்டு மோதலில் ஈடுபட்டிருக்கும் இரண்டு அல்லது கூடுதலான பிரிவுகளுக்கிடையே பக்கம் சாராது நிற்பது முக்கியமானது. அமைதி காக்கும் நடவடிக்கையின் முக்கிய பணி என்னவென்றால், மோதல் இடம்பெறும் பகுதிகளில் அமைதியைப் பேண அல்லது மீள நிறுவ உதவுவது. அமைதி காக்கும் நடவடிக்கை என்பது மோதலைக் கட்டுப்படுத்தும் செயற்பாடாகும். ஐ.நா மரபிலே பார்த்தால், அமைதிப் படையானது மோதல் நிலை விரிவடையாது தடுத்து, அமைதிக்கான சுமுகச் சூழலை ஏற்படுத்த ஆணைபெற்று இயங்குவது. அமைதி நடவடிக்கையிலே ஈடுபடும் இராணுவ உறுப்பினர்களுக்கு வலிந்து திணிக்கும் அதிகாரம் எதுவும் வழங்கப்படுவதில்லை. தற்காப்புத் தவிர்ந்த வேறு எதற்கும் இராணுவ உறுப்பினர்கள் ஆயுத பலத்தைப் பயன்படுத்த அதிகாரம் வழங்கப் படுவதில்லை. அத்துடன் இலகுவான பாதுகாப்பு ஆயுதங்களை மட்டுமே அவர்கள் தரித்திருப்பார்கள். போராட்டத்தில் சம்பந்தப்படுத்தப்பட்ட தரப்பினரின் இராணுவச் சமநிலை, பாதிக்கப்படும் வகையில் அமைதிப் படை நடந்து கொள்ளக் கூடாது. இவையே அமைதி காப்புச் செயற்பாட்டை வழிநடத்தும் அடிப்படை வழிமுறைகளும் கோட்பாடுகளுமாகும். அனைத்துலக மட்டத்தில் அங்கீகரிக்கப்பட்ட நியமங்கள் இவை. இந்த வழிமுறைகளுக்கும் நியமங்களுக்கும் அமைவாக அமைதிப் படைத்

தகைமையைப் பெற இந்திய இராணுவம் அருகதையுடையதல்ல. தொடக்கத்தில், இந்திய - இலங்கை ஒப்பந்த நிபந்தனைகளுக்கு அமைவாகவே, இந்திய இராணுவப் பிரிவு ஒன்று இலங்கைக்குக் கொண்டுவரப்பட்டது. சிறீலங்கா அரச படைகளுக்கும் விடுதலைப் புலிப் போராளிகளுக்குமிடையே நடக்கும் போர் முடிவுக்கு கொண்டு வரப்படுவதை மேற்பார்வை செய்வதும், அமைதியைப் பேணுவதுமே அதன் பணியாக இருந்தது. ஆனால் விரைவிலேயே இந்திய இராணுவம் முற்றிலும் வேறுபாடான பங்காற்றத் தொடங்கியது. போரில் ஈடுபட்டுக் கொண்டிருந்த ஒரு பிரிவினருடன், அதாவது விடுதலைப் புலிகளுடன் ஆயுதபாணிகளாக விரைவிலேயே மோதத் தொடங்கியது. ஆயுத மோதல், ஆயுதங்களைக் களையும் முயற்சியாகவே முதலில் கருதப்பட்ட போதிலும், விரைவில் இந்தியப் படைகளுக்கும் புலிக் கெரில்லாப் படையினருக்கும் இடையே முழுமையான போராக வடிவெடுத்தது. கடந்த 20 மாதங்களாகத் தணிவு எதுவும் இன்றிப் போர் நடந்து கொண்டிருப்பதோடு, போரில் ஈடுபட்டிருப்பவர்கள் இந்திய படையினரும் விடுதலைப் புலிகளுமே. நடுநிலை நின்று அமைதி காக்க மத்தியஸ்தம் செய்ய வேண்டியவர்கள் தாமே நேரடியாக இராணுவ மோதலில் ஈடுபட்டிருந்தால், இந்திய அமைதி காக்கும் முயற்சியின் தன்மையே கேள்விக்கு உரியதாகிவிட்டது. இந்திய இராணுவத் தலையீடும் அதன் தாக்குதல் நடவடிக்கைகளும், அமைதி காக்கும் நடைமுறை என்று ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கும் அனைத்து நியமங்களையும் மீறிவிட்டன. தமிழ்ப் பகுதிகளில் செயலாற்றிக் கொண்டிருக்கும் இந்தியப் படையை இனிமேலும் பக்கஞ்சாராப் படை என்று கொள்ள முடியாது. அது போரைக் கட்டுப்படுத்தவும் இல்லை, அமைதியைப் பேணவும் இல்லை. போராட்டம் தீவிரமடைவதைத் தடுப்பதற்குப் பதிலாக, இந்தியப் படைகள் வன்செயலையும் போரையும் தீவிரப்படுத்தியிருக்கின்றன. இந்திய இராணுவம், தான்தோன்றித்தனமாக ஆட்சி அதிகாரங்களைச்

சுவீகரித்துக் கொண்டு, இந்த நாட்டின் உள்நாட்டு விவகாரங்களில் நேரடியாகத் தலையிட்டிருக்கிறது. தமிழ்ப் பகுதிகளில் பிரசன்னமாகி இருக்கும் இந்தியப் படை அமைதி காக்கும் படையல்ல. மாறாக, ஆக்கிரமிப்பு இராணுவமே என்பது விடுதலைப் புலிகளின் தீர்க்கமான முடிவாகும்."

இந்தியப் படைகளின் பங்கும் பணியும் பற்றி, கொழும்பு அமைதிப் பேச்சுவார்த்தையில் கலந்து கொண்ட விடுதலைப் புலிப் பிரதிநிதிகள் முன்வைத்த ஆழம் மிக்க ஆய்வும், அதையடுத்து வெளியான கூட்டறிக்கைகளும், பேச்சுவார்த்தையின் நோக்கத்தையும் உள்ளடக்கத்தையும் வெளிப்படுத்தியபோது, ரஜீவ் நிர்வாகத்துக்கும் பிரேமதாசா ஆட்சிக்கும் இடையே ஒரு நெருக்குவார நிலை தோன்றியது. புதுடில்லியை அவமதிக்க விடுதலைப் புலிகளுக்கு ஒரு தளம் வழங்கியமைக்காக இந்திய வெளியுறவு அமைச்சு, சிறீலங்கா அரசிடம் கடுமையான கண்டனம் தெரிவித்தது. இந்தியாவின் பார்வையிலே, இந்திய - இலங்கை ஒப்பந்த ஏற்பாடுகளுக்கு அமைவாகவே இந்திய அமைதிப் படைகள் சிறீலங்காவின் வடக்குக் கிழக்குப் பகுதிக்கு அனுப்பி வைக்கப்பட்டிருந்தன. அதாவது, விடுதலைப் புலிகளின் ஆயுதங்களைக் களைவதன் மூலம் அமைதியை நிலைநாட்டி சிறீலங்காவுக்கு உதவுவதற்காகவே இந்திய அமைதிப் படை அனுப்பப்பட்டது. ஆனால் இப்பொழுது, சிங்கள அரசு, தனது பரம வைரியுடன் கைகோர்த்துக் கொண்டு சிங்களத்தின் போரை நடத்திக் கொண்டிருக்கும் இந்திய இராணுவப் பிரிவுகளை அவமானப்படுத்திக் கொண்டிருக்கிறது. பேச்சுவார்த்தை அரங்கிலே இந்தியாவின் கண்டனங்கள் சமர்ப்பிக்கப்பட்டபோது, அதை மறுத்துரைத்த விடுதலைப் புலிகள், அமைதியை நிலைநாட்டுவதிலும் சரி, புலிகளின் ஆயுதங்களைக் களைவதிலும் சரி, இந்திய அமைதிப் படைகள் படுமோசமான தோல்வி கண்டு விட்டன என்று சுட்டிக்காட்டினர். மாறாக, போர் விரிவாக்கம் கண்டிருந்ததோடு, இந்தியப் படைகள் தங்கள் இழப்புக்களை ஈடுகட்டுவதற்காக, தமது துப்பாக்கிகளைத் தமிழ் மக்கள் மீது பழிவாங்கும் நோக்கோடு திருப்பிக் கொண்டிருந்தன. இந்த அமைதி காக்கும் நடவடிக்கையின் போது, ஐயாயிரத்துக்கும் அதிகமான தமிழ்ப் பொதுமக்கள்

உயிரிழந்திருந்தனர். அப்பாவிப் பொதுமக்கள் உயிர்பலியாகி விட்டதைச் சுட்டிக் காட்டிய விடுதலைப் புலிப் பிரதிநிதிகள், தமிழ் மக்களை சிறீலங்கா அரசு தனது குடிமக்கள் என்று கருதுமேயென்றால், அவர்களுடைய உயிர்களைக் காப்பாற்றுவதைத் தனது கடமையும் பொறுப்பும் என ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் தர்மம் உணர்த்தினர்.

## திரு. ஹமீதின் பங்கு

புதுடில்லி தனது அதிருப்தியை வெளியிட்டதையடுத்து, ஒவ்வொரு அமர்வின் பின்னரும் ஊடகங்களுக்கான கூட்டறிக்கைகளைத் தயாரித்து வெளியிடுவது கடினமாகியது. இந்தக் கடினமான பணி திரு. ஹமீது அவர்களிடமும் பாலாவிடமும் என்னிடமும் ஒப்படைக்கப்பட்டது. இந்திய - இலங்கை ஒப்பந்தம் மீதான கண்டனம், இந்தியப் படைகள் புரியும் அட்டூழியங்கள், இந்திய அமைதிப் படைகள் வெளியேற்றப்பட வேண்டும் என்ற கோரிக்கை ஆகியவையே பேச்சுவார்த்தையில் பெரிதும் அலசப்பட்ட விடயங்களாக இருந்ததால், இந்திய அரசுக்கு மனம் நோகடிக்காத அல்லது ஆத்திரமூட்டாத வகையில் கூட்டறிக்கைகளைத் தயாரிப்பது சவாலாக அமைந்தது. சில வேளைகளில் சில வாக்கியங்களைத் தயாரிக்கவே பல மணிநேரம் பிடித்தது. கலந்துரையாடலின் கருவும் உள்ளடக்கமும் கூட்டறிக்கைகளில் சேர்க்கப்பட வேண்டும் என்று பாலா வலியுறுத்துவார். இந்தியாவுடன், பிரச்சினையைத் தவிர்க்க வேண்டும் என்று திரு. ஹமீது விரும்புவார். பேச்சுவார்த்தைகளின் விரிவான விளக்கங்களை நீக்கிவிட்டு, புறச்சட்டங்களை மட்டும் விட்டு வைத்தார். தமது மக்களின் இழி நிலையாலும் துயர நிலையாலும் மனப் பாதிப்புக் கண்டிருந்த பாலா, உண்மை நிலை உலகுக்கு உணர்த்தப்பட வேண்டும் என்று வாதிட்டார். இராஜதந்திரத்தில் ஆழ்ந்த அனுபவம் உடைய ஹமீது அவர்கள், அனைத்துலக உறவுகளில் ஏற்படக்கூடிய உணர்வலைகள் பற்றிய அக்கறையுடையவராக இந்தியாவை அதிருப்திப்படாது வைத்திருக்க விரும்பினார். இதனால் எமது முயற்சிக்கு நேரம் பிடித்தது. எமது பொறுமையும் சோதனைக்கு உள்ளானது. ஆனால் ஹமீது அவர்களுடன் பணி புரிவது மகிழ்ச்சியாகவும்

இருந்தது. முரண்பாடுகளைத் தீர்ப்பதில் அவர் சமர்த்தர்.

ஹமீது அவர்களைத் தேர்ந்தெடுத்தமை பிரேமதாசா அவர்களுடைய இராஜதந்திரத்தினதும் அரசியலினதும் கூர்மதி என்றே கூறவேண்டும். ஹமீது அவர்கள் இதில் சம்பந்தப்படாது போயிருந்தால், இந்தியப் படை தொடர்ந்தும் வட-கிழக்கில் இருந்திருக்கும் என்றே கூறவேண்டும். ஹமீது அவர்கள் தெரியப்பட்டதற்கு காரணம், அவர் இலங்கை முஸ்லிம் சமூகத்தைச் சேர்ந்தவர் என்பதாகும். நாட்டின் தமிழ் பேசும் இனங்களின் உறுப்பினர்கள் என்ற வகையிலே, விடுதலைப் புலிகள் அணிக்கும் ஹமீது அவர்களுக்கும் இடையிலே ஒரு நல்லிணக்கமும் கூடிப்பணி புரிவதற்கான சுமுக நிலையும் ஏற்படும் என்று பிரேமதாசா கருதினார். அது பொருத்தமானதாகவே பட்டது. ஆனால், விடுதலைப் புலிகளுடன் நடந்த பேச்சுவார்த்தையிலே ஹமீது வெற்றி கண்டார் என்றால், தமிழ் மக்கள் பால் அவர் கொண்டிருந்த பரிவுணர்வு மட்டுமே என்று குறைத்து எடை போடக் கூடாது. அவரிடம் இருந்த சிறந்த தனிப்பட்ட பண்புகளுமே காரணம் என்று கூற வேண்டும். உருவத்தில் ஹமீது குட்டையானவரே. ஆனால் ஆளுமையில் அவர் பென்னம் பெரியவர் என்பதே எனது அனுமானமுமாகும். அவருடைய திறைமை மிக்க இராஜதந்திரத்துக்கும், பொறுமைதான் காரணமா அல்லது வெளியுறவு அமைச்சராக அவர் பெற்ற நீண்டகால அனுபவம் அவரிடம் எல்லையற்ற பொறுமையைப் படிய வைத்ததா என்பதைத் தீர்மானிக்க எனது அறிவு போதாது என்பேன். ஆனால் ஹமீது அவர்களுடைய வியக்கத்தகு பண்பாக அவருடைய பொறுமையையும் நிச்சயம் குறிப்பிடலாம். பொறுமை, அவரை ஒரு அறிவாளியாகவும் ஆக்கியிருந்தது. அவருடைய உள்ளுணர்வு, கத்திமுனைக் கூர்மையானது. பேச்சுவார்த்தை அரங்கிலே அவர் வந்து அமரும்போது, குறித்த சில நோக்கங்களுடனேயே வருவார். அவற்றைச் சாதிப்பதற்கான, நன்கு தேர்ந்தெடுக்கப்பட்ட தந்திரோபாயமும் அவரிடம் இருக்கும். உண்மையில் ஒரு சதுரங்க ஆட்டத்தில் ஈடுபட்டிருப்பது போல, தமது வாதத்தையும் அவர் திட்டமிட்டிருப்பார். ஹமீது அவர்கள், தாம் திட்டமிட்ட பாதையில் பேச்சுவார்த்தையை வழிநடத்திச் செல்வதை ஒரு பார்வையாளராக இருந்து கவனித்துக் கொண்டிருக்கும் வாய்ப்பு, விடுதலைப் புலி அணியின் செயலர் என்ற வகையிலே எனக்குக் கிடைத்தது. எத்தகைய கருத்து வெளியிடப்படும் என்ற

எதிர்பார்ப்போடு ஒவ்வொரு வார்த்தையையும் அளந்தே பேசுவார். உடனடிப் பதிலும் அவரிடம் தயாராக இருக்கும். இப்படி, தமது இலக்கை நோக்கிய முடிவை எய்த, தமது விவாதத்தை அவர் நகர்த்திக் கொண்டிருப்பார். ஹமீது அவர்களுடைய இலக்கு எது என்று புரிந்து கொண்டு பாலா தம்மைத் தயாராக்குவார். இருவருக்கும் இடையே இடம்பெறும் அறிவுசார் மோதல், எமக்கு விருந்தாக அமையும். தமக்கு சம நிலையான சவாலை எதிர்கொண்டதும் மோதலை மெள்ளத் துண்டித்துக் கொள்ளும் தருணமும் ஹமீதுக்குத் தெரியும். சிறீலங்காக் குழுவின் தலைவர் என்ற நிலையில், தமது அணித் தோழர்களுடைய கருத்தமைவும் உணர்வுகளும் எப்படி இருக்கின்றன என்று நாடி பிடித்துக் கொண்டே இருக்கும் ஹமீது அவர்கள், முரண்பாடுகள் தலைதூக்கும்போது, அவற்றைச் சாதுரியமாக தவிர்த்து விடுவார். பேச்சின் தொனி பழுதுபடாமலும், இணக்கப்பாட்டிற்கு வருவது ஊறுபடாமலும் பார்த்துக் கொள்வார். பிரேமதாசா மேலும் ஒரு புத்தி சாதுர்யமான காரியம் செய்திருந்தார். கடும்போக்கு இனவாதிகளான லலித் அத்துலத்முதலியையும் காமினி திசநாயக்காவையும் பேச்சுவார்த்தை அணியிலே சேர்க்காது விட்டிருந்தார். அவர்களுக்கும் எமக்கும் இடையே கடும் கசப்புணர்வு நிலவியதால், பேச்சுவார்த்தை அரங்கிலே எதிரெதிர் இருக்கைகளில் நாம் அமர்ந்தோமேயென்றால், முதல் சுற்றுப் பேச்சையே நாம் கடந்திருப்போமா என்பது சந்தேகமே.

வெளிப்படையான அரங்கிலே பேசப்படுவதும் குறிப்பிடப்படுவதும் எப்போதும் முழுமை பெற்றுவிடுவதில்லை என்பது பெரும்பாலான, அனுபவம் மிக்க இராஜதந்திரிகளுக்குத் தெரியும். தனியாக நடைபெறும் பேச்சுவார்த்தை சில வேளைகளில் பகிரங்கப் பேச்சுவார்த்தையை விட முக்கியமானதாக அமைந்தது விடும். தனியாக நடத்தும் இராஜதந்திர முயற்சியிலே ஹமீது அவர்கள் பெருமளவு நம்பிக்கை வைத்திருந்தார். சிக்கலானதும் உள்ளார்ந்ததும், பிரச்சினையைத் தோற்றுவிப்பதுமான விடயங்களை மற்றவர்களுடைய பார்வையிற் படாது பிரத்தியேகமான சூழலில், நம்பிக்கை அடிப்படையில் நடத்தப்படுவதையே அவர் விரும்பினார். இந்த அணுகுமுறையோடு மாலை வேளைகளில் எமது விடுதியில் பாலாவுடன் தனிப்பட்ட கலந்துரையாடல்களை அவர் அடிக்கடி நடத்தினார். இப்படியான சந்திப்புக்களின் போதே பாலாவும் ஹமீது அவர்களும் ஓர் ஆரோக்கியமான

புரிந்துணர்வையும் ஒருவருக்கு ஒருவர் இடையிலான மரியாதையையும் கட்டியெழுப்பினார்கள். வடக்குக் கிழக்கு நிர்வாகம் போன்ற விடயங்களை இந்தியப் படைகள் வெளியேற்றப்பட்ட பின்னரே அணுக ஹமீது விரும்பினார். இது தொடர்பாகவும் விடுதலைப் புலிகளின் நிலைப்பாடு என்ன என்பதை பாலாவும் தெளிவுபடுத்தினார். இருவரிடமும் முதிர்ச்சி இருந்தது. ஆகவே முக்கிய கருத்து வேறுபாடுகள் தொடர்பாக தரம் கெட்ட பொது விவாதத்துக்கோ, பாதகம் ஏற்படக்கூடிய அரசியல் பிளவுக்கோ இடம் இருக்கவில்லை. தனிப்பட்ட முறையிலே பாலாவும் நானும், இனிப் பொதுவாக ஏனைய விடுதலைப் புலிகளும் ஹமீது அவர்கள் மீது மதிப்பு வைத்திருந்தோம்; அவரை விரும்பினோம். விடுதலைப் புலி அணிக்கென்று சுவை சொட்டத் தயாரிக்கப்படும் முஸ்லிம் புரியாணிகளையும் ஆட்டிறைச்சிக் கறியையும் அவர் வழங்குவார். வெறும் அரசியல் தொடர்புக்கு மேலாக, மிக முக்கயமானதான மானுட பந்தத்தை அது எம்மிடையே ஏற்படுத்தியது. மேலும் பிரபாகரன் அவர்களும் ஹமீது அவர்கள் மட்டில் பெரும் மரியாதை வைத்திருந்தார். இது இரு தரப்பினரையும் உரையாடலில் இணைத்தது. பேச்சுவார்த்தை தேவைப்பட்ட அளவு நீடிக்கவும் இது இடமளித்தது. எதிர்பாராத வகையில் நேர்ந்த ஹமீது அவர்களுடைய மரணம், துயர் தருவதாக அமைந்தது. அத்தகைய ஆற்றலும் ஆளுமையும் கொண்டவர்கள் சிறீலங்கா அரசியலில் இல்லாமற் போனது ஈடுசெய்ய முடியாத இழப்பேயாகும்.

அரசுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையே பேச்சுவார்த்தை முன்னேறிக் கொண்டிருந்தது. தமிழர் தாயகத்தில் இந்திய இராணுவத்தின் அத்துமீறல்கள் மீதே முக்கிய கவனம் செலுத்தப்பட்டது. இது புதுடில்லிக்கு அங்கலாய்ப்போடு எரிச்சலையும் மூட்டியது. ரஜீவ் நிர்வாகத்துக்கு ஒரு கடுமையான இராஜதந்திரப் பாதிப்பு நிலையை இது ஏற்படுத்தியது. ஹமீது அவர்களுடைய கவனமான தணிக்கையால் கடுமையாகக் கட்டுப்படுத்தப்பட்ட போதிலும், பகிரங்கமாக வெளியிடப்பட்ட கூட்டறிக்கைகள் உள்நாட்டிலும் அனைத்துலகிலும் இந்தியப் படைகள் புரிந்த போர்க் குற்றங்களை அம்பலப்படுத்தின. புதுடில்லியின் அதிருப்தி 1989 மே 14 இல், கொழும்பில் இருந்த இந்திய உயர் ஸ்தானிகர் லக்கன் லால் மெக்ரோத்ரா அவர்களுடைய ஊடகச் செவ்வியில்

கடுப்போடு தெரிவிக்கப்பட்டது. அதில், இந்திய அமைதிப் படையின் பணியை அவர் ஆதரித்துப் பேசியதோடு, தவறான செய்திகளை வெளியிடுவதாக அவர் புலிகளைக் கண்டித்தும் இருந்தார். மெக்ரோத்ரா அவர்களுடைய செவ்வி, உள்ளூர் ஊடகங்களால் பரவலாகப் பிரசித்தப்படுத்தப்பட்டது. தவறான எதிர்க்கருத்தையும் பரப்பியது. எனவே அமைச்சர் அணியுடனான சந்திப்பு மே 16இல் இடம்பெற்ற போது, விடுதலைப் புலிகள் அணி, அந்த விடயத்தைப் பற்றிக் குறிப்பிட்டதோடு தங்கள் பதிலுரை கூட்டறிக்கையிலே கடும் தணிக்கையின்றி உள்ளடக்கப்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டது.

வடக்குக் கிழக்கிலே அமைதியும் சுமுக நிலையும் இந்தியப் படைகளால் மீள நிறுவப்பட்டுவிட்டதாக இந்திய தூதர் முன்வைத்த கருத்தை விடுதலைப் புலிகள் அணி முற்றாக நிராகரித்தது. நேர் மாறாக அந்தப் படைகள் வன்செயலையும், பயங்கரத்தையும் தீவிரப்படுத்தியிருப்பதாகவும் தமிழ் மாநிலங்களில் தணிவின்றிப் போர் நடந்து கொண்டிருப்பதாகவும் புலிகள் வாதிட்டார்கள். விடுதலைப் புலிகளுக்கு எதிரான ஆயுதக் களைவு நடவடிக்கையில், இந்தியப் படைகள் குறைந்த பட்சப் பலத்தையே பயன்படுத்துவதாகத் தெரிவித்த இந்தியத் தூதரின் கூற்றை நிராகரித்த புலிகளின் பிரதிநிதிகள், அதிக பட்சப் பலத்தை இந்தியப் படைகள் பயன்படுத்துவதோடு கனரக ஆயுதங்களான பீரங்கி, பெரிய மோட்டார் ஆகியவற்றையும் கவச வாகனங்களையும் இயந்திரத் துப்பாக்கி பொருத்திய உலங்குவானூர்திகளையும் பயன்படுத்துவதாகக் கூறினார்கள். பொதுமக்கள் குறைந்த பட்சத் தொகையினரே தாக்குதலுக்கு உள்ளாகினர் என்று உயர் ஸ்தானிகர் அறிக்கையிட்டிருப்பது, வேண்டும் என்றே உண்மையை மறைக்கப் பார்க்கும் ஒரு முயற்சி என்று விளக்கிய புலிகள், ஐயாயிரத்துக்கும் அதிகமான தமிழ் மக்கள் கொல்லப்பட்டிருப்பதைத் தாம் ஏற்கனவே உறுதியான ஆதாரங்களுடன் நிரூபித்ததாகக் கூறினர். இந்தியர் மேற்கொண்ட ஆயுதக் களைவு முயற்சி வெற்றியளித்து இருப்பதாகவும், விடுதலைப் புலிகள் போராடும் வீச்சை இழந்து காடுகளுக்குள் ஓரங்கட்டப்பட்டிருப்பதாகவும் இந்திய தூதர் கூறியிருப்பதைப் புலி அணியினர் நிராகரித்தனர். தமது கெரில்லாப் போராளிகள் வடக்கு கிழக்கு முழுவதிலும், இந்தியப் படைகளுடன் பொருதிக் கொண்டிருப்பதாகவும், கணிசமான

உயிர்ப் பாதிப்பை ஏற்படுத்துவதாகவும் இந்தியப் படைகள் மனம் தளர்ந்து போகச் செய்திருப்பதாகவும் புலிகள் கூறினர். விடுதலைப் புலிகளுக்கு எதிராக ஆயுதக் களைவை நடத்தும் இந்தியப் படைகள் தமிழ்க் குழுக்களுக்கு ஏன் ஆயுதங்கள் வழங்கிக் கொண்டிருக்கின்றன என்றும், தமிழ்த் தேசிய இராணுவம் என்ற பெயரில் தொண்டர் படை ஒன்றை ஏன் திரட்ட வேண்டும் என்றும் கேட்டார்கள். இத்தகைய நடவடிக்கைகள் இந்திய-இலங்கை ஒப்பந்தத்தின் உண்மையான நோக்கத்தையும் அதன் முக்கிய கடப்பாடுகளையும் மீறுவதாகும் என்றும் புலிகள் வாதிட்டார்கள். தமிழ் மக்களின் அன்றாடப் பொருளாதார நடவடிக்கைகள் மீது இந்திய இராணுவம் விதிக்கும் வெவ்வேறு கட்டுப்பாடுகளாலும், தடைகளாலும் வடக்கு-கிழக்கில் உள்ள விவசாயம், கைத்தொழில், மீன்பிடி ஆகியவை வெகுவாகப் பாதிக்கப்பட்டிருப்பதையும் இதன் விளைவாக தமிழ் மக்கள் மோசமான துயரங்களை அனுபவிப்பதையும் புலிகளின் அணி விரிவாக எடுத்துரைத்தது. கூட்ட முடிவிலே இந்திய உயர்ஸ்தானிகருக்குப் பதிலளிக்கும் வகையிலே எமது கருத்துக்களைக் கூட்டறிக்கையிலே உள்ளடக்குமாறு ஹமீது அவர்களுடன் வாதாடி வெற்றி பெற்றோம்.

## பேச்சுக்களுக்கு இந்தியா கண்டனம்

ஊடகங்களுக்கான கூட்டறிக்கை உள்நாட்டிலும் அனைத்துலகிலும் பரவலாகப் பிரசித்தம் பெற்றது. இது ரஜீவ் காந்தி அரசுக்கு ஆத்திரமூட்டியது. இதன் பிரதிபலிப்பாக கொழும்பிலுள்ள இந்திய தூதரகத்திலிருந்து கண்டன அறிக்கை ஒன்று வெளியிடப்பட்டது. அந்த இந்திய அறிக்கை பின்வருமாறு அமைந்தது:

> ''சிறீலங்காவில் உள்ள இந்திய அமைதிப் படையின் பங்கும் பணியும் பற்றி, பேச்சுவார்த்தையில் ஈடுபட்டுள்ள ஒரு பிரிவின் கருத்தை சிறீலங்கா அரசின் அறிக்கைகள் வெளிப்படுத்தியிருப்பதையும் தேவையற்ற அவதூறு தெரிவித்திருப்பதையும் இந்திய உயர் ஸ்தானிகராலயம் கவனித்துள்ளது. இந்திய அமைதிப் படை இந்த நாட்டுக்கு வந்த சூழ்நிலை பற்றியோ, இந்திய மற்றும் சிறீலங்கா அரசுகளினால் அதனிடம்

கூட்டாக ஒப்படைக்கப்பட்ட கடப்பாடுகள் பற்றியோ, அதன் பணியில் உள்ள பேரிடர்பாடுகள் பற்றியோ, சிறீலங்காவின் ஐக்கியத்தையும் இறைமையையும் பாதுகாக்கும் முயற்சியில் அது புரிந்துள்ள பாரிய தியாகங்கள் பற்றியோ இந்த அறிக்கைகள் குறிப்பிடாதிருப்பதையும் உயர் ஸ்தானிகராலயம் கவனித்திருக்கிறது. இதன் விளைவாக, மக்கள் மனதில் தவறான கருத்தொன்று விதைக்கப்படலாம். தற்போது நடைபெறும் பேச்சுவார்த்தையின் நோக்கம் பரப்புரைத் தளம் ஒன்றை வழங்குவதல்ல. மாறாக சம்பந்தப்பட்ட அனைவரும் வன்செயலைக் கைவிட்டு, ஜனநாயக நீரோட்டத்துக்குள் சிறீலங்காவின் ஐக்கியத்தையும் இறைமையையும் ஏற்பதை இலக்காக கொள்ள வேண்டும் என்று நாம் கருதுகிறோம். ஆதாரமற்ற குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டால், அவற்றை நாம் சீராக்கிப் பதிலளிக்க வேண்டியிருக்கும்."

அமைச்சர் அணியோடு மே 18ஆம் திகதியன்று கூட்டம் மீளக் கூட்டப்பட்டபோது, இரண்டு அமைச்சர்கள் அந்த அணியில் சேர்க்கப்பட்டிருந்தார்கள். ஒருவர் யூ.பீ.விஜேக்கோன். அவர் பொதுநிர்வாகம், மாகாணசபை மற்றும் உள்நாட்டு அலுவல்கள் ஆகியவற்றிற்கு அமைச்சராக இருந்தார். மற்றவர் பீ.தயாரத்ன. காணி, நீர்ப்பாசனம், மகாவலி அபிவிருத்தி ஆகியவற்றிற்கு அமைச்சர் இவர். விடுதலைப் புலிகளுக்கும் சிறீலங்கா அரசுக்கும் இடையே நடைபெறும் பேச்சுவார்த்தை தொடர்பாக இந்திய அரசு வெளியிட்ட அறிக்கையில் குறிப்பிட்ட விடயங்களை விவாதிக்க விடுதலைப் புலி அணியினர் விரும்பினார்கள். புலிகளின் தலைமைப் பேச்சாளர் என்ற நிலையில், வாதாடிய பாலா, இந்திய இராணுவத்துக்கு வழங்கப்பட்ட அதிகாரப் பொறுப்பானது அமைதியை மீளக் கொண்டுவருவதும், சுமுக நிலையைத் தமிழ்ப் பகுதிகளில் ஏற்படுத்துவதுமேயன்றி, தமிழ் மக்களுக்கு எதிராகப் போர் தொடுப்பதல்ல என்று எடுத்துக் கூறினார். அமைதியைப் பேணும் மனுவுடன் அறிமுகப்படுத்தப்பட்ட இந்தியப் படையினர், வடக்குக் கிழக்கில் போர்ச் சூழலைத் தோற்றுவித்து, தெற்கிலே கொந்தளிப்பும் குழப்பமும் உருவாக்கி விட்டார்கள் என்று பாலா

கூறினார். ஹமீது அவர்கள் தமது வாதத்தை முன்வைத்துப் பேசுகையில், இந்தியப் படைகளிடம் பொறுப்பிக்கப்பட்ட அதிகாரம், அமைதியை நிலைநாட்டுவது மட்டுமல்லாமல், விடுதலைப் புலிகள் உள்ளிட அனைத்துப் போராளிக் குழுக்களிடமிருந்தும் ஆயுதக் களைவு செய்வதுமாகும் என்று வாதிட்டார். இதற்கு பதிலளித்த பாலா, ஒப்பந்தப்படி, ஆயுதக் களைவுக்காக இந்தியப் படைகளுக்கு வழங்கப்பட்ட கால அவகாசம் எழுபத்திரண்டு மணி நேரமே என்றும், இருபத்து நான்கு மாதங்கள் சென்றபோதிலும் விடுதலைப் புலிகளிடமிருந்து ஆயுதங்களைக் களைய இந்தியப் படைகளால் இயலாது போய்விட்டது என்று சுட்டிக்காட்டியதோடு, தங்கள் பொறுப்பை நிறைவேற்ற இந்திய அரசு தவறிவிட்டது என்றும் சுட்டிக்காட்டினார். அது தவிர, ஒப்பந்தத்தின் விதி ஒன்றின் படி, வடக்குக் கிழக்கு மாகாணத்தின் அனைத்து மக்களின் உயிர்க்காவலையும், பாதுகாப்பையும் இந்தியாவும் சிறீலங்காவும் இணைந்து வழங்கக் கடப்பாடுடையன என்பதை புலிகள் அணியினர் சுட்டிக் காட்டினார்கள். ஆயிரமாயிரம் பொதுமக்கள் உயிரிழந்து பெரும் ஆபத்துக்கு உள்ளான போதிலும், சிறீலங்கா அரசு வேண்டுமென்றே மௌனமாக இருப்பதாகவும் புலிகள் கண்டித்தார்கள். ஈ.பீ.ஆர்.எல்.எஃப் இன் மாகாண நிர்வாகத்தைப் பாதுகாத்துப் பேணுவதற்காகத் தமிழ் இளைஞர்களை வலுக்கட்டாயமாக ஆட்சேர்ப்பிற்கு உள்ளாக்கி, பயிற்சி வழங்கி, ஆயுதம் வழங்கி தமிழ்த் தேசிய இராணுவம் என்ற பெயரில் பலமான இராணுவக் கட்டமைப்பை இந்தியப் படைகள் கட்டியெழுப்புவதாகவும் புலிகள் முறையிட்டனர். இந்த இராணுவக் கட்டமைப்பை உருவாக்குவதால், அது தமிழ்ப் பகுதிகளில் உள்நாட்டுப் போருக்கும் இரத்தக் களரிக்கும் வழிகோலப் போகிறது என்றும் புலிப் பிரதிநிதிகள் எச்சரித்தார்கள்.

இந்திய உயர் ஸ்தானிகராலயம் வெளியிட்ட கருத்தறிக்கை பற்றிக் குறிப்பிட்ட புலி அணியினர், இந்திய அதிகாரிகள் தங்கள் கொழும்பு வருகையின் நோக்கத்தைத் தவறாகப் புரிந்து கொண்டார்கள் என்றும் கூறினார்கள். தமிழர் தாயகத்தைச் சின்னாபின்னப்படுத்தி, தமிழ் மக்களுக்குச் சொல்லொணாத் துயரத்தை ஏற்படுத்தும் போருக்கும் வன்செயலுக்கும் முடிவு கட்டவே தாம் கொழும்பு வந்திருப்பதாக விடுதலைப் புலிப் பிரதிநிதிகள் வலியுறுத்திக் கூறினார்கள். தமிழ் மக்களின் தேசிய

வேணவாவை நிறைவேற்ற வல்ல அரசியல் இணக்கம் ஒன்றைப் பேசித் தீர்க்கும் நோக்கத்துடனேயே தாம் கொழும்பு வந்திருப்பதாகவும் அவர்கள் தெரிவித்தார்கள்.

அமைச்சர் அணியுடன் 1989 மே 23இல் இடம்பெற்ற சந்திப்பின் போது தமிழ்ப் பகுதிகளில் குறிப்பாகக் கிழக்கு மாகாணத்தில் சிங்களக் குடியேற்றம் தொடர்பான விபரங்களே விவாதிக்கப்பட்டன. புள்ளி விபரங்கள், வரைபடங்கள் அடங்கிய நீண்ட ஆய்வு ஒன்றைச் சமர்ப்பித்த புலிகள், சுதந்திரம் கிடைத்த காலத்தில் இருந்து, கிழக்கு மாகாணத்தில் தொடர்ச்சியான குடியேற்றம் நடைபெற்றுக் கொண்டிருப்பதாகவும், இந்தக் குடியேற்றத் திட்டங்கள் அரசினால் நடத்தப்படுபவை என்றும், வாதிட்டார்கள். இனப் போராட்டத்தின் முக்கியமான காரணிகளில் ஒன்று, திட்டமிட்ட குடியேற்றங்களே என்றும் உறுதியாகக் கூறினார்கள். இது, தமிழ்ப் பகுதிகளின் சமுதாயக் கட்டமைப்பை மாற்றியமைத்ததோடு, தமிழ் பேசும் மக்களின் சமூக, பொருளாதார அரசியல் வாழ்வையே படுகேடாகப் பாதித்திருந்தது. இக் கொடூரமான இனவாதக் கொள்கையால் ஆயிரமாயிரம் தமிழர்களும் முஸ்லிம்களும் தமது பாரம்பரிய வாழ்விடத்திலிருந்து விரட்டப்பட்டார்கள் என்றும் புலி அணி வாதிட்டது. இது தொடர்பாகக் காரமான விவாதம் நீண்ட நேரம் இடம்பெற்றது. இறுதியில் இப் பிரச்சினையை அரசுத்தலைவரிடம் விடுவது என்று இணங்கப்பட்டது.

முந்திய சந்திப்புகளின் போது, புலிகள் எழுப்பிய கேள்விகளுக்குப் பதிலளிப்பதற்காக 1989 மே 27இல் ஹமீது அவர்கள் புலி அணியைச் சந்தித்தார். நாட்டில் இருந்து இந்தியப் படைகளை அகற்றும் விடயத்தில் அரசுத் தலைவர் உறுதியாக இருக்கிறார் என்று ஹமீது உறுதிப்படுத்தினார். நடைபெற்றுக் கொண்டிருக்கும் குடியேற்றத் திட்டங்களை நிறுத்துவதற்கு முன், குறித்த சில குடியேற்றத் திட்டங்கள் பற்றிய விபரங்களைப் படிக்க அரசுத் தலைவர் விரும்புவதாக ஹமீது கூறினார். இனி, விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள அரச படைகளுக்கும் இடையே போர் நிறுத்த ஒப்பந்தம் ஒன்றை ஏற்படுத்த அரசுத் தலைவர் விரும்புகிறார் என்றும் ஹமீது தெரிவித்தார். போர் நிறுத்த விடயம் தொடர்பாகத் தாம் பிரபாகரன் அவர்களுடன் கலந்தாலோசிக்க வேண்டும் என்று புலி அணியினர் தெரிவித்தனர். பேச்சுவார்த்தை தொடங்கியதில் இருந்தே பிரகடனப்படுத்தாத போர் நிறுத்தம் நிலவுவதை அவர்கள்

குறிப்பிட்டார்கள். நாட்டை விட்டு இந்திய அமைதிப் படை வெளியேறிய பின்னர், விடுதலைப் புலிகள் நாட்டு அரசியல் நீரோட்டத்தில் கலந்து கொள்ள வேண்டும் என்று அரசுத் தலைவர் வெகுவாக விரும்புவதாக ஹமீது கூறினார். விடுதலைப் புலிகள் தேர்தலில் நிற்கத் தயாரென்றால், வடக்குக் கிழக்கு மாகாண சபையைக் கலைத்துவிட அரசுத் தலைவர் தயாராக இருப்பதாகவும் அவர் தெரிவித்தார். இது தொடர்பாக, வன்னியில் உள்ள தலைமையுடன் தாம் கலந்தாலோசிக்க வேண்டும் என்று, புலி அணியினர் கூறினர்.

முதற் சுற்றுப் பேச்சுவார்த்தைகளின் இறுதி அமர்வு 1989 மே 28இல் நடைபெற்றது. பேச்சுவார்த்தை முன்னேற்றங்களை அளவிடும் இறுதிக் கூட்டமாக அது அமைந்தது. அது வரை இடம்பெற்ற அமர்வுகள், சம்பந்தப்பட்ட விடயங்கள் பற்றி, பெருமளவு புரிந்து கொள்ளவும் தெளிவுபடவும் வழிகோலியதாகவும், எதிர்காலப் பேச்சுவார்த்தைக்கு ஒரு உதவியான அடித்தளத்தை நிறுவியிருப்பதாகவும் இரண்டு பிரிவினரும் ஏற்றுக் கொண்டனர். அடிப்படைச் சிக்கல் இனப் பிரச்சினையே என்பதையும் இரு அணியினரும் ஏற்றுக் கொண்டதோடு, இப்பிரச்சினை சகிப்புத் தன்மையோடும், புரிந்துணர்வோடும் நேரடிப் பேச்சுவார்த்தை மூலம் தீர்க்கப்பட வேண்டும் என்பதையும் ஒப்புக் கொண்டனர்.

## காட்டில் பிரபாகரனுடன் சந்திப்பு

பாலா, நான், யோகி, மூர்த்தி, ஜுட் ஆகியோரும் எமது மெய்ப்பாதுகாவலர்களும் 1989 மே 30ஆம் திகதி பிரபாகரன் அவர்களுடன் கலந்தாலோசனை புரிவதற்காகச் சிறீலங்கா விமானப் படை உலங்குவானூர்தி ஒன்றில் வன்னிக்கு எடுத்துச் செல்லப்பட்டோம். எம்மைப் பொறுத்த வரையிலே பிரபாகரன் அவர்களையும், எமது போராளித் தோழர்களையும் சந்தித்து எமது பழைய நட்பைப் புதுப்பித்து 1987இலே இந்தியாவுக்கும் புலிகளுக்கும் இடையே போர் மூண்ட பின், நாம் அனைவரும் பெற்ற அனுபவங்களைப் பரிமாறிக் கொள்ள வேண்டும் என்ற வேணவாவும் எமக்கு இருந்தது.

பிரபாகரன் அவர்களுடைய தலைமைப் பணிமனையான 1:4 தளம் என்ற பாசறையை நோக்கி நாம் சென்றுகொண்டிருந்தோம்.

இந்தப் பிரதேசத்தில் உள்ள பாசறைகள் மீது இந்தியர் தொடரான தாக்குதல் நடவடிக்கையை நடத்தியிருந்தார்கள். யாழ்ப்பாணத் தீபகற்பத்தில் 'பவான் நடவடிக்கை' காலத்தில், விடுதலைப் புலிகளை அழித்தொழிக்க முயன்று தோற்றபின், இந்தியப் படை, வன்னிக் காடுகளில் உள்ள விடுதலைப் புலித் தளங்களை நோக்கித் திரும்பிக் குரூரம் பரவிய, ரத்தச் சகதி நிறைந்த களமாக உருமாற்றியிருந்தது. பாரிய இராணுவ நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. விடுதலைப் புலிப் போராளிகளையும் அவர்களுடைய தலைமையையும் வெளியே இழுத்து அழித்தொழிக்கும் நோக்கம் ஒன்றே அவர்களிடம் இருந்தது. இந்த நடவடிக்கைகளை நடைமுறைப்படுத்த ஆயிரமாயிரம் புதிய இந்தியப் படையினர் ஈடுபடுத்தப்பட்டார்கள். கிளர்ச்சி முறியடிக்கும் வல்லுநர்கள் அடங்கிய சிறப்பு அதிரடிப் படையினர் ஈடுபடுத்தப்பட்டனர். படையினரின் நகர்வுக்கும் தாக்குதல் நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் கனரக கவச வாகனங்களும் ஏவுகணை பொருந்திய உலங்குவானூர்திகளும் பயன்படுத்தப்பட்டன. ஆயிரமாயிரம் இந்தியப் படைகள் கிழக்குக் கரையான முல்லைத்தீவில் இருந்து ஒட்டுசுட்டான் வரை பரவி நிலைகொண்டார்கள். வடகிழக்கில் உள்ள கிளிநொச்சி வரை இந்தப் படைக் குவிப்பு நடந்தது. சுற்றி வளைப்பும், தேடலும் அளவுக்கு அதிகமாக நடைபெற்றன. இந்த நடவடிக்கைகளில் பெருந்தொகைப் பொதுமக்கள் கொல்லப்பட்டார்கள். ஆனால் இந்தியப் படைகளால் குறிவைக்கப்பட்ட விடுதலைப் புலிகள் அடர்ந்த காடுகளில் பாதுகாப்பாகத் தங்கள் போராட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள்.

விடுதலைப் புலிகளை நிலைகுலையச் செய்வதற்கு மேற்கொள்ளப்பட்ட இந்த ஆரம்ப முயற்சிகள் தோல்வி கண்டன. எனவே வேறு புதிய தாக்குதல் நடவடிக்கைகளை மேற்கொள்ள இந்திய இராணுவத் தலைமை திட்டமிட்டது. 'செக்மேற்' என்ற குறிப்பெயரோடு 1988 ஜூனில் இருந்து அடுத்தடுத்து நடவடிக்கைகளை இந்திய இராணுவம் நடத்தியது. இதில், அலம்பில் காடுகளில் உள்ள புலிகளின் பாசறைகளை இந்திய இராணுவம் தனியாக குறிவைத்துத் தாக்கியது. விமானத் தாக்குதலும் பீரங்கித் தாக்குதலும் அடுதொடராக அந்தப் பகுதியை அதிர வைத்தன. பலம் வாய்ந்த குண்டுகளும், பீரங்கி எறிகணைகளும் ஆயிரமாயிரம் தொன்கள் அளவில் இரவு பகலாக புலிகளின் நிலைகள் மீது மழையெனச் சொரிந்தன.

ஆயினும் இந்த அதி தீவிர முயற்சி தோல்வியிலேயே முடிந்தது. புலிகள் மீதான பாதிப்பு மிகக் குறைவாகவே இருந்தது. தரைமோதல்களைப் பொறுத்த வரையிலே, காடுகளில் போராடி அனுபவம் பெற்ற இந்தியப் படைகளின் சிறப்பு அதிரடி அணிகள் புலிக் கெரில்லாப் படைகளிடம் படுதோல்வி கண்டன. மணலாற்றுப் பகுதியில் சிறீலங்காப் படைகளுக்கும் அதே கதி நேர்ந்தது. அங்கு ஏப்ரல் 15இல் ஆண், பெண் போராளிகள் அடங்கிய கெரில்லா அணி ஒன்று சிறீலங்கா இராணுவக் காவல் உலா அணியைத் தாக்கி 21 அரச படையினரை அதே இடத்தில் கொன்றது.

பிரபாகரன் அவர்களுடைய காவல் உரம் பெற்ற பாசறைகள் தூரக் காட்டினுள் இருந்தன. எமது உலங்குவானூர்தி முந்திய தடவை நெடுங்கேணியில் தரை இறங்கி இருந்தது. ஆனால் இந்தத் தடவை முல்லைத்தீவில் உள்ள அலம்பில் காடுகளில் தரை இறங்க இடம் குறிக்கப்பட்டது. இதனால், பிரபாகரன் அவர்களுடைய பாசறைக்குச் செல்லும் தூரம் கணிசமான அளவு குறைக்கப்பட்டது. தரையிறங்கும் தளத்தில், எமது வரவை எதிர்பார்த்துப் பெருந்தொகைப் போராளிகள் ஆயத்த நிலையில் நின்றார்கள். இந்தியாவுடனான எமது போர் இன்னமும் நடந்து கொண்டிருந்ததால், அவர்கள் அந்தப் பகுதியில் படை நகர்வு நடவடிக்கையில் ஈடுபடமாட்டார்கள் என்று எதிர்பார்க்க முடியாதிருந்தது. கொழும்புப் பேச்சுவார்த்தையின்போது இந்திய எதிர்ப்பு நிலைப்பாட்டை நாம் எடுத்திருந்ததால், நாம் அலம்பிலில் இறங்கும்போது, இந்திய அமைதிப் படைகள் எம்மைப் பழிவாங்க முற்படலாம் என்று அஞ்சினோம். எனவேதான் பெருந்தொகைப் போராளிகள் அங்கு நிறுத்தப்பட்டிருந்தார்கள். நாம் தரை இறங்கியதும் சோதியா அங்கே வந்தார். சென்னையில் வாழ்ந்த காலத்திலிருந்து அவருடன் தோழமை பூண்டிருந்தோம். அவருடன் ஆயுதம் தரித்த பெண் போராளிகள் குழு ஒன்று, எம்மைக் கூட்டிச் செல்ல வந்திருந்தது. அவருடைய தோற்றம் அவரில் ஏற்பட்டிருந்த தன்னம்பிக்கையைப் பிரதிபலித்தது. இலங்கைப் படைகளுக்கு எதிராகவும் இந்தியப் படைகளுக்கு எதிராகவும் பல சமர்களில் பங்குபற்றியதால் அனுபவ முறுக்கேறி இருந்தார். அதைவிட பெண் போராளிகளிடையே அவருக்கு அளவற்ற செல்வாக்கு இருந்தது. தங்கள் தலைவியாகச் சோதியாவை அவர்கள் ஒட்டு மொத்தமாக ஏற்றுக் கொண்டிருந்தார்கள். பெண் போராளிகளின் தளபதியாக அவர்

பதவி உயர்த்தப்பட்டிருந்தார். இந்தியப் படை ஆக்கரமிப்புக் காலத்தில் அலம்பில் காட்டில், இவர் பின்னர் மரணமானார். நெஞ்சினுள் ஏற்பட்ட ஒரு நச்சுத் தொற்றி, உள்ளே பரவி இருதயத்தைத் தாக்கி அவரது உயிரைப் பறித்தது. கலகலப்பான ஆற்றல் மிக்க ஒரு தலைவியைப் பெண் போராளிகள் இழந்தார்கள். சோதியாவுக்கு அடுத்ததாகத் தலைமை வகித்தவர் சுகி. சோதியாவும் சுகியும் ஒன்றாகவே சென்னையில் புலி அணியில் சேர்ந்தவர்கள். பெண் போராளிப் பிரிவின் இரண்டாவது தலைவியாக சுகி பொறுப்பேற்றார்.

கொழும்பில் இருந்து நாம் அலம்பிலுக்கு சென்ற நேரத்தை விட, பிரபாகரன் அவர்களுடைய காட்டுப் பாசறைக்கு நடந்து செல்ல, பல மடங்கு அதிக நேரம் பிடிப்பதை விரைவிலே உணர்ந்தோம். காட்டுக்குள் அடி அழிக்கப்பட்ட ஒற்றறையடிப் பாதைகள், சிற்றாறுகள், அடர்ந்த இலை குழைப் பற்றைகள் ஆகியவற்றினூடாக இழுத்திழுத்து நடந்தோம்.

பாலாவுக்கு நீரிழிவு நோய். நெடுந்தூரம் நடக்க முடியவில்லை. இரண்டு கம்புகளின் நடுவே ஒரு கதிரையைக் கட்டி, பாலாவை அதில் இருத்தி, ஆள்மாறி, ஆள்மாறி, அவரைத் தம் தோளிலேயே போராளிகள் சுமந்து சென்றார்கள். பிரபாகரன் அவர்களிடம் எம்மை அழைத்துச் செல்லும் பாதுகாப்பு ஏற்பாட்டுக்கு அந்தத் தடவை பொறுப்பாக மூத்த தளபதி சங்கர் இருந்தார். இயக்கத்துடனும் பிரபாகரன் அவர்களுடனும் சங்கருக்கு நீண்ட நெருங்கிய தொடர்பு இருந்தது. ஒரு சிறிய கெரில்லாக் குழுவை வைத்துக் கொண்டு வன்னிக் காடுகளில் பிரபாகரன் அவர்கள் பயிற்சி பெற்ற தொடக்க நாட்களிலே இருந்து தம்மை இணைத்துக் கொண்டவர். பின்னர் கனடாவில் அவர் சில காலம் வாழ்ந்தார். அங்கே விமானப் பொறியியல் கற்றார். வேறும்பல தமிழரைப் போல 1983 ஆண்டு கலகங்கள் அவரையும் கொதிப்படையச் செய்தன. சென்னை திரும்பி, பிரபாகரன் அவர்களுடனும் ஆயுதப் போராட்டத்துடனும் சங்கர் மீள இணைந்து கொண்டார். பல சமர்களில் பங்கு பற்றிய நீண்ட காலப் போர் அனுபவம் அவருக்கு உண்டு. பிரபாகரன் அவர்களின் மிகுந்த நம்பிக்கைக்கும் விசுவாசத்துக்குமுரிய போராளிகளில் சங்கரும் ஒருவர். பிரபாகரன் அவர்களுடைய தளத்துக்கு நாம் நடந்து கொண்டிருந்தபோது நாம் செல்லும் நடைபாதையில் நின்று அங்காலோ, இங்காலோ கால் மாறி வைக்க வேண்டாம் என்று சாதாரணமாகச் சங்கர் கூறினார்.

இந்தியப் படைகள் அங்கு அடிக்கடி ஊடறுத்து வந்த போதெல்லாம் நிலக் கண்ணி வெடிகளைத் தாராளமாக நட்டிருப்பதாக எதுவித பதற்றமும் இல்லாமல் குறிப்பிட்டார். இந்த விபரத்தைக் கேட்டதும் நான் பயத்தில் உறைந்து போயிருக்க வேண்டும். ஆனால் அஞ்சுவதால் என்ன பயன் என்று என்னைத் தேற்றிக் கொண்டேன். எமது போராளிகள் தாம் ஆபத்தினூடாக நடந்து கொண்டிருப்பதைப் பொருட்படுத்தவில்லை. ஆகவே நான் மட்டும் ஏன் அலட்டிக் கொள்ள வேண்டும்? ஆபத்து என்றால், எல்லோருக்கும் பொதுவானதுதான் என்று முடிவு செய்தேன். இப்படியான சந்தர்ப்பத்தில் மனப் பூர்வமாகத் தயார்படுத்திக் கொண்டு, வருவது, வரட்டும் என்று ஏற்றுக் கொண்டு தொடர்ந்து முன்னேற வேண்டியதுதான். அஞ்சுவதால் மட்டும் நிலக்கண்ணி வெடியில் இருந்து தப்பிவிடமுடியுமா என்ன? பயந்தால் ஒரு இனிய பயணம் கெட்டுவிடும். பயம்தான் நீளும். இந்தியப் படைகள் வேறு அடையாளங்களையும் அங்கு விட்டு வைத்திருந்தார்கள். தொட்டம் தொட்டமாக மரங்கள் முறிந்திருந்தன. நீர் தேங்கிய ஆழமான குழிகள் பறிக்கப் பட்டிருந்தன. பலத்த விமானக் குண்டுப் பொழிவுகளினதும் இடைவிடாத ஆட்டிலெறி ஷெல் அடிகளின் எச்சங்களே அவை என்பது புரிந்தது.

காடுகளுக்குள் நெடுந்தூரம் செல்லச் செல்ல, காவல் உலாச் செல்லும் போராளிக் குழுக்களைக் கண்டோம். தேவையான பொருட் பொட்டலங்களைச் சுமந்து செல்வதற்காக நீண்ட தூர நடையில் ஈடுபட்டிருந்தவர்கள் அவர்கள். புலிப் பிரதேசத்தின் ஆழப்பகுதிக்குள் நாம் வந்துவிட்டதை அது உணர்த்தியது. ஆயுதம் தரித்த போராளிகள், உருமறைப்பு உடையில் ஆங்காங்கே நிலை கொண்டிருப்பதைக் காணத் தொடங்கியதும் புலித் தளங்களுக்கு அருகே சென்றுவிட்டதை உணர முடிந்தது. நன்கு பலப்படுத்தப்பட்ட காவல் அரண்களும், இங்கும் அங்கும் தென்பட்டன. தொடர்ந்து, காட்டினுள் நடந்தோம். காட்டு இலை குழைகளினூடாக குடில்கள் தெரிந்தன. நன்றாக உருமறைக்கப்பட்ட குடில் ஒன்றின் அருகே நின்றோம். எமது வருகை பற்றிப் பிரபாகரன் அவர்களுக்குக் கூறப்பட்டிருந்ததால், பாசறையை நாம் போய்ச் சேர்ந்ததும் அவரும் அங்கே வந்தார். காட்டுப் பச்சைச் சீருடை. பளிச்சென்ற தோற்றம். குதூகலமாக எம்மை அவர் வரவேற்றார். கெரில்லாப் பாசறைப் பகுதி என்று அந்த இடத்தைக் கூற முடியவில்லை.

கச்சிதமான ஒரு சாதாரண கிராமமாக சுத்தமாக இருந்தது, அத்தனை இடர்பாடுகளுக்கு மத்தியிலும் தமது போராளிகளின் மன உற்சாகத்தையும் பிரபாகரன் அவர்கள் பேணி வருவது தெரிந்தது. எத்தகைய பாடுபட்டு, இடர்பாடுகளை மேவி, அந்தப் பாசறையை அவர்கள் கனகச்சிதமாக நிறுவியிருந்தார்கள் என்பது அந்தக் காட்டுச் சூழலில் ஒரு அற்புதமே. ஒரு பூர்வீகக் காடு, வெட்டித் துப்புரவாக்கப்பட்டு, இலை செறிந்த முது மரங்கள் மட்டும் காப்பும் நிழலும் வழங்க, அந்த அகன்ற பரப்பு, மனிதர் வாழ்வதற்கு ஏற்றதாக உருமாற்றப்பட்டிருந்தது. அணி அணியாகப் போராளிகள் பணிபுரிந்திருந்தார்கள். பாறைகளைப் புரட்டி, ஆழத் தோண்டி, நீர் தேடியிருக்கிறார்கள். சில தடவைகளில் அறுபது, எழுபது அடி ஆழக் கிணறுகள் தோண்டப்பட்டு, இறுதியில் அங்கு நீரில்லை என்பதால் கைவிடப்பட்டிருக்கின்றன. இதே கடும் முயற்சி, போதுமான அளவு நீர் கிடைக்கும் கிணறு கிடைக்கும்வரை தொடர்ந்திருக்க வேண்டும். பாசறைகள் தொடங்கிய நாட்களில், கிரமமான உணவு விநியோகம் ஏற்பாடு செய்யப்படவில்லை. அந்த நாட்களில் நாளுக்கு ஒரு வேளை உணவு; உப்பில்லாத சோறும் பருப்பும். இந்த இடர்பாட்டை மேவ நிலக்கண்ணி வெடி நிறைந்த காட்டினூடாக நீண்ட தூரம் நடந்து சென்று, விநியோகப் பொருட்கள் வருவதற்கான பாதை திறந்தார்கள். விநியோகப் பொருட்களை வாங்க ஒரு நாள் பயணமும் செய்ய வேண்டியிருக்கும். அப்படியான வேளைகளில் இந்திய காட்டுச் சுற்றுலா அணிகளிடம் அகப்படுவதைத் தவிர்ப்பதற்குப் பதுங்க வேண்டியிருக்கும். அரிசி, மா, சீனி மூடைகளையும் ஏனைய பொதிகளையும் தோளிலே சுமந்த வண்ணம், தளத்துக்கு நீண்ட பயணம் மேற்கொள்வார்கள். இத்தகைய ஆபத்தான பயணங்களில் பெண் போராளிகளும் மாறி மாறிச் செல்வார்கள். காடுகளின் முரட்டுத்தனத்தைப் பணிய வைத்து வாழ்வதற்கு உரியதாகத் தளம் அமைக்கப்பட்டு வாழ்க்கை முறையும் சுமுகப்படுத்தப்பட்ட சூழ்நிலையில்தான் நாம் அங்கு சென்றோம். பெருந்தொகைப் பதுங்கு குழிகள் தரைப் படுக்கையில் அமைக்கப்பட்டிருந்தன. எறிகணை வீச்சு மற்றும் குண்டுப் பொழிவு போன்ற ஆபத்துகள் அங்கும் நிலவுவது அதிலிருந்து தெளிவாகியது. பிரபாகரன் அவர்களுடைய பாசறை இடையறாது தாக்கப்பட்டதெனினும் உயிரிழப்பு அங்கே மிகக் குறைவு என்பது குறிப்பிடற்பாலது. இரண்டே இரண்டு பெண் போராளிகள் மட்டும்

அந்தத் தளத்தில் உயிரிழந்திருக்கிறார்கள். உடனடியாகப் பாதுகாப்புத் தேட வேண்டும் என்றும், பீரங்கி எறிகணை வீச்சு முடியும் வரை, உணவோ, நீரோ இன்றிப் பலமணிநேரம் பதுங்கு குழியில் இருக்க வேண்டும் என்றும் தமது போராளிகளுக்கு இடையே ஒழுக்கக் கட்டுப்பாட்டை பிரபாகரன் அவர்கள் வலுவாக ஊட்டியதால், உயிரிழப்புக் குறைவாகவே இருந்தது. நிலத்தின் கீழுள்ள எமது பதுங்கு குழித் தங்குமிடத்தின் தன்மையையும் கட்டமைப்பையும் பார்த்தபோது, இடையறாத எறிகணை வீச்சாலும், விமானக் குண்டுப் பொழிவுகளாலும், எமது போராளிகள் எத்தகைய ஆபத்துக்கு முகம் கொடுத்திருந்தார்கள் என்பதும் புரிந்தது. நாம் காட்டிலேயே தங்கியிருந்தவேளை, இந்தியர் பீரங்கி ஷெல் அடியில் இறங்கலாம் என்ற எதிர்பார்ப்பில், தற்காப்பு நடவடிக்கையாக, எமது பாதாளப் பதுங்கு குழித் தங்குமிடத்தில் நாம் தரித்திருக்க வேண்டும் என்று பிரபாகரன் அவர்கள் கேட்டுக் கொண்டார். அமெரிக்காவுக்கு எதிரான வியட்னாம் விடுதலைப் போரின்போது, வியட்கொங் போராளிகளுக்குப் பாதுகாப்பும் நடமாட்ட வசதியும் வழங்கும் பொருட்டு, பல மைல்கள் நீளமான சுரங்க வழிகளையும் பதுங்கு குழிகளையும் ஆயிரமாயிரம் வியட்னாமிய கெரில்லாக்கள் அகழ்ந்தது பற்றிய வியத்தகு செயல்பற்றி நாம் படித்திருந்தோம். அத்தகைய மனித முயற்சியின் மகத்தான விந்தையை நாம் இங்கே நேரில் பார்த்தோம். பாதாளப் பதுங்குகுழிக்கு ஓரமாக அளவெடுத்து அச்சறுத்துச் செதுக்கப்பட்ட படிக்கட்டுகள் வழியாக ஆழத்துக்கு இறங்கும் போது, இத்தகைய கடினப் பணியைச் சாதித்து முடித்த போராளிகளின் ஆற்றல், பொறுமை, கூட்டுணர்வு, ஆகியவற்றை மனதாரப் பாராட்டினோம். இந்தப் படிகள் வழியாக, தரைக்குக் கீழே முப்பது, நாற்பது அடி நீளமான அறை ஒன்றுக்குள் போராளிகள் எம்மை இட்டுச் சென்றார்கள். இந்த நிலத்தடிச் சுரங்க அறைகளும் இந்தப் பகுதியில் நிலத்தடியில் உள்ள பாறைகளிலிருந்து செதுக்கப்பட்டிருப்பதைப் பார்த்தபோது, வியப்பால் திகைத்துப் போனோம். எமது அறை, எழுந்து நிற்கக் கூடிய அளவுக்கு உயரமாகவும், நடமாடுவதற்கு வசதியாகவும் இருந்தது, அந்த அறையிலிருந்து ஒடுக்கமான கருங்கல் பாதையொன்று சென்றது. அங்கே ஒரு சிறிய அறை, கழிப்பறை நோக்கத்தோடு கட்டப்பட்டது. பிரபாகரன் அவர்களுடைய அறை எமது அறையைவிட இன்னும் நிலத்தின் அடியின் கீழே

அமைந்திருந்தது. பதுங்கு குழிகள் மீது தாழ்வாகச் செல்லும் கூரைகளும் நீரை வழிப்படுத்த வரப்புகளும் கட்டப்பட்டிருந்தன. கால மழை உள்ளே வந்து பதுங்குகுழிகளை ஈரமாக்காது இவை தடுத்தன. காடு முழுவதும் பருவ மழையின் போதும் அடை மழையின்போதும் சேறும் சகதியுமாக இருக்க, கொங்கிறீற்றிலும் பலமான இந்தக் கருங்கல் கட்டிடம் ஈரம் இல்லாமல் தாக்குப்பிடித்தது. இந்த வியத்தகு கட்டிட அமைப்பில் ஒரேயொரு குறைபாடு. சாத்தியமாக இருந்தால் அதையும் தீர்த்திருப்பார்கள். ஆனால் இது அவர்கள் கட்டுப்பாட்டை மீறியது. நாம் தரைக்குக் கீழே மிக ஆழத்தில் இருந்தோம். சூரியனின் வெப்பம் அங்கே வர வாய்ப்பு இல்லை. இதனால் அறை - அதுவும் இரவில், கடுங்குளிராக இருந்தது. குளிரில் எனது எலும்புகள் வலித்தன. நீண்ட நாட்களுக்கு எப்படித் தாக்குப் பிடிக்கலாம் என்று வியந்தேன். ஆனால் தாக்குப் பிடிக்கவும் முடிந்தது. பாதக விளைவுகள் எதுவும் ஏற்படவில்லை.

பல சமையல் அறைகளும், அவற்றோடு ஒட்டிய பெரிய உணவருந்தும் கூடங்களும் கட்டப்பட்டிருந்தன. ஆயுதசாலை ஒன்றில் சில போராளிகள் ஆயுதங்களைப் பழுது பார்ப்பதிலும், சீராக்குவதிலும் ஈடுபட்டிருந்தார்கள். ஒரு சிறிய மருந்தறையும், மருத்துவமனையும் கட்டப்பட்டிருந்தன. பாசறையின் பல்வேறு பாகங்களைத் தொடுக்கும் பாதைகளும் கட்டப்பட்டிருந்தன. குறிப்பிடப்பட வேண்டியது எதுவென்றால், ஒரு துயிலும் இல்லமும் அங்கே இருந்தது. நன்கு பேணப்பட்ட அவ்விடத்தில் சமரில் கொல்லப்பட்ட சில போராளிகளின் உடலங்கள் மீளாத் துயிலில் ஆழ்ந்திருந்தன.

பெண் போராளிகளும் சுறுசுறுப்பாகவே இயங்கினார்கள். பிரதான தளத்திலிருந்து சில நிமிட நடை தூரத்தில் பென்னம் பெரிய தளம் ஒன்றை அவர்கள் நிறுவியிருந்தார்கள். அங்கும் சமையல் கட்டு, மருந்து நிலையம், தையற்கடை, ஆயுதக் கூடம், இத்தகையவை எல்லாமே சிறப்பாக இயங்கிக் கொண்டிருந்தன. அவர்களுடைய பாசறையில் சில பகுதிகள் இராணுவப் பயிற்சிக்காக ஒதுக்கப்பட்டிருந்தன; முழுமையான தடைதாண்டல் பயிற்சி நெறியும் இதற்கென வகுக்கப்பட்டிந்தது ஆய்வாளர்கள் பலரின் எதிர்பார்ப்புக்கு நேர் மாறாக, விடுதலைப் புலிகளின் ஆட் சேர்ப்புக் குறையவே இல்லை. மாறாக இயக்கத்தில் இணைவது அதிகரித்தபடி இருந்தது. தங்கள் மகனும், மகளும் புலிகள் அணியில் சேர்ந்தால், புலிகளின் பாசறையில் அவர்கள் உயிர்

பிழைத்து வாழ்வதற்கு அதிக வாய்ப்பு உண்டு என்று பல பெற்றோர் கருதினர். மாறாக அவர்கள் கிராமங்களில் தங்களோடு தரித்திருந்தால், இந்திய அமைதிப் படையின் கொடூரத் தாக்குதலுக்கு உள்ளாவதற்கும், ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் இன் கட்டாய ஆட்சேர்ப்புக்கு ஆளாவதற்கும் இடமேற்படும் என்றும் பெற்றோர் அஞ்சினர். புதிய போராளிகள் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தார்கள். வேறு சிலர் அடுத்த அணியில் பயிற்சி பெறுவதற்காகக் காத்திருந்தார்கள். சிறிது தூரத்துக்கு அப்பால், காட்டின் வேறொரு பகுதியில், மூத்த பெண் போராளிகளுக்கான உயர் நிலைப் பயிற்சி ஒன்று நடந்து கொண்டிருந்தது. இந்த அதிரடிப் பயிற்சிக்குப் பொறுப்பாக ஜெயந்தி இருந்தார். புலிகள் யாழ்ப்பாணத்துக்குத் திரும்பிய பின், பெண்கள் இராணுவப் பிரிவின் தளபதியாக, சுகியின் இடத்துக்கு இவர் நியமிக்கப்பட்டார். மூத்த பெண் போராளிகளுடன் இந்த அணியிலே விதுசாவும் ஒருவர். புலிப் பெண் போராளிகளின் தற்போதைய தளபதி இவரே. துணிச்சல் மிக்க இந்த இளம் பெண்களில் பலர், பல வீரச் சமர்களில் கலந்து கொண்டு, மற்றவர்களுக்கு வழிகாட்டிகளாக இருந்திருக்கிறார்கள். இவர்களுடைய சாதனைப் படைப்புகள் வரலாறாய் அமைந்தவை. துயர் தருவது என்னவென்றால் ஆரம்பத்தில் இடம் பெற்ற பெண்களுக்கான இந்த உயர் நிலை அதிரடிப் பயிற்சியில் பங்கெடுத்த ஒரு சிலரே இன்று உயிரோடு இருக்கிறார்கள்.

பாசறையில் கிட்டுவைக் கண்டதும் எமக்கு மகிழ்ச்சியைத் தந்தது. 1988 இல் தமிழ் நாட்டில் இருந்து நாம் தப்பிச் சென்ற சில நாட்களில் தமிழ் நாட்டில் இடம் பெற்ற ஒரு சுற்றிவளைப்பில் அப்போது, சென்னையில் இருந்த கிட்டுவும் அகப்பட்டு, பாதுகாப்புக் காவலில் வைக்கப்பட்டிருந்தார். பின்னர் இவர் யாழ்ப்பாணத் தடுப்புக் காவலுக்கு இடமாற்றம் பெற்றார். ஆயினும் அவருடைய உடல் ஊனத்துக்கு வழங்கப்படும் ஒரு சலுகையாக இந்திய அமைதிப் படைத் தலைமைப் பீடம் தடுப்புக் காவலில் இருந்து அவரை விடுவித்தது. அவர், உடனடியாக முல்லைத்தீவுக் காடுகளில் இருந்த பிரபாகரன் அவர்களிடமும், புலிப் போராளிகளிடமும் சென்றார். பிரபாகரன் அவர்களுடன் இந்தத் தருணத்தில் உளவியல் ரீதியாக, போராளிகளுக்கு உற்சாகம் ஊட்டுவதில் கிட்டு தமது தீரத்தைக் காட்டினார். புதிதாகக் கற்க வேண்டும் என்பதிலும், ஒருவர் தம்மை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பதிலும் கிட்டு

எப்பொழுதுமே பேரார்வம் கொண்டவர். போராளிகளுக்கு அவர் வகுப்புகள் நடத்தினார். அவர்களுடைய நடவடிக்கைகளிலும் ஈடுபாடு காட்டினார். நிழற்படம் பிடிப்பதில் கிட்டு சூரர். நாம் அங்கு தரித்திருந்த போது பிரபாகரன் அவர்களையும் எம்மையும் பல கோணங்களில் படம் பிடித்தார்.

பொட்டு அம்மானும் அலம்பிலில் இருந்தார். அந்த நேரம், யாழ்ப்பாண தீபகற்பத்தில் களத் தளபதியாக அவர் பணியாற்றிக் கொண்டிருந்தார். பிரபாகரன் அவர்களுடன் ஆலோசனைக்காக அவர் அங்கே அழைக்கப்பட்டிருந்தார். தமது காயங்களில் இருந்து முற்றாகக் குணமடைந்திருந்த பொட்டு அம்மான், யாழ்ப்பாணத்தில் இந்திய அமைதிப் படையினருக்கு எதிராக, நகர்ப்புறக் கெரில்லாப் போராட்டம் ஒன்றை வெற்றிகரமாக நடத்துவதில் தீவிரமாக ஈடுபட்டுக் கொண்டிருந்தார். மூத்த புலிப் போராளிகளில் இன்னொருவர் கபில் அம்மான். போராட்ட களங்கள் பல கண்டவர் இவர். நாம் சென்னையில் இருந்த காலத்திலேயே எம்முடன் நட்புப் பூண்ட நண்பர். மென்மையான அமைதியான இளைஞர். திருகோணமலைக் காடுகளில் இருந்து எம்மைப் பார்க்க முல்லைத்தீவுக்கு வந்திருந்தார்.

எனது நேரம் பெண் போராளிகளுடன் கழிந்தது. அதேவேளை பாலா, பிரபாகரன் அவர்களுடனும், வேறு தலைவர்களுடனும் ஆலோசனை நடத்திக் கொண்டிருந்தார். பாலாவின் கூற்றுப்படி, பிரேமதாசா அவர்களைப் பற்றியும், அவருடைய சிந்தனைகள், வழிமுறைகள் பற்றியும் குறிப்பாக இந்திய இராணுவ ஆக்கிரமிப்புத் தொடர்பாகவும் தமிழ் மக்களின் ஆயுதத் தற்காப்பு நடவடிக்கைகள் தொடர்பாகவும் அவருடைய கருத்து என்ன என்பது பற்றியும் பிரபாகரன் அவர்கள் அறிந்து கொள்ள விரும்பினார். பிரேமதாசா அவர்களுக்கும் விடுதலைப் புலி அணிக்கும் இடையே எப்படியான பேச்சு இடம்பெற்றது என்பது பற்றி இரத்தினச் சுருக்கமாக பாலா அவருக்கு விளக்கினார். கொழும்பில் இருந்து கொண்டே, சங்கேத மொழியில் சிறிய குறிப்புகளை பிரபாகரன் அவர்களுக்கு பாலா வழங்கியிருந்தார். இப்பொழுது சம்பந்தப்பட்ட ஆட்கள் பற்றிய தமது அளவீடுகள் பற்றியும் அவர்களுடைய சிந்தனைப் போக்குகள், எதிர்பார்ப்புக்கள், அச்சங்கள் பற்றியும் விரிவாக எடுத்துரைத்தார். பிரேமதாசா அவர்கள் கொழும்பிலே தமது அதிகாரத்தை நிலைநாட்டுவதன் பொருட்டு, இந்தியப் படைகள் திருப்பி அழைக்கப்பட வேண்டும் என்பதில் மிகவும்

ஆக்ரோஷமான உறுதி மனப் பான்மையோடு இருக்கிறார் என்பதையும், அதற்குப் புலிகளின் உறுதியான ஆதரவு அவருக்குத் தேவையாக இருக்கிறது என்பதையும், விடுதலைப் புலிகளின் தலைவர் நம்பக் கூடிய வகையில் பாலா விளக்கினார். விடுதலைப் புலிகள் சிறீலங்கா அரசியல் நீரோட்டத்தில் கலந்து கொண்டு தேர்தலுக்கு முகம் கொடுக்கத் தயாரென்றால், ஈ.பீ.ஆர்.எல்.எ்.ப் இன் மாகாண சபை நிர்வாகத்தைக் கலைத்துவிட அரசுத் தலைவர் சம்மதமாக இருப்பதாகவும் பிரபாகரன் அவர்களிடம் பாலா தெரிவித்தார். விடுதலைப் புலிகளுக்கும் சிறீலங்கா அரச படைகளுக்கும் இடையே போர் நிறுத்தம் ஒன்று ஏற்படுவதைப் பிரேமதாசா விரும்பினார். அதன் பின்னர், விடுதலைப் புலிகளுக்கு எதிரான போரை முடிவுக்கு கொண்டு வருமாறு இந்தியாவை தாம் நிர்ப்பந்திக்க முடியும் என்றும் பிரேமதாசா கருதினார். இதையும் விடுதலைப் புலித் தலைமையிடம் பாலா தெரிவித்தார்.

கொழும்பு உண்மையிலேயே ஆர்வமாகவும், உண்மை பேசுவதாகவும் இருந்தால், போர் நிறுத்தம் ஒன்றுக்கு உடன்படுவதையும் பிரேமதாசா அரசுடன் ஓர் இடைக்கால இணக்கத்துக்கு வருவதையும் பிரபாகரன் அவர்கள் ஏற்கக் கூடிய நிலையில் இருப்பதாக பாலா கூறினார். இந்தியப் படைகளைத் திரும்பிப் பெறச் செய்வதையும், பிரேமதாசா நிர்வாகத்துடன் அரசியல் இணக்கத்தை ஏற்படுத்துவதையும் உறுதிப்படுத்தும் வகையில், பேச்சுவார்த்தைகளை முன்னெடுத்துச் செல்வதற்கு, விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடம் பாலாவுக்குப் பச்சைக் கொடி காட்டியது.

இரண்டாவது சுற்றுப் பேச்சுவார்த்தைக்கு நாம் கொழும்புக்கு புறப்படுவதற்கு முன்னதாக, பிரபாகரன் அவர்கள் எம்மோடு பேசினார். தமிழ்த் தேசிய இராணுவத்தின் உதவியோடு, விடுதலைப் புலிகளுக்கு எதிரான நடவடிக்கைகளை இந்தியப் படைகள் வேகம் பெறச் செய்திருப்பதாக அவர் எம்மிடம் கூறினார். நடந்து கொண்டிருக்கும் பேச்சுவார்த்தையால் எரிச்சலும் அவமதிப்புணர்வும் அடைந்த ரஜீவ் நிர்வாகம், விடுதலைப் புலித் தலைமையையும், புலிப் படைகளையும் பூண்டோடு அழிக்க உறுதி பூண்டிருப்பதாகவும் அவர் கூறினார். புலிகளிடம் ஆயுதங்களுக்கும் வெடிபொருட்களுக்கும் தட்டுப்பாடு நிலவியது. தீவிரமடைந்து வரும் இந்தியப் படைகளின் தாக்குதலுக்கு முகம் கொடுத்து புலிகள் நடத்தும் ஆயுத

எதிர்ப்புப் போருக்கு பிரேமதாசாவின் உதவியை நாடுமாறு பிரபாகரன் அவர்கள் பாலாவைக் கேட்டுக் கொண்டார். உண்மையான ஆபத்து அப்போது தோன்றியிருந்தது. காடுகளில் புலிகள் பதுங்கியிருந்த ஒளிவிடங்கள் மீதும் படிமுறையான விமானக் குண்டுவீச்சுகளும், பீரங்கித் தாக்குதல்களும் நடந்து கொண்டிருந்தன. இந்தக்கட்டத்தில் விடுதலைப் புலிகள் மூன்று படைகளை முகம்கொடுத்து போராட வேணடியிருந்தது. ஒன்று இந்தியப் படை, இரண்டாவது சிறீலங்காப் படை, மூன்றாவதாக தமிழ்த் தேசிய இராணுவம். விடுதலைப் புலிகளின் ஆயுதப் போராட்ட வரலாற்றில், இதுவே அதிக நெருக்கடியான போராட்ட காலமாக இருந்தது. பிரேமதாசாவுடன் போர் நிறுத்தம் புரிவதன் மூலம், சிறீலங்கா இராணுவ அச்சுறுத்தலைத் தவிர்க்கலாம். இருந்தபோதிலும் இந்தியப் படைகளும், தமிழ்த் தேசிய இராணுவமும் புலிகளுக்கு ஒரு காத்திரமான அச்சுறுத்தலாக அமைந்தது. விடுதலைப் புலிகளின் படையணிகள், துணிச்சல் மிக்கதும், உயர் ஒழுக்கம் தழுவுவதுமான கெரில்லாப் போராளிகளைக் கொண்டு விளங்கின. ஆனாலும் ஒரு மரபு வழி இராணுவத்துடன் போராடுவதற்கு அவர்களிடம் ஆயுதங்களும் படைத் தளபாடங்களும் கைவசம் இருக்க வேண்டும். தமிழர் தாயகத்திலிருந்து இந்தியர்கள் வெளியேறும் வரையிலாவது அவர்கள் தாக்குப் பிடிக்க வேண்டும். இந்த நிலையிலே பாலாவிடம் ஒரு முக்கிய இக்கட்டான பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. இதுவரை காலமும் இயக்கத்தின் வரலாற்று எதிரியாக விளங்கியவர்களிடமிருந்து ஆயுதம் பெற்றுக் கொள்ளும் பணியே அது.

## இந்திய - இலங்கை முரண்பாடு

முல்லைத்தீவு அலம்பில் காடுகளில் விடுதலைப் புலிகளின் தலைவர்களுடனும் போராளிகளுடனும் நாம் அந்தக் குறுகிய கால ஓய்வில் இருந்தபோது புதிய நிலைமைகள் உருவாகிக் கொண்டிருந்தன. ரஜீவ் நிர்வாகத்துக்கும் பிரேமதாசா ஆட்சிக்கும் இடையே நிலவிய உறவுகளில் முரண்பாடுகள் எழுந்தன. கொழும்புப் புறநகர்ப் பகுதியில் பௌத்த சமய விழா ஒன்றில் மக்களிடையே உரையாற்றிய சிறீலங்கா அரசுத் தலைவர், 1989

ஜுலை முடிவில் இந்தியப் படைகள் அனைத்தும் இலங்கையிலிருந்து திருப்பி அழைக்கப்படவேண்டுமென இந்தியப் பிரதமரை தாம் கேட்கப் போவதாகக் கூறியிருக்கிறார். அந்த ஆண்டு நவம்பர் மாதத்தில், சார்க் எனப்படும் தெற்காசிய பிராந்திய ஒத்துழைப்பு அமைப்பின் அரசுத் தலைவர்களுக்கான மாநாடு ஒன்றைக் கூட்டுவதற்குத் தாம் திட்டமிட்டிருப்பதாகவும், ஆனால், இலங்கை மண்ணை வெளிநாட்டு இராணுவம் ஒன்று ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் நிலையில் தம்மால் அதைச் செய்ய முடியாதிருப்பதாகவும் கூறியிருக்கிறார். மறுநாள், அதாவது ஜுன் 2ஆம் திகதியன்று திரு. ரஜீவ் காந்திக்கு பிரேமதாசா அவர்கள் அனுப்பிய கடிதத்திலே ஜுலை 31 அளவில் இந்தியப் படையைத் திருப்பிப் பெறுமாறு வேண்டினார். இந்தியப் படை திருப்பி அழைக்கப்பட்டால், சார்க் உச்சி மாநாட்டை நவம்பரில், அமைதியான சூழலில் கூட்டுவதற்கு அது வாய்ப்பாக இருக்கும் என்றும் அவர் அதில் எழுதியிருந்தார். இந்திய அமைதிப் படையின் பிரசன்னம் 'ஆழமான பிளவையும் எதிர்ப்புணர்வையும்' தோற்றுவிக்கும் விடயமாக அமைந்து விட்டதால், நிலைமையை சுமுகப்படுத்துவதற்குப் படைகள் முழுமையாகத் திருப்பி அழைக்கப்படுவது உதவியாக அமையும் என்றும் அவர் வாதிட்டார். இரண்டு மாத காலத்தில் படைகளை வெளியேற்றுமாறு பிரேமதாசா கேட்டதால் சீற்றமடைந்த ரஜீவ் காந்தி அவர்கள், உடனடியாகப் பதில் அனுப்பவில்லை. ஆனால், புதுடில்லியின் இந்திய வெளியுறவு அதிகாரிகள் அறிக்கைகளை வெளியிட்டார்கள். பிரேமதாசா அவர்கள் கேட்டதற்கு அமைய, குறித்த கால எல்லைக்குள் பல்லாயிரம் இந்தியப் படைகளைத் திருப்பிப் பெறுவதில் படை அமைப்புப் பிரச்சினைகள் இருக்கும் என்று குறிப்பிட்டார்கள். பங்களூரில் ஜுலை 14இல் நடைபெற்ற பொதுப் பேரணி ஒன்றில் உரையாற்றிய இந்தியப் பிரதமர், பிரேமதாசாவின் கோரிக்கையைப் பற்றிக் குறிப்பிட்டார். ஈ.பி.ஆர்.எல்.எஃப் இன் மாகாண நிர்வாகத்துக்குக் கணிசமான அதிகாரங்கள் வழங்கப்பட்டு, தமிழ் மக்களின் பாதுகாப்பும் உத்தரவாதப்படுத்தப்பட்டாலன்றி, இந்தியப் படைகள் திருப்பி அழைக்கப்படமாட்டா என்று கூறினார். அத்துடன், படைகள் திருப்பி அழைக்கப்படுவது தொடர்பாக, அரசுகளிடையேயும் கலந்தாலோசனை நடத்தப்பட வேண்டும் என்றும் விதந்துரைத்தார். புதுடில்லிக்கும் கொழும்புக்கும் இடையே இராஜதந்திர மனக் கசப்பு நிலவிக் கொண்டிருந்த அந்தப்

பின்னணியிலேயே ஜூன் 14ஆம் திகதியன்று, இலங்கைத் தலைநகருக்கு நாம் திரும்பினோம். நாம் முன்பு தங்கியிருந்த கொழும்பு ஹில்டன் விடுதிக்கே திரும்பவும் கொண்டு செல்லப்பட்டோம். இரண்டாவது சுற்றுப் பேச்சுவார்த்தையில் கலந்து கொள்ள எமது அணியிலே, லோறன்ஸ் திலகர், எஸ். கரிகாலன், சமன்ஹசன், அபூபக்கர் இப்ராஹிம் ஆகியோர் சேர்க்கப்பட்டிருந்தனர்.

மறுநாள் ஜூன் 15 காலை, பிரேமதாசா அவர்கள் தமது வதிவிடமான 'சுச்சித்ரவுக்குத்' தனிப்பட்ட கலந்துரையாடலுக்காக எம்மை அழைத்தார். இந்தச் சந்திப்பு ஒன்றரை மணிநேரம் நீடித்தது. இந்திய அமைதிப் படையைத் திருப்பிப் பெறுவது தொடர்பாக, முதல் நாள் பங்களூரில் ரஜீவ் காந்தி அவர்கள் நிபந்தனைகள் விதித்து விடுத்த அறிக்கை பிரேமதாசா அவர்களுக்குக் கலக்கத்தைக் கொடுத்திருந்தது. அத்தகைய நிபந்தனைகளை இந்தியா விதிக்க முடியாது என்று அவர் வாதிட்டார். முந்திய அரசுத் தலைவர் ஜெயவர்த்தனா இந்தியப் படைகளை அழைத்தார்; தற்போதைய அரசுத் தலைவர் அவர்களை வெளியேற வேண்டும் என்கிறார். இந்த நிலையில், படைகளைத் திருப்பிப் பெறுவதைத் தவிர இந்திய அரசுக்கு வேறு வழியில்லை என்றும் அவர் வாதிட்டார். தாம் அதிகாரபூர்வமாக அனுப்பி வைத்த கடிதத்துக்கு இதுவரை பதில் அனுப்பாமல், ஏற்க முடியாத நிபந்தனைகளைப் பகிரங்க அறிக்கை மூலம் ரஜீவ் காந்தி வெளியிட்டிருப்பதையடுத்து, நாட்டிலே இந்திய இராணுவம் நிரந்தரமாகத் தங்கிவிடுமோ என்ற அச்சமும் குழப்பமும் உருவாகியிருப்பதாகவும் அவர் குறிப்பிட்டார். சிறீலங்கா ஆயுதப் படைகளுடன் விடுதலைப் புலிகள் போர் நிறுத்தம் செய்ய வேண்டும் என்று பிரேமதாசா விதந்துரைத்தார். புலிகள் அப்படிச் செய்யும் பட்சத்தில், ஒப்பந்தத்துக்கு அமைவாக, அமைதி நிறுவப்படவேண்டும் என்ற முக்கிய கடப்பாடு நிறைவேற்றப்படுவதால், இந்தியாவுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் எதிரான தனது பகைமை நடவடிக்கைகள் அனைத்தையும் முடிவுக்கு கொண்டு வந்து, தனது படைகளையும் திருப்பி அழைக்க வேண்டும் என்று தாம் வற்புறுத்தக் கூடுமாக இருக்கும் என்றும் பிரேமதாசா கூறினார்.

விடுதலைப் புலிப் பிரதிநிதிகளுக்கும் சிறீலங்கா அமைச்சரவை அணிக்கும் இடையே ஜூன் 16ஆம், 19ஆம் திகதிகளில் இரண்டாவது சுற்றுப் பேச்சுவார்த்தைகளின் முதல்

இரண்டு அமர்வுகளும் இடம்பெற்றன. அங்கு முதன்மை பெற்ற விடயங்களில், படைகளைத் திருப்பிப் பெறுவது தொடர்பாக சிறீலங்காவுக்கும், இந்தியாவுக்கும் இடையே உருப்பெருத்துவரும் இராஜதந்திர மோதல் ஒன்றாகும். குடிமக்கள் தொண்டர் படை என்ற பெயரில் அமைக்கப்படும் தமிழ்த் தேசிய இராணுவத்துக்கு, தமிழ் இளைஞர்கள், குறிப்பாக மாணவர்கள் நிர்ப்பந்த அடிப்படையில் சேர்க்கப்படுவது, இந்த அமர்வுகளில் விவாதிக்கப்பட்ட இன்னொரு விடயமாகும். இந்தப் பேச்சுவார்த்தைகளில் அரச அணியில் இரண்டு புதிய அமைச்சர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். மின் சக்தி அமைச்சர் பொஸ்ரஸ் பெரேரா ஒருவர். வர்த்தகம் மற்றும் கப்பல்துறை அமைச்சர் மன்சூர் மற்றவர். முதல் அமர்வின்போது, சிறீலங்கா அணியின் தலைவர் என்ற முறையில் ஹமீது அவர்கள், இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையே உருவாகி வரும் இராஜதந்திர முரண்பாடுகள் பற்றிய விபரங்களை விளக்கிக் கூறினார். வடக்கு-கிழக்கிலே போரும், தெற்கிலே கிளர்ச்சியும் இடம்பெற்றுக் கொண்டிருப்பதற்குக் காரணம் சிறீலங்கா மண்ணிலே இந்தியப் படையின் பிரசன்னமே என்று பிரேமதாசா அவர்கள் உறுதியாக நம்புவதாலேயே இந்திய அமைதிப் படை திருப்பி அழைக்கப்பட வேண்டும் என்று அரசுத் தலைவர் வலியுறுத்துவதாக ஹமீது அவர்கள் தமது பகுப்பாய்வை முன்வைத்தார். ஒப்பந்தம் காலாவதியாகிவிட்டது. சிறீலங்காவின் அரசியல் நிலை முற்றாக மாறிவிட்டது. போரில் ஈடுபட்டிருந்த இரண்டு தரப்பினரும், அதாவது புலிகளும் சிறீலங்காவும், அரசியற் தீர்வு காண்பதற்காக அமைதிப் பேச்சுவார்த்தையில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்கள்; இந்த நிலையில் இந்திய அமைதிப் படையின் தேவையே அற்றுப் போய்விட்டது என்று ஹமீது அவர்கள் விளக்கினார். சார்க் உச்சி மாநாட்டை நவம்பரில் கூட்ட பிரேமதாசா அவர்கள் விரும்பியதால், ஜூலை மாத முடிவளவில் இந்திய அமைதிப் படையை வேகமாகத் திருப்பி அழைக்க வேண்டும் என்று பிரேமதாசா கோரினார். இந்தக் கோரிக்கை இந்தியாவுக்குப் பெரும் பிரச்சினைகளைத் தோற்றுவித்துவிட்டதாக ஹமீது கூறினார். ஆயிரமாயிரம் படையினரையும் போர்த் தளபாடங்களையும் இரண்டு மாதங்களுக்குள் திருப்பி அழைப்பது, இராணுவ ஒழுங்கு முறையில் காரிய சாத்தியம் அற்றது என்றும் ஹமீது சுட்டிக் காட்டினார். இந்தியா முன்

நிபந்தனைகளை விதித்துக் கொண்டிருக்கிறது. படைகளைத் திருப்பி அழைப்பதால் ஏற்படப்போகும் அவமானத்தைத் தவிர்க்கவே இந்தியா அவ்வாறு செய்கிறது. படைகள் திரும்பிச் சென்றால், டிசம்பரில் நடைபெறவிருக்கும் தேர்தலில் ரஜீவின் வெற்றி வாய்ப்பு வெகுவாகப் பாதிக்கப்பட்டு விடும் என்ற அச்சமே அதற்குக் காரணம் என்றும் ஹமீது விளக்கிக் கூறினார்.

அவ்வேளைய நிலவரம் பற்றி விடுதலைப் புலிப் பிரதிநிதிகளின் கருத்தை அறியவும் ஹமீது அவர்கள் ஆவல் தெரிவித்தார். ஹமீது அவர்கள் தெரிவித்த கள நிலவரக் கருத்தை விடுதலைப் புலிகள் ஏற்றுக் கொண்டதோடு, ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் இன் மாகாண நிர்வாக எதிர்காலம் தொடர்பாக ரஜீவ் நிர்வாகம் அக்கறை கொண்டிருப்பதைச் சுட்டிக் காட்டினார்கள். இந்திய - இலங்கை ஒப்பந்தத்தின் ஒரேயொரு எச்ச சொச்சமாக விளங்கும் வடக்கு-கிழக்கு மாகாண நிர்வாகம், இந்திய அமைதிப் படை நாட்டை விட்டு அகன்ற மறுகணமே பொல பொலவென்று விழுந்து ஒழிந்து விடும் என்று அவர்கள் கூறினார்கள். ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் இன் ஊசலாட்டமான நிர்வாகத்தை காப்பாற்றும் பலமான துணைப்படை ஒன்று நிறுவப்படும் வரைக்கும் இந்திய அமைதிப் படையைத் தொடர்ந்து வைத்திருக்க ரஜீவ் விரும்புவதாகவும் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

ஜுன் 19ஆம் திகதி இடம்பெற்ற அமர்வின் போது, ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் இன் துணைப்படை தொடர்பாகவும், விடுதலைப் புலிகளுக்கும் சிறீலங்கா பாதுகாப்புப் படைகளுக்கும் இடையிலான போர் நிறுத்தம் தொடர்பாகவுமே விரிவாக ஆராயப்பட்டது. இந்திய இராணுவ அதிகாரிகள் ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் இன் மாகாண நிர்வாகத்தோடு சேர்ந்து தொண்டர் படைக்காக பிரமாண்டமான அளவில் தமிழ் இளைஞர்களைச் சேர்க்க முற்பட்டுக் கொண்டிருப்பதாக முறையிட்டார்கள். இந்த அமர்வு நடைபெறுவதற்கு ஒரு வாரம் முன்னதாக, 4500 இளைஞர்கள் அதுவும் பெரும்பாலும் பள்ளி செல்லும் இளைஞர்கள் ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் இன் ஆயுத பாணிகளால் சுற்றி வளைக்கப்பட்டு கிழக்கு மாகாணத்தின் திருகோணமலை, மட்டக்களப்பு, அம்பாறை ஆகிய இடங்களில் உள்ள வெவ்வேறு இந்திய இராணுவப் பாசறைகளுக்குப் பலவந்தமாகக் கொண்டு செல்லப்பட்டார்கள். இது தமிழ்ப் பகுதிகளில் ஒரு பிரச்சினையாகியது. தங்கள் பிள்ளைகளை விடுவிக்குமாறு ஆயிரக்கணக்கான பெற்றோர்கள் இந்திய இராணுவப்

பாசறைகளின் வாயிலில் தவிப்போடு கெஞ்சினார்கள். இந்த விடயத்தில் சிறீலங்கா அரசின் நிலைப்பாடு என்ன என்று புலிகள் கேள்வி எழுப்பினார்கள். வடக்கு கிழக்கு மாகாண நிர்வாகத்துக்கென ஆயுதப் படை ஒன்றை நிறுவ ஒப்பந்த விதிகளில் இடம் கிடையாது என்பதை அமைச்சரவை அணி ஒப்புக் கொண்டது. அரசுத் தலைவர் இந்த விடயத்தை இந்தியப் பிரதமருடன் விவாதிப்பார் என்று ஹமீது அவர்கள் உறுதிமொழி கூறினார்.

சிறீலங்காப் படைகளுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையே போர் நிறுத்தம் தொடர்பாக பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருந்தபோது, பகைமை ஒழிப்பை விடுதலைப் புலிகள் முதலில் ஒருதலைப்பட்சமாக வெளியிடவேண்டும் என்றும், பின்னொரு நாளில் சிறீலங்கா அரசு தனது போர் நிறுத்தத்தை அறிவிக்கும் என்றும் அரச அணி கூறியது. ஏற்கனவே பிரகடனப் படுத்தப்படாத போர் நிறுத்தம் ஒன்று புலிகளுக்கும் அரச படைகளுக்கும் இடையே நடைமுறையில் இருப்பதை விடுதலைப் புலிகளின் அணி சுட்டிக் காட்டியது. இந்த நிலையில் இரண்டு பக்கப் போர் நிறுத்தத்தை இரு தரப்பினரும் பிரகடனம் செய்வதே சாலச் சிறந்தது என்றும் இரு தரப்பினரும் அமைதியைக் கடைப்பிடிப்பதோடு அரசியல் இணக்கத்துக்கான பேச்சுவார்த்தையையும் ஏற்கனவே நடத்திக் கொண்டிருக்கிறார்கள் என்பதும் அனைத்துலகச் சமூகத்தில் ஒரு நல்லபிப்பிராயத்தை நிறுவும் என்றும் புலிகள் சுட்டிக் காட்டினார்கள். இத்தகைய சுமுகச் சூழலில், வெளிநாட்டுச் சக்தி ஒன்று அமைதி காக்கும் இராணுவத்தை வைத்திருக்க வேண்டிய தேவை இல்லை என்றும் புலிகள் கருதினார்கள். இந்த விடயம் தொடர்பாக அரசுத் தலைவருடன் தாம் கலந்தாலோசிப்பர் என்றும் அமைச்சர்கள் கூறினார்கள்.

பிரேமதாசா அவர்கள் ஜூன் 2இல் எழுதிய கடிதத்திற்கு ரஜீவ் காந்தி அவர்கள் ஜூன் 20இல் பதில் அனுப்பினார். இராஜதந்திர வார்த்தைப் பிரயோக முலாமிட்ட அந்தப் பதிலில், இந்தியப் படைகள் தமது பலத்த இழப்புக்கு மத்தியில், தமிழ்ப் பகுதியில் அமைதியையும் இன ஒத்திசைவையும் நிலை நாட்டுவதில் பெருஞ்சாதனை புரிந்திருப்பதாகக் காந்தி அவர்கள் எழுதியிருந்தார். இந்திய - இலங்கை ஒப்பந்தத்துக்கான பொறுப்பையும் கடப்பாடுகளையும் சிறீலங்கா ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பிரேமதாசா அவர்களுக்கு ரஜீவ்

நினைவூட்டினார். இந்திய அமைதிப் படையைத் திருப்பிப் பெறுவது தொடர்பாகவும் ஒப்பந்தத்தை முழுமையாகச் செயற்படுத்துவது தொடர்பாகவும் இரு பக்கமும் ஏற்கக்கூடிய ஒரு ஏற்பாட்டை வகுக்கக் கலந்துரையாடல் ஒன்றை நடத்த வேண்டும் என்றும் அவர் குறிப்பிட்டார். ஒப்பந்தம் நடைமுறைப் படுத்தப்படுவதும், இந்தியப் படைகள் திருப்பி அழைக்கப் படுவதும் சமவேளையில் நடைபெற வேண்டும் என்று இந்தியப் பிரதமர் வலியுறுத்தியது, பிரேமதாசா அவர்களுக்கு எரிச்சலூட்டுவதாக அமைந்தது.

பிரேமதாசா அவர்கள் கேட்டுக் கொண்ட போதிலும் ஜூலை முடிவிலே இந்திய அமைதிப் படைகள் திருப்பி அழைக்கப்படமாட்டா என்பது, கடும் வார்த்தைப் பிரயோகம் மூலம் எழுதப்பட்ட காந்தி அவர்களுடைய கடிதம் மூலம் அறிய முடிந்தது. இந்தியா தனது படைகளைத் திருப்பி அழைக்குமுன், வரதராஜப்பெருமாளின் மாகாண ஆட்சிக்குப் பாதுகாப்பும் உறுதி நிலையும் வழங்க விரும்பியது. ஆனால், இதைச் சாதிப்பதற்கு இந்திய இராணுவ நிர்வாகம் கடைப்பிடித்த வழிமுறைகள் தமிழ் மக்களுக்கு வெறுப்பூட்டுபனவாக இருந்தன. கட்டாய ஆட்சேர்ப்பிலிருந்து தப்பிப் பிழைப்பதற்காக, பல இடங்களில் மாணவர்கள் வீட்டுக்குள்ளே முடங்கிக் கிடந்தார்கள். கைது செய்யப்பட்டு, கட்டாயப் பயிற்சி வழங்கப்பட்டவர்களில் கணிசமான தொகையினர், தங்கள் நிலைகளில் இருந்து தப்பியோடி, புலிகளுடன் சேர்ந்தார்கள். சம்மதமோ விருப்பமோ இல்லாது நிர்ப்பந்த அடிப்படையில் சேர்க்கப்பட்ட இளைஞர் அணியானது, இலட்சியத்துக்கான தீவிர அர்ப்பணிப்பாலும், போர் அனுபவங்களால் புடமிடப்பட்டிருக்கும் விடுதலைப் புலிகளுக்கு இணையாக மாட்டார்கள் என்பது நன்கு தெரிந்திருந்த போதிலும், இந்திய இராணுவமும், ஈ.பீ.ஆர்.எல்.எ்.ப் உம் தொடர்ந்தும் படைதிரட்டலில் ஈடுபட்டார்கள். பெருமாள் நிர்வாகத்துக்குக் கூடுதலான அதிகாரப் பகிர்வு வழங்கப்படவேண்டும் என்று ரஜீவ் காந்தி கேட்டுக் கொண்ட போதிலும் சிறீலங்கா அரசு, அனைத்து நிர்வாக அதிகாரங்களையும் படிப்படியாகத் தளர்த்தி, நிதியையும் தடைசெய்து, வடக்கு-கிழக்கு மாகாண சபையை நிரந்தரமாகவே நிதி வற்றிப்போன ஒரு சபையாக உருக்குலைத்திருந்தது.

# முரண்பாடு முற்றிச் சென்றது

ரஜீவ் காந்தி அவர்களிடம் இருந்து கிடைத்த விதண்டாவாதப் பதிலால் சீற்றம் அடைந்த பிரேமதாசா அவர்கள், விடுதலைப் புலி அணிக்கு, ஹமீது அவர்கள் மூலம் செய்தி அனுப்பினார். அதில் சிறீலங்காப் படைகளுடன் விடுதலைப் புலிகள் ஒரு முறையான போர் நிறுத்தத்துக்கு வரவேண்டும் என்று கேட்டார். இதற்கமைய, இரு தரப்புப் போர் நிறுத்தம் ஒன்று, புலிகளாலும், சிறீலங்கா அரசாலும் கூட்டாகப் பிரகடனப் படுத்தப்பட்டது. கூட்டுச் செய்தி அறிக்கை மூலம் ஜுன் 28ஆம் திகதியன்று அது பகிரங்கப்படுத்தப்பட்டது.

இந்த நிகழ்வு பிரேமதாசா அவர்களுக்கு மகிழ்ச்சியை அளிக்க, 29ஆம் திகதியன்று ரஜீவ் காந்திக்கு அவர் ஒரு குறுஞ் செய்தி அனுப்பினார். விடுதலைப் புலிகளுக்கும் சிறீலங்கா அரச படைகளுக்கும் இடையே அமைதி ஏற்பட்டுவிட்டதாகவும், அரசியல் பிரச்சினைகளைத் தீர்க்கப் பேச்சுவார்த்தை முயற்சி தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருப்பதாகவும் அறிவித்தார். இந்தப் பேச்சுவார்த்தைக்கு இடையூறு ஏற்படக்கூடாது என்பதற்காக, விடுதலைப் புலிகளுக்கு எதிரான இந்திய அமைதிப் படையின் தாக்குதல் நடவடிக்கை அனைத்தையும் முடிவுக்கு கொண்டு வருமாறு கேட்டுக் கொண்டார்.

மறு நாள், ஜுன் 30 ரஜீவ் காந்தி அனுப்பிய குறும் பதில் ஒன்று பிரேமதாசாவை வந்தடைந்தது. நையாண்டித் தொனியில் எழுதப்பட்ட அந்தக் கடிதம் புலிகளுக்கும் சிறீலங்காவுக்கும் இடையே உருவான போர் நிறுத்த உடன்படிக்கையின் முக்கியத்துவத்தை ஊதாசீனப்படுத்தியது. விடுதலைப் புலிகள் ஆயுதங்களைக் கையளிக்க வேண்டும் என்று ஆணையிட்டது. அதில், இது தொடர்பான பந்தி பின்வருமாறு அமைந்தது.

> "இந்திய - இலங்கை ஒப்பந்தமானது, தமிழ்ப் போராளிக் குழுக்களுக்கும் சிறீலங்கா படைகளுக்கும் இடையே பகைமை ஒழிப்புக்கும் ஏற்பாடு செய்வதோடு, வடக்குக் கிழக்கு மாகாணத்தில் படைப் பாசறைகளில் சிறீலங்காப் படைகள் தரித்திருப்பதற்கும் ஏற்பாடு செய்கிறது. இவை இரண்டும் 1987 ஜுலை 30இல் நடைபெற்றுவிட்டன. ஆகவே, சிறீலங்கா படைகளுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையே செம்மையான பகைமை ஒழிப்பு ஏற்கனவே

இடம்பெற்றுவிட்டது. இந்த யதார்த்த நிலையை விடுதலைப் புலிகள் இப்போது ஏற்றுக் கொண்டிருப்பது எமக்கு மகிழ்ச்சி தருகிறது.

பகைமை முடிவுக்கு விடுதலைப் புலிகள் முழுமையாகச் சம்மதிக்கிறார்கள் என்றால், சிறீலங்காவின் ஐக்கியத்தையும் இறையாண்மையையும் அவர்கள் இப்போது ஏற்றுக் கொண்டு, வன்செயலைக் கைவிட்டு மக்களாட்சி மரபை ஏற்றுக் கொள்கிறார்கள் என்பதே தெளிவாகத் தெரிகிறது. விடுதலைப் புலிகள் வன்செயலைக் கைவிட்டிருப்பதை அடுத்து, 1987 ஓகஸ்ட் 5இல் தொடங்கி, இன்னமும் முற்றுப்பெறாத ஆயுதக் கையளிப்பை சிறீலங்கா அரசினூடாக மீளத் தொடர வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். விடுதலைப் புலிகள், தங்கள் ஆயுதங்களைக் கையளிப்பதோடு, சிறீலங்கா அரசுக்கு எதிரான வன்செயலை மட்டும் கைவிடுவதோடு நிற்காது, வடக்குக் கிழக்கு மாகாணத்தில் உள்ள ஏனைய குடிமக்களுக்கு எதிரான வன்செயலைக் கைவிடுவதாக இருந்தாலன்றிப் போர் நிறுத்தப் பிரகடனம் அர்த்தம் அற்றதாகிவிடும்."

விடுதலைப் புலிகளோடு புதுடில்லி போர் நிறுத்தம் புரிய விரும்பவில்லை என்பதை ரஜீவின் கடிதம் தெளிவாக உணர்த்தியது. போர் நிறுத்தத்துக்கு முன், ஒப்பந்த கடப்பாடுகள் அனைத்தும் நிறைவேற்றப்படவேண்டும் என்று இந்தியா வாதித்தது. விடுதலைப் புலிகளால் சற்றேனும் ஏற்க முடியாத நிபந்தனைப் பட்டியலில் அந்தக் கடப்பாடுகள் உள்ளடக்கப்பட்டு இருந்தன. அவை (அ) ஆயுதக் கையளிப்பு (ஆ) சுயநிர்ணய உரிமைக்கான போராட்டத்தைக் கைவிட்டு சிறீலங்காவின் ஐக்கியத்தையும் இறையாண்மையையும் ஏற்றுக் கொள்ளல் (இ) ஏனைய குடிமக்களுக்கு (அதாவது ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் துணைப்படைக்கு) எதிராக வன்செயலைத் துறத்தல் ஆகும். இந்த விடயங்கள் தொடர்பாகச் சிறீலங்கா அரசுத் தலைவர் விளக்கம் தரவேண்டும் என்று ரஜீவ் தமது கடிதத்தில் கேட்டிருந்தார்.

சிறீலங்கா அரசுக்கும் புலிகளுக்கும் இடையில் ஜுலை 2இல் நடைபெற்ற கொழும்புப் பேச்சுவார்த்தையில் இந்தியத் தலைவர் அனுப்பிய முரண்பாடுகளுக்குரிய கடிதம் பற்றியே

விவாதிக்கப்பட்டது. ரஜீவ் கேட்ட கேள்விகளுக்கும் விதித்த நிபந்தனைகளுக்கும் பதில் அளிக்கும் போது, சிறீலங்காவுக்கும் புலிகளுக்கும் இடையே ஏற்பட்ட இருதலைப்பட்சமான போர் நிறுத்தத்தை அற்பமாகக் கருதி, இந்தியா புறக்கணித்ததையொட்டி, விடுதலைப் புலி அணி, தன் வருத்தத்தைத் தெரிவித்தது. சிறீலங்காப் படைகளுக்கும் விடுதலைப் புலிப் படையணிகளுக்கும் இடையே செம்மையான போர் நிறுத்தம் ஏற்பட ஒப்பந்தம் ஏற்கனவே வழிசெய்து விட்டதாகக் காந்தி அவர்கள் கூறியிருப்பது உண்மைக்குப் புறம்பானது என்றும், பிழையான அபிப்பிராயத்தைத் தோற்றுவிக்கின்றது என்றும் புலிகள் வாதிட்டார்கள். ஒப்பந்தத்தில் விபரிக்கப்பட்ட போர் நிறுத்தம் செம்மையாக நடைமுறைப்படுத்தப்பட்டிருக்கவில்லை. சிறீலங்காப் படைகளுக்கும் புலிப் போராளிகளுக்கும் இடையே பல மோதல்கள் இடம்பெற்றும், கணிசமான அளவு சிங்களப் படையினர் கொல்லப்பட்டும் இருந்தார்கள். போரில் ஈடுபட்டிருந்த இரண்டு பிரிவினருக்கும் இடையே அமைதியை மேற்பார்வை செய்யும் பொறுப்பை எடுத்துக் கொண்ட இந்திய ஆயுதப் படைகள் வன்செயலைக் கட்டுப்படுத்த மேற்கொண்ட முயற்சிகள் படுமோசமான தோல்வி கண்டிருந்தன.

இந்திய அமைதிப் படைகளுக்கும் புலிகளுக்கும் இடையே போர் நிறுத்தம் வருவதற்கு இரண்டு நிபந்தனைகளை ரஜீவ் விதித்திருப்பதாகப் புலிகள் சுட்டிக்காட்டினார்கள். ஒன்று புலிகள் ஆயுதக் கையளிப்பை மீளத் தொடங்க வேண்டும்; இரண்டு, வடக்குக் கிழக்கில் உள்ள ஏனைய அனைத்துக் குடிமக்களுக்கு எதிராகவும் வன்முறையை பயன்படுத்துவதில்லை என்று பிரகடனம் செய்ய வேண்டும். இந்தியப் படையின் ஆயுதக் களைவு முயற்சி முற்றுமுழுதாகத் தோல்வி கண்டிருந்தது. அந்த முயற்சியே இரத்த ஆறு ஓடும் போராகவும் நீடித்துச் செல்லும் போராகவும் வடிவெடுத்தது. இந்திய அமைதிப் படை, தானே ஒரு கொலைப் பொறியாக மாறியது; ஆயிரமாயிரம் அப்பாவித் தமிழ் மக்கள் உயிரிழந்தார்கள். இப்பொழுதோவென்றால், சிறீலங்கா அரசுத் தலைவராலேயே அமைதிப் பேச்சுவார்த்தை தொடக்கப் பட்டிருக்கின்றது. அது ஒரு புரட்சிகர, புதிய நிலையைத் தோற்றுவித்திருக்கின்றது. அதை நடைமுறைச் சாத்தியமான வழியாக இனம் கண்டு அதற்கு முகம் கொடுக்க வேண்டும். சிறீலங்கா அரசுக்கும் புலிகளுக்கும் இடையே நடந்து

கொண்டிருக்கும் பேச்சுவார்த்தை எதுவித நிபந்தனைகளோ, இந்திய-இலங்கை ஒப்பந்தத்தின் கடப்பாடு நெருக்குவாரங்களோ இல்லாமல் நடந்து கொண்டிருக்கின்றது; ஆயுதங்களை வைத்திருப்பதும் அவற்றைக் களைவதும் சிறீலங்காவுக்கும் புலிகளுக்கும் இடையே உள்ள ஒரு பிரச்சினையாகும். சம்பந்தப்பட்ட இரண்டு பிரிவினருமே பேசித் தீர்க்க வேண்டிய விடயம் இது. ஆகவே, ஆயுதங்களைக் கீழே வைக்கும் பிரச்சினையைத் தீர்க்கும் பொறுப்பு சிறீலங்கா அரசினுடையதே என்பதை சிறீலங்கா அரசு இந்தியாவிடம் வலியுறுத்திக் கூறவேண்டும் என்று புலிகள் விதந்துரைந்தார்கள். அது தவிர, தமிழ்த் தேசிய இராணுவம் என்ற பெயரில் பலமிக்க இராணுவ இயந்திரம் ஒன்றை இந்தியா கட்டி எழுப்புவதையொட்டி, புதுடில்லியிடம் கடும் மறுப்பை அரசு தெரிவிக்க வேண்டும் என்றும் புலிகள் வலியுறுத்தினார்கள். ஆயுதக் களைவு என்ற பெயரில் வடக்கு-கிழக்கிலே பாரிய இராணுவ மயத்திட்டம் ஒன்றில் இந்திய அமைதிப் படை ஈடுபட்டிருப்பதாகவும் புலிகள் குற்றஞ் சாட்டினார்கள். ரஜீவ் காந்தியின் கடிதத்தில் கூறப்பட்ட இரண்டாவது நிபந்தனை தொடர்பாக, வடக்குக் கிழக்கில் உள்ள அனைத்துக் குடிமக்கள் மட்டிலும் போர் நிறுத்தம் கடைப்பிடிக்கத் தாம் தயார் என்று கூறிய புலிகள், அதற்கு முன், இந்திய அமைதிப் படைகளும் அதன் அடிவருடி ஆயுதக் குழுக்களும் புலிகளுக்கு எதிரான வன்செயலைக் கைவிடுவார்கள் என்று இந்தியா உத்தரவாதம் அளிக்க வேண்டும் என்று கேட்டார்கள். சனநாயக அரசியல் நீரோட்டத்தில் கலந்து கொள்ள விடுதலைப் புலிகள் தயாராக இருந்தார்கள்; ஆனால் அதற்கு முன், தமிழர் தாயகத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் இந்திய படைகள் முழுமையாக வெளியேற வேண்டும் என்றும் அவர்கள் கூறினார்கள். கூட்டத்திலே புலிகளின் அணி தெரிவித்த கருத்துக்களை அரசுத் தலைவர் பிரேமதாசா இந்தியப் பிரதமருக்கு எடுத்துரைப்பார் என்று அரச அணி உறுதியளித்தது.

பிரேமதாசா அவர்கள் ரஜீவ் காந்தி அவர்களுக்கு ஜூலை 4இல் எழுதிய கடிதத்தில், சில விடயங்களைத் திட்ட வட்டமாகக் கூறினார். சிறீலங்காவுக்குள் வாழும் அனைத்துக் குடிமக்களுக்கும் பாதுகாப்பையும் காப்புறுதியையும் வழங்க வேண்டிய பொறுப்பு சிறீலங்கா அரசுக்கு மட்டுமே உண்டு என்று அவர் குறிப்பிட்டார். அத்துடன் இலங்கைக் குடிமக்கள் மீதான

பாதுகாப்பு அதிகாரங்கள் எவற்றையும் இந்திய - இலங்கை ஒப்பந்தம் இந்தியாவிடம் ஒப்படைக்கவில்லை என்றும் கூறினார். முந்திய இரண்டு ஆண்டுகளாகப் புலிகளிடம் இருந்து ஆயுதக் களைவு நடத்த இந்தியா தவறிவிட்டதைச் சுட்டிக் காட்டிய பிரேமதாசா, புலிகள் அந்தத் தருணத்தில் சிறீலங்காவுடன் அரசியல் பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டிருப்பதாகவும், இந்திய ஆயுதப் படைகள் வெளியேறியபின், புலிகள் தங்கள் ஆயுதங்களைக் கைவிடுவார்கள் என்றும் தெளிவாகத் தெரிவித்தார். ஒப்பந்தத்துக்கு அமைவாக, இந்திய அரசோ, அதன் ஆயுதப் படைகளோ இலங்கைக்குள் செயற்படக் கட்டளையுரிமை கொண்டிருப்பதாக வாதிப்பது 'தனித்த இறையாண்மையுடைய நட்பு நாடு ஒன்றின் உள்நாட்டு விவகாரங்களில் பாரதூரமாகத் தலையிடுவதாக அமையும்' என்றும் அவர் எச்சரித்தார்.

சிறீலங்காவில் இருந்து இந்திய ஆயுதப் படைகளைத் திருப்பி அனுப்பும் முயற்சியில், ரஜீவ் நிர்வாகத்துடன் முட்டிமோதும் நிலைப்பாட்டை எடுக்க பிரேமதாசா முற்பட்டு விட்டார் என்பதைக் கடிதத்தின் பகைமைத் தொனியும் உள்ளடக்கமும் உணர்த்தின. அதே கடும் நிலைப்பாட்டையே காந்தியும் எடுத்தார். தமது பதிலை ஜுலை 11ஆம் திகதி சிறீலங்கா அரசுத் தலைவருக்கு அனுப்பினார். இரண்டு நாடுகளுக்கும் இடையே கைச்சாத்தான ஒப்பந்தம் ஒன்று இருப்பதை அவர் நினைவூட்டினார். ஒப்பந்தத்தின் அடிப்படையில், வடக்கு கிழக்கு மக்களின் பாதுகாப்புக்கும் காப்புறுதிக்கும் உத்தரவாதம் வழங்கும் கடப்பாடு இந்தியாவுக்கு இருப்பதை அவர் சுட்டிக்காட்டினார். வடக்கு - கிழக்கு மாகாண சபைக்கு வழங்குவதாக வாக்குறுதியளித்த அதிகாரப் பகிர்வுகளை சிறீலங்கா நடைமுறைப்படுத்தவில்லை என்று கண்டனம் தெரிவித்தார். இந்தியப் படைகளின் வெளியேற்றம் தொடர்பாகப் பேசுவதானால் இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை நடைமுறைப்படுத்த ஒரு அட்டவணையையும் கூடித் தயாரிக்கலாம் என்றும் காந்தி வலியுறுத்தினார். அரசுத் தலைவர்களிடையே நம்பிக்கையின் அடிப்படையில் நடைபெறும் அதிகாரபூர்வ கடிதங்களையொட்டிப் பேணப்பட வேண்டிய ஒழுக்காற்றைக் கைவிட்டு, அவற்றையெல்லாம் பகிரங்கப் படுத்தியமைக்காக, ரஜீவ் காந்தி, தமது கடிதத்தின் கடைசிப் பந்தியில், பிரேமதாசா மீதும் நேரடிக் கண்டனம் தெரிவித்தார்.

ரஜீவின் மூர்க்கத்தனமும், பகைமைப் போக்கும் பிரேமதாசாவுக்குக் கடுஞ் சீற்றத்தைக் கொடுத்தது. இந்தியப் பிரதமருக்கு கடிதங்கள் எழுதி, இந்தியப் படைகளைத் திருப்பி அழைக்கக் கேட்டதில், பயனேதும் இல்லை என்று அவர் உணர்ந்தார். வகையறியா நிலையில், அவர் இன்னொரு தந்திரோபாயத்தைக் கடைப்பிடித்தார். இந்திய அமைதிப் படை அடங்கலாக நாட்டில் உள்ள அனைத்துப் படைகளினதும் ஏக தளபதி என்ற தம் நிலையில் நின்று இந்திய அமைதிப் படையின் கட்டளைத் தளபதி லெப். ஜெனரல் கல்கற் அவர்களுக்கு இறுதியாணை அனுப்பினார். இந்தியப் படைகள் அனைத்தும் ஜூலை முடிவுக்குள் வெளியேற்றப்பட வேண்டும் என்றும், அல்லது பாசறைகளுக்குள் முடக்கப்பட வேண்டும் என்றும் தெரிவித்தார். இந்த இறுதியாணை ஒரு சட்டப் பத்திரமாக, ஜூலை 23ஆம் திகதியன்று, திருகோணமலையில் தளபதி கல்கத்திடம் கையளிக்கப்பட்டது. இதற்குப் பதிலாக, தளபதி கல்கற், எச்சரிக்கை ஒன்றை பிரேமதாசாவுக்கு அனுப்பினார். சிறீலங்கா படைகள் தம் பாசறைகளை விட்டு வெளியே வந்தால், அவர்களுக்கு எதிரான தாக்குதல் நடவடிக்கையில் ஈடுபட இந்தியப் படையினர் நிர்ப்பந்திக்கப் படுவார்கள் என்று அதில் தெரிவித்தார். பிரேமதாசாவின் உராய்வு நிலை இராஜதந்திர அணுகுமுறை இங்கு பயனளிக்கத் தவறிவிட்டது.

## ஆயுத உதவிக்கான வேண்டுகோள்

பிரேமதாசாவின் இறுதி எச்சரிக்கையை உடனடுத்து, வடபகுதி முல்லைத்தீவுக் காடுகளில் இருந்த புலிகளின் கெரில்லாப் படையணிகளுக்கு எதிராக இந்தியப் படைகள் தங்கள் தாக்குதல் நடவடிக்கைகளைத் தீவிரப்படுத்தின. இன்னொரு புறத்தில், இந்திய அமைதிப் படையோடு அருகருகாக நின்று, தமிழ்த் தேசிய இராணுவம், விடுதலைப் புலிகளுக்கு எதிரான தனது நடவடிக்கைகளைத் தொடங்கப் போவதாக வரதராஜப் பெருமாள் அறிவித்தார். இந்திய - இலங்கை ஒப்பந்தக் கடப்பாடுகளை பிரேமதாசா நிர்வாகம் நடைமுறைப்படுத்தத் தவறினால், தாம் தனி அரசான ஈழப் பிரகடனத்தை செய்யப் போவதாகவும் அவர் தெரிவித்தார்.

இப்படியான இக்கட்டான பின்னணியிலேயே நாம் தங்கியிருந்த விடுதியில் ஓர் அவசரச் சந்திப்புக்காக ஹமீது அவர்களை பாலா அழைத்தார். இந்தியப் படைகளிடம் இருந்தும் தமிழ்த் தேசிய இராணுவத்திடம் இருந்தும் கிளர்ந்திருக்கும் இராணுவ அச்சுறுத்தலுக்கு விடுதலைப் புலிகள் முகம் கொடுப்பதற்கு வசதியாக ஆயுத உதவிகளை அரசிடமிருந்து பெறமுடியுமா என்பதை ஆராய்வதற்காகவே ஹமீது அவர்களை பாலா அழைத்தார். அன்று மாலை ஒன்பது மணிக்கே ஹமீது அவர்கள் விடுதிக்கு வந்து, கூடத்துக் கதிரையில் சாவகாசமாக அமர்ந்து, நீண்ட கியூபா சுருட்டுப் புகைத்த வண்ணம், பாலா கூறுவதைப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்தார். மிகக் கவனமாக எடுத்துரைக்கப்பட வேண்டிய விடயம்! அதே சமயம், ஆபத்தானதும் பிரச்சினைக்கு உரியதுமான விடயம்! உண்மையான களநிலையையும் அதன் கனதியையும் அதுவும் முல்லைத்தீவுப் போராட்டக் கள நிலையையும் தமிழிலும், ஆங்கிலத்திலும் மிக நிதானமாக பாலா விளக்கினார். புலிகளிடம் இருந்த ஆயுதத் தளபாடங்கள் கடகடவென்று குறைந்து போய்க்கொண்டிருந்தன. மறுபுறம் பெருந்தொகை இந்திய போர்ப் படைகளையும் தமக்கு ஆதரவாகத் தமிழ்ப் போராளி அணிகளையும் பெருமளவிலே முல்லைத்தீவுக் காடுகளுக்குள் இந்தியப் படைகள் குவித்துக் கொண்டிருந்தன. பாலா இவற்றை ஹமீது அவர்களுக்கு விளக்கினார். பிரேமதாசா அவர்களுடைய கடும்போக்கு இராஜதந்திரத்தினால் சீற்றம் அடைந்த இந்திய இராணுவமும் தமிழ்க் கூலிப் படைகளும், தமிழ்ப் புலிக் கெரில்லாப் போராளிகளையும் அவர்களுடைய தலைமையையும் அழித்தொழிக்கத் தீர்மானித்தனர். கொழும்பு பேச்சுவார்த்தையின் போது இந்திய அமைதிப் படையினரின் அடாவடித்தனங்களை அம்பலப்படுத்தியமையும் அவர்களைத் திரும்பப் பெறவேண்டும் என்று சிறீலங்கா அரசுத் தலைவர் ஆணையிட்டமையும் புதுடில்லியைத் தர்மசங்கடத்துக்கு உள்ளாக்கியதால், அவர்களுடைய கடுங்கோபம் புலிகள் மீது திரும்பியிருந்தது. இந்திய அமைதிப் படையினதும், தமிழ்த் தேசிய இராணுவத்தினதும் கூட்டுத் தாக்குதலுக்கு அவ்வேளை முகம் கொடுத்து, தம்மைக் காப்பாற்றிக் கொள்ள முனைந்து நிற்கும் புலிகளுக்கு ஆயுதங்களையும் போர்த் தளபாடங்களையும் வழங்க பிரேமதாசா அவர்களால் இயலுமாக இருக்குமா என்று பாலா கேட்டார்.

ஹமீது அவர்கள் ஆழாகச் சிந்தித்தார். இது ஒரு மிகவும் பாரதூரமானதும், மிகவும் கவனமாக அணுக வேண்டியதுமான விடயம் என்றார். விடுதலைப் புலிகளுக்கு உதவ, பிரேமதாசா தீர்மானித்தாலும், சிறீலங்கா இராணுவக் கட்டமைப்பு அதை எதிர்க்கக் கூடும் என்று எச்சரிக்கையாகக் கூறினார். ஆனால், வெளிநாட்டு ஆக்கிரமிப்பை எதிர்த்து நிற்கும் நாட்டுப் பற்றுடைய அணியான விடுதலைப் புலிகள் பெருமளவில் ஒழிக்கப்பட்டால், இந்தியப் படைகளை வெளியேற்ற வேண்டும் என்ற பிரேமதாசாவின் உறுதியான எண்ணம் என்றுமே நிறைவேறாது போகலாம் என்று பாலா சுட்டிக்காட்டினார். இறுதியில் நீண்ட நேரக் கலந்தாலோசனையின் பின், எமது வேண்டுகோளை அரசுத் தலைவரிடம் தெரிவிக்க அவர் இசைந்தார். மறுநாள் இரவு பாதுகாப்புச் செயலர் தளபதி ஆட்டிகல அவர்களையும் அழைத்துக் கொண்டு ஹமீது அவர்கள் எமது விடுதிக்கு வந்தார், அரசுத் தலைவர் எமக்கு உதவி புரியச் சம்மதமாக இருப்பதாக அவர்கள் பாலாவிடம் கூறினார்கள். ஆனால் இந்த விடயம் எதிர்விளைவுகளையும் முரண்பாடுகளையும் தோற்றுவிக்கக் கூடியதாதலால் இதை மிக அந்தரங்கமாகக் கையாள வேண்டியிருந்தது. இதைக் கேள்விப்பட்டதும், இராணுவம் கொதித்தெழும். ஆனால் மிக ரகசியமாக இதைச் செய்து முடிக்கலாம் என்று தளபதி கூறினார். தேவையானவற்றின் பட்டியலை வழங்குமாறு ஆட்டிகல கேட்டார். எமது தொலைத் தொடர்பு வழியாகப் பிரபாகரன் அவர்களைப் பாலாவும் யோகியும் தொடர்பு கொண்டு ஆயுதப் பட்டியல் ஒன்றை ஒப்படைத்தார்கள். ஒரு வாரத்துக்குள், முல்லைத்தீவு மாவட்ட மணலாறு பிரதேச எல்லையில் உள்ள சிங்கள இராணுவ முகாம் ஒன்றின் வழியாக, கணிசமான அளவு ஆயுதங்களும் போர்த் தளபாடங்களும் புலிகளிடம் ஒப்படைக்கப்பட்டன.

இந்திய அமைதிப் படை திரும்பப் பெறவேண்டும் என்ற முக்கிய திருப்புமுனை நாளான, 1989 ஜூலை இறுதி நாள் நெருங்கி வந்தபோது, இந்தியப் படைகளைத் திருப்பி அனுப்புவது என்பது புதுடில்லியுடன் பேச்சுவார்த்தை நடத்தியே சாத்தியமாகும் என்று கொழும்பு உணர்ந்தது. அச்சுறுத்தல்களாலும் இறுதி எச்சரிக்கைகளாலுமல்ல. புதுடில்லி முன்பிருந்து கூறியதுபோல, இரண்டு பக்கமும் பேசியே இதைத் தீர்க்கலாம் என்பது தெளிவாயிற்று. பிரேமதாசா தமது கர்வத்தை அடக்கிக் கொண்டு ரஜீவ் நிர்வாகத்துடன் பேசித் தீர்க்க

வேண்டும் என்பதற்கு இணங்க வேண்டியதாயிற்று. இதன் விளைவாக, ஒரு பலம் வாய்ந்த சிறீலங்கா அணி ஒன்று, ஜுலை 29ஆம் திகதியன்று புதுடில்லிக்கு அனுப்பி வைக்கப்பட்டது. அந்த அணியில், வெளிவிவகார அமைச்சர் ரஞ்சன் விஜயரத்னா, உயர்கல்வி அமைச்சர் ஏ.சீ.எஸ்.ஹமீது, வெளியுறவுச் செயலர் பேணாட் திலகரத்னா, இந்தியாவில் இருந்த சிறீலங்கா உயர்ஸ்தானிகர் கலாநிதி ஸ்ரான்லி கல்பகே, அனைத்துலக விவகாரங்களில் அரசுத் தலைவருக்கு ஆலோசகராக இருந்த பிரட்மன் வீரக்கோன், சட்ட மா அதிபர் சுனில் டி சில்வா, அமைச்சரவைச் செயலர் டபிள்யூ.ரீ. ஜயசிங்கா, சமாதானக் குழுச் செயலர் பீலிக்ஸ் டயஸ் அபேசிங்கா ஆகியோர் உறுப்பினராகச் சென்றனர். இந்தியப் பிரதமரையும் பீ.வீ. நரசிம்ம ராவ் அவர்களையும் பாதுகாப்பு அமைச்சர் கே.சீ.பான்ற் அவர்களையும் சிறீலங்கா அணி பல தடவை சந்தித்தது. பேச்சுவார்த்தைகள் ஓகஸ்ட் 4ஆம் திகதி நிறைவடைந்தன. இந்திய, சிறீலங்கா அணிகள் நான்கு முக்கிய விடயங்களை ஆராய்ந்தன. முதலாவதாக, சிறீலங்காவில் இருந்து இந்திய அமைதிப் படைகளைத் திருப்பிப் பெறுவதற்கான கால அட்டவணைக்கான ஆயத்தங்களைப் புரிதல்; இரண்டாவதாக, விடுதலைப் புலிகளுக்கு எதிரான பகைமை நடவடிக்கைகளை முடிவுக்குக் கொண்டு வருதல்; மூன்றாவதாக இந்திய-இலங்கை ஒப்பந்தத்தை நடைமுறைப்படுத்துவது தொடர்பாக மீளாய்வு செய்தல்; நான்காவதாக வடக்குக் கிழக்கு மாகாணத்தின் அனைத்துக் குடிமக்களின் பாதுகாப்புக்கும் காப்புறுதிக்கும் வழிவகுத்தல்.

புதுடில்லியில் நடைபெற்ற வெற்றிகரமான பேச்சுக்களின் விளைவாக, இந்திய அமைதிப் படைகளை ஒரு கால அட்டவணைக்கு ஏற்ப, படிப்படியாகத் திருப்பி அழைக்க இந்தியா ஒப்புக் கொண்டது. இந்திய அமைதிப் படைகளைத் திருப்பி அழைக்கும் பணிக்கும் வேகம் கொடுத்து டிசம்பர் 31ஆம் திகதியளவில் அந்தப் பணியை முடிவுக்கு கொண்டுவர அனைத்து முயற்சிகளும் எடுக்கப்படும் என்று இந்தியா உறுதியளித்தது. எப்படியாயினும், சார்க் மாநாடு நடந்த பின்னரே, இறுதி அமைதிப் படையணி நாடு திரும்புவதாக இருக்கும். செப்டெம்பர் 20ஆம் திகதியில் இருந்து இந்திய அமைதிப் படை தனது இராணுவத் தாக்குதல் நடவடிக்கைகளைக் கைவிடும் என்று புதுடில்லி இணங்கியது. சிறீலங்கா அணி, அளித்த

வாக்குறுதியின்படி, வடக்குக் கிழக்கு மாகாணசபை செவ்வையாக இயங்குவதன் பொருட்டு அதற்கு அதிகாரப் பகிர்வு வழங்கும் அலுவல்களுக்கு வேகம் கொடுக்கும் வகையில் நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று தெரிவித்து, இரண்டு அணியினரும் ஒரு 'பாதுகாப்பு ஒருங்கிணைப்புக் குழு' ஒன்றை நிறுவ இணங்கினர். அதில் சிறீலங்கா பாதுகாப்பமைச்சுச் செயலர், இந்திய அமைதிப் படைத்தளபதி, வடக்கு - கிழக்கு மாகாண சபையின் முதலமைச்சர் ஆகியோர் உறுப்பினராய் அமைவர். வடக்கு - கிழக்கின் சட்டம், ஒழுங்கு ஆகியவற்றிற்கு இந்தக் குழு பொறுப்பாக இருப்பதோடு, வடக்கு, கிழக்கில் உள்ள அனைத்து குடிமக்களின் பாதுகாப்புக்கும் காப்புறுதிக்கும் பொறுப்பாகவும் இருக்கும்.

புதுடில்லிக்கும் கொழும்புக்கும் இடையே உடன்பாடு ஏற்பட்டதை ஒட்டி, பிரேமதாசா பெரிதும் மகிழ்ந்தார். அவருடைய இல்லத்தில் இடம்பெற்ற ஒரு பிரத்தியேகச் சந்திப்பின்போது, ரஜீவ் காந்தியுடன் இடம்பெற்ற இராஜதந்திர பலப் பரீட்சைப் போட்டியில் தாம் வெற்றி பெற்றுவிட்டதாகவும், இந்திய அமைதிப் படையின் கதை முடிந்து விட்டதாகவும் எம்மிடம் கூறினார். ஈ.பீ.ஆர்.எல்.எ᾿.ப் இன் மாகாண நிர்வாகத்திற்குக் கூடுதலான அதிகாரம் வழங்கி அதைத் தரம் உயர்த்த சிறீலங்கா வாக்குறுதி வழங்கியிருந்த போதிலும், பிரேமதாசா அவர்கள் அதற்கென இரகசியத் திட்டம் ஒன்றை வைத்திருந்தார். விடுதலைப் புலிகளைப் பொறுத்த வரையிலே, தமிழர் தாயகத்தில் இருந்து இந்திய அமைதிப் படை வெளியேற வேண்டும் என்ற அவர்களுடைய அரசியல் நோக்கம் நிறைவேறுவதால், அவர்களுக்கு இந்த ஏற்பாடு மகிழ்ச்சியையே கொடுத்தது.

இந்தியப் படைகளை ஒரு கால அட்டவணைக்குள் படிப்படியாகத் திருப்பி அனுப்புவதை இந்திய அரசுடன் ஓர் உடன்படிக்கை வடிவில் உறுதிப்படுத்தி, அமைதிப் படை விலகிய பின் தமிழர் தாயகத்தின் அரசியல் வெற்றிடத்தை எவ்வாறு நிரப்புவது என்பது பிரேமதாசா எதிர்நோக்கிய பிரச்சினை ஆகியது. போதுமான அளவு அதிகாரப் பகிர்வும், ஒரு காவல்துறை அமைப்பும் வழங்கி, பெருமாளின் மாகாண நிர்வாகத்தைப் பலப்படுத்துவதாக ரஜீவ் காந்திக்கு பிரேமதாசா உறுதி வழங்கிய போதிலும், விடுதலைப் புலிகள் தங்கள் காட்டு மறைவிடங்களில் இருந்து நகருக்குள் வந்து இந்திய அமைதிப் படையின் நிலைகளில் காலூன்றியதும் ஈ.பீ.ஆர்.எல்.எ᾿.ப் இன்

ஆட்சி காற்றிலே கரைந்து மறைந்து விடும் என்பது பிரேமதாசாவுக்கு நன்கு தெரியும். விடுதலைப் புலிகளின் தீரம், உறுதி மற்றும் தங்கள் இலட்சியம் மட்டில் அவர்களுக்கு இருந்த பற்று ஆகியவற்றை பிரேமதாசா மதித்தார், ஆனால், தமிழரின் தாயகம், சுயநிர்ணய உரிமை, ஆகிய கோரிக்கைகளை அவர் வன்மையாக எதிர்த்தார். இந்தியப் படைகள் வெளியேறத் தொடங்க பிரேமதாசாவின் சிந்தனைகளும் திட்டங்களும் வெளிப்படையாகத் தெரிந்தன. இனப் பிரச்சினைக்கான நிரந்தரத் தீர்வு, சிறீலங்காவின் ஒற்றையாட்சி யாப்புக்கு உள்ளேயே அமைய வேண்டும் என்பதை அவர் வலியுறுத்தத் தொடங்கினார். இந்தியர்கள் நாட்டை விட்டு வெளியேறத் தொடங்கிவிட்டதால், புலிகளும் அரசியல் நீரோட்டத்துக்குள் நடைமுறையில் கலந்து கொள்ள வேண்டிய வேளை முதிர்ந்து விட்டதாக அவர் கூறினார். விடுதலைப் புலிகளுக்குத் தமிழ் மக்களிடையே நிலவிய அமோக ஆதரவுடன், வடக்குக் கிழக்குத் தேர்தல்களில் அவர்கள் மாபெரும் வெற்றி பெறுவது உறுதி. இந்த நிலையில், விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள், அரசியல் கட்சி ஒன்றை நிறுவி, தேர்தல் ஆணையாளரிடம் அதைப் பதிவு செய்ய வேண்டும் என்றும் அவர் ஆலோசனை வழங்கினார்.

## விடுதலைப் புலிகளின் அரசியற் கட்சி

விடுதலைப் புலிகளின் இறுதி நோக்கம் பற்றிப் பிரேமதாசா சந்தேகம் கொள்ளத் தொடங்கியிருக்கிறார் என்று, தனிப்பட்ட சந்திப்புகளின்போது, ஹமீது அவர்கள் பாலாவிடம் கூறினார். அரசியல் யாப்புக் கட்டமைப்புக்குள் ஒரு தீர்வைப் புலிகள் நாடமாட்டார்கள் என்றும் தனித் தமிழ் அரசை நிறுவுவதில் உறுதியாக இருக்கிறார்கள் என்றும் சில அமைச்சர்கள் அரசுத் தலைவரை எச்சரிப்பதாகத் திரு. ஹமீது தெரிவித்தார். வடக்கு - கிழக்கு மாகாணசபைத் தேர்தலில் புலிகள் பங்குபற்றி வெற்றி பெற்றால், உள்நாட்டிலும், அனைத்துலகிலும் புலிகளின் மதிப்பு உயரும் என்று திரு. ஹமீது எமக்கு அறிவுரை கூறினார். விடுதலைப் புலிகளின் தலைமை இதற்கு இணங்கினால் அல்லாமல், பெருமாள் நிர்வாகத்தைக் கலைத்து, புலிகளிடம் அதிகாரத்தை ஒப்படைப்பது அரசுத் தலைவருக்கு மிகக் கடினமாக இருக்கும். அரசியல் கட்சி ஒன்றை

உருவாக்குவதற்கும் புலிகளின் தலைமை சம்மதமாக இருப்பதாக ஹமீது அவர்களிடம் பாலா கூறினார். தமிழ் மக்களின் உண்மையான ஏகப் பிரதிநிதிகள் தாமே என்று பெரும்பான்மைச் சிங்களவருக்கும் அனைத்துலகத்திற்கும் நிரூபிப்பதன் பொருட்டு, மாகாணசபைத் தேர்தலில் பங்கெடுக்க புலிகள் சம்மதமாக இருந்தார்கள். அதே நேரம் பிரேமதாசாவின் இறுதி நோக்கம் என்ன என்பது பற்றி புலிகளும் சந்தேகம் கொண்டிருக்கிறார்கள் என்று பாலா அங்கு தெரிவித்தார். அதே சமயம் வடக்கு - கிழக்கு மாகாண சபையைக் கலைத்து விடுவாரா, அரசியல் யாப்பின் ஆறாவது திருத்தச் சட்டத்தை நீக்கி ஆயுதப் படைகளைப் பாசறைகளில் முடங்கியிருக்கச் செய்வாரா, அமைதியான முறையில் அதிகாரம் புலிகளின் கரங்களுக்கு மாற அவர் இடமளிப்பாரா என்ற பாலாவின் வினாக்களுக்கு, ஹமீது அவர்கள் வழங்கிய பதில்கள் சாதகமாகவே அமைந்தன. நாம் மக்களாட்சி அரசியல் நீரோட்டத்தில் கலந்து கொள்ள ஆயத்தம் என்றால், பிரேமதாசாவை இணங்கச் செய்ய முடியுமாக இருக்கும் என்று அவர் தெரிவித்தார்.

அரசியல் கட்சி ஒன்றைத் தொடக்குவது தொடர்பாக முல்லைத்தீவில் உள்ள விடுதலைப் புலிகளின் தலைமைப் பணிமனைக்கு நாம் சென்றபோது, பிரபாகரன் அவர்களிடமும் ஏனைய தலைவர்களிடமும் பாலா அனுமதி கோரியிருந்தார். எமது தொலைத்தொடர்புச் சாதனம் மூலம் பிரபாகரன் அவர்களுடன் பேசி, கட்சிக்கான பெயருக்கும், கட்சிப் பதவியாளர் பெயர்களுக்கும் பாலா நேரடி அங்கீகாரம் பெற்றார். கட்சிக்கான யாப்பு ஒன்றை வரையும் பணியே மீதமிருந்தது. அரசியல் கட்சி யாப்புக்கள் பற்றித் தாம் முன்னர் ஆய்வு செய்தவற்றை அடிப்படையாக வைத்து, பத்திரத்தை பாலா வரைந்தார். அதைச் செப்பனிட்டு, தட்டச்சிலிட, நான் உதவினேன். அரசியல் கட்சிக்கு, 'விடுதலைப் புலிகள் மக்கள் முன்னணி' என்று பெயர் சூட்டப்பட்டது. விடுதலைப் புலிகளின் பிரிதித் தலைவர் மகேந்திரராசா (மாத்தையா) கட்சியின் தலைவராகவும் யோகரட்ணம் யோகி செயலதிபராகவும் நியமிக்கப்பட்டனர். உண்மையான மக்களாட்சிக் கட்சிக்கான அடித்தளம் ஒன்றுக்கு யாப்பு இடமளித்தது; மக்களின் பல்வேறு பிரிவினரும் அதில் பிரதிநிதித்துவம் பெற்றுப் பங்கெடுக்கவும் வகை செய்தது. யாப்பின் பிரதி ஒன்று, பதிவுக்காக, தேர்தல்

ஆணையாளரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் கட்சியைப் பதிவு செய்துவிட்டு, அரசுத் தலைவருடன் ஆலோசித்த பின்னர் தயக்கத்தோடு புலிகளின் இலச்சினையை விடுதலைப் புலிகளின் மக்கள் முன்னணியின் சின்னமாக அங்கீகரித்தார். விடுதலைப் புலிகள் புதிய அரசியற் கட்சி ஒன்றை நிறுவி, அரசியற் பிரதான நீரோட்டத்தில் கலந்து கொள்ளத் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தமை பிரேமதாசாவுக்குப் பெருமகிழ்ச்சியைக் கொடுத்தது. நாடு முழுவதையும் எதிர்நோக்கும் பல்வேறு பிரச்சினைகளை விவாதிப்பதற்காகத் தாம் கூட்ட உத்தேசித்திருக்கும் அனைத்துக் கட்சி மாநாட்டில் புலிகளின் பிரதிநிதிகளும் கலந்து கொள்ள வேண்டும் என்று அவர் பெரிதும் கேட்டுக் கொண்டார். பதிவு செய்யப்பட்ட ஓர் அரசியல் கட்சியாகப் பகிரங்க அரசியல் அரங்கு ஒன்றிலே விடுதலைப் புலிகளைக் கொண்டு வரும்போது, அமைதிப் பேச்சுவார்த்தைகளின் முக்கிய அரசியல் அறுவடையாக இதைக் காட்டக் கூடுமாக இருக்கும் என்பதே அவருடைய எண்ணமாக இருந்தது. மாநாட்டு அங்குரார்ப்பண வைபவத்தில் 'பார்வையாளராக' கலந்து கொள்ளப் புலிகளின் பிரதிநிதிகள் சம்மதித்தார்கள். அனைத்துக் கட்சி மாநாடு ஓகஸ்ட் 12இல் கூடியபோது இருபத்தாறு அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளாக ஏறத்தாள நூறு பேர் கலந்து கொண்டார்கள். பிரேமதாசாவின் அங்குரார்ப்பண உரை, பிரச்சினைத் தீர்வை இலக்காகக் கொண்டு அமைந்தது. கலந்தாலோசனை, சமரசம், கருத் தொற்றுமை ஆகிய தமது மூன்று அணுகுமுறைகளையும் அவர் முன்வைத்தார். முக்கிய விடயமான இன நெருக்கடி தவிர்ந்த அனைத்துப் பிரச்சினைகளையும் மாநாடு விவாதித்தது. கலந்தாலோசனையோ, சமரசமோ கருத்தொற்றுமையோ ஏற்படாததால் மாநாடு விரைவிலேயே பிசுபிசுத்துப் போயிற்று. ரஜீவ் நிர்வாகத்துக்கும் பிரேமதாசாவுக்கும் இடையே இடம்பெற்ற கூட்டு உடன்பாட்டில் உறுதியளித்தபடி, 1989 ஒக்ரோபர் முற்பாகத்தில் இந்திய அமைதிப் படைகளைத் திருப்பி அழைக்கும் பணி தொடங்கியது. மெதுவாகவே அது செயற்பட்டது. படிப்படியாகவும் மாவட்டம் மாவட்டமாகவும் இந்தியப் படைகள் வெளியேற, தமிழ்த் தேசிய இராணுவத்தினர், அந்தப் பாசறைகளில் குடிகொண்டு தங்கள் நிலைகளைப் பலப்படுத்தினர். முதலில் கிழக்கு மாகாண அம்பாறையிலும், மட்டக்களப்பிலும் இருந்து இந்தியப் படைகள் வெளியேறின.

கிழக்கு மாகாணத்தில் உள்ள தமிழ்த் தேசிய இராணுவத்தின் நிலைகள் மீது விடுதலைப் புலிகள் பாரிய தாக்குதல் ஒன்றை நடத்துவது சாத்தியம் என்பதால், திகிலடைந்து குழம்பிப்போன பெருமாள் நிர்வாகம், பெரும்படை திரட்டும் முயற்சியில் மூர்க்கத்தனமாக ஈடுபட்டது. வீதிகளில், வீடுகளில், பள்ளிகளில் நுழைந்த ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் அணியினர், திடகாத்திர உடலுடைய இளவயது ஆண்கள் அனைவரையும் பலவந்தமாகப் பிடித்துச் சென்றனர். தமது இராணுவப் பிரிவிற்கு ஆளணி மூலம் ஊட்டம் வழங்கி, ஈடாட்டம் கண்டு நொருங்கும் நிலையில் இருந்த தமது ஆட்சியைத் தக்க வைப்பதே இந்த ஆட்சேர்ப்பின் நோக்கமாக இருந்தது. தான் அதிகாரத்தில் ஒட்டிக் கொண்டு இருக்க வேண்டும் என்ற பகீரதப் பிரயத்தன முயற்சியில் பயிற்சியோ, போர் அனுபவமோ இல்லாத பெருந்தொகையினரைப் பலி கொடுக்க ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் செய்த இந்த ஆட்சேர்ப்பு முயற்சி, தமிழ் மக்களிடையே பெருமாள் மட்டில் மனக் கொதிப்பை ஏற்படுத்தியது.

விடுதலைப் புலிகளின் தலைமை ஓர் இக்கட்டான நிலைக்கு உள்ளாகியது. அனாவசியமாக ரத்தம் சொரியப்படுவதைத் தவிர்க்க விரும்பிய பிரபாகரன் அவர்கள், சிறீலங்கா அரசுத் தலைவருக்கு பாலா மூலம் ஓர் அவசர செய்தி அனுப்பினார். புலிகளுக்கும் ரீ.என்.ஏ இற்கும் இடையே நடைபெறும் போரில் சிங்கள ஆயுதப் படைகள் கலந்து கொள்ளக்கூடாது என்று கேட்டுக் கொண்டார். தமிழ்த் தேசிய இராணுவத்தின் ஆயுதம் தரித்த அணியினர் சரணடைந்தால் அவர்கள் அனைவருக்கும் பொது மன்னிப்பு வழங்கப்படும் என்றும் அறிவித்தார். 1989 நவம்பர் முற்பகுதியில் விடுதலைப் புலிப் படையணிகள் கிழக்கு மாகாணத்தில் தாக்குதலை நடத்தினார்கள். முதலில் அம்பாறையிலும் அடுத்த சில வாரங்களில் மட்டக்களப்பிலும் தமிழ்த் தேசிய இராணுவத் தளங்களை இலகுவாகத் தம்வசப்படுத்தினார்கள். தமிழ்த் தேசிய இராணுவத்திற்குத் திரட்டப்பட்ட ஆயிரமாயிரம் இளைஞர்கள் விடுதலைப் புலிகளிடம் சரணடைந்தார்கள். ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் இன் ஆயுதம் தரித்த உறுப்பினரே எதிர்த்து நின்றார்கள். சரணடைந்த அனைவரும், கிழக்கு மாவட்டங்களில் உள்ள பெற்றோரிடம் ஒப்படைக்கப் பட்டார்கள். சரணடைந்த பலர் புலிகள் அணியில் சேர்ந்தார்கள்.

கிழக்கிலே மாகாண நிர்வாகம் வீழ்ச்சி அடைய ஆற்றா நிலையில் தவித்த பெருமாள், ரஜீவ் காந்தியிடமும்,

பிரேமதாசாவிடமும், மனுக்கள் விடுத்தார். இந்திய இராணுவம் விட்டுச் செல்லும் மாவட்டங்களில், விடுதலைப் புலிகள் நிர்வாகத்தைத் தமதாக்கிக் கொள்ளும் முயற்சியைத் தலையிட்டுத் தடுக்க வேண்டும் என்றே பெருமாள் மனுப் பண்ணினார். காந்தியைப் பொறுத்த வரையிலே பொதுத் தேர்தல் ஒன்றுக்கு அவர் ஏற்பாடு செய்யும் நிலையில் இருந்ததாலும், போபஸ் விவகார ஊழல் குற்றச்சாட்டுக்களுக்கு அவர் முகம் கொடுக்க வேண்டி இருந்ததாலும், பெருமாளின் வேண்டுகோளிற்கு செவிசாய்க்க அவர் விரும்பவில்லை. நிலைமையை பிரேமதாசா புரிந்திருந்த போதிலும், இந்தியப் படை வெளியேற்றம் தாமதம் அடைவதை ஒட்டியே அவருடைய கவலை இருந்தது. உடைந்து நொருங்கிக் கொண்டிருக்கும் பெருமாளின் இராணுவக் கட்டமைப்பை அவர் மீளத் திரட்டி, ஒழுங்கு செய்து, உறுதிப்படுத்த அவருக்கு அவகாசம் அளிக்கும் நோக்கத்தோடு, புதுடில்லி இந்தியப் படைகளைத் திருப்பி அழைப்பதைத் திட்டமிட்டே தாமதப்படுதுகிறதோ என்று பிரேமதாசா சந்தேகப்பட்டார்.

தமிழ்த் தேசிய இராணுத்தை அம்பாறை, மட்டக்களப்பு மாவட்டங்களில் இருந்து விரட்டியடித்த விடுதலைப் புலிகள், தமது அதிகாரத்தை அங்கே வலுவாக நிறுவுவதில் முனைந்தார்கள். தேசிய மாவீரர் நாளில் கலந்து கொள்வதற்காக பாலாவும், யோகியும் நானும் மட்டக்களப்பு நகரத்துக்கு விமானப் படை உலங்குவானூர்தி மூலம் சென்றோம். உயிர்ப்பலியான விடுதலைப் புலிப் போராளிகளைக் கௌரவிக்கும் முகமாக நவம்பர் 27ஐ ஒரு தேசிய நாளாகப் பிரபாகரன் அவர்கள் பிரகடனப்படுத்தியிருந்தார். 1989இல் முதல் ஆண்டு ஞாபகார்த்தம் நடைபெற்றது. போராட்டத்தில் உயிர்ப்பலியான முதல் விடுதலைப் புலிப் போராளி சங்கரின் நினைவு நாளே மாவீரர் நாளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. விடுதலைப் புலிகளின் தேசிய நாட்காட்டியில் மாவீரர் நாள் ஒரு முக்கிய நாளாக அமைந்துவிட்டது. ஒரு நாள் நிகழ்வாக 1989இல் முதலில் தொடங்கிய மாவீரர் நாள், ஒரு வாரம் முழுவதிலும் நடைபெறும் நிகழ்வுகளாக மாறி, நவம்பர் 27ஆம் திகதி மாலை ஆறு மணிக்கு உச்சத்தை எட்டும். அந்தத் தருணத்தில், தமிழர் தாயகத்தில் எங்கனும் உள்ள மாவீரர் துயிலும் இல்லங்களில் குடும்பத்தினர் கூடுவர்; ஆலய மணிகளும் அவ்வேளை ஆர்ப்பரிக்கும்.

இந்தத் தேசிய எழுச்சி நாளைக் கொண்டாடுவதற்காக மட்டக்களப்பில் இருந்து அம்பாறை மாவட்டத்திலுள்ள பொத்துவிலுக்கு பயணம் புரிந்தோம். அம்பாறைக்குச் செல்லும் பாதை வழியே, தங்கள் மாவட்டத்தை விட்டு இந்தியப் படைகள் அகன்றதை ஒட்டி, மக்களிடம் காணப்பட்ட நிம்மதியும் மகிழ்ச்சியும் அப்பட்டமாகத் தெரிந்தன. மகிழ்ச்சியில் திளைத்த மக்கள் திரள், எங்கள் வாகனத் தொடரை வழிவழியே நிறுத்திப் புலிப் போராளிகளுக்கு மாலை சூட்டிக் கொண்டிருந்ததால், குறித்த இடத்தைச் சென்றடைய இரட்டிப்பு நேரம் பிடித்தது. பயணப் பாதையில், மக்கள் தங்கள் வீடுகளிலிருந்து ஓடி வந்து தங்கள் தாயகத்திலிருந்து இந்தியப் படைகளை வெளியேற்றுவதில் பேச்சுவார்த்தை வெற்றி பெற்றமைக்காக எம்மைப் பாராட்டினார்கள். அம்பாறை முழுவதிலும், ஒரு நகரில் இருந்து இன்னொரு நகருக்குப் போகும் வழி நீளம் நினைவுச் சிற்றாலயங்கள் காணப்பட்டன; புலிகளின் சிவப்பு மஞ்சள் கொடிகள் அங்கே பறந்தன. மாவீரர் நாளைக் கொண்டாட மக்கள் கூட்டம் கூட்டமாகத் திரண்டார்கள். உரிமைப் போராட்டம் இன்னும் முடியவில்லை என்றும், போராட்டம் ஒரு வித்தியாசமான மட்டத்தில் தொடரும் என்றும் புலித் தலைவர்கள் கூறுவதைக் கேட்க மக்கள் பெருந்திரளாகக் கூடினார்கள். மட்டக்களப்பு நகருக்கு அருகே, கிழக்குக் கரையில் அக்கரைப்பற்றிலும் திருக்கோவிலிலும், வகுப்பறைகளை விட்டு ஓடி வந்த பள்ளிப் பிள்ளைகள், பொதுமக்களோடு விடுதலைப் புலிப் போராளிகளையும் அவர்களுடைய தலைவர்களையும் பார்ப்பதற்காகவும் அவர்கள் கூறுவதைக் கேட்பதற்காகவும் காத்து நின்றார்கள். புலிப் போராளிகளுக்கு மல்லிகை மலர் மாலை சூட்டித் தங்கள் பாராட்டைத் தெரிவிக்க வாய்ப்புக் கிடைக்கும் என்ற நம்பிக்கையில், கூட்டம் நடைபெறும் இடங்களில் நீண்ட வரிசைகளிலே மக்கள் காத்து நின்றார்கள்.

பிரேமதாசா அவர்களுடனான தனிப்பட்ட சந்திப்புகளின் போது, விடுதலைப் புலித் தலைவர் பிரபாகரனை தாம் சந்திக்க விரும்புவதாக, தமது உண்மையான ஆவலை அவர் வெளியிட்டார். சிங்களத் தலைவர்கள் எவருமே அவரைச் சந்திக்கவில்லை என்றும், இதனால் அவரைப் பற்றிய திரிபுபட்ட கருத்துக்களே நிலவுகின்றன என்றும் அவர் எம்மிடம் தெரிவித்தார். பிரபாகரன் அவர்களுடன் உரையாடி, அவரை ஆழமாகப் புரிந்து கொள்ளவும் கூடிப் பணியாற்றக் கூடிய

ஈடுபாட்டை அவருடன் ஏற்படுத்திக் கொள்ளவும் தாம் விரும்புவதாகவும் அவர் கூறினார். ஆளுமைப் புரிந்துணர்வைத் தளமாகக் கொண்ட நேரடித் தொடர்புகள் அரசியலுக்கு அவசியமானவை என்பது அவருடைய நம்பிக்கையாகும். பிரபாகரன் அவர்களுடைய இராணுவ ஆற்றலும் பலம் மிக்க சக்திகளை எதிர்நோக்கும் போது அவர் காட்டும் தீரமும் மன உறுதியும் அவர் மட்டில் பிரேமதாசாவுக்கு வியப்பை ஏற்படுத்தியிருந்தன. சாதாரண குடும்பத்தில் உதித்த யாருமறியாத ஒரு சிறுவன், எப்படி மக்களால் பூசிக்கப்படும் வரலாற்று நாயகனாக முகிழ்த்தான் என்பது பிரேமதாசாவுக்கு அதிசயமாக இருந்தது. பாதுகாப்புக் காரணங்களுக்காக பிரபாகரன் அவர்கள் கொழும்புக்கு வரமுடியாது என்று நாம் அரசுத் தலைவரை நம்ப வைக்க நேர்ந்த போது அவருக்கு ஏமாற்றமாக இருந்தது. நாம் முல்லைத்தீவு மூலத் தளப் பாசறையில் இருந்தபோது, பிரபாகரன் அவர்களைப் பிரேமதாசா சந்திக்கப் பெரும் ஆவலாக இருந்ததை பிரபாகரன் அவர்களிடம் பாலா எடுத்துக் கூறினார். அந்தத் தருணத்தில், நாம் அடுத்த தடவை கொழும்பு செல்லும் போது, பிரதித் தலைவர் மகேந்திரராசாவை கூட்டிச் சென்று அவரை அரசுத் தலைவருக்கு அறிமுகம் செய்து வைக்குமாறு கருத்துரைத்திருந்தார்.

ஒக்ரோபர் முற்பகுதியில், பிரபாகரன் அவர்களை நேரில் சந்தித்து ஆலோசனை புரிவதற்காக, முல்லைத்தீவு காடுகளுக்கான இரண்டாவது பயணத்தை மேற்கொண்டோம். கிட்டுவின் துண்டிக்கப்பட்ட காலுக்குச் சிகிச்சை பெறுவதற்காக அவரை இலண்டனுக்கு அனுப்பத் தாம் விரும்புவதாக இந்தப் பயணத்தின் போதே பிரபாகரன் அவர்கள் பாலாவிடம் கூறினார். தம்மை வெளிநாடு அனுப்பத் தீர்மானிக்கப்பட்டிருப்பதை அறிந்ததும் கிட்டுவின் மனம் ஊசலாடியது. சரியான உறுப்புப் பொருத்தல் கிடைத்தால், இலகுவாக நடக்கவும், தடையின்றி நடமாடவும் முடியும் என்பது அவருக்கு மகிழ்ச்சியே. ஆனால் தாம் வெகுவாக நேசிக்கும் தமது போராளிகளையும் தாய் நாட்டையும் விட்டுப் பிரிவது அவருக்குச் சஞ்சலத்தைக் கொடுத்ததால், பிரிவை அவரால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. தமது போராளிகளுக்குப் பயிற்சி வழங்கும் பணியில் கிட்டு ஒளிர்ந்தார்; அவர்களுடைய ஈடுபாடுகளில் அவர்களை ஊக்குவித்தார்; அவர்களை உற்சாகமாக ஈடுபடுத்தப் புதிய திட்டங்களையும் அறிமுகப்படுத்தினார். எனவே, பிரிய

வேண்டிய நாள் நெருங்க, அவரும் சரி, அவருடைய போராளிகளும் சரி, கலகலப்பின்றிச் சோர்வாகக் காணப்பட்டார்கள். நான் பார்த்த பரிதாபத்துக்கு உரிய காட்சிகளில் ஒன்று அலம்பில் காட்டிலிருந்து கிட்டுவை வெளியே கூட்டிச் சென்ற நாளன்று, அந்த வரலாற்று நாயகன், பிரபாகரன் அவர்களுடைய தோளில் முகத்தைப் புதைத்துத் தேம்பி அழுததுதான். அவரை ஒரு கதிரைப் பல்லக்கில் இருத்திய அவருடைய போராளிகள் அவரை உலங்குவானூர்தி வரை தோளிலே சுமந்து சென்றார்கள். இந்த வடிவிலேதான் பாலாவை அவர்கள் முன்னர் தோளில் சுமந்தமையை நினைவு கூர்ந்தேன். காட்டுக்குள் இருந்து வெளியே கொண்டுவரப்படும் போது, தமக்கே உரிய நேர்த்தியில், கிட்டு தமது போராளிகள் முன், கலக்கத்தை முகத்தில் காட்டாது கலகலப்பாக வேடிக்கையாகப் பேசித் தமது பாசத்தை அவர்கள் மீது கொட்டினார். கிட்டு கொழும்பை அடைந்ததும் அவரை பிரித்தானியத் தூதரகத்திற்கு கூட்டிச் சென்றோம். பிரித்தானியத் தூதருடன் கலந்துரையாடிய பின், பிரித்தானியாவுக்கான கிட்டுவின் வீசா அனுமதி அங்கீகரிக்கப்பட்டது. ஆனால், இலண்டன் புறப்படும் முன், கிட்டு ஒரு முக்கிய விடயத்தைக் கவனிக்க வேண்டியிருந்தது. இந்திய அமைதிப் படைப் பாதுகாப்பிலிருந்து விடுவிக்கப்பட்ட பின் முல்லைத்தீவுக் காடுகளுக்குச் சென்றதிலிருந்து, மருத்துவ மாணவியான அவருடைய காதலி சிந்தியாவிடம் இருந்து அவர் பிரிந்து வாழவேண்டியதாயிற்று. சிந்தியாவோடு மீண்டும் இணைய வேண்டும் என்று அவர் தவித்தார். அவரைச் சந்திக்க சிந்தியா யாழ்ப்பாணத்தில் இருந்து கொழும்புக்குப் பயணம் புரிந்தார். அங்கே திருமணம் செய்ய அவர்கள் தீர்மானித்தார்கள். சடங்கிலே கலந்துகொள்ளக் கிட்டுவின் தாயார் வல்வெட்டித்துறையில் இருந்து கொழும்புக்கு அவசரமாக வந்தார். சிந்தியாவின் பெற்றோர் ஏற்கனவே கொழும்பில் இருந்தார்கள். பேச்சுவார்த்தையின் போது புலிப் பிரதிநிதிகள் தரித்திருந்த விடுதியின் அறை ஒன்றிலே ஒக்ரோபர் மாதம் 25ஆம் திகதி, கிட்டுவுக்கும் சிந்தியாவுக்கும் பதிவுத் திருமணம் நடைபெற்றது. சில நாள் கழித்து கிட்டு இலண்டனுக்கு விமானம் மூலம் பயணமானார். பயண ஏற்பாடுகளைச் செய்து கொண்டு சிந்தியா பின்னர் இலண்டனில் அவரோடு இணைந்து கொண்டார்.

(பின் குறிப்பு: 1989 நவம்பர் முற்பகுதியில் இலண்டன் வந்து சேர்ந்த தளபதி கிட்டு, விடுதலைப் புலிகளின் சர்வதேச

விவகாரங்களுக்குப் பொறுப்பாளராக நியமிக்கப்பட்டார். இப் புதிய பொறுப்பை ஏற்றுக் கொண்ட கேணல் கிட்டு, தனது நிர்வாகத் திறமையினால் வெளிநாட்டுச் செயற்பாடுகளில் புதுமையான மாற்றங்களைக் கொண்டு வந்தார். தமிழீழ மக்களின் தேசிய விடுதலைப் போராட்டம் உலக நாடுகளின் கவனத்தை ஈர்க்கும் வகையில் பரப்புரையை முடுக்கி விட்டார். அவரது ஊக்கம் காரணமாக இயக்கத்தின் வெளியீடுகள் புதுப் பொலிவுடன் வெளிவரத் தொடங்கின. தமிழீழ மக்களின் வாழ்வையும், போராட்டத்தையும், தாயக மண்ணின் வளங்களையும் சித்தரித்துக் காட்டும் ஓவிய, புகைப்படக் கண்காட்சிகளை மேற்குலக தலைநகரங்களில் நடாத்தினார். தமிழரின் விடுதலைப் போராட்டங்கள் பற்றிப் பிற மொழிகளில் துண்டுப் பிரசுரங்களையும், சிறு கை நூல்களையும் வெளியிட்டார். தனது அன்பாலும் பண்பாலும், அபாரமான ஆளுமை வீச்சாலும் புலம்பெயர்ந்த மக்களைக் கவர்ந்து இழுத்து, போராட்டத்திற்குப் பக்க பலமாக அணிதிரட்டினார். போராட்டத்தில் ஒதுங்கியிருந்த அறிவுஜீவிகள், கல்விமான்கள், மாணவர்கள், தொழிலாளர்கள் எனப் பலதரப்பட்டோரையும் அரவணைத்துத் தாயக விடுதலைக்காகப் பங்களிக்கும் தேசிய கடமையுணர்வை அவர்களுக்கு ஊட்டினார். தனது பன்முகப்பட்ட ஆற்றலாலும் ஆளுமையாலும் வெளியுலகத் தமிழர்களிடையே தேசப் பற்றையும் விடுதலைக்கான விழிப்புணர்வையும் ஏற்படுத்தினார்.

1993ஆம் ஆண்டு ஜனவரி மாதம். ஐரோப்பிய நாடுகளின் சமரசத் திட்டத்துடன் தலைவர் பிரபாகரனைச் சந்தித்துக் கலந்துரையாடுவதற்காக, தளபதி கிட்டுவும் போராளிகள் சிலரும் கப்பல், மார்க்கமாகத் தமிழீழம் பயணித்தனர். வங்கக் கடல் வழியாகக் கிட்டுவும் அவரது தோழர்களும் சமாதானத் தூதில் வந்துகொண்டிருந்த செய்தி இந்திய அரசுக்குத் தெரிய வந்தது. உடனடியாகவே இந்திய அரசு இவ் விவகாரத்தில் தலையிட முனைந்தது. இந்தியக் கடற்படையின் இரண்டு நாசகாரக் கப்பல்கள் கிட்டு பயணித்த கப்பலைச் சுற்றிவளைத்து இந்தியக் கரையோரமாக செலுத்தும்படி கட்டளையிட்டன. இரண்டு நாள் கடற்பயணத்தின் பின்பு, ஜனவரி 15ஆம் திகதி தமிழகக் கடல் எல்லையை அடைந்ததும், தளபதி கிட்டுவையும் அவரது தோழர்களையும் சரணடையுமாறு இந்தியக் கடற்படையினர் மிரட்டினர். இந்தியாவின் பயமுறுத்தலுக்கு அடிபணிய மறுத்த

கிட்டுவும், அவனுடனிருந்த ஒன்பது போராளிகளும் தமது கப்பலைத் தகர்த்தழித்து வீரச்சாவைத் தழுவிக் கொண்டனர்.

தளபதி கேணல் கிட்டுவின் நினைவாக தலைவர் பிரபாகரன் விடுத்த இரங்கல் செய்தியில், "நான் கிட்டுவை ஆழமாக நேசித்தேன். தம்பியாக, தளபதியாக, எனது சுமைகளைத் தாங்கும் இலட்சியத் தோழனாக நான் அவனை நேசித்தேன். இது சாதாரண மனித பாசத்திற்கு அப்பாலானது. ஒரே இலட்சியப் பற்றுணர்வில், ஒன்றித்த போராட்ட வாழ்வில் நாம் பகிர்ந்து கொண்ட அனுபவத்தில், ஒருவரை ஒருவர் ஆழமாக இனம் கண்ட புரிந்துணர்வில் வேரூன்றி வளர்ந்த நேயம் அது.

அவனுள் ஒரு அபூர்வம் இருந்ததை நான் ஆரம்பத்திலிருந்தே கண்டு கொண்டேன். அது அவனது அழகான ஆளுமையாக வளர்ந்தது. ஒரு சுதந்திர வீரனுக்குரிய அனைத்துச் சிறப்பியல்புகளும் அவனிடம் இருந்தன. அதனால் அவன் ஒரு அற்புதமான இலட்சியவாதியாக வாழ்ந்தான்; போராடினான்; அனைத்து மக்களது இதயங்களையும் கவர்ந்தான். போர்க் களத்தில் வீரனாகவும், பொதுமக்களின் தோழனாகவும், எங்கும் எல்லாவற்றிலும், எல்லோரிடமும் அவனது ஆளுமையின் வீச்சு நிறைந்திருந்தது.

கிட்டு ஒரு தனிமனித சரித்திரம். நீண்ட ஓய்வில்லாத புயலாக வீசும் எமது விடுதலை வரலாற்றில் ஒரு காலத்தின் பதிவு.

வங்கக் கடலில் பூகம்பமாக அவனது ஆன்மா பிளந்தது. அதன் அதிர்வலையால் எமது தேசமே விழித்துக் கொண்டது." எனக் குறிப்பிட்டார்.)

## கலைஞர் கருணாநிதியுடன் சந்திப்பு

இந்தியாவிலே பொதுத் தேதல் 1989 டிசம்பரில் நடைபெற்றது. அதில் காங்கிரஸ் கட்சி தோற்கடிக்கப்பட்டது; ரஜீவ் காந்தி பதவி விலகினார். வீ.பீ.சிங் புதிய பிரதமரானார். வீ.பீ.சிங் அவர்களுடைய நிர்வாகத்தைப் பொறுத்த வரையிலே ரஜீவ் காந்தி சிறீலங்காவில் தலையிட்டமை ஒரு பாரிய இராஜதந்திரத் தவறுதலாகக் கொள்ளப்பட்டது. ரஜீவ் காந்தி புரிந்த தவறு நீடித்துச் செல்லக் கூடாது என்பதில் சிங், உறுதியாக இருந்தார். சிறீலங்காவுடனும் ஏனைய அண்டை

நாடுகளுடனும் நல்லுறவை நிறுவ விரும்பினார். இந்திய அமைதிப் படையைத் திருப்பி அழைக்கும் முயற்சி வேண்டுமென்றே தாமதப்படுத்துவதாகக் கருதிய சிங், 1990 மார்ச் 31 இற்கு முன்னர், இந்தியப் படைகள் மீளப் பெறப்படும் என்று கட்டளை பிறப்பித்தார். ஈ.பீ.ஆர்.எல்.எ.்.ப் இன் மாகாண நிர்வாகமும் விரைவிலே செயலிழந்து செத்துவிடப்போகிறது என்பதையே சிங் அவர்களின் நடவடிக்கைகள் உணர்த்தின. இதனால் பதற்றமடைந்த பெருமாள் புதுடில்லிக்கும் சென்னைக்கும் ஓடிப்போய், சிறீலங்காவிலிருந்து இந்தியப் படைகளைத் திருப்பிப் பெறவேண்டாம் என்று, இந்தியத் தலைவர்களிடம் கெஞ்சினார். புதிய பிரதமர் சிங் அவர்கள், தலையிடாக் கொள்கையைக் கடைப்பிடிக்கவும் சிறீலங்காவுடன் நட்புறவு பூணவும் விரும்பினார். எனவே பெருமாள் அவர்களின் வேண்டுகோளை நிராகரித்தார். புதுடில்லியின் புதிய நிர்வாகத்திடமிருந்து அனுதாபம் பெறமுடியாத பெருமாள் சென்னைக்கு விரைந்தோடி, தமது மாகாண நிர்வாகத்தைக் காப்பாற்ற உதவுமாறு முதலமைச்சர் மு. கருணாநிதி அவர்களை வேண்டினார். ஈழத் தமிழர் மட்டில் இந்திய இராணுவம் நடந்து கொண்ட விதத்தை வெளிப்படையாகக் கண்டித்த கருணாநிதி அவர்கள், விடுதலைப் புலிகளுடன் பெருமாள் இணக்கத்துக்கு வந்து, வடக்கு, கிழக்கு மாகாண நிர்வாகத்தைப் புலிகளிடம் ஒப்படைக்க வேண்டும் என்று புத்திமதி கூறினார். கருணாநிதி அவர்கள் ஒரு மத்தியஸ்தராக இருந்து, இணக்கம் ஒன்றை ஏற்படுத்தித் தரவேண்டும் என்று கருணாநிதியிடம் பெருமாள் கெஞ்சினார். இத்தகைய சூழலிலேயே, தமிழ்நாட்டு முதலமைச்சர் கருணாநிதியிடம் இருந்து நாம் இருந்த விடுதி அறைக்கு அவசர தொலைபேசி அழைப்பு வந்தது. நாம் சென்னையில் இருந்த காலத்தில் கருணாநிதி அவர்களை பாலாவுக்கு நேரடியாகத் தெரியும். கூடுதலான அளவு விரைவாக, சென்னை வருமாறு, கருணாநிதி பாலாவைக் கேட்டார். என்ன விடயம் என்பதை அவர் வெளியிடவில்லை. ஆனால், விடயம் மிக அவசரமானதும் முக்கியமானதுமாகும் என்று மறைமுகமாகக் குறிப்பிட்டார். தமிழ் நாட்டுப் பலம் மிக்க முதலமைச்சரின் வேண்டுகோளைப் புறக்கணிக்க பாலாவால் முடியவில்லை. ஆகவே இணங்கினார். பிரபாகரன் அவர்களிடமிருந்தும் பிரேமதாசா அவர்களிடமிருந்தும் அனுமதி பெற்று, இரண்டு நாட்களில், பாலாவும் நானும் யோகியும் விமானம் மூலம் சென்னை சென்றோம்.

சென்னையிலே பலத்த பாதுகாப்புடன் ஒழுங்கு செய்யப்பட்ட துறைமுக விருந்தினர் இல்லத்தில் நாம் தங்கியிருக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. முதலமைச்சரும் அவருடைய மருமகன் முரசொலி மாறனும், நாம் அங்கு தரித்திருந்தபோது மூன்று தடவை எம்மைத் தரிசித்தார்கள். வடக்கு - கிழக்கு மாகாண சபை மீளக் கூட்டப்பட்டால், ஈ.பீ.ஆர்.எல்.எ.ஃப் உடன் அதிகாரத்தைப் பங்கிடப் புலிகள் சம்மதிப்பார்களா என்று கருணாநிதி விசாரித்தார். சபையில் சரிபாதி இருக்கைகளை புலிகளோடு பங்கிட ஈ.பீ.ஆர்.எல்.எ.ஃப் தயார் என்று அவர் தெரிவித்தார். இது வடக்கு-கிழக்கு மாகாண நிர்வாகத்தில் புலிகள் சரிபாதி பங்குபற்ற வழிகோலும் என்றும் அவர் விளக்கினார். புலிகள் புதிய தேர்தலுக்கு முகம் கொடுக்கத் தயாராக இருப்பதாக முதலமைச்சருக்கு விளக்கிய பாலா, தமிழீழ மக்களே தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று குறிப்பிட்டார். இந்திய ஆக்கிரமிப்பு இராணுவத்துடன் கூட்டுச் சேர்ந்த ஈ.பீ.ஆர்.எல்.எ.ஃப் இன் ஆயுதம் தரித்த உறுப்பினர்கள் தமிழ் மக்களுக்கு எதிராகப் புரிந்த குரூரக் குற்றங்கள் பற்றிய விரிவான விளக்கத்தைக் கருணாநிதி அவர்கள் முன்னிலையில் பாலா விபரித்தார். பெருமாளின் நிர்வாகம் புரிந்த தவறான செயல்களுக்காக ஈழத் தமிழ் மக்கள் அதை வெறுத்து ஒதுக்குவதாக பாலா எடுத்துரைத்தார். முறை தவறிய தேர்தல் வழிகளால் அதிகாரத்துக்கு வந்த ஈ.பீ.ஆர்.எல்.எ.ஃப், இந்திய அமைதிப் படையின் கைப் பொம்மையாக இயங்கியது. இந்திய இராணுவமும் ஈ.பீ.ஆர்.எல்.எ.ஃப் இன் ஆயுதக் குழுக்களும் புரிந்த தாங்க முடியாக் குரூரக் கொடுமைகள் காரணமாக, புலிகளே அதிகாரத்துக்கு வரவேண்டும் என்று தமிழ் மக்கள் விரும்பினார்கள். தமிழர் தாயகத்தில் புதிய தேர்தல்கள் இடம் பெற்றால், விடுதலைப் புலிகள், பெருவெற்றி பெறுவது திண்ணம் என்று தமிழ்நாட்டு முதலமைச்சர் நம்பும் வண்ணம் பாலா எடுத்துரைத்தார். இறுதியில் புலிகளின் நிலைப்பாட்டைக் கருணாநிதி அங்கீகரித்தார். கூட்டு நிர்வாகத்தை வலியுறுத்துவதைத் தவிர்த்தார். இந்தச் சந்திப்புக்களின்போது, வடக்குக் கிழக்கு நிலவரம் பற்றிய விரிவான மதிப்பீட்டையும் பாலா வழங்கினார். கருணாநிதி அவர்கள் ஆழமாக மனக் கலவரமடைந்து காணப்பட்டார். யாரும் அறியாத வண்ணம் முதலமைச்சருடன் நடந்த இந்தச் சந்திப்புகள் தவிர பல

விடுதலைப் புலி ஆதரவாளர்களையும், வைகோ, வீரமணி போன்ற தமிழ்நாட்டுத் தலைவர்களையும் நாம் சந்தித்தோம். எமது ஐந்து நாள் பயண முடிவில் நாம் சென்னையில் இருந்து புறப்படுமுன் செய்தியாளர் மாநாடு ஒன்றும் இடம்பெற்றது.

## புலிகளின் இரு கோரிக்கைகள்

தென்னிலங்கை ஜே.வி.பி கிளர்ச்சிகளை 1990 தொடக்கத்திலேயே பிரேமதாசா அரசு செவ்வையாக அடக்கியிருந்தது. சிறீலங்கா அரச படைகளுக்கும் புலிகளுக்கும் இடையே போர் நிறுத்தம் ஏற்பட்டதால், வடக்கிலே போரும் முடிவுக்கு வந்திருந்தது. இந்திய இராணுவம் தனது தாக்குதல் நடவடிக்கைகளை முடிவுக்கு கொண்டு வந்திருந்தது. படைகள் திரும்பிச் செல்லும் முயற்சியும், மார்ச் மாத இறுதிக்குள் முடிவுற வேண்டும் என்பதால், வேகமாக நடந்து கொண்டிருந்தது. இந்தியப் படை விட்டு விலகும் வெற்றிடங்களில் விடுதலைப் புலிகள் நிலைபெற்றனர். இலங்கையில் அமைதியும் உறுதியும் நிலவியது.

கொழும்பு அமைதிப் பேச்சுவார்த்தைகள் அரசுத் தலைவருக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையே தனிப்பட்ட பேச்சுவார்த்தை அமர்வுகளாக அமைந்தன. ஹமீது அவர்கள் எமது விடுதிக்குக் கிரமமாக வந்தார். அரசியல் தீர்வு தொடர்பான விடயங்கள் மீது கலந்துரையாடல்கள் தொடர்ந்தன. மாகாண சபைத் தேர்தல்களில் பங்குபற்ற விடுதலைப் புலிகள் சம்மதித்து இருந்ததால், பேச்சுவார்த்தையில் பெரிதும் அலசப்பட்ட விடயங்கள் அரசியல் யாப்பு மீதான ஆறாவது திருத்தச் சட்டம் பற்றியதாகவும், பெருமாளின் மாகாண நிர்வாகத்தைக் கலைப்பது தொடர்பாகவும் இருந்தன. இந்த இரண்டு கடினமான விடயங்களும், விடுதலைப் புலிகளுக்கும் பிரேமதாசா ஆட்சிக்கும் இடையே கடும் பிரச்சினையைத் தோற்றுவிப்பனவாக அமைந்தன.

சிறீலங்காவின் 1978ம் ஆண்டு அரசியல் யாப்பின் ஆறாவது சட்டத்திருத்தமானது சிறீலங்கா அரசின் ஒற்றையாட்சித் தன்மையை வலியுறுத்துவதாகவும் பிரிவினை உரிமையைத் தடுப்பதாகவும் அமையும் மோசமான சட்டவாக்கமாகும். அது 1983ஆம் ஆண்டு இனக்கலவரங்களை அடுத்து, சிங்கள பௌத்த

தீவிரவாதிகளைத் திருப்திப்படுத்துவதற்காக, ஜெயவர்த்தனாவால் பிரகடனம் செய்யப்பட்டது. இந்தக் கொடிய சட்டத்தின்படி, சுதந்திரத் தமிழ் அரசுக்கான பிரிவினை அரசியலை விதந்துரைக்கும் அல்லது ஆதரிக்கும் எவரும் கடும் தண்டனைக்கு உள்ளாக்கப்படலாம்; அவருடைய குடியுரிமை பறிக்கப்படலாம்; சொத்துடமையும் பறிமுதல் செய்யப்படலாம். நாடாளுமன்றம், மாகாணசபை, நகரசபை போன்ற அரச நிறுவனம் எதற்கும் தேர்ந்தெடுக்கப்படும் அனைத்து உறுப்பினர்களும் ஒற்றையாட்சி அரசுக்கு விசுவாசப் பிரமாணம் செய்ய வேண்டும். ஆனால் ஒற்றையாட்சி அரசுக்கு, தாம் எந்தச் சந்தர்ப்பத்திலும் விசுவாசப் பிரமாணம் செய்யமுடியாது என்று, பிரேமதாசாவிடமும் ஹமீதிடமும் விடுதலைப் புலி அணியினர் தெரிவித்தார்கள். இந்தச் சட்டவாக்கம் ஒடுக்குமுறையானது எனவும், அரசியல் தெரிவு, பேச்சுரிமை ஆகிய அடிப்படைச் சுதந்திரங்களை நசுக்குவதாகவும் இருப்பதாகப் புலிகள் வாதிட்டார்கள். சுயநிர்ணய உரிமைத் தத்துவத்தில் புலிகள் உறுதியான நம்பிக்கை கொண்டிருப்பதாகவும், இந்தச் சட்டபூர்வமான உரிமை தமிழ் மக்களுக்கு உரித்தானது என்றும் அவர்கள் மேலும் அடித்துக் கூறினார்கள். சுயநிர்ணய உரிமையானது, மக்கள் தங்கள் அரசியல் தலைவிதியைத் தாங்களே தீர்மானிக்கும் தெரிவுச் சுதந்திரத்தைத் தெளிவாக அறிவிப்பது என்றும், இது பிரிவினையை முன்னெடுப்பது அல்ல என்றும் புலி அணியினர் குறிப்பிட்டார்கள். ஒருவர் தமது அரசியல் எதிர்காலத்தைத் தெரிவு செய்யும் உரிமையைத் தடை செய்யும் ஆறாவது சட்டத்திருத்தம் ஒழிக்கப்படாவிட்டால், விடுதலைப் புலிகள் மக்களாட்சி அரசியல் நீரோட்டத்தில் கலந்து கொள்ள மாட்டார்கள் என்றும் தேர்தலில் பங்கெடுக்க மாட்டார்கள் என்றும் பிரேமதாசாவிடம் புலிகள் தெரிவித்தார்கள்.

ஒற்றை ஆட்சியை ஓம்பும் சிங்களத் தேசியவாதியான பிரேமதாசாவுக்கு விடுதலைப் புலிகளின் கோரிக்கை பிடிக்கவில்லை. அதே சமயம் இவ்விடயத்தை ஒட்டி, பேச்சுவார்த்தை தோல்வி காண்பதையும் அவர் விரும்பவில்லை. விடுதலைப் புலிகளை மக்களாட்சி அரசியலுக்குள் கொண்டு வந்து இனப்பிரச்சினையைத் தீர்ப்பதற்கு வேறு மாற்று வழி கிடையாது என்றால், ஆறாவது திருத்தச் சட்டத்தைக் கைவிடத் தாம் தயார் என்று புலிகளுக்கு உறுதியளித்தார். ஆனால், நாடாளுமன்றத்தின் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை

வாக்கு இல்லாமல் அந்த சட்டத் திருத்தத்தை ரத்துச் செய்ய முடியாது என்பதோடு, அந்தப் பெரும்பான்மை அவரிடம் இல்லையென்பதால், அதை ரத்துச் செய்வது தம்மால் முடியாத காரியம் என்பதை அவர் உள்ளூர அறிந்திருந்தார். மேலும், சிங்கள பௌத்த சக்திகள் போர்க் கொடி தூக்கும் என்பதும் அவருக்குத் தெரியும். பிரேமதாசா, இருதலைக் கொள்ளி எறும்பானார். ஆறாவது சட்டத்திருத்தத்தை ரத்துச் செய்வது பற்றி பாலா குறிப்பிடும்போதெல்லாம் அவர் முகத்தில் ஆற்றாமை படர்வதை நான் அவதானித்திருக்கிறேன்.

வடக்கு-கிழக்கு மாகாண சபையைத் தாமதம் இன்றிக் கலைத்து விடவேண்டும் என்று விடுதலைப் புலி அணியினர் வற்புறுத்தினர். ஈ.பீ.ஆர்.எல்.எ.ஃப் ஆனது தமிழ் மக்களால் தெரிவு செய்யப்பட்ட அமைப்பு அல்ல என்றும், இந்திய அமைதிப் படையின் கைப்பொம்மை ஆட்சியாக நிறுவப்பட்டது என்றும், வடக்குக் கிழக்கு நிர்வாகத்தை நடத்த அதற்குச் சட்டத் தகைமை கிடையாது என்றும் வாதிட்டனர். மாகாண சபையைக் கலைத்துவிட்டு, புதிய தேர்தலை நடத்துமாறும், அவ்வாறு செய்தால், விடுதலைப் புலிகளுக்கு இருக்கும் மக்களாதரவை உலகுக்கு எடுத்துக் காட்டலாம் என்றும் உறுதியாகக் கூறினார்கள். ஆனால், சபையைக் கலைக்கும் விடயத்தில் பாரதூரமான அரசியல் மற்றும், சட்டப் பிரச்சினைகள் இருந்ததால், அதற்கு இணங்க, பிரேமதாசா தயங்கினார். செவ்வையான காரணங்கள் இருந்தாலன்றி மாகாண சபைகளை அரசுத் தலைவர் கலைக்க முடியாதபடி 13ஆவது திருத்தச் சட்டத்தில் உள்ள விதிகள் தடுத்தன.

விடுதலைப் புலிகள் முன்வைத்த இரண்டு பிரச்சினைகளும் பேச்சுவார்த்தையை மேலே நகர விடாதவாறு தடுத்தன. ஆனாலும் இரு தரப்பினரும் ஒருவருக்கு ஒருவர் எதிராக நின்று மோதத் தயாராக இருக்கவில்லை. புலிகளுக்கும் பிரேமதாசா நிர்வாகத்துக்கும் இடையே நட்புடனான நல்லுறவு நிலவியது. பொறுமையுடனும் விடா முயற்சியுடனும் கட்டியெழுப்பப்பட்ட புதிய உறவு இது. இதைப் பங்கப்படுத்தும் வகையில் கூட்டாளிகளிடையே பிளவு ஏற்படாது ஹமீது அவர்கள் பார்த்துக் கொண்டார்.

## வாகரையில் மாநாடு

அதே சமயம், அம்பாறை, மட்டக்களப்பில் இருந்து வெளியேறிய இந்தியப் படைகள், வட மாவட்டங்களான முல்லைத்தீவு, வவுனியா, மன்னார், கிளிநொச்சி ஆகிய பிரதேசங்களில் இருந்தும் வெளியேறின. யாழ்ப்பாணத் தீபகற்பத்திலும் திருகோணமலை மாவட்டத்திலும் கணிசமான தொகை இந்தியப் படையினர் தொடர்ந்தும் ஆக்கிரமித்திருந்தனர். இந்தியப் படைகள் வெளியேறிய வட மாவட்டங்களில் தமிழ்த் தேசிய இராணுவத்தின் நிலைகளைத் துடைத்தொழிப்பதில் விடுதலைப் புலிகளின் படையணிகள் ஈடுபட்டிருக்க விடுதலைப் புலிகளின் மக்கள் முன்னணி, கிழக்கு மாவட்டங்களான மட்டக்களப்பிலும் அம்பாறையிலும் தனது கட்சிக் கட்டமைப்பை விரிவுபடுத்தத் தொடங்கியது. மக்கள் முன்னணியின் அங்குரார்ப்பண மாநாடு மட்டக்களப்பு மாவட்டத்திலுள்ள வாகரை என்ற கரையோரப் பட்டினத்தில் 1990 பெப்ரவரி 24 இற்கும் மார்ச் 21 இற்கும் இடையே நடைபெற்றது. பாலாவும் யோகரெத்தினம் யோகியும், வேறு போராளிகளும் நானும் சிறீலங்கா உலங்குவானூர்தி மூலம் மட்டக்களப்பு நகருக்குச் சென்று அங்கிருந்து வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இந்த மாநாட்டுக்குத் தரைப் பயணம் புரிந்தோம். வடக்குக் கிழக்கின் அனைத்து மாவட்டங்களிலும் இருந்த மூத்த விடுதலைப் புலி அரசியற் போராளிகள் வானூர்திகளில் கொண்டுவரப்பட்டனர். இயற்கை அழகுக்கும் அமைதிக்கும் பெயர்பெற்ற வாகரையில் அவர்கள் அனைவரும் குழுமி இருந்தனர்.

இந்தியாவுடனான போர் இறுதியாக முடிந்து, இந்தியப் படைகள் தமிழர் தாயகத்தில் இருந்து வெளியேறிக் கொண்டிருப்பதால் கிடைத்த நிம்மதியோடு மக்கள் முன்னணிப் பிரதிநிதிகள் வாகரையிலே உவகை உணர்வில் மிதந்தார்கள். அங்குரார்ப்பண மாநாட்டுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட வாகரை வாடி வீடு, கடலை அடுத்திருந்த அழகிய வெண் மணற் பரப்பில் அமைந்திருந்தது. இதுவும் பிரதிநிதிகளிடையே நிலவிய உவகை உணர்வுக்கு உரமூட்டியது. மாநாட்டு நிகழ்வுகள் ஒரு வாரம் நீடித்தது. இந்த நாட்களில் முக்கிய தேசிய, மற்றும் சமூக விடயங்கள் தொடர்பாக இரகசியத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. சாதி அடிப்படையில் சமூக அநீதிகளையும்

வேறுபாட்டுக் கொடுமைகளையும் ஒழிக்க, மனப்பூர்வமான ஈடுபாடு காட்டவேண்டும் என்பது ஒரு தீர்மானம். பெண் விடுதலை மக்கள் முன்னணியின் வேலைத் திட்டத்தில் உள்ளடக்கப்படவேண்டும் என்பது இன்னொரு தீர்மானம். இவை இரண்டும் தீர்மானப் பட்டியலில் முதன்மை பெற்றன. சீதன நடைமுறை காரணமாக பெண்கள் சுரண்டப்படுவதையும் துன்புறுத்தப்படுவதையும் அவமானப்படுத்தப்படுவதையும் நிறுத்த நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று பெண் பிரதிநிதிகள் வற்புறுத்தினார்கள். வடக்கு - கிழக்கு முழுவதிலும் மக்கள் முன்னணியை நன்கு நிறுவ வேண்டும் என்பதைப் பெருந்தொகைப் பிரதிநிதிகள் வற்புறுத்தினார்கள். புலிகளின் அரசியற் கட்சியில் பொது மக்கள் சம்பந்தப்படவேண்டும்; அவர்களே அரசியல் பங்களிப்பிலும் ஈடுபடவேண்டும்; இனி கட்சி அமைப்புக்கள் கிராம அடிமட்டத் தளத்திலும் நிறுவப்படவேண்டும்; மாகாணத்தின் ஒவ்வொரு மாவட்டத்திலும் வளர்த்தெடுக்கப்பட வேண்டும் என்றும் இணங்கப்பட்டது. இது தொடர்பாக உடனடியாகச் செயலில் இறங்கவும் தீர்மானிக்கப்பட்டது.

இந்திய அமைதிப் படையின் இறுதி அணி திருப்பி அழைக்கப்படும் தருணம் நெருங்கியபோது, வடக்கு கிழக்கு மாகாண சபையின் முதலமைச்சர் பெருமாள் பிரச்சினைக்குரிய நடவடிக்கை ஒன்றை மேற்கொண்டார். மார்ச் முதலாம் திகதியன்று, தீர்மானம் ஒன்றை அவர் முன்வைத்தார். வடக்கு கிழக்கு மாகாண சபை ஓர் அரசியல் சுயநிர்ணய சபையாக மாறி, சுதந்திரத் தமிழ் அரசுக்கான அரசியல் யாப்பை வரையும் பொறுப்பை ஏற்குமென்றும் அந்த அரசு ஈழ மக்களாட்சிக் குடியரசு என அழைக்கப்படுமென்றும் இத் தீர்மானம் கூறிற்று. இந்த முரட்டுத்துணிச்சலை ஒரு தன்னிச்சையான சுதந்திரப் பிரகடனமாகக் கொழும்பு அரசு கருதியது. பிரேமதாசா ஆத்திரம் அடைந்தார். ஆனால், இந்தியப் படைகள் திருகோணமலை மாவட்டத்தை விட்டு வெளியேறும் நிலையில் இருந்ததால், பெருமாளுக்கு எதிராக எந்த நடவடிக்கையையும் அவர் மேற்கொள்ளவில்லை. இந்திய அமைதிப் படை முற்றாக வெளியேறும் வரை அவர் காத்திருந்தார். திட்டமிடப்பட்டதற்கு ஒரு வாரத்திற்கு முன்னதாக, அதாவது மார்ச் 25ஆம் திகதியன்று, இந்தியப் படையின் கடைசி அணி, திருகோணமலைத் துறைமுகத்தை விட்டு வெளியெறியது. பெருமாளும் ஈ.பீ.ஆர்.எல்.எ'.ப் இன் ஏனைய தலைவர்களும்,

கடைசி இந்தியப் படைகளுடன் இந்தியாவுக்கு ஓடினார்கள்.

இந்திய இராணுவத்தின் வெளியேற்றத்தோடு, வடக்கு கிழக்கில் அனேகமாக அனைத்து மாவட்டங்களையும் விடுதலைப் புலிகள் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தார்கள். தமிழர் தாயகம் மீது தாம் நடத்தும் நிர்வாகக் கட்டுப்பாட்டுக்குச் சட்ட ஆதரவு வேண்டும் என்று விடுதலைப் புலித் தலைமை விரும்பியது. இத்தகைய சூழ்நிலையிலே அரசுத் தலைவரைச் சந்தித்த புலித் தூதுக்குழு மாகாண சபையைக் கலைத்துவிட்டு, புதிய தேர்தல்களை நடத்துமாறு அவரைக் கேட்டது. சபையைக் கலைப்பதற்கு பெருமாள் அவர்களுடைய தனியரசுப் பிரகடனம் ஒன்றே போதும் என்று நாம் பிரேமதாசாவிடம் கூறினோம். நாடாளுமன்றத்தில் ஒரு திருத்தச் சட்டமே தேவையாக இருந்தது. இதை, பிரேமதாசாவின் ஆளும் கட்சியால் எளிதாகப் பெற்றிருக்க முடியும். ஆனால் அரசுத் தலைவர் தடுமாறினார். பிரேமதாசா அவர்கள் வேண்டுமென்றே தமது வாக்குறுதிகளை நிறைவேற்றாது விடுகிறார் என்பது விடுதலைப் புலிகளுக்குத் தெளிவாகத் தெரிந்தது. புதிய தேர்தல்கள் நடத்தப்பட்டால், விடுதலைப் புலிகள் பெருவெற்றி பெற்று, தமிழர் தாயகத்தில் சட்டத்துக்கமைவான நிர்வாகத்தை நிறுவுவார்கள் என்பது பிரேமதாசாவுக்கு நன்கு தெரியும். அப்படி நடைபெறும் பட்சத்தில், அனைத்துலக அங்கீகாரம் புலிகளுக்குக் கிடைத்து விடும் என்று அவர் அஞ்சினார். இது, சுயாட்சிக்கான மேலதிக அதிகாரங்களைக் கோருவதற்கு தூண்டுவதாகி விடும் என்றும் பிரேமதாசா அஞ்சினார்.

## பிரேமதாசாவின் இரகசியத் திட்டம்

அரசியல் சுதந்திரத்துக்கும் சுதந்திர அரசுக்கும் மாற்றீடு ஒன்றைத் தேடுவது விடுதலைப் புலிகளின் அரசியல் இலட்சியத்திற்கு விரோதமானதாக அமையுமா என்று பாலாவுடன் தனியாக இருக்கும்போது, நான் விசாரித்ததுண்டு. விடுதலைப் புலிகளின் அரசியல் அணுகுமுறையில் முரண்பாடு எதுவும் இல்லை என்று பாலா பதிலளித்தார். புலிகளின் இறுதி இலக்கானது, சிங்கள மக்களுடன் இணைந்து வாழும் பரிசோதனை முயற்சிகள் அனைத்தும் தோல்வி காணும் பட்சத்தில், சுயநிர்ணய உரிமை அடிப்படையில் சுதந்திர அரசை

நிறுவுவதே என்று பாலா விளக்கினார். பிரேமதாசா அவர்கள் முட்டுக்கட்டைகளை நீக்கினால், அதாவது மாகாணசபையைக் கலைத்து, ஆறாவது சட்டத் திருத்தத்தைக் கைவிட்டு, புதிய தேர்தல்களை நடத்தினால், வடக்கு - கிழக்கு மாகாண சபைத் தேர்தல்களுக்கு முகம் கொடுக்க விடுதலைப் புலிகள் முழுமையாகத் தயாராக இருக்கிறார்கள் என்று கூறினார். விடுதலைப் புலிகளைப் பொறுத்த வரையிலே சிங்கள மக்களுடன் இணைந்து வாழ்வது சாத்தியமா என்பதைப் பரீட்சித்துப் பார்க்கும் ஒரு முக்கிய சந்தர்ப்பம் இதுவாகும். இந்த மாற்று வழியைக் கடைப்பிடிப்பதால், புலிகள் எதையும் இழக்கப் போவதில்லை. தேர்தலில் புலிகள் வென்றால், தமிழர் தாயகம், தமிழ்த் தேசியம், என்ற எண்ணக்கருக்களுக்கு அவர்கள் உறுதியான நிதர்சன வடிவம் கொடுப்பார்கள். இவையே அவர்களுடைய வெளிப்படையான அரசியல் இலட்சியங்கள் என்றும் பாலா தெளிவுபடுத்தினார்.

பிரேமதாசாவைப் பொறுத்த வரையிலே, விடுதலைப் புலிகளை வழிப்படுத்த அவர் தமது சொந்தத் திட்டம் ஒன்றை வகுத்திருந்தார். அதற்கேற்ப சபையைக் கலைப்பதற்குத் தாமதித்தார்; புதுத்தேர்தல் வாய்ப்பையும் தள்ளிப் போட்டார். ஆறாவது திருத்தச் சட்டத்தை நீக்குவது தொடர்பான முக்கிய விடயத்தைக் கண்டும் காணாதவராகப் புறக்கணித்தார். நாடாளுமன்றத்தில் மூன்றில் இரண்டு பெரும்பான்மை பெறுவது முடியவே முடியாது என்று வாதிட்டார். இறுதியில், பிரேமதாசா அவர்களுடன் தனிப்பட்ட சந்திப்புகளை நடத்துவதால் யதார்த்த அரசியல் தீர்வுகளுக்கு அதிகம் பயன் கிடைக்கப் போவதில்லை என்பது தெளிவாயிற்று. மிகுந்த பொறுமையுடன் அவருடைய நீண்ட பிரசங்கங்களைச் செவிமடுப்போம். ஒரே மக்கள், ஒரே தேசம் என்ற அவருடைய உரையில் அவருடைய மும்மணிக் கோட்பாடுகளோடு அனைத்து இனங்களும் அமைதியாகவும் ஒத்திசைவாகவும் வாழலாம் என்ற தத்துவமும் எப்போதும் இருக்கும்.

ஹமீது அவர்கள் எமது விடுதி அறைக்கு வந்து, பாலாவுடனான தமது பிரத்தியேகச் சந்திப்பின் போது, விடுதலைப் புலிகளிடமிருந்து ஆயுதக் களைவு நடத்துவது பற்றிப் பேச்சைத் தொடக்கியபோது, பிரேமதாசாவின் இரகசியத் திட்டம் மெதுவாக அம்பலமாயிற்று. மே மாத நடுப்பகுதியில் ஒரு மிகவும் வெப்பமான நாளன்றே இந்தக் கலந்துரையாடல்

நடந்தது; விவாதப் பொருளும் சூடானது. எனவே விவாதமும் சூடு பிடித்தது. அரசுத் தலைவரின் அச்சங்களையும் அங்கலாய்ப்புக்களையுமே தாம் பிரதிபலிப்பதாக ஹமீது கூறினார். "தேர்தல் சுதந்திரமாகவும், நியாயப்படியும் நடைபெற வேண்டும் என்று பிரேமதாசா விரும்புகிறார்; அந்தத் தேர்தலில், ஈ.பி.ஆர்.எல்.எ.்.ப் உட்பட, அனைத்துக் கட்சிகளுக்கும் குழுக்களுக்கும் போட்டியிட சந்தர்ப்பம் வழங்கப்பட வேண்டும் என்றும் அரசுத் தலைவர் கருதுகிறார். ஆனால், வடக்கு - கிழக்கிலே, விடுதலைப் புலிகள் ஆயுதங்களோடு ஒரு மேலாண்மை நிலையை வகித்தால், அப்படியான தேர்தல் சாத்தியமாகாது. ஆகவே புதிய தேர்தல் நடத்துவதானால், அதற்கு முன், புலிகள் ஆயுதங்களைக் கையளிக்க வேண்டும். இதுவே அரசுத் தலைவருடையதும், ரஞ்சன் விஜேரத்னா போன்ற சில அமைச்சர்களுடையதும் கருத்தாகும்." என்று அமைதியாக ஆனால் உறுதியாக ஹமீது அவர்கள் தெரிவித்தார்.

விடுதலைப் புலிப் பிரதிநிதிகளை அரசுத் தலைவர் தனிமையில் சந்தித்தபோது, ஆயுதக் களைவு விடயத்தை ஏன் குறிப்பிடவில்லை என்று பாலா கேட்டார். அதே சமயம் இந்தியப் படைகள் வெளியேறிய பின், புலிகளுக்கு எதிரான வேறு தமிழ்க் குழுக்களுடன் தனியான சந்திப்புக்களை பிரேமதாசா நடத்தி வருவதாகவும் பாலா முறையிட்டார். வடக்கு - கிழக்குத் தமிழ் மக்களின் பாதுகாப்பு ஏற்பாட்டைப் பொறுத்தவரையிலே புலிகள் ஆயுதங்களை வைத்திருப்பது ஒரு முக்கிய அம்சமாகக் கருதப்படவேண்டும் என்று பாலா விளக்கமும் அளித்தார். நிரந்தர அரசியல் தீர்வு மூலம் நிரந்தர அமைதி நிறுவப்படுமானால் அந்தப் பாதுகாப்பு அமைப்புக்குப் புலிகளே பொறுப்பாக இருப்பார்கள். சட்டம் ஒழுங்கு ஆகியவற்றைப் பேண, பயிற்சி வழங்கப்பட்ட பாதுகாப்புப் படை ஒன்று, ஆயுதங்களுடன் புலிகள் வசம் இருக்க வேண்டும். தமிழ் மக்களுக்கு உறுதியான பாதுகாப்பை வழங்கக் கூடிய ஆளணி, தளபாடம், அனுபவம் ஆகியவை புலிகளிடம் உண்டு என்பதையும் திகைத்து நின்ற அரச அணித் தலைவரிடம் பாலா தெளிவுபடுத்தினார். "உங்களுடைய அரசுத் தலைவர் புதிய தேர்தலுக்கான தடைகளை நீக்க, அதாவது சபையைக் கலைத்து, ஆறாவது திருத்தச் சட்டத்தை நீக்கத் தயாராக இல்லை. இந்தக் கட்டத்தில் புலிகளிடமிருந்து ஆயுதக் களைவு நடத்த வேண்டும் என்பது காலத்துக்கு முந்திய அவசர முடிவாகும்; மேலும்

மாகாண சபை மட்டுமே ஒரு நிரந்தரத் தீர்வுக்கான நல்ல தளமல்ல; மாகாண சபைத் தேர்தலில் புலிகள் நிற்க முன்வருவது, அதை ஒரு இடைக்கால ஏற்பாடாக ஏற்பதேயன்றி, நிரந்தரத் தீர்வாக ஏற்று அல்ல; சிங்கள மக்களுடன் அமைதியாகவும் ஒத்திசைவாகவும் இணைந்து வாழ விரும்புகின்றோம்; மக்களாட்சி வழிமுறைகளை நிறுவி மக்களாட்சி அரசியல் நடைமுறைகளை பேண விரும்புகின்றோம். அனைத்துக் குழுக்களும் கட்சிகளும் தேர்தலில் பங்கெடுக்க வாய்ப்பு வழங்கும் வகையில் சுதந்திரமான, நியாயமான அடிப்படையிலான தேர்தலை நடத்துவதற்கு அரசுடன் நாம் ஒத்துழைப்போம். மக்களின் பிரதிநிதிகளாக நாம் தேர்ந்தெடுக்கப்பட்டதும், தமிழ் மக்களின் பாதுகாப்பு ஏற்பாடுகள் என்ற முக்கிய பிரச்சினை சம்பந்தமாக நிரந்தரத் தீர்வு காண்பது பற்றி நாம் பேச்சுவார்த்தை நடத்தலாம்." என்று புலிகளின் நிலைப்பாட்டை பாலா எடுத்துரைத்தார். ஹமீது அவர்கள் கருத்துத் தெரிவிக்கும் போது, மாகாண நிர்வாகக் கட்டுமாணத்தின் ஓர் அம்சமாக மாகாணக் காவல்துறையை அமைத்து, புலிப் போராளிகளைக் காவல் அதிகாரிகள் ஆக்கலாமே என்று கூறினார். "அது சாத்தியப்படும் பட்சத்திலும், வடக்கு - கிழக்குக்கான பத்தாயிரம் பேர் அடங்கிய காவல் துறையை உருவாக்க விடுதலைப் புலிகளுக்கு மேலும் ஆயுதங்களும், ஆட்களும் தேவைப்படும்," என்று பாலா கருத்துத் தெரிவித்தார். "அப்படிப் பார்த்தால், விடுதலைப் புலிகளின் காவல்துறைப் பிரிவுக்கு, அரசுத் தலைவர் மேலும் ஆயுதங்களை வழங்க வேண்டி இருக்கும்" என்று பாலா கேலியாகக் குறிப்பிட்டார். விடுதலைப் புலிகளிடமிருந்து ஆயுதங்கள் களையப்பட வேண்டும் என்று தொடங்கிய விவாதம், புலிகளுக்கு திரும்பவும் ஆயுதம் வழங்கும் கட்டத்துக்குத் தாவியது. எமது விடுதி அறையை விட்டு வெளியேறும் போது, ஹமீது அவர்கள் வெகுவாகத் தளர்ந்து போயிருந்தார்.

முரண்பாட்டுப் பாதையிலே பிரேமதாசா செல்கிறார் என்பது எமக்குப் புரிந்தது. சிறீலங்கா நாட்டின் ஒற்றையாட்சித் தகைமை மீதான இறுக்கமான பிடி இளக வேண்டுமானால், ஆறாவது திருத்தச் சட்டம் நீக்கப்பட வேண்டும். ஆனால் அதைச் செய்ய பிரேமதாசா அவர்கள் தயாராக இல்லை. ஒற்றையாட்சி அரச வடிவுக்குள்ளேயே தீர்வைக்காண அவர் விரும்பினார். ஒரு வளைந்து கொடுக்காத தேசியவாதி என்பதால், ஒற்றையாட்சி

அரசமைப்புக்கு மாற்றீடான எந்த ஆட்சி வகையையும் அவர் எதிர்த்தார். ஜே.வீ.பி கிளர்ச்சியை ஒடுக்கி, இந்தியப் படைகளையும் வெளியேற்றிய பின், புதியதொரு தலைவலியை அவர் தீர்க்க வேண்டி இருந்தது. விடுதலைப் புலிகளை எவ்வாறு சமாளிப்பது? அவர்களைச் சமாதான வழியில் அணைத்து, பிரதான அரசியல் நீரோட்டத்துக்குள் சேர்த்துக் கொள்ள இன்னமும் வாய்ப்பு இருந்தது. அதற்கு, முட்டுக்கட்டையாக இருந்த ஆறாவது திருத்தச் சட்டத்தை தூக்கி எறிய வேண்டும் அல்லது, எதிர்த்து நின்று இராணுவ ரீதியாகப் புலிகளை ஒடுக்கும் மாற்று வழியைக் கண்டு பிடிக்க வேண்டும். இரண்டாவது வழியையே அவருடைய கடும்போக்குடைய அமைச்சர்களும் இராணுவத் தலைமையும் விரும்பியது. அவர்களுடைய நெருக்குவாரத்துக்கு பிரேமதாசா வளைந்து கொடுத்தார்.

இக்கட்டான சூழ்நிலை ஒன்றில், தமக்குச் சாத்தியமான வெவ்வேறு வழிகளைப் பிரேமதாசா ஆராய்ந்தார். அது பற்றி அரசுத் தலைவரின் நம்பிக்கைக்குரியவரும், மதியுரைஞருமான பிரட்மன் வீரக்கூன் அவர்கள் குறிப்பிடும்போது, "அவருடைய நான்காவதும் இறுதியானதுமான, அதாவது சாம, பேத, தானம் தவிர்த்த தண்ட வழிமுறை, அரசுத் தலைவரின் கூற்றுப்படி கவுத்திலிய (சாணக்கிய) வழிமுறையாக அமைகிறது. இந்திய அமைதிப் படை குறுக்கே நிற்காதபடி நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டு விட்டது; புலிகள் களைத்துப் போய் விட்டார்கள்; ஓய்வும் புத்துயிர்ப்பும் பெற்ற சிறீலங்காப் படைகளை அவர்கள் மீது ஏவிவிட்டால், அவர்களை முற்றாக அழித்தொழித்து விடலாம்; வடக்கு - கிழக்கு மீதும், சிறீலங்கா முழுவதன் மீதும் சட்டம் - ஒழுங்கை நிலைநாட்டி, நல்லாட்சியையும் அமைதியையும் சுபீட்சத்தையும் நிறுவி விடலாம். அவருடைய வேணவாத் திட்டத்தில் இந்த இறுதி வழி, கவர்ச்சியாகத் தோன்றியிருக்க வேண்டும்." என்கிறார். வீரக்கூன் சரியாகக் குறிப்பிட்டது போல, விடுதலைப் புலிகளை அழித்தொழிக்க இராணுவ வழிமுறையையே பிரேமதாசா தேர்ந்தெடுத்தார். ஆனாலும், ஒரு கபடத்தனமான வழி முறையையே அவர் நாடினார். விடுதலைப் புலிகளே பேச்சுவார்த்தையை முறித்துக் கொண்டு போரைத் தொடங்கியதாகப் பழி முடித்தார். வடக்கிலும் கிழக்கிலும் 1987 ஜூலையில் இருந்து பாசறைகளில் முடங்கிக் கிடந்த சிறீலங்கா

ஆயுதப் படைகளை, கட்டுப்பாடின்றி வெளியேற்றி, அரசின் அதிகாரத்தை நிலைநாட்டுமாறு, எந்தவித எச்சரிக்கையும் இன்றி, அவர் அதிகாரம் வழங்கினார். ஜே.வீ.பி. கிளர்ச்சியாளர்களுக்கு எதிரான அண்மைக்கால வெற்றிகளால் பெற்ற தன்னம்பிக்கையோடு, இராணுவத் தலைமைப் பீடம் புலிகள் மட்டில் ஆக்ரோஷ உணர்வு காட்டி எதிர்த்து நின்றது. பல சம்பவங்கள், குறிப்பாகக் கிழக்கில் நிகழ்ந்தன. போர்நிறுத்த உடன்படிக்கையை அவை மீறின; பொறுமையைக் கைவிடும் அளவுக்கு விடுதலைப் புலிகளைச் சீண்டின.

கிழக்கு மாவட்டங்களில் உள்ள இராணுவத் தளங்களுக்கும் காவல் நிலையங்களுக்கும் பலம் ஊட்டும் பொருட்டு 1990 மே மாத இறுதியில் புதிய படையணிகளும் கூடுதலான காவல்துறையினரும், அங்கு அனுப்பி வைக்கப்பட்டார்கள். நகரங்களிலும் பட்டினங்களிலும் படைகளின் காவல் உலாக்கள் அதிகரிக்க, சிங்கள ஆயுதப் படைகளுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையே முறுகல் நிலை கூர்மை அடைந்தது. எமது போராளிகளை இராணுவத்தினர் துன்புறுத்தும் காரமான ஆத்திரமூட்டும் சம்பவங்கள் பல இடம்பெற்றன. மட்டக்களப்பு இராணுவ முகாமுக்கு அருகே ஒரு சம்பவம் நடந்தது. இரண்டு மூத்த புலிப் போராளிகளின் ஆயுதங்களைப் பறித்தெடுத்த இராணுவத்தினர், பல மணிநேரம் தார் வீதியில், உச்சி வெய்யிலில் முழந்தாழிட்டு நிற்க அவர்களை நிர்ப்பந்தித்தார்கள். பெருந்திரளான மக்கள் முன்னிலையில் இது நடந்தது, அவமானம் தாங்காத ஒரு போராளி தனது சயனைட் குப்பியைக் கடித்து அந்த இடத்தில் மரணத்தை தழுவினார். அடுத்த போராளி மயங்கி விழும் வரை, இராணுவத்தினர் அவரைத் தாக்கியிருக்கிறார்கள். இத்தகைய கொடுமைகளும் சித்திரவதைச் சம்பவங்களும் அதிகரிக்க, புலிகளை வேண்டுமென்றே சீண்டி மோதச் செய்வதற்கு சிறீலங்கா அரச படைகள் முயல்வதை, புலித் தலைமை உணர்ந்தது. பாலா அந்தத் தருணத்தில் கொழும்பிலே இருந்தார். அரச படைகளைக் கட்டுப்படுத்துமாறு அரசுத் தலைவரிடம் வேண்டுகோள் விடுத்தார். ஆனால், பலன் எதுவும் கிடைக்கவில்லை. இந்தியப் படைகள் விட்டுச் சென்ற வெற்றிடத்தைப் படிப்படியாக நிரப்புமாறு இராணுவ உயர் பீடத்திற்குப் பிரேமதாசா கட்டளையிட்டிருப்பதை ஹமீது அவர்கள் மூலமாகப் பின்னர் அறிந்தோம். கிழக்கு மாவட்டங்களான திருகோணமலை, மட்டக்களப்பு, அம்பாறையில்

முதலிலும், வடபகுதியில் பின்னரும் முழுக் கட்டுப்பாட்டை நிறுவுமாறு படையினருக்கு அவர் பணிப்புரை வழங்கி இருந்தார். இரண்டாவது ஈழப் போரைத் தவிர்க்க முடியாது என்று உணர்ந்த பிரேமதாசா, அதற்காகத் தமது ஆயுதப் படைகளைத் தயாராக்கினார்.

மோதலின் உடனடிக் காரணம் ஒரு சிறிய சம்பவமே. மட்டக்களப்பு காவல் நிலையத்தில் ஜூன் 10ஆம் திகதியன்று முஸ்லிம் பெண் ஒருவர் தொந்தரவு செய்யப்பட்டார். விடுதலைப் புலிகள் தலையிட்டு, காவல்துறையினரின் நடத்தையை கண்டித்தனர். இது விடுதலைப் புலிகளுக்கும் காவல் துறையினருக்கும் இடையே மோதலைத் தோற்றுவித்தது. இந்தச் சண்டை, விரிவடைந்து வடக்கு-கிழக்கின் தமிழ்ப் பகுதிகளில் விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள ஆயுதப் படைகளுக்கும் இடையே மோதல்களாக வடிவெடுத்தது. ஒரு முழு நிலைப் போர் வெடித்தது. மோதல்களைத் தவிர்க்கும் கடைசி நேர முயற்சியாக, ஜூன் 11ஆம் திகதி ஹமீது அவர்கள் விமானம் மூலம் யாழ்ப்பாணம் வந்தார். பலாலி விமானத்தளத்திற்கு வெளியே அவரை வரவேற்க பாலாவுடனும் வேறு போராளிகளுடனும் நான் கூடச் சென்றேன். சந்திப்பு இடம்பெறும் இடத்தை ஹமீது அவர்களுடைய வண்டி அடையுமுன், ஒழுக்கம் மீறிய சிங்கள இராணுவத்தினர் சிலர் அவருடைய வண்டியை நோக்கிச் சுட்டனர். எனினும், பிரபாகரன் அவர்களையும் வேறு புலித் தலைவர்களையும் ஹமீது அவர்கள் சந்தித்தார். போர் நிறுத்தம் ஒன்றை ஏற்பாடு செய்ய அவர் மேற்கொண்ட முயற்சி, போரைத் தொடரவேண்டும் என்ற உறுதி பூண்ட கிழக்கு மாகாண அரச படைகளின் பிடிவாதத்தால் தோல்வியில் முடிந்தது; ஹமீது ஒருவரைத் தவிர, அவருடைய அரசுத் தலைவரோ, கடும்போக்கு அமைச்சர்களோ அமைதியை விரும்பவில்லை. போர் தனது குரூர வேகத்துடன் மீளத் தொடங்கியபோது, பிரதிப் பாதுகாப்பமைச்சர் திரு. ரஞ்சன் விஜேரத்தினா நாடாளுமன்றத்திலே, "முழுமையாகப் புலிகள் மீது பாயப் போகிறேன். அவர்களை நாம் அழித்தொழிப்போம்." என்று முழங்கினார். விடுதலைப் புலிகளுக்கும் பிரேமதாசா நிர்வாகத்துக்கும் இடையே இடம்பெற்ற பேச்சுவார்த்தை, இவ்வாறு தோல்வியடைந்தது.

# அத்தியாயம் IV

# யாழ்ப்பாணத்தில் நிகழ்ந்த சமாதானப் பேச்சுக்கள்

## போருக்கான சமாதானப் பொறி

விடுதலைப் புலிகள் அமைப்புக்கும் சந்திரிகா குமாரதுங்கா அரசுக்கும் மத்தியிலான சமாதானப் பேச்சுக்கள் 1995 ஏப்ரல் மாதம் முறிவடைந்தபோது, அனைத்துலக அரசுகளும் புலிகள் மீது கண்டனம் தெரிவித்தன. பேச்சுக்கள் தோல்வியில் முடிந்தமைக்கு எமது அமைப்பே காரணகர்த்தா எனக் குற்றம் சுமத்தின. எமது நிலைப்பாட்டை நாம் எடுத்துக் கூறுவதற்கு முன்னரே உலகம் எமக்கு எதிராகத் தீர்ப்பை வழங்கிவிட்டது.

பேச்சுக்கள் இடைநிறுத்தப்பட்ட அன்றைய நாளே போர் நடவடிக்கைகளும் மீளத் தொடங்கின. அன்றைய நாளே ஆயுதப் போருடன் தீவிரமான கருத்துப் போரும் விடுதலைப் புலிகளுக்கு எதிராகக் கட்டவிழ்த்து விடப்பட்டது. எந்த விதமான உருப்படியான காரணமுமின்றி, நியாயப்பாடின்றித் தமிழ்ப் புலிகள் பேச்சுக்களை முறித்துக் கொண்டது மட்டுமன்றி, முன் எச்சரிக்கை எதுவுமே தராது போரைத் தொடங்கியுள்ளனர் எனச் சிறீலங்கா அரசு எம்மீது பழி சுமத்தியது. இந்தப் பரப்புரைப் போர் முன்னெடுக்கப்பட்ட வேகத்திலும் வீச்சிலுமிருந்து எமக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. அதாவது, பேச்சுக்கள் முறிந்து போகும் என ஏற்கனவே எதிர்பார்த்து, அதற்கான பரப்புரை நடவடிக்கைகளை ஏற்கனவே திட்டமிட்டு, அரசு செயற்பட்டது போல எமக்குத் தென்பட்டது. விடுதலைப் புலிகளே சமாதானத்தின் விரோதிகள் என அனைத்துலகச் சமூகத்தையும் நம்பவைக்கும் நோக்கத்துடன் சிறீலங்கா அரசு, தன்வசமுள்ள சகல வளங்களையும், சகல வழிகளையும் கையாண்டு விசமப் பிரச்சாரத்தில் இறங்கியது. பேச்சுக்கள் நிறுத்தப்பட்ட அன்றைய

நாளே, கொழும்பிலிருந்த இராஜதந்திரச் சமூகத்தினரையும் வெளிநாட்டு ஊடகவியலாளரையும் மாநாட்டுக்கு அழைத்த வெளிவிவகார அமைச்சர் கதிர்காமர், விடுதலைப் புலிகள் மீது கண்டனம் தெரிவித்துத் தனது பிரச்சாரப் போரை உலக மட்டத்திற்கு விரிவுபடுத்தினார். இத்துடன் கதிர்காமர் நின்று விடவில்லை. மேற்குலக நாடுகளின் தலைநகரங்களுக்கு ஒரு பிரச்சார யாத்திரையை மேற்கொண்ட அவர், விடுதலைப் புலிகளைப் போர் வெறி கொண்டவர்களாகவும், சமாதானத்தின் விரோதிகளாகவும் சித்தரித்துப் பரப்புரை செய்தார். மேற்குலக நாடுகளும் விசாரணையின்றிக் கதிர்காமரின் கருத்துக்களை விழுங்கிக் கொண்டன.

சந்திரிகா அரசுடன் யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற சமாதானப் பேச்சுக்களின் முழு விபரத்தையும் இந்த அத்தியாயத்தில் விளக்க முனைகிறேன். முக்கியமாக, இப்பேச்சுகள் தோல்வியில் முடிவுற்றதன் காரணங்களையும் இப்பகுதியில் ஆய்வு செய்கிறேன். இந்த சமாதானப் பேச்சுக்களிலிருந்து விடுதலைப் புலிகள் விலகிக் கொண்டதற்கு நியாயபூர்வமான காரணங்கள் இருக்கவே செய்கின்றன. அதற்கான புறநிலை நிர்ப்பந்தங்களும் புலிகளுக்கு ஏற்பட்டது. இந்தச் சமரச முயற்சியில் சிறீலங்கா அரசாங்கம் நேர்மையுடனும் இதய சுத்தியுடனும் நடந்து கொள்ளவில்லை. வாக்குறுதிகளை நிறைவு செய்யவும் அரசு தவறியது. எவ்விதமான முன்னேற்றமும் இன்றி, எவ்விதமான இலக்குமின்றிப் பேச்சுக்கள் ஆறு மாதங்களுக்கு மேலாக இழுபட்டன. எமது அமைப்பானது அரசாங்கத்தின் மீது எந்தவிதமான நிபந்தனைகளையும் விதிக்கவில்லை. எந்த விதமான முட்டுக்கட்டைகளையும் போடவில்லை. சிங்கள அரசாங்கம் எமது மக்கள் மீது திணித்திருந்த பொருளாதாரத் தடையையும் மற்றும் கட்டுப்பாடுகளையும் தளர்த்தி, இயல்பு நிலையைத் தோற்றுவிக்குமாறே நாம் வேண்டுகோள் விடுத்தோம். ஏனென்றால் பல ஆண்டுகளாகத் தொடர்ந்த இத் தடைகளால் தமிழ் மக்கள் தாங்கொணாத் துன்பங்களுக்கு ஆளாகி வந்தனர். துன்புற்ற எமது மக்களின் துயரைத் துடைக்குமாறு மட்டுமே நாம் அரசாங்கத்தை வேண்டினோம். ஆனால் சந்திரிகாவின் அரசு ஈவிரக்கம் காட்டாது கடும்போக்கைக் கடைப்பிடித்தது. அரசாங்கம் பொய்யாகப் பரப்புரை செய்ததுபோல, எமது அமைப்பு முன்னறிவித்தல் கொடாது திடீரெனப் பேச்சுக்களை முறித்துக் கொள்ளவில்லை. போர் நிறுத்த உடன்பாடு 72

மணிநேர அவகாசம் விதித்தபோதும், நாம் மூன்று வார கால அவகாசம் கொடுத்தோம். இந்தக் கால அவகாசத்திற்கு முன்னராக எமக்களித்த வாக்குறுதிகளை நிறைவேற்றுமாறு நாம் அரசாங்கத்தை வேண்டினோம். ஆயினும் நாம் விதித்த காலக் கெடுவை அரசாங்கம் பாரதூரமானதாக எடுத்துக் கொள்ளவில்லை. ஆகவேதான் வேறுவழியின்றி இந்த வேதனைக்குரிய முடிவை எடுக்க நாம் நிர்ப்பந்திக்கப்பட்டோம்.

பேச்சுவார்த்தை அரங்குகளில் எப்பொழுதும் விலகிக் கொள்ளும் தரப்பினர் மீதே பழி சுமத்தப்படுவது இயல்பு. இது எமக்கு நன்கு புரிந்த விடயம். ஆயினும் நாம் எடுத்த முடிவு தவிர்க்க முடியாதது. மிகவும் சாதுரியமான முறையில் வகுக்கப்பட்ட ஒரு பொறியை நாம் எதிர்கொள்ள நேர்ந்தது. ஒரு நீண்ட கால யுத்தத்திற்காகத் தயார் செய்யப்பட்ட ஒரு சமாதானப் பொறிக்கு நாம் முகம் கொடுக்க நேர்ந்தது. யாழப்பாணக் குடாநாட்டைக் கைப்பற்றும் நோக்குடன் திட்டமிடப்பட்ட பாரிய படையெடுப்புக்கு உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் முற்கூட்டியே ஆதரவையும் அனுதாபத்தையும் வென்றெடுப்பதே சந்திரிகா அரசாங்கத்தின் தந்திரோபாயமாக அமைந்தது. சமாதான வழியில் அரசியல் தீர்வுகாணும் நோக்கம் விடுதலைப் புலிகளுக்கு இருக்கவில்லை என்பதை உலகத்திற்கு எடுத்துக் காட்டுவதன் மூலமே சர்வதேசச் சமூகத்தின் ஆதரவைப் பெற்றுக் கொள்ளலாம் என்பது அரசாங்கத்தின் திட்டமாக இருந்தது. அரசாங்கத்தின் இந்தக் கபட நோக்கம் பல ஆண்டுகளுக்குப் பின்னரே அம்பலமாகியது. 'சமாதானத்திற்கான போர்' என்ற சந்திரிகா அரசின் புதிரான கோட்பாட்டின் அசிங்கமான முகம் காலப் போக்கில்தான் தெளிவாகத் தெரியவந்தது. ஆயினும் பேச்சுக்கள் முறிவடைந்த கால கட்டத்தில் அரசாங்கம் தனது பரப்புரைப் போரில் வெற்றிகண்டு அனைத்துலகச் சமூகத்தின் ஆதரவைப் பெற்றது. கதிர்காமரின் சூத்திரதார இராஜதந்திரத்தால் உலகம் ஏமாற்றப்பட்ட பொழுதும், விடுதலைப் புலிகளை தமிழ் மக்களிடமிருந்து அந்நியப்படுத்தும் அரசாங்கத்தின் திட்டம் வெற்றிபெறவில்லை. பேச்சுக்களின்போது, விடுதலைப் புலிகளின் அணுகுமுறை பற்றியும் அவர்கள் முன்வைத்த கோரிக்கைகள் பற்றியும் தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தனர். தமிழ் மக்களின் நாளாந்த வாழ்க்கைப் பிரச்சினைகளின் உடனடித் தீர்வுக்கு முக்கியத்துவம் கொடுத்தே நாம் பேச்சுக்களை நடத்தினோம் என்பதையும் மக்களின்

நலனையே நாம் முதன்மைப்படுத்தினோம் என்பதையும் மக்கள் உணர்ந்திருந்திருந்தார்கள். பொருளாதாரத் தடைகள் நீக்கப்பட்டு, வடபகுதிக்குள் அத்தியாவசியப் பொருட்கள் வந்து குவிந்திருப்பதாக அரசாங்கம் கூறியது அப்பட்டமான பொய் என்பதையும் எமது மக்கள் அறிவார்கள். அரசாங்கம் அரசியல் ஏமாற்றுவித்தை காட்டுகிறது என்பதை உணர்ந்திருந்த தமிழ் மக்கள், பேச்சுக்கள் வெற்றிபெறும் என எதிர்பார்க்கவில்லை. பேச்சுக்கள் தொடங்கிய வேளை மக்களிடையே நிலவிய மகிழ்ச்சியும் எதிர்பார்ப்பும் காலப் போக்கில் ஏமாற்றமாக மாறின. ஆயினும் பேச்சுக்கள் முறிந்தபோது மக்கள் ஏமாற்றமும் அடையவில்லை; ஆச்சரியமும் அடையவில்லை.

சிறீலங்கா அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் மத்தியில் சமாதானப் பேச்சுக்கள் இடைநிறுத்தப்பட்டு இருக்கும் இவ்வேளையில், மீண்டும் பேச்சுகள் ஆரம்பமாக வேண்டும் என அனைத்துலகச் சமூகம் அழுத்தம் கொடுத்துவரும் இப் புறநிலையில், யாழ்ப்பாணப் பேச்சுகள் பற்றிய ஒரு விமர்சனக் கருத்தாய்வை மேற்கொள்வது அவசியமாகிறது. அரசியல் பேச்சுகள் பற்றிய விடுதலைப் புலிகளின் அணுகுமுறை, அவர்களின் கோரிக்கைகள், அவர்களின் எதிர்பார்ப்புகள் ஆகியன குறித்து ஆழமாகத் தரிசித்துக் கொள்வதற்கு இத்தகைய ஒரு ஆய்வு முக்கியமாகிறது. நிரந்தரமான அரசியல் தீர்வை எட்டுவதற்கு முன்னராக நெருக்கடி தணிந்து, இயல்புநிலை தோன்றி, தமிழ் மக்களின் அவசரமான வாழ்க்கைப் பிரச்சினைகள் தீர்த்து வைக்கப்பட வேண்டும் என்பதே அன்றும் இன்றும் விடுதலைப் புலிகளின் நிலைப்பாடாக இருந்து வருகிறது. யாழ்ப்பாணப் பேச்சுக்களின் போதும் இதுவே புலிகளின் பிரதான கோரிக்கையாக அமைந்தது. தமிழ் மக்களின் ஜீவாதாரத் தேவைகளைத் தொட்டு நிற்கும் மனிதாபிமானப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும்படி முன்வைக்கப்பட்ட கோரிக்கையைச் சந்திரிகா அரசு எவ்வாறு தட்டிக்கழித்து, ஏமாற்றி, நம்பிக்கைத் துரோகம் செய்யமுயன்ற மிகவும் கசப்பான வரலாற்று நாடகமாக யாழ்ப்பாணப் பேச்சுக்கள் அமைந்தன. இப்பேச்சுக்கள் பற்றி இனி விரிவாகப் பார்ப்போம்.

இன நெருக்கடிகளைத் தீர்த்து வைக்கும் பேச்சுக்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது, யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற பேச்சுக்கள் சாராம்சத்தில் வித்தியாசமானவை. இரு மட்டங்களில்

இப் பேச்சுக்கள் நிகழ்ந்தன. அரசாங்கத்தின் அதிகாரபூர்வமான பிரதிநிதிகளுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியிலான நேரடிப் பேச்சுகளாக ஒரு மட்டத்திலும், அரச அதிபர் சந்திரிகா குமாரதுங்காவுக்கும் விடுதலைப் புலிகளின் தலைவர் வேலுப்பிள்ளை பிரபாகரனுக்கும் மத்தியிலான கடிதப் பரிமாற்றங்களாக இன்னொரு மட்டத்திலுமாக இரு பரிமாணங்களில் இப் பேச்சுக்கள் நடைபெற்றன. இந்த இரு பரிமாணப் பேச்சுக்கள் ஆறு மாதங்கள் வரை நீடித்தன. இரு தரப்புப் பிரதிநிதிகள் மத்தியில் நடந்த பேச்சுக்கள், தடவைக்கு ஒரு நாள் அல்லது இரு நாட்கள் என்ற ரீதியில், மொத்தம் நான்கு அமர்வுகளாக நிகழ்ந்தன. நேரடிப் பேச்சுக்களுக்கு கால அவகாசம் போதாமையால் பல்வேறு பிரச்சினைகள் விரிவாக, ஆழமாகப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. அரச தரப்பிலிருந்து அதிகாரமுடைய அமைச்சர் எவரும் பங்கு கொள்ளவில்லை. நிர்வாக அதிகாரிகளைக் கொண்ட, முடிவுகள் எடுக்கும் அதிகாரமற்ற கீழ்மட்டக் குழு ஒன்றே சந்திரிகா அரசாங்கத்தைப் பிரதிநிதப்படுத்தியது. ஆகவே, நேரடிப் பேச்சுக்கள் வாயிலாக ஆக்கபூர்வமான முன்னேற்றம் எட்டப்படவில்லை. இப்படியான சூழ்நிலையில் அரச அதிபர் சந்திரிகாவுக்கும் புலிகளின் தலைவர் பிரபாகரனுக்கும் மத்தியில் நிகழ்ந்த கடிதப் பரிமாற்றம் மிக முக்கியமானதாக அமைந்தது. சில சமயங்களில், பாதுகாப்பு விவகாரங்கள், மற்றும் போர்நிறுத்தம் சம்பந்தமாக உதவிப் பாதுகாப்பு அமைச்சர் கேணல் ரத்வத்தைக்கும் பிரபாகரனுக்கும் மத்தியில் கடிதப் பரிமாற்றம் நிகழ்ந்தது. அரச பிரதிநிதிகள் குழுவின் தலைவர் பலப்பத்தபெண்டிக்கும், விடுதலைப் புலிகளின் பேச்சுக் குழுவுக்குத் தலைமை வகித்த தமிழ்ச்செல்வனுக்கும் மத்தியில் கடிதங்கள் பரிமாறப்பட்டன. சந்திரிகா குமாரதுங்காவின் அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் மத்தியில் பரிமாறப்பட்ட முழுக் கடித விபரங்களையும், கால வரிசையில், புறநிலைப் பின்னணியின் விளக்கத்துடன் இங்கு தருகிறோம். சர்வதேசச் செஞ்சிலுவை சங்கத்தின் அனுசரணையுடன் இந்தக் கடிதங்கள் பரிமாறப்பட்டன.

யாழ்ப்பாணப் பேச்சுக்களை செம்மையாக ஆய்வு செய்வதென்றால் சிறீலங்கா அரசுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் பரிமாறப்பட்ட கடிதங்களைப் படித்தறிவது அவசியம். ஏனென்றால், இரு தரப்புத் தலைமைகளும் எழுத்து வடிவிலேயே

தமது நிலைப்பாடுகளை வெளிப்படுத்தின. இந்தக் கடிதங்களை ஆழமாக அலசிப் பார்த்தால் ஒரு உண்மை புலனாகும். அதாவது பேச்சுக்களின் ஆரம்ப கட்டத்தில் நிலவிய நம்பிக்கையும் எதிர்பார்ப்பும், காலப் போக்கில் மடிந்துபோக, பிற்கட்டத்தில் சிக்கலான பிரச்சினைகள் எழுந்தபோது இரு தரப்பினர் மத்தியிலும் கசப்புணர்வும் அவநம்பிக்கையும் மேலோங்கியதைக் காணலாம். இரு தரப்பினரும் தத்தமது நிலைப்பாடுகளை நியாயப்படுத்த முனைந்ததால், கடிதங்களின் உள்ளடக்கம் கடுமையான வாதப் பிரதிவாதங்களைக் கொண்ட சொல்லாடல்களாகவே அமைந்துள்ளது. இரு தரப்பும் மீள மீள தமது நிலைப்பாடுகளை வலியுறுத்தி வாதாட முயற்சித்ததால், சில கடிதங்களில் சில விடயங்கள் திரும்பத் திரும்பக் கூறப்படுவதுபோலத் தென்படலாம். சந்திரிகா குமாரதுங்காவும், ரத்வத்தையும் எழுதிய சில கடிதங்கள் குற்றம் சுமத்துவதுபோலப் பகையுணர்வை வெளிக்காட்டின. பின்னொரு காலத்தில், விடுதலைப் புலிகளுக்கு எதிராகப் பரப்புரை செய்யும் நோக்குடன் மிகவும் நுட்பமாக எழுத்தில் செதுக்கியதாகச் சில கடிதங்கள் வரையப் பெற்றுள்ளன. பேச்சுகள் தோல்வி அடைந்தால் புலிகள் மீது பழியைச் சுமத்திவிடும் நோக்கத்தில் இக் கடிதங்கள் எழுதப்பட்டிருக்கலாம் என நாம் சந்தேகித்தோம். நாம் சந்தேகித்ததுபோல, பேச்சுக்கள் தோல்வியில் முடிந்ததும் குறிப்பிட்ட சில கடிதங்களை மட்டும் அரசாங்கம் பிரசுரித்தது. ஆனால் இந்த ஆய்வில், சகல கடிதங்களையும் அவற்றின் புறநிலைப் பின்னணி விளக்கங்களுடன் நாம் வெளியிட்டுள்ளோம். பேச்சில் எழுந்த பிரச்சினைகளின் சிக்கலான பரிமாணங்களை முழுமையாக வாசகர்கள் புரிந்து கொண்டு உண்மை நிலையை அறிந்து கொள்வதற்காகவே முழுக் கடிதப் பரிமாற்றங்களையும் பகிரங்கப்படுத்துகிறோம். சமாதானப் பேச்சுக்கள் கட்டம் கட்டமாகவே முன்னெடுக்கப்பட வேண்டும் என விடுதலைப் புலிகள் ஆரம்பத்திலிருந்தே வலியுறுத்தி வந்தனர். முதற் கட்டமாகத் தமிழர் தாயகத்தில் போர் நெருக்கடி தணிந்த சமாதானச் சூழலும் இயல்பு நிலையும் தோன்ற வேண்டுமாயின் தமிழ் மக்கள் மீது சிங்கள அரசு திணித்துள்ள பொருளாதாரத் தடைகள் மற்றும் கட்டுப்பாடுகள் அனைத்தும் அகற்றப்பட வேண்டுமென எமது இயக்கம் வேண்டுகோள் விடுத்தது. இன ஒடுக்குமுறையின் ஒரு கொடூர வடிவமாகத் திணிக்கப்பட்ட இத் தடைகளால் எமது மக்களின் சமூகப் பொருளாதார வாழ்வு

பெரிதும் பாதிக்கப்பட்டிருப்பதுடன், அவர்கள் தாங்கொணாத் துன்பத்திற்கு ஆளாகியிருப்பதாகவும் விடுதலைப் புலிகள் வாதாடினர். இப்பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு பற்றிப் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு முன்னராக, போர்நிறுத்தம் செய்து, சமாதானச் சூழ்நிலையை ஏற்படுத்தி, எமது மக்களின் வாழ்வில் இயல்பு நிலையைத் தோற்றுவிக்க வேண்டும் என்பதையே நாம் விரும்பினோம். சந்திரிகாவின் அரசாங்கம் சமாதானத்திலும் இன ஐக்கியத்திலும் உண்மையான, நேர்மையான ஆவல் கொண்டிருக்குமாயின், அநீதியான முறையில் எமது மக்கள் மீது திணித்துள்ள பொருளாதாரத் தடைகளை நீக்கி, அவர்களது நீண்ட கால அவல வாழ்வுக்கு விடிவு காணவேண்டும் என்பதே எமது நிலைப்பாடாக இருந்தது.

பேச்சு நடைமுறை பற்றி விடுதலைப் புலிகள் முன்வைத்த யோசனைகளுக்கு ஆரம்பத்தில் இணக்கம் தெரிவித்த அரசாங்கம், பொருளாதாரத் தடை நீக்கத்திற்கு இராணுவத் தரப்பிலிருந்து கடும் எதிர்ப்புக் கிளம்பியதை அடுத்து தனது நிலைப்பாட்டை மாற்றிக் கொண்டது. தமிழ் மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதை விடுத்து, தேசிய இன நெருக்கடிக்குக் காரணமாகவுள்ள அரசியல் பிரச்சினைகள் குறித்துப் பேச்சுக்களைத் தொடங்கலாமென அரசு புதிய ஒரு யோசனையை முன்வைத்தது. எமது மக்கள் எதிர்கொண்டு நிற்கும் பூதாகரப் பிரச்சினைகளைத் தீர்க்காமல் பேச்சுக்களை இழுத்தடிக்கும் நோக்கில் சந்திரிகாவின் ஆட்சிப்பீடம் ஒரு புதிய தந்திரோபாயத்தைக் கடைப்பிடிக்க முனைகிறது என்பது எமக்குப் புலனாகியது. ஆகவே, அரசின் யோசனையை விடுதலைப் புலிகள் நிராகரித்ததுடன், முதற் கட்டப் பேச்சுக்கள் அரசியல் பிரச்சினைகளாக அல்லாமல் தமிழ் மக்களின் அவசர வாழ்க்கைப் பிரச்சினைகள் பற்றியதாக அமையவேண்டுமென வற்புறுத்தினர். இந்த முரண்பட்ட நிலைப்பாடு பற்றியே கடிதப் பரிமாற்றங்களில் கடும் வாக்குவாதம் எழுந்தது. இரு தரப்பினரும் பரஸ்பரம் ஒருவர் மீது ஒருவர் வாக்குறுதி மீறியதாகக் குற்றம் சுமத்தினர். இறுதிக் கட்டங்களில் அரசாங்கம் கடும் போக்கைக் கடைப்பிடித்தது. தமிழர் மீது திணிக்கப்பட்ட பொருளாதாரத் தடைகளை நீக்கினால் தேசியப் பாதுகாப்புக்குப் பங்கம் ஏற்படும் என வாதித்து, தடைகளை அகற்ற முற்றாக மறுத்தது. தமிழரின் கோரிக்கைக்கு அடிநாதமாக விளங்கும் இந்த முக்கிய

விடயத்தில் சந்திரிகா அரசு தொடர்ந்து விட்டுக்கொடாத கடும்போக்கைக் கடைப்பிடித்ததால், வேறு வழியின்றிப் பேச்சுக்களை இடைநிறுத்தும் காலக் கெடுவை விடுதலைப் புலிகள் விதித்தனர்.

பேச்சுக்கள் தொடங்கியதிலிருந்து இறுதிவரை, பல சந்தர்ப்பங்களில் அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடைகள் நீக்கப்பட்டுள்ளதாக அரசாங்கம் அறிவித்து வந்தது. ஆனால் உண்மையில் தடை நீக்கப்பட்டதாகக் குறிப்பிடப்பட்ட அத்தியாவசியப் பொருட்கள் எவையுமே மக்களைச் சென்றடையவில்லை. தடை நீக்கப்பட்ட பொருட்கள் எவையுமே தமிழ் மக்களுக்குச் சேராத வகையில் வவுனியா எல்லைக் காவல் படையினர் தடைகளை இறுக்கினர். பல தடவைகள் இப்பிரச்சினை குறித்து விடுதலைப் புலிகளும் பொதுமக்களும் ஆட்சேபம் தெரிவித்தும் அரசாங்கம் உருப்படியான நடவடிக்கைகள் எதையும் எடுக்கவில்லை. பொருளாதாரத் தடையைத் தொடர்ந்து இறுக்கமாகக் கடைப்பிடிப்பதில் அரசாங்கத்திற்கும் இராணுவத் தலைமைக்கும் மத்தியில் ஒரு இரகசிய இணக்கப்பாடு இருந்தது. ஆயினும் தமிழர்கள் மீது கருணை காட்டுவதுபோல உலகத்தை ஏமாற்றும் நோக்குடன் பல அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடைகளை நீக்கியுள்ளதாகச் சந்திரிகா அரசு பொய்யான பரப்புரையை முடுக்கிவிட்டது. ஒரு பாரிய இராணுவ நடவடிக்கையை முன்னெடுக்கும் நோக்கத்துடன் பொருளாதாரத் தடைகளை நெகிழ்த்தாது இறுக்கமாக வைத்திருந்ததென்பது பின்பு எமக்குத் தெரியவந்தது.

போர்நிறுத்த உடன்பாட்டு விதிகளும் செம்மையாக, இறுக்கமாக வரையப்படவில்லை. உடன்பாட்டில் தெளிவற்ற தளர்வுகள் இருந்தமை காரணத்தினால் அடிக்கடி போர்நிறுத்த மீறல்கள் இடம்பெற்றன. கிழக்கு மாகாணத்தில் போர்நிறுத்த மீறல்கள் பாரிய பிரச்சினையாகத் தலைதூக்கின. சர்வதேசக் கண்காணிப்புக் குழுவினரின் மேற்பார்வையுடன் ஒரு நிலையான நிரந்தரமான போர் நிறுத்தத்தையே விடுதலைப் புலிகள் விரும்பினர். ஆனால் எமது யோசனையை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளவில்லை. அதற்கு மாறாக, கண்காணிப்பு அற்ற, தற்காலிகமான ஒரு போர் நிறுத்தத்தையே அரசாங்கம் விரும்பியது. இதன் காரணமாக, சர்வதேச நிபுணர்களைக் கொண்ட போர்நிறுத்தக் கண்காணிப்புக் குழு நிறுவும்

விடயத்தை இழுத்தடிப்புச் செய்தது. உறுதியான, நிலைத்து நிற்கக்கூடிய போர் நிறுத்தத்தைச் செய்து கொள்ள தயங்கியதில் இருந்து உண்மையான ஒரு சமாதான நோக்கத்துடன் அரசாங்கம் செயற்படவில்லை என்பது எமக்குத் தெளிவாகியது.

சமாதானப் பேச்சுக்கள் நடைபெற்ற கால கட்டத்தில் சிறீலங்கா அரசாங்கம் தனது இராணுவ இயந்திரத்தைப் பலப்படுத்த முன்வந்தமையே விடுதலைப் புலிகளின் தலைமைக்குச் சந்தேகத்தையும் எரிச்சலையும் கொடுத்தது. இரு தரப்பும் இராணுவச் சமநிலையைப் பேண வேண்டும் என போர்நிறுத்த ஒப்பந்த விதிகள் வலியுறுத்தியபோதும் அதற்கு மாறாக, அரசாங்கம் தனது ஆயுதப் படைகளை நவீனமயப்படுத்தி, விரிவுபடுத்தியது. விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டிலிருந்த யாழ்ப்பாணக் குடாநாடு மீது பாரிய அளவில் படையெடுப்பை நடாத்துவதற்கு அரசாங்கம் திட்டமிட்டுச் செயற்படுவதாக எமக்கு ஆதாரமான தகவல்கள் கிடைத்தன. இந்த இராணுவ நடவடிக்கைக்கு ஆயத்தங்கள் செய்யும் கால இடைவெளியைத் தேடிக் கொடுப்பதற்காகவே பேச்சுகள் என்ற நாடகத்தை அரசு அரங்கேற்றியது.

வஞ்சகமான, இரண்டக நோக்கத்துடனேயே யாழ்ப்பாணப் பேச்சுக்களை அரசாங்கம் மேடையேற்றியது. தமிழ் மக்களின் நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் பெற்று, அவர்களின் மனிதாபிமான, வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தீர்க்க வேண்டுமென்ற நேர்மையான நோக்கமோ அரசியல் உறுதிப்பாடோ அரசாங்கத்திடம் இருக்கவில்லை. அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடைகளை நீக்குவதற்கு மறுப்புத் தெரிவித்ததிலிருந்து அரசாங்கத்தின் ஈவிரக்கமற்ற, மனிதாபிமானமற்ற தமிழர் விரோதப் போக்குப் புலனாகியது. தனது குடிமக்களின் நலனையும் வாழ்நிலையையும் மேம்பாடு செய்வது ஒரு அரசினது சட்ட ரீதியான, தார்மீக ரீதியான கடப்பாடாகும். அப்படிப் பார்க்கும் பொழுது, சிறீலங்கா அரசானது தமிழ் மக்களைத் தனது குடிமக்களாகக் கருதவில்லை என்றே கருத வேண்டும். தமிழ் மக்கள் சம்பந்தப்பட்ட மட்டில் அரசாங்கம் நீதியுடனும் நியாயத்துடனும் பொறுப்புணர்வுடனும் நடந்து கொள்ளத் தவறியது. ஒட்டுமொத்தத்திற் பார்க்கப் போனால் யாழ்ப்பாணப் பேச்சுக்கள் தமிழ், சிங்கள இனங்கள் மத்தியில் நிலவிய வரலாற்று ரீதியான முரண்பாட்டைத் தணித்து விடவில்லை.

மாறாக, வேற்றுமையையும் பகையுணர்வையும் கூர்மைப்படுத்தி, இன நெருக்கடியை மேலும் உக்கிரமடையச் செய்தன.

## சந்திரிகாவின் சமரச முயற்சி

1986ஆம் ஆண்டு தொடக்கத்தில், சந்திரிகா குமாரதுங்கவை நான் முதற் தடவையாகவும் ஒரே தடவையாகவும் சென்னையில் சந்தித்தேன். அந்தக் கால கட்டத்தில், எமது அரசியல் தலைமைச் செயலகம் சென்னையிலும், இராணுவப் பயிற்சிப் பாசறைகள் தமிழ் நாட்டின் காட்டுப் பிரதேசங்களிலும் இயங்கி வந்தன. சந்திரிகா குமாரதுங்க, தனது கணவர் விஜய குமாரதுங்கவுடனும், சிறீலங்கா மகாஜனக் கட்சியைச் சேர்ந்த ஒஸ்சி அபயகுணசேகவுடனும் அடையாறு, இந்திரா நகரிலிருந்த எமது அரசியல் தலைமையகத்திற்கு வருகை தந்திருந்தார். தமிழரின் விடுதலைப் போராட்டம் பற்றியும், விடுதலைப் புலிகளின் அரசியல் கொள்கைத் திட்டம் பற்றியும் கலந்துரையாடுவதற்கே இவர்கள் எமது காரியாலயத்திற்கு வந்தனர்.

சந்திரிகாவின் கணவரான விஜய குமாரதுங்கா ஒரு முற்போக்கான அரசியல்வாதி. தமிழ் மக்களின் விடுதலைப் போராட்டம் குறித்து, அனுதாபமான புரிந்துணர்வுடையவர். போர்க் கைதிகளைப் பரிமாற்றம் செய்வதற்காக இவர் யாழ்ப்பாணம் சென்று, அங்கு எமது மூத்த தளபதி கிருஷ்ணகுமார் கிட்டுவையும் ஏனைய போராளிகளையும் சந்தித்து உரையாடியவர். விடுதலைப் புலிகளின் ஆயுதப் போராட்டத்தில் அனுதாபமும் அக்கறையும் கொண்டவர். இந்தச் சந்திப்பு நிகழ்ந்த கால கட்டத்தில், சந்திரிகா அம்மையார் சிறீலங்கா அரசியலில் ஆழமான ஈடுபாடு கொண்டிருக்கவில்லை. ஆயினும் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் கொள்கையிலும் போராட்ட இலட்சியத்திலும் நிறைய அக்கறையும் ஆர்வமும் காட்டினார்.

கிட்டத்தட்ட ஒரு மணிநேரம் வரை, எமது இயக்கத்தின் அரசியல் கொள்கைத் திட்டம் பற்றி நான் ஒரு விரிவான விளக்கத்தைக் கொடுத்தேன். தமிழ் மக்களின் தேசிய

சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில், அவர்களது தாயகத்தில், அவர்களுக்கு அரசியல் சுதந்திரத்தையும் அரசாண்மையையும் பெற்றுக் கொடுக்க நாம் ஆயுதமேந்திப் போராடி வருவதாக விளக்கினேன். மிகவும் ஆர்வமாகவும் பொறுமையாகவும் எனது விளக்கத்திற்குச் செவிமடுத்தார் விஜய குமாரதுங்க. ஆனால் சந்திரிகாவினால் பொறுமையை கடைப்பிடிக்க முடியவில்லை. நான் கூறிய கருத்துக்களையும் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. ஒரு விவாதத்தைத் தொடங்கி, என்னுடன் சொற்போர் நடத்துவதில் ஆர்வம் காட்டினார். இலங்கையில் வாழும் மக்கள், பல்வேறு இனக் குழுமங்களைக் கொண்ட பல்லினச் சமுதாயம் என வாதாடிய அவர், தமிழ்த் தேசம், தமிழ்த் தாயகம் ஆகிய கோட்பாடுகளை ஏற்றுக் கொள்ள முடியாதென நிராகரித்தார். தமிழரின் பிரச்சினை ஒரு சிறுபான்மையினரின் பிரச்சினையே அன்றித் தேசிய இனப் பிரச்சினை அல்ல என்பது அவரது வாதம். தமிழர்கள் ஒரு சிறுபான்மையினர் என்பதால், அவர்களுக்கு சுயநிர்ணய உரிமையோ அன்றித் தனியரசை அமைக்கும் உரிமையோ இருக்கவில்லை என வாதாடினார் சந்திரிகா. நானும் விட்டுக் கொடுக்கவில்லை. இலங்கைத் தீவின் வடகிழக்கு மாநிலத்தில் வாழும் தமிழ் மக்கள் ஒரு தனித்துவமான மொழியையும், பண்பாட்டையும், பாரம்பரியத்தையும், தனித்துவமான வரலாற்றையும், தொடர்ச்சியான நிலப் பரப்பையும், தனித்துவமான பொருளாதார வாழ்வையும், எல்லாவற்றிற்கும் மேலாக தாம் ஒரு தனித்துவமான மக்கள் சமூகம் என்ற விழிப்புணர்வையும் கொண்டிருப்பதால், ஒரு தேசிய இனமாக அமையப் பெற்றிருக்கின்றார்கள் என விளக்கினேன். ஒரு தேசியக் கட்டமைப்பான மக்கள் சமூகத்திற்கு எத்தகைய அகநிலைப் புறநிலைப் பண்பியல்புகள் இருக்க வேண்டுமோ அவையெல்லாம் எமது மக்களிடம் காணப்படுகிறன என்பதையும் சுட்டிக் காட்டினேன். அடுத்ததாக, தமிழ் மக்கள் பல நூற்றாண்டு காலமாக வடகிழக்கில் வாழ்ந்து வருவதால், அந்த மாநிலம் அவர்களது வரலாற்றுத் தாயகமாகும். அந்நியக் குடியேற்ற வல்லரசுகள் இலங்கையில் ஊடுருவித் தமிழரது இறையாண்மையைப் பறித்தெடுப்பதற்கு முன்னராக, தமிழ் மக்கள் தமது சொந்த இராச்சியத்தில், தமது சொந்த அரசை நிறுவி அரசாட்சி புரிந்து வந்தனர். எனவே, தமது சொந்த வரலாற்று மண்ணில், ஒரு தேசிய இனக் கட்டமைப்பாக வாழும்

தமிழ் மக்களுக்குச் சுயநிர்ணய உரிமை உண்டு என்பதை எவரும் மறுக்க முடியாது என விளக்கினேன். சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில், தேசிய இன அமைப்பைக் கொண்ட ஒரு மக்கள் சமூகம் தனது அரசியல் தகைமையையும் தலைவிதியையும் சுதந்திரமான முறையில் தானே நிர்ணயித்துக் கொள்ளும் உரிமையுடையது என்பதை விளக்கிக் கூறிய நான், சுயநிர்ணய உரிமைக்குச் சட்டரீதியான உரித்தாளர்கள் என்ற ரீதியில் எமது மக்கள் 1977ஆம் ஆண்டு நிகழ்ந்த பொதுத்தேர்தலில், இந்த உரிமையைப் பிரகடனம் செய்து தமிழீழ தனியரசை நிறுவ முடிவு எடுத்தார்கள் எனச் சுட்டிக் காட்டினேன். எனது வாதங்கள் தர்க்க ரீதியாக இருந்தபோதும் அவற்றினை ஏற்றுக் கொள்ள சந்திரிகா தயாராக இல்லை. ஒரு ஒற்றையாட்சி அரச அமைப்பின் கீழ் தனியாகப் பிரிந்து சென்று தனியரசை நிறுவும் உரிமை தமிழ் மக்களுக்கு இல்லை என்பது சந்திரிகாவின் நிலைப்பாடு. குறிப்பிட்ட வரலாற்றுப் புறநிலைகளில், தமிழ் மக்களும் சரி அல்லது ஒடுக்கப்பட்ட எந்தவொரு இனத்தவரும் சரி, தமது அரசியல் தலைவிதியை தாமே நிர்ணயித்துக் கொள்ளலாம். சர்வதேசச் சட்டத்தில் அதற்கு இடமிருக்கிறது. அதாவது, ஒரு மக்கள் இனம் அரசியல் ரீதியாக அந்நியப்படுத்தப்பட்டு, அரச ஆட்சி நிர்வாகத்திலிருந்து புறக்கணிக்கப்பட்டு, அம் மக்களுக்கு எதிரான ஒடுக்குமுறை இயந்திரமாக அரசு செயற்பட்டு, இனக்கொலைப் பரிமாணத்தில் தாங்கொணா அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விடும்பொழுது, அந்த மக்கள் சமூகம் பிரிந்து சென்று தனியரசை அமைத்துக் கொள்ளலாம். இந்தப் பிரத்தியேகமான வரலாற்றுப் புறநிலையை தமிழ் மக்களும் எதிர்கொண்டு நிற்பதால் அவர்களுக்கும், சர்வதேசச் சட்ட நியமங்களின் பிரகாரம் பிரிந்து சென்று தனியரசை அமைக்கும் உரிமையுண்டு எனச் சந்திரிகாவுக்கு எடுத்து விளக்கினேன். அம்மையார் ஒரு பிடிவாதக்காரி. அவரது கருத்துலகம் வித்தியாசமானது. தனது கருத்துக்களை இலகுவில் விட்டுக் கொடுக்க மாட்டார். மற்றவர்களது கருத்துக்களையும் இலகுவில் உள்வாங்க மாட்டார். அவரது பார்வையில், சிறீலங்கா பல்லினங்களைக் கொண்ட ஒரு சமுதாயக் கட்டமைப்பு. அங்கு வாழும் சிறுபான்மைக் குழுமங்கள் பெரும்பான்மைச் சமூகமாகிய சிங்கள மக்களுடன் இசைந்து இணங்கி வாழ வேண்டும் என்பது அவரது மாற்ற முடியாத நிலைப்பாடு. தமிழர் பிரச்சினை ஒரு தேசியப் பிரச்சினை என்ற எனது வாதத்தை நிராகரித்த

அம்மையார், "தமிழ் மக்களைச் சிங்கள மக்களுடன் சமாதானமாக, ஐக்கியமாக ஒன்றிணைத்து வாழ விடுதலைப் புலிகள் ஊக்குவித்தால் என்ன? இதை விடுத்து நாட்டைப் பிரிப்பதற்காக ஏன் போராட வேண்டும்?" என்று என்னிடம் கேட்டார் சந்திரிகா. எனக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. மேலிட்டு வந்த சினத்தை ஒருவாறு கட்டுப்படுத்திக் கொண்டேன்.

எனது தர்ம சங்கடத்தைப் புரிந்து கொண்ட விஜய குமாரதுங்கா, எமது விவாதத்தில் குறுக்கிட்டுத் தமிழரின் விடுதலைப் போராட்ட வரலாற்றின் பின்னணியைத் தனது மனைவிக்கு விளக்க முற்பட்டார். "மாறி, மாறி ஆட்சிப்பீடம் ஏறிய சிங்கள அரசுகள் தமிழ் மக்களுக்கு எதிராகக் கொடூரமான அடக்குமுறையைக் கடைப்பிடித்ததால் அவர்கள் பிரிந்து சென்று தனியரசை அமைக்க வேண்டுமென்ற போராட்டத்திற்குத் தள்ளப்பட்டார்கள்". எனக் கூறினார். இடையில் குறுக்கிட்ட நான், சந்திரிகாவின் பெற்றோரது சிங்கள மேலாண்மைவாத அடக்குமுறைக் கொள்கைகளே தமிழரின் தனியரசுப் போராட்டத்திற்குக் காரணமாக இருந்தன என்பதை அம்மையாருக்கு உறைக்கும்படி சுட்டிக் காட்டினேன். இதனையடுத்து, தமிழருக்கு எதிரான அரச ஒடுக்குமுறைபற்றிய விவாதம் வேறு திசையில் திரும்பியது. பிரதான சிங்கள அரசியற் கட்சிகளான ஐக்கிய தேசியக் கட்சியும் சிறீலங்கா சுதந்திரக் கட்சியும் சாராம்சத்தில் சிங்கள மேலாண்மைவாதக் கருத்தியலில் புதைந்து கிடப்பதாகக் கூறிய நான், இக் கட்சிகளது பேரினவாதக் கொள்கையையும் பார்வையையும் மாற்றுவது முடியாத காரியமென வாதிட்டேன். எனது கருத்தை ஆதரித்த விஜய குமாரதுங்கா தமிழ் மக்களின் பிரச்சினையைத் தீர்ப்பதாக இருந்தால் முற்போக்கான, புரட்சிகரமான அரசியல் கொள்கையுடைய புதிய அரசியல் கட்சி ஆட்சிப்பீடம் ஏறினால்தான் சாத்தியமாகும் என்று கூறினார். கலந்துரையாடல் முடிவடையும் கட்டத்திற்கு வந்தது. "என்றோ ஒரு நாள், இலங்கை அரசியலில் நான் ஈடுபட்டே தீருவேன். நான் ஆட்சிக்கு வந்தால் தமிழ் மக்கள் மீது சுமத்தப்பட்ட ஒடுக்குமுறைகளை அகற்றி, சமாதானத்திற்கும் இன ஒற்றுமைக்கும் வழி சமைப்பேன்" என்று உணர்ச்சிவசமாகப் பிரகடனம் செய்த அம்மையார் எம்மிடமிருந்து விடைபெற்றுச் சென்றார். அதன் பின்பு அவரை நேரில் சந்திப்பதற்கு எனக்கு வாய்ப்புக்

கிடைக்கவில்லை.

சென்னையில் விடுதலைப் புலிகளைச் சந்தித்ததை அடுத்து, சரியாக எட்டு ஆண்டுகளுக்குப் பின்னர் சந்திரிகா அம்மையார் புதிய சிறீலங்கா அரசின் அதிபராக ஆட்சிப்பீடம் ஏறினார். அவர் அன்று சென்னையில் எமக்கு உறுதியளித்தது போல, தமிழ் மக்கள் மீது சுமத்தப்பட்ட ஒடுக்குமுறைச் சுமைகளை இறக்கி வைக்க முயன்றாரா? 1994இல் விடுதலைப் புலிகளுடன் பேச்சுக்களை நிகழ்த்திய கால கட்டத்தில் அம்மையாருக்கு ஒரு அரிய சந்தர்ப்பம் கிடைத்தது. ஆனால் சந்திரிகா குமாரதுங்க தமிழ் மக்களுக்கு நீதி வழங்க மறுத்து, தனது வாக்குறுதியை நிறைவுசெய்யத் தவறிவிட்டார் என்பதை இந்த ஆய்வு தெட்டத்தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. அது மட்டுமன்றி, இலங்கை அரசியல் வரலாற்றில் அவரது ஆட்சிக் காலமானது தமிழருக்கு எதிரான மிகக் கொடூரமான வரலாற்றுக் கட்டமாக அமைகிறது.

சமாதானமே, சந்திரிகா அம்மையாரின் தேர்தல் பரப்புரையின் மையக் கருத்தாக விளங்கிற்று. தான் ஆட்சிக்கு வந்தால் விடுதலைப் புலிகளுடன் சமாதானப் பேச்சுக்களை நடத்திப் போருக்கு முடிவு கட்டுவேன் என அவர் தேர்தல் மேடைகளில் முழங்கி வந்தார். தமிழ் மக்களின் உரிமைகளை வழங்கி, வட கிழக்கிலிருந்து சிங்கள ஆயுதப் படைகளை கௌரவமாக வரவழைப்பேன் என்று கூடக் கொழும்பு நகரப் புறத்திலுள்ள நுகேகொட என்னுமிடத்தில் நடைபெற்ற தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் பகிரங்கமாகப் பிரகடனம் செய்தார். சமாதானத்தின் தேவதை போலத் தன்னை உருவகித்துக் காட்டிய சந்திரிகா, அமைதிக்கும் இன ஒருமைப்பாட்டிற்கும் வழி வகுப்பேன் என உறுதிமொழி கூறி, விடுதலைப் புலிகளுக்கு நேசக் கரம் நீட்டினார். இரண்டு தசாப்தங்களாக வன்முறைப் புயலில் சிக்கி, பேரழிவைச் சந்தித்து நின்ற மக்களுக்கு சந்திரிகாவின் சமாதானச் செய்தி இலங்கை பூராகவும் நல்லாதரவைப் பெற்றது. பொதுத் தேர்தலில் அவரது மக்கள் கூட்டணி அமோக வெற்றியை ஈட்டியது. 1994 ஆகஸ்ட் 19ஆம் நாள், சந்திரிகா குமாரதுங்கா பிரதம மந்திரியாகச் சத்தியப் பிரமாணம் செய்து கொண்டார்.

ஐக்கிய தேசியக் கட்சியானது பதினேழு ஆண்டுகள் வரை மிகக் கொடுங் கோன்மையான ஒடுக்குமுறை ஆட்சியை நடத்தியது. வடகிழக்கில் கொடூர யுத்தமும் தென்னிலங்கையில்

வன்முறைக் கிளர்ச்சியுமாக மிகக் கொந்தளிப்பான அரசியல் வரலாற்றைக் கொண்ட இக் கால கட்டத்தில் தமிழர் தேசமே மிக மோசமான பாதிப்புக்கு ஆளாகியது. அவசர காலச் சட்டத்தின் இரும்புப் பிடிக்குள் வைத்துத் தமிழர் தேசத்தை ஆட்சி புரிந்த ஐக்கிய தேசியக் கட்சி, அரச பயங்கரவாத அடக்குமுறையைத் தீவிரப்படுத்தியதுடன் இராணுவ அட்டூழியங்களையும் தமிழ் மக்களுக்கு எதிராகக் கட்டவிழ்த்து விட்டது. நாளாந்த சீவியத்திற்கே ஆதாரமான அத்தியாவசியப் பொருட்களுக்குத் தடை விதித்துத் தமிழர் தாயகம் மீது ஒரு பொருளாதார முற்றுகையைத் திணித்தது ஐக்கிய தேசியக் கட்சி. இந்த அநீதியான நடவடிக்கையின் விளைவாக தமிழ்ப் பகுதிகளில் உணவுப் பொருட்களுக்கும் மருந்து வகைகளுக்கும் பெரும் தட்டுப்பாடு நிலவியது. பெட்ரோல், டீசல், மண்ணெண்ணை போன்ற எரிபொருட்கள் மீது விதிக்கப்பட்ட தடையால் தொழிற்துறையும் போக்குவரத்தும் செயலிழந்து முடங்கின. மீன்பிடித் தொழில் மீது திணிக்கப்பட்ட தடை காரணமாக மீனவ சமுதாயம் வறுமையின் கோரப் பிடிக்குள் தள்ளப்பட்டது. இவை மட்டுமன்றி வட மாநிலத்துடன் தொலைபேசித் தொடர்புகள் அனைத்தும் துண்டிக்கப்பட்டன. அத்தோடு, மின் பிறப்பாக்கிப் பொறிகள் குண்டு வீசி அழிக்கப்பட்டதால், யாழ் குடாநாடு, மின்விநியோகமின்றி, புராதன யுகத்து இருளுக்குள் மூழ்கியது. போதாக் குறைக்குப் போக்குவரத்துத் தடைகளையும் விதித்து, பொதுமக்களின் நடமாடும் சுதந்திரத்திற்கும் ஆப்பு வைத்தது அரசாங்கம். இப்படியாக ஐக்கிய தேசியக் கட்சியின் ஆட்சிப்பீடம், தமிழர் தாயகத்தில் இராணுவப் படையெடுப்புகளை முன்னெடுக்கும் நோக்கத்துடன் இந்த ஒடுக்குமுறை நடவடிக்கைகளைத் தீவிரப்படுத்தியது. தமிழரின் ஆயுதம் தரித்த விடுதலை இயக்கத்திற்கு அத்தியாவசியப் பொருட்கள் எட்டக் கூடாது என்ற காரணத்தினால் முழுத் தமிழ் இனத்தினது சமூகப் பொருளாதார வாழ்வினைச் சீரழிவுக்கு ஆளாக்கியது.

இப்படியான அடக்குமுறைகள் நிறைந்த கோரமான புறநிலையில்தான், விடுதலைப் புலிகளுடன் நிபந்தனையற்ற முறையில் பேச்சுக்களை நடத்தி, சமாதானத்தை நிலைநிறுவி, தமிழ் மக்களுக்கு விமோசனம் அளிக்கப் போவதாகச் சந்திரிகா அம்மையார் உறுதிமொழி அளித்தார். தனது நல்லெண்ணத்தின் வெளிப்பாடாக, தான் பதவியேற்ற இரு வாரங்களுக்குள் சில

அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடையை நீக்கியதாகவும் சந்திரிகா அறிவிப்பு விடுத்தார். சந்திரிகாவின் இந்த மனிதாபிமான நல்லெண்ணச் சமிக்கைக்கு விடுதலைப் புலிகளின் தலைமை ஆக்கபூர்வமான பதிலளிக்க நிர்ப்பந்திக்கப்பட்டது. சந்திரிகாவின் இந்தச் சமாதானச் சமிக்கையை விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன் சந்தேகக் கண்கொண்டே நோக்கினார். எதிர்வரும் ஜனாதிபதித் தேர்தலில் தமிழ் மக்களின் நல்லாதரவைப் பெறும் நோக்குடனேயே சந்திரிகா அம்மையார் ஒரு அரசியல் நாடகமாடுகிறார் என்பது அவரது கருத்தாக இருந்தது. சந்திரிகாவின் நல்லெண்ணச் சமிக்கைக்கு நாம் ஆக்கபூர்வமான முறையில் பதிலளிக்க வேண்டுமென பிரபாகரனுக்கு நான் ஆலோசனை வழங்கினேன். "இலங்கையின் அரசியல் வானில், முற்போக்கான கருத்துக்களை முன்வைத்து, புதிய தலைவராக சந்திரிகா முன்வந்துள்ளார். சந்திரிகாவின் அரசுடன் பேச்சுக்களில் நாம் பங்குகொண்டு, இவரது அரசு தமிழ் மக்களின் பிரச்சினைகளை நேர்மையான முறையில் அணுகித் தீர்த்து வைக்க முனைகிறதா என்பதைப் பொறுத்திருந்து பார்ப்பதே புத்திசாலித்தனமானது." என்று நான் கூறினேன். பிரபாகரனும் அதற்கு இணங்கினார்.

1994 செப்டெம்பர் மாதம் 2ஆம் நாள், விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன் பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கையில், சந்திரிகாவின் நல்லெண்ணச் சமிக்கையை வரவேற்றார். தமது நல்லெண்ணப் பதில் நடவடிக்கையாகப் பத்துக் காவல்துறைக் கைதிகளை விடுதலை செய்யத் தான் முடிவெடுத்திருப்பதாகவும் இந்த அறிக்கையில் அவர் அறிவித்தார். தமிழர் தாயகத்தில் இயல்பு நிலையை தோற்றுவிப்பதற்காகப் பொருளாதாரத் தடைகளை முற்று முழுதாக நீக்கி விடுமாறும் அவர் சந்திரிகாவிடம் வேண்டுகோள் விடுத்தார். அத்தோடு, நிரந்தரமான போர்நிறுத்தம் செய்து, நிபந்தனையற்ற பேச்சுக்களை ஆரம்பிக்குமாறும் கேட்டுக்கொண்டார். இந்த அறிக்கையின் ஒரு பிரதி, சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கப் பிரதிநிதிகள் வாயிலாகச் சந்திரிகாவுக்கும் அனுப்பி வைக்கப்பட்டது. பிரபாகரனின் கைச்சாத்துடன் பத்திரிகைகளுக்கு வெளியிடப்பட்ட அறிக்கையின் விபரம் வருமாறு:-

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
02.09.1994

முன்னைய ஆட்சிப்பீடம், தமிழ் மக்கள் மீது திணித்திருந்த பொருளாதாரத் தடையை சிறிய அளவில் தளர்த்திவிட திருமதி சந்திரிகா குமாரதுங்கவின் அரசாங்கம் முடிவெடுத்திருப்பதை நாம் மனமார வரவேற்கிறோம். சமாதானமும் நல்லெண்ணமும் நிலவும் ஒரு சமரசச் சூழ்நிலையை உருவாக்க இந் நடவடிக்கை வழிகோலும் என நம்புகிறோம்.

அரசாங்கத்தின் நல்லெண்ணச் சமிக்கைக்கு ஆக்கபூர்வமான பதில் நடவடிக்கையாக, போர்க் கைதிகளாக நாம் தடுத்து வைத்திருந்த பத்து காவல்துறையினரை விடுதலை செய்ய நாம் முடிவெடுத்துள்ளோம். தடுத்து வைக்கப்பட்ட கைதிகளில் ஒரு சிலரை விடுவிக்க நாம் எடுத்த முடிவு எமது நல்லெண்ணப் புரிந்துணர்வின் சமிக்கையாகக் கருதப்படுமென நாம் நம்புகிறோம்.

முன்னைய அரசாங்கம் எமது மக்கள் மீது திணித்த பொருளாதாரத் தடைகள், மனிதாபிமானமற்ற அநீதியான நடவடிக்கை என்பதை நாம் சுட்டிக் காட்ட விரும்புகிறோம். நாளாந்த சீவியத்திற்குத் தேவையான அத்தியாவசியப் பொருட்களைப் பெற்றுக் கொள்ள முடியாமல் எமது மக்கள் பல வருடங்களாகப் பெரும் துன்பத்திற்கு ஆளாகி வந்திருக்கிறார்கள். இந்தச் சூழ்நிலையில், பொருளாதாரத் தடையைத் தளர்த்தி, புதிய அரசாங்கம் மேற்கொண்ட ஆக்கபூர்வமான நடவடிக்கையை எமது மக்கள் பெரிதும் வரவேற்பார்கள். தமிழ்ப் பகுதிகளில் இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் நோக்கத்துடன் அரசாங்கம் பொருளாதாரத் தடைகளை முற்று முழுதாக நீக்கி விடும் என நாம் நம்புகிறோம். சிங்கள மக்களுக்குக் கிடைக்கக் கூடிய பொருட்கள் அனைத்தும் தமிழ் மக்களுக்கும் கிடைக்கக் கூடிய ஒரு சூழ்நிலை

ஏற்படும்பொழுதுதான் தமிழ் மக்களுக்கு நீதி வழங்கியுள்ளதாக புதிய அரசாங்கம் உரிமை கோரலாம்.

போர் நிறுத்தத்திற்கும், நிபந்தனையற்ற பேச்சுக்களுக்கும் தயாரென நாம் இங்கு வலியுறுத்திக் கூற விரும்புகிறோம். சமாதானப் பேச்சுக்களை நடத்துவதற்கு ஏதுவான அமைதியான சூழ்நிலையும் இயல்பு நிலையையும் உருவாக்குவதற்குப் புதிய அரசாங்கம் மேற்கொள்ளும் சகல முயற்சிகளுக்கும் நாம் ஒத்துழைப்பு வழங்கத் தயாராக இருக்கிறோம்.

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

சரியாக ஒரு வாரத்தின் பின்பு சந்திரிகா பதிலளித்தார். 1994 செப்டம்பர் 9ஆம் நாள் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் வாயிலாகத் தலைவர் பிரபாகரனுக்கு அவர் அனுப்பி வைத்த கடிதத்தில், சமாதானப் பேச்சுக்களில் எமது இயக்கம் பங்குகொள்ள முடிவெடுத்ததை வரவேற்றார். தான் தெரிவு செய்யும் குழுவினருடன் பேச்சுக்களை நடத்துவதற்கு அதிகாரபூர்வமான பிரதிநிதிகளை நியமிக்குமாறு வேண்டுகோள் விடுத்தார். முடிந்த அளவுக்கு மின்விநியோகத்தை மீளப்பெறச் செய்வதாகவும், நெடுஞ்சாலைகளையும், நீர்பாசனத் திட்டங்களையும் திருத்தியமைத்துத் தருவதாகவும் உறுதி அளித்திருந்தார். பிரபாகரனுக்குச் சந்திரிகா அனுப்பிய கடித விபரத்தை கீழே பிரசுரிக்கிறோம்.

09 செப்டம்பர் 1994

திரு. வே. பிரபாகரன்
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்
தலைமைச் செயலகம்
யாழ்ப்பாணம்,

அன்பான திரு. பிரபாகரன் அவர்கட்கு,

முன்னைய அரசாங்கம் திணித்து விட்ட பொருளாதாரத் தடைகளை அகற்றி, வடபுலத்திலும்

யாழ்ப்பாணத்திலுமுள்ள மக்களுக்கு நாம் காட்டியுள்ள நல்லெண்ணச் சமிக்கையை நீங்கள் வரவேற்றுள்ளதை இட்டு நாம் மகிழ்ச்சியடைகிறோம். பல வருடங்களாக விடுதலைப் புலிகளின் தடுப்புக் காவலில் வைக்கப்பட்டிருந்த பத்து காவல்துறை கைதிகளையும் விடுதலை செய்வதற்கு நீங்கள் எடுத்த முடிவை நாம் பாராட்டுகிறோம். வடக்கிலும் கிழக்கிலுமுள்ள பிரச்சினைகளைப் பேச்சுக்கள் வாயிலாகத் தீர்க்க வேண்டுமென்ற உங்களது ஆக்கபூர்வமான நோக்கின் நல்லெண்ண வெளிப்பாடாகவே இந்த நடவடிக்கையை நாம் கருதுகிறோம்.

சமாதானப் பேச்சுக்களுக்குத் தயாராக உள்ளதாக, நீங்கள் வெளியிட்ட அறிக்கையை மிகவும் ஆர்வத்துடன் நாம் பரிசீலனைக்கு எடுத்தோம். இந்த விடயம் குறித்து விபரமாகக் கலந்துரையாட நாம் விரும்புகிறோம். நான் நியமிக்கவிருக்கும் குழுவுடன் பேச்சுக்களை நடத்துவதற்கு உங்களது பிரதிநிதிகளை நியமிக்குமாறு வேண்டிக் கொள்கிறேன். தடைகள் நீக்கப்பட்ட பொருட்கள் கால தாமதமின்றி யாழ்ப்பாண மக்களுக்குக் கிடைக்கப்பெற வேண்டும் என்பதை நாம் உறுதிப்படுத்த விரும்புகிறோம். இந்த விடயத்திலுள்ள சிக்கல் என்னவென்றால், பொருட்களை நேரடியாக விநியோகிப்பதற்குப் பருத்தித்துறை மட்டுமே எமக்கு வாய்ப்பாக இருக்கிறது. எனினும் யாழ்ப்பாண மக்களை இந்தப் பொருட்கள் சென்றடைய வேறு வழிகளைத் தேடவும் நாம் முயற்சிப்போம்.

குடிமக்களின் இயல்பு வாழ்க்கையை மேம்பாடு செய்யும் நோக்குடன், முடிந்த அளவுக்கு மின் விநியோகத்தை மீளப் பெறச் செய்யவும், முக்கிய நெடுஞ்சாலைகளையும், நீர்ப்பாசனத் திட்டங்களில் ஒரு பகுதியையும் திருத்தியமைக்கவும் எமது அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது.

வடக்கிலும் கிழக்கிலும் அமைதியையும் இயல்பு நிலையையும் நிலைநாட்டுவதற்கு அரசாங்கத்திற்கு ஒத்துழைப்புத் தருவதாக நீங்கள் தெரிவித்திருப்பதை நாம் வரவேற்கிறோம். நாம் மேற்குறிப்பிட்ட அபிவிருத்தித் திட்டங்களைத் திருத்தியமைக்கும்

வேலைகளில் ஈடுபடும் எமது தொழில்நுட்ப அதிகாரிகளுக்கு சகல ஒத்துழைப்புகளையும் செய்வீர்களென நாம் எதிர்பார்க்கிறோம்.

நான் தெரிவித்தது போன்று எனதும் உங்களதும் பிரதிநிதிகள் பேச்சுக்களை நடத்தும் பொழுது இவ் வேலைத் திட்டங்களை நடைமுறைப்படுத்தும் வழிமுறைகள் பற்றி முடிவுகள் எடுக்கலாம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாநாயக்கா குமாரதுங்கா
பிரதம மந்திரி

தமிழ் மக்கள் மீது திணிக்கப்பட்டிருக்கும் பொருளாதாரத் தடைகளை முற்றுமுழுதாக நீக்கி விடுமாறு பிரபாகரன் விடுத்த கோரிக்கை குறித்து, சந்திரிகா தனது கடிதத்தில் எதுவுமே குறிப்பிடவில்லை. போர்நிறுத்தம் குறித்து நாம் தெரிவித்த யோசனை பற்றியும் அவர் எதுவும் கூறவில்லை. பேச்சுக்களுக்கு எமது பிரதிநிதிகளை நியமிக்குமாறு சந்திரிகா வேண்டுகோள் விடுத்திருந்தார். அரச தரப்புப் பிரதிநிதிகளை தான் நியமிக்கப் போவதாக கூறியிருந்தார். ஆனால் அரச தரப்புப் பிரதிநிதிகளின் தகைமை, படிநிலைபற்றி எதுவுமே அவர் தெரிவிக்கவில்லை. ஆயினும் நாம் எமது பிரதிநிதிகளை நியமிக்கத் தீர்மானித்தோம். உதவி அரசியல் பொறுப்பாளராக அப்பொழுது பணிபுரிந்த திரு. கரிகாலன் உட்பட நான்கு மூத்த உறுப்பினர்களை நாம் எமது அதிகாரபூர்வப் பிரதிநிதிகளாக நியமிக்க முடிவெடுத்தோம். அரச பிரதிநிதிகளுடன் நடைபெறவிருக்கும் ஆரம்ப கட்டப் பேச்சுக்களின்போது, முழுமையான பொருளாதாரத் தடை நீக்கம், மற்றும் எமது மக்கள் எதிர்கொண்ட அவசரப் பிரச்சினைகள் பற்றி விவாதிப்பதெனவும் தீர்மானித்தோம். சமாதானப் பேச்சுக்களுக்கு முன்னராக, போர்நிறுத்தம் செய்து கொள்வது பற்றி அரசாங்கம் அக்கறை காட்டாதது குறித்துப் பிரபாகரன் அதிருப்தி கொண்டார். ஆயுத மோதல்கள் தொடர்ந்தும் இடம்பெற்று வந்ததால், திடீரென ஒரு பாரதூரமான வன்முறைச் சம்பவம் வெடித்து சமாதானப் பேச்சுக்களுக்குப் பங்கம் விளைவித்து விடலாம் என நாம் அஞ்சினோம்.

1994 செப்டம்பர் மாதம் 12ஆம் நாள் அன்று, சந்திரிகா

அம்மையாருக்கு பிரபாகரன் ஒரு கடிதம் அனுப்பி வைத்தார். அக் கடிதத்தில், விடுதலைப் புலிகளின் பேச்சுக் குழுப் பிரதிநிதிகளை அவர் அறியப்படுத்தியதுடன் போர் நிறுத்தம் குறித்துத் தான் தெரிவித்த யோசனையை அரசாங்கம் புறக்கணித்ததையிட்டு கவலையும் தெரிவித்தார். இயல்பு நிலையை உருப்பெறச் செய்வதற்கும், சமாதான, நல்லெண்ணப் புறநிலையைக் கட்டி எழுப்புவதற்கும், ஆயுத மோதல்களுக்கு ஓய்வு கொடுத்து, அமைதி பேணுவதன் அவசியத்தையும் பிரபாகரன் வலியுறுத்தினார். அவரது கடிதத்தின் முழு விபரம் வருமாறு:-

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
12.09.1994

கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா,
பிரதம மந்திரி
சிறீலங்கா,

அன்பின் பிரதம மந்திரி அவர்கட்கு,

1994 செப்டெம்பர் 9ஆம் நாளன்று திகதியிடப்பட்ட உங்களது மடல் கிடைக்கப் பெற்றதையிட்டு நாம் மகிழ்ச்சியடைந்தோம். தடுப்புக் காவலிலிருந்த பத்துக் கைதிகளையும் விடுதலை செய்த எமது நல்லெண்ணச் சமிக்கையை நீங்கள் வரவேற்றுள்ளதையிட்டு நாம் சந்தோசப்படுகிறோம்.

தடை நீக்கப்பட்ட பொருட்கள் கால தாமதன்றி யாழ்ப்பாண மக்களைச் சென்றடைய வேண்டும் என தாங்கள் கொண்டுள்ள நேர்மையான அக்கறையை நாம் பாராட்டுகிறோம். இந்த விடயத்தில் எமக்கும் அதே அக்கறையுண்டு. எனவே, இப் பிரச்சினைக்குத் தீர்வுகாண நீங்கள் மேற்கொள்ளவிருக்கும் முயற்சிகளுக்கு உதவி வழங்க நாம் ஆயத்தமாக இருக்கிறோம்.

மின் விநியோகத்தை மீளமைக்கவும், நெடுஞ்சாலைகளையும் நீர்பாசனத் திட்டங்களையும் திருத்தியமைக்கவும் நீங்கள் மேற்கொண்ட முடிவை நாம் வரவேற்கிறோம். இந்தச் சீரமைப்பு வேலைகளில்

ஈடுபடும் அரச தொழில்நுட்ப அதிகாரிகளுக்குச் சகல உதவிகளையும் ஒத்துழைப்பையும் நாம் வழங்குவோம் என உங்களுக்கு உறுதியளிக்கிறோம்.

சமாதானப் பேச்சுக்களை ஆரம்பிக்க நாம் விடுத்த வேண்டுகோளுக்குச் சாதகமான முறையில் நீங்கள் பதிலளித்ததையிட்டு நாம் மகிழ்ச்சியடைகிறோம். ஆரம்ப கட்டப் பேச்சுக்களை நடத்துவதற்கு எமது பிரதிநிதிகளை நியமிக்குமாறு நீங்கள் எமக்கு வேண்டுகோள் விடுத்தீர்கள். அதற்கமைய, ஆரம்பப் பேச்சுக்களை நடத்துவதற்கு கீழ்க் கண்டவர்களை எமது அதிகாரபூர்வப் பிரதிநிதிகளாக நியமித்திருக்கிறோம். அபிவிருத்தித் திட்டங்களின் சீரமைப்பு வேலைகள் சம்பந்தமாக எமது பிரதிநிதிகள் உங்களது பிரதிநிதிகளுடன் பேச்சுக்களை நடத்துவார்கள். நாம் நியமித்துள்ளவர்களின் பெயர் விபரம் வருமாறு:-

1. திரு.எஸ்.கரிகாலன்
   உதவி அரசியல் பொறுப்பாளர்
2. திரு.எஸ்.இளம்பரிதி
   அரசியல் பொறுப்பாளர்
   யாழ்ப்பாண மாவட்டம்
3. திரு.ஏ.ரவி
   பொறுப்பாளர், பொருண்மிய மேம்பாட்டு நிறுவனம்
4. திரு.எஸ்.டொமினிக்
   பொறுப்பாளர், பொது நிர்வாகப் பிரிவு

போர் நிறுத்தம் சம்பந்தமாக நாம் தெரிவித்த யோசனைக்கு உங்களது கடிதத்தில் எதுவுமே குறிப்பிடப்படவில்லை. இது குறித்து எமது வருத்தத்தைத் தெரிவிக்க விரும்புகிறோம். மக்களின் இயல்பு வாழ்க்கைக்கும், அமைதியும் நல்லெண்ணமும் நிலவும் சூழ்நிலையைக் கட்டி எழுப்புவதற்கும் பகை நடவடிக்கைகளை முடிவுக்கு கொண்டுவரும் அவசியத்தை நீங்கள் உணர்ந்து கொள்வீர்கள். இவ்

விடயத்தைக் கவனத்தில் எடுத்துக் கொள்வீர்கள் என நம்புகிறோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே.பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

ஒரு வார காலமாக சந்திரிகாவிடமிருந்து எவ்வித பதிலும் எமக்குக் கிடைக்கவில்லை. இதற்கிடையில், விடுதலைப் புலிப் போராளிகளுக்கும் அரச ஆயுதப் படைகளுக்கும் மத்தியில், தரையிலும் கடலிலும் பயங்கரச் சண்டைகள் நடைபெற்றன. சிறீலங்கா வான் படையின் போர் விமானங்கள் வழமைபோலக் குண்டுத் தாக்குதல்களை நிகழ்த்திப் பொதுமக்களுக்கு உயிர்ச்சேதத்தை விளைவித்தன. 1994 செப்டம்பர் 19ஆம் நாளன்று மன்னார் கடலில் நிகழ்ந்த உக்கிரமான கடற் சமரின்போது ஒரு பாரதூரமான சம்பவம் நிகழ்ந்தது. சிறீலங்காக் கடற்படைக்குச் சொந்தமான 'சாகரவர்த்தனா' எனப்படும் போர்க் கப்பல், மன்னார் குடாவில் கடற்புலிகளின் தாக்குதலுக்கு இலக்காகி மூழ்கடிக்கப்பட்டது. இந்தச் சம்பவத்தில் இருபத்து நான்கு கடற்படையினர் கொல்லப்பட்டனர். போர்க் கப்பலின் தளபதியும் மற்றுமொரு கடற்படை அதிகாரியும் கடலிலிருந்து மீட்கப்பட்டுப் போர்க் கைதிகளாகச் சிறைப் பிடிக்கப்பட்டனர். இந்தச் சம்பவம் புதிய அரசாங்கத்தைக் குழப்பிவிடலாமென நாம் அஞ்சினோம். ஆயினும், அரசாங்க அமைச்சர் ஒருவர் விடுத்த அறிக்கையில், ஆயுத மோதல் சம்பவங்கள் சமாதான முயற்சிகளுக்குப் பங்கம் விளைவிக்கப் போவதில்லை எனத் தெரிவித்தமை எமது அச்சத்தைப் போக்கியது.

இந்தக் கடற் சம்பவத்திற்கு இரண்டு நாட்கள் கழித்து, 1994 செப்டம்பர் 21ஆம் நாளன்று, பிரபாகரனுக்குச் சந்திரிகா ஒரு கடிதம் அனுப்பினார். மிகச் சுருக்கமான அக் கடிதத்தில், அரசாங்கப் பிரதிநிதிகளின் பெயர்களும், பேச்சுக்கான நாட்களும் குறிப்பிடப்பட்டிருந்தன. அக் கடிதம் வருமாறு:-

21 செப்டம்பர் 1994

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
தலைமைச் செயலகம்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

எம்முடன் பேச்சுக்களை நடத்துவதற்கு உங்களது பிரதிநிதிகளை நியமித்து, 1994 செப்டெம்பர் 12ஆம் நாளன்று திகதியிட்டு நீங்கள் அனுப்பிய கடிதத்திற்கு நன்றி. கீழ்க் கண்டவர்களே அரசாங்கத் தரப்பு பிரதிநிதிகளாவர்.

1. திரு.கே.பலப்பத்தபெண்டி,
   பிரதம மந்திரியின் செயலர், சட்டத்தரணி
2. திரு.லயனல் பெர்னான்டோ,
   உல்லாசப் பிரயாணத்துறை, தகவல் அமைச்சுச் செயலர்
3. திரு.ஆர்.ஆசீர்வாதம்
   இலங்கை வங்கியின் அதிபர்
4. திரு.என்.எல்.குணரெட்னா
   அதிபர், திட்ட அமைப்பு இணையம், கட்டிடக் கலைநிபுணர்

1994 அக்டோபர் 3ஆம் நாளிலிருந்து 6ஆம் நாள் வரை அல்லது, அக்டோபர் 12ஆம் நாளிலிருந்து 15ஆம் நாள்வரை, இரண்டு நாட்களுக்கு ஆரம்பப் பேச்சுக்களை நடத்துவதற்கு இந்தப் பேச்சுக் குழு யாழ்ப்பாணம் வரவுள்ளது.

உங்களது வசதிப்படும் நாட்களையும், பேச்சுக்களை நடத்துவதற்கான இடத்தையும் மற்றும் விபரங்களையும் தயவுகூர்ந்து அறியத் தருவீர்களாக.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாரநாயக்க குமாரதுங்கா
பிரதம மந்திரி

## அதிகாரமற்ற அரச பிரதிநிதிகள் குழு

பேச்சுக்களுக்காக சந்திரிகா நியமித்த அரச பிரதிநிதிகளின் பெயர்ப் பட்டியலைப் பார்த்தபோது நாம் ஆழமான ஏமாற்றமடைந்தோம். ஒரு சட்டத்தரணி, ஒரு அரச அதிகாரி, ஒரு வங்கி அதிபர், ஒரு கட்டிடக் கலை நிபுணர் ஆகியோரைக் கொண்டதாகவே இக் குழு அமையப் பெற்றிருந்தது. அரசாங்கத்தின் பேச்சுக் குழுவில் தமிழரின் இனப் பிரச்சினை பற்றிய ஆழமான அறிவும் அனுபவமும் படைத்த மூத்த அரசியல்வாதிகள் எவருமே இருக்கவில்லை என்பது எமக்குப் புதிராக இருந்தது. அரச பிரதிநிதிகள் அனைவருமே சந்திரிகாவுக்கு வேண்டியவர்கள்; அவரது நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள். ஆனால் இவர்கள் எவருக்குமே அரசியல் பேச்சு வழிமுறைகள் பற்றிய அனுபவம் இருக்கவில்லை. அத்துடன் முடிவுகள் எடுக்கும் அதிகாரமும் இவர்களிடம் இருக்கவில்லை. விடுதலைப் புலிகளின் போராட்ட வரலாறு பற்றியோ அல்லது ஆயுதப் போராட்டத்தின் தார்ப்பரியம் பற்றியோ இவர்களிடம் போதுமான அறிவும் இருக்கவில்லை. இன நெருக்கடிக்குத் தீர்வுகாணும் நிபுணத்துவமோ, அன்றிப் புதிய சிந்தனைகள் வழிமுறைகளைக் கையாளும் அனுபவமும் இவர்களிடம் இருக்கவில்லை. கொழும்பிலுள்ள உயர் மட்டத்திற்குத் தகவல்களைக் காவிச் செல்லும் சாதாரண நபர்களாகவே இவர்கள் செயற்பட்டார்கள் என்பது எமக்குப் பின்பு தெரியவந்தது.

விடுதலைப் புலிகளுடன் நேர்மையான முறையில் பேச்சுக்களை நடத்தி, தமிழர்களின் பிரச்சினையைத் தீர்க்கும் உண்மையான, நேர்மையான அக்கறை சந்திரிகாவிடம் இருக்கவில்லை என அரச பிரதிநிதிகளின் பெயர்ப் பட்டியலைப் பார்த்துவிட்டுக் கூறினார் பிரபாகரன். தமிழர் தேசத்தைப் பிரதிநிதப்படுத்தும் ஒரு தேசிய விடுதலை இயக்கமாக விடுதலைப் புலிகளைப் பார்க்காது, இலங்கையின் அரசியல் அமைப்புக்குப் புறம்பாக இயங்கும் ஒரு புரட்சிகர அமைப்பாகவே சந்திரிகா அரசு எம்மை அணுக முயல்கிறது என்றார் பிரபாகரன்.

பேச்சுவார்த்தை மேசையில் இரு தரப்பினர் மத்தியிலும் சமத்துவம் நிலவப் போவதில்லை என்பது எமக்குத் தெளிவாகியது. அரசியல் அதிகாரமும் அனுபவமும் அற்ற ஒரு கீழ்மட்டக் குழுவை தெரிவு செய்ததைப் பார்க்கும் பொழுது

நேரடிப் பேச்சுக்களுக்கு அரசாங்கம் முக்கியத்துவம் கொடுக்கவில்லை என்பது எமக்குப் புலனாகியது. நாம் ஏமாற்றம் அடைந்தபோதும் பேச்சுக்களில் பங்குகொள்ளத் தீர்மானித்தோம். பேச்சுவார்த்தை முன்னேற்றம் அடைந்து செல்லும் கட்டத்தில், மூத்த அமைச்சர்களை அரசாங்கம் அனுப்பி வைக்கலாம் என நாங்கள் எதிர்பார்த்தோம்.

பேச்சுக்களுக்கான இடம், நாட்கள் மற்றும் நடைமுறைப் பிரச்சினைகள் குறித்துச் சந்திரிகாவுக்கும் பிரபாகரனுக்கும் மத்தியில் பரிமாறப்பட்ட கடிதங்கள் சிலவற்றைக் கீழே பிரசுரிக்கிறோம். பேச்சுக்களுக்கான நிகழ்ச்சி நிரல் குறித்துப் பிரதம மந்திரியின் செயலர் திரு. பலப்பத்தபெண்டி தலைவர் பிரபாகரனுக்கு எழுதிய கடிதமும் இங்கு தரப்படுகிறது.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
23.09.1994

கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா,
பிரதம மந்திரி
சிறீலங்கா,

அன்பின் பிரதம மந்திரி அவர்கட்கு,

ஆரம்ப கட்டப் பேச்சுக்களுக்கான அரச பிரதிநிதிகளை நியமித்து, 1994 செப்டெம்பர் 21ஆம் நாளன்று எழுதப்பெற்ற உங்கள் கடிதத்தைப் பெற்றுக் கொண்டதில் மகிழ்ச்சி.

1994 அக்டோபர் 12-15ஆம் நாட்களுக்கு இடைப்பட்ட காலத்தில் உங்களது பிரதிநிதிகள் யாழப்பாணம் வருகை தரலாம் என அறியத் தருகிறோம். இருந்தபோதும், அக்டோபர் 13ஆம் 14ஆம் நாட்களே எமக்கு மிகுந்த வசதியான நாட்களாக இருக்கும்.

உங்களது பிரதிநிதிகள் யாழ்ப்பாணத்தில் தங்கியிருக்கும் வேளையில் அவர்களது பாதுகாப்புக்கான முழுப் பொறுப்பும் எம்முடையதாக இருக்கும் என்பதை உங்களுக்கு உறுதிப் படுத்துகிறோம். பேச்சுக்கள் நடைபெறும் இடம், மற்றும்

விடயங்களையும் யாழ்ப்பாணத்திலுள்ள சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக உங்களுக்குத் தெரியப்படுத்துவோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே.பிரபாகரன்,
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

6 அக்டோபர் 1994

திரு. வே. பிரபாகரன்,
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
தலைமைச் செயலகம்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

1994 செப்டெம்பர் 23ஆம் நாளன்று திகதியிடப்பட்ட உங்களது கடிதத்திற்கு நன்றி. அக்டோபர் 13ஆம் 14ஆம் நாட்களில் எமது பிரதிநிதிகள் யாழ்ப்பாணம் வருகை தருவதற்கான சகல ஒழுங்குகளையும் நாம் செய்துள்ளோம்.

உலங்குவானூர்தி மூலம் பலாலி விமானத் தளத்தில் வந்திறங்கும் அவர்கள், இரவு அங்கு தங்குவார்கள். பலாலித் தளத்திலிருந்து பேச்சுக்கள் நடைபெறும் இடத்திற்கு அழைத்துச் செல்லவும், மீண்டும் அழைத்து வரவும் நீங்கள் ஒழுங்குகளைச் செய்தால் நாம் நன்றியுடையவர்களாக இருப்போம். அவர்களது பறப்பு விபரங்கள் அக்டோபர் 10ஆம் நாளன்று உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். அவாகள் வரும்பொழுது பேச்சுக்களுக்கு நாம் தயாரித்த நிகழ்ச்சி நிரலைக் கொண்டுவருவார்கள். அக்டோபர் 10ஆம் நாள் எமது நிகழ்ச்சி நிரல்

உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். அதற்கு முன்னராக, உங்களது நிகழ்ச்சி நிரலை நீங்கள் தயாரித்து விடுவீர்கள் என நாம் கருதுகிறோம்.

எமது பிரதிநிதிகள் யாழ்ப்பாணம் விஜயம் செய்து சில முக்கியஸ்தர்களை சந்திப்பதற்கு வசதியளித்தால் அதை வரவேற்போம். அக்டோபர் 10ஆம் நாளன்று இது பற்றிய விபரங்களை உங்களுக்கு அறிவிப்போம்.

எமது பிரதிநிதிகள் குழுவுடன் ஒரு புகைப்பட நிபுணர் வருவது உங்களுக்குச் சம்மதமா? அல்லது நீங்கள் ஒருவரை ஒழுங்கு செய்யமுடியுமா?

அன்புடன்
உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா
பிரதம மந்திரி

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
8 அக்டோபர் 1994

கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா,
பிரதம மந்திரி,
சிறீலங்கா

அன்பின் பிரதம மந்திரி அவர்கட்கு,

அக்டோபர் 13ஆம் 14ஆம் நாட்களில் உங்களது பிரதிநிதிகள் குழு யாழ்ப்பாணம் வருகை தருமென உறுதிப்படுத்தி அக்டோபர் 6ஆம் நாளன்று திகதியிடப்பட்ட உங்களது கடிதத்தைப் பெற்றுக் கொண்டதில் மகிழ்ச்சி.

யாழ்ப்பாணத்தில் உங்களது பிரதிநிதிகளை வரவேற்க நாம் சகல ஒழுங்குகளையும் செய்துள்ளோம். இது பற்றிய விபரங்கள் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் மூலமாக நாம் உங்களுக்கு ஏற்கனவே அறியத் தந்துள்ளோம்.

அக்டோபர் 13ஆம் நாளன்று காலை, உங்கள் பிரதிநிதிகள் உலங்குவானூர்தி மூலமாக யாழ்ப்பாணம்

வந்திறங்கலாமென நாம் யோசனை கூறியுள்ளோம். யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்திற்கு முன்புறமாகவுள்ள திடலை (இந்துக் கோவிலுக்கும் இராமநாதன் வீதிக்கும் மத்தியில்) உலங்குவானூர்தி இறங்கு தளமாகப் பாவிக்கலாம். உலங்குவானூர்தியினதும் அதன் ஓட்டுநர்களதும் பாதுகாப்புக்கு நாம் பொறுப்பெடுக்கிறோம். மிக வசதியானதும், காலத்தை சேமிக்கக் கூடியதுமான இந்த ஆகாயப் போக்குவரத்து ஒழுங்கில் ஏதாவது சிக்கல் இருக்குமாயின் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கத்தின் உதவியை நாடுவதே சாலச் சிறந்தது. உங்களது பிரதிநிதிகள் குழுவினரை, செஞ்சிலுவைச் சங்கத்தினர், காங்கேசன் துறையிலிருந்து கடல் மார்க்கமாக பருத்தித்துறைக்குக் கொண்டுவந்தால், விடுதலைப் புலிகள் அவர்களை அங்கு வரவேற்பார்கள்.

யாழ்ப்பாண மருத்துவமனைப் பாதுகாப்பு வலையத்தில் அமையப் பெற்றிருக்கும் சுபாஸ் விடுதியில் உங்களது பிரதிநிதிகள் தங்கியிருக்கலாம். சுண்டுக்குழியில் அமைந்திருக்கும் எமது அரசியல் செயலகத்தில் பேச்சுக்கள் இடம்பெறும். அவ்விடத்திற்கு உங்களது பிரதிநிதிகள் பாதுகாப்பாக அழைத்துச் செல்லப்படுவர்.

செப்டெம்பர் 23ஆம் நாளன்று, நான் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டதுபோல் உங்களது பிரதிநிதிகளுக்கு விடுதலைப் புலிகள் முழுப் பாதுகாப்பும் வழங்குவர். உங்களது பிரதிநிதிகள் தங்கியிருக்கும் இடத்தில் அவர்கள் யாரையாவது சந்திக்கலாம். அவர்கள் புகைப்பட நிபுணரையும் அழைத்து வரலாம்.

உங்களது பிரதிநிதிகளின் போக்குவரத்து ஒழுங்குகளை உறுதிப்படுத்தவும்

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே.பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

11 அக்டோபர் 1994

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
தலைமைச் செயலகம்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

அக்டோபர் 6ஆம் நாளன்று திகதியிடப்பட்ட எமது பிரதம மந்திரியின் கடிதத்திற்குப் பதிலாக தாங்கள் அக்டோபர் 8ஆம் நாளன்று எழுதிய கடிதத்திற்கு நன்றி கூற விரும்புகிறேன். நீங்கள் தெரிவித்த ஆலோசனைக்கு அமைய எமது பிரதிநிதிகள் குழு, உலங்குவானூர்தி மூலமாக, அக்டோபர் 13ஆம் நாள், காலை 9 மணியளவில் யாழ்ப்பாணம் வந்திறங்கும்.

உலங்குவானூர்தி வந்திறங்கும் இறங்கு தளத்தில், வெள்ளை நிறத்தில் 'H' என்ற பெரிய எழுத்தில், அடையாளச் சின்னத்தைப் பொறித்து விடுமாறு கேட்கிறோம்.

பேச்சுவார்த்தைக்கான நிகழ்ச்சி நிரல் வருமாறு:

1. அத்தியாவசியப் பொருட்களின் போக்குவரத்து, மிகக் குறைந்த விலையில் இப் பொருட்களின் விநியோகம்.

2. மின்சார விநியோகம், வீதிகள், நீர்பாசன வசதிகள், பாடசாலைகள், மருத்துவமனைகளின் சீரமைப்பு.

3. யாழ்ப்பாண நூலகத்தின் புனர்நிர்மாணம்.

4. போர்நிறுத்தத்திற்கு வழிசெய்யும் வகையில் பகைமை நடவடிக்கைகளை நிறுத்துவது பற்றி ஆராய்தல்.

5. மற்றும் முக்கிய விடயங்கள்.

நாங்கள் புறப்படுவதற்கு முன்னராக உங்களது நிகழ்ச்சி நிரல் கிடைக்கப் பெற்றால் வரவேற்போம்.

யாழ்ப்பாணத்தில் உங்களைச் சந்திப்பதற்கு ஆவலாக இருக்கிறோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

கே.பலப்பத்தபெண்டி
பிரதம மந்திரியின் செயலர்

## மையப் பிரச்சினையாகப் பொருளாதாரத் தடை

அரசாங்கத்தின் நிகழ்ச்சி நிரலில் அத்தியாவசியப் பொருட்களின் விநியோகம், போக்குவரத்து போன்றவற்றிற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருந்தது. ஆயினும் பொருளாதாரத் தடையை நீக்குதல் சம்பந்தமான மையப் பிரச்சினை மிகவும் சாதுரியமாகப் புறக்கணிப்பட்டிருந்தது. சந்திரிகாவின் புதிய அரசாங்கம் ஒரு சில பொருட்கள் மீதான தடையை நீக்கியிருந்தபோதும் அவை, வடபுலத்தில் வாழ்ந்த தமிழ் மக்களை வந்தடையவில்லை. வவுனியா, தாண்டிக்குளம் எல்லைக் காவல் நிலைகளில் பணிபுரிந்த சிங்கள இராணுவத்தினர் இத்தடை நீக்கிய பொருட்கள் மீது தமது தடையை விதித்துத் தடுத்தனர். அறுபதுகளின் ஆரம்ப காலத்தில் பியாவ்ரா பிரதேசம் மீது நையீரியா அரசு திணித்த கொடூரமான பொருளாதார முற்றுகை போன்று இத் தடையும் அமையப் பெற்றதால், எமது மக்களின் பொருளாதார வாழ்வு சீர்குலைந்து, அவர்களது நாளாந்த சீவியம் படுமோசமான நிலையை எட்டியது. நாளாந்த வாழ்வுக்கு அத்தியாவசியமான சாதாரண பொருட்களுக்கும், உதாரணமாக, சவர்க்காரம், சமையல் எண்ணெய், தீப்பெட்டி ஆகியனவற்றிற்கும், தடை விதிக்கப்பட்டிருந்தது. மின்சாரமின்றி இருளில் வாழ நிர்ப்பந்திக்கப்பட்ட எமது மக்களுக்கு மெழுகுவர்த்திகள், மின்விளக்குகள்கூட பாவிக்க அனுமதியில்லை.

சிங்கள இராணுவத்தின் 'பாதுகாப்புக்கு அச்சுறுத்தல்' விளைவிக்கும் பொருட்களுக்கே தடை விதிக்கப்பட்டதாக ஒரு அர்த்தமற்ற, விசித்திரமான விளக்கம் கூறப்பட்ட பொழுதும், நூற்றுக்கும் மேற்பட்ட தடைப் பொருட்களுக்கும் படைத் துறைக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. உதாரணமாக, குடைகள்,

சப்பாத்து மெருகு, துவாய்கள், காற்சட்டைகள், மேலங்கிகள், அச்சுத் தாள், மரப் பலகைகள், அச்சுப் பொறிகள், மிதி வண்டிகள், பள்ளிக்கூடப் பைகள், மோட்டார் வாகன உதிரிப் பாகங்கள், மின்சார அடுப்புகள் - இப்படியாகப் படைத்துறைக்குப் பங்கம் விளைவிக்க முடியாத பாவனைப் பொருட்களுக்குத் தடை விதிக்கப்பட்டிருந்தது. பெட்ரோல், டீசல், மண்ணெண்ணை, இயந்திர எண்ணை, ஆகிய எரிபொருட்களுக்கும் தடை விதிக்கப்பட்டிருந்தது. விடுதலைப் புலிப் படையணிகளின் அசைவியக்கத்தை முடக்கிவிடவே எரிபொருட்களுக்குத் தடை போடப்பட்டதாகக் கூறப்பட்டது. ஆனால் இத் தடையால் புலிப் போராளிகளின் போக்குவரத்து எவ்வகையிலும் பாதிக்கப்படவில்லை. உண்மையில் பாதிக்கப்பட்டது பொது மக்களே. எரிபொருட்களின் தட்டுப்பாட்டினால் விவசாயம், கைத்தொழில், மீன்பிடி, வாகனப் போக்குவரத்து பெருமளவில் பாதிக்கப்பட்டுத் தமிழ்த் தேசத்தின் பொருளாதரக் கட்டுமாணம் சீர்குலைந்தது. வெடியம் (Nitrogen), மூத்திரை (Urea) போன்ற மூலப் பொருட்கள் சேர்ந்த உரவகைகள் அனைத்தும் தடைக்கு ஆளாகின. விடுதலைப் புலிகள் இப் பொருட்களிலிருந்து வெடிமருந்துகளை உற்பத்தி செய்யலாமெனச் சிங்களப் படைத்துறை கருதியது. ஆனால் புலிகள் வசம் எப்பொழுதுமே பெருமளவில் அதிசக்தி வாய்ந்த வெடிமருந்து இருந்துள்ளது. எனவே, உர வகைகள் மீதான தடை வேளாண்மைத் துறையை ஆழமாகப் பாதித்தது. தமிழ் விவசாயச் சமூகம் பேரவலத்திற்கு ஆளாகியது. கடற்புலிகளின் நடமாட்டத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற காரணத்தைக் கற்பித்து, வடகிழக்குக் கடலில் மீன்பிடிக்குத் தடைவிதிக்கப்பட்டது. ஆனால் இத் தடையால் கடற் புலிகளின் நடமாட்டத்தையோ அல்லது அவர்களது அபாரமான போராற்றலையோ கட்டுப்படுத்த முடியவில்லை. ஆனால் தமிழ் மீனவச் சமூகமே இத் தடையால் பெரும் துன்பத்தைச் சந்தித்தது. தமிழரின் மீன்பிடித்துறை முடங்கியதுடன், தடையை மீறித் தொழிலுக்குச் சென்ற நூற்றுக்கணக்கான மீனவர்கள் கடலில் கொன்று ஒழிக்கப்பட்டார்கள். புலிகள் பாதுகாப்பு அரணங்களை நிறுவுவதைத் தடுப்பதற்காக சீமெந்து, இரும்புக் கம்பி போன்ற கட்டிடப் பொருட்களுக்குத் தடை விதிக்கப்பட்டது. விடுதலைப் புலிப் போராளிகள் எப்படியோ தங்களது பாதுகாப்பு அரணங்களை நிறுவவே செய்தார்கள். ஆனால் யுத்தத்தினால் பேரழிவுக்கு

ஆளான பொதுக் கட்டிடங்கள், வீடுகளை, சீமெந்து, இரும்பு இன்றி மீளக் கட்டியமைப்பது முடியாத காரியமாயிற்று.

படைத்துறையின் பாதுகாப்பு என்ற காரணம் காட்டி, தமிழர் தேசம் மீது திணிக்கப்பட்ட பொருளாதாரத் தணிக்கை, தமிழ்ப் பொதுமக்களைத் தாங்கொணாத் துயரத்தில் ஆழ்த்தியது. இத் தடைகள் புலிப் படையின் போர் வலுவைப் பாதிக்கவில்லை. ஆனால் பொதுமக்களின் நாளாந்த சீவியத்தை ஆழமாகப் பாதித்தது. தமிழ் மக்களின் விடுதலை உணர்வை மழுங்கடித்து, அவர்களது அரசியல் உறுதிப்பாட்டை உடைத்துவிடும் தந்திரோபாய நோக்குடனேயே முந்திய அரசாங்கம் இந்த ஒடுக்குமுறை வடிவத்தை ஈழத் தமிழினம் மீது திணித்தது. எனவே, புதிய அரசாங்கத்துடன் சமரசப் பேச்சுக்களை நடத்தி, எமது மக்களை இப் பேரவலத்திலிருந்து மீட்டெடுக்கலாமென எண்ணினோம்.

பல ஆண்டுகளாகத் தொடர்ந்த பொருளாதார முற்றுகையினால், தாங்கமுடியாத அளவுக்கு எமது மக்கள் துன்பங்களை அனுபவித்து வருவதனால், பேச்சுக்கான நிகழ்ச்சி நிரலில் இந்த விடயத்தையே மையப் பிரச்சினையாக முன்வைக்க முடிவெடுத்தோம். அரசியல் பேச்சுக்களுக்கு முன்னதாக பொருளாதாரத் தடைகள் முற்றுமுழுதாக நீக்கப்பட வேண்டுமென அரசாங்கத்திற்கு அழுத்தம் கொடுக்கப் பிரபாகரன் விரும்பினார். எமது மக்களின் துன்பத்தைத் துடைப்பதில் சந்திரிகாவுக்கு உண்மையான, நேர்மையான அக்கறை இருக்குமானால் ஐக்கிய தேசியக் கட்சி ஆட்சியாளர்கள் புரிந்த கொடுமையை அவர் முற்றாக நீக்கிவிட வேண்டும் என்பது பிரபாகரனின் நிலைப்பாடு.

எரிபொருட்களுக்கும் உரப் பொருட்களுக்கும் விதிக்கப்பட்ட தடையை நீக்கச் சந்திரிகா முயற்சித்தால் சிங்கள இராணுவத் தலைமைப் பீடத்திலிருந்து அவருக்கு கடும் எதிர்ப்புக் கிளம்பலாமென நாம் கருதினோம். இராணுவத் தலைமையைப் பொறுத்தவரை அவர்களுக்கு போர்தான் அதிமுக்கியமான விவகாரம். தமிழருக்கு எதிரான போரை முன்னெடுத்துச் செல்வதற்குப் பொருளாதாரத் தடைகள் அனுகூலமாக அமைந்துள்ளதாகவே இராணுவத் தரப்புக் கருதியது. ஆகவே, இராணுவத்தின் எதிர்ப்பைத் தவிர்த்துப் பொருளாதாரத் தடைகளை நீக்குவதாயின் போருக்கு முடிவுகட்டும் வகையில் ஒரு நிரந்தரமான போர்நிறுத்தத்தைக் கொண்டு வருவதே சாலச்

சிறந்த வழி என நாம் கருதினோம். எனவேதான், போர்நிறுத்தத்தையும் எமது நிகழ்ச்சி நிரலில் முக்கிய விடயமாக உள்ளடக்கினோம்.

எமது மக்கள் எதிர்கொண்ட சிக்கலான பிரச்சினைகளை இரு மட்டங்களாக வகுத்தோம். ஒன்று, வாழ்க்கைப் பிரச்சினைகள். மற்றையது அரசியல் பிரச்சினை. எமது மக்கள் முகம்கொடுத்து நின்ற வாழ்க்கைப் பிரச்சினைகள் பொருளாதாரத் தடைகளின் விளைவாக எழுந்தவை. ஆகவே, இந்தப் பிரச்சினைகளுக்கு அவசரமாக, உடனடியாக தீர்வு காணப்பட வேண்டுமென்பதே எமது நிலைப்பாடு. அரசியல் பிரச்சினை ஆழமானது, அடிப்படையானது. இது எமது மக்களின் அரசியல் உரிமைகள், அபிலாசைகள் சம்பந்தப்பட்டது. தமிழரின் அரசியல் பிரச்சினை ஆழமாகப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டிய விடயம். இதற்கு கால அவகாசம் தேவை. சமாதானப் பேச்சுக்களைப் படிப்படியாக, கட்டம் கட்டமாக முன்னெடுத்துச் செல்வதே எமது தந்திரோபாயமாக அமைந்தது. பேச்சுக்களின் ஆரம்பக் கட்டங்களில் எமது மக்கள் எதிர்கொள்ளும் வாழ்க்கைப் பிரச்சினைகள் பற்றி விவாதித்து அவற்றிற்கு தீர்வுகாண வேண்டுமென நாம் முடிவெடுத்தோம். அத்துடன் ஆரம்ப கட்டப் பேச்சுக்களின் போது, ஒரு நிலையான போர் நிறுத்த உடன்பாட்டைச் செய்து, போருக்கு ஓய்வு கொடுக்க வேண்டும் எனவும் தீர்மானித்தோம். மிகவும் முக்கியமான எமது அரசியல் பிரச்சினை குறித்துப் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு முன்னராக அமைதியும், இயல்பு நிலையும் நிலவும் ஒரு நல்லெண்ணச் சூழ்நிலை உருவாக்கப்பட வேண்டும் என்பதே எமது நிலைப்பாடாகும். எமது இயக்கத்தின் இந்த நிலைப்பாட்டினையும், பேச்சுக்களுக்கான எமது தந்திரோபாய அணுகுமுறைமையும் விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளுக்குத் தெளிவாக, செம்மையாக விளங்கப்படுத்தப்பட்டது.

1994 அக்டோபர் 13ஆம் நாட் காலை ஒன்பது மணியளவில், அரசாங்கப் பிரதிநிதிகளை அதிகாரபூர்வமாக வரவேற்பதற்காக நானும், அரசியல்துறை பொறுப்பாளர் தமிழ்ச்செல்வனும் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத் திடலில் காத்து நின்றோம். ஆர்வமும் மகிழ்ச்சியும் பொங்கப் பெருந்தொகையான சனத்திரள் அங்கு குழுமி நின்றது. சரியாக ஒன்பது மணிக்கு அரசாங்க பிரதிநிதிகளுடன் வந்த உலங்கு வானூர்தி, சின்னம் பொறிக்கப்பட்ட இறங்கு தளத்தில்

வந்திறங்கியது. அரச பிரதிநிதிகளை விடுதலைப் புலிகள் சார்பில் நானும் தமிழ்ச்செல்வனும் வரவேற்றோம். பொது மக்களும் குதூகல வரவேற்பளித்தனர். உடனடியாகவே, அரச தூதுக் குழுவினர் புலிகளின் ஆயுதம் தரித்த வாகன அணிகள் புடைசூழ, சுண்டுக்குளியிலுள்ள எமது அரசியல் தலைமைச் செயலகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அரசியல் செயலகத்தில் வைத்து எமது அதிகாரபூர்வமான பிரதிநிதிகளை அரசாங்கக் குழுவினருக்கு நாம் அறிமுகம் செய்து வைத்தோம். பேச்சுக்கள் ஆரம்பமாகின. எமது பிரதிநிதிகளுக்கு ஆலோசனை வழங்கி, வழிநடத்த வசதியாக நான் அரசியல் செயலகத்தில் தங்கியிருந்தேன்.

விடுதலைப் புலிகளுக்கும் அரசாங்கப் பிரதிநிதிகளுக்கும் மத்தியில் முதற் கட்டச் சுற்றுப் பேச்சுக்கள் 1994 அக்டோபர் 13, 14ஆம் நாட்களில் நடைபெற்றன. நல்லெண்ணச் சூழ்நிலையில் நிகழ்ந்த இப் பேச்சுக்களின் போது இரு தரப்பினரும் பரஸ்பரம் தமது நிலைப்பாடுகளை எடுத்து விளக்கினர். முன்னைய அரசினால் தமிழர் தாயகம் மீது திணிக்கப்பட்ட பொருளாதார தடைகளின் விளைவாக எமது மக்கள் எதிர்கொண்டு நிற்கும் கோரமான வாழ்வியல் பிரச்சினைகளையும் துன்ப துயரங்களையும் விரிவாக எடுத்து விளக்கிய எமது பிரதிநிதிகள், இந்தப் பொருளாதார முற்றுகையை முற்றுமுழுதாக நீக்கி விடுமாறு வேண்டினார்கள். போர் நெருக்கடிக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்துக் கொள்வதற்காகப் போர்நிறுத்த உடன்பாடு செய்யும் அவசியத்தையும் அவர்கள் வலியுறுத்தினார்கள். பொருளாதாரத் தடைகளை நீக்கி, போருக்கு முடிவு கட்டினால், தமிழர் தேசத்தில் அமைதியும் இயல்பு நிலையும் உருவாகும் எனவும் கூறினார்கள். தமிழ் மக்களின் அடிப்படையான வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டு, ஒரு நல்லெண்ணச் சூழ்நிலையை ஏற்படுத்தினாலேயே சமாதானப் பேச்சுக்கள் வெற்றிகரமாக முன்நகர்ந்து செல்வது சாத்தியம் என்பதையும் வலியுறுத்தினார்கள்.

யாழ்ப்பாணக் குடாநாட்டிலிருந்து வன்னி மாநிலத்திற்குப் பயணிப்பதில் எமது மக்கள் எதிர்கொள்ளும் இடையூறுகளை எடுத்து விளக்கிய புலிகளின் பிரதிநிதிகள், சங்குப்பிட்டி - கேரதீவுப் பாதையைத் திறந்து விடுமாறு அரசாங்கத்திடம் ஒரு கோரிக்கையை முன்வைத்தனர். சங்குப்பிட்டி - கேரதீவுப் பாதை செம்மையாகச் செயற்படுவதாக இருந்தால் பூநகரியில்

அமைந்திருக்கும் இராணுவ முகாம் அகற்றப்பட வேண்டும் என்பதையும் எமது பிரதிநிதிகள் சுட்டிக் காட்டினர்.

விடுதலைப் புலிகளின் விளக்கங்களுக்கும் யோசனைகளுக்கும் அரச பிரதிநிதிகள் அனுதாபத்துடனும் பொறுமையுடனும் செவிமடுத்தனர். தமிழ் மக்களின் அவல நிலையையும், புலிகளின் கருத்துக்களையும் கொழும்பு உயர்மட்டத்தில் எடுத்துக்கூறி ஆவன செய்வதாக அவர்கள் வாக்குறுதி அளித்தனர். முதலாம் கட்டப் பேச்சுக்களின்போது உருப்படியாக எவ்வித முடிவும் எடுக்கப்படவில்லை. இரண்டாவது சுற்றுப் பேச்சை அடுத்த பத்து நாட்களுக்குள் நடத்துவதென்று மட்டும் தீர்மானிக்கப்பட்டது.

## அரச - புலிகள் கூட்டறிக்கை

விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளும் அரச தூதுக் குழுவும், 1994 அக்டோபர் 13, 14ஆம் நாட்களில் நடத்திய முதலாவது சுற்றுப் பேச்சுக்களின் முடிவில் கீழ்க் கண்ட கூட்டறிக்கையை வெளியிட்டனர்.

> "தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் சிறீலங்கா அரசாங்கத்திற்கும் மத்தியிலான முதலாவது சுற்றுப் பேச்சு சினேகபூர்வமான நல்லெண்ணச் சூழ்நிலையில் நடைபெற்றது. பேச்சுக்கள் ஆக்கபூர்வமானதாக அமைந்தன.
>
> விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள் குழுவுக்குத் தலைமை வகித்த திரு. கரிகாலன் தனது ஆரம்ப உரையில், தமிழ்த் தேசியப் பிரச்சினைக்கு அமைதி வழியில் தீர்வு காணவும் சமாதானத்தை நிலை நிறுத்தவும் விடுதலைப் புலிகள் இயக்கம் உறுதிபூண்டுள்ளது எனக் கூறினார். "1990 ஜுன் மாதம் போர் மீண்டும் வெடித்ததிலிருந்து போர் நிறுத்தம் செய்து சமாதானப் பேச்சுக்களை ஆரம்பிக்குமாறு விடுதலைப் புலிகள் இயக்கம் கோரிக்கை விடுத்து வந்திருக்கிறது. ஆனால் போர் நிறுத்தம் செய்து, சமரசப் பேச்சுக்களைத் தொடங்குவதற்கு முந்திய அரசாங்கம் எந்த விதமான உருப்படியான நடவடிக்கைகளையும் எடுக்கவில்லை. ஆயினும்

சந்திரிகா குமாரதுங்கவின் புதிய அரசாங்கம் சமாதான நல்லெண்ணச் சூழ்நிலையை உருவாக்க ஆக்க பூர்வமான நடவடிக்கைகளை எடுத்து வருவதையிட்டு நாம் மகிழ்ச்சியடைகிறோம். சமாதான வழிமூலம் அரசியல் தீர்வு காண்பதில் அவர் உண்மையாக உறுதி பூண்டிருப்பது எமக்கு மகிழ்வைத் தருகிறது.'' என்று குறிப்பிட்டார் கரிகாலன்.

"இந்தப் போருக்கும், இந்தப் போர் நெருக்கடியின் விளைவாக எழுந்த நீண்ட கால அவல வாழ்வுக்கும் ஒரு முடிவு கட்ட வேண்டும் என்பதே தமிழ் மக்களின் ஒட்டுமொத்த அபிலாசையாகும். எமது மக்கள் மீது திணிக்கப்பட்ட இந்த யுத்தமானது பாரிய துன்பச் சுமைகளை எமது மக்கள் மீது சுமத்தியுள்ளது. மிகவும் அவசரமான, உடனடியான பல்வேறு பிரச்சினைகளுக்கு எமது மக்கள் முகம் கொடுத்து நிற்கிறார்கள். ஆரம்ப கட்டப் பேச்சுக்களின்போது, இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்பட வேண்டும் என்பதே எனது கருத்தாகும். உடனடியாக நடவடிக்கைகளை எடுத்து, உங்களது அரசாங்கம் எமது மக்களின் துன்பங்களைத் துடைத்துவிட வேண்டும் என்பதே எமது அமைப்பினது அபிலாசையாகும்.'' என்றார் கரிகாலன்.

தமிழ் மாநிலத்தில் இயல்புநிலை திரும்புவதற்கும் அமைதியான சூழ்நிலை உருவாகுவதற்கும் போர் நிறுத்தம் அவசியம் என்பதைக் கரிகாலன் வற்புறுத்தினார். ஆயுத மோதல்களுக்கு முடிவு கட்டினாலேயே சமாதானப் பேச்சுக்களை முன்னெடுத்துச் செல்லலாமெனவும் அவர் குறிப்பிட்டார்.

அரச பிரதிநிதிகளை வரவேற்ற கரிகாலன், விடுதலைப் புலிகள் இயக்கம் திறந்த மனதுடன் இப் பேச்சுக்களில் பங்குகொள்கிறது எனத் தெரிவித்ததுடன், சமாதானப் பேச்சு வெற்றியடைவதற்கு விடுதலைப் புலிகள் அரசாங்கத்திற்கு சகல ஒத்துழைப்புகளையும் வழங்கத் தயாராகவுள்ளனர் எனவும் கூறினார்.

அரசாங்கப் பிரதிநிதிகள் குழுவின் தலைவர் திரு.பலப்பத்தபெண்டி பேசும்பொழுது, பிரதம

மந்திரியின் தனிப்பட்ட வேண்டுகோளுக்கு அமையவே தாமும் ஏனைய பிரதிநிதிகளும் இங்கு வருகை தந்திருப்பதாகக் கூறினார். "உங்களுக்கும், வடக்கில் வாழும் சகல மக்களுக்கும் பிரதம மந்திரி தமது நல்லாசியைத் தெரிவிக்குமாறு எம்மைக் கேட்டுக் கொண்டார். அத்தியாவசியப் பொருட்களை போதுமான அளவுக்கு விநியோகிப்பதுடன், பாதிப்படைந்த பொதுக் கட்டுமாணங்களைச் சீரமைத்து, எவ்விதம் செம்மையான முறையில், நாளாந்தம் மக்கள் எதிர்கொள்ளும் இன்னல்களைத் தீர்த்து வைக்கலாமென உங்களோடு கலந்தாலோசிக்குமாறு அவர் எம்மைப் பணித்துள்ளார். ஒரு போர் நிறுத்தத்திற்கு வழிகோலும் வகையில், ஆயுத மோதல் சம்பவங்களை எவ்வாறு குறைத்துக் கொள்ளலாம் என்பது பற்றி உங்களுடன் பேசவும் எமக்கு அதிகாரமளிக்கப்பட்டுள்ளது." என்றார் பலப்பத்தபெண்டி.

வடக்கில் நிலவும் சூழ்நிலை ஒரு தேசியப் பிரச்சினையாக உருப்பெற்றுள்ளதென்றும் அதற்கு ஒரு திண்ணியமான தீர்வு காணப்பட வேண்டுமென்றும் அவர் கூறினார். கூடிய சீக்கிரமாக அமைதியை நிலைநாட்டும் சமாதானப் பேச்சுக்கான நடைமுறையைத் தொடங்கி வைக்க வேண்டுமெனப் பிரதம மந்திரி விரும்புவதாகவும் அவர் சொன்னார்.

"இந்தச் சந்தர்ப்பத்தில் எமது நோக்கம் இரு அம்சங்களைக் கொண்டது. ஒரு மட்டத்தில், வடக்கில் வாழும் சகல மக்களுக்கும், அத்தியாவசிய ஜீவாதாரப் பொருட்களைப் போதுமான அளவுக்குச் சமத்துவமான முறையில் அரசாங்கம் எவ்விதம் விநியோகம் செய்யலாம் என்பது பற்றி உங்களுடன் கலந்துரையாடுவது. அடுத்ததாக, சமூகத்தின் மேம்பாட்டுக்கு அவசியமான பொதுநலச் சேவைகளைச் சகல குடிமக்களுக்கும் வழங்கும் ஒரு அரசின் பொறுப்பை எவ்விதம் சிறப்பான முறையில் நிறைவு செய்யலாம் என்பது பற்றியும் உங்களுடன் பேசுவது." என்று விளக்கினார் திரு. பலப்பத்தபெண்டி.

"பேச்சுக்கள் வாயிலாக அரசியல் தீர்வை எட்டும் விவகாரத்தைப் பொறுத்தவரை, தேசிய அரசியலமைப்பு

எத்தகைய வடிவத்தில் அமையப் பெறவேண்டுமென விடுதலைப் புலிகளும் வடக்கில் வாழும் மக்களும் எத்தகைய கருத்தைக் கொண்டுள்ளனர் என்பதை அறிந்து கொள்வதும் எமது பணியாகும். நிபந்தனையற்ற முறையில் எமது தேசியப் பிரச்சினைக்குச் சமாதான வழியில் தீர்வு காணும் எமது பிரதம மந்திரியின் இலட்சியத்தை விடுதலைப் புலிகளும் தமிழ்ச் சமூகமும் சாதகமாக வரவேற்றுள்ளமை பிரதம மந்திரியை மகிழ்ச்சியில் ஆழ்த்தியிருக்கிறது. ஆயுத மோதலைத் தவிர்க்கும் ஒரு கண்காணிப்பு நடைமுறையைச் செயற்படுத்துவதன் மூலம் இந்தச் 'சமாதான நல்லுணர்வை' மேலும் நீடித்து, நிலைக்க வைக்கலாம் என அவர் நம்புகிறார்.

எமது கூட்டுச் சமரச முயற்சியில் பெரும் எதிர்பார்ப்புகள் நிலவுவதால் நாம் பொறுமையாக, புரிந்துணர்வுடன் பரஸ்பரம் விட்டுக் கொடுத்துப் பேச்சுக்களை நகர்த்த வேண்டும். இந்தக் குறிக்கோளை அடைவதற்கு எம்மாலானவரை நாம் முயற்சிப்போம் என நாம் உங்களுக்கு உறுதி தருகிறோம். நீங்களும் அவ்விதம் செய்வீர்களென நாம் எதிர்பார்க்கிறோம். தேவைப்படும் அளவுக்கு, பல தரப்பட்ட விடயங்கள் குறித்து நானும் எனது குழுவினரும் உங்களுடன் பேசுவதற்கு ஆயத்தமாக இருக்கிறோம். தமிழ் மக்களும் முழு நாடுமே நன்மைபெறும் வகையில் எமது பேச்சுக்கள் நடைமுறைச் சாத்தியமான இணக்கப்பாடுகளைக் கண்டு ஆக்கபூர்வமாக அமைய வேண்டுமென நாம் எதிர்பார்க்கிறோம்." என்று குறிப்பிட்டார் திரு. பலப்பத்தபெண்டி.

இந்தப் பேச்சுக்கள் அரச தரப்புப் பிரதிநிதிகள் தயாரித்த நிகழ்ச்சி நிரலின் அடிப்படையில் நடைபெற்றன. வடக்கில் வாழும் மக்கள் எதிர்கொண்ட பல்வேறு பிரச்சினைகளை உள்ளடக்கியதாகவே இந்த நிகழ்ச்சி நிரல் தயாரிக்கப்பட்டது.

அத்தியாவசியப் பொருட்களை குறைந்த விலையில் விநியோகிக்கும் விவகாரம் விவாதத்திற்கு எடுத்தபோது, தாண்டிக்குளத்தில் வாகனப்

போக்குவரத்தில் எழும் சிக்கல்கள், தாமதங்கள் பற்றி விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள் விரிவாக எடுத்து விளக்கினர். கடல் மார்க்க விநியோகத்திலும் பொருட்களின் விலை அதிகரித்துள்ளதாகவும் அவர்கள் சுட்டிக் காட்டினர். தாண்டிக்குளத்தில் வாகனப் போக்குவரத்து நெருக்கடியைத் தீர்ப்பதற்கும் கப்பற் கட்டணங்களைக் குறைப்பதற்கும் தேவையான நடவடிக்கைகளை எடுப்பதாக அரச பிரதிநிதிகள் வாக்களித்தனர்.

யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கும் பெருநிலப்பரப்புக்கும் மத்தியில் ஒரு தரைப் பாதையை அமைக்கும் பிரச்சினை விவாத்திற்கு வந்தபொழுது சங்குப்பிட்டிப் பாதையை திறந்து விட வேண்டுமென வலியுறுத்திய விடுதலைப் புலிகள், அதற்கு வசதியாக பூநகரியில் நிலைகொண்டுள்ள இராணுவத்தினரை விலக்கிக் கொள்ள வேண்டுமெனக் கேட்டுக் கொண்டனர். இந்தத் தரைப் பாதையைத் திறந்து விட்டால் பொதுமக்களதும் பாவனைப் பொருட்களதும் போக்குவரத்து இலகுவாக்கப்படுமென்றும், இது யாழ்ப்பாண மக்கள் மீதான நல்லெண்ண நடவடிக்கையாகக் கருதப்படும் எனவும் புலிகளின் பிரதிநிதிகள் சுட்டிக் காட்டினர். புலிகளின் கருத்துக்களை அனுதாபத்துடன் செவிமடுத்த அரச பிரதிநிதிகள் இவ் விவகாரம் பரிசீலனைக்கு எடுக்கப்படும் எனக் கூறினர்.

வடக்கின் பொருளாதாரப் புனர்நிர்மாணம் பற்றிய பிரச்சினைகள் விவாதத்திற்கு வந்தபோது, பிரதமர் சந்திரிகா குமாரதுங்கவின் புதிய நிர்வாகம் மின்சார விநியோகத்தை மீளமைக்கவும், நீர்ப்பாசனத் திட்டங்கள், வீதிகள், பாடசாலைகள், மருத்துவ மனைகளைத் திருத்தியமைக்கவும் உடன் நடவடிக்கை எடுக்க தீர்மானித்திருப்பதாக அரச பிரதிநிதிகள் கூறினர். அவசரமாகப் புனர்நிர்மாணம் செய்ய வேண்டிய கட்டுமாணங்களின் விபரங்களைப் புலிகளின் பிரதிநிதிகள் அரச தரப்பிடம் கையளித்தனர். பொருளாதாரப் புனர்நிர்மாண வேலைகளில் ஈடுபடுத்தப்படும் அரச நிர்வாக அதிகாரிகளுக்கும் தொழில்நுட்ப நிபுணர்களுக்கும் முழு ஒத்துழைப்பும்

வழங்கப்படும் எனப் புலிகளின் பிரதிநிதிகள் உறுதியளித்தனர்.

விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளது வேண்டுகோளுக்கு இணங்க, யாழ்ப்பாண நூல் நிலைய அழிவு குறித்து விசாரித்து அறிக்கை சமர்ப்பிக்க ஒரு விசாரணைக் குழுவை நிறுவுவதென அரச தரப்பு இணங்கியது. நூல் நிலையத்தை மீளக் கட்டியமைக்கவும் அரச பிரதிநிதிகள் இணக்கம் தெரிவித்தனர்.

ஒரு சமாதான, நல்லெண்ணச் சூழ்நிலையை உருவாக்குவதற்கு போர் நிறுத்தத்தின் அவசியத்தை விடுதலைப் புலிப் பிரதிநிதிகள் வலியுறுத்தினர். போர் நிறுத்தம் பிரகடனம் செய்யப்படுவதற்கு முன்னராக பகை நடவடிக்கைகளை நிறுத்துவது பற்றி ஆராயப்பட வேண்டும் என அரச பிரதிநிதிகள் வாதாடினர். இறுதியில் இவ் விவகாரம் குறித்துப் பாதுகாப்பு அதிகாரப் பீடத்துடன் கலந்தாலோசிக்க அரச பிரதிநிதிகள் இணங்கினர்.

இரண்டாவது சுற்றுப் பேச்சுக்களை அடுத்த பத்து நாட்களுக்குள் தொடங்குவதென இரு தரப்பினரும் முடிவெடுத்தனர்.

| | |
|---|---|
| எஸ்.கரிகாலன் | கே.பலப்பத்தபென்டி |
| தலைவர் | தலைவர் |
| விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள் | அரசாங்கப் பிரதிநிதிகள் |

தமிழீழ விடுதலைப் புலிகளாலும் யாழ்ப்பாணத் தமிழ் மக்களாலும் தனது பிரதிநிதிகளுக்குக் குதூகலமான, நல்லெண்ண வரவேற்பு அளிக்கப்பட்டது குறித்து சந்திரிகா பெரிதும் மகிழ்ச்சியடைந்தார். 1994 அக்டோபர் 21ஆம் நாளன்று தலைவர் பிரபாகரனுக்கு அவர் எழுதிய கடிதத்தில், தனது பிரதிநிதிகளுக்கு அளிக்கப்பட்ட நல்வரவேற்புக்கும் விருந்துபசாரத்திற்கும் நன்றி தெரிவித்தார். இரண்டாம் கட்டச் சுற்றுப் பேச்சு, 1994 அக்டோபர் 24ஆம் திகதி நடத்த முடிவெடுத்திருப்பதாகவும் சந்திரிகா அக் கடிதத்தில் மேலும் தெரிவித்திருந்தார். அக் கடிதத்தின் விபரம் வருமாறு:-

21 அக்டோபர் 1994

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
தலைமைச் செயலகம்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

1994 அக்டோபர் 13, 14ஆம் நாட்களில் எமது பிரதிநிதிகள் யாழ்ப்பாணம் வருகை தந்தபோது உங்களது அமைப்பு அவர்களுக்கு அளித்த நல்லெண்ண வரவேற்புக்கும் விருந்துபசாரத்திற்கும் நான் நன்றி கூற விரும்புகிறேன்.

பேச்சுக்கள் சினேகபூர்வமாக நிகழ்ந்ததையிட்டும், யாழ்ப்பாணக் குடாநாட்டின் புனர்நிர்மாணம் குறித்து சில முடிவுகள் எடுக்கப்பட்டதை அறிந்தும் நாம் மகிழ்ச்சியடைந்தோம். இரண்டாவது சுற்றுப் பேச்சுக்களை 1994 அக்டோபர் 24ஆம் நாளன்று நடத்துவதற்கு நாம் இணக்கம் தெரிவிக்கிறோம்.

எமது செயலர் திரு. கே.பலபத்தபெண்டி தலைமையிலான அரச பிரதிநிதிகள் அன்றைய நாள் யாழ்ப்பாணம் வருவர். அத்தியாவசியப் பொருட்களின் போக்குவரத்திற்கும், பொதுமக்களின் பாவனைக்குமாக யாழ்ப்பாணத்திற்கு ஒரு வசதியான பாதையைத் திறப்பது பற்றியும் மற்றும் முக்கிய விடயங்கள் குறித்தும் மேலும் பேச்சுக்களைத் தொடரலாம்.

எமது மக்கள் எல்லோருமே ஆவலுடன் எதிர் பார்க்கும் அமைதியையும், நீதியையும், நல்வாழ்வையும் அடையும் வகையில் நாம் ஒன்றாகச் சேர்ந்து தீர்வுகளை எட்டலாமென நான் நம்புகிறேன். உங்களது சமாதான முயற்சிக்கு எமது முழு ஆதரவும் உண்டு என்பதை உறுதியளிக்க விரும்புகிறேன்.

எமது பிரதிநிதிகளை ஏற்றி வரும் உலங்கு வானூர்தி, காலை 8:15 அளவில் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத் திடலில் வந்திறங்கும். அரச குழுவுடன் திரு.பவித்த விஜயசிங்கா, திரு.சரத் தர்மசிறீ ஆகிய இரு புகைப்பட நிபுணர்களும் வருவார்கள்.

அன்றைய நாளே (1994 அக்டோபர் 24ஆம் நாள்) மாலை 5 மணியளவில் அவர்கள் யாழ்ப்பாணத்திலிருந்து திரும்புவர்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா
பிரதம மந்திரி

1994 அக்டோபர் 23ஆம் நாளன்று, இரண்டாம் கட்டச் சுற்றுப் பேச்சு நடைபெறுவதற்கு முந்திய நாள், எதிர்க் கட்சித் தலைவரும், ஐக்கிய தேசியக் கட்சியின் ஜனாதிபதி வேட்பாளருமான திரு. காமினி திசநாயக்கா, கொழும்பில் நடைபெற்ற தேர்தல் பிரச்சாரக் கூட்டமொன்றில் ஒரு மனித குண்டுதாரியால் கொல்லப்பட்டார். ஐக்கிய தேசியக் கட்சித் தலைவர்கள், இந்த அரசியற் கொலைக்கு விடுதலைப் புலிகள் மீது பழி சுமத்தினர். சந்திரிகா அரசாங்கம் அவசரப்பட்டு புலிகள் மீது குற்றம் சுமத்தவில்லை. ஆயினும் இக் கொலை குறித்து விசாரணை நடத்த அரசு உத்தரவு பிறப்பித்தது. விடுதலைப் புலிகள் இயக்கம் இக் கொலைக்கு உரிமையும் கோரவில்லை. அதேவேளை மறுத்துரைக்கவுமில்லை. இந்தக் கொலைக்குப் பின்னணியில் அரசாங்கமும் விடுதலைப் புலிகளும் இணைந்த ஒரு கூட்டுச் சதி உள்ளதாகக் குற்றம் சுமத்திக் கொழும்பு நகரப் புறங்களில் சுவரொட்டிகள் காணப்பட்டன. யாழ்ப்பாணப் பொதுநூல் நிலையத்தைத் தீ வைத்துக் கொளுத்தி, தமிழரின் விலை மதிக்க முடியாத வரலாற்று நூல்களையும் ஏடுகளையும் நெருப்பில் நாசம் செய்து, அந்தப் பண்பாட்டுப் படுகொலை நிகழ்வுக்குப் பிரதான சூத்திரதாரியாக விளங்கிய காரணத்தினாலேயே காமினி திசநாயக்கா விடுதலைப் புலிகளின் பழிவாங்கல் நடவடிக்கைக்கு ஆளாகி இருக்கலாமெனத் தமிழ் அரசியல் வட்டாரங்களில் பேசப்பட்டது.

காமினியின் கொலைக்குக் காரண கர்த்தாக்கள் எனப் புலிகளை பகிரங்கமாகக் குற்றம் சுமத்தியதுடன், கூட்டுச் சதி என்ற குற்றச்சாட்டை ஐக்கிய தேசியக் கட்சி முன்வைத்ததால் பேச்சுக்களை இடைநிறுத்த சந்திரிகா அரசாங்கம்

நிர்ப்பந்திக்கப்பட்டது. ஆனால், ஜனாதிபதித் தேர்தலில் கண்ணும் கருத்துமாக இருந்த சந்திரிகா அம்மையார், சமாதான முயற்சிகளுக்கு ஒரேயடியாக மூடுவிழா நடத்தி, அமைதிவேண்டி நின்ற ஆதரவாளர்களைப் பகைத்துக் கொள்ளவும் விரும்பவில்லை. ஆகவே, அவர் நிரந்தர அமைதியை நிலை நாட்டி, போருக்கு முடிவுகட்டப் போவதாகவும், விடுதலைப் புலிகளுடன் தொடர்ந்து பேச்சுக்களை நடத்துவதற்கு சகல தரப்பு மக்களிடமிருந்தும் மனுக் கேட்டும் தேர்தல் களத்தில் குதித்தார். ஐக்கிய தேசியக் கட்சியின் ஜனாதிபதி வேட்பாளராக, காமினியின் மனைவி சிறீமா திசநாயக்கா தேர்தலில் போட்டியிட்டார்.

1994 நவம்பர் 9ஆம் நாள் நடைபெற்ற ஜனாதிபதித் தேர்தலில், 62 விழுக்காடு வாக்குகளைப் பெற்றுச் சந்திரிகா குமாரதுங்கா அமோக வெற்றி பெற்றார். சந்திரிகா அம்மையாரின் சமாதானக் கொள்கைக்குப் பெரும்பான்மையான மக்கள் ஒரு உருப்படியான ஆணையை வழங்கினார்கள். புதிய அரச அதிபராகத் தெரிவு செய்யப்பட்ட சந்திரிகா, நாட்டு மக்களுக்கு விடுத்த செய்தியில், "சமாதானம் மீது எமது மக்களுக்கு இருந்த ஆழமான அபிலாசைகளையும் உறுதிப்பாட்டையும் இத் தேர்தல் முடிவுகள் சந்தேகத்திற்கு இடமின்றி எடுத்துக் காட்டுகின்றன" எனக் குறிப்பிட்டார்.

## சிங்கள இராணுவத்தின் அடாவடித்தனம்

1994 நவம்பர் 12ஆம் நாளன்று, புதிய ஜனாதிபதியாகச் சந்திரிகா உறுதிப் பிரமாணம் செய்து கொண்டார். புதிய அரச அதிபராக சந்திரிகா பதவியேற்றமைக்கு ஒரு நல்லெண்ணச் சமிக்கையாக விடுதலைப் புலிகள் இயக்கம் 1994 நவம்பர் 12 தொடக்கம் 19ஆம் நாள்வரை, ஒரு வார காலத்திற்கு ஒருதலைப்பட்சமாகப் போர்நிறுத்தப் பிரகடனம் செய்தது. எமது முடிவை, சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக அரசாங்கத்திற்குத் தெரிவித்தோம். ஆனால் அரசாங்கத்திடமிருந்து பதில் எதுவும் வரவில்லை.

போர் நடவடிக்கைகளை முற்றாக நிறுத்தி, விடுதலைப் புலிப் போராளிகள் அமைதி பேணி வந்த நேரத்தில், சிங்கள ஆயுதப் படைகள் எமக்கெதிராகப் பல இராணுவ

நடவடிக்கைகளை மேற்கொண்டன. குடிமனைகள் மீது விமானக் குண்டுத் தாக்குதல்களும், பீரங்கி எறிகணைத் தாக்குதல்களும் நடைபெற்றன. இதன் விளைவாக பொதுமக்கள் பலர் கொல்லப்பட்டும் படுகாயமும் அடைந்தனர். விடுதலைப் புலிகளுக்கு ஆத்திரமூட்டும் ஒரு கோரச் சம்பவமும் வன்னியில் நிகழ்ந்தது. வன்னியிலுள்ள நெடுங்கேணிப் பகுதியில், சிங்கள இராணுவத்தினர் விடுதலைப் புலிகள் மீது பதுங்கியிருந்து தாக்குதலை நடத்தினர். இத் தாக்குதலில், சிங்கள இராணுவத்தினர் எமது இயக்கத்தின் மூத்த தளபதிகளில் ஒருவரான லெப்.கேணல் அமுதன் அவர்களைச் சுட்டுக் கொன்றதுடன் அவரது தலையையும் வெட்டியெடுத்துச் சென்றனர். அமுதனது துண்டிக்கப்பட்ட தலையைத் திருப்பி ஒப்படைக்குமாறு நாம் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் மூலம் விடுத்த வேண்டுகோளையும் சிங்கள இராணுவம் நிராகரித்தது. சிறீலங்காப் படையினரின் இந்த அடாவடித்தனம் பிரபாகரனுக்குக் கடும் சினத்தை ஏற்படுத்தியது. எமது போராளிகள் படை நடவடிக்கைகளை நிறுத்தி அமைதி காத்த சூழ்நிலையில் சிங்கள இராணுவத்தினர் இவ்விதம் மிருகத்தனமாக நடந்து கொண்டது புலிகளின் தலைமைப் பீடத்திற்கு ஆத்திரத்தையும் ஆழமான ஏமாற்றத்தையும் கொடுத்தது.

1994 நவம்பர் 19ஆம் நாளன்று, பாதுகாப்பு உதவி அமைச்சர் திரு. அனுருத்த ரத்வத்தை தலைவர் பிரபாகரனுக்கு எழுதிய கடிதத்தில் உடனடியாகவே இரு வாரங்களுக்குப் போர் நிறுத்தம் செய்து கொள்ள அரசாங்கம் தயாராக இருப்பதாக அறிவித்தார். இது தொடர்பாக ரத்வத்தைக்கும் பிரபாகரனுக்கும் மத்தியில் பரிமாறப்பட்ட கடிதங்களைக் கீழே பிரசுரிக்கிறோம்.

19 நவம்பர் 1994

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் ஏழு நாட்களுக்கு, நவம்பர் 12-19ஆம் நாள்வரை, பகை நடவடிக்கைகளை நிறுத்தியிருப்பதாக அறிந்தோம். இந்த முடிவை நீங்கள் எமக்கு நேரடியாகத் தெரியப்படுத்தவில்லை என்பதையிட்டு வருந்துகிறோம். சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம், நவம்பர் 16ஆம் நாளன்று, வேறு வழியில் இது பற்றி எமக்குத் தெரியப்படுத்தியது.

நீங்கள் பகை நடவடிக்கையை நிறுத்தி அமைதி பேணத் தயாராக இருந்தால், இன்றிலிருந்து உடனடியாகவே முதற்கட்டமாக இரு வாரங்களுக்கு போர் நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்ள எமது அரசாங்கம் தயாராக இருக்கிறது.

இதுபற்றி உடனடியாகப் பதில் எழுதினால் நன்றியாக இருக்கும்.

அன்புடன்
உங்கள் நேர்மையுள்ள

அனுருத்த ரத்வத்தை
பாதுகாப்பு உதவி அமைச்சர்
நீர்ப்பாசன, மின்சக்தி அமைச்சர்

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
20.11.1994

கேணல். அனுருத்த ரத்வத்தை
பாதுகாப்பு உதவி அமைச்சர்
நீர்ப்பாசன மின்சக்தி அமைச்சர்
சிறீலங்கா

அன்பின் கேணல் ரத்வத்தை அவர்கட்கு,

1994, நவம்பர் 19ஆம் நாள் திகதியிடப்பட்ட உங்கள் கடிதத்திற்கு நன்றி. இரண்டு வாரங்களுக்குப் பகை நடவடிக்கைகளை நிறுத்துவதாக நீங்கள் தெரிவித்த யோசனையை நாம் மிகவும் ஆர்வமாகவும் கவனமாகவும் பரிசீலனை செய்து வருகிறோம் என்பதை உங்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகிறேன்.

மக்கள் முன்னணி அரசாங்கம் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டதற்கு எமது நல்லெண்ணத்தைத் தெரிவிக்கும் முகமாக, நவம்பர் 12-19ஆம் நாள்வரை, இரு வாரங்களுக்கு நாம் பகை நடவடிக்கைகளை

நிறுத்திக் கொண்டதை நீங்கள் அறிவீர்கள். நாங்கள் எமது முடிவைப் பகிரங்கப்படுத்த முன்னரே, நாம் ஒருதலைப்பட்சமாக அமைதி பேணவுள்ளோம் என்ற செய்தியை உங்களது அரசாங்கப் புலனாய்வுத் துறையினர் உள்நாட்டு, வெளிநாட்டு ஊடகங்களுக்கு கசியவிட்டுள்ளனர். அடுத்ததாக, எமது சமாதான முயற்சி சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக உங்களுக்கு உறுதியாகத் தெரிவிக்கப்பட்டது.

அமைதி பேணவேண்டிய இந்த வாரத்தில், எமது இயக்கம் சகல போர் நடவடிக்கைகளையும் நிறுத்திக் கொண்டுள்ள நேரத்தில், எமது போராளிகளுக்கும் பொதுமக்களுக்கும் எதிராக அரச படைகள் தொடர்ச்சியான பகை நடவடிக்கைகளை மேற்கொண்டன. இது எமக்கு ஏமாற்றத்தையும் கவலையையும் தருகிறது. நெடுங்கேணிப் பகுதியில் நடைபெற்ற ஒரு பதுங்கித் தாக்குதற் சம்பவத்தில் எமது மூத்த தளபதிகளில் ஒருவரான லெப்.கேணல் அமுதன் (மல்லி) கொல்லப்பட்டதுடன், அவரது தலை துண்டாடப்பட்டது. அவரது தலையை ஒப்படைக்குமாறு, சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக நாம் விடுத்த வேண்டுகோளையும் உங்களது படைகள் நிராகரித்துள்ளன. இச்சம்பவமானது எமது சமாதான நல்லெண்ண முயற்சிக்குப் பங்கம் ஏற்படுத்தும் பாரதூரமான ஆத்திரமூட்டும் செயலாகும். ஆகவே, இச் சம்பவம் குறித்து உடன் விசாரணை நடத்தி, விபரங்களை எமக்கு அறியத் தருமாறு கேட்டுக் கொள்கிறோம்.

நெடுங்கேணிச் சம்பவம் குறித்து உங்களிடமிருந்து தகவல் கிடைத்ததும், போர் நடவடிக்கைகளை நிறுத்துவது சம்பந்தமான எமது முடிவை உங்களுக்கு அறியத் தருவோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

22 நவம்பர் 1994

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

1994 நவம்பர் 20ஆம் நாளன்று நீங்கள் எழுதிய கடிதத்திற்குப் பதிலாக இதனை எழுதுகிறேன்.

நீங்கள் உங்களது கடிதத்தில் தெரிவித்தது போன்று நவம்பர் 18ஆம் நாள் நெடுங்கேணியில் நிகழ்ந்த சம்பவத்தை அறிந்து நான் மிகவும் கலக்கமடைந்தேன்.

நவம்பர் 18ஆம் நாள், திரு. தமிழ்ச்செல்வன் அனுப்பிய செய்தி சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாகப் பாதுகாப்புச் செயலருக்கு கிடைத்தது. அச் செய்தி விபரம் வருமாறு:

"1994 நவம்பர் 17 அன்று, வியாழக்கிழமை காலை, முல்லைத்தீவு மாவட்டத்திலுள்ள கோடக்கானல் என்னுமிடத்திற்கு அருகாமையில் விடுதலைப் புலிப் போராளிகள் இருவர், சிறீலங்கா இராணுவத்தினரால் பதுங்கியிருந்து தாக்கப்பட்டனர்.

இத் தாக்குதற் சம்பவத்தில் எமது மூத்த உறுப்பினரான லெப்.கேணல் மல்லி கொல்லப்பட்டார். சிறீலங்கா இராணுவத்தினர் அவரது உடலைக் கண்டம் துண்டமாக சிதைத்ததுடன் தலையை வெட்டியெடுத்துச் சென்றுள்ளனர். இந்தச் சம்பவம் குறித்து விடுதலைப் புலிகள் இயக்கம் ஆழ்ந்த கவலையும், ஆத்திரமும் அடைந்துள்ளது.

கௌரவமான முறையில் ஈமக் கிரிகைகளை நடத்துவதற்காக திரு.மல்லியின் தலையைத் திருப்பி ஒப்படைக்குமாறு கேட்டுக் கொள்வதுடன், இச் சம்பவம் குறித்து தகுந்த விளக்கம் தருமாறும் கேட்டுக் கொள்கிறோம்."

அன்றைய நாளே, பாதுகாப்புச் செயலர் சர்வசேச் செஞ்சிலுவைச் சங்கம் மூலமாக பதில் அனுப்பினார். அவர் அனுப்பிய பதில் வருமாறு:

"அரசியல்துறைப் பொறுப்பாளர் திரு. தமிழ்ச் செல்வனிடமிருந்து அனுப்பப்பட்ட செய்தி தொலைப் பதிவு மூலம் 1994 நவம்பர் 18ஆம் நாள் கிடைத்தது.

இந்த மிருகத்தனமான செயல் குறித்து நாம் ஆழமாக வருந்துகிறோம். தலையைத் திருப்ப ஒப்படைப்போம், அல்லது தகனம் செய்து அஸ்தியை அனுப்பி வைப்போம்."

உங்களது கடிதத்தில் குறிப்பிடப்பட்ட தலை, அழுகிப் போன நிலையில் இருந்ததால் உரிய முறையில் தகனம் செய்யப்பட்டது. வவுனியாவிலுள்ள சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக அஸ்தியைக் கையளிப்பது குறித்து ஒழுங்குகள் செய்யப்படுகின்றன.

இச் சம்பவம் குறித்துத் தகவல் பெறப்பட்டதும், இதுபற்றி விசாரிப்பதற்காக, இராணுவச் சட்டத்தின் கீழ் இராணுவ நீதிமன்றம் நிறுவப்பட்டுள்ளது. விசாரணையும் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. நீதிமன்றம் தகுந்த ஒழுங்கு நடவடிக்கையை எடுக்கும்.

இப்போதைக்கு, இவ் விவகாரம் சம்பந்தமான எமது கடிதப் பரிமாற்றங்களை இரகசியமாக வைத்துக் கொள்வது புத்திசாலித்தனமானது எனக் கருதுகிறேன்.

அனுருத்த ரத்வத்தை<br>
உதவிப் பாதுகாப்பு அமைச்சர்<br>
நீர்பாசன, மின்சக்தி அமைச்சர்

தலைமைச் செயலகம்<br>
தமிழீழ விடுதலைப் புலிகள்<br>
யாழ்ப்பாணம்<br>
25.11.1994

கேணல். அனுருத்த ரத்வத்தை<br>
உதவிப் பாதுகாப்பு அமைச்சர்<br>
நீர்ப்பாசன, மின்சக்தி அமைச்சர்<br>
சிறீலங்கா

அன்பின் கேணல் ரத்வத்தை அவர்களுக்கு,

1994 நவம்பர் 22ஆம் நாளன்று திகதியிடப்பட்ட உங்களது கடிதத்திற்கு மிகவும் நன்றி.

நெடுங்கேணிச் சம்பவம் மிகவும் பாரதூரமானது என்பதை உணர்ந்து, அதனை இராணுவ நீதிமன்ற விசாரணைக்கு உள்ளாக்கி, உடன் நடவடிக்கை எடுத்தமைக்கு நன்றி. இந்தக் கொடூரச் செயலைப் புரிந்தவர்களுக்கு நீதிமன்றம் தகுந்த ஒழுங்கு நடவடிக்கையை எடுக்குமென நம்புகிறோம்.

இரண்டு வாரங்களுக்கு இரு தரப்புப் போர் நிறுத்தம் செய்வதென நீங்கள் தெரிவித்த யோசனையை நாம் ஆழமாகப் பரிசீலனை செய்தோம். உங்களது நல்லெண்ணச் சமிக்கையை வரவேற்கும் அதேவேளை, ஒரு நிலையான அமைதியை நிலைநாட்டுவதற்குத் தற்காலிகமான போர்நிறுத்தம் பயன்தராது என்பதே எமது கருத்தாகும். போர் நிறுத்தத்தை மிகவும் கண்டிப்பான முறையில் கண்காணிப்பதற்குத் தகுந்த நடைமுறைகள் வகுக்கப்பட்டாலேயே நிலையான அமைதியைப் பேணலாம். எனவே, போர் நிறுத்தம் பற்றி அதிகாரபூர்வமாக அறிவிப்பதற்கு முன்னர், பகை நடவடிக்கைகளை நிறுத்துவது பற்றியும் அதன் நடைமுறைகள் பற்றியும் பேச்சுவார்த்தை மேசையில் விரிவாக கலந்துரையாடுவது அவசியமென நினைக்கிறோம். எமது இந்த யோசனையை நீங்கள் சாதகமாகப் பரிசீலனை செய்வீர்களென நம்புகிறோம்.

அன்புடன்
உங்கள் நேர்மையுள்ள

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

ஒரு குறுகிய காலத்திற்கு மட்டும் கடைப்பிடிக்கும் தற்காலிகப் போர் நிறுத்தத்தைப் பிரபாகரன் விரும்பவில்லை. சர்வதேசக் கண்காணிப்புக் குழுவால் மேற்பார்வை செய்யப்படும், ஒரு நிலையான, நிரந்தரமான போர் நிறுத்தத்தையே அவர் விரும்பினார். இதன் காரணமாகவே, போர் நிறுத்த வழிமுறைகள் பற்றி விரிவான முறையில் பேச்சுக்களை நடத்த விரும்பினார்.

## ரத்வத்தையின் ஆத்திரமூட்டும் கடிதம்

1994 டிசம்பர் 7ஆம் திகதி, பிரபாகரனுக்கு கேணல் ரத்வத்தை எழுதிய கடிதத்தில், பகை நடவடிக்கைகளை நிறுத்துவதற்கும் (Cessation of Hostilities) போர் நிறுத்தம் (Cease-fire) செய்வதற்கும் மத்தியிலான வேறுபாட்டினை விளக்கினார். போர்நிறுத்தம் செய்வதற்கு முன்னர் பகை நடவடிக்கைகளை முடிவுக்கு கொண்டுவர வேண்டும் என்றும் பகை நிறுத்த நடவடிக்கையானது போர் நிறுத்தத்தைவிட நெகிழ்வானதும் இறுக்கமற்றதுமான நடைமுறையெனவும் விளக்கிக் காட்டினார். ரத்வத்தையின் இவ் விளக்கத்திலிருந்து எமக்கு ஒரு உண்மை புலனாகியது. அதாவது, சந்திரிகா அரசாங்கம் ஒரு நிலையான நிரந்தரமான போர் நிறுத்தம் செய்யத் தயாரில்லை என்பதும் ஒரு தற்காலிகமான பகை நடவடிக்கை நிறுத்தத்தையே விரும்புகிறது என்பதும் எமக்குப் புலனாகியது. பகை நடவடிக்கையை நிறுத்திக் கொள்வதை அரசியற் பேச்சுக்களுடன் தொடர்புபடுத்திய ரத்வத்தை, அரசியற் பேச்சுக்கள் உடனடியாக ஆரம்பிக்க வேண்டும் என்றும் வற்புறுத்தினார். ரத்வத்தை எழுதிய கடிதத்தின் பின்பகுதி மிகவும் நுட்பமாகத் தயாரிக்கப்பட்ட பிரச்சார ஆவணமாக அமையப் பெற்றிருந்தது. சந்திரிகா அம்மையாரைச் சமாதான தேவதையாகவும், துணிவுமிக்க தலைவராகவும் போற்றிப் பாராட்டி, 'சிங்கள மக்களின் தலைவர்களையும், தமக்கு எதிரான தமிழ்த் தலைவர்களையும் படிப்படியாகக் கொன்றொழிக்கும்' தீவிரவாத அமைப்பாக விடுதலைப் புலிகளைச் சாடினார் ரத்வத்தை. இப்படியான கொலைக் குற்றங்களைப் புரியும் ஒரு அமைப்புடன் 'மிகவும் இளக்காரமாக' நடந்து கொள்வதாகச் சந்திரிகா மீது குற்றம் சுமத்தப்படுவதாகவும் அவர் குறிப்பிட்டார். விடுதலைப் புலிகளுடன் மீளப் பேச்சுக்களை ஆரம்பிப்பதில் பாரிய இடர்களை அரசாங்கம் எதிர்கொண்டு நிற்பதாகத் தெரிவித்த ரத்வத்தை, எதிர்க்கட்சியின் இனவாத அழுத்தங்களை எல்லாம் எதிர்த்து நிற்கும் சிங்கள மக்களின் பெருந்தன்மையைப் புகழ்ந்துரைத்தார். பிரபாகரனுக்கு ரத்வத்தை எழுதிய நீண்ட கடிதம் வருமாறு:-

7 டிசம்பர் 1994

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

1994 டிசம்பர் 25ஆம் நாளன்று நீங்கள் எழுதிய கடிதத்திற்குப் பதிலாக இக் கடிதத்தை உங்களுக்கு எழுதுகிறேன்.

சமாதானப் பேச்சுக்களைத் தொடங்கி வைத்து அதனை முன்னெடுத்துச் செல்ல அரசாங்கம் மேற்கொண்ட முயற்சி தொடர்பாக நிகழ்ந்த சம்பவங்களை முதலில் நான் இங்கு நினைவு மீட்க விரும்புகிறேன்.

1994 ஆகஸ்ட் மாதம் எமது கட்சி ஆட்சிப் பொறுப்பேற்ற இரு வாரங்களுக்குள், கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா 28 பொருட்கள் மீதான தடையை நீக்க முடிவெடுத்தார். இதனையடுத்து, உங்களுடன் கடிதத் தொடர்பைத் தொடங்கி வைத்துக் கலந்துரையாடலை ஆரம்பித்தார். இருவருக்கும் மத்தியில் பல கடிதங்கள் பரிமாறப்பட்டன. இறுதியில் 1994 அக்டோபர் 13, 14ஆம் நாட்களில், அரசாங்கப் பிரதிநிதிகளைக் கொண்ட குழு யாழ்ப்பாணம் வருகை தந்தது. விடுதலைப் புலிகள் இயக்கமும், பொது மக்களுமாக அரச தூதுக் குழுவினருக்கு அளித்த நல்லெண்ணக் குதூகல வரவேற்பை நாம் பாராட்டினோம். வடக்கு கிழக்கில் போரினால் சிதைவுற்ற பகுதிகளைப் புனரமைத்துச் சீர்செய்வது, யாழ்ப்பாணத்திலிருந்து போகவும் வரவும் ஒரு பாதையைத் திறப்பது போன்ற விடயங்கள் முதற் கட்டச் சுற்றுப் பேச்சில் கலந்துரையாடப்பட்டதை நீங்கள் அறிவீர்கள்.

புனர்நிர்மாணம் செய்ய வேண்டிய, விசேட திட்ட விபரங்களை விடுதலைப் புலிகள் எமக்குக் கையளித்தனர். அரசாங்கம் மேற்கொள்ளவிருந்த புனரமைப்புத் திட்ட விபரங்களை இரண்டாவது சுற்றுப்

பேச்சின்போது, எமது பிரதிநிதிகள் விடுதலைப் புலிகளிடம் சமர்ப்பிக்க இருந்தனர். நீங்கள் சிபாரிசு செய்த திட்டங்களே இதில் அடங்கும்.

எமது பிரதிநிதிகள் யாழ்ப்பாணத்திற்கு வருகை தரவிருந்த ஆறு மணி நேரத்திற்கு முன்னராக எதிர்க் கட்சித் தலைவரும், எதிர்க் கட்சியின் ஜனாதிபதி வேட்பாளருமான திரு. காமினி திசநாயக்கா கொலை செய்யப்பட்டார். இதனால் பேச்சு நிகழ்வை ஒத்திப் போடக் கடமைப்பட்டோம். இதனையடுத்து, ஜனாதிபதி தேர்தலிலும் மற்றும் அரச நிர்வாக அலுவல்களிலும் நாம் கவனம் செலுத்த வேண்டி இருந்ததென்பதை நீங்கள் அறிவீர்கள்.

நவம்பர் 12ஆம் நாளன்று, சந்திரிகா குமாரதுங்கா ஜனாதிபதியாக உறுதிப் பிரமாணம் எடுத்துக் கொண்ட தினத்திலிருந்து ஒரு வார காலத்திற்குப் பகை நடவடிக்கைகளை நிறுத்திக் கொண்டதாக நாம் அறிந்தோம். இது பற்றி எமக்கு உத்தியோகபூர்வமாக அறியத் தரப்படாததால், நவம்பர் 16ஆம் நாளன்று சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கத்தைத் தொடர்பு கொண்டு விசாரித்தபோது அவர்கள் அதனை உறுதிப்படுத்தினார்கள். அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டாலேயன்றி, மற்றவர்கள் கூறும் வதந்திகளைக் கொண்டு அரசாங்கம் முடிவுகள் எடுப்பதில்லை என்பதை உங்களுக்கு மீண்டும் அறியத் தருகிறோம்.

நவம்பர் 19ஆம் நாள், உங்களுக்கு நாம் எழுதிய கடிதத்தில், ஆரம்பக் கட்டமாக இரண்டு வாரங்களுக்குப் பகை நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்வதென யோசனை கூறினோம். இதற்கு நீங்கள் எழுதிய பதிற் கடிதத்தில், நெடுங்கேணியில் உங்களது இராணுவத் தளபதி அமுதன் சிறீலங்கா இராணுவத்தால் கொல்லப்பட்ட துர்ப்பாக்கிய சம்பவம் குறித்து அரசாங்கம் விசாரணை நடத்திய பின்பு உங்களது முடிவை அறிவிப்பதாகச் சொன்னீர்கள். நவம்பர் 20ஆம் நாள் திகதியிடப்பட்ட உங்களது கடிதம் 22ஆம் நாளே எமக்கு கிடைத்தது. அன்றைய நாளே நெடுங்கேணிச் சம்பவம் குறித்து விசாரணை

நடத்துமாறு ஒரு இராணுவ நீதிமன்றத்தை நாம் நிறுவினோம்.

நவம்பர் 22ஆம் நாளன்று நீங்கள் அனுப்பிய கடிதத்தில் எமது யோசனைக்குச் சாதகமாகப் பதிலளித்த நீங்கள், போர் நடவடிக்கைகளை நிறுத்தும் விடயம் பற்றியும் அதன் செயல்முறைகள் பற்றியும் பேச்சுவார்த்தை மேசையில் விரிவாக விவாதிக்கப்பட வேண்டுமென்றும் அதன் பின்னரே அதிகாரபூர்வமான அறிவிப்பு வெளியிடப்பட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டீர்கள்.

பகை நடவடிக்கைகளை நிறுத்தும் செயல்முறைகள் பற்றி விவாதிப்பதற்கு நாம் தயாராக இருக்கிறோம். ஆனால் அதற்கு முன்பாக, சில அடிப்படை விடயங்கள் குறித்து உங்களது கருத்துக்களை அறிந்து கொள்ள விரும்புகிறோம். இவற்றைத் தெரிந்து கொள்ளாமல் பகை நடவடிக்கைகள் பற்றி விரிவாகக் கலந்துரையாடுவதில் அர்த்தமில்லை. நாம் தெரிந்து கொள்ள விரும்பும் விடயங்கள் வருமாறு:

1) பகை நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்வதற்கு விடுதலைப் புலிகள் இயக்கம் கொள்கையளவில் இணங்குகிறதா?

2) நெருக்கடியை முடிவுக்குக் கொண்டுவரவும், போருக்கு காரணமாயிருந்த பிரச்சினைகளுக்கு அரசியல் தீர்வு காணவும், அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு முன்பாக பகை நடவடிக்கைகள் நிறுத்தப்பட வேண்டும் எனவே நாம் கருதுகிறோம்.

3) பகை நடவடிக்கைகளை நிறுத்துவதைப் போர்நிறுத்தத்துடன் இணைத்துக் குழப்பக்கூடாது. போர் நிறுத்தத்திற்கு முற்செயலாகவே பகை நடவடிக்கை நிறுத்தம் ஏற்பட வேண்டும்.

போர் நிறுத்தத்தைவிட பகை நடவடிக்கை நிறுத்தம் நெகிழ்வானது, இறுக்கமான கட்டுப்பாடற்றது.

பகை நடவடிக்கை நிறுத்தத்தின்போது, இரு தரப்பும் ஆயுதம் தரித்தவாறு, உசாராகத் தத்தம்

நிலைகளில் செயற்படாது முடங்கி இருக்க வேண்டும்.

இரு தரப்பும் இணங்கும் பட்சத்தில் பகை நடவடிக்கை நிறுத்தத்தைக் கண்காணிப்பதற்கு நடுநிலையான பார்வையாளர்ளை அழைக்கலாம். நாம் மேலே குறிப்பிட்ட விடயங்களுக்கு இணக்கப்பாடு கண்டதன் பின்னர் பகை நடவடிக்கை நிறுத்தத்தைச் செம்மையாகக் கண்காணிப்பது பற்றிப் பேச்சுவார்த்தை மேசையில் கலந்துரையாடலாம்.

4) சமாதானப் பேச்சுக்கள் நீடிக்கும் கால கட்டத்தில் இலங்கைத் தீவு அடங்கிலுமாக அரசியல் படுகொலைகள் செய்வதை தமிழீழ விடுதலைப் புலிகள் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

5) அடுத்த இரண்டு வார காலத்தினுள் பகை நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்வது குறித்து நாம் ஒரு இணக்கப்பாட்டிற்கு வரலாமென நம்புகிறோம். அதன்பின் உண்மையான சமாதானப் பேச்சுக்களை ஆரம்பிக்கலாம்.

6) யாழ்ப்பாணத்தில் உங்களுடன் பேசியதற்கு இணங்க புனரமைப்பு வேலைகள் சிலவற்றைத் தொடங்க நாம் ஆயத்தமாக இருக்கிறோம். இந்த வார இறுதியில் இது சம்பந்தமான விரிவான அறிக்கை ஒன்றை அனுப்பி வைப்போம். இது பற்றிய உங்களது பதிலை எதிர்பார்க்கிறோம்.

இக் கடித முடிவுரையாக நான் சொல்ல விரும்புவது என்னவென்றால், எமது அரசாங்கம் சமாதான வழிமுறையை ஆரம்பித்த காரணத்தாலேயே சிங்களத் தலைவர்களைக் கொன்றொழிக்கும் வாய்ப்பு விடுதலைப் புலிகளுக்குக் கிட்டியதாக ஐக்கிய தேசியக் கட்சியிலுள்ள சில சக்திகளும் மற்றும் எமது எதிராளிகளும் பிரச்சாரம் செய்து இனவெறியைத் தூண்டிவிட பகீரத முயற்சி எடுத்தனர். முழு நாட்டுக்கும் முன்பாகவே, எமது தலைவி திருமதி. குமாரதுங்காவின் தனிப்பட்ட நம்பகத்தன்மை

மீது கேள்விக் குறி எழுப்பப்பட்டது. சிங்கள மக்களின் தலைவர்களையும் தமக்கு எதிரான தமிழ்த் தலைவர்களையும் படிப்படியாகக் கொன்றொழிப்பதற்குப் பொறுப்பான ஒரு அமைப்புடன் திருமதி. சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா மிகவும் இளக்காரமாக நடந்து கொள்வதாக ஐக்கிய தேசியக் கட்சியின் பிரச்சார மேடைகளில் குற்றம் சுமத்தப்பட்டது. விடுதலைப் புலிகளுடன் பேசுவதால் மக்கள் கூட்டணி அரசாங்கம் சிங்கள மக்களுக்குத் துரோகம் இழைப்பதாகவும் வசைபாடப்பட்டது. சமாதானப் பேச்சுக்களைத் தடுத்து நிறுத்திவிட மேற்கொள்ளப்பட்ட சகல அழுத்தங்களுக்கும் முகம் கொடுத்த திறமை எமது அரசாங்கத்தையே சாரும். எமது நாட்டிற்கு உகந்த சமாதானம் பற்றி எமக்கு ஒரு தெளிவான, உறுதியான தரிசனம் இருக்கிறது. எமது மக்கள் எல்லோரும் சுதந்திரமாக, கௌரவமாக, சமத்துவமாக வாழக் கூடிய ஒரு தேசத்தை கட்டி எழுப்ப வேண்டும் என்ற ஆழமான அபிலாசையும் எமக்குண்டு. அத்தோடு இந்த இலட்சியத்தை, எல்லாவித இடர்களையும் எதிர்கொண்டு நேர்மையுடனும் துணிவுடனும் நடைமுறைப்படுத்தும் உறுதியும் எமக்குண்டு.

சமரசப் பேச்சுக்கள் தற்காலிகமாக இடைநிறுத்தம் செய்யப்பட்டுள்ளன என்றும், சமாதான வழிமுறை மீளத் தொடரும் எனவும் நாம் தொடர்ந்து கூறி வருவதால், அரசியல் ரீதியாகவும் தனிப்பட்ட முறையிலும் பெரும் ஆபத்துக்களை நாம் எதிர்கொள்ள வேண்டி இருக்கிறது. இனவாத அழுத்தங்களுக்கு அடிபணியாது எதிர்த்து நின்ற சிங்கள மக்களின் பெருந்தன்மையை நாம் பாராட்ட வேண்டும். இனவெறிக்கு எதிராகவும் சமாதானத்திற்குச் சாதகமாகவும் எமது அரசுக்கும், எமது ஜனாதிபதிக்கும் எமது மக்கள் ஏகோபித்த ஆணையை வழங்கியிருக்கிறார்கள்.

வடக்கிலும் கிழக்கிலுமுள்ள பிரச்சினைகளைத் தீர்த்து வைக்குமாறு, சிறீலங்காவிலுள்ள தமிழர்களும் முஸ்லிம்களும் சிங்கள மக்களுடன் ஒன்று சேர்ந்து ஒரே குரலில் எமது அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டதுடன் எம்மீது நம்பிக்கையும்

வைத்திருக்கிறார்கள்.

பேச்சுக்கள் இடைநிறுத்தப்பட்ட மூன்று வாரத்திற்குள், அக்டோபர் 23ஆம் நாள் இரவு 53 பேர் படுகொலை செய்யப்பட்டதால் எழுந்த கொந்தளிப்பான சூழ்நிலையின் மத்தியில் உங்களுடனும் விடுதலைப் புலிகளுடனும் பேச்சுக்களை ஆரம்பிக்க நாம் துணிந்தோம். இதனால் எமக்கு ஏற்படக் கூடிய பாரதூரமான விளைவுகள் பற்றியும் நாம் நன்கறிவோம். சமாதான இலட்சியத்தில் எமக்குள்ள உறுதிப்பாட்டையே இது எடுத்துக் காட்டுகிறது. நீங்களும் இதே உறுதிப்பாட்டைக் கொண்டிருப்பீர்களென நாம் நம்புகிறோம். நாம் ஒன்று சேர்ந்து இந்த அவலமான யுத்தத்திற்கு முடிவு கட்டி, எமது மக்களுக்குச் சமாதானத்தையும் வளமான வாழ்வையும் பெற்றுக் கொடுக்க முடியுமென நம்புகிறோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

கேணல். அனுருத்த ரத்வத்தை
உதவிப் பாதுகாப்பு அமைச்சர்

கேணல் ரத்வத்தையின் கடிதம் வக்கிரமானதாக, வசைப் பாங்கானதாக, ஆத்திரமூட்டுவதாக அமையப் பெற்றதால் பிரபாகரன் கடும் சினம் கொண்டார். காரசாரமான, உறைப்பான கடிதம் ஒன்றை ரத்வத்தைக்கு எழுதவேண்டுமெனப் பிரபாகரன் விரும்பினார். அறுபதாயிரம் அப்பாவித் தமிழர்களைக் கொன்று குவித்து இனக்கொலை புரிந்ததாக சிங்களத் தலைவர்கள் மீது குற்றம் சுமத்திக் கடுமையான கடிதம் ஒன்றை ரத்வத்தைக்கு வரையவேண்டுமெனப் பிரபாகரன் வாதாடினார். இறந்துபோன சிங்களத் தலைவர்களும் உயிரோடு இருப்பவர்களும் தமிழினப் படுகொலைக்குக் காரணமாக இருந்துள்ளனர் என்றும் போர் என்ற போர்வையில் இதனையே இப்பொழுதும் செய்துவருவதாகவும் இந்த அரசியல் உண்மையை ரத்வத்தைக்குப் புரிய வைக்க வேண்டும் என்றும் வற்புறுத்தினார். உணர்ச்சி வசப்படாமல், அரசியல் சாணக்கியத்துடன் இவ் விவகாரத்தை அணுக வேண்டுமென நான் கூறிய ஆலோசனையைத் தலைவர் ஏற்றுக் கொண்டார்.

ரத்வத்தையின் கடிதத்திலிருந்து விடுதலைப் புலிகளின் தலைமைக்கும் ஒரு விடயம் தெட்டத் தெளிவாகப் புலனாகியது. அதாவது, குறிப்பிட்ட பிரச்சினைகளில் சந்திரிகாவின் அரசு இறுக்கமான, நெகிழ்வற்ற போக்கைக் கடைப்பிடிக்கத் தீர்மானித்துள்ளது என்பது தெரிய வந்தது. ஒரு நிலையான நிரந்தரமான போர் நிறுத்தத்தை அரசாங்கம் விரும்பவில்லை. மாறாக, தற்காலிக பகை நடவடிக்கை நிறுத்தத்தையே விரும்பியது. விடுதலைப் புலிகள் யோசனை தெரிவித்தது போன்று, பேச்சுக்களைப் படிப்படியாக, கட்டம் கட்டமாக முன் நகர்த்திச் செல்வதை அரசாங்கம் விரும்பவில்லை. இன்னொரு விதத்தில் சொல்வதாயின், விடுதலைப் புலிகள் விரும்பியது போல, தமிழ் மக்களின் அவசர, அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முதலில் தீர்வு காண்பதில் அரசாங்கம் நாட்டம் கொள்ளவில்லை. மாறாக, அரசியல் பிரச்சினைகள் பற்றி உடன் பேச்சுக்களை ஆரம்பிக்கவே விரும்பியது. பொருளாதாரத் தடைகளை நீக்குவதிலும், யாழ்ப்பாணத்திலிருந்து வன்னிக்கு ஒரு தரைப் பாதையைத் திறப்பதிலும், மீன்பிடித் தடையை நீக்குவதிலும் அரசாங்கம் தயக்கம் காட்டுவதிலிருந்து ஒரு உண்மை புலனாகியது. அதாவது, புதிய அரசாங்கத்தில் இராணுவவாதம் மேலோங்கியுள்ளது என்பது வெளிப்படையாகவே தெரிந்தது. தமிழ்க் குடிமக்களின் வாழ்வியல் அவலங்களை அசட்டை செய்து, இராணுவக் கேந்திர நலன்களுக்கே சந்திரிகாவின் ஆட்சிப்பீடம் முக்கியத்துவம் கொடுத்தது. அரசாங்கத்தின் அணுகுமுறையிலும் கொள்கை நிலைப்பாட்டிலும் ஏமாற்றமும் விரக்தியும் அடைந்த விடுதலைப் புலிகள், தமது நிலைப்பாட்டிலும் இறுக்கமான, கடும்போக்கைக் கடைப்பிடிக்க முடிவெடுத்தனர். 1994 டிசம்பர் 8ஆம் நாளன்று தலைவர் பிரபாகரன் கீழ்க்கண்ட கடிதத்தை ரத்வத்தைக்கு அனுப்பினார்.

தலைமைச் செயலகம்<br>
தமிழீழ விடுதலைப் புலிகள்<br>
யாழ்ப்பாணம்<br>
08.12.1994

கேணல் அனுருத்த ரத்வத்தை<br>
நீர்ப்பாசன, மின்சக்தி அமைச்சர்<br>
உதவிப் பாதுகாப்பு அமைச்சர்<br>
சிறீலங்கா

அன்பின் கேணல் ரத்வத்தை அவர்கட்கு,

1994 டிசம்பர் 7ஆம் நாள் திகதியிடப்பட்ட உங்களது கடிதம் கிடைக்கப்பெற்றது. நன்றி.

சமாதான நடைமுறை சம்பந்தமாகவும், பேச்சுவார்த்தை மற்றும் பகை நடவடிக்கைகளை நிறுத்துவது பற்றியும் உங்களது அரசாங்கம் கொண்டுள்ள நிலைப்பாட்டை உங்கள் கடிதம் விபரமாக விளக்குகிறது.

சமாதானப் பேச்சுக்களுக்குப் பங்கம் விளைவிக்கும் வகையில் இனவாதச் சக்திகளால் எழுப்பப்பட்ட சவால்களுக்கு உங்களது அரசாங்கம் முகம் கொடுத்து எதிர்த்து நின்ற பாங்கினை நாம் பாராட்டுகிறோம். விடுதலைப் புலிகளுக்கு எதிராக விசமப் பிரச்சாரம் செய்யப்பட்டபோதும், சமாதானத்தை முன்னெடுக்கவும், சமாதான வழியில் இனப் பிரச்சினைக்குத் தீர்வு காணவும் பரந்துபட்ட சிங்கள மக்கள் உங்களது அரசாங்கத்திற்கு ஏகோபித்த ஆணையை வழங்கியிருப்பது எமக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.

எமது மக்கள் எதிர்கொண்டு நிற்கும் அவசரமான, உடனடியான வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முதற்கட்டப் பேச்சுக்களில் முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும் என்பதை விடுதலைப் புலிகள் இயக்கம் ஆரம்பத்திலிருந்தே வலியுறுத்தி வந்ததை நீங்கள் அறிவீர்கள். இந்தப் பிரச்சினைகள் என்னவென்பதை எமது பிரதிநிதிகள் முதற்கட்டச் சுற்றுப் பேச்சில் தெளிவாகச் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். முந்திய அரசாங்கம் முன்னெடுத்த இராணுவவாத அணுகுமுறை காரணமாகவே பெரும்பாலான இப் பிரச்சினைகள் தோற்றம் கொண்டன. 'உங்களது மக்கள் நாளாந்தம் அனுபவித்து வரும் துன்ப துயரங்களுக்குத் தீர்வு காணப்படும்' என அரச பிரதிநிதிகள் உறுதியளித்தபோதும் எமது மக்களின் குறைகளைத் தீர்க்க எவ்வித நடவடிக்கைகளும் இதுவரை எடுக்கவில்லை.

எமது மக்களின் அவசரமான வாழ்க்கைப் பிரச்சினைகளைச் 'சில புனர்நிர்மாண சீரமைப்பு

வேலைகளுக்குள்' முடக்கிவிட முடியாது. போரினால் சீரழிந்த பகுதிகளில் மிகக் கோரமான வாழ்க்கைப் பிரச்சினைகள் உள்ளன. இவற்றிற்குத் தீர்வு காணாமல் சாதாரண மக்களின் வாழ்வில் உண்மையான சமாதானச் சூழ்நிலையும் இயல்பு நிலையையும் தோன்றப் போவதில்லை.

எமது மக்கள் எதிர்கொள்ளும் அவசரப் பிரச்சினைகள் என்னவென்பதை உங்களது அரசாங்கம் நன்கறியும். இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் முழுமையான அதிகாரமும் உங்களிடம் உண்டு. ஆனால் இது குறித்து எவ்வித ஆக்கபூர்வமான நடவடிக்கைகளையும் எடுப்பதற்குத் தயக்கம் காட்டுகிறீர்கள். இவ்விடயத்தில் உங்களது அரசாங்கம் எதற்காகத் தயக்கம் காட்டுகிறது என்பதையும் எம்மால் ஊகிக்க முடிகிறது. உங்களது இராணுவத்தின் ஒட்டுமொத்தமான மூலோபாயத் திட்டத்திற்கு முரணான வகையில் நடவடிக்கைகளை எடுப்பதற்கு உங்களது அரசு விரும்பவில்லை. குடிமக்களின் வாழ்க்கைப் பிரச்சினைக்கு மேலாக இராணுவ நலன்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் உங்களது அணுகு முறையால் தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் அவசர வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதில் இடையூறுகள் ஏற்படும். பொருளாதாரத் தடைகளை முழுமையாக நீக்குவதிலும், சங்குப்பிட்டிப் பாதையைத் திறப்பதிலும், மீன்பிடி வலயத் தடையை நீக்குவதிலும் காட்டப்படும் தயக்கம் இதனைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

வெகுசீக்கிரத்தில், இரண்டாம் கட்டச் சுற்றுப் பேச்சு ஆரம்பமாகும் பொழுது, எமது பிரதிநிதிகள் இவ் விவகாரத்தை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள இருப்பதால், இப் பிரச்சினைகளை நான் இங்கு விரிவுபடுத்த விரும்பவில்லை. எமது மக்களின் நாளாந்த வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு நாம் அதிமுக்கியத்துவம் கொடுக்கிறோம் என்பதை நான் இங்கு வலியுறுத்த விரும்புகிறேன். தமிழரின் தேசிய நெருக்கடிக்கு அடிப்படையாகவுள்ள அரசியல் சிக்கல்கள் பற்றிப் பேசுவதற்கு முன்னர், எமது

மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகள் அவசரமாகத் தீர்த்து வைக்கப்பட வேண்டும்.

உங்களது கடிதத்தில் சில குறிப்பிட்ட பிரச்சினைகளுக்கு நீங்கள் விளக்கம் கேட்டுள்ளீர்கள். நேரடிப் பேச்சுக்களின் போதே இவற்றைத் தெளிவுபடுத்துவது பொருத்தமாக இருக்கும். போர் நிறுத்தம் எனப்படும் பொழுது, பகை நடவடிக்கைகளை முற்றாக நிறுத்திக் கொள்வது என்ற அர்த்தத்திலேயே முன்பு கடிதங்களை எழுதினேன். ஆனால் ஒரு நிலையான போர்நிறுத்தத்திற்கு முன்னராகப் பகை நடவடிக்கைகள் நிறுத்தப்பட வேண்டுமென்றும், பகை நடவடிக்கைகளின் நிறுத்தம் ஈற்றில் போர் நிறுத்தமாகப் பரிமாணம் பெறுமென்றும் நீங்கள் ஒரு விளக்கம் தந்துள்ளீர்கள். இதுபற்றிய கோட்பாட்டு ரீதியான விவாதத்தைத் தவிர்த்து, நீங்கள் முன்வைக்கும் வேறுபாட்டினை ஏற்றுக் கொள்வதென நாம் முடிவெடுத்துள்ளோம்.

பகை நடவடிக்கைகள் நிறுத்தப்பட வேண்டும் என்பதை விடுதலைப் புலிகள் இயக்கம் கொள்கையளவில் ஏற்றுக் கொள்கிறது. உங்களது யோசனைக்கு இணங்க, முதற் கட்டமாக இரண்டு வார காலத்திற்கு பகை நடவடிக்கைகளை நிறுத்துவதாக அரசாங்கம் அதிகாரபூர்வமாகப் பிரகடனம் செய்தால், விடுதலைப் புலிகளும் அதற்கு இசைவாக அமைதி பேணுவார்கள். பகை நடவடிக்கை நிறுத்தத்தைச் செயற்படுத்தும் வழிமுறைகள் பற்றிப் பேச்சுவார்த்தை மேசையில் கலந்துரையாடி முடிவுகள் எடுக்கப்பட வேண்டும். சமாதானப் பேச்சுகளுக்கு முன்னதாக அமைதி பேணப்பட வேண்டும் என்பதே எமது நிலைப்பாடாகும்.

நாம் சமாதானத்தில் உறுதிபூண்டு நிற்கிறோம். ஒரு நிரந்தரமான அமைதிக்கும், இன நெருக்கடியின் தீர்வுக்கும் சமாதானப் பேச்சுக்கள் வழிகோலுமென நாம் மனப்பூர்வமாக நம்புகிறோம்.

நன்றியுடன், உங்கள் நேர்மையுள்ள

வே.பிரபாகரன்,

தலைவர், தமிழீழ விடுதலைப் புலிகள்

1994, டிசம்பர் 13ஆம் நாள், பிரபாகரனுக்கு ரத்வத்தை எழுதிய கடிதம் சுருக்கமானதாக, இணக்கப்பாடானதாக அமையப்பெற்றிருந்தது. தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்படுமென ரத்வத்தை உறுதியளித்தார். 1995 ஜனவரி 1ஆம் நாளிலிருந்து இரண்டு வாரங்களுக்குப் பகை நடவடிக்கைகளை நிறுத்த அரசாங்கம் விரும்புவதாகவும் அவர் தெரிவித்தார். இரண்டாம் கட்டச் சுற்றுப் பேச்சுக்களில் கலந்து கொள்ள, டிசம்பர் 21, 22ஆம் நாட்களில் அரச பிரதிநிதிகள் யாழ்ப்பாணம் வருவார்களென்றும் அவர் அறிவித்தார். ரத்வத்தையின் கடிதத்தையும் அதற்குப் பிரபாகரன் அளித்த பதிலையும் கீழே பிரசுரிக்கிறோம்:-

13 டிசம்பர் 1994

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

1994 டிசம்பர் 8ஆம் நாள் திகதியிடப்பட்ட கடிதத்திற்கு நன்றி.

சமாதானம் குறித்தும், இனப் பிரச்சினை இராணுவ மயமாக்கப்பட்டது குறித்தும், தமிழ் மக்களின் நல்வாழ்வு குறித்தும் நீங்கள் தெரிவித்த கருத்துக்களை மிகவும் அக்கறையுடன் கருத்துக்கு எடுத்தோம். தமிழ் மக்களின் நாளாந்த வாழ்க்கைப் பிரச்சினைகளில் எமக்கு ஆழமான அக்கறை உண்டென்பதையும், உங்களது ஒத்துழைப்புடன் அவற்றைத் தீர்த்து வைக்க எம்மாலான முயற்சிகளை எடுப்போம் என்றும் உங்களுக்கு உறுதியளிக்க விரும்புகிறேன். இது பற்றிய முழு விபரங்களையும் பேச்சுவார்த்தை மேசையில் விவாதித்துக் கொள்ளலாம்.

பகை நடவடிக்கைகளை நிறுத்துவதாக அரசாங்கம் அறிவித்தால் நீங்களும் பதிலுக்கு அமைதி பேணுவீர்களென தெரிவித்திருப்பது எமக்கு மகிழ்வைத் தருகிறது.

1995 ஜனவரி 1ஆம் நாளிலிருந்து, முதற் கட்டமாக,

இரண்டு வாரங்களுக்குப் பகை நடவடிக்கைகளை நிறுத்துவதாக நாம் அறிவிக்க விரும்புகிறோம். இந்த அறிவிப்பை ஊடகங்களுக்குத் தெரிவிக்கும் போது உங்களுக்கும் எழுத்து மூலம் அறிவிப்போம். பதிலுக்கு நீங்களும் பகை நடவடிக்கைகளை நிறுத்துவதாக பகிரங்கமாக அறிவிப்பதுடன் எமக்கும் எழுத்தில் அறியத் தரவும்.

மேற்படி எமது யோசனைக்கு நீங்கள் இணங்கும் பட்சத்தில், போர்நிறுத்த நடைமுறைகளைச் செயற்படுத்துவது குறித்துக் கலந்துரையாடுவதற்கு அரச தூதுக் குழுவை யாழ்ப்பாணம் அனுப்பி வைக்க ஆயத்தமாக இருக்கிறோம்.

டிசம்பர் 21 புதன்கிழமை அல்லது டிசம்பர் 22 வியாழக்கிழமை எமது தூதுக் குழு யாழ்ப்பாணம் வருகை தரவுள்ளது. சமாதானப் பேச்சுக்கு முன்னர் 'அமைதி நிலை' பேணப்பட வேண்டுமென நீங்கள் உங்களது கடிதத்தில் எழுதியிருந்தீர்கள். அமைதி நிலை என நீங்கள் குறிப்பிடுவது பகை நடவடிக்கையின் நிறுத்தத்தையே என நாம் கருதுகிறோம். பகை நடவடிக்கைகளைத் தொடர்ந்தபடி அரசாங்கம் பேச்சுக்களை நடத்த முடியாது என்பதில் எமக்குக் கருத்து வேறுபாடு கிடையாது.

சமாதானத்தில் நீங்கள் உறுதி பூண்டு நிற்பதை நாம் பாராட்டுகிறோம். சமாதானத்தில் எமக்குள்ள உறுதிப்பாட்டை நாம் தொடர்ச்சியாக வலியுறுத்தி வருகிறோம் என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள்.

சமீபமாக எமது பேச்சுக்களில் ஏற்பட்ட முன்னேற்றம்பற்றி நாட்டு மக்களுக்கு அறிவிக்கும் காலம் கனிந்து விட்டது என நாம் நம்புகிறோம். இந்தக் கடிதம் உங்களுக்குக் கிடைக்கப் பெற்றதும் சில முக்கியமான தகவல்களை நாம் பத்திரிகைகளுக்கு வெளியிடலாமெனக் கருதுகிறோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

கேணல் அனுருத்த ரத்வத்தை
உதவிப் பாதுகாப்பு அமைச்சர்
நீர்ப்பாசன மின்சக்தி அமைச்சர்

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
15 டிசம்பர் 1994

கேணல் அனுருத்த ரத்வத்தை
உதவிப் பாதுகாப்பு அமைச்சர்
நீர்ப்பாசன மின்சக்தி அமைச்சர்
சிறீலங்கா

அன்பின் கேணல் ரத்வத்தை அவர்கட்கு,

1994 டிசம்பர் 13ஆம் நாள் திகதியிடப்பட்ட கடிதம் பெற்றுக் கொண்டேன். நன்றி.

தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் அவசரப் பிரச்சினைகளுக்கு முன்னுரிமை கொடுத்துத் தீர்த்து வைப்பதாக நீங்கள் உறுதியளித்திருப்பது எமக்கு ஊக்கத்தைத் தருகிறது. இயல்பு நிலையையும் சமாதானச் சூழ்நிலையையும் உருவாக்க இது அவசியமானது. ஜனவரி முதற் திகதியிலிருந்து, முதற் கட்டமாக இரு வாரங்களுக்குப் பகை நடவடிக்கைகளை நிறுத்தி வைக்க முடிவு செய்திருப்பதை நாம் வரவேற்கிறோம். நீங்கள் இதனை அதிகாரபூர்வமாகப் பகிரங்கப்படுத்தி, எமக்கு எழுத்தில் தெரிவிப்பதை அடுத்து நாமும் பதிலுக்கு இக் கால கட்டத்தில் அமைதி பேணுவோம்.

பகை நடவடிக்கைகளை நிறுத்துவதென அறிவிப்பதற்கு முன்னராக, போர் நிறுத்த வழிமுறைகளைச் செயற்படுத்துவது குறித்து இரு தரப்பும் விபரமாகப் பேசுவதன் அவசியத்தை நீங்கள் அறிந்திருப்பீர்கள். இது குறித்துப் பேச அரச பிரதிநிதிகளை நீங்கள் யாழ்ப்பாணத்திற்கு அனுப்பி வைப்பதையிட்டு மகிழ்ச்சி. டிசம்பர் 21 அல்லது 22ஆம் நாளில் வசதிக்கேற்ப அரச பிரதிநிதிகள் யாழ்ப்பாணம்

வரலாம். அவர்கள் வரும் நாட்களையும் பெயர் விபரங்களையும் தயவு கூர்ந்து உறுதிப்படுத்தவும்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

1994 டிசம்பர் 19ஆம் திகதி, கேணல் ரத்வத்தை பிரபாகரனுக்கு ஒரு கடிதம் அனுப்பி வைத்தார். பகை நடவடிக்கை நிறுத்தப்பட்டதும் உடனடியாகச் சமாதானப் பேச்சுக்கள் ஆரம்பிக்க வேண்டுமென அக் கடிதத்தில் வலியுறுத்தியிருந்தார். விடுதலைப் புலிகள் இயக்கத்தை அரசியற் பேச்சுவார்த்தைகளில் பங்குகொள்ளச் செய்வதற்கு வழங்கப்படும் ஒரு நல்லெண்ணச் சமிக்கையாக அல்லது ஒரு சலுகையாகவே அரசாங்கம் பகை நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்வது என்பதை ரத்வத்தையின் கடிதம் சுட்டிக் காட்டியது. அதாவது, போர் நிறுத்த நடவடிக்கைகளை நிறுத்துவதை அரசியற் பேச்சுக்களுடன் இணைபிரியாத அங்கமாகத் தொடர்புபடுத்தச் சந்திரிகா அரசாங்கம் முனைகிறது என்பது இப்பொழுது தெளிவாகியது. ஆகவே, போர் நடவடிக்கைகளை நிறுத்திக் கொண்டதும் அரசியற் பேச்சுக்களைத் தொடங்குவதற்கு விடுதலைப் புலிகள் தயாராக இருக்கிறார்களா என்பதை உறுதிப்படுத்துமாறும் கேணல் ரத்வத்தை பிரபாகரனை கேட்டுக் கொண்டார். ரத்வத்தையின் கடிதம் வருமாறு:-

19 டிசம்பர் 1994

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

1994 டிசம்பர் 16ஆம் நாள் திகதியிட்டு நீங்கள் அனுப்பிய கடிதத்திற்கும் அரச பிரதிநிதிகளை நீங்கள் யாழ்ப்பாணம் வரவழைத்ததற்கும் நன்றி.

1994 டிசம்பர் 13ஆம் நாளன்று நான் உங்களுக்கு

அனுப்பிய கடிதத்தில், போர் நிறுத்தத்தை நடைமுறைப்படுத்துவது சம்பந்தமாகக் கதைப்பதற்கு அரச பிரதிநிதிகள் குழுவை யாழ்ப்பாணம் அனுப்புவதற்கு நாம் தயாரெனத் தெரிவித்திருந்தேன்.

1994 டிசம்பர் 7ஆம் நாளன்று நான் எழுதிய கடிதத்தில் பல முக்கிய விடயங்கள் குறித்து உங்களது நிலைப்பாடு பற்றிக் கேட்டிருந்தேன். ஒரு சிலவற்றிற்கு மட்டும் பதில் தந்துள்ளீர்கள். இரண்டாவதாகவும் ஐந்தாவதாகவும் நான் குறிப்பிட்ட விடயங்களுக்கு நீங்கள் இன்னும் பதில் தரவில்லை. சமாதானப் பேச்சுக்களுக்கு முன்னோடியாகவே பகை நடவடிக்கைகள் நிறுத்தப்பட வேண்டுமென்பதை இப் பகுதிகளில் நாம் வலியுறுத்தியிருந்தோம். பகை நடவடிக்கைகளின் நிறுத்தம் அறிவிக்கப்பட்ட உடனேயே பேச்சுக்கள் ஆரம்பிக்கப்பட வேண்டும் என்பதையும் நான் சுட்டிக் காட்டியிருந்தேன். இவ் விடயத்தில் உங்களது நிலைப்பாட்டை அறிந்து கொள்ளாமல் போர் நிறுத்த நடைமுறைகள் பற்றிப் பேசுவதில் அர்த்தமில்லை என்பதையும் எனது கடிதத்தின் இரண்டாம் பக்கத்தில் வலியுறுத்தியிருந்தேன்.

பகை நடவடிக்கை நிறுத்தம் அறிவிக்கப்பட்ட உடனேயே, ஆயுதப் போராட்டத்திற்கு முடிவு கட்டி, அரசியற் தீர்வு காணும் இலக்கில் சமாதானப் பேச்சுக்களைத் தொடங்க நீங்கள் தயாராக இருப்பதாக உத்தரவாதம் தருவீர்களானால் நன்றியாக இருக்கும். இவ் விடயம் குறித்து உங்களது பதிலை அறிந்ததும் அரச பிரதிநிதிகள் குழு, டிசம்பர் 22ஆம் நாள் அல்லது டிசம்பர் 27இற்கும் 30இற்கும் இடைப்பட்ட நாட்களில் யாழ்ப்பாணம் வருகை தரும்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

அனுருத்த ரத்வத்தை
நீர்ப்பாசன மின்சக்தி அமைச்சர்
உதவிப் பாதுகாப்பு அமைச்சர்

இடைக்காலப் போர் நிறுத்தத்துடன் அரசியற் பேச்சுவார்த்தைகளைத் தொடர்புபடுத்தும் அரசாங்கத்தின் தந்திரோபாயம் தலைவர் பிரபாகரனுக்கு அதிருப்தியையும் ஏமாற்றத்தையும் கொடுத்தது. கேணல் ரத்வத்தைக்கு எழுதிய காரசாரமான கடிதத்தில் விடுதலைப் புலிகளின் நிலைப்பாட்டைப் பிரபாகரன் இறுக்கமாக வலியுறுத்தினார். 'எமது மக்களுக்கு எதிராக ஏவிவிட்ட இராணுவத் தாக்குதல்களின் நேரடி விளைவாக' எழுந்திருக்கும் அவசர வாழ்வியல் பிரச்சினைகளுக்கு ஆரம்ப கட்டப் பேச்சுக்களில் தீர்வு காணப்பட வேண்டும் எனப் பிரபாகரன் மீண்டும் வலியுறுத்தினார். அரச பிரதிநிதிகளின் தலைவர் திரு. பலபத்தபெண்டியினதும் கேணல். ரத்வத்தையினதும் மேற்கோள்களை எடுத்துக் காட்டிய அவர், எமது மக்களின் மிகவும் அவசரமான, அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளைக் கைவிட்டுப் பேச்சுக்களை வேறுதிசைக்கு மாற்றிச் செல்ல முனைவதாகவும் அரசாங்கம் மீது பிரபாகரன் குற்றம் சுமத்தினார். புதிய அரசாங்கம் தமது வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணுமென தமிழ் மக்களிடையே பரவலாக நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் நிலவுவதாகச் சுட்டிக் காட்டிய அவர், இப் பிரச்சினைகளை அரசாங்கம் ஓரம் கட்ட முயற்சித்தால் அதனை ஒரு நம்பிக்கைத் துரோகச் செயலாக தமிழ் மக்கள் கருதுவார்கள் எனவும் எச்சரித்தார். பிரபாகரனது கடிதத்தைக் கீழே பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
21 டிசம்பர் 1994

கேணல் அனுருத்த ரத்வத்தை
உதவிப் பாதுகாப்பு அமைச்சர்
நீர்ப்பாசன, மின்சக்தி அமைச்சர்
சிறீலங்கா

அன்பின் கேணல் ரத்வத்தை அவர்கட்கு,

1994 டிசம்பர் 19ஆம் நாள் திகதியிடப்பட்ட உங்களது கடிதம் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக மறுநாள் எமக்குக் கிடைத்தது. மிகவும் நன்றி.

1994 டிசம்பர் 8ஆம் நாளும் 15ஆம் நாளும் நாம் எழுதிய கடிதங்களில் நீங்கள் வினவிய விடயங்களுக்குப் பதிலளித்தோம். பகை நடவடிக்கைகளை நிறுத்துவது பற்றி நீங்கள் தெரிவித்த யோசனைக்கு நாம் சாதகமான முறையில் பதிலளித்ததுடன், போரை நிறுத்துவதற்கு முன்னராக பகை நடவடிக்கைகளின் நிறுத்தத்தைச் செயற்படுத்துவதன் வழிமுறைகள் பற்றியும் பேசுவதற்கு இணங்கினோம். பேச்சுக்கள் ஆரம்பிப்பதற்கு முன்னர் அமைதியான சூழ்நிலையை உருவாக்குவதன் அவசியத்தையும் நீங்கள் ஏற்றுக் கொண்டீர்கள். எமது நிலைப்பாட்டை ஏற்றுக் கொண்ட நீங்கள், டிசம்பர் 13ஆம் நாள் எனக்கு எழுதிய கடிதத்தில், போர் நடவடிக்கைகளைத் தொடர்ந்தவாறு சமாதானப் பேச்சுக்களில் ஈடுபட முடியாதென ஏற்றுக் கொண்டீர்கள்.

சமாதானத்தில் உறுதிபூண்டு நிற்கிறோம் என்பதை வலியுறுத்திய நாம், 'பேச்சுக்கள் இன நெருக்கடியின் தீர்வுக்கு நிரந்தர அமைதிக்கும் வழிகோலும் என ஆழமாக நம்புவதாக' தெரிவித்தோம். (1994 டிசம்பர் 8ஆம் நாளைய எமது கடிதத்தைப் பார்க்கவும்)

பகை நடவடிக்கைகள் நிறுத்தப்பட்டதை அடுத்து பேச்சுக்கள் ஆரம்பமாக வேண்டும் என்பதையே நாம் எதிர்பார்த்தோம். ஆரம்ப கட்டப் பேச்சுக்கள், தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் அவசிய, அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகள் குறித்தே பேசப்பட வேண்டும் என்பதை நாம் ஆரம்பத்திலிருந்தே திரும்பத் திரும்ப வலியுறுத்தி வந்திருக்கிறோம்.

எமது நிலைப்பாட்டை மேலும் தெளிவுபடுத்தவும், உங்களது ஞாபக சக்தியைப் புதுப்பிக்கவும், 1994 டிசம்பர் 8ஆம் நாளன்று நான் உங்களுக்கு எழுதிய கடிதத்திலிருந்து சில பந்திகளை இங்கு மேற்கோள் காட்ட விரும்புகிறேன். அவை வருமாறு:-

> "எமது மக்கள் எதிர்கொண்டு நிற்கும் அவசரமான, உடனடியான வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முதற்கட்டப் பேச்சுக்களில் முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும் என்பதை

விடுதலைப் புலிகள் ஆரம்பத்திலிருந்தே வலியுறுத்தி வந்ததை நீங்கள் அறிவீர்கள். இந்தப் பிரச்சினைகள் என்னவென்பதை எமது பிரதிநிதிகள் முதற்கட்டச் சுற்றுப் பேச்சில் தெளிவாகச் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். முந்திய அரசாங்கம் முன்னெடுத்த இராணுவவாத அணுகுமுறை காரணமாகவே பெரும்பான்மையான இப் பிரச்சினைகள் தோற்றம் கொண்டன. "உங்களது மக்கள் நாளாந்தம் அனுபவித்து வரும் துன்ப துயரங்களுக்குத் தீர்வு காணப்படும்" என அரச பிரதிநிதிகள் உறுதியளித்த போதும் எமது மக்களின் குறைகளைத் தீர்க்க எவ்வித நடவடிக்கைகளும் இதுவரை எடுக்கப்படவில்லை."

"போரினால் சீரழிந்த பகுதிகளில் மிகக் கோரமான வாழ்க்கைப் பிரச்சினைகள் உள்ளன. இவற்றிற்குத் தீர்வு காணாமல் சாதாரண மக்களின் வாழ்வில், உண்மையான சமாதானச் சூழ்நிலையும் இயல்பு நிலையும் தோன்றப் போவதில்லை."

எமது மக்களின் நாளாந்த வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு நாம் அதிமுக்கியத்துவம் கொடுக்கிறோம் என்பதை நான் இங்கு வலியுறுத்த விரும்புகிறேன். தமிழரின் தேசிய நெருக்கடிக்கு அடிப்படையாகவுள்ள சிக்கல்கள் பற்றிப் பேசுவதற்கு முன்னர், எமது மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகள் அவசரமாக தீர்த்து வைக்கப்பட வேண்டும்.

முதலாவது சுற்றுப் பேச்சுக்கள் எமது மக்களின் பிரச்சினைகள் பற்றியதாகவே அமைந்தன என்பதையும் நான் இங்கு சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அரச பிரதிநிதிகளின் தலைவர் திரு. பலப்பத்தபெண்டி பேசும்பொழுது, எமது மக்கள் நாளாந்தம் அனுபவித்து வரும் துன்பங்களை எவ்வழிகளில் திறமையாகத் தீர்த்து வைக்கலாம் என்பது குறித்து எம்முடன் பேசுவதற்குப் பிரதம மந்திரி தமக்கு மனு அளித்ததாகச் சொன்னார். தமிழ்ச் சமூகத்தின் வாழ்வை வளப்படுத்த சகலவிதமான நலன்புரிச் சேவைகளும் பயன்படுத்தப்படுமென அரச பிரதிநிதிகள் உறுதியளித்தும் எமது மக்களின் குறைபாடுகளைத்

தீர்க்க எவ்வித நடவடிக்கைகளும் எடுக்கப்படவில்லை. இரண்டாவது சுற்றுப் பேச்சுக்களிலாவது இந்த விவகாரம் விவாதத்திற்கு எடுக்கப்படுமென நம்பியிருந்தோம்.

1994 டிசம்பர் 13ஆம் நாளன்று, நீங்கள் எழுதிய கடிதத்தில், தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் நாளாந்தப் பிரச்சினைகள் குறித்து அரசாங்கம் ஆழ்ந்த கரிசனை கொண்டிருப்பதாகவும், எமது முழு ஒத்துழைப்புடன் இப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண உங்களது அரசு உறுதிபூண்டு இருப்பதாகவும் தெரிவித்தீர்கள். எமது நிலைப்பாடு பற்றி விபரமாகக் கேட்டறிந்த பின்னர், பேச்சுக்களின் போது எமது வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முதலுரிமை கொடுக்கப்படுமென எமக்கு உறுதியளித்த பின்னர், டிசம்பர் 19ஆம் நாள் நீங்கள் எழுதிய கடிதத்தில் ஆயுதப் போராட்டத்திற்கு முடிவு கட்டும் நோக்குடன் போருக்கு மூலமான காரணங்கள் பற்றியதாகவே பேச்சுக்கள் அமைய வேண்டுமென வற்புறுத்தியுள்ளது எமக்கு ஏமாற்றத்தைத் தருகிறது. நீங்கள் இப்பொழுது வற்புறுத்துவதைப் பார்த்தால், உங்கள் நிலைப்பாட்டில் வேண்டுமென்றே ஒரு அடிப்படையான மாற்றம் செய்துள்ளதுபோல எமக்குத் தோன்றுகிறது. எமது மக்களின் அவசர வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதைக் கைவிட்டு பேச்சுக்களை வேறு திசையில் கொண்டு செல்ல முனைவது போலத் தெரிகிறது.

ஆயுதப் போராட்டம் தோற்றம் கொள்ளக் காரணமாகவிருந்த பிரச்சினைகளை ஆராய்ந்து, தேசிய நெருக்கடியைத் தீர்த்து வைக்கும் நோக்குடன் சமாதான வழிமுறை அமையப் பெற வேண்டும் என்பதில் எமக்கு ஒரு தெளிவான பார்வையுண்டு. இந்த அடிப்படையான விடயத்தில் கருத்து வேறுபாடு எமக்கில்லை என்பதை நாம் உறுதிபடக் கூறுவோம். இங்கு நாம் வலியுறுத்த விரும்புவது என்னவென்றால், பேச்சுக்கள் படிப்படியாக, கட்டம் கட்டமாக முன் நகர்த்தப்பட வேண்டும் என்பதையே, இயல்பு நிலையையும், அமைதியான சூழ்நிலையையும்

உருவாக்கும் நோக்குடன், ஆரம்ப கட்டப் பேச்சுக்களில் எமது மக்களைத் திணறடிக்கும் வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணவேண்டும் என்பதையே நாம் இங்கு மீண்டும் வலியுறுத்த விரும்புகிறோம். புதிய அரசாங்கம் தமது வாழ்வியல் நெருக்கடிகளுக்குப் பரிகாரம் காணுமென நம்பிக் காத்திருக்கும் எமது மக்களின் ஒன்றுபட்ட அபிலாசையும் இதுவாகும். முதலாவது கட்டச் சுற்றுப் பேச்சில் இப் பிரச்சினைகள் குறித்து விவாதிக்கப்பட்டதாலும், அரசாங்கம் உறுதியளித்ததை நிறைவு செய்து வைக்குமென எமது மக்கள் எதிர்பார்த்த வண்ணம் இருக்கிறார்கள். எனவே, இப் பிரச்சினைகளைத் தட்டிக் கழித்து, சுற்றி வளைத்து, திசை திருப்ப அரசாங்கம் முனையுமானால் அதனை ஒரு அரசியல் நம்பிக்கைத் துரோகமாகவே எமது மக்களும் நாங்களும் கருதுவோம்.

எமது நிலைப்பாட்டைப் போதுமான அளவுக்கு நாம் தெளிவுபடுத்தியுள்ளோம் என நான் நினைக்கிறேன். எமது நிலைப்பாடு சரியானது, நியாயமானது, நடைமுறைச் சாத்தியமானது என்பதை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்கள் என நினைக்கிறேன்.

சமாதானத்தில் நாம் உறுதிபூண்டு நிற்கிறோம் என்பதையும், சமாதானத்திற்காக எமது கதவுகள் திறந்து கிடக்கின்றன என்பதையும் நான் மீண்டும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

உங்களது வசதிக்கேற்ப ஒரு நாளில் அரச பிரதிநிதிகள் யாழ்ப்பாணம் வருகை தந்தால் நாம் அவர்களை வரவேற்கக் காத்திருப்போம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே.பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

பிரபாகரனின் உறைப்பான கடிதத்திற்குப் பதிலளித்த கேணல் ரத்வத்தை, தமிழ் மக்களின் நெருக்கடியான அவசரப் பிரச்சினைகளை அரசாங்கம் தட்டிக் கழிக்கவில்லை என்று

வாதாடி, நாம் குற்றம் சுமத்தியது போல அரசாங்கத்தின் நிலைப்பாட்டில் அடிப்படை மாற்றம் எதுவும் நிகழவில்லை என வற்புறுத்தினார். இது ஒரு தவறான வியாக்கியானம் என்றும் அவர் குறிப்பிட்டார். வடக்குக் கிழக்கில் இயல்பு நிலையைத் தோற்றுவிப்பதற்காக, குடிமக்களின் அடிப்படை வசதிகளைச் செய்து கொடுக்க அரசாங்கம் உண்மையில் உறுதிபூண்டுள்ளதாகவும் அவர் தெரிவித்தார். சமாதான வழிமுறை கட்டம் கட்டமாக முன்னெடுக்கப்பட வேண்டும் என்றும், ஆரம்ப கட்டப் பேச்சுக்கள் தமிழ் மக்களின் அவசர வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முதன்மை அளிக்க வேண்டுமென்ற விடுதலைப் புலிகளின் நிலைப்பாட்டையும் அவர் ஏற்றுக் கொண்டார். நல்லிணக்கமானதாக அமைந்த அவரது கடிதத்தில் போர் நிறுத்த நடைமுறைகள் பற்றிப் பேசுவதற்கான நாளும் குறிப்பிடப்பட்டது. இக் கடித விபரம் வருமாறு:-

29 டிசம்பர் 1994

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

1994 டிசம்பர் 21ஆம் நாள் திகதியிடப்பட்ட உங்களது கடிதம் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் வாயிலாகக் கிடைக்கப்பெற்றது. நன்றி.

டிசம்பர் 19ஆம் நாளன்று நான் உங்களுக்கு எழுதிய கடிதத்தில் பேச்சுக்களை மீளத் தொடங்குவது சம்பந்தமாகச் சில முக்கிய விடயங்களுக்கு விளக்கம் கோரியிருந்தேன். கீழ்க் கண்ட காரணங்களுக்காகவே அவ்வாறு விளக்கம் கேட்டிருந்தேன்.

(அ) டிசம்பர் முதல் வாரத்தில் நான் எழுதிய கடிதத்தில் பல விடயங்கள் குறித்து உங்களது கருத்தைக் கேட்டிருந்தேன். பல விடயங்களுக்கு விடையளித்த நீங்கள், சமாதானப் பேச்சுக்கள் குறித்து எமது அரசாங்கத்தின் நிலைப்பாடு பற்றிய இரண்டாம், ஐந்தாம் விடயங்களுக்கு பதிலளிக்கவில்லை. பகை

நடவடிக்கைகளின் நிறுத்தம் பற்றி அறிவிக்கப்பட்டதை அடுத்து, உடனடியாகவே சமாதானப் பேச்சுக்கள் ஆரம்பமாக வேண்டும் என்பதே அரசாங்கத்தின் நிலைப்பாடாகும்.

நீங்கள் இந்த முக்கிய விடயத்திற்குப் பதில் அளிக்காததால் எமது அரசாங்கத்திற்கு அது கவலையைக் கொடுத்தது. சமாதானப் பேச்சுகள் அரசியல் பேச்சுக்களுக்கு வழிகோல வேண்டும் என்பதும், அந்த அரசியல் பேச்சுக்களின் இறுதி இலக்கு, இனப் பிரச்சினைக்கு அர்த்தமுள்ள தீர்வைக் காணுவதாக அமைய வேண்டும் என்பதும் அரசாங்கத்தின் நிலைப்பாடாகும். தற்போது நிலவும் யுத்த நெருக்கடியின் மூல காரணங்களை ஆராய்ந்து ஆயுதப் போராட்டத்திற்கு முடிவு கட்டுவதாக இந்த அரசியல் தீர்வு அமைய வேண்டும்.

(ஆ) எமது இந்த நிலைப்பாடானது, அரச பிரதிநிதிகளின் தலைவர் திரு. பலப்பத்தபெண்டி கூறியது போன்று, வடக்கு-கிழக்கு மக்கள் நாளாந்தம் அனுபவித்து வரும் துன்ப துயரங்களைப் போக்கி விடும் அரசாங்கத்தின் உறுதிப்பாட்டினை மாற்றிவிடப் போவதில்லை.

இதன் காரணமாக எமது அரசாங்கம் ஆட்சிப் பொறுப்பை ஏற்று இரண்டு வாரங்களுக்குள் வடக்கில் வாழும் மக்களுக்கு அத்தியாவசியமாகத் தேவைப்படும் 28 பொருட்கள் மீதான தடையை நீக்கியது.

எமது இந்த நிலைப்பாடு காரணமாகவே எமது பிரதிநிதிகள் யாழ்ப்பாணத்திற்கு முதற் தடவையாக விஜயம் செய்தபோது தமிழ் மக்களின் வாழ்க்கை நிலையை வளம்படுத்துவது பற்றிப் பேசினார்கள். நீர்பாசனத் திட்டங்களைப் புனரமைத்தல், வீதிகளைத் திருத்துதல், பாடசாலைகள் மருத்துவமனைகளை சீரமைத்தல், மின் விநியோகம் செய்தல், யாழ்ப்பாணத்திற்கான போக்குவரத்துப் பாதையைத் திறத்தல் போன்ற விடயங்கள் பற்றிக் கலந்துரையாடினார்கள்.

உங்களது பிரதிநிதிகள் சில திட்டங்களுக்கு முன்னுரிமை கொடுத்தார்கள். உடனடியாகவே

அரசாங்கம் செயற்படுத்தக் கூடிய திட்டங்களை இரண்டாவது சுற்றுப் பேச்சில் நாம் உங்களுக்கு சமர்ப்பிக்க இருந்தோம். இரண்டாவது சுற்றுப் பேச்சுத் தாமதமாகியதற்கான காரணங்கள் எமது சக்திக்கு அப்பாற்பட்டவை என்பதை நாம் முன்பு எழுதிய ஒரு கடிதத்தில் சுட்டிக் காட்டியிருந்தோம். கொழும்பில் எதிர்க் கட்சித் தலைவர் உட்பட 50 பேருக்கு மேற்பட்டோர் கூட்டாகக் கொலை செய்யப்பட்ட காரணத்தினால் விடுதலைப் புலிகளுடனான பேச்சுக்களை இடைநிறுத்த நிர்ப்பந்திக்கப்பட்டோம்.

இப்படியான யதார்த்த நிலையை நீங்கள் நன்கறிந்தும், தமிழ் மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தட்டிக் கழிக்கும் நோக்கத்துடன் எமது நிலைப்பாட்டை நாம் வேண்டுமென்றே மாற்றிக் கொண்டதாகக் குற்றம் சுமத்துவது உண்மைக்கு மாறானது. இப்படி நீங்கள் கருதியது எமக்கு ஆச்சரியத்தையும் கவலையையும் தருகிறது. வடக்கில் வாழும் மக்களின் குறைபாடுகளைப் போக்க எமது அரசாங்கம் எவ்வித நடவடிக்கைகளையும் எடுக்கவில்லை என்றும் கூறியுள்ளீர்கள்.

வடக்குக் கிழக்கிலும் சரி, சிறீலங்கா முழுவதும் சரி, குடிமக்களின் வாழ்க்கைக்கு அடிப்படையான தேவைகளை வழங்க அரசாங்கம் உறுதி பூண்டு நிற்கிறது என்பதையும் இந்த நிலைப்பாட்டில் எவ்வித மாற்றமும் தளர்வும் ஏற்படவில்லை என்பதையும் உங்களுக்கு மீண்டும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஆகவே, உங்களது குற்றச்சாட்டு நியாயமற்றது என்பதுடன், மிகவும் சிரமத்துடன் நாம் கட்டியெழுப்ப முயலும் பரஸ்பர புரிந்துணர்வுக்கும் இது பங்கம் விளைவிக்கலாம்.

(இ) போருக்கு முடிவு கட்டி, இந் நாட்டில் நிரந்தர அமைதியைத் தோற்றுவிக்கவும், இந் நாட்டில் வாழும் சிங்கள, தமிழ், முஸ்லிம், பறங்கிய சமூகங்களைச் சேர்ந்த மக்கள் அனைவரும் சமமான குடிகளாக, கௌரவத்துடன், சமாதானமாக, ஒற்றுமையாக வாழ வழிவகுக்கவும், இனப் பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காண்பதே எமது அடிப்படை நோக்கமாகும். அரசியல்

தீர்வு காணவேண்டும் என்றால் நாம் பேச வேண்டும். பேச்சுக்களைத் தொடங்க வேண்டும்.

(ஈ) தமிழ் மக்களின் அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பது, பகை நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்வது, அவசியமானவை, பூர்வாங்கமாக முதற்கூட்டியே செய்யப்பட வேண்டியவை. எனினும் இவை, தமிழ் மக்களின் இனப் பிரச்சினைக்கு அரசியற் தீர்வு காணும் பிரதான குறிக்கோளுக்கு வழிகோலவேண்டும். இந்த முக்கிய விடயம் குறித்து உங்களது நிலைப்பாடு தெளிவாக இல்லாத காரணத்தாலேயே நாம் அதற்கு விளக்கம் கேட்டோம்.

ஆயினும் டிசம்பர் 22ஆம் நாளன்று நீங்கள் எழுதிய கடிதத்தில் உங்களது நிலைப்பாட்டைச் சரிவரத் தெளிவுபடுத்தி இருக்கிறீர்கள். சமாதானப் பேச்சுக்கள் கட்டம் கட்டமாக முன்னேற வேண்டும் என்றும் முதற் கட்டப் பேச்சுக்கள் தமிழ் மக்களின் உடனடிப் பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதாக அமைய வேண்டும் என்றும் விளக்கம் கொடுத்துள்ளீர்கள்.

இவ் விடயத்தில் எமக்கு மத்தியில் கருத்தொற்றுமை நிலவுவதால், எதிர்காலப் பேச்சுக்கள் சம்பந்தமான எமது யோசனைகள் வருமாறு:-

(1) ஒரு நாள் பேச்சுக்களை நடத்தும் நோக்கத்துடன் எமது பிரதிநிதிகள் குழு, 1995 ஜனவரி 2ஆம் நாள் யாழ்ப்பாணம் வருகை தரும்.

(2) கீழ்க் கண்ட முக்கிய விடயங்கள் குறித்து பேச்சுக்கள் நடைபெறும்:

1995 ஜனவரி 8 அல்லது 9ஆம் நாளிலிருந்து முதற்கட்டமாக இரு வாரங்களுக்குப் பகை நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்வது. அமைதி பேணும் வழிமுறைகள் பற்றி இரு தரப்பும் பேசி இணக்கம் காண்பது.

வடக்குக் கிழக்கு மக்களின் நாளாந்த வாழ்வை மேம்படுத்தும் நோக்கில் புனரமைப்பு வேலைகள், பாதை திறப்பு ஆகியன பற்றிப் பேசுவது.

இரண்டாவது கட்டப் பேச்சுக்கான நாட்களைத் தீர்மானிப்பது. அதாவது தமிழ் மக்களின் இனப் பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காணும் பேச்சுக்கள். உதாரணமாக, அரசியல் அதிகாரம், நிர்வாக அலகு மற்றும் தொடர்புடைய விடயங்கள் பற்றிப் பேசுவது.

பிறக்கப் போகும் 1995 புத்தாண்டில் எமது நாட்டில் அமைதியும் நல்வாழ்வும் நிலவ வேண்டுமென உங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறேன்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

அனுருத்த ரத்வத்தை

தமிழரின் தேசிய இனப் பிரச்சினைக்கு நியாயமான ஒரு அரசியல் தீர்வைக் காண்பதுதான் சமாதானப் பேச்சுக்களின் இறுதியான இலட்சியமாக இருக்க வேண்டும் என்பதை நாம் நன்கறிவோம். போர் நெருக்கடிக்கு அடிப்படையாகவுள்ள அரசியல் பிரச்சினைகளைப் பேசித் தீர்க்க வேண்டும் என்பதில் நாம் மிகவும் தெளிவாகவே இருந்தோம். ஆயினும், விடுதலைப் புலிகள் அரசியற் பேச்சுக்களை வேண்டுமென்றே தவிர்த்து வருகிறார்கள் என்ற ஒரு தவறான பார்வை அரசாங்க வட்டத்தில் நிலவியது. இது ஒரு பிழையான மதிப்பீடு. ஒரு நிலையான, உறுதியான அத்திவாரத்திலிருந்தே அரசியற் பேச்சுக்கள் நடைபெற வேண்டுமென விடுதலைப் புலிகள் விரும்பினர். தமிழ்ப் பகுதிகளில் இயல்பு நிலையும் சமாதான சமரசச் சூழ்நிலையும் நிலவும் ஒரு உறுதியான புறநிலையில் அரசியற் பேச்சுக்களை நடத்துவதே சாலச் சிறந்தது என நாம் கருதினோம். தமிழ் மக்கள் மீது திணிக்கப்பட்டுள்ள பொருளாதாரத் தடைகள், கட்டுப்பாடுகளை முற்றாக நீக்கி, சர்வதேசக் கண்காணிப்பாளரின் மேற்பார்வையுடன் ஒரு நிலையான போர்நிறுத்தத்தைப் பிரகடனம் செய்தால் அமைதியான சூழ்நிலை பிறக்கும் என்பதே எமது நிலைப்பாடாகும். பொருளாதாரத் தடைகளை நீக்கி, யுத்தத்தை ஒரு முடிவுக்கு கொண்டு வந்தால் துன்புறும் எமது மக்களின் துயர் துடைக்கப்படுவது மட்டுமன்றி, அரசியற் பேச்சுக்களுக்கு இசைவான ஒரு நல்லெண்ணச் சூழ்நிலையும் பிறக்குமென நாம் கருதினோம். ஒரு நிரந்தரமான அரசியற் தீர்வானது தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகளைப் பூர்த்தி செய்வதுடன், சிங்கள மக்களின் தப்பான அச்சங்களையும் நீக்குவதாக

அமைய வேண்டும். இது ஒரு சிக்கலான பிரச்சினை என்பது எமக்குத் தெரியும். இதற்குத் தீர்வு காண்பதாயின் நீண்ட காலம் பேச்சுக்களைத் தொடர வேண்டியிருக்கும். இதன் காரணமாகவே, ஆரம்ப கட்டப் பேச்சுக்களில் எமது மக்களின் அவசர வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண வேண்டும் என நாம் வற்புறுத்தினோம். தலைவர் பிரபாகரன் ரத்வத்தைக்கு எழுதிய கடிதத்தில், ஒரு சுதந்திரமான, நெருக்குவாரங்கள் அற்ற புறநிலையில் அரசியற் பேச்சுக்கள் நடைபெறுவதன் அவசியத்தை வலியுறுத்தினார். பிரபாகரனது கடிதம் வருமாறு:-

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
1 ஜனவரி 1995

கேணல். அனுருத்த ரத்வத்தை
நீர்ப்பாசன, மின்சக்தி அமைச்சர்
உதவிப் பாதுகாப்பு அமைச்சர்

அன்பின் கேணல். ரத்வத்தை அவர்கட்கு,

1994 டிசம்பர் 29ஆம் நாளன்று நீங்கள் அனுப்பிய கடிதத்திற்கு நன்றி.

சமாதானப் பேச்சுக்கள் கட்டம் கட்டமாக முன்னெடுக்கப்பட வேண்டும் எனவும், முதற்கட்டப் பேச்சுக்கள் எமது மக்களின் ஜீவாதாரப் பிரச்சினைகள் பற்றியதாக அமையவேண்டும் எனவும், பேச்சுக்களை நடத்தும் வழிமுறைகள் பற்றிய எமது நிலைப்பாட்டை நீங்கள் ஏற்றுக் கொண்டதையிட்டு மகிழ்ச்சி.

எமது மக்களின் வாழ்நிலையை மேம்பாடு செய்யவும், தமிழ்த் தேசிய நெருக்கடிக்குப் பேச்சுக்கள் வாயிலாகத் தீர்வு காண்பதற்கும் உங்களது அரசாங்கம் கொண்டிருக்கும் உறுதிப்பாட்டை நாம் பாராட்டுகிறோம். எமது மக்களின் அரசியல் அபிலாசைகளை நிறைவு செய்யும் அர்த்தமுள்ள ஒரு அரசியற் தீர்வு காண்பதுதான் சமாதானப் பேச்சுவார்த்தையில் அடிப்படையான குறிக்கோள் என்பதில் எமக்கு எந்த வித தவறான அபிப்பிராயமும் இருந்ததில்லை.

முன்னைய அரசாங்கம் கடைப்பிடித்த

கடும்போக்கான இராணுவ அணுகுமுறையாலும் போரின் விளைவுகளாலும் வடகிழக்கில் வாழும் தமிழ் மக்கள் மிகவும் கொடூரமான இடர்களைச் சந்தித்து நிற்கிறார்கள் என்பதை நீங்கள் நன்கறிவீர்கள். யுத்தத்தினால் சிதைவுற்ற பகுதிகளில் இயல்புநிலை திரும்ப வேண்டுமாயின் எமது மக்களை அழுத்தும் துன்பச் சுமைகள் நீங்க வேண்டும். ஒரு சுதந்திரமான, நெருக்குவாரங்கள் அகன்ற நல்லெண்ணச் சூழ்நிலையில் சமாதானப் பேச்சுக்கள் நடைபெற வேண்டும். அப்பொழுதுதான் பேச்சுக்களும் வெற்றி பெறும். பல தசாப்தங்களாக, உடன்பாடுகள் நிறைவேற்றப்படாத காரணத்தினால் கசப்புணர்வுடன் விரக்தியடைந்திருக்கும் எமது மக்களுக்கு நம்பிக்கையை உண்டு பண்ணுவதற்கு இப்படியான நல்லெண்ண முயற்சிகள் மேற்கொள்ளப்படுவது அவசியமானது. இதன் காரணமாகவே தமிழ் மக்களின் அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு அதிமுக்கியத்துவம் கொடுத்து அவற்றைத் தீர்த்து வைக்குமாறு நாம் வலியுறுத்தினோம்.

இரண்டாவது சுற்றுப் பேச்சின் பொழுது, விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள் எமது மக்களின் பிரச்சினைகளை விரிவாகவும் ஆழமாகவும் எடுத்துரைப்பார்கள். இப்பிரச்சினைகளைத் தீர்க்க உங்களது அரசாங்கம் உருப்படியான நடவடிக்கைகளை எடுக்குமென நாம் நம்புகிறோம்.

1995 ஜனவரி 2ஆம் நாளன்று, இரண்டாவது சுற்றுப் பேச்சில் பங்குகொள்ள யாழ்ப்பாணம் வருகை தரவிருக்கும் உங்களது பிரதிநிதிகளுக்கு நல்வரவேற்பு அளிக்கப்படும்.

அமைதியான, ஆனந்தமான, நல்வாழ்வு தரும் ஆண்டாக இப் புத்தாண்டு அமைய வேண்டுமென உங்களுக்கு எனது நல்லாசிகள்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

1995 ஜனவரி இரண்டாம் நாளன்று, யாழ்ப்பாணம் சுண்டுக்குழியிலுள்ள விடுதலைப் புலிகளின் அரசியற் செயலகத்தில் இரண்டாம் கட்டச் சுற்றுப் பேச்சு இடம்பெற்றது. இம் முறை அரச தூதுக் குழுவில் புதிதாக இரு படைத்துறை அதிகாரிகள் பங்குகொண்டனர். மூத்த இராணுவ அதிகாரியான பிரிகேடியர் ஏ.எஸ்.பீரிஸ், கடற்படை அதிகாரியான கப்டன் பிரசன்னா ராஜரத்தினா ஆகியோரே இவ்விருவருமாவர். விடுதலைப் புலிகளின் தூதுக் குழுவுக்கு அரசியல் துறைப் பொறுப்பாளர் திரு. சு.ப. தமிழ்ச்செல்வன் தலைமை வகித்தார்.

பகை நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்வது பற்றியும் அமைதி பேணும் வழிமுறைகள், நடைமுறைகள், கண்காணிப்புப் போன்ற அம்சங்கள் பற்றியுமே இரண்டாவது சுற்றுப் பேச்சில் முக்கியமாகப் பேசப்பட்டது. போர் நிறுத்த காலத்தில் எல்லையில் நிலைகொண்டுள்ள இரு தரப்புப் படையணிகளும் தம்மிடையே 600 மீட்டர் இடைவெளியை சூன்யப் பிரதேசமாக மாற்றிக் கொள்ள வேண்டுமென்றும் சகல விதமான போர் நடவடிக்கைகளையும் நிறுத்திக் கொள்ள வேண்டும் என்றும் முடிவெடுக்கப்பட்டது.

கடற் தளங்களையும் கரையோர இராணுவ முகாம்களையும் அண்மித்த கடற் பகுதிகளைத் தவிர்ந்த, ஏனைய கடற் பிராந்தியத்தில் மீன்பிடித் தொழிலை வழமைபோல செய்யலாமென அரச பிரதிநிதிகள் தெரிவித்தனர். வடகிழக்கிலுள்ள தமிழ் மாவட்டங்களில் போர் நிறுத்தக் கண்காணிப்புக் குழுக்களை நிறுவவும், வெளிநாட்டுப் பிரதிநிதிகளை அக் குழுக்களின் தலைவர்களாக நியமிக்கவும் இணக்கம் காணப்பட்டது. போர் நிறுத்தத்தைக் கைவிடுவதானால் 72 மணி நேரக் காலக்கெடு கொடுக்கப்பட வேண்டுமெனவும் முடிவாகியது. போர் நிறுத்த விதிகள், கடப்பாடுகளைக் கொண்டதாக ஏழு அம்ச ஆவணம் ஒன்றும் தயாரிக்கப்பட்டது.

பகை நடவடிக்கைகள் நிறுத்தப் பிரகடனத்தில் ஜனாதிபதி சந்திரிகா குமாரதுங்காவும், விடுதலைப் புலிகளின் தலைவர் வே. பிரபாகரனும் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கத்தின் அனுசரணையின் பேரில் ஒரே நேரத்தில் கொழும்பிலும் யாழப்பாணத்திலும் கைச்சாத்திட்டனர். 1995 ஜனவரி 8ஆம் நாளிலிருந்து போர் நிறுத்தம் நடைமுறைக்கு வந்தது. இப் போர் நிறுத்தப் பிரகடனத்தின் விபரம் வருமாறு:-

## பகை நடவடிக்கை நிறுத்தப் பிரகடனம்

ஒரு குறிப்பிட்ட கால கட்டத்திற்கு அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் இணக்கம் காணப்பட்ட பகை நடவடிக்கை நிறுத்த அமுலாக்க நடைமுறைகள் வருமாறு:-

(1) இந்தக் கால கட்டத்தில் இரு தரப்பினரும் எவ்வித போர் நடவடிக்கைகளையும் மேற்கொள்ளக் கூடாது. அப்படியான போர் நடவடிக்கை இந்த உடன்பாட்டை மீறுவதாகக் கருதப்படும்.

(2) பாதுகாப்புப் படைகளும் விடுதலைப் புலிப் படையணிகளும் 600 மீட்டர் இடைவெளியை விடுத்து தங்களது தற்போதைய கள நிலைகளில் தரித்து நிற்க வேண்டும். ஆயினும் இரு தரப்புப் படைகளும் தத்தம் காவலணி நிலையிலிருந்து 100 மீட்டர் வரை நடமாடலாம். ஆனால் குறைந்தது 400 மீட்டர் இடைவெளியைத் தம்மிடையே வைத்துக் கொள்ள வேண்டும். தடை செய்யப்பட்ட பகுதிக்குள் எந்தத் தரப்பினராவது பிரவேசித்தால் அது பகை நடவடிக்கையாகவே கருதப்படும்.

(3) அந்நிய ஆக்கிரமிப்புக்கு எதிராக, நாட்டின் இறையாண்மையையும் பிரதேச ஒருமைப்பாட்டையும் பாதுகாக்கும் தமது சட்டபூர்வமான செயற்பாடுகளில் கடற்படையும் வான் படையும் ஈடுபட்டிருக்கும் அதேவேளை, விடுதலைப் புலிகளுக்கு எதிராகப் படை நடவடிக்கைகளில் ஈடுபடாமலும் குறிப்பிட்ட கடற் பிரதேசங்களில் சட்டபூர்வமான மீன்பிடிப்புக்கு இடையூறு விளைவிக்காமலும் செயற்படும்.

(4) எந்தவொரு அரசியற் கட்சிக்கோ, குழுவுக்கோ தனிப்பட்ட நபருக்கோ எதிராக நாசகார வேலைகள், வெடிகுண்டு வெடித்தல், கடத்தல், கொலை புரிதல் போன்ற செயல்களில் ஈடுபட்டால் அதுவொரு பகை நடவடிக்கையாகக் கருதப்படும்.

(5) (அ) மேற்கண்ட உடன்பாட்டு விதிகள் மீறப்படும் சம்பவங்களை விசாரிப்பதற்காகக் கண்காணிப்புக் குழுக்கள் நிறுவப்படலாம். யாழ்ப்பாணம், மன்னார்,

வவுனியா, முல்லைத்தீவு, திருகோணமலை, மட்டக்களப்பு - அம்பாறை ஆகிய பகுதிகளிலும், தேவை எழும் வேறு இடங்களிலும் இந்தக் குழுக்கள் நியமிக்கப்படலாம்.

(ஆ) இரு தரப்பிலிருந்தும் புகார்கள் செய்யப்படும் போது, சம்பவங்களை விசாரித்து, பிணக்குகளைத் தீர்த்து வைக்க உடன் நடவடிக்கை எடுப்பது இக் குழுக்களின் பொறுப்பாகும்.

(இ) கனடா, நெதர்லாந்து, நோர்வே ஆகிய நாடுகளிலிருந்தும் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்க அமைப்பிலிருந்தும் தெரிவு செய்யப்படும் பிரதிநிதிகளும் மற்றும் ஓய்வு பெற்ற நீதிபதிகள், அரச அதிகாரிகள், மதத் தலைவர்கள், மூத்த குடிமக்கள் ஆகியோரும் இக் குழுக்களில் அங்கத்துவம் பெறலாம்.

(ஈ) ஒவ்வொரு குழுவிலும் ஐந்து அங்கத்தவர் அடங்குவர்.

அரசாங்கத்தின் சார்பாக இருவர்.

விடுதலைப் புலிகள் சார்பாக இருவர்.

வெளிநாட்டிலிருந்து ஒருவர். வெளிநாட்டுப் பிரதிநிதியே குழுவின் தலைவராகச் செயற்படுவார்.

(உ) இந்த குழுவினர் தமது பணிகளைச் செய்வதற்கான நடமாட்டச் சுதந்திரத்தை உறுதிப்படுத்துவது ஒப்பந்தம் செய்து கொண்ட இரு தரப்பினரதும் பொறுப்பாகும்.

(ஊ) நடுநிலையாகவும் துரிதமாகவும் இந்தக் குழுக்கள் செயற்படுவதற்கான வசதிகளை வழங்குவது குறித்து இரு தரப்பும் பேசி இணக்கம் காணவேண்டும்.

(எ) உள்ளூரில், உடனுக்குடன் பிரச்சினைகளுக்கு இணக்கம் காணும் நோக்கில், பாதுகாப்பு படை அதிகாரிகளுக்கும், விடுதலைப் புலிகளின் பிரதேசத் தளபதிகளுக்கும் மத்தியில் தொடர்பு ஏற்படுத்தப்பட வேண்டும்.

இரு தரப்பினரில் ஒருவர் உடன்பாட்டிலிருந்து விலகுவதாக

அறிவித்தல் கொடுக்கும் வரை போர் நிறுத்தம் தொடரும். விலகும் அறிவிப்புக்கு 72 மணிநேர கால அவகாசம் வழங்கப்பட வேண்டும்.

**வே.பிரபாகரன்**
**தலைவர்**
**தமிழீழ விடுதலைப்புலிகள்**

**சந்திரிகா பண்டாரநாயக்க குமாரதுங்க**
**ஜனாதிபதி, சிறீலங்கா**
**ஆயுதப் படையின் தளகர்த்தா**

5 ஜனவரி 1995
(கைச்சாத்திட்ட நாள்)

1995 ஜனவரி 8ஆம் நாளிலிருந்து பகை நடவடிக்கை நிறுத்த உடன்பாடு நடைமுறைக்கு வந்ததை அடுத்து, உடன்பாட்டை நடைமுறைப்படுத்துவதிலும் கண்காணிப்புச் செய்வதிலும் சிக்கல்கள் எழுந்தன. சமாதானக் குழுக்களில் பணிபுரிவதற்கு அனுபவம் வாய்ந்த அதிகாரிகள் தம்மிடம் இருக்கவில்லை எனச் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் அறிவித்தது. செஞ்சிலுவைச் சங்கம் கொழும்பில் விடுத்த அறிக்கையில் கீழ்க் கண்டவாறு தெரிவித்தது:-

> "1995 ஜனவரி 8ஆம் நாளிலிருந்து பகை நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்வதென சிறீலங்கா அரசாங்கமும் விடுதலைப் புலிகளும் முடிவெடுத்துள்ளன. சிறீலங்கா அரசாங்கத்தையும், விடுதலைப் புலிகளையும், வெளிநாடுகளையும் சார்ந்த பிரதிநிதிகள் அடங்கியதாக போர்நிறுத்தக் கண்காணிப்புக் குழுக்களை நிறுவுவதெனவும் முடிவு செய்யப்பட்டது.
>
> இந்தச் சமாதானக் குழுக்களில் ஒன்றைத் தலைமை தாங்கும்படி சர்வதேச செஞ்சிலுவைச் சங்கத்தை இரு தரப்பினரும் கேட்டுக் கொண்டனர். இந்த யோசனையை ஏற்றுக் கொள்ள முடியாதென சிறீலங்காவிலுள்ள சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் அறிவித்தது. போர் நிறுத்தத்தைக் கண்காணிப்பதற்கு இராணுவ அனுபவம் வாய்ந்த நிபுணர்கள் தேவை. சர்வதேச மனிதாபிமானச்

சட்டத்தை நிறைவு செய்யும் பொதுநல அமைப்பு என்ற ரீதியில், எம்மிடம் இராணுவ நிபுணத்துவம் பெற்றவர்கள் இருக்கவில்லை. எனினும், சமாதான வழிமுறைக்கு எமது ஆதரவு உண்டென்றும், நடுநிலையாளராக நின்று, சமாதானக் குழுக்களின் பணிக்கு உதவி புரிவதாகவும் எல்லாத் தரப்பினருக்கும் நாம் அறிவித்துள்ளோம்.''

## வெளிநாட்டுப் பிரதிநிதிகள் பற்றி இழுபறி

வடகிழக்கிலுள்ள ஆறு பகுதிகளுக்குமாக ஆறு சமாதானக் குழுக்கள் நிறுவப்பட்டபோதும் மூன்று மேற்குலக நாடுகளிலிருந்து நான்கு வெளிநாட்டுப் பிரதிநிதிகளே வந்து சேர்ந்தனர். நோர்வேயிலிருந்து ஓடன் ஹோம், ஜோகன் கபிரியல்சன், ஒல்லாந்திலிருந்து லெப். கேணல் போல்ஹென்றி, கனடாவிலிருந்து மேஜர் ஜெனரல் மில்னர் ஆகியோரே இந்நால்வரும் ஆவர்.

1995 ஜனவரி 19ஆம் நாளன்று, விடுதலைப் புலிகளுக்கு எவ்வித அறிவித்தலும் கொடுக்காமல், இரு வெளிநாட்டுப் பிரதிநிதிகளை திருகோணமலை, மட்டக்களப்பு - அம்பாறைப் பகுதிகளுக்கான சமாதானக் குழுக்களுக்குத் தலைமை தாங்க அரசாங்கம் அனுப்பி வைத்தது. விடுதலைப் புலிகளின் தலைமையுடன் கலந்தாலோசிக்காமல் இரு வெளிநாட்டுப் பிரதிநிதிகளைக் கிழக்கு மாகாணத்திற்கு அனுப்பி வைத்ததை கடுமையாக ஆட்சேபித்து, அரச பிரதிநிதிகளின் தலைவர் திரு. பலப்பத்தபெண்டிக்கு திரு. தமிழ்ச்செல்வன் ஒரு சுருக்கமான கடிதம் அனுப்பி வைத்தார். சிறீலங்கா அரசாங்கமும் விடுதலைப் புலிகளுமாக இணைந்து, நடுநிலைக் கண்காணிப்பாளராக வெளிநாட்டுப் பிரதிநிதிகளை அழைத்திருப்பதால் அவர்கள் தமது பணிகளைப் பொறுப்பேற்பதற்கு முன்னர், விடுதலைப் புலிகளின் தலைமைப்பீடத்துடன் கலந்துரையாடுவது அவசியமெனத் தமிழ்ச்செல்வன் வலியுறுத்தினார். தமிழ்ச்செல்வன் அனுப்பிய கடிதம் வருமாறு:-

13.01.1995

திரு. கே. பலப்பத்தபெண்டி
ஜனாதிபதியின் செயலர்

வெளிநாட்டுப் பிரதிநிதிகள், சமாதானக் குழுக்களின் தலைவர்களாகத் தமது பணிகளைப் பொறுப்பேற்க முன்னராகப் பகை நடவடிக்கைகளின் நிறுத்தம் குறித்து விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடத்துடன் கலந்துரையாடுவது மிகவும் அவசியமானதென விடுதலைப் புலிகள் கருதுகின்றனர். நடுநிலையாளர் என்ற தகைமையுடன் அவர்கள் தமது கடமையைச் சரிவரச் செய்வதற்கு இது முக்கியம்.

விடுதலைப் புலிகளின் தலைமையுடன் கலந்தாலோசிக்காது திருகோணமலை, மட்டு-அம்பாறை சமாதானக் குழுக்களுக்குத் தலைவர்களாக இவர்கள் அனுப்பப்பட்டமைக்கு விடுதலைப் புலிகள் இயக்கம் கடும் ஆட்சேபம் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறது.

திரு. சு.ப.தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர், அரசியல் பிரிவு

13 ஜனவரி 1995

திரு. சு.ப. தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர்
அரசியல்துறை
தமிழீழ விடுதலைப் புலிகள்

ஜனவரி 13ஆம் நாள், சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக நீங்கள் அனுப்பிய செய்தியைப் பெற்றுக் கொண்டோம்.

விடுதலைப் புலிகளின் நிலைப்பாட்டை ஜனாதிபதி அவர்கள் கருத்தில் எடுத்துக் கொண்டார். பகை நிறுத்த மீறல்களைக் கண்காணிக்கும் சமாதானக் குழுக்களின் தலைவர்கள் விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடத்தைச்

சந்தித்துக் கலந்துரையாடுவதற்கான ஒழுங்குகள் செய்யப்பட்டுள்ளன. அவர்கள் தமது கடமைகளைப் பொறுப்பேற்பதற்கு முன்னராக இந்தச் சந்திப்பு இடம்பெறும். இதன்படி திருகோணமலை, மட்டு - அம்பாறை சமாதானக் குழுக்களின் செயற்பாட்டை இடைநிறுத்தி வைத்துள்ளோம்.

அரசாங்கத்தின் அழைப்பின் பேரில் இங்கு வருகை தந்துள்ள சமாதானக் குழுத் தலைவர்களை, ஜனவரி 17ஆம் நாளன்று யாழ்ப்பாணம் அனுப்பி வைக்கிறோம். இவர்களது நலனுக்குப் பொறுப்பாகவுள்ள அரசாங்க அதிகாரி ஒருவரும் அவர்களுடன் யாழ்ப்பாணம் வருவார். பயண விபரங்களைச் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக உங்களுக்கு அறியத் தருவோம்.

கே.பலப்பத்தபெண்டி
ஜனாதிபதியின் செயலர்

இது இவ்வாறிருக்க, கிழக்கு மாகாணத்தில் அரச ஆயுதப் படைகளுக்கும் விடுதலைப் புலிப் போராளிகளுக்கும் மத்தியில் நிகழ்ந்த சில சம்பவங்கள் காரணமாக முறுகல் நிலை எழுந்தது. பல இராணுவ காவல் நிலைகளில் எமது போராளிகள் தடுத்து நிறுத்தப்பட்டதுடன், ஆயுதங்களைத் தரித்துச் செல்லக் கூடாதெனவும் கடுமையாக எச்சரிக்கப்பட்டனர்.

வட புலத்தில் இத்தகைய பிரச்சினைகள் எழவில்லை. இங்கு இராணுவத்தினர் தமது முகாம்களுக்குள் முடங்கி இருந்தனர். ஆனால் கிழக்கில் இராணுவப் பாதுகாப்பு முறைமை வித்தியாசமானது, சிக்கலானது. கிழக்கு மாகாண நகரங்களிலும் பட்டினங்களிலும் சிங்கள ஆயுதப் படைகள் பெருந்தொகையில் குவிக்கப்பட்டிருந்தன. மூலை முடுக்குகளில் எல்லாம் இராணுவக் காவலரண்கள் அமைக்கப்பட்டிருந்தன. இங்கு இராணுவத்தினருக்கும் போராளிகளுக்கும் மத்தியில் பாதுகாப்பான இடைவெளி இருக்கவில்லை. இதனால் எமது போராளிகள் சுதந்திரமாக நடமாட முடியவில்லை. பல சந்தர்ப்பங்களில் புலிப் படை வீரர்கள் இராணுவத்தினரால் பல மணி நேரமாகத் தடுத்து வைக்கப்பட்டு இம்சைகளுக்கு ஆளாகினர். கிழக்கு மாகாணத்தில் எழுந்துள்ள பாதுகாப்பு

சிக்கல்களைத் தவிர்ப்பதற்கான வழிமுறைகள் பகை நிறுத்த உடன்பாட்டில் இருக்கவில்லை. உடன்பாட்டில் வரையப்பட்ட விதிகளும் கடப்பாடுகளும் கிழக்கு மாகாணக் கள நிலைக்கு உகந்ததாக அமையவில்லை. இதற்கிடையில் சிறீலங்கா அரசாங்கம், ஜனவரி 9ஆம் நாள் விடுத்த ஒருதலைப்பட்சமான பிரகடனத்தில் பல்வேறு கடற் பிராந்தியங்களில் மீன்பிடிக்குத் தடை விதித்தது. அத்தோடு, வடகிழக்குக் கடலில் இரவு நேர மீன்பிடிக்கும் பொதுவாகத் தடை விதிக்கப்பட்டது. வழமையான, சட்டபூர்வமான மீன்பிடிக்கு அரசாங்கத்தின் பாதுகாப்புப் படைகள் இடையூறு விளைவிக்கக் கூடாது என பகை நிறுத்த ஒப்பந்தத்தில் தெளிவாக வரையறுக்கப்பட்டிருக்கிறது. கடற் தளங்கள், கடலோர இராணுவ முகாம்களுக்கு அண்மித்த கடற் பகுதிகளில் மட்டுமே மீன்பிடிப்பதைத் தவிர்க்க வேண்டும் என இரண்டாம் சுற்றுப் பேச்சில் இரு தரப்பினர் மத்தியிலும் இணக்கம் காணப்பட்டது. நிலைமை அப்படியிருக்க, அரசாங்கம் தன்னிச்சையாக மீன்பிடிக்கு இறுக்கமான கட்டுப்பாடுகளை விதித்திருப்பது போர்நிறுத்த நல்லெண்ணத்தை மீறுவதாக அமைந்துள்ளதென்றே நாம் கருதினோம். எனவே, இந்தப் பாரதூரமான பிரச்சினைகளை அடுத்த கட்ட நேரடிப் பேச்சுக்களின்போது விவாதத்திற்கு எடுக்க முடிவு செய்தோம்.

1995 ஜனவரி 14ஆம் நாளன்று, மூன்றாவது கட்டச் சுற்றுப் பேச்சுக்கள் யாழ்ப்பாணத்தில் வழமையான இடத்தில் நிகழ்ந்தன. சென்ற கட்டப் பேச்சில் கலந்து கொண்ட அரச பிரதிநிதிகளே இம்முறையும் பேச்சில் பங்குபற்றினர்.

மோதல்களைத் தவிர்த்து, அமைதி நிலையைச் செம்மையாகப் பேணும் வகையில் பகை நிறுத்தச் செயற்பாட்டு விதிகள் திருத்தி அமைக்கப்பட்டு விரிவாக்கம் செய்யப்பட வேண்டும் என விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள் பேச்சுக்களின் போது வலியுறுத்தினர். கிழக்கு மாகாணத்தில் மோதல் நிலை ஏற்படும் ஆபத்தான சூழ்நிலை உருவாகியிருப்பதாக எடுத்து விளக்கிய புலிகளின் பிரதிநிதிகள், எமது கெரில்லா அணிகளின் நடமாட்டச் சுதந்திரத்திற்கு அரசாங்கம் உத்தரவாதம் அளிக்க வேண்டும் என வற்புறுத்தினர். பகை நிறுத்தத்தைச் சமாதானக் குழுக்கள் சரிவரக் கண்காணிப்பதற்கு ஏதுவாக, கள நில யதார்த்தத்தைக் கருத்தில் கொண்டு, உடன்பாட்டு விதிகளும் கடப்பாடுகளும் மாற்றியமைக்கப்பட்டு விரிவுபடுத்தப்பட வேண்டுமென எமது பிரதிநிதிகள் அரச குழுவினரை வேண்டிக்

கொண்டனர். போர் நிறுத்தச் செயற்பாட்டு விதிகளை விரிவுபடுத்தி, அவற்றை ஒரு தனி ஆவணமாக அல்லது உடன்பாட்டின் துணை ஆவணமாக வரையவேண்டுமெனவும் அவர்கள் வற்புறுத்தினர்.

விடுதலைப் புலிப் பிரதிநிதிகளின் கோரிக்கையை அரசாங்கம் சாதகமாகப் பரிசீலனை செய்யுமென உறுதியளித்த திரு. பலப்பத்தபெண்டி, கிழக்கு மாகாணத்தில் நிலவும் பிரச்சினைகளைத் தமக்கு விபரமாக எழுதி அனுப்பி வைக்குமாறு தமிழ்ச்செல்வனை வேண்டிக் கொண்டார்.

யாழ்ப்பாணக் குடாநாட்டிலிருந்து வன்னிப் பெரு நிலப்பரப்புக்கு ஒரு தரைவழிப் பாதையை திறப்பதற்குப் பூநகரி இராணுவ முகாமை அகற்ற வேண்டுமென்ற புலிகளின் கோரிக்கையை அரச பிரதிநிதிகள் நிராகரித்தனர். பூநகரி கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த இடமென்பதால் பாதுகாப்புக் காரணங்களுக்காக அங்குள்ள இராணுவ முகாமை அகற்ற முடியாதென அவர்கள் வாதிட்டனர். பொதுமக்களின் போக்குவரத்திற்கு வசதியாக, இராணுவ முகாமின் முன்னணி நிலைகளை 600 மீட்டர் தூரம்வரை மட்டும் பின்தள்ளலாம் என யோசனை தெரிவித்த அரச பிரதிநிதிகள், பூநகரி ஊடாகச் செல்லும் பயணிகள் அனைவரும் சோதனைக்கு ஆளாக்கப்படுவர் எனத் தெரிவித்தனர். முன்னணி நிலையைச் சிறிது தூரம் பின்தள்ளும் யோசனை புலிகளுக்கு ஏற்புடையதாக இல்லை. கிளாலி நீரேரியைக் கடந்து வன்னிக்கு சென்று வருவதில் எமது மக்கள் சந்திக்கும் பேராபத்துக்களை விபரமாக எடுத்து விளக்கியும், அரச பிரதிநிதிகள் தமது நிலைப்பாட்டில் இறுக்கமாக நின்றனர்.

கடற் தளங்களுக்கும், கரையோர இராணுவ முகாம்களுக்கும் அண்மித்த கடற் பகுதிகளைத் தவிர்ந்த ஏனைய பிராந்தியங்களில் எமது மக்கள் சுதந்திரமாக மீன்பிடிக்க அனுமதி வழங்க வேண்டுமென்றும், அப் பிராந்தியங்களில் மீன்பிடிக்குத் தடை விதிப்பது பகை நிறுத்த உடன்பாட்டை மீறுவதாக அமையுமென்றும் எமது பிரதிநிதிகள் வாதாடினர். கடற் புலிகளின் நடமாட்டத்தைக் கண்காணிக்கவே இத் தடைகள் விதிக்கப்பட்டிருப்பதாக அரச தரப்புப் பிரதிநிதிகள் கூறினர். சில முக்கிய விடயங்களில் விட்டுக் கொடாத கடும்போக்கைக் கடைப்பிடித்த அரச குழுவினர், எல்லாவற்றிற்கும் 'தேசியப் பாதுகாப்பை' காரணமாகக் காட்டினர்.

இறுதியாக, பொருளாதாரத் தடை நீக்கப் பிரச்சினை விவாதத்திற்கு எடுக்கப்பட்டபொழுது, வெகு சீக்கிரத்தில் மேலும் சில பொருட்களுக்கு அரசாங்கம் தடை நீக்கம் செய்யுமென பலப்பத்தபெண்டி அறிவித்தார். சில பொருட்களுக்கு தடை நீக்கம் செய்திருப்பதாக வர்த்தமானி அறிவித்தல்கள் தெரிவித்தபோதும் இந்தப் பொருட்கள் எதுவுமே எமது மக்களைச் சென்றடையவில்லை எனப் புலிகள் புகார் செய்தனர். வவுனியா எல்லையில் நிலைகொண்டு நிற்கும் அரச படைகள் தடை நீக்கம் செய்யப்பட்ட பொருட்களுக்குத் தடை விதிப்பதாகவும் குற்றம் சுமத்தினர். இந்தப் பிரச்சினையைத் தாம் கவனத்தில் எடுப்பதாக அரச தரப்பில் தெரிவிக்கப்பட்டது.

1995 ஜனவரி 15ஆம் நாள், மூன்றாம் கட்டச் சுற்றுப் பேச்சுக்கள் முடிவுற்ற மறுநாள், கிழக்கு மாகாணக் கள நிலைமைகளை விளங்கப்படுத்தி, திரு. தமிழ்ச்செல்வன் ஜனாதிபதியின் செயலர் திரு. பலப்பத்தபெண்டிக்கு கீழ்க்கண்ட கடிதத்தை அனுப்பி வைத்தார்.

அரசியல் தலைமைச் செயலகம்<br>
யாழ்ப்பாணம்<br>
15.01.1995

திரு. கே. பலப்பத்தபெண்டி<br>
ஜனாதிபதியின் செயலர்<br>
சிறீலங்கா

போர் நிறுத்தத்தைச் சமாதானக் குழுக்கள் சீரான முறையில் கண்காணிப்பதற்கு ஏதுவாக, பகை நிறுத்த உடன்பாட்டின் செயற்பாட்டு விதிகளையும் கடப்பாடுகளையும் மாற்றியமைத்து, விரிவுபடுத்த வேண்டுமெனக் கடைசிச் சுற்றுப் பேச்சில் நாம் இணக்கம் கண்டோம். இத் திருத்தங்களைத் தொகுத்து ஒரு தனி ஆவணமாக, அல்லது உடன்பாட்டின் துணை ஆவணமாக நாம் தயாரித்துக் கொள்ளலாம்.

கிழக்கு மாகாணக் கள நிலவரம் மோசமடைந்து வருவதாலும், அங்கு அமையப் பெற்றிருக்கும் அரச படைகளின் பாதுகாப்புக் கட்டமைப்பு மிகவும் இறுக்கமானதாக, சிக்கலானதாக இருப்பதால், எமது கெரில்லா அணிகளின் சுதந்திரமான நடமாட்டத்திற்கு உறுதியளிக்கும் வகையில் சில ஒழுங்குகள்

செய்யப்படுவது அவசியமாகிறது. இது குறித்து கீழ்க் கண்ட யோசனைகளை நாம் முன்வைக்க விரும்புகிறோம்.

(1) திருகோணமலை, மட்டக்களப்பு, அம்பாறை ஆகிய மாவட்டங்களில், தமது சொந்தப் பாதுகாப்புக்காக எமது போராளிகள் ஆயுதங்களைத் தரித்துச் செல்ல அனுமதிக்க வேண்டும்.

(2) வீதிகள் ஓரமாக அமைந்திருக்கும் பல்வேறு காவல் சாவடி நிலைகளில் எமது போராளிகள் தடுத்து வைக்கப்பட்டுச் சோதனை செய்யப்படுவதை நிறுத்த வேண்டும்.

(3) பொதுமக்கள் மீது ஆயுதப் படைகள் விதிக்கும் பொருளாதாரத் தடைகள் உடனடியாக நீக்கப்பட வேண்டும்.

(4) வீதித் தடைகளையும் சோதனை நிலைகளையும் அகற்றுவது பற்றி ஆயுதப் படைகள் பரிசீலனை செய்வதுடன் சாதாரணப் பயணிகளைக் கடும் சோதனைக்கு உட்படுத்துவதை தவிர்க்க வேண்டும்.

(5) பகை நிறுத்தக் கால கட்டத்தில், வடகிழக்கில் அரசாங்க ஆதரவுடன் நடைபெறும் குடியேற்றத் திட்டங்களை நிறுத்த வேண்டும்.

(6) கிராமங்களைச் சுற்றி வளைத்தல், மற்றும் தேடும் நடவடிக்கைகளையும், காடுகளில் பதுங்கி நிலையெடுப்பதையும் அரச ஆயுதப் படைகள் நிறுத்த வேண்டும்.

(7) கிழக்கு மாகாண நீரேரிகளில் இடையூறுகள் இல்லாது மீன்பிடிக்க அனுமதிக்க வேண்டும்.

சிறீலங்கா அரசாங்கமும் விடுதலைப் புலிகளும் கைச்சாத்திட்ட பகை நிறுத்த உடன்பாட்டின் விதிகளுக்கு அமைவாக, வடகிழக்கு கடற் பிரதேசங்களில் வழமையான, சட்டரீதியான மீன்பிடிக்கு அரசாங்கம் உத்தரவாதம் அளிக்க வேண்டும். கரையோர இராணுவ முகாம்களுக்கும் கடற்படைத் தளங்களுக்கும் அருகாமையில் மீன்பிடியைத்

தவிர்ப்பதற்கு நாம் இணங்கினோம். ஆயினும் மீன்பிடி வலயங்கள் மீது விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகளையும் இரவு மீன்பிடித் தடையையும் அரசாங்கம் நீக்க வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறோம்.

நாம் தெரிவித்த விடயங்களை அவசரமாகப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்வீர்களென நம்புகிறேன்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

சு.ப. தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர், அரசியல்துறை
தமிழீழ விடுதலைப் புலிகள்

1995 ஜனவரி 21ஆம் நாள், ஜனாதிபதியின் செயலர் திரு. பலப்பத்தபெண்டி அரசியற்துறைப் பொறுப்பாளர் திரு.தமிழ்ச்செல்வனுக்கு பதிலனுப்பினார். கிழக்கு மாகாணத்தில் நெருக்கடி நிலையை உருவாக்கி வரும் எமது கெரில்லா அணிகளின் நடமாட்டப் பிரச்சினை குறித்து திரு.பலப்பத்தபெண்டி எவ்வித விளக்கமும் தரவில்லை. அரச படைகளினதும் விடுதலைப் புலிகளதும் களத் தளபதிகள் மத்தியில் தொடர்புகளை ஏற்படுத்தத் தகுந்த ஒழுங்குகள் செய்யப்பட்டு இருப்பதாக மட்டுமே அவர் தெரிவித்தார். அவரது பதிற் கடிதம் வருமாறு:-

21 ஜனவரி 1995

திரு. சு.ப. தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர்
அரசியல்துறை
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக, 1995 ஜனவரி 16ஆம் நாள் நீங்கள் அனுப்பி வைத்த செய்தி கிடைத்தது. நன்றி.

1,2,4,6 என்ற எண்களின் கீழ் நீங்கள் குறிப்பிட்ட விவகாரங்கள் சம்பந்தமாக, சிறீலங்கா இராணுவத்தின் களத் தளபதிகளும், விடுதலைப் புலிகளின் பிரதேசத்

தலைவர்களும் கலந்துரையாடித் தகுந்த ஒழுங்குகளைச் செய்துள்ளனர்.

மூன்றாவது எண்ணின் கீழ் குறிப்பிடப்பட்ட விடயத்தைப் பொறுத்தவரை, எமது கடைசிச் சந்திப்பின்போது தெரிவிக்கப்பட்டது போல் மேலும் சில பொருட்களுக்குத் தடை நீக்கம் செய்யப்பட்டுள்ளது. இது பற்றிய அரச வர்த்தமானியின் பிரதி ஒன்று உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ஐந்தாவது எண்ணின் கீழ் நீங்கள் குறிப்பிட்ட விடயத்தைப் பொறுத்தவரை கிழக்கு மாகாணத்தில் சமீபமாக எதுவித குடியேற்றங்களும் இடம்பெறவில்லை. எனினும், ஆண்டான்குளம், சம்மாந்துறை, உகனப் பகுதிகளில் சிங்கள, தமிழ்க் குடும்பங்களின் மீள் குடியேற்றம் இடம்பெற்றிருக்கிறது. 1992ஆம் ஆண்டிலிருந்து இந்த மீள் குடியேற்றத் திட்டம் நடைபெற்று வருகிறது. இத் திட்டத்தின் கீழ் இப் பகுதிகளில் 1060 தமிழ்க் குடும்பங்கள் மீள் குடியேற்றம் செய்யப்பட்டுள்ளனர்.

ஏழாவது எண்ணின் கீழ் நீங்கள் குறிப்பிட்ட விடயத்தைப் பொறுத்தவரை, மீன்பிடிப் பிரதேசங்களில் தற்போது நிலவும் நடைமுறைகளில் மாற்றம் ஏற்படாது. எனினும் இக் கட்டுப்பாடுகளை படிப்படியாகத் தளர்த்துவது பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்து வருகிறது.

நீங்கள் கொடுத்த அபிவிருத்தித் திட்டங்கள் பரிசீலிக்கப்பட்டு வருகின்றன. இதனை நடைமுறைப்படுத்துவது பற்றிய திட்டத்தை வெகு விரைவில் உங்களுக்குச் சமர்ப்பிப்போம்.

கே. பலப்பத்தபெண்டி
ஜனாதிபதியின் செயலர்

ஜனாதிபதியின் செயலரது கடிதம் சுருக்கமாக, பூடகமாக, உப்புச் சப்பற்றதாக இருந்ததால் விடுதலைப் புலிகளுக்குத் திருப்தி அளிக்கவில்லை. பதில் கடிதத்தில் தனது ஏமாற்றத்தைத் தெரிவித்த தமிழ்ச்செல்வன், பகை நிறுத்த உடன்பாட்டை விரிவுபடுத்தி, செம்மையான செயல் முறைத் திட்டமாக உருவாக்கும் அவசியத்தை வலியுறுத்தினார். அப்படிச்

செய்யாதுபோனால் போர் நிறுத்த உடன்பாட்டை நடைமுறை செய்வதில் பாரதூரமான சிக்கல்கள் எழக்கூடும் என்றும் எச்சரிக்கை செய்தார். தமிழ்ச்செல்வன் எழுதிய பதில் கடிதம் கீழே தரப்படுகிறது:-

அரசியல் தலைமைச் செயலகம்
யாழ்ப்பாணம்
22 ஜனவரி 1995

திரு. கே. பலப்பத்தபெண்டி
ஜனாதிபதியின் செயலர்
சிறீலங்கா

அன்பின் திரு. பலப்பத்தபெண்டி அவர்கட்கு,

1995 ஜனவரி 21ஆம் நாள் திகதியிடப்பட்ட உங்களது கடிதம் கிடைத்தது. நன்றி.

கிழக்கு மாகாணத்தில் பகை நிறுத்த நடைமுறை குறித்து நாம் எழுப்பிய வினாக்களுக்கு நீங்கள் தந்த பதில் மிகவும் சுருக்கமானதாக, தெளிவற்றதாக, திருப்தியற்றதாக அமையப் பெற்றதால் நாம் மிகவும் ஏமாற்றமடைந்தோம்.

நீங்கள் குறிப்பிட்டது போல, அரச படைகளின் களத் தளபதிகளுக்கும் எமது பிரதேசப் பொறுப்பாளர்களுக்கும் மத்தியில் கலந்துரையாடல்கள் நடைபெற்றுப் பொருத்தமான ஒழுங்குகள் எதுவுமே செய்யப்படவில்லை. இவ்விதம் ஒழுங்குகள் செய்யப்படாத காரணத்தினாலேயே கடந்த நேரடிப் பேச்சுக்களின்போது நாம் இந்தப் பிரச்சினையை எழுப்பினோம். அப்பொழுது இப் பிரச்சினைகளை எழுத்தில் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொண்டீர்கள். ஜனவரி 15ஆம் நாள், நான் உங்களுக்கு எழுதிய கடிதத்தில், கிழக்கு மாகாணத்தில் எமது போராளிகளின் நடமாட்டச் சுதந்திரம் பற்றிய பிரச்சினையை எழுப்பியிருந்தேன். தனிப்பட்ட பாதுகாப்புத் தேவை இருப்பதால் எமது போராளிகள் ஆயுதம் தரித்திருப்பது அவசியம் என்பதையும், இராணுவக் காவற் சாவடிகளில் எமது போராளிகள் தடுத்து வைக்கப்பட்டு கடும் சோதனைக்கு ஆளாக்கப்படுவதைத் நிறுத்த வேண்டும்

என்றும் தெரிவித்திருந்தேன். எமது போராளிகள் ஆயுதங்களுடன் நடமாடுவதற்குக் கிழக்கு மாகாண இராணுவக் களத் தளபதிகளே கடும் எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள். நிலைமை அப்படியிருக்கும் பொழுது, இந்தப் பாரதூரமான விவகாரம் குறித்து இரு தரப்பிலும் இணக்கம் காணப்பட்டுள்ளதாக நீங்கள் கூறுவது எமக்கு ஆச்சரியத்தையும் ஏமாற்றத்தையும் தருகிறது.

கிழக்கு மாகாணத்தின் பல்வேறு பகுதிகளில் தமிழ்க் குடிமக்கள் மீது அரசாங்கத்தின் ஆயுதப் படைகளே பொருளாதாரத் தடைகளைத் திணித்து வருகின்றன. உணவுப் பொருட்கள் உட்பட பல அத்தியாவசியப் பொருட்களுக்கு இராணுவத்தினர் தன்னிச்சையான முறையில் கடும் தடைகளை விதித்துள்ளனர். திருகோணமலையிலும் மட்டக்களப்பிலுள்ள கிராமப் பிரதேசங்களில் அரச படைகள் பங்கீட்டு முறையில் உணவுப் பொருட்களைக் கட்டுப்படுத்தி விநியோகிக்கின்றனர். இந்நடவடிக்கைகள் எமது மக்களின் நாளாந்த சீவியத்தை ஆழமாகப் பாதித்து வருகின்றன. கிழக்கு மாகாணத்தில் நிலவும் அநீதியான பொருளாதார ஒடுக்குமுறைகளை நீக்கும்படி நாம் உங்களிடம் வேண்டுகோள் விடுக்க நீங்கள் வடக்கிலுள்ள பொருளாதாரத் தடை பற்றி குறிப்பிடுகிறீர்கள்.

வழமையான, சட்டரீதியான மீன்பிடிக்கு பகை நிறுத்த உடன்பாடு அனுமதிக்கும் போது, மீன்பிடி வலயத்தில் தடைகளையும் கட்டுப்பாடுகளையும் விதிப்பது அமைதி உடன்பாட்டைப் பாரதூரமாக மீறும் செயலென உங்களுக்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

பகை நிறுத்த உடன்பாட்டில் விளக்கமாக விபரிக்கப்படாத சில முக்கிய விடயங்கள் குறித்து ஒரு நடைமுறைச் செயற்பாட்டை, இரு தரப்பினதும் இணக்கப்பாட்டுடன் வகுக்க வேண்டும். இல்லாது போனால் பகை நிறுத்த உடன்பாடும், சமாதானக் குழுக்களும் சரிவர இயங்காது பாரதூரமான சிக்கல்களை எதிர்நோக்க வேண்டி வரும்.

ஆகவே, இந்தப் பாரதூரமான விவகாரங்களுக்கு அவசர, முக்கிய கவனம் செலுத்தி, அரசாங்கத்தின் நிலைப்பாட்டை விளக்கமாக எழுத்தில் தருமாறு கேட்டுக் கொள்கிறேன்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

சு.ப.தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர்
அரசியல் பிரிவு
தமிழீழ விடுதலைப் புலிகள்

## உறுதியற்ற சமாதான உடன்பாடு

நாம் எழுதிய முக்கிய விடயங்கள் எதிலுமே சந்திரிகா அரசாங்கம் விட்டுக் கொடுத்து இணக்கப்பாடு காணத் தயாராக இல்லை என்பது இப்போது எமக்கு நன்கு தெளிவாகியது. கிழக்கு மாகாணத்தில் நிலவிய இறுக்கமான பாதுகாப்புக் கட்டமைப்பை எவ்வகையிலும் தளர்த்துவதை இராணுவ உயர்பீடம் விரும்பவில்லை. அதனால் எமது கெரில்லா அணிகள் ஆயுதம் தரித்தவாறு சுதந்திரமாக நடமாடுவதை இராணுவம் எதிர்த்தது. வடகிழக்குக் கரையோரக் கடலில் கடற் புலிகள் நடமாடுவதை சிறீலங்காக் கடற்படை வன்மையாக எதிர்த்தது. அதனால் மீன்பிடிக் கட்டுப்பாடுகள் தொடர்வதையே கடற்படை விரும்பியது. ஆயுதப் படைகளின் அழுத்தத்தால், இந்த விடயங்களில் கடும்போக்கைக் கடைப்பிடிக்க நிர்ப்பந்திக்கப்பட்டதால், பகை நிறுத்த உடன்பாட்டைத் திருத்தியமைத்து விரிவுபடுத்த அரசாங்கம் தயாராக இல்லை. கிழக்கு மாகாணத்தில் முறுகல் நிலையைத் தணிப்பதற்கும், போர் நிறுத்த ஆவணத்தில் திருத்தங்கள் செய்வதற்கும் மூன்றாம் கட்டப் பேச்சுக்களின் போது இணக்கம் தெரிவித்த அரச பிரதிநிதிகள் கொழும்பு சென்றதும் தமது நிலைப்பாட்டை மாற்றிக் கொண்டனர். கிழக்கு மாகாணப் பிரச்சினைகள் குறித்து எழுத்து வடிவத்தில் விபரம் தருமாறும், அவை குறித்து எமது இயக்கத்தின் யோசனைகளைத் தெரிவிக்குமாறும் தமிழ்ச்செல்வனைக் கேட்டுக் கொண்ட பலப்பத்தபெண்டி, பின்னர் தமது நிலைப்பாட்டை மாற்றிக் கொண்டு கடும் போக்கைக்

கடைப்பிடித்தார்.

அடுத்ததாக, போர் நிறுத்தத்தைக் கண்காணிக்க வந்திருக்கும் வெளிநாட்டுப் பிரதிநிதிகளை சந்தித்துக் கலந்துரையாட நாம் விரும்பினோம். இனப் பிரச்சினை பற்றியும், தமிழரின் ஆயுதப் போராட்டம் பற்றியும், முக்கியமாக வடகிழக்குக் கள நிலவரங்கள் குறித்தும் அவர்களுக்கு எடுத்துக் கூற விரும்பினோம். போரில் ஈடுபட்ட இரு தரப்பும், அதாவது சிறீலங்கா அரசும் தமிழீழ விடுதலைப் புலிகளும், கூட்டாக இணைந்தே வெளிநாட்டுப் பிரதிநிதிகளை இங்கு அழைத்துள்ளதால், இவர்கள் சமாதானக் குழுக்களின் தலைமைப் பதவிகளைப் பொறுப்பேற்பதற்கு முன்னராக விடுதலைப் புலிகளின் தலைமையை சந்திப்பதுதான் முறையான இராஜதந்திர நியமம். இதை நாம் சுட்டிக் காட்டி, அவர்களைச் சந்திப்பதற்கு வேண்டுகோள் விடுத்த போது அரசாங்கம் அதற்கு இணங்கியது. ஆயினும் அந்தச் சந்திப்பை வேண்டுமென்றே தள்ளிப் போட்டு வந்தது.

பகை நிறுத்த உடன்பாடு மிகவும் சுருக்கமானதாக, மிகவும் வரையறுக்கப்பட்டதாக, தெளிவற்றதாக இருந்ததால், அமைதி காக்கும் பணியைப் பொறுப்பேற்கும் அந்நிய நாட்டவர்க்கு இந்த ஆவணம் போதுமானதாக அமையவில்லை என்பதே எமது கருத்து. அதுவும், சிக்கலான கள நிலைபற்றியும், தமிழர் எதிர்கொள்ளும் நெருக்கடிகள் பற்றியும் எதுவுமே அறியாத வெளிநாட்டுப் பிரதிநிதிகள், போதாக் குறையான போர்நிறுத்த ஆவணத்துடன், நடுநிலையான கண்காணிப்பை மேற்கொள்வது மிகவும் சிரமமானது. இதன் காரணமாகவே, தெளிவான விதிகள், வரையறைகள், கடப்பாடுகளைக் கொண்டதாகப் பகை நிறுத்த உடன்பாடு மாற்றியமைக்கப்பட வேண்டும் என்றும் அப்படிச் செய்வதால் மட்டுமே சிறப்பான முறையில் பாரபட்சம் அற்றதாக, அமைதி பேணப்படுவது சாத்தியமாகும் என்றும் நாம் கருதினோம். எமது நிலைப்பாடு பற்றித் தெளிவாக அரச பிரதிநிதிகளுக்கு விளக்கம் அளிக்கப்பட்டது. எமது நிலைப்பாட்டிலுள்ள நியாயப்பாடுகளை அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். இப் பிரச்சினை பற்றி அரச உயர் மட்டத்தில் கதைப்பதாக உறுதியளித்தார்கள். ஆயினும் கொழும்பு சென்றதும் அவர்கள் தமது நிலைப்பாட்டை மாற்றிக் கொண்டார்கள்.

ஜனாதிபதியின் செயலர் பலப்பத்தபெண்டி

தமிழ்ச்செல்வனுக்கு எழுதிய பதிற் கடிதம் கசப்புணர்வு மிக்கதாக இருந்தது. தமிழ்ச்செல்வன் இப்பொழுது எழுப்பும் பிரச்சினைகள், அப்பொழுது, அதாவது பகை நிறுத்த ஒப்பந்தம் கைச்சாத்திடுவதற்கு முன்னராக, விவாதிக்கப்பட்டு இணக்கம் காணப்பட்டிருக்க வேண்டும் என்பது அவரது வாதம். விடுதலைப் புலிகள் இயக்கம் புதிதாகப் பிரச்சினைகளை எழுப்பினால் பகைநிறுத்த உடன்பாட்டைத் தொடர்ந்து செயற்படுத்தும் முயற்சிக்குப் பாரதூரமாக இடையூறுகள் ஏற்படலாம் என்றும் அவர் எச்சரித்தார். பலப்பத்தபெண்டியின் கடிதத்தைக் கீழே பிரசுரிக்கிறோம்.

26 ஜனவரி 1995

திரு. சு.ப. தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர்
அரசியல் பிரிவு
தமிழீழ விடுதலைப் புலிகள்
தமிழீழம்

1995 ஜனவரி 22ஆம் நாள் திகதியிட்ட உங்களது கடிதம் கிடைக்கப் பெற்று அரசாங்கத்தின் பரிசீலனைக்கு உட்படுத்தப்பட்டது. கீழ்க் கண்ட முறையில் உங்களுக்குப் பதிலெழுதுமாறு நான் பணிக்கப்பட்டுள்ளேன்.

உங்களது கடிதத்தில் தரப்பட்டுள்ள உள்ளடக்கத்தை எமது அரசாங்கம் மிகவும் கவனமாகப் பரிசீலனை செய்தது. பகை நிறுத்த உடன்பாடு திருத்தப்பட்டு, விரிவுபடுத்தப்பட்டு செயல்முறைத் திட்டமாக உருவாக்கம் பெறாவிடில் போர் நிறுத்த அமுலாக்கம் பாரதூரமான விளைவுகளைச் சந்திக்க நேருமென நீங்கள் குறிப்பிட்டுள்ளது எமக்கு ஆச்சரியத்தையும் ஏமாற்றத்தையும் தருகிறது.

அமைதி பேணும் நடைமுறை ஒழுங்குகளில் இணக்கம் கண்டு, அரசாங்கமும் விடுதலைப் புலிகள் இயக்கமும் எழுத்து வடிவில் செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தின் அடிப்படையிலேயே பகை நிறுத்தம்

ஆரம்பமாகியது. அமைதி பேணும் காலத்தில், போர் நிறுத்த மீறல்களைக் கண்காணித்து, தகராறுகளைத் தீர்த்து வைப்பதற்கான சமாதானக் குழுக்கள் உடனடியாக நிறுவப்பட வேண்டுமென இரு தரப்பும் இணங்கின. இரு தரப்பினரதும் பரஸ்பர இணக்கப்பாட்டிலேயே, சமாதானக் குழுக்களுக்குத் தலைமை தாங்கும் பொருட்டு மூன்று மேற்குலக நாடுகளிலிருந்து நான்கு வெளிநாட்டுப் பிரதிநிதிகள் வரவழைக்கப்பட்டனர். இவர்கள் இந் நாட்டுக்கு வருகை தந்து இரு வாரங்கள் ஆகியும், உங்களது எதிர்ப்புக் காரணமாக இன்னும் செயற்பட முடியாமல் இருக்கிறார்கள். வெளிநாட்டுப் பிரதிநிதிகளை நியமிப்பது குறித்தும் கண்காணிப்புக் குழுக்களில் அவர்களது பணியைத் தொடங்குவது பற்றியும் நாம் இணக்கம் கண்டபோதும், உங்களது நிலைப்பாடு காரணமாக இக் குழுக்கள் இன்னும் செயற்படாமல் இருக்கின்றன. பகை நிறுத்தம் அமுலுக்கு வந்ததை அடுத்து இந்தக் குழுக்கள் நிறுவப்பட்டன. உங்களது சமீபத்திய கடிதங்களில் எழுப்பப்படும் பிரச்சினைகளுக்குப் புறம்பானதாகவே இக் குழுக்கள் இயங்கவுள்ளன. இரு தரப்பினருக்கும் மத்தியில் பகை நிறுத்தம் கைச்சாத்திடப்பட்ட வேளையில் விவாதிக்கப்படாத பிரச்சினைகளை நீங்கள் இப்பொழுது எழுப்புவது எமக்கு ஏற்புடையதல்ல. உங்களது இந்தப் போக்குத் தொடருமானால் பகை நிறுத்தத்தைத் தொடர்வதில் பாரதூரமான இடையூறுகள் ஏற்படுவது மட்டுமன்றி, அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் தோன்றிவரும் பரஸ்பர நம்பிக்கைக்கும் பங்கம் ஏற்படலாம். இந்தப் பிரச்சினையுடன் தொடர்புடையதான சில சம்பவங்களைக் கால வரிசையில் திருப்பிக் கூற விரும்புகிறேன்.

(1) 1995 ஜனவரி 3இல் நிகழ்ந்த சந்தப்பின்போது சமாதானக் குழுக்களை நியமிப்பது என்றும், அக் குழுக்களின் தலைவர்களாக வெளிநாட்டுப் பிரதிநிதிகளை வரவழைப்பதென்றும் முடிவு எடுக்கப்பட்டது. இதற்கு நீங்கள் நிபந்தனையற்ற

ஆதரவு தெரிவித்தீர்கள். இந்தக் குழுக்களில் அங்கத்துவம் வகிக்கும் விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளின் பட்டியலைக் கூட அனுப்பி வைத்தீர்கள். அரசாங்கமும் தனது பிரதிநிதிகளின் பட்டியலை உங்களுக்கு அனுப்பி வைத்தது.

(2) வெளிநாடுகளிலிருந்து வருகை தந்த பிரதிநிதிகளில் இருவரைத் திருகோணமலைக்கும் மட்டக்களப்புக்கும் அனுப்பி வைத்தோம். அங்கு கண்காணிப்புக் குழுக்கள் உடனடியாக இயங்குமென எதிர்பார்த்தோம். ஆனால் வெளிநாட்டுப் பிரதிநிதிகள் விடுதலைப் புலிகளின் தலைமையைச் சந்திப்பதற்கு முன்னர் இந்தக் குழுக்கள் இயங்கக் கூடாதென நீங்கள் திடீரென அரசாங்கத்திற்கு அறிவித்தீர்கள். உங்களது அறிவிப்பால், பலருக்கு வசதியீனங்கள் ஏற்பட்ட போதும், நீங்கள் கேட்டுக் கொண்டதற்கு இசைவாக, வெளிநாட்டுப் பிரதிநிதிகளை உங்களைச் சந்திப்பதற்காக யாழ்ப்பாணம் அனுப்பி வைக்க அரசாங்கம் இணங்கியது.

(3) 1995 ஜனவரி 16ஆம் நாள் திகதியிடப்பட்ட உங்களது கடிதத்தின்படி, மேலும் உங்களது நிலைப்பாட்டில் ஒரு மாற்றம் தென்பட்டது. அதில் ஏழு கோரிக்கைகளை முன்வைத்த நீங்கள், கண்காணிப்புக் குழுக்கள் செயற்பட ஆரம்பிப்பதற்கு முன்னர் உங்களது கோரிக்கைகள் நிறைவு செய்யப்பட வேண்டும் எனக் கேட்டுக் கொண்டீர்கள். உங்களது கோரிக்கையைத் திருப்திப்படுத்தும் வகையில், 1995 ஜனவரி 21ஆம் நாள் அரசாங்கம் உங்களுக்கு ஒரு பதில் கடிதத்தை எழுதியது.

1995 ஜனவரி 22ஆம் நாள், நீங்கள் எழுதிய கடிதத்தில் தெரிவிக்கப்பட்ட கருத்துக்களைப் பார்க்கும்போது, எந்தச் சூழ்நிலையிலும் இந்தக் குழுக்கள் செயற்படுவதை நீங்கள் அனுமதிக்கப் போவதில்லை என்பது தெளிவாகிறது.

ஜனவரி 16இல் நீங்கள் எழுப்பிய பிரச்சினைகள் குறித்து சிறீலங்கா ஆயுதப் படைகளின் களத் தளபதிகளுக்கும் விடுதலைப் புலிகளின் பிரதேசத்

தலைவர்களுக்கும் மத்தியில் இணக்கப்பாடு ஏற்பட்டிருக்கிறது. திருகோணமலை, மட்டக்களப்பு பகுதிகளில் இரு தரப்பினர் மத்தியில் ஏற்பட்ட உடன்படிக்கையின் பிரதிகளை இத்துடன் இணைத்துள்ளோம்.

நீங்கள் எழுப்பிய பிரச்சினைகள் பலவற்றிற்கு அரசாங்கம் தீர்வு கண்டுள்ளது. பகை நிறுத்த உடன்பாட்டின் மூல ஆவணத்தை மாற்றுவது அவசியமில்லை என்பதே அரசாங்கத்தின் நிலைப்பாடு. அமைதி நிலை தொடர்ந்து, கண்காணிப்புக் குழுக்கள் இயங்கும் அதேவேளை, புதிய பிரச்சினைகள் எழும்போது அவற்றைத் தீர்த்துக் கொள்ளலாம். ஜனவரி 27ஆம் நாளிலிருந்து 30ஆம் நாள்வரை, உங்களுக்கு வசதியான ஒரு தினத்தை அறிவித்தால் வெளிநாட்டுப் பிரதிநிதிகளை யாழ்ப்பாணம் அனுப்பி வைக்க அரசாங்கம் ஒழுங்குகளைச் செய்யும்.

உணவுப் பொருட்கள் உட்பட பல அத்தியாவசியப் பொருட்களுக்குக் கடும் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருப்பதாக நீங்கள் தெரிவித்த புகாரை அடுத்து, உணவுப் பொருட்கள் மற்றும் அத்தியாவசியப் பொருட்களின் விநியோகத்திற்கும் கட்டுப்பாடுகள் விதிக்கக் கூடாதென அரச ஆயுதப் படைகளுக்கு கட்டளை பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. பொருளாதாரத் தடைகளைத் தளர்த்துவது குறித்துக் கடந்த பேச்சுக்களில் விடுக்கப்பட்ட கோரிக்கைக்கு இசைவாக மேலும் சில பொருட்களுக்குத் தடை நீக்கம் செய்யப்பட்டுள்ளது. அந்தப் பொருட்களின் பட்டியலை இத்துடன் இணைத்துள்ளோம்.

பகை நிறுத்த உடன்பாடு வெற்றிகரமாக நடைமுறைப்படுத்தப்பட்டு, மீன்பிடிக் கட்டுப்பாடுகள் மீறப்படாத பட்சத்தில் மீன்பிடித் தடைகளை தளர்த்துவது குறித்து அரசாங்கம் பரிசீலனை செய்யும்.

பகை நிறுத்த உடன்பாடு அமுலுக்கு வந்ததிலிருந்து நீங்கள் பெரும் தொகையில் போர்நிறுத்த மீறல்களைச் செய்திருப்பதாக எமது படைகள் புகார் செய்துள்ளன. இந்தப் போர்நிறுத்த மீறல் சம்பவங்கள் அடங்கிய பட்டியல் ஒன்றும்

இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. இந்தப் போர் நிறுத்த மீறல்கள் பற்றி நீங்கள் நன்கு அறிவீர்கள். இந்தச் சம்பவங்களில் பெரும்பாலானவை, எமது களத் தளபதிகளுக்கும் உங்களது பிரதேசப் பொறுப்பாளர்களுக்கும் மத்தியில் நிகழ்ந்த சந்திப்புகளின் போது சுமுகமாகப் பேசித் தீர்க்கப்பட்டுள்ளன.

உங்கள் நேர்மையுள்ள

கே.பலப்பத்தபெண்டி
ஜனாதிபதியின் செயலர்

சில பொருட்களுக்குத் தடை நீக்கம் செய்துள்ளதாகத் தெரிவித்துப் பாதுகாப்பு அமைச்சின் செயற்பாட்டுத் தலைமையகம் வெளியிட்ட அறிக்கையும் இக்கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்தது. அந்த அறிக்கை வருமாறு:-

21 ஜனவரி 1995
செயற்பாட்டுத் தலைமையகம்
பாதுகாப்பு அமைச்சு
செய்தி ஆணையாளர்
அறிக்கை 01

**வடக்குக் கிழக்கு மாகாணங்களுக்கான**
**தடைசெய்யப்பட்ட பொருட்கள்**

வட மாகாணத்தில் கீழ்க் கண்ட பொருட்களுக்கான தடை நீக்கப்பட்டுள்ளது.

விளையாட்டுத் துப்பாக்கிகள்
மின்சாரக் கம்பிகள்
மின்சார/ மின்னியக்கக் கருவிகள்
மின்சார/ மின்னியக்க விளையாட்டுப் பொருட்கள்
அலுமினிய பாத்திரங்கள்
சாக்குகள்
நுண்ணிய உருள் குண்டுகள்
மோட்டார் வாகன உதிரிப் பாகங்கள்
அச்சு இயந்திரங்கள்
தங்கம்

இரசாயனப் பொருட்கள்
சிறு மின்கலங்கள் (Penlight Batteries) தவிர்ந்த ஏனைய மின் கலங்கள்

ஜே.கே.என்.ஜெயக்கொடி
பிரிகேடியர்
தலைமை அதிகாரி

சமாதானக் குழுக்களின் செயற்பாட்டை நாம் வேண்டுமென்றே தடுப்பதாகப் பலப்பத்தபெண்டி முன்வைத்த குற்றச்சாட்டைத் தமிழ்ச்செல்வன் முற்றாக நிராகரித்தார். இந்தக் குற்றச்சாட்டு தவறானது என்றும் விடுதலைப் புலிகளின் நிலைப்பாட்டைச் சரிவரப் புரியாததால் எழுந்த தப்பபிப்பிராயம் என்றும் தமிழ்ச்செல்வன் தனது பதில் கடிதத்தில் விளக்கினார். இப்படியான பாரதூரமான விடயங்களை அடுத்த சுற்றுப் பேச்சில் நேரடியாகக் கதைத்துத் தீர்த்துக் கொள்ளலாம் என்றும் அவர் குறிப்பிட்டார். அவரது கடிதத்தின் விபரம் வருமாறு:-

தலைமைச் செயலகம்
அரசியல் துறை
யாழ்ப்பாணம்
03.02.1995

திரு.கே.பலப்பத்தபெண்டி
ஜனாதிபதியின் செயலர்
கொழும்பு
சிறீலங்கா

அன்பின் திரு.பலப்பத்தபெண்டி அவர்கட்கு,

1995 ஜனவரி 27ஆம் நாள் திகதியிடப்பட்ட கடிதத்திற்கு நன்றி.

கண்காணிப்புக் குழுக்களின் செயற்பாடு பற்றிய எமது நிலைப்பாடு குறித்துத் தவறான கருத்து எழுந்துள்ளதால் முதலில் அது குறித்துத்

தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

இன நெருக்கடியில் சம்பந்தப்பட்ட இரு தரப்பினர் என்ற ரீதியில், சிறீலங்கா அரசாங்கமும் விடுதலைப் புலிகள் இயக்கமும் இணைந்தே, பகை நிறுத்தக் கண்காணிப்புக் குழுக்களுக்குத் தலைமை தாங்குவதற்கு மூன்று மேற்குலக நாடுகளிலிருந்து வெளிநாட்டுப் பிரதிநிதிகளை வரவழைத்தோம். ஒரு முக்கியமான பணியைப் பக்க சார்பின்றிச் செயற்படுத்த வேண்டும் என்ற நோக்கில், நாம் இரு தரப்பினருமாக இணங்கி, நடுநிலைக் கண்காணிப்பாளராக இவர்களை வரவழைத்தோம். அங்கீகாரம் வழங்கப்பட்ட இந்த வெளிநாட்டுப் பிரதிநிதிகள், தமது பணிகளைப் பொறுப்பேற்பதற்கு முன்னராக தம்மை வரவழைத்த இரு தரப்புப் பிரதிநிதிகளையும் சம்பிரதாயபூர்வமாகச் சந்திப்பார்கள் என நாம் எதிர்பார்த்தோம். அவர்களது நடுநிலைத் தகைமையை உறுதிப்பாடு செய்யவும், எமது நெருக்கடி சம்பந்தமான புரிந்துணர்வை வளர்க்கவும் இந்தச் சந்திப்பு முக்கியமானது எனவும் நாம் கருதினோம். தொலைத் தொடர்பு மற்றும் போக்குவரத்து வசதிகளையுடைய உங்களுடைய அரசு இந்தச் சந்திப்புக்கான ஒழுங்குகளைச் செய்வதே பொருத்தமான இராஜதந்திர ஒழுங்கு மரபு என நாம் கருதினோம். ஆனால் உங்களது அரசாங்கத்தின் தலைவர்கள், இந்த வெளிநாட்டுப் பிரதிநிதிகளைச் சந்தித்த பின்னர், எமக்கு அந்த நல்வாய்ப்பினைத் தராது, உடனடியாகவே பணிகளைப் பொறுப்பேற்க திருகோணமலைக்கும் மட்டக்களப்பிற்கும் அவர்களை அனுப்பி வைத்துள்ளனர். இது குறித்தே நாம் எமது ஆட்சேபனையைத் தெரிவித்ததுடன் வெளிநாட்டுப் பிரதிநிதிகளைச் சந்திப்பதற்கு வேண்டுகோள் விடுத்தோம். எமது வேண்டுகோள் சரியானதும் நியாயமானதும் என்றே நாம் கருதுகிறோம்.

இதனை அடிப்படைக் காரணமாகக் கொண்டே நாம் கண்காணிப்புக் குழுக்கள் இயங்குவதற்கு முட்டுக் கட்டை போடுவதாக எம் மீது அபாண்டமான குற்றச்சாட்டைச் சுமத்தியுள்ளீர்கள். இந்தப் பார்வை தவறானது. எமது நிலைப்பாடு பற்றிய முற்றிலும்

தவறான கண்ணோட்டத்தில் பிறந்தது.

போர் நிறுத்தம் செம்மையான முறையில் சிறப்பாக இயங்க வேண்டும் என்ற காரணத்தினாலேயே கண்காணிப்புக் குழுக்கள் செயற்படுவதற்கு முன்னராக சில முக்கிய விடயங்கள் குறித்து அரசாங்கத்திடம் விளக்கம் கேட்டோம். கடந்த பேச்சுக்களின்போது இப் பிரச்சினைகளுக்கு நான் உங்களிடம் விளக்கம் கோரியபொழுது, இவற்றைத் தெளிவாக எழுத்தில் தருமாறு கேட்டுக் கொண்டீர்கள். உங்களது கோரிக்கைக்கு இணங்கவே, பிரச்சினைகளை வரிசைப்படுத்தி எழுதியனுப்பினேன். அதற்கு நீங்கள் பதிலளிக்கையில் நாம் எமது நிலைப்பாட்டை மாற்றிவிட்டதாகவும், புதிய கோரிக்கைகளை முன் வைப்பதாகவும் குற்றம் சுமத்துகிறீர்கள்.

அரசாங்கமும் விடுதலைப் புலிகளின் தலைமையும் இணைந்து இறுதி முடிவுகளை எடுக்கும் வரை, தற்காலிகமாக, உள்ளூர் மட்டத்தில், அவசரப் பிரச்சினைகளையும் தகராறுகளையும் பேசித் தீர்ப்பதென திருகோணமலையிலும் மட்டக்களப்பிலும் எமது பிரதேசத் தலைவர்களும் இராணுவக் களத் தளபதிகளும் சந்தித்து முடிவெடுத்துள்ளனர் என்பதை நாம் ஏற்றுக் கொள்கிறோம். பகை நிறுத்த உடன்பாட்டில் குறிப்பிட்டிருப்பது போல, உள்ளூர் மட்டத்தில் இரு தரப்புக் களத் தளபதிகளும் கலந்துரையாடிச் சில தகராறுகளுக்குத் தீர்வு காண்பதை நாம் ஏற்றுக் கொள்கிறோம். ஆயினும் இவை தற்காலிகமாக, பிராந்திய மட்டத்தில் செய்யப்படும் ஒழுங்குகள். போர் நிறுத்த செயற்பாட்டு ஒழுங்கில் கையாளப்பட வேண்டிய பொதுவான பிரச்சினைகள் அரசாங்கத்தினதும் விடுதலைப் புலிகளினதும் உயர்மட்டத்தில் பேசி இணக்கம் காணப்பட வேண்டியவை. ஆகவேதான் பல பொதுவான விடயங்கள் மேலும் விவாதிக்கப்பட்டு, தெளிவு படுத்தப்பட்டு, இணக்கம் காணப்பட வேண்டும் என்பதை வற்புறுத்த விரும்புகிறோம். இவ்விதம் இரு தரப்பும் பிரச்சினைகளுக்கு நல்லிணக்கம் கண்டுகொள்ளும் பொழுதுதான் பகை நிறுத்தம் சிறப்பான முறையில்

செயல்படுத்துவது சாத்தியமாகும்.

இப்படியான பாரதூரமான விடயங்களைப் பற்றி அடுத்த சுற்று நேரடிப் பேச்சுக்களின் போது கலந்துரையாடி நல்லிணக்கம் காண்பதுதான் உகந்தது எனக் கருதுகிறோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

சு.ப. தமிழ்ச்செல்வன்
அரசியல் பொறுப்பாளர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

## வெளிநாட்டுப் பிரதிநிதிகள் - புலிகள் சந்திப்பு

நீண்ட நாட்களாக இழுத்தடித்த பின்பு, இறுதியில் நான்கு வெளிநாட்டுப் பிரதிநிதிகளையும் விடுதலைப் புலிகளைச் சந்திப்பதற்காக யாழ்ப்பாணம் அனுப்பி வைக்க சந்திரிகாவின் அரசு முடிவெடுத்தது. விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளை சந்திக்க ஆவல் தெரிவித்து இவர்கள் நால்வரும் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக எமக்கு ஒரு செய்தியை அனுப்பியிருந்தார்கள். இந்தச் செய்தி வருமாறு:-

கொழும்பு
31 ஜனவரி 1995

அன்புடையீர்,

பகை நிறுத்த உடன்பாட்டுக்கு அனுசரணையாக சிறீலங்கா அரசாங்கமும், தமிழீழ விடுதலைப் புலிகளும் அமைத்துள்ள சமாதானக் குழுக்களின் சர்வதேசத் தலைவர்களாகிய நாம் நால்வரும் விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளைச் சந்திப்பதற்கான காலமும் தகுந்த சூழலும் ஏற்பட்டள்ளதாகவே கருதுகிறோம்.

விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளையும், கண்காணிப்புக் குழுக்களுக்கு விடுதலைப் புலிகளால் நியமிக்கப்பட்ட உறுப்பினர்களையும் சந்தித்து, எம்மை அறிமுகம் செய்து கொண்டால் எல்லோருக்கும் அது

அளப்பரிய நன்மை பயப்பதாக அமையும்.

வெகு சீக்கிரத்தில் உங்களது பிரதிநிதிகளை நாம் சந்திப்பதற்கு தயாராக இருக்கிறோம்.

உங்கள் நேர்மையுள்ள

ஜோகன் கபிரியல் சென், ஓடன் ஹோம்,
போல் ஹோஸ்ரிங், கிளைவ் மில்னர்

எமது அரசியல்துறைப் பொறுப்பாளர் திரு. தமிழ்ச்செல்வன், வெளிநாட்டுப் பிரதிநிதிகளுக்குக் கீழ்க் கண்ட பதிலை அனுப்பி வைத்தார்.

தலைமைச் செயலகம்
அரசியல் பிரிவு
யாழ்ப்பாணம்
01.02.1995

கண்காணிப்புக் குழுத் தலைவர்கள்
கொழும்பு
சிறீலங்கா

அன்புடையீர்,

சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் ஊடாக 1995 ஜனவரி 31ஆம் நாளன்று நீங்கள் அனுப்பி வைத்த செய்திக்கு மிகவும் நன்றி.

1995 பெப்ரவரி ஐந்தாம் நாள் உங்களை யாழ்ப்பாணத்தில் வரவேற்க நாம் ஆயத்தமாக இருக்கிறோம் என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம். இது தொடர்பான ஒரு கடிதத்தை ஜனாதிபதியின் செயலர் திரு. பலப்பத்தபெண்டிக்கு அனுப்பி வைத்திருக்கிறோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

திரு. சு.ப.தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர்
அரசியல் பிரிவு

நோர்வே நாட்டைச் சேர்ந்த ஓடன் ஹோம், ஜோகன் கபிரியல்சென், நெதர்லாந்தைச் சேர்ந்த லெப்.கேணல் போல் ஹென்றி ஹோஸ்ரிங், கனடாவைச் சேர்ந்த மேஜர் கிளைவ் மில்னர் ஆகிய வெளிநாட்டுப் பிரதிநிதிகள், பெப்ரவரி ஐந்தாம் நாட் காலை பத்து மணியளவில் சிறீலங்கா இராணுவ உலங்குவானூர்தி மூலம் யாழ்ப்பாணம் வந்து சேர்ந்தார்கள். சென். ஜோன்ஸ் கல்லூரி மைதானத்தில் வந்திறங்கிய இவர்கள், சுண்டுக்குழியிலுள்ள எமது அரசியல் தலைமைச் செயலகத்திற்கு அழைத்து வரப்பட்டார்கள். தலைவர் பிரபாகரனும், நானும், தமிழ்ச்செல்வனும் இவர்களை வரவேற்று ஒரு மணி நேரம் வரை இவர்களுடன் கலந்துரையாடினோம். விடுதலைப் புலிகளின் தலைவரும், இராணுவத் தளபதியுமான பிரபாகரனை நேரில் சந்திக்க வாய்ப்புக் கிட்டியதையிட்டு வெளிநாட்டுப் பிரதிநிதிகள் பெரிதும் மகிழ்ச்சியடைந்தனர்.

வெளிநாட்டுப் பிரதிநிதிகளை வரவேற்றுப் பேசிய தலைவர் பிரபாகரன், விடுதலைப் புலிகளுக்கும் சிறீலங்கா அரசாங்கத்திற்கும் மத்தியில் செய்யப்பட்ட பகை நிறுத்த உடன்பாட்டைக் கண்காணிப்பதற்காக நிபுணர்களை அனுப்பி வைத்தமைக்காக நோர்வே, நெதர்லாந்து, கனடா ஆகிய நாடுகளின் அரசாங்கங்களுக்கு நன்றி தெரிவித்தார். போர் நிறுத்த உடன்பாட்டைச் சிறப்பாகக் கண்காணிக்கும் வகையில் சமாதானக் குழுக்களுக்குச் சகல விதமான ஆதரவையும் ஒத்துழைப்பையும் விடுதலைப் புலிகள் இயக்கம் வழங்குமெனப் பிரபாகரன் உறுதியளித்தார்.

பகை நிறுத்தச் செயற்பாட்டு விதிகளைக் கொண்ட ஆவணம் மிகவும் சுருக்கமானது, மட்டுப்படுத்தப்பட்டது, தெளிவற்றது என்பதுடன் பல சிக்கலான களப் பிரச்சினைகளைக் கையாளக் கூடிய போதுமான வழிமுறைகள் அதில் இருக்கவில்லை என்பதைக் கண்காணிப்புக் குழுக்களின் தலைவர்களுக்கு நாம் தெளிவாக எடுத்து விளக்கினோம். வடகிழக்குப் போர்க் களத்தின் யதார்த்தத்தை அவர்களுக்கு தெளிவுபடுத்திய நாம், அமைதி உடன்பாடு அமுலுக்கு வந்த பின்னர், இரு தரப்பிலிருந்தும் போர் நிறுத்த மீறல் குற்றச்சாட்டுகள் அதிகரித்து வருவதாகவும் சொன்னோம். இரு தரப்பினரதும் இணக்கப்பாட்டுடன், பகை நிறுத்தச் செயற்பாட்டு விதிகள் திருத்தப்பட்டு, விரிவுபடுத்தப்பட்டு ஒரு முழுமையான ஆவணமாக நெறிப்படுத்தப்படாமல், கண்காணிப்புக் குழுக்கள்

அமைதியைக் காப்பது மிகவும் கடினமான பணியாக இருக்கும் என்பதையும் விளக்கிக் கூறினோம்.

அமைதி உடன்பாட்டின் குறைபாடுகள் பற்றி நாம் முன்வைத்த ஆக்கபூர்வமான விமர்சனத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்து கொண்ட வெளிநாட்டுப் பிரதிநிதிகள், தனியாகக் கூடித் தமக்குள்ளே மந்திராலோசனை நடத்தினர். எமது விமர்சனத்தின் அடிப்படையில் பகை நிறுத்த உடன்பாட்டின் மூலப் பிரதியை எடுத்து, பகுதி பகுதியாக மீளாய்வு செய்தனர். இறுதியாக, உடன்பாட்டு ஆவணம் பல குறைபாடுகளைக் கொண்டிருப்பதாகவும், பல சிக்கலான களப் பிரச்சினைகளைக் கையாளக் கூடிய வழி முறைகள் அதில் இருக்கவில்லை என்றும் ஏகமனதாக முடிவெடுத்தனர். இரு தரப்பும் விரைவில் கூடி, பிரச்சினைகளை விவாதித்து, ஒரு முழுமையான ஆவணத்தைத் தயாரித்து உடன்பாட்டு மூலப் பிரதியின் துணைப் பிரதியாக அதை ஏற்றுக் கொள்ள வேண்டுமென ஆலோசனை தெரிவித்தனர். வெளிநாட்டுப் பிரதிநிதிகளுக்குத் துணையாக வருகை தந்த அரச அதிகாரியான பிரிகேடியர் பீரிஸ் கண்காணிப்புக் குழுத் தலைவர்களது மதிப்பாய்வை முழுமையாக ஏற்றுக் கொண்டு, அவர்களது சிபார்சை அரசாங்கத்திற்குத் தெரிவிப்பதாகவும் உறுதியளித்தார். வெளிநாட்டுப் பிரதிநிதிகளுடனான சந்திப்பு புலிகளின் நிலைப்பாட்டுக்குச் சாதகமான முறையில் அமைந்தது. போர் நிறுத்தக் கண்காணிப்பில் அனுபவம் பெற்ற நிபுணர்களின் கருத்தையும் அரசாங்கம் ஏற்றுக் கொள்ள மறுத்தது. அமைதி உடன்பாட்டை விரிவுபடுத்திச் சீரமைக்க மறுத்து, கண்காணிப்புக் குழுக்கள் செயற்படுவதை வேண்டுமென்றே அரசாங்கம் இழுத்தடித்த வேளையில் கிழக்கில் நிலைமை மோசமாகியது. பாரதூரமான போர் நிறுத்த மீறல்கள் நடைபெற்றதாக இரு தரப்பிலிருந்தும் பரஸ்பரம் குற்றச் சாட்டுகள் முன்வைக்கப்பட்டன.

## போர்நிறுத்த மீறல் குற்றச்சாட்டுகள்

1995 ஜனவரி 23ஆம் நாள், ஏழு விடுதலைப் புலிப் போராளிகளுடன் சென்று கொண்டிருந்த கடற்புலிப் படகு ஒன்று, இயந்திரக் கோளாறு காரணமாக, மட்டக்களப்பு மாவட்டத்திலுள்ள கல்குடா கரையோரமாக வந்தடைய நேர்ந்தது.

கல்குடா காவல்துறை நிலையத்திற்கு அண்மித்த பகுதியில் எமது போராளிகள் தரையிறங்கிய காரணத்தினால் அவர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டனர். அவர்களிடமிருந்து ஆயுதங்களும் (ஒரு இயந்திரத் துப்பாக்கி, தானியங்கித் துப்பாக்கிகள்) தொலைத்தொடர்புக் கருவிகளும், படகும் பறிமுதல் செய்யப்பட்டன. பின்னர் கடற்புலிப் போராளிகள் விடுதலை செய்யப்பட்டபோதும், அவர்களது ஆயுதங்களும் படகும், தொலைத்தொடர்புக் கருவிகளும் கையளிக்கப் படவில்லை.

இந்தச் சம்பவம் பகை நிறுத்த உடன்பாட்டை மீறிய பாரதூரமான விடயமென இரு தரப்பும் பரஸ்பரம் குற்றம் சுமத்தின. கல்குடாக் கரையில் தரையிறங்க நேர்ந்தது தற்செயலான நிகழ்ச்சியென விடுதலைப் புலிகள் வாதாடினர். இயந்திரக் கோளாறு காரணமாக தரையிறங்க நேர்ந்தவர்களை கைது செய்து, காவலில் வைத்துத் துன்புறுத்தி, அவர்களது ஆயுதங்களையும் படகையும் பறிமுதல் செய்தது ஒரு பகை நடவடிக்கை என்றும் அது போர் நிறுத்த நல்லெண்ணத்திற்கு விரோதமானது என்றும் புலிகள் தரப்புக் குற்றம் சுமத்தியது. கிழக்கு மாகாணத்தில் நிகழ்ந்த பாரதூரமான போர் நிறுத்த மீறலாக இச் சம்பவத்தைத் திரிவுபடுத்திக் காட்டியது அரசு தரப்பு. படகில் கனரகப் பீரங்கியுடன், கல்குடா காவல்துறை நிலையத்தை நோக்கி புலிகளின் தாக்குதல் அணி ஒன்று நெருங்கி வந்ததாக அரசாங்கம் குற்றம் சுமத்தியது. இந் நிகழ்வு குறித்துத் திரு. பலப்பத்தபெண்டி எமது அரசியல்துறைப் பொறுப்பாளர் தமிழ்ச்செல்வனுக்கு எழுதிய கடிதத்தில், கண்காணிப்புக் குழுக்கள் நிறுவப்பட்டிருந்தால் இத்தகைய சம்பவங்கள் இலகுவில் தீர்த்து வைக்கப்படலாம் எனக் குறிப்பிட்டார்.

07 பெப்ரவரி 1995

திரு. சு.ப. தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர்
அரசியல் பிரிவு
தமிழீழ விடுதலைப் புலிகள்

அன்பின் திரு. தமிழ்ச்செல்வன் அவர்கட்கு,

அமைதி பேணும் கால கட்டத்தில் நிகழ்ந்து வரும் போர் நிறுத்த மீறல்கள் பற்றி, மிகவும் கவலையுடன்

உங்களுக்கு அறியத் தர விரும்புகிறேன். இவற்றில் சில மீறல் சம்பவங்கள் பாரதூரமானவையாகும்.

1995 ஜனவரி 8ஆம் நாளிலிருந்து நடைபெற்ற போர்நிறுத்த மீறல் சம்பவங்களை அரச படைகள் அவதானித்து, பட்டியலிட்டுத் தந்துள்ளன. அவற்றை இத்துடன் இணைத்துள்ளேன். இந்தப் பட்டியலைப் பார்க்குமிடத்து, கிழக்கு மாகாணத்திலேயே பல பாரதூரமான போர் நிறுத்த மீறல் சம்பவங்கள் நிகழ்ந்துள்ளதைக் காணலாம். கடற் புலிகளின் படகு ஒன்று, கனரகப் பீரங்கியுடன் கல்குடாக் கரையோரத்தில் அமைந்திருக்கும் காவல்துறை நிலையத்தை நோக்கிச் சென்ற சம்பவம் மிகவும் பாரதூரமானது. இச் சம்பவம் அமைதி ஒப்பந்த விதிகளுக்கு மாறானதாகும்.

கோராவள்ளிக்குளம், ஏராளகுளம் ஆகிய பகுதிகளில் விடுதலைப் புலிப் போராளிகள் புதிய படை முகாம்களை நிறுவுவதாக அவதானிக்கப்பட்டது. ஆரம்ப கட்டத்தில் இது குறித்து புலிகளின் பிரதேச தளபதிகளிடம் முறைப்பாடு செய்ததையடுத்து முகாம்கள் அகற்றப்பட்டன. ஆயினும் மீண்டும் இந்த முகாம்கள் நிறுவப்பட்டு வருகின்றன.

மன்னார் மாவட்டத்திலுள்ள முருங்கன் என்னுமிடத்தில் ஒரு காவல்துறை நிலையத்தையும், நட்டுக்குழி என்னுமிடத்தில் ஒரு புதிய படைத் தளத்தையும் விடுதலைப் புலிகள் அமைந்துள்ளதாக அரசாங்கத்திற்குத் தகவல் கிடைத்துள்ளது.

நித்தம்புவ என்ற பட்டினத்தில் காலம் சென்ற திரு. எஸ்.டபிள்யூ.ஆர்.டி. பண்டாரநாயக்கா அவர்களது சமாதி அமையப்பெற்ற இடத்தில் நிகழ்ந்த ஓர் சம்பவம் அரசாங்கத்திற்கு ஆச்சரியத்தைக் கொடுத்திருக்கிறது. திரு. அல்பிரட் பொன்னையா ஜீவரெத்தினம் என்பவர் இந்தச் சமாதியைப் பல கோணங்களில் வைத்துப் புகைப்படம் எடுக்கும் பொழுது கைது செய்யப்பட்டுள்ளார். கிளிநொச்சியிலுள்ள புலிகளின் பொறுப்பாளர்களான செந்தூரன், கண்ணன், ஜான் ஆகியோரது பணிப்பின் பேரில் தான் செயற்பட்டதாக அவர் ஒப்புதல் வாக்குமூலம் அளித்திருக்கிறார். எமது

ஜனாதிபதி அடிக்கடி இவ்விடத்திற்கு சென்று வருவதனால், இது அவரது பாதுகாப்புக்கு எழுந்துள்ள பாரதூரமான அச்சுறுத்தல் என்றே அரசாங்கம் கருதுகிறது.

அமைதி ஒப்பந்தம் கைச்சாத்தானதில் இருந்து, விடுதலைப் புலிகள் அமைப்பு கிழக்கு மாகாணத்தில் பெரும் அளவிலான ஆட்சேர்ப்பு நடவடிக்கையில் ஈடுபட்டு வருவதாக அரச படைகள் அவதானித்துள்ளனர். இந்த ஆட்சேர்ப்பு நடவடிக்கை, கிழக்கில் ஒரு போரைத் தொடங்குவதற்கான முயற்சியாக இருக்கலாமென எமது அரசாங்கம் சந்தேகிக்கிறது.

போர் நிறுத்தக் கண்காணிப்புக் குழுக்கள் செயற்பட்டிருக்குமானால் இத்தகைய மீறல் சம்பவங்களை விசாரித்து, சுமுகமான முறையில் உடனடியாகவே இத் தகராறுகளைத் தீர்த்து வைத்திருக்கலாம் அல்லவா? ஆதலால், கண்காணிப்புக் குழுக்கள் உடனடியாகச் செயற்பட வேண்டுமென அரசாங்கம் கண்டிப்பாக வற்புறுத்துகிறது. வெளிநாட்டுப் பிரதிநிதிகளிடம் நீங்கள் தெரிவித்ததுபோல, எல்லாப் பிரச்சினைகளுக்கும் தீர்வு காணப்படும் வரை கண்காணிப்புக் குழுக்களின் செயற்பாட்டைப் பிற்போடுவது அவசியமில்லை என்றே அரசாங்கம் கருதுகிறது. நீங்கள் எழுப்பிய பிரச்சினைகளை விவாதிக்கும் அதே சமயத்தில், கண்காணிப்புக் குழுக்களும் செயற்படுவதே சாலச் சிறந்த வழி என நாம் கருதுகிறோம்.

மேற்குறிப்பிட்ட விடயங்கள் குறித்து உங்களிடமிருந்து விரைவில் ஒரு தெளிவான பதிலை எதிர்பார்க்கிறேன்.

உங்கள் உண்மையுள்ள

கே.பலப்பத்தபெண்டி
ஜனாதிபதியின் செயலர்

அரசியல்துறைப் பொறுப்பாளர் திரு. தமிழ்ச்செல்வன், ஜனாதிபதியின் செயலருக்கு எழுதிய பதில் கடிதத்தில்

கண்காணிப்புக் குழுக்கள் செயற்படுவதில் எழுந்துள்ள தாமதத்திற்கு அரசாங்கத்தின் போக்கும் அணுகுமுறையும் காரணமெனச் சுட்டிக் காட்டினார். திரு. பலப்பத்தபெண்டி எழுப்பிய மற்றும் சில பிரச்சினைகளுக்கும் அவர் விரிவான பதிலளித்தார். தமிழ்ச்செல்வனின் பதில் கடிதத்தை இங்கு தருகிறோம்.

தலைமைச் செயலகம்
அரசியல் பிரிவு
யாழ்ப்பாணம்
13.02.1995

திரு. கே. பலப்பத்தபெண்டி
ஜனாதிபதியின் செயலர்
கொழும்பு
சிறீலங்கா

திரு. பலப்பத்தபெண்டி அவர்கட்கு,

1995 ஜனவரி 10ஆம் நாள் திகதியிடப்பட்ட உங்களது கடிதத்திற்கு நன்றி.

வெளிநாட்டுப் பிரதிநிதிகளின் பங்களிப்புடன் கண்காணிப்புக் குழுக்கள் செயற்படுவதில் எழுந்துள்ள தாமதம் குறித்து நாம் உண்மையாகவும் ஆழமாகவும் கவலை அடைந்துள்ளோம். இந்தத் தாமதத்திற்கு தமிழீழ விடுதலைப் புலிகள் எந்த வகையிலும் பொறுப்பானவர்கள் அல்லர் என்பதை நாம் வலியுறுத்திக் கூற விரும்புகிறோம். பகை நிறுத்த உடன்பாட்டைச் சீரிய முறையில் செயற்படுத்தச் சமாதானக் குழுக்கள் செயற்படுவது அத்தியாவசியம் என்பதே எமது நிலைப்பாடாகும். அரசாங்கத்தின் போக்கும், அணுகுமுறையுமே இந்தத் தாமதத்திற்குக் காரணம் என நாம் கருதுகிறோம்.

1995 ஜனவரி 14ஆம் நாளன்று, யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற சுற்றுப் பேச்சுக்களின்போது, பகை நிறுத்த உடன்பாட்டிலுள்ள குறைபாடுகள் பற்றிச் சுட்டிக் காட்டிய நாம், அமைதி ஒப்பந்தத்தின் செயற்பாட்டு விதிகளில் திருத்தங்களையும் மாற்றங்களையும் செய்ய வேண்டுமென வலியுறுத்தினோம். கிழக்கு மாகாணத்தில் நிலவும் பிரச்சினைகளைத் தெளிவு

படுத்தி ஜனவரி 15ஆம் நாளன்று உங்களுக்கு விரிவான கடிதம் ஒன்றை நான் அனுப்பி வைத்தேன். கிழக்கில் விடுதலைப் புலிப் போராளிகள் நடமாடுவதில் எழுந்துள்ள சிக்கல்களைச் சுட்டிக் காட்டி, இது பற்றி நாம் கலந்துரையாடி, இப் பிரச்சினைகளைத் தீர்க்கும் வகையில் உடன்பாட்டு நடைமுறை விதிகளை விரிவுபடுத்தி, அவற்றைத் தொகுத்து மூல நகலுக்கு இணை ஆவணமாகச் சேர்க்க வேண்டுமென ஆலோசனை கூறினோம். கண்காணிப்புக் குழுக்கள் தமது பணிகளை இலகுவாகவும் சிறப்பாகவும் செய்ய வேண்டும் என்ற குறிக்கோளுடனேயே இந்த யோசனையைத் தெரிவித்தோம். ஆயுதம் தரித்த எமது போராளிகளின் நடமாட்டம் கரையோரக் கடற் பிராந்தியத்தில் எமது போராளிகளின் அசைவியக்கம், மீன்பிடிக்கான தடைகள், இப்படியாக பல முக்கிய பிரச்சினைகள் அமைதி உடன்பாட்டு வரையறைக்குள் வரவில்லை. அதனால்தான் இப் பிரச்சினைகள் பற்றி அரசும் விடுதலைப் புலிகளும் பேச்சுக்கள் நடத்தி, இணக்கப்பாட்டுக்கு வரவேண்டுமென நாம் வற்புறுத்தினோம். ஆக்கபூர்வமான, நடைமுறைச் சாத்தியமான எமது யோசனைகளுக்கு எதிர் மறையாகவும், பகையுணர்வுடனும் நீங்கள் அளித்த பதில்களும், நான்காவது சுற்றுப் பேச்சுக்களை வேண்டுமென்றே நீங்கள் இழுத்தடிப்பதுமே கண்காணிப்புக் குழுக்கள் செயற்படுவதில் தாமதத்தை ஏற்படுத்தி இருக்கின்றன.

விடுதலைப் புலிகளின் தலைமையை வெளிநாட்டுப் பிரதிநிதிகள் சந்திப்பதை அரசாங்கம் வேண்டுமென்றே இழுத்தடித்தது. இரு இனங்களுக்கு மத்தியில் எழுந்த போர் நெருக்கடிக்கு மத்தியஸ்தம் வகிக்க வரவழைக்கப்பட்ட வெளிநாட்டுப் பிரதிநிதிகள், நெருக்கடியில் சம்பந்தப்பட்ட இரு தரப்புத் தலைமைகளையும் சந்திப்பதே சரியான ஒழுங்கு மரபாகும். அப்பொழுதுதான் அவர்கள் இன நெருக்கடியின் தார்ப்பரியத்தைப் புரிந்து நடுநிலை வகித்துப் பணியாற்ற முடியும். நாம் எவ்வளவோ அழுத்தங்கள் கொடுத்ததற்குப் பின்புதான் நீங்கள்

அவர்களைச் சந்திக்க அனுமதித்தீர்கள். இதனையடுத்து சென்ற வாரம் நாம் அவர்களைச் சந்தித்தோம். நாம் அவர்களைச் சந்தித்தபோது கண்காணிப்புக் குழுக்களின் வெளிநாட்டுப் பிரதிநிதிகள் பங்குகொள்வதை வரவேற்றதுடன், சமாதானக் குழுக்கள் விரைவில் செயற்படச் செய்யவேண்டும் என்ற எமது ஆவலையும் வெளிப்படுத்தினோம். அமைதி உடன்பாட்டிலுள்ள குறைபாடுகளையும் சுட்டிக் காட்டிய நாம், உடன்பாட்டு விதிகள் திருத்தியமைக்கப்பட்டு விரிவாக்கம் செய்யப்பட வேண்டுமென வற்புறுத்தினோம். அவர்களும் தனியே கூடி, மந்திராலோசனை நடத்தி நாம் தெரிவித்த கருத்துக்களுக்கு ஏகமனதாக இணக்கப்பாடு தெரிவித்தனர். வெகு சீக்கரமாக அரசாங்கமும் விடுதலைப் புலிகளும் சந்தித்து, பிரச்சினைகளை விவாதித்து, உடன்பாட்டு விதிகளை மேலும் விரிவுபடுத்தி, அவற்றை ஒரு முழுமையான ஆவணமாகத் தொகுத்து, மூலப் பிரதியின் இணைப்பாகச் சேர்க்க வேண்டுமென யோசனை தெரிவித்தார்கள். இவ்விதம் செய்தால், கண்காணிப்புக் குழுக்கள் திறமையாகச் செயற்படுவதற்கு ஏதுவாக இருக்குமென்பது அவர்களது நிலைப்பாடு. இந்தச் சந்திப்பில் அரச பிரதிநிதியாகக் கலந்து கொண்ட பிரிகேடியர் பீரிஸ் வெளிநாட்டுப் பிரதிநிதிகளின் முடிவை ஏற்றுக் கொண்டு, அதனை அரசாங்கத்திற்குத் தெரியப்படுத்துவதாகச் சொன்னார். இது பற்றிக் கதைத்து முடிவு எடுப்பதற்காக மிக விரைவில் நான்காவது சுற்றுப் பேச்சுக்களை ஆரம்பிக்க வேண்டுமெனத் தாம் அரசாங்கத்தைக் கேட்கப் போவதாகவும் தெரிவித்தார்.

வெளிநாட்டுப் பிரதிநிதிகளின் நிலைப்பாட்டை நாம் ஏற்றுக் கொள்கிறோம். சிக்கலான பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் நோக்கில் நாம் விரைவில் சந்தித்துப் பேச வேண்டும். கண்காணிப்புக் குழுக்கள் செயற்படுவதற்கு இது வழிவகுக்கும். இந்தக் குழுக்கள் செயற்படுவதற்கு முன்னர், இரு தரப்பும் இணக்கம் கண்ட, முழுமையான போர்நிறுத்த செயற்பாட்டுத்

திட்டம் உருவாக்கப்படுவது அவசியமாகும். கண்காணிப்புக் குழுக்கள் இயங்கிவரும் அதேவேளையில், போர் நிறுத்த நடைமுறைப் பிரச்சினைகள் பற்றிப் பேசலாம் என நீங்கள் தெரிவித்த கருத்து எமக்கு ஏற்புடையதல்ல. தாமதமின்றி, இழுபறியின்றிப் பேச்சுக்களைத் தொடர்ந்திருந்தால் இப் பிரச்சினைகளுக்கு எப்பொழுதோ தீர்வு கண்டிருக்கலாம். எனவே, இச் சிக்கலுக்கு தீர்வு கண்டு, கண்காணிப்புக் குழுக்களை தாமதமின்றி இயக்கிவிடும் நோக்குடன் நாம் விரைவில் சந்திக்க வேண்டும்.

பகை நிறுத்த உடன்பாட்டு விதிகளுக்கு அமைவாக, யாழ்ப்பாணம், மன்னார், வவுனியா, முல்லைத்தீவு, திருகோணமலை, மட்டு-அம்பாறை ஆகிய ஆறு மாவட்டங்களிலும் ஆறு கண்காணிப்புக் குழுக்கள் நியமிக்கப்பட வேண்டும் என்பதை நீங்கள் அறிவீர்கள். எம்முடன் கலந்தாலோசிக்காது, நான்கு கண்காணிப்புக் குழுக்களை மட்டும் நியமிப்பதற்கே அரசாங்கம் விரும்புவது போலத் தெரிகிறது. உடன்பாட்டில் இணங்கியதுபோல ஆறு குழுக்கள் நிறுவப்படல் வேண்டும் என்றும் கனடாவிலிருந்தும் நெதர்லாந்திலிருந்தும் மேலதிகமாக இரு வெளிநாட்டுப் பிரதிநிதிகள் காலதாமதமின்றி வரவழைக்கப்பட வேண்டும் எனவும் நாம் வற்புறுத்துகிறோம்.

அரச ஆயுதப் படைகளின் ஆத்திரமூட்டும் நடவடிக்கைகளின் மத்தியிலும், பகை நிறுத்த உடன்பாட்டு விதிகளை மீறாது விடுதலைப் புலிகள் இயக்கம் மிகவும் கண்டிப்பான முறையில் அமைதியைப் பேணி வருகிறது. போர் நிறுத்த மீறல்களென நீங்கள் அனுப்பி வைத்த பட்டியலில் தெரிவிக்கப்படும் சம்பவங்கள் திரிவுபடுத்தப்பட்ட கட்டுக் கதைகள். கிழக்கு மாகாணத்தில் அரச ஆயுதப் படைகளின் அத்துமீறல்கள் அடங்கிய பட்டியல் ஒன்றை இத்துடன் அனுப்பி வைக்கிறோம். மிகவும் பாரதூரமான போர் நிறுத்த மீறலாக நீங்கள் சித்தரித்துக் காட்டிய சம்பவம் குறித்து நாம் ஏற்கனவே கேணல். ரத்வத்தையுடன் தொடர்பு கொண்டுள்ளோம். இந்தச் சம்பவம் ஜனவரி 23ஆம் நாள்

மட்டக்களப்பிலுள்ள கல்குடாவில் நிகழ்ந்தது. எமது ஏழு போராளிகளை ஏற்றிச் சென்ற கடற்புலிப் படகு ஒன்று, இயந்திரக் கோளாறு காரணமாக கல்குடா கரையோரம் தரையிறங்க நேர்ந்தது. இது முற்றிலும் எதிர்பாராமல் நிகழ்ந்த சம்பவம். பகை நிறுத்த உடன்பாட்டை மீறும் நோக்கம் எதுவும் எமது போராளிகளுக்கு இருக்கவில்லை. நீங்கள் கூறியதுபோல எமது போராளிகள் கனரகப் பீரங்கியைக் கொண்டு செல்லவில்லை. ஒரு இயந்திரத் துப்பாக்கியையே அவர்கள் வைத்திருக்கிறார்கள். எமது போராளிகள் கைது செய்யப்பட்டு பின்பு விடுதலை செய்யப்பட்டனர். ஆனால் அவர்களது ஆயுதங்களும், தொலைத்தொடர்புக் கருவிகளும், அவர்கள் சென்ற படகும் இன்னும் கையளிக்கப்படவில்லை. இந்தப் பொருட்களை மீட்பதற்கு நாம் எத்தனையோ முயற்சிகளை எடுத்தும் இப்பிரச்சினை இன்னும் தீர்க்கப்படவில்லை. இந்தச் சம்பவம் தற்செயலாக நடைபெற்றது என்பதாலும் போர் நிறுத்தத்தை மீறும் நோக்கம் எமக்கு இருக்கவில்லை என்பதாலும், இப் பொருட்களை எம்மிடம் திருப்பி ஒப்படைக்குமாறு அப் பிரதேச இராணுவத் தளபதிக்கு உத்தரவிடுமாறு உங்களை வேண்டுகிறோம். பகை நிறுத்த உடன்பாடானது ஆயுதங்களைப் பறிமுதல் செய்வதை அனுமதிக்கவில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். எனவே, இந்த ஆயுதங்கள் எம்மிடம் திருப்பி ஒப்படைக்காத பட்சத்தில், போர் நிறுத்த நல்லெண்ணத்திற்குக் குந்தகம் விளைவிக்கும் பகைமையான சமிக்கையாகவே நாம் கருதுவோம்.

நித்தம்புவாவில் நிகழ்ந்த சம்பவத்திற்கும் எமது இயக்கத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. இந்தச் சம்பவத்தில் தொடர்புடையதாக நீங்கள் குறிப்பிட்ட நபர் விடுதலைப் புலிகளின் உறுப்பினர் அல்லர். விடுதலைப் புலிகளால் ஜனாதிபதிக்குப் பாரதூரமான பாதுகாப்பு அச்சுறுத்தல் ஏற்பட்டுள்ளதாக உருவகித்துக் காட்டுவது எமக்கு ஆச்சரியத்தையும் கவலையையும் அளிக்கிறது. இது ஆதாரமற்ற புனை கதையாகும்.

கிழக்கு மாகாணத்தில் நாம் பெருமளவில் ஆட்சேர்ப்பில் இறங்கியிருப்பதாகவும், புதிய படை முகாம்களை நிறுவிவருவதாகவும், கிழக்கில் ஒரு போருக்குத் தயார் செய்து வருவதாகவும் நீங்கள் முன்வைக்கும் குற்றச்சாட்டுகளில் எவ்வித ஆதாரமும் இல்லை. எமது அரசியல் போராளிகள், சுதந்திரமான முறையில் எமது மக்கள் மத்தியில் அரசியல் வேலைகள் செய்வதில் உங்களுக்கு ஆட்சேபம் இராது என நினைக்கிறேன்.

விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டுப் பிரதேசமான முருங்கனில், குடி மக்களின் நிர்வாகத்தைப் பேணுவதற்காக நாம் ஒரு காவல்துறை நிலையத்தை நிறுவியது உண்மைதான். இது எவ்வகையிலும் பகை நிறுத்த உடன்பாட்டை மீறவில்லை.

உங்களது கடிதத்தில் நீங்கள் எழுப்பிய பிரச்சினைகளைத் தெளிவுபடுத்தி விளக்கம் தந்துள்ளோம். பேச்சுக்களை விரைவில் தொடங்கினால் ஏனைய முக்கிய பிரச்சினைகள் பற்றிப் பேசி, சுமுகமான தீர்வு காணலாம் என நம்புகிறோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

சு.ப.தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர்
அரசியல்துறை
தமிழீழ விடுதலைப் புலிகள்

## சந்திரிகாவின் பிரஞ்சு மத்தியஸ்தர்

1995 பெப்ரவரி 16ஆம் நாளிலிருந்து 24ஆம் நாள்வரை, ஒருவார காலத்திற்குள் சந்திரிகா அரசிடமிருந்து விடுதலைப் புலிகளுக்கு மூன்று கடிதங்கள் அனுப்பப்பட்டன. இதில் இரண்டு கடிதங்களை ஜனாதிபதி சந்திரிகா தலைவர் பிரபாகரனுக்கு எழுதினார். மூன்றாவது கடிதத்தை ஜனாதிபதியின் செயலர் தமிழ்ச்செல்வனுக்கு எழுதியிருந்தார். சந்திரிகாவின் முதற் கடிதம் யாழ்ப்பாணத்தில் மேற்கொள்ள வேண்டிய புனர்நிர்மாண

வேலைகள் பற்றியது. மிகவும் சுருக்கமான இக் கடிதம் புனரமைப்பு பணிகளில் ஈடுபட யாழ்ப்பாணம் வரவிருக்கும் தொழில்நுட்ப அதிகாரிகளுக்குப் பாதுகாப்பு வசதிகளை வழங்குவது சம்பந்தமானது. பெப்ரவரி 20ஆம் நாள் எழுதப்பட்ட சந்திரிகாவின் கடிதம் ஒரு பிரஞ்சு மத்தியஸ்தர் பற்றியது. அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில், பிரஞ்சு இராஜதந்திரி ஒருவரின் மத்தியஸ்துவம் ஊடாக இரகசியப் பேச்சுக்களை நடத்தும் சந்திரிகாவின் திட்டம் பற்றியது. மூன்றாவது கடிதத்தைத் திரு. பலப்பத்தபென்டி எழுதினார். பொதுமக்களின் போக்குவரத்துக்காக பூநகரி - சங்குப்பிட்டி வீதியையும் ஆனையிறவு நெடுஞ்சாலையையும் திறந்து விடுவதற்கு அரசாங்கம் ஒருதலைப்பட்சமாக முடிவு எடுத்துள்ளதாக அவர் தெரிவித்தார். இக் கடிதங்களை முதலில் கால வரிசையில் பிரசுரிக்கிறோம். இதனையடுத்து கடிதங்களின் உள்ளடக்கம் பற்றிய எமது ஆய்வையும், பதிற் கடிதத்தையும் தருகிறோம்.

16 பெப்ரவரி 1995

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்களுக்கு,

நாங்கள் உங்களது அமைப்புடன் கலந்துரையாடி இணக்கம் கண்ட புனரமைப்புத் திட்டங்களை ஆரம்பிப்பதற்கு அரசாங்கம் தயாராக உள்ளது என்பதை நான் உங்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகிறேன்.

கீழ்க் கண்ட புனரமைப்பு வேலைகளை உடனடியாகவே ஆரம்பிக்கலாம்.

- யாழ்ப்பாணத்திற்கு மின்சாரம் வழங்குவது.
- யாழ்ப்பாணத்திலுள்ள பிரதான வீதிகளைத் திருத்துவது
- யாழ்ப்பாணப் பொதுநூலகத்தைப் புனரமைப்பது

- பொதுமருத்துவமனையைத் திருத்துவது.

புனரமைப்பு வேலைகள் 1995 மார்ச் முதல் நாளிலிருந்து ஆரம்பிக்கலாம்.

எமது தொழில்நுட்ப அதிகாரிகள் 1995 பெப்ரவரி 20ஆம் நாள், திங்கட்கிழமையிலிருந்து யாழ்ப்பாணம் செல்வதற்குத் தயாராக இருக்கிறார்கள். அவர்களை வரவேற்று அவர்கள் பணியில் ஈடுபடுவதற்கான வசதிகளை ஒழுங்கு செய்தால் நன்றியாக இருப்பேன்.

கடந்த இரு வாரங்களாக அரசாங்கத்திற்கும் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் மத்தியில் கலந்துரையாடப்பட்ட ஏனைய விடயங்கள் பற்றி அடுத்த இரண்டு நாட்களில் நான் உங்களுக்கு எழுதுவேன்.

உங்களிடமிருந்து விரைவான பதில் கிடைத்தால் நன்றியாக இருக்கும்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா

20 பெப்ரவரி 1995

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்களுக்கு,

இனப் பிரச்சினைக்கு அரசியல் தீர்வுகாணும் விடயங்கள் சம்பந்தமாக நாம் பேச்சுக்களைத் தொடங்கும் காலம் வந்துவிட்டது.

எமது பேச்சுக்கள் மிக இரகசியமாகவும் நம்பகமாகவும் இருப்பதற்காக, எமது அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் நடுவராகச் செயற்படும் வகையில், சிக்கல் இல்லாத நடுநிலையாளரான ஒருவரை நாம் பணிக்கு அமர்த்த வேண்டும் என நான் உங்களுக்கு யோசனை

தெரிவிக்க விரும்புகிறோம். இனப் பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காண்பதற்காக நாம் பரஸ்பரம் ஒருவருக்கு ஒருவர் பகிர்ந்து கொள்ள விரும்பும் கருத்துகள், யோசனைகள், விளக்கங்களை இவர் மூலம் நேரடியாக இரு தரப்பினரும் பரிமாறிக் கொள்ளலாம். இரகசியத்தைப் பேணி, நம்பகத் தன்மையோடு அரசியல் தீர்வை நோக்கி எம்மை முன் நகர்த்திச் செல்வதற்கு இவர் எமக்கு உதவுவார்.

இந்த நபரை எனக்கும் அரசாங்கத்திலுள்ள ஒரு சிலருக்கும் மட்டுமே தெரியும். நீங்கள் ஏற்பதாக இருந்தால் இந்த யோசனையை நான் உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். இந்த விடயமாக பிரஞ்சு அரசாங்கத்தை நான் அணுகிய போது, மதிப்பு மிக்க பிரஞ்சு நாட்டவர் ஒருவரை எமக்குத் தந்துதவ பிரான்ஸ் இணக்கம் தெரிவித்தது. திரு. பிரான்சுவா மிசேல் எனப்படும் இவர், எதியோப்பியா, ஹெயிட்டி ஆகிய நாடுகளில் பிரான்ஸ் நாட்டின் தூதுவராகப் பணிபுரிந்தவர். இவர் இப்பொழுது ஓய்வு பெற்றிருக்கிறார். நீங்களும் இணக்கம் தெரிவித்து, இரு தரப்புமாக நாம் அவரது பாதுகாப்புக்கு உறுதி அளித்தால் அவர் இந்தப் பணியைச் செய்யத் தயாராக இருக்கிறார்.

இவர் எமக்கு மத்தியில் நடுவராகச் செயற்படுவாரே அன்றி, எமது கருத்துப் பரிமாற்றத்தில் பிரஞ்சு அரசாங்கத்தை எவ் வகையிலும் ஈடுபடுத்தமாட்டார் என்பதை நாம் புரிந்து கொள்ளவேண்டும். அத்தோடு இந்தக் கருத்துப் பரிமாற்றத்தில் அவர் தனது சொந்தக் கருத்துக்களையும் திணித்து விடப் போவதில்லை. இந்த நடுவரின் சேவை தேவை இல்லையென எப்பொழுதாவது நானோ அல்லது நீங்களோ முடிவு எடுத்தால் அவர் தனது பணியை நிறுத்திக் கொள்வார்.

இந்த நடுவரைத் தொடர்பு கொள்ள வேண்டிய இடத்தைப் பொறுத்தவரை, நான் அவரைக் கொழும்பில் சந்தித்துக் கொள்ளுவேன். நீங்கள் விரும்பும் இடத்தில் அவரைச் சந்திக்க ஒழுங்கு செய்யலாம்.

திரு. மிசேல் இப்பொழுது கொழும்பில் தங்கியிருக்கிறார். மிகவும் தவிர்க்க முடியாத

தனிப்பட்ட காரணங்களுக்காக பெப்ரவரி 27ஆம் நாளிலிருந்து மார்ச் 14ஆம் நாள்வரை, அவர் பிரான்ஸ் நாட்டுக்குத் திரும்பிச் செல்ல வேண்டியுள்ளது. அவரது பணி குறித்து உங்களிடமிருந்து சாதகமான பதில் கிடைக்குமாயின், பெப்ரவரி 27இல் அவர் கொழும்பிலிருந்து புறப்படுவதற்கு முன்னராக, அரசாங்கத்தின் யோசனைத் திட்டத்துடன் அவர் யாழ்ப்பாணம் வருவதற்குத் தயாராக உள்ளார்.

இவரது பணி மிகவும் முக்கியமானது என்பதாலும், இரகசியமானது என்பதாலும் இவரை நீங்கள் நேரடியாக சந்திப்பது உகந்ததெனக் கருதுகிறேன்.

எனது நல்லாசிகள்
உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா

இதற்கிடையில் ஜனாதிபதியின் செயலர் பலப்பத்தபெண்டி எமது அரசியல்துறைப் பொறுப்பாளர் தமிழ்ச்செல்வனுக்கு சுருக்கமான கடிதம் ஒன்றை அனுப்பி வைத்தார்.

24 பெப்ரவரி 1995

திரு. சு.ப. தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர்
அரசியல்துறை
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. தமிழ்ச்செல்வன் அவர்கட்கு,

வடக்கில் பொதுமக்களின் இயல்பான போக்குவரத்திற்கு வசதியாக பூநகரி - சங்குப்பிட்டி வீதியையும் ஆனையிறவு வீதியையும் திறந்து விடுவதற்கு அரசாங்கம் முடிவெடுத்துள்ளது. இந்த முடிவுக்கு அமைய, வீதியிலிருந்து 500 மீட்டர் வரை முகாம்களின் பாதுகாப்பு முன்னணி நிலைகள் பின் நகர்த்தப்பட்டுள்ளன. இதனால் மக்களும் வாகனங்களும் சுதந்திரமான முறையில் போக்குவரத்துச் செய்ய வசதியாக இருக்கும்.

வடக்கில் வாழும் மக்களின் துன்பத்தைத் துடைக்கும் நோக்கில் அரசாங்கம் நடைமுறைப்படுத்தி வரும் பல்வேறு நடவடிக்கைகளில் இதுவும் ஒன்றாகும். இராணுவத் தேவைக்கான பொருட்களைத் தவிர்ந்த, ஏனைய பொருட்கள் அனைத்தினதும் பொருளாதாரத் தடை நீக்கம், யாழ்ப்பாணத்திற்கு இலவச உணவும் மருந்துப் பொருட்களும் அனுப்பியமை, பெப்ரவரி 20ஆம் நாளிலிருந்து புனரமைப்பு வேலைகளை மேற்கொள்ள அரசு முடிவெடுத்தமை, மக்களதும் வாகனங்களதும் போக்குவரத்திற்காக இரு வீதிகள் திறந்து விட்டமை - இவை யாவும் வடக்கில் வாழும் மக்களின் வாழ்நிலையை வளப்படுத்தவும் இயல்புநிலையைத் தோற்றுவிக்கவும் அரசாங்கம் நடைமுறைப்படுத்தும் திட்டங்களின் ஒரு பகுதியாகும்.

திறந்துவிடப்பட்ட இந்த வீதிகள் ஊடாகப் போக்குவரத்தை நடத்த அனுசரணையாக எதைச் செய்ய வேண்டுமென்பது உங்களிடம்தான் உள்ளது.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

கே.பலப்பத்தபெண்டி
ஜனாதிபதியின் செயலர்

அரசாங்கத்தின் கடிதங்களில் தெரிவிக்கப்பட்ட விடயங்களுக்கு, குறிப்பாக அரசியல் பேச்சுக்களுக்காக ஒரு நடுவரைப் பணிக்கு அமர்த்தும் சந்திரிகாவின் யோசனைக்கு நாம் கூர்மையான கவனம் செலுத்த வேண்டியிருந்தது. கருத்துப் பரிமாற்றத்திற்கு அனுசரணையாளராக ஒரு தனி நபரை, ஒரு ஓய்வு பெற்ற பிரஞ்சு இராஜதந்திரியைப் பணிக்கு அமர்த்த சந்திரிகா அம்மையார் விரும்புவது ஏன்? ஏன் இந்த விடயத்தை மிகவும் அந்தரங்கமான முறையில் அவர் கையாள விரும்புகிறார்? இரு தரப்புத் தகவல் பரிமாற்றத்திற்குப் பின்வாயில் வழியாகத் தொடர்பை வைத்துக் கொள்ள அவர் விரும்புவது ஏன்? அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் நேரடிப் பேச்சுகள் ஏற்கனவே ஆரம்பமாகி நடைபெற்று வரும்போது மூன்றாவது தரப்பை அவர் நாடுவதன்

நோக்கமென்ன? இப்படியான கேள்விகளை நாம் ஆழமாகப் பரிசீலனை செய்தோம்.

முதலாவதாக, சமாதானப் பேச்சுக்களில் மூன்றாம் தரப்பினரை இவ்விதம் தலையீடு செய்ய அனுமதிப்பது தவறானதாக எமக்குத் தென்பட்டது. மூன்றாம் தரப்பு மத்தியஸ்தர் நடுநிலையாளராகவும், இரு தரப்பினராலும் ஏற்றுக் கொள்ளக் தக்கவராகவும் இருத்தல் அவசியம். இந்தப் பிரஞ்சு இராஜதந்திரியைப் பற்றி எமக்கு எதுவுமே தெரியாது. அவரது அனுபவம், வாழ்க்கைப் பின்னணி, உலகப் பார்வை ஆகியன பற்றி எமக்கு எதுவும் தெரியாது. ஆனாலும் இவர் சந்திரிகாவுக்கு நன்கு பழக்கமானவர் போலவே எமக்குத் தென்பட்டது. பிரான்ஸ் நாட்டில் உயர்கல்வி கற்றபோது சந்திரிகாவுக்கு இவரைத் தெரிந்திருக்கலாம். ஆகவே இந்தப் பிரஞ்சு இராஜதந்திரி சுத்தமான நடுநிலையைப் பேணக் கூடிய தகைமை உள்ளவர் போல எமக்குத் தென்படவில்லை. இரண்டாவதாக, மூன்றாம் தரப்பு அனுசரணைக்கோ மத்தியஸ்துவத்திற்கோ நாம் எதிரானவர்கள் அல்லர். அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் சமரசப் பேச்சுக்கள் முறிவடைந்து, இரு தரப்பினர் மத்தியில் தொடர்பு அறுந்த சூழ்நிலையில்தான் மூன்றாம் தரப்பின் உதவியை நாம் நாடவேண்டும் என்பது எமது நிலைப்பாடாக இருந்தது. அடுத்ததாக, மூன்றாம் தரப்பு எனும்பொழுது நாம் ஒரு வெளிநாட்டு அரசாங்கத்தின் அனுசரணையை அல்லது மத்தியஸ்தையே விரும்பினோம். நிச்சயமாக, ஒரு தனி நபரின் தலையீட்டை நாம் விரும்பவில்லை. சந்திரிகா தெரிவு செய்த நபர், பிரஞ்சு அரசாங்கத்தின் பிரதிநிதியாக அல்லாமல் தனி நபர் என்ற தகைமையில்தான் பணியாற்ற விரும்பினார்.

மூன்றாவதாக, சமாதானப் பேச்சுக்களை அந்தரங்கமாக நிகழ்த்த நாம் விரும்பவில்லை. தமிழரின் தேசியப் பிரச்சினை சர்வதேச கவனத்தை ஈர்த்திருப்பதால், நாம் பேச்சுக்களை வெளிப்படையானதாக, எமது மக்களும் சர்வதேசச் சமூகமும் அறிந்து கொள்ளக் கூடிய முறையில் பகிரங்கமானதாக நடத்துவதையே விரும்புகிறோம்.

நான்காவதாக, அப்பொழுது நடைபெற்று வந்த பேச்சுவார்த்தைகள் சந்திரிகாவுக்கு ஏமாற்றத்தைக் கொடுத்திருக்க வேண்டும் என்றே நாம் கருதினோம். சமாதானப் பேச்சுக்கள் எவ்வித முன்னேற்றமும் இன்றி ஆரம்ப

கட்டத்திலேயே முடங்கிப் போயிருந்தன. விடுதலைப் புலிகளின் கோரிக்கைகள் நியாயமானதாகவும், தமிழ் மக்களின் அத்தியாவசியத் தேவைகளைப் பிரதிபலிப்பதாகவும் இருந்த போதும், இராணுவ அழுத்தங்கள் காரணமாக அரசாங்கம் விட்டுக் கொடாத கடும்போக்கைக் கடைப்பிடித்ததால் பேச்சுக்கள் முன்நோக்கி நகரமுடியாத நிலை எழுந்தது. தமிழ் மக்களின் இந்த அத்தியாவசிய வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணாமல் அரசியல் பிரச்சினைகள் பற்றிப் பேச்சுக்களை நடத்த விடுதலைப் புலிகள் விரும்பவில்லை. இந்த முரண்பாட்டினால் இழுபறி நிலை ஏற்பட்டது. நேரடிப் பேச்சுக்களில் நிகழ்ந்த இந்தச் சிக்கல் நிலை காரணமாக, ஒரு வித்தியாசமான புதிய பாதையில் அரசியல் பேச்சுக்களை நகர்த்திச் செல்ல சந்திரிகா முயற்சி எடுப்பது போல எமக்குத் தென்பட்டது.

இப்படியாக, சந்திரிகாவின் யோசனையைப் பல கோணங்களில் பரிசீலனை செய்த பின்னர், தலைவர் பிரபாகரன் கீழ்க்கண்டவாறு சந்திரிகா அம்மையாருக்குப் பதில் எழுதினார்.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
25 பெப்ரவரி 1995

கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா
சிறீலங்காவின் ஜனாதிபதி
ஜனாதிபதியின் தலைமைச் செயலகம்
கொழும்பு

கனம். ஜனாதிபதி அவர்கட்கு,

1995 பெப்ரவரி 20ஆம் நாள் திகதியிடப்பட்டு நீங்கள் எழுதிய கடிதத்திற்கு மிகவும் நன்றி.

இரு தரப்பும் பரஸ்பரம் கருத்துக்களையும், யோசனைகளையும், விளக்கங்களையும் பரிமாற்றம் செய்து கொள்வது மூலம் சமாதான முயற்சி முன்னேற்றகரமாக முன் நகர்த்தப் படலாமென நேர்மையுடன் நீங்கள் கருதுவதை நான் வரவேற்கிறேன். இதனைக் குறிக்கோளாகக் கொண்டு, பக்கசார்பற்ற நடுவர் ஒருவரைப் பணிக்கு அமர்த்தலாமென நீங்கள் யோசனை

தெரிவித்துள்ளீர்கள்.

உங்களது யோசனையை ஆழமாகப் பரிசீலனை செய்தோம். அரசாங்கத்தினதும் விடுதலைப் புலிகளதும் அதிகாரபூர்வமான பிரதிநிதிகள் மத்தியிலேயே சமாதானப் பேச்சுக்கள் நடைபெறவேண்டும் என்பது எமது கருத்தாகும். ஒரு பகிரங்கமான பேச்சரங்கில், எமது பிரதிநிதிகளின் பரிசீலனைக்கு உங்களது பிரதிநிதிகள் தமது கருத்துக்களையும் யோசனைகளையும் முன்வைக்கலாம். சமாதானப் பேச்சுக்கள் உள் நாட்டிலும், சர்வதேச உலகிலும் பெரும் ஆர்வத்தையும் அக்கறையையும் உண்டுபண்ணி இருப்பதால், நாம் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும் விடயங்களும், பேச்சுக்களில் ஏற்படும் முன்னேற்றங்களும் பகிரங்கமாக அமைவதையே நாம் விரும்புகிறோம்.

இதுவே எமது நிலைப்பாடாக இருப்பதால், இரு தரப்புக் கருத்துப் பரிமாற்றத்திற்காக ஒரு பக்க சார்பற்ற நடுவரைப் பணிக்கு அமர்த்தும் உங்களது யோசனை இந்தக் காலகட்டத்தில் எமக்கு ஏற்புடையதாக இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இது குறித்து எமது நிலைப்பாட்டைப் புரிந்து கொள்வீர்களென நினைக்கிறேன்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

அன்றைய நாளே, 1995 பெப்ரவரி 25 அன்று, இன்னொரு விரிவான கடிதத்தையும் திரு. பிரபாகரன் அரச அதிபர் சந்திரிகா அம்மையாருக்கு அனுப்பி வைத்தார். பெப்ரவரி 16ஆம் நாள் ஜனாதிபதி அனுப்பிய கடிதத்திற்கும் பெப்ரவரி 25ஆம் நாள் ஜனாதிபதியின் செயலர் தமிழ்ச்செல்வனுக்கு அனுப்பிய கடிதத்திற்கும் பதிலளிப்பதாக இக் கடிதம் அமைந்தது.

பாரிய புனரமைப்பு வேலைகளை மேற்கொள்ளும்

அரசாங்கத்தின் திட்டம் பற்றிக் குறிப்பிட்ட பிரபாகரன், எரிபொருட்கள் மற்றும் அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடைகள் நீக்கப்பட வேண்டும் என்றும், வன்னிப் பெருநிலப் பரப்புக்குத் தரைப் பாதை திறக்கப்பட வேண்டுமென்றும், போர் நிறுத்தம் பலப்படவேண்டும் என்றும் வற்புறுத்தியதுடன் இவை நிறைவுசெய்யப்பட்ட பின்புதான் புனர்நிர்மாணப் பணிகள் ஆரம்பிக்கப்பட வேண்டும் என்றார். அத்தியாவசியப் பொருட்கள் அனைத்திற்கும் தடை நீக்கம் செய்யப்பட்டுள்ளதாக பலப்பத்தபெண்டி தெரிவித்த கூற்றை அபாண்டமான பொய் என நிராகரித்த பிரபாகரன், தமிழ் மக்களின் நாளாந்த சீவியத்திற்கு அத்தியாவசியமான பொருட்கள் அனைத்தும் இராணுவப் பாவனைப் பொருட்களாக முத்திரை குத்தித் தடுத்து வைக்கப்பட்டிருப்பதாகத் தெரிவித்தார். தடை நீக்கம் செய்யப்பட்ட சில பொருட்களும் வவுனியா எல்லையில் இராணுவத்தினரால் தடை செய்யப்படுவதாகவும் கூறினார். பிரபாகரனின் கடிதத்தைக் கீழே பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
25 பெப்ரவரி 1995

கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா
சிறீலங்காவின் ஜனாதிபதி
ஜனாதிபதியின் தலைமைச் செயலகம்
கொழும்பு

அன்பின் ஜனாதிபதி அவர்கட்கு,

பெப்ரவரி 16ஆம் நாள் திகதியிடப்பட்ட உங்களது கடிதம் கிடைக்கப் பெற்றேன். நன்றி.

பெப்ரவரி 13ஆம் நாள், உங்களது செயலர் திரு. பலப்பத்தபெண்டி அவர்களுக்கு நாம் எழுதிய முக்கிய கடிதம் ஒன்றின் பதிலுக்காகக் காத்து இருந்தமையால் உங்களுக்குப் பதிலெழுதத் தாமதமாகியது. அதையிட்டு மன்னிக்கவும்.

1995 பெப்ரவரி 25ஆம் நாள் திரு. பலப்பத்தபெண்டி, தமிழ்ச்செல்வனுக்கு எழுதிய கடிதத்தில், போர் நிறுத்த நடைமுறைகள், கண்காணிப்புக் குழுக்களை நிறுவுதல்,

பேச்சுக்களை மீளத் தொடங்குதல் போன்ற நாம் எழுப்பிய பாரதூரமான பிரச்சினைகள் எதற்குமே பதில் தராது, வடக்கில் வாழும் தமிழ் மக்கள் அனுபவிக்கும் துன்ப துயரங்களை எல்லாம் நீக்கி விடுவதற்கான சகல நடவடிக்கைகளையும் அரசாங்கம் எடுத்துள்ளதாக விசித்திரமான முறையில் உரிமை கொண்டாடியிருக்கிறார்.

யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கும் வடமாநிலத்திற்கும் பாதை திறப்பது சம்பந்தமாக விடுதலைப் புலிகளின் நிலைப்பாடு என்னவென்பது அரசாங்கம் நன்கறியும். இந்த முக்கியமான விவகாரத்தில் எமது கருத்தை முற்றாக உதாசீனம் செய்து, தரைப் பாதைகள் (பூநகரி, ஆனையிறவு) திறக்கப்பட்டுள்ளதாக அரசாங்கத்தின் பழைய நிலைப்பாட்டை ஒருதலைப்பட்சமாகப் பிரகடனம் செய்திருக்கிறார் திரு. பலப்பத்தபெண்டி. இப்படியான அறிவிப்புகளைத் தவறான பரப்புரைகளுக்குப் பயன்படுத்தலாமே தவிர, சமாதான வழிமுறையை இவை மேம்பாடு செய்யப் போதில்லை. இது எமக்கு ஆழ்ந்த ஏமாற்றத்தைக் கொடுக்கிறது. இந்த ஒருதலைப்பட்சமான முடிவு ஒரு உண்மையைப் புலப்படுத்தி நிற்கிறது. அதாவது உங்களது அரசாங்கம் தமிழ்க் குடிமக்களின் அவசர வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு மேலாக, ஆக்கிரமிப்பு இராணுவத்தின் கேந்திர நலனுக்கே முக்கியத்துவம் அளிக்கிறது என்பது புலனாகிறது.

பொருளாதாரத் தடைகள் முற்றாக நீக்கப்படவில்லை என்ற உண்மையை நீங்கள் நன்கறிவீர்கள். பெட்ரோல், டீசல், மோட்டார் வாகனங்கள், வாகன உதிரிப் பாகங்கள், மின்கலங்கள், உரவகைகள் போன்ற எமது மக்களின் சமூகப் பொருளாதார வாழ்வுக்கு அத்தியாவசியமான பல்வேறு பொருட்கள், இன்னமும் இராணுவ பாவனைப் பொருட்கள் என்ற சாக்கில் தடைசெய்யப்பட்டுள்ளன. தடை நீக்கம் செய்யப்பட்ட பொருட்கள் கூட, வவுனியா இராணுவத்தினரின் சுய தடையால் இன்னும் மக்களை வந்தடையவில்லை. இதுதான் மெய்நிலை. இந்த யதார்த்த நிலையை வடக்கில் வாழும் எமது மக்கள்

நன்கறிவார்கள். நிலைமை இப்படி இருக்கும் பொழுது, சகல விதமான அத்தியாவசியப் பொருட்களுக்கும் தடை நீக்கம் செய்யப்பட்டுள்ளதாகத் திரு. பலப்பத்தபென்டி எமக்கு எழுதுகிறார். இது உண்மைக்கு முற்றிலும் மாறானது. இப்படியான அபாண்டமான பொய்க் கூற்றுகள் பிரச்சாரச் சாதனமாகப் பயன்படலாம். ஆனால் இவை எமது மக்களின் துன்பத்தை நீக்கிவிடப் போவதில்லை. அத்தோடு சமாதானத்தின் நலனையும் பேணப் போவதில்லை.

தற்போதைய பகை நிறுத்தத்தை, ஒரு நிலையான முழுமையான போர்நிறுத்த உடன்பாடாக மாற்றுவதற்கு அரசாங்கம் எவ்வித உருப்படியான நடவடிக்கைகளையும் எடுக்கத் தயங்குவது எமக்கு விசனத்தைத் தருகிறது. பகை நிறுத்தச் செயற்பாட்டு விதிமுறைகள் சம்பந்தமாக விரிவான செயற்பாட்டு விளக்கங்களைக் கோரியும் நாம் பல தடவைகள் கடிதங்களை எழுதியபோதும், இது சம்பந்தமாக ஆக்க பூர்வமான முறையில் அரசாங்கம் பதிலளிக்காதது எமக்கு ஏமாற்றத்தைக் கொடுக்கிறது. அரசாங்கத்தின் இந்த அக்கறையற்ற போக்குக் காரணமாகவே வெளிநாட்டுப் பிரதிநிதிகளின் தலைமையில் கண்காணிப்புக் குழுக்களை நிறுவுவதில் தாமதம் ஏற்பட்டு வருகிறது. இது ஒரு பாரதூரமான விடயம். இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு அரசாங்கம் தவறுமானால், சமாதானச் சூழ்நிலையை இது பாரதூரமாகப் பாதிக்கும்.

வடக்கில் பாரிய புனர்நிர்மாண, அபிவிருத்தி வேலைகளை மேற்கொள்வதாக இருந்தால், எரிபொருள் மற்றும் அத்தியாவசியப் பொருட்களுக்கு தடை நீக்கம் செய்யப்பட்டு, யாழ்ப்பாணத்திற்கான பாதை திறக்கப்பட்டு, போர்நிறுத்த உடன்பாட்டை நிலைப்படுத்திப் பலப்படுத்துவது அத்தியாவசியமானதாகும். ஆகவே, இந்த முக்கியமான பிரச்சினைகள் குறித்து, எம்முடன் பேச்சுக்களை நடத்தி இணக்கப்பாடு காணுமாறு அரசாங்கத்தை நாம் கேட்டுக் கொள்கிறோம். இவற்றிற்குத் தீர்வு

காணப்பட்டால் போரால் அழிவுற்ற பிரதேசங்களில் பாரிய புனரமைப்புத் திட்டங்களைச் செயற்படுத்துவது நடைமுறைச் சாத்தியமாகும். புனரமைப்பு வேலைகளை திட்டமிட்டு நடைமுறைப்படுத்த அரசாங்கப் பிரதிநிதிகளையும் விடுதலைப் புலிகளையும் அங்கத்தவர்களாகக் கொண்ட ஒரு அதிகார சபை நிறுவப்பட வேண்டுமெனக் கடந்த சுற்றுப் பேச்சுக்களின் போது எமது பிரதிநிதிகள் ஆலோசனை தெரிவித்தனர். இதனை, அரச தரப்புப் பிரதிநிதிகளும் ஏற்றுக் கொண்டனர். சமாதானப் பேச்சுக்களின்போது எடுக்கப்பட்ட இந்த முடிவை அரசாங்கம் நடைமுறைப்படுத்தினால் புனரமைப்புத் திட்டங்களைச் சீராக, துரித கெதியில் செயற்படுத்த அது வழிகோலும்.

எமது யோசனைகளை நீங்கள் ஆழமாகப் பரிசீலனை செய்வீர்களென நாம் நம்புகிறோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

## பிரஞ்சு நடுவர் பற்றிய சர்ச்சை

பிரஞ்சு இராஜதந்திரி ஒருவரை நடுவராகப் பணிக்கு அமர்த்துவது சம்பந்தமாக ஜனாதிபதி சந்திரிகாவுக்கும் தலைவர் பிரபாகரனுக்கும் மத்தியில் பரிமாறப்பட்ட கடிதங்கள் பத்திரிகைகளுக்குக் கசிந்துள்ளதை அடுத்துக் கொழும்பு அரசியல் வட்டாரங்களில் பெரும் சர்ச்சை எழுந்தது. மிகவும் அந்தரங்கமானதாகக் கருதப்பட்ட இவ் விவகாரத்தை அரச வட்டாரங்கள் எதற்காகப் பத்திரிகை உலகிற்குக் கசிய விட்டன என்பது எமக்குப் புரியாத புதிராக இருந்தது. மூன்றாம் தரப்புச் சர்வதேச மத்தியஸ்துவத்திற்கு விடுதலைப் புலிகள் இயக்கம் எதிராக நிற்கிறது என்ற பிரச்சாரத்தை மேற்கொள்ளும்

நோக்கத்துடனேயே பிரஞ்சு இராஜதந்திரியின் விவகாரம் பகிரங்கப்படுத்தப்பட்டது என்ற உண்மை எமக்குப் பின்புதான் தெரிய வந்தது. இந்தப் பொய்யான பரப்புரையை மறுத்துரைத்து, உண்மை நிலையை எமது மக்களுக்குத் தெரியப்படுத்தும் நோக்கத்துடன், பிரஞ்சு நடுவர் பற்றிய கடிதங்களை நாம் வெளியிட முடிவெடுத்தோம். சந்திரிகாவுக்கும் பிரபாகரனுக்கும் மத்தியில் இவ் விவகாரம் குறித்துப் பரிமாறப்பட்ட கடிதங்களை தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டோம். இவ் விவகாரத்தை, யாழ்ப்பாணப் பத்திரிகைகள் முக்கியம் கொடுத்துப் பிரசுரித்தன. இவ்விடயம் 'புலிகளின் குரல்' வானொலியிலும் ஒலிபரப்பாகியது.

1995 மார்ச் 6ஆம் நாளன்று, யாழ்ப்பாணத்தில் பத்திரிகையாளர் மாநாடு ஒன்றைக் கூட்டிய நான், ஜனாதிபதி சந்திரிகாவின் யோசனையை நாம் நிராகரித்ததன் காரணத்தை விளக்கிக் கூறினேன். பிரஞ்சு நடுவரை அந்த நாட்டு அரசாங்கம் சிபாரிசு செய்தபோதும், அவர் பிரஞ்சு அரசாங்கத்தின் அதிகாரபூர்வமான பிரதிநிதி அல்லர் என்றும், இராஜதந்திர சேவையிலிருந்து ஓய்வுபெற்ற ஒரு தனி நபர் என்றும் விளக்கினேன். இந்தப் பிரஞ்சு இராஜதந்திரி சந்திரிகாவுக்கு நன்கு பழக்கமானவர் என்றும் விடுதலைப் புலிகளுக்கு அவரைப் பற்றி எதுவுமே தெரியாது எனக் கூறிய நான், இப்படியான ஒருவர் நடுநிலையாளராகப் பாரபட்சமின்றிச் செயற்படுவது கடினம் என்றும் சுட்டிக் காட்டினேன். விடுதலைப் புலிகள் மூன்றாம் தரப்பு அனுசரணைக்கோ அன்றி மத்தியஸ்துவத்திற்கோ எதிரானவர்கள் அல்லர் என வற்புறுத்திக் கூறிய நான், அரசுக்கும் புலிகளுக்கும் மத்தியிலான பேச்சுக்கள் முறிவடைந்தால் மூன்றாம் தரப்பை ஈடுபடுத்துவது பற்றி நாம் பரிசீலனை செய்வோம் என விளக்கினேன்.

பத்திரிகையாளர் மாநாட்டில் நான் தெரிவித்த கருத்துக்களையும், தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட சந்திரிகா - பிரபா கடிதங்களையும் ஒன்று சேர்த்து, பிரஞ்சு நடுவர் விவகாரத்தில் விடுதலைப் புலிகளின் அதிகாரபூர்வமான நிலைப்பாடாக ஒரு பத்திரிகை அறிக்கையை, மார்ச் 7ஆம் நாளன்று அரசியல் பிரிவு வெளியிட்டது. தமிழில் வெளியிடப்பட்ட இந்த அறிக்கையை லண்டனிலுள்ள புலிகளின் அனைத்துலகத் தலைமைச் செயலகம் மீண்டும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துப் பத்திரிகை அறிக்கையாக வெளியிட்டது. இவ்விதம், பிரஞ்சு இராஜதந்திரி பற்றிய சந்திரிகா - பிரபா கடிதங்களின் மூலப்

பிரதிகள் முதலில் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, பின்னர் அதே விடயம் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டதால் இறுதி வடிவம், மூலப் பிரதியின் சொற் பிரயோகத்திலிருந்து வேறுபட்டதாக அமைந்தது.

ஜனாதிபதி சந்திரிகா, மார்ச் 9ஆம் நாள் தலைவர் பிரபாகரனுக்கு எழுதிய கடிதத்தில், லண்டன் பத்திரிகை அறிக்கையில் ஒரு பத்தியை மேற்கோள்காட்டி, அது தனது கடிதத்தின் மூலப் பிரதிக்கு மாறுபட்டதாக இருப்பதாய் குற்றம் சாட்டினார். மொழிபெயர்ப்புக்களால் ஏற்பட்ட வேறுபாடுகள் பற்றி எதுவுமறியாத சந்திரிகா அம்மையார், கடிதங்களின் உள்ளடக்கத்தை விடுதலைப் புலிகளின் அரசியல் பிரிவு வேண்டுமென்றே திரித்து, உண்மைக்குப் புறம்பான கருத்துக்களை வெளியிட்டிருப்பதாகக் கண்டனம் தெரிவித்தார். பிரஞ்சு இராஜதந்திரியை ஒரு தனிப்பட்ட நபராகவும் தனது நண்பராகவும் சித்தரித்துக் காட்ட முனைவது உண்மைக்கு மாறானதென வாதிட்ட அவர், அந்த இராஜதந்திரி பிரஞ்சு அரசாங்கத்தினால் தேர்ந்து எடுக்கப்பட்டவர் என்றும் அவருக்குப் பிரஞ்சு அரசாங்கத்தின் ஆதரவு உண்டு என்றும் குறிப்பிட்டார். அரசியல் பேச்சுக்களுக்கு முன்னராக, தமிழ் மக்களின் அத்தியாவசிய வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்பட வேண்டுமென்ற விடுதலைப் புலிகளின் கோரிக்கை பற்றிக் குறிப்பிட்ட சந்திரிகா, தேசியப் பாதுகாப்புக்கு பங்கம் விளைவிக்கும் கோரிக்கைகளை வழங்கினால் இராணுவ ரீதியாகப் பாரதூரமான விளைவுகள் ஏற்படலாமென எச்சரித்தார். சந்திரிகாவின் கடிதத்தில் விட்டுக் கொடுக்காத கடும்போக்குத் தொனித்தது. கட்டம் கட்டமாகப் பேச்சுக்களை முன்நகர்த்தும் விடுதலைப் புலிகளின் அணுகுமுறையை நிராகரித்த அவர், தமிழ் மக்களின் அவசர வாழ்க்கைப் பிரச்சினை பற்றியும், அரசியல் பிரச்சினை பற்றியும் ஒரே நேரத்தில் சமநிலையாகப் பேசப்பட வேண்டுமென வற்புறுத்தினார். இறுதியாக, தனது கடித முடிவுரையில், ஏப்ரல் 2இலிருந்து 10 ஆம் நாள் வரையான கால கட்டத்தில் அரசியல் தீர்வுக்கான பேச்சுக்கள் ஆரம்பிக்கப்பட வேண்டும் எனத் தெரிவித்தார். சந்திரிகாவின் கடிதத்தை கீழே பிரசுரிக்கிறோம்.

9 மார்ச் 1995

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

தமிழீழ விடுதலைப் புலிகளது அனைத்துலகத் தலைமையகம் மார்ச் 7ஆம் நாளன்று வெளியிட்ட பத்திரிகை அறிக்கையைப் படித்தபோது, அரசாங்கத்திற்கும் புலிகளுக்கும் மத்தியிலான பேச்சுக்கள் குறித்து இரண்டு முக்கிய பிரச்சினைகள் எழுப்பப்பட்டிருக்கின்றன.

முதலாவது, 1995 பெப்ரவரி 25இல் நீங்கள் எனக்கு எழுதியதாக இப் பத்திரிகை அறிக்கையில் வெளியிடப்பட்டிருக்கும் கடிதத்தின் விபரம் இவ்வாறு தரப்படுகிறது:

"சிறீலங்கா அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியிலான பேச்சுக்கள் இரகசியமானதாக அல்லாது பகிரங்கமானதாக நடைபெறுவதையே நாம் விரும்புகிறோம். அரசாங்கத்துடனான எமது பேச்சுக்களின் முன்னேற்றம் குறித்து எமது மக்களும், சர்வதேசச் சமூகமும் உன்னிப்பாக கவனம் செலுத்துவதால், ஒரு தனிப்பட்ட நபர் மூலம் இரகசியமாகக் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வது பொருத்தமானதாகவோ அல்லது சரியானதாகவோ எமக்குத் தோன்றவில்லை. உங்களது கடிதத்தில் நீங்கள் எழுப்பிய கேள்விகளை நாம் மிகவும் கவனமாகப் பரிசீலனை செய்தோம். சிறீலங்கா அரசாங்கத்தின் சார்பில் நீங்கள் நியமித்த பிரதிநிதிகளுக்கும் நாங்கள் நியமித்த பிரதிநிதிகளுக்கும் மத்தியிலேயே பேச்சுக்கள் நடைபெறுவதை நாம் விரும்புகிறோம். உங்களது பிரதிநிதிகள் அரசாங்கத்தின் கருத்துக்களைத் தெளிவுபடுத்த, எமது பிரதிநிதிகளும் அவ்வாறே செய்வார்கள். இவ்விதம் பேச்சுக்கள் அமைந்தால்

அது பயனுள்ளதாக இருக்கும். எமது பிரச்சினை இப்பொழுது சர்வதேசக் கவனத்தை ஈர்த்துள்ளது. தமிழரின் இனப் பிரச்சினையில் தமிழ் மக்களும் அனைத்துலகச் சமூகமும் உன்னிப்பாகக் கவனம் செலுத்தி வருகின்றது. இரு தரப்புப் பேச்சுக்களின் முன்னேற்றம் குறித்து தமக்குத் தெரியப்படுத்த வேண்டுமென எமது மக்கள் எதிர்பார்க்கிறார்கள். இப்படியான சூழ்நிலையில் ஒரு தனிநபர் மூலம், இரகசியமாக உங்களுடன் நான் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வது உகந்தது அல்ல."

1995 பெப்ரவரி 25ஆம் நாளன்று நான் உங்களிடமிருந்து ஒரு கடிதம் மட்டுமே பெற்றுக் கொண்டேன். அந்தக் கடிதத்தில் மேற்குறிப்பிட்ட பந்தி இருக்கவில்லை. பெப்ரவரி 25இல் நீங்கள் எழுதிய கடிதத்தின் உள்ளடக்கம் என்னவென்பது விடுதலைப் புலிகளின் அனைத்துலக அரசியல் பிரிவினருக்கு தெரியவில்லை என்பதை வருத்தத்துடன் குறிப்பிட விரும்புகிறோம். அதனால்தான் நீங்கள் எழுதிய கடிதத்தின் உள்ளடக்கம் இங்கு திரித்துக் கூறப்பட்டுள்ளது.

1995 பெப்ரவரி 20ஆம் நாளன்று நான் உங்களுக்கு எழுதிய கடிதத்தில், கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளேன் என்பதை உங்களது கவனத்திற்கு எடுத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன். "இந்த விடயமாக பிரஞ்சு அரசாங்கத்தை நான் அணுகிய போது மதிப்பு மிக்க பிரஞ்சு நாட்டவர் ஒருவரை எமக்குத் தந்துதவ பிரான்ஸ் இணக்கம் தெரிவித்தது... இவர் பிரான்ஸ் நாட்டின் தூதுவராகப் பணிபுரிந்தவர்... நீங்களும் இணக்கம் தெரிவித்து, இரு தரப்புமாக நாம் அவரது பாதுகாப்புக்கு உறுதி அளித்தால் அவர் இந்தப் பணியைச் செய்யத் தயாராக இருக்கிறார். இவர் எமக்கு மத்தியில் நடுவராகச் செயற்படுவாரே அன்றி, எமது கருத்துப் பரிமாற்றத்தில் பிரஞ்சு அரசாங்கத்தை எவ்வகையிலும் ஈடுபடுத்த மாட்டார் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்."

ஆகவே, நடுவராக நான் சிபாரிசு செய்த நபர் பிரஞ்சு அரசினால் தெரிவு செய்யப்பட்டவர் என்பதும்

பிரஞ்சு அரசின் ஆதரவு பெற்றவர் என்பதும் நன்கு புலனாகிறது. எனினும், இவர் பிரஞ்சு அரசாங்கத்தின் தலையீடு இன்றி, எனது அரசாங்கத்தினதும் உங்களது அமைப்பினதும் விருப்பத்திற்கு இசைவாகப் பணியாற்ற இருந்தார்.

பிரஞ்சு அரசாங்கத்தினால் பரிந்துரைக்கப்பட்ட ஒரு நடுவரை, தனிப்பட்ட நபர் என்றும் எனது நெருங்கிய நண்பர் என்றும் சித்தரிப்பது முற்றிலும் தவறானதாகும். உண்மையில் இவர் யார் என்பது எனக்குத் தெரியாது. இவர் பிரஞ்சு அரசாங்கத்தினால் தெரிவு செய்யப்பட்டவர். இவர் கொழும்புக்கு வந்த பின்புதான், முதன் முதலாக நான் இவரைச் சந்தித்தேன். ஆகவே இல்லாத ஒரு கடிதத்தைக் கற்பித்து. அதன் அடிப்படையில் விடுதலைப் புலிகள் இயக்கம் உண்மைகளைத் திரித்துக் கூறி இருப்பதையிட்டு எமது அரசாங்கம் வேதனையடைகிறது.

இரண்டாவதாக, விடுதலைப் புலிகள் பேச்சுக்களுக்குத் தயாரென லண்டனில் வெளியிடப்பட்ட அறிக்கையில் கூறப்படுகிறது. ஆனால் பெப்ரவரி 25இல் நீங்கள் எழுதிய கடிதத்தில், பேச்சுக்கள் பற்றி எதுவுமே குறிப்பிடவில்லை.

அரசியல் பேச்சுக்களுக்கு விரைவாக ஒரு நாளை நிர்ணயிக்குமாறு நான் விடுத்த வேண்டுகோளுக்கு நீங்கள் இதுவரை ஒரு பதிலும் தரவில்லை. புனர்நிர்மாண வேலைகள் குறித்து ஏற்கனவே நடைபெற்று வரும் பேச்சுக்களை மீண்டும் ஆரம்பிப்பதற்கு நீங்கள் சில முன் நிபந்தனைகளை விதித்துள்ளார்கள். இந்த நிபந்தனைகள் வருமாறு:-

i) பூநகரி இராணுவ முகாமை அகற்றுவது.

ii) வட கிழக்குக் கடலில் மீன்பிடித் தடையை முற்றாக நீக்குவது.

iii) கிழக்கு மாகாணத்தில் ஆயுதம் தரித்த புலிப் போராளிகளுக்கு நடமாட்டச் சுதந்திரம் வழங்குவது.

iv) பொருளாதாரத் தடைகளை முற்றாக நீக்குவது.

நிரந்தரமான, நிலையான சமாதானத்திற்குப்

புறம்பாக இக் கோரிக்கைகள் வழங்கப்பட்டால் பாரதூரமான இராணுவ விளைவுகள் ஏற்படும். தேசியப் பாதுகாப்புக்குப் பங்கம் ஏற்படாத வகையில், எவ்வளவு கூடுதலான சலுகைகளை உங்களுக்கு விட்டுக் கொடுக்க முடியுமோ அவற்றை எல்லாம் நாம் உங்களுக்கு வழங்கிவிட்டோம்.

இந்த விவகாரங்களைப் பற்றிக் கதைப்பதற்காக அரசியல் பேச்சுக்களை ஆரம்பிப்பதைப் பிற்போடத் தேவையில்லை. இரண்டு விடயங்களும் ஒரே சமயத்தில் இணைவாகப் பேசப்படலாம். இதுதான் அரசாங்கத்தின் நிலைப்பாடாக இருந்து வருகிறது. ஒன்றன் பின் ஒன்றாக பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்குப் பதிலாக, வடக்கில் வாழும் மக்களின் அவசர நாளாந்தப் பிரச்சினைகளையும், இன நெருக்கடிக்கான அரசியல் தீர்வுப் பிரச்சினையையும் ஒரே சமயத்தில் இணைவாக வைத்துப் பேசலாம் என்பதே அரசாங்கத்தின் யோசனையாகும்.

பெப்ரவரி 25ஆம் நாள் நீங்கள் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டதுபோல, 'அரசாங்கத்தினதும் விடுதலைப் புலிகளதும் அதிகாரபூர்வமான பிரதிநிதிகள் மத்தியிலேயே பேச்சுக்கள் நடைபெறவேண்டும்' என்ற யோசனையை நாம் ஏற்றுக் கொள்கிறோம்.

இனப் பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காணும் பேச்சுக்கள் ஏப்ரல் 2இலிருந்து 10ஆம் நாள் வரையிலான கால இடைவெளியில் ஆரம்பமாக வேண்டும். ஆரம்ப கட்டமாக இரண்டு நாட்கள் பேச்சுக்களை நடத்துவதற்காக எமது பிரதிநிதிகளை நாம் யாழ்ப்பாணம் அனுப்பி வைப்போம். இதற்கு முன்னர், அரசியல் தீர்வுக்கான எமது யோசனைத் திட்டத்தை உங்களுக்கு அனுப்பி வைப்போம்.

உடன் பதில் அனுப்பி வைத்தால் நன்றியாக இருப்பேன்.

அன்புடன்
உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா

தமிழ் மக்களின் அன்றாட ஜீவாதாரப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணுமாறு விடுதலைப் புலிகள் முன்வைத்த நியாயமான, யதார்த்தமான கோரிக்கையை சந்திரிகா அரசு பிடிவாதமாக, தொடர்ச்சியாகப் பரிசீலனை செய்ய மறுத்து வந்தபோது அதற்கு ஒரு அடிப்படையான காரணம் இருக்க வேண்டும் என நாம் கருதினோம். அதாவது, சிங்கள இராணுவத்தின் கேந்திர நலன்களைப் பேணிப் பாதுகாக்கும் நோக்குடனேயே அரசாங்கம் இந்த இறுக்கமான கடும்போக்கைக் கடைப்பிடிக்கிறது என நாம் எண்ணினோம். ஆனால் இதுவே முதற் தடவையாக ஜனாதிபதி சந்திரிகா தமது அரசாங்கத்தின் நிலைப்பாட்டைத் தெட்டத் தெளிவாக, எவ்வித மூடி மறைப்பும் இன்றிப் பகிரங்கமாக ஒப்புக் கொண்டார். விடுதலைப் புலிகளின் கோரிக்கைகளை வழங்கினால், பாரதூரமான இராணுவ விளைவுகள் உருவாகலாம் என்றும் 'தேசியப் பாதுகாப்பு' விவகாரத்தில் நெகிழ்ந்து கொடுக்க முடியாது என்றும் அவர் அரசாங்கத்தின் உண்மையான நிலைப்பாட்டைத் தெளிவுபடுத்தினார். வாழ்க்கைப் பிரச்சினைகளில் தொடங்கி, அரசியல் பிரச்சினை வரைக்கும் படிப்படியாக, கட்டம் கட்டமாகப் பேச்சுக்களை முன்நகர்த்திச் செல்லும் விடுதலைப் புலிகளின் அணுகுமுறையையும் சந்திரிகா திட்டவட்டமாக நிராகரித்தார். ஒட்டு மொத்தத்தில் பார்த்தால், அரசியல் பேச்சுவார்த்தைக்கு முன்னதாக இயல்புநிலையும், நிலையான அமைதியும் உருவாக வேண்டும் என்ற புலிகளின் அடிப்படையான யோசனையை அரசாங்கமும் சிங்கள இராணுவத் தலைமையும் ஏற்றுக் கொள்ளவில்லை என்பது சந்திரிகாவின் கடிதம் மூலமாகத் தெளிவாகத் தெரிந்தது. சிறீலங்கா அரசாங்கம் தனது அணுகுமுறையையும் கொள்கை நிலைப்பாட்டையும் தெளிவுபடுத்தி, விடுதலைப் புலிகளின் கோரிக்கைகளை முற்றாக நிராகரித்துள்ளதால் நாமும் எமது நிலைப்பாட்டை மறுபரிசீலனை செய்ய நிர்ப்பந்திக்கப்பட்டோம்.

முதலாவதாக, தமிழர் தாயகம் மீதான பொருளாதார முற்றுகையைத் தளர்த்துவதற்குப் பதிலாக சந்திரிகா அரசு இறுக்கிக் கொண்டே வந்தது. பல்வேறு பொருட்களுக்குத் தடை நீக்கம் செய்துள்ளதாக காலத்திற்கு காலம் அரசாங்கம் அறிக்கைகளை வெளியிட்ட பொழுதும், அப் பொருட்கள் மக்களுக்குக் கிடைப்பதில்லை. எரிபொருட்கள், உர வகைகள், சீமேந்து, இரும்புக் கம்பிகள் ஆகியன இராணுவப் பாவனைப் பொருட்களாகக் கருதப்பட்டு நிரந்தரத் தடைக்கு இலக்காகி

இருந்தன. பேச்சுக்களின் போதும், கடிதப் பரிமாற்றங்களிலும் அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடையை நீக்குமாறு எமது இயக்கம் மீண்டும் மீண்டும் வேண்டுகோள் விடுத்தும் அரசாங்கம் நெகிழ்ந்து கொடுக்கவில்லை. விடுதலைப் புலிகள் ஒரு புறமிருக்க, தமிழ் மாவட்ட அரச அதிபர்கள், குடிமக்கள் குழுக்கள், பொதுசன சம்மேளனங்கள், பல்கலைகக்கழக ஆசிரியர் சங்கம், சர்வதேச அமைப்புகள் ஆகியன தொடர்ச்சியாக, மன்றாட்டமாக விடுத்த வேண்டுகோளுக்கும் அரசாங்கம் செவிசாய்க்கவில்லை. இறுதியாக, இந்த வெகுசன அமைப்புகள், மனிதாபிமானத்தின் அடிப்படையில், சர்வதேச மனித உரிமை நிறுவனங்களிடம் கடும் ஆட்சேபம் தெரிவித்தன. ஆயினும், அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடைகள் நீக்கப்பட்டுள்ளதாக அரசாங்கம் மேற்கொண்ட தீவிரப் பொய்ப் பிரச்சாரம் உலகத்தின் மனச்சாட்சியை மௌனிக்கச் செய்தது. இரண்டாவதாக, சர்வதேசக் கண்காணிப்புக் குழுவின் மேற்பார்வையில் ஒரு நிலையான, நிரந்தரமான போர்நிறுத்தம் உருவாக்கப்பட வேண்டுமென நாம் விடுத்த வேண்டுகோளையும் அரசாங்கம் வேண்டுமென்றே நிராகரித்து வந்தது. ஒரு நிலையான போர் நிறுத்தத்திற்குப் பதிலாக, ஒரு நிலையற்ற தற்காலிக பகை நிறுத்தத்தையே அரசாங்கம் விரும்பியது. இந்தப் பகை நிறுத்த உடன்பாட்டிற்கும் விரிவான, விளக்கமான விதிகளைக் கொண்ட நடைமுறைத் திட்டத்தை வகுக்கவும் நாம் தொடர்ச்சியாக விடுத்து வந்த வேண்டுகோளையும் அரசாங்கம் நிராகரித்துள்ளது. இதிலிருந்து, ஒரு நிலையான சமாதானத்தையும், இயல்பு நிலையையும் தோற்றுவிப்பதில் அரசாங்கத்திற்கு நேர்மையான அக்கறை இருக்கவில்லை என்றே எமக்குத் தென்பட்டது.

மூன்றாவதாக, கடற் புலிகளின் நடமாட்டத்தை முற்றாக முடக்கி, வடகிழக்குப் பிரதேசக் கடலில் முழுமையான கடலாதிக்கத்தை நிலைநாட்டுவதே சிறீலங்கா அரசாங்கத்தின் நோக்கமாக இருந்தது. இதன் காரணமாகவே மீன்பிடிக்கு இறுக்கமான தடைகளை விதித்தது. இந்தத் தடைகளால் தமிழ் மீனவச் சமூகம் தாங்கொணாத் துன்பங்களை அனுபவித்து வருவதாக அரசாங்கம் அறிந்திருந்தபோதும், தடைகளைத் தளர்த்த மறுத்து வந்தது.

நான்காவதாக, கிழக்கு மாவட்டங்களில் ஆயுதம் தரித்த எமது போராளிகள் சுதந்திரமாக நடமாடுவதை இராணுவத்

தலைமைப்பீடம் விரும்பவில்லை. இந்தப் பிரச்சினையைச் சுமுகமாகத் தீர்த்து வைக்குமாறு திரும்பத் திரும்ப நாம் விடுத்த வேண்டுகோளைப் பரிசீலனை செய்யவும் கூட அரசாங்கம் தயாராக இல்லை. இந்தச் சிக்கலான பிரச்சினைக்கு இணக்கப்பாடு காணப்படுமென அரசு தரப்புப் பிரதிநிதிகள் வாக்குறுதி வழங்கியதன் அடிப்படையிலேயே நாம் பகை நிறுத்த உடன்பாட்டில் கைச்சாத்திட்டோம். ஆனால் பின்பு இந்தப் பிரச்சினை பற்றி விவாதிப்பதற்கே அரசாங்கம் மறுப்புத் தெரிவித்தது. கிழக்கு மாவட்டங்களில், பகை நிறுத்த உடன்பாட்டுக்கு முன்னராக, எமது போராளிகள் நடமாடும் கெரில்லா அணிகளாக செயற்பட்டு வந்தனர். பகை நிறுத்த உடன்பாட்டில் கிழக்கின் கள நிலவரங்கள் குறித்து எவ்விதமான மோதல் தவிர்ப்பு விதிகளும் இல்லாத காரணத்தினால், எமது போராளிகளின் நடமாட்டம் சிக்கலுக்கு உள்ளாகியது. மோதல்கள் எழக்கூடிய ஆபத்தான சூழ்நிலை எழுந்தும் அரசாங்கம் இப் பிரச்சினையைத் தீர்த்து வைக்க முனையவில்லை. சிங்கள இராணுவத் தலைமை வேண்டுமென்றே ஒரு நெருக்கடி நிலையைக் கிழக்கில் நீடிக்கச் செய்ததுடன், விடுதலைப் புலிகள் போர் நிறுத்த உடன்பாட்டை மீறுவதாகவும் தொடர்ந்து குற்றம் சுமத்தி வந்தது.

ஐந்தாவதாக, பூநகரி இராணுவ முகாமை அகற்றி வன்னிக்கு தரைப்பாதை திறப்பதை அரசாங்கம் வன்மையாக எதிர்த்து வந்தது. ஒரு குறிப்பிட்ட இராணுவக் கேந்திர நோக்கத்திற்காகவே பூநகரிப் படை முகாமை அகற்ற அரசாங்கம் மறுத்து வருகிறது என்பது எமக்குப் புலனாகியது. யாழ்ப்பாணம் மீது படை எடுப்பதற்கு, யாழ் குடாநாட்டைச் சுற்றி வளைத்து முற்றுகையிடும் நோக்குடன் ஐக்கிய தேசியக் கட்சி அரசாங்கம் 1992இற் பூநகரியில் இந்த இராணுவ முகாமை நிறுவியது என்பது எமக்குத் தெரியும். பின்பு, கிழக்கு மாகாணத்தை முழுமையாகத் தனது இராணுவ ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வரும் படை நடவடிக்கைகளில் அரசாங்கம் கவனம் செலுத்தியதால், யாழ் குடாநாடு மீதான படையெடுப்புத் திட்டம் பிற்போடப்பட்டது. ஆயினும், சந்திரிகாவின் அரசு ஐக்கிய தேசியக் கட்சி கைவிட்ட யாழ்ப்பாணப் படையெடுப்புத் திட்டத்தை மீண்டும் நடைமுறைப்படுத்தத் துணியலாமென நாம் அஞ்சினோம். பூநகரி முகாமை அகற்றமுடியாதென அரசாங்கம் அடம் பிடித்து நின்றமை எமது சந்தேகத்தையும் அச்சத்தையும் மேலும்

வலுப்படுத்தியது. இறுதியாக, விடுதலைப் புலிகளுக்கு அங்கலாய்ப்பை ஏற்படுத்திய முக்கியமான விடயம் என்னவென்றால் சந்திரிகா அரசாங்கத்தின் இராணுவ விரிவாக்கத் திட்டமாகும். சமாதானப் பேச்சுவார்த்தை என்ற போலித் திரைக்குப் பின்னால், அரச ஆயுதப் படைகளை நவீன மயப்படுத்திப் பலப்படுத்தும் பாரிய விரிவாக்கத் திட்டம் ஒன்றை அரசாங்கம் செயற்படுத்தி வந்தது. பேச்சுக்கள் நடைபெற்ற காலத்தில் புதிய ஆயுதத் தளபாடங்களை அரசாங்கம் வாங்கிக் குவித்தது. 'சூப்பர்சோனிக்' போர் விமானங்கள், போருக்கான உலங்குவானூர்திகள், போர்க் கப்பல்கள், நவீன டாங்கிகள், கவச வாகனங்கள் கனரகப் பீரங்கிகள் ஆகியனவற்றை வெளிநாடுகளிலிருந்து அரசாங்கம் வாங்கியது. இது ஒரு புறமிருக்க, ஆயுதப் படைகளுக்குப் பல ஆயிரக்கணக்கில் இளைஞர்கள் திரட்டப்பட்டுப் பயிற்றப்பட்டனர். இப்படியாக, ஒரு புறம் சமாதானப் பேச்சுகள் என்ற ஒரு போலி அரசியல் நாடகத்தை அரங்கேற்றி உலகத்தை ஏமாற்றிக் கொண்டு, மறுபுறம் போர் ஆயத்த வேலைகளில் ஈடுபட்டது சந்திரிகா அரசு. அத்துடன் பேச்சுகளின்போதும் விடுதலைப் புலிகளது நியாயமான, யதார்த்தமான கோரிக்கைகளை நிராகரித்து இறுக்கமான கடும்போக்கை அரசாங்கம் கடைப்பிடித்து வந்ததும் எமது சந்தேகத்தை மேலும் வலுப்படுத்தியது. சந்திரிகாவின் அரசாங்கம் நேர்மையுடன் நடந்து கொள்ளவில்லை என்றும் யாழ்ப்பாணக் குடாநாடு மீது பாரிய படையெடுப்பை மேற்கொள்ளும் நோக்குடன், பேச்சுக்கள் என்ற சாக்கில் காலத்தை இழுத்தடித்துப் போருக்கான தயாரிப்பு வேலைகளிலேயே ஈடுபட்டு வருவதாகவும் பிரபாகரன் முழுமையாக நம்பினார். அவரைப் பொறுத்த வரை, இந்தச் சமாதானப் பேச்சுக்கள் சிங்கள அரசாங்கத்தின் ஏமாற்று வித்தையாகவே இருந்தன.

## விடுதலைப் புலிகள் விடுத்த காலக்கெடு

அன்றைய வரலாற்றுச் சூழ்நிலையின் சகல பரிமாணங்களையும் மிகவும் கவனமாகப் பரிசீலனை செய்து பார்த்தபின்பு, அரசாங்கம் தனது நிலைப்பாட்டை மாற்றிக் கொள்ளும் பொருட்டு ஒரு காலக்கெடுவை விதிக்கப் புலிகளின்

தலைமை முடிவெடுத்தது. விடுதலைப் புலிகள் அடைந்துள்ள விரக்தியையும் ஏமாற்றத்தையும் சந்திரிகா அம்மையாருக்கு எடுத்து விளக்கிய பிரபாகரன், ஒரு காலக்கெடுவை விதித்து, அந்தக்கால இடைவெளிக்குள் அரசாங்கம் தனது நிலைப்பாட்டை மாற்றிக் கொள்ளாது போனால் பேச்சுக்களை இடை நிறுத்தும் 'வேதனைக்குரிய முடிவை' விடுதலைப் புலிகள் எடுப்பார்கள் என எச்சரித்தார். சந்திரிகாவுக்குக் கீழ்க் கண்ட கடிதத்தைப் பிரபாகரன் எழுதினார்:-

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
16.03.1995

கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா,
சிறீலங்காவின் ஜனாதிபதி
கொழும்பு

அன்பின் ஜனாதிபதி அவர்கட்கு,

1995 மார்ச் 9ஆம் நாள் திகதியிடப்பட்ட உங்களது கடிதத்திற்கு மிகவும் நன்றி.

ஒரு நடுநிலையான மத்தியஸ்தர் குறித்து நீங்கள் தெரிவித்த யோசனை தொடர்பாக, லண்டன் அனைத்துலகச் செயலகம் வெளியிட்ட பத்திரிகை அறிக்கையில் முரண்பாடுகள் இருப்பதாக உங்களது கடிதத்தின் முற்பகுதியில் குறிப்பிட்டுள்ளீர்கள். இந்த விடயத்தில், நான் உங்களுக்குத் தனிப்பட்ட முறையில் அனுப்பிய கடிதத்தை மேற்கோள் காட்டப் பயன்படுத்துவதே பொருத்தமாக இருக்குமெனக் கருதுகிறேன்.

சமாதானப் பேச்சுக்களை முன்னெடுப்பதற்கு அமைதியான சூழ்நிலையும் இயல்பு நிலையும் தோன்றுவது அத்தியாவசியமென்பதை நாம் தொடக்கத்திலிருந்தே வலியுறுத்தி வந்தோம் என்பதை நீங்கள் நன்கறிவீர்கள். சில முக்கிய காரணங்களுக்காகவே நாம் இந்த நிலைப்பாட்டை எடுத்தோம்.

மிகவும் சிக்கல் நிறைந்த இனப் பிரச்சினைக்குத்

தீர்வு காணும் பேச்சுக்களை முன்னெடுக்க நீண்ட காலம் பிடிக்கும் என்பதால், ஒரு நிரந்தரமான போர் நிறுத்தம் மூலம் ஒரு நிலையான, சமாதானச் சூழ்நிலை உருவாக்கப்பட வேண்டும் என்பது எமது கருத்தாகும். நிலையற்ற போர் நிறுத்தங்களாலும், அவை மீறப்பட்டதாலும் முன்னைய பேச்சுக்கள் முறிவடைந்ததும் போர் மீள ஆரம்பிக்கப்பட்டதையும் நீங்கள் நன்கறிவீர்கள். எனவே, இந்த விடயத்தில் நாம் கொண்டுள்ள கருத்தை நீங்கள் பாரதூரமாக எடுக்கவில்லை என்பது எமக்குக் கவலையைத் தருகிறது. போர் நிறுத்தத்தை அதன் முழுமையான அர்த்தத்தில் ஏற்க மறுத்து, 'பகை நடவடிக்கை நிறுத்தம்' என்ற கோட்பாட்டின் அடிப்படையில் ஒரு தற்காலிக மோதல் தவிர்ப்பையே நீங்கள் விரும்புவதிலிருந்து உங்களது நிலைப்பாடு எமக்குத் தெளிவாகிறது. பகை நிறுத்த உடன்பாட்டின் விதிகளை விரிவுபடுத்திச் செயல்முறைத் திட்டம் ஒன்றை உருவாக்குவதிலும் உங்களது அரசு அக்கறை காட்டவில்லை. இவற்றிலிருந்து, சமாதானச் சூழ்நிலையை நிலைப்படுத்திப் பலப்படுத்த உங்களது அரசு அக்கறை காட்டவில்லை என்பது நன்கு புலனாகிறது.

தமிழரின் இனப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு முன்னைய அரசு, ஈவிரக்கமற்ற இராணுவ அணுகுமுறையைக் கடைப்பிடித்தது என்பதும், அந்த அரசு முன்னெடுத்த இனவாத அடக்குமுறைக் கொள்கைகளின் விளைவாக வடகிழக்கில் குடிமக்களின் இயல்பான வாழ்நிலை பாரதூரமாகப் பாதிக்கப்பட்டது என்பதையும் நீங்கள் நிச்சயம் அறிந்திருப்பீர்கள். தமிழர் தாயகத்தில் இராணுவ ஆக்கிரமிப்புக்கு வசதி செய்யும் வகையில், முன்னைய அரசினால் திணிக்கப்பட்ட பொருளாதார முற்றுகைகள், தடைகள், கட்டுப்பாடுகள் காரணமாக எமது மக்கள் பெரும் துன்பத்திற்கும் இடர்பாடுகளுக்கும் ஆளாகினர்; அவர்களது சமூகப் பொருளாதார வாழ்வும் சீர்குலைக்கப்பட்டது. சமாதானத்திற்கு ஆணைபெற்று ஆட்சிப்பீடம் ஏறிய புதிய அரசாங்கம், எமது மக்களின்

துன்பங்களைத் துடைத்து இயல்பு நிலையும் அமைதியும் நிலவும் ஒரு சுமுகமான சூழ்நிலையை உருவாக்குமென விடுதலைப் புலிகளும் தமிழ் மக்களும் நம்பினார்கள். இந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே, எமது மக்கள் எதிர்கொண்டு நிற்கும் அவசரமான நாளாந்த வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முதற் கட்டப் பேச்சுக்கள் முக்கியத்துவம் அளிக்க வேண்டுமென நாம் வற்புறுத்தினோம். ஆரம்பப் பேச்சுக்களின் போது எமது மக்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் என்னவென்பதைத் தெளிவுபடுத்தி, அவற்றிற்குத் தீர்வுகாணுமாறு அரசாங்கத்தை வேண்டினோம். இப் பிரச்சினைகள் விடுதலைப் புலிகளின் கோரிக்கைகள் அல்ல என்றும், மாறாக, இவை ஒடுக்கப்படும் எமது மக்கள் எதிர்கொள்ளும் பாரதூரமான மனிதாபிமானப் பிரச்சினைகள் என்றும் நாம் விளக்கினோம். போரினால் பாதிப்புக்கு உள்ளாகிய பகுதிகளில் அமைதியையும் இயல்பு நிலையையும் உருவாக்குவதாயின் எமது மக்கள் எதிர்கொள்ளும் அத்தியாவசிய வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முதலில் தீர்வு காணப்பட வேண்டும் என்பதை வலியுறுத்தினோம்.

'நாளாந்த வாழ்க்கையில் எமது மக்கள் அனுபவிக்கும் இடர்பாடுகளை நீக்குவதாக' உங்களது அரசாங்கம் ஆரம்ப கட்டப் பேச்சுக்களின்போது உறுதியளித்தது. எனினும் காலப் போக்கில், பேச்சுக்கள் தொடர்ந்து சென்றபோது, மக்களின் அவசர வாழ்க்கைப் பிரச்சினைகளைக் கை நழுவவிட்டு, இனப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கான அரசியல் பிரச்சினைக்கு முக்கியம் கொடுக்க உங்களது அரசாங்கம் முனைந்தது. இது பற்றி நாம் எமது கடிதங்களில் சுட்டிக் காட்டியிருந்தோம். இராணுவத் தலைமைப்பீடத்தைத் திருப்திப்படுத்தும் நோக்கத்திற்காகவே எமது மக்களின் அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தீர்க்க அரசாங்கம் பின்னடிப்பதாகக் குறிப்பிட்டுக் காட்டிய நாம், குடிமக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு மேலாக இராணுவத்தின் கேந்திர நலன்களுக்கு முன்னுரிமை

கொடுத்தால் சமாதான முயற்சிகள் பாரதூரமாகப் பாதிக்கப்படுமெனவும் எச்சரிக்கை விடுத்தோம். விடுதலைப் புலிகள் முன்வைக்கும் கோரிக்கைகள் வழங்கப்பட்டால் பாரதூரமான இராணுவ விளைவுகள் ஏற்படும் என உங்களது கடைசிக் கடிதத்தில் தெரிவித்திருந்தீர்கள். இதிலிருந்து இராணுவ நலனுக்கே நீங்கள் முக்கியத்துவம் கொடுக்கிறீர்கள் என்ற எமது சந்தேகம் உறுதியாகியது. பூநகரி இராணுவ முகாமை அகற்றி யாழ்ப்பாணத்திற்கு ஒரு தரைப் பாதையைத் திறப்பது, அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடையை நீக்குவது, மீன்பிடி மீதான கட்டுப்பாடுகளைத் தளர்த்துவது போன்ற எமது மக்களின் தேவைகளை நிறைவு செய்யவும் எமது கோரிக்கைகள் தேசியப் பாதுகாப்புப் பிரச்சினைகள் என்பதால் விட்டுக் கொடுக்க முடியாதவை என்பது உங்களது நிலைப்பாடு. இன்னொரு வகையில் சொல்லப் போனால், தமிழ் மக்களின் சமூகப் பொருளாதார வாழ்வு மீது இராணுவத்தினால் திணிக்கப்பட்ட தடைகளும் கட்டுப்பாடுகளும் தேசியப் பாதுகாப்பைப் பேணுவதற்கு அவசியமானவை என நீங்கள் நியாயப்படுத்த முனைகிறீர்கள்.

எமது மக்களின் வாழ்க்கையைப் பாதிக்கும் இந்த முக்கிய விடயத்தில் நீங்கள் எடுத்துள்ள நிலைப்பாடு எமக்கு ஆழமான வேதனையையும் ஏமாற்றத்தையும் தருகிறது. ஒரு மக்கள் சமூகத்தின் உரிமைகளையும் சுதந்திரங்களையும் தேசியப் பாதுகாப்புக்கு அச்சுறுத்தலாகக் கருதும் உங்களது பிறழ்வுபட்ட பார்வையானது இராணுவ வாதத்தையும் பேரின வாதத்தையும் வெளிப்படுத்துவதாக உள்ளது.

தமிழ் மக்களைப் பீடித்து நிற்கும் மிகவும் அவசரமான வாழ்க்கைப் பிரச்சினைகளை விட்டுக் கொடுக்க முடியாத பாதுகாப்புப் பிரச்சினைகளாகச் சித்தரித்து, அவற்றிற்குத் தீர்வு காண மறுக்கும் உங்களது நிலைப்பாடு ஒரு உண்மையை எமக்குப் புலப்படுத்துகிறது. அதாவது, தமிழ் மக்கள் மீது இராணுவ, பொருளாதார நெருக்குவாரங்களைத் தொடர்ந்து இறுக்கி, அதனைப் பேச்சுவார்த்தை

மேசையில் பேரம் பேசும் துருப்பாக வைத்து அரசியல் இலாபம் பெற முனைகிறீர்கள். இதனால்தான் மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகளை ஒட்டுமொத்த அரசியல் தீர்வுடன் தொடர்புபடுத்தக் கங்கணம் கட்டி நிற்கிறீர்கள். இந்த நிலைப்பாட்டை நாம் ஒருபொழுதும் ஏற்கப் போவதில்லை. எமது மக்கள் எதிர்கொள்ளும் நாளாந்த வாழ்க்கைப் பிரச்சினைகள், இன முரண்பாட்டினால் எழுந்த அரசியல் சிக்கல்கள் அல்ல. வரையறுக்கப்பட்ட கேந்திரக் குறிக்கோள்களை அடைவதற்காக இராணுவத்தினால் உருவாக்கப்பட்ட பிரச்சினைகள் இவை. எமது மக்கள் மீது திணிக்கப்பட்ட இந்தத் தடைகளும் கட்டுப்பாடுகளும் முந்திய அரசாங்கத்தினால் மேற்கொள்ளப்பட்ட இராணுவ அடக்குமுறை நடவடிக்கைகள் என்பதே எமது கருத்தாகும். இவை அநீதியானவை, மனிதாபமானவற்றவை. இப் பிரச்சினைகள் மனிதாபிமானத்தின் அடிப்படையில் தீர்வு காணப்பட வேண்டியவை; பிளவுபட்டு நிற்கும் இரு தேசங்கள் மத்தியில் நல்லெண்ணத்தையும் உண்மையான சமாதானத்தையும் கட்டியெழுப்பும் உன்னத இலட்சியத்தின் அடிப்படையில் தீர்வு காணப்பட வேண்டியவை.

கடந்த ஆறு மாத காலமாக உங்களுக்கு எழுதிய பல கடிதங்களிலும், நேரடிப் பேச்சுக்களிலும் எமது மக்களின் அவசரமான ஜீவாதாரப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணப்பட வேண்டும் என்பதையே நாம் தொடர்ச்சியாக வற்புறுத்தி வந்திருக்கிறோம். இதனால் இனப் பிரச்சினைக்கு அடிப்படையான அரசியற் சிக்கல்களைத் தட்டிக் கழித்து விட நாம் முயற்சிப்பதாகத் தவறாக எடை போடக் கூடாது. அரசியல் பிரச்சினைகள் பற்றிப் பேசுவதற்கு நாம் எப்பொழுதும் மறுத்ததில்லை. எமது மக்களின் தேசிய அபிலாசைகளைத் தீர்ப்பதற்கு உகந்ததான ஒரு அரசியல் கட்டமைப்புப் பற்றியும் நாம் யோசனை தெரிவித்தோம். தற்போதைய பேச்சுக்கள் முடங்கியதற்கும், அரசியல் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கும் எவ்வித தொடர்பும் இல்லை.

'இராணுவ விளைவுகள்' ஏற்படலாமென அஞ்சி, உடனடியான அவசரப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு உங்களது அரசாங்கம் தயக்கம் காட்டுவதாலேயே பேச்சுக்கள் தடைபட்டு நிற்கின்றன.

உண்மையான உறுதிப்பாடு இருக்குமானால் உங்களால் இலகுவில் தீர்த்து வைக்கக் கூடிய எமது மக்களின் நாளாந்த வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தீர்க்காது கடும் போக்கை உங்களது அரசாங்கம் கடைப்பிடிக்கிறது. அப்படியானால், மிகவும் சிக்கலானதும், கடினமானதுமான தேசிய இனப் பிரச்சினையை உங்களது அரசாங்கத்தால் தீர்த்து வைக்க முடியுமா என்ற சந்தேகம் எமக்கு எழுகிறது. ஆகவே, சமாதான இலட்சியத்திற்காக உங்களது முடிவுகளை மீள் பரிசீலனை செய்யுமாறு நாம் உங்களை மீண்டும் வேண்டிக்கொள்கிறோம். 1995 மார்ச் 28ஆம் நாளுக்கு முன்னராக உங்களிடமிருந்து சாதகமான பதில் எதுவும் கிடைக்காத பட்சத்தில், இந்தச் சமாதான நடைமுறையைத் தொடர்வதா இல்லையா என்பது பற்றி வேதனைக்குரிய ஒரு முடிவை எடுப்பதற்கு நாம் நிர்ப்பந்திக்கப்படுவோம்.

உங்களிடமிருந்து விரைவான பதிலை எதிர்பார்க்கிறோம்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

அரசாங்கம் தனது நிலைப்பாட்டை மாற்றிக் கொள்வதற்குக் காலக்கெடு கொடுத்து பிரபாகரன் எழுதிய காரசாரமான கடிதம் சந்திரிகா அம்மையாரைத் திகைப்பில் ஆழ்த்தியது. சந்திரிகாவிடமிருந்து உடனடியாகப் பதில் எதுவும் கிடைக்கவில்லை. பாதுகாப்புச் செயலர் திரு. சந்திரானந்த டி சில்வா, யாழ்ப்பாண அரசாங்க அதிபர் மூலமாகப் பிரபாகரனுக்கு ஒரு தகவல் அனுப்பியிருந்தார். 1995 மார்ச் 21ஆம் நாள், அரசாங்கப் பேச்சுக் குழு யாழ்ப்பாணம் வருவதற்கு அனுமதி

கேட்பதாக இத் தகவலில் தெரிவிக்கப்பட்டது. யாழ்ப்பாண அரசாங்க அதிபர் திரு. பொன்னம்பலம், தொலைபேசியில் தெரிவிக்கப்பட்ட இத் தகவலை, தமிழில் சிறு குறிப்பாக வரைந்து பிரபாகரனுக்கு அனுப்பியிருந்தார். இத் தகவலுக்குப் பதிலளித்து, பாதுகாப்புச் செயலருக்கு கீழ்க்கண்ட கடிதத்தைத் திரு. தமிழ்ச்செல்வன் அனுப்பி வைத்தார்.

தலைமைச் செயலகம்
அரசியல் பிரிவு
யாழ்ப்பாணம்
21.03.1995

சந்திரானந்த டீ சில்வா
பாதுகாப்புச் செயலர்
கொழும்பு

அன்புடையீர்,

1995 மார்ச் 20ஆம் நாளன்று எமது தலைவர் திரு. வே. பிரபாகரன் அவர்களுக்கு நீங்கள் அனுப்பிய செய்திக்கு மிகவும் நன்றி.

1995 மார்ச் 16ஆம் நாளன்று, திரு. பிரபாகரன் ஜனாதிபதிக்கு அனுப்பி வைத்த கடிதத்தில் எமது நிலைப்பாட்டைத் தெளிவாக விளக்கியிருப்பதாக உங்களுக்குத் தெரிவிக்கும்படி தலைமைப்பீடம் எனக்குப் பணித்துள்ளது. நாம் ஏற்கனவே விளக்கிக் கூறியிருப்பது போல எமது மக்களின் அவசரமான பிரச்சினைகள் குறித்து அரசாங்கம் ஆக்கபூர்வமான முடிவுகளை எடுக்குமென நாம் எதிர்பார்க்கிறோம். இந்த முடிவுகள் பகிரங்கமாக அறிவிக்கப்பட்டு, அவற்றை உடனடியாக நடைமுறைப்படுத்த அரசாங்கம் நடவடிக்கை எடுத்தால் நாம் அதைப் பெரிதும் வரவேற்போம்.

உங்கள் நேர்மையுள்ள

சு.ப.தமிழ்ச்செல்வன்
பொறுப்பாளர்
அரசியல் பிரிவு
தமிழீழ விடுதலைப் புலிகள்

1995 மார்ச் 21ஆம் நாள், தலைவர் பிரபாகரனுக்கு ஜனாதிபதி சந்திரிகா எழுதிய கடிதத்தில், பல பிரச்சினைகள் குறித்துத் தப்பபிப்பிராயம் எழுந்துள்ளதாகவும், பேச்சுக்கள் மேலும் தொடர்ந்தால் 'ஆக்கபூர்வமான முடிவுகள்' எடுப்பதற்கு ஏதுவாக இருக்குமெனத் தெரிவித்தார். இம் முறை பேச்சுக்கு வரும் அரசாங்கப் பிரதிநிதிகள் குழுவில் திரு. பலப்பத்தபெண்டியுடன் வணக்கத்திற்குரிய ஆயர் கென்னத் பெர்னாண்டோ, கலாநிதி ஜெயதேவா உயாங்கொட, திரு. சி.அபயசேகரா ஆகியோரும் அடங்குவர் எனத் தனது கடிதத்தில் சந்திரிகா அம்மையார் தெரிவித்திருந்தார். அவரது சுருக்கமான கடிதத்தின் உள்ளடக்கம் வருமாறு:-

21 மார்ச் 1995

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
தலைமைச் செயலகம்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

1995 மார்ச் 16ஆம் நாளைய உங்களது கடிதம் குறித்து இதனை எழுதுகிறேன். பல்வேறு பிரச்சினைகளில் தப்பபிப்பிராயம் நிலவுவது போலத் தெரிகிறது.

நேரடிப் பேச்சுக்களை நடத்துவதன் மூலமே ஆக்க பூர்வமான முடிவுகளை எடுக்க ஏதுவாக இருக்குமென நான் நம்புகிறேன். கீழ்க் கண்ட பிரதிநிதிகளை நான் அனுப்பி வைக்கிறேன். இவர்கள் உங்களது பிரதிநிதிகளைச் சந்திப்பதுடன், சில முக்கிய விடயங்கள் குறித்து உங்களையும் நேரில் சந்தித்துப் பேச வேண்டுமென நான் விரும்புகிறேன். இவர்கள் மார்ச் 23, 24, 25ஆம் திகதியில் ஒரு நாள் யாழ்ப்பாணம் வருகை தருவர்.

வணக்கத்திற்குரிய ஆயர் கெனத் பெர்னாண்டோ,
திரு. கே. பலப்பத்தபெண்டி
கலாநிதி. ஜெயதேவா உயாங்கொட
திரு. சி. அபயசேகரா

உங்கள் நேர்மையுள்ள, ஜனாதிபதி

தலைவர் பிரபாகரன் விடுத்த காலக்கெடுவை ஜனாதிபதி சந்திரிகா பாரதூரமான விடயமாகக் கருதாதது எமக்கு ஏமாற்றத்தைத் தந்தது. ஏதோ தப்பபிப்பிராயத்தில் எழுந்த ஒரு அற்ப விடயமாக அவர் அதைத் தட்டிக் கழித்தார். சந்திரிகா பின்பு எழுதிய கடிதங்களிலிருந்து நாம் விதித்த காலக்கெடு அவருக்குச் சினத்தை ஏற்படுத்தியது என்பது புலனாகியது. எமது காலக்கெடுவை ஒரு 'இறுதி எச்சரிக்கையாக' அவர் கணிப்பிட்டார். சனநாயக வழிமுறையில் உருவாக்கம் பெற்ற ஒரு அரசாங்கத்திற்கு ஒரு புரட்சி இயக்கம் சட்டரீதியாக இறுதி எச்சரிக்கை விட முடியாது என்பது சந்திரிகாவின் நிலைப்பாடு. அப்படியான எச்சரிக்கையை அரசாங்கம் கருத்தில் எடுக்கக் கூடாது என்பதும் அவரது நிலைப்பாடு. சந்திரிகாவின் இந்த நிலைப்பாடுதான் இறுதியில் சமாதானப் பேச்சுக்கள் முறிந்து போவதற்குக் காரணமாக அமைந்தது. சந்திரிகாவுக்கு அனுப்பிய பதில் கடிதத்தில் காலக்கெடுவை மீண்டும் வலியுறுத்திய பிரபாகரன், அரசாங்கம் உருப்படியான முடிவுகளை எடுத்து, அவற்றைக் கால தாமதமின்றி நிறைவேற்றி வைக்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். பிரபாகரனது கடிதம் வருமாறு:-

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
22.03.1995

கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா
சிறீலங்காவின் ஜனாதிபதி
ஜனாதிபதியின் தலைமையகம்
கொழும்பு
அன்பின் ஜனாதிபதி அவர்கட்கு,

1995 மார்ச் 16ஆம் நாளன்று நீங்கள் அனுப்பிய கடிதத்திற்கு நன்றி.

தற்போதைய சமாதானப் பேச்சுக்கள் சம்பந்தமாக, மார்ச் 16ஆம் நாள் நாம் எழுதிய கடிதத்தில், எமது மதிப்பாய்வு பற்றியும் நிலைப்பாடு பற்றியும் தெளிவுபடுத்தி விளக்கியிருந்தோம்.

சமாதானச் சூழ்நிலையை நிலைப்படுத்திப் பலப்படுத்தி, எமது மக்கள் எதிர்கொள்ளும் மிக அவசரமான உடனடிப் பிரச்சினைகளைத் தீர்த்து

வைக்கும் நோக்கம் இல்லாத பட்சத்தில், சமாதான வழிமுறை எவ்விதமான அர்த்தமுள்ள இலக்கையும் அடையப் போவதில்லை என்பதே எமது நேர்மையான கருத்தாகும். இதன் அடிப்படையில்தான் 1995 மார்ச் 28ஆம் நாளுக்கு முன்னராக உங்களது நிலைப்பாட்டை மறுபரிசீலனை செய்து ஆக்கபூர்வமான முடிவுகளை எடுக்குமாறு நாம் வேண்டிக் கொண்டோம்.

எமது நிலைப்பாட்டை நாம் தெட்டத் தெளிவாக உங்களுக்கு எடுத்துக் கூறி இருப்பதால், நீங்கள் குறிப்பிட்டதுபோல 'பல்வேறு பிரச்சினைகளில் எழுந்துள்ள தப்பபிப்பிராயங்கள்' பற்றிப் பேச்சைத் தொடர்வது அவசியமில்லை என்றே நாம் கருதுகிறோம். இந்தப் பிரச்சினைகள் குறித்து, கடந்த ஆறு மாதங்களாக நாம் நேரடிப் பேச்சுக்களிலும் கடிதப் பரிமாற்றங்களிலும் கலந்துரையாடியுள்ளோம். ஆகவே, அரச அதிபர் என்ற ரீதியில் இப் பிரச்சினைகள் குறித்து ஆக்கபூர்வமான முடிவுகளை எடுத்து, கால தாமதமின்றி அவற்றை நடைமுறைப்படுத்தும் காலம் கனிந்து விட்டது என்றே நாம் கருதுகிறோம். ஆகையால் சமாதான வழிமுறையின் எதிர்காலம் உங்களது கைகளிலேயே தங்கியுள்ளது எனக் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

1995 மார்ச் 24ஆம் நாளன்று, ஜனாதிபதி சந்திரிகாவிடமிருந்து எமக்கு இரண்டு கடிதங்கள் கிடைக்கப் பெற்றன. முதலாவது கடிதம் முற்றிலும் வேறுப்பட்ட ஒரு விடயம் பற்றியது. அரசாங்கத்தின் தூதுவர்கள் அல்லது பிரதிநிதிகள் என்ற சாக்கில் சில நபர்கள், விடுதலைப் புலிகளுடன் தொடர்புகொண்டு, தவறான தகவல்களைப் பரிமாறி, சமாதானப் பேச்சுக்களைக் குழப்பி விட முயல்வதாகத் தெரிவித்த சந்திரிகா,

தனது அனுமதியின்றி வருபவர்களை அதிகாரபூர்வமான பிரதிநிதிகளாக ஏற்க வேண்டாமென்றும் கேட்டுக் கொண்டார். இக் கடிதத்தில் தெரிவிக்கப்பட்டிருப்பதாவது:

24 மார்ச் 1995

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

1995, மார்ச் 16ஆம் நாளன்றும், 22ஆம் நாளன்றும் நீங்கள் அனுப்பி வைத்த கடிதங்களுக்கு இன்று பிற்பகல் பதில் அனுப்பி வைக்கிறேன்.

இதற்கிடையில், குழுக்களாக சில நபர்கள் தனிப்பட்ட நோக்கங்களுக்காகவும் அரசியல் காரணங்களுக்காகவும் நாம் மேற்கொண்டுள்ள சமாதான முயற்சியை குழப்பிவிட முயல்வதாக எனக்குத் தகவல் கிடைத்துள்ளது. உங்களுக்குத் தவறான தகவல்களைத் தந்து, எமக்கு மத்தியிலான உறவை பாழடிப்பதே இவர்களது குறிக்கோள்.

உங்களுக்கு முன்கூட்டியே அறிவித்தல் தந்த பின்னரே எமது அரச பிரதிநிதிகள் அல்லது தூதுவர்கள் உங்களது பிரதிநிதிகளைச் சந்தித்துப் பேசுவார்கள். மற்றவர்கள் யாராக இருப்பினும், என்னுடனோ அல்லது அரசாங்கத்துடனோ நெருக்கமானவர்கள் என்றோ அல்லது என்னைப் பிரதிநிதப்படுத்துவதாகவோ உரிமை கொண்டாடிய போதும் அவர்களை அதிகாரம் அற்றவர்களாகவே கொள்ளவேண்டும்.

உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா
ஜனாதிபதி

அதிகாரபூர்வமற்ற தூதுவர்கள் என ஜனாதிபதி சந்திரிகா குறிப்பிடும் நபர்கள் யார் என்பது எமக்குப் புதிராகவே இருந்தது. பேச்சுக்கள் நிகழ்ந்த கால கட்டத்தில், தென்னிலங்கையில்

இருந்து தனிநபர்களாவும், குழுக்களாவும் பல பிரமுகர்கள் யாழ்ப்பாணம் வருகை தந்து விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளைச் சந்தித்துள்ளனர். இவர்களில் அனேகமானவர்கள் பத்திரிகையாளர்கள், அரசியல் ஆய்வாளர்கள், இராஜதந்திரிகள், மத குருமார் மற்றும் சமாதான முயற்சிக்கு ஆதரவானவர்கள். இவர்களில் எவருமே அரச பிரதிநிதிகள் என்றோ அல்லது ஜனாதிபதியின் நண்பர்கள் என்றோ உரிமை கோரவில்லை. சந்திரிகாவுக்கு நன்கு தெரிந்தவர்கள் எனக் கூறி, யாழ்ப்பாண அரசியல் நிலைபற்றிப் படித்தறிய வந்தவர்களில் இருவரை மட்டும் எம்மால் இனம் காண முடிந்தது. ஒருவர் வசந்த ராஜா. ரூபவாகினி தொலைக்காட்சி நிறுவனத்தின் அதிபர். மற்றவர் 'ராவய' சிங்கள வார இதழின் ஆசிரியரான விக்டர் ஐவன். இவர்கள் இருவரும் தங்களை அரச பிரதிநிதிகளாகவோ அன்றி ஜனாதிபதியின் நண்பர்களாகவோ அறிமுகம் செய்து கொள்ளவில்லை.

வசந்த ராஜாவை எனக்கு ஏற்கனவே நன்கு தெரியும். இவர் யாழ்ப்பாணம் வந்தபோது என்னையும் தமிழ்ச்செல்வனையும் சந்தித்து நீண்ட நேரம் கலந்துரையாடினார். யாழ்ப்பாணத்தில் தொலைக்காட்சிக் கலைக்கூடம் ஒன்றை அமைக்கும் திட்டத்துடன் இவர் அப்பொழுது வந்திருந்தார். வடக்கில் நடந்தேறும் சமூக, அரசியல், பண்பாட்டு நிகழ்வுகளை தென்னிலங்கைச் சிங்கள மக்களுக்கு அறிமுகம் செய்து வைக்க வேண்டுமென்றும் அதேபோன்று சிங்கள மக்களின் வாழ்நிலையை தமிழ் மக்களுக்கு அறியச் செய்ய வேண்டுமெனவும் விரும்பினார். வடக்கில் வாழும் தமிழர்களுக்கும் தெற்கில் வாழும் சிங்களவர்களுக்கும் மத்தியில் பரஸ்பர நல்லெண்ணத்தையும் புரிந்துணர்வையும் ஏற்படுத்துவதே இவரது இலட்சியமாக இருந்தது. இவரது திட்டத்தை நாம் வரவேற்று ஏற்றுக் கொண்டோம். ஆனால் சந்திரிகா அம்மையார் இவரது திட்டத்தை ஏற்க மறுத்துவிட்டார் எனப் பின்பு அறிந்தோம்.

விக்டர் ஐவன் ஒரு முற்போக்கான பத்திரிகையாளர். புரட்சிகர அரசியல் சிந்தனையாளர். விடுதலைப் புலிகள் வட்டாரத்தில் இவருக்கு நல்ல மதிப்புண்டு. எழுத்தாளர்கள் குழுவுடன் இவர் யாழ்ப்பாணம் வந்திருந்திருந்தார். அப்பொழுது பேச்சுக்கள் முன்னேற்றமின்றி முடங்கிப் போயிருந்த கால கட்டம். யாழ்ப்பாணத்தில் என்னைச் சந்தித்த விக்டர், சமாதானப் பேச்சுக்கள் பற்றிக் கலந்துரையாடினார். விடுதலைப்

புலிகளின் நிலைப்பாடு பற்றி வினவினார். எமது கோரிக்கைகள் சிலவற்றை விட்டுக் கொடுத்து அரசாங்கத்துடன் சமரசம் காண முடியுமா எனக் கேட்டார். நாங்கள் கோரிக்கைகள், நிபந்தனைகள் எதையும் முன்வைக்கவில்லை, எமது மக்களின் நாளாந்த ஜீவாதாரப் பிரச்சினைகளைத் தீர்த்து வைக்குமாறே அரசாங்கத்தை வேண்டி நிற்கிறோம் என விளங்கப்படுத்தினேன். தமிழர் தேசம் மீது திணிக்கப்பட்ட அநீதியான பொருளாதார முற்றுகைகள், தடைகள், கட்டுப்பாடுகள் காரணமாக எமது மக்களின் சமூகப் பொருளாதார வாழ்வியக்கம் பாரதூரமான பாதிப்பை அடைந்துள்ளதாக எடுத்துக் கூறிய நான், சந்திரிகாவின் அரசு இராணுவ நலனுக்கே முன்னுரிமை கொடுத்து வருவதாகக் கூறினேன். யாழ் குடாநாடு மீது படையெடுக்கும் அந்தரங்க தந்திரோபாயத்துடன் அரசு செயற்படுகிறது என்ற எனது குற்றச்சாட்டை ஏற்றுக் கொள்ள மறுத்தார் விக்டர் ஐவன். சந்திரிகாவை ஒரு முற்போக்கான சோசலிசவாதியாகக் கருதி, அவருக்கு ஆரம்பத்தில் ஆதரவு தெரிவித்த எழுத்தாளர்களில் விக்டர் ஐவனும் ஒருவர். காலப் போக்கிலே சந்திரிகாவின் உண்மை முகத்தை, அவரது சர்வாதிகார இராணுவவாதப் போக்கைக் கண்டு கொண்ட ஐவன், ஏமாற்றமடைந்து அரசுக்கு எதிராகத் திரும்பினார்.

அன்று (24 மார்ச் 1995) மாலை, சந்திரிகாவின் இரண்டாவது கடிதமும் எமக்குக் கிடைத்தது. அதிகாரத் தோரணையில் எழுதப்பட்ட அக்கடிதத்தில் விடுதலைப் புலிகளால் விடுக்கப்பட்ட 'இறுதி எச்சரிக்கையை' அரசாங்கம் ஏற்றுக் கொள்ளாது என சந்திரிகா வலியுறுத்தினார். இப்படி எச்சரிக்கை விடுவது ஒரு பகைமையான செயல் என்றும், சமாதான முயற்சியை இது பாழடித்துவிடும் என்றும் எச்சரித்த அவர், ஆயுதங்களைக் களைய வேண்டும் என்ற முன்நிபந்தனை எதுவுமின்றி ஒரு ஆயுதம் தரித்த புரட்சி இயக்கத்துடன் பேசுவதற்கு இணக்கம் தெரிவித்ததே விடுதலைப் புலிகளுக்கு அரசாங்கம் வழங்கிய சிறப்புரிமை எனக் குறிப்பிட்டார். இப்படியாகக் கடும் வார்த்தைகளைப் பிரயோகித்து, தனது வெறுப்பை வெளிக் காட்டிய சந்திரிகா எரிபொருட்கள் மீதான தடையையும் மீன்பிடி மீதான கட்டுப்பாடுகளையும் நீக்கிவிடும் ஆக்கபூர்வமான முடிவுகளை அரசாங்கம் எடுத்துள்ளதாகவும் சிங்கள - தமிழ் புத்தாண்டுக்கு (14 ஏப்ரல் 1995) முன்னராக இத் தீர்மானங்கள் நடைமுறை செய்யப்படும் எனவும் உறுதியளித்தார்.

சந்திரிகாவின் கடிதத்தைக் கீழே பிரசுரிக்கிறோம்:-

24 மார்ச் 1995

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
தலைமைச் செயலகம்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

1995, மார்ச் 16, மார்ச் 22ஆம் நாட்களில் நீங்கள் எழுதிய கடிதங்கள் கிடைக்கப் பெற்றேன். நன்றி.

உங்களது கடிதங்களில் எழுதப்பட்ட பிரச்சினைகளுக்குப் பதில் அளிப்பதற்கு முன்னராக, கடந்த சனியன்று 16 கைதிகளை விடுதலை செய்தமைக்குத் தனிப்பட்ட முறையில் உங்களுக்கும் விடுதலைப் புலிகள் அமைப்புக்கும் எனதும், எனது அரசாங்கத்தினதும் நன்றியை இச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். எமது அரசாங்கத்துடன் பேச்சுக்களைத் தொடர விரும்பும் உங்களது ஆவலின் வெளிப்பாடான உங்கள் முடிவை நாம் பாராட்டுகிறோம்.

நீங்கள் எழுப்பியுள்ள பிரச்சினைகளைப் பொறுத்தவரை, முதலில் நான் எடுத்துக் கூற விரும்புவது என்னவென்றால், விடுதலைப் புலிகள் இயக்கத்தால் விடுக்கப்படும் இறுதி எச்சரிக்கைகளை எமது அரசாங்கம் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை என்பதுதான். சமாதான வழிமுறைக்குப் பங்கம் விளைவிக்கும் பகைமையான நடவடிக்கையாகவே இதனை நாம் கருதுகிறோம் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம்.

இனப்பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு காணவேண்டும் என்ற இலட்சியத்திற்காக, சமாதான முயற்சியின் ஓர் அங்கமாக, வேறு எந்த அரசாங்கமும் எடுக்கத் துணியாத பல நடவடிக்கைகளை எமது மக்கள் கூட்டணி அரசாங்கம் எடுத்துள்ளது என்பதை நீங்கள் நன்கறிவீர்கள்.

1) சனநாயக முறைமையில் நிறுவப்பட்ட அரசுகள், ஆயுதம் தரித்த இயக்கங்களுடன் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு முன்னராக, குறைந்தது குறியீட்டு அடையாளமாக ஆயுதக் களைவைக் கோருவது வழமையான மரபு. உலகம் முழுவதிலும் இந்த மரபைக் காணலாம். எமது அரசாங்கம் இப்படியான பிரச்சினையை எழுப்பாதது மட்டுமன்றி, யாழ்ப்பாணத்தில் உங்களது தலைமைச் செயலகத்திற்கு வருவதற்கும் இணங்கியது.

2) பகை நிறுத்தக் காலத்தில், கிழக்கு மாகாணத்தில் மட்டுப்படுத்தப்பட்ட அளவில் உங்களது போராளிகள் ஆயுதங்களுடன் நடமாடுவதற்கு நாம் இணக்கம் தெரிவித்தோம். இதுவும் உங்களுக்கு அரசாங்கத்தால் வழங்கப்பட்ட இன்னொரு சிறப்புரிமையாகும்.
இத்துடன் மேலதிகமாக நாம்,

3) பல பொருட்கள் மீதான தடையை நீக்கினோம்.

4) பகை நிறுத்த உடன்பாட்டை நடைமுறைப் படுத்தினோம்.

5) மீன்பிடித் தடையைப் பகுதியாக நீக்கினோம்.

6) யாழ்ப்பாணத்திற்கு மாற்றுப் பாதைகளைத் திறந்துவிடத் தீர்மானித்தோம்.

நிர்வாக மற்றும் முட்டுக்கட்டைகள் காரணமாகத் தடை நீக்கம் செய்யப்பட்ட பொருட்கள் போதுமான அளவுக்கு வடக்கை வந்தடையவில்லை என்பது குறித்து வருந்துகிறோம். இந்த நிலைமை எமக்குத் தெரிய வந்ததுமே பூனேவா என்னுமிடத்தில் ஒரு புதிய சோதனைச் சாவடியை நிறுவி, வடக்கிற்குப் பொருட்கள் சென்றடையும் தடைகளை நீக்கினோம். பொருட்களைத் தடையின்றி விநியோகம் செய்யும் நோக்குடனேயே ஆனையிறவு, சங்குப்பிட்டிப் பாதைகளைத் திறந்துவிட விரும்பினோம் என்பதையும் நாம் இங்கு சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

இவை எல்லாம் எமது அரசாங்கம் சிந்தித்து எடுத்த முடிவுகள். கடந்த காலங்களில்,

குறிப்பாகக் கடந்த யு.என்.பி ஆட்சிக் காலத்தில் சிதைக்கப்பட்ட உறவுகளை மீண்டும் கட்டி எழுப்பி, தமிழ் மக்களுக்கும் புலிகளுக்கும் அரசாங்கத்திற்கும் இடையில் பரஸ்பர நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் சகோதரத்துவ மனப்பான்மையையும் வளர்ப்பதையே நாம் உண்மையாக விரும்புகிறோம்.

நாம் முன்பு கூறியதுபோல, நீங்கள் விடுத்த இறுதி எச்சரிக்கையை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. எனினும் நீங்கள் மார்ச் 16ஆம் நாள் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்ட மூன்று பிரச்சினைகள் எமது தொடர்ச்சியான பரிசீலனையில் இருந்து வந்தன. இப் பிரச்சினைகள் குறித்து நாம் ஆக்கபூர்வமான முடிவுகளை எடுத்துள்ளோம். ஆயினும், இந்த முடிவுகளை நடைமுறைப்படுத்துவது சம்பந்தமாக மேலும் விபரமாகக் கலந்துரையாட வேண்டும்.

சிங்கள - தமிழ்ப் புத்தாண்டுடன் இம் முடிவுகளை அறிவிப்பதே உகந்ததென எண்ணியிருந்தோம். ஏப்ரல் 2 - 7 வரையில் அரசியல் பேச்சுக்கள் ஆரம்பிப்பதற்கு முன்னராக, இவ்வாரம் இம் முடிவுகள் பற்றி நேரடியாக உங்களுடன் பேசுவதற்கு விரும்பினோம். ஆயினும் நீங்கள் பேச்சுக்களை விரும்பவில்லை.

மார்ச் 16ஆம் நாள், நீங்கள் எழுதிய கடிதத்தின் மூன்றாம் பக்கத்தில் குறிப்பிடப்பட்ட மூன்று விடயங்கள் குறித்து நாம் கீழ்க்கண்ட முடிவுகளை எடுத்துள்ளோம்.

அ) மீன்பிடித் தடையை நீக்குதல்.

கரையோரமாகவுள்ள பாதுகாப்பு படைகளின் முகாம்களிலிருந்து இரண்டு மைல் தூரக் கடற்பரப்பைத் தவிர்த்த ஏனைய கடற் பிரதேசங்களில் மீன்பிடிப்பதற்கு தடை இராது.

ஆ) அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடை நீக்கம்.

எரிபொருட்கள் மீதான தடை நீக்கப்படும். ஏனைய அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடைகள் ஏற்கனவே அகற்றப்பட்டுள்ளன.

இ) பூநகரி முகாமை அகற்றுதல்.

வீதியிலிருந்து 600 மீட்டர் வரைக்கும் முகாம் அகற்றப்பட்டிருக்கிறது. 1993இல் அகதிகளுக்கான ஐ.நா.நிறுவனம் மூலம் ஐக்கிய தேசியக் கட்சி அரசாங்கத்திடம் நீங்கள் முன்வைத்த கோரிக்கைக்கு இது இசைவானது.

1995 சிங்கள - தமிழ் புத்தாண்டுக்கு முன்னராக இந்த முடிவுகளை நடைமுறைப்படுத்த நாம் விரும்புகிறோம். இரு தரப்பும் கூடிக் கலந்தாலோசனை நடத்தினால் நடைமுறைப்படுத்தல் சீராக அமையும் என்பதே எமது கருத்து.

"போர் நிறுத்தத்திற்கும் நிபந்தனையற்ற பேச்சுக்களுக்கும் நாங்கள் தயார் என்பதை வலியுறுத்த விரும்புகிறோம்." என நீங்கள் 1994 செப்டம்பர் 2ஆம் நாள் எனக்கு எழுதிய முதற் கடிதத்தில் தெரிவித்த உற்சாகமூட்டும் வாசகத்தைக் கவனத்திற்கு எடுத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன். "இனப் பிரச்சினைக்கு மூலமான அடிப்படை அரசியல் பிரச்சினைகள்" (மார்ச் 16இல் எழுதிய கடிதத்தைப் பார்க்கவும்) உட்பட சமாதானப் பேச்சுக்கள் தொடர்ந்து நடத்துவதற்கு தேவையான கால அட்டவணை நிகழ்ச்சி முறை குறித்து நாம் இணக்கப்பாடு காண்பது அதிமுக்கியமானது என்பதையும் நாம் வற்புறுத்த விரும்புகிறோம்.

எமது நல்லாசிகள்
உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா

சந்திரிகாவின் கடிதத்தில் கசப்பான வார்த்தைப் பிரயோகங்களும், அரச மேலாண்மைவாதக் கருத்துக்களும் நிறைந்திருந்தபோதும், விட்டுக் கொடுக்கும் அம்சங்களும் இருக்கத்தான் செய்தன. நாங்கள் எழுப்பிய நான்கு விடயங்களில், இரண்டு கோரிக்கைகளை, அதாவது எரிபொருட்கள், மீன்பிடி மீதான தடைகளை நீக்குவதற்கு

அரசாங்கம் இணங்கியது. நாங்கள் விடுத்த காலக்கெடுவின் அழுத்தத்திற்குப் பணிந்தே மிகவும் தயக்கத்துடன் இந்த முடிவுகள் எடுக்கப்பட்டன. ஆயினும் இந்த முடிவுகள், கால தாமதமின்றி நடைமுறைக்கு வரவேண்டும் என்பதையே நாம் விரும்பினோம். உறுதிப்பாடுகளைக் கொடுத்தும், உடன்பாடுகளைச் செய்தும், பின்பு அவற்றை நிறைவேற்றத் தவறி, கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக சிங்கள அரசுகள் இழைத்த நம்பிக்கைத் துரோகங்களின் கசப்பான வரலாற்று அனுபவம் எமக்குண்டு. எனவே, சந்திரிகாவின் வாக்குறுதியை நம்பி, நாம் எமது காலக்கெடுவை விலக்கிக் கொள்ள விரும்பவில்லை. எடுத்த முடிவுகளை நிறைவு செய்ய கால அவகாசம் அளித்து, எமது காலக் கெடுவை மேலும் மூன்று வாரங்களுக்கு நீடித்தோம்.

நிர்வாகச் சீர்கேடுகளினாலும் மற்றும் இடையூறுகளினாலும் தடை நீக்கப்பட்ட பொருட்கள் தமிழ் மக்களைச் சென்றடையவில்லை என்பதை இம்முறைதான் முதற் தடவையாகச் சந்திரிகா ஒப்புக் கொண்டார். இதற்குத் தீர்வாக வவுனியா எல்லையில் ஒரு புதிய இராணுவக் காவல் சாவடியை நிறுவியுள்ளதாகத் தெரிவித்தார். இப் புதிய காவல் சாவடியும், வடக்கில் பொருள் விநியோகத்திற்கு இன்னொரு இடையூறாக மாறியது.

திரு. பிரபாகரன் தனது பதில் கடிதத்தில், சந்திரிகா கொண்டிருந்த தவறான அபிப்பிராயங்களைத் தெளிவுபடுத்தினார். பேச்சுக்கள் ஆக்கபூர்வமான பயன்தராது, முன்னேற்றமின்றி, முடங்கிப் போகும் சூழ்நிலையில், நெருக்கடியில் சம்பந்தப்பட்ட இரு தரப்பினரில் ஒருவர் பேச்சுக்களிலிருந்து விலகிக் கொள்ள முடிவெடுத்து, காலக்கெடு விதிப்பது தவறல்ல என்றும், எமது அமைப்புக்கு அந்த உரிமையுண்டு என்றும் பிரபாகரன் விளக்கினார். விடுதலைப் புலிகள் இயக்கத்தை ஒரு ஆயுதம் தரித்த குழு எனச் சந்திரிகா சித்தரிக்க முயன்றதையும் பிரபாகரன் கண்டித்தார். விடுதலைப் புலிகள் அமைப்பானது தமிழ்த் தேசத்தின் எழுச்சி வடிவமாக, தமிழ் மக்களோடு சங்கமித்து நிற்கும் ஒரு தேசிய விடுதலை இயக்கம் என்பதை அவர் சுட்டிக் காட்டினார். சந்திரிகாவுக்குப் பிரபாகரன் எழுதிய கடிதத்தைக் இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
28 மார்ச் 1995

கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா,
சிறீலங்காவின் ஜனாதிபதி
ஜனாதிபதியின் தலைமையகம்
கொழும்பு

அன்பின் ஜனாதிபதி அவர்கட்கு,

1995 மார்ச் 24ஆம் நாளன்று நீங்கள் எழுதிய கடிதத்திற்கு மிகவும் நன்றி.

உங்களது கடிதத்தின் உள்ளடக்கத்தை மிகவும் கவனமாகவும் ஆழமாகவும் பரிசீலனை செய்தோம். நாங்கள் எழுப்பிய சில பிரச்சினைகளுக்கு இணக்கப்பாடு காணும் ஆக்க பூர்வமான அம்சங்களையும் அதில் காணக்கூடியதாக இருந்தது. இதன் அடிப்படையில் எமது காலக்கெடுவை 1995 ஏப்ரல் 19ஆம் நாள் வரை நீடித்துள்ளோம். உங்களது முடிவுகளை விரைவில் செயற்படுத்த இக் கால இடைவெளி வசதியாக அமையும்.

நாங்கள் விதித்த காலக் கெடுவை 'இறுதி எச்சரிக்கை' எனச் சித்தரித்து, அதற்கு உங்களது கடிதத்தில் கடும் எதிர்ப்புத் தெரிவித்துள்ளீர்கள். எமது நிலைப்பாடு தவிர்க்க முடியாதது. ஏனென்றால், எமக்கும் சில நிர்ப்பந்தங்கள் உள்ளன. சமாதான வழிமுறையானது எமது மக்களின் நலனை மேம்பாடு செய்யும் ஒரு ஆக்கபூர்வமான முயற்சியாக அமைவதை நாம் உறுதி செய்ய வேண்டும். எவ்வித உருப்படியான பயனுமின்றி சமாதானப் பேச்சுக்கள் முடங்கிப் போய் விட்டதாக நாம் கருதினால், நெருக்கடியில் சம்பந்தப்பட்ட ஒரு தரப்பினர் என்ற ரீதியில் பேச்சுக்களை இடைநிறுத்தும் காலக்கெடு விதிப்பதற்கு எமக்கு உரிமையுண்டு. எமது மக்களின் வாழ்நிலையை ஆழமாகப் பாதித்த சில அவசரப் பிரச்சினைகளுக்குத் தீர்வின்றிப் பேச்சுக்கள் முடங்கிப்

போன காரணத்தினாலேயே காலக்கெடு விதிக்க நாம் நிர்ப்பந்திக்கப்பட்டோம். ஆயினும் நாங்கள் எழுப்பிய சில பிரச்சினைகளுக்கு நீங்கள் சாதகமான பதில் அளித்திருப்பதால், நாம் எமது காலக் கெடுவை மூன்று வாரங்களுக்கு நீடித்துள்ளோம். உங்களது முடிவுகளைச் செயற்படுத்தி, சமாதான வழிமுறையை ஆக்கபூர்வமான பாதையில் முன்னெடுத்துச் செல்ல இது வழிகோலும் என நம்புகிறோம்.

எரிபொருட்கள் உட்பட பொருளாதாரத் தடைகளை நீக்கவும், மீன்பிடி மீதான கட்டுப்பாடுகளைத் தளர்த்தவும் நீங்கள் எடுத்த ஆக்கபூர்வமான முடிவுகள் குறித்து நாம் மகிழ்ச்சியடைகிறோம். நீங்கள் எடுத்த நல்ல முடிவுகளை நாம் வரவேற்கும் அதேவேளை, கால தாமதமின்றி இம் முடிவுகளை நடைமுறைப்படுத்த அவசரமான உடன் நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்பதையும் நாம் வற்புறுத்த விரும்புகிறோம். முடிவுகளும், உறுதிப்பாடுகளும் திண்ணியமான முறையில் செயற்படுத்தத் தவறினால் அவற்றில் எவ்வித அர்த்தமும் இல்லை. எடுத்த முடிவுகள் கால தாமதமின்றி நிறைவேற்றப்பட வேண்டும் என்பதற்காகவே காலக்கெடுவை நாம் விதித்திருக்கிறோம். சில பொருட்கள் மீது தடையைத் தளர்த்தி நீங்கள் ஏற்கனவே எடுத்த முடிவு, இராணுவத்தின் முட்டுக்கட்டை காரணமாக இன்னும் நிறைவு செய்யப்படவில்லை என்பதையும் இங்கு நாம் சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

நீங்கள் எடுத்த முடிவுகளைச் செயற்படுத்த இரு தரப்பினரும் கூடி, அவற்றின் சிக்கல் பற்றிப் பேச வேண்டுமென யோசனை தெரிவித்தீர்கள். உங்களது யோசனையை நாம் வரவேற்கிறோம். அதன்படி, முன்கூட்டிய ஒரு திகதியில் - 1995 ஏப்ரல் முதலாம் நாள் - பேச்சுக்களை நடத்தலாமென யோசனை கூறுகிறோம்.

நாம் எழுப்பிய மற்றும் சில முக்கிய பிரச்சினைகளுக்கு உங்களது கடைசிக் கடிதத்தில் திருப்திகரமான பதில் கிடைக்காததால் ஏமாற்றம் அடைந்தோம். யாழ்ப்பாணத்திற்கு ஒரு பாதை

திறப்பது எமது மக்களுக்கு எத்தகைய முக்கியமான விடயம் என்பதை நீங்கள் நன்கறிவீர்கள். பூநகரி இராணுவ முகாமை அகற்றிவிட்டால், சங்குப்பிட்டிப் பாதை ஊடாக, எவ்வித இடையூறுமின்றி வசதியாக எமது மக்கள் போக்குவரத்தைச் செய்யலாம். பூநகரிப் படை முகாமின் முன்னணிப் பாதுகாப்பு அரண்களை 600 மீட்டர் தூரத்திற்குப் பின்நகர்த்தும் பழைய திட்டத்தையே நீங்கள் திருப்பிக் கூறுகிறீர்கள். கிழக்கு மாகாணத்தில் ஆயுதம் தரித்த எமது போராளிகளின் சுதந்திரமான நடமாட்டம் குறித்து ஒரு இணக்கப்பாடான முடிவை உங்களது அரசாங்கம் இன்னும் எடுக்கவில்லை. சமாதானச் சூழ்நிலையைப் பலப்படுத்தி, இயல்பு நிலையை நிலைநாட்டி, சமாதானப் பேச்சுக்களை முன்னெடுப்பதற்கு இப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்படுவது அவசியமானதாகும்.

விடுதலைப் புலிகள் அமைப்புக்கு உங்களது அரசாங்கம் வழங்கிய சிறப்புரிமைகளாக சில நடவடிக்கைகளை நீங்கள் சுட்டிக் காட்டியுள்ளீர்கள். ஆயுதக் களைவுக்கான நிபந்தனை எதுவும் விதிக்காது எம்முடன் பேச்சுக்களை ஆரம்பித்தது, பகை நிறுத்த உடன்பாடு செய்தது, அரச பிரதிநிதிகள் குழு யாழ்ப்பாணம் வருகை தந்தது ஆகியனவற்றைக் குறிப்பிட்டீர்கள். இந்த நடவடிக்கைகள் விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு அளிக்கப்பட்ட சிறப்புரிமைகளாக நீங்கள் கருதுவது தவறானதாகும். ஏனென்றால் சமாதான முயற்சியை முன்னெடுப்பதற்கு இந் நடவடிக்கைகள் மிகவும் அவசியமானவை. விடுதலைப் புலிகள் அமைப்பு ஒரு ஆயுதக் குழு என நீங்கள் கருதுவதும் ஒரு தவறான மதிப்பீடாகும். எமது அமைப்பானது தமிழினத்தின் அபிலாசைகளின் வெளிப்பாடாக, தமிழ் மக்களோடு சங்கமித்து நிற்கும் ஒரு தேசிய விடுதலை இயக்கமாகும். நிபந்தனையின்றி எம்முடன் பேசுவதற்கு உங்களது அரசு முன்வந்தமை எமது அமைப்பின் முக்கியத்துவத்திற்கு வழங்கப்பட்ட அங்கீகாரமாகவே நாம் கருதுகிறோம். எனவே, நெருக்கடியோடு

சம்பந்தப்பட்ட மறுதரப்பினருடன் பேச வேண்டிய நிர்ப்பந்தத்தைச் சிறப்புரிமையாக நீங்கள் கற்பிப்பது தவறானதாகும்.

நீங்கள் எடுத்த ஆக்கபூர்வமான முடிவுகளை உடன் செயற்படுத்தி, ஏனைய பிரச்சினைகளுக்கும் தீர்வு கண்டால், இன நெருக்கடிக்கான அரசியல் பேச்சு உட்பட சமாதானப் பேச்சுவார்த்தைகள் நிச்சயமாக முன்னேற்றமடையுமென இறுதியாக நான் எடுத்துக் கூற விரும்புகிறேன்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

## நான்காவது கட்டச் சுற்றுப் பேச்சு

தலைவர் பிரபாகரன் தெரிவித்த யோசனைக்கு இணங்க, நான்காவது கட்டச் சுற்றுப் பேச்சுக்கள் ஏப்ரல் மாதம் முதலாம் நாள் நடைபெறவில்லை. முற்கூட்டிய திகதியில் பேச்சுக்களை முன்நகர்த்த சந்திரிகா விரும்பவில்லை. நேரடிப் பேச்சுக்களை அவர் வேண்டுமென்றே பிற்போட்டார். தான் மேற்கொண்ட 'ஆக்கபூர்வமான முடிவுகளை' செயற்படுத்தாமல் தள்ளிப் போடவும், விடுதலைப் புலிகள் விதித்த காலக் கெடுவை செல்லாதது ஆக்குவதற்கும் பேச்சுக்களை தள்ளிப் போடும் தந்திரோபாயத்தை சந்திரிகா கடைப்பிடித்தார். பிரபாகரனுக்கு அனுப்பி வைத்த சுருக்கமான கடிதத்தில், நான்காவது கட்டச் சுற்றுப் பேச்சுக்களை ஏப்ரல் 8-10 வரையான நாட்களில் நடத்தவே அவர் விரும்பினார். சிறீலங்கா அரசாங்கத்திற்கு எதிராக சர்வதேச அரங்கில் விடுதலைப் புலிகள் தவறான பரப்புரை செய்வதாகவும் சந்திரிகா தனது கடிதத்தில் குற்றம் சாட்டினார். உதவி வழங்கும் நாடுகளிடமிருந்து கடனுதவிகளைப் பெற்று, அதனை இராணுவ விரிவாக்கத்திற்குப் பயன்படுத்தும் நோக்குடனேயே பேச்சுவார்த்தை நாடகத்தை அரசாங்கம் மேடையேற்றி வருவதாகப் புலிகள் இயக்கம் விசமப் பிரச்சாரம்

செய்வதாக அவர் சாடினார். அரசாங்கம் பெறவிருக்கும் கடனுதவியில் பெரும் பங்கு போரினால் சிதைந்த தமிழ்ப் பகுதிகளின் புனர்நிர்மாணத்திற்கும் அபிவிருத்திக்கும் ஒதுக்கப்பட்டதாகவும் குறிப்பிட்டார். அவரது கடிதம் வருமாறு:-

1 ஏப்ரல் 1995

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

1995 மார்ச் 28ஆம் நாளிடப்பட்ட கடிதம், மார்ச் 30ஆம் நாள் நான் இந்தியாவிலிருந்து திரும்பிய அன்று கிடைக்கப்பெற்றேன். நன்றி.

எமது பிரதிநிதிகள் குழு ஏப்ரல் 8,9 அல்லது 10ஆம் திகதிகளில் ஒரு நாள் யாழ்ப்பாணம் வருகை தர முடியும். இதில் உங்களுக்கு வசதியான நாளை அறியத் தரவும். சிறீலங்காவுக்கு கடனுதவி பெறுவதற்கு அனுகூலமான வகையில், உதவி வழங்கும் நாடுகளின் பாரிஸ் மாநாட்டிற்கு ஒத்திசைவாக, நான்காவது கட்டச் சுற்றுப் பேச்சுக்களை நடத்த எமது அரசாங்கம் முனைவதாக விடுதலைப் புலிகளின் பிரச்சார அறிக்கைகளில் திரும்பத் திரும்ப வலியுறுத்தப்படுகிறது. பொருளாதார அபிவிருத்திக்கெனப் பெறப்படும் நிதியை இராணுவ நடவடிக்கைகளுக்குப் பயன்படுத்தவும் அரசாங்கம் முயற்சிப்பதாக நீங்கள் பிரச்சாரம் செய்கின்றீர்கள்.

நான் உங்களுக்கு அழுத்திச் சொல்ல விரும்புவது என்னவென்றால்,

அ) சமாதான வழிமுறையில் எமக்குள்ள நேர்மையான உறுதிப்பாட்டை சிறீலங்காவில் வாழும் மக்களுக்கோ அல்லது சர்வதேசச் சமூகத்திற்கோ நாம் நிரூபித்துக் காட்டுவது அவசியமில்லை.

ஆ) உதவி வழங்கும் நாடுகள் எமக்கு வழங்கவுள்ள கடனுதவித் தொகை ஏற்கனவே

நிர்ணயிக்கப்பட்டுள்ளது. விடுதலைப் புலிகளுடன் நாம் நடத்தும் பேச்சுக்களுக்குப் புறம்பாக, சுயாதீனமான முறையில் இம் முடிவு எடுக்கப்பட்டது.

இ) ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக வழங்கப்படும் கடனுதவி வேறு திட்டங்களுக்கு பயன்படுத்த முடியாதவாறு கண்டிப்பான சர்வதேசக் கண்காணிப்பு முறைகள் உள்ளன.

ஈ) போரினால் அழிவுற்ற வடக்குக் கிழக்கு மாகாணங்களின் புனர்நிர்மாணத்திற்கும் அபிவிருத்திக்கும் கடனுதவியில் கணிசமான பங்கு ஒதுக்கப்படும்.

இந்த விவகாரத்தில் உங்களுக்குச் சந்தேகம் இருக்குமானால் பாரிஸ் மாநாடு முடிவடையும் வரை எமது பிரதிநிதிகளின் யாழ்ப்பாண வருகையை ஒத்திவைக்கவும் நான் தயார். எனினும் எமது பிரதிநிதிகள் நாம் குறிப்பிட்ட திகதிகளில் ஒரு நாள் யாழ்ப்பாணம் வருவதற்குத் தயாராக உள்ளனர்.

நன்றியுடன்
உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா

மிகவும் நுட்பமான முறையில் அரசாங்கம் தனது பிரச்சார இயந்திரத்தை முடுக்கிவிட்டிருந்தது. இன ஒற்றுமையைப் பேணி, சமாதானத்தைக் கட்டி எழுப்பும் உன்னத நோக்கத்துடன் வடகிழக்கில் திணிக்கப்பட்டிருந்த பல்வேறு தடைகளையும் கட்டுப்பாடுகளையும் அரசாங்கம் முற்றாக நீக்கிவிட்டதாகச் சர்வதேச அரங்கில் பரப்புரை செய்யப்பட்டது. இவ்வாறான நல்லெண்ண நடவடிக்கைகளை மேற்கொண்டு தமிழ்ப் பகுதிகளில் அமைதியையும் இயல்பு நிலையையும் தோற்றுவித்த பொழுதும் இன நெருக்கடிக்குத் தீர்வு காணும் வகையில் அரசியல் பிரச்சினைகள் பற்றிப் பேசுவதற்கு விடுதலைப் புலிகள் இயக்கம் மறுத்து வருவதாகவும் எமக்கு எதிரான கருத்தையும் உலகரங்கில் அரசாங்கம் விதைத்து வந்தது.

தமிழர் தாயகத்தில் நிலவிய உண்மையான யதார்த்தப் புறநிலையை தமிழ் மக்களும் விடுதலைப் புலிகளுமே நன்கறிவர். அத்தியாவசியப் பொருட்களும் தடை நீக்கம் செய்யப்பட்டுள்ளதாக, காலத்திற்குக் காலம் அரச வர்த்தமானியில் அறிவிக்கப்பட்ட போதும், சந்திரிகாவின் கடிதங்களில் உறுதியளிக்கப்பட்ட போதும், தடைகளும் கட்டுப்பாடுகளும் தொடர்ந்து இறுக்கமான நடைமுறையில் இருந்தன. வடகிழக்கு மாநிலத்திற்கு அத்தியாவசியப் பொருட்கள் எவ்வித தடைகளுமின்றி விநியோகிக்கப்படுமென அரசாங்கம் எமக்கு மாறிமாறி உறுதிமொழி தந்தபொழுதும், இப் பொருட்கள் எமது மக்களை வந்தடையாமல் செய்வதில் சிங்கள இராணுவமும் பாதுகாப்பு அமைச்சும் உறுதிபூண்டு ஒன்று சேர்ந்து செயற்பட்டன.

விடுதலைப் புலிகள் இயக்கமும் தனது நிலைப்பாட்டில் உறுதி தளராது, இறுக்கமான போக்கைக் கடைப்பிடித்தது. எமது மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகள் தொடர்பாக, நாம் முன்வைத்த கோரிக்கைகளுக்கு சாதகமான முடிவுகள் எடுக்கப்பட்டு, அவை நடைமுறையில் நிறைவு காணப்பட வேண்டும் என்றும், அல்லாத பட்சத்தில் பேச்சுக்களிலிருந்து விலகிவிடப் போவதாகவும் நாம் அரசாங்கத்தை எச்சரித்து வந்தோம். நான்காவது கட்டப் பேச்சு அண்மித்த போது பேச்சுக்கான நிகழ்ச்சி நிரலைத் தயாரிக்க நாம் முடிவெடுத்தோம். சந்திரிகா மேற்கொண்ட 'ஆக்கபூர்வமான முடிவுகளை' நிறைவு செய்யும் நடைமுறைச் சாத்தியமான வழிமுறைகள் பற்றியும், மற்றும் விடுதலைப் புலிகள் எழுப்பிய ஏனைய முக்கிய பிரச்சினைகள் பற்றியுமே பேசப்பட வேண்டும் எனப் பிரபாகரன் வலியுறுத்தினார். ஏப்ரல் ஆறாம் நாளன்று ஜனாதிபதி சந்திரிகாவுக்கு எழுதிய கடிதத்தில் தனது நீடிக்கப்பட்ட காலக் கெடுவை (19 ஏப்ரல், 1995) நினைவுபடுத்திய பிரபாகரன், இக் கால இடைவெளிக்குள் எடுக்கப்பட்ட முடிவுகள் அமுலாக வேண்டும் என்றும் ஏனைய பிரச்சினைகளுக்கும் தீர்வு காணப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தினார். அரசியல் தீர்வுக்கான உயர் கட்டப் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு முன்னராக, இயல்பு நிலை உருவாக்கப்பட்டு, சமாதானச் சூழ்நிலையை வலுப்படுத்துவது அவசியமென்று குறிப்பிட்டார். பிரபாகரனின் கடிதத்தை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

6 ஏப்ரல் 1995

கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா
சிறீலங்கா ஜனாதிபதி
ஜனாதிபதியின் தலைமையகம்
கொழும்பு

அன்பின் ஜனாதிபதி அவர்கட்கு,

ஏப்ரல் முதலாம் நாள் திகதியிடப்பட்ட உங்களது கடிதம் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கம் வாயிலாக ஏப்ரல் இரண்டாம் நாள் எமக்குக் கிடைக்கப் பெற்றது. நன்றி.

அரசாங்கப் பிரதிநிதிகள் குழு ஏப்ரல் 10ஆம் நாள் யாழ்ப்பாணம் வருகை தருவதை நாம் வரவேற்கிறோம். பேச்சுக்களில் பங்குகொள்ளும் உங்கள் பிரதிநிதிகளின் பெயர் விபரங்களைத் தயவு கூர்ந்து அறியத் தரவும்.

உங்களது ஆக்கபூர்வமான முடிவுகளை நடைமுறைப்படுத்துவது பற்றியும், மார்ச் 28ஆம் நாளைய எமது கடிதத்தில் எழுப்பப்பட்ட முக்கிய இரு பிரச்சினைகளை உள்ளடக்கியதாகவுமே பேச்சுகளின் நிகழ்ச்சி நிரல் அமையும். 1995 மார்ச் 24ஆம் நாள் நீங்கள் எழுதிய கடிதத்திற்கு இசைவாகவே எமது நிகழ்ச்சி நிரல் அமையப் பெற்றுள்ளது. எரிபொருட்கள் மீதான தடையை நீக்கி, மீன்பிடி மீதான கட்டுப்பாடுகளையும் அகற்றிவிடும் ஆக்கபூர்வமான முடிவுகளை எடுத்துள்ளதாக இக் கடிதத்தில் நீங்கள் குறிப்பிட்டிருந்தீர்கள். அத்தோடு இம் முடிவுகளை சிறப்பான முறையில் செயற்படுத்த எமக்கு மத்தியில் கலந்துரையாடல் அவசியம் என்பதையும் வலியுறுத்தினீர்கள். மார்ச் 28ஆம் நாள், நான் உங்களுக்கு எழுதிய கடிதத்தில், பூநகரி இராணுவ முகாம் அகற்றப்பட்டு யாழ்ப்பாணத்திற்கு ஒரு தரைப்

பாதை திறக்கப்பட வேண்டும் என்றும் கிழக்கு மாகாணத்தில் எமது போராளிகள் சுதந்திரமாக நடமாக வேண்டும் என்றும் வலியுறுத்தியிருந்தேன். ஆகவே, இப் பிரச்சினைகள் குறித்தும் உங்களது முடிவுகளை நடைமுறைப்படுத்துவது பற்றியுமே பேச்சுக்கள் நடைபெறும். உங்களது முடிவுகளை செயற்படுத்தவும், தமிழ்ப் பகுதிகளில் அமைதியையும் இயல்பு நிலையையும் தோற்றுவிப்பதற்கு அவசியமான மற்றைய பிரச்சினைகளுக்குத் தீர்வு காணவும் கால இடைவெளியை உங்களுக்கு ஏற்படுத்திக் கொடுக்கும் வகையில், நாம் எமது காலக்கெடுவை 1995 மார்ச் 28ஆம் நாளிலிருந்து 1995 ஏப்ரல் 19ஆம் நாள் வரை நீடித்துள்ளோம்.

எமது மக்கள் எதிர்கொள்ளும் அவசரமான வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முதலில் தீர்வு காணப்பட வேண்டியது மிகவும் முக்கியமானது என்பதைப் பேச்சுக்கள் தொடங்கியதிலிருந்து கடந்த ஆறு மாதங்களாக நாம் மீண்டும் மீண்டும் வலியுறுத்தி வருகிறோம் என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். பேச்சுக்களின் ஆரம்ப கட்டங்களில் இப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்பட்டாலேயே, இன நெருக்கடிக்கு அடிப்படையான அரசியல் பிரச்சினைகள் பற்றிய பேச்சுக்களில் முன்னேற்றம் ஏற்படுமென நாம் தொடர்ச்சியாக வாதாடி வருகிறோம். எமது நிலைப்பாட்டில் அரசாங்கம் எவ்வித அக்கறையும் காட்டாது, பிரச்சினைகளைத் தீர்க்காது இழுத்தடித்து வந்ததால், பேச்சுக்கள் முடங்கிவிட்ட நிலை ஏற்பட்டது. இனிமேல் பேச்சுக்களால் பயனெதுவும் ஏற்படாதென நாம் உணர்ந்து கொண்ட போதுதான் சமாதான முயற்சியை இடைநிறுத்தும் காலக் கெடுவை விதிக்க நாம் நிர்ப்பந்திக்கப்பட்டோம். நான் எனது கடைசிக் கடிதத்தில் குறிப்பிட்டது போல, பேச்சுக்கள் பயனற்றதாகி, எமது மக்களின் நலனைப் பேணாது போனால், சமாதானப் பேச்சுக்களில் சம்பந்தப்பட்ட இரு தரப்பினரில் ஒருவராகிய எமக்குக் காலக்கெடு விதிக்கும் உரிமையுண்டு. ஆயினும் நீங்கள் நல்லிணக்கச் சமிக்கையைக் காட்டியதால்



உங்களது முடிவுகளை நிறைவேற்றவும் ஏனைய பிரச்சினைகளைத் தீர்க்கவும் உடன் நடவடிக்கை எடுப்பீர்கள் என்ற நம்பிக்கையுடன் நாம் எமது காலக் கெடுவை ஏப்ரல் 19ஆம் நாள் வரை நீடித்திருக்கிறோம். ஆகவே, நான்காவது சுற்றுப் பேச்சுக்கள், உங்களது முடிவுகளை நிறைவு செய்யும் வழிமுறைகள் பற்றியும், மற்றும் நாம் எழுப்பிய இரு பிரச்சினைகள் பற்றியுமே அமையப்பெற வேண்டுமென வலியுறுத்துகிறோம்.

காலம் தாமதியாது எமது மக்களின் அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்பட வேண்டியதன் முக்கியத்துவத்தை நாம் மீண்டும் வலியுறுத்துவதுடன், இப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்பட்ட பின்னரே இன நெருக்கடிக்கு அடிப்படையான அரசியல் பிரச்சினைகள் பற்றிப் பேசமுடியும் என்பதையும் சுட்டிக்காட்ட விரும்புகிறோம். பொருளாதார முற்றுகை, மற்றும் தடைகள், கட்டுப்பாடுகளை முற்றாக நீக்கி, இயல்பு நிலையை நிலைநாட்டுவதுடன் போர் நிறுத்த உடன்பாட்டைப் பலப்படுத்தி, அமைதியான சூழ்நிலையை நிலைப்படுத்திய பின்னரே அடிப்படை அரசியல் பிரச்சினைகள் பற்றிய உயர்கட்டப் பேச்சுக்களை ஆரம்பிக்க வேண்டும் என்பது எமது நிலைப்பாடாகும். ஆகவே தற்போதைய சூழ்நிலையில் அரசியல் பேச்சுக்கான கால வரையறைகளையோ அன்றி நிகழ்ச்சி ஒழுங்கு முறைகளையோ தயாரிக்கும் யோசனையை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது.

எமது நல்லாசிகள்
உங்கள் நேர்மையுள்ள

வே.பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

1995 ஏப்ரல் 10ஆம் நாட் காலை, ஆறு பிரதிநிதிகளைக் கொண்ட அரச தூதுக்குழு யாழ்ப்பாணம் வருகை தந்தது. கொழும்பு திருச்சபையைச் சேர்ந்த வண.ஆயர் கெனத் பெர்னாண்டோ, ஜனாதிபதியின் செயலர் திரு.கே.பலப்பத்தபெண்டி,

கொழும்பு பல்கலைக்கழக விரிவுரையாளர் கலாநிதி ஜெயதேவ உயாங்கொட, இனங்களிடையே நீதிக்கும் சமத்துவத்திற்குமான இயக்கத்தின் தலைவர் திரு. சார்ள்ஸ் அபயசேகரா, பிரிகேடியர் பீரிஸ் (இராணுவம்), கப்டன் ராஜரெத்தினா (கடற்படை) ஆகியோரே அரச சார்புப் பிரதிநிதிகளாவர்.

நான்காம் கட்டச் சுற்றுப் பேச்சைத் தொடக்கி வைத்துப் பேசிய திரு. தமிழ்ச்செல்வன், அரசாங்கம் எடுத்த ஆக்க பூர்வமான முடிவுகளை நடைமுறைப்படுத்தும் வழி முறைகள் பற்றியும், மற்றும் வன்னி மாநிலத்திற்குத் தரைப் பாதை திறத்தல், கிழக்கு மாகாணத்தில் விடுதலைப் புலிப் போராளிகளின் சுதந்திர நடமாட்டம் பற்றியுமே பேச்சுக்கள் அமையப்பெற வேண்டுமென வலியுறுத்தினார். அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடையைத் தளர்த்தி, காலத்திற்கு காலம் அரசாங்கம் வெளியிட்டு வந்த வர்த்தமானி அறிவிப்புகளை ஒரு கேலிக் கூத்தாக வர்ணித்த தமிழ்ச்செல்வன், தடை நீங்கிய பொருட்கள் தமிழ் மக்களை வந்தடைவதில்லை என்றார். கடந்த ஆறு மாதங்களாக விடுதலைப் புலிகள் எழுப்பிய பிரச்சினைகள் எதுவும் தீர்த்து வைக்கப்படாததால் பேச்சுக்கள் முன்னேற்றம் காணாது முடங்கிப் போனதாகத் தெரிவித்த தமிழ்ச்செல்வன், இதன் காரணமாகவே விடுதலைப் புலிகள் இயக்கம் பேச்சுக்களை இடைநிறுத்தும் காலக்கெடுவை விதிக்க நிர்ப்பந்திக்கப்பட்டது என்றார். அவ்வேளை குறுக்கிட்ட ஆயர் கெனத் பெர்னாண்டோ, காலக்கெடு என்பது அரசுக்கு விடப்பட்ட இறுதி எச்சரிக்கையாகக் கருத முடியுமான என வினவினார். காலக்கெடு என்ற பதத்தையே விடுதலைப் புலிகள் பாவிக்க விரும்புவதாகக் கூறிய தமிழ்ச்செல்வன், பேச்சுக்களும் போர் நிறுத்த உடன்பாடும் முடிவுறும் கால வரம்பை இது குறிப்பதாகச் சுட்டிக் காட்டினார். இந்தக் கால வரம்பு ஏப்ரல் 19ஆம் நாள் வரை நீடிக்கப்பட்டிருப்பதாகத் தெரிவித்த அவர், இந்தக் கால இடைவெளிக்குள் அரசாங்கம் எடுத்த முடிவுகள் நிறைவேற்றப்படாத பட்சத்தில் விடுதலைப் புலிகள் இயக்கம் பேச்சுக்களில் பங்குபற்றுவதை நிறுத்திக் கொள்ளும் என எச்சரித்தார்.

புதிதாகப் பேச்சுக்களில் கலந்து கொண்ட அரச தரப்புப் பிரதிநிதிகளான ஆயர் பெர்னாண்டோ, கலாநிதி உயாங்கொட, திரு. அபயசேகரா ஆகியோர் ஜனாதிபதி சந்திரிகாவுக்கு மிகவும் நெருக்கமானவர்களாக இருந்தபோதும் அவர்களிடம் முடிவுகள்

எடுக்கும் அதிகாரம் இருக்கவில்லை. விடுதலைப் புலிகளால் முன்வைக்கப்பட்ட கருத்துக்களைப் பொறுமையுடன் செவிசாய்த்த அவர்கள், நாம் தெரிவித்த விடயங்களை ஜனாதிபதி சந்திரிகாவிடம் எடுத்துக் கூறுவதாக மட்டும் உறுதியளித்தனர். முதல் நாள் பேச்சுக்கள் முடிந்ததும் திரு. பலப்பத்தபெண்டி, பிரகேடியர் பீரிஸ், கப்டன் ராஜரெத்தினா ஆகியோர் கொழும்புக்குப் புறப்பட்டுச் சென்றனர். புதிய பிரதிநிதிகள் இரண்டாம் நாள் பேச்சுவார்த்தையில் கலந்து கொண்டனர். தலைவர் பிரபாகரனைச் சந்தித்துப் பேசுவதற்கு ஆயர் பெர்னாண்டோ விரும்பினார். அவ்வேளை பிரபாகரன் யாழ்ப்பாணத்தில் இருக்கவில்லை என்பதால் சந்திப்பை ஒழுங்கு செய்ய முடியவில்லை.

வழமைபோல நான்காவது கட்டச் சுற்றுப் பேச்சுக்களும் எவ்வித உருப்படியான தீர்மானங்களும் எடுக்கப்படாது முடிவுற்றன. பேச்சுக்களில் பரிமாறப்பட்ட கருத்துக்களை அரச தரப்பு பிரதிநிதிகள் ஜனாதிபதி சந்திரிகாவிடம் எடுத்துக் கூறுவார்கள் என்பதும், அதற்கான பதிலுரையை அவர் கடிதம் வாயிலாக எமக்குத் தெரியப்படுத்துவார் என்பதும் நாம் அறிந்ததே.

## சந்திரிகாவின் வாக்குறுதிகள்

1995 ஏப்ரல் 12ஆம் நாள் ஜனாதிபதி சந்திரிகா நீண்ட கடிதம் ஒன்றைத் தலைவர் பிரபாகரனுக்கு அனுப்பி வைத்தார். விடுதலைப் புலிகள் முன்வைத்த கோரிக்கைகளுக்குப் பதிலுரைப்பதாக அக் கடிதம் அமையப் பெற்று இருந்தது. இவ் விடயங்கள் குறித்து, அரசாங்கத்தின் நிலைப்பாட்டை விளங்கப்படுத்தி, எத்தகைய நடவடிக்கைகள் எடுக்கப்படவுள்ளன என்பதையும் சந்திரிகா தெளிவுபடுத்தினார். அவர் பிரபாகரனுக்கு எழுதிய கடிதம் வருமாறு:-

12 ஏப்ரல் 1995

திரு. வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

அன்பின் திரு. பிரபாகரன் அவர்கட்கு,

ஏப்ரல் 6ஆம் நாள் நீங்கள் எழுதிய கடிதத்தில் குறிப்பிடப்பட்ட விடயங்களை நாம் பரிசீலனைக்கு எடுத்தோம். யாழ்ப்பாணத்தில் ஏப்ரல் 10, 11 ஆம் நாட்களில் நிகழ்ந்த பேச்சுக்களின் போதும் இந்த விடயங்கள் குறித்தே கலந்துரையாடல் நடைபெற்றது. உங்களது கடிதத்தில் குறிப்பிடப்பட்ட காலக் கெடுவானது ஒரு இறுதி எச்சரிக்கை அல்ல என்றும், ஏற்கனவே எடுக்கப்பட்ட தீர்மானங்களை நிறைவு செய்வதற்கு விதிக்கப்பட்ட கால வரம்பு என்றும் திரு. தமிழ்ச்செல்வன் தனது ஆரம்ப உரையில் தெளிவுபடுத்தினார் என்பதை அறிந்து மகிழ்ச்சியடைந்தேன்.

நீங்கள் குறிப்பிட்ட நான்கு பிரச்சினைகள் பற்றி இனி விபரமாகப் பார்ப்பதுடன், இவை குறித்து எமது நிலைப்பாட்டையும், நாம் எடுக்கவிருக்கும் நடவடிக்கைகளையும் இங்கு விளக்கிக் கூற விரும்புகிறேன். இப் பிரச்சினைகள் அடிப்படையில் ஒன்றுக்கொன்று வித்தியாசமானவை. இவற்றிலுள்ள சில பிரச்சினைகளைத் தீர்ப்பதில் ஏற்கனவே கணிசமான முன்னேற்றம் காணப்பட்டுள்ளது. வடக்கில் வாழும் மக்களின் வாழ்க்கையை மேம்படுத்தும் வகையில் மேற்கொண்டும் ஆக்க பூர்வமான முடிவுகளை எடுக்க நாம் தீர்மானித்திருக்கிறோம். சில பிரச்சினைகள் இராணுவ ரீதியான விளைவுகளை உண்டு பண்ணக் கூடியவை என்பதால், போருக்கு முடிவு கட்டும் அரசியல் பேச்சுக்களின் முன்னேற்றத்திற்கு இசைவாக இவற்றிற்குத் தீர்வு காண வேண்டும்.

### 1. பொருளாதாரத் தடை

கீழ்க் கண்ட பொருட்கள் மட்டும் இப்பொழுது தடை விதிக்கப்பட்ட பட்டியலில் உள்ளன.

ஆயுதங்கள்/ ரவைகள்
வெடிமருந்துகள்
தொலை இயக்கிகள்
இரட்டைத் தொலைநோக்கிகள்
தொலை நோக்கிகள்

திசையறி கருவிகள்
சீருடைத் துணிகள்
சிறு மின்கலங்கள்

இவற்றைத் தவிர ஏனைய பொருட்கள் அனைத்தும் தடையின்றி வடக்கிற்குக் கொண்டு செல்ல அனுமதிக்கப்படும். ஏப்ரல் 13ஆம் நாள், இது குறித்து அரசாங்கத்தின் பிரகடனம் வெளியிடப்படும். இதைத் தொடர்ந்து மேற்குறிப்பிட்ட எட்டுப் பொருட்களையும் தடைசெய்யும் அரச வர்த்தமானியும் வெளியாகும்.

ஏற்கனவே தடை நீக்கம் செய்யப்பட்ட அறிவிப்புகள் நிறைவு செய்யப்படவில்லை என நீங்கள் குறிப்பிட்டதை நாம் கவனத்தில் எடுத்தோம். சில இடையூறுகள் காரணமாகவே தடை நீங்கிய பொருட்களின் விநியோகம் சீராக இருக்கவில்லை. இந்தப் பொருட்கள் எவ்வித தடையுமின்றி வடக்கில் விநியோகம் செய்யப்படுவதற்குக் கண்டிப்பான நடவடிக்கைகளை நாம் ஏற்கனவே எடுத்துள்ளோம். இந்த முயற்சியின் ஒரு அங்கமாக வவுனியா காவல் சாவடிகளில் குடிமக்கள் குழுக்களை நியமிக்க இருக்கிறோம். தடைகள் பற்றிப் புகார்கள் செய்யவும், உடன் தீர்வு நடவடிக்கைகளை எடுக்கவும் இக் குழுக்கள் உதவிபுரியும்.

## 2. மீன்பிடி மீதான தடைகள்

முன்பு ஒரு தடவை நான் எடுத்த நடவடிக்கை காரணமாக மீன்பிடி மீதான தடை கணிசமான அளவு தளர்த்தப்பட்டுள்ளது. எமது தூதுக் குழுவினருக்கு நீங்கள் தெரிவித்த யோசனைகளின் அடிப்படையில், மீன்பிடித் தடைகள் மேலும் தளர்த்தப்பட்டுள்ளன. கீழ்க் கண்ட விதி விலக்குகளைத் தவிர, மற்றும்படி எல்லா நேரத்திலும் மீன்பிடித்தல் அனுமதிக்கப்பட்டுள்ளது.

i) தலைமன்னாரிலிருந்து பேய்முனை வரை கரையிலிருந்து ஐந்து மைல் தூரத்திற்கு மட்டுமே மீன்பிடிக்கு அனுமதியுண்டு.

ii) கரையோரமாக அமைந்திருக்கும் பாதுகாப்புப்

படைகளின் முகாம்களிலிருந்து, பக்கவாட்டாக இருபுறமும் ஒரு மைல் தூரம் வரையும், கரையிலிருந்து கடலை நோக்கியதாக இரு கடல் மைல்கள் தூரம் வரையும் மீன்பிடிப்பதற்கு அனுமதியில்லை.

iii) கரையோரமாகவுள்ள துறைமுகங்கள், குடாக்கள், கழிமுகங்களில் மீன்பிடிக்கு அனுமதியில்லை. இது குறித்துக் கிழக்கில் எழக்கூடிய பிரச்சினைகள் பற்றி உள்ளூர் மட்டத்தில் பேச்சுக்கள் நடத்தி இணக்கம் காணப்படவேண்டும்.

தொண்டைமானாற்றிலிருந்து பேய்முனை வரையும் யாழ்ப்பாண நீரேரியிலும் வழமைபோல மீன்பிடிக்கு அனுமதியுண்டு. பேய்முனையிலிருந்து தலைமன்னார் வரை விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் மூன்று மாதத்திற்குள் மீள் பரிசீலனை செய்யப்படும். இந்தக் கால இடைவெளிக்குள் சிறீலங்காவின் பிரதேசக் கடல் எங்கும் மீன்பிடிக்க அனுமதிக்கும் உடன்பாடுகள் செய்து கொள்ள அரசாங்கம் சகல முயற்சிகளையும் எடுக்கும்.

வடக்கில் வாழும் மக்கள் எதிர்கொள்ளும் துன்பங்களை நீக்கி அவர்களது வாழ்வில் இயல்பு நிலையை ஏற்படுத்தும் குறிக்கோளுடனேயே, பெட்ரோல், டீசல் உட்பட மக்களின் பாவனைப் பொருட்கள் மீதான தடையையும் மீன்பிடி மீதான கட்டுப்பாடுகளையும் அகற்றியுள்ளோம். இதுவே, எமது ஆரம்பக் கூட்டு முயற்சியாக இருக்க வேண்டும் என்பதில் நாம் இணக்கப்பாடு கண்டிருக்கிறோம்.

இனி, மற்றைய இரு பிரச்சினைகள் பற்றிப் பார்ப்போம்.

### 3. பூநகரி முகாம்

சங்குப்பிட்டி வீதியைப் பொது மக்களின் போக்குவரத்திற்குத் திறந்து விடுவதானால் பூநகரி இராணுவ முகாம் அகற்றப்பட வேண்டும் என்பது உங்களது கோரிக்கை. இந்த இராணுவ முகாமின்

வெளிப்புற எல்லையை 600 மீட்டர் வரை பின் நகர்த்தியுள்ளோம். வீதியில் சோதனைகள் நடைபெறாது என்றும், எவ்வித தடையுமின்றி குடிமக்கள் அந்த வீதியைப் பாவிக்கலாம் என்றும் நாம் உறுதியளித்திருக்கிறோம். நாம் இதனை நடைமுறைப்படுத்துவோம்.

எனினும் இந்நேரத்தில், இந்த இராணுவ முகாமை அகற்றி விடுவது பற்றி எம்மால் முடிவுகள் எதுவும் எடுக்க முடியாது. இப் படைமுகாம் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்தது. அத்தோடு, பகை நிறுத்த உடன்பாட்டின் விதிகளின்படி, இராணுவச் சமநிலை பேணப்பட வேண்டும் என்பதும், இரு தரப்பினரில் ஒருவராவது மற்றவரின் இராணுவ வலுவைப் பாதிக்கும் வகையில் நடவடிக்கை எடுக்கக் கூடாது என்பதும் கடப்பாடாக உள்ளது. இருப்பினும், நாம் கட்டியெழுப்ப முயலும் அமைதியும் இயல்பு நிலையும் ஈற்றில் இராணுவத்தின் இருத்தலைக் குறைக்க வேண்டும் என்பதால் உங்களது கோரிக்கை தொடர்ந்து எமது பரிசீலனையில் இருக்கும். மூன்று மாத காலத்திற்குள் அல்லது அரசியல் பேச்சுக்கள் தொடங்கிய பின்னர் இப் பிரச்சினை பற்றி மீண்டும் பேசுவோம்.

### 4. கிழக்கில் ஆயுதம் தரித்த புலிப் போராளிகளின் நடமாட்டம்

பகை நிறுத்த உடன்பாட்டின் அடிப்படையிலேயே இப் பிரச்சினை பேசித் தீர்க்கப்பட வேண்டும் என நாம் கருதுகிறோம். இந்தப் பிரச்சினை பற்றியும், மற்றும் இரு தரப்பும் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறைகள் பற்றியும், சமாதானக் குழுக்களை இயக்குவது பற்றியும் நாம் பேச்சுக்களை நடத்தி, இணக்கப்பாடு கண்டு, அதனை அமைதி உடன்பாட்டின் இணை ஆவணமாகச் சேர்த்து, செம்மையாக நடைமுறைப்படுத்தத் தயாராக இருக்கிறோம்.

இந்த நான்கு விவகாரங்கள் குறித்து நாம் எடுத்துள்ள நடவடிக்கைகளும், எடுக்கப் போகும் நடவடிக்கைகளும் உங்களுக்கு திருப்தியை ஏற்படுத்தும் என்று நாம் நம்புகிறோம். இதன்

அடிப்படையில் இனப் பிரச்சினைக்குத் தீர்வு காணும் வரை பேச்சுக்களை நாம் தொடர்ந்து நடத்தலாம்.

அடுத்த கட்டப் பேச்சுக்கள் கீழ்க்கண்ட விடயங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென யோசனை தெரிவித்தோம்.

i) பகை நிறுத்த உடன்பாட்டுக்கு ஒரு இணை ஆவணம் தயாரிப்பது குறித்துப் பேசுவது.

ii) புனர்வாழ்வு, புனர்நிர்மாணம் பற்றிக் கூட்டு அதிகார சபையை நிறுவுதல்.

iii) எதிர்காலப் பேச்சுக்களை வடிவமைத்தல்.

இது சம்பந்தமான பேச்சுக்களை, மே மாதம் 5-10ஆம் திகதிகளுக்கு இடையிலான நாட்களில் நடத்தலாமென நாம் கருதினோம்.

உங்கள் நேர்மையுள்ள

சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா

நல்லெண்ணத் தொனியில், நம்பிக்கையூட்டும் வகையில், சந்திரிகா அம்மையார் உறுதிமொழிகளைத் தந்தபோதும், எடுத்த முடிவுகளையும் கொடுத்த உறுதிகளையும் நிறைவு செய்வதில், வழமை போலச் சிங்கள அரசு இழுத்தடிப்புத் தந்திரத்தையே கையாண்டது. எரிபொருட்கள் மீதான தடை நீக்கப்பட்டுள்ளதாக சந்திரிகாவின் கடிதத்தில் தெரிவிக்கப்பட்ட போதும், டீசல், பெட்ரோல் போன்றவற்றை வடக்கிற்கு வரவிடாது இராணுவம் தடைகளை இறுக்கியது. அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடைகள் தொடர்ந்தும் செயன்முறையில் இருந்து வந்தது. தடை நீக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்ட பொருட்கள் எதுவுமே வவுனியா எல்லையிலுள்ள இராணுவ இரும்புச் சுவர்களைத் தாண்டி வர முடியவில்லை. சந்திரிகா அம்மையார் உறுதிமொழிகள் வழங்கி, பக்கம் பக்கமாகக் கடிதங்கள் எழுதியபோதும் நடைமுறை யதார்த்தம் வேறாகவே இருந்தது. எதிரிகள் குடிகொண்டுள்ள யுத்த பூமியாகவே தமிழர் தாயகத்தை பாதுகாப்பு அமைச்சு நிர்வாகிகளும் இராணுவ உயர் அதிகாரிகளும் கருதினர். இவர்களது கூட்டுச் சதியால் பொருளாதார முற்றுகை மேலும்

மேலும் இறுகியதே தவிர தளர்த்தப்படவில்லை. இதனால் வர்த்தமானி அறிவிப்புகள் வவுனியா எல்லையைத் தாண்டிவர முடியவில்லை.

மீன்பிடித் தடைகளும் வழமை போலவே தொடர்ந்து அமுலில் இருந்தன. வட கிழக்குக் கடற்பரப்பில் சிறீலங்காவின் கடற்படையினர் தன்னிச்சையாக ஒரு சர்வாதிகார ஆட்சியை நடத்தினர். பகை நிறுத்த உடன்பாட்டு விதிகளையோ, அன்றி மீன்பிடிக் கட்டுப்பாட்டுத் தளர்வுகளையோ கடைப்பிடிக்காது, மீனவர் மீதும் கடற்புலிகள் மீதும் கடற் படையினர் தாக்குதல்களை நடத்தினர். கடற்படையின் தொடர்ச்சியான வெறியாட்டத்தால் அரசாங்கத்தின் உறுதிமொழிகள் அர்த்தமிழந்து போயின.

கிழக்கு மாகாணத்தில் நெருக்கடி நிலை தொடர்ந்தது. விடுதலைப் புலிப் போராளிகளின் நடமாட்டத்தை அனுமதிக்க இராணுவம் மறுத்தது. வீதிச் சோதனைச் சாவடிகளில் எமது போராளிகள் தடுத்து நிறுத்தப்பட்டு இம்சைக்கு ஆளாகினர். மட்டக்களப்பு, மண்டூர் பகுதியில், எமது மூத்த போராளி ஒருவர் இராணுவத்தினரால் வீதியில் மறித்து, கடுமையாகத் தாக்கப்பட்டு, பொதுமக்கள் முன்னிலையில் அவமானத்திற்கு ஆளாகியதால் சைனைட் குப்பியை விழுங்கித் தற்கொலை செய்து கொண்டார். சில சந்தர்ப்பங்களில் எமது போராளிகள் கைது செய்யப்பட்டு, காவலில் வைக்கப்பட்டனர். அவர்களது ஆயுதங்களும் பறிக்கப்பட்டன. கிழக்கின் சில பகுதிகளில் அங்குமிங்குமாக - துப்பாக்கிச் சண்டைகளும் வெடித்தன. பகை நிறுத்த உடன்பாடு சம்பந்தமாக, கிழக்கில், எமது போராளிகள் மத்தியில் குழப்பநிலை நிலவியது. தெளிவாக வரையறுக்கப்படாத பகை நிறுத்த உடன்பாட்டைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திய இராணுவம், எமது போராளிகளின் நடமாட்டத்தையும், நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்த முனைந்ததால் நிலைமை படுமோசமாகியது.

சிங்கள ஆயுதப் படைகள் வலுமிக்க சக்தியாகத் துரிதகதியில் கட்டி எழுப்பப்பட்டமை விடுதலைப் புலிகளின் தலைமைக்குச் சந்தேகத்தையும் அங்கலாய்ப்பையும் கொடுத்தது. நவீன ஆயுதங்களை வாங்கிக் குவித்து, தரைப் படைக்கான ஆட்சேர்ப்பையும் பயிற்சித் திட்டங்களையும் செயற்படுத்தி, வான் படைக்கும் கடற் படைக்குமாகக் குண்டு வீச்சு விமானங்களையும் போர்க் கப்பல்களையும் வாங்கியதிலிருந்து ஒரு உண்மை

எமக்குப் புலனாகியது. அதாவது, சிறீலங்காவின் முப்படைகளையும் பாரிய அளவில் விரிவாக்கம் செய்து, நவீனமயப்படுத்துவதில் சந்திரிகாவின் அரசு தீவரமாகச் செயற்பட்டு வருகிறது என்பது எமக்குத் தெளிவாகியது. சமாதானமும் இன ஒற்றுமையுமே தனது இலட்சியம் எனப் பறை சாற்றி, ஒரு புறத்தில் விடுதலைப் புலிகளுடன் பேச்சுவார்த்தை நாடகத்தை அரங்கேற்றியவாறு, மறுபுறத்தில், ஒரு பிரமாண்டமான போர் இயந்திரத்தைக் கட்டி எழுப்பும் சந்திரிகா அரசின் தந்திரோபாயத்தில் எமக்கு ஆழமான சந்தேகம் எழுந்தது. படைச் சம வலு பேணப்பட வேண்டும் என்ற போர் நிறுத்த உடன்பாட்டின் நியமத்திற்கு முரணாக அரசாங்கம் செயற்பட்டதும் எமக்கு சந்திரிகா மீதான நம்பிக்கையைத் தளர்த்தியது.

மேற்கூறிய மெய் நிலைமைகளைப் பரிசீலனை செய்த பொழுது, சந்திரிகா அரசுடன் பேச்சுக்களைத் தொடர்வதா அல்லது பேச்சுக்களிலிருந்து விலகிக் கொள்வதா என்ற ஒரு கடினமான முடிவு எடுக்க வேண்டிய சங்கடமான நிலைக்குள் நாம் தள்ளப்பட்டோம். பேச்சுக்களிலிருந்து விலகும் எதிர்மறையான முடிவை நாம் எடுப்போமானால், சர்வதேச ரீதியில் எமது விடுதலை இயக்கத்தின் நம்பகத் தன்மையை அது பெருமளவில் பாதிக்கும் என்பது எமக்கு நன்கு தெரியும். ஆனால் அதே சமயம், அர்த்தமற்றதான பயன்தராத, மக்களின் நலன்பேணாத பேச்சுக்களில் காலத்தை வீணாக்குவோமானால், இராணுவ ரீதியாகப் பாரதூரமான பின்னடைவுகளை நாம் எதிர்கொள்ள நேரும். சமாதான முயற்சியில் சந்திரிகா அரசு இதய சுத்தியுடன் நேர்மையாக நடந்து கொள்ளவில்லை எனப் பிரபாகரன் உறுதியாக நம்பினார். ஒரு அந்தரங்க இராணுவத் திட்டத்தைச் செயற்படுத்துவதற்குக் கால அவகாசம் தேவைப்பட்டதால், பேச்சுவார்த்தை என்ற நாடகத்தை மேடையேற்றி விடுதலைப் புலிகளின் கவனத்தைத் திசை திருப்ப முனைகிறது சந்திரிகா எனப் பிரபாகரன் என்னிடம் கூறினார். எந்த விதப் பயனுமின்றி அர்த்தமற்றதாகத் தொடர்ந்து இழுபடும் பேச்சுக்களில் தளபதிகளும் போராளிகளும் நம்பிக்கை இழந்தனர். இலக்கின்றிப் பேச்சுக்கள் இழுபடுவதால் போராளிகளின் மனவுறுதி தளர்ந்து வருவதாகக் களத் தளபதிகள் பிரபாகரனிடம் முறையிட்டனர். பகை நிறுத்த உடன்பாட்டு விதிகளும் கட்டுப்பாடுகளும் அரச ஆயுதப்

படைகளுக்கே சாதகமாக அமைந்திருப்பதாக எமது போராளிகள் மத்தியில் பரவலாக ஒரு கருத்து நிலவியது. இந்த உடன்பாடு அமைதியையும் இயல்பு நிலையையும் தோற்றுவிக்கத் தவறியதுடன் எமது போராளிகளின் செயற்பாடுகளையும் வெகுவாகக் கட்டுப்படுத்தியது. அத்துடன் அரச படைகளுக்கும் விடுதலைப் புலிப் போராளிகளுக்கும் மத்தியில் பகையுணர்வும் முறுகல் நிலையும் வளர்ந்து வந்தது. போர் நிறுத்தத்தைக் கண்காணிக்கும் சமாதானக் குழுக்கள் செயற்படாததால் முரண்பாடுகள் முற்றி, மோதல் வெடிக்கும் கொந்தளிப்பான நிலை உருவாகியது.

கிழக்கில் எமது கெரில்லா அணிகளின் நடமாட்டம் தடுத்து நிறுத்தப்பட்டதால், அவர்களது இருப்புக்கே பேராபத்து எழுந்தது. போராளிகளின் ஒழுக்கம், கட்டுப்பாடு, போராட்ட இலட்சியத்தில் அவர்களுடைய உறுதிப்பாடு ஆகிய பண்புகளில் அதிசிரத்தை காட்டும் பிரபாகரனுக்கு புலி வீரர்கள் விரக்தியடைந்து மனவுறுதி தளர்வதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. கிழக்கு மாகாணத்தில், சிங்கள இராணுவத்தின் ஆத்திரமூட்டும் நடவடிக்கைகளுக்கு முகம் கொடுத்து எமது போராளிகள் அனுபவித்து வந்த அவமானமும் அவல நிலையும் பிரபாகரனுக்குச் சினத்தை மூட்டியது. அடுத்ததாக, சமாதானப் பேச்சுக்கள் குறித்துத் தமிழ் மக்களுக்கு ஏற்பட்ட ஆழமான ஏமாற்றத்தையும் நம்பிக்கையீனத்தையும் நாம் கருத்தில் எடுக்க வேண்டியிருந்தது. பேச்சுக்கள் தொடங்கிய ஆரம்ப காலத்தில் எமது மக்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி, நம்பிக்கை, எதிர்பார்ப்பு எல்லாமே காலப் போக்கில் படிப்படியாக மறைந்து இப்பொழுது விரக்தியாக, வெறுப்பாக, நம்பிக்கையீனமான உருவெடுத்திருந்தன. தமது நாளாந்த சீவியத்திற்கு அடிப்படையான ஜீவாதாரத் தேவைகளைக் கூட இப் பேச்சுகள் நிறைவு செய்யவில்லை என மக்கள் ஏமாற்றமடைந்தனர். சந்திரிகா அரசு ஏமாற்று வித்தை காட்டி, நயவஞ்சகமாக நடந்து கொள்கிறது என்பதை எமது மக்கள் நன்கு உணர்ந்தனர். இதனால், பயனற்ற இப் பேச்சுக்களைத் தொடர்வதில் அர்த்தமில்லை என்பதையும் அவர்கள் புரிந்து கொண்டார்கள்.

நாம் விதித்த காலக்கெடு நெருங்கியது. ஒரு தீர்க்கமான முடிவு எடுக்க வேண்டிய கட்டம் வந்தது. காலக் கெடுவின் கடைசி நாளில் கூட சந்திரிகாவின் 'ஆக்கபூர்வமான முடிவுகள்' எதுவுமே நடைமுறைக்கு வரவில்லை. பேச்சுக்களைத்

தொடர்வதில் அர்த்தமில்லை என்பது தெளிவாகியது. பேச்சுவார்த்தையில் இருந்தும் பகை நிறுத்த உடன்பாட்டில் இருந்தும் விலகிக் கொள்வதென விடுதலைப் புலிகளின் தலைமைப்பீடம் உறுதியான முடிவை எடுத்தது. இந்த முடிவை அறிவித்து, 1995 ஏப்ரல் 18ஆம் நாள் கீழ்க் கண்ட கடிதம் ஜனாதிபதி குமாரதுங்காவுக்கு அனுப்பி வைக்கப்பட்டது.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்

18 ஏப்ரல் 1995

கனம். சந்திரிகா பண்டாரநாயக்கா குமாரதுங்கா
சிறீலங்காவின் ஜனாதிபதி
ஜனாதிபதியின் தலைமையகம்
கொழும்பு

அன்பின் ஜனாதிபதி அவர்கட்கு,

உங்களது 1995 ஏப்ரல் 12ஆம் நாள் திகதியிடப்பட்ட கடிதத்திற்கு மிகவும் நன்றி.

உங்களது கடிதத்தின் உள்ளடக்கத்தை மிகவும் கவனமாகவும் ஆழமாகவும் பரிசீலனை செய்தோம். நாம் எழுப்பிய முக்கியமான பிரச்சினைகளுக்கு நீங்கள் அளித்த பதில்கள், எமது எதிர்பார்ப்புகளை நிறைவு செய்யத் தவறியதால், எமக்குத் திருப்தியை அளிக்கவில்லை என்பதைக் கவலையுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

கடந்த ஆறு மாதங்களாகத் தொடர்ந்த பேச்சுக்களில் எத்தனையோ தடவைகள் உங்களுடன் வாதாடி, உங்களை இணங்க வைக்க நாம் எடுத்த பகீரத முயற்சியின் பயனாக, ஈற்றில் எரிபொருட்களுக்கும் வேறு சில பொருட்களுக்கும் தடைகளைத் தளர்த்தி ஆக்கபூர்வமான முடிவுகளை எடுத்தீர்கள். இம் முடிவுகள் ஏற்கனவே எடுக்கப்பட்டு, 1995 மார்ச் 24ஆம் நாளைய உங்களது கடிதத்தில் எமக்கு அறிவிக்கப்பட்ட போதும், எமது காலக் கெடுவை முறியடிக்கும் நோக்கத்துடன்

முடிவுகளை நடைமுறைப்படுத்துவதில் வேண்டுமென்றே தாமதங்களை உண்டுபண்ணப்பட்டன என்பதை நாம் ஏமாற்றத்துடன் தெரிந்து கொண்டோம்.

மற்றைய பிரச்சினைகளைப் பொறுத்த வரை உங்களது பதில்கள் அரைகுறையாகவும், மழுப்பலாகவும், பிடிமாணம் அற்றதாகவும், எதிர்காலப் பேச்சுக்களில் தீர்மானிக்க வேண்டியதாகவும் அமைந்திருந்தன. மார்ச் 14ஆம் நாள் நீங்கள் எழுதிய கடிதத்தில் மீன்பிடியில் விதிக்கப்பட்ட சகல தடைகளும் நீக்கப்படுமென உறுதிமொழி தரப்பட்டபோதும் பெரும் அளவிலான மீன்பிடி வலயங்களில் மீன்பிடிப்பதற்குத் தடை இருந்து வருகிறது.

பூநகரி இராணுவ முகாமை அகற்றி யாழ்ப்பாணத்திற்குப் பாதை திறப்பது, கிழக்கு மாகாணத்தில் எமது போராளிகளின் நடமாட்டச் சுதந்திரம் போன்ற முக்கிய பிரச்சினைகளுக்கு நீங்கள் எடுத்துள்ள முடிவுகள் ஏற்றுக் கொள்ள முடியாதவை. ஏனென்றால், எதிர்காலப் பேச்சுகளில் அவை மறுபரிசீலனைக்கு உட்படுத்தப்பட உள்ளன.

முக்கியமான பிரச்சினைகளை நீங்கள் தட்டிக் கழிக்கும் போக்கினைப் பார்க்குமிடத்து, அமைதியையும் இயல்பு நிலையையும் தோற்றுவிக்க உங்களது அரசாங்கம் நேர்மையுடன் நடந்து கொள்ளவில்லை என்பதும் இராணுவத்தின் நலனைப் பேணுவதிலேயே அக்கறை காட்டுகிறது என்பதும் தெளிவாகிறது. அத்துடன், போர் நிறுத்தத்தை வாய்ப்பாகப் பயன்படுத்தி ஆயுதப் படைகளின் போர் வலுவைக் கட்டி வளர்ப்பதில் உங்களது அரசாங்கம் சகல முயற்சிகளையும் செய்து வருகிறது என்பதை நாம் நன்கறிவோம். இராணுவச் சம வலு பேணப்பட வேண்டும் என்ற அமைதி உடன்பாட்டு கடப்பாடுகளை மீறுவதாகவே உங்களது செயற்பாடுகள் அமைகின்றன.

எமது காலக்கெடு முடிவடையும் திகதியாகிய 1995 ஏப்ரல் 19ஆம் நாளுக்கு முன்னராக, எமக்குத் திருப்தி அளிக்கும் வகையில், மேற்குறிப்பிட்ட பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்படாததால்

பேச்சுவார்த்தைகளிலிருந்தும் பகை நிறுத்த உடன்பாட்டிலிருந்தும் விலகிக் கொள்வதென்ற வேதனைக்குரிய முடிவை எடுப்பதைத் தவிர எமக்கு வேறு வழி இருக்கவில்லை.

இப்படியான துரதிர்ஷ்ட நிலை எழுந்தமைக்கு வருந்துகிறோம்.

உங்கள் நேர்மையுள்ள

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

தலைவர் பிரபாகரனின் இந்தக் கடிதத்துடன் சிறீலங்கா அரசாங்கத்திற்கும் தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் நிகழ்ந்த சமாதானப் பேச்சுக்கள் முடிவுக்கு வந்தன. காலக் கெடு முடிவடைந்த ஏப்ரல் 19ஆம் நாளன்று யுத்தம் மூண்டது. அன்றைய நாளில் கடற்புலி அதிரடிப் படை வீரர்கள் திருகோணமலைத் துறைமுகத்தினுள் தரித்து நின்ற இரு போர்க் கப்பல்களைத் தாக்கிக் கடலில் மூழ்கடித்தனர். இந்தச் சம்பவத்தைத் தொடர்ந்து, சில இராணுவ ஆய்வாளர்கள் எழுதியது போன்று மூன்றாம் ஈழப் போர் ஆரம்பமாகியது.

ஆயுதப் போர் தொடங்கிய அடுத்த கணமே, சிறீலங்கா அரசாங்கத்தின் பிரச்சார இயந்திரம் விடுதலைப் புலிகளுக்கு எதிராக விசமத்தனமான கருத்துப் போரையும் கட்டவிழ்த்து விட்டது. விடுதலைப் புலிகளைச் சமாதானத்தின் விரோதிகளாகச் சித்தரித்துக் காட்டிய சிங்கள அரசு, எமது அமைப்பின் நெகிழ்வற்ற கடும்போக்குக் காரணமாகவே சமாதானப் பேச்சுக்கள் முறிவடைந்து போனதாகப் பழி சுமத்தியது. அமைதி உடன்பாட்டு விதிகளுக்கு மாறாக, போதிய கால அவகாசம் வழங்காமல் பகை நிறுத்தத்தை முறித்துக் கொண்டமைக்கும் புலிகள் மீது கண்டனம் தெரிவிக்கப்பட்டது. நாம் கொடுத்த மூன்று வாரக் காலக் கெடுவை அரசாங்கம் வேண்டுமென்றே இருட்டடிப்புச் செய்தது. சமாதான வழி முறையிலான அரசியல் தீர்வில் விடுதலைப் புலிகளுக்கு நம்பிக்கையில்லை என்பதை அனைத்துலகச் சமூகத்திற்கு எடுத்துக் காட்டி, தமிழரின் ஆயுதம் தரித்த விடுதலை இயக்கத்தை இராணுவ ரீதியாக ஒழித்துக் கட்டுவதைத் தவிர வேறு வழி இருக்கவில்லை என்ற கருத்தை முதன்மைப்படுத்துவதாக அரசாங்கத்தின் பரப்புரை அமைந்தது.

பேச்சுக்கள் தோல்வியடைந்தமைக்கு விடுதலைப் புலிகள் அமைப்பே காரணமென உலக சமூகத்தை நம்ப வைக்கும் பிரச்சாரத்தில் சந்திரிகா அரசு வெற்றியீட்டியது.

பேச்சுக்கள் தோல்வியடைந்ததன் உண்மையான காரணத்தைக் கூறி, எமது நிலைப்பாட்டை உலக ஊடகங்களுக்கு எடுத்து விளக்கும் வாய்ப்பு எமக்கு இருக்கவில்லை. யாழ்ப்பாணக் குடாநாட்டிலும், வன்னிக் காடுகளிலும் இயங்கி வந்த எமது அமைப்பு நாகரீக உலகிலிருந்து முற்றாகத் தொடர்பு அறுந்த நிலையில் இருந்தது. பேச்சுவார்த்தைகள் முறிவடைந்த கணத்திலிருந்தே யாழ்ப்பாணத்துடனான தொலைபேசித் தொடர்புகளையும் அரசாங்கம் துண்டித்தது. அத்துடன் உள்நாட்டு, வெளிநாட்டு ஊடகவியலாளரை விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டுப் பிரதேசத்திற்கு வரவிடாது தடுத்தது. கொழும்பிலுள்ள அரசாங்கக் கட்டுப்பாட்டு ஊடகங்கள் ஒருதலைப்பட்சமாக நின்று அரசாங்கத்தின் ஊதுகுழல்களாக இயங்கின. இந்திய ஊடகங்கள் ஈவிரக்கமற்ற புலிகள் விரோத நிலைப்பாட்டைக் கடைப்பிடித்தன. உலக ஊடகங்களும் தமிழர் பிரச்சினையில் நடுநிலை வகிக்காது அரசாங்கத்தின் பரப்புரைக்கே முக்கியத்துவம் கொடுத்தன. இப்படியான ஒரு புற நிலையில், அரசாங்கத்தின் திட்டமிட்ட பொய்ப் பிரச்சாரத்திற்கு எதிராகச் செம்மையான முறையில் பரப்புரையை முன்னெடுக்க எம்மால் முடியவில்லை.

## யாழ்ப்பாணப் பேச்சுக்கள் தோல்வியடைந்தது ஏன்?

யாழ்ப்பாணப் பேச்சுக்கள் நடைபெற்ற விசித்தரமான முறைமை பற்றி அனைத்துலகச் சமூகம் சரிவர அறிந்திருக்கவில்லை. சிறீலங்கா அரசாங்கத்தினதும் விடுதலைப் புலிகளதும் தலைவர்கள் மத்தியில் கடிதப் பரிமாற்ற வடிவிலேயே பேச்சுக்கள் நிகழ்ந்தன. எழுத்து வடிவிலான பேச்சுக்கு முன்னுரிமை வழங்கி நேரடிப் பேச்சுக்களின் முக்கியத்துவத்தை அரசாங்கம் சிறுமைப்படுத்தியது.

இரு தரப்பினரும் இணக்கப்பாடு கண்ட ஒரு நிகழ்ச்சி நிரலில் பேச்சுக்கள் நெறிப்படுத்தப்படவில்லை. பேச்சுக்கள் படிப்படியாகக் கட்டம் கட்டமாக முன் நகர்த்தப்பட வேண்டும் என்றும் முதற் கட்டப் பேச்சுக்கள் தமிழ் மக்களின் நாளாந்த

வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பது பற்றியும், பின்கட்டப் பேச்சுக்கள் இன நெருக்கடிக்கு அரசியல் தீர்வு காண்பது பற்றியும் அமைய வேண்டும் என்பதே விடுதலைப் புலிகளின் நிலைப்பாடாக இருந்தது. தமிழர் தாயகத்தை சிங்கள இராணுவம் ஆக்கிரமித்து நின்றதும், தமிழ் மக்கள் மீது அரசாங்கம் திணித்திருந்த பொருளாதாரத் தடைகளும் முக்கியமான சமூக, பொருளாதார, மனிதாபிமானப் பிரச்சினைகளைத் தோற்றுவித்தன. இப் பிரச்சினைகள் மக்களின் வாழ்நிலையைப் பாரதூரமாகப் பாதித்ததால் அவற்றிற்குப் பரிகாரம் காண்பது அத்தியாவசியத் தேவையாக எழுந்தது. அதனால் முதலில் எமது மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டு, தமிழ்ப் பகுதிகளில் அமைதியும் இயல்பு நிலையும் உருவாக வேண்டும் என விடுதலைப் புலிகள் வற்புறுத்தினர். போர் நெருக்கடியைத் தணித்து, இயல்பு நிலையை உண்டுபண்ணினாலேயே போரினால் பிளவுபட்டு நிற்கும் இரு தேசிய சமூகங்கள் மத்தியிலும் பரஸ்பர நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் உருவாக்கலாம் என நாம் கருதினோம். சமாதானப் பேச்சுக்களையும் வெற்றிகரமாக முன்னெடுத்துச் செல்வதற்கும் இப்படியான நல்லெண்ணமும் நல்லுறவும் நிலவுவது முக்கியம் எனவும் நாம் எண்ணினோம்.

சமாதானப் பேச்சுக்களுக்கு நாம் வகுத்த தந்திரோபாயத்தையும் அதற்கான காரணங்களையும் சந்திரிகா அரசாங்கம் சரி வரப் புரிந்து கொள்ளத் தவறியது. இதனால் எமது மக்கள் மீது திணிக்கப்பட்டிருந்த ஒடுக்குமுறைகளை அகற்றி விட மறுத்தது. பொருளாதார முற்றுகையாக, தடைகளாக, கட்டுப்பாடுகளாக தமிழர் தாயகம் மீது திணிக்கப்பட்ட ஒடுக்குமுறை வடிவங்கள் தமிழரது சுதந்திர இயக்கத்தின் உறுதிப்பாட்டை உடைத்து விடும் என்றும், தமிழரின் தேசியத் தலைமையைப் பணிய வைத்து விட்டுக் கொடுக்கத் தூண்டும் என்றும் சந்திரிகாவின் ஆட்சிப்பீடம் தவறான மதிப்பீடு செய்திருந்தது. இந்தப் பிழையான மதிப்பாய்வை முழுமையாக நம்பியதால் தமிழர் மீதான ஒடுக்குமுறை வடிவங்களைத் தளர்த்தவோ அன்றி கொடுத்த வாக்குறுதிகளை நிறைவு செய்யவோ அரசாங்கம் தயாராக இருக்கவில்லை. இதன் காரணமாக அரசாங்கம் நேர்மையாகவும் உண்மையாகவும் நடந்து கொள்ளவில்லை என்றும் தமிழரின் அவசர மனிதாபிமானப் பிரச்சினைகளைத் தீர்த்து வைக்கும்

அரசியல் உறுதிப்பாடும் அதனிடம் இருக்கவில்லை என்றும் விடுதலைப் புலிகளின் தலைமைப்பீடம் கணிப்பிட்டது. இன்னொரு விதத்தில் சொல்வதானால் அரசாங்கம் நம்பிக்கைத் துரோகம் இழைத்ததாக விடுதலைப் புலிகள் கருதினர்.

ஆறு மாத காலத்தைக் கொண்ட இந்தச் சமாதான முனைப்பில், நாளுக்கு சில மணி நேரம் நீடித்த, நான்கு சுற்றுப் பேச்சுக்களே நடந்தேறின. விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட பிரச்சினைகளின் சிக்கலான பரிமாணங்களைப் பார்க்கும் பொழுது, நேரடிப் பேச்சுக்கு ஒதுக்கப்பட்ட கால அவகாசம் மிகவும் சொற்பமானதாக இருந்தது. சில சிக்கலான பிரச்சினைகள் குறித்து விடுதலைப் புலிகள் விளக்கங்களை நாடிய பொழுதெல்லாம் அரசாங்கம் வேண்டுமென்றே சந்திப்புக்களைப் பின்போட்டு, பேச்சுக்களில் நீண்ட, அர்த்தமற்ற கால இடைவெளிகளை ஏற்படுத்தியது.

ஆற்றலும், அனுபவமும், அதிகாரமும் கொண்ட மூத்த அரசியல்வாதிகள் எவரையுமே பேச்சுக்களில் பங்குகொள்ள ஜனாதிபதி சந்திரிகா அனுமதிக்கவில்லை. குறைந்த தர நிர்வாகிகளையும், படை அதிகாரிகளையுமே அரச தரப்புப் பிரதிநிதிகளாக அவர் நியமித்தார். இவர்களுக்குத் தமிழ் மக்களது பிரச்சினைகளின் ஆழம், அகலம் எதுவுமே தெரியாது. அத்தோடு அவற்றைத் தீர்த்து வைக்கும் அரசியல் அதிகாரமும் அவர்களிடம் இருக்கவில்லை. தகைமை குறைந்த பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்ததில் இருந்து, நேரடிப் பேச்சுக்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பதை அரசாங்கம் விரும்பவில்லை என்றே நாம் கருதினோம். பேச்சுக்கள் முறிந்து போகும் தறுவாயில், கடைசிக் கட்டப் பேச்சுக்கு அரச தரப்பின் தலைவராக, எவ்வித அரசியல் அனுபவமும், அதிகாரமும் அற்ற ஒரு கிறீஸ்தவக் குருவானவரையே சந்திரிகா அம்மையார் அனுப்பி வைத்தார். இவ்விதம் நேரடிப் பேச்சுக்களின் தரம் குறைக்கப்பட்டதைப் பார்க்கும் பொழுது, விடுதலைப் புலிகளுடனான சமரசப் பேச்சுவார்த்தையைச் சந்திரிகாவின் அரசாங்கம் நேர்மையானதாகவும் பாரதூரமானதாகவும் எடுக்கவில்லை என்றே தோன்றியது. நேரடிப் பேச்சு வடிவத்தைச் சிறுமைப்படுத்திய அரசாங்கம், எழுத்து மூலமான கருத்துப் பரிமாற்றத்திற்கு முக்கியத்துவம் அளித்தது. கடிதப் பரிமாற்றமானது எழுத்து வடிவத்திலேயே மிக முக்கியமான விடயங்கள் குறித்து, கருத்துப் பரிமாற்றங்கள், விவாதங்கள்

நடைபெற்றதுடன் முடிவுகளும் எடுக்கப்பட்டன. ஆறு மாத காலமாக நீடித்த பேச்சுக்களின் போது சிறீலங்கா அரசாங்கத்திற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் எழுபதிற்கும் மேற்பட்ட கடிதங்கள் பரிமாறப்பட்டன. இன நெருக்கடியில் சம்பந்தப்பட்ட இரு தரப்பினரதும் அதிகாரம் படைத்த தலைவர்கள் மத்தியிலேயே பெரும்பான்மையான கடிதங்கள் பரிமாறப்பட்டன. அப்படியிருந்தும், எழுத்து மூலமான இக் கருத்துப் பரிமாற்றங்கள், தப்பான அபிப்பிராயங்களையும் சந்தேகங்களையும் போக்கி, பரஸ்பர நல்லெண்ணத்தையும் நம்பிக்கையையும் தோற்றுவிக்கத் தவறின. மாறாக, இக் கடிதப் பரிமாற்றங்கள் படிப்படியாகச் சந்தேகத்தையும், கசப்புணர்வையும், விரோத மனப்பான்மையையும் தோற்றுவித்து, இரு தரப்பினரதும் நிலைப்பாட்டைக் கடுமையானதாக இறுகச் செய்து, பெரிய இடைவெளியை உண்டு பண்ணின.

கடிதப் பரிமாற்றம் அரசுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியிலான சமசீரற்ற உறவு நிலையைப் பிரதிபலித்துக் காட்டியது. எஜமான் அடிமை என்ற தோரணையில், சிறீலங்கா அரசு தன்னை உயர்நிலையில் நிறுத்தி, புலிகளைத் தாழ்த்தப்பட்ட தரப்பாகவே அணுகியது. இதனால் சந்திரிகாவின் கடிதங்களில் அரச அதிகார இறுமாப்புத் தொனித்தது. சிறீலங்கா அரசு தன்னைச் சட்ட ரீதியான உயர் அதிகார பீடமாகக் கருதியது. விடுதலைப் புலிகளைச் சட்ட விரோதமான புரட்சி அமைப்பாக நோக்கியது. இதனால் சமத்துவ தகைமையுடன் சந்திரிகா அரசு புலிகளை அணுகவில்லை. இப்படியான சமசீரற்ற அணுகுமுறையும் அரசின் ஆணவப் போக்கும் விடுதலைப் புலிகளுக்குச் சினத்தையும் எரிச்சலையும் மூட்டியது. தன்மானமுள்ள தமிழர் தேசத்தின் அதிகாரமுடைய பிரதிநிதிகளாகவே விடுதலைப் புலிகள் பேச்சுக்களில் கலந்து கொண்டனர். இரு தேசங்கள் மத்தியிலான யுத்தத்தில், சம வலுவுடைய சமத்துவமான போரிடும் தரப்பாக, ஒரு தேச விடுதலை இயக்கத்தின் தலைமைத்துவமாக விடுதலைப் புலிகள் அமைப்பு தன்னை ஒரு உயர்நிலையில் நிறுத்தி, சிறீலங்கா அரசைச் சம பங்காளியாக அணுகியது. இப்படியாக இரு தரப்பினரும் ஒருவரை ஒருவர் இனம் கண்ட தன்மையும் அதன் அடிப்படையில் எழுந்த பகை முரண்பாடுகளும் நல்லிணக்கத்திற்கு முட்டுக் கட்டையாக அமைந்தன.

ஜனாதிபதி சந்திரிகாவும் அவரது மாமனாராகிய கேணல்

ரத்வத்தையும் கைச்சாத்திட்டு எழுதிய கடிதங்கள், நான் ஏற்கனவே குறிப்பிட்டது போல, மிகவும் நுட்பமாக எழுத்தில் செதுக்கப்பட்ட பிரச்சாரக் கருத்துரைகளாகவே அமைந்தன. விடுதலைப் புலிகள் எழுப்பிய முக்கிய பிரச்சினைகளுக்கு விளக்கமளிப்பதற்கு மாறாக, தமது நிலைப்பாட்டை நியாயப்படுத்தி, சிங்கள மக்களுக்குத் திருப்தியளிக்கும் நோக்குடனேயே இக் கடிதங்கள் வரையப்பட்டன. உள்ளடக்கத்தில் பிரச்சாரக் கருத்தியலின் ஆதிக்கம் இருந்ததால், வளமற்ற, உயிரற்ற, புதுமையற்ற, வரண்ட மொழி நடையும், உப்புச் சப்பற்ற வாதப் பிரதிவாதங்களைக் கொண்டதாகவுமே கடிதங்கள் அமையப் பெற்றன. நேரடிப் பேச்சுக்களைச் சிறுமைப்படுத்தி, கடிதப் பரிமாற்ற கருத்துரையாடலுக்குச் சந்திரிகா அரசு முன்னுரிமை வழங்கியமையே யாழ்ப்பாணப் பேச்சுக்களின் தோல்விக்கு முக்கிய காரணங்களில் ஒன்றாகும்.

சிறீலங்கா அரசாங்கத்திற்கும் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் மத்தியில் சமாதானப் பேச்சுக்கள் நடைபெறுவதைச் சிங்களப் படைத்துறை ஆரம்பத்திலிருந்தே விரும்பவில்லை. விடுதலைப் புலிகள் முன்வைத்த நியாயமான, மனிதாபிமானக் கோரிக்கைகள் குறித்து அரச படைத் தரப்பு மிகவும் இறுக்கமான, விட்டுக் கொடாத கடும்போக்கைக் கடைப்பிடித்தது. பொருளாதாரத் தடைகளைத் தளர்த்துவதற்குச் சிங்கள இராணுவம் கடும் எதிர்ப்பைத் தெரிவித்தது. மக்களின் நாளாந்த வாழ்வுக்கு அவசியமான பொருட்கள் அனைத்தையும் இராணுவப் பாவனைப் பொருட்களாகச் சித்தரித்துக் காட்டியது. சில அத்தியாவசியப் பொருட்கள் மீதான தடைகள் நீக்கப்பட்டுள்ளதாகக் காலத்திற்குக் காலம் அரசாங்கம் வெளியிட்ட வர்த்தமானி அறிவிப்புகள் அர்த்தமற்ற கேலிக் கூத்தாகவே மாறியது. வடக்கின் எல்லைப் பிரதேசங்கள் இராணுவ ஆக்கிரமிப்பின் கீழ் இருந்ததால், வவுனியா எல்லைகள் ஊடாகப் பொருட்கள் கொண்டு செல்ல முடியாதவாறு இராணுவம் தடைபோட்டது.

அரச படைகளின் இந்த அநீதியான நடவடிக்கை பற்றி, எத்தனையோ தடவைகள் எழுத்திலும் நேரடிப் பேச்சுக்களிலும் முறையிட்டபோதும் உருப்படியான நடவடிக்கைகள் எதுவுமே எடுபடவில்லை. இந்தப் பிரச்சினை பற்றி ஜனாதிபதி சந்திரிகா நன்கறிந்தபோதும் இது பற்றி அவர் பெரிதாக அலட்டிக்

கொள்ளவில்லை. சந்திரிகாவைப் பொறுத்த வரை, அவர் ஆயுதப் படைகளின் கேந்திர நலனுக்கும் தேசியப் பாதுகாப்புக்குமே அதிமுக்கியத்துவம் கொடுத்தார். இதனால், இராணுவத்தினரின் அட்டூழியங்களிலும், தன்னிச்சையான நடவடிக்கைகளிலும் அவர் குறுக்கிட விரும்பவில்லை. ஆனால் எமது மக்களைப் பொறுத்த மட்டில், பொருளாதாரத் தடையானது அவர்களது இருப்பு நிலைக்கே அச்சுறுத்தலை ஏற்படுத்தும் பூதாகரப் பிரச்சினையாக விஸ்வரூபம் எடுத்தது. எமது மக்களை ஜீவமரணப் போராட்டத்தில் தள்ளிவிட்ட இந்த அநீதியைப் போக்கிவிட ஆறு மாத காலமாக எம்மால் இயன்றளவு முயற்சித்தும் முடியவில்லை. தமிழ் மக்களின் அவல நிலையை விட இராணுவத்தின் நலனுக்கே முன்னுரிமை கொடுத்து, இந்தப் பொருளாதார ஒடுக்குமுறையை நீக்கிவிட சந்திரிகா அரசு மறுத்து வந்தமையும் பேச்சுக்களின் தோல்விக்கான அடுத்த முக்கிய காரணமாகும்.

சர்வதேசக் கண்காணிப்புக் குழுவின் மேற்பார்வையுடன் ஒரு நிலையான, நிரந்தரமான போர் நிறுத்த உடன்பாட்டைச் செய்து கொள்ள சிறீலங்காவின் இராணுவத் தலைமைப் பீடம் விரும்பவில்லை. உதவிப் பாதுகாப்பு அமைச்சரான கேணல். ரத்வத்தை தலைவர் பிரபாகரனுக்கு எழுதிய கடிதம் ஒன்றில், அரசாங்கம் ஒரு நிரந்தரமான போர் நிறுத்தத்தை விரும்பவில்லை என்றும், அதிகாரபூர்வமற்ற, இறுக்கமற்ற, தற்காலிகமான பகை நிறுத்தத்தையே விரும்புவதாகவும் சுட்டிக் காட்டினார். இதிலிருந்து ஒரு உண்மை புலனாகியது. விடுதலைப் புலிகளுடன், சமாதானப் பேச்சுக்களை நடத்தியபோதும், இராணுவ அணுகுமுறையையும் இராணுவத் தீர்வையும் அரசாங்கம் கைவிடவில்லை என்பது தெளிவாகியது. இரு தரப்பினரும் கைச்சாத்திட்ட இத் தற்காலிக பகை நிறுத்த உடன்பாட்டையும் செம்மையாகச் செயற்படுத்த முடியாதவாறு அரச படைகள் ஒப்பந்த விதிகளைத் தொடர்ச்சியாக மீறி வந்தன. கிழக்கு மாகாணத்தில் அரச படைகளின் அடாவடித்தனத்தால் எமது போராளிகள் சுதந்திரமாக நடமாட முடியாது முகாம்களுக்குள் முடங்க நிர்ப்பந்திக்கப்பட்டார்கள்.

பூநகரிப் படை முகாமை அகற்றி, யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கும் வன்னி மாநிலத்திற்கும் ஒரு தரைப் பாதையை திறந்து விடுமாறு விடுதலைப் புலிகள் முன்வைத்த கோரிக்கையை இராணுவத் தலைமைப் பீடம் கடுமையாக

எதிர்த்தது. புவியியல் ரீதியாகப் பார்த்தால் யாழ்ப்பாணக் குடாநாட்டின் கழுத்தை நெரித்து நிற்கும் சங்கிலிக் கோர்வையாகவே பூநகரிப் படை முகாமும் ஆனையிறவு இராணுவப் பெரும் தளமும் அமையப் பெற்றிருப்பதைக் காணலாம். சன நெரிசல் நிறைந்த குடாநாட்டைத் தனிமைப்படுத்தி, வன்னிப் பெருநிலப்பரப்பிலிருந்து துண்டித்து வைக்கும் நோக்குடனேயே இப் படைத் தளங்கள் அமைக்கப்பட்டன. கடற்படையின் சண்டைப் படகுகள் இரவு பகலாக நடமாடும் கிளாலி நீரேரியைப் பொது மக்கள் கடந்து செல்வது மிகவும் ஆபத்தானதாக இருந்தது. இந் நீரேரியில் கடற்படையினரது வெறியாட்டத்திற்கு ஏராளமான அப்பாவிப் பொதுமக்கள் பலியாகியுள்ளனர். எனவேதான், யாழ்ப்பாணத்திலிருந்து வன்னிக்குச் சென்றுவர ஒரு பாதுகாப்பான போக்குவரத்துப் பாதையை எமது மக்கள் கோரி நின்றனர். மக்களின் அத்தியாவசியத் தேவையின் அடிப்படையில்தான் பூநகரிப் படைமுகாமை அகற்றிவிட்டு சங்குப்பிட்டி - பூநகரிப் பாதையைத் திறக்குமாறு விடுதலைப் புலிகள் அரசாங்கத்தைக் கோரினர். எமது மக்களின் முக்கியமான இப் போக்குவரத்துப் பிரச்சினையைத் தீர்த்து, அமைதியையும் இயல்பு நிலையையும் தோற்றுவிப்பதற்குச் சந்திரிகா அரசாங்கம் உண்மையான உறுதிப்பாடு கொண்டிருந்தால், பூநகரி படைமுகாமை பிறிதொரு இடத்திற்கு மாற்றியிருக்கலாம். ஆனால் விடுதலைப் புலிகளின் யோசனைக்கு இராணுவம் கடும் எதிர்ப்புத் தெரிவித்ததால், அரசாங்கம் இப் பிரச்சினையில் கடும்போக்கைக் கடைப்பிடித்தது. ஆயினும் பின்னர், 1996 இல் முல்லைத்தீவுப் பெரும் தளம் விடுதலைப் புலிகளிடம் வீழ்ச்சியடைந்ததைத் தொடர்ந்து, பூநகரி முகாம் பாதுகாப்பற்ற நிலையில் ஒதுக்கப்பட்டிருப்பதாகக் கூறி, அம் முகாமைச் சந்திரிகா அரசு மூடியது. சிறீலங்கா படைத்துறையினரது விட்டுக் கொடுக்காத கடும்போக்கும், விடுதலைப் புலிகள் இயக்கம் மீது அவர்கள் கொண்டிருந்த பகையுணர்வுமே யாழ்ப்பாணப் பேச்சுக்கள் முறிவடைந்தமைக்கு இன்னொரு காரணமாகும்.

யாழ்ப்பாணப் பேச்சுவார்த்தை தோல்வியடைந்ததை அடுத்து கட்டவிழ்ந்த சம்பவங்கள் அரசாங்கத்தின் அந்தரங்க இராணுவத் திட்டம் பற்றி நாம் கொண்டிருந்த சந்தேகத்தை உறுதிப்படுத்துவதாக அமைந்தன.

பேச்சுக்கள் முறிவடைந்த குறுகிய காலத்தினுள், இனப் பிரச்சினைக்குத் தீர்வாக அதிகாரப் பரவலாக்கத் திட்டம் ஒன்றை அரசாங்கம் வெளியிட்டது. நிதி, சட்டம் ஒழுங்கு, நில உரிமை, கல்வி போன்ற விடயங்களில் கணிசமான அதிகாரங்களை வழங்கும் பிரதேச சுயாட்சித் திட்டமாக இப் புதிய யோசனைகள் அமையப் பெற்றன. சந்திரிகா ஆட்சிப்பீடத்தின் இந்த அதிகாரப் பகிர்வுத் திட்டத்தை முற்போக்கானது என்றும் புரட்சிகரமானது என்றும் 'தமிழர்கள் கனவில் காண முடியாத அளவுக்கு' ஆட்சியதிகாரம் அதில் உள்ளதென்றும், அரச கட்டுப்பாட்டு ஊடகங்கள் அதனைப் புகழ்ந்துரைத்தன. சமாதானப் பேச்சுக்கள் நடைபெற்ற வேளையில் வெளியிடாத இத் தீர்வுத் திட்டத்தை, போர் வெடித்த பின்பு அரசாங்கம் அறிவிப்பதன் அந்தரங்க நோக்கம் என்னவென்பதைத் தமிழ் மக்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் அதே சமயம், சர்வதேசச் சமூகம் சந்திரிகா அரசாங்கத்தின் அதிகாரப் பகிர்வுத் திட்டத்திற்கு அமோக ஆதரவை வழங்கியது. ஆசியாவின் மிகச் சிக்கலான இனப் பிரச்சினைக்கு ஒரு புரட்சிகரமான தீர்வுத் திட்டம் முன்வைக்கப்பட்டிருப்பதாக சர்வதேசச் சமூகம் அரசாங்கத்தின் யோசனையைப் பாராட்டியது.

தான் முன்வைத்திருக்கும் புதுமையான தீர்வுத் திட்டத்தை வெற்றிகரமாக நடைமுறைப்படுத்தி, ஒரு நிரந்தரச் சமாதானச் சூழ்நிலையை நிலைநாட்டுவதாயின் 'சமாதானத்தின் விரோதிகளை' நசுக்கிவிட வேண்டும் என்றும் அதற்கு யுத்தம் தவிர்க்க முடியாதது என்றும் சந்திரிகா அரசு ஒரு விபரீதமான சிந்தனையை முன்வைத்தது. சமாதானத்தின் எதிரிகள் என விடுதலைப் புலிகள் மீது அரசாங்கம் ஏற்கனவே பழி சுமத்தியிருந்தது. அமைதி வழியில் அரசியல் தீர்வு காண்பதற்கு எதிரானவர்கள் என்பதைச் சமாதானப் பேச்சுக்களை முறித்துக் கொண்டதன் மூலம் விடுதலைப் புலிகள் நிரூபித்துவிட்டார்கள் என்பது அரசாங்கத்தின் வாதம். ஆகவே, விடுதலைப் புலிகள் இயக்கமே சமாதான வழிமுறைக்கும் அரசியல் தீர்வுக்கும் பெரும் முட்டுக்கட்டையாக இருக்கின்றனர் என்பதும் அவர்களது கருத்து. ஆகவே நிலையான சமாதானத்தை நிறுவி, தமிழரின் பிரச்சினைக்கு நிரந்தரமான தீர்வு காண்பதாக இருந்தால் ஒரு பாரிய யுத்தம் மூலம் விடுதலைப் புலிகள் அமைப்பு பூண்டோடு அழிக்கப்பட வேண்டும் எனச் சந்திரிகா அரசு பரப்புரை நிகழ்த்தியது. இப்படியாக சமாதானம் என்ற உன்னத

இலட்சியத்தை அடைவதற்காகப் போர் என்ற அழிவு நடவடிக்கை அவசியமாகிறது என்ற விபரீதமான கோட்பாடு முன்வைக்கப்பட்டது. 'சமாதானத்திற்கான போர்' என்ற சந்திரிகாவின் இந்தக் கருத்தியல் வித்தையை உலக நாடுகளும் விசாரணையின்றி விழுங்கிக் கொண்டன.

பிரதேச சுயாட்சி அதிகாரங்களைக் கொண்ட தனது 'முற்போக்கான' திட்டம் மூலம் தமிழ் மக்களைத் தன்பக்கம் கவர்ந்து இழுத்து விடலாம் என்றும், இதன் மூலம் விடுதலைப் புலிகளைத் தமிழ் மக்களிடமிருந்து அந்நியப்படுத்திவிடலாம் என்றும் அரசாங்கம் தப்புக் கணக்குப் போட்டது. சிங்கள மேலாதிக்கவாதத்தின் நயவஞ்சக அரசியல்பற்றிக் கசப்பான வரலாற்று அனுபவங்களைப் பெற்றிருந்த எமது மக்கள் சந்திரிகாவின் தீர்வுத் திட்டத்தில் நம்பிக்கை வைக்கவில்லை. சந்திரிகா உறுதியளித்த நிரந்தரமான அமைதியிலும் அவர்களுக்கு நம்பிக்கை இருக்கவில்லை. ஒரு உண்மை மட்டும் எமது மக்களுக்கு நிச்சயமாகப் புலப்பட்டது. அதாவது, பேரழிவுகளை உண்டுபண்ணும் கொடிய யுத்தம் ஒன்று தம்மீது திணிக்கப்படவிருக்கிறது என்ற யதார்த்தத்தை அவர்கள் உணர்ந்து கொண்டனர்.

அமைதியை நிலைநாட்டப் போர் அவசியம் என்ற தனது விசித்திரமான கொள்கைக்கு சர்வதேசச் சமூகத்திடமிருந்து நிதி உதவியும் அரசியல் ஆதரவும் பெற்றுக் கொண்ட குமாரதுங்கா அரசு, பிரமாண்டமான அளவில் போர் ஆயத்தங்களைச் செய்தது. முப்படைத் தளபதிகளின் விருப்புக்கு ஏற்ப, பெரும் தொகையில் பணத்தைக் கொட்டி, உலகெங்குமிருந்து நவீன அயுதங்கள் பெறப்பட்டன. பலாலி இராணுவப் பெரும் தளத்தில் பெருமளவில் படைகள் குவிக்கப்பட்டன. இலங்கைத் தீவு அடங்கிலுமிருந்து ஐம்பதாயிரம் துருப்புகள் அணிதிரட்டப்பட்டன. யாழ்ப்பாணம் மீதான பாரிய படையெடுப்பு, பெரும் வன்முறைப் புயலாக, கோரமான அழிவுகளுடன் கட்டவிழ்ந்தது. யாழ்ப்பாணப் பேச்சுக்களின்போது விடுதலைப் புலிகளின் தலைமை சரியாகச் சந்தேகித்த அரசின் அந்தரங்க இராணுவத் திட்டம், நிதர்சன வடிவம் எடுத்து, போர் அரக்கனாக எமது மக்களைத் தீண்டியது. ஒரு ஆக்கிரமிப்புப் போருக்கான முன்னேற்பாடுகளைச் செய்யும் அரசியல் நாடகமாகவே சந்திரிகா அரசு யாழ்ப்பாணப் பேச்சுக்களை அரங்கேற்றியது என்பது இன்று உலகறிந்த உண்மையாகிவிட்டது.

# அத்தியாயம் V

# புலிகளின் போரியல் வளர்ச்சியும் நோர்வேயின் சமாதான முயற்சியும்

## முல்லைத்தீவுச் சமர்

சூரியக் கதிர் (ரிவி ரச) என்ற குறியீட்டுப் பெயருடன், பிரமாண்டமான அளவில் ஒரு படையெடுப்பை நிகழ்த்தி யாழ்ப்பாணக் குடாநாட்டின் வலிகாமப் பிரதேசத்தைக் கைப்பற்றிய போது சிங்கள இராணுவத்திற்கு மிகவும் தலை குனிவான பெரிய ஏமாற்றமே காத்திருந்தது. ஆக்கிரமிக்கப்பட்ட தமிழ் மண்ணிலும் அதன் தலைநகரான யாழ்ப்பாணத்திலும் பொது சனங்கள் எவருமே இருக்கவில்லை. சன சஞ்சாரமற்ற ஒரு பேய் நகரத்தையும் வெறிச்சோடிய கிராமங்களையும் கொண்ட ஒரு சூன்யப் பிரதேசத்தையே சிங்கள இராணுவம் கைப்பற்ற முடிந்தது. விடுதலைப் புலிகளின் அறிவுறுத்தலுக்குச் செவிசாய்த்து, வலிகாமத்தின் ஒட்டுமொத்தச் சனத் தொகையாகிய ஐந்து இலட்சம் மக்களும் தென்மராட்சிக்குப் புலம்பெயர்ந்தனர். ஒரு குறுகிய கால இடைவெளிக்குள் பேரவலங்களை அனுபவித்தவாறு வலிகாம மக்கள் சன சமுத்திரமாக இடம்பெயர்ந்து செல்வார்களெனச் சந்திரிகாவின் அரசும் அவரது ஆக்கிரமிப்புப் படைகளும் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. விடுதலைப் புலிகளின் பிடியிலிருந்து யாழ்ப்பாண மக்களை விடுதலை செய்யும் நோக்குடனேயே யாழ்ப்பாணம் மீதான படையெடுப்பு நடைபெறுவதாக உலகடங்கிலும் சிறீலங்கா அரசு பரப்புரை செய்தது. ஆனால் யாழ்ப்பாண நகரவாசிகள் உட்பட வலிகாமத்தின் ஒட்டு மொத்தமான சனத்தொகையும் சிங்கள் ஆக்கிரமிப்பாளரின் பிடிக்குள் சிக்க விரும்பாது விடுதலைப் புலிகளுடன் சேர்ந்து தென்மராட்சிக்கு இடம்பெயர்ந்தது சிங்களப் பேரினவாதிகளைத்

தலைகுனிய வைத்தது.

சிங்கள ஆக்கிரமிப்பு இராணுவம் அடுத்ததாகத் தென்மராட்சி மீது படையெடுப்பை நிகழ்த்தும் என்பது விடுதலைப் புலிகளின் தலைமைக்கு நன்கு தெரியும். சிங்கள இராணுவத்துடன் தென்மராட்சியில் மோதுவதைத் தலைவர் பிரபாகரன் விரும்பவில்லை. அகதிகளாக இடம்பெயர்ந்துள்ள பெருந்திரளான மக்களுக்கு அது பேராபத்தாக முடியும். அத்துடன் பிரபாகரனுக்குத் தூர நோக்குடைய எதிர்காலப் போரியல் திட்டங்களும் இருந்தன. வன்னியை மையத் தளமாகக் கொண்டே எதிர்காலச் சுதந்திரப் போர் அமைய வேண்டுமெனக் கருதிய அவர், தந்திரோபாயப் பின்வாங்கலாகத் தனது படையணிகளை வன்னி நோக்கி நகர்த்தினார்.

வன்னி மாநிலம் தனக்கே உரித்தான சிறப்புமிகு வரலாற்றைக் கொண்டது. வணங்கா முடிகளான வன்னி மன்னர்கள் ஆட்சி புரிந்த வீர மண் அது. வளமான நிலங்களும், நீர் தேங்கும் குளங்களும், அடர்ந்த பெரும் காடுகளும் நிறைந்த வன்னி நாடு வடதமிழீழத்தின் இதய பூமியாக விளங்கி வருகிறது. பிரபாகரனின் தலைமையில் புலிப் படை வீரர்கள் பயின்று வளர்ந்த மண்ணும் இதுதான். உலகத்தின் மிகப் பெரிய இராணுவம் ஒன்றை விடுதலைப் புலிகள் எதிர்த்து நின்று வென்றதும் இங்குதான். காட்டுப் புறக் கெரில்லாப் போருக்கும் சரி, மரபு வழிப் பெரும் சமர்களுக்கும் சரி, இந்த மண், தமிழரின் விடுதலைப் போருக்கு உகந்த மண் என்பது பிரபாகரனுக்கு நன்கு தெரியும். புவியியல் அமைப்பைப் பொறுத்த வரை, யாழ்ப்பாணக் குடாநாட்டையும் தென்தமிழீழப் பிரதேசத்தையும் விட, தரை வழிப் போருக்குத் தகுந்த இடம் வன்னி என்பதை அவர் நன்கறிவார். ஆகவேதான், வன்னி மாநிலத்தில் நிலைகொண்டு நின்று, அந்த நிலத்தைப் பாதுகாத்து, அங்கு மையமான ஒரு பெரும் தளத்தை கட்டி எழுப்பத் திட்டமிட்டார் பிரபாகரன்.

1995ஆம் ஆண்டின் கடைசிப் பகுதியில் வன்னிக்கு இடம் மாறியதிலிருந்து, தனது படைத்துறையைப் பலப்படுத்துவதில் விடுதலைப் புலிகள் இயக்கம் மும்முரமாகச் செயற்பட்டது. விடுதலைப் புலிகள் அமைப்பு யாழ்ப்பாணச் சமரில் தோல்வியடைந்து சிதைந்து விட்டது எனச் சந்திரிகா அரசு பரப்புரை செய்துவந்த வேளையில், வன்னியில் பலம் பொருந்திய ஒரு தேசிய விடுதலை இராணுவத்தைக் கட்டி எழுப்பும்

பணியில் வெகு தீவிரமாக உழைத்து வந்தார் பிரபாகரன். இந்தக் குறிக்கோளை அடைவதற்குப் பரந்த அளவில் ஆட்சேர்ப்பும் நடைபெற்றது. புதிய படையணிகளை நிறுவி, அவற்றை விரிவுபடுத்தியதோடு, போர்ப் பயிற்சித் திட்டங்களும் மும்முரமாக முடுக்கி விடப்பட்டன. 1996 ஜுலை மாதம் வன்னியிலுள்ள ஒரு பாரிய சிங்களப் படைத் தளம் மீது தாக்குதலை நடத்துவதற்குப் பிரபாகரன் திட்டமிட்டார்.

அப்பொழுது நானும் எனது மனைவி அடேலும் கிளிநொச்சியிலிருந்து பத்து மைல் தொலைவிலுள்ள இராமநாதபுரம் என்ற கிராமத்தில் வசித்து வந்தோம். ஜுலை மாதம் நடுப் பகுதியில் ஒரு நாள், அதிகாலையில் எனது வீட்டுக்கு வருகை தந்தார் திரு. பிரபாகரன். அவர் மிகவும் களைத்துப் போய் இருப்பதையும் அவரது கண்கள் சிவந்து இருப்பதையும் அவதானித்தேன். தூக்கமற்ற பல இரவுகளைத் தனது தளபதிகளுடன் கழித்து வருவதாகச் சொன்னார். பெரியதொரு வலிந்து தாக்கும் போர் நடவடிக்கையைத் திட்டமிட்டு, அதனைச் செயற்படுத்தும் நுணுக்கங்கள் பற்றித் தளபதிகளுக்கு விளங்கப்படுத்தி வருவதாகச் சொன்னார். வழமையாகவே தாக்குதல் விபரங்கள் பற்றி நான் அவரிடம் கேட்டறிந்து கொள்வதில்லை. தாக்குதல் நடவடிக்கைகள் முடிவடைந்ததும் முழு விபரங்களுடனும் பிரபாகரன் என்னிடம் வருவார். தாக்குதல் சம்பவங்களைப் பத்திரிகை அறிக்கையாகத் தமிழிலும் ஆங்கிலத்திலும் தயாரிப்பது என்னுடைய பொறுப்பாக இருந்தது. எந்த இராணுவ முகாம், எப்பொழுது தாக்குதலுக்கு ஆளாகப் போகின்றது என அவர் சொல்லவுமில்லை. நான் கேட்கவுமில்லை. நடைபெறவிருக்கும் தாக்குதல் பெரும் திருப்பத்தை ஏற்படுத்தும் என்று மட்டும் சொன்னார். ஆயினும் முல்லைத்தீவுப் பெரும் தளமே விடுதலைப் புலிகளின் தாக்குதலுக்கு இலக்காகப் போகின்றது என்பதை வேறு வழிகளில் அறிந்து கொண்டேன்.

வேவு நடவடிக்கையின் மூலம் பெறப்படும் தகவல்களின் அடிப்படையில்தான் எதிரியின் இராணுவ இலக்கு ஒன்று மீது தாக்குதல் திட்டத்தைப் பிரபாகரன் வகுப்பது வழக்கம். ஆழம் தெரியாது காலை வைக்கக் கூடாது என்ற பழமொழிக்கு ஒப்ப எதிரியின் பலத்தையும் பலவீனத்தையும் நன்கறிந்தே தாக்குதலில் இறங்க வேண்டும் என்பதில் அவர் மிகவும் கண்டிப்பாக இருந்தார். இதனால் வேவு நடவடிக்கைகளுக்கு

அவர் முக்கியத்துவம் கொடுத்தார். ஒரு படைத் தளத்தின் புவியியற் கட்டமைப்பு, பாதுகாப்பு வேலிகள், காவலரணங்கள், கண்ணிவெடிப் பகுதிகள், படைத் தளத்தின் உட்கட்டமைப்பு, எதிரியின் ஆட்பலம், ஆயுத பலம், பீரங்கி, மோட்டார்த் தளங்கள் - இப்படியாகச் சகல தகவல்களையும் பெற்றதன் பின்னரே தாக்குதல் திட்டத்தை நெறிப்படுத்துவார் பிரபாகரன். முல்லைத்தீவுப் பெரும் தளம் மீது கிட்டத்தட்ட ஆறு மாதங்கள் வரை வேவு பார்க்கப்பட்டது. ஆபத்துகள் நிறைந்த இந்த வேவு நடவடிக்கைக்குக் கேணல் தீபன் பொறுப்பாக இருந்தார். அச்சொட்டான வேவுத் தகவல்களின் அடிப்படையில் மிகவும் நுட்பமாக நெறிப்படுத்தப்பட்ட தாக்குதல் திட்டத்தைத் தயாரித்து முடித்தார் பிரபாகரன். விடுதலைப் புலிகளின் போரியல் வரலாற்றில் பெரும் திருப்பத்தை ஏற்படுத்திய முல்லைத்தீவுச் சமருக்கான நாளும் குறிக்கப்பட்டது.

முல்லைத்தீவுப் படைத்தளம் எட்டுச் சதுரக் கிலோமீட்டர் பரப்பளவைக் கொண்டது. கடலோரம் அமையப் பெற்றிருந்த முல்லைத்தீவு நகரையும் அதன் சுற்றுப்புறக் கிராமங்களையும் உள்ளடக்கியதாக விஸ்தரிக்கப்பட்டிருந்த இப் பாரிய படைத்தளம் மிகவும் இறுக்கமான பாதுகாப்பைக் கொண்டிருந்தது. இயற்கைச் சூழலும் படைத் தளத்தின் பாதுகாப்புக்கு வலுச்சேர்த்தது. ஒருபுறம் இந்து மாகடல். மறுபுறம் நந்திக் கடல். இன்னொரு புறத்தில் வட்டவாகல் ஆறு. இவ்விதம் கடலும், நீரேரியும், ஆறுமாக மூன்றுபுறமும் இயற்கையின் பாதுகாப்பும், ஒரு புறம் மட்டும் தரையுமாக இப் படை முகாம் அமையப் பெற்றிருந்தது. முகாமின் வெளிப் பாதுகாப்பு வேலி பத்துக் கிலோமீட்டர் சுற்றளவைக் கொண்டது. அப் பாதுகாப்பு வேலி உறுதியான காவல் அரண்களாலும் கண்ணிவெடித் திடல்களாலும் பலம்பெற்று இருந்தது. வெளிப்பாதுகாப்பு வலயத்தின் மையப் பகுதியில், கடலோரமாக, மூன்று கிலோமீட்டர் சுற்றளவைக் கொண்ட உட் பாதுகாப்பு வலயம் ஒன்றும் அமையப் பெற்றிருந்தது. இது இரும்புக் கோட்டை போன்ற அதி உயர் பாதுகாப்பைக் கொண்டது. தாக்குதல் நிகழ்ந்த அன்றைய தினம், இரண்டு 'பற்றாலியன்' (Battalion) படையினரும் பீரங்கி, மோட்டார் அணிகளுமாக மொத்தம் ஆயிரத்து அறுநூறு (1600) துருப்புக்கள் படை முகாமில் இருந்தனர்.

1996 ஜூலை 18ஆம் நாள் அதிகாலை முல்லைத்தீவுப்

பெரும் தளம் மீதான தாக்குதல் ஆரம்பமானது. மிக உக்கிரமானதாக வெடித்த இப்பெரும் சமரில், இரு தரப்புச் சுடு கலன்களின் வெடிச் சக்தியால் முல்லைத்தீவுப் பிரதேசமே அதிர்ந்து கொண்டிருந்தது. சண்டை தொடங்கிய சில மணி நேரத்திற்குள் எட்டு முனைகளில் வெளிப் பாதுகாப்பு வேலியை உடைத்துக் கொண்டு புலிப் படை அணிகள் முகாமிற்குள் நுழைந்தன. கடலோரமான இரு முனைகளில் காவலரண் வரிசையை உடைத்தெறியும் பிரபாகரனின் புதுமையான அதிரடித் தாக்குதல் திட்டம் கடற்புலிகளிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. மயிர்க் கூச்செறியும் இந்த வீரச் சாதனையை வெற்றிகரமாக நிறைவேற்றி முடித்தனர் கடற்புலிகள்.

முல்லைத்தீவுப் படைத் தளத்திற்குப் பேராபத்து எழுந்துள்ளது என்பதை அறிந்ததும், வெற்றிலைக்கேணியில் இருந்தும் பின்பு திருகோணமலையிலிருந்தும் சிறீலங்காக் கடற்படை அணிகள் பொருது களத்துக்கு விரைந்தன. 'பராக்கிரம' என்ற தலைமைப் போர்க் கப்பலுடன், ஏழு 'டோரா' அதிவேகச் சண்டைப் படகுகள், இரண்டு தரையிறங்கு கலங்கள் உட்பட மொத்தம் 15இற்கும் மேற்பட்ட கடற்கலங்களைக் கடற்படை களத்திற்கு அனுப்பி வைத்தது. கடல் வழியான உதவிகளையும் தரையிறக்கத்தையும் தடுத்து நிறுத்தவும் பிரபாகரன் திட்டம் வரைந்திருந்தார். இதன்படி, கரையிலிருந்து நான்கு கிலோமீட்டர் தொலைவிலும், ஐந்து கிலோமீட்டர் அகலத்திலுமாக வியூகம் வகுத்து, அக் கடற்பரப்பில் கடற்புலிக் கலங்கள் சுற்றுக் காவலில் விடப்பட்டிருந்தன. இதனால் கடற்புலிகளின் பாதுகாப்பு வலயத்தை உடைத்து, உதவிப் படைகளைத் தரையிறக்கச் சிங்களக் கடற்படையினர் மேற்கொண்ட பகீரத முயற்சிகள் பலனளிக்கவில்லை. குண்டுவீச்சு விமானங்கள், போர் உலங்குவானூர்திகளின் தாக்குதல்களுக்கு முகம் கொடுத்து, கடற்படையின் பீரங்கிப் படகுகளுடன் போராடி, கடல் வழியாகத் துருப்புக்களைத் தரையிறக்கும் முயற்சிகளை முறியடித்தனர் கடற்புலிகள்.

முல்லைத்தீவுப் பெருந் தளத்தின் வெளிப்புறக் காப்பு வியூகத்தை உடைத்தெறிந்து, தரை வழியாகவும் கடல் வழியாகவும் உட்புகுந்த விடுதலைப் புலிகளின் படையணிகள் ஆங்காங்கே அமையப் பெற்றிருந்த உப-முகாம்களையும் உட்காவலரண்களையும் தாக்கி அழித்தனர். காலை 9:00 மணியளவில் சரியாக எட்டு மணி நேரமாக நிகழ்ந்த பயங்கரச்

சண்டையின் பின்பு, பிரதான முகாம் பகுதிக்குள் புயலாக நுழைந்த புலி வீரர்கள் தளத்தின் கட்டளைப் பணிமனை, பீரங்கி, மோட்டார் ஏவு தளங்கள், தொலைத்தொடர்பு நிலையம், போர்த் தளபாடக் களஞ்சியம் ஆகியனவற்றைக் கைப்பற்றினர். முகாமின் மையமாக அமைந்த கட்டிடப் பகுதிக்குள் எஞ்சிய சிங்களப் படைகள் முடக்கப்பட்டிருந்தன. அத்துடன் தாக்குதல் தற்காலிகமாக நிறுத்தப்பட்டது. காயமடைந்தவர்களுக்கு சிகிச்சை அளிக்கவும், களைப்படைந்த தாக்குதல் அணிகளை மீளமைக்கவும் சிறு கால இடைவெளியை ஏற்படுத்திக் கொடுத்தார் பிரபாகரன்.

படைத் தளத்தினுள் நிகழ்ந்த சண்டை தற்காலிகமாக ஓய்வடைந்த வேளையில் பிற்பகல் இரண்டு மணியளவில், முகாமுக்கு தென்புறக் கரையோரமாக மூன்று கிலோ மீட்டர் தொலைவில் அமையப் பெற்றிருந்த சிலாவத்தைப் பகுதியில், வான் வழிமூலம் மீட்புப் படைகள் தரையிறக்கப்பட்டன. கடற்கரை மணற்பரப்பில் 300 மீட்டர் விட்ட நிலப் பரப்பில் எம்.ஐ.17 ராட்சத உலங்குவானூர்திகள் மூலம் சிறப்பு அதிரடிப் படையினர் தரையிறக்கப்பட்டனர். ஒரு புதிய போர் முனை திறக்கப்பட்டது. இந்த மீட்புப் போர் நடவடிக்கைக்கு 'திரிவிட பஹர' (மும்முனைத் தாக்குதல்) எனப் பெயரிடப்பட்டது. மீட்புப் படைகள் இறங்கிய பகுதியைச் சூழ்ந்து கொண்ட புலிகளின் படையணிகள், எதிரியை நகரவிடாது முடக்கி வைத்துக் கடும் சண்டையில் ஈடுபட்டன. மீட்புப் படைகள் மீளமுடியாத ஒரு மரணப் பொறிக்குள் சிக்கிக் கொண்டன. தரையிறங்கிய படையினரை இறுக்கமான முற்றுகைக்குள் சிக்க வைத்த பின்னர், அன்றிரவே படைமுகாம் சமர் தீவிரமாக முடுக்கி விடப்பட்டது.

ஜுலை 18ஆம் நாள் நள்ளிரவுடன் முல்லைத்தீவுப் பெருந்தளம் முழுமையாகப் புலிகளிடம் வீழ்ச்சியடைந்தது. எனினும் கடல் வழியாலும், வான் வழியாலும் மீட்புப் படைகளைத் தொடர்ந்து அனுப்பி வைக்கும் முயற்சிகளைச் சிறீலங்காவின் படைத்துறைத் தலைமை கைவிடவில்லை. 20, 21, 22, 25ஆம் நாட்களில், கடல் வழியாகவும் வான் வழியாலும் மீட்புப் படைகளைத் தரையிறக்கும் முயற்சிகள் முறியடிக்கப்பட்டன. தொடர்ச்சியாக நிகழ்ந்த கடற்சமரில், சிறீலங்காக் கடற்படையின் இரண்டு பீரங்கிப் படகுகள் மூழ்கடிக்கப்பட்டன. கடற்படைக் கலங்கள் பல

சேதமாக்கப்பட்டன. தரை இறங்கிய மீட்புப் படைகளின் கதி படுமோசமாகியது. புலிகளின் போர் அணிகளால் சுற்றி வளைக்கப்பட்டு மோட்டார்கள், இயந்திரத் துப்பாக்கிகளால் உக்கிரமான தாக்குதலுக்கு ஆளாகி வந்ததால் இறக்கப்பட்ட துருப்புக்களுக்குப் பலத்த உயிர்ச்சேதம் ஏற்பட்டது. மீட்புப் படைகளை மீட்டெடுப்பதே, சிங்களப் படைத் தலைமைக்கு பெரும் சவாலாக அமைந்தது. இறுதியாக, ஜுலை 26ஆம் நாளன்று, புலிகளின் கடுமையான எதிர்த் தாக்குதலுக்கு மத்தியில் மீட்புப் படையணிகள் அவசர அவசரமாக மீட்டெடுக்கப்பட்டன. அத்துடன் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த முல்லைத்தீவுச் சமர் முடிவுக்கு வந்தது. முல்லைத்தீவுச் சமருக்கு 'ஓயாத அலைகள் I' எனப் பெயரிட்டார் பிரபாகரன். இத் தாக்குதல் நடவடிக்கையின் பிரதான கட்டளைத் தளபதியாகக் கேணல் பால்ராஜும், தாக்குதல் ஒருங்கிணைப்புத் தளபதியாகக் கேணல் தீபனும் பணியாற்றினர். சார்ள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி, மகளிர் படைப் பிரிவு, கடற் புலிகள் அணி ஆகியனவற்றுடன் வேறு அணிகளும் இச் சமரில் பங்குபற்றின.

முல்லைத்தீவுச் சமரில் சிறீலங்கா இராணுவம் பாரிய உயிரிழப்பைச் சந்தித்தது. படை முகாம் சண்டையில் 1200 இராணுவத்தினரும், தரையிறக்கப் பகுதியில் 300 பேருமாக, மொத்தம் ஆயிரத்து ஐநூறு (1500) படையினர் முல்லைத்தீவுச் சமரில் களப் பலியாகினர். எமது தரப்பில், ஆண்களும் பெண்களுமாக 315 போராளிகள் உயிரிழந்தனர். இச் சமரில், கனரக பீரங்கிகள் உட்படப் பெருந்தொகையான ஆயுதங்களை விடுதலைப் புலிகள் கைப்பற்றினர். இரண்டு 122 எம்.எம். பீரங்கிகள், நான்கு 120 எம்.எம். மோட்டார்கள், 1000 பீரங்கி எறிகணைகள், 1000 சிறு ரக இயந்திரத் துப்பாக்கிகள், பல லட்சம் வெடிபொருட்கள் எனப் பெருந்தொகை ஆயுதங்கள் புலிகள் வசமாகின. விடுதலைப் புலிகளிடம் சிக்கிய ஆயுதத் தளபாடங்களின் பெறுமதி இருநூறு கோடி ரூபாவுக்கு அதிகமாகும் என அரச தரப்பு இராணுவ ஆய்வாளர் ஒருவர் மதிப்பீடு செய்தார். முல்லைத்தீவுச் சமரில் சோகமான அம்சம் என்னவென்றால், களத்தில் பலியாகிய சிங்களப் படையினரின் உடல்களைப் பொறுப்பெடுக்கச் சந்திரிகா அரசு மறுத்தமையாகும். இராணுவத்தினரின் உடல்களை ஒப்படைப்பதற்குச் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கத்தினர் மேற்கொண்ட பகீரத முயற்சிகள் பலனளிக்கவில்லை. இறுதியில்,

அழுகாத நிலையிலிருந்த ஐம்பது உடல்களை மட்டும் வவுனியாவில் வைத்து இராணுவம் பொறுப்பெடுத்தது. அழுகிய நிலையிலிருந்த ஆயிரத்திற்கும் அதிகமான இராணுவத்தினரின் உடல்கள், முறிகண்டிக் காட்டுப் புறத்தில் மலையாகக் குவிக்கப்பட்டு, இராணுவ மரியாதை அளிக்கப்பட்ட பின்னர், தகனம் செய்யப்பட்டன.

இரும்புக் கோட்டை போன்ற இறுக்கமான பாதுகாப்புடைய முல்லைத்தீவுப் பெரும்தளம் ஒரு நாட் சமரில் தாக்கி அழிக்கப்பட்டமை; என்றுமில்லா பெரும் தொகையாக ஆயிரத்து ஐநூறு படையினர் கொல்லப்பட்டமை; முதற் தடவையாக கனரகப் பீரங்கிகள் விடுதலைப் புலிகளிடம் சிக்கியமை; முல்லைத்தீவுப் பெருநிலப்பரப்பும் கேந்திர முக்கியத்துவமான கடற்பரப்பும் தமிழரிடம் வீழ்ந்தமை ஆகிய இந்தப் பெரும் பின்னடைவுகள் சந்திரிகா அரசுக்கு ஒரு புறம் திகைப்பையும் மறுபுறம் தலைகுனிவையும் ஏற்படுத்தின. யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றிப் புலிப் படையின் முதுகெலும்பை முறித்துவிட்டதாகப் பறைசாற்றிப் பெருமிதம் கொண்டாடிவந்த அரசாங்கத்திற்கு, முல்லைத்தீவில் விடுதலைப் புலிகள் ஈட்டிய மகத்தான இராணுவச் சாதனை பேரிடியாக விழுந்தது. இனப் பிரச்சினையின் தீர்வுக்கு இராணுவ அணுகுமுறையை வலியுறுத்தி நின்ற 'சமாதானத்திற்கான யுத்தம்' என்ற சந்திரிகாவின் கோட்பாடும் அர்த்தமிழந்து அடிபட்டுப் போனது. முல்லைத்தீவில் சந்தித்த பேரிழப்பினால் சிங்கள ஆயுதப் படைகளின் மனவுறுதி ஆட்டம் கண்டது. உயிரிழப்பு விபரங்கள் தெரிய வந்ததும் சிங்கள மக்கள் திகிலடைந்தனர்.

மனமுடைந்த மக்களையும், உறுதி தளர்ந்த படைகளையும் திசை திருப்பித் திருப்திப்படுத்தும் நோக்குடன் சந்திரிகாவின் அரசாங்கம், திடீரென, முல்லைத்தீவுச் சமர் முடிவுக்கு வந்த அன்றைய நாளே புதிய போர் முனையைத் திறந்தது. ஜூலை 26ஆம் நாளன்று, தரையிறங்கிய மீட்புப் படைகளை விரட்டியடித்து, முல்லைத்தீவுச் சமருக்கு முடிவுகட்டிவிட்டு, படைமுகாமில் கைப்பற்றிய ஆயுதத் தளபாடங்களை எமது போர் அணிகள் அகற்றிக் கொண்டிருந்த சந்தர்ப்பத்தைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திய சிங்கள அரசு புதிய படை நடவடிக்கையை முடுக்கிவிட்டது. ஆனையிறவுப் பெரும் தளத்திலிருந்து மின்னல் வேகத்தில் முன்னேறிய சிங்களப் படையணிகள் ஒரு கிலோ மீட்டர் தொலைவிலிருந்த பரந்தன்

பகுதியைக் கைப்பற்றின. 'சத் ஜெய' எனப் பெயரிடப்பட்ட இப் படை நடவடிக்கைக்கு முக்கியத்துவம் கொடுத்து, பரந்தனின் வீழ்ச்சியை அபாரமான இராணுவச் சாதனையாகப் பரப்புரை செய்தது அரசாங்கம். பரந்தனைக் கைப்பற்றிய மறுவாரமே, 1996 ஆகஸ்ட் நான்காம் நாளன்று 'சத் ஜெய 2' என்ற பெயரில், சிங்கள இராணுவம் கிளிநொச்சி மீது படையெடுப்பை நிகழ்த்தியது. கிளிநொச்சியை நோக்கி முன்னேறிய இராணுவத்தினரை எதிர்த்து விடுதலைப் புலிகளின் படையணிகள் மூர்க்கமாகப் போரிட்டன. எமது போராளிகளின் கடும் எதிர்த் தாக்குதல் காரணமாக, இராணுவத்தினரின் தந்திரோபாயக் குறிக்கோள் முழுமையாக நிறைவுபெறவில்லை. கிளிநொச்சி நகரத்தின் ஒரு பகுதியை மட்டுமே இராணுவம் கைப்பற்ற முடிந்தது. முல்லைத்தீவில் எதிர்கொண்ட பேரழிவுக்குப் பழிவாங்கும் நோக்கத்துடன், பல நாட்களாகத் தொடர்ந்த கிளிநொச்சிச் சமரின்போது, பீரங்கிகளாலும் விமானங்களாலும் குண்டுமாரி பொழிந்து, கிளிநொச்சி நகரையும் அதன் சுற்றுப் புறங்களையும் சிங்களப் படைகள் தரைமட்டமாக்கின.

முல்லைத்தீவுப் படைமுகாமை இழந்து, கிளிநொச்சியில் முன்னேற முடியாது முடக்கப்பட்டபோதும், சிறீலங்காவின் படைத்துறைத் தலைமை தனது ஆக்கிரமிப்புப் போர்த் திட்டங்களைக் கைவிடப் போவதில்லை என்பது புலிகளுக்கு நன்கு புலனாகியது. 'அமைதிக்கான போர்' என்ற அசட்டுத்தனமான போரியல் தந்திரத்தைச் சந்திரிகாவோ அன்றி போர்வெறி கொண்ட அவரது மாமனாரோ இலகுவில் விட்டுவிடப் போவதில்லை என்பதும் அவர்களுக்குத் தெரியும்.

விடுதலைப் புலிகளைத் தேடி அழிக்கும் நோக்குடன் வன்னிப் பெருநிலப் பரப்பில், விரைவில் பொருது களங்களைச் சிங்கள அரசு திறந்து விடுமெனப் பிரபாகரன் சரியாகவே எடைபோட்டார். மரபுவழிப் போர் முறையில் பயிற்சியும் தேர்ச்சியும் பெற்ற பலம்பொருந்திய விடுதலை இராணுவமாகப் புலிப் படையைக் கட்டி எழுப்புவதன் மூலமே எதிரியின் எதிர்காலப் படையெடுப்புக்களை முறியடிக்க முடியுமெனவும் அவர் கருதினார். சிங்கள இராணுவத்தின் பெரும் படைத் தளங்களை வலிந்து தாக்கி அழிப்பதற்கும் மரபு வழிப் போரியல் வடிவம் இன்றியமையாதது என்பதும் அவரது அபிப்பிராயம்.

விடுதலைப் புலிகள் இயக்கத்தின் போரியல் வளர்ச்சியில்

முல்லைத்தீவுச் சமர் ஒரு வரலாற்றுத் திருப்பு முனையாக அமைந்தது. இந்தச் சமரில் ஈட்டிய வெற்றியானது புவியியல் கேந்திர அனுகூலங்களுடன் கடற் புலிகளின் அபாரமான வளர்ச்சிக்கும், மரபுவழி இராணுவக் கட்டமைப்பாகப் புலிகளின் தரைப் படையணிகளது விரிவாக்கத்திற்கும் வழிகோலியது. முல்லைப் படைமுகாமில் கைப்பற்றிய கனரக ஆயுதத் தளபாடங்களுடன் பீரங்கி, மோட்டார் படைப் பிரிவுகளைக் கட்டியெழுப்பினார் பிரபாகரன். விமான எதிர்ப்புப் படையணி, கவச எதிர்ப்புப் படையணி போன்ற புதிய படைப் பிரிவுகள் உருவாக்கப்பட்டு, விரிவாக்கப்பட்டன. தகவல் தொடர்பு, மருத்துவம், விநியோகம், போக்குவரத்துப் பிரிவுகளும் விரிவாக்கம் கண்டன. போர் அறிவியல் நுட்பம் பயின்ற, நவீன ஆயுதங்கள் தரித்த சிறப்புப் படைகளாகத் தாக்குதல் அணிகள் நவீனமயம் பெற்றன. ஒரு வலுமிக்க மரபுவழி இராணுவமாகப் புலிப் படையை வளர்த்தெடுத்த பிரபாகரன். தனது போர் அணிகளைக் கடும் பயிற்சியிற் புடம்போட்டு எடுத்தார். தென்னிலங்கையில் போர்வெறி பிடித்த பேரினவாத ஆட்சிப்பீடம் தமிழரின் சுதந்திர இயக்கத்தை பூண்டோடு அழிக்கத் திட்டம் தீட்டிய வேளையில், வன்னியில் தமிழரின் விடுதலை இராணுவம் வரலாறு காணாத வளர்ச்சிப் போக்கில் வீறு நடை போட்டது.

## 'ஜெயசுக்குறுச்' சமர்: மரணத்தின் நெடுஞ்சாலை

விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடம் எதிர்பார்த்தது போலவே சந்திரிகாவின் அரசு வன்னியில் புதிய பொருது களங்களைத் திறந்தது. ஈழத் தமிழரின் எழுச்சி வடிவமான புலிகள் இயக்கத்தை அழித்து, தமிழரின் தாயக நிலங்களைச் சிங்கள அரசாட்சியின் கீழ் அடிமை கொள்ள வேண்டும் என்ற வெறியுடன் புதிய படையெடுப்புக்கள் முடுக்கிவிடப்பட்டன. இப் படை நடவடிக்கைகளில் வரலாற்று முக்கியத்துவம் பெற்றது 'ஜெயசுக்குறுச்' (வெற்றி நிச்சயம்) சமராகும். இரண்டாவது உலக யுத்தத்தின் பின்பு மிகவும் நீண்ட சமராக (Longest Battle) இராணுவ ஆய்வாளர்களால் கருதப்படும் இப் போர் நடவடிக்கை பதினெட்டு மாதங்கள் வரை நீடித்தது. ஜெயசுக்குறுச் சமரின் முழுப் பரிமாணங்களையும் விபரிப்பதானால் ஒரு பெரிய நூல் எழுதவேண்டி வரும். அது எமது நோக்கமல்ல. இங்கு


இந்து மாகடல்
வட்டவாகல்
அடர்ந்தகாடு
தோட்டம்
குளம்
நெடுஞ்சாலை
சாலை
முல்லைத்தீவுப்
படைமுகாம்
நந்திக்கடல்
சிலாவத்தை
தண்ணீரூற்று
முல்லைத்தீவுச் சமர்க்களம்



பரந்தன்
இந்து சமுத்திரம்
கிளிநொச்சி
மாவட்டம்
கிளிநொச்சி
புதுக்குடியிருப்பு
முல்லைத்தீவு
மாவட்டம்
முல்லைத்தீவு
முள்ளியவளை
ஒலுமடு
கறுப்பட்டைமுறிப்பு
ஒட்டுசுட்டான்
துணுக்காய்
மல்லாவி
வன்னிவிளான்குளம்
மாங்குளம்
கற்கிடங்கு
நெடுங்கேணி
கனகராயன் குளம்
நயினாமடு
மூன்றுமுறிப்பு
மன்னார்
மாவட்டம்
புளியங்குளம்
பாலமோட்டை
ஓமந்தை
மடு
வவுனியா
மாவட்டம்
வவுனியா
புகையிரதப்பாதை
நெடுஞ்சாலை
சாலை
தெரு
ஒற்றையடிப்பாதை
குளம் / நீர்த்தேக்கம்
N
0
10
20
30km
'ஜெயசுக்குறு' சமர்க்களம்



புகையிரதப்பாதை
நெடுஞ்சாலை
சாலை
தெரு
குளம் நீர்த்தேக்கம்
0
5
10
15km
பருத்தித்துறை
நாகர்கோயில்
கொடிகாமம்
மிருசுவில்
குடாரப்பு
இந்து மாகடல்
மாமுனை
எழுதுமட்டுவாள்
முகமாலை
இத்தாவில்
செம்பியன் பற்று
தாளையடி
பளை
மருதங்கேணி
ஆளியவளை
வெற்றிலைக்கேணி
இயக்கச்சி
கட்டைக்காடு
புலோப்பளை
கிளாலி நீரேரி
ஆனையிறவு
சுண்டிக்குளம்
பரந்தன்
சாலை
தர்மபுரம்
கிளிநொச்சி
விஸ்வமடு
புதுக்குடியிருப்பு
இரணைமடுக்குளம்
முறிகண்டி
ஆனையிறவுச் சமர்க்களம்

புகையிரதப்பாதை
நெடுஞ்சாலை
சாலை
குளம் / நீர்த்தேக்கம்
புலிகளின் பாதுகாப்பு எல்லை
சிறிலங்கா ராணுவத்தின் எல்லை
N

இந்து மாகடல்
நாகர்கோயில்
எழுதுமட்டுவாள் வடக்கு
குடாரப்பு
செம்பியன் பற்று
எழுதுமட்டுவால்
முகமாலை
அயநங்கை
முகமாலை
முகமாலை
இத்தாவில் குளம்
கோவில்காடு
நேரவில் குளம்
வேட்டைக்காடு
கிளாலி
இத்தாவில்
வேம்பத்துகேணி
கரடியன்காடு
1
2
கிளாலி நீரேரி

தீச்சுவாலை சமர்க்களம்

தரப்படுவது ஒரு சுருக்கமான வரலாற்றுப் பதிவாகும். ஜெயசுக்குறுச் சமரின் மூலோபாயக் குறிக்கோள் வவுனியாவிலிருந்து கிளிநொச்சி வரை, 70 கிலோ மீட்டர் நீட்சியுடைய, ஏ-9 நெடுஞ்சாலையைத் திறந்து, வடக்கையும் தெற்கையும் இணைப்பது என அரச தரப்பில் கூறப்பட்டது. எனினும் இப் படை நடவடிக்கையின் உண்மையான குறிக்கோள் வேறு. வன்னி மண்ணின் மார்பை இரண்டாகப் பிளந்து, விடுதலைப் புலிகளை நேரடி மோதலுக்கு வலிந்து இழுத்து, அவர்களது மையத் தளங்களை அழித்து, யாழ்ப்பாணப் படை முகாம்களுக்கு விநியோகப் பாதையை அமைத்து, தமிழரின் வரலாற்றுத் தாயகத்தைச் சிங்கள இராணுவத்தின் நிரந்தரக் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வருவதே இச் சமரின் இலக்கு. நாற்பதாயிரம் துருப்புகளைக் குவித்து, யாழ்ப்பாணக் குடாநாட்டைத் தனது இரும்புப் பிடிக்குள் இறுக்கி வைத்திருந்தது சிங்கள அரசு. இந்தப் பெரும் ஆக்கிரமிப்புப் படைக்கு, பெரும் செலவில், பெரும் சிரமத்துடன் கடல் வழியாகவும் வான் வழியாகவும் விநியோகம் வழங்கப்பட்டு வந்தது. முல்லைக் கடலில் கடற்புலிகளின் திடீர்த் தாக்குதல்களும், விமான எதிர்ப்புப் படைப் பிரிவின் ஏவுகணைத் தாக்குதல்களும் கடல் - வான் விநியோகத்திற்குப் பெரும் அச்சுறுத்தலாக எழுந்தன. எனவேதான் தரை வழிப் பாதை விநியோகம் அரசுக்கு அவசியத் தேவையாக எழுந்தது. எனவே, ஒருபுறம் வன்னியை ஊடறுத்துச் செல்லும் ஏ-9 நெடுஞ்சாலையைத் திறந்து தரை வழி விநியோகத்தை நிறுவுவதுடன், மறுபுறம் முன்னேறும் பாதையில், புலிகளையும் தீர்த்துக் கட்டலாமெனச் சிங்களப் படைத் தலைமை திட்டம் தீட்டியது. எனவே, கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த இந்த வன்னிப் பெரும் சமருக்குச் சந்திரிகா அரசு முக்கியத்துவம் வழங்கியதுடன், இப் போர் நடவடிக்கையை வெற்றிப் பாதையில் இட்டுச் செல்ல வேண்டுமென்ற உறுதிப்பாட்டுடன் பெரிய அளவில் பல மாதங்களாகப் போராயத்தங்களைச் செய்தது. இச் சமருக்காக, தென்னிலங்கையின் பல மாவட்டங்களில் இருந்தும், குறிப்பாகக் கிழக்கில் இருந்தும் படையணிகளைத் தருவித்து, இருபதாயிரம் துருப்புக்களைக் கொண்ட பெரியதொரு ஆக்கிரமிப்புப் படை திரட்டப்பட்டது. தரைப் படைக்கு வலுச் சேர்க்கப் பெருந்தொகையில் டாங்கிகள், கவச வாகனங்கள், பீரங்கிகள், கனரக ஆயுதங்கள் போன்றனவும் குவிக்கப்பட்டன.

சிங்கள - பௌத்த நாட்குறிப்பேட்டின்படி நற்சகுன நாளும் தெரிவாகிப் படையெடுப்புக்குத் திகதியும் குறிக்கப்பட்டது.

1997 மே மாதம் 13ஆம் நாளன்று ஜெயசுக்குறுச் சமர் ஆரம்பமானது. போர் விமானங்களும் பீரங்கிகளும் குண்டுமழை பொழிந்து முன்னரங்குகளைத் தாக்கி அழிக்க, டாங்கிகள் அனல் கக்கி முன்னேற, அதன் பின்னால் கவச வாகனங்களிலும் கால் நடையாகவும் வரிசை வரிசையாக ஆயுதம் தரித்த ஆக்கிரமிப்புத் துருப்புகள் வன்னி மண்ணை ஊடறுத்து இரு களமுனைகளில் முன்னேறின.

வவுனியாவிலிருந்து நொச்சிமோட்டை ஊடாக ஓமந்தை வரை நகர்ந்து அங்கிருந்து கிளிநொச்சி நோக்கி முன்னேறுவது ஒரு களமுனையின் இலக்கு. டொலர் - கென்ட் பண்ணைப் பகுதியூடாக முன்னேறி நெடுங்கேணியைக் கைப்பற்றி, அங்கிருந்து புளியங்குளம் வரை நகர்ந்து முதல் அணியுடன் இணைந்து கொள்வது இரண்டாவது களமுனையின் நோக்கு. பின்பு இரு களமுனைப் படைகளையும் இணைத்து, புலிகளின் தளங்களைத் தேடி அழித்தபடி கிளிநொச்சி வரை முன்னேறிச் செல்வதே ஜெயசுக்குறுவின் மூலோபாயக் குறிக்கோள். 45 மைல் தூரமுடைய கிளிநொச்சி வரையிலான இந் நெடுஞ்சாலையை நான்கு மாதங்களில், அதாவது மாரி மழை காலத்திற்கு முன்னராகக் கைப்பற்றி விடுவதே சிங்களப் படைத் தலைமையின் திட்டமாக இருந்தது.

இரு முனைகளிலிருந்தும் இராணுவத்தினர் வன்னியின் எல்லைப் பிரதேசத்தை ஊடுருவி முன்நகரத் தொடங்கியதும் விடுதலைப் புலிகளின் போர் அணிகள் மூர்க்கமான எதிர்த் தாக்குதலை மேற்கொண்டன. வன்னி மீதான படையெடுப்பை எதிர்பார்த்துக் காத்திருந்த பிரபாகரன் உடனடியாகவே பீரங்கி, மோட்டார் படைப் பிரிவுகளைக் களத்தில் இறக்கினார். புலிகளின் கடும் எதிர்ப்புக் காரணமாக சிங்கள ஆக்கிரமிப்புப் படைகளின் முன்னேறும் வேகம் குறைந்தது. இதுவே முதற் தடவையாக, சிறீலங்கா இராணுவம் புலிகளின் பீரங்கி எறிகணைகளுக்கு முகம் கொடுத்துப் போரிட நேரிட்டது. இதனால் அரச படைகளுக்கு உயிர்ச் சேதம் அதிகரித்தது. எல்லைப் புறக் கிராமங்களாகிய ஓமந்தையையும் நெடுங்கேணியையும் கைப்பற்றுவதற்கு இரண்டு வாரங்கள் வரை கடும் சமர் புரிய வேண்டியிருந்தது. இச்சண்டையில் 125 படையினர் கொல்லப்பட்டதுடன் 500 பேர் வரை காயமடைந்தனர். அத்துடன்

நான்கு டாங்கிகள் அழிக்கப்பட்டன. மிகவும் துல்லியமாக, அச்சொட்டாக நடத்தப்பட்ட புலிகளின் பீரங்கி, மோட்டார் தாக்குதல்களின் விளைவாக, படுகாயமடையும் படையினரின் விகிதாசாரம் நாளுக்கு நாள் உயர்ந்து வர நகர்ச்சி வேகமும் நாளுக்கு நாள் படிப்படியாகக் குறைந்தது.

வன்னியை ஆக்கிரமிக்கத் துணிந்த ஜெயசுக்குறுப் படைகளுக்கு ஒரு அதிர்ச்சி வைத்தியம் கொடுக்கத் திட்டமிட்டார் பிரபாகரன். இதன்படி, சிங்கள இராணுவம் சற்றிலும் எதிர்பாராத இடத்தில், ஒரு வலிந்து தாக்குதல் நடவடிக்கையை மேற்கொள்ளத் திட்டமிடப்பட்டது. வவுனியாவின் வாசலிலுள்ள தாண்டிக்குளத்தில் ஜெயசுக்குறுப் படைகளின் கட்டளைத் தலைமையகம் அமைந்திருந்தது. வன்னிப் பெருஞ் சமருக்குத் தேவையான வெடிமருந்துகளும், மருத்துவப் பொருட்களும், தாண்டிக்குளப் பகுதியில் மிகவும் பாதுகாப்பாகக் களஞ்சியப்படுத்தப்பட்டிருந்தன. இங்கிருந்த ஆயுதக் கிடங்குகளில் பல்லாயிரக்கணக்கில் பீரங்கி, மோட்டார் எறிகணைகள், டாங்கிக் குண்டுகள் குவிந்திருந்தன. இப் பகுதியிலேயே இராணுவ வாகனங்களும் எரிபொருட் குதங்களும் இருந்தன. ஆக்கிரமிப்பு இராணுவத்தின் ஆயுத வெடிச் சக்தியின் மையமாக இப் பகுதி விளங்கியது. இங்குதான் அதிர்ச்சியூட்டும் திடீர்த் தாக்குதலை நடத்தத் திட்டமிட்டார் பிரபாகரன்.

1997 ஜுன் மாதம் 10ஆம் நாள் நள்ளிரவு. தாண்டிக்குளம் வெளிப்பாதுகாப்பு வலையத்தை ஊடுருவி உட்புகுந்த புலிகளின் சிறப்பு அதிரடிப் படையணிகள் கட்டளைத் தலைமையகம் மீதும், ஆயுதக் களஞ்சியங்கள் மீதும் தாக்குதலைத் தொடுத்தன. வெடிமருந்துக் கிடங்குகள் தீப்பற்றி எரிமலையாக வெடித்தன. பல்லாயிரம் எறிகணைகளும், டாங்கிக் குண்டுகளும் வெடித்துச் சிதற, அப் பிரதேசமே தீப்பற்றி எரிந்தது. பல இராணுவ வாகனங்கள் எரிந்து சிதைந்தன. அங்குமிங்குமாகச் சிதறியோடிய இராணுவத்தினர் புலிகளின் ரவைகளுக்குப் பலியாகினர். 24 மணி நேரமாகத் தாண்டிக்குளத்தை நிலைகுலைய வைத்து, பேரழிவை ஏற்படுத்திய பின்னர் எமது படையணிகள் அங்கிருந்து விலகின. இத் தாக்குதலில் 400 படையினர் கொல்லப்பட்டனர். 570 பேர் காயமடைந்தனர். இரண்டு டாங்கிகளும் அழிக்கப்பட்டன. நொச்சிமோட்டைப் பாலமும் எமது வீரர்களால் குண்டு வைத்துத் தகர்க்கப்பட்டது. இச் சண்டையில் எமது தரப்பில் மூன்று கரும்புலிகள் உட்பட 85 போராளிகள்

வீரச்சாவடைந்தனர். வன்னி மண்ணில் ஆக்கிரமிப்புக் கால்பதித்த ஜெயசுக்குறுப் படைகளுக்கு விழுந்த முதலாவது மரண அடி இதுவாகும். சிங்கள அரசுக்கு இது ஒரு பேரிடியாக விழுந்தது.

தாண்டிக்குளத்தில் நிகழ்ந்த அதிரடித் தாக்குதலை அடுத்து சரியாக இரு வாரங்களின் பின்பு, ஜுன் 24ஆம் நாளன்று, பெரியமடுப் பகுதியில் ஜெயசுக்குறுப் படைகளின் முன்னரங்கு நிலைகள் மீது விடுதலைப் புலிகள் துணிகரத் தாக்குதலை நிகழ்த்தினர். படையினரின் பீரங்கி, மோட்டார்த் தளங்கள், வழங்கல் மையம், கட்டளைப் பீடம் ஆகியன புலிகளின் உக்கிரமான தாக்குதலுக்கு இலக்காகிச் சிதைந்தன. இத்தாக்குதலின் போது ஒரு 120 எம்.எம். பீரங்கியையும், நூற்றுக்கணக்கான எறிகணைகளையும் புலிகள் கைப்பற்றினர். இச் சண்டையில் 185 படையினர் கொல்லப்பட்டனர். 200 பேர் வரை படுகாயமடைந்தனர். எமது தரப்பில் 94 போராளிகள் வீரச்சாவடைந்தனர். இந்தத் தாக்குதலின் விளைவாக, புளியங்குளம் பழையவாடி வரை முன்னேறிய இராணுவம் பழைய நிலைகளுக்குப் பின்வாங்கியது.

இதற்கிடையில், புளியங்குளத்தில் பாதுகாப்பைப் பலப்படுத்தி, ஜெயசுக்குறு படையணிகளுக்கு எதிராகக் காத்திரமான மறிப்புச் சண்டையை நிகழ்த்தப் பிரபாகரன் தீர்மானித்தார். தலைவரின் அறிவுறுத்தலுக்கு இணங்கப் புளியங்குளம் இறுக்கமான பாதுகாப்பு அரண்களைக் கொண்ட புலிகளின் படைத் தளமாக மாற்றப்பட்டது. புலிப் படை புளியங்குளத்தில் நிலைகொண்டு நின்று, மறிப்புச் சமருக்குத் தயாராகி வருவதை அறிந்ததும், சிங்கள ஆயுதப் படைகள் தமது சுடுகலச் சக்தி முழுவதையும் இப் பகுதிக்குக் குறிவைத்து ஏவியது. பீரங்கிகளும், கிபிர் போர் விமானங்களும் தொடர்ச்சியாகப் புலிகளின் நிலை மீது குண்டுமாரி பொழிந்தன. அப்படியிருந்தும் புலிகளின் பாதுகாப்பு அரண்களை எதிரியால் அசைத்துவிட முடியவில்லை. இவ்விதம் புளியங்குளத்தில் ஜெயசுக்குறுச் சமர் உக்கிரமடைந்த வேளையில், இன்னுமொரு வலிந்த தாக்குதல் போர் நடவடிக்கையைப் பிரபாகரன் திட்டமிட்டார். ஜெயசுக்குறுப் படைகளின் வழங்கல் மையமாகத் திகழ்ந்த ஓமந்தைப் படைத்தளம் மீது 1997 ஆகஸ்ட் முதலாம் நாள் புலிகளின் படையணிகள் மின்னல் வேகத் தாக்குதலை நடத்தினர். இத் தாக்குதலில் 135 இராணுவத்தினர் கொல்லப்பட்டனர்.

ஜெயசுக்குறுப் படை நடவடிக்கை தொடங்கி மூன்று மாத காலம் நிறைவடைவதற்கு முன்னர், மறிப்புச் சண்டையையும் தீவிரப்படுத்தி, மூன்று வலிந்து தாக்குதல் சண்டைகளையும் அரங்கேற்றி, சிறீலங்கா இராணுவத்திற்குப் பெருந்தொகையில் உயிர்ச் சேதத்தையும், பெரும் அளவில் ஆயுத தளபாட அழிப்பையும் ஏற்படுத்திய புலிகளின் போர் நுட்பம் படைத் தலைமையை திகைப்பில் ஆழ்த்தியது. விடுதலைப் புலிகளின் படை பலத்தைக் குறைவாக மதிப்பிட்டுக் களத்தில் குதித்த சிங்கள இராணுவம் நிலை குலைந்தது. முன்னரங்கிலும் பின்னரங்கிலுமாக புலி வீரர்கள் நிகழ்த்திய துணிகரத் தாக்குதல்களும், பீரங்கி, மோட்டார் போன்ற கனரக ஆயுதங்களை அவர்கள் கையாளும் நுட்பமும் படைத் தரப்புக்கு ஆச்சரியத்தையும் அச்சத்தையும் கொடுத்தன. நாளுக்கு நாள் அதிகரித்து வந்த உயிரிழப்புக்களையும் காயமடைதலையும் தவிர்ப்பதற்கு விரும்பிய இராணுவத்தினர் படைநகர்வு வேகத்தைக் குறைக்க நிர்ப்பந்திக்கப்பட்டனர். ஓமந்தையிலிருந்தும் நெடுங்கேணியிலிருந்தும் வீறுநடையுடன் அணிவகுத்து வந்த ஜெயசுக்குறுப் படைகள், புலிகளின் எதிர்த் தாக்குதல் தீவிரமடையப் புளியங்குளம் நோக்கித் தவழ ஆரம்பித்தன.

புளியங்குளம் மறிப்புச் சண்டைகள் ஐந்து மாதங்களுக்கு மேலாகத் தொடர்ந்தன. புளியங்குளத்தில் அமையப் பெற்றிருந்த புலிகளின் படைத் தளத்தைக் கைப்பற்றுவதற்கு ஜெயசுக்குறுப் படையணிகள் எத்தனையோ தந்திரோபாய நகர்வுகளை மேற்கொண்டும் பலனளிக்கவில்லை. சில தடவைகள் இராணுவத்தினரின் போர் டாங்கிகளும் கவச வாகனங்களும் புலிகளின் புளியங்குளப் பாதுகாப்பு வியூகத்தை உடைத்து உள்நுழைந்த போதும் அவை எமது போராளிகளால் அழிக்கப்பட்டன.

புளியங்குளம் சந்தியை இரும்புக் கோட்டையாக மாற்றி, அந்தச் சிறிய போர் அரங்கில் உறுதியாக நிலையெடுத்து நின்று, பெரியதொரு ஆக்கிரமிப்பு இராணுவத்தைப் பல மாதங்களாக வழிமறித்துப் போராடிய புலிப் படை வீரர்களின் அபாரமான துணிவும் உறுதிப்பாடும் எதிரியைக் கலங்க வைத்தது. புளியங்குளத்தில் புலிகளின் படைத் தளத்தை உடைக்க முடியாது என உணர்ந்த சிங்கள இராணுவம், புளியங்குளத்தைச் சுற்றிச் சென்று முன்னேறத் திட்டமிட்டது. புளியங்குளத்தைத்

தனிமைப்படுத்தித் துண்டாடும் தந்திரோபாய நோக்கத்துடன் 1997 செப்டெம்பர் 10ஆம் நாளன்று, இரவோடு இரவாக, அடர்ந்த காடுகளூடாக, நெடுஞ்சாலையின் கிழக்குப் புறமாக நகர்ந்து சென்ற இராணுவத்தின் சிறப்புக் 'கொமாண்டோ' அணி ஒன்று, புளியங்குளத்திற்கு வடக்கே ஐந்து கிலோமீட்டர் தூரத்தில் அமைந்திருந்த புதூர்ச் சந்தியைக் கைப்பற்றியது. இந்தத் திடீர் நகர்வால் புளியங்குளத் தளத்திற்கான வழங்கல் பாதைக்கு அச்சுறுத்தல் எழுந்தது. புதூர்ச் சந்தியிலிருந்து இராணுவத்தினரை விரடியடிக்காது போனால் புளியங்குளத்திலிருந்து பின்வாங்க வேண்டிய நிலை புலிகளுக்கு ஏற்பட்டது. எனவே, அன்றைய இரவே, புதூர்ச் சந்தியில் நிலைகொண்ட சிங்கள இராணுவச் சிறப்புப் படையணிகள் மீது ஒரு முறியடிப்புத் தாக்குதலை எமது போராளிகள் தொடுத்தனர். விடுதலைப் புலிகளின் பீரங்கி, மோட்டார் பிரிவுகளின் துல்லியமான எறிகணைத் தாக்குதல்கள் புதூர்ச் சந்தியை ஆக்கிரமித்து நின்ற படையினரைச் சிதறடித்தன. இதனையடுத்து எமது படையணிகள் அப் பகுதிக்குள் நுழைந்து, இராணுவத்தினருடன் கடும் சண்டையிட்டு அவர்களை அங்கிருந்து விரட்டியடித்தனர். இரவிரவாக நிகழ்ந்த இப் பயங்கரச் சண்டையில் 200 படையினர் பலியாகினர். 500 பேர் வரை காயமடைந்தனர். இந்த வெற்றி காரணமாக, புளியங்குளத் தளம் அசைக்க முடியாத புலிகளின் பாதுகாப்பு அரணாகத் தக்க வைக்கப்பட்டது. இதனால், ஜெயசுக்குறுப் படைகள் புளியங்குளத்தைச் சுற்றிச் செல்லும் இன்னொரு முயற்சியையும் மேற்கொண்டனர். செப்டெம்பர் 30ஆம் நாளன்று, காடுகளூடாகக் கனகராயன் குளத்தை நோக்கிப் படையினர் மேற்கொண்ட நகர்வையும் புலிகளின் படையணிகள் முறியடித்தன. இவ்விதம் தொடர்ச்சியாக ஏற்பட்ட பின்னடைவுகள் காரணமாக ஏ-9 நெடுஞ்சாலையில் அமைந்த புலிகளின் புளியங்குளத் தளத்தைத் தவிர்த்து, வேறொரு களமுனையைத் திறக்கச் சிங்கள இராணுவம் நிர்ப்பந்திக்கப்பட்டது.

புளியங்குளத்தை வெற்றிகொள்ள முடியாத இரும்புக் கோட்டையாக மாற்றி, மறிப்புச் சண்டைகளையும் விடுதலைப் புலிகள் வெற்றிகரமாக நடத்தி வந்ததால் ஜெயசுக்குறுச் சமர் பெரும் நெருக்கடிக்குள் தள்ளப்பட்டது. குறித்த கால வரையறைகளை மீறியதாக, முடிவில்லாத தொடர்கதையாக, சமர் நீண்டு செல்வது அரசாங்கத்திற்குப் பெரும் சங்கடத்தைக்

கொடுத்தது. அடுத்ததாக, பொருது களங்களில் உயிரிழந்த காயமடைந்த படையினரின் தொகை பெருகி வந்தது. இதனால் சிங்கள மக்கள் மத்தியில் போருக்கு எதிரான வெறுப்புணர்ச்சி மேலாங்கி வளர்ந்ததுடன் அரசாங்கத்தின் இராணுவ அணுகுமுறையிலும் மக்களுக்கு நம்பிக்கை தளர்ந்தது. சிங்களப் படைத் தலைமையை விரக்திக்கு உள்ளாக்கிய இன்னொரு விடயம் என்னவென்றால், சமர் தொடங்கிப் பல மாதங்கள் ஆகியபோதும் இராணுவத்திற்கு ஊக்கமளிக்கும் வகையில் குறிப்பிடத்தக்க கள வெற்றிகளை ஈட்ட முடியாது இருப்பதாகும். இப்படியான கள யதார்த்தத்தை நன்கு பரிசீலித்த படைத் தலைமை ஜெயசுக்குறுவின் போர்த் தந்திரோபாயத்தை மாற்றியமைக்க முடிவு செய்தது. வன்னி நெடுஞ்சாலையை கைப்பற்றும் குறிக்கோளுடன், ஒரே பாதையால், ஒரே முனையில் படைகளைக் குவிக்காது, புதிதாக வேறு களமுனைகளைத் திறந்து போரிட முடிவு எடுக்கப்பட்டது. கள முனைகளை விரிவாக்கம் செய்தால், விடுதலைப் புலிகளின் படையணிகளைச் செறிவாக்கி, அவர்களது தாக்குதல் வலுவைக் குறைத்து இராணுவத்தின் வெற்றிக்கு வழி சமைக்கலாமெனப் படைத் தலைமை சிந்தித்தது. இத் தந்திரோபாயத்திற்கு அமைய ஒரு புதிய களமுனையைத் திறப்பதென முடிவாகிற்று. ஏ-9 வன்னி நெடுஞ்சாலையின் கிழக்குப் புறமான பிரதேசத்தைத் தனது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவரச் சிங்கள இராணுவம் முடிவு எடுத்தது. நெடுங்கேணியிலிருந்து கரிப்பட்டமுறிப்பு வரையிலான பகுதியைக் கைப்பற்றினால், புலிகளின் பிரதான வழங்கல் பாதைகளில் ஒன்றான முல்லைத்தீவு - மாங்குளம் வீதியைத் துண்டிப்பதுடன் மாங்குளத்தை நோக்கிப் படைகளை நகர்த்தவும் ஏதுவாக அமையும் என இராணுவத் தலைமை எண்ணியது. இத் திட்டத்திற்கு அமையக் கரிப்பட்டமுறிப்பைக் கைப்பற்றும் நோக்குடன் கரப்புக்குத்தி விஞ்ஞானகுளப் பகுதியை வழங்கல் மையமாக்கி, அங்கு படைகளைக் குவித்தது சிறீலங்கா இராணுவம். புதிய களமுனை திறக்கும் ஜெயசுக்குறுப் படையினரின் தந்திரோபாய நகர்வைப் புரிந்து கொண்ட விடுதலைப் புலிகள், இந்த நகர்வை முறியடிக்கும் நோக்குடன் கரப்புக்குத்தி - விஞ்ஞானகுளப் பகுதியிலுள்ள இராணுவத்தின் வழங்கல் மையம் மீது பெரியதொரு வலிந்து தாக்குதலை நடத்தப் புலிகள் திட்டமிட்டனர். எனினும் எமது தாக்குதலுக்குக் குறிப்பிட்ட தினத்திற்கு முதல் நாளே படையினர்

கரிப்பட்டமுறிப்பைக் கைப்பற்றினர். 1997 அக்டோபர் 4ஆம் நாளன்று, பத்துக் கிலோ மீட்டர் தூரம்வரை, இரவின் இருளில் காட்டுப் பாதைகளுடாக நடந்து சென்ற படையினர் தமது இலக்கை அடைந்தனர். மறுநாள், அக்டோபர் 5ஆம் நாளிரவு, ஏற்கனவே திட்டமிட்டபடி கரப்புக்குத்தி - விஞ்ஞானகுள வழங்கல் மையம் மீது விடுதலைப் புலிப் படையணிகள் பாரிய தாக்குதல் ஒன்றை நிகழ்த்தினர். வழங்கல் மையத்தைக் கைப்பற்றிய புலிகள் அங்கிருந்த வெடிபொருட்களையும், இராணுவத் தளபாடங்களையும், வாகனங்களையும் தம்வசமாக்கினர்.

கரிப்பட்டமுறிப்புச் சந்தியும் அதன் சுற்றுப்புறங்களும் படையினரிடம் வீழ்ச்சியடைந்தது ஜெயசுக்குறுச் சமரில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தியது. மாங்குளத்திற்குக் கிழக்கே ஐந்து மைல் அருகாமையில் ஜெயசிக்குறுப் படைகள் நிலையெடுத்துக் கொண்டமை புலிகளுக்கு ஒரு புதிய சவாலாக அமைந்தது. இதனால் எதிர்ப்புச் சமரின் தந்திரோபாயத்தில் சில மாற்றங்களைச் செய்யப் பிரபாகரன் முடிவெடுத்தார். இராணுவம் புதிதாகத் திறக்கும் கள முனைகளுக்குப் படைகளை நகர்த்திப் போராட புலிகளிடம் பெரிய அளவு ஆட்பலம் இருக்கவில்லை. புலிகளின் எதிர்ப்புச் சக்தி பரவலாக்கப்பட்டு பலவீனப்படுவதையே எதிரி விரும்புகிறான் என்பதும் பிரபாகரனுக்குத் தெரியும். புதிய நிலையிலிருந்து மாங்குளத்தைக் கைப்பற்றுவதே படையினரின் குறிக்கோள் என்பதால், சில தந்திரோபாயப் பின்வாங்கல்களைச் செய்து மாங்குளத்தைப் பலப்படுத்தப் பிரபாகரன் முடிவெடுத்தார். இதன்படி, புளியங்குளத்தில் நிலைகொண்டிருந்த படையணிகளை கனகராயன்குளம் வரை பின்வாங்கச் செய்ததுடன், மாங்குளப் பகுதியை மிக இறுக்கமான பாதுகாப்புப் படைத்தளமாக மாற்றி அமைத்தார்.

விடுதலைப் புலிகளின் படை விலகலைத் தொடர்ந்து புளியங்குளத்தில் நிலைகொண்ட படையினர், கனராயன் குளத்தைக் கைப்பற்றப் பல்வேறு படை நகர்வுகளை மேற்கொண்டனர். இவற்றையெல்லாம் புலிப் படையணிகள் தீரமுடன் போராடி முறியடித்தன. இம் முறியடிப்புச் சண்டைகளில், கனகராயன் குளத்திற்குச் சமீபமாகவுள்ள மன்னங்குளத்தில் நிகழ்ந்த மோதல் முக்கியமானது. இப் பகுதியில் முன்னேறிய படையினரை எமது போராளி அணிகள்

வழிமறித்து நிகழ்த்திய மூர்க்கமான தாக்குதலில், அமெரிக்காவில் பயிற்சி பெற்ற 300 சிறப்பு அதிரடிப் படையினர் கொல்லப்பட்டனர். எமது தரப்பில் 37 போராளிகள் களப்பலியாகினர்.

வன்னிப் பிரதேசத்தின் கேந்திர மையமாக மாங்குளம் விளங்கியது. இதனைக் கைப்பற்றும் நோக்குடன், ஜெயசுக்குறுப் படைகள் பெரும் படையெடுப்புகளை நிகழ்த்தலாமெனக் கருதிய புலிகளின் தலைமை, மாங்குளத்தை மறிப்புத் தாக்குதலுக்கான பெரும் தளமாக மாற்ற முடிவு எடுத்தது. அத்துடன் இத் தளத்திற்குப் படை வலுச் சேர்க்கும் பொருட்டு, கனகராயன் குளத்தில் நிலைகொண்டிருந்த புலிப்படை அணிகளை மாங்குளத்திற்குப் பின்நகரச் செய்தது.

1998ஆம் ஆண்டின் உதயத்துடன் பல மாதங்கள் வரை மாங்குளத்தைக் கைப்பற்றும் தந்திரோபாயக் குறிக்கோளுடன் சிங்களப் படையணிகள் மேற்கொண்ட பல்வேறு படை நடவடிக்கைகளை எமது போராளிகள் அபாரமான துணிவுடன் எதிர்த்துப் போராடி முறியடித்தனர். புதிய வியூகங்களை அமைத்துப் பெரிய எடுப்பில் நிகழ்த்தப்பட்ட தாக்குதல்களும் தோல்வி கண்டன. சிங்கள ஆயுதப் படைகள் தமது அசுர பலத்தைப் பிரயோகித்தும் மாங்குளம் படைத் தளத்தை அசைத்து விட முடியவில்லை.

ஜெயசுக்குறுச் சமர் ஓராண்டைப் பூர்த்தி செய்தது. 365 நாட்கள் வரை தொடர்ச்சியாக முழுப் பலத்தையும் பிரயோகித்துப் போராடியும் 35 கிலோ மீட்டர் நீளப் பாதையையே அரச படைகளால் கைப்பற்ற முடிந்தது. ஓராண்டுச் சமரில் 1350 படையினரைப் பலிகொடுத்ததாக அரசாங்கம் இராணுவத்தின் உயிரிழப்பைக் குறைத்துக் கூறியது. மூவாயிரம் படையினருக்கும் மேல் கொல்லப்பட்டதாக விடுதலைப் புலிகள் விடுத்த அறிக்கையை நம்பகமானதென உலக இராணுவ நிபுணர்கள் ஏற்றுக் கொண்டனர். வன்னி நெடுஞ்சாலைப் பாதுகாப்புச் சமரில், தமது தரப்பில் 1300 போராளிகள் களப் பலியாகினர் என விடுதலைப் புலிகள் அறிவித்தனர். ஓராண்டு காலமாக, ஓயாத தாக்குதல்களை மேற்கொண்ட போதும், நெடுஞ்சாலை மீதான புலிகளின் அழுங்குப் பிடியை இராணுவத்தினரால் அசைக்க முடியவில்லை. கிளிநொச்சியின் தென்புறப் பகுதியிலிருந்து மாங்குளம் சந்தி வரையான நெடுஞ்சாலை புலிகளின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது. இந்த ஓராண்டுச் சமரில் சிங்கள

இராணுவத்தின் சிறப்புப் படையணிகள் சிதைவுற்றன. 'எயார் மொபைல்' அதிரடிப் படைகளையும், வெளிநாடுகளில் பயிற்சி பெற்ற சிறப்புப் படையணிகளையும் கொண்ட 53ஆவது 'டிவிசன்' படைப் பிரிவு பாரிய இழப்புக்களைச் சந்தித்தது.

ஜெயசுக்குறுச் சமரானது விடுதலைப் புலிகளின் போரியல் வளர்ச்சிக்கு வளம் சேர்த்தது என்றே சொல்லலாம். பெரும் படை நகர்வுகளைச் செய்து, பல்வேறு படையணிகளை ஒருங்கிசைவாகச் செயற்பட வைத்து, பீரங்கி போன்ற கனரக ஆயுதங்களை மிக நுட்பமாகக் கையாளச் செய்து, மரபு வழிப் போர்முறையில் புலிப் படை வீரர்களுக்குப் பயிற்சியும் தேர்ச்சியும் பெற ஜெயசுக்குறுச் சமர் களம் அமைத்துக் கொடுத்தது. இந்த வன்னிப் பெரும் சமரின் ஓராண்டு நிறைவில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட போராளிகளைக் களப்பலி கொடுத்த போதும் புலிகள் இயக்கத்தின் போர் வலு குன்றிவிடவில்லை. அந்த ஓர் ஆண்டு காலத்தில் ஆட் சேர்ப்பும் போர்ப் பயிற்சியும் முடுக்கிவிடப்பட்டு எமது இயக்கம் ஆட் பலத்தைப் பெருக்கியது. ஆயுத பலமும் பல மடங்கு அதிகரித்தது. பீரங்கிகள், பெருந்தொகையில் மோட்டார்கள் (81 எம்.எம், 60 எம்.எம். மோட்டார்கள்) நூற்றுக்கணக்கான இயந்திரத் துப்பாக்கிகள், ஆயிரக்கணக்கில் தானியங்கித் துப்பாக்கிகள், பெரும் தொகையில் பீரங்கி, மோட்டார் எறிகணைகள், உந்துகணை செலுத்திகள், கைக்குண்டுகள் எனப் பேரளவான ஆயுதங்களை இச் சமரில் புலிகள் கைப்பற்றினர். இவ்விதம் ஆட் பலமும், ஆயுத பலமும், மன பலமும் எல்லாவற்றிற்கும் மேலாக கள அனுபவமும் பெற்று விடுதலைப் புலிகள் இயக்கம் வலு மிக்க போராட்ட சக்தியாக எழுச்சி பெற்றது.

வன்னி மாநிலத்தில் பெரிய அளவு நிலப்பரப்பை ஜெயசுக்குறுப் பூதம் விழுங்கியுள்ளபோதும் விடுதலைப் புலிகளின் தலைமை அதுபற்றிப் பெரிதாக அலட்டிக் கொள்ளவில்லை. வன்னியில் ஆக்கிரமிக்கப்பட்ட பிரதேசங்களைத் திரும்பவும் மீட்டெடுக்கலாம் என்பதில் பிரபாகரன் நம்பிக்கையுடன் இருந்தார். கிழக்கு மாகாணத்திலிருந்து குறிப்பாக மட்டு - அம்பாறை மாவட்டத்தில் இருந்து பெருந்தொகையான படைகளை வன்னிக் களத்தில் அரசாங்கம் குவித்திருந்தது. இதனால், கிழக்கின் பெரும் பகுதிகளை விடுதலைப் புலிகள் தமது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்தனர். கிழக்கில் இராணுவ நெருக்குவாரத்தைக்

குறைத்து அங்கு புலிகளின் விரிவாக்கத்திற்கு ஜெயசுக்குறுச் சமர் வழிகோலியது எனலாம்.

இருபதாயிரம் படையினரைக் கொண்ட, மூன்று 'டிவிசன்' படைப் பிரிவுகளுடன் ஜெயசுக்குறுச் சமரை ஆரம்பித்த சந்திரிகா அரசு, முதல் மூன்று மாதங்களுக்குள் விடுதலைப் புலிகளின் உக்கிரமான மறிப்புச் சண்டைகள், வலிந்து தாக்குதல்கள் காரணமாக இன்னொரு 'டிவிசன்' துருப்புக்களைக் கூட்டி, மொத்தம் 36,000 படையினரைக் களத்தில் இறக்கியது. சிறீலங்கா இராணுவத்தின் 53, 54, 55, 56ஆவது 'டிவிசன்'களுடன் பின்னர் நாலாயிரம் ஆயுதம் தரித்த காவல்துறையினரும் சமரில் இணைந்தனர். இராணுவத்தின் முழுப் பலத்தையும் வன்னியில் குவித்து, புலிகளைப் பூண்டோடு அழித்துவிடச் சிங்கள மேலாண்மைவாத ஆட்சியாளர் துணிந்தபோது அந்தச் சவாலை எதிர்கொள்ளப் பிரபாகரனும் திடசங்கற்பம் பூண்டார். ஜெயசுக்குறுப் படையெடுப்பானது தமிழீழத் தேசிய இனத்தின் சுதந்திர இயக்கத்திற்கு எழுந்த பெரியதொரு அச்சுறுத்தலாகக் கருதிய அவர், இப் படையெடுப்பை முழுப் பலத்துடன் எதிர்கொண்டு முறியடிப்பதென முடிவெடுத்தார். வன்னி எல்லைப் பிரதேசங்களில் மறிப்புச் சமர் முனைப்புற்ற சமயத்தில், தென்தமிழீழம் உட்பட எல்லா மாவட்டங்களிலிருந்தும் புலிகளின் படையணிகளை ஒன்றிணைத்து, தமிழரின் தேசிய விடுதலை இராணுவமாகப் போர்க் களத்தில் இறக்கினார். இவற்றில் ஜெயந்தன் படையணியும் அடங்கும். போர்க் கலையில் ஆற்றலும் அபாரமான துணிவுமுடைய ஜெயந்தன் படையணி வீரர்கள் ஏனைய எமது படையணிகளுடன் இணைந்து ஜெயசுக்குறுச் சமர்க் களத்தில் வீர சாதனைகளைப் படைத்தனர். தமிழீழத்தின் மையக் களமான வன்னி மண்ணில் வைத்தே சிங்கள இராணுவத்தின் முதுகெலும்பை முறித்தால், கிழக்கிலும் ஏனைய மாவட்டங்களிலும் அரச படைகளின் ஆதிக்கத்தைக் குறைத்து விடலாமெனப் பிரபாகரன் எண்ணினார்.

ஜெயசுக்குறுச் சமர், தென்னாசியாவின் நீட்சிபெற்ற சமராக ஒரு வருட காலத்தை விழுங்கிய போதும் தனது மூலோபாயக் குறிக்கோளை அடைய முடியாது திணறியது. சமரில் பேரிழப்புக்களைச் சந்தித்த போதும், 'வெற்றி நிச்சயம்' இல்லை எனத் தெளிவாகத் தெரிந்தபோதும், சந்திரிகாவும் அவரது மாமனாராகிய ஜெனரல் ரத்வத்தையும் மற்றும் போர் வெறி கொண்ட தளபதிகளும் படையெடுப்பை நிறுத்திக் கொள்ள

விரும்பவில்லை. அப்படிப் பின்னடிப்பது அரசியல் ரீதியான தலைகுனிவாக அமையும் என்பது மட்டுமன்றி, ஆயுதப் படைகளுக்கும் மனமுறிவை ஏற்படுத்துமென ஆட்சியாளர்கள் கருதினர். எனவே, ஓராண்டு கழிந்தும் ஜெயசுக்குச் சமர் தொடர்ந்தது. மாங்குளப் பகுதியை மைய இலக்காகக் கொண்டே பல மாதங்களாகப் பயங்கரச் சண்டைகள் தொடர்ந்தன. புதிய களமுனைகளைத் திறந்து, மாங்குளத்தை முற்றுகையிட்டுக் கைப்பற்ற அரச படைகள் மேற்கொண்ட அனைத்துப் படை நடவடிக்கைகளையும் விடுதலைப் புலிகள் முறியடித்தனர்.

மாங்குளம் சந்தியை மையமாகக் கொண்டு இறுக்கமான பாதுகாப்பு அரண்களுடன் எவருமே நெருங்க முடியாத இரும்புக் கோட்டை போல நிமிர்ந்து நின்றது புலிகள் படைத் தளம். கிளிநொச்சியை நோக்கிச் சென்ற பெரு வீதியில், எதிரிப் படைக்கு ஒரு தடைக் கல்லாக, நந்தி போல அது குந்தி இருந்தது. மாங்குளம் படை முகாமிலும் அதைச் சூழ நிலைகொண்டிருந்த புலிகளின் படை அணிகளும் உருக்கை ஒத்த உறுதியுடன் களமாடினார்கள். புளியங்குளத்தில் புலிகள் காட்டிய தீவிரமான எதிர்ப்பைவிட மாங்குள மறிப்புச் சமர்கள் மிகவும் மூர்க்கமானதாக அமைந்தன. எப்படியாவது, எந்த விலைகொடுத்தாவது மாங்குளத்தைக் கைப்பற்ற வேண்டுமெனச் சிங்கள அரசு வெறிகொண்டு நின்றது. சிங்களப் படைகளின் இடைவிடாத தாக்குதல்களும், விடுதலைப் புலிகளின் விட்டுக் கொடாத கடும் எதிர்ப்புமாக மாங்குளப் பிரதேசம் ரண களமாக மாறியது. பாதுகாப்புப் போர்க் கலையில் எமது போராளிகள் வெளிக்காட்டிய நுட்பமான போர்த் திறன் காரணமாக, ஜெயசுக்குறுப் படைகளின் பாதை பிடிக்கும் நகர்வு, மாங்குளம் பகுதியில் ஒன்பது மாதங்கள் வரை முடக்கி வைக்கப்பட்டது. மாங்குளத்திற்கு கிழக்கே ஒலுமடுவிலும், மேற்கே மல்லாவி வீதியிலுள்ள மூன்று முறிப்புச் சந்தியிலும் புதிய முனைகளைத் திறந்து, மாங்குளத்தை முக்கோணத்தில் முற்றுகையிட்டுத் தொடுக்கப்பட்ட பெரும் தாக்குதலையும் புலிப் படைகள் முறியடித்தன. இறுதியாக எமது விடுதலை இயக்கத்தின் ஒரு அபாரமான இராணுவச் சாதனையே மாங்குளச் சண்டைகளுக்கும் முற்றுப் புள்ளி வைத்து, ஜெயசுக்குறுச் சமருக்கு முடிவு கட்டியது. 1998 செப்டெம்பர் 27ஆம் நாளன்று, பாரிய வலிந்து தாக்குதல் நடவடிக்கை மூலம் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த கிளிநொச்சி நகரைக் கைப்பற்றி வரலாற்றுச் சாதனை

படைத்தனர் விடுதலைப் புலிகள். இந்தப் பெரும் சமருக்காக மாங்குளத்தில் நிலைகொண்டிருந்த புலிகளின் படையணிகளும் அணி சேர்க்கப்பட்டன. மாங்குளத்திலிருந்து புலிகள் விலகியதால் ஏற்பட்ட வெற்றிடத்தை நிரப்பிக் கொண்ட சிங்கள இராணுவம், மாங்குளத்தைப் போராடி வெற்றி கொண்டதாக செப்டெம்பர் 29ஆம் நாள் அறிவித்தது. கிளிநொச்சியின் வீழ்ச்சியுடன் ஜெயசுக்குறுவின் போர்க் கனவு கலைந்தது. ஜெயசுக்குறுச் சமர் முடிவுக்கு வந்துள்ளதாக 1998 டிசம்பர் 4ஆம் நாளன்று பாதுகாப்பு அமைச்சு அதிகாரபூர்வமாக அறிவித்தது. விழுந்தவன் மீசையில் மண் ஒட்டவில்லை என்பதுபோல, 'மாங்குளத்தைக் கைப்பற்றும் ஜெயசுக்குறுச் சமரின் மூலோபாயக் குறிக்கோள் வெற்றிகரமாக நிறைவேறியுள்ளது' என இந்த அறிக்கையில் தெரிவிக்கப்பட்டது.

நான்கு மாத கால வரையறையுடன் ஆரம்பமான 'வெற்றி நிச்சயம்' சமர், 18 மாதங்கள்வரை இழுபட்டுத் தனது இராணுவக் குறிக்கோளையும் நிறைவு செய்ய முடியாது இடைநடுவே தோல்வியில் முடிவு கண்டது. இந்தச் சமரில் ஆறாயிரம் படையினர் கொல்லப்பட்டனர். 15,000 பேர் காயமடைந்தனர். பெருந்தொகையான படையினர் ஏ-9 நெடுஞ்சாலையில் கொல்லப்பட்டதால் அப் பாதையை 'மரணத்தின் நெடுஞ்சாலை' என ஒரு இராணுவ ஆய்வாளர் வர்ணித்தார். இச் சமரை அடுத்து பெருந்தொகையான இராணுவத்தினர் படையிலிருந்து விலகினர். இச் சமரில் சிங்களத்தின் பல சிறப்புப் படையணிகள் சிதைவுற்றன. எமது தரப்பில் மூவாயிரம் போராளிகள் களப் பலியாகினர்.

## ஓயாத அலைகள் II : கிளிநொச்சிச் சமர்

முல்லைத்தீவைப் புலிகளிடம் பறிகொடுத்த சிறீலங்கா இராணுவம், கிளிநொச்சி நகரைக் கைப்பற்றி அதனை ஒரு பாரிய படைத் தளமாகக் கட்டியெழுப்பி, பரந்தன் ஊடாக ஆனையிறவுப் பெருந்தளத்துடன் இணைத்து வைத்திருந்தது. பரந்தன் - கிளிநொச்சி பிரிகேட் தலைமையகக் கட்டிடம், இரு பெரிய படைமுகாம்கள், பதினைந்து உப-முகாம்கள், பதினாறு

கிலோமீட்டர் சுற்று வட்டத்திலான முன்னரங்கக் காவலரண்கள் - இவற்றை உள்ளடக்கிய பெருந்தளமாகக் கிளிநொச்சி விளங்கியது. புலிகளின் கட்டுப்பாட்டுப் பிரதேசத்தின் மையத்தில் அமைந்து இருந்ததால் இப் படைத் தளத்தின் பாதுகாப்பு மிக இறுக்கமானதாக இருந்தது. 'ஜெயசுக்குறு' படையெடுப்பின் பிரதான இலக்கும் கிளிநொச்சிப் படைமுகாமுடன் இணைந்ததாகப் பாதை அமைப்பதாகும்.

வன்னி மாநிலத்தில் கிளிநொச்சியின் புவியியல் - கேந்திர முக்கியத்துவத்தை நன்குணர்ந்த தலைவர் பிரபாகரன், அங்கு அமையப் பெற்ற சிங்களப் படை முகாமைத் துவம்சம் செய்யத் திட்டம் தீட்டினார். கிளிநொச்சியைக் கைப்பற்றினால் ஜெயசுக்குறுப் படையெடுப்புக்கும் முடிவு கட்டலாம் எனவும் சரியாகவே மதிப்பீடு செய்தார். மாங்குளத்தில் மோதல்கள் தீவிரம் பெற்று வந்த வேளையில் கிளிநொச்சிப் படைமுகாம் மீதான வேவு நடவடிக்கைகள் ஆரம்பமாகின. எத்தனையோ ஆபத்துகள் மத்தியில் நுட்பமாகத் தரவுகள் எடுத்த வேவுப் புலிகள், படைத் தளத்தின் பாதுகாப்பு வேலிகள், உட்கட்டுமாணங்கள், பெரிய சிறிய முகாம்கள், பீரங்கி - மோட்டார்த் தளங்கள் ஆகியன பற்றிய விபரங்களுடன் வரை படங்கள் தயாரித்துப் பிரபாகரனிடம் ஒப்படைத்தனர். இத் தரவுகளை வைத்து, அவர் ஒரு நேர்த்தியான தாக்குதல் திட்டத்தைத் தயாரித்தார்.

கிளிநொச்சிப் படைத் தளத்தின் முன்னணிக் காவலரண்களைத் தகர்த்தெறிந்து கைப்பற்றி, தளத்தின் பிரதான வலயத்தில் அமைந்த பிரிகேட் தலைமையகத்தையும் மற்றும் முக்கிய முகாம்களையும் கைப்பற்றும் பெரும் பொறுப்பை கேணல் தீபனிடம் கையளித்திருந்தார் தலைவர் பிரபாகரன். ஆனையிறவு இராணுவப் படைத் தளத்திலிருந்து உதவிகளைத் தடுத்து நிறுத்திக் கிளிநொச்சியைத் தனிமைப்படுத்தும் பொறுப்பு கேணல் பால்ராஜிடம் ஒப்படைக்கப்பட்டது.

1998 அக்டோபர் மாதம் 27ஆம் நாள் அதிகாலை 1:20 மணிக்கு கிளிநொச்சிப் படைமுகாம் மீதான தாக்குதல் தொடங்கியது. படை முகாமின் முன்னரங்க நிலைகள் மீது மின்னல் வேகத் தாக்குதல் நிகழ்த்திய புலிகளின் படையணிகள், பல இடங்களில் வெளிப் பாதுகாப்பு வேலியை உடைத்து உட்புகுந்தனர். முன்னரங்க நிலைகள் புலிகளிடம் வீழ்ச்சியடைந்ததால் திகிலடைந்த இராணுவத்தினர் கடுமையாகப்

போராடிச் சில நிலைகளை மீளக் கைப்பற்றினர். ஆனால் புலிப்படை வீரர்கள் தீவிரமாகப் போராடி அந் நிலைகளை மீண்டும் தம் வசப்படுத்தினர். அன்று பகல் முழுதாகச் சண்டை உக்கிரமடைந்தது. இதற்கிடையில் புலிகளின் பீரங்கிப் படையணி, கிளிநொச்சிப் படை முகாமில் அமைந்திருந்த கனரக மோட்டார் ஏவு தளங்கள் மீது குண்டுகளைப் பொழிந்து நாசம் விளைவித்தது. ஆனையிறவிலிருந்த இராணுவத்தினரின் பீரங்கித் தளமும் புலிகளின் எறிகணைத் தாக்குதலுக்கு இலக்காகியது. அங்கிருந்த வெடிமருந்துக் களஞ்சியம் எறிகணைக்கு இலக்காகி வெடித்துச் சிதறியது.

கிளிநொச்சிப் படைத் தளத்தின் முன்னரங்கப் பாதுகாப்பு நிலைகளைத் தம் வசமாக்கிய புலிகளின் படையணிகள் மிகவும் இறுக்கமான பாதுகாப்பரண்களைக் கொண்ட உள்ளக வேலியை உடைத்தெறிய முயன்றனர். ஆனால் இங்கு புலி வீரர்கள் எதிரியின் மூர்க்கமான தாக்குதலை எதிர்கொள்ள நேர்ந்தது. 27ஆம் திகதி மாலை, இரண்டாம் கட்டமாக நிகழ்ந்த இச் சண்டையில் புலிகளின் படையணிகள் புயல்வேகத் தாக்குதல்களை நிகழ்த்தி உள்ளகப் பாதுகாப்பு நிலைகளை உடைத்துப் படை முகாமின் மையப் பகுதிக்குள் நுழைந்தனர். அங்கு பிரிகேட் தலைமையகத்தைச் சூழவிருந்த உப-முகாம்கள் ஒவ்வொன்று ஒவ்வொன்றாகப் புலிகளிடம் வீழ்ந்தன. இறுதியில் பிரதான முகாம்களும் தலைமையகமும் விடுதலைப் புலிகளின் அதிதீவிர தாக்குதலுக்கு இலக்காகின. தொலைத்தொடர்பும் விநியோகமும் துண்டிக்கப்பட்டதால் கட்டளைத் தலைமைப்பீடம் நிலைகுலைந்தது. இதற்கிடையில் சிதறியோடிய படைகளை மிகவும் சிரமத்துடன் ஒருங்கிணைத்த தலைமையகம், புதிய பாதுகாப்பு வியூகங்களை அமைத்துப் புலிகளுடன் ஜீவமரணப் போராட்டத்தில் களமிறக்கியது. 27ஆம் திகதி மாலை தொடங்கிய இரண்டாம் கட்டத் தாக்குதல்கள் மறு நாள் மாலை வரை நீடித்தன. புலிப் படையணிகளின் சுற்றி வளைப்புச் சண்டையில் முக்கிய படை நிலைகள் ஒவ்வொன்றாக வீழ்ச்சி காண மையப் பகுதி சுருங்கியது. சுருங்கிய பகுதிக்குள் நெருங்கி நின்ற இராணுவத்தினர் மீது புலிகள் மோட்டார்க் குண்டுகளைப் பொழிந்து பெரும் உயிர்ச்சிதைவை ஏற்படுத்தினர். நிலைமை மோசமடைய பிரிகேட் தலைமையகம் ஆனையிறவுப் பெரும் தளத்திலிருந்து அவசர உதவியை நாடியது. 28ஆம் நாள் காலை 10 மணியளவில், பரந்தனிலிருந்து உதவிக்கு வந்த

படைகள், டாங்கிகள், கவச வாகனங்கள் சகிதம் கரடிப்போக்குப் பகுதி ஊடாக கிளிநொச்சிப் படை முகாமுக்குள் பிரவேசிக்க முனைந்தன. உதவிப் படை வருமென எதிர்பார்த்துக் காத்திருந்த புலிகளின் கவச எதிர்ப்புப் படையணி, பரந்தனுக்கு அருகாமையில் வைத்தே உக்கிரமான மறிப்புத் தாக்குதலைத் தொடங்கியது. இத் தாக்குதலில் இரண்டு டாங்கிகள் அழிக்கப்பட்டன. ஒரு டாங்கி பலத்த சேதத்திற்கு ஆளானது. புலி வீரர்களின் மும்முரமான தாக்குதல்களுக்கு முகம் கொடுக்க முடியாது உதவிப் படைகள் சிதறி ஓடின. ஆனையிறவுத் தரைப் பாதைத் தொடர்பிலிருந்து துண்டிக்கப்பட்டு, கிளிநொச்சிப் படைத் தளம் தனிமைப்பட்டது. உதவியும் தடைப்பட்டு, தனிமைப்பட்டு, கடைசிக் கட்டத்தில் நின்று போராடிக் கொண்டிருந்த இராணுவத்தினர் தமது ஆயுள் நெருங்கி வருவதை உணர்ந்து கொண்டனர். தப்பியோடுவதைத் தவிர வேறு வழியில்லை எனக் கண்டு கொண்ட படைதளப் பொறுப்பதிகாரியான பிரிகேடியர் உபாலி எதிரிசிங்க தந்திரோபாயப் பின்வாங்கல் ஓட்டத்திற்குத் தயாரானார். 28ஆம் நாள் மாலை 4:30 மணியளவில் சிறீலங்கா இராணுவத்தினரின் பின்வாங்கி ஓடும் படலம் ஆரம்பமானது. படை முகாமிலிருந்த எரிபொருள் களஞ்சியத்தையும் சில ஆயுதத் தளபாடங்களையும் தீமூட்டி எரித்து விட்டு, பரந்தன் சந்தியை நோக்கிப் பாய்ந்தோடினர் படையினர். விடுதலைப் புலிகளின் மறிப்பு அணிகளையும் உடைத்துக் கொண்டு, கும்பல் கும்பலாக ஓட்டம் பிடித்த இராணுவத்தினர் மீது எமது போராளிகள் தாராளமாக ரவைகளைத் தீர்த்த போதும் விழுந்தவர்களை விட்டு விட்டு ஏனையோர் ஓடிப் பிழைத்தனர். கரடிப் போக்குச் சந்திக்குக் கிழக்குப் புறமான பகுதியிலிருந்து பரந்தன் சந்திவரை இராணுவத்தினர் தலைதெறிக்க ஓடிய பாதை நெடுகிலும் பிணக் குவியல்களாகக் காணப்பட்டன.

சரியாக 40 மணிநேரக் கடும் சமரின் பின்பு 'ஓயாத அலைகள் இரண்டு' முடிவுக்கு வந்தது. தமது போரியல் வரலாற்றில் ஒரு மகத்தான சாதனையை நிலைநாட்டி விடுதலைப் புலிகள் கிளிநொச்சி நகரை மீட்டெடுத்தனர். இந்தப் பெருந் தாக்குதலில் ஆயிரத்து இருநூற்று ஐம்பது (1250) படையினர் கொல்லப்பட்டனர். எமது தரப்பில் 398 போராளிகள் களப் பலியாகினர்.

## வன்னி மீட்புச் சமர்: ஓயாத அலைகள் III

கிளிநொச்சிப் பெருந்தளம் வீழ்ச்சியடைந்து கிளிநொச்சி நகரும் அதன் சுற்றுப் புறங்களும் முழுமையாக விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்பட்டன. கண்டி - யாழ்ப்பாணப் பெருவீதியைக் கைப்பற்றும் முயற்சி முறியடிக்கப்பட்டு சிங்கள இராணுவம் மாங்குளத்துடன் தடுத்து நிறுத்தப்பட்டது. அப்படி இருந்தும் வன்னி நெடுவீதியின் கிழக்குப் புறமாகவும் மேற்குப் புறமாகவும் கணிசமான நிலப்பரப்பு சிறீலங்கா இராணுவத்தின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்தது. 1998 டிசம்பர் ஆரம்பப் பகுதியில், சிங்கள இராணுவத்தால் மேற்கொள்ளப்பட்ட 'ரிவிபல' படை நடவடிக்கையில் ஒட்டுசுட்டான் பட்டினம் படையினரிடம் வீழ்ச்சியடைந்தது. இதனையடுத்து, நெடுங்கேணி - ஒட்டுசுட்டான் வீதியோடு கரிப்பட்டமுறிப்புப் பகுதி இணைக்கப்பட்டு பெரியதொரு நிலத்துண்டை இராணுவம் விழுங்கியது. இதற்கிடையில் வவுனியா மாவட்டத்தின் மேற்குப் புறமாகவும், மன்னார் மாவட்டத்திலும் 'போர் முழக்கம்' (ரணகோச) என்ற தொடர் இராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டு, மூன்றுமுறிப்பு, இரணை இலுப்பைக்குளம், பூவரசம்குளம், பாலம்பிட்டி, மடு, பெரிய மடு, பாப்பாமோட்டை போன்ற பெருநிலப் பரப்புகளை இராணுவம் கைப்பற்றியது. இவ்விதம் வன்னி மாநிலத்தின் அரைவாசிப் பகுதி, கிட்டத்தட்ட 1200 சதுர மைல் பிரதேசம் இராணுவத்தின் கட்டுப்பாட்டில் இருந்தது.

கிளிநொச்சிப் பெருந்தளத்தை அழித்து கிளிநொச்சிப் பிரதேசத்தை மீட்டெடுத்த தலைவர் பிரபாகரன் அடுத்த பெரும் வலிந்து தாக்குதலுக்கான ஆயத்தங்களைச் செய்து வந்தார். முல்லைத்தீவு மாவட்டத்தை மையத் தளமாகக் கொண்டு இயங்கி வந்த விடுதலைப் புலிகள் அமைப்புக்கு, முல்லைத்தீவின் வாசலில், கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த பகுதியில் அமைந்திருந்த ஒட்டுசுட்டான் வரை சிங்கள ஆக்கிரமிப்பு இராணுவம் முன்நகர்ந்திருப்பது பெரும் அச்சுறுத்தலாக அமைந்தது. ஒட்டுசுட்டானிலிருந்தும் நெடுங்கேணியிலிருந்தும் கிழக்கு நோக்கிய பொருது களங்களை இராணுவம் திறந்தால், அங்கிருந்து 15 மைல் தொலைவிலுள்ள புதுக்குடியிருப்பு, முல்லைத்தீவுப் பகுதிகளுக்குப் போராபத்து எழலாம் எனப் புலிகளின் தலைமை கருதியது. இந்த ஆபத்தைத்

தடுக்கும் நோக்குடனும், வன்னி மாநிலத்தை இராணுவ ஆக்கிரமிப்பிலிருந்து மீட்கும் குறிக்கோளுடன் ஒரு பாரிய படை நடவடிக்கையைத் திட்டமிட்டார் பிரபாகரன்.

இம்முறை புலிகளின் மீட்புப் போருக்குக் குறியான பிரதேசம் பிரமாண்டமானது. வன்னி நெடுஞ்சாலைக்குக் கிழக்குப் புறமாக, ஒட்டுசுட்டானிலிருந்து மாங்குளம் வரையும், நெடுங்கேணியிலிருந்து புளியங்குளம் வரையும் அடங்கலான பிரதேசத்துடன் மணலாற்றுப் பகுதியையும் உள்ளடக்கிய, கிட்டத்தட்ட ஐநூறு சதுர மைல் சுற்றளவான நிலப்பரப்பை மீட்டெடுப்பதற்குப் பிரபாகரன் திட்டம் தீட்டினார். சிங்கள ஆயுதப் படைகளின் ஆக்கிரமிப்பின் கீழிருந்த இப் பிரதேசம் ஒரு பாரிய இராணுவ வலயமாக மாற்றப்பட்டு இருந்தது. இந்த இராணுவ வலயத்தின் வெளிப்புற, உட்புறப் பாதுகாப்புக் கட்டமைப்பு சிக்கலானது; இறுக்கமானது. வெளிப் பாதுகாப்பு வேலியைச் சுற்றிக் கண்ணிவெடி வயல்கள், மூன்று தொடக்கம் ஏழு நிரைகளைக் கொண்ட முட் கம்பி வேலிகள், அதன் பின்னால் பத்து அடி உயரத்திற்கு மண் அணைகள், அவற்றிற்கு இடையே சராசரியாக 30 மீட்டருக்கு ஒரு காவலரண் - இவற்றைக் கொண்டதுதான் முன்னணிப் பாதுகாப்பு வேலி (Front Defence Line). இந்த வெளிப் பாதுகாப்பு வேலிக்கு 100 மீட்டர் தூரத்திற்குப் பின்னால் இரண்டாம் நிலைப் பாதுகாப்பு அரங்கு. மிகவும் வலுப்படுத்தப்பட்ட காவலரண்கள், அவதானிப்பு நிலைகள் கொண்டதாக உட்பாதுகாப்பு வேலி அமைந்திருந்தது. இவற்றிற்கு அப்பால் எண்ணற்ற சிறிய முகாம்கள். அவற்றிற்கு மத்தியில், ஒவ்வொரு பிராந்தியத்திற்குமான உயர் பாதுகாப்பு வலயங்கள் இருந்தன. இங்குதான் பிராந்தியத்தின் பிரதான தளங்கள், மோட்டார் பீரங்கி ஏவு தளங்கள், தொலைத்தொடர்பு நிலைகள், கட்டளைப் பீரங்கிகள் அமையப் பெற்றிருந்தன. இந்த முழு இராணுவ வலயத்திற்குமான உயர் கட்டளை மையம் கனகராயன்குளத்தில் அமையப் பெற்று இருந்தது. சிறீலங்கா இராணுவத்தின் 55, 56ஆவது டிவிசன்களின் தலைமைச் செயலகங்கள், சிறப்பு அதிரடிப் படைகளின் இரண்டாவது 'பட்டாலியன்', உணவு, வெடிபொருள், மருத்துவக் களஞ்சியங்கள், பீரங்கி ஏவு தளங்கள், ஆகியனவற்றைக் கொண்ட பாரிய தளமாக இது இயங்கியது. இப்படியான பிரமாண்டமான இராணுவ வலயத்தைக் கட்டி எழுப்ப அரசாங்கத்திற்கு இரண்டரை ஆண்டுகள் பிடித்தன. 70 ஆயிரம்

வன்னியர்களை அகதிகளாக இடம்பெயர வைத்து, கிழக்கு வன்னியின் வளமான நிலத்தை ஆக்கிரமித்து நின்ற இந்த இராணுவ வலயத்திற்குள் இருபதாயிரம் படையினர் குடியிருந்தனர்.

ஒரு வருடத்திற்கு மேலாகப் பெறப்பட்ட வேவுத் தரவுகளைப் பரிசீலித்துப் பார்த்தபொழுது, இப் பாரிய இராணுவ வலயத்தின் விஸ்வரூபப் பரிமாணங்களைப் பிரபாகரனால் எடைபோட முடிந்தது. இவ் வலையத்தில் அமையப் பெற்ற இராணுவக் கட்டமைப்புகளின் பலத்தையும் பலவீனத்தையும், இறுக்கத்தையும் ஈடாட்டத்தையும், அவரால் கண்டறிய முடிந்தது. கிளிநொச்சிப் பிரதேசத்தை மீட்டதன் பின்பு, இந்த இராணுவ வலயம் மீது பாரிய வலிந்து தாக்கும் படை நடவடிக்கையைத் திட்டமிட்டார் பிரபாகரன். தாக்குதற் திட்டத்தைத் தயாரித்த அதேவேளை, புலிப் படையணிகளை அணிதிரட்டி, கடும் பயிற்சிகள் கொடுத்து, இந்த வன்னிப் பெரும் சமருக்குத் தயார்படுத்தினார். தாக்குதல் நாளும் குறித்தாகியது.

1999 நவம்பர் மாதம் இரண்டாம் நாள் அதிகலை 12:30 மணியளவில் விடுதலைப் புலிகளின் போரணிகள் ஒட்டுசுட்டானில் முதற் களமுனையைத் திறந்தனர். இதுவரை விடுதலைப் புலிகளின் போரியல் வரலாற்றில் நிகழ்ந்திராத மாபெரும் சமரை, எல்லாச் சமர்களையும் மிஞ்சிய தாய்ச் சமரை, எமது இயக்கம் ஆரம்பித்தது. தளபதி கேணல் ஜெயத்தின் வழி நடத்தலில், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியும் மாலதி படையணியும் புயல் வேகத்தில் பாய்ந்து இராணுவத்தினரின் முன்னரங்கப் பாதுகாப்பு நிலைகளை உடைத்தெறிந்து உட்புகுந்தன. இரண்டாம் நிலைப் பாதுகாப்பு அரண்களையும் தகர்த்து முன்னேறிய எமது படையணிகள் கடுகெதியில் மினி முகாம்களைக் கைப்பற்றிப் பிரதான தளம் மீது மும்முரமான தாக்குதலைத் தொடுத்தனர். விடுதலைப் புலிகளின் மின்னல் வேக நகர்வும், சாவுக்கும் அஞ்சாத துணிவும், படையணிகளின் ஒன்றிணைந்த தாக்குதல் வியூகமும் சிங்கள ஆயுதப் படைகளை திக்குமுக்காட வைத்தது. பதட்டமும் பீதியுமடைந்த படையினர் எதிர்த்துப் போராடத் திராணியற்றுத் திகைத்து நின்றனர். ஒட்டுசுட்டான் படைத்தளத்தின் கட்டளை மையம் நிலைகுலையப் படைகள் சிதறி ஓடின. தாக்குதல் தொடங்கிய சில மணி நேரங்களுக்குள் படைத் தளம் புலிகள் வசம் வீழ்ந்தது. இதனைத் தொடர்ந்து ஒட்டுசுட்டான் வெளிப்புறச் சிறு முகாம்கள்

தாக்கியழிக்கப்பட்டன. காலை புலர்ந்தவேளை ஒட்டுசுட்டான் பட்டினமும், அதன் சுற்றுப் புறங்களும் விடுதலைப் புலிகளின் முழுமையான கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்பட்டன. ஒட்டுசுட்டானில் நிலையெடுத்து அதன் பாதுகாப்பை உறுதிசெய்ததும், அன்று காலையே இரு பெரும் படையணிகளாகப் புலி வீரர்கள் நெடுங்கேணியை நோக்கியும் கரிப்பட்டமுறிப்பை நோக்கியும் முன்னேறிச் சென்றனர்.

இதற்கிடையில் ஜெயந்தன் படையணியும், சோதியா படையணியும் நவம்பர் இரண்டாம் நாட் காலை நெடுங்கேணிப் படைத் தளம் மீது பெரிய எடுப்பிலான தாக்குதலைத் தொடுத்தன. அப் படைத் தளத்தின் முன்னரங்க, உள்ளரங்க பாதுகாப்பு நிலைகளைத் தளர்த்தெறிந்து, மினி முகாம்களைத் தாக்கியழித்து புலிகள் நெடுங்கேணியின் பிரதான தளம் மீது பீரங்கி, மோட்டார் குண்டுகளைப் பொழிந்து உக்கிரத் தாக்குதலை நிகழ்த்தினர். புலிப் பாய்ச்சலின் வேகமும், சுடுகலச் சக்தியும் இராணுவத்தைத் திணறடிக்க வைத்தது. பல மணி நேரமாகப் பயங்கரச் சண்டை தொடர்ந்தது. புலிகளின் அச் சொட்டான எறிகணைத் தாக்குதல்கள் படைத் தரப்பில் பெரும் உயிர்ச் சேதத்தை விளைவித்ததால் மனவுறுதி தளர எஞ்சிய படையினர் சிதறியோடினர். நெடுங்கேணிப் பிரதான தளம் புலிகளிடம் வீழ்ந்தது. ஒட்டுசுட்டானிலிருந்து முன்னேறிய புலிப் படையணிகள் ஒட்டுசுட்டான் - நெடுங்கேணி வீதி ஓரமாக அமைந்திருந்த சிறு முகாம்களைத் தாக்கி அழித்த பின் நெடுங்கேணியில் களமிறங்கிய படைப் பிரிவுடன் இணைந்து கொண்டன. நவம்பர் இரண்டாம் நாள் மாலைப் பொழுதுக்குள் ஒட்டுசுட்டான் நெடுங்கேணிப் பிரதேசத்தைத் தமது முழுக் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்த புலிப் படை திகைப்பூட்டும் போரியல் வரலாற்றைப் படைத்தது. ஒட்டுசுட்டான், நெடுங்கேணி ஆகிய இரு சமர் முனைகளையும் ஒருங்கிணைப்பு தளபதியாக வழி நடத்தினார் எமது இயக்கத்தின் மூத்த தளபதி கேணல் சொர்ணம்.

ஓயாத, தொடர்ச்சியான, மின்னல்வேகத் தாக்குதல்களை நிகழ்த்தி எதிரியைத் திகைப்பூட்டி நிலைகுலையச் செய்வதே ‘ஓயாத அலை’ மூன்றின் தந்திரோபாய உத்தியாகக் கையாண்டார் பிரபாகரன். விடுதலைப் புலிகளின் படைபலம், சுடு கல வலு, நவீன மயப்படுத்தப்பட்ட விசேட படையணிகள், அவற்றின் ஒருங்கிணைவான அசைவியக்கம், தாக்குதல்

தந்திரங்கள் - இவை குறித்து தவறான மதிப்பீடுகளைக் கொண்டிருந்த சிங்கள இராணுவ உயர்பீடத்திற்கு, 'ஓயாத அலை' மூன்றின் வலிந்து தாக்குதற் பரிமாணம் ஆச்சரியத்தையும் திகைப்பையும் கொடுத்தது.

ஒரு நாள் சமருடன் ஒட்டுசுட்டான் நெடுங்கேணிப் பிரதேசத்தைக் கைப்பற்றியதோடு பிரபாகரன் சண்டைக்கு ஓய்வு கொடுக்கவில்லை. ஓயாத அலையாகப் போர் தொடர்ந்தது. ஒட்டுசுட்டானிலிருந்து கரிப்பட்டமுறிப்பை நோக்கி முன்னேறிய புலிப் படையணிகள், இராணுவ நிலைகளையும் சிறு முகாம்களையும் தாக்கியழித்து 13 கிலோ மீட்டர் வரையான வீதியைத் தமது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்து பகல் வேளை மணவாளன் பட்டமுறிப்பு என்னுமிடத்தை நெருங்கினர். இத்துடன் முதல் நாள் சமர் முடிவுக்கு வந்தது.

1999 நவம்பர் மூன்றாம் நாள், விடுதலைப் புலிகளின் இன்னொரு படைத் தொகுதி அம்பகாமம் படைத் தளம் மீது பாரிய தாக்குதல் ஒன்றைத் தொடுத்தது. வெளிப் பாதுகாப்பு நிலைகளைத் தாக்கியழித்து முகாமின் மையப் பகுதிக்குள் ஊடுருவிச் சென்ற புலிப் படை வீரர்கள் அம்பகாமம் பிரதான தளத்தை முற்றுகையிட்டுத் தாக்கினர். புலிகளின் வீராவேசத் தாக்குதலை எதிர்கொள்ள முடியாது படையினர் சிதறியோடப் படைமுகாம் புலிகளின் வசம் வீழ்ந்தது. அம்பகாமத்தைத் தமது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்த பின்பு அங்கிருந்து முன்னேறிய எமது படையணிகள், ஒட்டுசுட்டானிலிருந்து முன்னேறி வந்த படைப் பிரிவுடன் ஒன்றிணைந்து, மணவாளன் பட்டமுறிப்பில் அமைந்திருந்த இராணுவத்தின் பெரும் தளத்தை முற்றுகையிட்டுத் தாக்கினர். இச் சமர் முனையை தளபதி கேணல். தீபன் வழிநடத்த, லெப்.கேணல் சேகரின் தலைமையில் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியும் ஜெயந்தன் படையணியும் சண்டையில் பங்கு கொண்டன. பல மணி நேரமாகக் கடும் சண்டை நிகழ்ந்தது. இறுதியில் படைத் தளம் புலிகளின் வசம் வீழ்ந்தது. மணவாளன் பட்டமுறிப்புப் பகுதிகளை எமது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவந்த பின்பு புலிப் படையணிகள் அங்கிருந்து நான்கு கிலோ மீட்டர் தொலைவில் இருந்த கரிப்பட்டமுறிப்பு நோக்கி முன்னேறினர்.

இது இவ்வாறிருக்க, நெடுங்கேணியில் எமது பாதுகாப்பு நிலைகளை உறுதிப்படுத்திய பின்பு, கேணல் சொர்ணத்தின் தலைமையில் நைனாமடு நோக்கி முன்னேறிய புலிப் படையின்

ஒரு தொகுதி, இராணுவத்தின் வீதியோரக் காவலரண்களைத் துடைத்தெறிந்தது. குளவிசுட்டான் பிரதான தளப்பகுதியை நெருங்கிய பொழுது எதிரியின் மூர்க்கமான எதிர்ப்பைச் சந்தித்தது. இரு தரப்பும் சரமாரியாக பீரங்கி, மோட்டார் குண்டுகளைப் பரிமாறி மோதிக் கொண்டன. எதிரியின் பிரதான தளப் பகுதி எமது துல்லியமான பீரங்கி எறிகணைகளுக்கு இலக்காகி சிதைவுற்றது. எமது தாக்குதலின் வேகத்திற்கும் வீச்சுக்கும் முகம் கொடுக்க முடியாது இராணுவத்தினர் பின்வாங்கி ஓட்டம் பிடித்தனர். குளவிசுட்டானும் அதற்கு அருகாமையிலிருந்த குறிசுட்ட குளமும் புலிகளிடம் வீழ்ந்தது.

நெடுங்கேணியிலிருந்து புளியங்குளம் நோக்கியும், ஒட்டுசுட்டானிலிருந்து மாங்குளம் நோக்கியும் இரு கள முனைகளில் புயல் வேகத்தில் புலிப் படைகள் முன்னேறிச் சென்று இராணுவத்தின் படை முகாம்களை நிர்மூலம் செய்து கொண்டிருந்த வேளையில் இம்ரான் - பாண்டியன் படையணி உள்ளிட்ட புலிகளின் இன்னொரு படைத் தொகுதி நெடுங்கேணியிலிருந்து வேறு திசையில் ஒதியமலை நோக்கி முன்னேறியது. தலைவரின் போர்த் திட்டத்திற்கு அமைய, அவரது விசேட பணிப்பின் பேரில் மணலாற்றுச் சிங்களக் குடியேற்றத்தின் பாதுகாப்புத் தளமாக இயங்கிய ஒதியமலையைக் கைப்பற்றும் நோக்குடனேயே எமது படையணி அப் பகுதியை நோக்கி நகர்ந்தது. எமது வீரர்கள் ஒதியமலையை அடைந்ததும், இரு படையணிகள் மத்தியிலும் உக்கிரமான சண்டை வெடித்தது. தலைவரின் விருப்பை நிறைவேற்ற வீராவேசத்துடன் போராடிய புலிப் படை, இராணுவத்தின் கடும் எதிர்ப்பையும் முறியடித்து மணலாற்றுப் பிரதேசத்தின் நுழைவாயிலில் அமைந்த ஒதியமலைப் பகுதியை தன் வசப்படுத்தியது.

நவம்பர் 4ஆம் நாளன்று, இரு களமுனைகளிலும் புலிப் படை அணிகள் மீளமைக்கப்பட்டன. கைப்பற்றிய பிரதேசங்களின் பாதுகாப்பைப் பலப்படுத்தியதுடன் புதிய அணிகளை இணைத்து ஒழுங்கமைத்து, அடுத்த கட்ட நடவடிக்கைகளுக்கான தயாரிப்பு வேலைகள் நடைபெற்றன. மூத்த தளபதி கேணல் பானுவின் தலைமையில் இயங்கிய கிட்டு பீரங்கிப் படையணிகள் இச் சமர்களில் அலாதியான திறமையைக் காண்பித்தன. குறி தவறாத, நேர்த்தியான எறிகணைத் தாக்குதல்களை நிகழ்த்தி, எதிரியைத் திகைப்பில் ஆழத்தின. முன்னேறிய எமது

படையணிகளின் நகர்வுகளுக்கு இசைவாக, கடுகதி வேகத்தில் சுடுகலச் சக்தியைப் பிரயோகித்து, எதிரியின் எதிர் தாக்குதல் வியூகங்களைத் தகர்த்தெறிந்து இந்த வன்னிப் பெரும் சமரின் மகத்தான சாதனைகளுக்கு முதுகெலும்பாக நின்றது எமது பீரங்கிப் படையணி. ஒரு நாள் இடைவெளியில் தயார் நிலை எடுத்ததன் பின்பு, நவம்பர் 5ஆம் நாள், கேணல் தீபன் தலைமையில், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி, இம்ரான் - பாண்டியன் படையணி ஆகிய விடுதலைப் புலிகளின் படையணிகள் கரிப்பட்டமுறிப்பின் பிரதான தளம் மீது தாக்குதலைத் தொடுத்தன. முன்னணிப் பாதுகாப்பு அரண்களையும் இடைநிலைத் தடைகளையும் உடைத்தெறிந்து உள்நுழைந்த புலி வீரர்கள் படைத் தளத்தைச் சுற்றி வளைத்து முற்றுகைக்கு உள்ளாக்கினர். கரிப்பட்டமுறிப்பு புலிகள் வசம் வீழ்ச்சியடைந்தால் கேந்திர முக்கியத்துவம் பெற்ற மாங்குளப் பெருந் தளத்திற்கு பேராபத்து எழலாம் என அச்சம் கொண்டது சிறீலங்கா படைத் தலைமை. இதனால், கரிப்பட்டமுறிப்பைக் கைவிடக் கூடாதென படைத்தள அதிகாரிகளுக்கு கட்டளை பிறப்பித்தது. இதன் காரணமாக இத் தளத்தில் நிலைகொண்டிருந்த அரச படையணிகள் மிகவும் மூர்க்கமான தற்காப்புச் சமரில் குதித்தன. ஆயினும் குறிதவறாத எறிகணைகளை ஏவிய வண்ணம், அலை அலையாக ஆவேசத்துடன் முன்னேறிய புலிகளின் படையணிகளைச் சிங்கள ஆயுதப் படைகளால் எதிர்கொள்ள முடியவில்லை. சிங்களப் படைகள் சிதறி ஓடின. காட்டுப் பாதையால் கனகராயன்குளம் நோக்கி ஓட்டம் பிடித்த படையினரைப் புலிகளின் படையணி ஒன்று விரட்டிச் சென்றது.

கரிப்பட்டமுறிப்பைக் கைப்பற்றியதும் உடனடியாகவே எமது படையணிகள் ஒலுமடுவை நோக்கி முன்னேறின. குறிதவறாது பீரங்கிக் குண்டுகளைப் பொழிந்த வண்ணம் புலிப் படை நிகழ்த்திய மின்னல் வேகத் தாக்குதலை ஒலுமடுவில் குலைநடுக்கத்துடன் நின்ற இராணுவத்தினரால் எதிர்கொள்ள முடியவில்லை. துணிந்தவர்கள் போராடி வீழ, ஏனையோர் படை முகாமிலிருந்து ஓடோடித் தப்பினர்.

ஒலுமடு புலிகளிடம் வீழ்ந்ததைத் தொடர்ந்து, ஒரு கிலோ மீட்டர் மேற்குப் புறமாக இருந்த மாங்குளம் தனிமைப்படுத்தப் பட்டது. இறுக்கமான பாதுகாப்புடன் அமையப் பெற்ற மாங்குளப் பெருந்தளத்தை தாமதமின்றித் தாக்கியழிக்க முடிவெடுத்தார்

பிரபாகரன். மாங்குளத் தாக்குதலுக்கு மூன்று முனைகளிலிருந்து ஒரே நேரத்தில் களமுனைகள் திறக்கப்பட்டன. கிளிநொச்சி வீதியூடாக பனிக்கன் குளத்திலிருந்தும் மல்லாவி வீதியூடாக மூன்று முறிப்புச் சந்தியிலிருந்தும் ஒலுமடு வீதியூடாகவும் மும்முனைகளிலிருந்தும் எமது படையணிகள் முன்னோக்கிப் பாய்ந்தன. மூன்ற களமுனைகளிலிருந்தும் பீரங்கி, மோட்டார் குண்டுகள் மழைபொழிய, கிளிநொச்சிப் பாதையால் முன்னேறிய எமது படையணிகள் மாங்குளத்தின் முன்னரங்கப் பாதுகாப்பு அரண்களை உடைத்தெறிந்து, படைமுகாமின் மையப் பகுதிக்குள் நுழைந்தபோது பயங்கரச் சண்டை வெடித்தது. இதற்கிடையில், கிழக்கு மேற்காக இரு முனைகளிலிருந்தும் முன்னேறிய எமது மற்றைய படையணிகளும் பொருது களத்தில் இறங்கச் சண்டை மும்முரமாகியது. தொடர்ச்சியான தோல்விகள் பற்றிக் கேட்டறிந்து, மனமுடைந்து, உறுதி தளர்ந்திருந்த அரச படையினருக்குப் புலிகளின் சூறாவளித் தாக்குதலை எதிர்கொள்ள முடியவில்லை. கட்டளைக் கட்டுப்பாட்டுக் கட்டமைப்பு சீர்குலையச் சிங்களத்தின் சிறப்புப் படையணிகள் பின்வாங்கி ஓடத் தொடங்கின. கண்டி வீதியால் கனகராயன்குளம் நோக்கித் தலைதெறிக்க ஓடிய இராணுவத்தைப் பின்தொடர்ந்து தாக்கியவாறு முன்னேறிச் சென்றது புலிப் படை. 1999 நவம்பர் 5ஆம் நாள் பிற்பகல் 3 மணியளவில் மாங்குளம் சந்தியும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளும் விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டின் கீழ் வந்தன.

மாங்குளத்திலிருந்து கண்டி வீதியால் புலிகளின் ஒரு படைத் தொகுதியும், கரிப்பட்டமுறிப்பிலிருந்து காட்டுப் பாதையால் இன்னொரு போரணியுமாக, கனகராயன்குளம் நோக்கி முன்னேறின. ஏற்கனவே, கனகராயன்குளம் பெரும் தளம் எமது பீரங்கித் தாக்குதலுக்கு இலக்காகி நிலைகுலைந்து இருந்தது. இரு நாட்களுக்கு முன்பு (நவம்பர் 3ஆம் நாள்) எமது போராளிகள் இத் தளம் மீது பாரிய பீரங்கித் தாக்குதலை நிகழ்த்தினர். பீரங்கிக் குண்டுகளுக்கு இலக்கான வெடிமருந்துக் கிடங்குகள் எரிமலை போல வெடித்துப் பரவிய தீயில் பல கட்டிடங்கள் எரிந்து நாசமாகின. இச் சம்பவத்தில் நூறுக்கும் மேற்பட்ட படையினர் பலியாகினர், 300இற்கும் மேற்பட்டோர் படுகாயமடைந்தனர். இத் தாக்குதலால் ஏற்கனவே நிலை தளம்பியிருந்த இப் படை முகாமில், பல்வேறு களமுனைகளிலிருந்து பின்வாங்கி ஓடிய படையினரும்

தஞ்சமடைந்து இருந்தனர். இப்படியான சூழ்நிலையில் மீண்டும் இந்தப் படைத் தளம் புலிப் படையணிகளின் இரு முனைத் தாக்குதலுக்கு இலக்காகியது. சிறீலங்கா இராணுவத்தின் இரு படைப் பிரிவுகளின் (டிவிசன்) தலைமையகங்களையும், சிறப்புப் படையணி 'பட்டாலியனை'யும், பீரங்கி, மோட்டார் ஏவு தளங்களையும் கொண்டதான உயர்நிலைப் பாதுகாப்பு வலையமாக விளங்கிய இப் பெரும் தளமானது அரச படைகளினதும் புலிப் படைகளினதும் பலப் பரீட்சைக்குக் களமாக மாறியது. இரு தரப்பும் மூர்க்கமாகப் பொருதின. புலிகளிடமிருந்த அலாதியான உறுதிப்பாடும் சாவுக்கு அஞ்சாத துணிவும், போராற்றலும் சிங்களப் படையினரிடம் இருக்கவில்லை. தப்பிப் பிழைக்க வேண்டும் என்ற குறிக்கோளுடனேயே சிங்களப் படை களமாடியது. இறுதியில் உறுதிதான் வென்றது. 'தப்பினால் தம்பிரான் புண்ணியம்' என அரச படைகள் சிதறியோட இரவிரவாக நிகழ்ந்த சண்டை அதிகாலையுடன் முடிவுக்கு வந்தது. நவம்பர் 6ஆம் நாள் அதிகாலை ஒரு மணிக்குக் கனகராயன்குளம் பெரும் தளமும், அங்கிருந்த பெருந்தொகையான ஆயுதத் தளபாடங்களும் விடுதலைப் புலிகளிடம் கைமாறியது. கனகராயன்குளத்திலிருந்து ஓயாத அலையாகப் புலியணிகள் புளியங்குளம் நோக்கி வீறுநடை போட்டன.

இது இவ்வாறிருக்க, நெடுங்கேணியிலிருந்து நைனாமடு நோக்கி முன்னேறிச் சென்ற புலிகளின் படைத் தொகுதி, அங்கு எதிரிப் படைகளின் ஆவேசமான எதிர்ப்பைச் சந்தித்தது. நைனாமடு வீழ்ச்சியடைந்ததால் இராணுவத்தின் கடைசி நிலையான புளியங்குளம் படைத் தளத்திற்குப் போராபத்து எழலாம் என அஞ்சிய படைத்தலைமை நைனாமடுவில் பாதுகாப்பைப் பலப்படுத்தியிருந்தது. உலகத்தையே திகைப்பூட்டிய போரியல் சாதனைகளைப் படைத்துச் செல்லும் புலிப் படை, இராணுவத்தின் எதிர்ப்பைத் துச்சமாக எண்ணிப் போரிட்டது. நைனாமடுப் படைத் தளத்தைத் தகர்த்தெறிந்த புலிப் படை, நைனாமடு மதியாமடு பகுதிகளை அன்றைய நாளே (நவம்பர் 5ஆம் நாள்) தனது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்தது. இதனையடுத்து, மறு நாள் அதிகாலை இப்படை அணிகள் புளியங்குளம் நோக்கி நகர்ந்தன.

நவம்பர் 6ஆம் நாட் காலை, புளியங்குளம் படைமுகாம் விடுதலைப் புலிகளின் இரு முனைத் தாக்குதலுக்கு

இலக்காகியது. நைனாமடுவிலிருந்து முன்னேறிய புலியணிகளும் கனகராயன் குளத்திலிருந்து முன்னேறிய அணிகளும் ஒன்றிணைந்து பெரும் தாக்குதலை நிகழ்த்தி புளியங்குளத்தை அன்றைய தினமே கைப்பற்றினர். புளியங்குளத்தை மீட்டதுடன் புலிப் படை நின்றுவிடவில்லை. அங்கிருந்து மேற்கே, கண்டி வீதியால் முன்னேறி பனிக்க நீராவி, பன்றிகெய்தகுளம் போன்ற பகுதிகளையும் தமது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்த எமது போராளிகள் ஓமந்தைக்குச் சமீபமாக தமது எல்லைக் காவல்நிலைகளைப் பலப்படுத்தினர்.

இது இவ்வாறிருக்க, அன்றைய நாளே (நவம்பர் 6ஆம் நாள்) மணலாற்றுப் பிரதேசத்தில் ஒதியமலையில் நிலைகொண்டிருந்த எமது படையணிகள், சிலோன் தியேட்டர், கென்றபாம், தனிக்கல், அளவெட்டிக்குளம், வசாவிளான் குளம், பப்பாசிக்குளம் ஆகிய பகுதிகளை எதிரியிடமிருந்து மீட்டெடுத்தன. பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னர் தமிழ் விவசாயிகளிடமிருந்து பறித்தெடுக்கப்பட்ட இந் நிலங்களை மீட்டெடுத்து, தலைவர் பிரபாகரனின் விருப்பை நிறைவு செய்தனர் புலி வீரர்கள்.

(ஓயாத அலைகள் மூன்றின் இரண்டாம் கட்டப் போர் நடவடிக்கையாக, 'போர் முழக்கம்' (ரணகோச) என்ற பெயரில், மன்னார் - பூநகரிப் பாதையில் சிறீலங்கா இராணுவம் கைப்பற்றிய பிரதேசங்களை, நவம்பர் 18-20 வரை நிகழ்ந்த சமரில் எமது படையணிகள் மீட்டெடுத்தன).

ஓயாத அலை மூன்று என்ற குறியீட்டுப் பெயருடன் நிகழ்ந்த வன்னிப் பெரும் சமரின் முழுப் பரிமாணத்தையும் சிங்கள அரசினாலும் இராணுவத் தலைமையினாலும் சரிவரக் கிரகித்துக் கொள்ள முடியவில்லை. இருபதாயிரம் இராணுவத்தினர் ஐநூறு சதுர மைல் பாதுகாப்பு வலயத்தில், கெட்டியாகக் கட்டிக் காத்த பெரும் படைத் தளங்கள் புலிகளின் புயல்வேகத் தாக்குதலில் ஒவ்வொன்றாக ஒரு சில நாட்களில் நிலைகுலைந்து வீழ்ந்த விசித்திரத்தை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. நம்ப முடியாதது ஒன்று நடந்து விட்டது போலச் சிங்கள அதிகார வர்க்கம் திகைத்து நின்றது.

இரண்டரை ஆண்டு காலமாகப் பகீரத முயற்சி எடுத்து, பல்லாயிரம் படையினரைப் பலிகொடுத்து, அங்குலம் அங்குலமாக இரத்தம் சிந்திக் கைப்பற்றிய பிரதேசங்களும், ஆக்கிரமித்த அந்த நிலத்தில் கட்டி எழுப்பப்பட்ட பாதுகாப்புக் கோட்டைகளும், ஐந்தே நாட்களில் பேரலையால் அடித்துச்

செல்லப்பட்ட மண்வீடுகள் போன்று கரைந்து அழிந்து போனது சிங்கள தேசத்திற்கு அதிர்ச்சியையும் ஏக்கத்தையும் கொடுத்தது. உலக விடுதலை வரலாற்றில் என்றுமே நிகழாத இந்தப் புதுமையான இராணுவச் சாதனையையும் அதனால் விளைந்த விபரீதமான பின்னடைவையும் வர்ணிப்பதற்குச் சரியான சொற்பதங்கள் கிடையாது ஊடக உலகம் தடுமாறியது.

விடுதலைப் புலிகள் இயக்கத்தால் இந்த மாபெரும் இராணுவச் சாதனையை எப்படி நிலைநாட்ட முடிந்தது என்ற கேள்வியையே ஊடகங்கள் எழுப்பின. யாழ்ப்பாணச் சமரில் தோற்கடிக்கப்பட்டு, வன்னிக் காடுகளில் பின்வாங்கிய ஒரு சிறிய கெரில்லா இயக்கம் எவ்விதம் இத்தகைய பூதாகர வளர்ச்சியையும் ராட்சதப் பலத்தையும் பெற்றது என்பதை இராணுவ ஆய்வாளர்களால் விளக்க முடியவில்லை. புலிகளின் வளர்ச்சியைச் சரிவர எடைபோடத் தவறிய இவர்கள், இராணுவத் தளர்ச்சியையே இந்தப் பாரிய பின்னடைவுக்குக் காரணமாகக் காட்டினார். பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாக முடிவின்றி, பயனின்றி, அர்த்தமின்றித் தொடரும் இந்த யுத்தத்தில் வெற்றி நிச்சயமற்றதாகவும் சாவு நிஜமானதாகவும் மாறியுள்ளதால் சிங்கள ஆயுதப் படைகள் மனம் முறிந்து, ஊக்கமிழந்து, போராடும் உறுதி தளர்ந்து போயுள்ளதாக இவர்கள் விளக்கமளித்தனர். இந்த வன்னிப் பெரும் சமர் பற்றிப் பல பரிமாணங்களில் பல ஆய்வுகள் முன்வைக்கப்பட்ட போதும் ஒரு உண்மையைச் சிங்கள தேசம் புரிந்து கொண்டது. அதாவது, விடுதலைப் புலிகளைப் போரில் வெற்றி கொள்வது இலகுவான காரியமல்ல என்பதைச் சிங்கள மக்கள் உணரத் தொடங்கினர்.

ஓயாத அலை மூன்று படை நடவடிக்கையில் களப் பலியான இராணுவத்தினரின் தொகையை எவருமே சரியாக மதிப்பிட முடியவில்லை. இரண்டாயிரம் வரையான படையினர் பலியாகி இருக்கலாமெனப் புலிகள் தரப்பு மதிப்பிட்டது. மூவாயிரத்திற்கும் மேற்பட்ட இராணுவத்தினர் கொல்லப்பட்டுள்ளதாக எதிர்க்கட்சியாகிய ஐக்கிய தேசியக் கட்சி பாராளுமன்றத்தில் குரலெழுப்பியது. தணிக்கைத் திரையால் உண்மையை மூடி மறைத்தது அரசாங்கம். 110 பேர் மட்டுமே கொல்லப்பட்டதாக முழுப் பூசணிக்காயை சோற்றில் மறைக்க முயன்ற அரசின் கேலிக் கூத்தை எவருமே நம்பிவில்லை.

தமிழீழ மண்மீட்புப் போரில், ஓயாத அலைகள் மூன்று

வரலாறு காணாத போரியல் சாதனையைப் படைத்தது. சிங்களக் குடியேற்றம் விழுங்கிய மணலாற்று மண் உட்பட வன்னியின் பெரு நிலங்கள் விடுதலைப் புலிகளின் நிர்வாகக் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்பட்டன. இந்தப் பெரு வெற்றியின் பயனாக, படைச் சம வலு புலிகளுக்குச் சாதகமாகத் திரும்பியது. தலைவர் பிரபாகரனின் நேர்த்தியான நெறிப்படுத்தலும், களத் தளபதிகளின் நிதானமான மதிநுட்பமான வழி நடத்தலும், அணித் தலைவர்களதும் புலிப் போராளிகளின் அபாரமான சாதனைகளும் ஒன்றிணைந்ததாக எமது போரியல் வரலாற்றில் ஒரு புதிய, புரட்சிகரமான அத்தியாயம் படைக்கப்பட்டது.

## ஆனையிறவு முற்றுகைச் சமர்

ஓயாத அலைகள் மூன்றின் நான்காவது கட்டமாக அமைந்த ஆனையிறவுச் சமரானது வன்னிப் பெரும் சமர்களுக்கு எல்லாம் சிகரமாக அமைந்தது, ஆனையிறவுப் பெருந்தளத்தின் புவியியல் கட்டமைவு, அதன் படை வலு, ஆயுத வலு, அதன் கேந்திர முக்கியத்துவம் ஆகியனவற்றை நன்கு பரிசீலனை செய்தே ஒரு நுட்பமான தாக்குதல் திட்டத்தை வகுத்தார் தலைவர் பிரபாகரன். மூலோபாயம், வியூக அமைவு, படை நகர்வு எல்லாவற்றிலுமே இத் திட்டம் வித்தியாசமானது, புதுமையானது. ஆனையிறவுச் சமரை ஒரு முற்றுகைச் சமராகவே நெறிப்படுத்தினார் பிரபாகரன்.

ஒருபுறம் கடலும், மறுபுறம் நீரேரிகளும், இன்னொரு புறத்தில் தரையும் சதுப்பு நிலங்களுமான புவியியல் அமைப்பைக் கொண்ட ஆனையிறவுப் படைமுகாம், யாழ்ப்பாணக் குடாநாட்டையும் வன்னியையும் துண்டித்து வைத்திருக்கும் தடை முகாமாகவே இயங்கி வந்தது. வட தமிழீழத்தின் தொண்டை முள்ளாகவும் யாழ்ப்பாணத்தின் சிறை வாசலாகவும் செயற்பட்டு வந்த இப் படைத் தளத்தை அழித்தொழிக்க 1991ஆம் ஆண்டு எமது இயக்கம் மேற்கொண்ட வலிந்து தாக்குதல் நடவடிக்கை வெற்றியளிக்கவில்லை. வெற்றிலைக்கேணியில் பெரியதொரு மீட்புப் படையைத் தரையிறக்கி ஆனையிறவைத் தக்க வைத்துக் கொண்டது சிங்கள அரசு. அந்தத் தாக்குதல் நடவடிக்கையை அடுத்து, ஆனையிறவுப் படை முகாம் படிப்படியாக பல பிரதேசங்களைக் கபளீகரம் செய்து அதன் நிலப்பரப்பு விரிவாக்கப்பட்டதுடன் அதன் பாதுகாப்பும் பலப்படுத்தப்பட்டது.

பரந்தனிலிருந்து பளை வரை கண்டி வீதியை விழுங்கியபடி நீட்சிபெற்று, வெற்றிலைக்கேணி, கட்டைக்காடு, உடுத்துறை, முள்ளியான் போன்ற தென்கிழக்குக் கரையோரப் பகுதிகளையும், வடக்கே புல்லாவெளியையும் உள்ளடக்கியதாக, ஒரு பரந்த பிரதேசத்தில், இயக்கச்சியிலும் ஆனையிறவிலும் இரு பெரும் படைமுகாம்களையும், கரையோரத் தளங்களையும், பல்வேறு சிறு முகாம்களையும், கடினமாகக் கட்டப்பட்ட காவல் அரண்களையும் கொண்டதான ஒரு பிரமாண்டமான கூட்டுப் படைத் தளத் தொகுதியாக (A Massive Military Complex) ஆனையிறவு விளங்கியது.

ஓயாத அலைகளாக வன்னிப் பெரும் சமர்களில் திகைப்பூட்டும் போரியல் சாதனைகளைப் படைத்த பிரபாகரனுக்கு ஆனையிறவுப் படைத் தளம் ஒரு சவாலாக அமைந்தது. யாழ்ப்பாண மீட்புக்குத் தடைக் கல்லாக விளங்கிய இப் படைத் தளத்தைத் தகர்த்தெறியும் தந்திரோபாயத்தைக் கொண்ட தாக்குதல் திட்டத்தை அவர் வரைந்தார். ஆனையிறவு மீதான முந்திய தாக்குதல் திட்டம் பிசகிய காரணங்களை ஆய்வு செய்து பார்த்ததில் அவருக்கு ஒரு உண்மை புலனாகியது. ஆனையிறவைக் கைப்பற்றுவதாயின் கடற்படையின் கடலாதிக்கத்தைக் கட்டுப்படுத்துவதோடு, தென்கிழக்காகவுள்ள பிரதேசங்களையும் எமது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வர வேண்டும் என்பதை அவர் உணர்ந்து கொண்டார். இதன் அடிப்படையில் ஒரு புதுமையான முற்றுகைச் சமருக்கான போர்த் திட்டத்தை வகுத்தார் பிரபாகரன்.

இத் திட்டத்திற்கு அமைவாக ஓயாத அலைகள் மூன்றின் மூன்றாம் கட்டம் முடுக்கிவிடப்பட்டது. 1999ம் ஆண்டு 10ஆம் நாள் இருட்பொழுதில், விடுதலைப் புலிகளின் தாக்குதல் அணிகள் கட்டைக்காடு, புல்லாவெளி படைமுகாம்களின் முன்னணி காவல் அரண்களை அழித்து முன்னேறின. பல மணி நேரமாக நடைபெற்ற கடும் மோதலின் பின்பு இப் படை முகாம்கள் புலிகளின் வசம் வீழ்ந்தன. இதனையடுத்து, வெற்றிலைக்கேணித் தளம் எமது போராளிகளின் தாக்குதலுக்கு இலக்காகியது. தரை வழியாகப் புலிகளின் ஒரு பெரும் படையணியும், கடல் வழியாகக் கடற்புலிகளின் தாக்குதல் அணியுமாகக் கூட்டிணைந்து வெற்றிலைக்கேணிப் படைத் தளம் மீது உக்கிரமான தாக்குதலைத் தொடுத்தன. வெற்றிலைக்கேணிப் படையினர் அபாய அறிவிப்பு விடுத்ததைத்

தொடர்ந்து சிறீலங்காக் கடற்படை அவ்விடத்திற்கு விரைந்தது. ஒரு கட்டளைக் கப்பலும், எட்டு டோறாப் பீரங்கிப் படகுகளும் களத்தில் குதித்தன. போர் விமானங்கள் குண்டுபொழிய தரையிலும் கடலிலும் மூர்க்கமான சண்டை தொடர்ந்தது. கொந்தளித்த கடலில், சக்தி வாய்ந்த கடற் கலங்களுக்கு எதிராக வீராவேசத்துடன் போரிட்டனர் கடற்புலிகள். இறுதியில் வெற்றிலைக்கேணிக்கு மீட்பு உதவி செய்ய முடியாது கடற் படைக் கலங்கள் பின்வாங்கின. தனிமைப்படுத்தப்பட்ட வெற்றிலைக்கேணித் தளம் டிசம்பர் 11ஆம் நாள் பிற்பகல் புலிப் படை வீரர்களிடம் வீழ்ந்தது. வெற்றிலைக்கேணியின் வீழ்ச்சியுடன் முல்லைத்தீவு மாவட்டத்தின் கரையோரக் கடலாதிக்கம் கடற்புலிகளின் கைக்கு வந்தது. வெற்றிலைக் கேணியைக் கைப்பற்றியதை அடுத்து, முள்ளியான், புல்லாவெளி, ஆழியவளை ஆகிய இடங்களில் அமைந்திருந்த சிங்கள இராணுவத்தின் படை முகாம்களை அழித்து அப் பிரதேசங்களை தமது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்தனர் புலிப் படை வீரர்கள். இப் பிரதேசங்கள் கைப்பற்றப்பட்டதை அடுத்து, ஆனையிறவின் தென்கிழக்குப் பாதுகாப்பு வலயம் விடுதலைப் புலிகளின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. அத்துடன் வெற்றிலைக்கேணிக் கடற் தளத்தை பறிகொடுத்ததால் கடல்வழி விநியோகத்தையும் ஆனையிறவுப் பெரும் தளம் இழந்தது.

பிரபாகரனின் தாக்குதற் திட்டத்தின் முதற் கட்டம் வெற்றிகரமாக நிறைவெய்தியது. ஆனையிறவின் பாதுகாப்புத் தூண்களாக, அதன் தென்கிழக்குப் பிராந்தியத்தில் அமைந்திருந்த படைத் தளங்களைத் தாக்கியழித்து அப் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டதால், முற்றுகைத் திட்டத்தின் ஒரு முக்கிய அம்சம் நிறைவடைந்தது. அடுத்த கட்டமாக, ஆனையிறவின் பலம்பொருந்திய முன்கவசக் கோட்டைகளாக அமைந்திருந்த பரந்தன், உமையாள்புரம் பிரிகேட் படைத் தளங்களைத் தாக்கியழிப்பதுதான் பிரபாகரனின் திட்டமாக இருந்தது. இச் சமர் முனைக்கான கட்டளைத் தளபதியாகக் கேணல் தீபன் நியமிக்கப்பட்டார்.

1999ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 16ஆம் நாள் பரந்தன் - உமையாள்புரம் சமர் வெடித்தது. பீரங்கி, மோட்டார் அணிகளின் சூட்டாதரவுடன், சார்ள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியும் மாலதி படையணியும் இணைந்த படைத் தொகுதி, இந்த முனைகளில், நேராக ஏ-9 வீதியூடாகவும், பக்கவாட்டாக பரந்தன் - முல்லை

வீதியூடாகவும் முன்னேறின. பகல் ஒரு மணிக்கு ஆரம்பமாகிய சண்டை அடுத்த நாள் காலை வரை ஓயாது மும்முரமாகத் தொடர்ந்தது. எதிரிப் படையணிகளும் தமது நிலைகளிலிருந்து மூர்க்கமாகப் போரிட்டன. மரபுவழி ஆயுதங்களைக் கச்சிதமாகக் கையாண்டு, வீராவேசத்துடன் முன்னேறிப் போராடிய எமது வீரர்களிடம் பரந்தனிலிருந்த இரு பிரதான படைத் தளங்கள் வீழ்ச்சியடைந்தன. இப் படைத் தளங்களிலிருந்து தப்பியோடிய படையினர் பரந்தன் ரசாயனத் தொழிற்சாலையில் அமையப் பெற்றிருந்த பிரிகேட் தலைமைத் தளத்தில் தஞ்சமடைந்தனர். புலிகளின் படையணிகள் முன்னேறி வருவதை அறிந்து அச்சமடைந்த ஆனையிறவு இராணுவத்தினர் மேலதிக துணைப் படைகளையும் இங்கு அனுப்பியிருந்தனர். படை பலம் பெற்ற பிரிகேட் தளம் புலிகளுடன் மும்முரமாகப் பொருதியது. டிசம்பர் 20ஆம் நாள் வரை பயங்கரச் சண்டை தொடர்ந்தது. இறுதியில், எமது வீரர்களின் துணிவுக்கும், தளராத உறுதிக்கும், போராற்றலுக்கும் அரச படையினரால் முகம் கொடுக்க முடியவில்லை. பிரிகேட் தலைமைத் தளம் புலிகளிடம் வீழ்ந்தது. இறந்தவர்கள் போக, எஞ்சியோர் உமையாள்புரம் நோக்கிச் சிதறியோடினர்.

டிசம்பர் 27ஆம் நாள், மீண்டும் சமர் வெடித்தது. விடுதலைப் புலிகளின் படையணிகள் மும் முனைகளிலிருந்து உமையாள்புரம் பிரிகேட் தலைமையகம் நோக்கி முன்னேறின. ஆனையிறவின் முன்னரங்கப் பாதுகாப்புக் கவசமான தளத்திலிருந்து புலிப் படையின் வருகைக்காக அங்கலாய்ப்புடன் காத்திருந்த அரச படையணிகள் மிக மூர்க்கமான சண்டையில் குதித்தன. இரு தரப்பும் விடாப் பிடியாக ஆவேசத்துடன் போரிட்டன. இறுதியில் புலிகளின் வீரமே சமரின் முடிவை நிர்ணயித்தது. உமையாள்புரம் எமது வீரர்கள் வசம் வீழ்ந்தது. ஓயாத அலைகள் மூன்றின் மூன்றாம் கட்டம் நிறைவு பெற்றது. ஆனையிறவு முற்றுகைச் சமருக்காக தலைவர் பிரபாகரன் வகுத்த திட்டத்தின் ஒரு முக்கிய அம்சம் வெற்றிகரமாக நிறைவடைந்தது. விடுதலைப் புலிகளின் குறட்டு வியூகப் பொறிக்குள் ஆனையிறவுப் படைத் தளம் படிப்படியாக வீழ்ந்து கொண்டிருந்தது. யாழ்ப்பாணத்துடனான விநியோகத் தொப்புள் கொடியாக இனி மிஞ்சி இருப்பது ஏ-9 கண்டி நெடுஞ்சாலைதான். அந்த விநியோகப் பாதையை விடுதலைப் புலிகளால் நெருங்க முடியாது என நம்பிக்கையுடன் இருந்தது சிங்கள இராணுவத்

தலைமை. இந்த நம்பிக்கையை உடைத்தெறியும் வகையில் ஒரு திகைப்பூட்டும் மூலோபாய நகர்வைத் திட்டமிட்டார் பிரபாகரன். உலகப் போரியல் நிபுணர்களையே வியப்பில் ஆழ்த்திய இப் படை நகர்வு ஓயாத அலைகள் மூன்று கட்டம் - 4 எனப் பெயரிடப்பட்டது. இதன் மூலோபாயக் குறிக்கோள் ஆனையிறவுக் கூட்டுப் படைத் தளத்தை முற்றுகையிட்டு, இதற்கான விநியோகத்தைத் துண்டித்து, அதனைத் தாக்கியழிப்பதாகும்.

2000ஆம் ஆண்டு மார்ச் மாதம் 26ஆம் நாள் பிற்பகல். ஆனையிறவு இறுதிச் சமருக்கான நகர்வு ஆரம்பமானது. கனரக ஆயுதங்களைத் தரித்த வண்ணமும், கட்டி இழுத்த வண்ணமும் விடுதலைப் புலிகளின் படை அணிகள் ஆனையிறவுக்குத் தென்கிழக்கிலுள்ள கட்டைக்காடு, வெற்றிலைக்கேணி, ஆழியவளை ஆகிய கடலோரப் பிரதேசங்களை வந்தடைகின்றன. பெண்களும் ஆண்களுமாக, பல்வேறு படையணிகளைச் சேர்ந்த பல்லாயிரம் போராளிகளும் அவர்களது கட்டளைத் தளபதிகளும் அணித் தலைவர்களும் ஒன்றாக அணிதிரண்டு, எமது போரியல் வரலாற்றில் மகத்தான சாதனையாகப் பதிவாகப் போகும் தரையிறக்கத்திற்குத் தயாராகினர். அந்த வரலாற்றுத் தரையிறக்கத்தைச் சாதித்து முடிக்கும் பெரும் பொறுப்பைச் சுமந்தபடி கடற்புலிகளின் சிறப்புத் தளபதி கேணல் சூசையும், கடற்புலிகளின் தாக்குதல் அணிகளும், படகுத் தொகுதிகளுமாக அங்கு வந்து சேர்ந்தன. ஆனையிறவுச் சமரின் ஒருங்கிணைப்புத் தளபதி கேணல் பானுவும் அங்கு வந்தடைந்தார்.

பொழுது சாய்ந்து இருள் படியும் நேரம். பெரும் கடலில் எதிரியுடன் பொருதி, தரையிறக்கத்திற்குப் பங்கம் நிகழாது பார்த்துக் கொள்ளக் கடற் புலிகளின் தாக்குதல் அணிகள் கடலில் இறங்கின. அவற்றைத் தொடர்ந்து அணி அணியாகப் படகுகளில் புலிகளின் போரணிகள் புறப்பட்டன. ஒரு மணி நேரம் வரை புலி வீரர்களைச் சுமந்து சென்ற படகுகள், இருளில் அமைதியாக நகர்ந்து சென்றன. அவ்வேளை தாளையடித் தளத்தில் இயங்கிய 'ரேடார்' மூலம், கடலில் எமது படை நகர்வை எதிரி கண்டு கொண்டான். கடலில் பயங்கரச் சண்டை வெடித்தது.

உயரக் கடலில் சிறீலங்காக் கடற்படையின் கட்டளைத் தாய்க் கப்பல் வழிநடத்த 16 டோறா பீரங்கிப் படகுகள் கடற் சமரில் களமிறங்கின. எதிரியின் பீரங்கிச் சண்டைப் படகுகள் முன்னேறி, தரையிறக்கப் படகுகளைத் தாக்க விடாதவாறு

வியூகம் அமைத்து, கடற் புலிகளின் தாக்குதல் அணிகள் போரிட்டன. கடலைப் பிளந்து, சுற்றிச் சுழன்று, மிக நுட்பமாக வீரமுடன் களமாடிய எமது கடற்புலிகள், போராளிகள் பயணித்த படகுகளை எதிரியின் கலங்கள் நெருங்காதவாறு வீரச் சமர் புரிந்தனர். தரையிறங்கு படகுகள் தாளையடி படைத் தளத்தை அண்மித்தபோது தரையிலிருந்தும், மேலே உயரக் கடலிலிருந்தும் தாக்குதல் தீவிரமடைந்தது. இருளையும் கிழித்துக் கொண்டு தீப் பந்தங்களாக வானிலிருந்து நெருப்பு மழை பெய்தது. அந்த அக்கினிக் கடலை நீந்திக் கடந்து கொண்டிருந்தன எமது போராளிகளின் படகுகள்.

விடியல் நேரம். கடற்புலிகளின் கவசத்துடன் தரையிறக்கம் வெற்றிகரமாக முடிவுற்றது. பல ஆயிரம் போராளிகளை இரவிரவாகச் சுமந்து வந்த படகுத் தொகுதிகள் குடாரப்புவில் தரை தட்டின. தமிழீழ விடுதலைப் போரியல் வரலாற்றில் ஒரு மகத்தான சரித்திரச் சாதனையாக இந்தத் தரையிறக்கம் அமைந்தது. உலகப் போரியல் வரலாற்றிலும் இப்படியானதொரு திகைப்பூட்டும் வீர சாதனையை எந்த ஒரு விடுதலை இயக்கமும் படைத்து விடவில்லை.

பிரபாகரனின் நுட்பமான போர்த் திட்டத்திற்கு அமையத் தரையிறங்கிய படையணிகளின் ஒரு தொகுதி மூத்த தளபதி கேணல் பால்ராஜின் தலைமையில் கண்டி வீதிவரை நகர்ந்து நிலையெடுத்தது. இப் படைத் தொகுதி பின்னர் இரு அணிகளாகப் பிரிந்து, ஆனையிறவை நோக்கியும் யாழ்ப்பாணத்தை நோக்கியும் இரு தரப்பு அரண்களை அமைத்து ஏ-9 நெடுஞ்சாலையைத் துண்டித்தது. முகாமலைக்குச் சமீபமாக, இத்தாவில் பகுதியில் நான்கு கிலோமீட்டர் தூரமும் ஒன்றரைக் கிலோ மீட்டர் அகலமுமான சிறிய நிலப்பரப்பில், உள் தடுப்பு வெளித் தடுப்பு அரண்களை நிறுவி, சிங்கள இராணுவத்தின் பிரதான விநியோகப் பாதையைத் துண்டித்து எதிரியோடு மோதும் பொருது களத்தை அமைத்தனர் புலிப் படை வீரர்கள். கேணல் பால்ராஜின் வழி நடத்தலில், தளபதி லெப்.கேணல் ராஜன் தலைமையில் சார்ள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி, மாலதி படையணி, சோதியா படையணி போன்ற புலிகளின் படைப் பிரிவுகள் வரலாற்றில் பதிவாகப் போகும் இத்தாவில் சமருக்குத் தயாராகி நின்றனர். இது இவ்வாறிருக்க, குடாரப்புவில் தரை இறங்கிய இன்னொரு படைத் தொகுதி கேணல் தீபன் வழிநடத்தலில், லெப்.கேணல் விநோத்தின்

தலைமையில் ஆண், பெண் அணிகளைக் கொண்ட கடற்புலிகளின் படையணிகள் தாளையடி - செம்பியன்பற்றுப் படைத் தளத்தை தாக்கியழிக்கும் சண்டைக்குத் தயாராகின. சிறீலங்கா இராணுவத்தின் 53ஆவது டிவிசன் சிறப்புப் படையணிகளைக் கொண்டதும், வலுவான இறுக்கமான பாதுகாப்பு அரண்களைக் கொண்டதுமான இப் படைத் தளம் தாக்கியழிக்கப்பட்டாற்தான் தரையிறங்கிய புலிப் படையணிகளுக்குத் தரை மார்க்கமான விநியோகம் சாத்தியமாகும். பிரபாகரனின் போர்த் திட்டத்தின்படி இப் படை முகாமை கைப்பற்றுவதன் அவசியத்தை கேணல் தீபன் நன்கு உணர்ந்திருந்தார். எனவே, தரையிறங்கிய அன்று (டிசம்பர் 27ஆம் நாள்) காலையே புலிகளின் போரணிகள் இப் படை முகாம் மீது உக்கிரமான சண்டையைத் தொடுத்தன. உறுதியான பாதுகாப்பு அரண்களையும், கட்டிடத் தொகுதிகளையும் பின்பலமாகக் கொண்ட இராணுவத்தினர் கடும் எதிர்த் தாக்குதலை நடத்தி, நாம் கைப்பற்றிய பிரதேசத்தில் ஒரு பகுதியை மீண்டும் தம் வசப்படுத்தினர். சண்டையை இடைநிறுத்தி, அடுத்த கட்டத் தாக்குதலைப் புதிய தந்திரோபாய நகர்வுடனும், போர் உத்திகளுடனும் ஒழுங்கமைத்தார் கேணல் தீபன். 29ஆம் நாள் அதிகாலை 3 மணிக்குப் புலிகளின் படையணிகள் இரு முனையில் மூர்க்கமாக மோதி முன்னேறின. புலிப் படையின் வீராவேசத் தாக்குதலுக்கு முகம் கொடுக்க முடியாத எதிரிப் படைகள் பின்வாங்கிச் சிதறி ஓடின. செம்பியன்பற்று, மருதங்கேணிப் பகுதிகள் விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்பட்டன. தரையிறங்கிய எமது படையணிகளுக்குத் தரைவழி விநியோகம் சாத்தியமாயிற்று.

இதற்கிடையில் தரையிறங்கிய கரும்புலிப் படையணி ஒன்று, 27ஆம் நாள் இரவோடு இரவாக பளைவரை நகர்ந்து சென்று, அங்கு அமையப் பெற்றிருந்த எதிரியின் பீரங்கித் தளங்களைத் தகர்த்து அழித்தது. திடீரென, எதிர்பார்க்காதவாறு பீரங்கித் தளங்கள் அழிக்கப்பட்டு பீரங்கிச் சூட்டாதரவு முடக்கப்பட்டதால் எதிரியின் தாக்குதல் சக்தி ஓரளவுக்கேனும் மட்டுப்படுத்தப்பட்டது.

தாளையடி - செம்பியன்பற்றுப் படைத்தளம் விடுதலைப் புலி வீரர்களிடம் வீழ்ச்சியடைந்த செய்தியால் ஏக்கமடைந்த சிங்களப் படைத் தலைமை, புலியணிகள் இத்தாவில் வரை முன்னேறி கண்டி வீதியைத் துண்டித்து அங்கு நிலையெடுத்திருப்பதை

அறிந்து திகிலடைந்தது. ஆனையிறவின் விநியோக ஆணிவேர் அறுபட்டிருப்பது இராணுவத் தலைமைக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. பிரமாண்டமான ஆனையிறவுக் கூட்டுப் படைத் தளமும் அங்கு நிலைகொண்டிருக்கும் பன்னீராயிரம் படை வீரர்களும் சுற்றி வளைக்கப்பட்டு, முற்றுகைக்கு ஆளாகி, விநியோகப் பாதை துண்டிக்கப்பட்டு, தனிமைப்படுத்தப்பட்டு நிற்கும் போராபத்தைச் சிங்கள அரசு உணர்ந்து கொண்டது. எப்படியாவது, எந்த வழியிலாவது அரச படைகளின் முழுமையான படை வலுவையும் பாவித்துப் புலிகளின் முற்றுகைச் சமரை முறியடிப்பதென சிங்கள அரசும் படைத்துறைத் தலைமையும் முடிவு எடுத்தன. இந்த முடிவை உடனடியாகச் செயற்படுத்துவதெனவும் தீர்மானிக்கப்பட்டது. இதற்கமைய, இத்தாவிலில் எமது போராளிகள் நிலையெடுத்த இரண்டாவது நாள், (மார்ச் 28ஆம் நாள்) மாலை நான்கு மணியளவில், சார்ள்ஸ் அன்ரனி படையணி நிலையெடுத்திருந்த கண்டி நெடுஞ்சாலைப் பகுதியில் சிங்களப் படையணிகள் தாக்குதலைத் தொடுத்தன. ஆனையிறவுப் பெருந்தளத்திலிருந்து முன்னேறி வந்த இராணுவத்தினர் டாங்கிகள், கவச வாகனங்கள் சகிதம் மூன்று முனைகளில் எமது முன்னணிப் பாதுகாப்பு அரண்களை உடைத்து எமது பாதுகாப்பு வலயத்தினுள் நுழைந்தனர். எதிரியின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்த எமது படையணிகள், எதிரியைத் திகைப்பூட்டும் வகையில் தீரமுடன் களமாடினார்கள். இரவு 11 மணிவரை கடும் சண்டை தொடர்ந்தது. இறுதியில், எதிரிப் படையணிகள் இழப்புகளுடன் விரட்டியடிக்கப்பட்டன. இத்தாவில் பகுதியில் எமது படை பலத்தையும், சுடுகலச் சக்தியையும், மனோதிடத்தையும் கணிப்பீடு செய்து பார்க்கவே இந்த ஊடுருவல் தாக்குதல் நடத்தப்பட்டது. எமது போர் வலுவை மதிப்பீடு செய்து கொண்ட சிங்கள இராணுவம் பெரும் எடுப்பிலான படை நடவடிக்கைகளுக்குத் திட்டமிட்டது.

விமானங்கள் குண்டுபொழிய, பீரங்கி மோட்டார் சூட்டாதரவுடன், டாங்குகள் கவச வாகனங்கள் சகிதம் பெரும் எடுப்பில் மார்ச் 30ஆம் நாளன்று சிங்கள இராணுவம் மேற்கொண்ட தீவிரமான தாக்குதலுக்கு இம் முறையும் சார்ள்ஸ் அன்ரனி சிறப்புப்படை முகம்கொடுத்தது. எமது போர் வியூகத்தை உடைத்து, பாதை மறிப்பை முறியடிக்க சிங்களப் படையணிகள் வெறிகொண்டு போராடின. அன்று காலை 6:30 மணிக்கு

ஆரம்பமாகிய சண்டை முன்னிரவு 7 மணிவரை நீடித்தது. ஒரு பகல் பூராக முக்கி முக்கிப் போராடியும் பிடித்த ஒரு காவலரணைக் கூட தக்க வைக்க முடியாது, பெரும் இழப்புக்களுடன் பின்வாங்கியது சிங்களப் படை.

மார்ச் 31ஆம் நாள், யாழ்ப்பாணத்திலிருந்து டாங்கிகள், கவச வாகனங்களுடன் முன்னேறி வந்த எதிரிப் படைகளை கண்டி வீதியில் வைத்து வழி மறித்தனர் சோதியாப் படையணிப் போராளிகள். பல மணி நேரமாக நடைபெற்ற உக்கிரமான சண்டையின் பின்பு, சிங்களப் படையணிகளை பின்வாங்கி ஓடச் செய்தனர் எமது பெண் போராளிகள்.

புலிப் படையணிகளின் உடைக்க முடியாத உறுதியும், எதற்குமே அஞ்சாத துணிவும், அபாரமான போர்த் திறனும் சிங்களப் படைகளைத் திணறடித்தன. ஆயினும் இந்த முற்றுகைச் சமரை முறியடிக்காது போனால் ஆனையிறவு வீழ்ச்சியடைந்து யாழ்ப்பாணத்திற்குப் பேராபத்து எழலாம் என இராணுவம் அஞ்சியது. எனவே, என்ன விலை கொடுத்தும், இத்தாவில் சமரில் புலிகளின் முதுகெலும்பை முறித்து, முற்றுகையையும் உடைத்துவிடச் சிங்களப் படைத் தலைமை உறுதி பூண்டது. ஏப்ரல் 2ஆம் நாளன்று ஒரு புதிய தந்திரோபாய நகர்வுடன் தனது அசுர பலத்தைப் பிரயோகித்து, புலிகளுடன் பொருதியது சிங்களப் படை. ஆனையிறவிலிந்து ஒரு படைத் தொகுதியும், யாழ்ப்பாணத்திலிருந்து இன்னொரு படைப் பிரிவுமாக ஒரே சமயத்தில் இத்தாவிலில் அமைந்த புலிகளின் வலயத்தை உடைக்க முயன்றன. என்றுமில்லாதவாறு இத்தாவில் சண்டை உக்கிரம் அடைந்தது. சண்டையின் உச்ச கட்டத்தில், நீரேரிப் பகுதி ஊடாகப் புலிகளின் முன்னணிப் பாதுகாப்பு அரண்களை உடைத்து, ஊடறுத்து, உள் நுழைந்தன சிங்களப் படைகள். டாங்குகள், கவச வாகனங்கள் சகிதம் இத்தாவில் வலயத்திற்குள் புகுந்த அரச படையணிகள் எமது போரணிகளின் ஒரு பகுதியைச் சுற்றி வளைத்து முற்றுகையிட முனைந்தன. எதிரியின் தந்திரோபாய நகர்வை ஊகித்தறிந்த எமது வீரர்கள் மயிர்க்கூச்செறியும் சண்டைகளை நிகழ்த்தி எதிரியின் திட்டத்தை முறியடித்தனர். எமது படைகளை முற்றுகையிட முனைந்த எதிரி எமது படைகளின் முற்றுகைக்குள் சிக்கிக் கொண்டு அங்கலாய்த்தான். எதிரியின் கவச வாகனங்கள் திசை தெரியாது அங்குமிங்கும் அலைந்து திரிந்தன. குழு மாடுகளாகப் பற்றைகளை உழுது திரிந்த டாங்குகளை எமது கவச எதிர்ப்பு

அணிகளின் உந்துகணைச் செலுத்திகள் தாக்கியழித்தன. அன்றைய நாள் கடும் சமரில் எமது ஆண், பெண் போராளி அணிகளின் அபாரமான போராற்றலைக் கண்டு எதிரிப் படைகள் திகைப்படைந்தன. அன்று நண்பகல் 12 மணிக்குத் தொடங்கிய சமர் இரவு வரை நீடித்தது. பல நூற்றுக்கணக்கான படையினரின் உடல்கள் அங்குமிங்குமாக அப் பிரதேசம் எங்கும் சிதறிக் கிடந்தன. எஞ்சிய படையணிகள் இரவின் இருளில் தலை குனிவுடன் தலைமறைவாகின.

தமது முயற்சிகள் முறியடிக்கப்பட்டு பெரும் உயிர்ச் சேதத்தைச் சந்தித்தபோதும் இராணுவத் தலைமை, விடுதலைப் புலிகளை வெற்றி கொள்ள வேண்டும் என்ற வெறியிலும் குருட்டு நம்பிக்கையிலும் தனது படை நடவடிக்கைகளைத் தொடர்ந்தது. ஏப்ரல் 4ஆம் நாள் மீண்டும் இத்தாவிலில் புலிகளின் நிலைகள் மீது ஆக்ரோசமான தாக்குதலைத் தொடர்ந்தது. கடைசி முயற்சி போன்று ஆனையிறவுப் படை முகாமிலிருந்தும் யாழ்ப்பாணத்திலிருந்தும் படையணிகளை நகர்த்தி ஒரே நேரத்தில் இத்தாவில் மீது படையெடுப்பை நிகழ்த்தியது. ஆனையிறவிலிருந்து முன்னேறிய பிரதான படையணியை கேணல் விதுஷாவின் தலைமையிலான மாலதி படையணியைச் சேர்ந்த போராளிகள் எதிர்கொண்டு தாக்கினர். இது எதிரியின் ஆறாவது தடையுடைப்புப் போர் நடவடிக்கையாகும். ஏற்கனவே நிகழ்ந்த தாக்குதல்களினால் புலிப் படை ஆட் பலத்தை இழந்து, மனோ பலம் குன்றி, பலவீனம் அடைந்திருக்கலாமென எதிரி தவறாக மதிப்பீடு செய்திருந்தான். அந்தப் போலி நம்பிக்கையுடன் பொருதிய எதிரிக்குப் பேரதிர்ச்சி காத்திருந்தது. பீரங்கி, மோட்டார் சூட்டாதரவுடன் எமது முன்னணிக் காப்பரண்களைத் தகர்த்து இரு முனைகளில் முன்னேறிய எதிரிப் படைகளைச் சுற்றி வளைத்து வீராவேசத்துடன் போரிட்டனர் பெண்புலி வீரர்கள். முன்னேறிய இராணுவத்தினரை ஒரு முற்றுகைப் பொறி வியூகத்திற்குள் சிக்க வைத்துக் களமாடிய எமது போராளிகளின் போர்த் திறனும் துணிச்சலும் எதிரியைத் திகைப்பில் ஆழ்த்தியது. காலை தொடங்கி இரவு வரை நீடித்த அக் கொடும் சமரில் இரு தரப்பிலிருந்தும் கொட்டப்பட்ட குண்டுகள் இத்தாவில் பகுதியை அதிரவைத்தன. இறுதியில், பலத்த உயிரிழப்புடன் சிங்களப் படையணிகள் பின்வாங்கின. அன்றைய நாள் வாங்கிக் கட்டிய அந்தப் பலத்த அடி ஐந்து நாட்களுக்கு எதிரியை ஓய்வெடுக்கச் செய்தது.

தோல்விக்கு மேல் தோல்வியாக ஏற்பட்டு வரும் பின்னடைவுகளைச் சிங்களப் படைத்துறைத் தலைமையால் சகித்துக் கொள்ள முடியவில்லை. இராணுவக் கட்டுப்பாட்டுப் பிரதேசத்தினுள் தரையிறங்கி ஊடுருவிய புலிப் படையணிகள் இத்தாவில் என்ற சிறு கிராமத்தில், நான்கு கிலோ மீட்டர் நீளமும் ஒன்றரைக் கிலோ மீட்டர் அகலமுமான ஒரு துண்டு நிலத்தில், நாற்கட்ட வடிவமான பாதுகாப்புப் 'பெட்டி' அமைத்து, அதற்குள் இருந்தபடியே அசுர பலத்துடன் இராணுவம் ஏவிவிட்ட மூர்க்கத்தனமான தாக்குதல்களை வெற்றிகரமாக முறியடித்து வரும் அதிசயத்தைப் படைத்துறைத் தலைமையால் நம்ப முடியவில்லை. இந்தப் பின்னடைவுகளுக்குப் புலிகளின் வீரத்தையும் போர்த் திறனையும் காரணமாகக் கற்பிக்க விரும்பாத படைத் தலைமை, தனது தாக்குதற் தளபதிகளின் கோழைத்தனத்தால் விளைந்த வினையெனத் தப்பாகக் கணக்கிட்டது. இதனால் களநிலைத் தளபதிகளை மாற்றியமைத்து, புதிய தாக்குதல் திட்டங்களை வகுத்து, பெரும் படை திரட்டி, ஏப்ரல் 10ஆம் நாளன்று இத்தாவில் மீது படையெடுத்தது சிங்கள இராணுவம்.

ஆட் பலத்தையும், படைக் கல வலுவையும் அணிசேர்த்த இராணுவத்தினர் இதுவரை பிரயோகிக்காத பெரும் பலத்துடன், கொடிகாமத்திலிருந்து முன்னேறி இத்தாவிலில் அமைந்த எமது நிலைகள் மீது மும்முனைத் தாக்குதலைத் தொடுத்தனர். அன்று காலை 6:30 மணியளவில் பீரங்கிகளின் முழக்கத்துடன் சமர்க் களம் திறந்தது. கண்டி வீதியோரமாக ஒரு முனையில் முன்னேற முயன்ற இராணுவத்தைக் கேணல் துர்க்கா தலைமையிலான சோதியா படையணி எதிர்கொண்டது. அடுத்த இரு முனைகளிலும் சார்ள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிகள் சிங்களப் படைகளுடன் மோதின. இதுவரை காணாத ஒரு கொடூரமான சமரை அன்றுதான் இத்தாவில் மண் கண்டு கொண்டது. மூலை முடுக்கெல்லாம் வீழ்ந்து வெடித்த குண்டு மழைக்குள் நின்றபடி, இரும்பு யானைகளில் சவாரி வந்த சிங்களத் துருப்புகளை அசாத்தியமான துணிவுடன் எமது ஆண், பெண் போராளிகள் எதிர்த்துப் போராடினார்கள். புலிகளின் வீரத்திற்குப் பறைசாற்றும் மயிர்க்கூச்செறியும் பல நிகழ்வுகளும் இச் சமரில் இடம்பெற்றன. எமது நிலைகளை எதிரி கைப்பற்றுவதும் பின்பு பின்வாங்கி ஓடுவதும், மீண்டும் முயற்சிப்பதும் அது முறியடிக்கப்படுவதுமாக சிங்களப் படைகள்

மேற்கொண்ட பகீரத முயற்சிகளை எல்லாம் புலிப் படைகள் முறியடித்தன. காலை தொடங்கிய சமர் நள்ளிரவு வரை, கிட்டத்தட்ட 18 மணி நேரம் வரை நீடித்தது. எதிரி தனது முழுப் பலத்தையும் பிரயோகித்தும் புலிகளின் பாதுகாப்புப் 'பெட்டியை' அசைத்து விட முடியவில்லை. மறுநாள் காலையும் இராணுவம் மேற்கொண்ட இன்னொரு முயற்சியையும் எமது போராளிகள் வெற்றிகரமாக முறியடித்தனர். சிங்கள இராணுவத்தின் ஆணவம் இத்தாவில் மண்ணில் உடைத்தெறியப்பட்டது. ஆட் பலத்தையும் ஆயுத பலத்தையும் விட ஆன்ம பலமே வெற்றியை நிர்ணயிக்கும் சக்தி என்பதை இத்தாவில் சமர் மூலம் எதிரிக்கு உணர்த்தினர் எமது வீரர்கள். நெஞ்சுரத்தின் நினைவழியாக் காவியமாக இத்தாவில் கள மண்ணில் ஒரு சரித்திரத்தைப் படைத்தார்கள் எமது மண்ணின் மறவர்கள்.

இத்தாவில் சமர் ஆனையிறவின் தலைவிதியை நிர்ணயித்தது. இத்தாவிலில் எட்டுத் தடவைகள் பலப் பரீட்சைகள் நடத்தி, பெருந் தொகையில் உயிரிழப்பையும் ஆயுதத் தளபாட அழிவையும் சந்தித்து, மனம் தளர்ந்த சிங்களப் படைகள் முடங்கிய களப் புறநிலையைக் கருத்தில் எடுத்த தலைவர் பிரபாகரன், ஆனையிறவுப் பிரதான முகாம் மீதான தாக்குதலுக்கு உத்தரவிட்டார். தலைவரின் உத்தரவுக்காகத் தயார் நிலையில் காத்திருந்த புலிப் படை அணிகள் கேணல் தீபனின் வழிநடத்தலில் ஆனையிறவுப் படைத் தளம் மீதான இறுதித் தாக்குதலைத் தொடுத்தனர். ஏப்ரல் 18ஆம் நாள் பிற்பகல் முகாவில் பகுதியில் தொடங்கிய சமர், சிங்கள இராணுவத்தின் வலுவான எதிர்ப்புக்களையும் முறியடித்து ஒரு சில நாட்களில் ஆனையிறவின் சுற்றுப் புறப் பிரதேசங்களை புலிகள் வசமாக்கியது. ஏப்ரல் 22ஆம் திகதி, முற்றுகைச் சமரின் இறுதி நாளன்று, ஆனையிறவின் அனைத்துப் பாதைகளையும் அடைத்து மூடி, இயக்கச்சித் தளம் மீது புலிப் படை பாய்ந்து முன்னேறியது. சரணடைவது அல்லது தப்பியோடுவது என்ற சங்கடமான தெரிவுக்குத் தள்ளப்பட்ட சிங்கள இராணுவம் தப்பியோட முடிவெடுத்தது. பாதைகள் மூடப்பட்ட நிலையில் கிளாலி நீரேரி ஊடாகவும், நீரேரிக் கரை வழியாலும் சிதறி ஓடிய இராணுவம் மீது படகுகளில் இருந்தும் தரையில் இருந்தும் எமது போராளிகள் தாக்குதலை நிகழ்த்தினர். பிணமாக விழுந்தவர்களையும், காயமடைந்து கதறியவர்களையும் விட்டு விட்டு, ஏனைய படையினர் தலைதெறிக்கத் தப்பி ஓடிப்

பிழைத்தனர். அன்று, ஆனையிறவு கூட்டுப் படைத் தளம் விடுதலைப் புலி வீரர்களிடம் வீழ்ச்சியடைந்தது. பிரபாகரனின் தாக்குதற் திட்டத்தின் மூலோபாயக் குறிக்கோள் நிறைவு பெற்றது. தமிழீழ விடுதலைப் பாதையில் அமைந்திருந்த தடைக் கல் உடைத்தெறியப்பட்டது. ஆணவம் பிடித்த சிங்கள இராணுவம் அவமானத்துடன் தலைகுனிய, புலிகளின் போராற்றல் கண்டு உலகம் வியப்படைந்தது. 2000 ஆண்டு, ஏப்ரல் 23ஆம் நாள் காலை ஒன்பது மணியளவில் ஆனையிறவு மீட்கப்பட்ட வெற்றிச் சின்னமாக, அங்கு புலிக் கொடி ஏற்றப்பட்டது. வரலாற்றுப் புகழீட்டிய ஆனையிறவுச் சமரின் ஒருங்கிணைப்புக் கட்டளைத் தளபதி கேணல் பானு, சமர் முனைத் தளபதிகள், போராளிகள் புடை சூழ தமிழீழத் தேசியக் கொடியை ஏற்றி வைத்தார்.

எவராலும் வெற்றி கொள்ள முடியாத பலம் பெற்றது என அமெரிக்க இராணுவ நிபுணர்களால் கருதப்பட்ட ஆனையிறவுக் கூட்டுப் படைத்தளம் விடுதலைப் புலிகளிடம் வீழ்ச்சியடைந்தமை தமிழீழ போரியல் வரலாற்றில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தியது. ஆனையிறவில் புலிகள் ஈட்டிய வெற்றியுடன் படை வலு மேலாதிக்கத்தை சிறீலங்கா இராணுவம் இழந்தது. இராணுவச் சமசீர் வலு நிலையை (Balance of Military Power) விடுதலைப் புலிகள் இயக்கம் பெற்றுக் கொண்டது.

## நோர்வேயின் சமாதான முயற்சி

1998 ஆம் ஆண்டின் பிற்பகுதியில், வன்னியில் சிறுநீரக வியாதியால் நான் கடும் சுகவீனமுற்றிருந்த வேளையில், என்னை சிகிச்சைக்காக வெளிநாட்டுக்கு அனுப்பி வைக்க நோர்வே அரசாங்கமும் சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கமும் மேற்கொண்ட முயற்சிகள் பயனளிக்கவில்லை. விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடத்திடம் ஏற்க முடியாத கடும் நிபந்தனைகளை விதித்து, ஜனாதிபதி சந்திரிகாவும், வெளிவிவகார அமைச்சர் கதிர்காமரும் எனது வெளியுலகப் பயணத்திற்கு முட்டுக்கட்டை போட்டனர். சந்திரிகா அரசின் மனிதாபிமானமற்ற போக்கினால் சினமடைந்த தலைவர் பிரபாகரன், எமது இயக்கத்தின் கப்பல் சேவை மூலமாக, இரகசியமாக என்னையும் எனது துணைவியாரையும் தாய்லாந்திற்கு அனுப்பி வைத்தார்.

தாய்லாந்தின் தலைநகரான பாங்கொக்கில் அவசர சிகிச்சை பெற்ற நான், எனது பிரித்தானிய கடவுச் சீட்டைப் புதுப்பித்துக் கொண்டு 1999 மே மாதம் லண்டன் வந்து சேர்ந்தேன். இந்த தகவல்கள் எனது மனைவி எழுதிய **'சுதந்திர வேட்கை'** எனும் நூலில் விபரமாகத் தரப்படுகிறது.

நாங்கள் லண்டன் வந்து சேர்ந்ததும் நோர்வே சமாதானத் தூதுவர்கள் எம்முடன் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டனர். முன்னாள் நோர்வே உதவி வெளிவிவகார அமைச்சர் திரு. வேகர் ஸ்ரோமன், திரு. எரிக் சுல்கைம், முன்னாள் கொழும்பு நோர்வே தூதுவர் திரு. ஜோன் வெஸ்ட்பேர்க் ஆகியோர் லண்டனிலுள்ள எமது இல்லத்திற்கு அடிக்கடி வருகை தந்து எமது விடுதலைப் போராட்டம் பற்றியும், எமது இயக்கத்தின் கொள்கை, இலட்சியம் பற்றியும், சமாதானப் பேச்சுக்களுக்கான வாய்ப்புகள் பற்றியும் எம்முடன் கலந்துரையாடுவதுண்டு. சமாதான முன்னெடுப்புகளுக்கு நோர்வே அரசு அனுசரணை வழங்கத் தயாராக இருப்பதாகவும், இதற்கு ஜனாதிபதி சந்திரிகா இணங்கியிருப்பதாகவும் இவர்கள் எம்மிடம் தெரிவித்தனர். சந்திரிகா அரசானது தனது கடும்போக்கான இராணுவ அணுகுமுறையைக் கைவிட்டு, தமிழர் தாயகத்தில் இயல்பு நிலையையும், சமாதானச் சூழ்நிலையையும் ஏற்படுத்தினாலேயே பேச்சுக்கள் நிகழ்வது சாத்தியமாகும் என நான் நோர்வேத் தூதுவர்களிடம் விளக்கினேன். இதற்கிடையில் நோர்வே அரசாங்கத்தின் உதவியுடன், ஒஸ்லோ நகரிலுள்ள அரச மருத்துவமனையில் எனக்குச் சிறுநீரக மாற்றுச் சிகிச்சை நிகழ்ந்தது. இதனையடுத்து, நான் ஒஸ்லோவில் தங்கியிருந்த வேளை, நோர்வேயின் முன்னாள் வெளிவிவகார அமைச்சர் திரு. வெலிபேர்க்கும், திரு. எரிக் சுல்கைமும் என்னைச் சந்தித்து, தலைவர் பிரபாகரனை நோர்வே அரச பிரதிநிதிகள் சந்திக்க விரும்புவதாகவும் அதற்கான ஏற்பாடுகளை ஒழுங்கு செய்து தருமாறும் வேண்டினர். நான் உடனடியாகவே பிரபாகரனுடன் தொடர்பு கொண்டு நோர்வே அரசின் விருப்பத்தைத் தெரிவித்தேன். அதற்கு அவர் இணக்கம் தெரிவித்தார்.

2000 ஆம் ஆண்டு, அக்டோபர் 31ஆம் நாள், தலைவர் பிரபாகரனுக்கும் நோர்வே சமாதானத் தூதுவர்களுக்கும் மத்தியிலான சந்திப்பு நிகழ்ந்தது. வன்னிப் பிராந்தியத்தின் மையத்தில் அமைந்திருந்த மல்லாவியில் நிகழ்ந்த இச்

சந்திப்பில், நோர்வே அரசு சார்பில் நோர்வேயின் விசேட தூதுவர் திரு. எரிக் சுல்கைம், கொழும்புக்கான நோர்வேத் தூதுவர் திரு. ஜோன் வெஸ்ட்போர்க், நோர்வே வெளிவிவகார அமைச்சின் நிர்வாக அலுவலர் சிறீமதி ஜெர்ஸ்டி ரோம்ஸ்டல் ஆகியோர் கலந்து கொண்டனர். பிரபாகரனுக்கு உதவியாக வீரச்சாவடைந்த கேணல். சங்கரும், அரசியல் துறைப் பொறுப்பாளர் திரு. தமிழ்ச்செல்வனும் இச் சந்திப்பில் பங்குபற்றினர்.

தமிழ்த் தேசிய இனப் பிரச்சினைக்குச் சமரசப் பேச்சுக்கள் மூலம் ஓர் அரசியல் தீர்வை எட்டுவதற்கு விடுதலைப் புலிகள் இயக்கம் தயாராக இருக்கிறது என நோர்வே தூதுவர்களிடம் பிரபாகரன் விளக்கினார். ஆனால் சந்திரிகாவின் அரசாங்கமோ இராணுவ வழிமுறையைக் கையாண்டு, யுத்தத்தைத் தீவிரப்படுத்தி, தமிழர் தாயகத்தை அடிமை கொள்வதிலேயே முனைப்பாக இருக்கிறது என்பதையும் விளக்கினார். புலிகள் இயக்கம் பேச்சுவார்த்தை மேசையில் அமர்வதற்கான ஏது நிலைகள் பற்றிக் கருத்துத் தெரிவித்தபோது, படிப்படியாகச் சுமூக நிலையை உருவாக்கி, மக்களை இயல்பு வாழ்வுக்குத் திரும்ப வைப்பது ஓர் இன்றியமையாத கோரிக்கையாக இருக்கும் என்பதனை வலியுறுத்திய பிரபாகரன், ஒரு யுத்த சூழ்நிலைக்குள் தமிழ் மக்கள் சிக்குண்டிருக்கும் போது, எத்தகைய பேச்சுக்களில் ஈடுபடவும் விடுதலைப் புலிகள் இயக்கம் தயாராக இல்லை என்பதையும் தெளிவுபடுத்தினார். சுமூக நிலையை மீள உருவாக்குதல் எனும் போது, முழுமையான ஒரு போர் நிறுத்தத்தை நடைமுறைக்கு கொண்டு வருதல், தமிழர் தாயகத்தின் மீது திணிக்கப்பட்டிருக்கும் பொருளாதாரத் தடையை முழுமையாக நீக்குதல், சாதாரண, அன்றாட வாழ்வுக்கு மக்களை மீளக் கொண்டு வருதல் என்பவை நிகழ வேண்டும் என்பதை அவர் மேலும் விளக்கினார். இன வேறுபாடுகளைக் களைந்து, நாட்டில் அமைதிச் சூழலை ஏற்படுத்துவதில் சந்திரிகா அம்மையார் நேர்மையாகவே உள்ளார் எனின், யுத்தத்தைத் தொடரும் எண்ணத்தை அவர் முழுமையாகக் கைவிட வேண்டும் என்றும் பிரபாகரன் குறிப்பிட்டார். வன்னியிலிருந்து திரும்பிய நோர்வே சமரசக் குழு, ஜனாதிபதி சந்திரிகாவை கொழும்பில் சந்தித்து, திரு. பிரபாகரனின் கருத்தையும், நிலைப்பாட்டையும் தெரிவித்த போது, பேச்சுவார்த்தைக்கு முன்பாக போர் நெருக்கடியைத் தளர்த்தும் யோசனைக்கு அவர் சாதகமான

பதிலை அளிக்கவில்லை.

விடுதலைப் புலிகளின் தலைவருக்கும், நோர்வே அரசின் சமாதானத் தூதர்களுக்கும் இடையிலான சந்திப்பைத் தொடர்ந்து - நோர்வேயின் வெளிவிவகாரத் துணை மந்திரி திரு. ரேமன்ட் ஜோன்சன், திரு. பிரபாகரனுக்கு ஒரு கடிதம் எழுதினார். சாதாரண மக்கள் அனுபவித்து வரும் துன்பங்களைத் தளர்த்தி, ஒரு மனிதாபிமானச் சூழலை உருவாக்குவதற்கு ஏதுவான அம்சங்கள் அடங்கிய 'புரிந்துணர்வு உடன்படிக்கை' என்ற வடிவிலான ஒரு யோசனைத் திட்ட வரைவைப் பிரச்சினைக்குரிய இரு தரப்பிடமும் சமர்ப்பிக்க நோர்வே அரசு எடுத்திருக்கும் தீர்மானத்தை, திரு. ரேமன்ட் ஜோன்சன் அந்தக் கடிதம் மூலம் தெரிவித்திருந்தார். நவம்பர் 2000 இல் வழங்கப்பட்ட அந்தக் கடிதம் பின்வருமாறு தெரிவிக்கின்றது:-

அன்புக்குரிய திரு.பிரபாகரன் அவர்கட்கு,

சிறீலங்கா ஜனநாயக சோசலிசக் குடியரசின் கௌரவ ஜனாதிபதி மற்றும் சிறீலங்கா அரசின் வெளிவிவகார அமைச்சர் ஆகியோருடன் ஒரு புறமும், தமிழீழ விடுதலைப் புலிகளின் அதிகாரபூர்வ பிரதிநிதி திரு. அன்ரன் பாலசிங்கத்துடன் இன்னொரு புறமும், நோர்வே அரசாங்கத்தின் பிரதிநிதிகள் கடந்த 18 மாதங்களாகத் தொடர்ச்சியான தொடர்பில் இருந்து வருகின்றார்கள். அண்மையில், விடுதலைப் புலிகளின் தலைவராகிய தங்களையும் அவர்கள் சந்தித்திருக்கிறார்கள்.

சிறீலங்காவில் நீண்ட காலமாக இருந்து வரும் பிரச்சினைக்குத் தீர்வொன்றினை எட்டுவதற்கு ஏதுவாக, நேரடிப் பேச்சுக்களை நிகழ்த்துவதற்கான சாத்தியப்பாடுகளைக் கண்டறிவதில் சம்பந்தப்பட்ட தரப்புக்களுக்கு உதவுவதற்காகவே நோர்வே அரசாங்கம் இந்தத் தொடர்புகளைப் பேணி வருகின்றது.

இந்தத் தொடர்புகளின் வாயிலாகவும், கௌரவ ஜனாதிபதி மற்றும் தங்களுடனுமான அண்மைய உரையாடல்கள் வாயிலாகவும் - பிரச்சினைக்கு அரசியல் தீர்வொன்றினைக் காணக் கூடிய பேச்சுவார்த்தைகளை ஆரம்பிப்பதில் சிறீலங்கா அரசாங்கமும், விடுதலைப் புலிகள் இயக்கமும்

ஈடுபாட்டோடு இருக்கின்றன என்று நோர்வே அரசு கருதுகிறது.

மனிதாபிமான நடவடிக்கைகளுக்கான புரிந்துணர்வு உடன்படிக்கைத் திட்ட வரைபு ஒன்றை இரு தரப்பிடமும் சமர்ப்பிப்பது பொருத்தமாக இருக்கும் என - ஆழமான பரிசீலனைக்குப் பின்பு நோர்வே அரசாங்கம் கருதுகின்றது. இத் திட்டம் இரு தரப்பினராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு நடைமுறைப்படுத்தப்படுமானால், சமூகச் சூழலை முன்னேற்றி, பொதுமக்கள் அனுபவித்து வரும் துன்பங்களை அகற்றுவதுடன், சமரசப் பேச்சுக்களுக்கு ஊக்கமளிக்கக் கூடிய புறநிலைகளையும் இது தோற்றுவிக்கும் என நம்பலாம்.

தங்கள் உண்மையுள்ள

ரேமண்ட் ஜோன்சன்

'மனிதாபிமானப் புரிந்துணர்வு உடன்படிக்கை' என்ற தலைப்பைக் கொண்ட இத் திட்ட வரைபு ஆவணங்களின் பிரதிகளை சிறீலங்கா அரசாங்கத்திடமும், விடுதலைப் புலிகள் இயக்கத்திடமும் நோர்வே அரசு கையளித்தது. "அமைதியான தீர்வுக்கு இட்டுச் செல்லும் பேச்சுவார்த்தைகளை நடத்துவதற்கான சுமுகச் சூழ்நிலையை உருவாக்கவும், மனிதாபிமான நிலைமையை மேம்பாடு செய்யவும், இன நெருக்கடியால் உருவான மக்களின் துன்பங்களைத் துடைக்கவும் வழிகோலுவதே இப் புரிந்துணர்வு உடன்படிக்கையின் நோக்கமாகும்" என இந்த ஆவணம் பிரகடனப்படுத்தியது. நோர்வேயின் அந்தத் திட்ட வரைபு, பின்வரும் நடவடிக்கைகளைச் சமநேரத்தில் எடுக்குமாறு இரு தரப்பையும் வேண்டிக் கொண்டது.

அ) போருபகரணங்கள் அல்லாத பொருட்கள் வன்னிக்கு அனுப்பப்படுவதை உறுதிப்படுத்துதல்: மடு ஊடான பாதை வழியாகப் பொருட்கள் தாராளமாக அனுப்பப்படுவதற்கு வழிவகை செய்வதுடன், ஏ-9 நெடுஞ்சாலையில் - வவுனியாவுக்கு வடக்கே - புதிய பாதை ஒன்றைத் திறந்து, இரு பாதைகள் வழியாகவும் பொருட்களைத் தாமதங்களின்றி அனுமதிக்க சிறீலங்கா அரசாங்கம் ஏற்பாடு செய்யும்.

போர்ப் பாவனைக்கு அல்லாத பொருட்கள் வன்னிக்கு அனுப்பப்படுவதை உறுதிப்படுத்துவதுடன், அவை சாதாரண பொது மக்களைச் சென்றடைவதையும் புலிகள் இயக்கம் மேற்பார்வை செய்யும்.

ஆ) பொது மக்களை இலக்கு வைக்கும் தாக்குதல்களைத் தவிர்த்தல்: கொலைகள், குண்டுத் தாக்குதல்கள், நாச வேலைகள், அரசியற் குழுக்களையோ அல்லது தனி நபர்களையோ மிரட்டும் வன்முறைகள் போன்ற அனைத்துச் செயற்பாடுகளும், புரிந்துணர்வு உடன்படிக்கையை மீறும் செயல்களாகக் கொள்ளப்படும்.

நோர்வே தயாரித்த அந்தப் புரிந்துணர்வு உடன்படிக்கை வரைபானது, பொருட்கள் தடையின்றி எடுத்துச் செல்லப் படுவதைக் கண்காணிப்பதற்கு ஒரு சர்வதேச மனிதாபிமானக் கண்காணிப்புக் குழுவை உருவாக்கும் யோசனையையும் முன்வைத்தது.

புரிந்துணர்வு உடன்படிக்கைத் திட்ட வரைபின் யோசனைகளைத் தாங்கள் முழுமனதோடு பரிசீலித்து வருவதாக புலிகள் இயக்கம் நோர்வே அரசிற்கு அறிவித்தது. 2000 ஆம் ஆண்டு நவம்பர் 27ஆம் திகதி தனது வருடாந்த மாவீரர் நாள் உரையில் இதுபற்றிக் குறிப்பிட்ட தலைவர் திரு. பிரபாகரன், “போர் நெருக்கடி தளர்ந்து இயல்பு நிலை தோன்றுவதற்கு இரு தரப்பிலிருந்தும் நம்பிக்கையை வளர்க்கும் நல்லெண்ண நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட வேண்டுமென நோர்வே அரசாங்கம் யோசனைகளைத் தெரிவித்திருக்கின்றது. இதனை நாம் ஆர்வமாகப் பரிசீலித்து வருகின்றோம். எமது மக்கள் அனுபவிக்கும் துன்பச்சுமை குறைந்து, பரஸ்பர நல்லெண்ணம் நிலவும் சமாதானச் சூழல் தோன்றுவதற்கான ஆக்க பூர்வமான நடவடிக்கைகளை நாம் வரவேற்கிறோம். அதற்கான முன்முயற்சிகளை அரசாங்கம் மேற்கொள்ளுமானால், நாமும் நல் முடிவுகளை எடுப்போம்” என்று தெளிவாகக் குறிப்பிட்டார்.

ஆனால், நோர்வேயின் முயற்சிகளுக்குப் பதிலளிப்பதைச் சந்திரிகா அரசாங்கம் தாமதப்படுத்தியது. அதேவேளை, நோர்வே அரசாங்கத்திற்கும், சர்வதேசச் சமூகத்திற்கும், பேச்சுவார்த்தை மூலம் சமாதானத் தீர்வு காண்பதில் தமக்கிருக்கும் நேர்மையான ஈடுபாட்டையும், மனப்பூர்வமான

விருப்பத்தையும் காட்டுவதற்காக, விடுதலைப் புலிகள் இயக்கம், ஒரு ஆச்சரியமூட்டும் நகர்வாக, ஒருதலைப்பட்சமான ஒரு மாத காலப் போர் நிறுத்தம் ஒன்றை 2000ஆம் ஆண்டு, டிசம்பர் 24ஆம் திகதி நள்ளிரவிலிருந்து அறிவித்தது. சமாதான முயற்சிகளுக்குத் துணையாகப் புலிகள் இயக்கம் எடுத்த ஒரு நல்லெண்ண நடவடிக்கை அது. இது பற்றிப் புலிகளின் செய்திக் குறிப்பு இவ்வாறு தெரிவிக்கின்றது:

> "2000ஆம் ஆண்டு, டிசம்பர் 24ஆம் நாளிலிருந்து, 2001ஆம் ஆண்டு ஜனவரி 24ஆம் நாள் வரை சிறீலங்கா ஆயுதப் படைகளுக்கு எதிரான அனைத்துப் பகை நடவடிக்கைகளையும் நிறுத்தி வைக்குமாறு தமிழீழ விடுதலைப் புலிகளின் தலைவரும் பிரதம இராணுவத் தளபதியுமான திரு. வே. பிரபாகரன் தமிழீழத் தேசிய இராணுவத்தின் சகல படையணிகளுக்கும் உத்தரவு பிறப்பித்துள்ளார்.
>
> நத்தார், புது வருடம், தைப்பொங்கல் ஆகிய திருநாட்கள் நிகழப் போகும் பண்டிகைக் காலத்தில் அமைதி பேணுமாறு சிறீலங்கா அரசாங்கம் தனது ஆயுதப் படைகளுக்கு உத்தரவு பிறப்பிக்கும் என்ற நம்பிக்கையுடன் நாம் ஒருதலைப்பட்சமாக இப் போர் நிறுத்தத்தை அறிவிக்கிறோம். சமாதானத்திலும், பேச்சுக்கள் மூலமான அரசியல் தீர்விலும் எமக்குள்ள நேர்மையான, ஆழமான அபிலாசையைக் குறிக்கும் நல்லெண்ண வெளிப்பாடாகவே எமது போர் நிறுத்த முடிவைக் கருத வேண்டும். யுத்த நெருக்கடியைத் தணித்து, இயல்பான நல்லெண்ணச் சூழ்நிலையை உருவாக்க இடமளிக்கும் நோக்குடனேயே நாம் அமைதி பேணத் தீர்மானித்தோம்.
>
> எமது படையணிகளுக்கு எதிரான போர் நடவடிக்கைகளை நிறுத்தி, பரஸ்பர நம்பிக்கையை வளர்க்கும் நடவடிக்கையாக நோர்வேயின் புரிந்துணர்வுத் திட்ட யோசனைகளை நடைமுறைப்படுத்த சிறீலங்கா அரசு முன்வருமானால், நிலையான போர் நிறுத்தத்திற்கும் நேரடிப் பேச்சுக்களுக்கும் வழிகோலும் நல்லெண்ணப் புறநிலையை உருவாக்கும் பொருட்டு அமைதி பேணும் காலத்தை மேலும் நீடிக்க விடுதலைப் புலிகள்

இயக்கம் தயாராக இருக்கிறது.''

விடுதலைப் புலிகளின் நல்லெண்ணச் சமிக்கையை சிறீலங்கா அரசாங்கம் நிராகரித்தது. 2000ஆம் ஆண்டு, டிசம்பர் 23ஆம் நாள், ஜனாதிபதியின் செயலகம் வெளியிட்ட அறிக்கையில், தமிழீழ விடுதலைப் புலிகளுக்கு எதிரான அரச படைகளின் தாக்குதல் நடவடிக்கைகள் தொடரும் எனத் தெரிவிக்கப்பட்டது. போர் ஓய்வுக்கான புலிகளின் பிரகடனத்தை நிராகரித்ததுடன், சமரசப் பேச்சுக்களுக்கு முன்னதாக நல்லெண்ண சமிக்கைகள் அவசியமில்லை எனவும் அவ்வறிக்கையில் தெரிவிக்கப்பட்டது.

சமாதானப் பேச்சுவார்த்தைக்கு முன்னதாகப் போருக்கு ஓய்வு கொடுத்து, அமைதி பேணுவது அவசியமில்லை என்பதே சந்திரிகா அரசாங்கத்தின் கண்டிப்பான நிலைப்பாடாக இருந்தது. பேச்சுகள் ஆரம்பமாகி, ஒரு திருப்திகரமான முன்னேற்றத்தை எட்டிய நிலையிலேயே பகை நிறுத்தம் பற்றிப் பரிசீலனை செய்யலாமென அரசாங்கத்தின் அறிக்கை தெளிவுபடுத்தியது. இன்னொரு வகையில் சொல்வதாயின் சந்திரிகாவின் அரசாங்கம் இராணுவ அணுகுமுறையைக் கைவிடத் தயாராக இல்லை. ஒரு புறம் சமரசப் பேச்சுக்களை நடத்திக் கொண்டு, மறுபுறம் புலிகளுக்கு எதிரான போர் நடவடிக்கைகளைத் தொடர்வதையே சந்திரிகா விரும்பினார். ஜனாதிபதி சந்திரிகாவின் நிலைப்பாட்டை விடுதலைப் புலிகள் ஏற்க மறுத்தனர். சண்டையையும் செய்து கொண்டு சமரசத்திலும் ஈடுபட விடுதலைப் புலிகள் தயாராக இல்லை. இரு தரப்பினருக்கும் மத்தியில் நிலவிய இந்த முரண்பாடு நோர்வேயின் சமாதான முன் முயற்சிகளுக்கு முட்டுக்கட்டை போட்டது.

அந்த வரலாற்றுக் கால கட்டத்தில், சிறீலங்காவின் படைத்துறை ஒரு பாரதூரமான நெருக்கடியை எதிர்கொண்டு நின்றது. பல ஆயிரக்கணக்கான படையினரின் உயிர்களைப் பலிகொடுத்து, வன்னிப் பெரும் சமர்களில் பாரிய பின்னடைவுகளை இராணுவம் சந்திக்க நேர்ந்தது. 'ஓயாத அலைகள்' என்ற குறியீட்டுப் பெயருடன், விடுதலைப் புலிகள் தொடர்ச்சியாக ஏவிவிட்ட வலிந்து தாக்குதல் படை நடவடிக்கைகள், வெற்றி கொள்ள முடியாத இரும்புக் கோட்டைகள்' என இராணுவத்தால் கருதப்பட்ட படைத் தளங்கள் எல்லாவற்றையுமே தகர்த்தெறிந்தன. வன்னிப்

படையெடுப்பில் தொடர்ச்சியாக விளைந்த நாசகரமான தோல்விகளும், ஈற்றில் ஆனையிறவுப் படைத் தளத்தின் வீழ்ச்சியும், சிறீலங்கா தரைப் படையின் போரிடும் வல்லமையை மோசமாகச் சீரழித்திருந்தன. ஆனால் மறுபுறத்தில், விடுதலைப் புலிகளைப் பொறுத்த வரையில், சிங்களத்தின் வன்னிப் படையெடுப்பை முறியடித்தமையும், கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த படைத் தளங்களையும் பட்டினங்களையும் கைப்பற்றியமையும் தமிழீழப் போரரங்கின் இராணுவச் சமநிலையில் புலிகளை மேலோங்க வைத்த அபாரமான போரியற் சாதனைகளாகும்.

இந்தத் தொடர்ச்சியான போர்க் கள வெற்றிகளை அடிக் கற்களாக இட்டுக் கட்டியெழுப்பப்பட்ட மிக உறுதியான இராணுவப் பலத்தில் இருந்த வண்ணமே, 2000ஆம் ஆண்டு டிசம்பரில் - நத்தார் பண்டிகையை முன்னிட்டு - ஒருதலைப்பட்சமான போர் நிறுத்தத்தை விடுதலைப் புலிகள் பிரகடனம் செய்தனர். அத்தோடு, யாழ் குடாவையும், மன்னார் தீவுப் பகுதியையும் தவிர, வட பிராந்தியத்தின் முழு நிலப்பரப்பிலும், கிழக்குப் பிராந்தியத்தின் மிகப் பெரும் நிலப்பரப்பிலும் விடுதலைப் புலிகள் தங்கள் நிர்வாகக் கட்டமைப்பை நிறுவியிருந்தனர். இவ்வாறாக, ஒரு பலமான இராணுவ மேலாதிக்க நிலையில் இருந்தவாறும் தமிழர் தாயகத்தின் பெரும்பரப்பில் ஒரு நிழல் அரசாங்கத்தை நிர்வகித்த வண்ணமுமே சமரச அரசியல் பேச்சு மேசையில் அமர்வதில் தமக்கிருக்கும் ஆர்வத்தைப் புலிகள் குறிப்புணர்த்தினர். ஆனால் சமாதானத்திற்கான பிரபாகரனின் அழைப்பை சந்திரிகா அம்மையார் நிராகரித்தார். சந்திரிகா அம்மையாரிடம் கபடமான உள்நோக்கங்கள் இருப்பதாகப் புலிகளை அது கருத வைத்தது. புலிகளின் போரிடும் வல்லமையைத் தகர்த்த பின்னரே அவர்களைப் பேச்சுவார்த்தை மேசையில் சந்திப்பது என்ற தனது 'சமாதானத்திற்கான போர்' மூலோபாயத் திட்டத்தைக் கைவிட அவர் தயாராக இல்லை. ஏற்கனவே சந்தித்திருந்த அவமானகரமான இராணுவத் தோல்விகளிலிருந்து பாடங்களைக் கற்காமல் சந்திரிகா அம்மையாரும், அவரது போர்த்துறை அதிபதிகளும், ஆனையிறவை மீளக் கைப்பற்றும் ஒரு பாரிய அதிரடிப் படையெடுப்பிற்கு திட்டம் தீட்டினர்.

ஆனால், புலிகளின் தலைமையோ, சந்திரிகா அம்மையார்

சாதகமாகப் பதிலளிப்பார் என்ற நம்பிக்கையுடன், சிங்களப் படையினரின் அதி தீவிரமான ஆத்திரமூட்டும் செயற்பாடுகளுக்கு மத்தியிலும் - தமது ஒருதலைப்பட்சமான யுத்த நிறுத்தத்தை நான்கு தடவைகளாக நீடித்து, நான்கு மாதங்கள் கடைப்பிடித்தது. ஆனால், சமாதானத்திற்கான வழியைத் தேர்வு செய்வதற்கு மாறாக, சிறீலங்கா அரசு ஒரு கடும் போக்கு நிலைப்பாட்டையே எடுக்கின்றது என்பது ஐயமறத் தெளிவாகிய போது, தங்களது ஒருதலைப்பட்சமான போர் ஓய்வுப் பிரகடனத்தை 2001, ஏப்ரல் 24ஆம் நாள் நள்ளிரவிலிருந்து மீளப் பெற புலிகள் இயக்கம் தீர்மானித்தது. வன்னியில் - தமது தலைமைச் செயலகத்திலிருந்து வெளியிட்ட அதிகாரபூர்வமான அறிக்கையில் அவர்கள் பின்வருமாறு விளக்கினர்:-

> "சிறீலங்கா அரசாங்கமானது எமது சமாதான முயற்சிக்கு ஆக்கபூர்வமான பதில்தர மறுப்பதுடன், தரையாலும் கடலாலும் ஆகாயத்தில் இருந்தும் தாக்குதல்களைத் தீவிரப்படுத்தி, எமது தரப்பில் பெரும் உயிர்ச் சேதத்தை விளைவித்துக் கடும் போக்கைக் கடைப்பிடித்ததால், நாம் இந்த வேதனைக்குரிய முடிவை எடுக்க நிர்ப்பந்திக்கப்பட்டோம். பதில் தாக்குதல் நடவடிக்கைகளை எடுக்காது, சுயமான முறையில் நாம் அமைதியைப் பேணியதால் எதிரியின் இராணுவத் தாக்குதல் நடவடிக்கைகளை கட்டுப்படுத்துவது இயலாத காரியமாயிற்று. எமது ஒருதலைப்பட்சமான போர் நிறுத்தத்தை எதிரிப் படைகள் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்தி வரும் ஆபத்தான சூழ்நிலையில் நாம் தொடர்ந்து அமைதி பேணி வருவது சாத்தியமற்றது.
>
> கடந்த நான்கு மாத காலமாக, சுயமாக நாம் செய்து கொண்ட போர் நிறுத்தத்தின் போது, யாழ்ப்பாணக் குடாநாட்டில் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த பிரதேசங்களை இழந்து இராணுவ ரீதியான பின்னடைவுகளை நாம் சந்தித்ததுடன் கணிசமான உயிரிழப்பும் எமக்கு ஏற்பட்டது. 160 போராளிகளை நாம் பலி கொடுத்ததுடன் 400 பேருக்குக் காயம் ஏற்பட்டது. முல்லைத்தீவிலும் திருகோணமலையிலுமுள்ள கரையோரக் கிராமங்கள்

தொடர்ச்சியான, தீவிரமான விமானக் குண்டு வீச்சுகளுக்கு இலக்காகியதால் பெருமளவு உயிரிழப்புகளும் சொத்துகளுக்குப் பெரும் சேதமும் ஏற்பட்டது. நாம் போர்நிறுத்தத்தைக் கண்டிப்பான முறையில் இறுக்கமாகப் பேணி வந்ததால் எமது போராளிகளுக்கு ஆத்திரமூட்டி அவர்களை விரக்தி கொள்ளச் செய்யும் நோக்கத்துடன் அரச ஆயுதப் படைகள் தொடர்ச்சியான பகை நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். அத்தோடு இக் கால கட்டத்தில், சிறீலங்கா அரசானது நாசகார ஆயுதங்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்ததுடன், ஒரு பாரிய போர் நடவடிக்கையை மேற்கொள்ளும் நோக்கத்துடன் தனது ஆயுதப் படைகளை நவீன மயப்படுத்திப் பலப்படுத்தி வந்துள்ளது. ஆனால் எம்மைப் பொறுத்த வரை, நோர்வே அரசாங்கத்தின் சமாதான முயற்சிகளுக்கு நாம் முழு ஒத்துழைப்பையும் வழங்கி வருகிறோம். சமாதானப் பேச்சுக்களுக்கான ஒரு நல்லெண்ணச் சூழ்நிலையை உருவாக்கும் நோக்குடனேயே கடந்த நான்கு மாதங்களாக நாம் அமைதி பேணினோம்.

சிறீலங்கா அரசாங்கமானது எமது ஆக்கபூர்வமான நல்லெண்ண நோக்கத்தின் அர்த்தத்தைப் புரிந்து கொள்ளத் தவறியதால் எமது அமைதி முயற்சி அர்த்தமற்றதாகியது. இதனால் தன்னிச்சையாக நாம் பிரகடனம் செய்த போர் நிறுத்தத்தைக் கைவிட நிர்ப்பந்திக்கப்பட்ட பொழுதும், சமாதானத்திலும், சிக்கலான இனப் பிரச்சினைக்கு அமைதி வழியில் தீர்வு காணும் மார்க்கத்திலும் நாம் உறுதி கொண்டு நிற்கின்றோம். தமிழ்த் தேசிய நெருக்கடிக்கு அமைதி வழியில் தீர்வு காண நோர்வே அரசாங்கம் விடா முயற்சியுடன் மேற்கொண்டு வரும் உன்னதமான முயற்சிக்கு எமது விடுதலை இயக்கம் தொடர்ந்தும் தனது முழு ஆதரவையும் ஒத்துழைப்பையும் நல்கி வரும்''

## தீச்சுவாலை: ஒரு தீர்க்கமான சமர்

புலிகளின் நான்கு மாத காலப் போர் நிறுத்தம் முடிவுக்கு வந்த சில மணி நேரங்களுக்குள்ளேயே, யாழ் குடாநாட்டின் தென்முனையிலிருந்த புலிகளின் முன்னரங்கப் போர் அரண்களை நோக்கிப் பாரிய அதிரடிப் படையெடுப்பு ஒன்றைச் சிங்களத் துருப்புக்கள் தொடுத்தனர். நன்கு ஒருங்கிணைக்கப்பட்ட சிறீலங்காவின் முப்படையினரும், நன்கு ஒழுங்கமைக்கப்பட்ட போர்த் திட்டத்தோடு இந்தத் தாக்குதற் படையெடுப்பிற்காகக் குவிக்கப்பட்டிருந்தனர். ஏப்ரல் 25 ஆம் திகதி அதிகாலைப் பொழுதில், சிறீலங்காத் தரைப் படையின் 52, 53, 55ஆவது சிறப்புத் தாக்குதல் பிரிவுகளைச் சேர்ந்த பன்னிரண்டாயிரம் படையினர், கிளாலி-முகமாலை-நாகர்கோவில் நெடுங்கோட்டில் இருந்த புலிகளின் முன்நிலை அரண்கள் மீது அகோரமான ஒரு பல்முனைத் தாக்குதலோடு பாய்ந்தனர். நெடுந்தூர மற்றும் குறுந்தூரக் கனரகப் பிரங்கிகளும், பல்குழற்கணை ஏவிகள், கவசப் பீரங்கி வண்டிகள் ஆகியவை பொழிந்த குண்டு மழை சகிதம் முன்னேறி நகர்ந்த தரைப் படையினருக்குத் துணையாக, வான்படைப் போரூர்திகளும் கடற்படைப் பீரங்கிக் கலங்களும் புலிகளின் அரண்களைச் சல்லடையாக்கின. சிங்களச் சேனை மூர்க்கத்தனமாகப் பாவித்த அந்தப் பிரமாண்டமான சுடுகலச் சக்திக்குப் பொருத்தமாக 'தீச்சுவாலை' என்று அந்த அதிரடிப் படையெடுப்புக்குப் பெயரிட்டனர். பிரதிப் பாதுகாப்பு மந்திரி அனுருத்த ரத்வத்தையும், முப்படைகளினது தலைமைத் தளபதிகளும் பலாலி கட்டளைப் பீடத்தில் நிலைகொண்டு 'தீச்சுவாலை'ப் படையினரை ஒருங்கிணைத்து வழிநடத்தினர். தலைமைத் தளபதிகளை நேரடிக் கட்டளைப் பீடத்தில் இறக்கியதிலிருந்தே, இந்தப் படையெடுப்பு நடவடிக்கைக்கு அரசு எத்தகைய முக்கியத்துவம் கொடுத்திருந்தது என்பது தெளிவாகின்றது. ஆனையிறவை மீளக் கைப்பற்றுவதே அந்த நடவடிக்கையின் மூலோபாய இலக்கு. அந்த இலக்கை அடையும் வெற்றியில் கொண்டிருந்த ஆணித்தரமான நம்பிக்கையால் இந்த வெற்றிகரமான சண்டையை அறிவிக்கவெனக் கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்திற்கு ஒரு செய்தியாளர் குழுவையும் அரசு இறக்கியிருந்தது.

சமரின் ஆரம்பத்தில், சில மணி நேரங்கள் நிகழ்ந்த மிகக் கடுமையான, நெருக்கமான சண்டையின் பின், புலிகளின்

முன்னரங்க அரண் வரிசையில் ஆறு பிரதான உடைப்புக்களை ஏற்படுத்திய சிறீலங்காப் படையினர், புலிகளின் வலயத்திற்குள் ஒன்றரை கிலோ மீற்றர் தூரம் வரை முன்னேறியிருந்தனர். ஆனால், இந்தப் படையெடுப்பை எதிர்பார்த்து ஏற்கனவே காத்திருந்த - பெரும் சமர்க் களங்களில் புடம் போட்டு எடுக்கப்பட்ட ஆண், பெண் போராளிகளைக் கொண்ட புலிகளின் அதி தேர்ந்த போரணிகள், முன்னேறி நுழையும் எதிரிப் படையினர் மீதான முறியடிப்புத் தாக்குதல்களுக்கு வியூகம் வகுத்துக் காத்திருந்தன. மாதக்கணக்கான போர் நிறுத்த காலத்தில் அல்லும் பகலும் அயராது உழைத்த புலிகளின் போராளிகள், அபாரமான போர்த் திட்டம் ஒன்றை வரைந்து, பொறி வைத்துக் காத்திருந்தனர். முன்னேறி நகரும் சிங்களத் துருப்புக்களுக்கு வழிவிட்டு, சில பகுதிகளில் விலகி, உருமறைத்து வைக்கப்பட்டிருக்கும் கண்ணி வெடி வயல்களுக்குள் அவர்களைக் கவர்ந்திழுத்து, அந்தப் பொறி வலையத்திற்குள் அவர்கள் சிக்குண்ட பின், கனரக மற்றும் சிறுரகப் பீரங்கிகள் கொண்டு அவர்களைத் தாக்கிச் சிதைக்கும் மிக நுட்பமான போர்த் திட்டம் அது. தலைவர் பிரபாகரனின் நெறிப்படுத்தலில், வட பிராந்தியக் கட்டளைத் தளபதி கேணல் தீபனின் நேரடிக் கண்காணிப்பின் கீழ் இப் புதுமையான போர் வியூகம் அமைக்கப்பட்டது. இவ் வியூகத்தினுள் ஏராளமான கண்ணிவெடிகளும் பொறி வெடிகளும் விதைக்கப்பட்டிருந்தன. அச்சொட்டான எறிகணைத் தாக்குதலை நிகழ்த்தும் வகையில் பீரங்கி, மோட்டார் படையணிகளும் தயார் நிலையில் நிறுத்தப்பட்டிருந்தன. முன்னணிக் காவலரண் வரிசைகள் மூன்று பாதுகாப்பு வலையங்களாகப் பிரிக்கப்பட்டு, அதற்கான களத் தளபதிகளும் போரணிகளும் நிலையெடுத்து நின்றனர். கிளாலிப் பகுதி, முகமாலைப் பகுதி, கண்டல் பகுதி ஆகிய மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்த எமது முன்னணிக் காவலரண் தொடரை, முறையே சோதியா படையணி, சார்ள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி, மாலதி படையணி ஆகியன நிலைகொண்டிருந்தன. சமர் தொடங்கியதும், இப் போர்த் திட்டத்திற்கு அமைவாக, தமது முன்னணி நிலைகளை உடைத்து, எதிரிப் படைகள் உள்நுழைவதற்கு ஏதுவாக, குறிப்பிட்ட சில பகுதிகளிலிருந்து தமது அடுத்த நிலை அரண் வரிசைக்குப் புலிப் போராளிகள் தந்திரோபாயமாகப் பின்வாங்கினர்.

பெருத்த எதிர்ப்பேதும் இல்லாமல், சில மணி நேரங்களுக்குள்ளேயே, 8 சதுரக் கிலோ மீட்டர் பரப்பளவைக் கைப்பற்றிய வெற்றிக் களிப்போடு, முன்னாலே விரிந்து கிடந்த பேரழிவின் கோரம் அறியாமல், நேரே முன்னேறிய சிங்களப் படையினர், புலிகளின் பொறிக்குள் சென்று வசமாகச் சிக்கினர். அப்படி அவர்கள் சிக்கியிருக்க, முற்றிலும் எதிர்பாராத விதமாக, ஆட்டிலெறிப் பீரங்கிகள், கனரக எறிகணைச் செலுத்திகள், பல்குழல் பீரங்கிகள் என்பன குண்டு மழையைப் பொழிய, அவர்களைச் சுற்றி வளைத்த புலிப் போரணிகள் ஆக்ரோசமான தாக்குதலைத் தொடுத்தன. பீதியில் கலங்கித் திகிலடைந்த 'தீச்சுவாலை'ப் படையினர், செய்வதறியாது திகைத்து, கண்ணி வெடி வயற்பொறிக்குள் சிதறி ஓடினர். அந்தக் கொலைக் களத்திற்குள் சிக்குண்ட நூற்றுக்கணக்கான சிறீலங்காப் படையினருக்கு அது ஒரு கோர நாளாக விடிந்தது.

முகமாலை முனையில், யாழ்ப்பாண நெடுஞ்சாலையின் இரு புறமும் கதை இவ்வாறிருக்க, கிளாலி, நாகர்கோவில் ஆகிய முனைகளில் நெருக்கமாக நடந்து கொண்டிருந்த உக்கிரமான சண்டைகளில் இறந்தும் காயப்பட்டும் வீழ்ந்த நூற்றுக்கணக்கான சிங்களத் துருப்புக்கள் களத்திலிருந்து அகற்றப்பட்டுக் கொண்டிருந்தனர். அதே சம நேரத்தில் புலிகளின் முன்னரங்க நிலைகளை மேவிக் கடந்து, அவற்றுக்குப் பின்னால் புலிகளின் பிரதேசத்திற்குள் துருப்புக்களைத் தரையிறக்க முனைந்த சிறீலங்கா கடற்படையின் போர்க் கலங்களை, நாகர்கோவில் கடலிலும், கிளாலி நிரேரியிலும் எதிர்கொண்ட கடற்புலிகளின் சண்டைப் படகுகள் ஆக்ரோசமாக முறியடித்துத் துரத்தின. தரையாலும், கடலாலும் எடுக்கப்பட்ட முன்னேற்ற முயற்சிகளை முறியடித்த புலிகளின் சண்டை அணிகள் முதலாம் நாள் சண்டைகளின் முடிவில் கிளாலி, நாகர்கோவில் முனைகளில் எதிரியை அவனது பழைய நிலைகளுக்கே விரட்டியடித்தனர். இரண்டாம் நாள் காலை யாழ்ப்பாண நெடுஞ்சாலையின் இருபுறமும் முன்னேறி, முகமாலையில் வலுவாக அரணிட்டு நிலைகொண்டிருந்த சிறீலங்காப் படையினரைச் சூழ வளைத்த விடுதலைப் புலிகள் உக்கிரமான தாக்குதலைத் தொடுத்தனர். கடும் சண்டை வெடித்தது. எங்கும் நகர முடியாதவாறு இறுக வளைத்துத் தாக்கப்பட்ட படையினர் மீது புலிகளின் 'கிட்டு' மற்றும் 'குட்டிசிறி' பீரங்கிப் படையணிகள் சரமாரியான குண்டு மழையைப் பொழிந்தன.

மூன்றே நாளில் நொருக்கிச் சிதைக்கப்பட்டு முன்னேற்ற முயற்சிகளில் மூக்குடைபட்ட சிறீலங்காப் படையின் தாக்குதல் பிரிவுகள், தமது பழைய நிலைகளுக்கே விரட்டியடிக்கப்பட்டன. ஆகக் குறைந்தது - அறுநூறு துருப்புக்கள் கொல்லப்பட, மிதிவெடிப் பொறிகளுக்குள் சிக்குண்டு கால்களை இழந்த நூற்றுக்கணக்கானவர்கள் உட்பட, இரண்டாயிரத்து இருநூறு துருப்புக்கள் காயமுற்றனர். விடுதலைப் புலிகளின் தரப்பில் ஆண்களும் பெண்களுமாக - 121 போராளிகள் உயிரிழந்தனர்.

பலாலிக்கான அனைத்துப் பயணிகள் விமான சேவைகளையும் உடனடியாக இரத்துச் செய்த அரசாங்கம் - மேலதிக வானூர்திகளையும் வரவழைத்துப் படுகாயமடைந்த தனது பெருந்தொகையான சிப்பாய்களைக் கொழும்பு, அநுராதபுரம் மற்றும் வவுனியா பிரதான வைத்தியசாலைகளுக்கு ஏற்றிப் பறிக்க அவசர ஏற்பாட்டினைச் செய்தது. வெற்றிச் செய்தியை அறிவிக்கவென பலாலியில் குவிக்கப்பட்டிருந்த செய்தியாளர்கள், அறிவிக்கப்படாத இடங்களை நோக்கி அவசர அவசரமாக நகர்த்தப்பட்ட, கொல்லப்பட்ட மற்றும் காயமடைந்த படையினரின் தொகையை வைத்தே - அந்த மாபெரும் இராணுவத் தோல்வியின் பரிமாணத்தைத் தங்கள் கண்கொண்டு கண்டனர். ஒரு போர்த்துறை ஆய்வாளர் தனது கட்டுரையின் தலைப்பிலேயே கேள்வியெழுப்பினார், "தீச்சுவாலை பற்றியெரியத் தவறியது ஏன்?"

தமிழ்ப் புலிகளுக்கு எதிராகச் சிறீலங்காப் படையினரால் எடுக்கப்பட்ட கடைசிப் படையெடுப்பு இந்தத் 'தீச்சுவாலை நடவடிக்கை'. தமிழீழ விடுதலைப் புலிகளை, தாக்குதல் மற்றும் தற்காப்பு முறைகளில் அசாத்தியமான போரனுபவம் மிக்க வெல்வதற்கரிய ஒரு போர்ப் படை என நிரூபித்த ஒரு தீர்க்கமான சமர் அது.

இந்த மிகக் கேவலமான இராணுவத் தோல்விக்குப் பின்னர், தனது இராணுவ வழிமுறைக் கொள்கையைக் கைவிட வேண்டிய நிலைக்கு சந்திரிகா அரசாங்கம் தள்ளப்பட்டது. இருந்த போதும், நோர்வே அரசால் முன்வைக்கப்பட்டிருந்த புரிந்துணர்வு உடன்படிக்கைக்கான நகல் திட்டத்தைச் சாதகமாகப் பரிசீலிக்கவோ, அல்லது விடுதலைப் புலிகளுடன் ஒரு சமரசப் பேச்சுக்களை நிபந்தனையற்றுத் தொடக்கவோ அது விரும்பவில்லை. இத்தகைய சூழ்நிலையில்தான், மிகப் பாரதூரமான பின் விளைவுகளை ஏற்படுத்திய, ஒரு பேரழிவைச்

சிறீலங்கா அரசாங்கம் சந்தித்தது.

## விமானத் தளம் தாக்கி அழிப்பு

2001 ஆம் ஆண்டு ஜுலை 24ஆம் நாள், 1983 ஆம் ஆண்டின் தமிழின அழிப்பு நிகழ்வுகளை நினைவுபடுத்துகின்ற நாளில், 15 கரும்புலி வீரர்கள் கொண்ட புலிகளின் சிறப்பு அதிரடித் தாக்குதலணி ஒன்று, கொழும்பின் புறநகர்ப் பகுதியில், சிறீலங்காவின் அதியுச்சப் பாதுகாப்பு வலையத் தொகுதி ஒன்றைத் தாக்கித் துவம்சம் செய்தது. தலைநகர் கொழும்பிலிருந்து 20 மைல் வடக்கே கட்டுநாயக்காவில் அமைந்திருந்த சிறீலங்கா வான்படையின் பிரமாண்டமான தலைமைத் தளமும், அதனை ஒட்டியிருந்த சிறீலங்காவின் ஒரேயொரு சர்வதேச விமான நிலையமுமே இத் தாக்குதலின் இலக்காக அமைந்தன.

நீண்ட காலமாகத் திரட்டப்பட்ட புலனாய்வுத் தரவுகள் மற்றும் வேவுத் தகவல்களின் அடிப்படையில் மிகவும் துல்லியமாகத் தீட்டப்பட்ட பிரமிப்பூட்டும் ஒரு தாக்குதற் திட்டத்துடன் களம் இறங்கினர் கரும்புலிகள். பல வருடப் பயிற்சி அனுபவம் பெற்ற புலனாய்வுத்துறைக் கரும்புலி அணியுடன், மூத்த தளபதி கேணல் கடாபி அவர்களின் 'தேசத்தின் புயல்கள்' கரும்புலிப் படையணியைச் சேர்ந்த வீரர்கள் சிலரும் இணைந்து, ஆறு மாத கால விசேட கடும் பயிற்சியின் பின் களம் குதித்தனர். இத் தாக்குதல் நடவடிக்கை புலனாய்வுத்துறையின் மூத்த உறுப்பினர் கண்ணன் தலைமையில் மேற்கொள்ளப்பட்டது. இவர் பல கள முனைகளைக் கண்ட வீரர். சிறந்த அணித் தலைவராகச் செயற்பட்டு வீர சாதனைகள் படைத்தவர். கட்டுநாயக்கா தாக்குதலின் திட்டமிடல் தொடங்கிக் கள நடவடிக்கையிலும் இவரது பங்கு முக்கியமானது.

இக் கரும்புலித் தாக்குதல் அணிக்குப் பல்பரிமாணப் போரியல் பயிற்சி வழங்கப்பட்டது. இரவு நேரத் துப்பாக்கிச் சூட்டுப் பயிற்சி, இரவின் இருளில் நகரும் பயிற்சி, நவீன ரக ஆயுதங்கள், இலத்திரனியல் கருவிகளைக் கையாளும் பயிற்சி, தானியங்கி மற்றும் நேரக் கணிப்புக் குண்டுகளைப் பற்றிய விசேட பயிற்சி எனப் பலரகப் பயிற்சி இத் தாக்குதல் அணிக்கு

வழங்கப்பட்டது.

தாக்குதலுக்குக் குறிப்பிட்ட நாளுக்கு முன்னராகவே கட்டுநாயக்கா விமானத் தளத்தை அண்மித்த பகுதிக்குச் சென்றடைந்த எமது போராளிகள் தாக்குதல் நாளுக்கு முதல்நாள் இரவு தமது இரகசிய நகர்வு மூலமாக இறுகப் பாதுகாக்கப்பட்ட விமானப் படைத் தளத்தினுள் ஊடுருவினர். சரியாக 37 கிலோவிலிருந்து 25 கிலோ எடையுள்ள ஆயுதங்கள், வெடிபொருட்களையும் ஒவ்வொரு போராளிகளும் காவிச் சென்றனர். புலிகளின் இராணுவச் சீருடை பூண்டு, PK இலகு இயந்திரத் துப்பாக்கிகள், RPG உந்துகணைச் செலுத்திகள், 40 MM எறிகுண்டு செலுத்தி, தானியங்கிக் குண்டுகள், நேரக் கணிப்புக் குண்டுகள், கையெறி குண்டுகள், இரவுப் பார்வைச் சாதனங்கள், ஒலியடக்க இயந்திரத் துப்பாக்கி, T-56 - 2 ரகத் துப்பாக்கிகள், மற்றும் மேற்படி ஆயுதங்களுக்கான ஆயிரக்கணக்கான ரவைகள், ஆகியவற்றுடன் பூரணமாக ஆயுதம் தரித்த புலிகளின் அதிரடியணி, தமிழீழ நேரடிப்படி சரியாக காலை 3:20 மணிக்குத் தாக்குதலை ஆரம்பித்தது. ஒரு சில நிமிடங்களுக்குள்ளேயே நடந்து கொண்டிருப்பதைக் கிரகித்துக் கொள்வதற்கே போதிய அவகாசமில்லாமல் சிங்களப் படை திகைத்து நிற்க, அவர்களது வான்படைக் கலங்களை நொருக்கிப் பலத்த நாசத்தை விளைவித்தனர் புலிகள். இஸ்ரேலிய தயாரிப்பு ஒலிமிகை வேக உந்து விசை Kfir போர் விமானங்கள் 2, ரஷ்யத் தயாரிப்பான MI-24 தாக்குதல் வானூர்தி 1, MI-17 தாக்குதல் வானூர்திகள் 2, சீனத் தயாரிப்பான 3 நவீன பயிற்சி விமானங்கள் என்பன அழிக்கப்பட்டன. இந்த வான்படைக் கலங்கள் தீயிலே வெந்து உருகிக் கொண்டிருக்க, புலி வீரர்களுக்கும், சிறீலங்கா வான்படையினருக்கும் இடையில் கடும் சண்டை மூண்டது.

நாலாபுறமும் எதிரிப் படைகளால் சூழப்பட்டு மூர்க்கமான தாக்குதலுக்கு இலக்கான போதும் பதட்டமின்றி, நிதானமாக நின்று, புலி அணியை வழிநடத்திய கண்ணன், தமது போர்த் திறனால் விமானப் படையினருக்கு உச்ச இழப்பை ஏற்படுத்தினார். விமானத் தளச் சண்டையில் நான்கு கரும்புலி வீரர்கள் வீரச்சாவைத் தழுவிக் கொண்டனர். சண்டை தொடங்கிய ஒரு மணி நேரத்தின் பின்பு, அருகிலிருந்த பண்டாரநாயக்கா சர்வதேச விமான நிலைய வளாகத்திற்குள் புலிகளின் தாக்குதல் அணி ஊடுருவியது. விமானங்களிலிருந்தும்

விமான நிலைய வளாகத்தினுள்ளிருந்தும் பொது மக்கள் பாதுகாப்பாக விலகிச் செல்ல அவகாசமளித்த புலி வீரர்கள் பயணிகள் விமானங்களையும் எண்ணெய்க் குதங்களையும் தாக்கி அழித்தனர். A330, A340 ரகங்களைச் சேர்ந்த நவீன விமானங்கள் உட்பட 'சிறீலங்கன் எயர்லைன்ஸ்' நிறுவனத்துக்குச் சொந்தமான மூன்று விமானங்கள் அழிக்கப்பட, இன்னும் மூன்று பலத்த சேதத்திற்கு உள்ளாக்கப்பட்டன. ஒட்டுமொத்தமாகப் 11 இராணுவ மற்றும் பயணிகள் விமானங்களை அழித்த புலிகள், இந்தத் தாக்குதலில் இன்னும் மூன்று பயணிகள் விமானங்களைப் பலத்த சேதத்திற்கு உள்ளாக்கினர். நீண்ட நேரமாகக் களத்தில் நின்றுபிடித்து, பலத்த நாசத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்த புலிகளின் தாக்குதலினால் அதிர்ச்சியடைந்த அரசாங்கம் மேலதிக துருப்புக்களை கட்டுநாயக்காவுக்கு அனுப்பி வைக்க, விமான நிலையம் ஒரு சமர்க்களமாக மாறியது. அதிகாலை முதல் காலை ஏழு மணிவரை நடைபெற்ற கடும் மோதல்களின் பின்னர், புலிகளின் தாக்குதல் அணியிடமிருந்த ஆயுத வெடிபொருட்கள் தீர்ந்து போன நிலையில் சண்டை முடிவுக்கு வந்தது. சிலர் தாக்குதலில் களப் பலியாக, வேறு சிலர் தமது வெடிகுண்டு அங்கியை வெடிக்க வைத்து வீரச்சாவைத் தழுவிக் கொண்டனர். தாக்குதற் தளபதி கண்ணன் உட்பட மொத்தம் 14 கரும்புலி வீரர்கள் இத் தாக்குதலில் உயிர் நீத்தனர். தாக்குதல் அணியின் முக்கிய உறுப்பினர் ஒருவரான முகிலன் களத்திலிருந்து மீண்டு தலைமையகம் சென்றடைந்தார்.

ஓர் அரசாங்கத்துடன் எதிர்த்துப் போராடும் ஒரு விடுதலை இயக்கம் என்ற வகையில், விடுதலைப் புலிகள், இராணுவ மற்றும் பொருளாதார இலக்குகளுடன் இந்தத் தாக்குதலுக்குத் திட்டமிட்டிருந்தனர். இராணுவ ரீதியாக, உந்துவிசைப் போர் விமானங்களும், தாக்குதல் உலங்குவானூர்திகளும் போரரங்குகளில் பலத்த உயிர் ஆபத்தை விளைவிப்பனவாக இருந்தன. அத்தோடு, 'பயங்கரவாதத்திற்கு எதிரான போர்' என்ற போர்வையில், சாதாரணப் பொதுமக்களை இலக்கு வைத்துத் தாக்குவதற்கும் சிறீலங்கா அரசு தனது வான் படையைத் தாராளமாகப் பாவித்து வந்தது. அது மட்டுமல்லாது, ஒரு கவலைக்குரிய விடயம் என்னவென்றால் எதிரியிடமிருந்து வான் வழியாக எதிர்கொண்ட ஆபத்தைக் கட்டுப்படுத்தும் அளவுக்குப் போதுமான படைக்கல வசதிகளையும் விடுதலைப் புலிகள்

கொண்டிருக்கவில்லை. அதனால், சிறீலங்கா வான்படையின் இந்தப் பாதக வலிமையை மட்டுப்படுத்துவதற்காக, அதன் தலைமைத் தளம் மீது ஒரு தரை வழித் தாக்குதலைத் தொடுக்க புலிகளின் தலைமை தீர்மானித்தது. அதற்கான திட்டத்தையும் மிக நுட்பமாக வரைந்திருந்தது. கட்டுநாயக்கா சர்வதேச விமான நிலையம், புலிகளின் கணிப்பில் ஒரு தவிர்க்க முடியாத பொருளாதார இலக்காகும். சிறீலங்கா அரசாங்கத்தின் சொத்துக்களை நிர்மூலம் செய்வதன் மூலம் நாட்டில் ஒரு பாரதூரமான பொருளாதாரத் தாக்கத்தை விளைவிப்பது புலிகளின் நோக்கம். சிறீலங்கா அரசாங்கத்திற்குச் சொந்தமான இராணுவ மற்றும் பயணிகள் விமானங்களை அழித்து, 500 கோடி டொலர்கள் பெறுமதியான உடனடி இழப்பை ஏற்படுத்தியதன் மூலம், புலிகளின் இந்தத் தாக்குதல் தனது மூலோபாய இலக்கை முழுமையாக எய்து விட்டிருந்தது.

இந்தத் தாக்குதலில், மிகவும் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டிய புலிகளின் சாதுர்யம் என்னவெனில், எந்தவொரு வெளிநாட்டு உல்லாசப் பிரயாணியோ அல்லது பொதுத் தனிநபரோ, கொல்லப்படுவதையோ, அல்லது காயத்துக்கேனும் உள்ளாவதையோ தவிர்த்ததுதான். விமான நிலைய வளாகத்திலும், கட்டிடங்களுக்குள்ளும் சிறீலங்காப் படையினருடன் கடும் சண்டையில் ஈடுபட்ட போதும், பொதுமக்கள் பாதிக்கப்படுவதைப் புலிகள் மிகத் திறம்படத் தவிர்த்திருந்தனர்.

எதிர்பார்க்கப்பட்டதைப் போலவே - விமான நிலையம் மற்றும் வான்படைத்தளம் மீதான இந்தத் தாக்குதலானது, மிக மோசமான ஒரு பாதிப்பை ஏற்படுத்தி, சிறீலங்காவின் பொருளாதாரத்தையே முடக்கியது. தேசிய வருமானத்தின் ஒரு பிரதான கொடையாளியான, நாட்டின் உல்லாசப் பிரயாணத் துறையை அது செயலிழக்கச் செய்தது. விமான நிலைய வளாகத்திற்குள் நிகழ்ந்த கடும் சண்டையும், அந்தத் தாக்குதலின் இராணுவப் பரிமாணம் சர்வதேசச் செய்தியூடகங்களில் பெற்ற பரவலான முக்கியத்துவமும் - வெளிநாட்டவர்களின் உல்லாச வருகையைத் தடுத்தது. நீண்டுகொண்டிருந்த போரினால் வர்த்தகத்துறை ஏற்கனவே நம்பிக்கையிழந்து போயிருந்த ஒரு புறச் சூழலில், இந்தத் தாக்குதல், வெளிநாட்டு முதலீட்டின் மீதும் பாரிய பின்னடைவை ஏற்படுத்தியது. இலங்கை மத்திய வங்கியின் 2001ஆம் ஆண்டின்

நிதியறிக்கை, "உயர்ந்து செல்லும் பணவீக்கத்தாலும், தாழ்ந்து செல்லும் உலகப் பொருளாதாரத்துடனான சமநிலையாலும், 1948இற்குப் பின் - சுதந்திர சிறீலங்காவில் ஏற்பட்ட மிகப் பாரிய பொருளாதார வீழ்ச்சி" என விளக்கி, 1.4% எதிர்மறை நிகர வளர்ச்சியை அறிவித்தது. இவ்வாறாக, நாட்டுப் பொருளாதாரத்தின் அதிர்ச்சியளிக்கும் நிலைமையை விளக்கிய மத்திய வங்கியின் அந்த ஆண்டறிக்கை, சிறீலங்காப் பொருளாதாரத்தின் எதிர்கால வளர்ச்சி, நாட்டில் 'சமாதானத்தை நிலை நாட்டுவதிலேயே தங்கியுள்ளது' என்று குறிப்பிட்டது. அந்த ஆண்டறிக்கையின் குறிப்பு இவ்வாறாக உள்ளது:

> "நாட்டில் சமாதானத்தை நிலை நாட்டுவதிலேயே பொருளாதார முன்னேற்றம் நிச்சயமாகத் தங்கியுள்ளது. நீண்டு செல்லும் போரானது, மனித வள மற்றும் பொருள் வள வகைகளில், நாட்டின் பொருளாதாரத்தை விழுங்கிச் செல்கின்றது. மேலும் பொருளாதார வளர்ச்சிக்கான ஏது நிலைகளை அது கடுமையாகப் பாதித்து விட்டது. பொருளாதார ரீதியாக, இந்த நீண்ட போரின் சுமையைத் தாங்கிக் கொள்ளக் கூடிய சக்தியை நாடு இழந்தே விட்டது. அதனால், பிரச்சினைக்கு விரைந்து தீர்வு காண்பது அத்தியாவசியமானது".[1]

## கொழும்பில் புதிய ஆட்சியமைப்பு

சந்திரிகா அரசாங்கமானது அரசியல், இராணுவ, பொருளாதார ரீதியாகப் பெரும் நெருக்கடிக்கு முகம் கொடுத்து நின்றது. 'சமாதானத்திற்கான யுத்தம்' என்ற சந்திரிகாவின் கோட்பாட்டை புலிகள் இயக்கம் தனது போர் வலுவால் தவிடு பொடியாக்கியது. இராணுவ அணுகுமுறையால் அரைகுறையான அரசியல் தீர்வு ஒன்றைத் தமிழ் மக்கள் மீது திணித்துவிடலாம் என்ற சிங்கள மேலாண்மைவாதிகளின் கற்பனைக் கோட்டையும் இடிந்து போனது. வன்னிப் பெரும் சமர்களில் புலிகள் ஈட்டிய திகைப்பூட்டும் சாதனைகளும் சிறீலங்காவின் படைத்துறை சந்தித்த பேரிழப்புகளும் இராணுவத்தின் முதுகெலும்பை முறித்து, மீள முடியாதவாறு முடக்கியது. இலங்கைக்கு

சுதந்திரம் கிடைத்த பின்பு முதற் தடவையாக, தமிழர் மீதான இராணுவ மேலாதிக்க வலுவைச் சிறீலங்கா அரசு இழந்தது. விடுதலைப் புலிகள் அமைப்பு இராணுவச் சம பலத்தை வென்றெடுத்ததுடன் தமிழர் தாயகத்தின் எழுபது விகித நிலப்பரப்பை மீட்டெடுத்து அங்கு தமது ஆட்சியதிகாரத்தை நிலைநாட்டியது. புலிப் படையானது வெற்றி கொள்ள முடியாத ஒரு போராட்ட சக்தி என்பதை சிங்கள அரசும், அதற்கு இராணுவ ரீதியாக முண்டு கொடுத்த உலக நாடுகளும் உணர்ந்து கொண்டன. எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தது போன்று கட்டுநாயக்காவில் விழுந்த மரண அடி, வான்படையின் சிறகுகளைக் கத்தரித்து விட்டதுடன் சிறீலங்காவின் பொருளாதாரத்தை செயலிழக்கச் செய்து முடக்கியது.

மீள முடியாத பெரும் நெருக்கடியைச் சந்தித்து நின்ற சந்திரிகாவின் அரசுக்கு புலிகளுடன் சமரசம் செய்து, தமிழரின் தேசியப் பிரச்சினைக்கு அமைதி வழியில் தீர்வு காண முயற்சிப்பதைத் தவிர வேறு மார்க்கம் இருக்கவில்லை. இதனையே மேற்குலக எஜமான்களும் சந்திரிகா அரசுக்குப் போதிக்கத் தொடங்கினர். புலிகளின் போர்வலு இறுதியில் இராணுவத்தின் ஆணவத்தைப் பணியவைத்து, சிங்களத்தைச் சமாதான வழிக்குத் தள்ளியது. இந்தச் சூழ்நிலையில்தான் புலிகளின் சமாதானக் கதவைத் தட்டிப் பார்க்க விரும்பினார் சந்திரிகா. அம்மையாரின் சொல்வழிக்கு அமைய, அவரது ஆலோசகரும் வெளிவிவகார அமைச்சருமான லக்ஷ்மன் கதிர்காமர் கொழும்பிலுள்ள நோர்வே தூதுவர் ஜோன் வெஸ்ட்போர்க்கை அணுகி, சமாதான முயற்சியை மீளத் தொடங்கும் சாத்தியம் பற்றி வினவினார். புலிகளுடன் மோதி மூக்குடைபட்டு வருகிறார் கதிர்காமர் என்பதைப் புரிந்து கொண்ட நோர்வேத் தூதுவர், 'சமாதானத்தில் புலிகள் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் ஆனால் சந்திரிகா அரசின் நேர்மையில் அவர்களுக்கு நம்பிக்கை இருக்கவில்லை' என்பதை இராஜதந்திர மென்மொழியில் வெளிநாட்டு மந்திரிக்குக் குத்தலாகச் சொன்னாராம். நான்கு மாதங்களாகப் போருக்கு ஓய்வு கொடுத்த பிரபாகரன் அமைதித் தவம் இருந்து ஏமாந்து போன தருணத்தில் புலிகள் மீது 'அக்கினிச் சுவாலையை' ஏவி விட்டதால், விடுதலைப் புலிகளின் தலைமைக்குச் சந்திரிகா அரசு மீது நம்பிக்கை செத்துப் போனதாக நோர்வேத் தூதுவர் விளக்கினாராம். பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு

விடுதலைப் புலிகள் இப்போது சில முன்கோரிக்கைகளை முன்வைக்கிறார்கள் என்று கூறிய நோர்வே இராஜதந்திரி, தமிழ் மக்கள் மீது திணிக்கப்பட்டிருக்கும் பொருளாதாரத் தடையை முற்றாக நீக்கி, பயங்கரவாத முத்திரை குத்திப் புலிகள் இயக்கம் மீது அரசு விதித்த தடையை அகற்றி, இரு தரப்பும் இணங்கிய ஒரு நிலையான போர் நிறுத்தம் பிரகடனம் செய்த சமரசச் சூழ்நிலையில்தான் புலிகள் பேச்சுக்கு வருவார்கள் எனத் தெளிவுபடுத்தினார். சமரசப் பேச்சுக்களுக்கு விடுதலைப் புலிகள் முன்நிபந்தனைகள் விதிக்கிறார்கள் எனக் கதிர்காமர் இச் சந்திப்பின் கருத்தாடல் பற்றி அம்மையாருக்கு வியாக்கியானம் அளிக்க, நிபந்தனைகள் எதையுமே ஏற்க முடியாதெனச் சமாதானக் கதவை மூடினார் சந்திரிகா.

இந்தக் கால கட்டத்தில், 2001 செப்டம்பரில் - நோர்வேயின் தொழிற் கட்சி அரசாங்கம் தமது ஆட்சியைத் துறந்ததால், மரபுவாத மற்றும் கிறீஸ்த்தவ ஜனநாயகவாதிகளின் ஒரு புதிய அரசாங்கம் அமைப்பதற்கு வழிவிட்டது. திரு. கே.எம்.பொண்டவிக் புதிய நோர்வே அரசாங்கத்தின் பிரதமராகப் பொறுப்பு ஏற்றார். திரு. ஜான் பீற்றர்சன் அதன் வெளிவிவகார அமைச்சராக நியமிக்கப்பட்டார். திரு. விடார் ஹெல்கிசன் வெளிவிவகாரத் துணை மந்திரியாக அமர்த்தப்பட்டதுடன், இலங்கைச் சமரச முயற்சிகளுக்கான பொறுப்புக்களும் அவரிடம் வழங்கப்பட்டது. இலங்கை விவகாரத்திற்கான சிறப்புத் தூதுவராக திரு. எரிக் சுல்கைம் தொடர்ந்தும் பணியேற்றார். இலங்கை இன நெருக்கடிக்குச் சமரசத் தீர்வு காண எடுக்கப்படும் முயற்சிகளில் சம்பந்தப்பட்ட தரப்புக்களிடையே அனுசரணையாளராகத் தொடர்ந்தும் செயற்பட நோர்வேயின் புதிய அரசாங்கம் உறுதியளித்தது.

2001ஆவது வருடம் டிசம்பர் 5ஆம் நாள், சிறீலங்காவும் ஒரு பாராளுமன்றத் தேர்தலைச் சந்தித்தது. தமிழரின் தேசிய இனப் பிரச்சினைக்கு ஒரு சமரசத் தீர்வு காண்பது, நாட்டில் சமாதானத்தை ஏற்படுத்துவது என்பனவே தேர்தல் பிரச்சாரத்தின் மையக் கருத்துகளாக அமைந்தன. திரு. ரணில் விக்கிரமசிங்காவின் தலைமையிலான ஐக்கிய தேசியக் கட்சி, சமாதானத்தை நிலைநாட்டவும் விடுதலைப் புலிகளுடன் சமரசப் பேச்சுக்களை நடத்தவும் சிங்கள மக்களிடம் ஒரு ஆணையைக் கேட்டது. 2001ஆம் ஆண்டின் ஐக்கிய தேசியக் கட்சியின் தேர்தல் விஞ்ஞாபனம் தெரிவித்ததாவது:-

"சமாதானமே எமது முதன்மை இலட்சியம். சமாதானத்தின் பால் நின்று, சமாதானத்திற்காக மட்டுமே நாம் உழைப்போம். தேசியப் பிரச்சினைக்கான எமது தீர்வு யோசனையை, இத்தனை வருடங்களாக, எமது எதிர்த்தரப்பினர் மிக மோசமாகவும், தயவற்ற முறையிலும் திரிவுபடுத்திக் காட்டிவிட்டார்கள். நாங்கள் யுத்தத்தை முடிவுக்குக் கொண்டு வந்து, நாட்டில் ஐக்கியத்தைக் கட்டியெழுப்புவோம். பிரச்சினையில் தொடர்புபட்ட அனைத்துத் தரப்பினராலும் ஏற்றுக் கொள்ளப்படத்தக்க அரசியல் தீர்வு ஒன்றை, பிளவுபடாத சிறீலங்காவின் ஒருமைப்பாட்டிற்குள் நாம் ஏற்படுத்துவோம். அதற்கான முயற்சிகளை, நாம் இதயபூர்வமாகவும், திறந்த மனதுடனும் முன்னெடுப்போம்...

நாம் ஆட்சியமைத்தவுடன் - எல்லோருக்கும் ஒரு பரந்த தளத்தில் அரசியற் தீர்வை அடைவதற்காக - அனைத்து அரசியற் கட்சிகளுடனும், மதப் பீடங்களுடனும், சமூக அமைப்புக்களுடனும் நாங்கள் கலந்துரையாடல்களை முன்னெடுப்போம். தமிழீழ விடுதலைப் புலிகளையும் நாம் அந்தச் சமரச முயற்சிகளில் ஈடுபடுத்துவோம்.

எல்லாச் சமூகங்களினதும் பெரும்பான்மையினரால் ஏற்றுக் கொள்ளப்படும் ஒரு அரசியல் தீர்வை அடையாதவரை, அரசியலமைப்பில் எத்தகைய ஒரு சட்டத் திருத்தம் கொண்டு வருவதற்கான யோசனையை நாம் முன்வைக்கப் போவதில்லை.

வடகிழக்கு மாகாணத்திற்கு ஒரு இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பு நிறுவப்படும்.

போரினால் இடம்பெயர்ந்து, நிர்க்கதி நிலைக்குத் தள்ளப்பட்டுள்ள மக்களின் பிரச்சினையைத் தீர்ப்பதற்கென ஒரு சுதந்திர ஆணைக் குழுவை நாம் நியமிப்போம்.

உணர்வுபூர்வமான இந்த விடயம், சமூகத்தின் அனைத்துத் தரப்பினராலும் முழு மனதோடு ஆராயப்பட வேண்டும். உணவு, மருத்துவம் மற்றும் இன்னபிற அத்தியாவசியத் தேவைகளின் பற்றாக்குறைக்குள் சிக்குண்டு, வடகிழக்கில் வாழும் மக்கள் நாளாந்தம்

பட்டுவரும் தாங்கொணாத் துன்பத்தினை நாம் அறிந்திருக்கிறோம். தங்கள் உறவினர், நண்பர்களிடம் விஜயம் செய்யும் சாதாரண பயணிகள் எதிர்கொள்கின்ற இடர்பாடுகளையும் நாம் புரிந்து கொள்கின்றோம். நாம் ஆட்சியமைத்தவுடன், அவர்களது வாழ்வில் சுமூக நிலையை ஏற்படுத்துவதற்கான உடனடி நடவடிக்கைகளை மேற்கொள்வோம்."

சமாதானம் என்பது, தென்னிலங்கைத் தேர்தல் களத்தின் அரசியற் சக்திகளுக்கிடையே, அதனை ஆதரித்தவர்களுக்கும், அதனை எதிர்த்த பேரினவாதிகளுக்கும் மத்தியிலான முதன்மை விவாதப் பொருளாக உருவாகிவிட்டிருந்தது. இதனை உணர்ந்து கொண்ட புலிகளின் தலைவர் திரு. பிரபாகரன் அவர்கள் 2001 ஆம் ஆண்டு நவம்பர் 27 அன்று தனது வருடாந்த மாவீரர் நாள் உரையில், "போர் வெறி கொண்ட இனவாத சக்திகளை" அடையாளம் கண்டு நிராகரிக்குமாறு சிங்கள மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார். நிலைமையை அவர் பின்வருமாறு விளக்கினார்:-

"இலங்கையின் முதன்மையான பிரச்சினையாக முனைப்புற்று நிற்கும் தமிழரின் தேசிய இனச் சிக்கலானது, சமாதானம், போர் என்ற இரு முரண்பட்ட துருவங்களில் அரசியல் சக்திகளை ஈர்த்து வருகின்றது. சமாதானம் வேண்டி நிற்கும் சக்திகளுக்கும் சமாதானத்திற்கு எதிரான தீவிரவாத சக்திகளுக்கும் மத்தியிலான போட்டியாக இந்தத் தேர்தல் நடக்கின்றது. எனவே, எதிர்காலத்தில் இத் தீவில் சமாதானம் நிலவ வேண்டுமா, போர் தொடர வேண்டுமா என்பதைத் தீர்மானிக்கும் பொறுப்பு பொதுமக்களிடம் விடப்பட்டிருக்கிறது. தமிழ் மக்களுக்கு நீதி கிடைக்காதவரை, அவர்களது அரசியல் அபிலாசைகள் நிறைவேறாதவரை இத் தீவில் சமாதானமும், இன ஒத்திசைவும், பொருளாதார மேம்பாடும் ஏற்படப் போவதில்லை என்பதைச் சிங்கள மக்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்.

நாம் சிங்கள மக்களுக்கு விரோதிகள் அல்லர். எமது போராட்டமும் சிங்கள மக்களுக்கு எதிரானது

அல்ல. சிங்கள இனவாத அரசியல்வாதிகளின் அடக்குமுறைக் கொள்கை காரணமாகவே தமிழ், சிங்கள இனங்கள் மத்தியில் முரண்பாடு எழுந்து போராக வெடிக்கின்றது. ஆயுத பலத்தினால் எமது மக்களை அடிமை கொள்ள முனையும் அரசுக்கும், அரச படைகளுக்கும் எதிராகவே நாம் போர் புரிந்து வருகின்றோம். இந்தப் போரானது தமிழ் மக்களை மட்டுமன்றி சிங்கள மக்களையும் ஆழமாகப் பாதித்து வருகின்றது என்பது எமக்குத் தெரியும். போர் வெறி கொண்ட அதிகார வர்க்கத்தின் அடக்குமுறைக் கொள்கையால் பல்லாயிரக்கணக்கான அப்பாவிச் சிங்கள இளைஞர்களும் அநியாயமாகக் கொல்லப்பட்டு வருகின்றார்கள். அது மட்டுமன்றி, இந்தப் போரினால் எழும் பொருளாதாரப் பழுவை சிங்கள மக்களே சுமக்க வேண்டியுள்ளது என்பதும் எமக்குத் தெரியும். எனவே, இக் கொடிய போருக்கு முடிவு கட்டி, நிரந்தர சமாதானத்தை நிலைநாட்டுவதாயின், போர் வெறி கொண்ட இனவாத சக்திகளை இனங்கண்டு ஒதுக்கி விடுவதோடு, தமிழ் மக்களுக்கு நீதி வழங்கவும் சிங்கள மக்கள் முன்வர வேண்டும்....''

தமிழ்த் தேசிய இனச் சிக்கலுக்குச் சமரசத் தீர்வு கண்டு, சமாதானத்தை ஏற்படுத்துவதற்கான அமோக ஆணையைப் பெற்று, அந்தப் பாராளுமன்றத் தேர்தலில் ஐக்கிய தேசியக் கட்சி வெற்றியீட்ட, திரு. ரணில் விக்கிரமசிங்கா நாட்டின் புதிய பிரதமராகப் பதவிப் பிரமாணம் செய்து கொண்டார். அவ்வாறு பதவியேற்றுக் கொண்டவுடன், நோர்வேத் தூதுவர் திரு. வெஸ்ட்போர்க்கைச் சந்தித்து, விடுதலைப் புலிகளுடன் சமரசப் பேச்சுக்களில் ஈடுபடுத்துவதற்கான தனது அரசாங்கத்தின் விருப்பத்தைத் தெரியப்படுத்தினார். அனுசரணைப் பணியைத் தொடர்ந்தும் முன்னெடுத்துத் தனது அரசுக்கும் புலிகள் இயக்கத்திற்கும் இடையில் பேச்சுக்களை நிகழ்த்துவதற்கான முயற்சியினை ஆரம்பிக்குமாறு நோர்வே அரசாங்கத்தை வேண்டிக் கொண்டார். அத்தோடு, நோர்வேத் தூதுவர் ஊடாக புலிகளின் தலைமைக்கு அனுப்பி வைத்த ஒரு தகவலில், தமிழ் மக்களின் குறைகளைத் தீர்த்து, அவர்கள் நிம்மதியான வாழ்வுக்கு மீளத் திரும்புவதற்குத் தேவையான

நடவடிக்கைகளைத் தனது அரசாங்கம் விரைந்து மேற்கொள்ளும் என்றும் திரு. ரணில் தெரிவித்திருந்தார்.

இந்தப் புதிய அரசாங்கத்திற்குத் தமது நல்லெண்ணத்தை வெளிப்படுத்தும் முகமாக, 2001ஆம் ஆண்டு, டிசம்பர் 24ஆம் திகதி நள்ளிரவு முதல், ஒரு மாத கால யுத்த நிறுத்தம் ஒன்றை ஒருதலைப்பட்சமாக அறிவித்த புலிகள் இயக்கம், அதற்குச் சாதகமாகப் பதிலளிக்குமாறு ரணிலின் ஆட்சியிடம் கோரியது. இந்த முடிவைப் புலிகள் இயக்கம் பின்வருமாறு அறிவித்தது:-

> "சமாதானமும் இன ஒற்றுமையும் ஏற்பட வேண்டும் எனக் கடந்த பொதுத் தேர்தலில் தமிழ் மக்களும் சிங்கள மக்களும் கூட்டாக ஆணை வழங்கி இருக்கிறார்கள். இதனால் ஊக்கமளிக்கப்பட்ட விடுதலைப் புலிகளின் தலைமைப்பீடம், நத்தார், புதுவருடன், தைப் பொங்கல் போன்ற பண்டிகை நாட்களில் அமைதி நிலவும் வகையில், ஒரு மாத காலத்திற்கு ஒருதலைப்பட்சமாகப் போர் நிறுத்தம் செய்யத் தீர்மானித்துள்ளது. எமது இந்த நல்லெண்ண நடவடிக்கைக்குச் சாதகமான பதிலளித்து, இக் கால கட்டத்தில் அமைதி பேணுமாறு தனது ஆயுதப் படைகளுக்குச் சிறீலங்கா அரசாங்கம் உத்தரவு பிறப்பிக்கும் என நாம் நம்புகிறோம். சமாதானத்திலும், பேச்சுக்கள் வாயிலான தீர்விலும் எமக்குள்ள நேர்மையான ஆவலைப் பிரதிபலிக்கும் நல்லெண்ண நடவடிக்கையாகவே எமது போர் நிறுத்த அறிவித்தல்களைக் கருத வேண்டும். இந்த அமைதிச் சூழ்நிலையைப் பயன்படுத்தி, எமது மக்கள் மீது திணிக்கப்பட்டிருக்கும் பொருளாதார முற்றுகையையும் ஏனைய தடைகளையும் நீக்கி, இயல்புநிலையைத் தோற்றுவிக்கப் புதிய அரசாங்கம் நடவடிக்கைகளை எடுக்குமென நாம் நம்புகிறோம்.
>
> எமது நல்லெண்ணச் சமிக்கையை ஏற்று, எமது படையணிகளுக்கு எதிரான போர் நடவடிக்கைகளை நிறுத்துவதுடன் பொருளாதாரத் தடைகளையும் நீக்க உடன் நடவடிக்கைகளை அரசாங்கம் எடுக்குமானால், போர் நெருக்கடியைத் தணித்து, சமரசச் சூழ்நிலையை தோற்றுவிக்கும் நோக்குடன் நாம் போர் நிறுத்தத்தை மேலும் நீடிப்பது பற்றிப் பரிசீலனை செய்வோம்."

புலிகளின் இந்த ஒருதலைப்பட்சமான போர் ஓய்வுப் பிரகடனத்திற்கு ஆதரவாகப் பதிலளித்த புதிய அரசாங்கம், டிசம்பர் 24ஆம் திகதி நள்ளிரவிலிருந்து தாமும் ஒரு போர் ஓய்வைப் பிரகடனப்படுத்தியிருந்த போதும், அரச கட்டுப்பாட்டிலிருக்கும் தமிழர் பிரதேசங்களில் இராணுவ நடவடிக்கைகளைத் தொடர, அரச படைகளுக்கும், சிறீலங்கா காவல்துறையினருக்கும் உத்தரவிட்டிருந்தது. அத்தோடு, “ஆயுதங்கள், வெடி பொருட்கள், மற்றும் போர்த் தளபாடங்கள் என்பதை நாட்டிற்குள் கொண்டுவரப்படுவதைத் தடுப்பதற்கான” கடற் படையினர் கடல் நடவடிக்கைகளும் தொடரும் என்றும் அரசாங்கம் அறிவித்தது. அரசாங்கப் படைகளுக்கு வழங்கப்பட்டிருந்த இவ்வாறான கட்டளைகளும், அறிவுறுத்தல்களும் புலிகளின் தலைமைக்கு மகிழ்ச்சி அளிக்கவில்லை. இந்த விவகாரத்தினால் ஏற்படக் கூடிய விளைவுகளைப் பற்றி என்னுடன் கலந்துரையாடிய திரு. பிரபாகரன், நோர்வேத் தரப்பினரூடாகப் புதிய அரசாங்கத்திடம் தனது அதிருப்தியைத் தெரிவிக்குமாறு என்னிடம் கேட்டுக் கொண்டார். அதன்படி, திரு. ரணில் விக்கிரமசிங்கவுக்குத் தெரிவிக்கப்பட வேண்டிய அந்தத் தகவலை, திரு. எரிக் சுல்கைம் அவர்களுக்கு, 2001ஆம் ஆண்டு, டிசெம்பர் 27இல் நான் கீழுள்ளவாறு எழுதினேன்:

> “போர் நிறுத்தத்தைக் கடைப்பிடிப்பது குறித்து சிறீலங்காவின் படைத்துறைத் தலைமை, தனது ஆயுதப் படைகளுக்கு வழங்கியுள்ள வழிமுறை உத்தரவில் காணப்படும் சில அம்சங்கள் தொடர்பாக விடுதலைப் புலிகளின் தலைவர் திரு. பிரபாகரன் அதிருப்தி அடைந்துள்ளார். இதனைச் சிறீலங்காவின் அரச தலைமைக்கு தங்கள் மூலம் தெரியப்படுத்துமாறு என்னைக் கேட்டுள்ளார். தமிழ் மக்களின் சுதந்திரமான நடமாட்டங்களுக்குத் தொடர்ந்து விதிக்கப்படும் கட்டுப்பாடுகளாலும், வட - கிழக்குப் பிராந்தியத்தில் இராணுவ ஆக்கிரமிப்பிலுள்ள பிரதேசங்களில் நிறுவப்பட்டுள்ள எண்ணற்ற சோதனைச் சாவடிகள் மற்றும் தடை அரண்களாலும் சாதாரண பொது மக்கள் கடுமையான தொல்லைகளுக்கு உள்ளாகின்றார்கள் என்று அவர் கருதுகின்றார். சுற்றி வளைப்புக்களையும், தேடுதல் நடவடிக்கைகளையும் தொடர்வதற்கு

எடுக்கப்பட்டிருக்கும் முடிவானது - போர் நெருக்கடியைத் தணித்து, சமூக நிலையைத் தோற்றுவிப்பதற்கு எவ்வகையிலும் உதவப் போவதில்லை என்பதுடன், மோதல் நிலையை உருவாக்கக் கூடிய சம்பவங்கள் நிகழ்வதற்கே அது தூண்டுதலாக அமைந்து விடும் என்பதும் அவரது வாதம். மேலும், எத்தகைய சூழ்நிலையிலும் சிறீலங்காக் கடற் படையினரின் திட்டமிட்ட தாக்குதல்களுக்கு உள்ளாக்கப்படுமிடத்து, ஒரு தற்காப்பு நடவடிக்கையாக, கடற்புலிகள் திருப்பித் தாக்குவார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்ளவும் திரு. பிரபாகரன் விரும்புகின்றார். கடற்புலித் தளங்கள் மீது வான் வழியாகவோ அல்லது கடல் வழியாகவோ தாக்குதல்கள் மேற்கொள்ளப்பட்டு பலத்த சேதங்கள் உண்டுபண்ணுமிடத்து, போர் ஓய்வை மீறும் ஒரு யுத்த நடவடிக்கையாகவே அவை கொள்ளப்படும் என்றும் அவர் தெரிவிக்கின்றார்."

கொழும்பிற்கான நோர்வேத் தூதுவர் ஊடாக திரு. ரணில் விக்கிரமசிங்கவுக்கு அனுப்பி வைக்கப்பட்ட திரு. பிரபாகரனின் இந்தச் செய்திக்கான அரசாங்கத்தின் பதில் உடனடியாகவே கிடைத்தது. தமிழர் பிரச்சினைக்குத் தீர்வு காண்பதில் பிரதம மந்திரி முழு மனதுடனும், நேர்மையுடனும் ஈடுபாடு கொண்டுள்ளார் என்று அரசாங்கத்தின் அந்தப் பதிலில் வலியுறுத்தப்பட்டிருந்தது. அத்தோடு, இரு தரப்பினரும் தனித்தனியாக ஒருதலைப்பட்ச யுத்தநிறுத்த அறிவிப்புக்களை விடுப்பதற்குப் பதிலாக, இரு தரப்பினரும் பரஸ்பரம் இணங்கும் ஒரு போர் நிறுத்த உடன்படிக்கைக்கான நெறிமுறைகளை வரைவதில் அரசாங்கம் ஆர்வப்படுகின்றது என்றும் அதில் தெரிவிக்கப்பட்டிருந்தது. புலிகள் இயக்கத்தின் தலைமைக்கு எழுதப்பட்டிருந்த அந்தப் பதிலில் மேலும் தெரிவிக்கப்பட்டிருந்ததாவது:-

"போர் நிறுத்த உடன்பாட்டைச் செயற்படுத்துவது சம்பந்தமாகச் சில முக்கிய விடயங்கள் குறித்து சிறீலங்கா அரசாங்கம் விடுதலைப் புலிகள் அமைப்புடன் அவசரமாகக் கலந்தாலோசிக்க வேண்டி உள்ளது.

தற்போதுள்ள போர் நிறுத்தமானது இரு தரப்பும்

இணங்கிச் செய்து கொள்ளப்பட்ட உடன்பாடு அல்ல என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். இரு தரப்பினரும் வெவ்வேறாக, ஒருதலைப்பட்சமான முறையில் செய்துள்ள போர் நிறுத்தத்தின் விளைவாகவே இன்றைய கள யதார்த்தம் உள்ளது. இக் கள நிலைமை தப்பபிப்பிராயங்களையும் பதட்ட நிலையையும் உருவாக்கலாம். எனவே இரு தரப்பினரும் நிதானத்தைக் கடைப்பிடித்து, தேவை ஏற்படும் பொழுது பரஸ்பரம் ஒத்துழைப்பது அவசியமாகும்.

இவ்வாறான சூழ்நிலையில், தப்பபிப்பிராயத்தைத் தவிர்க்கும் நோக்குடன், இரு தரப்பினரும் உடனடியாகவே கள நடவடிக்கைகளை நிறுத்தி, போர் நிறுத்தத்தின் அதிகார வரம்புகள், மற்றும் அதில் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகள் குறித்து அவசர இணக்கப்பாட்டுக்கு வருவது பொருத்தமானதாகும்.''

## பரஸ்பரமாக இணங்கப்பட்ட போர் நிறுத்தம்

இரு தரப்பும் இணங்கிய ஒரு போர் நிறுத்தம் உருவாக்கப்பட வேண்டிய இன்றியமையாத் தேவையை ஏற்றுக் கொண்ட புலிகளின் தலைமை, ஒழுங்கமைக்கப்பட்ட போர்நிறுத்த உடன்படிக்கை ஒன்றுக்குரிய அதிகாரங்கள், கட்டுப்பாடுகள், வரையறைகள் தொடர்பாகக் கலந்துரையாடுவதற்குத் தாம் தயாராக இருப்பதாக நோர்வே அரசாங்கத்திற்கு அறிவித்தது. அத்தோடு, பரஸ்பர இணக்கப்பாட்டுடன் கூடிய போர் நிறுத்தம் ஒன்றை உருவாக்கும் வேலைத் திட்டத்திற்கான தமது தரப்பின் யோசனை வரைபு ஒன்றை அரசாங்கத் தரப்பினரின் பரிசீலனைக்குச் சமர்ப்பிக்க இருப்பதாகவும் நோர்வேத் தரப்பினரிடம் தெரிவித்தது. மேலும் இரு தரப்பினருமாகச் சேர்ந்து, நோர்வேயின் துணையுடன், ஒரு பொதுப் போர் நிறுத்த ஒழுங்கமைப்பை உருவாக்கும் வரைக்கும் அனைத்து சுற்றி வளைப்பு, தேடுதல், கைது மற்றும் கள நடவடிக்கைகளையும் அரசாங்கம் இடைநிறுத்தி வைக்க வேண்டும் என்றும் புலிகள் யோசனை தெரிவித்தனர். அத்தோடு, தமிழ் மக்கள் எதிர்கொண்டு

நின்ற அநீதியை நீக்குவதிலும், சமத்துவமின்மையை அகற்றுவதில் புதிய அரசாங்கம் இதய சுத்தியுடன் இருக்கின்றதென்றால், தென்னிலங்கைச் சிங்களவர்களால் இலகுவில் பெறக் கூடிய அத்தியாவசியப் பொருட்கள் அனைத்தும் வட - கிழக்குத் தமிழ் மக்களுக்கும் இலகுவில் பெறக்கூடியதாக அரசு உறுதி செய்ய வேண்டும் என்றும் புலிகள் இயக்கம் வாதிட்டது.

புலிகளின் இந்தக் கோரிக்கை பிரதம மந்திரிக்குத் தெரிவிக்கப்பட்டவுடன், பதில் நடவடிக்கை காலம் தாழ்த்தாது எடுக்கப்பட்டது. அனைத்துச் சுற்றிவளைப்புக்கள், தேடுதல் மற்றும் கைது நடவடிக்கைகளை அரசாங்கம் இடைநிறுத்தம் செய்கின்றது என்று நோர்வே தரப்பினர் எமக்கு அறியத் தந்தனர். அத்தோடு, நோர்வேயின் புரிந்துணர்வு உடன்படிக்கைத் திட்ட வரைவில் உள்ளதன் படி, 2002 ஜனவரி 15ஆம் திகதியிலிருந்து, பொருளாதாரத் தடையை நீக்கி, அத்தியாவசியப் பொருட்கள் அனைத்தும் தமிழ்ப் பகுதிகளுக்குத் தாராளமாக எடுத்துச் செல்லப்பட அனுமதிக்கப்படும் எனவும் அரசு உறுதியளித்தது.

இதேவேளையில், சமாதான முன்னெடுப்பு மற்றும் சமரசப் பேச்சுக்களுக்குப் பொறுப்பாக, அரசியலமைப்புத்துறை அமைச்சர் பேராசிரியர் ஜீ.எல்.பீரிஸ் மற்றும் பொருண்மிய மறுசீரமைப்புத் துறை அமைச்சர் திரு. மிலிந்த மொறகொட ஆகியோரின் தலைமையில் ஒரு உயர்மட்டக் குழுவை திரு. ரணில் விக்கிரமசிங்கா நியமித்தார். அது மட்டுமன்றி, சீனாவுக்கான சிறீலங்காவின் தூதுவர் திரு. பேர்னாட் குணத்திலகா தலைமையில் ஒரு சமாதானச் செயலகத்தினையும் அவர் நிறுவியதுடன், அனுசரணையாளர் பணியைத் தொடர்ந்து மேற்கொள்ளமாறு நோர்வே அரசாங்கத்தைக் கோரி, பிரதமர் திரு. பொண்டேவிக் அவர்களுக்கும் எழுதினார். இதேபோன்ற ஒரு கோரிக்கையை உத்தியோகபூர்வமாக விடுக்குமாறு புலிகள் இயக்கத்திடமும் கேட்கப்பட்டதையடுத்து, திரு. பிரபாகரன் 2002 ஜனவரி 1ஆம் திகதி, திரு. பொண்டேவிக் அவர்களுக்குப் பின்வருமாறு எழுதினார்:-

அன்புக்குரிய பிரதம மந்திரி அவர்களுக்கு,

இலங்கையின் தமிழ்த் தேசிய இனச்சிக்கலுக்குச் சமரச அரசியல் தீர்வு ஒன்றைக் காண்பதற்காக, கடந்த இரண்டரை வருடங்களாகத் தாங்கள் எடுத்துவரும் அயராத முயற்சிகளுக்கும், தாங்கள்

வழங்கி வரும் ஒப்பற்ற உதவிகளுக்கும், முதற்கண் எனது மனமார்ந்த நன்றிகளை நோர்வே அரசாங்கத்திற்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றோம். அத்தோடு, மிக நுட்பமாகக் கையாளப்பட வேண்டிய இந்தச் சமாதான முயற்சிகளில், எத்தகையை ஊறுபாடும் நேர்ந்து விடாமல் குறிக்கோளை அடைவதில் தாங்கள் காட்டிவரும் நடுநிலை தவறாத பண்பைக் கண்டு, நான் வியக்கிறேன். இத்தகைய தங்களது அற்புதமான அணுகுமுறை கண்டு, தமிழீழத்தில் வாழும் தமிழ் மக்கள் மட்டுமன்றி, உலகமெங்கும் பரந்து வாழும் தமிழ் மக்கள் அனைவரும் நன்றியுணர்வோடு மகிழ்வடைகின்றார்கள்.

இனச் சிக்கலுக்கு ஒரு நிரந்தரமான தீர்வைக் கண்டு, ஒரு நிலையான சமாதானத்தை ஏற்படுத்துவதில் தங்களது அனுசரணைப் பணியைத் தொடர்ந்தும் ஆற்றி, சம்பந்தப்பட்ட தரப்புகளுக்கு உதவியாய் இருக்குமாறு தங்களை வேண்டியே நான் இந்த மடலை உங்களுக்கு எழுதுகின்றேன்.

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்

நோர்வேயின் பிரதம மந்திரி இவ்வாறு பதிலளித்தார்:-

அன்புக்குரிய திரு. பிரபாகரன் அவர்களுக்கு,

ஜனவரி 1ஆம் திகதி அன்று அனுப்பியிருந்த கடிதத்தில் தாங்கள் கேட்டிருந்ததற்கு அமைய, இலங்கை இனப்பிரச்சினைக்கு அமைதியான அரசியல் தீர்வு காணும் முயற்சியில் சம்பந்தப்பட்ட தரப்புக்களை ஒருங்கிணைக்கும் அனுசரணைப் பணியில் ஈடுபடுவதில் எனது அரசாங்கத்திற்கு இருக்கும் உறுதிப்பாட்டைத் தங்களுக்கு உறுதி செய்ய விரும்புகின்றேன்.

சமரச முயற்சியில் விடுதலைப் புலிகள் இயக்கத்தின் ஆக்கபூர்வமான அணுகுமுறையையிட்டு நாங்கள் மகிழ்ச்சியடைவதுடன், இரு தரப்புக்களுக்கும் இடையில் புத்துயிர் அடைந்து வரும் பரஸ்பர

நம்பிக்கையானது, சமாதானத்தை அடைவதற்கான வழிகளை இலகுவாக்கும் எனவும் நாங்கள் நம்புகின்றோம்.

அமைதி முயற்சிக்கான நோர்வேயினது அனுசரணைப் பணியின் பொறுப்புக்களை, எனது வெளிவிவகார அமைச்சர் திரு. ஜான் பீட்டர்சன் அவர்களிடமும், அவரது துணை மந்திரி திரு. விடார் ஹெல்கிசன் அவர்களிடமும் ஒப்படைத்திருக்கிறேன். சமரச முன்னெடுப்பின் நடவடிக்கைகளை அவர்கள் நாளாந்தம் கவனித்துக் கொள்வார்கள்.

சமரசப் பேச்சுக்கள் வெற்றிகரமாக நிகழ எனது நல்வாழ்த்துக்கள்.

கே.எம்.பொண்டேவிக்
பிரதம மந்திரி

இரு தரப்பினராலும் வெவ்வேறாக ஒருதலைப்பட்சமாக அறிவிக்கப்பட்ட போர் நிறுத்தங்களை ஒருமுகப்படுத்தி, இரு தரப்பினரும் இணங்கக் கூடிய ஒரு விரிவான பொதுக் கட்டமைப்பைக் கொண்ட போர் ஓய்வு உடன்பாடு ஒன்றைத் தயாரிக்கும் பொறுப்பை நோர்வே அனுசரணையாளர் எடுத்தனர். இது சம்பந்தமாக, இரு தரப்பினரும் - சிறீலங்கா அரசாங்கமும் விடுதலைப் புலிகளும் - தங்களது யோசனைகளைச் சமர்ப்பிக்குமாறு நோர்வே கேட்டுக் கொண்டது. போர் நிறுத்த உடன்பாட்டின் நடைமுறை விதிகள் அடங்கிய எமது யோசனைகளை, எமது விடுதலை இயக்கம் 2002, ஜனவரி 7ஆம் நாளன்று திரு. விடார் ஹெல்கிசனிடம் சமர்ப்பித்தது. இரு தரப்பினரிடமிருந்தும் யோசனைகளைப் பெற்றுக் கொண்ட பின்னர், இரு தரப்பினரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒரு பொதுக் கட்டமைப்பை உருவாக்கும் மிகவும் சிரமமான பணியை மேற்கொண்டது நோர்வே அரசு.

இரு தரப்பும் ஏற்றுக் கொள்ளும் ஒரு ஆவணத்தைத் தயாரிப்பதற்காக நோர்வே சமாதான தூதுவர்களான திரு. விடார் ஹெல்கிசன், திரு. ஜோன் வெஸ்ட்போர்க், திரு. எரிக் சுல்கைம், சிறீமதி ஜெர்ஸ்டி ரொம்ஸ்டால் ஆகியோர் லண்டனில் என்னுடனும் கொழும்பில் சிறீலங்கா அரச பிரதிநிதிகளுடனும் பல சுற்றுக் கலந்துரையாடல்களை நிகழ்த்தினர். 2002ஆம் ஆண்டு, ஜனவரி - பெப்ரவரி மாதங்களில் தலைவர் பிரபாகரனுடன்

பல தடவைகள் தொடர்பு கொண்ட நான், அவருடன் கலந்தாலோசித்து, அவரிடமிருந்து பல திருத்தங்களையும் மாற்றங்களையும், யோசனைகளையும் பெற்று எமது தரப்பு ஆவணத்தை முழுமைப்படுத்தி நோர்வே அரசிடம் கையளித்தேன். நீண்ட வரலாற்றுப் பகைமையுடைய இரு தரப்பினரும் இணங்கக் கூடிய ஒரு போர் நிறுத்த ஆவணத்தைத் தயார் செய்து முழுமைப்படுத்துவதில், நோர்வே அனுசரணையாளர்கள் கடைப்பிடித்த பொறுமையான, விடா முயற்சியான, மதிநுட்பமான பணியை நான் பாராட்ட வேண்டும்.

2002 பெப்ரவரி 22ஆம் நாளன்று, விடுதலைப் புலிகளின் தலைவர் திரு. வே. பிரபாகரன் போர் நிறுத்த ஒப்பந்தத்தில் முதலில் கைச்சாத்திட்டார். இதனையடுத்து, சிறீலங்கா பிரதமர் திரு. ரணில் விக்கிரமசிங்காவும் அந்த ஆவணத்தில் கைச்சாத்திட்டார். அதே சமயம், நோர்வே வெளிவிவகார அமைச்சர் திரு. ஜான் பீட்டர்சன், உதவி மந்திரி திரு. விடார் ஹெல்கிசன் ஆகியோர் ஒஸ்லோவில் ஒரு ஊடகவியலாளர் மாநாட்டைக் கூட்டுவித்து, இந்தப் போர் நிறுத்தப் புரிந்துணர்வு உடன்படிக்கையை உலகிற்கு பகிரங்கப்படுத்தினர். இச் செய்தியாளர் மாநாட்டில் திரு. ஜான் பீட்டர்சன் இந்த உடன்படிக்கையின் நோக்கம் பற்றி கீழ்க் கண்டவாறு விளங்கப்படுத்தினார்:-

> "அறுபதாயிரம் மக்களைப் பலிகொண்டு, பரந்துபட்ட அளவில் மனித அவலங்களுக்குக் காரணமாயிருந்த இன நெருக்கடிக்குச் சமரசப் பேச்சுக்கள் மூலம் தீர்வு காண்பதே இரு தரப்பினரதும் இறுதி இலட்சியமாகும்.
>
> இந்த அதிகாரபூர்வமான போர்நிறுத்த உடன்பாடு மூலம், பகை நடவடிக்கைகளை நிறுத்துவதற்கு இரு தரப்பினரும் உறுதிபூண்டுள்ளனர். இலங்கைக் குடிமக்களின் வாழ்வில் - அவர்கள் சிங்களவர், தமிழர் முஸ்லிம்கள் அல்லது வேறு இனத்தவராயினும் சரி - இயல்பு நிலையத் தோற்றுவிக்க இரு தரப்பினரும் இணக்கம் தெரிவித்துள்ளனர். இந்தப் போர் நிறுத்த அமுலாக்கத்தை நேரடியாக மேற்பார்வை செய்யக்கூடிய, நோர்வே தலைமையிலான ஒரு சர்வதேசப் போர்நிறுத்தக் கண்காணிப்புக் குழுவை ஏற்றுக் கொள்ளவும் அவர்கள் தயாராக இருக்கிறார்கள்.

இந்தப் போர்நிறுத்த உடன்படிக்கையை இறுதி செய்வதில் இரண்டு தரப்பினருமே துணிவான முடிவுகளை எடுத்தனர். சமாதானத்தை எட்டுவதிலும் அவர்கள் தொடர்ந்தும் துணிவான முடிவுகளை எடுப்பார்கள் என்பதற்கு இப் போர் நிறுத்த உடன்பாடு ஒரு எடுத்துக் காட்டாக அமைகிறது. அரசியல் தீர்வை நோக்கிய ஒரு நீண்ட பாதையில் அவர்கள் பயணிக்கத் தொடங்கியுள்ளனர். அந்தப் பயணம் இலகுவாக இருக்கப் போவதில்லை. அவர்கள் துணிவோடும், திடசங்கற்பத்துடனும் பயணிக்க வேண்டி இருக்கும். அவர்கள் நெருக்கடிகளுக்கும் சவால்களுக்கும் முகம் கொடுக்க வேண்டி ஏற்படும். அவர்கள் கடினமான முடிவுகளை எடுக்க வேண்டி இருக்கும். ஆனால் இரத்தக் களரியான சமர்க் களங்களை விட துன்பகரமானதாக எதுவுமே இருக்கப் போதில்லை. அத்தோடு, சமாதானத்தையும் நல்வாழ்வையும் விட சிறந்த பெறுபேறாக வேறு எதுவுமே இருக்கப் போவதில்லை.

அமைதியை நோக்கிய நெடும் பயணத்தில் செல்லவிருக்கும் இலங்கை வாழ் மக்களுக்கும் அவர்களது தலைவர்களுக்கும் சர்வதேசச் சமூகத்தின் ஒத்தாசை அவசியமானது. சமாதானத்திற்கும் இன ஒற்றுமைக்கும் சர்வதேச உலகின் அரசியல் ஆதரவையும் நிதி உதவியையும் பெற்றுக் கொடுக்க அது வாய்ப்பளிக்கும். சவால்கள் மிகுந்த இந்த முயற்சியில் சம்பந்தப்பட்ட தரப்பினருக்கு நோர்வே எப்பொழுதும் தோள் கொடுத்து நிற்கும்.

நான் இப்பொழுது இப் புரிந்துணர்வு உடன்படிக்கை பற்றிய மேலதிக விபரங்கள் சிலவற்றைத் தருகிறேன்.

முதலாவதாக, இந்த உடன்படிக்கை சகல போர் நடவடிக்கைகளையும் முழுமையாக நிறுத்திக் கொள்ளுதல், இரு தரப்புப் படைகளையும் பிரித்து வைத்தல், இரு தரப்பிலும் ஆயுதம் தரிக்காத ஆட்களின் நடமாட்டச் சுதந்திரத்தை அதிகரித்தல் என்பன உட்பட போர் நிறுத்தம் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகளை விபரிக்கிறது.

இரண்டாவதாக, பொது மக்களுக்கு எதிரான

வன்முறைகளை நிறுத்தி, இராணுவப் பாவனைப் பொருட்கள் அல்லாத சகல அத்தியாவசியப் பொருட்களையும் தங்குதடையின்றி விநியோகிப்பதற்கு அனுமதி வழங்கி, நெடுஞ்சாலைகளையும் புகையிரதப் பாதைகளையும் திறந்து, மீன்பிடித் தடைகளை, படிப்படியாக அகற்றி, இலங்கை வாழ் சிங்கள, தமிழ், முஸ்லிம் மற்றும் சகல இன மக்களது வாழ்வில் இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் நடவடிக்கைகள் பற்றியது.

மூன்றாவது, நோர்வேயின் தலைமையிலான ஒரு சர்வதேசக் கண்காணிப்புக் குழு பற்றியது. இரு தரப்பினராலும் இணக்கம் காணப்பட்ட போர்நிறுத்தக் கடப்பாடுகளை இக் கண்காணிப்புக் குழு நேரடியாகத் தலத்திற்குச் சென்று மேற்பார்வையிடும்."

விடுதலைப் புலிகளிற்கும் சிறீலங்கா அரசாங்கத்திற்கும் இடையில் கைச்சாத்திடப்பட்ட இந்த நிரந்தரப் போர்நிறுத்த உடன்படிக்கையை அனைத்துலகச் சமூகம் வரவேற்றது. அமெரிக்கா, இங்கிலாந்து, ஜப்பான், இந்தியா ஆகிய நாடுகள் இரண்டு தரப்பினரையும் வாழ்த்தியதுடன், தமிழ்த் தேசிய இனச்சிக்கலுக்குச் சமரசத் தீர்வு காணுமாறு வேண்டின. ஆனால், இந்தச் சமாதான முயற்சிகளை உலகம் பாராட்டிக் கொண்டிருந்த நேரத்தில், சிறீலங்காவின் ஜனாதிபதி சந்திரிகா குமாரதுங்கா அம்மையாரோ, இந்த உடன்படிக்கையால் தான் "அதிர்ச்சியும் ஏமாற்றமும்" அடைந்திருப்பதாகச் சொன்னார். தன்னுடைய "முன் அனுமதி"யைப் பெறாமல் இந்தப் புரிந்துணர்வு உடன்படிக்கையில் கைச்சாத்திட்டதானது "ஒரு சனநாயக விரோதச் செயல்" என்று கண்டித்து, பிரதமர் ரணில் விக்கிரமசிங்காவைத் தாக்கினார். இந்த உடன்படிக்கையிலுள்ள குறிப்பிட்ட சில பகுதிகள் "நாட்டின் இறைமையையும் தேசியப் பாதுகாப்பையும் விட்டுக் கொடுத்துவிட்டன" என அவர் வாதிட்டார். 'தமிழ்நெற்' இணையத் தளத்திற்கு வழங்கிய ஒரு நேர்காணலில் அவரது விமர்சனத்திற்கு நான் பின்வருமாறு பதிலளித்தேன்:-

"இந்தப் போர் நிறுத்த உடன்பாட்டில் உள்ள விதிகள் இலங்கைத் தீவின் இறையாண்மைக்கும், தேசியப் பாதுகாப்புக்கும் பங்கம் விளைவித்திருப்பதாக

ஜனாதிபதி சந்திரிகா முன்வைத்துள்ள வாதம் போலியானது, ஏற்றுக் கொள்ள முடியாதது. 'முன்னணிப் பாதுகாப்பு நிலைகள்', 'எல்லைக் கோடுகள்', 'கட்டுப்பாட்டுப் பிரதேசங்கள்', 'கட்டுப்பாட்டு பிரதேச எல்லையிலுள்ள சோதனைச் சாவடிகள்' போன்ற சொற்பதங்களும் கருத்தாக்கங்களும் கள யதார்த்த மெய்யுண்மைகளைப் பிரதிபலிப்பனவாகும். இரு தரப்பினரதும் பரிசீலனை உடனும் இணக்கப்பாட்டுடனுமே இந்தக் கருத்தாக்கங்கள் வகுக்கப்பட்டன. இச் சொற் பதங்கள் உணர்ச்சியைத் தூண்டி விட்டு, பிராந்தியத்தின் கட்டுக்கோப்பான உறுதிநிலையைச் சீர்குலைத்துவிடும் என்பதும், இப் பிரச்சினையை காஷ்மீர் நெருக்கடியுடன் தொடர்புபடுத்துவதும் அபத்தமானதும் கேலிக் கூத்தானதுமாகும். கள யதார்த்த நிலையை ஏற்றுக் கொண்டாலேயே ஒரு விரிவான போர்நிறுத்த ஆவணத்தையும் கண்காணிப்பு வழிமுறைகளையும் உருவாக்க முடியும். தமிழ்ப் பகுதிகளில், பல இடங்களில் இரு தரப்பு படையணிகளும் ஒன்றை ஒன்று எதிர்கொண்டு நிற்கின்றன. யுத்த மீறல்களைக் கண்காணிப்பதாயின், இரு தரப்புப் படைகளும் நிலைகொண்டு நிற்கும் பிரதேசங்களையும், அவற்றின் எல்லைக் கோடுகளையும் கண்காணிப்பாளர்கள் நிர்ணயித்துக் கொள்வது அவசியமாகிறது. அப்படிச் செய்தால்தான் போர் நிறுத்த மீறல்களைக் கண்காணிக்கும் வழிமுறைகளை வரையறுப்பது சாத்தியமாகும். புகழ்பெற்ற சர்வதேசக் கண்காணிப்பாளர்களால் வகுக்கப்பட்ட அடிப்படையான போர்நிறுத்த நடைமுறைகளை, இலங்கையின் இறையாண்மையைப் பங்கப்படுத்தும் விவகாரமாகக் கருதுவது அசட்டுத்தனமானது, நகைப்புக்கிடமானது."[2]

## பிரபாகரனுடனான வன்னிச் சந்திப்பு

இந்தப் புரிந்துணர்வு உடன்படிக்கை கைச்சாத்திடப் பட்டதைத் தொடர்ந்து, அதன் அலகுகளை நடைமுறைப் படுத்துவதில் தடங்கல்களும் தாமதங்களும் எழுந்தன. எனவே,

இந்த விவகாரத்தை நாம் நோர்வே அனுசரணையாளர்களின் கவனத்திற்கு எடுத்துச் சென்றோம். அப்போது, அதி முக்கியத்துவம் மிக்க இந்த விவகாரத்திற்குத் தீர்வு காண்பதற்கு சிறீலங்கா அரசாங்கத்துடன் நேரடியாகக் கலந்துரையாடுவதே பொருத்தமான மார்க்கமாக இருக்கும் என்று அவர்கள் சுட்டிக் காட்டினர். அதனால், முடிந்தளவு விரைவாகப் பேச்சுக்களை ஆரம்பிக்குமாறு அவர்கள் யோசனை தெரிவித்தனர். அப்போது, நேரடிப் பேச்சுத் தொடர்பான விடயங்களை ஆழமாகவும், விரிவாகவும் கலந்தாலோசிக்கும் பொருட்டு, தலைவர் பிரபாகரனை நான் சந்திக்க வேண்டியிருந்ததன் அவசியத்தை நோர்வேத் தரப்பினரிடம் வலியுறுத்தினேன். பேச்சுக்கான திகதி, பேசுவதற்கான இடம், பேசப்பட வேண்டிய விடயங்கள் உட்பட ஏனைய முக்கிய விவகாரங்கள் தொடர்பான அவரது கருத்துக்களைப் பெற்று, தீர்மானங்கள் எடுக்கப்பட வேண்டியிருந்தது. அத்தோடு, சிறீலங்காவின் தலைநகர் கொழும்பில் பேச்சுக்களை நிகழ்த்துவதற்கு, பாதுகாப்புக் காரணங்களை முன்னிட்டு, புலிகள் இயக்கம் இணங்காது என்பதை நோர்வேத் தரப்பினருக்குத் தெளிவுபடுத்தியதுடன், பேச்சு நடக்கும் இடம், சிறீலங்கா அல்லாமல் வேறு ஏதாவது ஒரு நட்பு நாடாகவே இருக்க வேண்டும் என்றும் நான் யோசனை தெரிவித்தேன். சமரச முன்னெடுப்பு முயற்சியின் பல முக்கிய விவகாரங்கள் தொடர்பாக திரு. பிரபாகரனுடன் நேரடியாகக் கலந்தாலோசிக்க வேண்டிய தேவை இருந்ததால், நானும் அடேலும் வன்னிக்குச் சென்று அவரைச் சந்திப்பதற்கான பயணத்தை ஏற்பாடு செய்து தருமாறு நோர்வே அனுசரணையாளர்களிடம் நான் கேட்டேன். போர் நிறுத்தம் ஒன்று அமுலிலிருந்த போதும் கூட, சிறீலங்கா அரசாங்கத்திலோ, அல்லது அதன் படைகளிலோ போதுமான அளவுக்கு எமக்கு நம்பிக்கை வளர்ந்திருக்காத ஒரு சூழலில், கொழும்புக்கு ஊடாகப் பயணிப்பது ஒரு உசிதமான எண்ணமாக எமக்குத் தோன்றவில்லை. அதன் காரணமாக, சிறீலங்காவின் சர்வதேச விமான நிலையத்தையும், வன்னிக்கான தரைப் பாதைகளையும் தவிர்த்து, மாலைதீவினூடாக ஒரு நீண்ட சுற்றுப் பாதையினை நோர்வேத் தரப்பினர் ஒழுங்கு செய்தனர். "பயங்கரவாத"த் தலைவர்களைத் தனது நாட்டிற்குள் அனுமதிப்பது தொடர்பில் மாலைதீவு அரசாங்கத்திற்கு தயக்கங்கள் இருந்த போதும் - தனது விமான விடுதியில் நாம் ஓர் இரவு தங்குவதற்கு விரிவான

பாதுகாப்பு ஏற்பாடுகளுடன் இடமளித்ததுடன், தனது நாட்டுக் கடல் விமானத்தை எமது பயணத்திற்குப் பாவிப்பதற்கும், தனது வான் பரப்பினூடாக நாம் பயணிப்பதற்கும் அது தாராண்மையோடு அனுமதியளித்திருந்தது. அத்தோடு - இந்தப் பயணத் திட்டம் பற்றிச் சிறீலங்கா அரசாங்கத்துடன் ஆலோசிக்கப்பட்டு, அதன் ஒத்தாசையும் பெறப்பட்டிருந்தது.

இந்தத் திட்டத்திற்கு அமைவாக, திரு. எரிக் சுல்கைம் அவர்களும், அவரது இரண்டு மெய்ப் பாதுகாவலர்களும் லண்டன் விமான நிலையத்தில் எங்களைச் சந்தித்து அழைத்துச் செல்ல, மார்ச் 24ஆம் திகதி நாங்கள் மாலைதீவுத் தலைநகரில் தரையிறங்கினோம். கொழும்பு நோர்வேத் தூதரகத்திலிருந்து திரு. ஜோன் வெஸ்ட்பேர்க், திரு. தோமஸ், சிறீமதி ஜெர்ஸ்ரி ரோம்ஸ்டல் ஆகியோர் எங்களைச் சந்திப்பதற்காக அங்கு வந்திருந்தனர். வன்னியை நோக்கிய இறுதிக் கட்டப் பயணத்தில் எம்மை அழைத்துச் செல்வதற்காகத் திரு. தோமஸ் அவர்களை விட்டுவிட்டு, திரு. எரிக் சுல்கைம், திரு. ஜோன் வெஸ்ட்பேர்க் ஆகியோர் அன்று மாலையே கொழும்பு திரும்பினர். சிங்கள இனவாதிகள் கருதியைப் போல, நாட்டிற்குள் நாங்கள் சட்டவிரோதமாக நுழையவில்லை. ஏற்கனவே செய்யப்பட்டிருந்த முன்னேற்பாடுகளின்படி, குடிவரவுத் திணைக்கள அதிகாரிகளிடம் இருந்து நுழைவு அனுமதியை நாம் முன்கூட்டியே பெற்றிருந்ததுடன், ஒரு மாத காலம் அங்கு தங்கியிருப்பதற்கு நாம் அனுமதியளிக்கப்பட்டிருந்தோம்.

மாலைதீவிலிருந்து வன்னிக்குச் சென்று திரும்பும் எட்டு மணித்தியாலத்திற்கும் அதிகமான பயண நேரத் தூரத்தைத் தொடர்ந்து பறப்பதற்கு அமைவாக, நாம் பயணிக்கவிருந்த கடல் விமானத்தில் சில மாற்றியமைப்புக்கள் செய்யப்பட வேண்டியிருந்தன. அதன்படிக்கு, நோர்வே அரசு வாடகைக்கு அமர்த்தியிருந்த இரட்டை இயந்திரக் கடல் விமானத்தின் பயணிகள் இருக்கைகள் அகற்றப்பட்டு, அந்த இடத்தில், மேலதிக எண்ணெய் எடுத்துச் செல்வதற்காகப் பெரிய எண்ணெய்த்தாங்கி ஒன்று பொருத்தப்பட்டிருந்தது. திரு. தோமஸ் அவர்களுக்காக, சிறிய ஒரு ஜன்னலோர இருக்கை ஒதுக்கப்பட்டிருந்ததுடன், விமானத்தின் பிற்பகுதியில், விமான எண்ணெய் தாங்கியின் பின்புறமாக இரண்டு இருக்கைகள் எமக்காக ஒழுங்கு செய்யப்பட்டிருந்தன. அந்த விமானத்தின் இரண்டு கனேடிய ஓட்டிகளும் மிகுந்த உபசரிப்போடு எம்மைக்

கவனித்துக் கொண்டார்கள். குறிப்பாக, என்னுடைய சௌகரியத்தை உறுதி செய்வதில் அதிக அக்கறை எடுத்திருந்ததுடன், எமக்குத் தேவையான உணவு மற்றும் குடிபானங்களைப் பிரத்தியேகமாகத் தயாரித்தும் ஒழுங்கு செய்திருந்தார்கள்.

பயணம் ஆரம்பித்து அதிக நேரமில்லை. கீழே அகன்று விரிந்து கிடந்த இந்து சமுத்திரத்தின் மேலே, ஆயிரம் அடி உயரத்தில் நாம் பறந்து கொண்டிருந்தபோது, திடீரென, விமான எண்ணெயின் குமட்டுகிற மணம் காற்றிலே மிதந்து எங்கள் மூக்கைத் துளைத்தது. அருகிலே அமர்ந்திருந்த அடேல் கீழே குனிந்து பார்த்த போது, தனது காலுக்குக் கீழே இருந்த தளத்தில் எண்ணெய் உயர்ந்து கொண்டிருந்ததைக் கவனித்து விட்டார். எமக்கு முன்னாலே இருந்த தாங்கியிலிருந்து எண்ணெய் வழிந்து கொண்டிருந்தது. விடயத்தை நாம் உதவி விமானியிடம் தெரிவித்த போது - எண்ணெய் தாங்கிக்கு இடையே தன்னை நசித்து, சிரமப்பட்டு நகர்ந்து, கசிவிடத்தை அடைந்து, அதன் சில நட்டுக்களை இறுக்கி, வெளியேற்றத்தை நிறுத்தி - பயப்படுவதற்கு ஒன்றுமில்லை என்பதை அவர் மீள உறுதி செய்தார்.

அசைய வழியேதுமற்று, கீழே நாற்புறமும் பரந்து கிடந்த கடலைத் தவிரப் பார்ப்பதற்கு வேறெதுவும் இன்றி, அந்தச் சிறிய கடல் விமானத்தின் பின் மூலைக்குள் அடைபட்டுக் கிடந்த போது, அந்த நான்கு மணி நேரப் பயணம், சகிக்க முடியாததாக இருந்தபோதும், மன்னார்க் கரையின் நீலக்கடல் கீழே தென்பட்டு, விமானி மெல்லத் திரும்பி நாங்கள் அண்மித்து விட்டோம் என்பதையும் குறிப்புணர்த்திய போது, ஒரு இனம்புரியாத பூரிப்பு என்னைச் சிலிர்த்திட வைத்தது.

மூன்று வருடங்களுக்கு முன்னர், மிகக் கடுமையாக நோய்வாய்ப்பட்டு, வன்னியைவிட்டு நான் புறப்பட்ட அந்த நாள் அப்போது என் நினைவில் வந்தது.[3] எப்போதாவது நான் வன்னிக்குத் திரும்புவேன் என்று, அதுவும் உயிரோடு திரும்புவேன் என்று, அப்போது நான் கற்பனை செய்துகூடப் பார்த்திருக்கவில்லை. விமானத்தின் உயரம் மெல்ல மெல்லக் குறைந்து, வன்னியின் மிகப் பெரிய நீர்ப்பாசனக் குளமான இரணைமடுவில் அது இறங்கிவிட்ட போது, ஜன்னல் கண்ணாடி வழியாக வெளியே கூர்ந்து பார்த்து, தெரிந்த முகங்களைத் தேடினேன். சிரித்த முகத்தோடு எங்களின் நெடுங்கால நண்பனும்,

கடற்புலிகளின் தளபதியுமான சூசையைக் கண்டேன். நாம் பயணித்த அந்தக் கடல் விமானம் இறங்குவதற்கான ஒழுங்குபடுத்தல்களுக்கும், விமானத்திலிருந்து எம்மைக் கரைக்கு அழைத்துச் செல்வதற்கும் அவர்தான் பொறுப்பு. விமானம் இறங்குவதற்குப் போதுமான ஆழமுடையதாக அவர் ஏற்கனவே இனம்கண்டு அடையாளப்படுத்தியிருந்த பாதுகாப்பான நீர்ப் பகுதியில் விமானம் இறங்கி நிலைகொண்டது. சூசையோடு, திரு. நடேசன் - தமிழீழ காவல்துறையின் பொறுப்பாளர், திரு. தமிழ்ச்செல்வன் - புலிகளின் அரசியல்துறைப் பொறுப்பாளர் ஆகியோர் ஒரு சிறிய மிதவைப் படகில் எம்மிடம் வந்து விமானத்திலிருந்து நாம் இறங்குவதற்கு உதவினர்.

தாயக தேசத்தில் மீண்டும் நான், அதுவும் உயிரோடு; அடைந்த மகிழ்வுக்கு அளவேயில்லை. மிதவைப் படகு கரையை அடைந்த போது ஓர் எதிர்பாராத ஆச்சரியம் எம்மைக் காத்திருந்தது. தலைவர் பிரபாகரனை அங்கு கண்டேன். அது பூரிப்பின் இரட்டிப்பு. கை கொடுத்து உதவி என்னைக் கரையேற்றினார். அவரோடு அவரது துணைவி மதிவதனி, ஏனைய மூத்த தோழர்கள், பழைய நண்பர்கள், எல்லோரும் காத்திருந்து எம்மை இன் முகத்தோடு வரவேற்றனர். எல்லோரையும் சந்தித்து வாழ்த்துக்களைப் பரிமாறிக் கொண்ட பின்னர், எமக்காக ஒழுங்கு செய்யப்பட்டிருந்த பிரத்தியேகத் தங்குமிடத்தை நோக்கி நாம் அழைத்துச் செல்லப்பட்டோம். அங்கே, பிரபாகரனும் நானும் மந்திராலோசனைகளை ஆரம்பித்தோம்.

மறு நாள், நோர்வேப் பிரதிநிதிகள் குழு பிரபாகரனைச் சந்தித்தது. திரு. எரிக் சுல்கைம், திரு. ஜோன் வெஸ்ட்பேர்க் ஆகியோருடன், போர்நிறுத்தக் கண்காணிப்புக் குழுவின் தலைவர் ஜெனரல் ரோண்ட் பூரகோவ்டே அவர்களும், கண்காணிப்புக் குழுவைச் சேர்ந்த பின்லாந்து நாட்டு அலுவலர் ஒருவரும் அந்தக் குழுவில் இடம்பெற்றிருந்தனர். பிரபாகரனுக்கு உதவியாக, நானும், திரு. தமிழ்ச்செல்வனும், அடேலும் அந்தச் சந்திப்பில் கலந்து கொண்டோம்.

யாழ்ப்பாண நெடுஞ்சாலையின் வடமுனையை, ஏப்ரல் 8ஆம் திகதியிலிருந்து திறந்து விடுவதற்குச் சிறீலங்கா அரசாங்கம் இணங்கியிருப்பதாக நோர்வேப் பிரதிநிதிகள் எமக்கு அறியத் தந்தனர். எனினும் போர்நிறுத்த உடன்படிக்கையில் இணக்கம் காணப்பட்ட விதிகளையும் கடப்பாடுகளையும் செயற்படுத்துவதில்

காட்டப்பட்டு வந்த தாமதங்கள் குறித்துத் தனது ஆழமான விசனத்தைத் திரு. பிரபாகரன் அச் சந்திப்பின் போது வெளிப்படுத்தினார். உடன்படிக்கை விதிகளை நடைமுறைப்படுத்தும் பிரச்சினைகள் நேரடிப் பேச்சுக்களின் போது கலந்துரையாடித் தீர்வு காணப்பட வேண்டும் எனத் தெரிவித்த திரு. சுல்கைம், நேரடிப் பேச்சுக்கள் விரைவாகத் தொடங்க வேண்டுமென வற்புறுத்தினார்.

சமாதானப் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு முன்னர், தமது விடுதலை இயக்கம் மீது சிறீலங்கா அரசினால் விதிக்கப்பட்ட தடை அகற்றப்பட வேண்டுமெனப் புலிகளின் பிரதிநிதிகள் முன்நிபந்தனை விதித்தனர். பேச்சுக்களில் ஈடுபடுவதற்கு முன்னர் விடுதலைப் புலிகள் மீதான தடையை நீக்குவது குறித்துத் திரு. ரணில் விக்கிரமசிங்காவின் அரசு சாதகமாகப் பரிசீலனை செய்து வருவதாக நோர்வேத் தரப்பினர் தெரியப்படுத்தினர். புலிகள் மீதான தடையை நீக்குமாறு வலியுறுத்தவும், பேச்சுக்களுக்கான நிகழ்ச்சி நிரல் தயாரிப்பது பற்றி இரு தரப்பினருடனும் கலந்துரையாடுவதற்கும் ஏப்ரல் மாதத்தில் நோர்வே உதவி வெளிவிவகார அமைச்சர் திரு. விடார் ஹெல்கிசன் கொழும்புக்கும் கிளிநொச்சிக்கும் வருகை தரவுள்ளார் என்றும் நோர்வேப் பிரதிநிதிகள் தெரிவித்தனர்.

வன்னிப் பெருநிலப்பரப்பை யாழ் குடாநாட்டோடு இணைக்கும் யாழ்ப்பாண நெடுஞ்சாலையைத் திறக்கும் தனது வாக்குறுதியை அரசாங்கம் நிறைவேற்றியது. யாழ் குடாநாட்டின் தென்கோடியிலிருந்த எல்லை நகரான முகமாலையில் நடந்த அந்த வைபவத்தில் ஜெனரல் பூரகோவ்டே இரண்டு தரப்புப் படைகளினது தளபதிகளையும் அறிமுகம் செய்து வைத்தார். கேணல் தீபன், கேணல் பானு ஆகியோர் புலிகள் இயக்கத்தைப் பிரதிநிதப்படுத்த, மேஜர் ஜெனரல் விஜேசூரியா சிறீலங்காப் படையைப் பிரதிநிதப்படுத்தினார். பாதை திறக்கப்பட்டதைத் தொடர்ந்து, புலிகளின் அரசியல்துறையைச் சேர்ந்த பதினைந்து போராளிகள், வெற்றிப் பெருமிதத்தோடு கூடிய பெருந்திரளான மக்களின் ஆர்ப்பரித்த வரவேற்போடு, அரசாங்கக் கட்டுப்பாட்டிலிருந்த யாழ் குடாநாட்டிற்குள் நுழைந்தனர்.

நாங்கள் வன்னியில் தங்கியிருந்த காலத்தில் நடந்த, அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்வாக, ஏப்ரல் 10ஆம் திகதி அன்று திரு. பிரபாகரன் அனைத்துலக ஊடகவியலாளரைச் சந்தித்தார். பன்னிரண்டு ஆண்டுகளுக்குப்

பின்னர் புலிகளின் தலைவர் பங்கேற்ற அந்த முதலாவது ஊடகவியலாளர் மாநாட்டிற்கு, படப்பிடிப்பாளர்கள் உட்பட நானூறுக்கும் மேற்பட்ட செய்தியாளர்கள் வருகை தந்திருந்தனர். அந்த மாநாட்டில் பிரபாகரனிடம் கேட்கப்பட்ட கேள்விகளையும், அவற்றுக்கான அவரது பதில்களையும், ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கும் தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கும் நான் மொழியாக்கம் செய்ததுடன் இயக்கத்தின் தத்துவாசிரியர் என்ற வகையில் அவரது பதில்களை விரிவாக்கம் செய்து, தேவையானவற்றுக்குக் கூடுதல் விளக்கங்களும் அளித்தேன்.

நோர்வே அரசாங்கம் முன்னெடுத்த அமைதி முயற்சிகள் பற்றியும், சமரச முன்னெடுப்பில் தனது இயக்கத்தின் நிலைப்பாடு பற்றியும் தலைவர் பிரபாகரன் அங்கு விரிவாக விளக்கினார். சமாதானத்தை உருவாக்குவதில் புலிகள் இயக்கம் ஆத்மார்த்தமான ஈடுபாடும், ஆணித்தரமான உறுதிப்பாடும் கொண்டுள்ளது என்று தெரிவித்த அவர், அமைதி முயற்சியில் ஏற்பட்டு வந்து முன்னேற்றங்கள் தொடர்பாகத் தனது திருப்தியையும் வெளிப்படுத்தினார். மேலும், தமிழ் மக்களிடத்தில் சுமூக நிலையையும், நல்லெண்ணத்தையும் வளர்த்தெடுப்பதில் திரு. ரணில் விக்கிரமசிங்கா எடுத்து வந்த துணிவான நடவடிக்கைகளுக்காக அவரைப் பாராட்டினார். அதேவேளையில், ரணில் விக்கிரமசிங்காவின் பாராளுமன்ற அரசாங்கம் பலமற்றதாகவும், உறுதியற்றதாகவும் இருப்பதுடன், தமிழ்த் தேசிய இனச் சிக்கலுக்கு நிரந்தரத் தீர்வு ஒன்றைக் காணுவதற்குத் தேவையான நிறைவேற்று அதிகாரங்கள் அற்றதாகவும் இருப்பதாகத் திரு. பிரபாகரன் தெரிவித்தார்.

"தமிழரின் இனப் பிரச்சினையின் அடிப்படைகளை ஆழமாகப் பரிசீலனை செய்து, ஒரு நிரந்தரத் தீர்வை வழங்குவதற்குத் திரு. ரணில் விக்கிரமசிங்காவால் முடியுமென நாம் கருதவில்லை. ஏனென்றால், முழுமையான நிறைவேற்று அதிகாரங்கள் அனைத்தும் சனாதிபதியிடம் முடங்கிப்போய்க் கிடக்கின்றன. அதன் காரணமாகவே, வட-கிழக்கிற்கென, விடுதலைப் புலிகள் பங்கேற்கக் கூடியதான ஓர் இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பை நிறுவ வேண்டுமென நாம் கேட்டுக் கொண்டோம்." என்றும் திரு. பிரபாகரன் விளக்கினார். மேலும், அரசியல் பேச்சுக்கள் மூலமாக அமைதித் தீர்வு ஒன்றைக் காண்பதில் புலிகள் இயக்கம் இதயசுத்தியுடன் செயற்படவில்லை என்ற குற்றச்சாட்டையும், அமெரிக்கா தலைமையில் முன்னெடுக்கப்பட்டு

வரும் 'பயங்கரவாதத்திற்கு எதிரான உலகப் போர்' காரணமாகப் புலிகள் அழுத்தத்திற்கு உள்ளாகி இருக்கின்றார்கள் என்ற வாதத்தையும் திரு. பிரபாகரன் அடியோடு நிராகரித்தார். அமெரிக்காவின் உலக வணிக மையக் கட்டிடங்கள் தகர்க்கப்படுவதற்கு முன்னரே, அதாவது 2001 செப்டம்பர் 11ஆம் திகதிக்கு முன்னரே, சமாதானத்திற்கான ஓர் அழைப்பாக, புலிகள் இயக்கம் ஒருதலைப்பட்சமான போர்நிறுத்தத்தை அறிவித்து, அதனை நான்கு மாதங்கள் வரை நீடித்து அமைதி பேணியதாக அவர் நினைவூட்டினார். நோர்வேயின் அமைதித் தூதுவர் எரிக் சுல்கைமை 2000ஆம் ஆண்டு ஒக்ரோபர் மாதத்தில் சந்தித்து, சமாதானத்தையும் சமரசத் தீர்வையும் புலிகள் இயக்கம் வேண்டி நிற்கின்றது என அவரிடம் பிரபாகரன் தெரிவித்தார். அத்தோடு, நோர்வேயின் அனுசரணையுடன் முன்னெடுக்கப்படும் இந்தச் சமரச முயற்சிகள் வெற்றியடையும் என்றும் அவர் நம்பிக்கை தெரிவித்தார்.

ஏப்ரல் 17ஆம் திகதி, திரு. விடார் ஹெல்கிசன் தலைமையில், திரு. எரிக் சுல்கைம், திரு. ஜோன் வெஸ்ட்போர்க், சிறீமதி ஜெர்ஸ்ரி ரோம்ஸ்டல் ஆகியோர் கொண்ட நோர்வே பிரதிநிதிகள் குழு, கிளிநொச்சியிலிருக்கும் புலிகள் அரசியற்துறை நடுவப் பணியகத்தில் புலிகளின் தலைவர் பிரபாகரனைச் சந்தித்தது. நானும், தமிழ்ச்செல்வனும், அடேலும், தலைவருக்கு உதவியாக அந்தச் சந்திப்பில் கலந்துகொண்டோம். பேச்சுக்களை நிகழ்த்துவதற்குத் தனது நாட்டில் இடமளிக்கத் தாய்லாந்து அரசாங்கம் தயாராய் உள்ளது என்ற தகவலை திரு. ஹெல்கிசன் தெரிவித்தார். இருந்தபோதும், புலிகள் இயக்கத்தின் மீதான தடை நீக்கப்படாதவரை, நேரடிப் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்குப் புலிகள் இயக்கம் இணங்காது என்பதைத் தலைவர் பிரபாகரன் உறுதிபடத் தெரிவித்தார். அத்துடன் போர்நிறுத்த உடன்படிக்கையிலுள்ள கடப்பாடுகளை நிறைவேற்றுவதில் அரசாங்கம் காட்டிவரும் தாமதம் தொடர்பான தமது ஏமாற்றத்தையும் வெளிப்படுத்தினார். மீன் பிடிப்பதற்குக் கடலில் இடப்பட்டிருந்த கட்டுப்பாடுகளை நீக்குதல், ஆயுதம் தரிக்காத புலிகளின் அரசியற் போராளிகள் அரச கட்டுப்பாட்டுப் பகுதிகளுக்குள் செல்வதை அனுமதித்தல், பொதுக் கட்டிடங்களிலிருந்து அரசுத் துருப்புக்களை மீளப் பெறுதல் போன்றவை அரசாங்கத்தால் முழுமையாகச் செயற்படுத்தப்படவில்லை என்பதைப் புலிகளின் பிரதிநிதிகள்

சுட்டிக் காட்டினர். இந்த விவகாரத்தை தான் அரசுத் தரப்பினரின் கவனத்திற்கு எடுத்துச் செல்வதாகத் திரு. ஹெல்கிசன் உறுதியளித்தார்.

கொழும்பு திரும்பிய பின்னர், மறுநாள், ஏப்ரல் 18ஆம் திகதி சனாதிபதி சந்திரிகாவைச் சந்தித்த நோர்வேப் பிரதிநிதிகள் புலிகளின் தலைவருடன் தாம் கலந்தாராய்ந்த விடயங்கள் பற்றிய விபரங்களைத் தெரிவித்தனர். அத்தோடு, தாய்லாந்தில் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு முன்னதாக புலிகள் இயக்கம் மீதான அரசாங்கத்தின் தடை நீக்கப்பட வேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்தினர். ஆனால், சந்திரிகா அம்மையாரோ, தடை நீக்கம் தொடர்பான விவகாரத்தில் கடும்போக்கைக் கடைப்பிடித்ததுடன், சமரசப் பேச்சுக்களுக்குக் கால வரம்பு ஒன்றை நிர்ணயித்தாக வேண்டும் எனவும் வற்புறுத்தினார். ஆனால், அந்தச் சந்திப்பு ஆக்கபூர்வமானதாக அமைந்ததாகப் பின்னர் செய்தி வெளியிட்ட அரச ஊடகங்கள் தெரிவித்தன. சமரச வழிகள் மூலம் இனப் பிரச்சினைக்கு ஓர் அரசியற் தீர்வைக் காணும் முயற்சிகளுக்குத் தனது ஒத்துழைப்பு எப்போதுமே இருக்குமென நோர்வேத் தூதுவர்களிடம் சனாதிபதி சந்திரிகா வாக்குறுதி அளித்திருப்பதாக அறிவித்தன.

இத்தகைய ஓர் அரசியல் சூழ்நிலையில், சமரசப் பேச்சுக்கள் விரைவில் ஆரம்பித்துவிடும் என்ற திடமான நம்பிக்கையுடன் ஹெல்கிசனும், சுல்கைமும் ஒஸ்லோவுக்குப் புறப்பட்டுவிட, ஒரு வாரத்தின் பின்னர், அடேலும், நானும் வன்னியிலிருந்து லண்டனுக்குப் புறப்படுவதற்குத் தயாரானோம். திரு. பிரபாகரனுடனான எனது அரசியல் கலந்தாய்வுகள் எல்லாம் நல்லபடியாக நிறைவாகிவிட்டிருந்தன. இப்போது, போர்நிறுத்த நெறிமுறைகளைச் செம்மையாக நிறைவேற்றி, புலிகள் இயக்கத்தின் மீதான தடையையும் நீக்கிச் சமரசப் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கு உகந்த புறச்சூழலை உருவாக்க வேண்டிய பொறுப்பு அரசாங்கத்தின் கைகளிலேயே இருந்தது.

அன்று காலை, ஏப்ரல் 24ஆம் திகதி, எங்களை வழியனுப்பி வைப்பதற்காக திரு. பிரபாகரன் எங்கள் இடத்திற்கு வந்தார். அவரது முகத்தில் கலவரம் தென்பட்டது. அவர் அமைதியிழந்தவராகக் காணப்பட்டார். நான் கேள்விக் குறியோடு அவரை நோக்கினேன். சிறீலங்காக் கடற்படையினருக்கும், கடற்புலிகளின் அணி ஒன்றுக்குமிடையில், மோதல் ஏற்படக்கூடிய விபரீத சம்பவம் ஒன்று கடலில் உருவாகி இருப்பதாக அவர்

தகவல் தந்தார். அப்படி ஏதாவது நடந்து, நிலைமை மோசமடைந்தால், சமாதான முயற்சிகள் பாதிப்படையலாம் என நாங்கள் கவலைப்பட ஆரம்பித்தோம். எது எப்படியிருந்தாலும், அந்தச் சூழ்நிலையில் என்னால் செய்யக்கூடியது பெரிதாக ஒன்றுமே இருக்கவில்லை. நிலைமையைத் தனது பூரண கட்டுப்பாட்டிற்குள் பிரபாகரன் வைத்திருந்ததால், தவறாக ஏதும் நேர்ந்து விடாது என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது.

எங்களை வழியனுப்பி வைப்பதற்காக இரணைமடுக் குளக்கரையில் எல்லோரும் கூடியிருந்தனர். சிறீமதி ஜெர்ஸ்ரி ரோம்ஸ்டல் அவர்களும், எங்களை அழைத்துச் செல்வதற்காக அங்கு காத்திருந்தார். நான்கு வாரங்களுக்கு முன்னர் எங்களை வரவேற்கும் போது குடிகொண்டிருந்த உவகைக்குப் பதிலாக, இப்போது அங்கு துயரமே கவிந்திருந்தது. எங்களது நண்பர்களும், போராளிகளும் தமக்குள் மெதுவாக அளவளாவிக் கொண்டிருந்தனர். 'நாளை என்ன நடக்கும்' என்பதும் நிச்சயமற்றதாகவே இருந்தது.

திருகோணமலைக் கடலில் பாரிய முறுகல் நிலை தோன்றியிருந்த அந்த நேரத்தில், முன்னாலேயே மையம் கொண்டிருந்த புயலைப் பற்றி எதுவுமே அறியாதவர்களாக - மன்னார் கடற் திசையால் பறந்து வந்த கனேடிய விமானிகள், சரியான நேரத்திற்கு இரணைமடுக் குளத்தில் விமானத்தை இறக்கினர்.

கரைக்கு வந்த விமானிகள், உரிய நேரத்தில் மாலைதீவைச் சென்றடைந்துவிட வேண்டும் என்பதனால், நாம் முடிந்தளவு விரைவாக அங்கிருந்து புறப்பட்டாக வேண்டும் என்று யோசனை தெரிவித்தனர். அவர்களுடைய விருப்பத்திற்கும், ஆலோசனைக்கும் அமைவாக உடனடியாகவே மிதவைப் படகுகளில் ஏறி, விமானத்தை அடைந்து, நாம் அங்கிருந்து புறப்பட்டோம். நாம் பயணித்த விமானம் எந்த வான்பாதையால் செல்லவிருக்கிறது என்பது பற்றி எமக்கு எதுவுமே தெரியாது. விமானம் வானத்தில் எழுந்த பின்னரே, பாதுகாப்புக் காரணங்களை முன்னிட்டு தாங்கள் கிழக்கு நோக்கி, திருகோணமலைக் கடலுக்கு மேலாகப் பறந்து இலங்கையின் தென்முனையைச் சுற்றிக் கொண்டு மாலைதீவை அடைய இருக்கின்றோம் என்றும் அதன் காரணமாக இந்தப் பயணம் நீண்ட நேரம் பிடிக்கப் போவதாகவும் விமானிகள் எம்மிடம் கூறினர். இந்திய வான்படையின் கண்காணிப்புக்கு ஆளாகாது,

இந்திய வான்வெளியைத் தவிர்த்து நீண்டதொரு சுற்றுப் பயணத்தில் விமானம் சென்றுகொண்டிருந்தது. எதற்காக இப்படி ஒளிந்து ஓட வேண்டும் என நான் அந்தக் கனடிய விமானியிடம் கேட்டபோது, "எமது போக்குவரத்தை இந்திய வான்படை அவதானிக்கிறது. ஏனென்று தெரியவில்லை" என்று மட்டும் சொன்னார். இந்திய அச்சுறுத்தல் ஒருபுறமிருக்க, நாம் பறந்து சென்ற கிழக்குக் கடற்பரப்பில் இன்னொரு விபரீத சம்பவம் கட்டவிழ்ந்து கொண்டிருந்தது.

இரணைமடுவிலிருந்து எங்களைச் சுமந்து சென்ற கடல் விமானம் கிழக்கு நோக்கிப் பறந்து கொண்டிருந்த பொழுது, எத்தகைய ஆபத்தை நோக்கி நாம் சென்று கொண்டிருந்தோம் என்பது பற்றியோ, அல்லது கபடமற்ற நோக்கத்துடன் ஒழுங்குபடுத்தப்பட்டிருந்த அந்தப் பயணம் ஓர் இராணுவ விவகாரமாக மாறி, செய்தியூடகங்களில் ஓர் சர்ச்சைப் புயலாக வீசப் போகின்றது என்பது பற்றியோ எதுவும் அறியாதவர்களாக நாம் இருந்தோம்.

தரையைக் கடந்து நாங்கள் கடலுக்கு மேலாகப் பறக்கத் தொடங்கியபோது, கீழே படகுகளின் நடமாட்டங்களை அவதானித்தோம். அவை என்ன வகையான படகுகள் என்பது பற்றியோ, அல்லது அவை யாருக்குச் சொந்தமானவை என்பது பற்றியோ எமக்கு எதுவுமே தெரிந்திருக்கவில்லை. உண்மையில் எந்தக் கடற் பகுதிக்கு மேலாக நாம் பறந்து கொண்டிருந்தோம் என்பதனையும் அறியாதவர்களாகவே இருந்தோம். ஆனால், திருக்கோணமலைத் துறைமுகத்திற்கு அருகே, கடற்புலிகளுக்கும் சிறீலங்கா கடற் படையினருக்கும் இடையில் முறுகல் ஏற்பட்டு, கொதிநிலையின் உச்சத்திலிருந்த கடற் பகுதிக்கு மேலாகவே நாங்கள் அப்போது பறந்திருக்கிறோம் என்பது பின்னர் தெரியவந்தது. கடற்புலிகளின் படகுத் தொகுதி ஒன்றை நடுக்கடலிலே சுற்றி வளைத்திருந்த சிறீலங்காக் கடற்படையின் போர்க் கலங்கள், அடுத்த கட்ட நடவடிக்கை பற்றிய தமது தளபதிகளது உத்தரவுக்காக அப்போது காத்திருந்தனவாம். அந்த நேரத்தில் பறந்து வந்து கொண்டிருந்த எங்களது விமானம், அந்தப் பிரதேசத்தின் மேலாகத் தனது உயரத்தைத் திடீரெனக் குறைத்து நூறு அடிகள் உயரத்திற்குத் தாழ்ந்து, கடலிலே இறங்கிவிடப் போவது போன்ற ஒரு தோற்றப்பாட்டை ஏற்படுத்தியதாகப் பின்பு குற்றஞ்சாட்டப்பட்டது. சிறீலங்காவுக்குச் சென்று

திரும்பிய எங்களது பயணங்கள் உச்ச இரகசியமாகப் பாதுகாக்கப்பட்டதால், அந்தப் பிராந்தியத்தில் எமது விமானத்தின் பிரசன்னம் பற்றிச் சிறீலங்கா வான்படையினதோ, அல்லது கடற்படையினதோ உயர்பீடங்களுக்கு அறிவிக்கப்பட்டு இருக்கவில்லை.

கடற் சமர் வெடிக்கக்கூடிய ஒரு போர் நெருக்கடிச் சூழலில், ஒரு அந்நிய விமானம் கடற்படைக் கலங்களுக்கு மேலாகத் தாழப் பறந்தது கடற்படையினருக்குப் பதட்டத்தைக் கொடுத்தது. இந்த அசாதாரண நிகழ்வை கடற்படை வான்படைக்கு அறிவித்தது. சிறீலங்காவின் வான்பரப்பினுள் அரவமற்று ஊடுருவிப் பறந்து கொண்டிருந்த அந்த 'அடையாளம்' தெரியாத விமானத்தைச் சுட்டு வீழ்த்துவதற்காக தமது ஜெட் போர் விமானங்களை உசார் நிலையில் வைத்துவிட்டு, பாதுகாப்பு அமைச்சிடம் வான்படை அதிகாரிகள் அறிவித்தபோதுதான் உண்மை நிலை அவர்களுக்குத் தெரிய வந்தது.

இலங்கை அரசின் அனுமதியுடனேயே அந்த விமானம் பாலசிங்கம் தம்பதிகளை ஏற்றிச் செல்கின்றது என்ற தகவல் தெரிந்ததும் போர் விமானங்களின் பறப்பை ரத்துச் செய்தது வான்படை. இந்த அபாயச் சூழல் பற்றி எதுவுமே அறியாதவர்களாக, அந்தச் சிறிய விமானத்தின் மூலைக்குள் முடங்கியிருந்து ஐந்து மணி நேர அவலப் பயணத்தில் நாம் சென்று கொண்டிருந்தோம்.

சூரியன் மறைந்து கொண்டிருந்த அந்திப் பொழுதில், அழகிய மாலைதீவின் இறங்குதுறையை எங்களது விமானம் அடைந்தது. கால்களை நீட்டி இடைக்கிடை சோம்பல் முறித்ததையும், சற்று நேரம் பின்னாலே சாய்ந்து அயர்ந்ததையும் தவிர, அந்த ஐந்து மணி நேரத்தில் என்னால் வேறெங்கும் அசைய முடியவில்லை. மாலைதீவிற்குப் போய்ச் சேர்ந்த பின்னர் தான், எமது பயணம் கிளப்பிவிட்டிருந்த சர்ச்சை பற்றியும், பேரபாய நிகழ்வு ஒன்றிலிருந்து நாம் அரும்பொட்டில் தப்பித்து வந்திருந்த அதிசயம் பற்றியும் நோர்வே அதிகாரிகள் எம்மிடம் விபரம் கூறினர்.

வழமையாகவே புலிகள் சம்பந்தப்பட்ட சிறு விவகாரங்களையும் பூதாகரமாக மிகைப்படுத்திப் பரபரப்பை ஏற்படுத்தும் கொழும்புப் பத்திரிகைகளுக்கு இந்த விமானச் சம்பவம் தெரியவந்ததும் அதற்குக் 'கை, கால் வைத்து' திரிபுபடுத்தி, பெரிதுபடுத்தின. எமது விமானப் பறப்பை

திருகோணமலைக் கடற் சம்பவத்துடன் தொடர்புபடுத்தி, அந்தக் கடற்சம்பவத்தைக் கண்காணிக்கும் நோக்குடனேயே பாலசிங்கத்தின் அறிவுறுத்தலின் பேரில் அந்த விமானம் கடற்படைக் கலங்களுக்கு மேலாகத் தாழப் பறந்து சென்றது என்று 'சண்டே ரைம்ஸ்' வாரப் பத்திரிகை மிகைப்படுத்தி எழுதியது. இந்த விவகாரத்தில் நோர்வே அரசும் சம்பந்தப்பட்டிருப்பதாகச் சிங்களப் பத்திரிகைகள் வீண் பழி சுமத்தின. இதன் காரணமாக, கொழும்பிலுள்ள நோர்வேத் தூதரகம் நிலைமையை விளக்கி ஒரு மறுப்பறிக்கையை வெளியிட நிர்ப்பந்திக்கப்பட்டது. அந்த அறிக்கையை இங்கு தருகிறோம்:-

> "திரு. அன்ரன் பாலசிங்கம், திருமதி அடேல் பாலசிங்கம் ஆகியோர்களைச் சிறீலங்காவிலிருந்து அழைத்துச் சென்ற வான்கலம், திரு. பாலசிங்கம் அவர்களின் வேண்டுதலுக்கேற்ப தனது பயணப் பாதையைத் தேர்வு செய்திருந்தது எனப் பல செய்தியூடகங்கள் குறிப்பிட்டிருந்ததை, நோர்வே அரசாங்கத்தின் கொழும்புத் தூதுவரகம் அவதானித்து இருக்கின்றது. இது தொடர்பாகப் பின்வரும் தகவல்களைத் தருவது பொருத்தமானதாக இருக்கும் எனத் தூதுவரகம் கருதுகின்றது.
>
> சம்பந்தப்பட்ட அந்த வான்கலம், சிறீலங்கா அரசாங்கத்தின் உடன்பாட்டுடன் நோர்வேத் தூதுவரகத்தினால் வாடகைக்கு அமர்த்தப்பட்டிருந்தது.
>
> அந்த விமானம் சார்ந்த அனைத்து ஏற்பாடுகளுமே, மாலைதீவு அரசாங்கம், சிறீலங்கா அரசாங்கம், மற்றும் இந்தத் தூதுவரகம் ஆகியவற்றினது பொருத்தமான அதிகாரிகள் மத்தியில் தெளிவாக்கப்பட்டிருந்தது. இந்த விவகாரத்தில் விடுதலைப் புலிகள் தொடர்புபட்டிருக்கவில்லை என்பதுடன், விமானம் இறங்கும் நேரம் மாத்திரம் அவர்கட்கு அறிவிக்கப்பட்டு, விமானம் இறங்கி ஏறுவதற்கு ஏற்ற ஏற்பாடுகளைச் செய்து தருமாறு மாத்திரமே கேட்கப்பட்டிருந்தனர்.
>
> சிறீலங்காவிற்குள் பிரவேசித்து, பின்பு வெளியேறும் தனது பயண வழி பற்றிய எந்த விபரத்தையும் விமானி வழங்கியிருக்கவில்லை. ஆனால், சிறீலங்காவிற்குள்

வந்து போய் விடுவதற்கான நேர வரையறை ஒன்றை, சிறீலங்கா அரசாங்கம் விமானிக்கு வழங்கியிருந்தது.

நோர்வே வெளிவிவகார அமைச்சின் பிரதிநிதி ஒருவர் உட்பட, விமானத்தில் பயணித்தவர்கள் எவருமே, விமானம் புறப்படுகின்ற வரை அதன் பயணப் பாதை பற்றி எதுவும் அறிந்திருக்கவில்லை. கிழக்குக் கரை வழியாகத் திரும்பிச் செல்வதற்குத் தாம் வான் வழியைத் தேர்வு செய்துள்ளதாகவும், சிறீலங்காவின் கிழக்குக் கடற்கரைக்கு மேலாகப் பறந்து, தெற்கே காலியை அண்மித்த பின்பு, அங்கிருந்து மாலைதீவை நோக்கிச் செல்லவுள்ளதாகவும் விமானம் பறக்கத் தொடங்கிய பின்னரே பயணிகளிடத்தில் விமானி தெரிவித்துள்ளார்.

திருகோணமலைக்குக் கிழக்கே, சிறீலங்கா கடற்படையினருக்கும் புலிகளுக்கும் இடையில் பதற்ற நிலை தோன்றியிருந்த கடற்பகுதிக்கு மேலாக அந்த விமானத்தின் பாதை அமைந்து விட்டிருந்தது வருத்தத்திற்குரிய ஒரு விடயம் தான். ஆனாலும், அந்த இரண்டு சம்பவங்களும் ஒன்றோடு ஒன்று எவ்வகையிலும் தொடர்புடையவை அல்ல. சிறீலங்காவிலிருந்து வெளியே சென்ற அந்த விமானத்தின் பயண வழி அதன் விமானியால் மட்டுமே தனியாகத் தீர்மானிக்கப்பட்டிருந்தது.”

நோர்வேத் தூதரகம் வெளியிட்ட அறிக்கையின் பின்பு, இந்தக் கடல் விமானம் பற்றிய சர்ச்சை அடங்கிப் போனது.

## சிறீலங்கா அமைச்சருடனான சந்திப்பு

தமிழர் தாயகத்தில் எழுந்த கொந்தளிப்பான களநிலை காரணமாக 2002ஆம் ஆண்டு ஜூன் மாதக் கடைசிப் பகுதியில் தாய்லாந்தில் சமரசப் பேச்சுக்களை ஆரம்பிக்கலாமென நோர்வே அரசு வகுத்த திட்டம் நிறைவு எய்தவில்லை. தமிழ் மக்கள் மீதான இறுக்கமான ஆக்கிரமிப்புப் பிடியைத் தளர்த்தி விட சிங்கள இராணுவம் விரும்பவில்லை. போர்நிறுத்த உடன்பாட்டுக்

கடப்பாடுகளையும் நிறைவேற்ற இராணுவத்தினர் மறுத்தனர். சிறீலங்காக் கடற்படை பகையுணர்வுடன் செயற்பட்டது. மீன்பிடி மீதான கட்டுப்பாடுகளையும் தடைகளையும் அகற்ற மறுத்த கடற்படையினர் கடற்புலிகளுடன் மோதுவதற்கு முனைப்புற்று நின்றனர். சிங்கள ஆயுதப் படைகளின் பகைமையான போக்கும் போர்நிறுத்தக் கடப்பாடுகளை நிறைவு செய்ய அவை மறுத்து வந்தமையும் சமாதானப் பேச்சுக்களை ஆரம்பிப்பதில் தாமதத்தை ஏற்படுத்தின. 2002 ஜூன் மாதம் 5ஆம் நாள், லண்டன் ஆங்கில வார ஏடான 'தமிழ் கார்டியன்' பத்திரிகைக்கு நான் வழங்கிய செவ்வியில், அன்றைய கள நிலைமையை கீழ்க் கண்டவாறு விளக்கியிருந்தேன்.

"போர் நடவடிக்கைகளுக்கு முற்றுப் புள்ளிவைத்து அமைதிப் பேச்சுக்களை நடத்துவதற்கான ஒரு சமரசச் சூழ்நிலையை உருவாக்குவதே போர் நிறுத்தத்தின் பிரதான நோக்கமாகும். யுத்தத்தினால் சிதைவுற்ற தமிழர் தாயகத்தில், போர் நெருக்கடியைத் தணித்து, இயல்புநிலையை நிலைநாட்டும் நோக்குடனேயே போர்நிறுத்த ஒப்பந்தத்தில் சில விதிமுறைகளும் நல்லெண்ண நடவடிக்கைகளும் பிரகடனம் செய்யப்பட்டன. மிக இறுக்கமான இராணுவ ஆக்கிரமிப்பின் கீழ் திணிக்கப்பட்ட அடக்குமுறையான நடவடிக்கைகளை அகற்றி, தமிழ் மக்களின் வாழ்நிலையை வளம்பெறச் செய்வதும் போர் ஓய்வு உடன்படிக்கையின் இலட்சியமாகும்.

போர் நிறுத்த உடன்பாட்டில் உள்ள விதிகளும் கடப்பாடுகளும் முழுமையாக நிறைவு செய்யப்படவில்லை. அத்துடன் தமிழ்ப் பகுதிகளில் இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் நல்லெண்ண நடவடிக்கைகளும் செயற்படுத்தப்படவில்லை. ஆகவே, இந்த உடன்படிக்கையில் கைச்சாத்திட்ட ஒரு தரப்பினர் என்ற ரீதியில் நாம் அதிருப்தி அடைந்திருக்கிறோம். உடன்பாட்டில் தெரிவிக்கப்பட்ட கால வரம்பையும் மீறிச் சிங்கள ஆயுதப் படையினர் தொடர்ந்தும் பாடசாலைகள், கல்லூரிகள், கோவில்கள், பொதுக் கட்டிடங்களை ஆக்கிரமித்து நிற்கின்றனர். வரலாற்றுப் பழமை வாய்ந்த தமிழ் மக்களின் புனிதத்

தலங்களான இந்துக் கோவில்கள் அமைந்திருக்கும் பிரதேசங்களிலிருந்து வெளியேற இராணுவம் மறுத்து வருகின்றது. இதனால் சமாதான வழிமுறையில் தமிழ் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை இடிந்து வருகிறது.

சன நெருக்கடி நிறைந்த தமிழ் நகரங்களிலும் பட்டினங்களிலும் தடைகளையும் சோதனைச் சாவடிகளையும் நீக்குவதற்கு ஆயுதப் படைகள் மறுத்து வருகின்றன. அத்துடன் பொதுமக்களையும் மிரட்டி, துன்புறுத்தி வருகின்றன. இவை போர் நிறுத்த விதிகளை மீறும் செயல்களாகும். கிழக்கு மாகாணத்தில் எமது போராளிகள் மீதும் பொதுமக்கள் மீதும் ஆயுதப் படையினர் வன்முறையைப் பிரயோகித்த சம்பவங்களும் நிகழ்ந்துள்ளன.

ஆயுதம் தரிக்காத எமது போராளிகள் அரசியல் வேலைகளில் ஈடுபடுவதற்காக வடகிழக்கில் சுதந்திரமாக நடமாடலாம் எனப் போர் நிறுத்த உடன்பாட்டில் இணக்கம் காணப்பட்டிருக்கின்றது. ஆயினும், 35,000 மக்கள் வாழும் யாழ்ப்பாணத் தீவகத்தில் எமது போராளிகளின் சுதந்திர நடமாட்டத்திற்கு ஆயுதப் படையினர் இறுக்கமான கட்டுப்பாடுகளை விதித்துள்ளனர். இதேபோன்று, சிறீலங்காக் கடற்படையினரும், 90 நாட்கள் கால வரம்பு கடந்தபோதும் மீன்பிடிக்கான தடைகளை நீக்க மறுத்து வருகின்றனர். இதனால் எமது மீனவ சமூகத்தினர் பெரும் துன்பத்திற்கு ஆளாகி வருகின்றனர். சுருக்கமாகச் சொல்லப் போனால் சிறீலங்காவின் ஆயுதப் படையினர் போர் நிறுத்த உடன்பாட்டை செம்மையாகச் செயற்படுத்துவதற்கு ஒத்துழைக்க மறுப்பதுடன், எமது போராளிகள் பொதுமக்களுடன் பகைமையோடு கடும் போக்கைக் கடைப்பிடிக்கிறார்கள்.

போர்நிறுத்த விதிகள், கடப்பாடுகள் நிறைவு செய்யப்படாத காரணத்தினாலேயே சமரசப் பேச்சுக்களை தொடங்குவதில் தாமதம் ஏற்பட்டு வருகிறது. போர் ஓய்வு உடன்பாடு சரிவர நிறைவு செய்யப்பட்டு தமிழ்ப் பிரதேசத்தில் நெருக்கடி நிலை தணிந்து இயல்பு நிலை தோன்றினாலேயே அமைதிப்

பேச்சுக்கான நல்லெண்ணச் சூழ்நிலை உருவாகும்.

அரசியல் பேச்சுக்களை நடத்துவதற்கு அமைதி நிலைபேணும் உறுதியான அத்திவாரமாகப் போர் நிறுத்தம் பலப்படுத்தப்பட வேண்டும் என்பதே எமது நிலைப்பாடாகும். போர் நெருக்கடியைத் தணித்து, அமைதி நிலையைப் பலப்படுத்த வேண்டும் என்பதில் சிறீலங்கா அரசாங்கம் ஆர்வமும் அக்கறையும் காட்டாதிருப்பது எமக்குக் கவலையையும் ஏமாற்றத்தையும் கொடுக்கிறது. இதனால் சமாதான மார்க்கத்தில் எமது மக்களுக்கு இருந்த நம்பிக்கையும் தளர்ந்து வருகிறது.''

விடுதலைப் புலிகள் இயக்கம் மீதான தடையை நீக்குவதற்கு உருப்படியான நடவடிக்கைகளை எடுப்பதற்கு ரணில் விக்கிரமசிங்காவின் அரசாங்கம் தயக்கம் காட்டியதும் சமாதானப் பேச்சுக்களின் தாமதத்திற்கு இன்னொரு முக்கிய காரணமாக அமைந்தது. தமது உண்மையான, சட்ட ரீதியான பிரதிநிதிகளாக விடுதலைப் புலிகள் இயக்கமே பேச்சுக்களில் பங்குகொள்ள வேண்டும் என விரும்பிய தமிழ் மக்கள், புலிகள் மீதான தடை நீக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கையில் ஒன்றிணைந்த தேசமாக ஒன்றுபட்டு நின்றனர். அத்துடன் விடுதலைப் புலிகளும் ஒரு தடை செய்யப்பட்ட, சட்ட விரோத அமைப்பாகப் பேச்சுக்களில் கலந்து கொள்ள விரும்பவில்லை. புலிகள் மீதான தடையை நீக்குவதைப் பிரதமர் ரணில் விக்கிரமசிங்கா விரும்பியபோதும் அவரது கடும்போக்கான அமைச்சர்கள் சிலர் அதனை விரும்பவில்லை. பேச்சுக்கள் திருப்திகரமான முறையில் முன்னேற்றம் கண்ட வேளையிலேயே தடை நீக்கம் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்பது இவர்களது கருத்து.

வடகிழக்கிலுள்ள சிக்கலான கள நிலவரம் பற்றியும், தடை நீக்கப் பிரச்சினையில் இரு தரப்பினரதும் நிலைப்பாடு பற்றியும் நோர்வே சமாதான தூதுவர்கள் நன்கு அறிந்திருந்தார்கள். சமாதானப் பேச்சுக்களை முன்னெடுக்க முடியாத ஒரு முடக்க நிலை ஏற்பட்டுள்ளதாகவே அவர்கள் கருதினார்கள். இந்தச் சூழ்நிலையில்தான் 2002ஆம் ஆண்டு, ஜூலை 15இல், நோர்வே உதவி வெளிவிவகார மந்திரி திரு. ஹெல்கிசன், திரு. எரிக் சுல்கைம், நோர்வே வெளிவிவகார அமைச்சைச் சேர்ந்த

திருமதி. லீசா கோல்டன் ஆகியோர் லண்டனில் என்னைச் சந்தித்தனர். தாய்லாந்து நாட்டில் சமாதானப் பேச்சுக்களை ஆரம்பிப்பதற்கான சாத்தியக் கூறுகள் பற்றி திரு. ஹெல்கிசன் என்னிடம் வினவினார். விடுதலைப் புலிகள் மீதான தடை அகற்றப்படுவதுடன் போர் நிறுத்த விதிகளும் கடப்பாடுகளும் சீரிய முறையில் நிறைவு செய்யப்பட்டால் அன்றிப் பேச்சுக்களை தொடங்குவது சாத்தியமில்லை என்று நான் விளக்கினேன். இந்த விவகாரத்தை ரணில் விக்கிரமசிங்கா அரசுடன் பேசி, சீக்கிரமே ஒரு சாதகமான முடிவு எடுப்பதாக ஹெல்கிசன் உறுதியளித்தார். அமைதிப் பேச்சுக்களுக்குப் பொறுப்பான ஒரு மூத்த அமைச்சரான திரு. மிலின்டா மொறகொட லண்டனுக்கு வரவிருப்பதாகவும் அவரைச் சந்தித்து விடுதலைப் புலிகளின் நிலைப்பாட்டை விளக்கமாகக் கூறும்படியும் அவர் கேட்டுக் கொண்டார். நான் அதற்கு இணங்கினேன். இந்தச் சந்திப்பு, 2002ஆம் ஆண்டு ஜூலையில், லண்டனிலுள்ள நோர்வேத் தூதுவரது இல்லத்தில் நிகழ்ந்தது. திரு. விடார் ஹெல்கிசனும் இந்தச் சந்திப்பில் கலந்து கொண்டார். எனக்கு உதவியாக எனது மனைவி அடேலும் பங்குபற்றினார். சிறீலங்கா அமைச்சர் ஒருவருக்கும் விடுதலைப் புலிகளின் பிரதிநிதி ஒருவருக்கும் மத்தியில் நிகழ்ந்த முதல் சந்திப்பு இதுவாகும். கள நிலவரம் பற்றியும் சமாதானப் பேச்சுக்கள் பற்றியும் எமது இயக்கத்தின் நிலைப்பாட்டை நான் எடுத்துக் கூற, பொறுமையாகச் செவிமடுத்தார் மொறகொட. போர் நெருக்கடியைத் தணித்து, இயல்புநிலையைத் தோற்றுவிப்பதற்கு, இராணுவத்தினதும் கடற்படையினரதும் பகைமையான கடும்போக்கு முட்டுக் கட்டையாக அமைந்திருக்கிறது என நான் விளக்கினேன். எமது விடுதலை இயக்கம் பேச்சுக்களில் பங்கு கொள்வதாயின், அரசாங்கம் விதித்த தடை அகற்றப்படுதல் அவசியமெனவும் சுட்டிக் காட்டினேன். தமிழ் மக்களின் சட்டரீதியான, அதிகாரபூர்வமான பிரதிநிதிகளாகவும், சமத்துவ பங்காளிகளாகவுமே விடுதலைப் புலிகள் பேச்சுக்களில் பங்கு கொள்ள வேண்டும் என்ற நியாயப்பாட்டை அமைச்சர் மொறகொட ஏற்றுக் கொண்டார். வெகு சீக்கிரமே ரணில் விக்கிரமசிங்காவின் அரசு எமது இயக்கம் மீதான தடையை நீக்கிவிடுமென அவர் உறுதியளித்தார். கள நிலைமையை நேரில் கண்டறிவதற்காகத் தமிழ்ப் பகுதிகளுக்கு ஒரு சுற்றுப் பயணத்தை மேற்கொள்ள விரும்புவதாகவும் அவர் தெரிவித்தார்.

ஆக்கபூர்வமாக அமைந்த அந்தச் சந்திப்பு இரு மணிநேரம் வரை நீடித்தது. ஆகஸ்ட் மாதம் நடுப் பகுதியில் மீண்டும் ஒஸ்லோ நகரில் சந்திப்பதற்கு நாம் இணங்கினோம்.

இந்தச் சந்திப்பை அடுத்து, தலைவர் பிரபாகரனுடன் தொடர்பு கொண்ட நான், சிறீலங்கா அமைச்சருடன் நிகழ்ந்த கலந்துரையாடலின் உள்ளடக்கத்தை விபரமாகக் கூறினேன். எமது இயக்கம் மீதான தடையை நீக்குவதோடு, தமிழ் மக்களின் ஏகப் பிரதிநிதிகளாக எமது அமைப்பை அங்கீகரித்துப் பேச்சுக்களை நடத்த ரணிலின் ஆட்சிப்பீடம் தயாராக இருப்பதாகவும் பிரபாகரனிடம் கூறினேன். போர் நிறுத்த ஒப்பந்தக் கடப்பாடுகளைக் கடைப்பிடிக்காது சிங்கள ஆயுதப் படைகள் காட்டும் கடும் போக்குக் குறித்து திரு. மொறகொட எவ்வித உறுதிமொழியையும் தரவில்லை என்றும், ஆயுதப் படைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் ரணில் அரசிடம் இருக்கவில்லை என்பதையும் அவருக்கு விளக்கினேன். அரசியல் தெளிவுடைய யதார்த்தவாதி என்பதால், ரணிலுக்கும் சந்திரிகாவுக்கும் மத்தியிலான அதிகாரப் போட்டியும் பிணக்குப் பற்றியும் பிரபாகரனால் புரிந்து கொள்ள முடிந்தது. போர்நிறுத்த உடன்பாட்டு விதிகள் சீரிய முறையில் நடைமுறையாக வேண்டும் என ரணில் விக்கிரமசிங்க விரும்பிய போதும் அதற்கான அதிகாரம் அவரிடம் இருக்கவில்லை. சந்திரிகாவுடனான பகையுணர்வு கூர்மையடைந்து இருந்ததால், இராணுவ விவகாரத்தில் ஜனாதிபதியுடன் ஒத்துழைப்பையும் அவரால் பெறமுடியவில்லை. இந்தச் சிக்கலையும் ரணிலின் இயலாத் தன்மையையும் பிரபாகரன் நன்கறிவார். விடுதலைப் புலிகள் மீதான தடையை அரசாங்கம் அகற்றிவிட்டால் தாய்லாந்தில் சமாதானப் பேச்சுக்களை நடத்துவதற்கு இணக்கம் தெரிவித்த பிரபாகரன், போர்நிறுத்த உடன்பாட்டின் நடைமுறைப் பிரச்சினைகள் குறித்துப் பேச்சுவார்த்தை மேசையில் பேசலாம் எனவும் தெரிவித்தார். தடை நீக்கம் நடைபெறும் பட்சத்தில், செப்டம்பர் நடுப் பகுதியில் தாய்லாந்தில் பேச்சுக்களை ஆரம்பிக்கலாமெனவும் பிரபாகரன் தெரிவித்தார்.

நோர்வே வெளிவிவகார அமைச்சர் திரு. ஜான் பீட்டர்சன் அவர்களின் அழைப்பை ஏற்று, ஆகஸ்ட் நடுப் பகுதியில் நானும் அடேலும் ஒஸ்லோ நகர் சென்றபோது அங்கு அமைச்சர் மிலிந்த மொறகொடவை மீண்டும் சந்தித்தோம். நோர்வே வெளிவிவகார அமைச்சுக் காரியாலயத்தில் நிகழ்ந்த இந்தச் சந்திப்பின்போது,

சிறீலங்கா சமாதான செயலகத்தின் பணிப்பாளர் திரு. பேனார்ட் குணத்திலகாவும் கலந்து கொண்டார். நோர்வேத் தரப்பில் திரு. விடார் ஹெல்கிசன், திரு. எரிக் சுல்கைம், திரு. ஜோன் வெஸ்ட்பேர்க், திருமதி லீசா கோல்டன் ஆகியோர் கலந்து கொண்டனர். விடுதலைப் புலிகள் மீதான தடை நீக்கம் செய்யப்படுவதை அடுத்து, 2002ஆம் ஆண்டு செப்டெம்பர் நடுப் பகுதியில் தாய்லாந்தில் சமாதானப் பேச்சுக்களை ஆரம்பிப்பதென இச் சந்திப்பில் முடிவு எடுக்கப்பட்டது. பேச்சுக்கள் நிகழும் திகதியையும் மற்றும் விபரங்களையும் நோர்வே அரசு அறிவிக்குமென நோர்வேப் பிரதிநிதிகள் தெரிவித்தனர். போர் நிறுத்த உடன்பாட்டு விதிகளை நிறைவு செய்தல், இடம்பெயர்ந்த மக்களை மீள்குடியேற்றம் செய்தல் போன்ற பிரச்சினைகளும் இச் சந்திப்பின்போது விவாதிக்கப்பட்டது. நோர்வே வெளிவிவகார மந்திரி திரு. பீட்டர்சன், விடுதலைப் புலிகளைப் பிரதிநிதப்படுத்திய என்னையும் அடேலையும், சிறீலங்காப் பிரதிநிதிகளையும் தனித்தனியே சந்தித்து, பேச்சுக்கள் வெற்றிபெறத் தனது அரசாங்கத்தின் ஆசியைத் தெரிவித்தார்.

ஒஸ்லோவில் நிகழ்ந்த இந்தச் சந்திப்பைத் தொடர்ந்து, செப்டம்பர் 6ஆம் நாள், அதாவது சமாதானப் பேச்சுக்கள் தொடங்குவதற்கு பத்து நாட்களுக்கு முன்னராக, விடுதலைப் புலிகள் மீதான தடை நீக்கப்படுமென ரணிலின் அரசு அறிவித்தது. இதற்கு அமைய, செப்டம்பர் 5ஆம் நாள் நள்ளிரவு, பாதுகாப்பு அமைச்சர் திரு. திலக் மாறப்பன விடுதலைப் புலிகள் மீதான தடையை நீக்கும் வர்த்தமானிப் பிரகடனத்தை வெளியிட்டார்.

இது இவ்வாறிருக்க, விடுதலைப் புலிகள் அமைப்புக்கும் சிறீலங்கா அரசாங்கத்திற்கும் மத்தியில் அதிகாரபூர்வமான முதற்கட்டப் பேச்சுக்கள் தாய்லாந்திலுள்ள சற்றாகீப் கடற்படைத் தளத்தில் 2002ஆம் ஆண்டு 16 - 18ஆம் திகதி வரை நடைபெறுமென நோர்வே அரசாங்கம் அறிவித்தது. இரு தரப்பினரும் நான்கு பிரதிநிதிகள் கொண்ட குழுக்களாக நோர்வே சமாதானத் தூதுவர்களின் அனுசரணையுடன் பேச்சுக்களைத் தொடங்குவார்கள் என்றும் அறிவிக்கப்பட்டது.

## சமாதானப் பேச்சுக்களின் அங்குரார்ப்பணம்

2002, செப்டெம்பர், 16ஆம் நாள். தாய்லாந்தின் தலைநகரான பாங்கொக்கிலிருந்து 50 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள ஜொம் தைம் என்ற பட்டினத்தில் அமைந்திருந்த 'அம்பாசிடர் சிற்றி' என்ற பிரபல ஐந்து நட்சத்திர விடுதியை நாம் சென்றடைந்தபோது, உலக ஊடகவியலாளர், இராஜதந்திரிகள், தாய்லாந்து அரச அதிகாரிகள், பாதுகாப்புப் படையினராக அங்கு பெருந்திரளானோர் திரண்டு நின்றனர். அமைதி முயற்சி ஒன்றின் மீது அனைத்துலகச் சமூகத்திற்கு இருந்த எதிர்பார்ப்பையும் நல்லெண்ண உணர்வையும் அந்த விடுதியின் வாசலில் குழுமி நின்றோரின் ஆர்வத்திலும் ஆர்ப்பரிப்பிலும் காணக் கூடியதாக இருந்தது.

விடுதியின் வாசலில் எம்மை வரவேற்ற தாய்லாந்தின் பாதுகாப்பு அதிகாரிகள், விடுதியின் நடைகூடம் வழியாக எம்மை அழைத்துச் சென்று ஓய்வறை ஒன்றில் தங்க வைத்தனர். இன்னொரு ஓய்வறையில் சிறீலங்காவின் அரச தரப்புப் பிரதிநிதிகளான பேராசிரியர் ஜீ.எல்.பீரிஸ், திரு. மிலிந்த மொறகொட, திரு. ரவூவ் ஹக்கீம், திரு. பெர்னாட் குணத்திலக்கா ஆகியோரும் அவர்களது உதவியாளர்களும் தங்கியிருந்தனர். விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளாக என்னோடு எமது இயக்கத்தின் சட்ட ஆலோசகர் திரு. விஸ்வநாதன் உருத்திரகுமாரன், பொருளாதார அபிவிருத்தி நிபுணர் திரு. ஜே மகேஸ்வரன், எமது பேச்சுக் குழு செயலாளராக எனது மனைவி அடேல் பாலசிங்கம் ஆகியோர் அங்கிருந்தனர். தேனீர் விருந்துபசாரத்தின் பின்பு, அங்குரார்ப்பணக் கூட்டம் நிகழவிருந்த மண்டபத்திற்கு நாங்களும் சிறீலங்காப் பிரதிநிதிகளும், நோர்வே அனுசரணையாளர்களும் அழைத்துச் செல்லப்பட்டோம். நாம் அங்கு சென்றபோது, பத்திரிகையாளர்கள், படப்பிடிப்பாளர்கள், வெளிநாட்டு இராஜதந்திரிகள், தாய்லாந்து அரச அதிகாரிகள் ஆகியோரால் மண்டபமே நிறைந்து வழிந்தது. மண்டப மேடையில், பல வர்ணப் பூக்களால் அலங்கரிக்கப்பட்டிருந்த நீள் மேசையில் இரு தரப்புப் பிரதிநிதிகளும் அக்கம் பக்கமாக அமர்ந்து கொள்ள, நடுநிலையாளராக, நோர்வே உதவி வெளிவிவகார அமைச்சர் திரு. விடார் ஹெல்கிசன் நடுவில் உட்கார்ந்தார்.

ஆசியாவின் மிக நீண்ட இன நெருக்கடியிலும் மிகக்

கோரமான யுத்தத்திலும் சிக்குண்டு நிற்கும் இரு தேசங்களின் பிரதிநிதிகள், சமாதான இலட்சியத்தை அடைய ஒரு வெளிநாட்டு அரங்கில் ஒன்று கூடி இருப்பதையும், இரு தரப்புத் தலைமைப் பிரதிநிதிகளும் எத்தகைய கருத்தை வெளியிடவுள்ளனர் என்பதை அறிந்து கொள்ளவும் அங்கு கூடியிருந்த பத்திரிகையாளரும் இராஜதந்திரிகளும் மிகவும் ஆவலாக இருந்தனர். சிறீலங்கா அரசும், தமிழீழ விடுதலைப் புலிகளும் பல தடவைகள் இந்தியாவிலும் இலங்கையிலும் சந்தித்துப் பேசியுள்ளனர். ஆனால் இதுவே முதற் தடவையாக, தென்னாசியப் பிராந்தியத்திற்கு அப்பால், தாய்லாந்தில், ஒரு சர்வதேச அரங்கில் இரு தரப்பினரும் சமாதானப் பேச்சுக்களில் பங்கு கொள்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

அங்குரார்ப்பண வைபவத்தில் உரையாற்றிய நோர்வேயின் விசேட தூதுவர் திரு. எரிக் சுல்கைம், இரு தரப்புப் பிரதிநிதிகளையும் அறிமுகம் செய்தார். நீண்ட காலப் பகைவர்களான இரு தரப்பினரையும் ஒரு சமாதான மேடையில் ஒன்று சேர்த்து வைப்பதில் நோர்வேயின் இராஜரீக முனைப்பு வெற்றி கண்டுள்ளதாகக் கூறிய அவர், பேச்சுக்கள் சுமுகமாக முன்னேறத் தனது நல்லாசியைத் தெரிவித்தார்.

இதனையடுத்து, தாய்லாந்தின் வெளிவிவகார அமைச்சின் நிரந்தரச் செயலர் திரு. ரெச் பூனக், அதிகாரபூர்வமாகச் சமாதானப் பேச்சுக்களை ஆரம்பித்து வைத்தார். இரு தரப்புப் பிரதிநிதிகளையும் வரவேற்றுப் பேசிய அவர், சமாதானப் பேச்சுக்கள் வெற்றிகரமாக முன்னேறி, சர்வதேச உலகம் எதிர்பார்ப்பது போன்று, அமைதிக்கும் இன ஒற்றுமைக்கும் வழிகோலுமென நம்பிக்கை தெரிவித்தார்.

சிறீலங்காவின் பேச்சுக் குழுத் தலைவர் பேராசிரியர் ஜீ.எல்.பீரிஸ் தனது உரையில், அமைதி வழியில் இனப் பிரச்சினைக்குத் தீர்வு காண்பது சம்பந்தமான ரணில் விக்கிரமசிங்கா அரசின் கொள்கை நிலைப்பாட்டைத் தெளிவுபடுத்தினார். இன நெருக்கடி காரணமாக, கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக இலங்கைத் தீவு பூராகவும் பேரழிவுகள் ஏற்பட்டதாகக் கூறிய பேராசிரியர் பீரிஸ், இலங்கை வாழ் மக்கள் தமது வாழ்க்கையைச் சீரமைத்து, ஒரு அமைதியான, வளமான, நீதியான நாடொன்றைக் கட்டியெழுப்பும் வகையில் ஒரு அரிய வரலாற்றுச் சந்தர்ப்பமாக இந்தச் சமாதான முயற்சி ஆரம்பிக்கப்பட்டுள்ளதாகத் தெரிவித்தார். இன நெருக்கடியின்

தீர்வுக்கு, போரை ஒரு வழிமுறையாகத் தனது அரசாங்கம் கையாளப் போவதில்லை என உறுதிபடக் கூடிய அவர், பிரச்சினையில் சம்பந்தப்பட்ட அனைவரும் பகைமையையும் சந்தேகங்களையும் மறந்து, பேச்சுக்கள் வெற்றிகரமாக முன்னேற்றம் காண ஒத்துழைப்பு வழங்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.

விடுதலைப் புலிகளின் பேச்சுக் குழுத் தலைவர் என்ற ரீதியில், அடுத்ததாக நான் உரையாற்றினேன். சமாதான முயற்சிக்கு ஒத்துழைப்பு வழங்கி, தனது நாட்டில் சமரசப் பேச்சுக்களுக்குக் களம் அமைத்துக் கொடுத்ததற்காகத் தாய்லாந்து அரசாங்கத்தைத் தமிழீழ மக்களின் சார்பில் பாராட்டிய நான், அவர்களது விருந்தோம்பல் பண்பையும் மெச்சினேன். ஆயுதப் போருக்கு ஓய்வு கொடுத்து, அமைதிச் சூழ்நிலையை ஏற்படுத்தி, இன நெருக்கடியோடு சம்பந்தப்பட்ட இரு பிரதான தரப்பினரான விடுதலைப் புலிகளையும் சிறீலங்கா அரசாங்கத்தையும் சமாதான முயற்சியில் ஈடுபடச் செய்வதற்கு நீண்ட காலமாக, விடா முயற்சியில் அயராது உழைத்து அரும் பணியாற்றிய நோர்வே அரசாங்கத்தையும் தமிழ் மக்கள் சார்பில் பாராட்டினேன். ஒரு சில நிமிடங்களை மட்டும் கொண்ட வரையறுக்கப்பட்ட கால வரம்புக்குள் உரையாற்ற நிர்ப்பந்திக்கப்பட்டதால் இனப் பிரச்சினையின் வரலாற்றையும் அதன் ஆழமான பரிணாமங்களையும் என்னால் அங்கு விபரித்துக் கூற முடியவில்லை. தேசிய சுயநிர்ணயத்திற்கான தமிழ் மக்களது விடுதலைப் போராட்டம் ஒரு நீண்ட, சிக்கலான வரலாற்றைக் கொண்டது எனக் கூறிய நான், இதில் இருபது ஆண்டு காலத்திற்கு மேலாக ஒரு கொடும் யுத்தத்தை எமது மக்கள் எதிர்கொள்ள வேண்டி இருந்தது என விளக்கினேன்.

> "போர் நிறுத்தம் செய்து, சமாதானப் பேச்சுக்களை நடத்துவதற்கு விடுதலைப் புலிகளின் தலைமை விருப்பம் தெரிவித்த வேளைகளில், முந்திய அரசாங்கம் எமது இயக்கத்தின் நல்லெண்ண சமிக்கைகளை நிராகரித்ததுடன் போரைத் தீவிரமாக முடுக்கிவிட்டால் தமிழர் தரப்பில் பாரிய உயிர்ச் சேதமும் பொருள் நாசமும் ஏற்பட்டது. யுத்தம் மூலம் சமாதானத்தை எட்டலாம் என்றும், இராணுவ வழிமுறையால் அரசியல் தீர்வை அடையலாம் என்றும் ஒரு அபத்தமான தத்துவத்துடன் முன்னைய

அரசாங்கம் கடும்போக்கைக் கடைப்பிடித்தது. இந்தக் குளறுபடியான கொள்கையைக் கடைப்பிடித்ததால் முழு நாட்டையுமே ஒரு சமூகப் பொருளாதாரப் பேரழிவுக்கு இட்டுச் சென்றது முன்னைய அரசு.

மூர்க்கமான யுத்தத்திற்கு முகம்கொடுத்த, தமிழர்களதும் முஸ்லிம்களதும் வரலாற்றுத் தாயகத்தில் இப்பொழுதுதான் மெல்ல, மெல்ல அமைதியும் இயல்பு நிலையும் தோன்றி வருகிறது. வட மாகாணமே, இந்த யுத்தத்தின் மிகக் கொடூரமான விளைவுகளுக்கு இலக்காகியது. இங்குதான் பொதுக் கட்டுமாணங்கள் அனைத்தும் சிதைவுக்கு ஆளானது. இங்குதான் பல்லாயிரக்கணக்கில் பொதுமக்கள் கொல்லப்பட்டனர். இங்குதான் பத்து லட்சம் மக்கள் வரை இடம்பெயர்வைச் சந்தித்தனர். கடந்த பத்து ஆண்டுகளுக்கு மேலாக, எமது மக்கள் மீது திணிக்கப்பட்ட பொருளாதாரத் தடைகள் காரணமாக அவர்களது சமூக, பொருளாதார வாழ்வு பாரதூரமாகப் பாதிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பொருளாதார நெருக்குவாரத்தினால் எமது மக்கள் ஏழ்மைக்கும் இழிநிலைக்கும் ஆளாகியுள்ளனர். இவ்விதம், போரினாலும் அரச ஒடுக்குமுறையாலும் பாதிக்கப்பட்டுள்ள எமது மக்களுக்கு அவசர நிவாரண உதவி தேவைப்படுகிறது.

பாரிய அளவில் புனர்வாழ்வு, புனர்நிர்மாணம், மீள் குடியேற்றத் திட்டங்களை ஆரம்பிக்க உடன் நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். சர்வதேசச் சமூகத்தின் உதவியும் ஆதரவும் இன்றி, பிரமாண்டமான இப் பணியை நிறைவு செய்ய முடியாது. இனப் பிரச்சினைக்கு அமைதி வழியில் தீர்வு காணப்பட வேண்டும் என ஆவல் தெரிவிக்கும் உலக நாடுகள், வட கிழக்கில் போரால் சீரடைந்த பொருளாதாரத்தைக் கட்டியெழுப்ப தாராள மனதுடன் உதவிகளை வழங்க முன்வர வேண்டும். சமாதான வழிமுறையை முன்னெடுத்துப் பலப்படுத்துவதாயின் போரினால் பாதிக்கப்பட்ட மக்களின் வாழ்வை வளப்படுத்தி, இயல்பு நிலையைக் கட்டியெழுப்புவது அவசியமாகும்.

இனப் பிரச்சினைக்குத் தீர்வு காண்பது, அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்வது போன்ற சிக்கலான பிரச்சினைகளுக்கு அப்பால், முதலில் எமது மக்களின் அவசரமான, ஜீவாதாரத் தேவைகளுக்கு நிவாரணம் வழங்கப்பட வேண்டும். துன்பப்படும் ஒரு மக்கள் சமுதாயத்தின் பொருளாதார மேம்பாட்டை உதாசீனம் செய்து சமாதானத்தை முன்னெடுப்பது சாத்தியமல்ல. பிரமாதமான முன்னேற்றம் கண்ட தென்கிழக்கு ஆசிய நாடுகளின் பொருளாதார வடிவங்கள் போன்று ('புலிப்' பொருளாதார வடிவங்கள் போன்று) இலங்கையின் பொருளாதாரத்தையும் கட்டி வளர்க்க வேண்டும் எனச் சிங்கள அரசுத் தலைமை விரும்புகிறது. இந்த அபிலாசையை நாம் ஆதரிக்கிறோம். இவ்விதமான அபிலாசை வெற்றிபெற வேண்டுமாயின் நாட்டின் பொருளாதார மீள்கட்டுமாண முயற்சியில் விடுதலைப் புலிகளையும் சமத்துவ பங்குதாரராக அரவணைத்துக் கொள்வது அவசியம். விடுதலைப் புலிகள் தமிழ் மக்களின் உண்மையான, சட்ட ரீதியான பிரதிநிதிகளாவர். யுத்தம் நிகழ்ந்த மிக நெருக்கடியான, கொந்தளிப்பான கால கட்டங்களில் நாம் எமது மக்களுடன் வாழ்ந்து அவர்களுக்காகப் போராடி, அவர்களது துன்ப துயரங்களில் பங்கு கொண்டோம். தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் சமூக, பொருளாதாரத் தேவைகளின் முழுப் பரிமாணத்தையும் நாம் நன்கறிவோம். கடந்த பத்து ஆண்டு காலமாக நாம் எமது கட்டுப்பாட்டுப் பிரதேசத்தில் ஒரு திறமையான நிர்வாகக் கட்டமைப்பை உருவாக்கி, சட்டம் ஒழுங்கையும் நிலைநாட்டி, சமூக நல்வாழ்வையும் பேணி வருகிறோம். எனவேதான், வடகிழக்கின் நிர்வாகத்திலும் பொருளாதார அபிவிருத்தியிலும் விடுதலைப் புலிகள் இயக்கம் தலையான, முக்கிய பங்கு வகிப்பது அவசியமாகிறது.

நீதியும் சுதந்திரமும் நிலவும் சமாதானமே எமது மக்களின் ஆழமான அபிலாசையாகும். சுயநிர்ணய உரிமையுடன், ஏனையோருடன் கூடி வாழும் நிரந்தர சமாதானத்தையே எமது மக்கள் விரும்புகிறார்கள். அமைதி, அரசியல் உறுதி, இன ஐக்கியம் ஆகிய

அத்திவாரங்கள் மீதே இலங்கைத் தீவின் பொருளாதார சுபீட்சத்தைக் கட்டி எழுப்ப முடியும். இத் தீவில் வாழும் சகல இன மக்களின் வாழ்வை வளம்பெறச் செய்யும் இலட்சியத்துடன், சமாதான அரங்கில் இந்த அத்திவாரங்களைப் பலமாகக் கட்டியெழுப்ப நேர்மையுடனும் நம்பிக்கையுடனும் நாம் முயற்சிப்போமாக."

என்று எனது சிற்றுரையை முடித்துக் கொண்டேன்.

திரு.விடார் ஹெல்கிசன் தனது முடிவுரையில், பொருளாதார அபிவிருத்தி திட்டங்களைச் செயற்படுத்துவதற்குச் சர்வதேசச் சமூகத்தின் நிதியுதவியின் அவசியத்தை வலியுறுத்தினார். அரசியல் மட்டத்தில் சமாதானப் பேச்சுக்கள் நடைபெறும் அதேவேளை, சமாதானத்தின் பெறுபேறுகள் சாதாரண மக்களைச் சென்றடைய வேண்டும் என்றும் அவர் குறிப்பிட்டார். இன நெருக்கடியில் சம்பந்தப்பட்ட இரு தரப்பினரும் அமைதி வழியிலான சமரசத் தீர்வில் உறுதிபூண்டு நிற்பதைப் பாராட்டிய திரு. ஹெல்கிசன் சமாதான முன்னெடுப்புகள் நீண்டதாகவும் மிகவும் சிக்கலானதாகவும் அமையலாம் என்றும் கூறினார்.

## முதலாவது கட்டச் சுற்றுப் பேச்சு

அங்குரார்ப்பண நிகழ்வு முடிவடைந்ததும் நாங்கள் அந்த விடுதியிலிருந்து சற்றாகீப் கடற்படைத் தளத்திற்குப் புறப்பட்டோம். பிரமாண்டமானதாக அமையப் பெற்ற அப் படைத் தளத்தின் மையப் பகுதியில், மிகப் பாதுகாப்பான சூழலில், எமது தங்கும் இல்லங்கள் இருந்தன. மொத்தமாக ஐந்து பெரிய தனி வீடுகள். அவற்றில் இரண்டு, இரண்டாக அரச பிரதிநிதிகளுக்கும் எமக்கும் ஒதுக்கப்பட்டிருந்தன. மற்றையது நோர்வே இராஜதந்திரிகளுக்கு வழங்கப்பட்டது. பண்பாக விருந்தோம்பும் சமையல்காரர்கள் உட்பட சகல வசதிகளையும் இத் தங்கும் இல்லங்களில் தாய்லாந்து அரசு ஒழுங்கு செய்திருந்தது. தங்கும் இல்லங்களில் இருந்து சொற்ப தூரத்தில், ஒரு மலைக் குன்றின் மீது அமையப் பெற்றிருந்த தாய்லாந்து கடற்படைத் தளபதியின் விருந்தினர் விடுதியில் பேச்சுக்கள் நடைபெறவிருந்தன.

2002, செப்டம்பர் மாலை நேரம். நாங்கள் எமது தங்கும் இல்லங்களிலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தொலைவிலிருந்த விருந்தினர் விடுதிக்கு அழைத்துச் செல்லப்பட்டோம். அன்றைய நாள் மாலை சரியாக நான்கு மணிக்கு, விடுதலைப் புலிகளுக்கும் அரசாங்கத்திற்கும் மத்தியிலான முதலாவது கட்டச் சுற்றுப் பேச்சு ஆரம்பமானது.

பிரதம அனுசரணையாளரான திரு. விடார் ஹெல்கிசன் பேச்சுக்குத் தலைமை வகித்தார். இரு தரப்புப் பேச்சுக் குழுத் தலைவர்களும் மற்றைய பிரதிநிதிகளும், பேச்சு மேசையில், ஒருவரை ஒருவர் முகம் கொடுத்து எதிரெதிரே அமர்ந்திருந்தனர். பேச்சுக் குழுப் பிரதிநிதிகளுக்குப் பின்புறமாக, பேச்சுக் குழுக்களுக்கு உதவியாளராக நிபுணர்களும் அரச அதிகாரிகளும் வீற்றிருந்தனர். எரிக் சுல்கைம், ஜோன் வெஸ்ட்போர்க், லீசா கோல்டன், தோமஸ் ஆகியோர் பிரதம அனுசரணையாளருக்கு உதவியாக, அவருக்கு அக்கம் பக்கமாக அமர்ந்திருந்தனர். அதிகாரபூர்வமாகப் பேச்சுக்களை ஆரம்பித்து வைத்த திரு. ஹெல்கிசன், பேச்சுக்களின் நடைமுறைபற்றி விளக்கினார். பேச்சுக்களின் நெறிமுறை, நிகழ்ச்சி நிரல் தயாரித்தல், தீர்மானங்களைப் பதிவு செய்தல், ஊடகவியலாளரை கையாளுதல் போன்ற நடைமுறைகள் பற்றி ஹெல்கிசன் முன்வைத்த விளக்கங்களை இரு தரப்பினரும் ஏற்றுக் கொண்ட போதும் பேச்சு விதிகளும் நியமங்களும் இறுக்கமாக அமையக் கூடாது என்பதை நான் வலியுறுத்தினேன். பேச்சுக்களுக்கு வரம்புகளிட்டு கட்டுப்படுத்தக் கூடாது என்ற எனது கருத்தை பேராசிரியர் பீரிஸ் ஆதரித்தார். பேச்சு நடைமுறைகள் இறுக்கப்படாது நெகிழ்வாக இருந்தாலேயே சுதந்திரமாகக் கருத்தாடுவது சாத்தியம் என்றார் அவர்.

பேச்சுவார்த்தைக்கெனச் செம்மையாக நெறிப்படுத்தப்பட்ட நிகழ்ச்சி நிரலோ அன்றி மூலோபாய அணுகுமுறையோ இருக்கவில்லை. இரு தரப்பினரும் தமது சொந்த நிகழ்ச்சி நிரல்களையும் விருப்புக்களையும் குறிக்கோள்களையும் கொண்டிருந்தனர். சமாதானப் பேச்சுக்கள் சம்பந்தமாக, வழமையாக நாம் கடைப்பிடிக்கும் அணுகுமுறையையும் அதற்கான நியாயப்பாட்டையும் நான் விளக்கிக் கூறினேன்.

மிகவும் சிக்கல் நிறைந்த தமிழரின் தேசியப் பிரச்சினையை இரு மட்டங்களில், இரு பரிமாணங்களில் அணுகலாம். ஒன்று, தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் அவசர, ஜீவாதார, மனிதாபிமானப்

பிரச்சினைகள். இரண்டாவது, இன நெருக்கடிக்கு மூலமான அடிப்படைப் பிரச்சினைகள். இந்த இரு பரிமாண அணுகுமுறையானது எமது மக்களின் யதார்த்த வாழ்நிலை மெய்மையுடன் ஒத்திசைவானதாக அமையப் பெற்றிருக்கிறது. இரு தசாப்தங்களுக்கு மேலாக, இடைவிடாது தொடர்ந்த கொடிய யுத்தத்தின் விளைவாக எமது மக்களின் அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகள் படிப்படியாகப் படுமோசமடைந்து ஒரு பாரிய மனிதாபிமான நெருக்கடியாக விஸ்வரூபம் பெற்றுள்ளன. ஆகவேதான், இனப் பிரச்சினையின் மிகச் சிக்கலான அடிப்படைகள் பற்றி ஆழமாக அலசிப் பார்ப்பதற்கு முன்பாக, எமது மக்களின் உடனடியான, அவசர வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்பட வேண்டுமென நாம் எப்பொழுதுமே வலியுறுத்தி வந்திருக்கிறோம். இதன் அடிப்படையிலேயே சமாதானப் பேச்சுக்கள் கட்டம் கட்டமாக அமைய வேண்டும் என்றும் ஆரம்ப கட்டப் பேச்சுக்களில் எமது மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முதன்மை கொடுக்க வேண்டும் என்றும் எமது இயக்கம் வாதாடி வந்துள்ளது. இப்படியான அணுகுமுறையையே தற்போதைய பேச்சுக்களிலும் கடைப்பிடிப்பது அவசியமென நான் வலியுறுத்தினேன். சிறீலங்கா பிரதிநிதிகளும், எதுவித ஆட்சேபமும் இன்றி, எமது நிலைப்பாட்டை ஏற்றுக் கொண்டனர். இதன்படி, எமது மக்களின் மனிதாபிமானப் பிரச்சினைகளுக்கு முதன்மை கொடுத்து, பேச்சுக்களைக் கட்டம் கட்டமாக முன்னெடுப்பதென இரு தரப்பிலும் இணக்கம் காணப்பட்டது.

சமாதானப் பேச்சுக்களைக் கட்டம் கட்டமாக முன் நகர்த்திச் செல்வதாயின் போர் நிறுத்த உடன்பாட்டை நிலைப்படுத்திப் பலப்படுத்துவதோடு, தமிழ் மக்களின் அவசர வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதற்கு ஒரு பொருத்தமான நிர்வாகக் கட்டமைப்பு அத்தியாவசியமானது. போர்நிறுத்த உடன்பாடு என்ற அத்திவாரத்தின் மீதே சமாதான முயற்சிகள் முழுமையாகத் தங்கி நின்றன. அத்துடன் இந்தப் போர் ஓய்வு உடன்பாடானது இரு தரப்பினரதும் படை பலச் சம வலுவில் கட்டப்பட்டிருந்தது. போர் நிறுத்த உடன்பாட்டைச் சீரான முறையில் செயற்படுத்துவதிலேயே போர் நெருக்கடியைத் தணித்து, மக்களது வாழ்வில் இயல்புநிலையைத் தோற்றுவிப்பது சாத்தியமாகும். சமாதான முயற்சிகளை மேம்படுத்துவதற்கு, போர் நிறுத்த உடன்பாட்டைப் பலப்படுத்துவது அவசியமென

வாதாடிய நான், அரச படைகளின் பகைமையான கடும்போக்கு போர் நிறுத்த உடன்பாட்டிற்குப் பெரும் அச்சுறுத்தலாக எழுந்துள்ளதெனச் சுட்டிக் காட்டினேன். போர் நிறுத்த உடன்பாட்டின் முக்கிய விதிகளையும், கடப்பாடுகளையும் நிறைவு செய்ய மறுத்துவரும் சிறீலங்கா இராணுவம், தொடர்ந்தும் வீடுகள், பாடசாலைகள், கல்லூரிகள், கோவில்கள், விடுதிகள் என்ற ரீதியில் எமது நகரங்கள், பட்டினங்களிலுள்ள பொதுக் கட்டிடங்களை ஆக்கிரமித்து நிற்கின்றன. இதனால் தமது சொந்த வீடுகள், கிராமங்களிலிருந்து இடம்பெயர்ந்துள்ள மக்கள், துன்பம் நிறைந்த அவல வாழ்க்கையை எதிர்கொண்டு சீரழிந்து நிற்கின்றனர். உயர்பாதுகாப்பு வலயம் என்ற சாக்கில், தமிழ்த் தாயகத்தின் வளம் மிகு நிலங்களையும், பழம் பெரும் கிராமங்களையும் ஆக்கிரமித்து நிற்கும் இராணுவம், எமது மக்களின் வாழும் சுதந்திரத்தையும் வீடு திரும்பும் உரிமையையும் மறுத்து வருகிறது எனக் குற்றம் சாட்டினேன். அரச ஆயுதப் படைகள் ஆக்கிரமித்து நிற்கும் பொது இடங்களைக் குறித்துக் காட்டும் வரைபடங்கள் உட்பட வேறு பல தகவல்கள் அடங்கிய ஆவணங்களையும் அரசாங்கப் பிரதிநிதிகளிடம் நாம் ஒப்படைத்தோம். உயர் பாதுகாப்பு வலயங்கள் பற்றியும் இடம்பெயர்ந்த மக்களின் பிரச்சினைகள் பற்றியும் ஆராய்ந்து நடவடிக்கை எடுக்க ஒரு கூட்டுக் குழுவை நியமிக்கலாமென அமைச்சர் மிலிந்த மொறகொட யோசனை தெரிவித்தார்.

கூட்டுக் குழுக்களை அமைத்து ஆராய்ச்சியில் ஈடுபடுவதை விடுத்து, ஒரு இடைக்கால நிர்வாக சபையை நிறுவும் அவசியத்தை நான் வலியுறுத்தினேன். மீள் குடியேற்றம், புனர்வாழ்வு, புனர்நிர்மாணம் போன்ற எமது மக்களின் முக்கிய பிரச்சினைகளைக் கையாள்வதற்கு ஒரு நிறுவனக் கட்டமைப்பு அவசியம். விடுதலைப் புலிகள் அமைப்புக்குப் பிரதான பங்கு வழங்கி, பொருத்தமான அதிகாரங்களுடன் வடகிழக்கில் ஒரு இடைக்கால நிர்வாக சபை அமைவதன் அவசியத்தை எடுத்து விளக்கிய நான், எமது அமைப்புக்கு முக்கியத்துவம் கொடுத்து, இத்தகைய ஒரு நிர்வாகக் கட்டமைப்பை நிறுவுவதற்கு இந்திய அரசு முன்வந்தது என்ற வரலாற்றையும் நான் சுட்டிக் காட்டினேன். வடகிழக்கில் ஒரு இடைக்கால நிர்வாக சபை நிறுவப்படுமென ஐக்கிய தேசியக் கட்சியின் தேர்தல் விஞ்ஞாபனத்தில் குறிப்பிடப்பட்டிருந்ததை நினைவுபடுத்தியதுடன்,

இந்த யோசனைக்கு சிங்கள மக்கள் ஆணை வழங்கியுள்ளதால் இப்படியான ஒரு நிறுவனத்தை வெகுவிரைவில் நிறுவிவிட திரு. ரணில் விக்கிரமசிங்காவுக்கு ஒரு கடப்பாடு உண்டு என்பதை வலியுறுத்தினேன்.

புனர்வாழ்வு, அபிவிருத்தி போன்ற விடயங்களைக் கையாளுவதற்குப் போதுமான அதிகாரங்களைக் கொண்ட ஒரு பரந்த நிர்வாகக் கட்டமைப்பை நிறுவுவதில் எழக் கூடிய அரசியலமைப்புச் சிக்கல்கள் பற்றி ஒரு நீண்ட விளக்கம் அளித்தார் பேராசிரியர் பீரிஸ். சிறீலங்காவின் அரசியல் யாப்பு ஒரு இறுக்கமான, நெகிழ்வற்ற சட்டவமைப்பாக இருப்பதால், பரந்துபட்ட அதிகாரத்துடன் ஒரு நிர்வாகக் கட்டமைப்பை உருவாக்க அரசியலமைப்பு இடமளிக்காது என்பதுதான் பேராசிரியர் பீரிஸின் மையமான வாதமாக அமைந்தது. அப்படித்தான் ஒரு இடைக்கால நிர்வாக சபையை நிறுவினாலும் அது இலங்கையின் அரசியலமைப்பை மீறுவதாக அமையுமென்றும், அதற்கு ஜனாதிபதியும் பிரதம நீதியரசரும் அனுமதிக்க மாட்டார்கள் என்றும் பீரிஸ் விளக்கினார். எனவே, இப்படியான ஒரு பயனற்ற முயற்சியில் நாம் இறங்கினால், ஜனாதிபதியை இவ் விவகாரத்தில் தலையிடச் செய்து பேச்சுக்களைக் குழப்ப அவருக்கு நாம் ஒரு சந்தர்ப்பத்தை உருவாக்கிக் கொடுப்பதாக அமையும் என்றார் பேராசிரியர். அரசியலமைப்புச் சிக்கல்களுக்குப் பரிகாரம் கண்டு, ஒரு பொருத்தமான நிர்வாகக் கட்டமைப்பை உருவாக்கும் வழிவகைகளை ஆராய்ந்து பார்ப்பதற்குப் போதுமான அவகாசம் தரும்படி பேராசிரியர் பீரிஸ் என்னைக் கேட்டுக் கொண்டார். அத்துடன் ஒரு புதிய யோசனையையும் தெரிவித்தார். ஒரு இடைக்கால நிர்வாக சபைக்கு மூலக் கரு போன்று, ஒரு தற்காலிக அமைப்பை உருவாக்கி, படிப்படியாக அதற்கு நிர்வாக அதிகாரங்களை வழங்கி, காலப் போக்கில் அதனை ஒரு முறையான நிர்வாகக் கட்டமைப்பாக முழுமைபெறச் செய்யலாம் என்றார் பேராசிரியர்.

இடைக்கால நிர்வாக சபை நிறுவப்படாது போனால், அல்லது நிறுவுவதில் தாமதம் ஏற்பட்டால் விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன் மிகவும் ஏமாற்றமடைவார் என்றும் சமாதானப் பேச்சுக்களில் அவருக்குள்ள நம்பிக்கை இடிந்து போகும் என்றும் நான் அரச பிரதிநிதிகளுக்கு எடுத்துக் கூறினேன். இடைக்கால நிர்வாக சபையை நிறுவுவதைத்

தாமதப்படுத்துவது அரசாங்கத்தின் நோக்கமல்ல எனக் கூறிய பேராசிரியர் பீரிஸ், தற்காலிகமாக ஒரு மாற்று நிர்வாக ஒழுங்கை உருவாக்கி, புனர்வாழ்வு, புனர்நிர்மாண வேலைகளை துரிதப்படுத்துவதே அரசாங்கத்தின் குறிக்கோள் என்றார். நீண்ட நேரமாகத் தொடர்ந்த வாதப் பிரதிவாதங்களின் பின்னர், மனிதாபிமான, புனரமைப்புத் திட்டங்களைச் செயற்படுத்துவதற்கு ஒரு கூட்டுச் செயலணியை நிறுவ இரு தரப்பிலும் இணக்கம் காணப்பட்டது. விடுதலைப் புலிகளும் சிறீலங்கா அரசும் சம பங்காளிகளாக இணைந்து செயலாற்றுவதென்றும், வடகிழக்கில் அவசர மனிதாபிமானப் பணிகளை இனம் கண்டு, நிதியொதுக்கி, மேற்பார்வை செய்யும் வேலைகளை இச் செயலணி மேற்கொள்ளும் எனவும் தீர்மானிக்கப்பட்டது.

விடுதலைப் புலிகளின் பேச்சுக் குழுத் தலைவர் என்ற ரீதியில், வடகிழக்கில் ஒரு இடைக்கால நிர்வாக சபையை நிறுவுவதற்கு ரணிலின் அரசாங்கம் தயக்கம் காட்டியமை எனக்கு ஆழமான ஏமாற்றத்தைக் கொடுத்தது. இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பு ஒன்றை நிறுவுவதிலுள்ள அரசியலமைப்புச் சிக்கல்களை மிகத் துல்லியமாகவும் தர்க்கீகமாகவும் விளக்கியிருந்தார் பீரிஸ். இலங்கை அரசியல் யாப்பில் நிபுணத்துவம் பெற்ற அறிவுஜீவி என்பதால் அவரது வாதங்களில் நியாயம் இருக்கத்தான் செய்தது. என்றாலும் அவர் கொடுத்த விளக்கங்களிலிருந்து ஒரு உண்மை எனக்குப் புலனாகியது. அதாவது ரணில் விக்கிரமசிங்காவின் அரசிடம் எவ்வித உருப்படியான நிறைவேற்று அதிகாரங்களும் இருக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது. தமிழரின் இனப் பிரச்சினைக்கு ஒரு நிரந்தரத் தீர்வைக் காணும் அதிகாரம் ரணிலின் அரசாங்கத்திடம் இருக்கவில்லை என்பது எமக்கு ஏற்கனவே தெரிந்த விடயம். அதனால்தான் நாம் இடைக்கால நிர்வாகக் கோரிக்கையை முன்வைத்தோம். ஆனால் இப்பொழுது பேராசிரியரின் வியாக்கியானங்களைப் பரிசீலித்துப் பார்த்த பொழுது, ஒரு இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பை நிறுவும் அதிகாரம் கூட அரசுக்கு இருக்கவில்லை என்பது புலனாகியது. மிகவும் வரையறுக்கப்பட்ட அதிகாரங்களுடன் பரிந்துரைக்கப்பட்ட 'கூட்டுச் செயலணிக்கு' நாம் இணங்கியபோதும் அதன் செயற்திறனில் எனக்கு நம்பிக்கை இருக்கவில்லை.

முதற்கட்டச் சுற்றுப் பேச்சின் முதல் நாள் கருத்தாடலின் பெறுபேறாக ரணிலின் அரசாங்கம் எதிர்கொண்டு நிற்கும்

பிரச்சினைகள் எமக்குப் புரிந்தது. தமிழரின் பிரச்சினைகளைக் கையாள்வதில், இரு துருவங்களிலிருந்தும் அரசாங்கம் முட்டுக் கட்டைகளைச் சந்தித்தது. ஒன்று, சிறீலங்காவின் அரசியல் யாப்பு. மற்றது, ஜனாதிபதி ஆட்சிமுறை. மிகவும் இறுக்கமான, நெகிழ்வற்ற சட்ட விதிகள் ஆழவேர் பதித்து நிற்கும் சிறீலங்காவின் அரசியலமைப்பில், கணிசமான அதிகாரப் பரவலாக்கத்திற்கோ, அதிகாரப் பகிர்வுக்கோ இடைவெளி இருக்கவில்லை. இந்த அரசியல் யாப்பின் அதிகார எல்லைக்குள் நின்று ஆட்சி செலுத்தும் எந்த ஒரு அரசாங்கமும் தமிழரின் பிரச்சினைக்கு நிரந்தரமான, அல்லது இடைக்காலத் தீர்வு எதனையும், உருப்படியான அதிகாரப் பகிர்வுடன், காண முயல்வது சாத்தியமற்றது. அடுத்தது, ஜனாதிபதியின் ஆட்சிமுறை. சகல நிர்வாக ஆட்சியதிகாரங்களையும் தன்மீது குவித்து வைத்திருக்கும் ஜனாதிபதி சந்திரிகா, தனிப்பட்ட முறையிலும் வரலாற்று ரீதியாகவும் ரணில் விக்கிரமசிங்காவுடன் ஆழமான பகையுணர்வு கொண்டிருந்தார். போர் நிறுத்த உடன்பாட்டையும், சமாதானப் பேச்சுக்களையும் வன்மையாக எதிர்த்த ஜனாதிபதி, ரணிலின் ஆட்சியைக் கவிழ்ப்பதற்கு நல்லதொரு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தார். இப்படியாக, இரு துருவ இடர்பாட்டுக்குள் சிக்குப்பட்டு அதிகாரமற்ற ஆட்சியை நடத்தி வந்த ரணில் விக்கிரமசிங்கா எமது மக்களின் பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பார் என்பதில் எமக்கு நம்பிக்கை இருக்கவில்லை. இடைக்கால நிர்வாகக் கட்டமைப்புக் கோரிக்கையில் நாம் இறுக்கமாக நின்றால், குறைந்த ஆயுளுடன் தமது அரசாங்கம் கவிழ்க்கப்படுமென அன்றைய நாள் பேச்சின்போது பரிதாபமாக இறைஞ்சினார் பேராசிரியர். பேச்சுக்கள் மூலம் உருப்படியான பலனெதுவும் கிட்டப் போவதில்லை என்பது எனக்கும் பிரபாகரனுக்கும் ஆரம்பத்திலிருந்தே தெரியும். அதிகாரமற்ற ஆட்சியை நடத்தும் விக்கிரமசிங்காவினால் எமது மக்களின் பிரச்சினைகள் தீரப் போவதில்லை எனச் சில மாதங்களுக்கு முன்பு கிளிநொச்சியில் நடைபெற்ற சர்வதேச ஊடகவியலாளர் மாநாட்டில் பிரபாகரன் பகிரங்கமாகவே இந்தக் கருத்தைத் தெரிவித்தார் என்பது குறிப்பிடத்தக்கது. இந்தச் சமரசப் பேச்சுக்களின் ஆக்கபூர்வமான அம்சம் என்னவென்றால், தமிழ் மக்களின் பிரச்சினைகளைச் சர்வதேச அரங்கில் கொண்டு செல்வதற்கும் இதுவொரு நல்ல வாய்ப்பாக அமைந்ததுதான்.

மூன்று நாட்களாகத் தொடர்ந்த பேச்சுக்களில் பல தரப்பட்ட பிரச்சினைகள் விவாதிக்கப்பட்டன. உயர் பாதுகாப்பு வலயங்கள், கண்ணிவெடி அகற்றுதல், இடம்பெயர்ந்தோரைக் குடியமர்த்தல், காணாமல் போனவர்களின் கதி, மீன்பிடித் தடைகள், அரசியல் கைதிகள், பயங்கரவாத தடைச் சட்டம், புனர்வாழ்வு, புனரமைப்பு, அபிவிருத்தி, போர் நிறுத்த மீறல்கள், முஸ்லிம் மக்களது பிரச்சினைகள் - இப்படியாகப் பல பிரச்சினைகள் பற்றிக் கலந்துரையாடல்கள் நிகழ்ந்தன. திரு. ரவூவ் ஹக்கீம் அரச பிரதிநிதியாகக் கலந்து கொண்டபோதும், சிறீலங்கா முஸ்லிம் காங்கிரஸ் தலைவர் என்ற ரீதியில் முஸ்லிம் மக்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் விவாதத்திற்கு வந்த சமயங்களில் அவர் முஸ்லிம்களின் நலன்களுக்காகக் குரல் கொடுக்கத் தவறவில்லை.

தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் பல முக்கிய பிரச்சினைகள் எழுப்பப்பட்ட பொழுதெல்லாம், அவற்றிற்குக் கூட்டுக் குழுக்கள் அமைக்க வேண்டுமென அமைச்சர் மிலிந்த மொறகொட ஆலோசனை தெரிவித்தார். சில கூட்டுக் குழுக்கள் நிறுவப்படுவதற்கு நாம் இணங்கியபோதும், இக் குழுக்களால் உருப்படியான பயனெதுவும் ஏற்படப் போவதில்லை என்பதை அரச பிரதிநிதிகளிடம் பகிரங்கமாக எடுத்துச் சொன்னோம். உப-குழுக்கள், கூட்டுக் குழுக்களை நிறுவுவது என்பது பிரச்சினைகளைத் தீர்க்காது இழுத்தடிப்பதற்குச் சிறீலங்கா ஆட்சியாளர்கள் காலம் காலமாகக் கையாண்டு வரும் ஒரு தந்திரோபாயம் என்றும் இதனால் ஊழல்கள் புரையோடிய பல நிர்வாக அமைப்புகள் உருவாகி, செயலிழந்து கிடக்கின்றன என்பதை மிலிந்த மொறகொடவுக்கு உறைக்கும்படி சுட்டிக் காட்டினேன்

முதலாவது கட்டச் சுற்றுப் பேச்சில் பிரமாதமான சாதனைகள் எதுவும் ஈட்டப்படவில்லை என்ற போதும், பகையுறவு கொண்ட இரு தரப்பினரும் கலந்துரையாடி, பேசிப் பழகி, புரிந்துணர்வையும் நல்லுறவையும் வளர்த்துக் கொள்ள இது களம் அமைத்துக் கொடுத்தது எனலாம். கலந்துரையாடலின் போது கசப்பான வார்த்தைப் பிரயோகங்களோ, பகையுணர்வோ எழவில்லை. தமிழீழக் களத்தில் நிகழ்ந்த சில பாரதூரமான சம்பவங்களையும் சுமுகமாகப் பேசித் தீர்க்க முடிந்தது. இரு தரப்பினர் மத்தியிலும் நல்லுறவைப் பேணி, நல்லெண்ணத்தை வளர்ப்பதில் நோர்வே

அனுசரணையாளர்கள் ஆக்கபூர்வமான பங்கை வகித்தனர். பேச்சுக்களுக்குத் தலைமை வகித்த நோர்வே வெளிவிவகாரப் பிரதி அமைச்சர் ஹெல்கிசன், நடுநிலைப் பண்பு வழுவாது, இரு தரப்பினரையும் சமத்துவமாக அணுகி, கருத்தாடல்களைச் செவ்வனவே நகர்த்திச் சென்றார்.

முதற்கட்டப் பேச்சுக்கள் முடிவுற்றதை அடுத்து, அக்டோபர் நடுப் பகுதியில், திரு. பிரபாகரனையும் மற்றும் மூத்த தலைவர்கள், தளபதிகளைச் சந்தித்து, தாய்லாந்துப் பேச்சுக்கள் பற்றி விளக்கம் அளிப்பதற்காக நானும் எனது மனைவி அடேலும் வன்னிக்குச் சென்றோம். சற்றாகீப் கடற்படைத் தளத்தில் நிகழ்ந்த பேச்சுக்களின் விபரங்களை அறிவதற்கு திரு. பிரபாகரன் ஆவலாக இருந்தார்.

இடைக்கால நிர்வாக சபையை நிறுவுவதில் எழக் கூடிய அரசியல் யாப்புச் சிக்கல்கள் குறித்துப் பேராசிரியர் பீரிஸ் முன்வைத்த விவாதங்களையும் கருத்துக்களையும் விபரமாகப் பிரபாகரனிடம் விளக்கிக் கூறினேன். ஒரு புறத்தில், நெகிழ்த்த முடியாத, இறுக்கமான அரசியலமைப்பும், மறுபுறத்தில் பகைமையும் கடும்போக்குமுடைய ஜனாதிபதியுமாக இரு புற நெருக்குவாரத்தில் திணறும் ரணில் விக்கிரமசிங்காவின் அரசினால் உருப்படியான அதிகாரங்களுடன் இடைக்கால நிர்வாக சபையை நிறுவுவது முடியாத காரியம் என்பதைத் தலைவருக்குத் தெளிவுபடுத்தினேன். இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பின் கருமூலமாக, ஒரு தற்காலிக ஒழுங்காக, கூட்டுச் செயலணி என்ற பெயரில் அதிகாரமற்ற அமைப்பு ஒன்றை மட்டுமே அரசினால் முன்வைக்க முடிந்தது என்றும் தெரிவித்தேன். ரணிலின் அரசுக்கும் ஜனாதிபதிக்கும் மத்தியிலான பகை முரண்பாடு முற்றி வருவதாகவும், விடுதலைப் புலிகளுக்கு உருப்படியான நிர்வாக அதிகாரங்களை வழங்க ரணில் முன்வந்தால் அவரது பாராளுமன்ற ஆட்சியைக் கலைத்துவிட அம்மையார் கங்கணம் கட்டி நிற்பதாகவும் பேராசிரியர் பீரிஸ் அச்சம் தெரிவித்ததாகவும் அவரிடம் கூறினேன். ரணில் எதிர்கொண்டு நிற்கும் அரசியல் நெருக்கடிபற்றியும், சந்திரிகாவுடனான அதிகாரப் போட்டி பற்றியும் பிரபாகரன் மிகவும் தெளிவாக இருந்தார்.

கூட்டுச் செயலணி பற்றி அவர் பெரிதாக அலட்டிக் கொள்ளவில்லை. கூட்டணிகள், குழுக்கள் மூலம் உருப்படியான பயன் எதுவும் கிட்டப் போவதில்லை என்பது அவருக்கு நன்கு

தெரியும். ஒரு இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பு உடனடியாக நிறுவப்படாது போனால் தமிழ் மக்களின் அவசர மனிதாபிமானப் பிரச்சினைகள் தீர்வு காணாது இழுபடப் போகின்றன எனக் கவலைப்பட்டார் பிரபாகரன். தென்னிலங்கை அரசியல் அரங்கில் முரண்பாடும் மோதலும் தலைதூக்கி நிற்பதால் சிங்களத் தேசமே பிளவடைந்து கிடக்கிறது. இதனால் நிலையான, பலமான அரசு உருவாக்கம் பெறவில்லை. இந்த யதார்த்தப் புற நிலை காரணமாக, போரினால் பாதிக்கப்பட்ட எமது மக்களுக்குச் சமாதானத்தின் பலாபலன் கிட்டமுடியாது இருப்பது குறித்தும் பிரபாகரன் வேதனையடைந்தார். இப்படியான சூழலில், பேச்சுக்களைத் தொடர்வதில் அர்த்தமில்லை என்பது எமக்குத் தெரியாததல்ல. பேச்சுக்களின் ஆக்கபூர்வமான அம்சம் என்னவென்றால், எமது மக்களின் பிரச்சினை சர்வதேச மயப்பட்டு வருவதுதான் என்பதைப் பிரபாகரனுக்கு சுட்டிக் காட்டினேன். சமாதான வழிமுறையில் எமக்குள்ள நேர்மையான உறுதிப்பாட்டையும், அதே சமயம் தமிழ் மக்கள் எதிர்கொண்டு நிற்கும் பூதாகர மனிதாபிமானப் பிரச்சினைகளை உதாசீனம் செய்து சிங்கள ஆளும் வர்க்கம் அதிகாரப் போட்டியில் இழுபறிபடுவதையும் உலக நாடுகள் கண்டறிந்து கொள்வதற்குச் சமாதான அரங்கை நாம் பயன்படுத்த வேண்டும் என்பதையும் அவருக்கு விளக்கினேன்.

விடுதலைப் புலிகளின் தலைமைப்பீடத்துடன் வன்னியில் நாம் மந்திராலோசனை நடத்தி வந்த வேளையில், அக்டோபர் 20ஆம் நாளன்று, விடார் ஹெல்கிசனும் எரிக் சுல்கைமும் இலங்கைக்கு விஜயம் செய்தனர். அக்டோபர் 22ஆம் நாள் காலை தலைவர் பிரபாகரனைச் சந்திப்பதற்காக அவர்கள் இருவரும் கிளிநொச்சிக்கு வருகை தந்தனர். அவர்களுடன் கொழும்புத் தூதுவர் திரு. ஜோன் வெஸ்ட்போர்க், திரு.தோமஸ் ஆகியோரும் வந்தனர். இந்தச் சந்திப்பில் பிரபாகரனுக்கு உதவியாக நானும் அரசியல்துறைப் பொறுப்பாளர் தமிழ்ச்செல்வனும், எனது மனைவி அடேலும் கலந்து கொண்டனர்.

தமிழ் மக்கள் எதிர்கொண்டு நிற்கும் மிகத் துயரமான அவல நிலைபற்றி நோர்வே சமாதானத் தூதுவர்களுக்குப் பிரபாகரன் எடுத்து விளக்கினார். போர் நிறுத்தம் போரை முடிவுக்குக் கொண்டு வந்ததே தவிர, உண்மையான சமாதானத்தையோ, அமைதியான வாழ்வையோ, வழமையான

இயல்பு நிலையையோ, அன்றித் தேவையான நிவாரணத்தையோ கொண்டு வரத் தவறிவிட்டது என்றார் பிரபாகரன். போர் நிறுத்த உடன்பாட்டின் கடப்பாடுகளை நிறைவு செய்ய அரச படைகள் தொடர்ந்து மறுத்து வருகின்றன என்பதைச் சுட்டிக் காட்டிய அவர், இராணுவ ஆக்கிரமிப்பின் நெருக்குவாரத்தால் எமது மக்கள் திணறித் துன்பப்படுவதாகக் கூறினார். எல்லாவற்றிற்கும் மேலாக, இடம்பெயர்ந்த மக்கள் தமது சொந்த இருப்பிடங்களுக்குச் செல்ல முடியாது அகதி முகாம்களில் தாங்கொணாத் துன்பங்களை அனுபவித்து வருவதாகக் கூறிய பிரபாகரன், பல்லாயிரக்கணக்கான இம் மக்களின் பாரிய மனிதாபிமானப் பிரச்சினைகளுக்கு உடனடித் தீர்வு காண்பதில் நோர்வே அரசுக்கும் மற்றும் உலக நாடுகளுக்கும் ஒரு தார்மீகக் கடமையுண்டு என்பதைச் சுட்டிக் காட்டினார்.

பிரபாகரனது கருத்துக்களுக்கு பதிலளித்த திரு. ஹெல்கிசன், போரினால் பாதிக்கப்பட்ட தமிழ் மக்களின் புனர்வாழ்விற்கும் புனர்நிர்மாணத்திற்கும் சர்வதேசச் சமூகத்திடமிருந்து நிதி திரட்டுவதற்குக் கடும் முயற்சிகள் எடுக்கப்பட வேண்டும் என்றார். இது சம்பந்தமாக நவம்பர் 25ஆம் நாள் ஒஸ்லோ நகரில் உதவி வழங்கும் நாடுகளின் மாநாடு ஒன்றை நோர்வே அரசாங்கம் கூட்டவிருக்கிறது என்ற தகவலையும் தெரிவித்தார். மனிதாபிமானப் பணிகளுக்கும் அபிவிருத்தித் திட்டங்களுக்கும் நிதியைப் பெற்று, வேலைகளைத் துரிதப்படுத்த 'கூட்டுச் செயலணி' போன்ற கட்டமைப்பு அவசியமானது என்பதையும் திரு. ஹெல்கிசன் வலியுறுத்தினார்.

நோர்வே உதவி அமைச்சருக்குப் பதிலளித்த தலைவர் பிரபாகரன் ரணிலுக்கும் சந்திரிகாவுக்கும் மத்தியிலான அதிகாரப் போட்டியும் முரண்பாடும் நாளுக்கு நாள் கூர்மையடைந்து வருவதாகவும் இதனால் சமாதான முயற்சிக்குப் பங்கம் ஏற்படலாமென்றும் கூறினார். கொழும்பு அரசியல் நெருக்கடியை அடக்கி வாசித்த ஹெல்கிசன், ரணிலுக்குப் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை இருப்பதால் அவரது அரசை எவராலும் அசைக்க முடியாது என்றார். பிரபாகரனின் நக்கலான புன்சிரிப்பில் நர்த்தனமாடிய அர்த்தங்களை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது.

## இரண்டாவது கட்டச் சுற்றுப் பேச்சுக்கள்

தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்புக்கும் சிறீலங்கா அரசாங்கத்திற்கும் மத்தியிலான இரண்டாம் கட்டச் சுற்றுப் பேச்சுக்கள், 2002 அக்டோபர் 31இலிருந்து நவம்பர் 3ஆம் திகதி வரை, பாங்கொக் நகரிலிருந்து 30 கிலோமீட்டர் தொலைவிலுள்ள பிரபல உல்லாசப் பயணிகள் விடுதியான 'றோஸ் கார்டனில்' இடம்பெற்றது. விடுதலைப் புலிகளின் சார்பில், பிரதான பேச்சுக் குழுவின் புதிய பிரதிநிதிகளாக அரசியல்துறைப் பொறுப்பாளர் திரு. தமிழ்ச்செல்வனும், முன்னாள் மட்டு-அம்பாறை விசேட தளபதியான திரு. முரளீதரனும் (கேணல் கருணா) இணைந்து கொண்டனர். திரு. உருத்திரகுமாரனும், கலாநிதி மகேஸ்வரனும் நிபுணத்துவ ஆலோசகர்களாகக் கலந்து கொண்டனர். அரசு தரப்புப் பிரதிநிதிகள் குழுவில் மாற்றம் நிகழவில்லை. சிறீலங்காவின் பாதுகாப்புச் செயலர் திரு. ஒஸ்ரின் பெர்னான்டோ, சிறீலங்கா இராணுவத்தைச் சேர்ந்த மேஜர் ஜெனரல் சாந்தா கொட்டேகொட, சிறீலங்கா முஸ்லிம் காங்கிரஸைச் சேர்ந்த திரு. அஸீஸ் ஆகியோர் அரசு தரப்பு நிபுணத்துவ ஆலோசகர்களாகக் கலந்து கொண்டனர்.

இரண்டாம் கட்டப் பேச்சுக்களை ஆரம்பித்து வைத்துப் பேசிய பேராசிரியர் பீரிஸ், பேச்சுக்களின் முன்னேற்றம் குறித்துச் சர்வதேச சமூகம் திருப்தியடைந்து இருப்பதாகவும், சமாதான முயற்சிக்கு உலக நாடுகளின் முழு ஆதரவும் அணி திரண்டு வருவதாகவும் தெரிவித்தார். சமாதான முன்னெடுப்புகளுக்கு உலகத்தின் நல்லாதரவு இருப்பதால், சமாதான வழிமுறையை மேலும் பலப்படுத்துவது அவசியமெனவும் திரு. பீரிஸ் வேண்டிக் கொண்டார். கிழக்கு மாகாணத்தில், குறிப்பாக வாழைச்சேனை மூதூர் பகுதிகளில் சில வன்முறைச் சம்பவங்கள் இடம் பெற்றதாகவும் அவற்றின் விளைவாக தமிழ் - முஸ்லிம் கலவரங்கள் வெடித்துள்ளதாகவும் நிலைமையைக் கட்டுப்படுத்த அவசர நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

கிழக்கு மாகாணத்தில் முஸ்லிம் மக்களின் அவல நிலை குறித்துக் கவலை தெரிவித்த திரு. ஹக்கீம், வாழைச்சேனையில் நிகழ்ந்த வன்முறைச் சம்பவம் இனக் கலவரமாக மாறியதற்கு விடுதலைப் புலிகள் மீது பழி சுமத்தினார். கிழக்கு மாகாணத்தில் விடுதலைப் புலிகளுக்கு இஸ்லாமிய சமூகத்தவருக்கும்

மத்தியில் நல்லுறவையும் ஒத்துழைப்பையும் வேண்டிய அவர், காணித் தகராறுகள் போன்ற முக்கிய பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கு நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என வற்புறுத்தினார்.

விடுதலைப் புலிகள் சார்பில் கிழக்கு மாகாணப் பிரச்சினைகள் குறித்து கருத்துத் தெரிவித்த நான், தமிழ், முஸ்லிம் மக்கள் மத்தியில் நல்லுறவைப் பேணவும் அப் பகுதியில் பாதுகாப்பு நிலவரத்தை சீரடையச் செய்யவும் எமது இயக்கத்தின் தலைமை ஏற்கனவே ஆக்க பூர்வமான நடவடிக்கைகளை எடுத்துள்ளதாகக் தெரிவித்தேன். இவ்வாண்டு ஏப்ரல் மாதத்தில், கிளிநொச்சியில் நிகழ்ந்த முக்கிய சந்திப்பின்போது விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரனும், சிறீலங்காவின் முஸ்லிம் காங்கிரஸ் தலைவர் திரு. ஹக்கீமும் ஒரு புரிந்துணர்வு உடன்படிக்கையில் கைச்சாத்திட்டதை எமது இயக்கத்தின் நல்லெண்ண முயற்சிக்கு உதாரணமாகச் சுட்டிக் காட்டினேன். முஸ்லிம் மக்களோடு அன்பாகவும் பண்பாகவும் சகோதரத்துவ உணர்வுடனும் உறவாட வேண்டுமென புலிகளின் தலைமை எமது போராளிகளுக்கு கண்டிப்பான அறிவுறுத்தல் விடுத்துள்ளது என்பதையும் தெரியப்படுத்தினேன். சிறீலங்கா இராணுவப் புலனாய்வுத் துறையுடன் இணைந்து செயற்படும் தமிழ் ஆயுதக் குழுக்கள், புலிகள் என்ற பெயரில் முஸ்லிம்களுக்கு எதிராக வன்முறைச் சம்பவங்களில் ஈடுபட்டு, இனக் கலவரத்தை தூண்டி வருவதாகவும் நான் அரச பிரதிநிதிகளுக்குச் சுட்டிக் காட்டினேன். கிழக்கில் அமைதியையும் இயல்பு நிலையையும் தோற்றுவிக்கச் சிறீலங்கா கண்காணிப்பு குழுவினர் ஆக்கமான பங்கு வகிக்க வேண்டுமெனவும் நான் யோசனை தெரிவித்தேன். அன்றைய முழு நாள் விவாதங்களையடுத்து கிழக்கு மாகாணப் பாதுகாப்பு நிலவரம் சம்பந்தமாக இரு தரப்பினரின் இணக்கப்பாட்டுடன் கீழ்க் கண்ட தீர்மானங்கள் எடுக்கப்பட்டன.

- சிறீலங்கா கண்காணிப்புக் குழுவின் உள்ளூர் கமிட்டிகளை மீளமைத்து விரிவாக்குதல்.

- மட்டக்களப்பு, அம்பாறை மாவட்டங்களில் மேலதிக செயலகங்களை நிறுவுமாறு சிறீலங்காக் கண்காணிப்பு குழுவிடம் கோருதல்.

- பாதுகாப்பு நிலவரத்தைச் சீர்செய்யும் நோக்குடன்

விடுதலைப் புலிகளின் களத் தளபதிகளுக்கும் அரச படைத் தளபதிகளுக்கும் மத்தியில் நேரடித் தொடர்புகளை ஏற்படுத்தல்.

- விடுதலைப் புலிகளின் களத் தளபதிகளுக்கும் முஸ்லிம் அரசியல் தலைவர்களுக்கும் மத்தியில் அடிக்கடி கலந்துரையாடல்களை ஒழுங்கு செய்தல்.

- உள்ளூர் தகராறுகளைத் தீர்த்து, இன ஒற்றுமையை மேம்பாடு செய்யும் நோக்குடன் சமாதானக் குழுக்களை நியமித்தல்.

அடுத்த இரு நாட்களாக (நவம்பர் முதலாம் இரண்டாம் திகதிகளில்) நடைபெற்ற பேச்சுக்களின் போது இரு தரப்புப் பேச்சுக் குழுக்களின் ஆணையின் கீழ் சில முக்கிய விவகாரங்கள் சம்பந்தமாக உப-குழுக்களை நியமிப்பதென முடிவு எடுக்கப்பட்டது. இந்தக் குழுக்கள் தனித்து, சுதந்திரமாக இயங்கும். எனினும் அவற்றின் செயற்பாட்டு முன்னேற்ற அறிக்கைகள் சுற்றுப் பேச்சுக்களின் போது சமர்ப்பிக்கப் படவேண்டும். நீண்ட நேரமாக நீடித்த விவாதங்களின் பின்பு, மூன்று முக்கிய விவகாரங்கள் தொடர்பாக மூன்று உப-குழுக்களை நிறுவுவதெனத் தீர்மானிக்கப்பட்டது.

அவை வருமாறு:-

1. உடனடி மனிதாபிமான, புனர்வாழ்வுத் தேவைகளுக்கான உப-குழு

2. போர் நெருக்கடியைத் தணித்து, இயல்பு நிலையை உருவாக்குவதற்கான உப-குழு

3. அரசியல் விவகார உப-குழு.

பொருளாதார சீர்திருத்த அமைச்சர் மிலிந்த மொறகொடவின் யோசனைக்கு அமையவே இந்த உப-குழுக்கள் பேச்சுக் குழுக்களின் மேற்பார்வையின் கீழ் நிறுவப்பட்டன.

அரசியலமைப்பின் அதிகார வியூகத்திற்குள் சிக்காமல் செயற்படுவதற்கே இந்த உப-குழு யோசனையைத் தான் முன்வைத்ததாக திரு. மொறகொட வாதித்தார்.

'சிரான்' எனப்படும், உடனடி மனிதாபிமான, புனர்வாழ்வுத் தேவைகளுக்கான (Sub-Committee for Immediate Humanitarian

and Rehabilitation Needs –SIHRN) உப-குழுவானது, முதற் கட்டச் சுற்றுப் பேச்சில் பரிந்துரைக்கப்பட்ட கூட்டுச் செயலணிக்குப் பதிலாக அமைக்கப்பட்டது. இந்த உப-குழுவின் செயற்பாடு வருமாறு:-

- போரினால் பாதிக்கப்பட்ட மக்களின் மனிதாபிமான, புனர்வாழ்வுத் தேவைகளை இனம் கண்டு, இத் தேவைகளை நிறைவு செய்யும் வகையில் செயற்திட்டங்களுக்கு முன்னுரிமை கொடுத்தல். இடம் பெயர்ந்த மக்களை மீள் குடியேற்றம் செய்தல், மனிதாபிமான அடிப்படையில் கண்ணிவெடிகளை அகற்றுதல் போன்ற விடயங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்தல்

- முன்னுரிமை வழங்கப்பட்ட திட்டங்களுக்கு நிதி ஒதுக்கீடு செய்வது பற்றித் தீர்மானித்தல்.

- முன்னுரிமை வழங்கப்பட்ட திட்டங்களைச் செயற்படுத்தப் பொருத்தமான நிறுவனங்களைத் தெரிவு செய்தல்.

வடகிழக்குப் புனர்நிர்மாண நிதி (North East Reconstruction Fund - NERF) என்ற நிதியம் மூலமாகப் பெறப்படும் நிதியிலிருந்தே இந்த உப-குழுவின் வேலைத் திட்டங்கள் செயற்படுத்தப்படும். சர்வதேசக் கடனுதவி வழங்கும் ஒரு நிறுவனம் இந்த நிதியின் வைப்பகமாக இயங்கும்.

'சிரான்' அமைப்பின் நிர்வாகத் தலைமையகத்தைக் கிளிநொச்சியிலுள்ள அரசாங்க அதிபர் காரியாலயத்தில் செயற்படுத்துவதென இரு தரப்பினரும் இணக்கம் கண்டனர். விடுதலைப் புலிகள் சார்பில் நால்வரும், அரசாங்கத்தின் சார்பில் நால்வருமாக எட்டுப் பிரதிநிதிகளைக் கொண்ட நிர்வாக சபை ஒன்றை நியமிக்கவும் முடிவாகியது. இரு தரப்பினரின் பேச்சுக் குழுவிலுள்ள பிரதிநிதி ஒருவர் நிர்வாக சபையில், அந்தந்த தரப்புக்குத் தலைமை வகிப்பார். கீழ்க் கண்டோரை 'சிரான்' நிர்வாக சபைக்கு நியமிப்பதெனத் தீர்மானிக்கப்பட்டது.

**விடுதலைப் புலிகளின் அங்கத்தவர்கள்**

திரு. தமிழ்ச்செல்வன்
அரசியல்துறைப் பொறுப்பாளர்

திரு. பூவண்ணன்
பொறுப்பாளர்
தமிழீழ நிர்வாக சேவை

திரு. வே. பாலகுமாரன்
புலிகளின் மூத்த உறுப்பினர்

திரு. ஜே. மகேஸ்வரன்
பொருளாதார அபிவிருத்தி நிபுணர்

**சிறீலங்கா அரசாங்க அங்கத்தவர்கள்**

திரு. பெர்னாட் குணத்திலகா
பணிப்பாளர் நாயகம்
சிறீலங்கா சமாதானச் செயலகம்

திரு. எம்.டி.எ. பீரிஸ்
பொருளாதார சீரமைப்பு அமைச்சின் ஆலோசகர்

திரு. எம்.ஐ.எம். ராபீக்
திட்ட அமைச்சின் மேலதிக செயலர்

ஒரு முஸ்லிம் பிரதிநிதி

போர் நெருக்கடியைத் தணித்து இயல்பு நிலையைத் தோற்றுவிப்பதற்கான உப-குழு (Sub-Committee on De-Escalation and Normalisation) ஒன்றும் நிறுவ இரு தரப்பினர் மத்தியில் இணக்கம் காணப்பட்டது. உயர் பாதுகாப்பு வலயம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள், இடம்பெயர்ந்த மக்களை மீள்குடியேற்றம் செய்தல், தனியார் சொத்துடமைகளை மீளப் பெறுதல், போன்ற விவகாரங்களை இந்த உப-குழு கையாளும். இரு தரப்பைச் சேர்ந்த தளபதிகளும் உயர் அதிகாரிகளும் இந்த உப குழுவில் அங்கம் வகிப்பர். இரு தரப்பினரது பேச்சுக் குழுவிலுள்ள உறுப்பினர் ஒருவர், இக் குழுவில் அவரவரது தரப்பில் அங்கத்துவம் பெறுவர்.

**இந்த உப-குழுவில் அங்கம் வகிக்க தெரிவு செய்யப்பட்ட புலிகளின் உறுப்பினர்கள் வருமாறு**

கேணல் தீபன்,
வட பிராந்தியக் கட்டளைத் தளபதி

கேணல் கருணா
முன்னாள் மட்டு-அம்பாறை விசேட தளபதி

கேணல் ஜெயம்
மன்னார் மாவட்ட விசேட தளபதி

திரு. இளம்பரிதி
யாழ். மாவட்ட அரசியல்துறைப் பொறுப்பாளர்

கேணல் பதுமன்
முன்னாள் திருகோணமலை விசேட தளபதி

திரு.திலக்
முன்னாள் திருகோணமலை அரசியல்துறைப் பொறுப்பாளர்

திரு. கௌசல்யன்
முன்னாள் மட்டு-அம்பாறை அரசியல்துறைப் பொறுப்பாளர்

**அரச பிரதிநிதிகள்**

திரு. ஒஸ்ரின் பெர்னான்டோ,
செயலர், பாதுகாப்பு அமைச்சு

மேஜர் ஜெனரல் கொட்டே கொட

ரியர் அட்மிரல் எஸ்.பி.வீரசேகரா

பிரிகேடியர் எஸ்.ஆர்.பாலசூரியா

நிமால் லூகே, காவல்துறை உயரதிகாரி

காப்டன் கொலிதாக குணதிலகே

திரு. திவின்தா காலுபானு

திரு. எம்.ஏ. மஜீத்

ஆரம்ப கட்டப் பேச்சுக்களின் போது தமிழர் தாயகத்தில் அமைதியையும் இயல்பு நிலையையும் நிலைநாட்டி, போரினால் பாதிக்கப்பட்ட மக்களின் வாழ்நிலையை மேம்பாடு செய்வதற்கு முதன்மை அளிப்பதென இரு தரப்பினரும் முடிவு செய்தனர். ஆயினும் அதேவேளை, சமாதானப் பேச்சுக்களில் தமிழரின் தேசியப் பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காணும் சிக்கலான அரசியல் விவகாரங்கள் குறித்தும் விவாதிக்க வேண்டும் என்பதையும் ஒத்துக் கொண்டனர். இதன் அடிப்படையில், சட்டம், அரசியலமைப்பு, நிர்வாகம் போன்ற துறைகளை ஆழமாக ஆய்வு செய்வதோடு, உலக இன நெருக்கடிகள், அவற்றைத் தீர்ப்பதற்கு

மேற்கொள்ளப்பட்ட சமாதான முயற்சிகள், அரச ஆட்சிமுறை வடிவங்கள் என்ற ரீதியில் பல விடயங்களை இரு தரப்பினரும் செம்மையாகப் படித்தறிவது இன்றியமையாதது. உலக அரசியல் முறைமைகளை ஆழமாகக் கற்றறிந்து, அந்த அறிவை எமது அரசியல் தீர்வுக்குப் பயன்படுத்தும் குறிக்கோளுடன் அரசியல் விவகார உப-குழு ஒன்றையும் நிறுவுவதற்கு இரு தரப்பினரும் முடிவு செய்தனர். இரு தரப்புப் பேச்சுக் குழுக்களின் தலைவர்களான பேராசிரியர் பீரிஸூம் நானும், திரு. ஹக்கீமும் அரசியற் குழுவில் நியமிக்கப்பட்டோம்.

## உதவி வழங்கும் நாடுகளின் ஒஸ்லோ மாநாடு

சமாதான முயற்சிக்கு உலக ஆதரவைப் பெறவும், சர்வதேசச் சமூகத்திடமிருந்து அவசர நிதியுதவி திரட்டும் நோக்கத்துடன், உதவி வழங்கும் நாடுகளின் மாநாடு ஒன்றை நோர்வே அரசு கூட்டியது. இம் மாநாடு 2002 நவம்பர் 25ஆம் நாளன்று, ஒஸ்லோவிலுள்ள ஹால்மன்கோமன் பார்க் விடுதியில் இடம்பெற்றது. ஐரோப்பா, வட அமெரிக்கா, ஆசிய - பசுபிக் பிராந்தியங்களைச் சேர்ந்த 37 நாடுகளிலிருந்து நூற்றுக்கும் மேற்பட்ட பிரதிநிதிகள் இம் மாநாட்டில் கலந்து கொண்டனர். நோர்வே வெளிவிவகார அமைச்சர் திரு. ஜான் பீட்டர்சன் இந்த மாநாட்டை ஆரம்பித்து வைத்தார்.

இந்த மாநாட்டை ஆரம்பித்து வைத்துப் பேசிய திரு. பீட்டர்சன் இலங்கைத் தீவில் சமாதான முயற்சி வெற்றி பெற வேண்டுமாயின், அம் முயற்சிக்கு வெகுசன ஆதரவு இருக்க வேண்டியது அவசியம் என்றார். "சமாதானத்தின் பெறுபேறுகளை சாதாரண மக்கள் தமது நாளாந்த வாழ்வில் அனுபவிக்க வேண்டும். இதற்குச் சர்வதேசச் சமூகத்தின் உதவி அவசியம். அல்லாது போனால் இந்த அரிய சந்தர்ப்பத்தை நாம் இழந்து போக நேரிடும்" என்றார் பீட்டர்சன்.

சிறீலங்காவின் பிரதமர் திரு. ரணில் விக்கிரமசிங்கா தமது உரையில், யுத்தத்தினால் சிதைந்து போன பொருளாதாரத்தை மீளக் கட்டியெழுப்பச் சர்வதேசச் சமூகம் இலங்கைக்கு உதவ வேண்டுமென வேண்டுகோள் விடுத்தார். அவர் தொடர்ந்து பேசுகையில் உருப்படியான முறையில் உலகத்தின் ஆதரவு எமக்கிருந்தால் இலங்கையில் ஒரு நிரந்தரமான சமாதானத்தைக்

கட்டி எழுப்ப முடியும் என்றார்.

அமெரிக்க உதவி இராஜாங்க மந்திரி திரு. ரிச்சார்ட் ஆமிட்ரேச் இந்த வைபவத்தில் உரையாற்றும் போது சமாதானத்தையும் நல்லாட்சியையும் மேம்பாடு செய்யும் திட்டங்களுக்குத் தனது நாட்டின் ஆதரவு எப்பொழுதும் உண்டென உறுதியளித்தார்.

திரு. ஆமிட்ரேச் தொடர்ந்து பேசும்போது 'வன்முறையையும் பிரிவினையையும்' கைவிட வேண்டுமென விடுதலைப் புலிகள் இயக்கத்திற்குக் கோரிக்கை விடுத்தார். "அமைதி வழியில் இன நெருக்கடிக்குத் தீர்வு காண இணக்கம் தெரிவித்து, விடுதலைப் புலிகள் இயக்கம் அரசியல் ரீதியில் உறுதி பூண்டிருப்பது அமெரிக்காவுக்கு நம்பிக்கையைத் தருகிறது. இந்த உறுதிப்பாட்டுக்கு வலுச் சேர்க்கும் வகையில் இன்னும் ஒரு படி மேல் சென்று, பயங்கரவாதத்தையும் வன்முறையையும் கைவிடுவதாக ஒரு பகிரங்கப் பிரகடனத்தைச் செய்யுமாறு விடுதலைப் புலிகள் இயக்கத்தை நாம் வேண்டிக் கொள்கிறோம். ஒரு தனியரசை அமைப்பதற்கான ஆயுதப் போராட்டத்தைக் கைவிட்டுள்ளதாக சிறீலங்கா மக்களுக்கும் சர்வதேசச் சமூகத்திற்கும் விடுதலைப் புலிகள் தெளிவாக எடுத்துக் காட்ட வேண்டும்." என்றார் திரு. ஆமிட்ரேச்.

இன நெருக்கடிக்குள் சிக்குண்டு நிற்கும் இரு தரப்பினரையும் சமாதான வழிமுறையைத் தழுவுமாறு ஊக்குவிப்பதற்குக் கூட்டப்பட்ட ஒரு சர்வதேச அரங்கில், தமிழரின் சுதந்திரப் போராட்டத்திற்கு இகழ்ச்சியை உண்டுபண்ணும் நோக்கத்துடன், ஒரு உயர்தர அமெரிக்க அரச அதிகாரி ஆத்திரமூட்டும் வகையில் எமது இயக்கத்தைச் சீண்டியது எனக்குச் சினத்தைக் கொடுத்தது.

ஆயுதப் போராட்டம் பற்றிய அமெரிக்காவின் பார்வை மிகவும் குறுகியது, மேலோட்டமானது என்பது எனக்கு நன்கு தெரியும். அரசியல் வன்முறை பற்றி ஒரு தெளிவற்ற, குளறுபடியான கோட்பாட்டைக் கொண்டுள்ள அமெரிக்க வல்லரசு உலகெங்கும் தலைவிரித்தாடும் வன்முறை வடிவமான போராட்டங்கள் எல்லாவற்றையுமே பயங்கரவாதப் பூதமாகக் காண்கிறது. அடக்குமுறைக்கும் அரச பயங்கரவாதத்திற்கும் எதிராக நிகழ்த்தப்படும் சில போராட்டங்களின் தார்மீக, அடிப்படை, அரசியற் புறநிலை, வரலாற்றுச் சூழ்நிலை ஆகிய முக்கிய அம்சங்கள் இந்தக் குறுகிய பார்வைக்குள்

அடங்குவதில்லை. எனினும், இந்தச் சர்வதேச அரங்கில் ஒரு சர்ச்சையைக் கிளப்பிவிட நான் விரும்பவில்லை. எனது உரையின் போது, பண்பான மொழியில், நாகரீகமான முறையில், எமது மக்களின் போராட்ட தர்மத்தைச் சுருக்கமாக எடுத்துக் கூறி அவருக்கு பதிலளிப்பதென முடிவு எடுத்தேன்.

தேனிர் விருந்துபசாரத்தின் பின்னர், ஜப்பான் அரச பிரதிநிதி திரு. யசூசி அகாஸி, ஐரோப்பிய ஒன்றியப் பிரதிநிதி திரு. பீட்டர் ஹன்சன், ஐரோப்பிய ஒன்றியத்தின் ஆணையாளர் சிறீமதி. மார்கொட் வால்ஸ்ரோம், சர்வதேச அபிவிருத்திக்கான பிரித்தானிய இராஜாங்க மந்திரி திருமதி. கிளையர் சோட், ஆகியோர் உரை நிகழ்த்தினர். எல்லோருமே சமாதான முயற்சிக்குத் தமது முழு ஆதரவைத் தெரிவித்தனர். இதனையடுத்து நான் உரையாற்றினேன். எனது உரையின் முக்கிய பகுதிகளை மட்டுமே இங்கு தருகிறேன்:-

"இலங்கைத் தீவின் வடகிழக்கில் வாழும் தமிழ் மக்களின் சார்பாக இம் முக்கிய மாநாட்டில் உரை நிகழ்த்த நான் அழைக்கப்பட்டமை எனக்குக் கிடைத்த கௌரவமாகவே நான் கருதுகிறேன். இந்த மாநாட்டைக் கூட்டியமைக்காக, நோர்வே அரசாங்கத்திற்கு எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். போரினால் பாதிக்கப்பட்ட எமது மக்களின் அவசர மனிதாபிமானத் தேவைகளை உதவி வழங்கும் உலக நாடுகளுக்கு எடுத்து விளக்க, இன நெருக்கடியுடன் சம்பந்தப்பட்ட இரு சாரருக்கும் இந்த மாநாடு ஒரு சிறந்த அரங்கமாக அமைந்துள்ளது.

தென் ஆசியாவில் சமாதானமும், அரசியல் உறுதி நிலையும், வளமான வாழ்வும் நிலவ வேண்டுமென அக்கறை கொண்டுள்ள நாடுகளைப் பிரதிநிதப்படுத்தும் நீங்கள், இலங்கையின் வடகிழக்கு மாநிலத்தில் போரினால் பாதிக்கப்பட்ட மக்களின் வாழ்க்கை நிலை பற்றியும் அங்கு தற்போது நிலவும் யதார்த்த மெய்நிலை பற்றியும் அறிந்து கொள்ள ஆவலாக இருப்பீர்கள்.

இரண்டு தசாப்தங்களாக இலங்கைத் தீவைப் பாழ்படுத்திய இன யுத்தம் முடிவுக்கு கொண்டு வரப்பட்டதும், களத்தில் ஒரு நிலையான சமாதானச் சூழ்நிலை நிலைநாட்டப்பட்டதுமே இந்த அமைதி

முயற்சியால் பெறப்பட்ட மகத்தான சாதனையாகும். போர் நிறுத்த உடன்பாடு செய்து கொள்ளப்பட்டதன் காரணமாக, நெருக்கடியுடன் சம்பந்தப்பட்ட இரு தரப்பினருமே வன்முறையை நிறுத்திக் கொண்டனர். துப்பாக்கிகள் இப்போது மௌனமாகியுள்ளன. போர் நிறுத்த உடன்பாடானது சர்வதேசக் கண்காணிப்பு முறைமையினால் மேற்பார்வை செய்யப்படுவதால் பெரிய அளவிலான யுத்த மீறல்கள் எதுவுமின்றி ஒன்பது மாதங்களுக்கு மேலாக நிலைத்து நீடிக்கிறது. மிகவும் இறுக்கமான இராணுவ ஆக்கிரமிப்பால் ஏற்பட்ட நெருக்கடி நிலையைப் படிப்படியாகத் தணிப்பதற்கு நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. மிகவும் கொடூரமான யுத்தத்திற்கு முகம் கொடுத்த வடகிழக்கு மாநிலத்தில் இப்பொழுதுதான் மெல்ல, மெல்ல இயல்பு நிலை திரும்பி வரத் தொடங்கியுள்ளது.

சமாதானத்தைப் பலப்படுத்தி, இனப் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு காணும் தெளிவான தரிசனத்துடன் சமாதானப் பேச்சுக்கள் முன்னெடுக்கப்படும் இவ்வேளையில், தாம் எதிர்கொள்ளும் அவசர வாழ்நிலைத் தேவைகளுக்கு கால தாமதமின்றி உடனடியாகப் பரிகாரம் கிட்டுமென போரினால் அவல வாழ்வைத் தழுவி நிற்கும் எமது மக்கள் மத்தியில் எதிர்பார்ப்பும் நம்பிக்கையும் வளர்ந்து வருகிறது. காலம் கடத்தாது உடனடியாக, பணமாவும் பொருளாகவும் துயருற்று நிற்கும் எமது மக்களுக்கு உருப்படியான உதவிகள் கிடைக்காது போனால் இந்தச் சமாதான முயற்சியிலும் பேச்சுக்களிலும் அவர்கள் எவ்வித அர்த்தத்தையும் கண்டு கொள்ளப் போதில்லை. தமிழர் தாயகத்தைச் சீரழித்துச் சிதைத்துவிட்ட இந்தக் கோரமான கொடும் யுத்தம் பெரும் இடர்பாடுகளையும் பாரிய மனிதாபிமானப் பிரச்சினைகளையும் உருவாக்கியது. எமது மக்களின் இந்தத் துன்ப துயரங்களுக்குப் பரிகாரம் காணாது அவர்களது மனிதாபிமானத் தேவைகளை நிறைவு செய்யாது போனால் சமாதான முயற்சியில் அவர்களுக்கு இருக்கும் நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் பாரதூரமாகப் பாதிக்கப்படும்.

பயங்கரமான யுத்தத்தின் விளைவாக எமது மக்களுக்கு ஏற்பட்ட பெரும் கேடுகளையும் பேரழிவுகளையும் இங்கு மிகவும் சுருக்கமாக எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். பல வருடங்களாக வன்னி யுத்த பூமியில் வாழ்ந்த அனுபவத்தின் அடிப்படையில் அங்கு வாழும் மக்களின் வாழ் நிலை யதார்த்தத்தைச் சித்தரித்துக் காட்ட என்னால் முடியும். கடந்த இருபது ஆண்டுகளுக்கு மேலாக, தொடர்ச்சியாக இடைவெளியின்றி நிகழ்ந்த கோரமான போருக்கு முகம் கொடுத்த யுத்த களமாக இலங்கைத் தீவின் வடகிழக்குப் பிரதேசம் குறிப்பாக வடமாகாணம் விளங்குகிறது. சனநாயக ஆட்சிமுறையில் பங்குபற்ற அனுமதியாது அரசியல் வாழ்விலிருந்து தமிழ் மக்கள் ஓரம் கட்டி ஒதுக்கப்பட்டதுடன், அரச அடக்குமுறைகளுக்கு ஆளாகியதன் விளைவாகவே இன நெருக்கடி தோற்றம் கொண்டது. வளங்களும் வாய்ப்புக்களும் மறுக்கப்பட்டு எமது மக்களுக்கு இனரீதியாகப் பாரபட்சம் காட்டப்பட்டது. அடக்குமுறையும் அரச வன்முறையும் தாங்க முடியாதவாறு தீவிரமடைந்த கட்டத்திலேயே தமிழ் மக்கள் ஆயுதம் தரித்த எதிர்ப்புப் போராட்டத்தில் குதிக்க நிர்ப்பந்திக்கப்பட்டார்கள்.

தமிழரின் ஆயுதம் தாங்கிய எதிர்ப்பு இயக்கத்தைப் பூண்டோடு அழித்துத் தமிழர் தாயகத்தை அடிமை கொள்ள உறுதி பூண்ட முன்னைய சிங்கள அரசுகள், பாரிய அளவில் சுடுகலச் சக்தியைப் பிரயோகித்து, தொடர்ச்சியாக முடிவில்லாமல் பெரும் எடுப்பில் படை நடவடிக்கைகளை மேற்கொண்டன. இதனால் ஏற்பட்ட விபரீத விளைவுகள் மிகவும் கோரமானவை. எமது மக்களால் மிகவும் நேசிக்கப்பட்ட வரலாற்றுப் புகழ் மிக்க புராதன நகரங்கள், பட்டினங்கள், கிராமங்கள் எல்லாமே தரை மட்டமாக்கப்பட்டன. போரினால் பேரழிவுக்கு ஆளாகிய தமிழரின் சொத்துக்களை அளவிட முடியாது. தமிழ்ப் பகுதிகளிலுள்ள கட்டுமாணங்கள் எவ்விதம் இடிந்து சிதைத்து கிடக்கின்றன என்பதையும் இப் பேரழிவின் விசாலமான பரிமாணத்தையும் ஏ-9 நெடுஞ்சாலை

வழியாக வன்னியிலிருந்து யாழ்ப்பாணம் சென்றவர்கள் நேரில் கண்டிருக்கலாம். இடிந்து, கருகிச் சிதைந்த கோலத்தில் காட்சி தரும் இந்தப் பேய் நகரங்களைப் பார்க்கும் போது இரண்டாம் உலக யுத்தத்தின் கோரமான அழிவுச் காட்சிகள் சிலருக்கு நினைவுக்கு வரலாம். இந்த யுத்தத்தினால் பெருந்தொகையில் அப்பாவிக் குடிமக்கள் மாண்டு போயினர். அறுபதாயிரம் அப்பாவி மக்களின் உயிர்களைப் பலிகொண்டது இந்தக் கொடும் போர். நில ஆக்கிரமிப்பு நோக்கம் கொண்ட இந்தப் போரினால் தமது சொந்த மண்ணிலிருந்து, தமது பாரம்பரிய கிராமங்களிலிருந்து பத்து லட்சம் மக்கள் வரை இடம்பெயர நேர்ந்தது. பல ஆயிரக்கணக்கானோர் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் தஞ்சம் புகுந்தனர். ஆக்கிரமிக்கப்பட்ட யாழ்ப்பாணத்தில் இராணுவ அட்டூழியங்கள் தலை விரித்தாடின. பல நூற்றுக் கணக்கானோர் மாயமாக மறைந்து போயினர்.

இப்பொழுது ஆயுதப் போர் முடிவுக்கு வந்துள்ள போதும், போரினால் விளைந்த அவல நிலை தொடர்கிறது. வடகிழக்கில் வாழும் மக்கள் தாங்கொணாத் துன்பத்தை அனுபவித்து வருகின்றனர். இடம்பெயர்ந்தோர் அகதி முகாம்களில் அவலப்படுகிறார்கள். சொந்த இடங்களுக்குத் திரும்பிய சிலரும் கூரையற்ற இடிந்த வீடுகளிலிருந்து நிவாரண உதவியின்றி இன்னல் அனுபவிக்கின்றனர். தமிழர் தாயகத்தின் சமூக, பொருளாதாரக் கட்டுமாணங்கள் முற்றாக அழிக்கப்பட்டதால் எங்கும் வறுமையும் வேலையில்லாதத் திண்டாட்டமும் தலை விரித்தாடுகிறது. எமது வளமான, செழிப்பான நிலங்கள் கண்ணிவெடி வயல்களாக மாற்றப்பட்டுள்ளன. வடக்கில், மக்கள் குடியிருப்புக்களைச் சூழ இருபது லட்சம் நிலக் கண்ணிவெடிகள் புதைக்கப்பட்டுள்ளன. இந்தப் பேராபத்தின் மத்தியிலேயே எமது மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். யுத்தத்தின் விளைவுகள் ஒருபுறமும், முந்திய அரசினால் திணிக்கப்பட்ட பொருளாதாரத் தடைகள் இன்னொரு புறமுமாக, தமிழர் தேசத்தின் பொருளாதாரத்திற்கு

ஆதாரமான வேளாண்மையும் மீன்பிடித் துறையும் பாதிக்கப்பட்டுள்ளன. ஒட்டு மொத்தத்தில் இந்த யுத்தமானது தமிழரின் தேசியப் பொருளாதாரத்தை சீரழித்து முடங்கச் செய்துள்ளது. அத்துடன் தமிழரின் சீவியத்தையும் சிதைத்துவிட்டது. எனவே, இந்தப் போருக்கு உண்மையில் பலிக் கடாக்கள் ஆனவர்கள் வடகிழக்கில் வாழும் தமிழ் மக்களே. அவர்கள்தான் உடனடி நிவாரணத்திற்கு அருகதை பெற்றவர்கள்.

சிக்கலான இனப் பிரச்சினையைத் தீர்க்கும் கடினமான பேச்சுக்களை நாம் தொடரும் அதே சமயம், போரினால் பாதிக்கப்பட்ட எமது மக்களின் புனர்வாழ்வுக்கும் புனர்நிர்மாணத்திற்கும் கணிசமான அளவில் நிதியுதவி வழங்க வேண்டுமெனச் சர்வதேச அரசாங்கங்களை நாம் வேண்டிக் கொள்கிறோம். சமாதானத்தின் பெறுபேறுகளாகக் கால தாமதமின்றி இந்த உதவி எமது மக்களைச் சென்றடைய வேண்டும். அப்படிச் செய்தாலேயே இந்தச் சமாதான முயற்சியில் எமது மக்களுக்கு நம்பிக்கை பிறக்கும். அத்துடன் பேச்சுக்களை முன்னெடுக்கக் கூடிய நல்லெண்ணச் சூழ்நிலையும் உருவாகும்.

சமாதானத்திலும் அமைதி வழியிலான தீர்விலும் எமது இயக்கம் உறுதிபூண்டு நிற்கிறது என்பதைச் சர்வதேசச் சமூகத்திற்கு நாம் திட்டவட்டமாக கூற விரும்புகிறோம். போர் நிறுத்த உடன்பாட்டில் உறுதிமொழி அளித்தது போன்று நாம் யுத்தத்திலோ வன்முறையிலோ ஈடுபடப் போவதில்லை. சிறீலங்காவின் ஆயுதப் படைகளும் அதே உறுதிப்பாட்டுடன் அமைதி பேணுமென நாம் நம்புகிறோம். யுத்தத்தின் அழிவு சக்தி பற்றி இரு தரப்பினர் மத்தியிலும் நல்ல தெளிவு ஏற்பட்டுள்ளது. எமது மக்கள் அரச அடக்குமுறைக்கு ஆளாக்கப்படாது இருந்தால், எமது மக்களின் ஆவலுக்கும் அபிலாசைகளுக்கும் மதிப்பு அளிக்கப்பட்டால், அவர்களது அரசியல் பிரச்சினை அமைதி வழியில் தீர்க்கப்பட்டால், மீளவும் நாம் வன்முறைப் போராட்டத்தில் குதிப்பதற்கு அவசியமில்லை. இன நெருக்கடிக்கு நிரந்தரத் தீர்வு காணும் வரை, நிரந்தர சமாதானம் ஏற்படும் வரை,

எம்மால் முடிந்த அளவு ஆயுத மோதல்களைத் தவிர்த்து, அமைதி வழியைத் தழுவுவோம் என உறுதி கூற விரும்புகிறோம்.''

அன்று முழு நாளும் நடைபெற்ற கலந்துரையாடல்களை அடுத்து, உடனடி நிவாரண உதவியாக 7 கோடி அமெரிக்க டொலர்களை உதவியாக வழங்க சர்வதேச நாடுகள் வாக்குறுதி அளித்தன. இலங்கையின் சமாதான முயற்சியில் உதவி வழங்கும் நாடுகளுக்கு ஏற்பட்டிருக்கும் நம்பிக்கையின் நல்லெண்ண வெளிப்பாட்டை இது காட்டுவதாக நோர்வே உதவி மந்திரி ஹெல்கிசன் பத்திரிகையாளரிடம் தெரிவித்தார். அதே சமயம், இம் மாநாட்டில் பங்குகொண்ட நாடுகளின் பிரதிநிதிகள் வெளியிட்ட கூட்டறிக்கையில், 'வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சமாதான முயற்சிக்கு' தமது நல்லாதரவைத் தெரிவித்தனர்.

இந்த மாநாட்டில், விடுதலைப் புலிகள் இயக்கம் சார்பில் கலாநிதி ஜே. மகேஸ்வரன், தமிழர் புனர்வாழ்வுக் கழகப் பொறுப்பாளர் திரு. ரெஜி, ஊடக இணைப்பாளர் திரு. சுதாகரன் ஆகியோருடன் நானும் எனது மனைவி அடேலும் பங்குபற்றினோம். மாநாடு முடிவுற்றதும் அன்று மாலை, சிறீலங்காவின் பிரதம மந்திரி திரு. ரணில் விக்கிரமசிங்காவை நான் சந்தித்தேன். கொழும்பு அரசியல் நிலவரம் பற்றியும், தமிழர் தாயகத்தின் கள நிலவரம் பற்றியும் நான் ரணிலுடன் விபரமாகப் பேசினேன். இந்தச் சந்திப்பில் திரு. விடார் ஹெல்கிசனும் திரு. எரிக் சுல்கைமும் கலந்து கொண்டனர்.

அன்றைய நாள், ஜப்பான் அரச பிரதிநிதி திரு. அகாஷியை சந்தித்து உரையாட எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. இலங்கையின் சமாதான முயற்சிகளில் பங்குகொள்ள ஜப்பானிய அரசாங்கம் விருப்பம் கொண்டுள்ளதாக திரு. அகாஷி என்னிடம் தெரிவித்தார். இலங்கையின் புனர்வாழ்வு, அபிவிருத்தித் திட்டங்களுக்குப் பெருமளவு நிதி திரட்டும் நோக்கத்துடன், 2003ஆம் ஆண்டு மே மாதம் டோக்கியோவில், பெரிய எடுப்பில் உதவி வழங்கும் நாடுகளின் மாநாடு ஒன்றைக் கூட்ட இருப்பதாகவும் அகாஷி தகவல் தெரிவித்தார்.

சமாதான முயற்சியில் பங்குகொள்வதற்கு ஜப்பான் ஆர்வம் காட்டுவதன் காரணம் என்ன என்று நான் எரிக் சுல்கைமிடம் கேட்டேன். சர்வதேச உறவுகளில் தனது அரசியல் அந்தஸ்தை

உயர்த்துவதற்கு ஜப்பான் விரும்புவதாகக் கூறினார் சுல்கைம். “உலக அரங்கில், போர்கள் முடிவுற்று, நெருக்கடிகள் தணியும்போது, போரினால் விளைந்த சிதைவுகளிலிருந்து அந்தந்த நாடுகளைப் பொருளாதார ரீதியில் புனர்நிர்மாணம் செய்வதற்கு ஜப்பான் பெருந்தொகையில் நிதியுதவி வழங்கி வருகிறது. எந்தவித அரசியல் ஆதாயமோ அங்கீகாரமோ இன்றி, தனது தேசிய வருமானத்தை இவ்விதம் விரயம் செய்வதில் விரக்தியடைந்துள்ள ஜப்பானியர்கள் தமது நிதியுதவிகளுக்கு அரசியல் முக்கியத்துவத்தைப் பெற விரும்புகிறார்கள். இலங்கையைப் பொறுத்த வரை, அந் நட்டிற்கு ஜப்பானியர்கள் பெருமளவு பொருளாதார உதவிகளைச் செய்து வருகின்றனர். இப்பொழுது இலங்கையில் போர் நிறுத்தப்பட்டு, சமாதான முயற்சி முன்னெடுக்கப்படுவதால், இவ் விடயத்தில் தானும் ஒரு முக்கிய அரசியல் பங்கை வகிப்பதற்கு ஜப்பான் விரும்புகிறது” என்று விளக்கினார் எரிக் சுல்கைம்.

ஒஸ்லோவில் நிகழ்ந்த நிதியுதவி மாநாடு இலங்கையின் சமாதான முயற்சியில் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது. வெவ்வேறான குறிக்கோள்களையும் நலன்களையும் கொண்ட சக்தி வாய்ந்த சர்வதேச அரசுகள் இலங்கை விவகாரத்தில் கூடுதலாகத் தலையீடு செய்வதற்குச் சமாதான முயற்சி வழிசமைத்துக் கொடுத்தது. ஆரம்ப கட்டங்களில் சர்வதேசச் சமூகத்தின் பங்கு மிகவும் வரையறுக்கப்பட்டதாக இருந்தது. அதாவது, புனர்வாழ்வு அபிவிருத்தித் திட்டங்களுக்கு நிதியுதவி தருவதாக வாக்களித்து, அமைதி வழியில் அரசியல் தீர்வு காணுமாறு நெருக்கடியில் சம்பந்தப்பட்ட இரு தரப்பினரையும் ஊக்கப்படுத்துவதாக அது அமைந்தது. ஒஸ்லோ நிதியுதவி மாநாட்டில் அமெரிக்கா, ஐரோப்பிய ஒன்றியம், ஜப்பான் ஆகியன முனைப்பான முன்னணிப் பங்கை வகித்ததுடன், பேச்சுக்களின் முன்னேற்றத்துடன் நிதியுதவியும் இணைக்கப்பட்டது. ஆயுதப் போராட்டம், பிரிவினைக் கோரிக்கை ஆகியன கைவிடப் படுவதற்குப் பெறுபேறாக நிதியுதவி வழங்க இந் நாடுகள் முன்வந்தன. வெளியுலக வல்லரசுகளின் இத் தலையீட்டுக்கு ரணில் விக்கிரமசிங்காவின் ‘சர்வதேச பாதுகாப்பு வலைப் பின்னல்’ திட்டம் நல்ல வாய்ப்பாக அமைந்தது. அதன் அடிப்படையில் சர்வதேசச் சமூகத்தின் தலையீடு பக்க சார்பாகத் திரும்பியதுடன், ஒரு சாரார் மீது (விடுதலைப் புலிகள் மீது) அழுத்தம் பிரயோகிக்கவும் இடமளித்தது. அரசியல் தீர்வுக்கான

வரம்புகளை வரையறை செய்து, ஒரு தீர்வையும் திணித்து விட உலக நாடுகள் முனைந்தன. இந்தப் போக்கானது சிறீலங்கா அரசுக்குச் சார்பான முறையில், அரசியல் ரீதியான சமநிலையில் மாற்றத்தை ஏற்படுத்தியது. இந்த அச்சுறுத்தலை உணர்ந்து கொண்ட விடுதலைப் புலிகள் இயக்கம், மிகையளவான சர்வதேசத் தலையீடு சமாதான முயற்சியில் எதிர்மறையான தாக்கத்தை விளைவிப்பதாகக் கண்டித்தது. அத்துடன் ஒஸ்லோ நிதியுதவி மாநாடு, ஜப்பானுக்கு ஒரு முக்கிய பங்கை வகிக்க வாய்ப்பளித்த அதே சமயம், தென் ஆசியப் பிராந்தியத்தில் கேந்திர, புவியியல் நலன்களைக் கொண்டிருக்கும் இந்திய வல்லரசை ஓரம் கட்டவும் வழி செய்தது. ஒஸ்லோ மாநாட்டின் இன்னொரு குறைபாடு என்னவென்றால், நிதியுதவிகளை ஆக்கபூர்வமாகப் பயன்படுத்தும் ஒரு நிர்வாக நிறுவனக் கட்டமைப்பை உருவாக்குவதற்கு முன்னர், நிதியுதவிக்கு உலக நாடுகளிலிருந்து உறுதி மொழியைப் பெற்றுக் கொண்டதுதான்.

## மூன்றாம் கட்டச் சுற்றுப் பேச்சு

மூன்றாம் கட்டச் சுற்றுப் பேச்சுக்களுக்கு ஒரு வாரத்திற்கு முன்னராக, 2002 நவம்பர் 27ஆம் நாள், தமிழீழ விடுதலைப் புலிகளின் தலைவர் திரு. பிரபாகரன், தனது வருடாந்த மாவீரர் நாள் உரையில், தமிழ்த் தேசியப் பிரச்சினை குறித்து ஒரு முக்கிய கொள்கைப் பிரகடனத்தை வெளியிட்டார். பிரபாகரன் கூறியதாவது:-

> "ஐ.நா. சாசனத்திலும், பிரகடனங்களிலும் குறிப்பிடப்படும் சுயர்நிர்ணய உரிமைக் கோட்பாட்டை மையப் பொருளாகக் கொண்டே எமது போராட்ட இலட்சியம் நெறிப்படுத்தப்பட்டிருக்கிறது. அன்றும் சரி, இன்றும் சரி, சுயநிர்ணய உரிமைக்கான எமது போராட்ட இலட்சியத்தில் நாம் உறுதி பூண்டு நிற்கிறோம். தமிழர் தாயகம், தமிழர் தேசியம், தமிழரின் சுயநிர்ணய உரிமை ஆகியனவையே எமது அரசியல் இலட்சியத்தின் அடிப்படைகள். திம்புலிருந்து தாய்லாந்து வரை இந்த அடிப்படைகளையே நாம் வலியுறுத்தி வருகின்றோம். இம் மூலக் கோட்பாடுகளின் அடிப்படையிலேயே தமிழரின் தேசிய

இனப் பிரச்சினைக்குத் தீர்வு காணப்பட வேண்டும் என்பது எமது நிலைப்பாடு.

தனித்துவமான ஒரு மொழி, பண்பாடு, வரலாறு, நன்கு வரையறுக்கப்பட்ட ஒரு தாயக நிலம், இன அடையாள உணர்வு போன்ற பண்புகளை உடையவர்கள் என்பதால், எமது மக்கள் ஒரு தேசிய இனமாக, ஒரு மக்கள் சமூகமாக அமைந்துள்ளனர். ஒரு தனித்துவமான மக்கள் சமூகம் என்ற ரீதியில் எமது மக்கள் சுயநிர்ணய உரிமைக்கு உரித்தானவர்கள். சுயநிர்ணய உரிமை என்பது உள்ளக, வெளியக அம்சங்களைக் கொண்டது. உள்ளக சுயநிர்ணயம் என்பது ஒரு மக்கள் சமூகத்தின் பிரதேச சுயாட்சி உரிமையை வலியுறுத்துகின்றது.

தமிழ் மக்கள், தமது சொந்த மண்ணில், வரலாற்று ரீதியாக வாழ்ந்து வந்த பாரம்பரிய மண்ணில், அந்நியச் சக்திகளின் ஆதிக்கம், தலையீடு இன்றி, சுதந்திரமாக, கௌரவமாக வாழ விரும்புகின்றார்கள். தமது மொழியை வளர்த்து, தமது பண்பாட்டைப் பேணி, தமது பொருளாதாரத்தை மேம்படுத்தி, தமது இன அடையாளத்தைப் பாதுகாத்து, வாழ விரும்புகின்றார்கள். தமது தாயக மண்ணில், தம்மைத் தாமே ஆளும் சுயாட்சி உரிமையோடு வாழ விரும்புகின்றார்கள். இதுவே எமது மக்களின் அரசியல் அபிலாசை. உள்ளக சுயநிர்ணயத்தின் அர்த்த பரிமாணம் இதில்தான் அடங்கியிருக்கிறது. உள்ளக சுயநிர்ணயக் கோட்பாட்டின் அடிப்படையில், எமது தாயக நிலத்தில், எமது மக்கள் தம்மைத் தாமே ஆளக்கூடிய பூரண சுயாட்சி அதிகாரத்துடன் ஒரு தீர்வு முன்வைக்கப்பட்டால், நாம் அத்திட்டத்தை சாதகமாகப் பரிசீலனை செய்வோம். ஆனால் அதேவேளை, எமது மக்களுக்கு உரித்தான உள்ளக சுயநிர்ணயம் மறுக்கப்பட்டு, பிரதேச சுயாட்சி உரிமை நிராகரிக்கப்பட்டால் நாம் பிரிந்து சென்று தனியரசு அமைப்பதைத் தவிர எமக்கு வேறு வழியில்லை."

தமிழ்த் தாயகத்தில் பூரண சுயாட்சி அதிகாரத்துடன் ஒரு தீர்வு முன்வைக்கப்பட்டால் அதனைப் பரிசீலனை செய்ய விடுதலைப் புலிகள் தயாராக இருப்பதாகத் தலைவர் பிரபாகரன் விடுத்த அறிவிப்பு, மூன்றாம் கட்டச் சுற்றுப் பேச்சுக்களில் முக்கிய விவாதத்தைக் கிளப்பியது. மூன்றாம் கட்டச் சுற்றுப் பேச்சுக்கள், 2002 டிசம்பர் 2-5ஆம் நாட்கள் வரை ஒஸ்லோவிலுள்ள எஸ்.ஏ.எஸ் பிளாசா விடுதியில் நடைபெற்றன.

விடுதலைப் புலிகள் தரப்புப் பிரதிநிதிகள் குழுவில் மாற்றம் இருக்கவில்லை. அரச பிரதிநிதிகள் தரப்பில் திரு. ரவூவ் ஹக்கீம் பங்குகொள்ளவில்லை. உட்கட்சித் தகராறு மோசமடைந்ததால், ஒஸ்லோ வந்திறங்கிய திரு. ஹக்கீம் அன்றைய தினமே அவசரமாகக் கொழும்பு திரும்பினார். சிறீலங்கா முஸ்லிம் காங்கிரஸ் கட்சியின் ஆலோசகரான திரு. எம்.ஐ.எம். மொகுதீன் பேச்சுக்களின் போது முஸ்லிம்களைப் பிரதிநிதப்படுத்தினார்.

நெருக்கடியைத் தணித்து, இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் உப-குழு பற்றிய விடயம் பேச்சுக்களில் எடுத்துக் கொள்ளப்பட்ட போது, தமிழர் தாயகத்தைக் குறிப்பாக யாழ்ப்பாணக் குடாநாட்டை ஆக்கிரமித்து நிற்கும் சிறீலங்கா இராணுவத்தினரது விட்டுக் கொடாத கடும்போக்கினால் நெருக்கடி நிலை தீவிரமாகி வருவதாக நான் கண்டனம் தெரிவித்தேன். சிங்கள இராணுவம் தமிழ்க் குடி மக்களுடன் பகையுணர்வுடன் நடந்து கொள்வதாகக் குற்றம் சாட்டிய நான், போர் நிறுத்த உடன்பாட்டுக்கு விரோதமாக அரச ஆயுதப் படைகள் தொடர்ந்தும் பொதுக் கட்டிடங்களையும், தனியார் சொத்துக்களையும், விவசாய நிலங்களையும் ஆக்கிரமித்து நிற்பதாகச் சுட்டிக் காட்டினேன். இராணுவத்தின் இக் கடும்போக்குக் காரணமாக, இடம்பெயர்ந்த மக்கள் தங்களது சொந்த இடங்களுக்குத் திரும்ப முடியாத பேரவல நிலை தொடர்வதால், நெருக்கடியைத் தணிக்கும் இந்த உப-குழுவை இயக்குவதில் எவ்வித அர்த்தமும் இராதெனப் புலிகளின் தலைமை கருதுவதாகக் கூறினேன். எனக்குப் பதிலளித்த பாதுகாப்புச் செயலர் திரு. ஒஸ்ரின் பெர்னான்டோ, சிறீலங்காவின் ஆயுதப் படைகள் மாற்று இடங்களுக்கு மாறிச் செல்வதற்குக் கால அவகாசம் பிடிக்குமென ஒரு நொண்டிச் சாட்டை முன்வைத்தார்.

கண்ணி வெடிகளை அகற்றும் பிரச்சினை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டபோது, 'ஒட்டாவா உடன்பாட்டில்'

(கண்ணிவெடி அகற்றும் சர்வதேச ஒப்பந்தம்) சிறீலங்கா அரசாங்கம் கைச்சாத்திட விரும்புவதாகத் தெரிவித்த பேராசிரியர் பீரிஸ், விடுதலைப் புலிகள் இவ்வுடன்பாட்டில் கைச்சாத்திட இணங்காது போனால் ஒருதலைப்பட்சமாகத் தமது அரசும் கைச்சாத்திட முடியாது என்றார். எமது கட்டுப்பாட்டுப் பிரதேசத்தின் பாதுகாப்புப் பற்றிய காரணங்களுக்காகத் தற்போதைக்கு இந்த ஒப்பந்தத்தில் கைச்சாத்திடப் பிரபாகரன் விரும்பவில்லை என்பதை விளக்கினேன். நெருக்கடி நிலைமை தணிந்து இயல்பு நிலையைத் தோற்றுவிக்கச் சிறீலங்கா இராணுவம் உருப்படியான நடவடிக்கைகளை எடுத்தால் மட்டுமே இவ் விடயம் பற்றிப் பரிசீலிக்க முடியுமெனத் திரு. பிரபாகரன் சமீபத்தில் விடார் ஹெல்கிசனிடம் கூறியதையும் நான் கூட்டிக் காட்டினேன். கண்ணிவெடி அகற்றுவதற்கென விடுதலைப் புலிகள் இயக்கம் ஒரு கட்டமைப்பை உருவாக்கி, இடம்பெயர்ந்தோரை மீளக் குடியேற்றும் குறிக்கோளுடன் வன்னியில் பெருமளவு நிலப் பரப்பில் கண்ணிவெடிகளை அகற்றியுள்ளதாகவும் நான் தெரிவித்தேன்.

உடனடி மனிதாபிமானப் புனர்வாழ்வுத் தேவைகளை நிறைவு செய்யும் நோக்கில் நிறுவப்பட்ட உப-குழுவான 'சிரான்' செயற்படுவதில் கால தாமதம் ஏற்பட்டு வருவதாகத் திரு. தமிழ்ச்செல்வன் கூறினார். வடகிழக்கில் மனிதாபிமானப் பணிகளைத் துரித கதியில் நடைமுறைப்படுத்தும் அவசியத்தை திரு. மகேஸ்வரன் வலியுறுத்தினார். இந்தக் குறிக்கோளுடன் வடகிழக்குப் புனர்நிர்மாண நிதியத்தை வெகுவிரைவில் நிறுவுவதென இரு தரப்பினர் மத்தியிலும் இணக்கம் காணப்பட்டது.

சமாதான முயற்சியில் பெண்களின் பங்கு பற்றி விவாதிக்கப்பட்டது. சமாதானப் பேச்சுக்களில் பெண்ணியப் பிரச்சினைகளை உள்ளடக்குவது பற்றி ஆராய்வதற்காகப் பெண்களுக்கான உப-குழு ஒன்றை அமைப்பதென முடிவெடுக்கப்பட்டது.

போரினால் பாதிக்கப்பட்ட சிறார்களது வாழ்நிலையை மேம்பாடு செய்வது பற்றியும் விவாதிக்கப்பட்டது. பாதிக்கப்பட்ட சிறுவர்களுக்குப் புனர்வாழ்வு அளிக்கும் நோக்கத்துடன் ஐ.நா. சிறுவர் நிதியத்துடன் (யூனிசெவ்) பங்குதாரராக இணைந்து செயற்திட்டம் ஒன்றையும் உருவாக்குவதென முடிவாகியது.

## சமஷ்டி வடிவங்களை ஆய்வு செய்வது

உள்ளக சுயநிர்ணய உரிமைக் கோட்பாட்டின் அடிப்படையில் ஒரு சமஷ்டித் தீர்வை ஆராய்வதென இந்தக் கட்டப் பேச்சுக்களின் போது இரு தரப்பினர் மத்தியிலும் இணக்கம் காணப்பட்டது. இந்த முடிவை ஒரு பெரிய திருப்பமாகவும், கொள்கை மாற்றமாகவும் சில ஊடகங்கள் சித்தரிக்க முயன்றன. விடுதலைப் புலிகள் இயக்கம் வெளியக சுயநிர்ணய உரிமையையும் பிரிவினையையும் கைவிட்டு விட்டதாகவும் அரசியல் ஆய்வாளர்கள் மத்தியில் தவறாக எடை போடப்பட்டது. 'ஒஸ்லோ பிரகடனம்' என முக்கியத்துவம் பெற்ற இச் சர்ச்சைக்குரிய விடயம் குறித்து எமது இயக்கத்தின் நிலைப்பாட்டை இங்கு தெளிவுபடுத்துவது அவசியமாகிறது.

முதலாவதாக நாம் தெளிவுபடுத்த விரும்புவது என்னவென்றால், 'ஒஸ்லோ பிரகடனம்' என்ற தலைப்பில் ஒரு குறிப்பிட்ட பிரகடனம் எதுவும் இல்லை என்பதுதான். சமஷ்டி அரசியலமைப்பு வடிவங்களை ஆராய்ந்து பார்ப்பது என்ற முடிவு, ஒஸ்லோ பேச்சுக்களின் முடிவில் மேற்கொள்ளப்பட்ட தீர்மானங்களின் பதிவேட்டில் உள்ளடக்கப்பட்டிருக்கிறது. இப் பதிவேட்டு அறிக்கையில் இரு தரப்புப் பேச்சுக் குழுத் தலைவர்களும் கைச்சாத்திட்டுள்ளனர். நோர்வே வெளிவிவகார அமைச்சு வெளியிட்ட பத்திரிகை அறிக்கையிலும் இத் தீர்மானம் குறிப்பிடப்பட்டுள்ளது.

இரண்டாவதாக, விடுதலைப் புலிகளின் தலைவர் திரு. பிரபாகரன் மாவீரர் தின உரையில் அறிவித்த கொள்கைப் பிரகடனத்திற்கு இசைவாகவே இத் தீர்மானம் மேற்கொள்ளப்பட்டது. உள்ளக, வெளியக அம்சங்களைக் கொண்ட சுயநிர்ணய உரிமைக் கோட்பாட்டின் கட்டமைப்பு வரம்புக்கு உட்பட்டதாகவே பிரபாகரன் தனது சொற்பதங்களையும் கருத்துருவங்களையும் கையாளுவதுண்டு. ஒரு தனித்துவமான மக்கள் சமுதாயம் என்ற ரீதியில், தமிழ் மக்கள் உள்ளக, வெளியக அம்சங்களைக் கொண்ட சுயநிர்ணய உரிமைக்கு உரித்தானவர்கள். உள்ளக சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில், தமிழ் மக்கள் தம்மைத் தாமே ஆளக்கூடிய பிரதேச சுயாட்சிக்கு உரித்தானவர்கள் என்று தெளிவுபடக் கூறியிருக்கிறார் பிரபாகரன். "உள்ளக சுயநிர்ணயக் கோட்பாட்டின் அடிப்படையில், எமது தாயக நிலத்தில், எமது

மக்கள் தம்மைத் தாமே ஆளக் கூடிய பூரண சுயாட்சி அதிகாரத்துடன் ஒரு தீர்வு முன்வைக்கப்பட்டால் நாம் அத் திட்டத்தை சாதகமாகப் பரிசீலனை செய்வோம்." என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்கிறார் பிரபாகரன். "ஆனால் அதேவேளை, எமது மக்களுக்கு உரித்தான உள்ளக சுயநிர்ணயம் மறுக்கப்பட்டு, பிரதேச சுயாட்சி உரிமை நிராகரிக்கப்பட்டால் நாம் பிரிந்து சென்று தனியரசு அமைப்பதைத் தவிர எமக்கு வேறு வழியில்லை" என்றும் அவர் உறுதிபடச் சொல்கிறார். இதிலிருந்து ஒரு விடயம் தெட்டத் தெளிவாகிறது. அதாவது, பிரிந்து சென்று தனியரசு அமைக்கும் வெளியக சுயநிர்ணய உரிமையைப் பிரபாகரன் தனது கடைசியான, இறுதித் தீர்வாகக் கொண்டிருக்கிறார் என்பது வெளிப்படை. இதிலிருந்து நாம் ஒன்றைத் தெளிவறப் புரிந்து கொள்ள வேண்டும். அது என்னவென்றால், புலிகளின் தலைவர் பிரபாகரன், சுயநிர்ணய உரிமைக் கோட்பாட்டின் உள்ளகம், வெளியகம் என்ற இரு அம்சங்களையும் சர்வதேசச் சட்டங்களுக்கு இசைவாக நுட்பமாகக் கையாளுகிறார் என்பதுதான். பிரபாகரனின் இந்த நிலைப்பாட்டைப் பத்திரிகையாளர் மகாநாடுகளிலும் சொற்பொழிவுகளிலும் தெளிவாக விளக்கியிருக்கிறேன். சுயநிர்ணய உரிமை பற்றிய எமது நிலைப்பாடு எவ்விதம் ஐ.நா. பிரகடனங்களுக்கும், சர்வதேசச் சட்டத்திற்கும் இசைவான முறையில் அமைந்துள்ளது என்பதை ஆழமாக அலசுவதற்கு முன்பாக, சமஷ்டி அரசியலமைப்பின் அடிப்படையில் ஒரு தீர்வை ஆராய்ந்து பார்ப்பதற்கு நாம் எதற்காக இணங்கினோம் என்ற பின்னணியையும் இங்கு சுருக்கமாகப் பார்ப்போம்.

ஒஸ்லோவில் நிகழ்ந்த மூன்றாம் கட்டச் சுற்றுப் பேச்சுக்களின் போது, இரு தரப்பினர்களுக்கும் ஆலோசனை வழங்குவதற்காக கனடியக் கூட்டாட்சி மன்றத்தைச் சேர்ந்த நிபுணர்கள் குழு ஒன்றும் வந்திருந்தது. இவர்களில் முன்னாள் ஒன்ராறியோ பிரதமர் திரு. பொப் ரேய், ரொறன்ரோ பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் டேவிட் கமரோன், மன்ற நிர்வாகிகளில் ஒருவரான திரு. கார்ள் நரன்பேர்க் ஆகியோர் அடங்குவர். இந்த நிபுணர்களுடன் விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள் இரு சந்திப்பை நிகழ்த்தினார்கள். தலைவர் பிரபாகரனின் மாவீரர் தினக் கொள்கைப் பிரகடனமும், குறிப்பாக உள்ளக சுயநிர்ணய உரிமைக் கோட்பாடும் விவாதத்தின்

மையக் கருத்துகளாக எடுத்துக் கொள்ளப்பட்டன.

உள்ளக சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில் தன்னாட்சி அதிகாரங்களைக் கொண்ட பிரதேச சுயாட்சி வழங்கப்பட்டால் அதனைப் பரிசீலனை செய்யத் தயாரெனப் பிரபாகரன் கூறியிருக்கிறார் என மாவீரர் தின உரையிலிருந்து சம்பந்தப்பட்ட பந்திகளை வாசித்து நான் விளக்கமளித்தேன். தலைவரது நிலைப்பாட்டை வரவேற்றுப் பேசிய பேராசிரியர் டேவிட் கமரோன், ஆட்சியுரிமை மறுக்கப்பட்டு, ஒடுக்குமுறைக்கு ஆளாகி நிற்கும் மக்கள் இனம் என்ற ரீதியில், தமிழ் மக்கள் உள்ளக சுயநிர்ணய உரிமைக்கு உரித்தானவர்கள் என்றும் அவர்களுக்குத் தன்னாட்சி உரிமை கோரும் தகைமையுண்டு என்றும் வாதித்தார். பேராசிரியர் கமரோன் மேலும் பேசுகையில், தன்னாட்சி, பிரதேச சுயாட்சி (Self-Government, Regional Autonomy) போன்ற கருத்துருவங்கள் எமது கொள்கை விளக்கப் பிரகடனத்தில் செம்மையாக வரையறுக்கப்படாததால், அவை தெளிவற்றவையாக இருப்பதாகக் கூறினார். பேராசிரியர் கமரோனின் கருத்தை ஆதரித்துப் பேசிய திரு. பொப் ரேய், நவ உலகின் மெய்யுண்மைகளைத் தெளிவாகத் துலக்கிக் காட்டும் கருத்துருவங்களையும் கோட்பாடுகளையும் விடுதலைப் புலிகள் இயக்கம் உபயோகிப்பது அவசியம் என்றார். எமது கோரிக்கைகளையும் அரசியல் இலட்சியங்களையும் உலகத்தாருக்கு விளங்கப்படுத்தும் போது தெளிவாக வரையறுக்கப்படாத, பூடகமான சொற்பதங்களைப் பாவிப்பதைத் தவிர்ப்பது சாலச் சிறந்தது என்றார். "சமகால உலகில் நடைமுறையில் இயங்கி வரும் ஆட்சியமைப்புகளைப் பிரதிபலித்துக் காட்டுவதாக உங்களது கருத்துக்கள் அமைய வேண்டும். அப்படியென்றால்தான் உங்களது அமைப்பின் கொள்கைகளும் கோட்பாடுகளும் மற்றவர்களுக்குத் தெளிவாகப் புலனாவதுடன் சர்வதேச அங்கீகாரத்தையும் பெறும்." என்றார் பொப் ரேய்.

'பிரதேச சுயாட்சி' என நாம் பாவிக்கும் சொற்பதம் சமஷ்டி வடிவிலான ஆட்சிமுறைக்கு இசைவானதாக இருக்கும் என்று கனடிய கூட்டாட்சி மன்ற நிபுணர்கள் எமக்கு விளக்கம் தந்தார்கள். பிரதேச மட்டத்திலும் மத்தியிலும், சுயாட்சியும் பகிர்வாட்சியும் இணையும் இரு படிநிலை அரசாட்சிகளைக் கொண்டதாகச் சமஷ்டி ஆட்சிமுறை அமையுமென்றும் அவர்கள் மேலும் தெளிவுபடுத்தினார்கள். உலகில் நிதர்சன வடிவம்

எடுத்துள்ள மெய்யுண்மைகளைச் சிறந்த முறையில் சித்தரித்துக் காட்டும் கருத்துருவங்களைக் கையாளுவதன் அவசியத்தை ஏற்றுக் கொண்ட நான், சமஷ்டி ஆட்சிமுறை பற்றி, சிங்கள அரசியல்வாதிகள் மிகவும் குளறுபடியான கருத்துக்களைக் கொண்டிருப்பதாகக் கூறினேன். மாநிலங்களுக்கு இறையாண்மை அதிகாரத்தை **பகிர்ந்து கொள்வதற்குப்** பதிலாக, அதிகாரப் **பரவலாக்கம்** பற்றியே அவர்கள் சிந்திப்பதாகச் சுட்டிக் காட்டினேன். சமஷ்டி ஆட்சி முறையில் அதிகாரப் பரவலாக்கம் (Devolution of Power) என்ற பதத்தைப் பாவிப்பது தவறு என்பதை அவர்கள் ஒத்துக் கொண்டனர். உள்ளக சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில், 'பிரதேச சுயாட்சி' என்பதற்குப் பதிலாக, 'சமஷ்டிச் சுயாட்சி' என்ற பதத்தை பாவிப்பது உகந்தது அல்லவா எனக் கனடிய நிபுணர்கள் வினவினார்கள். இது பற்றி ஒரு உறுதியான முடிவு எடுப்பதற்கு முன்னர், தற்போது உலகத்திலுள்ள பல ரகமான சமஷ்டி ஆட்சி வடிவங்களை ஆழமாக ஆய்வு செய்து பார்த்து, எமது பிரத்தியேகச் சூழ்நிலைக்குப் பொருத்தமான ஆட்சிமுறையை நாம் தேர்ந்தெடுக்க வேண்டுமென நான் விளக்கிக் கூறினேன். கனடிய கூட்டாட்சி மன்ற நிபுணர்களுடன் நிகழ்த்திய கருத்துரையாடல்களின் அடிப்படையில்தான் பின்பு நானும் பேராசிரியர் பீரிஸுமாகச் சேர்ந்து கீழ்க்கண்ட தீர்மானத்தை வரைந்தோம்.

> "விடுதலைப் புலிகளின் தலைமை தெரிவித்த ஒரு யோசனைக்கு இசைவாக, உள்ளக சுயநிர்ணய உரிமைக் கோட்பாட்டின் அடிப்படையில், தமிழ் பேசும் மக்களின் வரலாற்றுத் தாயகத்தில், ஐக்கியமான இலங்கைக்குள், சமஷ்டி ஆட்சிமுறை தழுவிய தீர்வு ஒன்றை ஆராய்ந்து பார்ப்பதற்கு இரு தரப்பிலும் இணக்கம் காணப்பட்டது."

இந்த வரிகளை ஊர்ந்து கவனிக்குமிடத்து, உள்ளக சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில், சமஷ்டிச் சுயாட்சி வடிவம் தழுவிய தீர்வு ஒன்றை **ஆராய்ந்து** பார்ப்பதற்கே முடிவெடுக்கப்பட்டது என்பது நன்கு புலனாகும். இதனை மேலோட்டமாகப் பார்த்த அரசியல்வாதிகளும், ஆய்வாளர்களும், விடுதலைப் புலிகள் இயக்கம் ஏதோ சுயநிர்ணய உரிமைக் கோட்பாட்டைக் கைவிட்டு, சமஷ்டிக்குள் சறுக்கி விழுந்து விட்டதாகத் தவறான வியாக்கியானங்களைக் கொடுக்க

முனைந்தனர். தற்கால அரசியல் அறிவுலகிலும் சர்வதேசச் சட்டங்களிலும் சுயநிர்ணய உரிமையின் உள்ளக, வெளியக அம்சங்கள் பற்றிய விவாதங்கள், தீர்மானங்கள் குறித்து ஆழமான பார்வை இல்லாத காரணத்தால் இவர்களிடமிருந்து இத்தகைய தவறான ஆய்வு விமர்சனங்கள் எழுந்தன. ஆகவேதான், சுயநிர்ணய உரிமையின் உள்ளக, வெளியக அம்சங்கள் பற்றிய இன்றைய கருத்தாடல் பற்றியும், இது சம்பந்தப்பட்ட எமது நிலைப்பாடு பற்றியும் இங்கு சுருக்கமாக விளக்க முனைகிறேன்.

## உள்ளக, வெளியக சுயநிர்ணய உரிமை

சுயநிர்ணய உரிமை என்பது வளர்ந்து வரும் ஒரு கருத்துருவம்; பரிணாமம் பெற்றுவரும் ஒரு கோட்பாடு. சர்வதேசச் சட்டத் துறையில் புத்தாக்கம் பெற்று வரும் ஒரு விதியாகவும், சர்வதேச மனித உரிமை நியமமாகவும் இது கொள்ளப்படுகிறது.

சுயநிர்ணய உரிமைக் கோட்பாடானது, ஆரம்பத்தில், மேற்குலக வல்லரசுகளின் குடியேற்றத்திற்கு அடிமைப் படுத்தப்பட்ட நாடுகளின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குப் பயன்படுத்தப்பட்டது. பிரத்தியேகமாகக் குடியேற்ற நாட்டு மக்களின் அரசியல் சுதந்திரத்திற்கான தகைமையை நிர்ணயிப்பதற்காகப் பிரயோகிக்கப்பட்டது. 1970ஆம் ஆண்டுக்குப் பின்பு இக் கோட்பாடு புத்தாக்கம் கண்டது. இவ்வாண்டிலேயே ஐ.நா.வில் ஒரு புதிய பிரகடனம் நிறைவேற்றப்பட்டது. 'அரசுகள் மத்தியில் நல்லுறவையும் ஒத்துழைப்பையும் நிலைநாட்டுவது பற்றிய சர்வதேச சட்ட விதிகள்' என்ற ஐ.நா பிரகடனம் நிறைவேற்றப்பட்டது. இப் பிரகடனத்தில் சுயநிர்ணய உரிமையின் உள்ளக, வெளியக அம்சங்கள் தெளிவாக வரையறுக்கப்பட்டு அக் கோட்பாடு புதிய அர்த்த பரிமாணங்களைப் பெற்றது. 'சுயநிர்ணயமும் சம உரிமை விதிகளும்' என்ற தலைப்பில் இப் பிரகடனத்திலுள்ள ஒரு விதி கீழ்க் கண்டவாறு கூறுகிறது:-

> "ஐ.நா. சாசனத்தில் பொறுக்கப்பட்டிருக்கும் சம உரிமைகளும் மக்களது சுயநிர்ணயமும் என்ற விதிக்கு இணங்க, எல்லா மக்களும், வெளிப்புறத் தலையீடு எதுவுமின்றி, தமது அரசியல் தகைமையைச் சுதந்திரமாகத் தீர்மானிப்பதற்கும், தமது பொருளாதார

சமூக, கலாச்சார வளர்ச்சியைப் பேணுவதற்கும் உரிமை உடையவர்களாவர். இந்தச் சாசனத்தின் கட்டுப்பாடுகளுக்கு அமைய ஒவ்வொரு அரசும் இந்த உரிமைக்கு மதிப்பளிக்கக் கடமைப்பட்டிருக்கிறது.''

1970ஆம் ஆண்டின் ஐ.நா. பிரகடன விதிகள் சுயநிர்ணய உரிமையின் உள்ளக, வெளியக அம்சங்களைத் தெளிவாக வேறுபடுத்திக் காட்டுகின்றன.

சுயநிர்ணய உரிமையானது, வழமையான உள்ளீட்டாக, அதாவது ஒரு அரச கட்டமைப்புக்கு உட்பட்டதாக நிறைவு பெற வேண்டும். ஐ.நா. சாசனத்தின் விதிகளுக்கு இசைவாக, ஒவ்வொரு அரசும் தனது ஆட்சிக்கு உட்பட்ட மக்களுக்குச் சம உரிமையையும், சுயநிர்ணய உரிமையையும் வழங்கக் கடமைப்பட்டிருக்கிறது. இதனையே உள்ளக சுயநிர்ணய உரிமையாக 1970ஆம் ஆண்டுப் பிரகடனம் எடுத்தியம்புகிறது.

சுதந்திரமான, இறையாண்மையுடைய அரசுகளின் பிரதேச ஒருமைப்பாட்டு உரிமையை இப் பிரகடனம் உறுதிப்படுத்துகிறது. ஆனால், அதேவேளை, பிரதேச ஒருமைப்பாட்டு உரிமையை வலியுறுத்தும் அரசுகள் சில தகைமைகளைப் பெற்றிருக்க வேண்டும் என்கிறது இப் பிரகடனம். அதாவது, எல்லா மக்களுக்கும் சம உரிமைகளையும் சுயநிர்ணய உரிமையையும் வழங்கி, இன மத வேறுபாடின்றி அந் நாட்டிலுள்ள மக்கள் சமூகத்தினர் அனைவரையுமே பிரதிநிதப்படுத்தும் ஒரு அரசுக்கு மட்டுமே பிரதேச ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் தகுதியும் தகைமையும் உண்டு என்கிறது இப் பிரகடனம்.

கியூபெக் மாநிலத்தின் பிரிவினைப் பிரச்சினை கனடாவின் உச்சநீதிமன்றத்தில் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டபோது, 1970ஆம் ஆண்டு ஐ.நா பிரகடனத்தினதும் மற்றும் சர்வதேச நியமங்களதும் அடிப்படையிலேயே உச்சநீதிமன்றம் தீர்ப்பை வழங்கியது. கனடாவின் பிரதேச ஒருமைப்பாட்டிற்கும் கியூபெக் மக்களின் உள்ளக சுயநிர்ணய உரிமைக்கும் மத்தியிலான உறவு பற்றியதாகவே இத் தீர்ப்பு அமைந்தது:-

"இப்போதுள்ள அரசுகள், கனடா உட்பட, தமது பிரதேச ஒருமைப்பாட்டைப் பேண விளைவதற்கும், ஒரு 'மக்கள்' தமது சுயநிர்ணய உரிமையை முழுமையாகப் பெற்றுக் கொள்ள முனைவதற்கும்

மத்தியில் முரண்பாடு எழுவதற்கு அவசியமில்லை. எவ்வித பாகுபாடுமன்றி முழு மக்களையும் அல்லது மக்கள் சமூகங்களையும் தனது ஆட்சியமைப்பில் பிரதிநிதப்படுத்தி, உள்ளீட்டான ஆட்சி ஒழுங்கில் சுயநிர்ணயத்தின் விதிகளுக்கு ஒரு அரசு மதிப்பளிக்குமானால், சர்வதேசச் சட்டத்திற்கு அமைய தனது பிரதேச ஒருமைப்பாட்டைப் பாதுகாப்பதற்கு அந்த அரசுக்கு உரிமையுண்டு."[4]

1970ஆம் ஆண்டு ஐ.நா. பிரகடனத்திலும் கனடா உச்சநீதிமன்றத் தீர்ப்பிலும் வெளியக சுயநிர்ணய உரிமைக்கு, அதாவது பிரிந்து சென்று தனியரசை அமைக்கும் உரிமைக்கு இடமளிக்கப்படுகிறது.

"ஒரு அரசின் பிரதேச ஒருமைப்பாட்டு உரிமையை இந்தப் பிரகடனம் உறுதிப்படுத்துகிறது. ஆனால் ஒரு சிறுபான்மை மக்களை அடக்குமுறைக்கு ஆளாக்கும் பொழுது, பிரிவினைக்கு இடமளிக்கும் விதிவிலக்காக, ஒரு அரசு தனது பிரதேச ஒருமைப்பாட்டு உரிமையை இழக்கிறது."[5]

ஒருதலைப்பட்சமான பிரிவினையைப் பிரகடனம் செய்யும் பிரத்தியேகச் சூழ்நிலை பற்றிக் கனடிய உச்சநீதிமன்றத் தீர்ப்பு கீழ்க் கண்டவாறு தெரிவிக்கிறது:-

"அரசியல் சுதந்திரத்தைத் தேர்ந்தெடுக்கும் அல்லது நிறுவிக் கொள்ளும் உரிமையான வெளியக சுயநிர்ணய உரிமை இரு வகுப்பினரான மக்களுக்கு (குடியேற்ற ஆட்சியின் கீழுள்ள மக்களுக்கு அல்லது அந்நிய ஆதிக்கத்தின் கீழுள்ள மக்களுக்கு) உரித்தாகும்.

ஏகாதிபத்திய வல்லரசிடமிருந்து உறவை முறித்துக் கொண்டு, தமது சுயநிர்ணய உரிமையை நிலைநாட்டுவதற்குக் குடியேற்ற நாட்டு மக்களுக்கு உரிமையுண்டு என்பது இப்பொழுது விவாதத்திற்கு இடமற்ற உண்மையாகிவிட்டது.

குடியேற்றத்திற்கு வெளியான சூழ்நிலையை எடுத்துக் கொண்டால், ஒரு மக்கள் சமூகம் அந்நிய

அடக்குமுறைக்கும் ஆதிக்கத்திற்கும், சுரண்டல் முறைக்கும் ஆளாகும்பொழுது வெளியக சுயநிர்ணய உரிமையை நிலைநாட்டலாம்.

ஒருதலைப்பட்சமான பிரிவினைக்கு சுயநிர்ணய உரிமையைப் பாவிக்கும் மூன்றாவது சூழ்நிலை பற்றியும் சில மதிப்புரைஞர்கள் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள். இந்த மூன்றாவது சூழ்நிலை பற்றிப் பலதரப்பட்ட அபிப்பிராயங்கள் தெரிவிக்கப்பட்ட போதும், ஒரு மக்கள் சமூகம் தனது உள்ளக சுயநிர்ணய உரிமையை அர்த்தபூர்வமான முறையில் அடைவதற்குத் தடை ஏற்படுமானால், இறுதி வழிமுறையாகப் பிரிந்து செல்லும் உரிமையைப் பிரகடனப்படுத்த அம் மக்களுக்கு உரிமையுண்டு"[6]

சுயநிர்ணய உரிமையின் உள்ளக வெளியக அம்சங்கள் ஒன்றோடு ஒன்று இணையப் பெற்று இருக்கின்றன. மக்களின் சம உரிமைகளும், சுயநிர்ணய உரிமையும் உள்ளீட்டாக நிறைவு செய்யப்படுவது அரசுகளின் கடப்பாடு என்பதை ஐ.நா. பிரகடனங்கள் வலியுறுத்தியுள்ளதை நாம் பார்த்தோம். ஒரு அரசின் கட்டமைப்புக்கு உள்ளேயே இந்த உரிமைகள் (சம உரிமையும் சுயநிர்ணய உரிமையும்) நிறைவு காணப்பட்டால் மட்டுமே ஒரு அரசானது பிரதேச ஒருமைப்பாட்டை வலியுறுத்த முடியும். ஆனால் ஒரு மக்கள் சமூகத்திற்கு அதன் உள்ளக சுயநிர்ணய உரிமை மறுக்கப்பட்டு, அரசாட்சியிலிருந்து ஒதுக்கப்பட்டு, அடக்குமுறைகளுக்கு ஆளாக்கப்பட்டால், அம் மக்களுக்கு வெளியக சுயநிர்ணய உரிமைக்கு, அதாவது பிரிந்து சென்று அரசியல் சுதந்திரத்தை நிலைநாட்டும் உரிமைக்கு உரித்துண்டு. உள்ளக சுயநிர்ணய உரிமை மறுக்கப்பட்டு, அரச அடக்குமுறைக்கு ஆளாகும் மக்கள் வெளியக சுயநிர்ணய உரிமைக்கு உரித்தானவர்கள் என்பதை, 1970இன் ஐ.நா.பிரகடனத்தையும் கனடிய உச்சநீதிமன்றத் தீர்ப்பையும் மேற்கோள் காட்டி நிறைய ஆய்வுப் பிரசுரங்கள் வெளியாகியுள்ளன.

சுயநிர்ணய உரிமையின் உள்ளக, வெளியகப் பரிமாணங்களின் உறவுநிலையை ஆதாரமாகக் கொண்டே விடுதலைப் புலிகளின் கொள்கை நிலைப்பாட்டைப் பரிசீலனை செய்ய வேண்டும்.

வடகிழக்கு மாநிலத்தில் வாழும் தமிழ் மக்கள் ஒரு தனித்துவமான மக்கள் சமூகமாக அமையப் பெற்றிருக்கிறார்கள். ஒரு தனித்துவச் சிறப்புடைய மக்கள் என்பதால் அவர்கள், சுயநிர்ணய உரிமையின் உள்ளக, வெளியகக் கூறுகள் இரண்டிற்கும் உரித்தானவர்கள். சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில், அந்நியத் தலையீடு எதுவுமின்றித் தமது அரசியல் தகைமையைத் தாமே சுதந்திரமாக நிர்ணயித்துக் கொள்ளவும், தமது சமூக, பொருளாதார, கலாச்சார வாழ்வைத் தாமே மேம்பாடு செய்யவும் தமிழ் மக்களுக்கு உரிமையுண்டு.

தமிழ் மக்களின் உள்ளக சுயநிர்ணய உரிமைக் கோரிக்கையை தலைவர் பிரபாகரன், 2002ஆம் ஆண்டு மாவீரர் நாள் உரையில், சிறப்பான முறையில், கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

> "தமிழ் மக்கள் தமது சொந்த மண்ணில், வரலாற்று ரீதியாக வாழ்ந்து வரும் பாரம்பரிய மண்ணில், அந்நிய சக்திகளின் ஆதிக்கம், தலையீடு இன்றி, சுதந்திரமாக, கௌரவமாக வாழ விரும்புகிறார்கள். தமது மொழியை வளர்த்து, தமது பண்பாட்டைப் பேணி, தமது பொருளாதாரத்தை மேம்படுத்தி, தமது இன அடையாளத்தைப் பாதுகாத்து, வாழ விரும்புகிறார்கள். தமது தாயக மண்ணில் தம்மைத் தாமே ஆளும் சுயாட்சி உரிமையோடு வாழ விரும்புகிறார்கள். இதுவே எமது மக்களின் அரசியல் அபிலாசை. உள்ளக சுயநிர்ணயத்தின் அர்த்த பரிமாணம் இதில்தான் அடங்கியிருக்கிறது."

தமிழ் மக்கள், தமது வரலாற்றுத் தாயக மண்ணில், தம்மைத் தாமே ஆளும் தன்னாட்சி அதிகாரத்தை, அதாவது உள்ளக சுயநிர்ணய உரிமையை வேண்டினார் பிரபாகரன். ஆயினும் அவர், உள்ளக சுயநிர்ணய உரிமையின் எல்லை வரம்புடன் நின்றுவிடவில்லை. ஐ.நா. பிரகடனத்தில், அரசுகளின் கடப்பாட்டு விதியாக நெறிக்கப்பட்டிருக்கும், 'சம உரிமைகளையும் சுயநிர்ணயத்தையும்', பௌத்த - சிங்கள பேரினவாதச் சகதிக்குள் புதைந்து கிடக்கும் சிங்கள அரசு தமிழர்களுக்கு வழங்கிவிடப் போவதில்லை என்பது பிரபாகரனுக்கு நன்கு தெரியும். ஆகவேதான் அவர் வெளியக சுயநிர்ணய உரிமையைப் பிரகடனம் செய்வது பற்றி ஒரு

கண்டிப்பான எச்சரிக்கையை விடுக்கிறார். எமது மக்களுக்கு உரித்தான உள்ளக சுயநிர்ணய உரிமை மறுக்கப்பட்டு, பிரதேச தன்னாட்சி உரிமை நிராகரிக்கப்பட்டால், வெளியக சுயநிர்ணய உரிமையைப் பிரகடனம் செய்து பிரிந்து சென்று தனியரசை அமைக்கத் தமிழ் மக்கள் நிர்ப்பந்திக்கப்படுவார்கள் என்பதையும் அம் மாவீரர் தின உரையில் அவர் அழுத்தம் திருத்தமாக அறைகூவியிருக்கிறார்.

அரச அடக்குமுறைக்கும், அந்நிய இராணுவ ஆக்கிரமிப்புக்கும் எதிரான ஒரு தேசிய விடுதலைப் போராட்டத்தை முன்னெடுத்துவரும் எமது விடுதலை இயக்கம், தனது அரசியற் கொள்கை நிலைப்பாட்டை, உள்ளக வெளியகக் கூறுகள் இணைந்த சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில் நெறிப்படுத்தியிருக்கிறது. சாராம்சத்தில் இந்தக் கொள்கை நிலைப்பாடு, ஐ.நா. பிரகடனங்களுக்கும், சர்வதேசச் சட்ட நியமங்களுக்கும் இசைவாக கட்டி எழுப்பப்பட்டிருக்கிறது.

எமது நியாயமான விடுதலைப் போராட்டத்திற்குச் சர்வதேசச் சமூகத்தின் அங்கீகாரத்தை நாம் பெறுவதாயின், ஐ.நா. சாசனங்களுக்கு இசைவாக எமது போராட்டப் பாதையை நெறிப்படுத்துவது சாலச் சிறந்தது.

## உயர் பாதுகாப்பு வலயம் பற்றிய சர்ச்சை

போர் நெருக்கடியைத் தணித்து, இயல்பு நிலையைத் தோற்றுவிப்பதற்கான உப-குழுவின் இரண்டாவது சந்திப்பு, 2002 டிசம்பர் 14ஆம் நாளன்று யாழ் குடாநாட்டின் தென் பிராந்திய எல்லைப் பட்டினமாகிய முகமாலையில் நடைபெற்றது. மிகவும் சர்ச்சைக்குரிய பிரச்சினையாக உயர் பாதுகாப்பு வலயம் சம்பந்தமாக விடுதலைப் புலிகளும் அரச பிரதிநிதிகளும் ஏழு மணி நேரம் வரை நீண்டதொரு கலந்துரையாடலை நிகழ்த்தினர். குறிப்பாக, மோசமடைந்து வரும் யாழ்ப்பாண நிலவரம் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

உயர் பாதுகாப்பு வலயங்கள் எனச் சிறீலங்கா இராணுவம் பிரகடனம் செய்துள்ள பகுதிகளில் இடம்பெயர்ந்துள்ள எமது மக்களை மீளக் குடியேற்றம் செய்யும் அவசியத்தை விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள் வற்புறுத்தினர். உயர் பாதுகாப்பு வலயங்கள் அமைந்திருக்கும் பகுதிகளில் குடிமக்களை

மீள்குடியமர்த்தும் திட்டம் ஒன்றை டிசம்பர் 21ஆம் நாளுக்கு முன்னர் தான் சமர்ப்பிக்க இருப்பதாக யாழ்ப்பாணத் தளபதி ஜெனரல் சரத் பொன்சேகா தெரிவித்தார். மீள்குடியேற்றப் பிரச்சினையில் இராணுவத் தரப்பு இறுக்கமான கடும்போக்கை கடைப்பிடிப்பதாகவும் தமிழ் மண்ணில் தனது ஆக்கிரமிப்புப் பிடியை இராணுவம் தளர்த்தப் போவதில்லை என்றும் புலிகள் தரப்பில் இந்த உப-குழுவுக்குத் தலைமை வகித்த வட பிராந்திய கட்டளைத் தளபதி கேணல் தீபன், தலைவர் பிரபாகரனிடம் தெரிவித்திருந்தார்.

ஜெனரல் பொன்சேகா, தான் வாக்குறுதி அளித்தது போல, 2002 டிசம்பர் 20ம் நாளன்று, உயர் பாதுகாப்பு வலயம் சம்பந்தமான தமது திட்டத்தை விடுதலைப் புலிகளிடம் சமர்ப்பித்தார். போர் நிறுத்தக் கண்காணிப்புக் குழு மூலமாக விடுதலைப் புலிகளின் தலைமைப்பீடத்திற்கு சமர்ப்பிக்கப்பட்ட இத் திட்டம் எமது இயக்கத்திற்கு கடும் சினத்தை ஏற்படுத்தியதுடன் பெரும் சர்ச்சையையும் தோற்றுவித்தது. இடம்பெயர்ந்த மக்கள் தமது வீடுகளுக்கும் கிராமங்களுக்கும் சென்று குடியமர்வதானால் 'விடுதலைப் புலிகள் தமது போராளிகளிடமிருந்து ஆயுதங்களைக் களைவதோடு தமது நீள்தூர சுடு கலன்களையும் கையளிக்க வேண்டும்' என்ற நிபந்தனையைச் சாரமாகக் கொண்டு பொன்சேகாவின் திட்டம் அமைகிறது. பகை உணர்வுடன் மிகவும் காரமான வார்த்தைப் பிரயோகத்துடன் வரையப்பட்ட அக் கடிதத்தில் விடுதலைப் புலிகளைப் 'பயங்கரவாதிகள்' எனப் பொன்சேகா குறிப்பிட்டிருந்தார். இடம்பெயர்ந்த மக்களின் பிரச்சினைகளைத் தீர்த்து விட்டால் புலிகள் இயக்கத்திற்கு நற்பெயர் ஏற்பட்டு விடும் எனவும் அவர் ஆதங்கம் தெரிவித்திருந்தார். 'உயர்பாதுகாப்பு வலயப் பகுதிகளில் இடம்பெயர்ந்தோரைக் குடியமர்த்தினால் அது விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு பெரும் அரசியல் வெற்றியாக முடியும். அது யாழ்ப்பாணத்தின் அரசியல் சூழ்நிலையை விடுதலைப் புலிகளுக்கு சாதகமாக்கிவிடும்' எனவும் அவர் குறிப்பிட்டார். உயர் பாதுகாப்பு வலயங்களைப் பலவீனப்படுத்தும் எவ்வித நடவடிக்கைகளையும் எடுக்கக் கூடாதெனவும் ஜெனரல் பொன்சேகா அரசாங்கத்தை எச்சரித்தும் இருந்தார்.

யாழ்ப்பாண இராணுவத் தளபதி முன்வைத்த திட்டத்தை விடுதலைப் புலிகள் இயக்கம் உடனடியாகவே நிராகரித்தது.

டிசம்பர் 26ஆம் நாளன்று, எமது அமைப்பு விடுத்த காரசாரமான அறிக்கையில், இடம்பெயர்ந்த மக்களை மீள்குடியேற்றும் ஒரு மனிதாபிமானப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு ஏற்றுக் கொள்ள முடியாத கடும் நிபந்தனைகளை விதிக்க முனைவதாக இராணுவத் தலைமை மீது குற்றம் சுமத்தியது.

"ஜெனரல் பொன்சேகாவின் திட்டத்தை ஆழமாகப் பரிசீலித்துப் பார்த்த பொழுது, யாழ்ப்பாண மக்களின் அவசர வாழ்க்கைப் பிரச்சினைகளை நகர்த்துவதற்கு சிறீலங்கா இராணுவம் தயாராக இல்லை என்பது தெட்டத் தெளிவாகத் தெரிகிறது. எமது மக்களின் ஜீவாதாரப் பிரச்சினைகளை இரண்டாம் தரமாக சிறுமைப்படுத்தித் தனது பாதுகாப்புக்கும், வசதியான வாழ்வுக்குமே இராணுவம் முதன்மை கொடுக்கிறது. கடும்போக்கும் பகையுணர்வும் தொனிக்கும் மொழியில் வரையப்பட்ட இத் திட்டத்தில், தமிழ் மக்களின் அவலமான பிரச்சினைகளை அசட்டை செய்து, விடுதலைப் புலிகளுக்கு அரசியல் அனுகூலம் கிட்டுவதை அனுமதிப்பதா, இல்லையா என்ற விடயத்திற்கே முக்கியத்துவம் கொடுபடுகிறது....."

"சிறீலங்கா இராணுவம் சமாதான முயற்சிக்கு எதிரானது என்பது இப்பொழுது தெளிவாகிறது. இன நெருக்கடியைத் தீர்க்கும் சமரச முயற்சிகளுக்குத் தனது கடும்போக்குப் பாரதூரமான எதிர்மறை விளைவுகளை ஏற்படுத்தும் என்பது இராணுவத்திற்கு நன்கு தெரியும். போர் நிறுத்த உடன்பாட்டுக் கடப்பாடுகளையும், மற்றும் சிறீலங்கா அரசாங்கம் வழங்கிய உறுதிமொழிகளையும் நிறைவு செய்ய மறுத்து வரும் இராணுவம், யாழ்ப்பாண மக்களின் துயர்களைத் துடைப்பதற்கு ஏற்றுக் கொள்ள முடியாத நிபந்தனைகளை முன்வைக்கிறது."

என விடுதலைப் புலிகளின் அறிக்கையில் தெரிவிக்கப்பட்டது.

உயர்பாதுகாப்பு வலயம் சம்பந்தமாக ஜெனரல் பொன்சேகா முன்வைத்த திட்டம் குறித்து ஒரு சர்ச்சை நடைபெற்றுக் கொண்டிருந்த வேளை, போர் நிறுத்த உடன்பாட்டின் ஓராண்டு நிறைவை முன்னிட்டுக் கண்காணிப்புக் குழுவின் தலைவர் ஜெனரல் பூரகோவ்டே டிசம்பர் 26ஆம் திகதி ஒரு அறிக்கையை

வெளியிட்டார். இந்த அறிக்கையில், பொன்சேகாவின் திட்டத்திற்குச் சார்பான முறையில் அவர் தெரிவித்த கருத்துக்கள் விடுதலைப் புலிகளுக்குச் சினத்தை மூட்டியது. உயர் பாதுகாப்பு வலயம் பற்றிக் கருத்துத் தெரிவிக்கையில் அவர் கீழ்கண்டவாறு கூறினார்:-

> "சமாதானத்தைக் கட்டி எழுப்புவதானால் இரு தரப்புப் படைகளும் உறுதியான நிலையில் வைத்திருக்கப்பட வேண்டும். யாழ்ப்பாணத்தில், உயர் பாதுகாப்பு வலயங்களைக் கலைத்து, நிலங்களை மீள் குடியேற்றத்திற்கும் வேளாண்மைக்கும் கையளித்தால் அரசாங்கப் படைகளின் பாதுகாப்பும் அவர்களது போராடும் வலுவும் குறையும். படைச் சம வலுவானது போர் நிறுத்த உடன்பாட்டிற்கு அடிப்படையானது. அந்த சம வலுவைக் குழப்பினால் போர் நிறுத்தம் குழம்பும்."

இந்த அறிக்கையால் ஆத்திரமடைந்த பிரபாகரன், ஜெனரல் பூரகோவ்டேயின் நிலைப்பாட்டைக் கண்டித்து ஒரு அறிக்கை வெளியிடுமாறு என்னைப் பணித்தார். ஜெனரல் பொன்சேகாவின் கடும்போக்கைக் கண்காணிப்புக் குழுத் தலைவர் ஆதரித்ததைத் தொடர்ந்து நெருக்கடியைத் தணித்து இயல்பு நிலையை ஏற்படுத்தும் உப-குழுவைச் செயற்படுத்துவதில் அர்த்தமில்லை என்றும் தெரிவித்தார். இந்த உப-குழுவைக் கலைத்து விடுவது என்ற தனது முடிவை அடுத்த கட்டப் பேச்சின் போது அரச தரப்புக்கு அறிவித்து விடுமாறும் திரு. பிரபாகரன் என்னைக் கேட்டுக் கொண்டார். தமிழீழ விடுதலைப் புலிகளின் பேச்சுக் குழுத் தலைவர் என்ற முறையில் ஜெனரல் பூரகோவ்டேக்கு நான் கீழ்க் கண்டவாறு எழுதினேன்.

> "உயர் பாதுகாப்பு வலயங்கள், மீள் குடியேற்றம், போர் நெருக்கடியைத் தணித்தல், இயல்பு நிலையைத் தோற்றுவித்தல் போன்ற பிரச்சினைகள் குறித்து நேற்றைய தினம் (26 டிசம்பர் 2002) நீங்கள் விடுத்த அறிக்கையைக் கவனமாகப் பரிசீலனை செய்தோம். போர் நிறுத்த உடன்பாட்டின் கீழ் ஓராண்டு அமைதிக் காலம் பற்றிய உங்களது மதிப்பீட்டில் சில ஆக்கபூர்வமான அம்சங்கள் இருந்த போதும் யாழ்ப்பாணத்தின் பாதுகாப்பு நிலவரம் பற்றி நீங்கள் கூறிய கருத்துக்களை எம்மால் ஏற்றுக் கொள்ள

முடியாது.

யாழ்ப்பாணக் குடாநாட்டில் உள்ளீட்டாக இடம்பெயர்ந்த நூற்றாயிரக்கணக்கான மக்களை மீள் குடியேற்றும் பிரச்சினையானது இப்பொழுது ஒரு பாரிய மனிதாபிமானப் பிரச்சினையாக விஸ்வரூபம் எடுத்திருப்பதோடு, பேச்சுவார்த்தைகளில் மையப் பிரச்சினையாகவும், வெகுசனப் போராட்டத்தை வெடிக்கச் செய்யும் விடயமாகவும் இருந்து வருகிறது. யாழ்ப்பாணக் குடாநாட்டின் 30 விகிதமான நிலப்பரப்பை பலவந்தமாக விழுங்கிக் கொண்ட சிறீலங்கா இராணுவம், அந்தப் பகுதிகளை 'உயர் பாதுகாப்பு வலயங்கள்' என உரிமை கொண்டாடுகிறது. இடம்பெயர்ந்த மக்கள் தமது சொத்துக்களை மீளப் பெறுவதற்குச் சிறீலங்கா இராணுவம் கடும் எதிர்ப்புத் தெரிவிப்பது பாரதூரமான மனித உரிமை மீறல் என்பதை நீங்கள் நன்கறிவீர்கள். அத்தோடு, பொதுக் கட்டிடங்களிலிருந்து விலகாமலும், மீன்பிடித் தடைகளை நீக்காமலும், அரசாங்கப் படைகள் போர் நிறுத்த உடன்பாட்டுக் கடப்பாடுகளை நிறைவு செய்யத் தவறியுள்ளன. இந்தச் சூழ்நிலையில், போர் நெருக்கடியைத் தணிக்கும் விவகாரத்துடன் எமது போராளிகளின் ஆயுதக் களைவைத் தொடர்புபடுத்தி யாழ்ப்பாண இராணுவத் தளபதி ஜெனரல் பொன்சேகா விடுத்த ஆத்திரமூட்டும் அறிக்கையானது சமாதான வழிமுறையில் எமக்கிருந்த நம்பிக்கையை ஆழமாகப் பாதித்ததுடன், பொது மக்களையும் விரக்தியடையச் செய்தது.

எமக்கு ஆழமான ஏமாற்றத்தையும் கொடுத்த விடயம் என்னவென்றால், பாதுகாப்புக் காரணங்களுக்காக உயர் பாதுகாப்பு வலயங்கள் தொடர்ந்து இருக்க வேண்டும் என்பதைக் கண்காணிப்புக் குழுவின் சார்பில், நீங்கள் நியாயப்படுத்தியதுதான். உயர் பாதுகாப்பு வலயங்களைக் குழப்பினால் அரச படைகளின் பாதுகாப்பும், அவர்களது போராடும் வலுவும் குறைந்துவிடுமென நீங்கள் மேற்கொண்ட மதிப்பீட்டை எம்மால் ஏற்றுக் கொள்ள முடியாது. சட்ட விரோதமான முறையில், பொது சனத்தின்

சொத்துக்களை ஆக்கிரமித்து நிற்கும் ஆயுதப் படைகளின் அராஜகத்தை உங்களது நிலைப்பாடு நியாயப்படுத்துவதாக அமைகிறது. படைச் சம வலு என்ற உங்களது இராணுவ வாதம், இடம்பெயாந்துள்ள சமூகத்தின் மாபெரும் மனிதாபிமானப் பிரச்சினையைச் சிறுமைப்படுத்தி அலட்சியம் செய்வதாக இருக்கிறது.

யாழ்ப்பாணத்திலிருந்து துருப்புகளை விலகும்படியோ அல்லது சகல இராணுவ முகாம்களையும் மூடிவிடுமாறோ விடுதலைப் புலிகள் கோரவில்லை. மக்கள் நெருக்கமான பகுதிகளில் இருந்தும், குடியிருப்புகளில் இருந்தும் இராணுவத்தினர் விலக்கப்பட்டு வேறு இடங்களுக்கு மாற்றப்பட்டதால், இடம்பெயர்ந்த மக்களை மீள்குடியேற்றம் செய்வது வசதியாக இருக்கும் என்பதுதான் எமது நிலைப்பாடு. யாழ்ப்பாணத்திலுள்ள இராணுவக் கட்டுப்பாட்டுப் பகுதிகளில் இயங்கும் எமது போராளிகள் ஆயுதம் தரிக்கவில்லை என்பதால், அவர்களால் இராணுவத்திற்கு அச்சுறுத்தல் எழப்போவதில்லை. அத்துடன் படைச் சம வலு குழம்பப் போவதுமில்லை.

எம்மைப் பொறுத்த வரை நெருக்கடியைத் தணித்தல் என்பதும், இயல்பு நிலையைத் தோற்றுவிப்பது என்பதும் ஒன்றோடு ஒன்று இணைந்த விடயங்கள். நெருக்கடியின் தீவிரத்தைக் குறைத்து, பொதுமக்களின் சாதாரண வாழ்வில் இயல்பு நிலையை ஏற்படுத்துவதையே இவை குறிக்கின்றன. எமது மக்கள் தமது சொந்த வீடுகளில், அமைதியாகக் கௌரவமாக வாழும் உரிமையை மறுத்து, தீவிரமான இராணுவ ஆக்கிரமிப்பை ஆதரித்து, நீங்கள் எடுத்துள்ள நிலைப்பாடானது, உங்களது அறிக்கையில் கூறப்படும் அரசியல், தத்துவார்த்தக் கருத்துக்களுக்கு முற்றிலும் முரணானவையாகும். அப்பாவிப் பொதுமக்களைப் பாதுகாப்புக் கேடயமாகப் பாவிக்கும் கபட நோக்குடனேயே இராணுவம் இந்தப் பாதுகாப்பு வலயங்களைச் சன நெரிசலான பகுதிகளில் உருவாக்கியது. இந்த நாசகாரத் திட்டத்தை சம வலுக் கோட்பாட்டின் அடிப்படையில் நியாயப்படுத்த முடியாது.

உயர் பாதுகாப்பு வலயம் சம்பந்தமாக யாழ்ப்பாண

இராணுவத் தளபதி எடுத்த கடும் போக்கும் அதனை நியாயப்படுத்தி நீங்கள் வெளியிட்ட அறிக்கையும், போர் நெருக்கடியைத் தணித்து, இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் உப-குழுவை அர்த்தமற்றதாகவும், அவசியமற்றதாகவும் செய்துவிட்டது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம்."

## நான்காவது கட்டச் சுற்றுப் பேச்சு

ஒரு நெருக்கடியான அரசியல் - இராணுவப் பின்புலத்தில், நான்காவது கட்டச் சுற்றுப் பேச்சு, தாய்லாந்தில், நக்ரோம் பதம் என்னுமிடத்திலுள்ள ரேஸ் கார்டன் விடுதியில், 2003, ஜனவரி 6-9 ஆம் நாட்களில் நடைபெற்றது.

உயர் பாதுகாப்பு வலயம் பற்றிய ஜெனரல் பொன்சேகாவின் திட்டத்தைச் சிறீலங்கா இராணுவத் தலைமை பத்திரிகைகளுக்கு கசியச் செய்ததால் ஏற்கனவே ஒரு பெரும் சர்ச்சை எழுந்திருந்தது. இதற்கிடையில், தாய்லாந்துப் பேச்சுக்களுக்கு ஒரு சில நாட்களுக்கு முன்னர், சிறீலங்கா இராணுவத் தளபதி ஜெனரல் பலேகல, ஒரு பொதுக் கூட்டத்தில் பேசும் பொழுது, விடுதலைப் புலிகள் தமது கனரக ஆயுதங்களைக் கையளித்தால் அன்றி, உயர் பாதுகாப்பு வலயத்திலுள்ள கிராமங்களில் இடம்பெயர்ந்த மக்கள் குடியமர்த்தப்பட மாட்டார்கள் எனப் பகிரங்கமாக அறிவித்தார். இது இவ்வாறிருக்க, எரியும் நெருப்பில் எண்ணெய் ஊற்றியதுபோல, ஜெனரல் பொன்சேகாவை, ஜனாதிபதி மாளிகையில் கௌரவித்த சந்திரிகா குமாரதுங்கா உயர் பாதுகாப்பு வலய விவகாரத்தில் அவர் எடுத்த 'துணிகரமான' முடிவைப் புகழ்ந்துரைத்தார். உயர் பாதுகாப்பு வலயப் பிரச்சினையில் இராணுவம் மேற்கொண்ட கடும் போக்கும், அதற்கு ஜனாதிபதி வழங்கிய ஆதரவும், தமிழர் தாயகத்தில் இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் அவசர மனிதாபிமான தேவைக்குப் பெரும் பின்னடைவை ஏற்படுத்தியது. இந் நிலைமை தொடர்ந்தால், சமாதானப் பேச்சுக்கள் முன்னேறுவது முடங்கிவிடுமென நான் கருதினேன். உயர் பாதுகாப்பு வலயப் பிரச்சினையால் சமாதான முயற்சிக்குப் பெரும் நெருக்கடி எழுந்துள்ள நிலையில், அரச பேச்சுக் குழுப் பிரதிநிதிகளும் நோர்வே அனுசரணையாளர்களும், இவ்

விவகாரத்தில் எவ்வித கரிசனையும் காட்டாது, களிப்புடன் காணப்பட்டது எனக்கு ஒருபுறம் வியப்பையும் மறுபுறம் எரிச்சலையும் உண்டு பண்ணியது.

பேச்சுக்களை ஆரம்பித்து வைத்துப் பேசிய நான், 'இராணுவ ஆக்கிரமிப்பு வலயங்களில்' இடம்பெயர்ந்த மக்களை மீள்குடியேற்றம் செய்வதற்கு ஜெனரல் பொன்சேகா விதித்துள்ள 'அபத்தமான நடைமுறைச் சாத்தியமற்ற' நிபந்தனைகளை வன்மையாகக் கண்டித்தேன். சமாதானச் சூழ்நிலையிலும் தமது சொந்த இருப்பிடங்களுக்குத் திரும்ப முடியாத பெரும் துன்பங்களைச் சுமந்து நிற்கும் எமது மக்களின் அவல வாழ்க்கை பற்றி ஒரு நீண்ட விளக்கம் கொடுத்தேன். இடம்பெயர்ந்த மக்களின் உரிமை பற்றிய ஐ.நா. பிரகடனங்களை அப்பட்டமான முறையில் இராணுவம் மீறுவதாகவும் நான் குற்றம் சுமத்தினேன். இராணுவத்தின் இக் கடும்போக்குக் காரணமாக, நெருக்கடியை தணித்து, இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் உப-குழு அர்த்தமிழந்து போனதாகவும் கூறினேன். இராணுவத்தின் போக்கு விடுதலைப் புலிகளின் தலைமைக்கு ஆழமான ஏமாற்றத்தை கொடுத்திருப்பதாகத் தெரிவித்த நான், இந்த உப-குழு செயலிழந்து செத்துப் போனதாகவே பிரபாகரன் கருதுவதாகவும், அதனைப் பேச்சுவார்த்தை மேசையில் அறிவிக்கும்படி என்னைப் பணித்ததாகவும் எடுத்துரைத்தேன்.

எனது குற்றசாட்டுகளுக்கு அரச தரப்பு பிரதிநிதிகள் எவருமே பதிலளிக்கவில்லை. பேச்சுக் குழுத் தலைவரான பேராசிரியர் பீரிஸ் தலைகுனிந்தவாறு மௌனத்தில் ஆழ்ந்திருந்தார். இவர்களது போக்கு எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ஒன்று, நான் கூறியவற்றை இவர்கள் பாரதூரமாக எடுக்கவில்லைப் போலும். அல்லது, இந்தப் பாரதூரமான விடயத்தை 'அடக்கி வாசிக்க' விரும்பினார்களோ தெரியவில்லை. அல்லது நான் உணர்ச்சி வசப்பட்டு, ஆத்திரத்துடன் அநாவசியமாகக் கத்துகிறேன் என்று எண்ணினார்களோ தெரியவில்லை. எது எப்படியோ, அவர்களது மௌனம் ரணிலின் அரசாங்கத்தினது இயலாத்தனத்தை வெளிக்காட்டுவது போல எனக்குத் தென்பட்டது. இதற்குள் பேச்சுக்குத் தலைமை வகித்த விடார் ஹெல்கிசன் குறிக்கிட்டார். நிகழ்ச்சி நிரலின்படி இன்று நாம் கலந்துரையாட வேண்டிய விடயம் 'சிரான்' உப-குழு பற்றியதே என்றும் நாளைய தினமே நெருக்கடி தணிக்கும்

உப-குழு பற்றிப் பேச வேண்டும் என்றார். இந்த அலட்சியப் போக்கு எனக்கு எரிச்சலை மூட்டியது. 'செத்துப் போன குழுபற்றி நாளைக்கு எதைப் பேசுவது' என்று எனக்குள் முணுமுணுத்துக் கொண்டேன்.

வன்னியில் நடைபெற்ற 'சிரான்' உப-குழுக் கூட்டங்கள் பற்றித் தமிழ்ச்செல்வன் அறிக்கை சமர்ப்பித்தார். உப-குழுவின் செயற்பாடு மந்த நிலையை அடைந்திருப்பதாகத் தெரிவித்த அவர், மனிதாபிமான, புனர்வாழ்வுச் செயற் திட்டங்களை உடனடியாக நடைமுறைப்படுத்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென வற்புறுத்தினார். மனிதாபிமான நிவாரண உதவிகள் மக்களைச் சென்றடையாததால், சமாதான முயற்சியில் மக்களுக்கு நம்பிக்கை இடிந்து வருவதாகவும் தமிழ்ச்செல்வன் தெரிவித்தார். தமிழ் மக்களின் சமூகப் பொருளாதார வாழ்வு மேலும் மேலும் மோசமடைந்து வருவதாகத் தெரிவித்த அவர், துயருறும் மக்கள் விரக்தியின் எல்லைக்கு தள்ளப்படுவதாகவும் கூறினார். தமிழ்ப் பகுதியில் புனர்வாழ்வுப் பணிகளில் ஈடுபட்டிருக்கும் அரச நிறுவனங்களும், நிர்வாக அமைப்புகளும் ஒரே காரியாலயத்தில் முரண்பாடாகச் செயற்பட்டுக் குழப்புவதாகவும் தமிழ்ச்செல்வன் குற்றம் சாட்டினார். நீண்ட நேர விவாதத்தின் பின்பு, அவசர மனிதாபிமான, நிவாரணப் பணிகளில் முக்கிய முடிவுகளை எடுக்கும் பிரதான மைய நிறுவனமாக இனிமேல் 'சிரானை' முன்னெடுப்பது என்றும் இத் துறையில் ஈடுபட்ட ஏனைய நிறுவனங்கள் அனைத்தும் 'சிரானுடன்' இணைந்து செயற்பட வேண்டும் என்றும் முடிவெடுக்கப்பட்டது.

அடுத்ததாக, பெண்ணிய விவகாரக் குழுவுக்கு இரு தரப்பிலிருந்தும் ஐந்து பிரதிநிதிகளை நியமிப்பதென முடிவாகியது. விடுதலைப் புலிகள் சார்பில் செல்வி சிவகாமி சுப்பிரமணியம் (தமிழினி), செல்வி ரேணுகா சண்முகராசா, செல்வி மதிமலர் பாலசிங்கம், செல்வி சிறீதேவி சின்னத்தம்பி, செல்வி வசந்தா சோமசுந்தரம், அரச தரப்பில் கலாநிதி குமாரி ஜெயவர்த்தனா, கலாநிதி தீபிகா உடகம, செல்வி குமுதினி சாமுவேல், செல்வி பைசோன் சகாரியா, கலாநிதி பசீலா ரியா ஆகியோர் நியமிக்கப்பட்டனர்.

அன்றைய நாள் பேச்சுக்கள் முடிந்ததும், மாலை நேரம், றேஸ் கார்டன் விடுதி வரவேற்பு மண்டபத்திற்குச் சென்ற என்னைப் பத்திரிகையாளர்கள் சூழ்ந்து கொண்டனர். யாழ்ப்பாண

இராணுவத் தளபதி ஜெனரல் பொன்சேகா உயர் பாதுகாப்பு வலயம் சம்பந்தமாக வெளியிடப்பட்ட சர்ச்சைக்குரிய திட்டம் பற்றியும், நெருக்கடியைத் தணித்து இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் உப-குழுவின் எதிர்காலம் பற்றியும் கேள்விக்கு மேல் கேள்வி எழுப்பினார்கள் பத்திரிகையாளர்கள்.

ஜெனரல் பொன்சேகாவின் திட்டம் 'ஆத்திரமூட்டுவதும் நடைமுறைச் சாத்தியமற்றதும்' என எமது இயக்கத்தின் நிலைப்பாட்டை விளக்கினேன். இராணுவத்தின் இக் கடும் போக்கான நிலைப்பாடு காரணமாக நெருக்கடியைத் தணிக்கும் உப-குழு இனிமேல் இயங்கப் போவதில்லை என்று கூறினேன். மேலும் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் 'உப-குழு செயலிழந்து செத்துப் போய் விட்டது' என அழுத்தம் திருத்தமாகச் சொன்னேன். இந்த உப-குழு பற்றி, பத்திரிகையாளர்கள் எதற்காகக் கேள்விக் கணைகளை எறிந்து துளைக்கிறார்கள் என்ற காரணம் எனக்குப் பின்புதான் தெளிவாகியது. பேராசிரியர் பீரிஸ் எனக்கு முன்பாக அதே பத்திரிகையாளர்களைச் சந்தித்துச் செவ்வி வழங்கியிருக்கிறார். ஜெனரல் பொன்சேகாவின் சர்ச்சைக்குரிய திட்டம் பற்றியும் உப-குழுவின் எதிர்காலம் பற்றியும் ஆக்கமாகப் பதில் சொல்லியிருக்கிறார். உப-குழு செம்மையாகச் செயற்படுவதாகவும், பேச்சுக்கள் நல்லெண்ணத்துடன் முன்னேற்றம் கண்டு வருவதாகவும் புகழ்பாடியிருக்கிறார். பேச்சுக்களை முன் நடத்தும் பேச்சுக் குழுத் தலைவர்களின் முரண்பட்ட நிலைப்பாட்டுக்கு முக்கியத்துவம் கொடுத்த கொழும்புப் பத்திரிகைகள் பேச்சுக்கள் எந்தத் திசையில் செல்வதாக கேள்வி எழுப்பி இருந்தன. 'செத்துப்போன உப-குழு உயிரோடு இருப்பதாகக் கதை கட்டுகிறார் பேராசிரியர்' என்ற வாக்கியத்துடன் தலைப்புச் செய்தியைப் பிரசுரித்து இருந்து ஒரு பிரபல சிங்களப் பத்திரிகை. மறுநாள் காலை பேச்சுவார்த்தை மண்டபத்திற்குள் நுழையும் வரை, அன்றைய கொழும்புப் பத்திரிகைகளின் குறும்பு விளையாட்டுப் பற்றி எனக்கோ அன்றி எமது பிரதிநிதிகள் எவருக்குமோ எதுவுமே தெரியாது.

நானும் எமது குழுவினரும் பேச்சு மண்டபத்தினுள் நுழைந்தபோது, ஒரு சாவு வீட்டுச் சோகத்தில் மூழ்கியவர்கள் போல அரச பிரதிநிதிகளும், அனுசரணையாளர்களும் இருண்ட, வாடிய முகங்களுடன் காணப்பட்டனர். வழமையான

புன்முறுவல்களோ, கைகுலுக்கல்களோ, காலை வணக்க வரவேற்புக்களோ அன்று இடம்பெறவில்லை. எம்மைக் கண்டும் காணாதவர்கள் போல, மண்டபத்தில் ஒரு மூலைக்குள் நின்றபடி ஏதோ குசு குசுத்துப் பேசிக் கொண்டிருந்தனர். எமக்கு ஒன்றுமே புரியவில்லை. ஏதோ பாரதூரமான சம்பவம் நிகழ்ந்திருக்கலாம் என நினைத்தோம். அவர்களுக்கு எதிர்த்தாற்போல, மண்டபத்தின் மற்ற மூலைக்குச் சென்று அங்கிருந்த நாற்காலிகளில் அமர்ந்து கொண்டோம். இரு தரப்புக்கும் உறவறுந்த நிலையில் காலம் கழிந்தது.

சிறிது நேரத்தின் பின்னர், பேராசிரியர் பீரிஸ், திரு. சுல்கைமையும் அழைத்துக் கொண்டு என்னிடம் வந்தார். வழமைக்கு மாறாக, முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக் கொண்டு, முதல்நாள் மாலை பத்திரிகையாளரிடம் நான் தெரிவித்த கருத்துகள் உண்மைக்கு மாறானவை என ஆட்சேபம் தெரிவித்தார். நெருக்கடி தணிக்கும் உப-குழு செயலிழந்து செத்துப் போய்விட்டதாக நான் கொடுத்த தவறான தகவல், தான் கூறிய கருத்துக்களுக்கு முற்றிலும் முரணானதாக அமைந்து விட்டதாக விசனம் தெரிவித்தார். “என்னை ஒரு பொய்யன் என்று அல்லவா கருதப் போகிறார்கள்” என்று கோபத்துடன் கசப்பான சொற்களை அள்ளி வீசினார் பேராசிரியர். நான் திகைத்துப் போனேன். எப்பொழுதுமே என்னுடன் மிகவும் மரியாதையாக, சிரித்த முகத்துடன் பழகும் ஒரு அன்பான, பண்பான, அடக்கமான மனிதர் இவ்விதம் ஆவேசப்படுவது எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. இதற்கிடையில் அரச பிரதிநிதிகளும் அனுசரணையாளர்களும் எம்மைச் சூழ்ந்து கொண்டனர். சமாதான அரங்கு ஒரு சண்டைக் களமாக மாறிக் கொண்டது.

“நான் பத்திரிகையாளருக்கு உண்மையைத்தான் எடுத்துச் சொன்னேன். உயர் பாதுகாப்பு வலயம் சம்பந்தமாக யாழ்ப்பாண இராணுவத் தளபதி விடுத்த கடுமையான, ஏற்றுக் கொள்ள முடியாத நிபந்தனையை அடுத்து, நெருக்கடியைத் தணிக்கும் உப-குழுவிலிருந்து விலகிக் கொள்ள எமது தலைமைப்பீடம் முடிவெடுத்துள்ள இந்தத் தகவலைத்தான் நான் பத்திரிகையாளரிடம் கூறினேன். உங்களைப் புண்படுத்தும்படி நான் எதையும் கூறவில்லை. அத்துடன் நீங்கள் முன்கூட்டியே பத்திரிகையாளருக்குச் செவ்வி வழங்கியதையோ அதில் என்ன கருத்துக்களைத் தெரிவித்தீர்கள் என்பது பற்றியோ எனக்கு

எதுவும் தெரியாது.'' என்று நான் பேராசிரியரைச் சாந்தப்படுத்த முயன்றேன். அந்த நேரத்தில் திரு. ஹெல்கிசன் குறிக்கிட்டார். "உங்களது தலைமைப்பீடத்தின் முடிவுகளை பேச்சுவார்த்தை மேசையில் அறிவிப்பதுதான் பொருத்தமான நடைமுறை. அதைவிடுத்து நீங்கள் பத்திரிகையாளர்களிடம் அல்லவா அறவித்தீர்கள்'' என்றார் அவர்.

"நேற்றுப் பேச்சுவார்த்தை மேசையில், எமது தலைமையின் முடிவை பல தடவைகள் அழுத்தம் திருத்தமாக நான் அறிவித்தபோது நீங்கள் எவருமே அதைப் பாரதூரமானதாக எடுக்கவில்லை. நான் கூறியவற்றிலும் அக்கறை காட்டவில்லை.'' என்றேன் நான்.

அரச பேச்சுக் குழுத் தலைவரும் சரி, நோர்வே அனுசரணையாளர் குழுத் தலைவரும் சரி, எனது வாதத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. கார சாரமான விவாதம் தொடர்ந்தது. உப-குழுவுக்கு மீண்டும் உயிர் கொடுக்க முனைந்தார் ஹெல்கிசன். அதற்கு எதிர்ப்புத் தெரிவித்த நான், "செத்துப் போனதை அடக்கம் செய்வதுதான் பொருத்தமான நடைமுறை'' என்றேன் கிண்டலாக. சிறீலங்கா இராணுவத்தின் கடும்போக்கிற்கு ஆட்சேபம் தெரிவிக்கும் நோக்கிலேயே விடுதலைப் புலிகளின் தலைமை இக் குழுவிலிருந்து விலக முடிவெடுத்தது என்றேன். எமது முடிவை நாம் மாற்றப் போவதில்லை என உணர்ந்து கொண்டதும் உணர்ச்சி தணிந்து அமைதியடைந்தனர் அரச பிரதிநிதிகள்.

மீண்டும் பேச்சுக்கள் தொடங்கியதும், போர் நெருக்கடியைத் தணிக்கும் பிரச்சினை குறித்துப் பேசிய நான், எமது மக்களின் பாரிய மனிதாபிமானத் தேவைகளுக்கு மேலாகப் பாதுகாப்புப் பிரச்சினைகளுக்கே சிறீலங்கா இராணுவத் தலைமையும், ஜனாதிபதியும் முக்கியத்துவம் கொடுப்பதாகக் குறிப்பிட்டேன். "உயர் பாதுகாப்பு வலய விவகாரத்தில் ஏற்க முடியாத நிபந்தனைகளை விதித்ததால் பல ஆயிரக்கணக்கான தமிழ் மக்களின் மீள்குடியேற்றத்திற்கு இராணுவம் மூடுவிழா வைத்து விட்டது.

எமது மக்கள் தமது சொந்த இல்லங்களுக்குத் திரும்பிச் செல்ல முடியாத சூழ்நிலையில், உப - குழுக் கூட்டத்தை நடத்துவதில் அர்த்தமில்லை. ஆகவேதான், நாம் இந்த உப - குழுவிலிருந்து விலகுவதற்கு முடிவெடுத்தோம். நாம் விலகிக் கொண்டதால் இந்த உப-குழு செயலிழந்து

செத்துவிட்டது என்பதுதான் அர்த்தம்" என்று கூறினேன்.

நாம் அந்த உப-குழுவிலிருந்து விலகுவதெனத் தீர்க்கமாக முடிவெடுத்தது அரச பிரதிநிதிகளுக்கும், நோர்வே அனுசரணையாளர்களுக்கும் ஏமாற்றத்தைக் கொடுத்தது. இதுவே, முதற் தடவையாக பேச்சுவார்த்தைக்கு ஏற்பட்ட பின்னடைவாகும். இந்த உப-குழு செயற்படாது முடங்கிப் போனதால் இடம்பெயர்ந்தவர்களை மீள்குடியேற்றும் மாபெரும் மனிதாபிமானப் பிரச்சினைக்குப் பரிகாரம் காண்பது பெரும் சிக்கலாக எழுந்தது.

உயர் பாதுகாப்பு வலயப் பிரச்சினைக்குத் தீர்வு காண ஒரு இந்திய இராணுவ நிபுணரின் உதவியை சிறீலங்கா அரசு நாடியுள்ளதாக அமைச்சர் மிலிந்தா மொறகொட தெரிவித்தார். இந்த இந்திய இராணுவ நிபுணர் (ஜெனரல் சத்தீஸ் நம்பியார்) சிறீலங்காப் படையினரின் பாதுகாப்புப் பிரச்சினைகளையும், இடம்பெயர்ந்த தமிழ் மக்களின் மனிதாபிமானப் பிரச்சினைகளையும் கருத்தில் எடுத்து, ஒரு திட்டத்தை வரைந்து தருவாரென திரு. மொறகொட கூறினார். உயர் பாதுகாப்பு வலய பிரதேசங்களில் இடம்பெயர்ந்த மக்களைக் குடியேற்றுவதையும், விடுதலைப் புலிகளின் ஆயுதக் களைவையும் தொடர்புபடுத்தி, எந்த நிபுணர்கள் தெரிவிக்கும் யோசனைகளையோ திட்டங்களையோ விடுதலைப் புலிகள் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை என அமைச்சர் மொறகொடவிற்குக் கண்டிப்பாகத் தெரிவித்தேன்.

## ஐந்தாவது கட்டச் சுற்றுப் பேச்சு

எனது உடல்நிலை காரணமாக எனக்கு ஓய்வு தேவைப்பட்டதால், நீண்ட பயணத்தையும் நீண்ட பேச்சு நேரத்தையும் குறைத்து, ஜேர்மனியில் பேர்லின் நகரில் இரண்டு நாட்களுக்கு, 2003 பெப்ரவரி 7, 8 ஆம் திகதிகளில் ஐந்தாம் கட்டச் சுற்றுப் பேச்சு நடைபெற்றது.

இது இவ்வாறிருக்க, உயர் பாதுகாப்பு வலயம் சம்பந்தமான ஜெனரல் நம்பியாரின் பூர்வாங்க அறிக்கை கொழும்புப் பத்திரிகைகளில் பிரசுரமாகியது. 'விடுதலைப் புலிகள் இயக்கம் தனது கனரக ஆயுதங்களை நடுநிலை மேற்பார்வையாளரிடம் ஒப்படைத்து, தனது முன்னணி நிலைகளிலிருந்து விலகி,

குறிக்கப்பட்ட இடங்களுக்கு பின் நகர்ந்தால் மட்டுமே, உயர் பாதுகாப்பு வலயங்களின் பரப்பு எல்லையை மாற்றியமைப்பது பற்றிப் பரிசீலிக்கலாம்' என நம்பியாரின் மதிப்பாய்வில் தெரிவிக்கப்பட்டது. சிறீலங்கா இராணுவம் ஒருதலைப்பட்சமாக நெருக்கடி தணிக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்வதை ஜெனரல் நம்பியார் விரும்பவில்லை. தனது இறுதி அறிக்கையில் இவ் விடயத்தை அவர் நன்கு தெளிவுபடுத்துகிறார். "சிறீலங்கா இராணுவம் உயர் பாதுகாப்பு வலயத்தையோ அன்றி, முன்னணிப் பாதுகாப்பு நிலைகளையோ கலைப்பதாயின், விடுதலைப் புலிகளும் அதே நேரத்தில், தமது இராணுவச் செயற்பாட்டுத் தளங்களைக் கலைக்க வேண்டும்."[7] என்று யோசனை தெரிவித்தார்.

உயர் பாதுகாப்பு வலயம் சம்பந்தமாக ஜெனரல் நம்பியார் தெரிவித்த பரிந்துரைகளை விடுதலைப் புலிகள் இயக்கம் நிராகரித்தது. நம்பியாரின் யோசனைகள் குறித்து, 'தமிழ் கார்டியன்' பத்திரிகைக்கு நான் வழங்கிய செவ்வியில் கீழ்க் கண்டவாறு தெரிவித்தேன்:-

> "அரச படைகளின் பாதுகாப்பிற்கு அதீத முக்கியத்துவம் கொடுத்து அகதிளைக் குடியமர்த்தும் மனிதாபிமானப் பிரச்சினையை, படைச் சம வலு என்ற இராணுவப் பிரச்சினையுடன் தொடர்புபடுத்துகிறார் ஜெனரல் நம்பியார். இந்த யோசனையானது ஜெனரல் பொன்சேகாவினதும், கண்காணிப்புக் குழுத் தலைவர் ஜெனரல் பூரகோவ்டேயினதும் சர்ச்சைக்குரிய கருத்துக்களுக்கு இசைவாக இருப்பது தெளிவாகத் தெரிகிறது. இடம்பெயர்ந்த மக்களும் அகதிகளும் யாழ்ப்பாணக் குடாநாட்டிலுள்ள தமது இல்லங்களுக்கு திரும்பிச் செல்லும் விவகாரத்தை எமது படைகளுடன் தொடர்புபடுத்தி, வன்னியின் காட்டுப் பாசறைகளுக்குள் முடங்கியிருக்கும் எமது போரணிகளைக் கலைத்து விடும்படி கோருவது மிகவும் அபத்தமானதும் கேலிக் கூத்தானதுமாகும். இடம்பெயர்ந்த மக்களை மீள்குடியேற்றம் செய்வதற்கு வசதியாகப் படைகளின் பாதுகாப்பு ஒழுங்குகளை மேற்கொள்வது சிறீலங்கா அரசின் கடமையாகும். தனது கேந்திர, பாதுகாப்பு நிலவரம் குறித்து, சிறீலங்கா அரசானது எந்தவொரு சர்வதேச நிபுணரிடமும் ஆலோசனையைப் பெறுவது

பற்றி எமக்கு ஆட்சேபனையில்லை. ஆனால் அகதிகளை மீள் குடியேற்றம் செய்வதற்கு விடுதலைப் புலிகளின் ஆயுதக் களைவை நிபந்தனையாக முன்வைப்பதை நாம் வன்மையாக எதிர்த்தே தீருவோம்.”[8]

பெர்லின் நகரிலுள்ள நோர்வேத் தூதரகத்தில் பேச்சுக்கள் ஆரம்பமாகிய ஒரு சில மணி நேரத்தின் பின்பு, வன்னியிலிருந்து ஒரு அவசரச் செய்தி எனக்குக் கிடைத்தது. யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கு அப்பால், நெடுந்தீவுக்கு அருகாமையில் சிறீலங்காக் கடற்படையினர் கடற்புலிப் படகு ஒன்றைக் கைப்பற்றி, கடற்படைத் தளத்திற்குக் கட்டி இழுத்துச் செல்வதாக அத் தகவல் கூறியது. கண்காணிப்புக் குழுத் தலைவர் ஜெனரல் பூரகோவ்டேக்கு இச் சம்பவம் உடன் அறிவிக்கப்பட்டது. இதற்கிடையில், என்னுடன் தொடர்பு கொண்ட கடற்புலிகளின் சிறப்புத் தளபதி கேணல் சூசை, கடற்படை கைப்பற்றிய படகில் மூன்று போராளிகள் இருப்பதாகவும், படகு கடற்படைத் தளத்திற்குக் கொண்டு செல்லப்பட்டால் அவர்கள் தற்கொலை செய்யத் துணிந்துள்ளதாகவும் கூறினார். உடனடியாகக் கடற்படைத் தலைமையுடன் தொடர்பு கொண்டு பிரச்சினைக்குத் தீர்வு காணுமாறு நான் பேராசிரியர் பீரிஸையும் மிலின்டா மொறகொடவையும் கேட்டுக் கொண்டேன். என்னுடன் மீண்டும் தொடர்பு கொண்ட சூசை, தனக்கும் கடற்புலிப் படகுக்கும் திடீரெனத் தொடர்பு அறுந்து போனதாகச் சொன்னார். பாதுகாப்பு அமைச்சரையும், கடற்படைத் தளபதியையும் தொடர்புகொள்ள மிலின்டா மொறகொட முயன்று கொண்டிருந்தார். கடலில் ஒரு பாரதூரமான சம்பவத்தைத் தவிர்ப்பதற்கு எல்லோரும் முயன்று கொண்டிருந்த வேளையில் ஜெனரல் பூரகோவ்டோ என்னுடன் தொடர்பு கொண்டு சோகமான தகவலைத் தெரிவித்தார். கடற்புலிப் படகு குண்டு வைத்துத் தகர்க்கப்பட்டுள்ளதாகவும், மூன்று கடற்புலிப் போராளிகளும் தற்கொலை செய்து கொண்டதாகவும் ஜெனரல் பூரகோவ்டே கூறினார். இத் துன்பியல் நிகழ்வு பற்றிய விவாதத்துடன் பேச்சுக்கள் மீள ஆரம்பித்தன.

நெடுந்தீவுப் படகுச் சம்பவம் குறித்து எமது இயக்கத்தின் சார்பில் நான் கடுமையான ஆட்சேபம் தெரிவித்தேன். போர் நிறுத்த உடன்பாட்டு விதிகளின்படி சிறீலங்காக் கடற்படை கடற்

புலிகளுடன் மோதல்களைத் தவிர்க்க வேண்டுமெனத் தெளிவாக வரையறுக்கப்பட்டிருக்கிறது. இந்த விதியை மீறி எமது படகு ஒன்றைக் கடற்படை கைப்பற்றியமை பாரதூரமான போர் நிறுத்த மீறல் என நான் குற்றம் சாட்டினேன். சிறீலங்கா கடற்படை பகைமை உணர்வுடன் கடற் புலிகளுடன் மோதுவதற்கு வெறி கொண்டு அலைகிறது. கடற் புலிகளின் நடமாட்டச் சுதந்திரத்திற்கு இடமளித்து கடற்படையினரைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கத் தவறினால் கடலில் மோதல்கள் நிகழ்வது தவிர்க்க முடியாதது ஆகிவிடும். இது சமாதானப் பேச்சுக்களுக்குப் பெரும் குந்தகத்தை ஏற்படுத்துமென எச்சரித்தேன்.

கடலில் மோதல்களைத் தவிர்க்கும் நோக்குடன் சில பாதுகாப்பு ஒழுங்குகளை வகுப்பதற்கு அரசாங்கமும் விடுதலைப் புலிகளும் கண்காணிப்புக் குழு அதிகாரிகளுமாக இணைந்து கலந்தாலோசித்து முடிவுகளை எடுக்க வேண்டுமென இரு தரப்பிலும் இணக்கம் காணப்பட்டது.

‘சிரான்’ உப-குழுவின் செயற்பாட்டு அறிக்கை ஒன்றைத் திரு. பேர்னாட் குணத்திலகா சமர்ப்பித்தார். தமிழ் மக்களின் மனிதாபிமான, புனர்வாழ்வுத் திட்டங்களைத் துரித கெதியில் நடைமுறைப்படுத்துமாறு திரு. தமிழ்ச்செல்வனும், திரு. மகேஸ்வரனும் வலியுறுத்தினர். வடகிழக்கு நிவாரண நிதியின் வைப்பகமாகச் செயற்பட உலக வங்கி இணங்கி இருப்பதாகவும் இது சமபந்தமாக வெகு சீக்கிரத்தில் ஒரு உடன்பாடு செய்யப்படும் என்றும் திரு.குணத்திலகா தெரிவித்தார். தமிழ் மக்களின் உடனடி மனிதாபிமானத் தேவைகளை நிறைவு செய்ய அவசரமான நிதியை ஒதுக்கீடு செய்யுமாறு உதவி வழங்கும் நாடுகளைக் கோருவதென இரு தரப்பும் முடிவெடுத்தது.

அடுத்ததாக, வயது குறைந்த சிறுவர்களைப் படைத் துறையில் இணைத்துக் கொள்வதாக விடுதலைப் புலிகள் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. இந்தக் குற்றச்சாட்டைத் திட்டவட்டமாக நிராகரித்த திரு. தமிழ்ச்செல்வன், பல்வேறு அனாதை இல்லங்களிலும் சிறுவர் நலன்புரி நிலையங்களிலும் பல ஆயிரக்கணக்கான சிறுவர்களை விடுதலைப் புலிகள் இயக்கம் பராமரித்து வருவதாகக் கூறினார். “போரினால் ஏற்பட்ட பொருளாதாரச் சீரழிவும், ஏழ்மையும், வறுமையும் காரணமாக

பெருந்தொகையான சிறுவர்கள் ஏதிலிகளாக, அனாதைகளாக வாழ வழியின்றி விடுதலைப் புலிகளிடம் தஞ்சம் கோரி வருகிறார்கள். இவர்களை அரவணைத்து நாம் பராமரித்து வருகிறோம். இச் சிறாரைப் பராமரித்து அவர்களுக்குப் புனர்வாழ்வு அளிப்பதற்கு எமது விடுதலை இயக்கம் கோடிக் கணக்கில் செலவு செய்து வருகிறது." என்றார் தமிழ்ச்செல்வன். 18 வயதுக்கு உட்பட சிறுவர்களை இயக்கம் இணைத்துக் கொள்வதில்லை எனத் தெரிவித்த அவர், சமீபத்தில், வயது குறைந்தவர்கள் என்ற காரணத்திற்காக, 350 சிறுவர்களைப் பெற்றோரிடம் ஒப்படைத்ததாகக் கூறினார். போரினால் பாதிக்கப்பட்ட சிறுவர்களுக்குப் புனர்வாழ்வு அளிக்கும் நோக்கில் ஐ.நா. சிறுவர் நிதியத்துடன் இணைந்து ஒரு செயற்திட்டத்தை நடைமுறைப்படுத்த விடுதலைப் புலிகள் இணங்கினர்.

பெர்லின் பேச்சுக்கள் முடிவடைந்த சில வாரங்களின் பின்னர், பேச்சுக்களின் முன்னேற்றம் பற்றிக் கலந்துரையாடுவதற்காக என்னையும் எனது மனைவி அடேலையும் வன்னிக்கு அழைத்தார் பிரபாகரன். 2003 மார்ச் 2ஆம் நாள் நாம் வன்னியைச் சென்றடைந்தோம். நாம் வன்னியில் பிரபாகரனுடனும் ஏனைய தலைவர்கள், தளபதிகளுடனும் மந்திராலோசனை நிகழ்த்தி வந்த வேளையில் சிறீலங்கா கண்காணிப்புக் குழுவின் புதிய தலைவராகப் பொறுப்பேற்ற ஜெனரல் ரெலெவ்சனும் ஓய்வு பெற்றுச் செல்லும் ஜெனரல் பூரகோவ்டேயும் பிரபாகரனைச் சந்திப்பதற்காக கிளிநொச்சி வந்தனர். மார்ச் 5ஆம் நாள் நிகழ்ந்த இச் சந்திப்பில் பிரபாகரனுக்கு உதவியாக நானும், தமிழ்ச்செல்வனும், அடேலும் கலந்து கொண்டோம்.

கருத்தாடலைத் தொடக்கி வைத்துப் பேசிய பிரபாகரன், கடற்புலிகள் மீதும் தமிழ் மீனவர்கள் மீதும் சிறீலங்கா கடற்படையினர் கட்டவிழ்த்து விடும் பகை நடவடிக்கைகளை நிறுத்துவதற்கு உருப்படியான நடைமுறைகள் எதுவும் இருக்கவில்லை எனக் கவலை தெரிவித்தார். போர் நிறுத்த உடன்பாடு காரணமாக, கடற்புலி அணிகளின் நடமாட்டச் சுதந்திரம் பெரிதாகப் பாதிக்கப்பட்டிருப்பதாகவும் கூறினார். பல கோடி டொலர்கள் பணத்தைக் கொட்டி, சிறீலங்கா அரசு தனது ஆயுதப் படைகளை நவீனமயப்படுத்தி வருவதாகத் தெரிவித்த பிரபாகரன், விடுதலைப் புலிகள் அமைப்பு தனது படை வலுவைக் கட்டியெழுப்ப முடியாதிருப்பதாக விசனப்பட்டார்.

"ஜெனரல் பூரகோவ்டே வரித்துள்ள கோட்பாட்டின் பிரகாரம், படை வலுச் சமநிலையானது போர்நிறுத்த உடன்பாட்டைப் பேணுவதற்கு ஆதாரமானது. அப்படி இருக்கும் பொழுது, சிறீலங்கா அரசு தனது படை பலத்தைப் பெரிதாக வளர்த்துக் கொண்டு, எமது கடற்படையை நடமாட விடாது தடுத்து, எமது பலத்தை முடக்கிவிட முயல்வதால் இராணுவச் சம பலம் அரசாங்கத்திற்கு சார்பாக மாறி வருகிறது. இராணுவச் சம வலு பாதிக்கப்பட்டால் போர் நிறுத்த உடன்பாடும் பாதிக்கப்படும்" என்றார் பிரபாகரன். புலிகளின் தலைவர் கூறுவதில் நியாயப்பாடு உண்டு என்பது ஜெனரல் பூரகோவ்டேக்கு தெரியும். தனது தத்துவத்தை மேற்கோள் காட்டி, தனக்கே குட்டு விடுகிறார் என்பதும் அவருக்குப் புரியும். எதற்கு வீணாக வம்பில் மாட்டிக் கொள்ளுவான் என எண்ணினாரோ தெரியவில்லை, புன்முறுவலுடன் மௌனமாக இருந்தார். பிரபாகரன் தொடர்ந்து பேசுகையில், கடற்புலிகளின் நடமாட்டச் சுதந்திரத்தை உறுதி செய்யாதமை போர்நிறுத்த உடன்பாட்டிலுள்ள பெரும் குறை என்றார். கண்காணிப்புக் குழுவின் புதிய தலைவர் ஜெனரல் ரெலெவ்சன் பேசுகையில், கடற்படைத் தலைமைப் பீடத்துடன் தொடர்பு கொண்டு கடலில் மோதல்கள் நிகழாத வண்ணம் புதிய பாதுகாப்பு ஒழுங்குகளைச் செய்யத் தான் முயற்சிப்பதாகப் பிரபாகரனுக்கு வாக்குறுதி அளித்தார்.

கண்காணிப்புக் குழுத் தளபதிகளுடன் நாம் கருத்தாடலில் ஈடுபட்ட வேளையில், கிளிநொச்சி சமாதானச் செயலகக் காரியாலயத்தில், பெண்ணிய விவகாரம் சம்பந்தமான உப-குழுக் கூட்டம் நிகழ்ந்து கொண்டிருந்தது. இரண்டு நாட்களாக (மார்ச் 5, 6ஆம் நாட்கள்) நடைபெற்ற இக் கூட்ட முடிவில் வெளியிடப்பட்ட பத்திரிகை அறிக்கையிலிருந்து சில முக்கிய பகுதிகளை இங்கு பிரசுரிக்கிறோம்.

> "இரு தரப்புப் பிரதிநிதிகளின் கலந்துரையாடல் ஆக்கபூர்வமானதாக அமைந்தது. சமாதான முயற்சியின் இக் கால கட்டத்தில் பெண்கள் சம்பந்தப்பட்ட பல்வேறு பிரச்சினைகள் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. போரின் விளைவாக, குறிப்பாகப் போரினால் பாதிக்கப்பட்ட பிரதேசங்களில், பரந்துபட்ட அளவில், ஆழமான முறையில் பெண்ணினம் தாங்கொணாத் துயருக்கு ஆளாகியது என்பதை இந்த உப-குழு உறுப்பினர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள்.

சமாதான முன்னெடுப்புக்களில் பெண்ணியப் பார்வையைப் பிரதிபலிக்க வேண்டுமென்ற உறுதிப்பாட்டுடன், கீழ்க் கண்ட பிரச்சினைகளில் கவனம் செலுத்துவதென உப-குழு உறுப்பினர்கள் தீர்மானித்தனர்.

- சமாதான வழிமுறையைப் பேணுதல்
- மீள்குடியேற்றம்
- தனிப்பட்ட பாதுகாப்பு
- கட்டுமாணங்களும் சேவைகளும்
- வாழ்க்கைத் தரமும் தொழில் வாய்ப்பும்
- அரசியல் பிரதிநிதித்துவம்
- இன இணக்கப்பாடு

பெண்ணிய விவகார உப-குழு தனது அறிக்கைகளை பேச்சுவார்த்தைச் சுற்றுத் தொடர் கூட்டத்தில் சமர்ப்பிக்கும். அத்துடன் சமாதானத்தை முன்னெடுக்கும் ஏனைய உப - குழுக்களுடனும் அமைப்புகளுடனும் ஒன்றிணைந்து பணி புரியும். பெண்கள் தொடர்பான விவகாரங்களை பேச்சுவார்த்தை நிகழ்ச்சி நிரலில் உட்படுத்தவும் முயற்சி எடுக்கும். மற்றைய உப - குழுக்களுக்கும் அமைப்புக்களுக்குமாக பெண்ணியம் பற்றிய ஒரு வழிகாட்டியையும் தயாரிக்கும்.

பெண்ணிய விவகாரக் குழு தனது தலைமைக் காரியாலயத்தை கிளிநொச்சியில் நிறுவும். கொழும்பிலும் ஒரு காரியாலயம் திறக்கப்படும். இவ்விரண்டு செயலகங்களும் இணைந்து செயற்படும்.

2003, ஏப்ரல் 4ஆம், 5ஆம் நாட்களில் அடுத்த கூட்டத்தைக் கிளிநொச்சியில் நடத்துவதெனத் தீர்மானிக்கப்பட்டது.

பெண்ணிய விவகார உப-குழுக் கூட்டத்தில் இரு தரப்பிலிருந்தும் கலந்து கொண்ட உறுப்பினர்கள் விபரம் வருமாறு:

**சிறீலங்கா அரச தரப்பு:**

கலாநிதி குமாரி ஜெயவர்த்தனா

கலாநிதி தீபிகா உடகம

கலாநிதி பசீலா ரியாஸ்

செல்வி குமுதினி சாமுவேல்

செல்வி பசுன் சாகரியா

**விடுதலைப் புலிகள் தரப்பு:**

செல்வி தமிழினி சுப்பிரமணியம்

செல்வி காயா சோமசுந்தரம்

செல்வி பிரிமிலா சோமசுந்தரம்

திருமதி சுதாமதி சண்முகராசா

செல்வி யாழிசை பாலசிங்கம்

## கடலில் நிகழ்ந்த பாரதூரமான சம்பவம்

2003, மார்ச் 10ஆம் நாள் நண்பகல். நாம் தலைவர் பிரபாகரனுடன் மதிய உணவு அருந்திக் கொண்டிருந்த சமயம், அங்கு அவசரமாக வருகை தந்த கடற்புலிகளின் சிறப்புத் தளபதி கேணல் சூசை ஒரு முக்கிய தகவலை வெளியிட்டார். திருகோணமலைக்கு 220 கடல் மைல்களுக்கு அப்பாலுள்ள சர்வதேசக் கடலில் சென்று கொண்டிருக்கும் எமது வர்த்தகக் கப்பல் ஒன்றைச் சிறீலங்காக் கடற்படையின் பீரங்கிப் படகுகள் பின் தொடர்வதாகக் கூறினார் சூசை. இந்த விடயத்தை உடனடியாகக் கண்காணிப்புக் குழுத் தலைவர் ஜெனரல் ரெலெவ்சனுக்குத் தெரியப்படுத்துமாறு பிரபாகரன் என்னைக் கேட்டுக் கொண்டார். நான் உடனடியாகவே ஜெனரல் ரெலெவ்சனுடன் தொடர்பு கொண்டு விடயத்தைக் கூறினேன். எமது கப்பல் சர்வதேசக் கடலில் சென்று கொண்டிருப்பதால் எவ்வித பிரச்சினையும் எழப் போவதில்லை என்றும் எம்மைப் பதட்டப்பட வேண்டாம் என்றும் உறுதியளித்தார் ரெலெவ்சன்.

சரியாக ஒரு மணி நேரத்தின் பின்பு மீண்டும் அவசரமாக அங்கு வந்தார் சூசை. அவரது 'பேய் அறைந்த' முகத்தைப்

பார்த்ததுமே ஏதோ பாரதூரமான அசம்பாவிதச் சம்பவம் நிகழ்ந்தது போலத் தெரிந்தது. கடற்படையின் பீரங்கிப் படகுகள் எமது கப்பல் மீது தாக்குதல் நடத்தியதாகவும், கப்பல் தீப்பற்றி எரிந்து கடலில் மூழ்கிவிட்டதாகவும், கப்டன் உட்பட பதினொரு கடற்புலிப் போராளிகள் உயிரிழந்திருப்பதாகவும் சம்பவத்தை விபரித்தார் சூசை. கோபத்தினால் பிரபாகரனின் முகம் சிவந்தது. திடீரென எழுந்து, அங்கிருந்து தனது பாசறைக்கு விரைந்து சென்றார் பிரபாகரன். அவருக்குப் பின்னால் ஓடிச் சென்றார் கடற்புலித் தளபதி. சமாதானப் பேச்சுக்கு முடிவு காலம் வந்துவிட்டது என எண்ணிக் கொண்டேன் நான்.

நான் எண்ணியது போலவே நிலைமை மோசமாகியது. அரசாங்கக் கட்டுப்பாட்டுப் பிரதேசங்களில் பணியாற்றிய சகல அரசியல் போராளிகளையும் உடனடியாக வன்னிக் களம் திரும்புமாறு தலைமைப்பீடம் உத்தரவு பிறப்பித்திருப்பதாகப் பின்பு எனக்குத் தெரிய வந்தது. அன்று மாலை சூசை எனது இருப்பிடத்திற்கு வந்தார். கடற்புலிப் படையணிகள் உசார் நிலையில் வைக்கப்பட்டிருப்பதாகவும், எமது நடமாட்டத்தில் கடற்படையினர் குறிக்கிட்டால் அவர்கள் மீது தாக்குதல் நடத்துமாறு தலைமைப்பீடம் பணித்து இருப்பதாகவும் தெரிவித்தார். யுத்தம் வெடிப்பதற்கான ஆபத்தான சூழ்நிலை உருவாகி வருகிறது என்பதை என்னால் ஊகிக்க முடிந்தது.

அன்று பொழுதுசாயும் வேளை பிரபாகரன் எனது வீட்டுக்கு வந்தார். ஆத்திரம் அடக்கி அமைதியாக இருந்தார். அவருடன் தனியே பேசும்பொழுது சர்ச்சைக்குரிய கடற் பிரச்சினையைத் தொட்டேன். கடலில் நிகழ்ந்த துன்பியல் சம்பவத்தைக் காரணமாகக் கொண்டு, நாமாகப் போரைத் தொடங்கக் கூடாது என்றேன். சிறீலங்காக் கடற்படை எம்மை ஆத்திரமூட்டி போருக்கு இழுக்க முனைகிறது. இவர்களின் பொறிக்குள் நாம் வீழ்ந்துவிடக் கூடாது என்றேன். அரசாங்கம் இரட்டை வேடம் பூண்டு ஏமாற்றுவித்தை காட்டுகிறது என்றார் பிரபாகரன். ஒருபுறம் சமாதானம் பேசிக் கொண்டு, மறுபுறம் போருக்கான புறநிலையை உண்டுபண்ணும் இந்த அரசாங்கத்தை நம்ப முடியாது என்றார். இந்தக் கடற் சம்பவத்திற்கும் விக்கிரமசிங்காவின் நிர்வாகத்திற்கும் எவ்வித தொடர்பும் இருக்கவில்லை எனத் தெரிவித்த நான், சிங்களக் கடற்படை ஜனாதிபதியின் தலைமையின் கீழ் தன்னிச்சையாகச் செயற்படுகிறது என்றேன். சமாதான முயற்சியைக் குழப்பி விடும் நோக்கத்துடன்,

கடற்படையினர் ஆத்திரமூட்டும் பகை நடவடிக்கையில் இறங்கி, எம்மைப் போரில் குதிக்க வைப்பதற்கு திட்டமிட்டு செயற்படுகின்றனர் என விளக்கினேன். நிர்வாக ஆட்சியதிகாரம் அனைத்துமே ஜனாதிபதியின் கையில்தான் இருக்கிறது. சிறீலங்காவின் ஆயுதப் படைகளைக் கட்டுப்படுத்தும் எந்த அதிகாரமும் விக்கிரமசிங்காவிடமோ அல்லது அவரது அமைச்சர்களிடமோ இருக்கவில்லை. இப்படியான சூழ்நிலையில் நாம் மிகவும் கவனமாகவும் நிதானமாகவும் இருக்கவேண்டும். ஏனென்றால் இரு தரப்பினரின் நடவடிக்கைகளையும் சர்வதேசச் சமூகம் உன்னிப்பாக அவதானித்துக் கொண்டு இருக்கிறது என்று கூறினேன். பிரபாகரன் சிறிது நேரம் ஆழமாகச் சிந்தித்தார். நான் கூறியதன் நியாயப்பாட்டை அவர் புரிந்திருக்க வேண்டும்.

இந்தக் கடற் சம்பவம் தொடர்பாக, அரசாங்கத்திற்குக் கடும் ஆட்சேபம் தெரிவிப்பதென முடிவாகிற்று. பாதுகாப்பு அமைச்சர் திரு. திலக் மாறப்பனவுக்கு திரு. தமிழ்ச்செல்வன் எழுதிய கண்டனக் குறிப்பில், கடற் சம்பவத்தை பாரதூரமான ஒரு போர் நிறுத்த மீறலாகச் சாடினார். அக் கடிதக் குறிப்பில் தெரிவிக்கப்பட்டதாவது:-

> "இந்தச் சம்பவத்தை ஒரு பாரதூரமான போர்நிறுத்த மீறலாகவே நாம் கருதுகிறோம். எமது கப்பல் எவ்வித சட்டவிரோத நடவடிக்கையிலும் ஈடுபடவில்லை. அத்துடன், சிறீலங்காக் கடற்படையின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்ட சர்வதேசக் கடற் பிராந்தியத்தில் இச் சம்பவம் நிகழ்ந்திருக்கிறது. எவ்வித ஆத்திரமூட்டும் தூண்டுதலின்றி எமது வர்த்தகக் கப்பல் இடைமறித்து தாக்கப்பட்டது. இந்தச் சம்பவம் தொடங்கியதிலிருந்தே நாம் கண்காணிப்புக் குழுவைத் தொடர்பு கொண்டு எமது ஆட்சேபத்தைத் தெரிவித்தோம். சிறீலங்கா கடற்படையின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்ட சர்வதேசக் கடற்பரப்பில் எமது கப்பல் சென்று கொண்டிருப்பதைக் கவனத்தில் எடுத்த ஜெனரல் ரெலெவ்சன், தனது செல்வாக்கைப் பிரயோகித்து மோதல் நிகழாது பார்த்துக் கொள்வதாக உறுதியளித்திருந்தார்.
>
> சிறீலங்கா கடற்படை தாக்குதல் நிகழ்த்தியதன் விளைவாக எமது கப்பல் தீப்பற்றி எரிந்து மூழ்கியது. கப்பலின் கப்டன் உட்பட எமது போராளிகள் பதினொரு பேர் இச் சம்பவத்தில் உயிரிழந்தனர்.

இந்தப் பாரதூரமான சம்பவம் சமாதான முயற்சிக்குப் பாதகமான விளைவுகளை ஏற்படுத்துமென நாம் சுட்டிக் காட்ட விரும்புகிறோம். போர் நிறுத்த உடன்பாடு நடைமுறையில் இருந்தபோதும் சிறீலங்காக் கடற் படையானது சமீப காலமாக விடுதலைப் புலிகளுக்கு எதிராகப் பல்வேறு ஆத்திரமூட்டும் செயல்களில் ஈடுபட்டு வருகிறது என்பதையும் நாம் உங்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகிறோம். இவ் விடயத்தில் எமது ஆழ்ந்த அதிருப்தியை உங்களது அரசாங்கத்திற்குத் தெரியப்படுத்தவும்."

2003, மார்ச் 12ஆம் நாள். அன்றைய தினம் பல முக்கியஸ்தர்கள் கிளிநொச்சிக்கு வருகை தர இருந்தனர். கனடிய கூட்டாட்சி மன்றத்தைச் சேர்ந்த திரு. பொப் ரேய், பேராசிரியர் டேவிட் கமரோன், செல்வி பிரியா சூட் ஆகியோர் அன்று காலை என்னைச் சந்தித்தனர். எமது இயக்கத்தின் அரசியல் விவகாரக் குழுவை அவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தேன். கிளிநொச்சியிலுள்ள சமாதானச் செயலகத்தில், அரச ஆட்சியமைப்புகள் பற்றி அன்று முழு நாளும் கனடிய நிபுணர்கள் எமது அரசியல் போராளிகளுக்குக் கருத்தரங்கு நடத்துவதற்கு ஏற்பாடாகியிருந்தது. இந்தக் கருத்தரங்கு ஒரு புறம் நடந்து கொண்டிருக்க, மனித உரிமைகள் சம்பந்தமான சர்வதேச நிபுணரான திரு. ஐயன் மார்டினை அரசியல் தலைமையகத்தில் நான் சந்தித்துப் பேசினேன். இந்தச் சந்திப்பின்போது, தமிழீழ காவற்துறைப் பொறுப்பாளர் திரு. நடேசனையும், நீதி நிர்வாகத்துறைப் பொறுப்பாளர் திரு. பரராஜசிங்கத்தையும் நான் திரு. மார்டினுக்கு அறிமுகம் செய்து வைத்தேன். அவர்கள் பின்பு திரு. மார்டினைத் தமது தலைமையகங்களுக்கு அழைத்துச் சென்று தமது துறைகளின் செயற்பாடுகள் பற்றி விபரமாக விளக்கங்களை அளித்தனர்.

அன்றைய தினம் பிற்பகல், கண்காணிப்புக் குழுத் தலைவர் ஜெனரல் ரெலெவ்சன், கடற் சம்பவம் தொடர்பாக எமது இயக்கத்தின் நிலைப்பாட்டை அறிந்து கொள்வதற்காக கிளிநொச்சி வந்திருந்தார். நானும், தமிழ்ச்செல்வனும் அடேலுமாக அவரைச் சந்தித்து, கடலில் நிகழ்ந்த சம்பவத்தை விபரமாகக் கூறினோம். சர்வதேசக் கடலில், வர்த்தகப் பயணத்தில் சென்று கொண்டிருந்த எமது வாணிபக் கப்பலைத்

தடுத்து நிறுத்தித் தாக்கி அழிக்க சிறீலங்காக் கடற்படைக்கு எவ்வித அதிகாரமும் இல்லை என நான் வாதித்தேன். எமது கப்பல் ஆயுதங்களை ஏற்றிச் சென்றதாகவும், சிறீலங்கா கலன்களை நோக்கிச் சுட்டதாகவும் அரச தரப்பில் தெரிவிக்கப்பட்ட குற்றச்சாட்டுக்களை அபாண்டமான பொய்கள் என நாம் நிராகரித்தோம்.

விடுதலைப் புலிகளுக்கு எதிராகக் கடற்படை எவ்வித படை நடவடிக்கைகளிலும் ஈடுபடக் கூடாதெனப் போர் நிறுத்த ஒப்பந்த விதிகள் வலியுறுத்துவதைச் சுட்டிக் காட்டிய நான், இந்த முக்கிய கடப்பாட்டைக் கடற்படையினர் கடைப்பிடிப்பது அவசியமென எடுத்துரைத்தேன். சிறீலங்காக் கடற்படை, சர்வதேசக் கடற் சட்டங்களைச் மேற்கோள்காட்டித் தனது நடவடிக்கையை நியாயப்படுத்த முனைவதாகக் கூறிய ஜெனரல் ரெலெவ்சன், கடற் சம்பவத்தைத் தமது குழுவினர் நேரடியாகக் கண்காணிக்க முடியாது போனதால், இச் சம்பவம் குறித்துத் தீர்ப்பளிக்க இயலாது என்றார். எனினும், எதிர்காலத்தில் இது போன்ற சம்பவங்கள் நிகழாத வண்ணம், சில பாதுகாப்பு ஒழுங்கு முறைகளை வகுப்பதற்கு தாம் முயற்சி எடுப்பதாக உறுதியளித்தார்.

மறுநாள் (மார்ச் 13) காலை நோர்வே அனுசரணையாளர் குழுவொன்று கிளிநொச்சிக்கு வருகை தந்தது. திரு. விடார் ஹெல்கிசன், திரு. ஜோன் வெஸ்ட்பேக், திரு. ஹான்ஸ் பிரட்ஸ்கார் (புதிய நோர்வே தூதுவர்) திருமதி. லீசா கோல்டன், திரு. தோமஸ் ஆகியோர், கடற் சம்பவம் குறித்து எமது நிலைப்பாட்டை அறிந்து செல்ல வந்திருந்தனர். கிளிநொச்சி சமாதானச் செயலகத்தில் நிகழ்ந்த இச் சந்திப்பில் என்னுடன் தமிழ்ச்செல்வனும் அடேலும் கலந்து கொண்டனர்.

சர்வதேசக் கடலில் நிகழ்ந்த இச் சம்பவத்தை விபரமாக விளக்கிக் கூறிய நான், கடற் படையினரின் ஆத்திரமூட்டும் அடாவடித்தனங்களால் சமாதான முயற்சிக்கு ஆபத்து எழலாம் என்றேன். கண்காணிப்புக் குழுவினர் இச் சம்பவத்தை விசாரணை செய்து வருவதாகக் கூறிய திரு. ஹெல்கிசன், மேற்கொண்டு இது போன்ற சம்பவங்கள் நிகழாதவாறு, பாதுகாப்பு நடைமுறைகளை வகுப்பதற்கு முயற்சிகள் எடுபட்டு வருவதாகக் கூறினார். ஜப்பானில் நடக்கவுள்ள அடுத்த கட்டச் சுற்றுப் பேச்சுக்களின் போது, சமாதான முயற்சியின் முன்னேற்றம் குறித்து, தான் ஒரு முழுமையான மறுபரிசீலனை

செய்யவிருப்பதாக ஹெல்கிசன் கூறினார். சமாதான முன்னெடுப்பில், அரசியல், மனிதாபிமான, பாதுகாப்பு அம்சங்கள் ஒரே நேரத்தில் ஒன்றாக முன்நகர்த்தப்பட வேண்டும் என்றார் அவர்.

## ஆறாவது கட்டச் சுற்றுப் பேச்சு

விடுதலைப் புலிகளுக்கும் அரசாங்கத்திற்கும் மத்தியிலான ஆறாவது கட்டச் சுற்றுப் பேச்சு, 2003 மார்ச் 18-21ஆம் நாட்களில், ஜப்பானில், அழகிய மலைப் பிரதேசமான ஹக்கோன் என்னுமிடத்திலுள்ள பிரின்ஸ் விடுதியில் நடைபெற்றது.

முதல் நாள் பேச்சுக்களில் கடற் சம்பவத்திற்கு முதன்மை அளிக்கப்பட்டது. விவாதத்தைத் தொடக்கி வைத்துப் பேசிய நான், எமது இயக்கத்தின் கடுமையான ஆட்சேபத்தை அதிகாரபூர்வமான முறையில் அரசாங்கத்திற்குத் தெரிவித்தேன். போர் நிறுத்த ஒப்பந்தத்தின் ஒரு பாரதூரமான மீறலாக இச் சம்பவத்தைச் சித்தரித்துக் காட்டி, இந்த ஆத்திரமூட்டும் நடவடிக்கைக்கு எமது இயக்கம் பதிலடி கொடுத்திருந்தால் அது ஒரு யுத்தமாக வெடித்து, சமாதானத்தின் கதவுகளை இறுக மூடியிருக்குமெனச் சுட்டிக் காட்டினேன். சர்வதேசக் கடற் சட்டம் என்ற திரைக்குப் பின்னால் ஒளிந்து நின்று அடாவடித்தனம் புரிவதைக் கைவிட்டு, போர் நிறுத்த உடன்பாட்டு விதிகளைச் செம்மையாக ஒழுகுமாறு கடற்படையினரைப் பணிக்கும்படி நான் அரச பிரதிநிதிகளிடம் வேண்டுகோள் விடுத்தேன். எமது வணிகக் கப்பல் மீது தாக்குதலை மேற்கொள்வதற்கு முன்னர், கண்காணிப்புக் குழுவுக்கு எதுவுமே அறிவிக்காதது கடற்படையினர் இழைத்த மாபெரும் தவறு எனவும் நான் கண்டித்தேன். எமது கப்பல் ஆயுதக் கடத்தலில் ஈடுபட்டிருப்பதாக அரச தரப்பால் முன்வைக்கப்பட்ட குற்றச்சாட்டு அபத்தமானதும் ஆதாரமற்றதும் என நிராகரித்தேன்.

அமைதி உடன்பாடு சீர்குலையாது இருப்பதற்குப் படைச் சம வலு பேணப்படுவதன் அவசியத்தை வலியுறுத்திய நான், சிறீலங்காவின் பாதுகாப்புத்துறை பல கோடி டொலர்களைச் செலவழித்து தனது இராணுவ இயந்திரத்தைப் பலப்படுத்தி வருவதாகக் கூறினேன். இதனால் படைச் சம வலு அரசாங்கத்திற்குச் சார்பாக திரும்பி வருகிறது. இந்தப் போக்குத்

தொடர்ந்தால் சமாதான உடன்படிக்கை உடைந்து போகும் ஆபத்து எழலாம் எனவும் எச்சரித்தேன். போர் நெருக்கடியைத் தணித்து, இயல்பு நிலையை ஏற்படுத்த அரசாங்கம் எந்தவித உருப்படியான நடவடிக்கைகளையும் எடுக்கவில்லை என எமது இயக்கத்தின் தலைவர் திரு. பிரபாகரன் கருதுகிறார். அரசாங்கத்தின் அசட்டையீனப் போக்குக் காரணமாக, தமிழர் தாயகத்தில் கள நிலைமை உறுதியற்று கொந்தளிப்பானதாக மாறி வருகிறது என அவர் எண்ணுகிறார் என்றேன். பாதுகாப்பு நிலைமையைச் சீர்செய்யவும், கடலில் இத்தகைய சம்பவங்களைத் தவிர்க்கவும் அரசும், விடுதலைப் புலிகளும், கடற்படையும் கண்காணிப்புக் குழுவுமாக ஒன்று கூடி, கலந்தாலோசித்துப் பாதுகாப்பு நடைமுறைத் திட்டத்தை வகுக்க வேண்டும் என நான் யோசனை தெரிவித்தேன்.

எனது குற்றச்சாட்டுகளுக்குப் பதிலளித்துப் பேசிய அரச தரப்பின் பிரதிநிதிகள் குழுத் தலைவர் பேராசிரியர் பீரிஸ், கடலில் உயிரிழந்த போராளிகளுக்குத் தனது இரங்கலைத் தெரிவித்தார். ஆனால் அதே சமயம், கடற்படையின் நடவடிக்கை சர்வதேசக் கடற் சட்டங்களுக்கு இசைவாக அமைந்ததாக நியாயப்படுத்த முனைந்தார். தாக்குதலுக்கு இலக்கான கப்பலில் கொடி பறக்கவில்லை என்றும் அழைப்புக்குப் பதில் கொடுக்கவில்லை என்றும், அப்படியான கப்பல்களைச் சர்வதேசக் கடற்குற்றச் சட்டத்தின் கீழ் மறித்து விசாரிப்பதற்கு உரிமையுண்டு எனவும் வாதாடினார். எனினும் நடந்து முடிந்த ஒரு சம்பவத்தை மீள்பரிசீலனை செய்வதை விடுத்து, மேற்கொண்டு இப்படியான சம்பவங்கள் நடைபெறாது தடுக்க உருப்படியான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்றார் அவர். போர் நிறுத்தம் சம்பந்தப்பட்ட சகல தரப்பினரும் ஒன்று கூடி, கடலில் நிலைமையைச் சீர்செய்யும் வகையில், பாதுகாப்பு ஒழுங்குவிதிகளை வகுப்பதென முடிவெடுக்கப்பட்டது. இரு தரப்பினரும் ஒன்றிணைந்து போர் நிறுத்த உடன்பாட்டை வலுப்படுத்துவதெனவும் போர் நிறுத்த மீறல் தகராறுகளைத் தீர்த்து வைக்கக் கண்காணிப்புக் குழுவினருக்கு கூடுதல் அதிகாரங்களை வழங்குவதெனவும் இரு தரப்பினர் மத்தியில் இணக்கம் காணப்பட்டது.

ஜப்பானின் விசேட பிரதிநிதி திரு. யசூசி அகாஷி, மறுநாள் அமர்வுக்குத் தலைமை வகித்தார். சிரான் உப-குழுவின் செயற்பாட்டு அறிக்கையை சமர்ப்பித்துப் பேசிய

திரு. தமிழ்ச்செல்வன், உப-குழுவின் மந்தப் போக்குக் குறித்துத் தனது ஆழமான அதிருப்தியை வெளியிட்டார். சிரான் உப-அமைப்புகளுக்கு இன்னும் பிரதிநிதிகளை நியமிக்காது அரசாங்கம் இழுத்தடிப்புச் செய்கிறது என்றும் அரச நிர்வாக அமைப்புகளின் ஒத்துழையாமையும் உப குழுவின் இயக்கத்தை முடக்கி வைத்திருப்பதாகக் குற்றம்சாட்டிய தமிழ்ச்செல்வன், பாதிக்கப்பட்ட மக்களின் அவசர மனிதாபிமானத் தேவைகளை இனம்கண்டு, உருப்படியான வேலைத் திட்டங்களை சிரான் சமர்ப்பித்த போதும், அவற்றை நிறைவு செய்ய அரசாங்கம் நிதி ஒதுக்கீடு செய்யவில்லை என விசனப்பட்டார். தமிழ்ச்செல்வன் மேலும் பேசுகையில் உயர்பாதுகாப்பு வலய விவகாரத்தில் இராணுவத் தலைமைப்பீடம் எடுத்துள்ள அநீதியான கடும்போக்குக் காரணமாக இடம்பெயர்ந்த மக்களின் அவசர மனிதாபிமானப் பிரச்சினைகளைத் தீர்த்து வைக்க முடியாத ஒரு நெருக்கடி நிலை உருவாகியுள்ளதாகத் தெரிவித்தார்.

அன்று பிற்பகல் நடைபெற்ற அமர்வில், சர்வதேச மனித உரிமை நிபுணரான திரு. ஐயன் மார்ட்டின் சமர்ப்பித்த அறிக்கை மீது விவாதம் நடைபெற்றது. மனித உரிமைகளும், மனிதாபிமான விழுமியங்களும் உள்ளடங்கிய ஒரு பிரகடனத்தைத் தயாரித்து, அடுத்த கட்டச் சுற்றுப் பேச்சில் சமர்ப்பிக்குமாறு திரு. மார்ட்டின் கேட்டுக் கொள்ளப்பட்டார்.

அரசியல் விவகாரம் பற்றிய விவாதத்தில் நான் பேசும் பொழுது, புலிகளின் அரசியல் விவகாரக் குழு இருபத்தொரு முக்கிய உறுப்பினரைக் கொண்டதாக விரிவாக்கம் செய்யப்பட்டிருக்கிறது எனத் தெரிவித்தேன். இந்த அரசியல் விவகாரக் குழுவின் உறுப்பினர்கள் வெளிநாடுகளுக்கு, குறிப்பாக ஐரோப்பிய நாடுகளுக்குச் சுற்றுப் பிரயாணம் செய்து, சமஷ்டி முறை உட்பட உலக அரசியலமைப்பு வடிவங்களை ஆழமாகக் கற்றறிவதற்கு தீர்மானித்திருக்கின்றனர் எனக் கூறினேன்.

மூன்றாம் நாள் அமர்வை ஆரம்பித்து வைத்துப் பேசிய திரு. ஹெல்கிசன், கடந்த ஆறு மாதங்களாக நிகழ்ந்த ஆறு சுற்றுப் பேச்சுக்கள் பற்றி ஒரு மீளாய்வு செய்தார். அரசியல், மனிதாபிமானம், பாதுகாப்பு என்ற ரீதியில், முப்பரிமாண அணுகுமுறையில் சமாதான முன்னெடுப்பை ஆய்வு செய்த அவர், அரசியல் மட்டத்தில் ஏற்பட்ட முன்னேற்றம் மனிதாபிமான, பாதுகாப்புப் பிரச்சினைகளில் ஏற்படவில்லை என்பதை ஒத்துக்

கொண்டார். உயர் பாதுகாப்பு வலயப் பிரச்சினை ஒரு பாரதூரமான சிக்கலாக மாறியுள்ளதை ஏற்றுக் கொண்ட அவர், இடம்பெயர்ந்த மக்களின் மீள்குடியேற்றத்திற்கு இப் பிரச்சினை தீர்க்கப்படுவது அவசியம் என்றார். ஏழாவது கட்டச் சுற்றுப் பேச்சுக்களை, ஏப்ரல் இறுதியில் தாய்லாந்தில் நடத்துவதென முடிவெடுக்கப்பட்டது.

## பேச்சுக்களை இடைநிறுத்தப் புலிகள் முடிவு

ஆறு கட்டங்களாக நீடித்த சமாதானப் பேச்சுக்களின் பலாபலன்கள் குறித்து நோர்வேயின் பிரதம அனுசரணையாளர் ஹெல்கிசன் மீளாய்வு செய்தது போலவே விடுதலைப் புலிகளின் தலைமையும் பேச்சுக்கள் பற்றி ஒரு திறனாய்வு செய்தது. தமிழ் மக்களின் பிரச்சினைகளைச் சரியாக இனம்கண்டு, பரஸ்பர நல்லுறவுடன் இரு தரப்பும் மனம் திறந்து கருத்தாடக் கூடிய ஒரு நல்லெண்ணச் சூழ்நிலை ஏற்பட்டது மட்டுமே பேச்சுக்களின் ஒரு ஆக்கமான அம்சம் எனலாம். பேச்சுக்கள் தொடர்ந்த வேளையில் படுபாதகமான சம்பவங்கள் நிகழ்ந்தபோதும், இரு தரப்பினரும் நிதானமாகப் பிரச்சினையை அணுகித் தீர்த்துக் கொண்டதால் பேச்சுக்கள் முறிந்து போய் முடங்குவது தவிர்க்கப்பட்டது. இந்த ஆக்கபூர்வமான அம்சத்தைத் தவிர, இப் பேச்சுக்கள் மூலம், எமது மக்களின் அவலமான பிரச்சினைகள் எதுவும் தீர்க்கப்பட்டு, பிரமாதமான சாதனை எதுவும் செய்யப்படவில்லை. ஒவ்வொரு கட்டச் சுற்றுப் பேச்சிலும், பல்வேறு பிரச்சினைகள் பற்றிக் கருத்தாடல்கள், விவாதங்கள் நிகழ்ந்து கூட்டாக முடிவுகளும், தீர்மானங்களும் எடுக்கப்பட்டு, அவை எல்லாம் **எழுத்தில்** ஆவணப்படுத்தப்பட்டனவே தவிர, **செயலில்** நடைமுறைப்படுத்தப் படவில்லை. யுத்தத்தால் பாதிக்கப்பட்ட மக்களின் மிகவும் அவலமான மனிதாபிமானப் பிரச்சினைகளைப் புறம்தள்ளி, அரச தரப்பும் சரி, அனுசரணையாளரும் சரி, அரசியல் விவகாரத்திற்கு முன்னுரிமை கொடுத்து அதில் முன்னேற்றம் காணவே முனைப்பாக நின்றனர். இரண்டு தசாப்தங்களுக்கு மேலாக, முடிவில்லாது தொடர்ந்த கொடும் யுத்தத்தினால் சிதைந்து போன வாழ்க்கையிலிருந்து சுபீட்சம் கிட்டுமென ஏங்கி நின்ற எமது மக்களுக்குச் சமாதானப் பேச்சுக்களினால் பயனெதுவும் கிட்டவில்லை. இதனால் எமது மக்களுக்கு விரக்தி மேலோங்கி,

சமாதான முயற்சியில் இருந்த நம்பிக்கை இடிந்து போனது. எல்லோரையும் விட, தமது சொந்த மண்ணிலிருந்து வேரறுந்து, நிர்க்கதியாக நின்ற இடம்பெயர்ந்த மக்களின் அவல வாழ்வில் மீண்டும் இருள் சூழ்ந்து கொண்டது. எமது தாயக நிலத்தில் தனது ஆக்கிரமிப்புப் பிடியைத் தளரவிடாது இறுக்கிய இராணுவத்தினரின் மனிதாபிமானமற்ற கடும் போக்கினால் அம் மக்களது மீள்குடியேற்றம் மேலும் சிக்கலடைந்தது. அத்தோடு போர் நெருக்கடியைத் தணித்து, இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் குறிக்கோளுக்கும் சாவு மணி அடிக்கப்பட்டது. அதிகாரமின்றி, நிதியின்றி, நிர்வாகத் திறைமையின்றி சிரான் அமைப்பும் செயலிழந்து முடங்கிப் போனது. இதேவேளை, தென்னிலங்கையின் பொருளாதாரத்தைச் சீரமைத்து கட்டியெழுப்புவதற்கு முக்கியத்துவம் கொடுத்து, விக்கிரமசிங்கா அரசு உலக நாடுகளிடம் நிதி உதவியை வேண்டி நின்றது. அத்துடன், விடுதலைப் புலிகள் இயக்கத்தை அரசியல் இராணுவ ரீதியாக முடக்கும் சர்வதேசச் சதிவலைப் பின்னல் என்ற நாசகாரத் திட்டத்தைக் கட்டி எழுப்புவதிலும் விக்கிரமசிங்காவும் அவரது தோழரான மிலிந்த மொறகொடவும் அமெரிக்காவுடன் இணைந்து அந்தரங்கமாகச் செயற்பட்டனர். இப்படியான ஒரு சூழ்நிலையில், பேச்சுக்களை கட்டம் கட்டமாக முன்னகர்த்தி, முதற்கட்டப் பேச்சுக்களில் எமது மக்களின் அவசர, மனிதாபிமான வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முன்னுரிமை கொடுத்துத் தீர்த்து வைக்க வேண்டுமென்ற எமது தந்திரோபாய அணுகுமுறையை விக்கிரமசிங்கா அரசு முற்றாக அசட்டை செய்தது.

இப்படியாகச் சமாதானப் பேச்சுகள் குறித்து எமது விடுதலை இயக்கத்திலும் மக்கள் மத்தியிலும் ஆழமான விரக்தியும், ஏமாற்றமும், நம்பிக்கையீனமும் வேர்விட்டு வளர்ந்து வந்த வேளையில், விடுதலைப் புலிகள் அமைப்பை ஓரம் கட்டிவிட்டு, 2003 ஏப்ரல் 14, 15ஆம் திகதிகளில், அமெரிக்காவின் தலைமையில் வாஷிங்டனில் உதவி வழங்கும் நாடுகளின் சர்வதேச மாநாடு ஒன்று ஒழுங்கு செய்யப்பட்டது. ஜப்பானில் நடைபெற்ற பேச்சுக்களின் போது, இம் மாநாடு பற்றிய தகவலைத் திரு. மொறகொட எனக்கு முதன்முதலாகத் தெரிவித்தார். 2003 ஜூன் மாதம் ஜப்பானில் நடைபெறவிருக்கும் உதவி வழங்கும் நாடுகளின் மாநாட்டுக்கான 'ஒரு பூர்வாங்க சந்திப்பாகவே' வாஷிங்டன் கூட்டம் நடைபெறுவதாக 'அடக்கி

வாசிக்க' முயன்றார் மொறகொட. நான் அப்பொழுதே அவரிடம் கடும் ஆட்சேபம் தெரிவித்ததுடன், உதவி கோரும் சர்வதேச மாநாடுகளில் சிறீலங்கா அரசும் விடுதலைப் புலிகளும் சமத்துவமான பங்காளிகளாகக் கலந்து கொள்ள வேண்டுமென்ற உடன்பாட்டை இது மீறுவதாகச் சுட்டிக் காட்டினேன். விடுதலைப் புலிகளை ஓரம் கட்டும் இந் நடவடிக்கை, சமாதான முயற்சிக்குப் பாரதூரமான பங்கத்தை விளைவிக்கும் என்றும் நான் அவருக்கு எச்சரித்தேன்.

உதவி வழங்கும் நாடுகளின் முக்கிய மாநாடு ஒன்று வாஷிங்டனில் நடைபெறவுள்ளது என்பதையும், தடை செய்யப்பட்ட அமைப்பு என்பதால் எமது பிரதிநிதிகள் அம் மாநாட்டிற்கு அழைக்கப்படவில்லை என்பதையும் நான் தெரிவித்தபோது, பிரபாகரனும் ஏனைய மூத்த தலைவர்களும் ஆத்திரமும், கவலையும் அடைந்தனர். தமிழ் மக்களைப் பிரதிநிதப்படுத்தும் விடுதலை அமைப்பு என்ற ரீதியிலும், சிறீலங்கா அரசுடன் சம பங்காளியாகப் பேச்சுக்களை நடத்தி வரும் ஒரு தரப்பு என்ற ரீதியிலும், வாஷிங்டன் மாநாட்டில் எமது இயக்கம் ஒதுக்கப்பட்டது ஏற்றுக் கொள்ள முடியாத அவமானத்திற்குரிய விடயமாகக் கருதினார் பிரபாகரன்.

வாஷிங்டன் மாநாட்டில் விடுதலைப் புலிகள் இயக்கம் புறம் தள்ளப்பட்டதைக் கண்டித்து கிளிநொச்சியிலுள்ள எமது அரசியல் தலைமையகம், 2003 ஏப்ரல் 4ஆம் திகதி ஒரு அதிகாரபூர்வமான அறிக்கையை வெளியிட்டது. இந்த அறிக்கை வருமாறு:-

> "வடகிழக்கில் மேற்கொள்ளவிருக்கும் புனர்வாழ்வு, புனர்நிர்மாண வேலைத் திட்டங்களுக்கு ஆதரவாக, ஏப்ரல் 14ஆம் நாள் வாஷிங்டனில் நடைபெறவிருக்கும் சர்வதேச மாநாட்டில் விடுதலைப் புலிகள் இயக்கம் புறந்தள்ளப்பட்டதால் நாம் ஏமாற்றம் அடைந்துள்ளோம்.
>
> வடகிழக்கில் மேற்கொள்ளப்படும் புனர்வாழ்வு, புனர்நிர்மாணத் திட்டங்களுக்கு சர்வதேச நிதி உதவிகளை அணிதிரட்டும் முயற்சிகளில், சிறீலங்கா அரசும் விடுதலைப் புலிகள் இயக்கமும் கூட்டாகச் சேர்ந்து சமத்துவ பங்காளிகளாகச் செயற்பட வேண்டும் என நோர்வேயின் அனுசரணையுடன் நடைபெறும் சமாதானப் பேச்சுக்களின் ஆரம்ப கட்டத்திலிருந்தே முடிவு

செய்திருந்தோம். சமத்துவப் பங்காளிகள் என்ற கொள்கையின் அடிப்படையிலேயே, மனிதாபிமானப் புனர்வாழ்வுத் தேவைகளைக் கவனிப்பதற்காக நிறுவப்பட்ட 'சிரான்' உப-குழு அமையப் பெற்றது என்பதையும் நாம் இங்கு சுட்டிக் காட்ட விரும்புகிறோம். இந்தக் கொள்கையின் அடிப்படையில்தான், 2002 நவம்பர் 25ஆம் திகதி ஒஸ்லோவில் நடைபெற்ற சர்வதேச மாநாடு வெற்றிகரமாக அரங்கேற்றப்பட்டது. அம் மாநாட்டில், அவசரத் தேவைகளுக்காக நிதி உதவிகளுக்கு உறுதி வழங்கப்பட்ட போதும், போரினால் பாதிக்கப்பட்ட தமிழ்ப் பகுதிகளின் புனர்நிர்மாணத்திற்குப் பெருமளவில் நிதி திரட்டும் குறிக்கோளுடன் பெரும் எடுப்பிலான ஒரு சர்வதேச மாநாடு எதிர்வரும் ஜூன் மாதம் ஜப்பானில் நடைபெறவிருந்தது.

இதற்கிடையில் விடுதலைப் புலிகளை ஓரம் கட்டி, இக் கூட்டு முயற்சியைப் பாழடித்ததுடன், சிறீலங்கா அரசுக்கு முதன்மை கொடுக்கும் வகையில் ஏப்ரல் 14ஆம் திகதி ஒரு பூர்வாங்க மாநாட்டை அமெரிக்கா கூட்டுவது எமக்குக் கவலையைத் தருகிறது. தமிழ்ப் பகுதிகளில் நடைபெறவிருக்கும் புனர்நிர்மாண முயற்சிகளில் விடுதலைப் புலிகள் புறம் தள்ளப்படுவது சமாதான முன்னெடுப்புக்கான நல்லெண்ணத்திற்குப் பங்கம் ஏற்படுத்தும். சமாதானப் பாதையிலும், புனர்நிர்மாணக் குறிக்கோளிலும் எமக்குள்ள நம்பிக்கையையும் இது பாதிக்கும். அமெரிக்காவின் இந்த நடவடிக்கை எமக்கு கவலையையும் ஏமாற்றத்தையும் தருகிறது."

விடுதலைப் புலிகளின் இந்த ஆட்சேபக் குறிப்புக்கு சிறீலங்கா அரசாங்கம் பதிலளிக்காது மௌனம் சாதித்தது. ஜப்பானில் நடைபெறவிருந்த சர்வதேச மாநாட்டுக்கு முன்னீட்டான ஒரு முக்கிய கூட்டத்தில் நாம் புறம் தள்ளப்பட்டதாலும், அதற்கு நாம் தெரிவித்த ஆட்சேபத்தை அரசு அசட்டை செய்ததாலும் ஏமாற்றமடைந்த நாம், எமது எதிர்ப்பை உணர்த்தும் வகையில் ஜப்பான் சர்வதேச மாநாட்டில் பங்கு கொள்வதை மீள்பரிசீலனை செய்யப் போவதாக அறிவித்தோம்.

2003, ஏப்ரல் 12ஆம் நாள், விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடம் விடுத்த அதிகாரபூர்வமான அறிக்கையில், "ஜப்பானில் நடைபெறவிருக்கும் சர்வதேச மாநாட்டுக்கு ஆதரவாகவும் ஆயத்தங்களைச் செய்யவும் வாஷிங்டனில் நடைபெறவுள்ள முக்கிய பூர்வாங்க மாநாட்டில் எமது அதிகாரபூர்வமான பிரதிநிதிகள் பங்குகொள்ள முடியாது புறம் தள்ளப்பட்டதை ஆட்சேபிக்கும் வகையில், டோக்கியோ மாநாட்டில் பங்குபற்றுவதென்ற முடிவை எமது இயக்கம் மீள்பரிசீலனை செய்யும்." என அறிவித்தது.

விடுதலைப் புலிகள் இயக்கம் ஆட்சேபம் தெரிவித்தபோதும், வாஷிங்டன் மாநாடு, ஏப்ரல் 14ஆம் நாள் அமெரிக்க இராஜாங்க அமைச்சர் திரு. ரிச்சார்ட் ஆமிட்டேச் தலைமையில் நடைபெற்றது. 21 நாடுகளைச் சேர்ந்த மூத்த இராஜதந்திரிகளும் 16 சர்வதேச நிறுவனங்களும் இம் மாநாட்டில் பங்குகொண்டன. அமெரிக்காவிற்கான இந்தியத் தூதுவர், இந்திய அரசு சார்பில் கலந்து கொண்டார். ஒஸ்லோ சர்வதேச மாநாட்டில் கீழ்நிலை அதிகாரி ஒருவரை (ஒஸ்லோ இந்தியத் தூதரகத்தின் மூன்றாவது செயலர்) அனுப்பி வைத்த இந்திய அரசு, வாஷிங்டன் மாநாட்டிற்கு ஒரு மூத்த இராஜதந்திரியை அனுப்பி வைத்தது குறிப்பிடத்தக்கது. இலங்கை விவகாரத்தில் அமெரிக்காவின் தலையீடு அதிகரித்து வருகிறது என்பதை வாஷிங்டன் மாநாடு கோடிட்டுக் காட்டியது.

சிறீலங்கா அரசாங்கத்தின் பிரதிநிதிகள் குழுவுக்குப் பொருளாதார சீர்திருத்த அமைச்சர் மிலிந்தா மொறகொட தலைமை வகித்தார். இம் மாநாட்டில் விடுதலைப் புலிகள் இயக்கம் புறம் தள்ளப்பட்டதற்கு விளக்கம் அளித்துப் பேசிய திரு. ரிச்சார்ட் ஆமிட்டேச், "எமது கொள்கை தெட்டத் தெளிவானது. விடுதலைப் புலிகள் இயக்கமானது சொல்லிலும், செயலிலும், ஐயப்பாட்டுக்கு இடமின்றி, பயங்கரவாதத்தைக் கைவிட வேண்டும்" என்றார்.

சமாதானப் பேச்சுவார்த்தை குறிப்பிடத்தக்க முன்னேற்றம் எதுவுமின்றி தேக்கநிலை அடைந்திருந்தது. எமது மக்களின் பாரிய சமூகப் பொருளாதாரப் பிரச்சினைகளும் தீர்வின்றி இழுபட்டன. இந்தச் சூழ்நிலையால் விரக்தியும் வெறுப்பும் அடைந்திருந்த விடுதலைப் புலிகளுக்கு புதிதாக இன்னொரு சிக்கலும் ஏற்பட்டது. சமாதான முயற்சியில் சர்வதேச நாடுகளின் குறுக்கீடும், மிகையான தலையீடும் புதிய பிரச்சினைகளை எமது

இயக்கத்திற்குத் தோற்றுவித்தன. சமாதானத்தின் சர்வதேசக் காவலர்கள் என்ற பாத்திரத்தைத் தாங்கி வந்த உலக நாடுகள் பொருளாதார உதவிகளுக்கு நிபந்தனையாக அரசியல் அழுத்தத்தை எம்மீது பிரயோகிக்க முனைந்தன. சிறீலங்கா அரசாங்கத்தின் தேசிய நலன்களை மேம்பாடு செய்வதாக உலக நாடுகளின் தலையீடு அமைந்ததால், இன நெருக்கடியில் சம்பந்தப்பட்ட இரு தரப்பினர் மத்தியிலும் நிலவிய அதிகாரச் சம நிலையும் ஆழமாகப் பாதிக்கப்பட்டது. அரசு என்ற ரீதியிலும் உலக அரசுகளின் கூட்டமைப்பில் சட்டரீதியான அங்கீகாரம் பெற்ற உறுப்பினர் என்ற ரீதியிலும் சர்வதேசத் தலையீடு சிறீலங்காவுக்கு அனுகூலமாகவும், அரசற்ற (Non-State) அமைப்பு என்பதால் எமக்குப் பாதகமாகவும் அமைந்தது. நாசகாரச் சூழ்ச்சிகள் நிலவும் அரசுகளது சர்வதேசக் கூட்டமைப்பின் சதிவலைப் பின்னலில் சிக்குண்டு நசுங்குவதை எமது இயக்கம் விரும்பவில்லை. பலம் பொருந்திய இந்த சர்வதேசச் சக்திகளின் பொறியில் விழுந்து விடாது சுதந்திரமாகச் செயற்படவே நாம் விரும்பினோம். ஆகவே, அன்றைய அரசியலின் வளர்ச்சிப் போக்கினை ஆழமாகப் பரிசீலனை செய்த எமது தலைமைப்பீடம் பேச்சுக்களை இடைநிறுத்துவது என்றும், டோக்கியோ சர்வதேச மாநாட்டில் பங்கு கொள்வதில்லை என்றும் தீர்க்கமான முடிவுகளை எடுத்தது. விடுதலைப் புலிகளது தலைமைப் பீடத்தின் முடிவை, பிரதமர் ரணில் விக்கிரமசிங்காவுக்கு அறிவிக்குமாறு திரு. பிரபாகரன் என்னை வேண்டிக் கொண்டார். இதன்படி, விடுதலைப் புலிகளின் பேச்சுக் குழுத் தலைவர் என்ற ரீதியில், 2003 ஏப்ரல் 21ஆம் திகதி, பிரதமர் ரணில் விக்கிரமசிங்காவுக்கு எமது நிலைப்பாட்டை விபரமாக விளங்கப்படுத்திக் கீழ்க்கண்ட கடிதத்தை நான் எழுதினேன்:-

"அன்புள்ள பிரதம மந்திரி அவர்கட்கு,

எமது தலைமைப் பீடத்தின் அறிவுறுத்தலுக்கு அமைய, நடந்து கொண்டிருக்கும் சமாதானப் பேச்சுக்கள் குறித்து எமது அமைப்பின் ஆழ்ந்த அதிருப்தியையும் ஏமாற்றத்தையும் உங்களது அவசர கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

சமாதானத்திற்கு அச்சுறுத்தலை ஏற்படுத்தக் கூடிய சில வன்முறைச் சம்பவங்கள் நிகழ்ந்த போதும், ஒரு வருடத்திற்கு மேலாகப் போர் நிறுத்த உடன்பாடு நடைமுறையில் இருந்து வருவதையும், ஆறு கட்டச்

சுற்றுப் பேச்சுக்கள் இரு தரப்பினர் மத்தியிலும் வெற்றிகரமாக நடந்து முடிந்ததையும் நீங்கள் நன்கறிவீர்கள். அமைதி வழி வாயிலாக இனப் பிரச்சினைக்கு ஒரு நிரந்தரத் தீர்வு காணப்பட வேண்டுமென இரு தரப்பினர் மத்தியிலும் நேர்மையான, உறுதியான நிலைப்பாடு இருந்ததன் ஆக்க விளைவு காரணமாகவே போர் நிறுத்தம் நிலையானதாகவும் சமாதானப் பேச்சுக்கள் முன்னேற்றகரமானதாகவும் அமைந்தன என்பதை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்கள்.

நல்லெண்ண உறவும், வெளிப்படையான மனம் திறந்த கலந்துரையாடலும், அனுசரணையாளரின் சாதுரியமான வழிநடத்தலும் பேச்சுக்களில் ஈடுபட்டோர் மத்தியில் நம்பிக்கையை வளர்த்துப் பேச்சுக்களை முன்னெடுக்க உதவியது. சமத்துவமான கூட்டுப் பங்காண்மையின் அடிப்படையில், பேச்சுக் குழுக்கள் சில முக்கிய உப-குழுக்களை நிறுவ முடிந்தது. சிறீலங்கா அரசாங்கமும் விடுதலைப் புலிகள் இயக்கமும் ஒன்றாக இணைந்து சம பங்காளிகளாகவே சர்வதேசச் சமூகத்தை அணுகுவதென ஆரம்ப கட்டப் பேச்சுக்களில் இணக்கப்பாடு காணப்பட்டது. 2002 நவம்பர் 25ஆம் நாள் நிகழ்ந்த ஒஸ்லோ உதவி மாநாடு இக் கூட்டு முயற்சிக்கு ஒரு சிறந்த அரங்காக அமைந்தது.

வடகிழக்கில் போரினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணம் வழங்கி, இயல்பு நிலையைத் தோற்றுவிப்பதில், சர்வதேச உதவியைப் பெற்றுக் கொள்ள விடுதலைப் புலிகள் இயக்கம் நேர்மையுடனும் நல்லெண்ணத்துடனும் செயற்பட்டு சிறீலங்கா அரசாங்கத்திற்கு முழு ஆதரவையும் நல்கியது. கூட்டு விண்ணப்பங்களும், வேலைத் திட்டங்களும் தயாரிக்கும் வேளைகளில், இதுவரை காலும் நாம் அரசாங்கத்துடன் இணைந்தே செயற்பட்டிருக்கிறோம். இப்படியாக நாம் நம்பகமாகவும் நல்லெண்ணத்துடனும் செயற்படும்போது, பொருளாதார உதவி நாடி சர்வதேசச் சமூகத்தை அணுகிய வேளை உங்களது அரசாங்கம் விடுதலைப் புலிகள் இயக்கத்தைப் புறம் தள்ளியது. ஜூன் மாதம்

ஜப்பானில் நடைபெற இருக்கும் உதவி வழங்கும் நாடுகளின் சர்வதேச மாநாட்டுக்கு முன்னோடியாக, வாஷிங்டனில் ஏப்ரல் 14ஆம் திகதி நிகழ்ந்த முக்கிய சர்வதேச மாநாட்டையே நாம் இங்கு குறிப்பிடுகிறோம். சமாதான முயற்சியின் பிரதான பங்காளியும், தமிழ் மக்களின் உண்மையான பிரதிநிதியுமான விடுதலைப் புலிகள் இயக்கத்தை, தமிழர் தேசத்தின் சமூக, பொருளாதார மேம்பாடு சம்பந்தமான முக்கிய கலந்துரையாடலிலிருந்து ஓரம் கட்டியமை பாரதூரமான நம்பிக்கைத் துரோகமாகவே நாம் கருதுகிறோம். ஒரு தடை செய்யப்பட்ட இயக்கத்தின் பிரதிநிதிகளைத் தனது நாட்டுக்கு அழைப்பதில் அமெரிக்காவுக்கு சட்டச் சிக்கல்கள் உள்ளதென்பதை உங்களது அரசாங்கமும் நோர்வே அனுசரணையாளரும் நன்கறிவர். அப்படியான சூழ்நிலையில், இந்த முக்கியமான பூர்வாங்க உதவி மாநாட்டை விடுதலைப் புலிகள் இயக்கம் பங்குபற்றுவதற்கு வாய்ப்பாக வேறொரு இடத்தை தெரிவு செய்திருக்கலாம். உங்களது அரசாங்கம் இவ்வாறு செய்யாத காரணத்தினால், வேண்டுமென்றே நாம் புறந்தள்ளப்பட்டிருக்கலாம் என்ற சந்தேகம் எமக்கு எழுகிறது. இவ்விதம் எமது இயக்கம் ஓரம் கட்டப்பட்டதால் சமாதான வழிமுறையில் எமது மக்களுக்கு இருந்த நம்பிக்கை பாரதூரமாகப் பாதிக்கப்பட்டிருக்கிறது.

உங்களது அரசாங்கம் ஆட்சிப் பொறுப்பு ஏற்றதை அடுத்து எமது இயக்கத்துடன் போர் நிறுத்த உடன்பாடு செய்து, இருபது ஆண்டுகளாகத் தொடர்ந்து கொடிய யுத்தத்திற்கு முடிவு கொண்டு வந்தபோது மக்கள் மத்தியில் கணிசமான நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் தலை தூக்கியது என்பது உங்களுக்கு நன்கு தெரியும். இதனையடுத்து நோர்வேயின் அனுசரணையுடன் நேரடிப் பேச்சுக்கள் ஆரம்பமான பொழுது எதிர்ப்பார்ப்புகள் மேலும் அதிகரித்தன. போர் நெருக்கடியால் இடம்பெயர்ந்து அகதி முகாம்களில் அல்லல்படும் பத்து லட்சம் மக்களின் அவசரமான, உடனடியான வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குச் சமாதானப் பேச்சுக்கள் மூலம்

தீர்வு கிட்டும் என்ற நம்பிக்கையும் அப்பொழுது சுடர்விட்டு எரிந்தது.

தமிழர்களது வீடுகள், பாடசாலைகள், வழிபாட்டுத் தலங்கள், பொதுக் கட்டிடங்கள் ஆகியவற்றை ஆக்கிரமித்து நிற்கும் ஆயுதப் படைகள் அவற்றிலிருந்து விலக வேண்டுமெனப் போர் நிறுத்த உடன்பாட்டில் முக்கிய விதிகள் அடங்கியுள்ளன. இதற்காக விதிக்கப்பட்ட கால வரம்பும் இப்போது கடந்து விட்டது. அப்படியிருந்தும், கள நிலையில் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை. இடம்பெயர்ந்த மக்களின் அவல வாழ்க்கைபற்றி ஒவ்வொரு கட்டச் சுற்றுப் பேச்சிலும் நாம் தொடர்ச்சியாக இப் பிரச்சினையை எழுப்பி வந்தோம். இடம்பெயர்ந்த மக்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்படுமென அரச பிரதிநிதிகள் அளித்த வாக்குறுதிகள் எல்லாம் அர்த்தமற்றதாய் பயனற்றுப் போயின. எமது மக்களின் சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில் சமஷ்டிச் சுயாட்சி வடிவங்களை ஆராய்வதென எடுத்த தீர்மானம் போன்ற சில விடயங்களில் மட்டுமே பேச்சுக்களில் முன்னேற்றம் காணப்பட்டது. ஆனால் போர் நிறுத்த உடன்பாட்டிலுள்ள இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் கடப்பாடுகளை உங்களது அரசாங்கம் நிறைவு செய்யத் தவறியதால், எமது மக்களின் இடர்பாடுகளைத் தீர்ப்பதில் முன்னேற்றம் எதுவும் காணப்படவில்லை. இதனால் தமிழ் மக்கள் மத்தியில் ஆழமான விரக்தி நிலை ஏற்பட்டிருக்கிறது. தமது தாங்கொணாத் துயரங்களை எல்லாம் இந்தச் சமாதான முயற்சி துடைத்து விடும் என்று எதிர்பார்த்துக் காத்திருந்த இடம்பெயர்ந்த மக்களின் நம்பிக்கைகள் இப்பொழுது இடிந்து போய் விட்டன.

துப்பாக்கிகள் மௌனமாகிவிட்டதால் ஒரு அமைதி நிலவுகிறதே தவிர, தமிழ்ப் பகுதிகளில் இன்னும் உண்மையான இயல்பு நிலை தோன்றவில்லை. எமது மக்களின் நடமாட்டச் சுதந்திரத்தைத் திணறடித்தவாறு பல ஆயிரக்கணக்கான அரச படைகள் எமது நகரங்களையும் பட்டினங்களையும், மக்கள் குடியிருப்புப் பிரதேசங்களையும் தொடர்ந்தும்

ஆக்கிரமித்து நிற்கின்றன. தமிழர் மண்ணில், குறிப்பாக சன நெருக்கடி நிறைந்த யாழ்ப்பாணப் பிரதேசத்தில், பெரும் ஆக்கிரமிப்புப் படைகளைக் குவித்து, சமாதானக் காலத்திலும் எமது மக்கள் தமது சொந்த வீடுகளுக்குத் திரும்பிச் செல்லும் உரிமையை மறுப்பது நியாயமற்ற அநீதியான செயலாகும்.

வாஷிங்டனில் நிகழ்ந்த முக்கிய சர்வதேச மாநாட்டிலிருந்து விடுதலைப் புலிகள் புறம் தள்ளப்பட்டது, போர்நிறுத்த உடன்பாட்டு விதிகளையும் கடப்பாடுகளையும் நிறைவு செய்யத் தவறியது, பல்லாயிரம் இடம்பெயர்ந்த மக்களை அவல வாழ்வில் அல்லல்பட வைத்தது, தமிழரின் நகரங்களையும் குடியிருப்புகளையும் தொடர்ந்தும் இராணுவ ஆக்கிரமிப்பின் கீழ் அடக்கி ஆள எத்தனிப்பது, அரசின் பொருளாதாரத் திட்டங்களிலிருந்து வடகிழக்கில் வாழும் தமிழர்களை ஓரம் கட்டி ஒதுக்கியது - இவை எல்லாம் சமாதான முயற்சியில் தமிழ் மக்களுக்கும் தமிழீழ விடுதலைப் புலிகளின் தலைமைக்கும் இருந்து வந்த நம்பிக்கையைப் பாழடித்து விட்டன. இந்தச் சூழ்நிலையில் இப்போதைக்கு, சமாதானப் பேச்சுக்களில் பங்குபற்றுவதை இடைநிறுத்துவதென விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடம் தீர்மானித்துள்ளது. அத்துடன் ஜப்பானில் நடைபெறவிருக்கும் உதவி வழங்கும் நாடுகளின் சர்வதேச மாநாட்டிலும் எமது இயக்கம் பங்குபற்றாது. வேதனைக்குரிய இம் முடிவை எடுப்பதற்கு நாம் நிர்ப்பந்திக்கப்பட்ட போதும், அமைதி வழியில் இனப் பிரச்சினைக்குத் தீர்வு காண நாம் உறுதிபூண்டு நிற்கிறோம். போர் நிறுத்த உடன்பாட்டின் இயல்பு நிலையை உருவாக்கும் விதிகளைக் கால தாமதமின்றி நிறைவேற்றி, இடம்பெயர்ந்த மக்களின் மீள்குடியேற்றத்தை அனுமதித்து சமாதான முயற்சியில் தமிழ் மக்களுக்கு நம்பிக்கையை ஏற்படுத்துமாறு நாம் உங்களது அரசாங்கத்தை வேண்டிக் கொள்கிறோம். போரினால் சிதைந்து போன தமிழர் தேசத்தை மீளக் கட்டி எழுப்பும் வகையில், தேசிய பொருளாதார அபிவிருத்திக் கொள்கையையும் மாற்றியமைக்குமாறு

நாம் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறோம்.''

மறு நாளே திரு. விக்கிரமசிங்கா எனது கடிதத்திற்குப் பதில் எழுதியிருந்தார். கடிதத்தின் உள்ளடக்கத்தை தான் கவனத்தில் எடுத்துள்ளதாகவும் விரைவில் விரிவான பதில் எழுதுவதாகவும் தெரிவித்திருந்தார். இதற்கிடையில், 2003 ஏப்ரல் கடைசியில் நடைபெறவிருந்த சிரான் உப - குழுக் கூட்டத்தையும் ஒத்தி வைப்பதென விடுதலைப் புலிகள் முடிவெடுத்தனர்.

2003, ஏப்ரல் 23ஆம் திகதி, அரசியல்துறைப் பொறுப்பாளர் திரு. தமிழ்ச்செல்வன், கொழும்பு சமாதானச் செயலகப் பணிப்பாளர் திரு. பேனார்ட் குணத்திலக்காவுக்கு எழுதிய கடிதத்தில் இந்த ஒத்தி வைக்கும் முடிவை அறிவித்தார். “சமாதானப் பேச்சுவார்த்தையில் பங்குகொள்வதை இடைநிறுத்த எமது இயக்கத் தலைமைப்பீடம் முடிவெடுத்துள்ளமைக்கு அமைய, அவசர மனிதாபிமான, புனர்வாழ்வுத் தேவைகளுக்கான (சிரான்) உப-குழுவின் கூட்டத்தை ஒத்தி வைக்க விரும்புகிறோம். அடுத்த கூட்டத்திற்கான திகதியை நிர்ணயிப்பதற்கு முன்னர், பிரதமர் திரு. விக்கிரமசிங்காவுக்கு திரு. பாலசிங்கம் வரைந்த கடிதத்தில் எழுப்பப்பட்டுள்ள பிரச்சினைகள் குறித்து எவ்வித நடவடிக்கைகளை உங்களது அரசாங்கம் எடுக்கவிருக்கிறது என்பதை எமது தலைமை பொறுத்திருந்து பார்க்க முடிவு செய்திருக்கிறது. இடம்பெயர்ந்த மக்களையும் அகதிகளையும் மீள்குடியேற்றம் செய்து அவர்களுக்குப் புனர்வாழ்வு அளிப்பதற்கு அவசர நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்பதை நீங்கள் நன்கறிவீர்கள். வடகிழக்கில், மனிதாபிமான புனர்வாழ்வுத் திட்டங்களைச் செயற்படுத்தும் வகையில் உப-குழுவின் முன்னைய கூட்டங்களில் எடுத்த தீர்மானங்களை உடனடியாக நிறைவு செய்யுமாறு உங்களது அரசாங்கத்தை வேண்டிக் கொள்கிறோம்'' எனத் தமிழ்ச்செல்வன் தனது கடிதத்தில் குறிப்பிட்டார்.

பிரதமர் ரணில் விக்கிரமசிங்காவிடமிருந்து நாம் பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருந்த வேளையில், இலங்கைக்கான அமெரிக்க தூதுவர் திரு. ஆஸ்லி வில்ஸ், பிரதமருக்கு நான் எழுதிய கடிதத்தைக் கண்டித்து ஒரு அறிக்கையை வெளியிட்டார். ‘ரொயிட்டர்’ செய்தி நிறுவனத்திற்கு அவர் வழங்கிய செவ்வியில், விடுதலைப் புலிகள் இயக்கம் ‘பேச்சிலிருந்து வெளிநடப்புச் செய்யாமல்’ தொடர்ந்தும்

பேச்சுக்கள் வாயிலாகப் பிரச்சினைகளைத் தீர்க்க முயன்றிருக்க வேண்டும் எனக் கருத்து வெளியிட்டார். விடுதலைப் புலிகள் இயக்கம் சர்வதேச சமூகத்தின் அங்கீகாரத்தையும் மதிப்பையும் பெறுவதாயின் 'பயங்கரவாதத்தையும் வன்முறையையும்' கைவிட வேண்டும் என வற்புறுத்தினார். பெரும் படை அணிகளையும் ஆயுதங்களையும் வைத்திருப்பதால் விடுதலைப் புலிகள் இயக்கம் தமிழ் மக்களின் உரிமைகளைப் பாதுகாக்க முடியாது என்றும், அது நெருக்கடியை நீடிக்கவே செய்யும் என்றும் அவர் குறிப்பிட்டார்.

ஆத்திரமூட்டும் இக் கண்டன அறிக்கைக்கு தகுந்த பதில் அளிக்க வேண்டும் என விரும்பிய நான், 2003 ஏப்ரல் 25ஆம் நாள், 'தமிழ் நெட்' இணையத் தளத்திற்கு வழங்கிய செவ்வியில், எமது இயக்கத்தின் நிலைப்பாட்டை கீழ்க் கண்டவாறு விளக்கினேன்:-

> "பேச்சுக்களிலிருந்து வெளிநடப்புச் செய்யாமல் பிரச்சினைகளைப் பேசித் தீர்க்க வேண்டும் என்பதே அமெரிக்க தூதுவர் திரு. வில்ஸின் மையக் கருத்தாகும். எமது நிலைப்பாடு குறித்து இதில் ஒரு தப்பபிப்பிராயமும் இருக்கிறது. நாங்கள் பேச்சுக்களை முறித்துக் கொள்ளவும் இல்லை அன்றி பேச்சுக்களிலிருந்து வெளியேறிவிடவும் இல்லை. போர் ஓய்வு உடன்பாட்டுக்கு ஏற்ப இயல்பு நிலையைத் தோற்றுவிப்பது சம்பந்தமான முக்கிய முடிவுகளை நிறைவேற்றுவதற்கு அரசாங்கத்திற்குக் கால அவகாசம் அளிக்கும் வகையில் நாம் தற்காலிகமாகப் பேச்சுக்களை இடைநிறுத்தி வைக்கவே முடிவு செய்திருக்கிறோம். நாம் பேச்சுக்களைத் துண்டித்து விடவும் இல்லை அல்லது பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைக்கவும் இல்லை. தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் அவசர மனிதாபிமானப் பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதற்குக் கால இடைவெளியை வேண்டுமென்றே நாம் அரசாங்கத்திற்கு வழங்கியிருக்கிறோம். எமது மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகள் தீர்க்கப்படுவதன் அவசியத்தையும் வாக்குறுதிகள், தீர்மானங்கள், கடப்பாடுகளை நிறைவு செய்ய வேண்டிய முக்கியத்துவத்தை அரசுக்கு உணர்த்தி அழுத்தம் கொடுப்பதற்கே இம் முடிவை நாம் எடுத்தோம்.

'பயங்கரவாதத்தையும் வன்முறையையும் நாம் கைவிட வேண்டும்' என திரு. வில்ஸ் மட்டுமன்றி திரு. ஆமிட்டேச்சும் அடிக்கடி வற்புறுத்தி வருகிறார். நாம் எப்பொழுது போர் நிறுத்த உடன்பாட்டில் கைச்சாத்து இட்டோமோ அன்றிலிருந்து ஆயுத வன்முறையைக் கைவிட்டிருக்கிறோம் என்பதை அமெரிக்கர்கள் நன்கு அறிவார்கள். எமது மண்ணையும் மக்களையும் பாதுகாக்க நாம் இராணுவக் கட்டமைப்பை வைத்திருக்கிறோம். இன நெருக்கடிக்கு இன்னும் தீர்வு காணப்படவில்லை. அத்துடன் தமிழர் நிலங்கள் மீது சிங்கள இராணுவ ஆக்கிரமிப்புத் தொடர்கிறது. இந்தச் சூழ்நிலையில் ஆயுதக் களைவு என்ற பிரச்சினை பற்றிய பேச்சுக்கே இடமில்லை. விடுதலைப் புலிகள் ஆயுதம் தரித்த படையணிகளை வைத்திருப்பதால் தமிழ் மக்களின் உரிமைகளைப் பாதுகாக்க முடியாது என்றும் அது நெருக்கடியை நீடிக்கச் செய்யும் என்றும் திரு. வில்ஸ் முன்வைக்கும் வாதத்தைப் பெரும்பான்மையான எமது மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். பல தசாப்தங்களாக நீடித்த அரச பயங்கரவாதத்தையும் ஒடுக்குமுறையையும் எதிர்கொண்ட கசப்பான வரலாற்று அனுபவம் எமது மக்களுக்கு உண்டு. தமது வாழும் உரிமையை நிலைநாட்டும் இறுதி நடவடிக்கையாகவே அவர்கள் ஆயுதம் ஏந்திப் போராட முடிவு எடுத்தனர். அரச ஒடுக்குமுறையும் அதற்குச் சவாலாக எழுந்த ஆயுத எதிர்ப்பு முறையும், தோல்வியில் முடிந்த பேச்சுக்களும் நம்பிக்கைத் துரோகங்களுமாக மிக நெருக்கடியான காலங்களை நீந்திக் கடந்த எமது மக்களுக்கு, தமது பாதுகாப்பான வாழ்க்கை குறித்து இன்னமும் அச்சமும் அங்கலாய்ப்பும் இருக்கவே செய்கின்றன. எனவே, தமிழ் மக்கள் அரசியல் சுயாட்சியை மட்டும் கோரவில்லை. தமது வரலாற்றுத் தாயகத்தில் நிம்மதியாக, சுதந்திரமாக, கௌரவமாக வாழும் வகையில் ஒரு பாதுகாப்புக் கட்டமைப்பையும் வேண்டி நிற்கிறார்கள். அரச பயங்கரவாதமாகவும் வன்முறையாகவும் கட்டவிழ்ந்த இன அழிப்பு ஒடுக்குமுறையை எதிர்கொண்ட எமது மக்களின்



அச்சங்களையும் அபிலாசைகளையும் அமெரிக்கர்கள் புரிந்து கொள்வார்கள் என நாம் நம்புகிறோம்.''

எனது கடிதத்திற்கு பதிலளித்து, 2003 ஏப்ரல் 29ஆம் திகதி பிரதமர் ரணில் விக்கிரமசிங்கா பதில் கடிதம் எழுதியிருந்தார். அதில், விடுதலைப் புலிகளின் காத்திரமான குற்றச்சாட்டுகள் எதற்குமே உருப்படியான பதில் தரப்படவில்லை. அரசாங்கத்தின் நிலைப்பாட்டை நியாயப்படுத்தும் நழுவல் போக்கான கடிதமாகவே அது அமைந்தது. வாஷிங்டன் மாநாட்டை ஒரு முக்கியமற்ற பூர்வாங்கக் கருத்தரங்காகச் சிறுமைப்படுத்திக் காட்டி, புலிகள் மீது தடை இருப்பது காரணமாகவே எம்மை அமெரிக்காவுக்கு அழைக்க முடியவில்லை என்றும், இதற்கு அரசாங்கம் மீது பழிசுமத்த முடியாது என்றும் அவர் வாதாடினார். போர்நிறுத்த உடன்பாட்டு விதிகள் நிறைவு செய்யப்படாததை ஏற்றுக் கொண்ட அவர், "போர் நிறுத்த உடன்பாட்டு விதிகளும், கடப்பாடுகளும் இன்னும் முற்றாகச் செயற்படுத்தப்படவில்லை என்று நீங்கள் கூறுவதை நான் ஏற்றுக் கொள்கிறேன். இரு தரப்புமாக அவற்றை நிறைவு செய்ய உறுதி பூணவேண்டும் என்பதே எமது கருத்தாகும்." என்று பூடகமாகப் பதிலளித்தார். இடம்பெயர்ந்த மக்களின் மீள்குடியேற்றம் பற்றிக் குறிப்பிடும் போது, "உள்ளீட்டாக இடம்பெயர்ந்த மக்களின் பிரச்சினைகளை விரைவில் தீர்த்து வைப்பதற்கு அரசாங்கம் முன்னுரிமை கொடுத்திருக்கிறது'' என்ற ஒரு நொண்டிச் சாட்டை முன்வைத்துச் சமாளிக்க முனைந்தார் ரணில். பிரதமரின் கடிதத்தில் உருப்படியாக எதுவுமே இருக்கவில்லை. விடுதலைப் புலிகள் எழுப்பிய முக்கிய பிரச்சினைகள் எதற்குமே அவர் திருப்திகரமாகப் பதிலளிக்கவில்லை.

## இடைக்கால நிர்வாகம் பற்றிக் கோரிக்கை

பேச்சுக்களில் பங்குகொள்வதை இடைநிறுத்தவும் டோக்கியோ சர்வதேச மாநாட்டைப் பகிஸ்கரிக்கவும் விடுதலைப் புலிகள் இயக்கம் எடுத்த முடிவு சில இராஜதந்திர நகர்வுகளுக்கு வழி வகுத்தது. விடுதலைப் புலிகளை மீளவும் பேச்சுக்களில் பங்கு கொள்ளச் செய்யவும், டோக்கியோ மாநாட்டுக்கு அழைக்கவும் முயற்சிகள் எடுக்கப்பட்டன. இந்த

முயற்சியில் ஜப்பானிய அரசு கூடிய ஆர்வம் காட்டியது.

விடுதலைப் புலிகளின் முடிவு சம்பந்தமாக சர்வதேச இராஜதந்திர வட்டாரங்கள் கொண்டிருக்கும் கருத்துக்களைத் தலைவர் பிரபாகரனுடன் பகிர்ந்து கொள்வதற்காக நானும் அடேலும் 2003, மே மாதம் 6ஆம் திகதி கிளிநொச்சி வந்தடைந்தோம். இதற்கு முதல் நாளே (5ஆம் திகதி) ஜப்பானின் விசேட தூதுவர் திரு. யசூசி அகாஷியும், நோர்வே உதவி வெளிவிவகார மந்திரி திரு. விடார் ஹெல்கிசனும் கொழும்பு வந்து சேர்ந்தனர். 7ஆம் திகதியன்று திரு. அகாஷி கிளிநொச்சிக்கு வருகை தந்து பிரபாகரனைச் சந்திக்க ஏற்பாடாகியிருந்தது.

எதிர்பார்த்தது போல 7ஆம் திகதி காலை, திரு. அகாஷியும் அவரது பிரதிநிதிகள் குழுவும் கிளிநொச்சிக்கு வந்தனர். திரு. பிரபாகரனுக்கு உதவியாக நானும், தமிழ்ச்செல்வனும், திரு. மகேஸ்வரனும், அடேலும் இச் சந்திப்பில் கலந்து கொண்டோம். டோக்கியோ சர்வதேச மாநாட்டின் முக்கியத்துவத்தையும், அதில் விடுதலைப் புலிகள் பங்கு கொள்ளும் அவசியத்தையும் திரு. அகாஷி வலியுறுத்தினார். தமிழர் தாயகத்தில் போரினால் பாதிக்கப்பட்ட எமது மக்களின், குறிப்பாக இடம்பெயர்ந்து தமது இல்லங்களுக்குத் திரும்ப முடியாது அவலப்படும் மக்களின் துன்ப துயரங்களை விபரித்துக் கூறிய பிரபாகரன், சமாதானப் பேச்சுக்களால் எமது மக்களுக்கு எவ்வித பயனும் ஏற்படவில்லை என்றார். கொடுத்த வாக்குறுதிகளையும், எடுத்த தீர்மானங்களையும் நிறைவு செய்து எமது மக்களின் அவசர மனிதாபிமானப் பிரச்சினைகளைத் திரு. விக்கிரமசிங்காவின் அரசு தீர்த்து வைக்கும் வரை விடுதலைப் புலிகள் பேச்சுக்களிலோ அல்லது சர்வதேச மாநாடுகளிலோ பங்கு கொள்ளப் போவதில்லை என உறுதிபடக் கூறினார் பிரபாகரன்.

தனது முயற்சி பலிக்கவில்லை என்ற ஆதங்கத்துடன் வெறும் கையுடன் திரும்பினார் அகாஷி. ஆனால் வெளிநாட்டு இராஜதந்திர அழுத்தம் அத்துடன் நின்றுவிடவில்லை. மே மாத நடுப் பகுதியில், பிரபாகரனைச் சந்திப்பதற்காக நோர்வே வெளிவிவகார மந்திரி திரு. ஜான் பீட்டர்சன் கிளிநொச்சி வரவிருப்பதாக எமக்கு அறிவிக்கப்பட்டது. பிரபாகரனுக்கு உதவியாகப் பீட்டர்சன் அவர்களை நான் சந்திக்க இருந்த சமயத்தில் திடீரென எனக்குக் கடும் சுகவீனம் ஏற்பட்டது. நீண்ட

தூரப் பயணங்களும், கடும் வேலைப் பளுவும், தூக்கமற்ற அலைச்சலுமாக உடல் நிலை மோசமாகப் பாதிக்கப்பட்டிருந்தது. எனக்கு ஓய்வு அவசியமென மருத்துவர்கள் ஆலோசனை கூறினார்கள். கடுமையான சுகவீனத்துடன் நான் வன்னியில் தங்கியிருப்பதைப் பிரபாகரன் விரும்பவில்லை. எனது சிக்கலான சிறுநீரக நோய்க்கு வன்னியில் மருத்துவ வசதிகள் இல்லாததால் உடனடியாக லண்டனுக்குச் சென்று சிகிச்சை பெற்று ஓய்வு எடுப்பதையே பிரபாகரன் விரும்பினார். அதனால் மே மாதம் 11ஆம் நாள் நாம் அவசரமாக லண்டன் திரும்பினோம்.

நோர்வே வெளிவிவகார அமைச்சர் திரு. பீட்டர்சன், உதவி அமைச்சர் திரு. ஹெல்கிசன், கொழும்பிலுள்ள நோர்வேத் தூதுவர் திரு. ஜோன் வெஸ்ட்போக் ஆகியோர் மே மாதம் 15ஆம் நாள் கிளிநொச்சிக்கு வருகை தந்து திரு. பிரபாகரனைச் சந்தித்தனர். இச் சந்திப்பில் புலிகளின் தலைவருக்கு உதவியாக திரு. தமிழ்ச்செல்வன், சட்ட ஆலோசகர் திரு. உருத்திரகுமாரன், பொருளாதார அபிவிருத்தி நிபுணர் கலாநிதி மகேஸ்வரன் ஆகியோர் கலந்து கொண்டனர். இன நெருக்கடியில் சம்பந்தப்பட்ட ஒரு தரப்பினர் என்பதாலும், உதவி வழங்கும் நாடுகளின் முக்கிய மாநாட்டில் வட கிழக்கின் புனர்வாழ்வுக்கும் அபிவிருத்திக்குமாகப் பெருமளவில் நிதி ஒதுக்கீடு செய்யப்படவிருப்பதாலும் டோக்கியோ மாநாட்டில் விடுதலைப் புலிகள் பங்குகொள்வது அவசியமெனத் திரு. பீட்டர்சன் எவ்வளவோ வலியுறுத்தியும் திரு. பிரபாகரன் தனது நிலைப்பாட்டிலிருந்து நெகிழ்ந்து கொடுக்கவில்லை. சமாதானப் பேச்சுக்களை மீள ஆரம்பிப்பதற்கான வாய்ப்புகள் பற்றி நோர்வே அரச பிரதிநிதிகள் பிரபாகரனிடம் விசாரித்தனர். தமிழர் தாயகத்தில் புனர்வாழ்வு, புனர்நிர்மாண, அபிவிருத்தி வேலைகளைச் சிறப்பான முறையில் செயற்படுத்த கணிசமான அதிகாரங்களைக் கொண்ட ஒரு இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பு அவசியமென்பதைப் பிரபாகரன் வலியுறுத்தினார். விடுதலைப் புலிகளைத் திருப்திப்படுத்தும் வகையில் இடைக்கால நிர்வாக சபை வரைவு ஒன்றை விக்கிரமசிங்காவின் அரசு சமர்ப்பித்தால் அதன் அடிப்படையில் பேச்சுக்களை ஆரம்பிக்கலாமெனப் பிரபாகரன் உறுதியளித்தார்.

நான் லண்டனில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த வேளையில் மே 17ஆம் நாள், கிளிநொச்சிக்கு மீண்டும் விஜயத்தை மேற்கொண்ட திரு. ஹெல்கிசன், ஒரு இடைக்கால நிர்வாகக்

கட்டமைப்புச் சம்பந்தமாக இரண்டு பக்கத்தில், ஒரு வரைவு ஒன்றைத் தமிழ்ச்செல்வனிடம் சமர்ப்பித்தார். லண்டனில் எனக்கும் ஒரு பிரதியை நோர்வே அரசு அனுப்பியிருந்தது. அந்த வரைவைப் படித்துப் பதில் அனுப்புமாறு பிரபாகரன் என்னைப் பணித்தார். அந்த வரைவில் பிரமாதமாக எதுவுமே இருக்கவில்லை. சிரான் உப-குழுவுக்கு வரையறுக்கப்பட்ட சில அதிகாரங்களைச் சிபாரிசு செய்வதாக அந்த வரைவு அமைந்தது. அதனை அடிப்படையாக வைத்துப் பேசி, ஒரு கட்டமைப்பைப் படிப்படியாக உருவாக்கலாமெனவும் யோசனை தெரிவிக்கப்பட்டிருந்தது. 2003, மே மாதம் 21ஆம் திகதி திரு. ஹெல்கிசனுக்கு, இயக்கத்தின் சார்பில் நான் எழுதிய பதிலில் அந்த நகல் திட்டத்தை நிராகரித்தேன். "வட கிழக்கில் மனிதாபிமான, அபிவிருத்திப் பணிகளைத் துரித கெதியில் செயற்படுத்த வல்லதும், போதுமான நிர்வாக அதிகாரங்களையும், சட்டத் தகைமையையும் கொண்டுள்ளதுமான ஒரு புதுமையான கட்டமைப்பையே பிரபாகரன் விரும்புகிறார். இதனையே அவர் உங்களது வெளிவிவகார அமைச்சரிடம் தெரிவித்தார்..." எனக் குறிப்பிட்ட நான், "நீங்கள் சமர்ப்பித்த வரைவு அவரது எதிர்பார்ப்பு எதனையுமே திருப்தி செய்வதாக இல்லை" என விளக்கியிருந்தேன். எமது தலைவரின் எதிர்பார்ப்புக்கு அமைவாக ஒரு உருப்படியான திட்டத்தை ரணில் விக்கிரமசிங்காவின் அரசாங்கம் முன்வைக்குமானால், அதன் அடிப்படையில் பேச்சுக்களை மீளத் தொடங்குவது பற்றிப் பரிசீலனை செய்வோம் எனவும் எனது கடிதத்தின் முடிவுரையில் ஹெல்கிசனுக்குத் தெரிவித்தேன்.

2003 மே மாதம் 28ஆம் நாள், திரு. ரணில் விக்கிரமசிங்கா, நோர்வே அனுசரணையாளர்கள் மூலம், புதிய யோசனைகள் அடங்கிய திட்டம் ஒன்றை விடுதலைப் புலிகளின் தலைமைப்பீடத்திற்கு அனுப்பி வைத்திருந்தார். அதனைப் படித்துப் பார்த்துப் பதிலளிக்கும் பொறுப்பு எனக்கு வழங்கப்பட்டது. ரணிலின் திட்ட வரைவிலும், பிரபாகரன் விரும்பியது போன்று, உருப்படியான நிர்வாக அதிகாரங்கள் எதுவும் இருக்கவில்லை. வடகிழக்கு அபிவிருத்திக்கான ஒரு ஆலோசனைச் சபை போன்றே அதன் கட்டமைப்பு அமையப் பெற்றிருந்தது. மே மாதம் 30ஆம் நாள், பிரதமர் ரணில் விக்கிரமசிங்காவுக்கு நான் எழுதிய பதில் கடிதத்தில் அவரது திட்ட வரைவிலுள்ள குறைபாடுகளை விபரமாக விமர்சித்து

அதனை ஏற்க முடியாதென நிராகரித்தேன்.

"உங்களது யோசனைகளை ஆழமாகப் பரிசீலனை செய்து பார்த்த போது எமக்கு ஒரு புறம் ஏமாற்றமும் மறுபுறம் ஆச்சரியமும் ஏற்பட்டது. விடுதலைப் புலிகளின் தலைமை தெரிவித்த யோசனைக்கு அமைவாக ஒரு இடைக்கால நிர்வாகக் கட்டமைப்புத் திட்டத்தை நீங்கள் முன்வைக்கவில்லை. மாறாக, மிகவும் வரையறுக்கப்பட்ட நிர்வாக அதிகாரங்களைக் கொண்டதாக, அபிவிருத்தி சம்பந்தப்பட்ட அமைப்பையே நீங்கள் சிபாரிசு செய்துள்ளீர்கள். அதிலும் விடுதலைப் புலிகளுக்கான பங்கு தெளிவாக நிர்ணயிக்கப்படவில்லை. வேண்டுமென்றே, அவ்விடயம் தெளிவற்றதாக விடப்பட்டிருக்கிறது. நாங்கள் கோரியதும், நீங்கள் கொடுத்ததும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட யோசனைத் திட்டங்களாகும். அபிவிருத்தி சம்பந்தப்பட்ட ஒரு அமைப்பை முன்மொழிந்ததன் மூலம் நாம் கோரிய இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பை நீங்கள் நிராகரித்து விட்டதாகவே நாம் கருதுவோம். உங்களது அரசியலமைப்புக்குள் தஞ்சம் எடுத்துள்ள நீங்கள், தமிழ் மக்களுக்கு ஒரு இடைக்கால ஒழுங்கைத்தானும் வழங்குவதற்கு மறுக்கின்றீர்கள். நாட்டின் சட்டம், ஒழுங்கிற்கு அமையவே உங்களது அரசாங்கம் செயற்பட முடியுமென நீங்கள் குறிப்பிட்டுள்ளீர்கள். பழிவாங்கத் துடிக்கும் ஜனாதிபதியின் பகைமை ஒரு புறமும், நெகிழ்த்த முடியாத இறுக்கமான அரசியல் யாப்பு மறுபுறமுமாக, இரண்டுக்கும் நடுவில் சிக்குண்டு தொங்கும் வலுவிழந்த உங்களது அரசாங்கத்தின் நிலைமையை நாம் நன்கறிவோம். அரசியல் அமைப்பே உறுதி தளர்ந்து ஆட்டம் காணும் நிலையில் இருக்கும் போது, உங்களது நிர்வாகமும் அதிகாரமற்றதாக இயலாத நிலையில் இருக்கும் போது, தமிழரின் இனப் பிரச்சினைக்கு இடைக்காலத் தீர்வோ அன்றி நிரந்தரத் தீர்வோ காண்பது முடியாத காரியம் என்பதை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்கள். அரசியலமைப்பு முட்டுக் கட்டைகளைக் காரணமாகக் காட்டி உங்களது அரசாங்கம் எதையுமே செய்ய முடியாதென முடங்கிப்

போனால் துன்பங்களைச் சுமந்து நிற்கும் எமது மக்கள் எவ்வளவு காலத்திற்குப் பொறுமை காப்பது? எமது மக்களுக்கு உரித்தான அரசியல் உரிமைகளை மறுப்பதில் சிங்கள ஆளும் வர்க்கங்கள் ஒன்றோடு ஒன்று பொருதி, வெறித்தனமாகப் போராடி வந்த வேளை, எமது மக்கள் அரை நூற்றாண்டு காலத்திற்கு மேலாகப் பொறுத்திருக்கவில்லையா?"

என்று எனது கடிதத்தில் சுட்டிக் காட்டினேன்.

2003 ஜூன் முதலாம் திகதி, பிரதமர் ரணில் விக்கரமசிங்கா எனது கடிதத்திற்கு எழுதிய விபரமான பதிலில் தமது யோசனைத் திட்டத்தை நியாயப்படுத்த முனைந்தார். அரசாங்கம் முன்மொழிந்த அபிவிருத்தி சபைக் கட்டமைப்பில் செயற்திட்டங்களை நடைமுறைப்படுத்துவதற்கான போதுமான அதிகாரங்கள் இருப்பதாக வாதாடினார். அதன் கட்டுமாணத்தை மேலும் விரிவாக்கம் செய்வது குறித்து இரு தரப்பும் பேச்சுக்களை நடத்தலாமென்றும் யோசனை தெரிவித்தார். ஒட்டு மொத்தத்தில், அவரது பதில் கடிதத்தில் உருப்படியான புதிய யோசனைகள் எதுவும் இருக்கவில்லை. இதனை அவருக்கு தெளிவுபடுத்தி, ஜூன் மாதம் நான்காம் திகதி இன்னொரு கடிதத்தையும் நான் எழுத வேண்டியிருந்தது.

திரு. ரணில் விக்கிரமசிங்காவின் யோசனைத் திட்டங்களையும், அவரது கடிதங்களின் உள்ளடக்கத்தையும் கவனமாகப் பரிசீலித்துப் பார்த்த பொழுது எமக்கு ஒரு உண்மை புலனாகியது. அதாவது, உருப்படியான அரசியல் அதிகாரங்களைக் கொண்டதாகச் செயற்திறனுடன் இயங்கக் கூடிய ஒரு புதுமையான இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பை விக்கிரமசிங்காவின் அரசாங்கத்தால் உருவாக்க முடியாது என்பதை நாம் உணர்ந்து கொண்டோம். சர்வ அதிகாரங்களையும் தன்னகத்தே கொண்டிருக்கும் ஜனாதிபதியின் தலையீட்டுக்குப் பயந்து, சிறீலங்காவின் அரசியல் யாப்பு என்ற இருட்டறைக்குள் நின்று தடுமாறிக் கொண்டிருந்ததால் ரணிலின் ஆட்சிப்பீடத்தால் புதுமையாகச் சிந்திக்கவோ அன்றி துணிந்து செயற்படவோ முடியவில்லை. இந்தச் சூழ்நிலையில் திரு. விக்கிரமசிங்காவுடன் தொடர்ந்து கருத்துப் போர் நடத்துவதில் அர்த்தமில்லை என எமக்குத் தோன்றியது.

சமாதானப் பேச்சுக்களை நாம் இடைநிறுத்தம் செய்ததும், டோக்கியோ மாநாட்டைப் பகிஸ்கரிப்பதும், ரணில் விக்கிரமசிங்காவின் இடைக்கால யோசனைகளை நிராகரித்து வந்ததும், சமாதான முயற்சியில் விடுதலைப் புலிகளுக்கு ஆர்வமில்லை என்ற ஒரு தவறான, எதிர்மறையான கருத்து சர்வதேச இராஜதந்திர வட்டாரங்களில் பரவலாமென எமக்கு அச்சம் எழுந்தது. இப்படியான தவறான எண்ணத்தை முறியடிப்பதாயின், அரசாங்கத்திடமிருந்து யோசனைகளை நாடி நிற்காமல், ஒரு இடைக்கால நிர்வாகக் கட்டமைப்புக்கான உருப்படியான திட்டத்தை நாமாகவே வரைந்து அரசாங்கத்திற்கு சமர்ப்பிப்பதே சாலச் சிறந்ததெனப் பிரபாகரன் தீர்மானித்தார். புலம்பெயர்ந்த தமிழ் சமுதாயத்திலுள்ள தலைசிறந்த அரசியலமைப்பு நிபுணர்கள், கல்விமான்களை அணிசேர்த்து நல்லதொரு யோசனைத் திட்டத்தை வரைவதெனவும் அவர் முடிவெடுத்தார். இதற்கான மாநாடு ஒன்றைக் கூடிய விரைவில் ஐரோப்பாவில் கூட்டுவதெனவும் முடிவாகியது.

இது இவ்வாறிருக்க, 2003 ஜுன் 9-10ஆம் நாட்களில், உதவி வழங்கும் நாடுகளின் சர்வதேச மாநாடு டோக்கியோ நகரில் இடம்பெற்றது. 51 நாடுகளையும், 22 சர்வதேச நிறுவனங்களையும் சேர்ந்த அமைச்சர்களும் பிரதிநிதிகளும் இம் மாநாட்டில் பங்கு கொண்டனர்.

ஜப்பான் பிரதமர் திரு. கொய்சுமி, சிறீலங்காவின் பிரதமர் திரு. விக்கிரமசிங்கா ஆகியோர் வரவேற்புரை நிகழ்த்தினர். அமெரிக்கா, ஜப்பான், ஐரோப்பிய ஒன்றியம், நோர்வே ஆகிய நாடுகள் இணைத் தலைமைகளாக அம் மாநாட்டில் கலந்து கொண்டன. நான்கு ஆண்டு காலத்திற்கு சிறீலங்காவின் புனர்நிர்மாணத்திற்கும் அபிவிருத்திக்குமாக 4.5 பில்லியன் டொலர்களை உதவியாக வழங்க அம் மாநாட்டில் உறுதி அளிக்கப்பட்டது.

இம் மாநாட்டு முடிவில், 'சிறீலங்காவின் புனர்நிர்மாண, அபிவிருத்திக்கான டோக்கியோ பிரகடனம்' என்ற ஆவணம் வெளியிடப்பட்டது. வெளிநாட்டு நிதியுதவியையும் பேச்சுக்களின் முன்னேற்றத்தையும் இணைக்கும் அம்சமே இப் பிரகடனத்தின் மையக் கோட்பாடாக அமைந்தது. பிரகடனத்தின் 18ஆவது பந்தி இதனை நன்கு தெளிவுபடுத்தியது.

"ஒஸ்லோவில் இரு தரப்பினரும் இணங்கிய இலட்சியத்தை நிறைவு செய்யும் வகையில், பேச்சுக்களில் ஏற்படும்

முன்னேற்றத்துடன் உதவி வழங்கும் நாடுகளின் நிதியுதவியும் இணைந்ததாக அமைய வேண்டும். புனர்நிர்மாண, அபிவிருத்தி வேலைகளைக் கையாளுவதற்கு உகந்ததான ஒரு இடைக்கால நிர்வாக கட்டமைப்பை உருவாக்க சிறீலங்கா அரசும் தமிழீழ விடுதலைப் புலிகளும் விரைவில் பேச்சுக்களில் ஈடுபடுவதை இம் மாநாடு விரும்புகிறது.'' என இப்பந்தியில் தெரிவிக்கப்பட்டுள்ளது. அரசியல் தீர்வு எட்டப்படும் ஒரு பொருத்தமான தருணத்தில், படிப்படியாக நெருக்கடியைத் தணிப்பது பற்றியும் ஆயுதக் கையளிப்புப் பற்றியும் சிறீலங்கா அரசும் விடுதலைப் புலிகளும் ஒரு இணக்கப்பாட்டுக்கு வரவேண்டும் என்றும் இப் பந்தியில் கூறப்பட்டுள்ளது.

2003, ஜூன் 23ஆம் நாள், தமிழீழ விடுதலைப் புலிகளின் தலைமைச் செயலகம் வெளியிட்ட அதிகாரபூர்வமான அறிக்கையில், டோக்கியோ மாநாட்டுப் பிரகடனத்தை நிராகரித்தது. இப் பிரகடனம் எந்த வகையிலும் எம்மைக் கட்டுப்படுத்தாது என விடுதலைப் புலிகள் திட்டவட்டமாக அறிவித்தனர்.

"டோக்கியோ பிரகடனத்திலுள்ள தீர்மானங்கள், யோசனைகள் குறித்து எம்முடன் கலந்தாலோசிக்கப்படவில்லை. கொழும்பு அரசாங்கமானது, அனுசரணையாளரினதும், தனது நேச நாடுகளினதும் உதவியுடன் தயாரித்த இத் தந்திரோபாய ஆவணம் வாயிலாகத் தனது தனிப்பட்ட திட்டத்தை விடுதலைப் புலிகள் இயக்கம் மீது திணிக்க முயல்கிறது. இதனை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது.'' என்று எமது இயக்கத்தின் அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

இனப் பிரச்சினையானது இரு தரப்பினராலும் தீர்த்து வைக்க வேண்டிய உள்நாட்டு அரசியல் விவகாரம் என்றும், இதில் எமது பிராந்தியத்திற்கு அப்பாலுள்ள வெளிநாட்டுச் சக்திகளை அநாவசியமாகத் தலையீடு செய்ய அனுமதித்தமைக்கு விக்கிரமசிங்கா அரசைப் புலிகளின் அறிக்கை கடுமையாகச் சாடியது.

அரசியலிலும் பொருளாதாரத் துறையிலும் தெளிவான கொள்கை எதுவுமற்ற சிந்தனை வறட்சி காரணமாக, தனது அரசியல், பொருளாதாரப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு ரணிலின் அரசாங்கம் சர்வதேச உலகத்திடம் சரணாகதி அடைந்துள்ளதாகவும் விடுதலைப் புலிகள் கண்டனம் தெரிவித்தனர். இந்த நிலைப்பாடு காரணமாக, சமாதான

முயற்சியானது மூன்றாம் தரப்பு அனுசணையாளரிடம் இருந்து, பலம் பொருந்திய வெளிநாட்டுச் சக்திகள் ஆதிக்கம் செலுத்தும் சர்வதேச நடுவர் அரங்கிற்குக் கைமாறி இருப்பதாகக் குற்றம் சுமத்திய விடுதலைப் புலிகள், இது பாரதூரமான விளைவுகளை ஏற்படுத்தும் என எச்சரித்தனர்.

இது இவ்வாறிருக்க, ஒரு இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பை வரைவதற்காக விடுதலைப் புலிகளின் தலைவர் திரு. பிரபாகரன் ஒரு அரசியலமைப்பு விவகாரக் குழுவை நியமித்தார். இக் குழுவில், சிங்கப்பூர் தேசியப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் சொர்ணராஜா, முன்னாள் சட்டவாளர் நாயகம் திரு. சிவா பசுபதி, விடுதலைப் புலிகளின் சட்ட ஆலோசகர் திரு. உருத்திரகுமாரன், சிட்னி பல்கலைக் கழகப் பேராசிரியர் கலாநிதி மனுவேல்பிள்ளை போல் டொமினிக், மலேசியா தேசியப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் ராமசாமி, சட்ட நிபுணர் திரு. விஸ்வேந்திரன், பொருளாதார அபிவிருத்தித்துறை நிபுணர் கலாநிதி மகேஸ்வரன் ஆகியோர் அடங்குவர். 2003, ஆகஸ்ட் இறுதிப் பகுதியில் பாரிஸ் நகரில் சந்தித்த இந்த அரசியலமைப்பு நிபுணர்கள் குழு, வடகிழக்கிற்கான ஒரு இடைக்காலத் தன்னாட்சி அதிகார சபைத் திட்டத்தை உருவாக்கினர். (பின்சேர்க்கை இணைப்பில் இதன் விபரம் தரப்பட்டுள்ளது.)

இந்த இடைக்காலத் தன்னாட்சி அதிகார சபை (Interim Self-Governing Authority) ஒரு புதுமையான நிர்வாகக் கட்டமைப்பாக உருவாக்கப்பட்டது. உருப்படியான அதிகாரங்களைக் கொண்டதாகவும், மீள்குடியேற்றம், புனர்வாழ்வு, புனர்நிர்மாணம், அபிவிருத்தி வேலைகளைத் திறம்படச் செயற்படுத்தும் நிர்வாக வலுவுடையதாகவும் இது அமையப் பெற்றது. இந்த யோசனைத் திட்டம், விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடத்தினது அங்கீகாரத்தைப் பெற்றதை அடுத்து, நோர்வே அனுசரணையாளர்கள் மூலம் 2003, நவம்பர் முதலாம் திகதி விக்கிரமசிங்காவின் அரசாங்கத்திற்குச் சமர்ப்பிக்கப்பட்டது. எமது யோசனைத் திட்டம் சமர்ப்பிக்கப்பட்டு சரியாக நான்கு நாட்களுக்குப் பின்னர், மூன்று முக்கிய அமைச்சர்களைப் பதவி நீக்கி, ஜனாதிபதி சந்திரிகா, விக்கிரமசிங்காவின் நிர்வாகம் மீது பழிதீர்த்துக் கொண்டார். பாதுகாப்பு அமைச்சர் திரு. திலக் மாறப்பன, உள்விவகார மந்திரி திரு. ஜோன் அமரதுங்கா, ஊடக அமைச்சர் திரு. யக்ஜீர் ஆகியோரே பதவி

பறிக்கப்பட்டவர்களாவர். 2004, பெப்ரவரி 7ஆம் நாளன்று ஒரு விசேட வர்த்தமானி அறிவிப்பு மூலம் பாராளுமன்றத்தைக் கலைத்தார் ஜனாதிபதி. இந்த இறுதி நடவடிக்கையுடன் ரணில் விக்கிரமசிங்காவின் ஆட்சி முடிவுக்கு வந்தது.

## சமாதானப் பேச்சுக்கள் பற்றி ஒரு மதிப்பாய்வு

விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் ரணில் விக்கிரமசிங்கா அரசாங்கத்திற்கும் மத்தியில் நிகழ்ந்த பேச்சுவார்த்தை மீள முடியாதவாறு முறிந்து விடவும் இல்லை, போரும் வெடிக்கவுமில்லை. விடுதலைப் புலிகள் இயக்கம், ஒரு நோக்கத்துடன், பேச்சுக்களை இடைநிறுத்தி வைத்தனர். போரால் சிதைவுற்ற தமிழர் தாயகத்தில் புனர்வாழ்வு, புனர்நிர்மாண வேலைகளைத் திறம்படச் செய்து முடிக்கும் நிர்வாக அதிகாரத்துடன், ஒரு இடைக்கால நிர்வாகக் கட்டமைப்பை உருவாக்குவதற்கு, கால இடைவெளியையும் சந்தர்ப்பத்தையும் வழங்கும் நோக்குடனேயே எமது இயக்கம் இந்த முடிவை எடுத்தது. அரசாங்கம் சமர்ப்பித்த யோசனைகள் எமக்குத் திருப்தி அளிக்காத காரணத்தினால், பேச்சுக்களை மீள ஆரம்பிப்பதற்கு அடிப்படையாக, 'இடைக்காலத் தன்னாட்சி அதிகார சபை' என்ற திட்டத்தை எமது இயக்கம் சமர்ப்பித்தது. இவ்வேளையில்தான் ஜனாதிபதி சந்திரிகா இவ்விடயத்தில் திடீரெனத் தலையிட்டு, விக்கிரமசிங்காவின் அரசாங்கத்தைச் செயலிழக்கச் செய்தார். தனது ஆட்சி அதிகாரத்தை நிலைப்படுத்தி வலுப்படுத்தும் தனிப்பட்ட அரசியல் காரணங்களுக்காகவே ஜனாதிபதி தலையிட்டார். இடைக்கால நிர்வாகம் என்ற பெயரில் சிறீலங்காவின் இறையாண்மையை விடுதலைப் புலிகளுக்கு ஐக்கிய தேசியக் கட்சி அரசாங்கம் தாரை வார்த்துக் கொடுக்க முனைகிறது என வாதித்து அவர் சிங்கள மக்கள் மத்தியில் தனது தலையீட்டை நியாயப்படுத்தவும் முனைந்தார். பாராளுமன்றக் கலைப்பின் பின்பு நிகழ்ந்த பொதுத் தேர்தலில், தீவிர இனவாத சக்தியான ஜனதா விமுக்தி பெரமுனவுடன் (ஜே.வி.பி) இணைந்து தேர்தலில் வெற்றி பெற்றார் சந்திரிகா. இதன் மூலம், நிறைவேற்று அதிகாரத்துடன் சட்டவாக்க அதிகாரமும் அவரது கைக்குள் சிக்கியது. இப்படியாக, இரண்டு பிரதான அரசியல் கட்சிகளான ஐக்கிய

தேசியக் கட்சிக்கும், சிறீலங்கா சுதந்திரக் கட்சிக்கும் மத்தியில் நிகழ்ந்த அதிகாரப் போரின் விளைவாக எமது இடைக்கால நிர்வாகத் திட்டம் களப் பலியாகியது.

அரைகுறையான நிர்வாக அதிகாரத்துடன் இயங்கிய பாதுகாப்பு, உள்துறை அமைச்சுக்களை விக்கிரமசிங்காவின் ஆட்சியமைப்பிலிருந்து ஜனாதிபதி சந்திரிகா பறித்தெடுத்த நாளன்று (4 நவம்பர் 2003), எமது இடைக்கால தன்னாட்சி அதிகார சபைத் திட்டத்தைச் சிறீலங்கா சுதந்திரக் கட்சி வன்மையாகக் கண்டித்து ஒரு அதிகாரபூர்வமான அறிக்கையை வெளியிட்டது. இந்தக் கண்டன அறிக்கையின் சிருஷ்டி கர்த்தா திரு. கதிர்காமர் என்பது பின்பு தெரிய வந்தது. "விடுதலைப் புலிகளின் இடைக்கால தன்னாட்சி அதிகார சபைத் திட்டமானது, எதிர்காலத்தில் இறையாண்மையுடைய ஒரு தனியரசை நிறுவும் சட்ட ரீதியான அத்திவாரமாக அமைகிறது. இந்த யோசனைகள் சிறீலங்கா குடியரசின் இறையாண்மையைப் பறிப்பதுடன் அரசியலமைப்பையும் மீறுகிறது." எனக் கதிர்காமர் வரைந்து கொடுத்த அறிக்கையில் தெரிவிக்கப்பட்டது.

தேர்தலின் பின்பு தனது ஆட்சியதிகாரத்தை வலுப்படுத்திக் கொண்ட சந்திரிகா அம்மையார், விடுதலைப் புலிகளுடன் பேச்சுக்களை ஆரம்பிக்க வேண்டிய சர்வதேச நெருக்குவாரத்திற்குள் தள்ளப்பட்டதால், புலிகளுக்கு எதிரான கண்டனத் தொனியைத் தணித்துக் கொண்டார். எமது இடைக்கால நிர்வாக யோசனையையும் அவர் எடுத்த எடுப்பில் தூக்கி எறியவில்லை. எந்த வடிவிலான இடைக்கால நிர்வாகத் திட்டமும், நிரந்தரத் தீர்வின் இணைபிரியாத அங்கமாக அமைய வேண்டும் எனத் தனது நிலைப்பாட்டை மாற்றிக் கொண்டார். இதன் அடிப்படையில், இடைக்காலத் தீர்வு பற்றியும் நிரந்தரத் தீர்வு பற்றியும் இணைவாக, ஒரே சமயத்தில் பேச்சுக்களில் கலந்து கொள்ள விடுதலைப் புலிகளுக்கு அழைப்பு விடுத்தார். ஒரு இடைக்கால நிர்வாகத் திட்டத்தை உள்ளடக்கியதாக அமையப் பெற்ற தனது அரசியலமைப்புச் சீர்திருத்த யோசனைகளின் (2000 ஆண்டு சமர்ப்பிக்கப்பட்டது) அடிப்படையில் சமாதானப் பேச்சுக்களை மீளத் தொடங்கலாம் எனவும் ஜனாதிபதி சந்திரிகா அறிவித்தார். அரசியலமைப்பைச் சீரமைப்பதில் சந்திரிகா ஆர்வம் காட்டுவதிலும் காரணம் இல்லாமல் இல்லை. தனது பதவிக் காலம் நிறைவு காண்பதுடன் ஜனாதிபதி ஆட்சி முறையைக் கலைத்து, பிரித்தானிய

வெஸ்ட்மினிஸ்டர் முறைமையில் பாராளுமன்ற ஆட்சியை வலுப்படுத்தி, பிரதம மந்திரிப் பதவியில் மீண்டும் ஆட்சிப்பீடம் ஏறவேண்டும் என்ற ஒரு அந்தரங்கத் திட்டமும் அவரிடம் இருக்கிறது. ஆகவே, சமாதான முயற்சியை அரசியலமைப்புச் சீர்திருத்தத்துடன் தொடர்புபடுத்தி, யாப்பை மாற்றி அமைப்பதன் வாயிலாகத் தனது அந்தரங்க அபிலாசையை நிறைவு செய்யலாமென அவர் கருதினார்.

தமிழரின் இனப் பிரச்சினையை மையமாக வைத்தே சிங்கள ஆளும் வர்க்கங்கள் காலம் காலமாக தமக்கிடையே அதிகாரப் போர்களை நடத்தி வந்திருக்கிறார்கள். இப் போர்கள் மூலமே தமது அரசியல் அதிகாரத்தையும் செல்வாக்கையும் நிலைப்படுத்திப் பலப்படுத்த முனைந்துள்ளார்கள். இந்த அதிகாரப் போர்களும், அதன் விளைவாக தமிழரின் இனப் பிரச்சினை தீர்க்கப்படாது மேலும் மேலும் சிக்கலடைந்த காரணத்தாலேயே சமாதான முயற்சிகள் காலம் காலமாகத் தோல்வியில் முடிந்தன. இன நெருக்கடியைத் தீர்ப்பதற்கு, ஐக்கிய தேசியக் கட்சி, சிறீலங்கா சுதந்திரக் கட்சி, ஜனதா விமுக்தி பெரமுன (ஜே.வி.பி) போன்ற பிரதான சிங்களக் கட்சிகளிடம் தெளிவானதும், உருப்படியானதும், ஆழமான தரிசனத்துடன் நெறிக்கப்பட்டதுமான ஒரு தீர்வுத் திட்டம் அன்றும் சரி, இன்றும் சரி, என்றும் சரி இருக்கவில்லை. தமிழ்த் தேசியப் பிரச்சினையின் அடிப்படைகள் என்ன என்பதையும், மூல காரணங்கள் என்ன என்பதையும் சிங்கள அரசியல் உலகம் அறியாததல்ல. தமிழர் தாயகம், தமிழர் தேசியம், தமிழர் சுயநிர்ணயம் என்ற அடிப்படைகளைத் திம்புக் கோட்பாடுகளாகத் தமிழர் தரப்பு ஏற்கனவே பிரகடனம் செய்துள்ளது. எந்தவொரு சிங்களக் கட்சியும், இதுவரை காலமும், இந்த அடிப்படைகளை, இந்த மூலக் கோட்பாடுகளை நியாயமான முறையில், புறநிலை நோக்குடன் ஆழமாக அலசிப் பார்க்க முன்வரவில்லை. இன நெருக்கடி சம்பந்தமாக, ஒரு தெளிவான, முற்போக்கான கொள்கை இல்லாமை, ஒரு தீர்வுத் திட்டம் குறித்துச் சிங்கள அரசியல் உலகில் ஒத்திசைவும் ஒருமைப்பாடும் இல்லாமை சிங்கள அரசியல் தலைவர்களிடையே தமிழரின் பிரச்சினையைத் தீர்த்து வைக்க வேண்டுமென்ற திடமான உறுதிப்பாடு இல்லாமை - ஆகியவையே சமாதான முயற்சிகள் தோற்றுப் போனமைக்குக் காரணங்களாகும்.

நோர்வேயின் அனுசரணையுடன் நடைபெற்ற பேச்சுக்கள்

தொடங்கிய காலத்திலிருந்தே, ரணில் விக்கிரமசிங்காவின் ஆட்சி அதிகாரம் ஒரு நிலையற்ற அத்திவாரத்தில் கட்டப்பட்டிருப்பதை நாம் உணர்ந்தோம். கொழும்பில் இரண்டு ஆட்சி முறைமைகள் இருந்தன. சட்டவாக்க அதிகாரம் கொண்ட பாராளுமன்ற ஆட்சியும், நிறைவேற்று அதிகாரம் கொண்ட ஜனாதிபதி ஆட்சியும் ஒன்றுக்கொன்று முரண்பட்டு முறுகி நின்றதால் அரச கட்டமைப்பு உறுதி குன்றித் தளர்ந்து இருந்தது. பிளவுபட்டு ஆட்டம் கண்ட இந்த ஆட்சியமைப்பில் ரணில் விக்கிரமசிங்காவின் அரசியல் அதிகாரம் மிகவும் வரையறுக்கப்பட்டதாக இருந்தது. அத்துடன் ஜனாதிபதியுடன் அவர் கொண்டிருந்த பகையுறவு அவரது நிலையை மேலும் பலவீனப்படுத்தியது. ஜனாதிபதியிடமே சகல நிர்வாக அதிகாரங்களும் குவிக்கப்பட்டிருந்தன. ஆயுதப் படைகளும் அவரது முழுக் கட்டுப்பாட்டின் கீழ் இயங்கின. இப்படியான சர்வ அதிகாரமும் படைத்த அரச தலைவருடன் முரண்பட்டு நின்றதால் விக்கிரமசிங்காவின் நிர்வாகம் பல்வேறு முட்டுக் கட்டைகளை எதிர்கொள்ள நேர்ந்தது. போர்நிறுத்த ஒப்பந்த விதிகளையும் கடப்பாடுகளையும் நிறைவு செய்வதில் இராணுவம் ஒத்துழைக்க மறுத்தது. தமது எஜமானாகிய ஜனாதிபதி சந்திரிகா கைச்சாத்திடாத ஒப்பந்த விதிகளை இராணுவம் வேண்டுமென்றே அசட்டை செய்தது. சில முக்கிய பிரச்சினைகளில், உதாரணமாக உயர் பாதுகாப்பு வலயப் பிரச்சினையில், இராணுவத்தினர் கடும்போக்கைக் கடைப்பிடித்த போது ஜனாதிபதி, படையினரின் பக்கம் சார்ந்து நின்றதுடன் அவர்களுக்கு ஊக்கமளிக்கவும் செய்தார். கடற்படையின் அட்டகாசத்தை விக்கிரமசிங்காவால் கட்டுப்படுத்த முடியவில்லை. கடற்படைத் தளபதி சந்திரிகாவின் கையாளாகச் செயற்பட்டார். விக்கிரமசிங்காவின் நிர்வாகத்திற்குச் சிங்கள ஆயுதப் படைகள் மீது அதிகாரப் பிடி இல்லாததால், அமைதி உடன்பாட்டைச் செம்மையாகச் செயற்படுத்த முடியவில்லை. இதனால், பேச்சுக்களின் முக்கிய குறிக்கோளாகிய இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் இலட்சியத்தில் ரணிலின் அரசாங்கம் தோல்வியை எதிர்கொண்டது. அரசாங்கத்துடன் ஆயுதப் படைகள் ஒத்துழைக்க மறுத்துக் கடும்போக்கைக் கடைப்பிடித்ததால், பேச்சுக்களின் பயனாக நிறுவப்பட்ட இரு முக்கிய உப-குழுக்கள், போர் நெருக்கடியைத் தணித்து இயல்பு நிலையைத் தோற்றுவிக்கும் உப-குழு (Sub-Committee on De-

